## Contents

## கடவுள் வாழ்த்து

**வான்நின்று இழிந்து, வரம்பு இகந்த**
**மா பூதத்தின் வைப்பு எங்கும்,**
**ஊனும் உயிரும் உணர்வும்போல்,**
**உள்ளும் புறத்தும் உளன் என்ப -**
**கூனும் சிறிய கோத்தாயும்**
**கொடுமை இழப்ப, கோல் துறந்து,**
**கானும் கடலும் கடந்து, இமையோர்**
**இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்.**

***கூனும்*** *- கூனியாகிய மந்தையும்;* ***சிறிய கோ தாயும்*** *- இளைய பட்டத்து அரசியும் தாயுமாகிய கைகேயியும்;* ***கொடுமை இழைப்ப*** *- தனக்குப் பொல்லாங்கு செய்ய ;* ***கோல் துறந்து*** *- அரசாட்சியை நீத்து;* ***கானும்கடலும் கடந்து*** *- காட்டையும் கடலையும் தாண்டிச் சென்று ;* ***இமையோர் இடுக்கண்தீர்த்த*** *- (இராவணனைக் கொன்று) தேவர்களின் துன்பத்தை கிழங்கெடுத்த ;* ***கழல்வேந்தன்*** *- வீரக்கழலை அணிந்த இராமபிரானே ;* ***வரம்பு இகந்த*** *- எல்லைகடந்து பரந்த ;* ***மா பூதத்தின் வைப்பு எங்கும்*** *- பெரிய பூதங்கள் ஐந்தினால்ஆகிய உலகத்தில் உள்ள பொருள்கள் எல்லாவற்றிலும் ;* ***ஊனும் உயிரும் உணர்வும் போல்*** *- உடலும் உயிரும் போலவும் உடலும் உணர்வும் போலவும் ;* ***உள்ளும் புறத்தும் உளன்என்ப*** *- அகத்தேயும் புறத்தேயும் நிறைந்திருக்கின்றான் என்று ஞானிகள் கூறுவர்.*

*இப்பாட்டு இராமாயணச் சுருக்காய் இருப்பது மூலப் பகுதியிலிருந்தும் தோன்றிய உலகத்தில் உள்ள பொருள்களின் உள்ளேயும் வெளியேயும் நிறைந்திருக்கும் பரம்பொருளேஇராமனாக அவதரித்தான் என்பது கருத்து. இழிந்து என்னும் வினையெச்சம் இகந்த என்னும் பெயரெச்சவினைகொண்டு முடிந்தது. 'வானின்று இழிந்து வரம்பு இகந்த வைப்பு' என்றும், 'மாபூதத்தின் வைப்பு'என்றும் இயைத்துப் பொருள் கொள்க. வானிலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும்,நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் தோன்றியது என்னும் மறை முடிபினையொட்டி'வானின்றிழிந்து....... வைப்பு' என்றார். உணர்வு -*

## மந்திரப் படலம்

இ க் காண்டம் அயோத்தியில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுவதால் இப் பெயர் பெற்றது. இதில் மந்திரப் படலம் முதலாகத் திருவடி சூட்டு படலம் ஈறாக மொத்தம்பதின்மூன்று படலங்கள் உள்ளன. தயரதன் இராமபிரானுக்கு முடிசூட்டக் கருதுவது தொடங்கி, காடு சென்றஇராமனைப் பரதன் சென்று கண்டு திரும்புவது வரையிலான கதை நிகழ்ச்சிகள் இதில் இடம் பெறுகின்றன. தாய் தந்தையர் சொல் தட்டாத இராமன் பண்புச் சிறப்பும், அரசின்மீது சிறிதும்ஆசையில்லாத பரதன் பெருஞ்சிறப்பும், கைகேயியின் கொடுமையும், ஏழை வேடன் குகன் இராமன்மீதுகாட்டும் பரிவும் இக் காண்டத்தில் நன்கு வெளிப்படுகின்றன.

## *1. மந்திரப் படலம்*

*தயரதன் இராமனுக்கு முடிசூட்டுவது குறித்து அமைச்சர்களோடு கூடி ஆராய்ந்தசெய்தியினைக் கூறுகிறது இப்படலம். மந்திரம் என்பதற்கு ஆலோசனை என்பது பொருள். தயரதன்அரசவையை அடைந்தான். தன் அமைச்சர்களை அழைத்தான். வசிட்டன் முதலான மாண்புகள் நிறைந்த அமைச்சர்கள் வந்து சேர்ந்தனர். தயரதன் தான் துறவு மேற்கொள்ளவும், இராமனுக்கு முடிசூட்டவும்விரும்புவதாகக் கூறினான். அவன் கருத்தினை ஏற்று, வசிட்டன் இசைவாகப் பேசினான். அது கேட்டுத்தயரதன் மகிழ்ந்தான். ஏனைய அமைச்சர்களின் கருத்தும் அதுவேயாக இருத்தலைச் சுமந்திரன்தெரிவித்தான். தயரதன், சுமந்திரனை இராமனை அழைத்துவரப் பணித்தான். அவனும் இராமன்திருமனைக்குச் சென்று அவனைக் கண்டு செய்தி தெரிவித்தான். இராமன் தேர் ஏறித் தயரதனிடம்சேர்ந்தான். தயரதன் இராமனை அரசேற்க வேண்டினான். இராமன் அதற்கு இசைந்தான். இருவரும் தத்தம் இருப்பிடம் சேர்ந்தனர். தயரதன் மன்னர்களுக்கு ஓலை போக்கினான். பின்புமன்னர்களிடம் தன் கருத்தைத் தெரிவித்தான். அவர்களும் அக்கருத்தினை ஏற்று, அதற்குரியகாரணங்களை எடுத்துரைத்தனர். தயரதன் தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்திவிட்டு முடிபுனைய நாள்குறிக்கச் சோதிடரோடு தனி மண்டபம் அடைந்தான்.*

*இச்செய்திகளே இப்பகுதியில் கூறப்பெறுவன. தயரதன் மந்திராலோசனை மண்டபத்தை அடைதல்*

*கலிவிருத்தம்*

***1314. மண்ணுறு முரசுஇனம் மழையின் ஆர்ப்புற,***
***பண்ணுறு படர் சினப் பரும யானையான்,***
***கண்ணுறு கவரியின் கற்றை சுற்றுற,***
***எண்ணுறு சூழ்ச்சியின் இருக்கை எய்தினான்.***

***பண்உறு படர்சினம் பரும யானையான் -*** *ஒப்பனை செய்யப்பட்ட மிக்கசீற்றத்தையும் கழுத்து மெத்தையையும் உடைய பட்டத்து யானையையுடைய தசரதன் ;* ***மண்உறுமுரசு இனம்*** *- மார்ச்சனை அமைந்த முரசங்களின் தொகுதி ;* ***மழையின் ஆர்ப்பு உற-*** *மேகங்களைப் போல முழங்கவும் ;* ***கண் உறு கவரியின் கற்றை -*** *காண்பவர்கண்ணில் அழகினால் நிற்கும் கவரிமானின் மயிர்க் கற்றையால் அமைந்த*

*சாமரை;* ***சுற்று உற*** *- சூழ்ந்து வரவும்;* ***எண் உறு சூழ்ச்சியின் இருக்கை*** *-ஆராய்வதற்குப் பொருத்தமாகிய மந்திராலோசனை மண்டபத்தை;* ***எய்தினான் -*** *அடைந்தான்.*

*கவரி - சமரம் என்னும் மானின் வால் மயிரைக் கொண்டு செய்யப்பட்டஅரச அடையாளங்களுள் ஒன்று. பருமம் - யானைமேல் அரசர் இருத்தற்கு அமைக்கப்படும் இருக்கை.இதனைக் கலனை என்றும் கல்லணை என்றும் கூறுவர். மண் - மார்ச்சனை. கண்உறு என்பதற்கு விளக்கம்பொருந்திய என்றும் பொருள் கூறலாம்.* ***1***

*மந்திரக் கிழவரை வருவித்தல்*

### *1315. புக்கபின், 'நிருபரும், பொரு இல் சுற்றமும்,*
### *பக்கமும், பெயர்க' என, பரிவின் நீக்கினான்,*
### *ஒக்க நின்று உலகு அளித்து, யோகின் எய்திய*
### *சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினான்.*

***புக்க பின் -*** *தசரதன் மந்திராலோசனை மண்டபத்தில் புகுந்த பிறகு ; நிருபரும் - மன்னர்களும் ;* ***பொருவு இல் சுற்றமும்*** *- நிகரற்ற உறவினர்களும் ;* ***பக்கமும் -*** *தன் அன்பிற்குரிய நண்பர்களும் ;* ***பெயர்க என*** *- இவ்விடத்தை விட்டு அகல்க என்று சொல்லி;* ***பரிவின் நீக்கினான்*** *- அவர்களை அன்புடன் நீங்குமாறு செய்து;* ***ஒக்க நின்று உலகு அளித்து*** *- பின்பு அவன் யாவரிடமும் சமமாக நின்று உலகத்தைக் காத்து ;* ***யோகின் எய்திய சக்கரத்தவன் என -*** *அறிதுயிலை அடைந்த சக்கரம் ஏந்திய திருமாலைப் போல ;* ***தமியன் ஆயினான்*** *- தனித்தவன் ஆயினான். மன்னர்கள் முதலியோர் அரசனை அரண்மனையிலிருந்து பின் தொடர்ந்துவந்தவர். சக்கரம் உடைமை, உலகு அளித்தல், தனியனாய் இருத்தல் ஆகியவற்றால் திருமால்தயரதனுக்கு உவமை ஆயினான். யோகு- அறிதுயில். மந்திராலோசனை ஆதலின் அன்புடையராயினும்அவர்களை அன்புடன் அகலச்செய்தான் என்க.*
***2***

*வசிட்டன் வருகை*

### *1316. சந்திரற்கு உவமை செய் தரள வெண்குடை*
### *அந்தரத்தளவும் நின்று அளிக்கும் ஆணையான்,*
### *இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த, தன்*
### *மந்திரக் கிழவரை, 'வருக' என்று ஏவினான்.*

***சந்திரற்கு உவமை செய்*** *- சந்திரனுக்கு உவமையாக்குதற்கு உரிய ;* ***தரளம் வெண்குடை*** *- முத்துகளால் அலங்கரிக்கப்பட்ட வெண்ணிறக் கொற்றக் குடையானது ;* ***அந்தரத்து அளவு நின்று*** *- விண்ணுலகம் வரை நிற்க ;* ***அளிக்கும் ஆணையான்*** *- காவல் புரியும் ஆணைச் சிறப்புடைய தசரதன் ;* ***இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த*** *- தேவர் தலைவனான இந்திரனுக்கு வியாழ பகவானை ஒத்த ;* ***தன் மந்திரக் கிழவரை*** *- தன் ஆலோசனைச் சுற்றத்தவரை ;* ***வருக என்று ஏவினான்*** *- வருக என்று கட்டளையிட்டான்.*

*சந்திரனைப் போன்ற வெண்கொற்றக்குடை என்று சந்திரனை உவமையாகச்சொல்லாமல் சந்திரனுக்கு உவமையாகச் சொல்லத்தக்க வெண்கொற்றக்*

*குடை என்றது குடையின்ஏற்றத்தைக் குறித்தது. இது ''தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்'' என்பது போன்றது ; எதிர்நிலை யுவமையணி ஆகும். தயரதன் குடை அந்தரத்து அளவு நின்று அளித்தமை. அவன் சம்பராசுரனைவென்று தேவலோகத்தை இந்திரனுக்கு அளித்ததனால் விளங்கும். இமையவர் குரு - வியாழபகவான் ; பிருகஸ்பதி - மந்திரக் கிழவர் - அமைச்சர், புரோகிதர் முதலானோர். நின்று - செய்தெனஎச்சம் செயவென் எச்சமாகத் திரிந்தது.* ***3***

***1317. பூ வரு பொலன் கழல் பொரு இல் மன்னவன்***
***காவலின் ஆணைசெய் கடவுள் ஆம் என,***
***தேவரும், முனிவரும் உணரும், தேவர்கள்***
***மூவரின் நால்வர் ஆம், முனி வந்து எய்தினான்.***

***பூ வருபொலன் கழல்*** *- அழகு பொருந்திய பொன்னால் ஆன வீரக் கழலை அணிந்த ;* **பொரு இல் மன்னவன் காவலின்** *- நிகரில்லாத அரசனான தயரதனின்ஆட்சியில் ;* ***ஆணை செய் கடவுள் ஆம் என*** *- கட்டளையிடும் கடவுளாக உள்ளான்என்னும்படி ;* **தேவரும் முனிவரும் உணரும்** *- தேவர்களும் இருடிகளும் தேடி அறியும்;* **தேவர்கள் மூவரின்** *- தேவர்களான நான்முகன், திருமால், சிவபிரான் என்றுசொல்லப்பெறும் மூவர்களோடு சேர்த்து ;* **நால்வராம் முனி வந்து எய்தினான் -** *நால்வராக எண்ணப்படுகின்ற வசிட்ட முனிவன்வந்து சேர்ந்தான்.*

*தயரதன் ஆட்சியில் அவனுக்கு ஆணையிடும் ஆற்றல் உடையவன் வசிட்டன் என்றுவசிட்டனின் ஏற்றம் கூறப்பட்டது. அவன் அமைச்சருள் முதல்வனும், புரோகிதனும், குலகுருவும் பிரமஇருடியுமாகத் திகழ்தலின் அவன் வரவு தனியே பிரித்துரைக்கப்பட்டது. பொலன் கழல்-பொன்கழல். **4***

*அமைச்சர் மாண்பு*

***1318. குலம் முதல் தொன்மையும், கலையின் குப்பையும்,***
***பல முதல் கேள்வியும், பயனும், எய்தினார் ;***
***நலம் முதல் நலியினும் நடுவு நோக்குவார் ;***
***சலம் முதல் அறுத்து, அருந் தருமம் தாங்கினார்.***

**குலம் முதல் தொன்மையும்** *- குடிப்பிறப்பினது முதன்மையான பழமையும் ;* ***கலையின் குப்பையும்*** *- கலை அறிவுகளின் தொகுதியையும்;* **பல முதல் கேள்வியும்** *- பல சிறந்த கேள்வியறிவையும் ;* **பயனும்** *- அவற்றால் உளதாகும் பயனையும் ;* **எய்தினார் -** *பெற்றவர்கள் ;* **நலம் முதல் நலியினும்** *- தமக்கு வரும்நலன்கள் வேரோடு கெடுவதாயினும் ;* **நடுவு நோக்குவார் -** *நடுவு நிலைமையையேகாப்பவர்கள் ;* **சலம் முதல் அறுத்து** *- சினத்திற்கு மூலகாரணமான அகந்தையைக்கிழங்கோடு களைந்து;* ***அருந்தருமம் தாங்கினார்*** *- அரிய அறங்களைப் போற்றுபவர்கள்.*

*அமைச்சர்கள் குடிப்பிறப்பு, கல்பி, கேள்விச் சிறப்பு, நடுவு நிலைமை, சினமின்மை ஆகிய பண்புகளோடு திகழ்ந்தனர் என்பது கூறப்பட்டது. குப்பை - தொகுதி, மிகுதி.தாங்குதல் - போற்றிக் காத்தல். சலம் - கோபம்; வஞ்சனையும் ஆம். முதல் -*

*முதன்மை, சிறப்பு, வேர் என்னும் பல்வேறு பொருளில் வந்தது.*
***5***

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***1319. உற்றது கொண்டு, மேலவந்து***
***உறுபொருள் உணரும் கோளார் ;***
***மற்றுஅது வினையின் வந்தது***
***ஆயினும், மாற்றல் ஆற்றும்***
***பெற்றியர் ; பிறப்பின் மேன்மைப்***
***பெரியவர் ; அரிய நூலும்***
***கற்றவர் ; மானம் நோக்கின்,***
***கவரிமா அனைய நீரார்.***

***உற்றது கொண்டு*** *- நடந்ததைக் கொண்டு ;* ***மேல்வந்து உறு பொருள் -*** *எதிர்காலத்து வந்து நேரத் தக்கவற்றை;* ***உணரும் கோளார்*** *- கணித்து அறியும் அறிவு வன்மையுடையவர்கள் ;* ***அது வினையின் வந்தது ஆயினும்*** *-அந்த வேண்டாத கேடு ஊழ்வினையினால் ஒருகால் வந்தாலும்;* ***மாற்றல் ஆற்றும்பெற்றியர்*** *- அதனை மாற்றவல்ல முயற்சித்திறம் உடையவர்கள்;* ***பிறப்பின்மேன்மைப் பெரியவர்*** *- நற்குடிப் பிறப்பினால் வந்த சிறப்பினையுடைய பெரியவர்கள் ;* ***அரிய நூலும் கற்றவர்*** *- கற்றற்கு அரிய நுண்ணிய நூல்களையும் கற்றுத் தேர்ந்தவர்கள்;* ***மானம் நோக்கின்*** *- மானத்தை நோக்குமிடத்தில் ;* ***கவரிமா அனைய நீரார்*** *- கவரிமானைப் போன்ற தன்மையுடையவர்கள்.*

*இதனால் அமைச்சர்களின் முன்னறிவும் திறனும், தளராது முயலும் திட்பமும்,குடிப்பிறப்பும், கல்விச் சிறப்பும், மானமுடைமையும் கூறப்பட்டன. மானம் - எந்நாளும்தன்னிலையில் தாழாமையும், ஊழால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம். கவரிமான், இமயமலைபோலும் குளிர் மிகுந்த மலைப்பகுதிகளில் வாழும் ஒருவகை மான். அந்த மானின் உடலிலிருந்து மயிர் உதிர்ந்தால், அது குளிர் தாங்காது மாண்டுபோகும். அதுபோலத் தம் புகழுக்கு இழுக்கு நேரும்காலம் வந்துழி உயிர் வாழார் ; அழிவர் என்பதாம்.*

***மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம் யாவுள முன்நிற் பவை***

***மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் உயிர்நீப்பர் மானம் வரின்***

*என்னும் குறட்பாக்களை (636, 969) ஒப்பு நோக்கலாம்.* ***6***

***1320. காலமும் இடனும் ஏற்ற***
***கருவியும் தெரிந்து கற்ற***
***நூல் உற நோக்கி, தெய்வம்***
***நுனித்து, அறம் குணித்த மேலோர் ;***
***சீலமும், புகழ்க்கு வேண்டும்***
***செய்கையும், தெரிந்துகொண்டு,***

***பால்வரும் உறுதி யாவும்***
***தலைவற்குப் பயக்கும் நீரார் ;***

***ஏற்ற காலமும் இடனும் கருவியும் தெரிந்து*** *- வினை செய்தற்குத் தக்ககாலத்தையும் இடத்தையும், அதற்குரிய கருவிகளையும் அறிந்து ;* ***கற்ற நூல் உற நோக்கி*** *- தாம் படித்த அரச நீதி நூல்களின் கருத்துகளோடு ஒப்பிட்டுக் கண்டு ;* ***தெய்வம்நுனித்து*** *- தெய்வத்தையும் தியானித்து ;* ***அறம் குணித்த மேலோர்*** *- அரசியல்அறத்தைப் பெருக்கிய மேலோர்கள்;* ***சீலமும் புகழ்க்கு வேண்டும் செய்கையும்*** *-ஒழுக்கத்தை யும் புகழ் அடைவதற்குரிய செயல்களையும் ;* ***தெரிந்துகொண்டு*** *- ஆராய்ந்து அறிந்துகொண்டு ;* ***பால் வரும் உறுதி யாவும்*** *- அவ் வாராய்ச்சிகளின் பயனாக வரும் நற்பயன்கள் யாவற்றையும் ;* ***தலைவற்குப் பயக்கும்நீரார்*** *- தம் அரசனுக்குக் கொடுக்கின்ற தன்மையுடையவர்கள்.*

*இதனால் அமைச்சர்கள் பணிபுரியும் வகை உரைக்கப்பட்டது. இடன் - கடைப்போலி. நுனிதல் - நுட்பமாக அறிதல். பால்வரும் உறுதி - அந்த அந்தப் பகுதிகளால்விளையும் நன்மை.*

***கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் மாண்ட தமைச்சு***

***அருவினை என்ப உளவோ கருவியான் காலம் அறிந்து செயின்*** *(குறள், 631, 483) 7*

***1321. தம்உயிர்க்கு இறுதி எண்ணார் ;***
***தலைமகன் வெகுண்ட போதும்,***
***வெம்மையைத் தாங்கி, நீதி***
***விடாதுநின்று, உரைக்கும் வீரர் ;***
***செம்மையின் திறம்பல் செல்லாத்***
***தேற்றத்தார் ; தெரியும் காலம்***
***மும்மையும் உணர வல்லார் ;***
***ஒருமையே மொழியும் நீரார்.***

***தலைமகன் வெகுண்ட போதும்*** *- அரசன் சீற்றங்கொண்ட காலத்திலும் ;* ***தம் உயிர்க்கு இறுதி எண்ணார்*** *- இதனைச் சொன்னால் தம் உயிர்க்கு அழிவு விளையும்என்றுகூட நினையாதவராய் ;* ***வெம்மையைத் தாங்கி*** *- அவனது சீற்றத்தின் கொடுமையை ஏற்றுக்கொண்டு ; விடாதுநின்று நீதி உரைக்கும் வீரர் - தம் கடமையை விட்டுவிடாமல்உறுதியாக நின்று உரிய நீதிகளை எடுத்துச்சொல்லும் துணிவு மிக்கவர்கள் ;* ***செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார்*** *- நன்னெறியிலிருந்து வழுவுதல் இல்லாததெளிவுடையவர்கள் ;* ***தெரியும் மும்மைக் காலமும்*** *- அறியத்தக்க முக்காலநிகழ்வுகளையும் ;* ***உணர வல்லார்*** *- உணரத்தக்க ஆற்றல் பொருந்தியவர்கள் ;* ***ஒருமையே மொழியும் நீரார்*** *- உண்மையையே பேசும் இயல்பினையுடையவர்கள்.*

*இறுதி - அழிவு ; ஆபத்து எண்ணார் - முற்றெச்சம். தாம் கொண்ட முடிவில் ஊற்றமாய் நின்று எதிர்ப்புகளை வீழ்த்தி மேம்படுதலால் வீரர் என்று புகழப்பெற்றனர்என்க. காலம் நிகழ்ச்சியைச் சுட்டிற்று. ஒன்றல்லது இரண்டன்மையின்*

*ஒருமை என்பது உண்மையைச்சுட்டியது. ஒருமையே மொழியும் நீரார் என்பதற்கு முன்னுக்குப்பின் மாறுபட்டுப் பேசாமல் ஒருபடியாகப் பேசுபவர் என்றும் பொருள் கொள்ளலாம். அமைச்சர் பலராயினும் ஒருமிடராய்க் கருத்துரைப்பர்என்பதாம்.*
***8***

*கலிவிருத்தம்*

***1322. நல்லவும் தீயவும் நாடி, நாயகற்கு,***
***எல்லை இல் மருத்துவன் இயல்பின் எண்ணுவார் ;***
***ஒல்லை வந்து உறுவன உற்ற பெற்றியின்,***
***தொல்லை நல்வினை என உதவும் சூழ்ச்சியார்.***

***நாயகற்கு*** *- தன் அரசனுக்கு ;* ***நல்லவும் தீயவும் நாடி*** *-நன்மை தருவனவற்றையும் தீமை பயப்பனவற்றையும் ஆராய்ந்து ;* ***எல்லை -*** *முடிவில்;* ***மருத்துவர் இயல்பின்*** *- நோயாளிகளின் விருப்பு வெறுப்புகளை நோக்காது அவர்களது நலத்தைநோக்கிச் செயற்படும் மருத்துவர்களின் தன்மைபோல ;* ***எண்ணுவார் -*** *தலைவனுக்குநன்மையையே கருதுவர் ;* ***ஒல்லை வந்து உறுவன*** *- அன்றியும் விரைவில் வந்து சேரும்தீங்குகள் ;* ***உற்ற பெற்றியின்*** *- நேர்ந்த இடத்து ;* ***தொல்லைநல்வினை என -*** *முன்னர்ச் செய்த புண்ணியம் வந்து உதவுவது போல;* ***உதவும் சூழ்ச்சியார்*** *- அத்தீங்குகளைப் போக்கத் துணைபுரியும் சிந்தனைத்திறம் உடையவர்களும் ஆவார்.*

*இங்கு அமைச்சர்கள் மருத்துவர்களைப் போன்று இருந்தனர் என்று சுட்டப்படுகிறது. நோயற்றவன் உறுதிபெற ஊட்டம்தரும் மருந்தினை நாடியும் நோயுற்றவன் நலம்பெறநோய் நாடி, அதன் காரணத்தை நாடி, அதனைத் தணிக்கும் வழிகளை நாடி, நோயாளி நோய்ஆகியவற்றின் தன்மைக்கேற்பத் தக்கவாறு செயற்படுபவர் மருத்துவர். அதுபோல அமைச்சர்களும்அரசன் ஆட்சி நலமுடன் திகழச் செய்தற்குரியவற்றைத் தேர்ந்து தெளிந்து செயற்படுத்தியும்,தீமை நேர்ந்துழி அதனை ஆராய்ந்து காரணத்தைக் கண்டறிந்து, நீக்குதற்குரிய வழிகளை எண்ணித்தக்கது கொண்டு துப்படைதும் செய்தனர்.* ***9***

*அமைச்சர்கள் வருகை*

***1323. அறுபதினாயிரர் எனினும், ஆண்தகைக்கு***
***உறுதியில் ஒன்று இவர்க்கு உணர்வு என்று உன்னலாம்***
***பெறல் அருஞ் சூழ்ச்சியர் ; திருவின் பெட்பினர் ;-***
***மறி திரைக் கடல் என வந்து சுற்றினார்.***

***திருவின் பெட்பினர்*** *- செல்வப் பெருக்கம் வாய்ந்தவர்கள் ;* ***அறுபதினாயிரர் எனினும்*** *- அறுபதினாயிரம் பேர் என்றாலும் ;* ***ஆண்தகைக்குஉறுதியின் -*** *ஆண்மையிற் சிறந்தவனாகிய தசரதனுக்கு நன்மையைக் கருதுவதில் ;* ***இவர்க்கு உணர்வு ஒன்று என்று*** *- இவர்கள் எல்லோர்க்கும் அறிவு ஒன்றே என்று ;* ***உன்னல்ஆம்*** *- நினைக்கத்தக்க;* ***பெறல் அருஞ் சூழ்ச்சியர்*** *- பெறுவதற்கு அரிய ஆராய்ச்சி நிறைந்த அமைச்சர்கள்;* ***மறுதிரைக் கடல் என*** *- மடங்கி விழும் அலைகளையுடைய கடல்போல ;* ***வந்து சுற்றினார்*** *- அரசவைக்கு வந்து நிறைந்தார்கள்.*

*கம்பர், அமைச்சர் மிகப் பலர் என்பதனைச் சுட்ட அறுபதினாயிரம் என்னும் எண்ணைக் குறிக்கிறார். இவ்வாறே தசரதன் ஆட்சிபுரிந்த காலம் அறுபதினாயிரம் ஆண்டு(182), அவன் மனைவியர் அறுபதினாயிரவர் (1779), சனகன் அவைக்கு வில்லைத் தூக்கிவந்த வீரர்அறுபதினாயிரவர் (668) என்றும் குறிப்பர். பெருவேந்தர்களுக்கு எல்லாம் அறுபதினாயிரம் என்று குறித்தல் சிலரது போக்கு. சூழ்ச்சி - பலகால் எண்ணுதல் ; ஆராய்ச்சி.* ***10***

***1324. முறைமையின் எய்தினர் முந்தி, அந்தம் இல்***
***அறிவனை வணங்கி, தம் அரசைக் கைதொழுது,***
***இறையிடை வரன்முறை ஏறி, ஏற்ற சொல்***
***துறை அறி பெருமையான் அருளும் சூடினார்.***

***முறைமையின் எய்தினர் -*** *அவ் அமைச்சர்கள் அரசவைக்குச் செல்லுதற்குரிய முறைப்படியே அணுகி ;* ***முந்தி அந்தம் இல் அறிவனை வணங்கி*** *-முதலில் முடிவில்லாத அறிவினையுடைய வசிட்ட முனிவனைப் பணிந்து ;* ***தம் அரசைக்கைதொழுது*** *- பின்னர்த் தம் அரசனாகிய தசரதனைக் கைகூப்பிக் கும்பிட்டு ;* ***இறையிடை வரன்முறை ஏறி -*** *தம் இருக்கைகளில் வரிசைக்கேற்ப ஏறி ;* ***ஏற்ற சொல்துறை அறி பெருமையான் -*** *சூழ்நிலைக்குத் தக்கவாறு பேசும் முறைமை அறிந்த பெருமைக்குரியமன்னன் ;* ***அருளும் சூடினார் -*** *அருட்பார்வையையும் பெற்றார்கள்.*

*அந்தம் இல் அறிவன் - பேரறிவு நிறைந்தவன் ; பிரம ஞானம் வாய்க்கப் பெற்றவன். வணங்குதல் - குனிந்து நிலம் தொட்டுப் பணிதல் ; தண்டன்சமர்ப்பித்தல். கைதொழுதல் - நின்றவாறே கைகூப்பிப் பணிதல். இறை - தவிசு.*
***11***

*தயரதன் தன் உளக் கருத்தை வெளியிடுதல்*

***1325. அன்னவர், அருள் அமைந்து இருந்த ஆண்டையில்,***
***மன்னனும், அவர் முகம் மரபின் நோக்கினான் ;***
***'உன்னிய அரும் பெறல் உறுதி ஒன்று உளது ;***
***என் உணர்வு அனைய நீர் இனிது கேட்டிரால் !***

***அன்னவர் -*** *அந்த அமைச்சர்கள் எல்லோரும் ;* ***அருள்அமைந்து இருந்த ஆண்டையில்*** *- மன்னன் அருளைப் பெற்று இருக்கையில் அமர்ந்திருந்தஅக்காலத்தில் ;* ***மன்னனும் அவர் முகம்*** *- தயரதனும் அவர்களது முகத்தை ;* ***மரபினன் நோக்கினான்*** *- முறையாகப் பார்த்தான் ;* ***"உன்னிய*** *- என்னால் நினைக்கப்பட்ட ;* ***பெறல் அரும்உறுதி ஒன்று உளது*** *- பெறுதற்கு அரிய உறுதிப் பொருள் ஒன்று உள்ளது ;* ***என் உணர்வுஅனைய நீர்*** *- (அதனை) என் உணர்வை ஒத்த நீவிர் ;* ***இனிது கேட்டிரால்*** *-நன்றாகக் கேட்பீர்களாக" என்றான்.*

*உறுதி - ஈண்டு உறுதியைப் பயக்கும் பொருளைக் குறித்தது. அஃதாவதுஇராமனுக்கு முடிசூட்டித் தான் வீடுபேறு அடைதற்குரிய நெறியில் செல்லத் தயரதன் நினைத்ததைக்குறித்தது. யான் உணர்தற்குரியதை நீங்கள் உணர்ந்து கூறும் தன்மையுடையீர் என்னும் கருத்தினால்'என் உணர்வு அனைய நீர்' என்றான்.*
***12***

*1326.* ***'வெய்யவன் குல முதல் வேந்தர், மேலவர்,***
***செய்கையின் ஒரு முறை திறம்பல் இன்றியே,***
***வையம் என் புயத்திடை, நுங்கள் மாட்சியால்,***
***ஐ-இரண்டு ஆயிரத்து ஆறு தாங்கினேன்.***

***வெய்யவன் குலம் முதல் வேந்தர் -*** *சூரிய குலத்தில் தோன்றிய முதன்மையான அரசர்களாகிய ;* ***மேலவர்*** *- முன்னோர்களின் ;* ***செய்கையின்*** *- ஒழுக்கத்திலிருந்து ;* ***ஒருமுறை திறம்பல் இன்றியே*** *- ஒருசிறிதும் வழுவுதல் இல்லாமல் ;* ***வையம்*** *- உலகத்தை ;* ***ஐ-இரண்டு ஆயிரத்து ஆறு*** *- அறுபதினாயிரம் ஆண்டுகள் ;* ***நுங்கள் மாட்சியால்*** *- உங்களதுநற்குண நற்செயல்களாகிய பேருதவியால் ;* ***என் புயத்திடைத் தாங்கினேன்*** *- என்தோள்களில் சுமந்தேன்.*

*செய்கை - ஒழுக்கம். முறையும் என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தால்தொக்கது. அரசாட்சி பாரம் ஆதலின் தோள்களில் தாங்குவதாகக் கூறப்பட்டது.*
***13***

*1327.* ***'கன்னியர்க்கு அமைவரும் கற்பின், மா நிலம்-***
***தன்னை இத் தகைதரத் தருமம் கைதர,***
***மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன் ;***
***என் உயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன்.***

***'கன்னியர்க்கு*** *- பெண்களுக்கு ;* ***அமைவரும்*** *- பொருந்தும் ;* ***கற்பின்*** *- கற்பினை அவர்கள் காப்பது போல ;* ***மாநிலம் தன்னை*** *- பெரிய உலகத்தை ;* ***இத் கைதர*** *- அறக்கடவுள்உதவியதனால் ;* ***மன் உயிர்க்கு*** *- நிலைபெற்ற உயிர்களுக்கு ;* ***உறுவதேசெய்து வைகினேன்*** *- பொருந்தும் நன்மைகளையே இந்நாள்வரை செய்து வாழ்ந்தேன் ;* ***என் உயிர்க்கு உறுவதும்*** *- இனி, என் உயிர்க்குப் பொருந்தும் நன்மையையும்;* ***செய்ய எண்ணினேன்*** *- புரிவதற்கு நினைந்தேன்.'*

*கன்னியர் - பெண்டிர் என்னும் பொருளில் வந்தது. கைப்பிடித்தான் ஒருவனுக்கே உரியராய் இருத்தல் பெண்டிர்க்குக் கற்புடைமை ஆகும். அதுபோல முடிசூடி ஆளத் தொடங்கிய தனக்கே உரியதாகப் பிறர்க்குப் பொதுவாகாது நாட்டைக் காத்தல் 'கற்பின்' காத்தலாகும். கைதர - உதவ ; 'இச்சுமையைத் தூக்க ஒரு கைதா' என்னும் பேச்சு வழக்கிலும் இதற்கு இப்பொருள் இருத்தல் காணலாம். பின்னும், ''மறுஅறுகற்பினில் வையம் யாவையும், அறுபதினாயிரம் ஆண்டும் ஆண்டவன்'' (2446) என வருதல் காணலாம். என் உயிர், இராகுத்தலை என்பதுபோல ஒற்றுமைக் கிழமைப் பொருளில் வந்த ஆறாம் வேற்றுமைதொகை. என் உயிர்க்கு உறுவது என்றது தவத்தைக் குறித்தது ; உம்மை, இறந்தது தழீஇயது.* ***14***

*1328.* ***'விரும்பிய மூப்பு எனும் வீடு கண்ட யான்,***
***இரும் பியல் அனந்தனும், இசைந்த யானையும்,***
***பெரும் பெயர்க் கிரிகளும் பெயர, தாங்கிய***
***அரும் பொறை இனிச் சிறிது ஆற்ற ஆற்றலேன்.***

**'விரும்பிய மூப்பு எனும் வீடு** - நெடுங்காலமாக விரும்பியிருந்த மூப்புப் பருவமாகிய (அரச பதவியிலிருந்து) விடுதலை பெறுதற்குரிய காலத்தை ; **கண்ட யான்** - அடைந்த யான்; **இரும் பியல் அனந்தனும்** - பெரிய பிடரினையுடைய ஆதிசேடனாகியபாம்பும் ; **இசைந்த யானையும்** - திக்குகளில் பொருந்திய யானைகளும் ; **பெரும் பெயர்க் கிரிகளும்** - மிக்க புகழ் வாய்ந்த எட்டுக் குல மலைகளும் ; **பெயர** - (பூமியைச் சுமக்கும் தொழிலிருந்து) நீங்க ; **தாங்கிய அரும் பொறை** - யான் சுமந்த அரிய பாரத்தை ; **இனிச் சிறிது ஆற்ற ஆற்றலேன்** - இனிமேல் சிறிதளவும் சுமக்க வல்லேனல்லேன்.'

இரான் பிறந்தபின் தான் அரசாட்சியை விட்டுத் தவஞ் செய்யச் செல்ல வேண்டும் என்ற விருப்பத்தோடு இருந்தவனாதலின் 'விரும்பிய மூப்பு எனும் வீடு' என்றான். பியல்- பிடரி. திசை யானைகள் - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்ப தந்தம்,சார்வ பௌமம், சுப்பிரதீபம் என்பன. னுட்டுக் குலமலைகள் - இமயம், மந்தரம், கைலாசம்,விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம் என்பன.

*1329.* **'நம் குலக் குரவர்கள், நவையின் நீங்கினார்,**
**தம் குலப் புதல்வரே தரணி தாங்கப் போய்,**
**வெங் குலப் புலன் கெட, வீடு நண்ணினார் ;**
**எங்கு உலப்புறுவர், என்று எண்ணி, நோக்குகேன்.**

**'நவையின் நீங்கினார்** - குற்றங்களினின்று நீங்கியவர்களாகிய ; **நம் குலக் குரவர்கள்** - எம் குலத்தில் தோன்றிய பெரியோர்கள் ; **தம்குலப் புதல்வரே** - தம் மேலான பிள்ளைகளே ; **தரணி தாங்க** - நிலவுலகைப் போற்றிக் காக்க ; **போய்** - தாம் காட்டிற்குச் சென்று ; **வெம்குலப்புலன் கெட** - கொடிய கூட்டமாகிய ஐம்புல ஆசைகள் அற்று ஒழிய ; வீடு நண்ணினார் -வீடுபேறு அடைந்தவர்கள் ; **எங்கு உலப்பு உறுவர் என்று** - எங்கு எண்ணிக்கையில்முடிவு பெறுவர் என்று ; **எண்ணி நோக்குகேன்** - எண்ணிப் பார்க்கின்றேன்.' எம் குலத்துப் பெரியோர்கள் குற்றத்தின் நீங்கி ஆட்சிபுரிந்து மூப்பு அடைந்த பின்னர்த் தம் பிள்ளைகள் ஆட்சிப் பொறுப்பினை ஏற்கத் தாம் தவஞ் செய்து வீடுபேறுபெற்றவர்களை எண்ணிப் பார்த்தால், அவர்கள் எண்ணிறந்த பலராய் இருக்கின்றார்கள் என்பதுகருத்து. நவை - காமம், வெகுளி, மயக்கம் என்னும் குற்றங்கள். ஐம்புலன் - சுவை, ஒளி, ஊறு,ஓசை, நாற்றம் என்பன. உலப்பு - முடிவு.
*16*

*1330.* **'வெள்ள நீர் உலகினில், விண்ணில், நாகரில்,**
**தள்ள அரும் பகை எலாம் தவிர்த்து நின்ற யான்,**
**கள்ளரின் கரந்து உறை காமம் ஆதி ஆம்**
**உள் உறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வெனோ?**

**'வெள்ள நீர் உலகில்** - கடலால் சூழப்பட்ட இந்த உலகத்திலும் ; விண்ணில் - வானுலகத்திலும்; **நாகரில்** - நாகர்கள் வாழும் கீழுலகத்திலும்; **தள்ள அரு பகைஎலாம்** - நீக்குதற்கு அரிய (புறப்) பகைவர்களை எல்லாம் ; **தவிர்த்து நின்ற யான்** - ஒழித்து வென்றுநின்ற யான் ; **கள்ளரின்** -திருடர்களைப் போன்று ; **கரந்துஉறை காமம் ஆதி ஆம்** - ஒளிந்து வாழும் காமம்முதலான ; உள் உறு பகைஞருக்கு - உள்ளே பொருந்திய பகைவர்களுக்கு ; **ஒதுங்கிவாழ்வெனோ** - அஞ்சி அடங்கி வாழ்வேனோ? (வாழேன்)

*புறப் பகையை வென்ற யான் அகப் பகையினுக்கு அஞ்சி அடங்கமாட்டேன்என்பது கருத்து. காமம் ஆதிப் பகைவர்கள் : காமம், குரோதம், லோபம் (கடும்பற்றுள்ளம்) மோகம், மதம், மாற்சரியம் என்பன ; இவற்றை வடநூலார் அரிஷட்வர்க்கம்என்பர். இவ்வாறனையும் காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றனுள் அடக்கிக் கூறுவது தமிழ்மரபு.*

*தயரதன் மூவுலகும் வென்றவன் என்பது, " **மாகமும் நாகமும் மண்ணும் வென்றவாளான்"** (1515) என்று பின்னரும் சுட்டப்படுவது காணலாம். ஓகாரம் எதிர்மறை.* ***17***

***1331. 'பஞ்சி மென்தளிர் அடிப்***
***பாவை கோல் கொள,***
***வெஞ் சினத்து அவுணர்***
***தேர் பத்தும் வென்றுளேற்கு,***
***எஞ்சல் இல் மனம்***
***எனும் இழுதை ஏறிய***
***அஞ்சு தேர் வெல்லும்***
***ஈது அருமை ஆவதோ?***

***'பஞ்சி மென் தளிர் அடிப் பாவை** - செம்பஞ்சுக் குழம்பு பூசப்பட்ட மென்மையான தளிர்போலும் பாதங்களையுடைய கைகேயி ; **கோல்கொள -** சாட்டைகொண்டு தோரோட்ட ; **வெம் சினத்து அவுணர் தேர் பத்தும்** - கொடிய கோபத்தையுடைய அசுரர்களின் பத்துத் தேர்களையும் ; **வென்று உளேற்கு** - வென்றுள்ளவனாகிய எனக்கு ; **எஞ்சல்இல் மனம் எனும்** - குறைவு அற்ற மனம் என்னும் ; **இழுதை ஏறிய** - பேய் ஏறிச்செலுத்துகிற ; **அஞ்சு தேர்** - பொறியாகிய ஐந்து தேர்களை ; **வெல்லும்ஈது** - வெல்லும் தொழிலாகிய இது ; **அருமை ஆவதோ** - அருமைப்பாடு உடையதுஆகுமோ? (ஆகாது)'*

*பஞ்சிமென் தளிர்அடி - பஞ்சினையும் தளிரினையும் நிகர்த்த அடிகள் எனலும் ஆம். கோல் கொள்ளுதலாகிய காரணம் தேரை ஓட்டுதலாகிய காரியத்தை உணர்த்தியதால்உபசார வழக்கு. இழுதை - பேய் ; "இழுதை நெஞ்சினோன்" (2201). பத்துத் தேர்களைவென்றவனுக்கு ஐந்து தேர்களை வெல்லுவது அரிதாவதோ என்றது நயம்.* ***18***

***1332. 'ஒட்டிய பகைஞர் வந்து உருத்த போரிடைப்***
***பட்டவர் அல்லரேல், பரம ஞானம் போய்த்***
***தெட்டவர் அல்லரேல், "செல்வம் ஈண்டு" என***
***விட்டவர் அல்லரேல், யாவர் வீடு உளார்?***

***'ஒட்டிய பகைஞர் வந்து** - வஞ்சினம் கூறிய பகைவர்கள் எதிர்த்து வந்து ; **உருத்த போரிடை** - சினந்து செய்யும் போர்க்களத்தில் ; **பட்டவர் அல்லரேல்** - இறந்தவர் அல்லராயின் ; **பரம ஞானம் போய்த்தெட்டவர்அல்லரேல்** - மேலான ஞானம் கைவரப் பெற்றுத் தெளிந்தோர் அல்லராயின் ; **'செல்வம் ஈண்டு' என** - 'பொருள் பயன்படுவது இவ்வுலகில் மட்டுமே' என்று உணர்ந்து ; **விட்டவர் அல்லரேல்** - அதனை முற்றுத்*

*துறந்தவர் அல்லராயின் ;* ***யாவர் விடு உளார்*** *- யாவர் வீட்டுலகத்தை அடைபவர் ஆவார்? (ஒருவரும் ஆகார்).'*

*போர்க்களத்தில் வீழ்ந்த மறவரும், ஞானம் மிக்கு மெய்யுணர்வு கூடப் பெற்றவரும், செல்வ நிலையாமை உணர்ந்து துவரத் துறந்தவரும் வீடு பெறுவார் என்பது கருத்து.உருத்தல் - சினத்தல். பரமஞானம் - எல்லாம் இறைவனாகக் காணும் மேலான ஞானம். தெட்டவர் -தெளிந்தவர். தயரதனுக்குப் பகையின்மையால் போரிடை வீழ்தலும், பரம ஞானம் கூடாமையால்தெளிவும் வாய்த்தில. ஆதலால் செல்வ நிலையாமை உணர்ந்து துறவுநெறி சேர்தலே வீடு பெறற்குவழியாய் அமைந்தது என்பது போதரும்.* ***19***

***1333. 'இறப்பு எனும் மெய்ம்மையை,***
***இம்மை யாவர்க்கும்,***
***மறப்பு எனும் அதனின்மேல் கேடு***
***மற்று உண்டோ?***
***துறப்பு எனும் தெப்பமே***
***துணை செய்யாவிடின்,***
***பிறப்பு எனும் பெருங் கடல்***
***பிழைக்கல் ஆகுமோ?***

***இம்மை யாவர்க்கும்*** *- இப்பிறப்பிலே எவர்க்கும் ;* ***இறப்பு எனும் மெய்ம்மையை*** *- சாவு உண்டு என்னும் உண்மையை ;* ***மறப்பு எனும் அதனின்மேல்*** *- மறத்தல் என்னும் அதற்கு மேற்பட ;* ***கேடு மற்று உண்டோ -*** *கெடுதல் வேறு உண்டோ? (இல்லை) ;* ***துறப்பு எனும் தெப்பமே*** *- துறத்தல் என்னும்மிதவையே ;* ***துணை செய்யாவிடின்*** *- உதவி செய்யாவிட்டால் ;* ***பிறப்புஎனும் பெருங்கடல்*** *- பிறப்பு என்னும் பெரிய கடலினின்று ;* ***பிழைக்கல் ஆகுமோ*** *- தப்புதல் இயலுமேடா? இயலாது.*

*யாக்கை நிலையாமையை எஞ்ஞான்றும் மனத்துக் கொண்டால் அது பிறவியைஒழித்தற்கு இன்றியமையாத துறவினை மேற்கொள்ளச் செய்யும் ; செய்யவே, பிறவிப் பெருங்கடல்கடத்தலாகும் என்பது கருத்து. காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவிப் பெருங்கடல் என்றார். "பிறவிப் பெருங்கடல்" (குறள், 10) என்பர் திருவள்ளுவரும். பிழைக்கல்- தப்புதல், உய்தல்.*
***20***

***1334. 'அருஞ் சிறப்பு அமைவரும் துறவும், அவ் வழித்***
***தெரிஞ்சு உறவு என மிகும் தெளிவும் ஆய், வரும்***
***பெருஞ் சிறை உள எனின், பிறவி என்னும் இவ்***
***இருஞ் சிறை கடத்தலின் இனியது யாவதோ?***

***அருஞ் சிறப்பு அமைவரும் துறவும்*** *- அரிய சிறப்புப் பொருந்திய துறவும் ;* ***அவ் வழி தெரிஞ்சு*** *- அந்த வழியை அறிந்து ;* ***உறபு என மிகும்தெளிவும் ஆய்*** *- அதற்கு இனம் என்று சிறந்துள்ள மெய்யுணர்வும் ஆகி ;* ***வரும்பெருஞ் சிறை உள எனின்*** *- வருகின்ற பெரிய சிறகுகள் உண்டானால் ;* ***பிறவிஎன்னும் இவ் இருஞ் சிறை*** *- பிறப்பு என்னும்*

*இந்தப் பெரிய சிறைச்சாலையை ;* ***கடத்தலின் இனியது யாவதோ*** *- நீங்கிச் செல்லுவதினும் இனிமையான தொன்று வேறு எதுவோ?(எதுவும் இல்லை).*

*உயிராகிய பறவைக்குத் துறவு, மெய்யுணர்வு என்னும் இரு சிறகுகள் முளைத்துவிட்டால் அது பிறவி ஆகிய கூண்டை விட்டுப் பறந்துவிடும் என்பது கருத்து. அருஞ் சிறப்புஅமைவரும் - அடைவதற்கு அரிய வீட்டினை அடைதற்குக் காரணமான எனலும் பொருந்தும். தெரிஞ்சு - தெரிந்து என்பதன் போலி. திருவள்ளுவர் துறவையும் மெய்யுணர்தலையும் அடுத்தடுத்து வைத்துள்ளமுறைமை துறந்தார்க்கே மெய்யுணர்வு தோன்றும் எனத் தெரிவித்தல் ஈண்டுக் கருதத் தக்கது.* ***21***

***1335. 'இனியது போலும் இவ் அரசை எண்ணுமோ-***
***துனி வரு புலன் எனத் தொடர்ந்து தோற்கலா***
***நனி வரும் பெரும் பகை நவையின் நீங்கி, அத்***
***தனி அரசாட்சியில் தாழும் உள்ளமே?***

***'துனி வரு*** *- துன்பம் வருதற்குக் காரணமாகிய ;* ***புலன் எனத் தொடர்ந்து*** *- ஐம்புலன்கள் என்னும் பெயரையுடையனவாக உயிரைப் பற்றிக்கொண்டு ;* ***தோற்கலா*** *- தோல்வியுறாத ;* ***நனிவரும் பெரும் பகை நவையின் நீங்கி*** *-மிகுதியாக வருகின்ற பெரிய பகையினால் வரும் குற்றங்களினின்றும் விலகி ;* ***அத் தனிஅரசாட்சியில்*** *- அந்த ஒப்பற்ற வீட்டரசை ஆளுவதில் ;* ***தாழும் உள்ளம்*** *-ஈடுபடும் மனமானது ;* ***இனியது போலும் இவ் அரசை*** *- இனியது போலத் தோற்றும் இந்த உலகினை ஆளும் அரசாட்சியை ;* ***எண்ணுமோ*** *- ஒரு பொருளாக மதிக்குமோ?(மதிக்காது)'*

*புலன் எனத் தொடர்ந்து என்பது "நாள்என ஒன்றுபோல் காட்டி" என்பது போலவருவது. புறப்பகையினும் அகப்பகை கொடிதாதலின் பெரும்பகை எனப்பட்டது. அரச பதவி துன்பமின்றித்தொழத்தக்கது அன்றாதலின் 'இனியது போலும் அரசு' என்றார். கீழ் உள்ள பாடல்களில் துறவின்பெருமை பேசி, இதில் அத்துறவில் தன்மனம் செல்வதைத் தெரிவிக்கிறான் தயரதன்.* ***22***

***1336. 'உம்மை யான் உடைமையின், உலகம் யாவையும்***
***செம்மையின் ஓம்பி, நல் அறமும் செய்தனென் ;***
***இம்மையின் உதவி, நல் இசை நடாய நீர்,***
***அம்மையும் உதவுதற்கு அமையவேண்டுமால்.***

***'யான் உம்மை உடைமையின்*** *- நான் உங்களை மந்திரக் கிழவர்களாகப்பெற்றதால் ;* ***உலகம் யாவையும்*** *- உலகம் முழுவதையும்;* ***செம்மையின்ஓம்பி*** *- முறையாகப் பேணிக் காத்து ;* ***நல் அறமும் செய்தனென்*** *- சிறந்தஅறச் செயல்களையும் செய்தேன் ;* ***இம்மையின் உதவி*** *- இவ்வாறு இவ்வாழ்வில்எனக்கு உதவி செய்து;* ***நல் இசை நடாய நீர்*** *- எனது நல்ல புகழை பரவச் செய்தநீங்கள்;* ***அம்மையும் உதவுதற்கு*** *- அவ்வுலகப் பேற்றுக்கும் உதவி செய்தவற்கு ;* ***அமைய வேண்டும்*** *- மனங்கொள்ள வேண்டும்.'*

*ஆல் - அசை. நல்லறமாவது தானம், வேள்வி முதலிய புரிதலாகும். "ஈந்தேகடந்தான் இரப்போர் கடல்" (172) என அரசியற் படலத்துள் தயரதன் செய்த*

*அறச்செயல்பேசப்பட்டுள்ளமை காணலாம். அம்மை - மறுமை.*
*23*

*1337.* ***‘இழைத்த தொல் வினையையும் கடக்க எண்ணுதல்,***
***தழைத்த பேர் அருளுடைத் தவத்தின் ஆகுமேல்,***
***குழைத்தது ஓர் அமுதுடைக் கோரம் நீக்கி, வேறு***
***அழைத்த தீ விடத்தினை அருந்தல் ஆகுமோ?***

**‘இழைத்த தொல் வினையையும்** - ஒருவன் செய்த பழமையான வினைகளின்பயன்களையும் ; **கடக்க எண்ணுதல்** - தாண்டிச்செல்லக் கருதுவது ; **தழைத்தபேர் அருள் உடைத் தவத்தின் ஆகுமேல்** - மிகுந்த பெரிய அருளையுடைய தவத்தினால்உண்டாகுமானால், (அத்தவத் தினைச் செய்யாது) ; **குழைத்தது ஓர் அமுதுடைக் கோரம் நீக்கி** - இனியவற்றைக் கூட்டிச் சேர்த்த அமுதத்தைக் கொண்ட வட்டிலை ஒதுக்கி ; **வேறுஅழைத்த தீ விடத்தினை -** அதற்கு மாறாகச் சொல்லப் பட்ட கொடிய நஞ்சினை ; **அருந்தல் ஆகுமோ** - நுகர்தல் தகுமோ? (தகாது)’

அமுத வட்டிலை ஒதுக்கிவிட்டுத் தீவிடத்தினை நுகர்தல் தகாதது போலத்தவத்தினை விடுத்து அரச வாழ்வில் மூழ்கியிருத்தல் தகாது என்பது கருத்து. ‘தவத்தினைச்செய்யாமல் அரசவாழ்வை மேற்கொண்டிருத்தல்’ என்னும் பொருளினைச் சொல்லாமல் உவமையை மட்டும்கூறியதனால் இது ஒட்டணி ஆகும். கோரம் - வட்டில். *24*

*1338.* ***‘கச்சை அம் கடக் கரிக் கழுத்தின்கண் உறப்***
***பிச்சமும் கவிகையும் பெய்யும் இன் நிழல்***
***நிச்சயம் அன்றுஎனின், நெடிது நாள் உண்ட***
***எச்சிலை நுகருவது இன்பம் ஆகுமோ?***

***கச்சை அம் கடக்கரி*** - கயிறு பூண்ட அழகிய மத யானையினது ; ***கழுத்தின்கண் உற*** - கழுத்தில் பொருந்த ; ***பிச்சமும் கவிகையும் பெய்யும்*** - பீலிக் குஞ்சமும் வெண் கொற்றக் குடையும் தருகின்ற ; ***இன் நிழல்*** - இனியநிழலின்கண் இருந்து ஆளும் வாழ்வு ; நிச்சயம் அன்று எனின் - என்றும் நிலைக்கக்கூடியதன்று என்றால் ; ***நெடிது நாள் உண்ட எச்சிலை*** - நெடுங்காலமாக நுகர்ந்துவந்தஎச்சில் போன்ற அதனை ; ***நுகருவது*** - மேலும் துய்ப்பது ; ***இன்பம் ஆகுமோ*** - இன்பம் தருவதாகுமோ? (ஆகாது).’

நிலையாத அரச இன்பத்தை விடுத்து நிலைத்த இன்பம் நல்கும் துறவினைநாடுவது சிறப்பு என்பது கருத்து.

***“ஒரு நாயகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்***
***கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்***
***பெருநாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்***
***திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ”***
***(திருவாய்மொழி, 4:1:1)***

*என்பர் நம்மாழ்வார்.*

*பிச்சமும் கவிகையும் அரச சின்னங்கள். நிழல் - ஈண்டுக் குடைநிழலில் இருந்து ஆளும் அரச போகத்தைக் குறித்தது.* ***25***

***1339. 'மைந்தரை இன்மையின் வரம்பு இல் காலமும்***
***நொந்தனென் ; இராமன் என் நோவை நீக்குவான்***
***வந்தனன் ; இனி, அவன் வருந்த, யான் பிழைத்து,***
***உய்ந்தனென் போவது ஓர் உறுதி எண்ணினேன்.***

***'மைந்தரை இன்மையின்*** *- பிள்ளைகள் இல்லாமையால் ;* ***வரம்பு இல் காலமும்*** *- எல்லையற்ற காலமும் ;* ***நொந்தனென்*** *- (மனம்) வருந்தினேன் ;* ***என் நோவை நீக்குவான்*** *- என் வருத்தத்தை நீக்குவதற்கு;* ***இராமன் வந்தனன்*** *- இராமன் எனக்கு மகனாகப் பிறந்தான்;* ***இனி அவன் வருந்த*** *- இனி அந்த இராமன் அரசாட்சியைத் தாங்கித் துன்பம் உற;* ***யான் பிழைத்துஉய்ந்தனென் போவதோர் உறுதி*** *- யான் தப்பி ஈடேறிப் போவதான ஒரு நன்மையைப் பெற ;* ***எண்ணினேன் -*** *நினைந்தேன்.'*

*இராமனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு யான் துறவு மேற்கொள்ளஎண்ணினேன் என்பது கருத்து. இராமன் எனற் பெயர் மகிழச் செய்பவன் என்னும் பொருளது. ஆதலின்என் நோவை நீக்க என் தவத்தினாலன்றித் தானே வந்து தோன்றினான் என்பான் 'இராமன் வந்தனன்' என்று கூறினான். 'அவன் வருந்த யான் பிழைத்துய்ந்தனன் போவதோர் உறுதிஎண்ணினேன்' என்பது இராமன் நாடு துறந்து காடு சென்று துன்புற, யான் இவ்வுடலைத் துறந்து துறக்கம்போவதாகிய ஓர் உறுதியை எண்ணினேன் என்று மேல் வினையைக் குறிப்பாகக் காட்டுவதாக அமைந்தது.நீக்குவான் 'வான்' ஈற்று எதிர்கால வினையெச்சம்.* ***26***

***1340. "இறந்திலன் செருக் களத்து***
***இராமன் தாதை ; தான்,***
***அறம்தலை நிரம்ப, மூப்பு***
***அடைந்த பின்னரும்,***
***துறந்திலன்" என்பது ஓர் சொல்***
***உண்டானபின்,***
***பிறந்திலென் என்பதின்***
***பிறிது உண்டாகுமோ?***

***இராமன் தாதை*** *- இராமனுக்குத் தந்தையான தயரதன் ;* ***செருக்களத்து இறந்திலன்*** *- போர்க்களத்தில் உயிர் விட்டானில்லை ;* ***தான்மூப்பு அடைந்த பின்னரும்*** *- தான் கிழத்தனத்தை அடைந்த பிறகும் ;* ***அறம் தலைநிரம்ப*** *- அறம் முழுதும் நிறையும்படி ;* ***துறந்திலன்*** *- துறவு நெறியைமேற்கொண்டானில்லை ;* ***என்பது ஓர் சொல்*** *- என்பதாகிய ஒரு பழிச்சொல் ;* ***உண்டான பின்*** *- தோன்றிய பின்பு ;* ***பிறந்திலென் என்பதின்*** *-பிறந்திலேன் என்பதினும் ;* ***பிறிது உண்டாகுமோ*** *- வேறு உண்டோ?*

*முனைமுகத்து விழுப்புண் பட்டு வீரசுவர்க்கம் அடைவது மன்னர்க்குச் சிறப்பு ; அது வாய்க்காது போயின், மூப்புப் பருவத்தில் துறந்து அதன் பயன் கோடல்தக்கதாம். இவ்விரண்டும் வாய்க்காது போயின் பிறந்தும் பயனில்லை ; பழிச்சொல்உண்டாகும் என்பது வற்புறுத்தப்பட்டது. பிறவிப் பயன் அடையாதார் பிறந்தும் பிறவாதாரே*

*ஆவார். 'இராமன் தாதை' என்பது பிள்ளையைப் பெற்ற பின்னரும் துறந்திலன் என்னும் குறிப்பினை உட்கொண்டது.* *27* ***1341.***

**'பெருமகன் என்வயின் பிறக்க, சீதை ஆம்**
**திருமகள் மணவினை தெரியக் கண்ட யான்,**
**அரு மகன் நிறை குணத்து அவனி மாது எனும்**
**ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்.**

*'**பெருமகன் என்வயின் பிறக்க** - ஆடவர் திலகமாகிய இராமன் எனக்குமகனாகத் தோன்ற ; **சீதை ஆம் திருமகள் மணவினை** - சீதையாகிய திருமகளின்திருமணத்தை ; **தெரியக் கண்ட யான்** - கண்ணாரப் பார்த்து மகிழ்ந்த யான்; **அரு மகன் -** அந்த அரிய மகனாகிய இராமன் ; **நிறை குணத்து அவனி மாது எனும்** - நிறைந்த குணத்தையுடைய மண்மகள் என்கிற ; **ஒரு மகள் மணமும்** - ஒப்பற்ற பெண்ணை மணம்புரிந்து கொள்ளுதலையும் ; **கண்டு உவப்ப உன்னினேன்** - கண்ணாரக்கண்டு களிக்கக் கருதினேன்.'*

*தயரதன், "இராமனுக்குத் திருமணம் நடந்ததைக் கண்டு மகிழ்ந்த யான்,அரசுரிமை ஏற்றலையும் செய்விக்கப் பேரவாக் கொள்கிறேன்" என்கிறான். பெருமகன், திருமகள்,அவனிமாது ஆகிய சொற்கள், "பெருமாளுக்குத் தேவியர் இருவருள் திருமகள் கூடியதைக் கண்டு களித்தேன் ; இனி மண்மகள் கூடுவதனையும் காண விழைகிறேன்" என்னும் பொருளினைத்தெரிவிப்பனவாக அமைந்துள்ளன.*

*இதுவரை தயரதன் தான் துறக்க விரும்பியதற்குக் காரணங் கூறி, இது முதல்இராமனுக்கு அவன் முடிசூட்ட விரும்பியதைக் கூறுகிறான்.* ***28***

***1342. 'நிவப்புறு நிலன் எனும் நிரம்பு நங்கையும்,***
***சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்,***
***உவப்புறு கணவனை உயிரின் எய்திய***
***தவப் பயன் தாழ்ப்பது தருமம் அன்றுஅரோ.***

*'**நிவப்புறு** - உயர்வு பெற்ற ; **நிலன் எனும் நிரம்புநங்கையும்** - மண் என்னும் பெண்மைக் குணங்கள் நிரம்பிய தேவியும் ; **சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்** - செந்நிறத் தாமரை மலரின்மீது வீற்றிருக்கின்றசீதேவியும் ; **உவப்புறு கணவனை** - விரும்பத்தக்க மணாளனை ; **உயிரின்எய்திய** - தம் உயிர்போல அடைவதற்குக் காரணமான ; **தவப் பயன்** -தவத்தின் பயனை ; **தாழ்ப்பது தருமம் அன்று** - பிற்படச் செய்வது அறம் ஆகாது.'*

*நிவப்புறு என்பதனை நங்கையொடும் செல்வியொடும் தனித்தனிக் கூட்டுக.நிலமடந்தைக்கு உயர்வாவது - எல்லாப் பொருள்களையும் தாங்கும் ஆற்றலுடைமை, வளம்முதலியவற்றால் சிறந்திருத்தல். திருமகளுக்கு உயர்வாவது - யாவர்க்கும் செல்வப் பெருக்கைத்தந்து இம்மை மறுமை இன்பங்களை நுகரச் செய்தல். அரோ - ஈற்றசை.*

*முன் பாட்டின் கருத்தையே மறுமுறையும் வற்புறுத்தி இராமனுக்கு முடிசூட்டும்நாளைத் தள்ளிப் போடுவது அறம் ஆகாது என்றும் ஆதலின் விரைந்து*

*முடிசூட்டல் வேண்டும் என்றுகூறுகிறான். திருமடந்தையும் மண்மடந்தையும் இராமனைத் தலைவனாக அடைந்தமை, "பொன்உயிர்த்த பூமடந்தையும் புவி எனும் திருவும், இன் உயிர்த்துணை இவன் என நினைக்கின்ற இராமன்"(1350) எனப் பின்னும் சுட்டப்படுகிறது.* ***29***

## *1343. 'ஆதலால், இராமனுக்கு அரசை நல்கி, இப்*
## *பேதைமைத்தாய் வரும் பிறப்பை நீக்குறு*
## *மா தவம் தொடங்குவான் வனத்தை நண்ணுவேன் ;*
## *யாது நும் கருத்து?' என, இனைய கூறினான்.*

*'* ***ஆதலால் -*** *ஆகையால் ;* ***இராமனுக்கு அரசை நல்கி*** *- இராமனுக்கு அரசாட்சியை அளித்துவிட்டு ;* ***இப் பேதைமைத்தாய் வரும் பிறப்பை*** *-இந்த அறியாமையை உடையதாக வரும் பிறவி நோயை ;* ***நீக்குறு மாதவம் தொடங்குவான்*** *- நீக்குகின்ற பெரிய தவத்தைத் தொடங்குவதற்காக ;* ***வனத்தை நண்ணுவேன்*** *-கானகத்தை அடையப் போகிறேன் ;* ***நும் கருத்து யாது*** *- உங்கள் எண்ணம் யாது ;* ***என -*** *என்று ;* ***இனைய கூறினான்*** *- இத் தன்மையானவற்றைத் தெரிவித்தான்.*

*பேதைமை - அறியாமை ; அவிச்சை, அறியாமை நிறைந்தது மனிதப் பிறப்பு என்பதனைத் திருவள்ளுவரும் "பிறப்பென்னும் பேதைமை" (358) என்று புலப்படுத்தியுள்ளார். தொடங்குவான் - 'வான்' ஈற்று எதிர்கால வினையெச்சம். இனைய - குறிப்பு வினையாலணையும்பெயர். இராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டத் தயரதன் எண்ணியதாகவே முதல்நூல் கூறுகிறது. இங்கோஅரசுரிமை ஏற்றலே பேசப்படுகிறது.* ***30***

*மந்திரக் கிழவரின் மன நிலை*

*கலிநிலைத்துறை*

## *1344. திரண்ட தோளினன்*
## *இப்படிச் செப்பலும், சிந்தை*
## *புரண்டு மீதிடப்*
## *பொங்கிய உவகையர், ஆங்கே*
## *வெருண்டு, மன்னவன்*
## *பிரிவு எனும் விம்முறு நிலையால்,*
## *இரண்டு கன்றினுக்கு*
## *இரங்கும் ஓர் ஆ என இருந்தார்.*

***திரண்ட தோளினன்*** *- பருத்த தோள்களை உடைய தயரத மன்னன்;* ***இப்படிச் செப்பலும்*** *- இவ்வாறு கூறவும் ;* ***சிந்தை புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர்*** *- (மந்திரக் கிழவர்) மனத்தினின்று பொங்கி மேலிட வழிந்த மகிழ்ச்சியைஉடையவர்களாய் ;* ***ஆங்கே*** *- அதே நேரத்தில் ;* ***மன்னவன் பிரிவு எனும்*** *- தயரதன் பிரிவு என்கிற ;* ***விம்முறு நிலையால் வெருண்டு*** *- இரங்குதற்குரியநிலைமையால் மனம் கலங்கி ;* ***இரண்டு கன்றினுக்கு*** *- இரு*

*கன்றுக்குட்டிகளுக்காக ;* ***இரங்கம் ஓர் ஆ என*** *- மனம் இரங்கும் ஒரு பசுவைப்போல ;* ***இருந்தார்*** *- (ஒன்றும் தெளிய மாட்டாதவராக) இருந்தனர்.*

*இரு கன்றுகளை உடைய பசு இரண்டில் ஒன்றை விடும் நிலை வந்தபோது எதையும்பிரிய மனம் ஒருப்படாமல் இரண்டுக்கும் இரங்குவதுபோல, தயரதன் துறத்தலையும், இராமன்அரசனாகாமல் இருத்தலையும் விரும்பாமல் இருவரையும் விட மனமின்றி இரங்கினர் என்பது உவமையாற்போந்த பொருளாகும். விம்முறல் - துன்பமுறுதல் ; இரங்குதல். 31*

***1345. அன்னர் ஆயினும், அரசனுக்கு, அது அலது உறுதி***
***பின்னர் இல் எனக் கருதியும், பெரு நில வரைப்பில்***
***மன்னும் மன்னுயிர்க்கு இராமனின் மன்னவர் இல்லை***
***என்ன உன்னியும், விதியது வலியினும், இசைந்தார்.***

***அன்னர் ஆயினும்*** *- (மந்திரக் கிழவர்) அத்தன்மையராயினும் ;* ***அரசனுக்கு*** *- தயரதனுக்கு ;* ***அது அலது உறுதி பின்னர் இல் எனக் கருதியும்*** *-அவ்வாறு செய்வதன்றி நன்மை வேறில்லை என்று எண்ணியும்;* ***பெரு நில வரைப்பில்*** *- பெரிய நிலவுலகத்தில்;* ***மன்னும் மன்னுயிர்க்கு*** *- தங்கியிருக்கின்றநிலைபேறுடைய உயிர்களுக்கு ;* ***இராமனின் மன்னவர் இல்லை*** *- இராமனைப் போலச்சிறந்த அரசர் இல்லை ;* ***என்ன உன்னியும்*** *- என்று நினைத்தும் ;* ***விதியது வலியினும்*** *- விதியின் வலிமையாலும்;* ***இயைந்தார்*** *- (அரசன் கருத்துக்கு)உடன்பட்டனர்.*

*தயரதன் விருப்பத்தினை அமைச்சர்கள் ஏற்றுக்கொண்டதற்கு மூன்று காரணங்கள் இருந்தன. அவை : துறவு தயரதனுக்கு நன்மை தரும் என்று எண்ணியமை, இராமனைப்போன்ற சிறந்த அரசர் இல்லை என்று நினைத்தமை, இராமன் காடு செல்வதற்குரிய விதியின் வலிமைஎன்பன. 32*

வசிட்டன் பேச்சு

***1346. இருந்த மந்திரக் கிழவர்தம்***
***எண்ணமும், மகன்பால்***
***பரிந்த சிந்தை அம் மன்னவன்***
***கருதிய பயனும்,***
***பொருந்து மன்னுயிர்க்கு உறுதியும்,***
***பொதுவுற நோக்கி,***
***தெரிந்து, நான்மறைத் திசைமுகன்***
***திருமகன் செப்பும் :***

***நான்முறைத் திசைமுகன் திருமகன்*** *- நான்கு வேதங்களையுடைய நான்முகனுக்கு மகனாகிய வசிட்டன் ;* ***இருந்த மந்திரக் கிழவர்தம் எண்ணமும்*** *- அங்குக் கூடியிருந்த அமைச்சர்களின் கருத்தையும் ;* ***மகன்பால் பரிந்த சிந்தை*** *- மகன்மீது அன்புகொண்ட ;* ***அம் மன்னவன் கருதிய பயனும்*** *- அந்தத் தயரதன் நினைத்த நினைப்பையும் ;* ***மன் உயிர்க்குப்பொருந்தும் உறுதியும்*** *- அவற்றால் நிலைபெற்ற உயிர்களுக்கு உண்டாகும்*

*நன்மையையும் ;* ***பொது உற நோக்கி*** *- நடுவு நிலைமை பொருந்த ஆராய்ந்து ;* ***செப்பும்*** *-பின்வருமாறு சொல்வபவனானான்.*

*பொதுவுற நோக்கல் - விருப்பு வெறுப்பின்றிச் சீர்தூக்கல். வசிட்டன் பிரமதேவனுக்கு மானச புத்திரனாதலின் அவனைத் 'திசைமுகன் மகன்' என்றார்.*
***33***

***1347. 'நிருப ! நின் குல மன்னவர் நேமி பண்டு உருட்டிப்***
***பெருமை எய்தினர் ; யாவரே இராமனைப்பெற்றார்?***
***கருமமும் இது ; கற்று உணர்ந்தோய்க்கு இனிக் கடவ***
***தருமமும் இது ; தக்கதே உரைத்தனை ; - தகவோய் !***

***'நிருப*** *- மன்னவனே!* ***தகவோய்*** *- தகுதியுடையோனே!* ***பண்டு*** *- முற்காலத்தில் ;* ***நின் குல மன்னர் நேமி உருட்டி*** *- உன்குலத்தில் தோன்றிய அரசர்கள் ஆணைச் சக்கரத்தைச் செலுத்தி ;* ***பெருமை பெற்றனர்*** *- பெருமை அடைந்தார்கள் ;* ***யாவரே இராமனைப் பெற்றார்*** *- அவர்களுள்இராமனைப் போன்ற மைந்தனைப் பெற்றவர் எவர்? (ஒருவரும் இலர்) ;* ***கற்று உணர்ந்தோய்க்கு*** *- கற்பதற்குரிய நூல்களைக் கற்று அவற்றின் பொருளை உணர்ந்த உனக்கு ;* ***கருமமும்இது*** *- இப்பொழுது செய்தற்குரியதும் இதுவே ;* ***இனி கடவ தருமமும் இது*** *- இனிச் செய்வதற்குரிய அறச்செயலும் இதுவே ;* ***தக்கதே நினைந்தனை*** *- தகுதியுடைய செயலையேபுரியக் கருதினாய்.'*

*மன்னன் ஆணையைச் சக்கரம் என்றல் மரபு. 'யாவரே இராமனைப் பெற்றார்'என்பது இராமன் தனிச் சிறப்புகள் பல பெற்றவன் என்பதனைக் குறித்தது. கருமம் தன் நலம்குறித்துச் செய்வது ; தருமம் - யாவர்க்கும் பயன் தரும்படி செய்வது.*
***34***

***1348. 'புண்ணியம் தொடர் வேள்விகள் யாவையும் புரிந்த***
***அண்ணலே! இனி, அருந் தவம் இயற்றவும அடுக்கும்;***
***வண்ண மேகலை நிலமகள், மற்று, உனைப் பிரிந்து***
***கண் இழந்திலள் எனச் செயும், நீ தந்த கழலோன்.***

***'புண்ணியம் தொடர்*** *- நற்பயன் தோன்றக் காரணமான;* ***வேள்விகள் யாவையும் புரிந்த அண்ணலே*** *- யாகங்கள் எல்லாவற்றையும் செய்த பெரியோனே !* ***இனி அரு தவம் இயற்றவும் அடுக்கும்*** *- நீ இனிமேல் செய்தற்கு அரிய தவத்தைச் செய்தலும்தகும்;* ***வண்ண மேகலை நிலமகள்-*** *அழகிய மேகலை என்னும் அணியினைப் பூண்ட பூமிதேவி ;* ***உனைப் பிரிந்து*** *- உன்னைவிட்டுப்பிரிவதனால்;* ***கண் இழந்திலள் என -*** *பற்றுக்கோடு இழக்கவில்லை என்றுசொல்லும்படி;* ***நீ தந்த கழலோன் செய்யும்*** *- நீ பெற்ற வீரக்கழலை அணிந்தஇராமன் செய்வான்.*

*'புண்ணியம் தொடர்' என்னும் அடைமொழி, பிறர்க்குத் தீங்கிழைக்கும் வேள்விகளும் உண்டு என்பதனைக் காட்டியது. தயரதன் நிலமகளுக்குக் கண் போன்று இன்றியமையாதவனேயன்றிக் கண்ணாக ஆகான். ஆதலின் அவன் பிரிவால் நிலமகள்*

*பார்க்கும் கண்ணை இழப்பாள்என்பதனினும் பற்றுக்கோடு இழப்பான் என்பதே தகும். கண் - பற்றுக்கோடு.* ***35***

***1349. 'புறத்து, நாம் ஒரு பொருள் இனிப்***
***புகல்கின்றது எவனோ,***
***அறத்தின் மூர்த்தி வந்து***
***அவதரித்தான் என்பது அல்லால்?***
***பிறத்து, யாவையும் காத்து, அவை***
***பின் உறத் துடைக்கும்***
***திறத்து மூவரும் திருந்திடத்***
***திருத்தும், அத் திறலோன்.***

***'அறத்தின் மூர்த்தி*** *- அறத்தின் வடிவமான பரம்பொருளே!* ***வந்து*** *- தன் திருவுள்ளத்தால் இவ்வுலகிற்கு வந்து ;* ***அவதரித்தான் என்பது அல்லால்*** *- இராமனாகப் பிறந்துள்ளான் என்பதையன்றி ;* ***புறத்து*** *- அதனின் வேறாக ;* ***நாம் புகல்கின்றது ஒருபொருள் எவன்*** *- இனி நாம் உரைக்கத்தக்கது யாது?;* ***அத் திறலோன்*** *- அந்த ஆற்றல் மிக்க இராமன்;* ***யாவையும்*** *- எல்லாப் பொருள்களையும் ;* ***பிறத்து*** *- தோற்றுவித்து ;* ***காத்து -*** *காப்பாற்றி ;* ***பின்அவை உறத் துடைக்கும் திறத்து*** *- இறுதியில் அவற்றை முற்றும் அழிக்கும் திறனுள்ள ;* ***மூவரும்*** *- பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளின் செயல்களும் ;* ***திருந்திடத் திருத்தும்*** *- திருத்தமடையத் திருத்துவான்.'*

*மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட பரம்பொருளே இராமனாகத் தோன்றியுள்ளான் என்பது கூறப்பட்டது. பிறத்து - பிறந்து என்பதன் பிறவினை.*
***36***

***1350. 'பொன் உயிர்த்த பூ மடந்தையும்,***
***புவி எனும் திருவும்,***
***"இன் உயிர்த் துணை இவன்" என,***
***நினைக்கின்ற இராமன்,***
***"தன் உயிர்க்கு" என்கை புல்லிது ;***
***தற் பயந்து எடுத்த***
***உன் உயிர்க்கு என நல்லன், மன்***
***உயிர்க்கு எலாம் ; - உரவோய் !***

***'உரவோய் !*** *- வலிமை உடையோய் ;* ***பொன் உயிர்த்த பூ மடந்தையும்*** *- அழகினைத் தோற்றுவிக்கும் சீதேவியும் ; புவி எனும் திருவும் - மண்மடந்தையும் ;* ***இன் உயிர்த் துணை இவன் என நினைக்கின்ற இராமன்*** *- (தமக்கு)இனிய உயிர் போன்ற துணைவன் இவனே என்று கருதுகின்ற இராமன் ;* ***தன் உயிர்க்கு(நல்லன்) என்கை புல்லிது*** *- தன் உயிர்க்கு இனியான் என்று சொல்லுவது புன்மையானது ;* ***தன் பயந்து எடுத்த*** *- தன்னைப் பெற்றெடுத்த ;* ***உன் உயிர்க்கு என*** *- உன்உயிர்க்கு எவ்வாறு நல்லனாக இருக்கிறானோ அவ்வாறே ;* ***மன் உயிர்க்கு எலாம்*** *-நிலைபெற்ற எல்லா உயிர்களுக்கும் ;* ***நல்லன்*** *- நல்லவனாய் இருக்கிறான்.'*

இப்பாட்டு, இராமன் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் என்பதனைக்கூறுகிறது. உயிர்த்துணைவன் உவமத்தொகை. *37*

***1351. வாரம் என் இனிப் பகர்வது?***
***வைகலும், அனையான்***
***பேரினால், வரும் இடையூறு***
***பெயர்கின்ற பயத்தால்,***
***வீர, நின் குல மைந்தனை,***
***வேதியர் முதலோர்***
***யாரும், "யாம் செய்த நல் அறப் பயன்"***
***என, இருப்பார்.***

**'வீர !** - வீரனே ; **வைகலும் அனையான் பேரினால்** -நாள் தோறும் அந்த இராமன் திருநாமத்தைச் சொல்லுவதால் ; **வரும் இடர் எலாம்** - ஒருவர்க்கு உண்டாகின்ற துன்பங்கள் எல்லாம் ; **பெயர்கின்ற பயத்தால்** -விலகிப் போகின்ற தன்மையால் ; **நின் குல மைந்தனை** - உன் சிறந்த மகனாகியஇராமனை ; **வேதியர் முதலோர் யாரும்** - வேதம் ஓதும் அந்தணர் முதலியோர்எல்லாரும் ; **யாம் செய்த நல் அறப் பயன் என** - நாம் செய்த புண்ணியத்தின்விளைவு என்று ; **இருப்பார்** - நினைத்திருக்கிறார்கள் ; **வாரம் என்இனிப் பகர்வது** - (என்றால்) குடிமக்களுக்கு அவன்மீது உள்ள அன்பைப் பற்றி என்ன கூறுவது?

'பேரினால், வரும் இடையூறு பெயர்கின்ற பயத்தால்' என்பதால் இராமனைக்காட்டிலும் இராம நாமம் ஆற்றல் மிக்கது என்பது குறிக்கப்பட்டது.

"இராம !" என எல்லாம், மாறும், அதின் மாறு பிறிது இல்" என வலித்தான் (4828) என்று பின்னும் குறிக்கப்படுதல் காணலாம். பயம் - தன்மை.

*38* ***1352. 'மண்ணினும் நல்லள் ;***
***மலர்மகள், கலைமகள், கலை ஊர்***
***பெண்ணினும் நல்லள் ;***
***பெரும் புகழ்ச் சனகியோ நல்லள்-***
***கண்ணினும் நல்லன் ;***
***கற்றவர் கற்றிலா தவரும்,***
***உண்ணும் நீரினும்,***
***உயிரினும், அவனையே உவப்பார்.***

**'பெரும் புகழ்ச் சனகியோ** - பெரும் கீர்த்தியையுடைய சானகியோ என்றால் ; **மண்ணிலும் நல்லள்** - பொறுமையில் நிலமகளினும் சிறந்தவள்; **மலர்மகள் கலைமகள் கலைஊர் பெண்ணினும் நல்லள்** - அழகில் திருமகளையும், அறிவில்கலைமகளையும், ஆற்றலில் கலைமானை வாகனமாகக் கொண்ட துர்க்கையையும்விடச் சிறந்தவள் ; **கண்ணினும் நல்லன்** - அவளுக்குக் கணவனான இராமனோ கண்ணைவிடச் சிறந்தவன்; **அவனையே** - அவன் ஒருவனையே ; **கற்றவர் கற்றிலாதவரும்** - படித்தவர்களும்சிறிதும் படிக்காதவரும் ; **உண்ணும் நீரினும்** - உயிர் இருப்பதற்குக்

*காரணமானபருகும் நீரைவிடவும் ; **உயிரினும்** - உடம்பு இயங்குதற்குக் காரணமானஉயிரைவிடவும் ; **உவப்பார்** - விரும்புவர்.' 39*

***1353. 'மனிதர், வானவர்,***
***மற்றுளோர் அற்றம் காத்து அளிப்பார்***
***இனிய மன்னுயிர்க்கு***
***இராமனின் சிறந்தவர் இல்லை ;***
***அனையது ஆதலின்,***
***அரச! நிற்கு உறு பொருள் அறியின்,***
***புனித மா தவம்***
***அல்லது ஒன்று இல்' எனப் புகன்றான்.***

*'**அரச !** - மன்னனே ! ; **மனிதர், வானவர், மற்றுளோர்** - மக்களும், தேவரும், நரகரும் ஆகிய ; **இனிய மன் உயிர்க்கு** - இனிமை நிறைந்த நிலைபெற்ற உயிர்களுக்கு ; **அற்றம் காத்து அளிப்பார்** - கேடு வாராமல்பாதுகாத்து அருள்புரிபவர் ; **இராமனின் சிறந்தவர் இல்லை** - இராமனைப் போலச்சிறந்தவர் மற்றொருவர் இல்லை ; **அனையது ஆதலின்** - இராமனது சிறப்புஅத்தன்மையதாக இருத்தலின் ; **நிற்கு உறு பொருள் அறியின்** - உனக்குச்செய்தற்குரிய செயலை ஆராய்ந்தால் ; **புனித மாதவம் அல்லது** - தெய்வத்தன்மையுடைய துறவறம் அன்றி ; **ஒன்று இல்** - மற்றொரு செயல் இல்லை ;' **எனப் புகன்றான்** - என்று சொன்னான் (வசிட்ட முனிவன்).*

*'இராமனின் சிறந்தவர்' என்பதில் இன் ஒப்புப் பொருளில் வந்தது. ஒப்பவர் இன்மை கூறவே மிக்கவர் இன்மை பெறப்படும். இயற்றுதற்கு அருமை பற்றித் துறவறம் 'மாதவம்' எனக் குறிக்கப்பட்டது. 40*

*தயரதன் மகிழ்ச்சி உரை*

***1354. மற்று, அவன் சொன்ன***
***வாசகம் கேட்டலும், மகனைப்***
***பெற்ற அன்றினும்,***
***பிஞ்ஞகன் பிடித்த அப் பெரு வில்***
***இற்ற அன்றினும், எறி***
***மழுவாளவன் இழுக்கம்***
***உற்ற அன்றினும்,***
***பெரியது ஓர் உவகையன் ஆனான்.***

*__அவன் சொன்ன வாசகம் கேட்டலும்__ - வசிட்ட முனிவன் சொன்ன சொற்களைக் கேட்டவுடன் ; **மகனைப் பெற்ற அன்றினும்** - நெடுங்காலம் மகப்பேறுஇல்லாதிருந்து வேள்வி செய்து இராமனை மகனாகப் பெற்ற அந்த நாளினும் ; **பிஞ்ஞகன்பிடித்த அப் பெரு வில்** - தலைக்கோலமுடைய சிவபிரான் ஏந்திய பிறரால் வளைத்தற்கு அரியஅந்தப் பெரிய வில்லானது ; **இற்ற அன்றினும்** - இராமன் ஆற்றலுக்குப் போதாமல் கணத்தில் ஒடிந்த நாளினும் ; **எறி மழுவாளவன்** - அரசர்களை வெட்டி வீழ்த்திய மழுஎன்னும் படை ஏந்திய பரசுராமன் ; **இழுக்கம் உற்ற அன்றினும்** -*

*தோல்வி அடைந்தநாளினும் ;* **பெரியது ஓர் உவகையன் ஆனான்** *- மிகுந்த ஒப்பற்றமகிழ்ச்சியுடையவனாக ஆயினான்.*

*இராமன் பிறந்த நாளில் தன் ஒருவன் துயரமும், வில் முரிந்த அன்று சனகனாகிய பிறன் ஒருவன் துயரமும், பரசுராமன் தோல்வியுற்ற நாளில் மன்னர் குலமாகிய பலரின்துயரமும் அகன்றன. ஆதலின், ஒன்றின் மற்றொன்று மிக்க மகிழ்ச்சிக்கு அடியாய் அமைந்தது.இராமன் முடிசூடினால் உயிர்க்குலம் அனைத்தும் இன்புறுமாதலின் அவற்றினும் இன்று பெரியதோர் உவகையன் ஆயினான். ஈன்ற பொழுதினும் சான்றோன் எனக் கேட்ட பொழுது தாய் மகிழ்வாள் என்பர்திருவள்ளுவர். தாயேயன்றித் தந்தையும் மகிழ்வான் என்பது இதனால் போந்தது. பிஞ்ஞகன் : சடை (தலைக்கோலம்) கொண்ட சிவபிரான் மழு - பரசு. இழுக்கம் - இழிவு; ஈண்டுத்தோல்வியைக் குறித்தது.* ***41***

***1355. அனையது ஆகிய உவகையன்,***
***கண்கள் நீர் அரும்ப,***
***முனிவன் மா மலர்ப் பாதங்கள்***
***முறைமையின் இறைஞ்சி,***
***'இனிய சொல்லினை ; எம்பெருமான்***
***அருள் அன்றோ,***
***தனியன் நானிலம் தாங்கியது?***
***அவற்கு இது தகாதோ?***

**அனையது ஆகிய உவகையன்** *- அத்தன்மைத்தாகிய மகிழ்ச்சி யடைந்த தயரதன் ;* **கண்கள் நீர் அரும்ப** *- அம் மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாகக்கண்களில் நீர் துளிர்க்க ;* **முனிவன் மாமலர்ப் பாதங்கள்** *- வசிட்ட முனிவனுடையசிறந்த தாமரை மலர் போன்ற திருவடிகளை ;* **முறைமையின் இறைஞ்சி** *-வணங்குதற்குரிய முறைப்படி வணங்கி ;* **'இனிய சொல்லினை** *- செவிக்கும்சிந்தைக்கும் இனிய கருத்தினைத் தெரிவித்தாய் ;* **தனியன் நானிலம் தாங்கியது** *- தனியொருவனாக யான் மண்ணுலகினைப் போற்றிக் காத்தது;* **எம்பெருமான் அருள்அன்றோ -** *என் இறைவனாகிய நினது அருளால் அல்லவா?* **அவற்கு இது தகாதோ** *- அந்தஇராமனுக்கு இவ்வாறு அரசுபுரிதல் தகுதியுடையதாகாதோ? (ஆகும்).'* ***42***

***1356. 'எந்தை ! நீ உவந்து இதம் சொல,***
***எம் குலத்து அரசர்,***
***அந்தம் இல் அரும் பெரும் புகழ்***
***அவனியில் நிறுவி,***
***முந்து வேள்வியும் முடித்து, தம்***
***இரு வினை முடித்தார் ;***
***வந்தது, அவ் அருள் எனக்கும்' என்று***
***உரைசெய்து மகிழ்ந்தான்.***

**'எந்தை** *- என் தந்தை போன்றவனே ;* **நீ உவந்து இதம்சொல** *- நீ விரும்பி நன்மையானவற்றை எடுத்துக் கூற ;* **எம் குலத்து அரசர்** *- எம்முடைய சூரிய குலத்தில்*

தோன்றிய மன்னர்கள் ; **அந்தம் இல் அரும் பெரும் புகழ்** - அழிவு இல்லாத அரியதும் மிக்கதுமாகிய புகழினை ; **அவனியில் நிறுவி** -உலகில் நிலைபெறச் செய்து ; **முந்து வேள்வியும் முடித்து** - சிறந்த யாகங்களையும்நிறைவேற்றி ; **தம் இருவினை முடித்தார்** - தம் நல்வினை தீவினையாகிய இருவினைகளையும் வென்றார்; **அவ் அருள் எனக்கும் வந்தது** - அந்த அருட்பேறு எனக்கும் கிடைத்தது ;' **என்று உரை செய்து மகிழ்ந்தான்** - என்று சொல்லி இன்புற்றான். 43

சுமந்திரன் கூற்று

*1357.* **பழுது இல் மா தவன், பின் ஒன்றும்**
**பணித்திலன், இருந்தான் ;**
**முழுதும் எண்ணுறும் மந்திரக்**
**கிழவர் தம் முகத்தால்**
**எழுதி நீட்டிய இங்கிதம்,**
**இறை மகற்கு ஏற்க.**
**தொழுத கையினன், சுமந்திரன்**
**முன் நின்று, சொல்லும் :**

**பழுது இல் மா தவன் -** குற்றம் இல்லாத சிறந்த தவத்தையுடை யோனாகியவசிட்டன் ; பின் ஒன்றும் பணித்திலன் இருந்தான் - பிறகு வேறு யாதும் சொல்லாமல்இருந்தான் ; **முழுதும் எண்ணுறும் மந்திரக் கிழவர்** - எதனையும் தீரச்சிந்திக்கின்ற அமைச்சர்கள் ; **தம் முகத்தால் எழுதி நீட்டிய இங்கிதம்** - தம்முகத்தினால் எழுதிக் கொடுத்த குறிப்பினை ; **இறை மகற்கு ஏற்க** - தயரதனுக்குப்பொருந்த ; **சுமந்திரன் முன் நின்று** - சுமந்திரன் எதிரில் எழுந்து நின்று; **தொழுத வகையினன்** - கும்பிட்ட கைகளையுடையவனாய் ; **சொல்லும்** -சொல்வான். 44

*1358.* **' "உறத் தகும் அரசு இராமற்கு" என்று**
**உவக்கின்ற மனத்தைத்**
**"துறத்தி நீ" எனும் சொல் சுடும் ;**
**நின் குலத் தொல்லோர்**
**மறத்தல் செய்கிலாத் தருமத்தை**
**மறப்பதும் வழக்கு அன்று ;**
**அறத்தின் ஊங்கு இனிக் கொடிது எனல்**
**ஆவது ஒன்று யாதோ?**

**'அரசு இராமற்கு உறத் தகும் என்று** - இராமனுக்கு அரசுரிமை பொருந்துதல்தக்கது என்று ; **உவக்கின்ற மனத்தை** - மகிழ்கின்ற மனத்தை ; **நீ துறத்திஎனும் சொல் சுடும்** - நீ எங்களைப் பிரிகிறாய் என்னும் சொல்லானது சுடுகிறது ; **நின் குலத் தொல்லோர்** - உன் சூரிய குலத்தில் தோன்றிய முன்னோர்கள் ; **மறத்தல் செய்திலா தருமத்தை** - மறவாமல் போற்றிய அறத்தை ; **மறப்பதும் வழக்குஅன்று** - நீ மறந்து கைவிடுதலும் முறைமை அன்று ; **இனி அறத்தின் ஊங்கு கொடிது** - (ஆதலால்) இனி அறத்தைவிடக் கொடியது ; **எனல் ஆவது ஒன்று யாதோ** - என்று சொல்லத்தக்கது பிறிதொன்று எது? 45

***1359. ‘புரைசை மாக் கரி நிருபர்க்கும்,***
***புரத்து உறைவோர்க்கும்,***
***உரைசெய் மந்திரக் கிழவர்க்கும்,***
***முனிவர்க்கும், உள்ளம்***
***முரைசம் ஆர்ப்ப, நின் முதல் மணிப்***
***புதல்வனை, முறையால்***
***அரைசன் ஆக்கி, பின்***
***அப் புறத்து அடுத்தது புரிவாய் !’***

***புரைசை மாக் கரி நிருபர்க்கும்*** *- கழுத்தில் இடப்படும் கயிற்றையுடைய பெரிய யானைப் படையையுடைய அரசர்களுக்கும்;* ***புரத்து உறைவோர்க்கும்*** *- அயோத்தி நகரத்தில் வாழ்பவர்களுக்கும்;* ***உரை செய் மந்திரக் கிழவர்க்கும்*** *- தம் கருத்தை எடுத்துரைத்த அமைச்சர்களுக்கும்;* ***முனிவர்க்கும்*** *-வசிட்டன் தொடக்கமான முனிவர்களுக்கும் ; உள்ளம் முரைசம் ஆர்ப்ப - மனம் மகிழ்ச்சியால்முரசடிக்க (ஒலிக்க) ;* ***நின் முதல் மணிப் புதல்வனை - நினக்கு*** *முதல் மகனும்நீலமணி போலும் நிறத்தையுடையவனுமான இராமனை ;* ***முறையால்*** *- செய்ய வேண்டிய முறையோடு ;* ***அரசன் ஆக்கி*** *- அரசனாக முடிசூட்டி;* ***பின் அப் புறத்து அடுத்தது*** *- பிறகு உனக்குத் தக்கதான துறவு மேற்கொள்ளுதலை ;* ***புரிவாய்*** *-செய்வாய்.*

*புரைசை, முரைசு, அரைசு - இடைப் போலிகள். முதல் புதல்வன், மணிப்புதல்வன் எனத் தனித்தனிக் கூட்டுக. தயரதன் துறவு மேற்கொள்வது தனக்கு வருத்தம் தருவதாயினும்அறம் கருதி அதுவும் செய்ய வேண்டுவதாய் இருத்தலால் நேரே சொல்லாமல் ‘அப்புறத்து அடுத்தது புரிவாய்’ என்கிறான்.* ***46***

*ராமனை அழைத்துவரச் சுமந்திரன் செல்லுதல்*

***1360. என்ற வாசகம், சுமந்திரன் இயம்பலும், இறைவன்,***
***‘நன்று சொல்லினை ; நம்பியை நளி முடி சூட்டி-***
***நின்று, நின்றது செய்வது ; விரைவினில், நீயே***
***சென்று, கொண்டு அணை, திருமகள் கொழுநனை’***
***என்றான்.***

***என்ற வாசகம்*** *- இவ்வாறான சொற்களை;* ***சுமந்திரன்இயம்பலும்*** *- சுமந்திரன் மென்மையாகத் தெரிவித்தவுடன் ;* ***இறைவன் -*** *அரசனாகிய தயரதன் ;* ***‘நன்று சொல்லினை*** *- நல்லதையே சொன்னாய் ;* ***நம்பியை நளிமுடி சூட்டிநின்று*** *- குணங்களால் நிறைந்தவனான இராமனுக்குப் பெருமை பொருந்தியமகுடத்தை அணிவித்து ;* ***நின்றது செய்வது*** *- மேலே செய்ய நின்றதைச்செய்வோமாக ;* ***நீயே விரைவினில் சென்று*** *- நீயே விரைவாகப் போய் ;* ***திருமகன் கொழுநனை*** *- திருமகளைப்போலும் சீதைக்குக் கணவனான இராமனை ;* ***கொண்டு அணை’ என்றான்*** *- அழைத்துக்கொண்டு வருவாய்’ என்றான்.*

*நளி - பெருமை ; மனு முதற்கொண்டு சூடிய சிறப்பு. நின்றது - எஞ்சி நின்றது ; ஈண்டுத் தவஞ்செய்தல். செய்வது - வியங்கோள் வினைமுற்று.*
***47***

*சுமந்திரன் இராமனைத் திருமனையில் கண்டு செய்தி தெரிவித்தல்.*

***1361. அலங்கல் மன்னனை அடிதொழுது,***
***அவன் மனம் அனையான்,***
***விலங்கல் மாளிகை வீதியில்***
***விரைவொடு சென்றான்,***
***தலங்கள் யாவையும் பெற்றனன்***
***தான் எனத் தளிர்ப்பான்,***
***பொலன் கொள் தேரொடும்***
***இராகவன் திருமனை புக்கான்.***

***அலங்கல் மன்னனை அடிதொழுது*** - *மாலை அணிந்த தயரதனைத் திருவடிகளில்வணங்கி ;* ***அவன் மனம் அனையான்*** - *அத்தயரதனது மனத்தை ஒத்தவனான சுமந்திரன் ;* ***விலங்கல் மாளிகை வீதியில்*** - *மலைபோலும் மாளிகைகளையுடைய அரச வீதியில் ;* ***விரைவொடு சென்றான் -*** *விரைவாகச் சென்று ;* ***தலங்கள் யாவையும்*** *-உலகங்கள் எல்லாவற்றையும் ;* ***தான் பெற்றனன் எனத் தளிர்ப்பான்*** - *தானே அடைந்தவன்போல மனமகிழ்ச்சி யுடையவனாய் ;* ***பொலன்கொள் தேரொடும்*** *-பொன்மயமான தேருடன்;* ***இராகவன் திருமனை புக்கான்*** *- இராமபிரானதுதிருமாளிகையில் புகுந்தான்.*

*'அவன் மனம் அனையான்' என்பது இராமன் திறத்தில் எல்லாரும் தயரதனைப்போலும் அன்பு நிறைந்த மனத்தராய் இருந்தமை காட்டும். 'அவ் ஊர்ச், சாதுகை மாந்தர் எல்லாம்தயரதன் தன்னை ஒத்தார்' (1560) எனப் பின்னும் வருதல் கருதத்தக்கது. அமைச்சன் சுமந்திரன்அரசன் குறிப்பறிந்து நடப்பவன் என்பார் 'அவன் மனம் அனையான்' என்றார். இராகவன் - இரகுமரபில் தோன்றியவன் ; தத்திதாந்த நாமம்.* ***48***

***1362. பெண்ணின் இன் அமுது***
***அன்னவள் தன்னொடும், பிரியா***
***வண்ண வெஞ் சிலைக் குரிசிலும்,***
***மருங்கு இனிது இருப்ப,***
***அண்ணல் ஆண்டு இருந்தான் ;***
***அழகு அரு நறவு என, தன்***
***கண்ணும் உள்ளமும் வண்டு என,***
***களிப்புறக் கண்டான்.***

***அண்ணல்*** - *தலைவனான இராமபிரான் ;* ***பிரியா வண்ண வெஞ்சிலைக் குரிசிலும்*** - *தன்னை விட்டு என்றும் நீங்காத அழகியதும் கொடியதுமான வில்லை ஏந்திய இளைஞனான இலக்குவனும் ;* ***மருங்கு இனிது இருப்ப*** - *பக்கத்தில் இனிதாகஇருக்க ;* ***பெண்ணின் இன் அமுது அன்னவள் தன்னொடும்*** - *பெண்டிர்களுக்குள் இனியஅமுதம் போன்றவளான சீதையோடும் ;* ***ஆண்டு இருந்தான்*** - *அங்கு வீற்றிருந்தான் ;* ***அழகு அரு நறவு என*** - *அச்சேர்த்தியின் அழகானது அரிய தேனாக ;* ***தன் கண்ணும்உள்ளமும்***

***வண்டு என*** - *தன் கண்களும் உள்ளமும் வண்டாக ;* ***களிப்புறக் கண்டான் -*** *மகிழ்ச்சி எய்தச் சுமந்திரன் கண்டான்.*

*இராமபிரான் சீதையோடும் தம்பி இலக்குவனோடும் இருந்த காட்சி யழகைப்பரிவில் மிக்க சுமந்திரன் கண்டு உவகை கொண்ட திறம் இங்கு உரைக்கப்பட்டது. பிரியா என்னும்அடைமொழியைப் பெண்ணின் இன் அமுதொடும் கூட்டி உரைத்தல் தகும். ஏனெனில் "அகலகில்லேன்இறையும் என்று அலர் மேல் மங்கை உறை மார்பா!" என்பது நம்மாழ்வார் வாக்கு (திருவாய்மொழி 6 :10:10).*
*49*

***1363. கண்டு, கைதொழுது, 'ஐய, இக்***
***கடலிடைக் கிழவோன்,***
***"உண்டு ஒர் காரியம் ; வருக !" என,***
***உரைத்தனன்' எனலும்,***
***புண்டரீகக் கண் புரவலன்***
***பொருக்கென எழுந்து, ஓர்***
***கொண்டல்போல் அவன், கொடி நெடுந்***
***தேர்மிசைக் கொண்டான்.***

***கண்டு கைதொழுது*** - *சுமந்திரன் இராமனைப் பார்த்துக் கை கூப்பி வணங்கி ;* ***ஐய -*** *ஐயனே !* ***இக் கடல்இடைக் கிழவோன்*** - *இந்தக் கடலால் சூழப்பட்ட உலகுக்கு உரியவனான தயரத மன்னன்; '* ***ஓர் காரியம் உண்டு*** *-ஒரு காரியம் உள்ளது ;* ***வருக என*** *- (ஆதலால்) இராமனை அழைத்து வருக என்று ;* ***உரைத்தனன்' எனலும்*** *- சொன்னான் என்ற அளவில் ;* ***புண்டரீகக் கண் புரவலன்*** *- செந்தாமரைக் கண்ணனாகிய இராமன் ;* ***பொருக்கென எழுந்து*** *- விரைவாகப்புறப்பட்டு ;* ***ஓர் கொண்டல்போல்*** *- ஒரு கரிய மேகம் போல ;* ***அவன்கொடி நெடுந் தேர்மிசைக் கொண்டான்*** *- அந்தச் சுமந்திரனது கொடி பறக்கும் நெடிய தேரில்ஏறிக்கொண்டான்.*

*கடலிடை - கடலால் சூழப்பட்ட இடம் ; உலகு. கிழவோன் - உரிமையுடையவன்.*
*50* தேரில் சென்ற இராமனைக் கண்ட பெண்டிர் செயல்

***1364. முறையின் மொய்ம் முகில் என***
***முரசு ஆர்த்திட, மடவார்***
***இறை கழன்ற சங்கு ஆர்த்திட,***
***இமையவர், 'எங்கள்***
***குறை முடிந்தது' என்று ஆர்த்திட,***
***குஞ்சியைச் சூழ்ந்த***
***நறை அலங்கல் வண்டு ஆர்த்திட,***
***தேர்மிசை நடந்தான்.***

***முரசு*** *- பேரிகைகள் ;* ***முறையின்*** *- வரிசையாக ;* ***மொய்ம்முகில் என ஆர்த்திட*** *- ஒன்றுசேர்ந்த மேகம் போல முழங்கவும் ;* ***மடவார் இறை கழன்ற சங்கு ஆர்த்திட*** *- மடப்பம் பொருந்திய பெண்களினுடைய முன்னங்கையினின்று கழன்று விழுந்த*

*சங்கு வளையல்கள் ஒலிக்கவும் ;* ***இமையவர்*** *-தேவர்கள் ;* ***எங்கள் குறை முடிந்தது என்று ஆர்த்திட*** *- எங்கள் வருத்தம்தீர்ந்தது என்று ஆரவாரிக்கவும் ;* ***குஞ்சியைச் சூழ்ந்த*** *- தன் திருமுடியில்சுற்றியிருந்த;* ***நறை அலங்கல் வண்டு*** *- தேன் சொரியும் கண்ணிகளில் மொய்த்தவண்டுகள் ;* ***ஆர்த்திட*** *- ஒலிக்கவும் ;* ***தேர்மிசை நடந்தான்*** *-தேரில் சென்றான்.*

*இறை - முன்கை ; சங்கு - வளை; சங்கினால் செய்யப்பட்டமையின் இப் பெயர் பெற்றது. மடவார் என்பது மடப்பம் பொருந்திய பெண்களைக் குறித்தது.*
***51***

***1365. பணை நிரந்தன ;***
***பாட்டு ஒலி நிரந்தன ; அனங்கன்***
***சுணை நிரந்தன ;***
***நாண் ஒலி கறங்கின ; நிறைப்பேர்***
***அணை நிரந்தன,***
***அறிவு எனும் பெரும் புனல் ; அனையார்,***
***பிணை நிரந்தெனப்***
***பரந்தனர் ; நாணமும் பிரிந்தார்.***

***பணை நிரந்தன -*** *(இராமன் தெருவில் புக) வாத்தியங்களின் ஒலிகள் நிரம்பின ;* ***பாட்டு ஒலி நிரந்தன*** *- பாடல்களின் ஓசைகள் நிறைந்தன ;* ***அனங்கன் கணை நிரந்தன*** *- மன்மதனின் மலரம்புகள் நிரம்பின ;* ***நாண் ஒலிகறங்கின*** *- வில் நாணின் ஒலிகள் ஒலித்தன;* ***அறிவு எனும் பெரும் புனல்*** *-இராமனைப் பற்றிய எண்ணம் என்னும் மிக்க வெள்ளம் ;* ***நிறை பேர் அணை நிரந்தன*** *- மனஅடக்கம் என்னும் பெரிய அணையைக் கடந்தன ;* ***அனையார்*** *- அவ்வாறானமகளிர்கள் ;* ***நாணமும் பிரிந்தார்*** *- நாணத்தையும் விட்டவர்களாய் ;* ***பிணை நிரந்து என*** *- பெண்மான்கள் நிரம்பினபோல ;* ***பரந்தனர்*** *- தெருவில் வந்து நிறைந்தார்கள்.*

*பணை - வாத்தியங்கள் ; முரசு என்பாரும் உளர் ; பணை - கருவியாற் பிறப்பதற்கும், பாட்டு - கண்டத்தாற் பிறப்பதற்கும் கொள்க. நிரத்தல் -பரத்தல். அனங்கன் - உருவமில்லாதவன். அறிவைப் புனல் என்றதற்கு ஏற்ப நிறையை அணைஎன்றார் ; உருவகம். நாணமும் என்றதில் உம்மை இறந்தது தழுவியது.* ***52***

***1366. நீள் எழுத் தொடர் வாயிலில்,***
***குழையொடு நெகிழ்ந்த***
***ஆளகத்தினோடு அரமியத்***
***தலத்தினும் அலர்ந்த ;***
***வாள் அரத்த வேல்***
***வண்டொடு கெண்டைகள் மயங்க,***
***சாளரத்தினும் பூத்தன.***
***தாமரை மலர்கள்.***

***நீள் எழுத் தொடர் வாயிலில்*** *- நீண்ட தூண்கள் அமைந்த மாளிகைவாயில்களிலும் ;* ***அரமியத் தலத்தினும்*** *- அவற்றின் நிலா முற்றங்களிலும் ;* ***குழையொடு*** *-*

*குண்டலங்களொடும் ; **நெகிழ்ந்த ஆளகத்தினோடு** - அவிழ்ந்தகூந்தலொடும் ; **தாமரை மலர்கள்** - பெண்களின் முகங்களாகிய தாமரை மலர்கள் ; **அலர்ந்தன** - மலர்ந்தன ; **சாளரத்தினும்** - அவை அம் மாளிகைகளின்பலகணிகளிலும் ; **வாள் அரத்தம் வேல் வண்டொடு கெண்டைகள் மயங்க -** வாளொடும்குருதி தோய்ந்த வேலொடும் வண்டுகளொடும் கெண்டைகள் கலந்து நிற்க ; பூத்தன -மலர்ந்தன.*

*வீதியில் வந்த பெண்களே யன்றி, வேறு சிலர் மாளிகை வாயில்களிலும் நிலா முற்றங்களிலும் இருந்து இராமனைக் கண்டனர் என்பது கருத்து. புருவம் வாளாகவும், செவ்வரிபடர்ந்த கண் குருதி படிந்த வேலாகவும், கருவிழி வண்டாகவும், புடைபெயரும் கண்கள் கெண்டையாகவும்கூறப்பட்டன. ஆளகம் - அளகம் என்பதன் நீட்டல் விகாரம் ; அளகம் - கூந்தல்.* ***53***

***1367. மண்டலம் தரு மதி கெழு,***
***மழை முகில் அனைய,***
***அண்டர் நாயகன் வரை புரை***
***அகலத்துள் அலங்கல்,***
***தொண்டை வாய்ச்சியர் நிறையொடும்,***
***நாணொடும், தொடர்ந்த***
***கெண்டையும் உள ; கிளை பயில்***
***வண்டொடும் கிடந்த.***

***மண்டலம் தரு மதி கெழு** - வட்ட வடிவமாகிய சந்திரன் போலும் முகம் அமைந்த ; **மழை முகில் அனைய** - கரிய மேகத்தைப் போன்ற ; **அண்டர் நாயகன்** - தேவர்களுக்குத் தலைவனான இராமபிரானது ; **வரைபுரை அகலத்துள்அலங்கல்** - மலையை நிகர்த்த மார்பில் உள்ள மாலையில் ; **தொண்டைவாய்ச்சியர்** - கொவ்வைக் கனி போன்ற சிவந்த இதழ்களைக் கொண்ட மகளிரின்; **நிறையொடுங் நாணொடும் தொடர்ந்த** - மனவடக்கமும் நாணமும் ஆகிய பண்புகள் முன்னேபோகப் பின்னே தொடர்ந்த; **கெண்டையும் உள** - விழிகளாகிய கெண்டைகளும்உள்ளன; **கிளை பயில் வண்டொடும் கிடந்த** - அவை அந்த மாலையில் முன்னரே தேனைநாடிவந்து உள்ளனவாகிய கிளை என்னும் இசையைப் பழகிய வண்டுகளோடு தங்கின.*

*மண்டலம் தருமதி என்பது முழுமதியைக் குறித்தது. ஈண்டு மதி ஆகுபெயராய். அதுபோலும் இராமபிரானது முகத்தைச் சுட்டியது. இராமபிரான் திருமுகத்துக்குச் சந்திரனும்,திருமேனிக்கு மழைமுகிலும் ஒப்பு. கிளை - கைக்கிளை என்னும் பண்.*
***54***

***1368. சரிந்த பூ உள, மழையொடு கலை உறத் தாழ்வ ;***
***பரிந்த பூ உள, பனிக் கடை முத்துஇனம் படைப்ப ;***
***எரிந்த பூ உள, இள முலை இழை இடை நுழைய ;***
***விரிந்த பூ உள, மீனுடை வானின்றும் வீழ்வ.***

***மழையொடு கலை உறத் தாழ்வ** - மேகம் போன்று வீழ்வனவாகிய கூந்தலொடு உடைகளும் நிலத்தை அடைய ; **சரிந்த பூ உள** - சிந்திய பூக்கள்உள்ளன ; **பனிக் கடை முத்து இனம் படைப்ப** - குளிர்ச்சி பொருந்தியகடைக்கண்கள் முத்துக் கூட்டங்களைத்*

*தோற்றுவிக்க ;* ***பரிந்த பூ உள*** *- அவர்கள்எடுத்தெறிந்த மலர்களும் உள்ளன;* ***இளமுலை இழை இடை நுழைய -*** *இளமையான மகளிர்தனங்களில் கிடந்த அணிகலன்களின் ஊடே நுழைதலால் ;* ***எரிந்த பூ உள*** *- கருகிய பூக்களும் உள்ளன ;* ***மீனுடை வானின்று வீழ்வ*** *- விண்மீன்கள் நிறைந்த வானத்திலிருந்து தேவர்கள் வீசுதலால் வீழ்வனவாகிய ;* ***விரிந்த பூ உள*** *- நன்றாகமலர்ந்த மலர்களும் உள்ளன.*

*இராமன் தேர் சென்ற வீதியில் மகளிர் விரகத்தால் சரிந்தனவும், பரிந்தனவும், எரிந்தனவும் ஆகிய மலர்களும், விண்ணவர் மகிழ்ச்சியால் சொரிந்த மலர்களும்கிடந்தன. தாழ்வ, வீழ்வ - வினையாலணையும் பெயர்கள். இளமுலை இழை - ஏழாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகை. மகளிர் சூடிய பூக்கள் வீழ்வது தீக்குறி (அபசகுனம்) ஆகும். இராமனுக்குத் துன்பம் நேரவிருப்பதைச் சுட்டுவதாக அமைவன. 55*

***1369. வள் உறை கழித்து ஒளிர்வன***
***வாள் நிமிர் மதியம்***
***தள்ளுறச் சுமந்து, எழுதரும்***
***தமனியக் கொம்பில், -***
***புள்ளி நுண் பனி பொடிப்பன,***
***பொன்னிடைப் பொதிந்த,***
***எள்ளுடைப் பொரி விரவின, -***
***உள சில இளநீர்.***

***வள் உறை கழித்து*** *- (இராமனைக் கண்டவுடன்) வாரினால் இயன்ற உறைகளை நீக்கி ;* ***ஒளிர்வன வாள்*** *- ஒளிவீசுகின்ற வாள்களோடு ; நிமிர் மதியம் தள்ளுறச் சுமந்து - நிமிர்ந்த சந்திரனைத் தள்ளாடியவாறு சுமந்து கொண்டு ;* ***எழுதரும் தமனியக் கொம்பில்*** *- எழுகின்ற பொன்னாலாகிய கொம்புகளில் ;* ***உளசிலஇளநீர்*** *- உள்ளனவாகிய இரண்டு இளநீர்கள் ; புள்ளி நுண்பனி பொடிப்பன -புள்ளிகளாகிய நுண்ணிய வியர்வை தோன்றுவனவும் ;* ***பொன்னிடைப் பொதிந்த*** *-இடையிடையே பொற் பொடி கலந்தனவுமாய் ;* ***எள்ளுடைப் பொரி விரவின*** *- தேமலாகிய எள்ளின் பொரிகள் ஆங்காங்கு விரியப் பெற்றன.*

*மகளிரின் இமைகளை உறைகளாகவும், கண்களை வாளாகவும், முகத்தை மதியாகவும், அவர்களைக் கொம்பாகவும், வியர்வையைப் புள்ளிகளாகவும், தேமலைப் பொன்னாகவும்,பசலையை எட்பொரியாகவும், நகில்களை இளநீராகவும் உருவகித்தார். சில - ஈண்டு இரண்டு என்னும்பொருளில் வந்தது.*
***56***

*இராமன் தயரதனைச் சந்தித்தல்*

***1370. ஆயது, அவ்வழி நிகழ்தர, ஆடவர் எல்லாம்***
***தாயை முன்னிய கன்று என நின்று உயிர் தளிர்ப்ப,***
***தூய தம்பியும், தானும், அச் சுமந்திரன் தேர்மேல்***
***போய், அகம் குளிர் புரவலன் இருந்துழிப் புக்கான்.***

***ஆயது அவ் வழி நிகழ்தர*** - *அத்தகைய செயல் அவ்விடத்து நடைபெற ;* ***ஆடவர் எல்லாம்*** - *இராமனைக் கண்ட ஆண்கள் எல்லாரும் ;* ***தாயை முன்னிய கன்றுஎன நின்று*** - *தாய்ப்பசுவை நினைந்த கன்று போல நின்று ;* ***உயிர் தளிர்ப்ப*** - *உயிர் மகிழ்ச்சியடைய;* ***தூய தம்பியும் தானும்*** - *தூய்மை நிறைந்த தம்பியானஇலக்குவனும் தானும் ;* ***அச் சுமந்திரன் தேர்மேல் போய்*** - *அந்தச் சுமந்திரனது தேரில் ஏறிச் சென்று ;* ***அகம் குளிர் புரவலன் இருந்துழி*** - *மனம் மகிழ்ந்திருக்கின்ற தயரதன் இருந்த மண்டபத்துள் ;* ***புக்கான்*** - *புகுந்தான்.*

*உள்ளத்தின் தளிர்ப்பு உயிரின் தளிர்ப்பாகக் கூறப்பட்டது. தம்பியும் தானும் புக்கான் - சிறப்பினால் ஒருமை வினைக்கொண்டு முடிந்தது, "வேயுயர் கானில் தானும்தம்பியும் மிதிலைப் பொன்னும் போயினன் என்றான்" என்பது போல (தைலமாட்டுப் படலம், 60). இருந்தஉழி - இருந்துழி புக்கான் - புகு என்னும் பகுதி இரட்டித்துக் காலம் காட்டிற்று.* ***57***

*தயரதன் இராமனைத் தழுவுதல்*

***1371. மாதவன்தனை வரன்முறை வணங்கி,***
***வாள் உழவன்***
***பாத பங்கயம் பணிந்தனன் ;***
***பணிதலும், அனையான்,***
***காதல் பொங்கிட, கண் பனி உகுத்திட,***
***கனி வாய்ச்***
***சீதை கொண்கனைத்***
***திரு உறை மார்பகம் சேர்த்தான்.***

***வரன்முறை மாதவன்தனை வணங்கி*** - *தொன்றுதொட்டுவரும் முறைப்படி பெரியதவமுனியாகிய வசிட்டனைத் தொழுது ;* ***வாள் உழவன் பாத பங்கயம் பணிந்தனன்*** *-வாட்போரில் வல்லவனான தயரத மன்னன் திருவடியாகிய தாமரைகளை வணங்கினான் ;* ***பணிதலும்*** - *அவ்வாறு இராமன் வணங்கிய அளவில் ;* ***அனையான்*** - *அவ்வாறுவணங்கப்பெற்ற தயரதன் ;* ***காதல் பொங்கிட*** - *இராமன் மீது கொண்ட பாசம்மேலிட ;* ***கண்பனி உகுத்திட*** - *கண்கள் இன்பக் கண்ணீரைச் சொரிந்திட ;* ***கனிவாய்ச் சீதை கொண்கனை*** - *கனிபோன்ற இதழ்களையுடைய சீதையின் கணவனாகியஇராமனை ;* ***திருஉறை மார்பகம் சேர்த்தான்*** - *திருத் தங்கிய தன் மார்போடுஅணைத்துக் கொண்டான்.*

*வாள் உழவர் - வாட்போரில் வல்லவர். வில்லேர் உழவர் என்று திருவள்ளுவர் வீரர்களைக் குறித்தல் கருதத்தக்கது (குறள். 872) திரு - அரசச் செல்வம்.*
***58***

***1372. 'நலம் கொள் மைந்தனைத் தழுவினன்'***
***என்பது என்? நளி நீர்***
***நிலங்கள் தாங்குறு நிலையினை***
***நிலையிட நினைந்தான்,***
***விலங்கல் அன்ன திண் தோளையும்,***

**மெய்த் திரு இருக்கும்**
**அலங்கல் மார்பையும், தனது தோள், மார்பு,**
**கொண்டு அளந்தான்.**

***நலம்கொள் மைந்தனை*** *- நன்மைகள் அனைத்தையும் கொண்ட தன்மகனாகிய இராமனை ;* ***தழுவினன் என்பது என்*** *- தந்தையாகிய தயரதன்அணைத்துக்கொண்டான் என்று சொல்வது எதன்பொருட்டு? ;* ***நளிநீர் நிலங்கள்*** *- பெரிய நீரையுடைய கடலால் சூழப்பட்டமண்ணுலகை ;* ***தாங்குறு நிலையினை*** *- போற்றிக் காத்தற்குரிய இராமனுடைய நிலையை ;* ***நிலையிட நினைந்தான்*** *- அளந்து பார்க்கக் கருதி ;* ***விலங்கல் அன்ன திண்தோளையும்*** *- இராமனுடைய மலைபோன்ற திண்மை வாய்ந்த தோள்களையும் ;* ***மெய்த்திரு இருக்கும் அலங்கல் மார்பையும்*** *- உண்மையான திருமகள் உறையும் மாலையணிந்தமார்பையும் ;* ***தனது தோள் மார்பு கொண்டு*** *- தன்னுடைய தோள்களையும் மார்பையும் கொண்டு ;* ***அளந்தான் -*** *அளவிட்டான்.*

*தயரதன் இராமனைத் தழுவியதற்குக் காப்பிய ஆசிரியர் ஒரு காரணம் கற்பித்துக் கூறலின் இது தற்குறிப்பேற்ற அணி. நினைந்தான் - முற்றெச்சம். மன்னன் மார்பில்திருமகள் உறைவதாகச் சொல்வது மரபு. இராமன் திருமாலே ஆதலின் அவன் மார்பில் உறைபவளை‘மெய்த்திரு’ என்றார். **59***

*தயரதன் இராமனை வேண்டுதல்*

***1373.* ஆண்டு, தன் மருங்கு இரீஇ, உவந்து,**
**அன்புற நோக்கி,**
**‘பூண்ட போர் மழு உடையவன்**
**பெரும் புகழ் குறுக**
**நீண்ட தோள் ஐய !**
**நிற் பயந்தெடுத்த யான், நின்னை**
**வேண்டி, எய்திட விழைவது ஒன்று உளது’**
**என, விளம்பும்.**

***ஆண்டு*** *- அங்கு ;* ***தன் மருங்கு இரீஇ*** *- தன்பக்கத்தில் இராமனை இருக்கச் செய்து ;* ***உவந்து*** *- மனம் மகிழ்ந்து ;* ***அன்புற நோக்கி*** *- அன்பு தோன்றுமாறு உற்றுப் பார்த்து ;* ***‘பூண்ட போர் மழு உடையவன்*** *- தாங்கிய போர்க்கு உரிய மழுவாயுதத்தை உடையவனாகிய பரசுராமனது ;* ***பெரும்புகழ் குறுக*** *- மிக்க புகழ் தேயும்படி ; நீண்ட தோள் ஐய ! - நீண்ட தோள்களைஉடைய ஐயனே ! ;* ***நின் பயந்து எடுத்த யான்*** *- நின்னை மகனாகப் பெற்று வளர்த்தயான் ;* ***நின்னை வேண்டி எய்திட விழைவது ஒன்று உளது என*** *- உன்னைக் கேட்டுப் பெறவிரும்புவதாகிய ஒரு காரியம் உண்டு’ என்று சொல்லி;* ***விளம்பும்*** *- அதனைவிரித்துச் சொல்வானானான்.*

***பூண்ட போர் மழு உடையவன் - பரசுராமன். அவன் புகழ் தேய, இராமன் அவன்தந்த வில்லை வளைத்த திறம் பால காண்டத்தின் இறுதியில் உள்ள பரசுராமப் படலத்தில்கூறப்பட்டது. இராமன் அரசபாரம் ஏற்கவேண்டும் என்று மேலே கூறுதலின் அதற்குரிய ஆற்றல் அவனிடம் உள்ளது என்பதனைக் காட்டப் பரசுராமனை வென்ற செய்தியினை நினைவுபடுத்துகிறான். இரீஇ -அளபெடை.***

**விளம்புதல் - விரித்துக் கூறுதல்.** *60*

***1374. 'ஐய ! சாலவும் அலசினென் ;***
***அரும் பெரு மூப்பும்***
***மெய்யது ஆயது ; வியல் இடப்***
***பெரும் பரம் விசித்த***
***தொய்யல் மா நிலச் சுமை உறு***
***சிறை துறந்து, இனி யான்***
***உய்யல் ஆவது ஓர் நெறி புக,***
***உதவிட வேண்டும்.***

***'ஐய*** - *ஐயனே !* ***சாலவும் அலசினென்*** - *மிகவும்தளர்ந்தேன் ;* ***அரும் பெரு மூப்பும் மெய்யது ஆயது*** - *தாங்குதற்கு அரியதும் பெரியதுமான வயோதிகமும் என் உடம்பில் தோன்றிவிட்டது ;* ***வியல் இடப் பெரும்பரந்த விசித்த -*** *அகன்ற இடத்தைக் காக்கும் பெரிய பாரமானது கட்டப்பட்ட ;* ***தொய்யல் மா நிலச்சுமை*** - *துன்பத்திற்குக் காரணமாகிய பெரிய அரசாட்சியை நடத்தும்பொறுப்பாகிய ;* ***உறு சிறை துறந்து*** - *மிக்க சிறையை விட்டுவிட்டு ;* ***இனி யான் உய்யல் ஆவது*** - *இனி நான் பிழைக்கலாவதாகிய ;* ***ஓர் நெறி புக -*** *ஒப்பற்ற வழியில் செல்ல ;* ***உதவிட வேண்டும்*** - *உதவி செய்ய வேண்டும்.'*

*தொய்யல் - துன்பம் ; சோர்வும் ஆம். சுமை - பொறுப்பு ; 'என் தலையில் இவனைக் காக்கும் சுமை விழுந்தது' என்னும் பேச்சுவழக்கில் இதற்கு இப்பொருள் இருத்தலைக் காணலாம்.* ***61***

***1375. ' "உரிமை மைந்தரைப் பெறுகின்றது,***
***உறு துயர் நீங்கி,***
***இருமையும் பெறற்கு" என்பது***
***பெரியவர் இயற்கை ;***
***தருமம் அன்ன நின்-தந்த யான்,***
***தளர்வது தகவோ?***
***கருமம் என்வயின் செய்யின், என்***
***கட்டுரை கோடி.***

**'உரிமை மைந்தரைப் பெறுகின்றது** - *எல்லா உரிமைகளையும் உடையபிள்ளையை ஒருவர் பெறுவது ;* **உறு துயர் நீங்கி** - *மிக்க துயரத்தினின்றும்விலகி ;* **இருமையும் பெறற்கு என்பது** - *இம்மை மறுமை இன்பங்களை அடைவதற்காகும்என்பது ;* **பெரியவர் இயற்கை** - *பெரியோரது இயல்பாக உள்ளது ;* ***தருமம்அன்ன நின் தந்த யான்*** *- அறமே போன்ற நின்னை மகனாகப் பெற்ற நான் ;* ***தளர்வது தகவோ*** - *மனத் தளர்ச்சியடைதல் தக்கதோ? (அன்று) ;* ***என்வயின் கருமம் செய்யின்*** - *(ஆதலால்) என்மீது செய்தற்குரியது செய்ய விரும்பினால் ;* ***என் கட்டுரை கோடி*** - *என் பயனுள்ளசொல்லைக் கொள்வாய்.'*

*உரிமை மைந்தர் - அறநூல்கள் புத்திரர்களின் வகைகள் சில கூறுகின்றன.அவர்களுள் சிலர்க்குச் சில உரிமையே உண்டு. ஒருவனுக்கு முறைப்படி பிறந்த மகனுக்கே*

*எல்லாஉரிமைகளும் உண்டு. அத்தகைய மைந்தர் என்றவாறு. மைந்தனைப் பெறுவதன் பயன் துயரம் நீங்கிநன்மை அடைவதாகும். இதனைப் பின்னும், ''பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும், உராவரும்துயரைவிட்டு உறுதி காண்பரால்'' (1453) என்று குறிப்பர்.* ***62***

***1376. 'மைந்த ! நம் குல மரபினில் மணி முடி வேந்தர்,***
***தம்தம் மக்களே கடன்முறை நெடு நிலம் தாங்க,***
***ஐந்தொடு ஆகிய முப் பகை மருங்கு அற அகற்றி,***
***உய்ந்து போயினர்; ஊழி நின்று எண்ணினும் உலவார்.***

***'மைந்த*** *- மகனே !* ***நம்குல மரபினில் மணிமுடி வேந்தர்*** *- நமது சிறந்த குலத்தில் தோன்றிய அழகிய முடிசூடி ஆண்ட வேந்தர்கள் ;* ***தம் தம்மக்களே*** *- தம் தம் பிள்ளைகளே ;* ***கடன்முறை நெடு நிலம் தாங்க*** *- முறைப்படிநெடிய உலகை அரசர்களாகிக் காப்பாற்ற;* ***ஐந்தொடு ஆகிய முப்பகை*** *- ஐந்துபொறிகளால் உண்டாகிய மூன்று பகைகளையும்;* ***மருங்கு அற அகற்றி -*** *வேரோடுநீக்கி ;* ***உய்ந்து போயினர்*** *- பிழைத்துப் போனார்கள் ;* ***ஊழிநின்று எண்ணினும்*** *- அவ்வாறு உய்ந்தவர்களை ஊழிக்காலம் இருந்து எண்ணினாலும் ;* ***உலவார்*** *- குறையார் (எண்ணற்றவர் என்றவாறு)'*

*ஐந்தொடு ஆகிய முப்பகை - ஐம்பொறிகளாகிய மெய், வாய், கண், மூக்கு,செவி ஆகியவற்றின் வாயிலாகப் புலப்படும் காமம், வெகுளி, மயக்கம் என்னும் பகைகள். ஐந்தொடு- ஒடு உருபு ஐந்தால் எனப் பொருள்பட்டுக் கருத்தாப் பொருளில் வந்தது. 'ஊழி நின்று எண்ணினும்உலவார்' என்றது எவ்வளவு காலம் நின்று எண்ணினாலும் எண்ணி முடிவுகாண முடியாதவாறு மிகப் பலராவர்என்பதனைக் காட்டிற்று.*
***63***

***1377. 'முன்னை ஊழ்வினைப் பயத்தினும்,***
***முற்றிய வேள்விப்***
***பின்னை எய்திய நலத்தினும்,***
***அரிதினின் பெற்றேன் ;***
***இன்னம், யான் இந்த அரசியல்***
***இடும்பையின் நின்றால்,***
***நின்னை ஈன்றுள பயத்தினின்***
***நிரம்புவது யாதோ?***

***'முன்னை ஊழ்வினைப் பயத்தினும்*** *- முற்பிறப்பில் செய்த நல் வினையின் விளைவாகவும் ;* ***பின்னை முற்றிய வேள்வி எய்தி நலத் தினும்*** *- பிறகு இப்பிறப்பில் செய்து முடித்த வேள்வியால் அடைந்த நன்மையாலும் ;* ***அரிதினின் பெற்றேன்*** *- உன்னை அரிய பேறாகப் பெற்றேன் ;* ***இன்னம்*** *- இன்னமும் ;* ***யான் இந்த அரசியல் இடும்பையின் நின்றால்*** *-நான் இந்த அரச வாழ்க்கையாகிய துன்பத்தில் இருந்தால் ;* ***நின்னை ஈன்றுளபயத்தினின் -*** *உன்னைப் பெற்றதால் அடைந்த பயனால் ;* ***நிரம்புவதுயாதோ*** *- நிறைவது எவ்வாறு?*

*முற்றிய வேள்வி - அசுவமேதம். புத்திரகாமேஷ்டி முதலியன. 'மெய்யாயவேதத்துறை வேந்தருக்கு ஏய்ந்த யாரும் செய்யாத யாகம் இவன் செய்தும் மறந்த மாதோ' என்றுதயரதன் செய்த வேள்விகள் பற்றி முன்னும் சொன்னார். (170)*
***64***

***1378. 'ஒருத்தலைப் பரத்து***
***ஒருத்தலைப் பங்குவின் ஊர்தி***
***எருத்தின், ஈங்கு நின்று,***
***இயல்வரக் குழைந்து, இடர்உழக்கும்***
***வருத்தம் நீங்கி, அவ்***
***வரம்பு அறு திருவினை மருவும்***
***அருந்தி உண்டு, எனக்கு ; ஐய !***
***ஈது அருளிடவேண்டும்.***

***ஒரு தலைப் பரத்து*** *- ஒரு பக்கத்தில் பாரத்தையும் ;* ***ஒருதலை*** *- மற்றொரு பக்கத்தில் ;* ***பங்குவின்*** *- நொண்டியாய் இருக்கும் தன்மையையும் கொண்ட ;* ***ஊர்தி எருத்தின்*** *- மனிதன் ஊர்ந்து செல்லும் வண்டியில்பூட்டப்பட்ட பொதிமாட்டைப் போல ;* ***ஈங்கு நின்று*** *- இவ்வுலகிலிருந்து ;* ***இயல்வரக் குழைந்து*** *- தன்மை பொருந்த வருந்தி ;* ***இடர் உழக்கும் வருத்தம்நீங்கி*** *- துன்பப்படும் அரசபாரமாகிய வருத்தத்தினின்றும் அகன்று ;* ***அவ்வரம்புஅறு திருவினை -*** *அந்த எல்லையில்லாத முத்திச் செல்வத்தை;* ***மருவும் அருத்திஎனக்கு உண்டு*** *- பொருந்தும் ஆசை எனக்கு உள்ளது ;* ***ஐய! ஈது அருளிடவேண்டும்*** *- ஐயனே ! இதனை நீ கொடுக்க வேண்டும்.'*

*ஒரு பக்கம் சுமக்கமுடியாத பாரமும், மற்றொரு பக்கம் நொண்டிக் காலும்பெற்ற பொதிமாடு படும் பாட்டை ஆட்சிச் சுமையாலும், வயோதிகத்தாலும் தான் படுவதாகத் தயரதன்அறிவிக்கிறான். ஒருத்தலை - ஒருதலை என்பதன் விகாரம். பரம் - பாரம். 'அந்தமில் இன்பம்'என்று சிலம்பும் 'சென்றடையாத திரு' என்று தேவாரமும் வீடுபேற்றினைக் குறித்தமை இங்குஒப்புநோக்கத்தக்கது.* ***65***

***1379. 'ஆளும் நல் நெறிக்கு***
***அமைவரும் அமைதி இன்றாக***
***நாளும் நம் குல நாயகன்***
***நறை விரி கமலத்***
***தாளின் நல்கிய கங்கையைத்***
***தந்து, தந்தையரை***
***மீள்வு இலா உலகு ஏற்றினான் ஒருமகன்,***
***மேல்நாள்.***

***'மேல்நாள்*** *- முற்காலத்தில்;* ***ஒருமகன்*** *-ஒப்பற்றவனாகிய பகீரதன்;* ***ஆளும் நல்நெறிக்கு*** *- தாம் நுகரக்கூடிய(வீட்டுக்குரிய) நல்ல வழிக்கு ;* ***அமைவரும் அமைதி இன்றாக*** *- பொருந்தும் தன்மைதன் முன்னோர்களுக்கு இல்லாமற்போனதால் ;* ***நாளும்*** *- (அவர்கள் உய்வின் பொருட்டு) எந்நாளும் ;* ***நம்குலம் நாயகன்*** *- நமக்குக் குல தெய்வமாகிய திருமாலின் ;* ***நறை விரி கமலத் தாளின்*** *- தேன் நிறைந்த தாமரை*

*போலும்திருவடிகளினின்றும் ;* ***நல்கிய கங்கையைத் தந்து*** *- வெளிப்படுத்திய கங்கையாற்றைஇவ்வுலகில் கொண்டுவந்து ;* ***தந்தையரை மீள்வு இலா உலகு*** *- தன் முன்னோர்களை(சகர புத்திரர்களை) மீண்டு வாராத வீட்டுலகத்தில் ;* ***ஏற்றினான்*** *- ஏறச்செய்தான்.'*

*மக்கட் பேற்றின் பயனை விளக்க ஓர் எடுத்துக்காட்டாகப் பகீரதன் வரலாற்றினை எடுத்துக் காட்டுகிறான். நம்குலம் - இக்குவாகு குலம். மீள்வு இலா உலகு - திருநாடு ; வீடு.* ***66***

***1380. 'மன்னர் ஆனவர் அல்லர் ;***
***மேல் வானவர்க்கு அரசு ஆம்***
***பொன்னின் வார் கழல்***
***புரந்தரன் போலியர் அல்லர் ;***
***பின்னும், மா தவம் தொடங்கி,***
***நோன்பு இழைத்தவர் அல்லர் ;***
***சொல் மறா மகப் பெற்றவர்***
***அருந்துயர் துறந்தார்.***

***'அருந் துயர் துறந்தார்*** *- இவ்வுலகில் அரிய துன்பத்திலிருந்து விடுபட்டவர்கள் ;* ***மன்னர் ஆனவர் அல்லவர்*** *- அரசர்களாக வாழ்கின்றவர்கள்அல்லர் ;* ***மேல்*** *- மேலுலகில் உள்ள ;* ***வானவர்க்கு அரசு ஆம்*** *-தேவர்களுக்கு அரசனாகிய ;* ***பொன்னின் வார்கழல் புரந்தரன் போலியன் அல்லர்*** *-பொன்னாலான நீண்ட வீரக்கழல் அணிந்த இந்திரன் போன்றவரும் அல்லர் ;* ***பின்னும்*** *- அன்றியும் ;* ***மா தவம் தொடங்கி*** *- பெருந்தவத்தைச் செய்யத் தொடங்கி ;* ***நோன்பு இழத்தவர் அல்லர்*** *- பல விரதங்களைச் செய்தவரும் அல்லர் ;* ***சொல் மறா மகப் பெற்றவர்*** *- (பின்னர் யார் என்று வினவின்) தம் சொல்லைத் தட்டாதமக்களைப் பெற்றவரே ஆவர்.'*

***நல்ல மக்களைப் பெற்றவரே துயரம் நீங்கியவர் என்பது கருத்து. "ஏவா மக்கள் மூவா மருந்து" என்பது ஈண்டு நினைத்தற்குரியது.*** ***67***

***1381. 'அனையது ஆதலின்,***
***"அருந் துயர்ப் பெரும் பரம், அரசன்***
***வினையின் என்வயின்***
***வைத்தனன்" எனக் கொள வேண்டா;***
***புனையும் மா முடி புனைந்து,***
***இந்த நல் அறம் புரக்க***
***நினையல் வேண்டும்; யான்***
***நின்வயின் பெறுவது ஈது' என்றான்.***

***'அனையது ஆதலின்*** *-அவ்வாறு இருத்தலின்;* ***அரசன் அருந்துயர்ப் பெரும் பரம் -*** *மன்னன் அரிய துன்பத்தைத் தரும் பெரிய அரச பாரத்தை;* ***வினையின் என்வயின் வைத்தனன்-*** *வஞ்சகமாக என்மீது சுமத்தினான்;* ***எனக் கொள வேண்டா -*** *என்று நினைத்துக்கொள்ள வேண்டா;* ***புனையும் மாமுடி புனைந்து*** *- அரசர் சூடும் பெருமை*

*மிக்க கிரீடத்தை அணிந்து கொண்டு;* ***இந்த நல் அறம் புரக்க -*** *இந்த அரசாட்சியாகிய நல்ல அறத்தை வளர்க்க;* ***நினையல்வேண்டும் -*** *உளங்கொள வேண்டும்;* ***யான் நின்வயின் பெறுவது ஈது' என்றான் -*** *நான்உன்னிடம் வேண்டுவது இதுவே என்றான்.*

*பகை களைந்து தக்கவாறு அறம் வழுவாமல் ஆட்சி செய்தலின் கடுமை பற்றி, 'பெரும்பரம்' என்றான். 'நின்னை வேண்டி எய்திட விழைவது ஒன்று உண்டு' (60) என்பது முதல் இச்செய்யுள்வரை தயரதன்பலர் முன்னிலையில் இராமனை அரசாட்சியை ஏற்க வேண்டிய செய்தி தெரிவிக்கப்பட்டது.* ***68***

இராமன் தயரதன் கட்டளைக்கு இசைதல்

***1382. தாதை, அப் பரிசு உரைசெய,***
***தாமரைக் கண்ணன்***
***காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்;***
***'கடன் இது' என்று உணர்ந்தும்,***
***'யாது கொற்றவன் ஏவியது***
***அது செயல் அன்றோ,***
***நீதி எற்கு?' என நினைந்தும்,***
***அப் பணி தலைநின்றான்.***

***தாதை அப் பரிச உரை செய -*** *தந்தை அவ்வாறு சொல்ல;* ***தாமரைக் கண்ணன் காதல் உற்றிலன் -*** *தாமரை போன்ற கண்களை யுடைய இராமன் அரசாட்சி கிடைத்தது என்றுவிரும்பினான் அல்லன்;* ***இகழ்ந்திலன் -*** *அரசாட்சி துன்பமானது என்று வெறுத்தான் அல்லன்;* ***இது கடன் என்று உணர்ந்தும் -*** *அரச பதவியை ஏற்கும் இச்செயல் தனக்குரிய கடமை என்று உணர்ந்தும்;* ***கொற்றவன் யாது ஏவியது -*** *அரசன் எதனைச் செய்யுமாறுஆணையிட்டானோ;* ***அது செயல் அன்றோ -*** *அதனைச் செய்வதல்லவா;* ***எற்கு நீதி என நினைந்தும்-*** *எனக்கு நியாயம் என்று எண்ணியும்;* ***அப் பணி தலைநின்றான் -*** *அரச பதவி ஏற்றலாகிய அச்செயலை மேற்கொண்டு நின்றான்.*

*இதனால் இராமன் ஆட்சியின்மீது விருப்போ வெறுப்போ இன்றி இருந்த தன்மையும் அவன் தந்தையின்சொற்களை மந்திரமாகக் கருதுபவன் என்னும் உண்மையும் சுட்டப்பட்டுள்ளன.* ***69***

தயரதன் மகிழ்ந்து, தன் அரண்மனைக்குப் போதல்

***1383. குருசில் சிந்தையை மனக்கொண்ட***
***கொற்ற வெண்குடையான்,***
***'தருதி இவ் வரம்' எனச் சொலி,.***
***உயிர் உறத் தழுவி,***
***சுருதி அன்ன தன் மந்திரச்***
***சுற்றமும் சுற்ற,***
***பொரு இல் மேருவும் பொரு அருங் கோயில்***
***போய்ப் புக்கான்.***

***குருசில் சிந்தையை -*** இராமனது மனக் கருத்தை; ***மனம் கொண்ட கொற்ற வெண்குடையான்*** - உட்கொண்ட வெற்றி பொருந்திய வெண்குடையை யுடையவனாகிய தயரதன்; ***'இவ் வரம் தருதி -*** இந்த வரத்தைத் தருவாய்;' ***எனச் சொலி*** - என்று சொல்லி; ***உயிர் உறத்தழுவி*** - அவனைத் தன் உயிரோடு பொருந்தும்படி இறுக அணைத்துக் கொண்டு; ***சுருதி அன்ன*** - வேதத்தையொத்த; ***தன் மந்திரச் சுற்றமும் சுற்ற -*** தன்னுடைய அமைச்சர்களின் கூட்டமும் தன்னைக்சூழ்ந்துவர; ***பொரு இல் மேருவும்*** - ஒப்பு அற்ற மேரு மலையும்; ***பொரு அருங் கோயில்-*** ஒப்பாவதற்கு அரிய தன் அரண்மனையில்; ***போய்ப் புக்கான் -*** போய்ச் சேர்ந்தான்.

*நன்மை தீமைகளை ஆராய்ந்து அரசனுக்குச் சொல்லி நீதி வழி நிறுத்துதல் பற்றி அமைச்சர்களுக்குச்சுருதியை உவமையாகக் கூறினார். மேருவும் - உம்மை. உயர்வு சிறப்பு.* ***70***

*இராமன் தன் அரண்மனை சேர்தல்*

***1384. நிவந்த அந்தணர்,***
***நெடுந் தகை மன்னவர், நகரத்து***
***உவந்த மைந்தர்கள்,***
***மடந்தையர், உழைஉழை தொடர,***
***சுமந்திரன் தடந் தேர்மிசை,***
***சுந்தரத் திரள் தோள்***
***அமைந்த மைந்தனம், தன் நெடுங்***
***கோயில் சென்று அடைந்தான்.***

***நிவந்த அந்தணர் -*** உயர்ந்த வேதியரும்; ***நெடுந்தகை மன்னர் -*** பெருந்தன்மை பொருந்திய அரசர்களும்; ***நகரத்து உவந்த மைந்தர்கள் -*** அயோத்தி நகரத்தில் வாழும் தன்னைக் காணுதலில் பெருமகிழ்ச்சி யடையும் இளைஞர்களும்; ***மடந்தையர் -*** பெண்களும்; ***உழை உழை தொடர -*** பக்கங்களிலே சூழ்ந்துவர; ***சுந்தரத் திரள்தோள் அமைந்த மைந்தனும் -*** அழகிய திரண்ட தோள்களையுடைய இராமனும்; ***தன் நெடுங் கோயில்*** - தனது பெரிய மாளிகையை; ***சென்று அடைந்தான்*** - போய்ச் சேர்ந்தான்.

*நிவப்பு - உயர்வு குலம், அறிவு, ஒழுக்கம் ஆகியவற்றால் உயர்ந்தோர் அந்தனர் ஆவர். தாடகையைக்கொன்று, சிவன் வில்லை முறித்து, பரசுராமன் செருக்கினை அழித்ததோடு கட்டழகும் நிறைந்திருப்பவையாதலின் இராமன் தோள்கள் 'சுந்தரத் திரள் தோள்' என்று சிறப்பிக்கப்பட்டன. மைந்தனும் - உம்மை இறந்தது தழுவியது; தந்தை போனபின் தனயனும் சேர்ந்தான் என்பதை உணர்த்தியது.* ***71***

*தயரதன் அரசர்களுக்கு ஓலை போக்குதல்*

***1385. வென்றி வேந்தரை, 'வருக' என்று,***
***உவணம் வீற்றிருந்த***
***பொன் திணிந்த தோட்டு***
***அரும் பெறல் இலச்சினை போக்கி,***
***'நன்று சித்திர நளிர் முடி***

***கவித்தற்கு, நல்லோய்!***
***சென்று, வேண்டுவ வரன்முறை***
***அமைக்க' எனச் செப்ப,***

***வென்றி வேந்தரை வருக என்று*** - *தயரதன், வெற்றி பொருந்திய அரசர்களை அயோத்திக்கு வருக என்று;* ***பொன் திணிந்த தோட்டு -*** *பொன்னாலாகிய ஓலையிலே;* ***உவணம் வீற்றிருந்த*** - *கருடனது வடிவம் பெருமையோடு திகழ்ந்த;* ***அரும் பெறல் இலச்சினை போக்கி -*** *பெறுதற்கு அரிய தன் அடையாள முத்திரையைவிட்டு அனுப்பி;* ***'நல்லோய் -*** *(பின்பு வசிட்டமுனிவனை நோக்கி) பெரியீர்;* ***சென்று -*** *நீர் சென்று;* ***சித்திர நளிர் முடி -*** *சித்திர வேலைப்பாடமைந்த பெருமை தங்கிய முடியை;* ***நன்று கவித்தற்கு -*** *இராமனுக்கு நன்றாகச் சூட்டுதற்கு;* ***வேண்டுவ வரன்முறை அமைக்க -*** *வேண்டுவனவற்றை முறைப்படி அமைத்திடுக;'* ***எனச் செப்ப -*** *என்று சொல்ல. இப்பாட்டு, குளகம். இராமனுக்கு முடிசூட்டுதற்கு அமைச்சர்களின் இசைவைப் பெற்ற தயரதன், மேற்கொண்டு செய்யவேண்டுவனவற்றைச் செய்யத் தொடங்கி அரசர்களுக்கு அழைப்பு விடுத்து, முறைப்படிஆவன செய்ய வசிட்டனை வேண்டினான். அரசர், பிறர்க்கு விடுக்கும் ஓலையில் தன் முத்திரையை இட்டு அனுப்புதல் மரபு.* *72*

*மன்னர்களிடம் இராமன் முடிபுனைதலைத் தயரதன் தெரிவித்தல்*

***1386. உரிய மா தவன் ஒள்ளிது என்று***
***உவந்ததன், விரைந்து ஓர்***
***பொரு இல் தேர்மிசை,***
***அந்தனர் குழாத்தொடும் போக,-***
***'நிருபர்! கேண்மின்கள்,***
***இராமற்கு நெறி முறைமையினால்***
***திருவும் பூமியும்***
***சீதையின் சிறுந்தன' என்றான்.***

***உரிய மா தவன் -*** *முடிசூட்டுதற்கு உரிய பெரிய தவத்தைச் செய்தவனான வசிட்ட முனிவன்;* ***ஒள்ளிது என்று உவந்தனன் -*** *நல்லது என்று சொல்லி மகிழ்ந்தவனாய்;* ***விரைந்து -*** *விரைவாக;* ***ஓர் பொரு இல் தேர்மிசை -*** *ஒப்பற்ற ஒரு தேரில் ஏறி;* ***அந்தணர் குழாத்தொடும் போக*** - *வேதியர் கூட்டத்தோடும் செல்ல;* ***'நிருபர் கேண்மின்கள் -*** *(தயரதன் தன்அருகே இருந்த அரசர்களைப் பார்த்து) அரசர்களே! கேளுங்கள்;* ***நெறி முறைமையினால் -*** *அரச நீதி முறைப்படி;* ***இராமற்குத் திருவும் பூமியும் -*** *இராமனுக்கு அரசச்செல்வமும் நாடும்;* ***சீதையின் சிறந்தன -*** *சீதைபோலச் சிறந்தனவாய் உள்ளன;'* ***என்றான் -*** *என்று சொன்னான்.*

*இங்குக் குறிக்கப்படும் அரசர்கள் ஓலை பெற்று வந்தவர் அல்லர்; தயரதன் அருகில் திறை செலுத்தவும், காணவும் வந்தவர்கள் ஆவர். நிருபர், அண்மைவிளி. சீதையின் - 'இன்' ஒப்புப்பொருளில்வந்தது; உறழ்ச்சிப் பொருளில் வந்ததாகவும் கொள்ளலாம்.*
*73*

*மன்னர்கள் தயரதன் கருத்தை வரவேற்றல்*

*1387.* ***இறைவன் சொல் எனும்***
***இன் நறவு அருந்தினர் யாரும்,***
***முறையில் நின்றிலர்;***
***முந்துறு களியிடை மூழ்கி,***
***நிறையும் நெங்சிடை உவகை போய்***
***மயிர் விழி நிமிர,***
***உறையும் விண்ணகம்***
***உடலொடும் எய்தினர் ஒத்தார்.***

***இறைவன் சொல் எனும் இன் நறவு -*** *அரசனாகிய தயரதன் சொன்ன சொல்லாகிய இனியகள்ளை;* ***அருந்தினர் யாரும்*** *- பருகிய அரசர்கள் முதலிய அனைவரும்;* ***முறையில் நின்றிலர்*** *- முறையில் நில்லாதவர்களாய்;* ***முந்துறு களியிட மூழ்கி -*** *எழுகின்ற களிப்பு என்னும் வெள்ளத்தில் மூழ்கி;* ***நெஞ்சிடை நிறையும் உவகை போய்*** *- தங்கள் மனத்தில் நிறைந்தமகிழ்ச்சியானது கரைகடந்து போய்;* ***மயிர் வழி நிமிர*** *- மயிர்க்கால்களில் வழியேவெளிப்பட;* ***உறையும் விண்ணகம் -*** *உடல் நீங்கியபின் நல்வினை புரிந்த உயிர்கள் சென்றுதங்கும் துறக்கத்தை;* ***உடலொடும் எய்தினர் ஒத்தார்*** *- இவ்வுடம்புடனே அடைந்தவர் போலாயினர்.*

*சொல் நறவு - உருவகம், அரசன் சொல்லைக் கேட்டவர் தம் நிலைமறந்து உவகை வெளிப்படப்பெருமகிழ்ச்சியுற்றனர் என்பதாம். 'உடலொடும் துறக்கம் எய்தினர் ஒத்தார்' என்னும் உவமைமுன்னும் 'உடம்பொடு துறக்க நகர் உற்றவரை ஒத்தாதர்' (1160) என வருதல் காணலாம். உறையும்விண்ணகம் - நல்வினை புரிந்த உயிர் சென்று உறையும் துறக்கம்* *74*

*1388.* ***ஒத்த சிந்தையர் உவகையின்***
***ஒருவரின் ஒருவர்***
***தத்தமக்கு உற்ற அரசு எனத்***
***தழைக்கின்ற மனத்தர்;***
***முத்த வெண்குடை மன்னனை***
***முறைமுறை தொழுதார்***
***'அத்த! நன்று' என,***
***அன்பினோடு அறிவிப்பது ஆனார்.***

***உவகையின் ஓத்த சிந்தையர் -*** *(அவ்வரசர்கள்) மகிழ்ச்சியினால் இராமபிரான்முடிசூடுதலில் ஒத்த கருத்துடையவர்களாய்;* ***ஒருவரின் ஒருவர் அரசு தம் தமக்கு உற்ற என -*** *ஒருவரைப் போல ஒருவர் அரசு தத்தமக்குக் கிடைத்ததுபோல;* ***தழைக்கின்ற மனத்தர்*** *- மகிழ்ச்சிமிகும் மனமுடையவர்கள்;* ***முத்த வெண்குடை மன்னனை*** *- முத்துகள் பதிக்கப்பட்ட வெண்கொற்றக்குடையையுடைய தயரத மன்னனை;* ***முறை முறை தொழுதார்*** *- வரிசை வரிசையாய் நின்று வணங்கினார்கள்;* ***'அத்த நன்று என -*** *ஐயனே! தங்கல் கருத்து நல்லதே' என்று* ***அன்பினோடு அறிவிப்பதுஆனார்*** *- கனிவோடு தங்கள் கருத்தை அவனுக்குத் தெரிவிக்கலாயினர்.*

*இராமபிரான் மக்களொடு கலந்து பழகும் நீர்மையுடையவனாதலின் அவனுக்கு அரசு கிடைப்பதைத்தமக்குக் கிடைப்பது போல யாவரும் பாராட்டுவராயினர். சுமந்திரன் இத்தகைய எண்ணமுடையவனாய்இருந்தமை, "தலங்கள் யாவையும் பெற்றனன் தான் எனத் தளிர்ப்பான்" (1361) என்று குறிக்கப்பட்டுள்ளது.*
*75*

*கலிவிருத்தம்*

***1389. 'மூ - எழு முறைமை எம் குலங்கள் முற்றுறப்***
***பூ எழு மழுவினால் பொருது போக்கிய***
***சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு,***
***ஆவ இவ் உலகம்; ஈது அறன்' என்றார் அரோ.***

**'மூ எழு முறைமை** - *இருபத்தொரு தலைமுறை;* **எம் குலங்கள் முற்றுற -** *எங்கள்அரசர் குடியெல்லாம் அழியுமாறு;* **பூ எழு மழுவினால் பொருது போக்கிய சேவகன் சேவகம்** - *கூர்மை பொருந்திய மழுப்படையினால் போர் செய்து இல்லாமற் செய்த வீரனாகிய பரசுராமனது வீரத்தை;* **செகுத்த சேவகற்கு** - *கெடுத்த வீரனாகிய இராமனுக்கு;* **இ உலகம் ஆவ -** *இந்த உலகம்உரிமையாவதாக!* **ஈது அறன் என்றார் -** *இச்செயல் அறத்தொடு பொருந்தியதே' என்றுசொன்னார்கள்.*

*அரோ - அசை. பரசுராமனது செருக்கை அழித்தபோதே இராமனுக்கு இவ்வுலகம் தகுதியால் உரிமையாயிற்று;இதனை வெளிப்படுத்தி முடிசூட்டுதல் மிகறவும் ஏற்புடைத்தே என அரசர் தம் எண்ணத்தை உவமையோடு தெரிவித்தனர். பூ - கூர்மை.*
*76*

*தயரதன் வினாவும் வேத்தவையின் விடையும்*

***1390. வேறு இலா மன்னரும் விரும்பி, இன்னது***
***கூறினார்; அது மனம் கொண்ட கொற்றவன்,***
***ஊறின உவகையை ஒளிக்கும் சிந்தையான்.***
***மாறும் ஓர் அளவை சால் வாய்மை கூறினான்.***

**வேறு இலா மன்னரும் விரும்பி -** *கருத்து மாறுபாடில்லாத மன்னரும் இராமன் முடிசூடுதலை விரும்பி;* **இன்னது கூறினார்** - *இவ்வாறு கூறினர்;* **அது மனம் கொண்ட கொற்றவன் -** *அதனைக் கருத்தில் கொண்ட தயரதன்;* **ஊறின உவகையை ஒளிக்கும் சிந்தையான் -** *தன்னுள்ளேசுரந்த மகிழ்ச்சியை வெளிப்படாது மறைக்கும் கருத்தினனாய்;* **மாறும் ஓர் -** *பிறிதொரு;* **அளவை சால்வாய்மை கூறினான் -** *(அவர்கள் மனத்தை) அளத்தற்குரிய ஒரு வாய்ச்சொல்லைச்சொன்னான்.*

*வேறிலா மன்னர் - கருத்தொருமித்த மன்னர்கள். வாய்மை - வாய்ச்சொல். அளவை சால்வாய்மை - அளந்தறியும் சொல். 77*

***1391. 'மகன்வயின் அன்பினால் மயங்கி, யான் இது***
***புகல, நீர் புகன்ற இப் பொம்மல் வாசகம்,***
***உகவையின் மொழிந்ததோ? உள்ளம் நோக்கியோ?***
***தகவு என நினைந்தது எத் தன்மையால்?' என்றான்.***

***'மகன்வயின் அன்பினால் மயங்கி -*** *(தயரதன் அரசர்களை நோக்கி) என்மகன்மீது கொண்ட பாசத்தினால் அறிவு மயங்கி;* ***யான் இது புகல -*** *நான் இந்தக் கருத்தைத் தெரிவிக்க;* ***நீர் புகன்ற இ பொம்மல் வாசகம் -*** *(அதற்கு இணங்கி) நீங்கள் சொன்ன இந்தப்பொலிவு பெற்ற வார்த்தை;* ***உகவையின் மொழிந்ததோ -*** *மன மகிழ்ச்சியினால் புகன்றதோ?;* ***தகவு என நினைந்தது -*** *தகுதி என்று கருதியது;* ***எத் தன்மையால் என்றான் -*** *எவ்வகையினால்' என்று வினவினான்.*

*உகவை - மகழ்ச்சி; உகவையான் நெஞ்சம் உள்ளுருகி என்பது நம்மாழ்வார் வாக்கு (திருவாய்மொழி6.2.9).* ***78***

## *1392. இவ்வகை உரைசெய இருந்த வேந்து அவை.*
## *'செவ்வியோய்! நின் திருமகற்குத் தேயத்தோர்*
## *அவ்வவர்க்கு, அவ்வவர் ஆற்ற ஆற்றும்*
## *எவ்வம்இல் அன்பினை, இனிது கேள்' எனா,*

***இவ் வகை உரை செய -*** *(தயரதன் ) இவ்வாறு வினவ;* ***இருந்த வேந்து அவை -*** *அங்கே இருந்த அரசர் கூட்டம்;* ***செவ்வியோய் -*** *(தயரதனை நோக்கி) செப்பமுடையோய்!;* ***நின் திருமகற்கு*** *- உன் மகன்மீது;* ***தேயத்தோர் அவ்வவர்க்கு -*** *அங்கங்கே பற்பலநாட்டில் உள்ளோரும்;* ***அவ்வவர் ஆற்ற ஆற்றுறும் -*** *அவரவர்களும் மிகவும் செய்கின்ற;* ***எவ்வம் இல் அன்பினை -*** *குறைவில்லாத அன்பினை;* ***இனிது கேள் எனா*** *- இன்பமாகக்கேட்பாய்' என்று சொல்லி.*

*இது முதல் நான்கு பாக்களும் ஒரு தொடர். திருமகற்கு - உருபு மயக்கம்; 'கு' ஏழனுருபில் வந்தது.* ***79***

## *1393. 'தானமும், தருமமும், தகவும், தன்மை சேர்*
## *ஞானமும், நல்லவர்ப் பேணும் நன்மையும் -*
## *மானவ! - வையம், நின் மகற்கு; வைகலும்,*
## *ஈனம் இல் செல்வம் வந்து இயைக என்னவே.*

***'மானவ*** *- மனுவின் குலத்தில் தோன்றியவனே!;* ***நின் மகற்கு*** *- உன் மகனிடத்தில்;* ***ஈனம் இல் செல்வம்*** *-தாழ்வில்லாத அரசச் செல்வம்;* ***வந்து இயைக என்ன*** *- வந்துபொருந்தக் கடவது என்று சொல்வது போல;* ***தானமும் -*** *கொடைத் தன்மையும்; தருமம் - அறநெறியும்;* ***தகவும் -*** *ஒழுக்கமும்;* ***தன்மை சேர் ஞானமும்*** *- மேன்மை பொருந்திய மெய்யுணர்வும்;* ***நல்லவர்ப் பேணும் நன்மையும் -*** *பெரியோரைப் போற்றிக் காக்கும் நற்பண்பும்;* ***நின்மகற்கு வைகலும் வைகும்*** *- உன் மகனுக்கு என்றும் நிலையாகத் தங்கியுள்ளன.'*

*இதனால் இராமனுக்கு அரசனாதற்குரிய அனைத்துத் தகுதிகளும் உள்ளன என்றனர் அரசர்கள் . தானம்- அறநெறியால் வந்த பொருளைத் தக்கார்க்கு. உவகையொடுங் கொடுத்தல். நல்லவர்ப் பேணும் நன்மை - இரண்டன் தொகை.*
***80***

***1394. ‘ஊருணி நிறையவும், உதவும் மாடு உயர்***
***பார் கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும்,***
***கார் மழை பொழியவும், கழனி பாய் நதி***
***வார் புனல் பெருகவும், மறுக்கின்றார்கள் யார்.?***

*‘**ஊருணி நிறையவும்** - ஊராரால் உண்ணுதற்குரிய நீர்நிலை நீரால் நிறையவும்; **உதவும் மாடு உயர்** - பலர்க்கும் உதவத்தக்க இடத்தில் வளர்ந்துள்ள; **பார்கெழு பயன்மரம்** - உலகத்தார் விழையும் பயன்படும் மரம்; **பழுத்தற்று ஆகவும்** - பழுத்ததாகவும்; **கார்மழை பொழியவும் -** மேகங்கள் காலத்தில் மழையைப் பெய்யவும்; **கழனிபாய் நதி -** வயல்களில் பாய்கிற ஆறு; **வார்புனல் பெருகவும் -** மிக்க நீர் பெருகவும்; **மறுக்கின்றார்கள்யார் -** வேண்டாம் என்று தடுப்பவர்கள் யார் உளர்? (எவரும் இலர்.).’*

*இவ்வெடுத்துக்காட்டுகளால் இராமன் பிறர்க்கு நன்மை செய்யும் ஒப்புரவாளன் என்பது தெரிவிக்கப்பட்டது.“ ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம், பேரறி வாளன் திரு” என்னும் குறளில் (215) வரும் உவமையினை ஊருணி நிறையவும் என்றும், “பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம், நயனுடையான்கண்படின்” (216) மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம், பெருந்தகை யான்கண் படின்“(217) என்னும் குறட்பாக்களில் வரும் மரங்கள் இரண்டினையும் சுட்டும் வகையில் “பார் கெழுபயன்மரம்” என்றும் சுருங்கச் சொல்லியுள்ள திறம் எண்ணி மகிழ்தற்குரியது.*
***81***

***1395. ‘பனை அவாம் நெடுங் கரப் பரும யானையாய்!***
***நினை அவாம் தன்மையை நிமிர்ந்த மன்னுயிர்க்கு,***
***எனையவாறு அன்பினன் இராமன், ஈண்டு, அவற்கு***
***அனையவாறு அன்பின அவையும்’ என்றனர்.***

*‘**பனை அவாம் நெடுங் கரப் பரும யானையாய் -** பனை மரம் போன்ற நீண்ட துதிக்கையையும்,அம்பாரியையும் உடைய யானையை உடைய அரசே!; **நினை அவாம் தன்மையை நிமிர்ந்த -** உன்னை விரும்பும் தன்மையை மிகுதியாகக் கொண்டிருந்த; **மன் உயிர்க்கு -** நிலைபேறுடைய உயிர்களிடத்தில்; **ஈண்டு இராமன் எனையவாறு அன்பினன் -** இங்கே இராமன் எவ்வாறு அன்புடையவனாய் இருக்கின்றானோ; **அனையவாறு அவையும் அவற்கு அன்பின -** அவ்வாறு அவ்வுயிர்களும் அவனிடத்தில்அன்புடையனவாய் இருக்கின்றன; **என்றனர்** - என்று கூறினர்.*

*இராமன் மக்களிடத்தும், மக்கள் அவனிடத்தும் காட்டிய அன்புத்திறன் இங்குச் குறிக்கப்பட்டது.பாலகாண்டத்துள் 308 - 312 ஆத்ம பாடல்களில் இத்தன்மை குறிக்கப்பட்டுள்ளமை ஒப்புநோக்கற்கு உரியது. மன்உயிர்க்கு, அவற்கு - வேற்றுமை மயக்கங்கள்;‘கு’ உருபு ஏழாம் வேற்றுமையில் மயங்கியது.*
***82***

*தயரதன் இராமனை மன்னர்க்குக் கையடை ஆக்குதல்*

*1396.* **மொழிந்தது கேட்டலும், மொய்த்து நெஞ்சினைப்**
**பொழிந்த பேர் உவகையன், பொங்கு காதலன்,**
**'கழிந்தது என் துயர்' எனக் களிக்கும் சிந்தையன்,**
**வழிந்த கண்ணீரினன், மன்னன் கூறுவான்.**

**மொழிந்தது கேட்டலும்** - *அவ்வாறு அவையில் இருந்தவர் கூறியதைக் கேட்டவுடனே;* **மன்னன்** - *அரசனாகிய தயரதன்;* **நெஞ்சினை மொய்த்து** - *மனத்தினில் முழுதும் நிரம்பி;* **பொழிந்த பேர் உவகையன்** - *வெளிப்பட்ட மிக்க மகிழ்ச்சியையுடையவனும்;* **பொங்குகாதலன்** - *மேலிடுகின்ற அன்பையுடையவனும்;* **கழிந்தது என்துயர் என** - *'துன்பம் நீங்கியவனானேன்'என்று;* **களிக்கும் சிந்தையன்** - *களிப்பை வெளிப்படுத்தும் மனத்தை யுடையவனும்;* **வழிந்தகண்ணீரினன்** - *மகிழ்ச்சியால் தானே வழிந்த கண்ணீரையுடையவனுமாகி;* **கூறுவான்** - *சொல்வான் ஆயினான்.*

*நெஞ்சினை - வேறுமை மயக்கம்; நெஞ்சில் என ஏழாம் வேற்றுமை பொருளது.*
*83*

*1397.* **'செம்மையின், தருமத்தின், செயலின், தீங்கின்பால்**
**வெம்மையின், ஒழுக்கத்தின் மெய்ம்மை மேவினீர்.**
**என் மகன் என்பது என் ? நெறியின், ஈங்கு, இவன்**
**நும் மகன்; கையடை; நோக்கும் ஈங்கு' என்றான்.**

**'செம்மையின்** - *(தயரதன் அரசர்களை நோக்கி) நடுநிலைமையிலும்;* **தருமத்தின்** - *அரசியல் அறத்திலும்;* **செயலின்** - *நற் செய்கையிலும்;* **தீங்கின்பால் வெம்மையின்** - *திச்செயல்களில் கொண்ட வெறுப்பிலும்;* **ஒழுக்கத்தின் நடத்தையிலும்; மெய்மை மேவினீர்**- *உண்மையாக இருப்பவர்களே!;* **இவன் ஈங்கு** - *இவ்விராமன் இனிமேல்;* **என்மகன் என்பது என்** - *என் பிள்ளை என்று சொல்லுவது ஏன்?;* **நும் மகன்** - *உங்கள்பிள்ளையாவான்;* **கையடை** - *அவனை உங்களிடம் அடைக்கலமாக்கினேன்;* **ஈங்கு நோக்கும்என்றான்** - *இங்கே அவ்வாறே கருதிப்பேணுங்கள்' என்றான்.*

*இவனை என்மகன் என்ன வேண்டா; உங்கள் மகனாகக் கொண்டு போற்றுங்கள் எனத் தயரதன் கூறினான்.நோக்கும் - பேணுங்கள்; முன்னிலை வினைமுற்று.*
*84*

*தயரதன் நல்ல நாள் பார்த்தல்*

*1398.* **அரசவை விடுத்தபின், ஆணை மன்னவன்,**
**புரை தபு நாளொடு பொழுது நோக்குவான்**
**உரை தெரி கணிதரை ஒருங்கு கொண்டு, ஒரு**
**வரை பொரு மண்டபம் மருங்கு போயினான்.**

**அரசவை விடுத்த பின்** - *அரசர் கூட்டத்தை அனுப்பிய பின்பு;* **ஆணை மன்னவன்** - *ஆணையைச் செலுத்தும் தயரத மன்னன்;* **புரைதபு நாளொடு பொழுது** - *குற்றமற்ற நாளொடு கூடியமுகூர்த்தத்தை;* *நோக்குவான் - பார்ப்பதற்கு;* **உரை தெரி கணிதரை ஒருங்கு கொண்டு** - *சோதிட நூலாராய்ச்சியுடைய சோதிடரைத் தன்னோடு அழைத்துக் கொண்டு;* **வரை பொரு மண்டபம்மருங்கு** - *மலையை ஒத்த மண்டபத்தில்;* **போயினான்** - *போய்ப் புகுந்தான்.*

சோதிடம் பார்க்க அமைதியான சூழல் வேண்டுமாதலின், சோதிடம் வல்லாரோடும் தனியிடம்சென்றான். உரை - ஆகுபெயர்; சோதிட நூலைக் குறித்தது.

***85***

## *மந்தரை சூழ்ச்சிப் படலம்*

*இராமனுக்கு முடிசூட்டுவிழா நடக்க இருப்பதை அறிந்த கைகேயியின் தோழி மந்தரை என்பாள் அவ்விழாநடைபெறாதவாறு செய்த சூழ்ச்சியைச் சொல்லும் படலம் என்பது பொருள். மந்தரை - கைகேயியின்தோழி. கேகய நாட்டிலிருந்து கைகேயியுடன் வந்தவள். கூனல் ஆக இருந்த காரணத்தால் 'கூனி' எனவும் வழங்கப்பெறுபவள். மந்தரா - மனத்தைக் கலக்குபவள். வடமொழிச் சொல் மந்தரை என வந்தது- கைகேயியின் மனத்தைக் கலக்குபவள் என்கின்ற காரணத்தால் வந்த பெயர். சூழ்ச்சி - சூழ்தல், ஆராய்தல், ஆலோசனை என்னும் பொருளில் வரும். ''சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்'' (குறள் - 671) இங்கே சூழ்ச்சி - தீய ஆலோசனை என்க. இனி வஞ்சனை, சதி, சூது எனவும் அதன் தன்மைபற்றிகூறுவதும் உண்டு.*

*இராமன் முடிசூட இருக்கும் செய்தியைக் கோசலையிடம் மங்கையர் அறிவித்தலும், கோசலைசுமித்திரையுடன் மகிழ்ந்து திருமால் கோயில் சென்று வழிபட்டுக் கோதானம் புரிதலும், தயரதன் முடிசூட்டு விழாவிற்குரிய நல்நாள் நாளையே என்பது அறிந்து, வசிட்டனை வரவழைத்து இராமனுக்கு அறிவுரை வழங்கும்படி கூறுதலும், வசிட்டன் இராமன் மனை புகுந்து அவனுக்கு அறிவுரை கூறுதலும், இராமன்வசிட்டனுடன் திருமால் கோயிலை அடைதலும், இராமனுக்குத் தீர்த்த நீராட்டிச் சடங்குகள் செய்யப்பெறுதலும், நகரமாந்தர் மகிழ்ச்சியும், நகர் அழகு செய்தலும், அது கண்ட மந்தரையின் சீற்றமும், இராமன்மேல்கொண்ட கோபத்தோடு கைகேயியின் அரண்மனை அடைந்து உறங்கும் கைகேயியை அவள் எழுப்புதலும், கைகேயியிடம்இராம பட்டாபிஷேகச் செய்தியை மந்தரை கூறுதலும், அதுகேட்டு அவள் மகிழ்ந்து மாலை அளித்தலும், அளித்த பொன்மாலையை அறத்து வீசி மந்தரை பல மாற்றத்தால் கைகேயியை மனமாற்றம் செய்தலும், மனம் மாறிய கைகேயி மந்தரையைப் பாராட்டி ஆலோசனை கேட்டலும், உபாயம் கூறுதலும், உரைத்த மந்தரையைப்பாராட்டி மகிழ்ந்து பெரும்பரிசுகள் அளித்துக் கைகேயி அவ்வாறே செய்வேன் என உறுதியளித்தலும்ஆகிய செய்திகள் இப்பதியில் கூறப்பெறுகின்றன.*

*கோசலையிடம் மங்கையர் நால்வர் மகிழ்ச்சியோடு செய்தி சொல்லப் போதல்*

*கலிவிருத்தம்*

***1399. ஆண்டை அந் நிலை ஆக - அறிந்தவர்,***
***பூண்ட காதலர், பூட்டு அவிழ் கொங்கையர்,***
***நீண்ட கூந்தலர், நீள் கலை தாங்கலர்,***
***ஈண்ட ஓடினர், இட்டு இடை இற்றிலர்.***

***ஆண்டை** - அரசவையில்; **அந்நிலை ஆக** - (தயரதன் மன்னர் கருத்தை அறிந்துமகிழ்ச்சி அடைந்து இராமன் முடிபுனை நாள் குறித்தற்காகச் சோதிடரை அழைத்துக்கொண்டு மண்டபத்தில்புகுதலாகிய) அந்த நிலை நடந்துகொண்டிருக்க, (மங்கையர் நால்வர்); **அறிந்தவர்** - (இராமன்முடிபுனை ) செய்தி அறிந்து; **பூண்ட காதலர்** - (இராமன்மேற்) கொண்ட அன்போடு, (மகிழ்ச்சிப்பெருக்கால் பருத்து); **பூட்டு அவிழ் கொங்கையர்** - வார்க்கச்சின் பூட்டு அவிழ்ந்தமார்பகங்களோடும்; **நீண்ட கூந்தலர்** - அவிழ்ந்து நிலைகுலைந்து நீண்டு வீழ்ந்த கூந்தலோடும்; நீள்கலை தாங்கலர் -*

*அவிழ்கின்ற ஆடையைத் தாங்கிப் பிடிக்கலாம்;* ***இட்டு இடை இற்றிலர்-*** *நுண்ணிய இடை ஒடிந்து விழப் பெறாது;* ***ஈண்ட*** *- விரைந்து (செய்தி சொல்ல);* ***ஓடினர்*** *- ஓடினார்கள்.*

*தயரதன் மன்னர்களோடு கலந்து பேசி முடிபுனை நாள் குறிக்கச் செல்கிறான்; அப்போது அச்செய்திஅறிந்த மங்கையர் நால்வர் கோசலைபால் செய்திஅறிவிக்க விரைந்து ஓடுகிறார்கள். 'மங்கையர்நால்வர்' என்பது அடுத்த பாடலில் வருகிறது. இங்குக் கொண்டு வந்து உரைக்கப்பெற்றது. இவர்கள்கோசலையின் தோழியர் ஆதல் வேண்டும். மகிழ்ச்சிச் செய்தி ஆதலின் அது கேட்டு இவர்கள் உடல்பூரிக்கிறது; உடல் பருத்தலின் கொங்கை விம்முகிறது. அதனால் வார்க்கச்சு பூட்டறுதலும், மேகலைநிற்காது அவிழ்ந்து வீழ்தலும் நிகழ்கின்றன. நுண்ணிய இடையினராய் இவர்கள் விரைந்து ஓடும்போது இடை ஒடிந்து விழாமல் இருக்கிறது என்று நயமாகக் கவிஇயல்பால் குறிப்பிட்டார். கொங்கைவிம்மிப் புடைத்தலானும், விரைந்து இவர்கள் ஓடுதலானும் நுண்ணிய இடை இற்றுப் போகாதது வியப்புஎன்று குறித்தார், 'பூண்ட காதல் அறிந்தவர்' என மாற்றிக் கூட்டி, இராமன்பால் அன்பு பூண்டஅறிந்த மங்கையர் நால்வர் எனப் பொருள் உரைத்து மகிழ்ச்சியால் விம்மலின் உடலில் நிற்காது நெகிழ்கிறதாதலின் 'தாங்கலர்' என்று உரைத்தார் என்பதும் உண்டு; ஏற்குமேல் கொள்க.* ***1***

## *1400. ஆடுகின்றனர்; பண் அடைவு இன்றியே*
## *பாடுகின்றனர்; பார்த்தவர்க்கே கரம்*
## *சூடுகின்றனர்; சொல்லுவது ஒர்கிலர்;*
## *மாடு சென்றனர்; - மங்கையர் நால்வரே.*

***மங்கையர் நால்வர்*** *- நான்கு மகளிர் (இராமன் முடிபுனை செய்தியை அறிந்த மகிழ்ச்சியராய்அதனால்);* ***ஆடுகின்றனர்*** *- ஆடிக் கொண்டு;* ***பண் அடைவு இன்றியே பாடுகின்றனர்*** *-இசை முறைக்குச் சிறிதும் ஒழுங்கு இல்லாமல் பாடிக்கொண்டு;* ***பார்த்தவர்க்குக் கரம் சூடுகின்றனர்*** *- தம்மைப் பார்த்தவர்களையெல்லாம் கைகளைத் தலைமேல் சூடி வணங்கிக்கொண்டு;* ***சொல்வது ஓர்கிலர்*** *- என்ன சொல்வது என்று சிந்தியாதவர்களாகி;* ***மாடு சென்றனர்*** *- கோசலை பக்கல் சென்று சேர்ந்தார்கள்.*

*மேற்பாட்டின் தொடர்ச்சி இதுவாதலின் மங்கையர் நால்வர் ஓடினர் என உரைத்தார். ஆடி, பாடி, பார்த்தவர்க்குக் கரம் சூடி, சொல்லுவது ஓராது, கோசலை பக்கலில் சென்றனர்என முடித்துக் காட்டுக. மகிழ்ச்சி மிகுதி உடையவர்கள் எதிரிற் கண்டவர்களை எல்லாரையும்கும்பிடுதலும், ஆடிப் பாடுதலும் சொல்லுவது அறியாதிருத்தலும் இயல்பு. "வேதியர் தமைத்தொழும்;வேந்தரைத் தொழும்; தாதியர் தமைத்தொழும்; தன்னைத் தான் தொழும்; ஏதும் ஒன்று உணர்குறாதுஇருக்கும்; நிற்குமால்: - காதல் என்றதுவும் ஓர் கள்ளின் தோன்றிற்றே" எனவும், "ஆடும்பாடுமால்", எனவும் (கம்ப. 10202. 10201) பரதனது மகிழ்ப்பெருக்கைக் கம்பர் பின்னர்க் காட்டியுள்ளமை கண்டும் அறிக. 'ஏ' இரண்டும் அசைகள்.* ***2***

*மகிழ்ந்த மங்கையரைக் கோசலை வினாவ, அவர் விடையிறுத்தல்*

## *1401. கண்ட மாதரைக் காதலின் நோக்கினாள்,*
## *கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை;*

**'உண்டு பேர் உவகைப் பொருள்; அன்னது,**
**தொண்டை வாயினிர்! சொல்லுமின் ஈண்டு!' என்றாள்.**

***கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை*** - மழை மேகம் போன்ற திருமேனி உடைய இராமனைப்பெற்ற கோசலை; ***கண்ட மாதரை*** - (ஆடிப்பாடிக் கரம்சூடிச் சொல்லுவது ஒராது வந்து) தன்னைக்கண்ட அந்நான்கு பெண்களை; ***காதலின்*** - அன்பினால்; ***நோக்கினாள்*** - பார்த்து; ***'தொண்டை வாயினிர்!*** - ஆதொண்டைக் கனிபோன்ற சிவந்த வாயை உடைய பெண்களே! (உங்களைக்காணுங்கால்); ***பேர் உவகைப் பொருள்*** - பெரிய மகிழ்ச்சிச் செய்தி; ***உண்டு*** - இருக்கிறது (என்று தெரிகிறது); ***அன்னது*** - அப்படிப்பட்ட மகிழ்ச்சிச் செய்தியை; ***ஈண்டுச் சொல்லுமின்*** - இவ்விடத்தில் சொல்லுங்கள்;' ***என்றாள்*** - என்று கேட்டாள்.

*கோசலை - கோசல தேசத்தரசன் மகள். கோசலம் - இங்குத் தென் கோசலம். வந்த மங்கையர்கருதிய செய்தியை அவர்கள் கூறாமலே குறிப்பால் அறிந்தாள், அதனால் 'உண்டு பேர் உவகைப்பொருள்' என்றாள் எனலாம். தன் தோழியர் ஆதலின் அன்போடு நோக்கினாள். இனி 'இராமன் தாய்'உலகின் தாய் ஆதலின் அனைவரையும் அன்போடு நோக்கல் அவள் இயல்பு எனினும் அமையும்.* 3

*1402.* **'மன் நெடுங் கழல் வந்து வணங்கிட,**
**பல் நெடும் பகல் பார் அளிப்பாய்!' என,**
**நின் நெடும் புதல்வன்தனை, நேமியான்,**
**தொல் நெடும் முடி சூட்டுகின்றான்' என்றார்.**

***நேமியான்*** - சக்கரவர்தியாகிய தயரதன்; ***நின் நெடும் புதல் வன்தனை*** - உன் பெருமைக்குரிய மகனாகிய இராமனை; ***மன் நெடுங் கழல் வந்து வணங்கிட*** - எல்லாஅரசர்களும் உன் பெரிய வீரக்கழல் அணிந்த அடிகளில் வீழ்ந்து வணங்க; ***பல் நெடும் பகல்*** - பல நீண்ட நாள்கள்; ***பார் அளிப்பாய்*** - இந்நிலவுலகத்தைக் காப்பாயாக; ***என*** - என்று கூறி; ***தொல் நெடும்முடி*** - பழமையான நீண்ட திருமுடியை; ***சூட்டுகின்றான்*** - அணிவிக்கின்றான்; ***என்றார்*** - என்று சொன்னார்.

*நின் நெடும் புதல்வன் நின் மூத்த புதல்வன் என்றும் ஆம். நால்வரையும் தன் மக்களாகக்கருதி அன்பு செய்பவள் கோசலை ஆதலின், இராமனைக் குறிக்க 'மூத்தபுதல்வன்' என்னும்பொருளில், 'நெடும்புதல்வன்' என்றாராம். தொல்முடி - பாரம்பரியமாக வந்து கொண்டிருக்கின்றமுடி. 'மன் நெடுங்கழல் வந்து வணங்கிட' தயரதன் பொருந்திய தனது நெடிய வீரக்கழல் அணிந்த அடியில்இராமன் வந்து வணங்கிட, அவனுக்கு முடிசூட்டுகின்றான் எனக் கூட்டிப் பொருள் உரைத்தலும் ஒன்று.* 4

கோசலையின் மன நிலை

*1403.* **'சிறக்கும், செல்வம் மகற்கு' என, சிந்தையில்**
**பிறக்கும் பேர் உவகைக் கடல் பெட்பு அற,**
**வறக்கும் மா வடவைக் கனல் ஆனதால் -**
**துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கமே.**

*(அது கேட்ட கோசலைக்கு)* ***'மகற்குச் செல்வம் சிறக்கும்' என*** - *தன் மகனாகிய இராமனுக்குஅரசச் செல்வம் சிறக்க இருக்கிறது என்று;* ***சிந்தையில்*** - *மனத்தில்;* ***பிறக்கும்பேர் உவகைக் கடல்*** - *தோன்றிய பெரிய மகிழ்ச்சிக் கடல்;* ***பெட்பு அற-*** *பெருமையற்றுப் போக;* ***மன்னவன்*** - *தன் நாயகனாகிய தயரதன்;* ***துறக்கும் -*** *துறந்து செல்வான்;* ***என்னும் துணுக்கம் -*** *என்கின்ற அச்சமானது;* ***வறக்கும்*** - *வறண்டுபோகச்செய்யும்;* ***மா*** - *பெரிய;* ***வடவைக்கனல்*** - *வடவைத் தீயை;* ***ஆனது*** - *ஒத்திருக்கிறது.*

*மகன் முடிசூடுவான் என்ற மகிழ்ச்சியை, மன்னன் துறப்பான் என்ற அச்சம் அடக்கிவிட்டது என்பதை இவ்வாறு கூறினார். வடவைத்தீ - வடவை முகத்தோடு கூடிய நெருப்பு; வடவை - பெண் குதிரை. இந்நெருப்பு கடலின் இடையே உள்ளது எனவும், கடல் நீரை ஓரளவுக்கு மிகாது சுவறச் செய்யும் ஆற்றல்உடையது எனவும், ஊழிக்காலத்தில் மேல எழும்பி கடல் நீர் அனைத்தையும் வற்றச் செய்துவிடும்எனவும் புராணிகர் கூறுவர். உவகைக் கடல், வடவைக் கனல் என்பன உருவகம். "உறத்தகும் அரசு இராமற்கென்றுஉவக்கின்ற மனத்தைத் துறத்தி நீ எனும் சொற்சுடும் " (1358.) என்ற சுமந்திரன் வார்த்தையை இங்குஒப்பு நோக்குக. 'ஆல்' ஈற்றசை.* ***5***

கோசலை சுமித்திரையுடன் கோயிலுக்குப் போதல்

***1404. அன்னளாயும், அரும் பெறல் ஆரமும்,***
***நல் நதிக் குவையும், நனி நல்கி, தன்***
***துன்னு காதல் சுமித்திரையோடும் போய்,***
***மின்னும் நேமியன் மேவு இடம் மேவினாள்.***

*(கோசலை)* ***அன்னளாயும்*** - *அத்தன்மையளாயும், (செய்தி சொன்ன மங்கையர்களுக்கு);* ***அரும்பெறல் ஆரமும்*** - *பெறுதற்கரிய முத்து வடமும்;* ***நல்நிதிக் குவையும்*** - *உயர்ந்தசெல்வக் குவியல்களையும்;* ***நனி நல்கி -*** *மிகுதியாகக் கொடுத்து;* ***தன் -*** *தன்னிடத்தில்;* ***துன்னு காதல் -*** *நெருங்கிய அன்பினை உடைய;* ***சுமித்திரையோடும் போய் -*** *சுமித்திரையுடனே சென்று;* ***மின்னும் நேமியன்*** - *ஒளிவிடும் சக்கரப் படையை உடையவனாகிய திருமால்;* ***மேவு இடம்*** - *வீற்றிருந்தருளும் திருக்கோயிலை;* ***மேவினாள் -*** *அடைந்தாள்.*

*'தன் நாயகன் துறப்பான்' என்று தோன்றுகிற அச்சம் அவள் அநுபவிப்பதே யன்றி மற்றவர்களுக்குவெளிக்காட்ட ஒண்ணாது ஆதலின், மகிழ்ச்சியை வெளிக்காட்டி ஆரமும் நிதியும் சிலதியர்க்குநல்கினாள். கோசலையும் சுமித்திரையும் நெருங்கியவர்கள் என்பதைத் 'துன்னு காதல்' என்றஅடைகளால் அறியலாம். புதல்வன் நன்மையை விரும்பித் திருமாலை வழிபடச் சென்றாள். சூரிய குலமன்னன் 'இட்சுவாகு' காலம் தொடங்கித் திருமால் இக் குலமன்னர் குல தெய்வமாக விளங்கினர்ஆதலின் அவரை வழிபடல் வேண்டிச் சுமித்திரையுடனே சென்றாள். இப்பொழுதே கைகேயி இவ்விருவரின்வேறுபட்டுத் தனித்தன்மையுடன் இருத்தல் அறிதற்பாலது. சுமித்திரை - நல்ல பண்பு நலன்களை உடையவள்என்ற பொருள் உடைய பெயர்.* ***6***

***1405. மேவி, மென் மலராள், நிலமாது எனும்***
***தேவிமாரொடும் தேவர்கள் யாவர்க்கும்***

***ஆவியும், அறிவும், முதல் ஆயவன்***
***வாவி மா மலர்ப் பாதம் வணங்கினாள்.***

***மேவி*** *- (திருமால் கோயிலை) அடைந்து;* ***மென்மலராள் -*** *மென்மையான செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள்;* ***நிலமாது -*** *பூதேவி;* ***எனும் -*** *என்கின்ற;* ***தேவிமாரொடும் -*** *இரு தேவியரொடும்;* ***தேவர்கள் யாவர்க்கும் -*** *எல்லாத் தேவர்களுக்கும்;* ***ஆவியும் -*** *உயிரும்;* ***அறிவும்*** *- ஞானமும்;* ***முதலும்*** *- ஆதியும்;* ***ஆயவன்*** *- ஆகிய திருமாலினது;* ***வாவி மாமலர்*** *- பொய்கையில் பூத்த பெருமை பெற்ற தாமரைமலர் போன்ற;* ***பாதம் -*** *திருவடிகளை;* ***வணங்கினாள் -*** *வழிபட்டாள். அன்றலர்ந்த செந்தாமரை மலர்போல உள்ள திருவடி என்பார் 'வாவி மா மலர்' என்றார். மற்றைத் தேவர்களுக்கு உயிராக இருக்கிறான் என்பது. உயிர்க்கு உயிராய் நின்று உணர்த்துபவன்முதல்வனாகிய இறைவனே என்பதாம். அறிவாய் நின்று உணர்த்துதலின் 'அறிவும்' ஆயவன் என்றார். 'ஆவியும் அறிவும் முதலும் ஆயவன்' என்னாது, 'முதலாயவன்' என்றபடியால், ஆவி, அறிவு முதலியவைகளாகஇருக்கின்றவன் என்று பொருள் கூறி, ஆவி, அறிவு முதலியவைகளாக இருக்கின்றவன் என்று பொருள் கூறி, ஆவி, அறிவு ஆகிய இரண்டும் ஆக உள்ளபடியால் அவனே முதலும் ஆவான் என்பது உணரப்படும்.*
*7*

*கோசலை திருமாலை வணங்குதலும், கோதானம் புரிதலும்*

***1406. 'என்வயின் தரும் மைந்தற்கு, இனி, அருள்***
***உன்வயத்தது' என்றாள் - உலகு யாவையும்***
***மன்வயிற்றின் அடக்கிய மாயனைத்***
***தன் வயிற்றின் அடக்கும் தவத்தினாள்.***

***உலகு யாவையும்*** *- எல்லா உலகங்களையும்;* ***மன் வயிற்றின் -*** *பெருமை பெற்றதன் திருவயிற்றின்கண்ணே;* ***அடக்கிய -*** *அடக்கிக் கொண்ட;* ***மாயனை*** *- திருநாராயணனை;* ***தன் வயிற்றில்*** *- தன்னுடைய வயிற்றிலே;* ***அடக்கும்*** *- அடக்கிய;* ***தவத்தினாள்*** *- தவம் பெற்றவனாகிய கோசலை;* ***'என் வயின் தரும் மைந்தற்கு*** *- என்னிட மாகப் பிறந்திடநீ தந்த மைந்தனாகிய இராமனுக்கு;* ***இனி -*** *இப்பொழுது;* ***அருள்*** *- அருளுவது;* ***உன் வயத்தது -*** *உன்னிடத்துள்ளது; (அருள் செய்வாயாக)* ***என்றாள்*** *- என்று பிரார்த்தனைசெய்தாள்.*

*ஆதேயமாகிய திருமால் உலகத்தைத் தன்வயிற்றில் அடக்கியவன். ஆதாரமாகிய கோசலைஅவனையே தன்வயிற்றில் அடக்கியவள் என்றார். ஊழிக்காலத்து அப்பெருமான் உறங்கிக் கிடந்தஆலியைப் போலாயிற்று இவள் வயிறு, அவ்வாலிலையில் தன்னிச்சையாலே உறங்கினான் பெருமாள். ஆனால்,இவள் தவத்தாலே இவள் வயிற்றிலே சிக்குண்டு கிடந்தான் என்பதை உணர்ந்த ''தவத்தினாள்''என்றார்.மாயன் - மாயம். உடையவன். 'கூடாதனவற்றைக் கூட்டுவிப்பது' மாயமாம். இதை 'அகடித கடநா சாமர்த்தியம்'- கூடாததையும் கூட்டுவிக்கும் திறம் என்பர். இனி 'மாயன்' உலக காரணமாகிய 'பிருகிருதி'(மாயை) யாகத் தான் உள்ளவன் எனத் தத்துவப் பொருள் கூறலும் ஒன்று.* ***8***

***1407. என்று இறைஞ்சி, அவ் இந்திரை கேள்வனுக்கு***
***ஒன்றும் நான்மறை ஓதிய பூசனை***
***நன்று இழைத்து, அவண், நல்ல தவர்க்கு எலாம்***
***கன்றுடைப் பசுவின் கடல் நல்கினாள்.***

***என்று*** - *என்று வேண்டி;* ***இறைஞ்சி*** - *வணங்கி;* ***அவ் இந்திரை கேள்வனுக்கு -*** *அந்த இலக்குமி நாயகனாகிய நாராயணனுக்கு;* ***ஒன்றும் நான்மறை ஓதிய பூசனை -*** *பொருந்திய வேதங்களிற்சொல்லப் பட்ட முறைமையில் ஆன வழிபாட்டை;* ***நன்று இழைத்து*** - *நன்றாகச் செய்து;* ***அவண்*** *-அவ்விடத்தில்;* ***நல்ல தவர்க்கு எலாம்*** - *நல்ல தவத்தோர்களுக்கெல்லாம்;* ***கன்றுடைப்பசுவின் கடல்*** - *கன்றோடு கூடிய பசுவின் கூட்டங்களை;* ***நல்கினாள் -*** *தானமாகக் கொடுத்தாள்.*

*ஸ்ரீ நாராயணனை வழிபட்டு, வழிபாட்டின் முடிவில் கோதானம் செய்தாள்.*
***9***

***1408. 'பொருந்து நாள் நாளை, நின் புதல்வற்கு' என்றனர்,***
***திருந்தினார்; அன்ன சொல் கேட்ட செய் கழல்***
***பெருந் திண் மால் யானையான், 'பிழைப்பு இல் செய்***
***தவம்***
***வருந்தினான் வருக' என, வசிட்டன் எய்தினான்.***

***திருந்தினார்*** - *(நூல்களில்) தேறியவர்களாகிய கணித நூல்* ***அறிஞர்கள்; 'நின்புதல்வற்கு*** - *உன் மகனுக்கு, (முடி சூட்டுவதற்கு);* ***பொருந்தும் -*** *பொருத்தமான;* ***நாள்*** - *நல்ல நாள்;* ***நாளை*** - *நாளைக்கேயாகும்;'* ***என்றனர் -*** *என்று சொன்னார்கள்;* ***அன்ன சொல் கேட்ட*** - *அந்த வார்த்தையைக் கேட்ட;* ***செய்கழல்*** - *புனைந்த வீரக்கழலணிந்த;* ***பெருந்திண்மால் யானையான் -*** *பெரிய வலிய மதமயக்கமுடைய யானையையுடையதயரதன்;* ***'பிழைப்பு இல் செய்தவம் -*** *தவறில்லாத தவத்தைச் செய்து;* ***வருந்தினான்*** - *வருத்திய மேனி உடைய வசிட்டன்;* ***வருக என*** - *வருக' என்று அழைக்க;* ***வசிட்டன்*** - *வசிட்ட முனிவன்;* ***எய்தினான்*** - *வந்து சேர்ந்தான்.*

*திருந்தினார் என்றது கற்றறிவில் முற்றத்துறைபோய் அதன் பயனாய் வாழ்க்கையை முறைப்படுத்திக் கொண்டவர்கள். கடுமையான தவம் செய்தவன் என்பது தோன்ற 'செய்தவம் வருந்தினான்' என்று கூறினார்.* ***10***

இராமனுக்கு உறுதி கூறும்படி தயரதன் வசிட்டனை வேண்டுதல்

***1409. 'நல் இயல் மங்கல நாளும் நாளை; அவ்***
***வில் இயல் தோளவற்கு ஈண்டு, 'வேண்டுவ***
***ஒல்லையின் இயற்றி, நல் உறுதி வாய்மையும்***
***சொல்லுதி பெரிது' என, தொழுது சொல்லினான்.***

*(தயரதன் வசிட்டனைப் பார்த்து)* ***'நல் இயல் மங்கல நாளும் நாளை*** - *நல்ல இயல்புகளையுடைய( கோள் நிலை உடைய ) முகூர்த்த நாளும் நாளைக்கேயாகும்; (ஆதலால்)* ***அவ் வில் இயல் தோளவற்கு*** - *அந்த வில்பழகிய தோள் உடையவனாகிய*

*இராமனுக்கு;* ***ஈண்டு -*** *இவ்விடத்தில்;* ***வேண்டுவ-*** *வேண்டியனவாய விரதம் முதலிய சடங்கு களை;* ***ஒல்லையின்*** *- விரைவாக;* ***இயற்றி*** *- செய்து; (அதன்மேல்)* ***நல் உறுதி*** *- நல்ல அரசியல் அறமாகிய;* ***வாய்மையும்*** *- உண்மைகளையும்;* ***பெரிது சொல்லுதி -*** *மிகவும் சொல்வாயாக;* ***என - என்று தொழுது -*** *வணங்கி;* ***சொல்லினான்*** *-சொன்னான்.*

*பட்டாபிஷேகம் செய்வதற்குரிய முகூர்த்த தினமும், தினசுத்தமும், கோளும் நாளும் நன்னிலைநிற்க அமைதலும் முதலியன வேண்டுதலின் அது மிக அரிதாகவே அமைதலின், நாளைக்கே நல்லியல் மங்கலநாள் என்றனர் கணிதநூல் வல்லோர். உடனே செய்ய வேண்டிய முடிசூட்டு விழாவிற்கு முன்னதாகிய சடங்குகளைவிரைவில் செய்ய வேண்டுதலின் 'ஒல்லையின் இயற்றி' என்றான். ஆசிரியனாக இருந்து கற்பித்தான்ஆதலின் அரசியல் உறுதிகளை எடுத்துரைக்க வசிட்டனை வேண்டினான் தயரதன். 11*

*இராமன் தன் திருமனையில் வசிட்டனை வரவேற்றல்*

***1410. முனிவனும், உவகையும் தானும் முந்துவான்,***
***மனுகுல நாயகன் வாயில் முன்னினான்;***
***அனையவன் வரவு கேட்டு, அலங்கல் வீரனும்,***
***இனிது எதிர்கொண்டு, தன் இருக்கை எய்தினான்.***

***முனிவனும்*** *- வசிட்டனும்;* ***உவகையும் தானும் முந்துவான் -*** *தன் மகிழ்ச்சிக்குத்தான் முற்பட்டுச் செல்வானாய்;* ***மனுகுல நாயகன் -*** *வைவஸ்வத மனுவின் வமிசத்தில் தோன்றியஇராமனது;* ***வாயில் -*** *அரண்மனை வாயிலை;* ***முன்னினான் -*** *அடைந்தான்;* ***அனையவன்*** *- அந்த வசிட்டனது;* ***வரவு கேட்டு*** *- வருகையைக் கேள்வியுற்று;* ***அலங்கல் வீரனும்*** *- மாலையணிந்த இராமனும்;* ***இனிது*** *- இனிமையாக;* ***எதிர்கொண்டு*** *- வரவேற்று (அழைத்துக் கொண்டு)தன் இருக்கை - தன் இருப்பிடத்தை;* ***எய்தினான் -*** *அடைந்தான்.*

*மனு குலம் - மக்கள் குலம் என்றுமாம். உவகையும் தானும் என்றது வசிட்டனது மகிழ்ச்சியோ,அவனோ முன்னாற் சென்றனர் என அறிய முடியா வண்ணம் ஆர்வத்துடன் விரைவாகச் சென்றான் என்பதாம். பெரியோரை எதிர் கொண்டு அழைத்துச் சென்று இருக்கையில் அமர்த்தித் தாம் அமர்தல் என்பதுஆன்றோர் ஆசாரம். முந்துவான் - முந்தி - முற்றெச்சம், அலங்கல் - அசைதல் - அத்தொழிலையுடையமாலைக்கு ஆகுபெயர். 12*

*வசிட்டன் இராமனிடம் 'உனக்கு நாளை முடிசூட்டு விழா' எனல்*

***1411. ஒல்கல் இல் தவத்து உத்தமன், ஓது நூல்***
***மல்கு கேள்விய வள்ளலை நோக்கினான்;***
***'புல்கு காதல் புரவலன், போர் வலாய்!***
***நல்கும் நானிலம் நாளை நினக்கு' என்றான்.***

***ஒல்கல் இல்தவத்து -*** *தளர்ச்சி இல்லாத தவத்திற் சிறந்த;* ***உத்தமன்*** *-புண்ணியனாகிய வசிட்டன்;* ***ஓதும் நூல்*** *- கற்றற்குரிய நூல்களையும்;* ***மல்குகேள்விய*** *- நிரம்பிய*

*கேள்வியறிவினையும் உடைய;* ***வள்ளலை -*** *இராமனை;* ***நோக்கினான்*** *- பார்த்து;* ***போர்வலாய்!*** *- போரில் வல்லவனே!;* ***புல்கு காதல் புரவலன் -*** *(உன்பால்) நெருங்கிய பிரியத்தை உடைய அரசன் தயரதன்;* ***நினக்கு*** *- உனக்கு;* ***நானிலம்*** *- அரசாட்சியை;* ***நாளை*** *- நாளைக்கு;* ***நல்கும்*** *- தருவான்;* ***என்றான்*** *- என்று சொன்னான்.*

*ஒல்குதல் - வளைதல்; இங்கே தவத்துக்கு வளைதல் ஆவது தளர்ச்சியாதலின் தளர்ச்சியில்லாததவம் என்று உரை ஆயிற்று. கற்றறிவாகிய நூற் கல்வியைக் கேள்வி பின்னும் அகலப்படுத்தலான்கேள்வியைப் பின் வைத்தார். கேள்வியாவது - கேட்கப்படும் நூல்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்.கற்றவழி அதனின் ஆய அறிவை வலியுத்தலானும், கல்லாத வழியும் அதனை உண்டாக்குதலானும் இது கல்வியின்பின்வைக்கப்பட்டது என்ற பரிமேலழகர் உரையை இங்குக் கருதுக. (குறள். 42ஆம் அதிகாரம் முகவுரை). நானிலம் - நால் நிலம் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என உலகம் நான்காகப்பகுக்கப்படுதலின் உலகத்தைக் குறிப்பதாயிற்று. பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அது ஈண்டு உலகத்தை ஆளும் அரசாட்சியுரிமையைக் குறித்தது. ஆகுபெயர். கேள்விய - கேள்விகளை உடைய - குறிப்புப் பெயரெச்சம்.* ***13***

*வசிட்டன் இராமனுக்குக் கூறிய அறவுரை*

***1412. என்று, பின்னும் இராமனை நோக்கி, 'நான்***
***ஒன்று கூறுவது உண்டு, உறுதிப்பொருள்;***
***நன்று கேட்டு, கடைப்பிடி நன்கு' என,***
***துன்று தாரவற் சொல்லுதல் மேயினான்;***

***என்று*** *- என்று சொல்லி;* ***பின்னும் -*** *மேலும்;* ***இராமனை நோக்கி -*** *இராமனைப் பார்த்து;* ***'நான் கூறுவது உறுதிப்பொருள் ஒன்று உண்டு*** *- நான் (உனக்குச்)சொல்ல வேண்டுவதாய் நன்மைப் பொருள் ஒன்று உள்ளது;* ***நன்று கேட்டு*** *- அதைக் கவனித்துக்கேட்டு;* ***நன்கு கடைப்பிடி -*** *அழுத்தமாகப் பின்பற்றுவாயாக;'* ***எனா*** *- என்று;* ***துன்று தாரவன்(ற்) -*** *நெருங்கிய மாலை அணிந்த இராமனுக்கு;* ***சொல்லுதல் மேவினான் -*** *சொல்லத் தொடங்கினான்;*

*உறுதிப்பொருள் - நன்மைதரும் செய்தி - அறவுரை என்றாகும். 'ஒன்று' என்று கூறுவது தொடங்குங்காற்கூறும் வழக்குப்பற்றி. பின்னர்ப் பலவும் கூறினும் அவையெல்லாம் 'உறுதிப்பொருள்' என்ற ஒன்றில் அடங்குதலின் அதுபற்றி ஒன்றும் ஆகும் கடைப்பிடி உறுதியாகப் பற்றுதல் ஆகும். இறுதிவரை விடாதுஒழுகுதல் கடைப்பிடியாம். 'துன்றுதாரவன்' எனச் சந்தி பிரியாதது அங்ஙனம் பிரிப்பின் எழுவாய்த்தொடராய்ப் பொருள்தந்து மயக்கமாம் ஆதலின் இது வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் என்பது உணர்தற்குமாறு மெய்திரிதலாகியபுணர்ச்சிபெற்ற நிலையில் 'தாரவற்' எனப் பிரித்துக்காட்டியமை போற்றி உணர்க.* ***14*** ***1413.***

***'கரிய மாலினும், கண்ணுத லானினும்,***
***உரிய தாமரை மேல் உரைவானினும்,***
***விரியும் பூதம் ஓர் ஐந்தினும், மெய்யினும்,***
***பெரியர் அந்தணர்; பேணுதி உள்ளத்தால்.***

*'**அந்தணர்** - வேதம் வல்ல வேதியர்; **கரிய மாலினும்** - கருநிற உருவினனாயதிருமாலைக் காட்டிலும்; **கண்ணுதலானினும்** - நெற்றிக் கண்ணுடைய சிவபெருமானைக் காட்டிலும்; **உரிய தாமரைமேல் உறைவானினும் -** தனக்கே உரிய திருவுந்தித் தாமரை மேல் வீற்றிருந்தருளும் பிரமனைக் காட்டிலும்; **விரியும்** - பரந்து விளங்கும்; **ஓர் பூதம் ஐந்தினும்** - ஒப்பற்ற பஞ்ச பூதங்களைக் காட்டிலும்; **மெய்யினும்** - சத்தியத்தைக் காட்டிலும்; **பெரியர்** - மேம்பட்டவர் ஆவர்; (அவர்களை) **உள்ளத்தால்** - மனப்பூர்வமாக; **பேணுதி -** புறந்தருவாயாக.'*

*மும்மூர்த்திகள் - உலகிற்கு நிமித்த காரணர் - பஞ்சபூதம் உலகிற்கு முதற் காரணம். அவற்றின் வேறுபடாதது உலகம். அதனால், பௌதிகம் எனப்பெயர் பெறும். மெய் - உலகிற்கு அடிப்படையாகிய காரணமாயிருந்து உலகு இயங்கத் துணைபுரிவது ஆதலின் துணைக்காரணம் எனவும் கூறலாம்- இவை அனைத்தினும்அந்தணர் உயர்ந்தோர். முத்தேவர் உயர்ந்தவர் என்பது அனைவரும் அறிந்தது; ஆகலின் அவரைவைத்து அந்தணர் உயர்வை எடுத்துக் காட்டினர். 'உரிய தாமரை' பலர்க்கு உரியதாகாது அவனுக்கேஉரிய தாமரை. அது திருவுந்தித் தாமரை, மெய்யினும் பெரியர் எனவே அவர்க்கு மெய் இன்றியமையாததுஎன்பதாம். 'உள்ளத்தால்' - ஆல் 'ஒடு' என்ற உடனிகழ்ச்சிப் பொருளில் வந்துள்ளது. இவ்வுருபு இப்பொருளில் வருவது இலக்கணத்தில் பழைய வழக்கு. பேணுதி - புறந்தருக. அஃதாவது பின்னின்றுகாத்தல்; குழந்தையைத் தாய் காக்குமாறு போலக் காத்தலாம். வேதியர்க்கு இருந்த சமுதாயச் செல்வாக்கினைஉணர்க. இவ்வறவுரை இப்படலத்து முப்பதாம் பாடலில் முடியும்.* ***15***

### *1414.* **அந்தணாளர் முனியவும், ஆங்கு அவர்**
### **சிந்தையால் அருள் செய்யவும், தேவருள்**
### **நொந்து உளாரையும், நொய்து உயர்ந்தாரையும்,**
### **மைந்த! எண்ண, வரம்பும் உண்டாம்கொலோ?**

*'**மைந்த!** - மகனே!; **அந்தணாளர் முனியவும்** - வேதியர்கள் வெகுளவும்; **அவர்** - அவ்வேதியர்; **சிந்தையால்** - மனத்தோடு பொருந்தி; **அருள் செய்யவும்** - கருணை புரியவும்; **தேவருள்** - தேவர்களுள்; **நொந்து உளாரையும்** - வருத்தம்அடைந்தவர்களையும்; **நொய்து உயர்ந்தாரையும்** - எளிதாக மேம்பட்டவர்களையும்; **எண்ண** - கணக்கிட; **வரம்பும் உண்டோ** - அளவும் இருக்கின்றதோ?' (இல்லை என்றபடி) தேவர்களில் அந்தணர் சீற்றத்தால் நொந்தோர் பலர்; அந்தணர் கருணையால் மேம்பட்டோர் பலர். எனவே தேவரினும் பெரியர் அந்தணர். 'நிறைமொழி மாந்தர் பெருமை' என்னும் குறள்(குறள்.28.) உரையில்; 'நிறைமொழி - அருளிக்கூறினும், வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தே விடும் மொழி' என்று பரிமேலழகர் எழுதிய உரையை இங்குக் கருதுக. நொந்துளார். அகத்தியர்சபித்தலால் இந்திர பதவி பெற்ற நகுடன் பாம்பாயினமை காண்க. மேம்பட்டார் - கௌசிக அரசன்,பிரம முனிவனாகி விசுவாமித்திரனாய்ப் புகழ்பெற்றமை வசிட்டன் அருளால் ஆயினமை காண்க. ஆங்கு, ஆம், கொல் என்பன அசைகள்.* ***16***

### *1415.* **அனையர் ஆதலின், ஐய! இவ் வெய்ய தீ -**
### **வினையின் நீங்கிய மேலவர் தாள் இணை**

***புனையும் சென்னியையாய்ப் புகழ்ந்து ஏத்துதி;***
***இனிய கூறி நின்று ஏயின செய்தியால்.***

*'**ஐய!** - இராமனே; **அனையர் ஆதலின் -** (அந்தணர்) அத்தன்மையர் ஆகையால்; **வெய்ய தீவினையின்நீங்கிய -** கொடிய தீவினையிலிருந்து விலகிய; **இம் மேலவர்** - இந்த அந்தணரின்; **தாள் இணை -** திருவடி இணைகளை; **புனையும் சென்னியையாய் -** முடிமேல் சூடிக்கொண்டு; **புகழ்ந்து ஏத்துதி** - புகழ்ந்து துதித்து; **இனிய கூறி -** இன்மொழிகளைக் கூறிஅவர்களை உபசரித்து; **ஏயின** - அவர்கள் ஏவிய பணிகளை; **நின்று** - இருந்து; **செய்தி** - செய்வாயாக.*

*அந்தணரிடம் நடந்துகொள்ளவேண்டிய முறைகளை இங்குக் கூறினார் வசிட்டர் என்க. 'ஆல்'அசை.* ***17***

***1416. 'ஆவதற்கும், அழிவதற்கும், அவர்***
***ஏவ, நிற்கும் விதியும் என்றால், இனி***
***ஆவது எப்பொருள், இம்மையும் அம்மையும்***
***தேவரைப் பரவும் துணை சீர்த்ததே?***

*'**அவர் ஏவ** - அந்தணர் ஆணையிட; **ஆவதற்கும் -** (ஒருவர்) மேம்படுவதற்கும்; **அழிவதற்கும்** - அழிந்துபோவதற்கும்; **விதியும் நிற்கும்** - விதியும் துணையாக நின்றுஉதவும்; **என்றால்-; இனி -; இம்மையும் -** இவ்வுலகத்தும்; **அம்மையும் -** அவ்வுலகத்தும்; **தேவரைப் பரவும்துணை-** பூசுரராகிய அந்தணரைத் துதிக்கின்ற அளவு; **சீர்த்தது -** சிறப்புடையது; **ஆவது** - பொருந்திய; **எப்பொருள்** - எந்தப் பொருள்?' (எதுவும் இல்லை.)*

*தெய்வங்களுக்கும் கட்டுப்படாது தன்வழியில் செயற்படும் விதியும் அந்தணர்க்கு ஏவல் செய்யும் என்பதாம். 'ஏ' ஈற்றசை.* ***18***

***1417. 'உருளும் நேமியும், ஒண் கவர் எஃகமும்,***
***மருள் இல் வாணியும் வல்லவர் மூவர்க்கும்***
***தெருளும் நல் அறமும், மனச் செம்மையும்,***
***அருளும் நீத்தபின் ஆவது உண்டாகுமோ?***

*'**உருளும் -** (வட்டவடிவாய் இருத்தலின்) உருண்டு செல்லும் சக்கரத்தையும்; **ஒண்** - ஒள்ளிய; **கவர் எஃகமும்** - முக்கிளையாய் உள்ள வேலாகிய சூலவேலையும்; **மருள் இல்** - மயக்கமற்ற; **வாணியும்** - சொல் மகளையும்; **வல்லவர்** - உடைமையாகக் கொண்டுவல்லமை பெற்றவராய; **மூவர்க்கும் -** முக்கடவுளர்களுக்கும்; **தெருளும்** - தெளிந்த; **நல் அறமும்-** நல்ல தருமமும்; **மனச் செம்மையும் -** கோடுதல் இல்லாத நேரியமனமும்; **அருளும்** - இரக்கமாய கருணையும்; **நீத்தபின் -** விட்ட பிறகு; **ஆவது-** நன்மை; **உண்டாகுமோ -** உளதாகுமோ?' (ஆகாது என்றபடி).*

*ஆற்றல் படைத்த முத்தேவரும் தம் ஆற்றலால் அன்றி, அறம், நடுவு நிலைமை, அருள் என்னும்நற்பண்புகளைக் கொண்டே அனைத்தையும் சாதிக்க இயலும் என்பதை உணர்ந்து, நீயும் இம்மூன்றையும் பற்றி இரு என்று வசிட்டன் இராமனுக்குக் கூறினன். திருவடி சூட்டு படலத்து வசிட்டன் கூறிய ''சீலமும்*

*தருமமும், சிதைவில் செய்கையாய்! சூலமும், திகிரியும், சொல்லும் தாங்கிய - மூவர்க்கு'' என்பதை (2447) இங்கு ஒப்பு நோக்குக. பிறர் கருவியாற் செய்யும் செயலை, வாய்மொழியைக்கொண்டே செய்தலின் 'வாணியும் வல்லவர்' என்று பிரமனைக் கூறினர். 'வேலன்று வென்றிதருவது மன்னவன், கோல் அதூஉம் கோடாது எனின்' என்னும் குறள் (546.) இதனோடு ஒத்துக்கருதத் தக்கது.* ***19***

## *1418. 'சூது முந்துறச் சொல்லிய மாத் துயர்,*
## *நீதி மைந்த! நினக்கு இலை; ஆயினும்,*
## *ஏதம் என்பன யாவையும் எய்துதற்கு*
## *ஓதும் மூலம் அவை என ஓர்தியே.*

*'**நீதி மைந்த** - நேர்மையை இயல்பாக உடைய மகனே!; **சூது முந்துற -** சூதுமுற்பட; **சொல்லிய** - சொல்லப்பட்ட; **மாத்துயர்** - பெருங்கேட்டினை விளைக்கும்செயல்கள்; **நினக்கு இலை** - உன்னிடத்தில் இல்லை; **ஆயினும் -** ஆனாலும்; **அவை** - அவைகள்; **ஏதம் என்பன யாவையும் -** குற்றம் என்று சொல்லப்பட்ட அனைத்தையும்; எய்துதற்கு - ஒருவன் அடைவதற்கு; **ஓதும் மூலம் -** சொல்லப் பெறும் மூல காரணம்; **எனஓர்தி** - என்று ஆய்ந்து அறிவாயாக.'*

*சூது முந்துறச் சொல்லிய மாத்துயர் ஆவன. இன்னவை என்பதை 'வேட்டம் கடுஞ்சொல், மிகுதண்டம், சூது, பொருளீட்டம், கள் காமம் இவை ஏழு' என்பதனான் அறிக. இவற்றை வடநூலார் 'விதனங்கள்' என்பர். ''கடுஞ் சொல்லன் கண்ணிலன் ஆயின், நெடுஞ்செல்வம், நீடு இன்றி ஆங்கே கெடும்'' என்னும் குறள் உரையில் (566.) பரிமேலழகர் கூறியவாற்றான் அறிக. இனி சூதாடுதல், வேட்டையாடுதல்,பகலிற்றூங்குதல், வம்பளத்தல், பெண்பித்தனாதல், குடித்தல், பாட்டு, கூத்து, இசைப்பிரியனாதல், ஊர் சுற்றல் என்னும் காமத்தினால் உண்டாக பத்துத் துக்கங்கள் என்பாரும் உளர். சொல்லிய -சொல்லப்பட்டவை எனச் செயப்பாட்டுவினை. துயர் விளைக்கும் செயல்களைத் துயர் என்றது ஆகுபெயர், 'ஏ' ஈற்றசை.* ***20***

## *1419. 'யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்,*
## *போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது; தன்*
## *தார் ஒடுங்கல் செல்லாது; அது தந்தபின்,*
## *வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ?*

*'(ஒருவன்) **யாரொடும் -** யார் ஒருவரோடும்; **பகை கொள்ளலன் என்றபின் -** மாறுபாடு கொள்வதிலன் என்றால்; (அவனுக்குப்) **போர் ஒடுங்கும் -** சண்டை இல்லாமற்போகும்; **புகழ் ஒடுங்காது** - புகழ் குன்றாது நிறையும்; **தன்** - அவனுடைய; **தார்** - படை; **ஒடுங்கல் செல்லாது -** கெடாது; **அது தந்தபின் -** அவ்வாறு படைகெடாது வளருமாயின்; **வேரொடும் கெடல்** - (அவனைப் பகைக்கும் பகை) அடியோடு அழிதலை; **வேண்டல்உண்டாகுமோ?** - மட வேண்டிப் பெருதல் உண்டாகுமோ' (வேண்டாம் தானே நடக்கும்.)*

*யாரொடும் பகைகொள்ளாமல் இருந்தால் புகழ் பெருகும்; படை அழியாது வளரும். எனவேஅவனைப் பகைக்கப் பிறர் நினைக்கினும் அது செய்யார்; அதனால்,*

*பகையே இல்லாது ஒழியும். தார்என்பது முன்னணிப் படையைக் குறிக்கும். இங்குப் பொதுவாகப் படை என்னும் கருத்தில் வந்துள்ளது. எல்லாரிடமும் அன்பு செய்தல் ஆக்கம் தரும் என்ற கருத்தினை "பலத்தால் வெல்லப் பட்டபகைவன் சமயம் வாய்த்தபோது கேடு செய்வான்; அன்பால் வெல்லப் பட்ட பகைவன் எப்போதும் கெடுதல் செய்யான்" ஒஎன்னும் புத்த பகவான் மொழியோடு இணைத்துப் பார்க்கலாம். "ஊருடன் பகைக்கின்வேருடன் கெடும்" என்னும் (கொன்றை. 6.) கருத்தையும் இங்குக் கருதுக.* ***21***

## *1420. 'கோளும் ஐம்பொறியும் குறைய, பொருள்*
## *நாளும் கண்டு, நடுக்குறு நோன்மையின்*
## *ஆளும் அவ் அரசே அரசு; அன்னது,*
## *வாளின் மேல் வரு மா தவம், மைந்தனே!*

***'மைந்தனே*** *- மகனே;* ***கோளும் ஐம்பொறியும் -*** *தத்தமக் கேற்ற புலன்களைக்கொள்ளும் தன்மையில் வல்ல ஐந்து பொறிகளும்;* ***குறைய -*** *அடங்கியிருக்க;* ***பொருள்நாளும் கண்டு -*** *அரசுக்கு வரும் வருவாயை நாள்தோரும் ஆராய்ந்து;* ***நடுக்குறு நோன்மையின்*** *- பகைவர் அஞ்சத்தகும் வலிமையோடு கூடி;* ***ஆளும்*** *- ஆட்சிபுரிகின்ற;* ***அவ் அரசே*** *- அந்த அரசாட்சியே;* ***அரசு*** *- அரசாகும்;* ***அன்னது -*** *அத்தகைய அரசாட்சி;* ***வாளின் மேல் வரு மா தவம்*** *- வாளின் கூரிய முனைமேல் நின்றுகொண்டு செய்யும் பெருந்தவம்எனலாகும்.'*

*நாள்தோறும் வருவாய் பெருக்கி, ஐம்புலன்களை அடக்கி, வலிமையும் மன உறுதியும் உடையவராய்அரசாளுவோர் தவம் செய்வர் ஆவர். அரசராவரும் ஒருவகையில் தவம் செய்வோரே ஆவர், நல்லரசர்ஆவர். நல்லரசர் ஆக ஆட்சிபுரியின் என்பது கருத்து. 'ஏ' காரம் விளி.* ***22***

## *1421. 'உமைக்கு நாதற்கும், ஓங்கு புள் ஊர்திக்கும்,*
## *இமைப்பு இல் நாட்டம் ஓர் எட்டு உடையானுக்கும்,*
## *சமைத்த தோல் வலி தாங்கினர் ஆயினும்,*
## *அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே,*

***'உமைக்கு நாதற்கும்*** *- உமாதேவியின் கணவனாகிய சிவபெருமானுக்கும்;* ***ஓங்கு புள்ஊர்திக்கும்*** *- உயர்ந்த கருடனை வாகனமாக உடைய திருமாலுக்கும்;* ***இமைப்பு இல் நாட்டம்*** *- இமையாத கண்கள்;* ***எட்டு உடையானுக்கும்*** *- எட்டு உடைய நான்முகனுக்கும்;* ***சமைத்த -*** *பொருந்திய;* ***தோள்வலி -*** *தோள் ஆற்றலை;* ***தாங்கினர்*** *- பெற்றுடையராக (அரசர்);* ***ஆயினும்*** *- இருந்தாலும்;* ***அமைச்சர் சொல் வழி -*** *மந்திரியரது ஆலோசனைவழியில்;* ***ஆற்றுதல் -*** *அரசாட்சியைச் செய்தல்;* ***ஆற்றல் -*** *ஆண்மையாகும்.'*

*மும்மூர்த்திகளைப் போலத் தோள்வலி பெற்ற அரசரும்அமைச்சர் சொற்கேட்டு ஆட்சி நடத்தல் வேண்டும் என்பதாம். நான்முகன் ஆதலால் எட்டுக் கண்கள்உடையான் ஆயினன். 'ஓர்' அசை. உ (அம்மா) மா. (வேண்டாம்) அம்மா வேண்டாம் என்று சொல்லியபடியால்உமா என்று பெயராயிற்று என்பர். உமா, உமை என வந்தது, அமைச்சர் - அமாத்தியர்; அருகிருந்து ஆவன சொல்வார்.*

*‘உழையிருந்தான்’ எனப் பெயர் உரைப்பர் திருவள்ளுவர், (குறள். 638.) ‘ஏ’காரம் ஈற்றசை.* ***23***

## *1422. ‘என்பு தோல் உடையார்க்கும், இலார்க்கும், தம்*
## *வன் பகைப் புலன் மாசு அற மாய்ப்பது என்?*
## *முன்பு பின்பு இன்றி, மூ உலகத்தினும்,*
## *அன்பின் நல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ?*

***‘என்பு தோல் உடையார்க்கும்*** *- எலும்பும் தோலும் உடையார் ஆகி உள்ள முனிவர்களுக்கும்;* ***இலார்க்கும் -*** *அவை இல்லாது தேவசரீரம் பெற்ற தேவர்களுக்கும்;* ***தம் வன்பகைப் புலன்*** *- தம்முடைய வலிய பகையாகிய புலன்களை;* ***மாறசு அற*** *- குற்றம் இல்லாமல்;* ***மாய்ப்பது என்?*** *- அழிப்பது என்ன பயனைத் தரும்;* ***மூ உலகத்தினும் -*** *மூன்று உலகங்களிலும்;* ***முன்புபின்பு இன்றி -*** *தனக்கு மேம்பட்டதும் பிற்பட்டதும் இல்லாமல் சிறந்து நிற்கிற;* ***அன்பின்*** *- அன்பைவிட;* ***நல்லது ஓர் ஆக்கம்*** *- நல்லதாகிய ஒரு செல்வம்;* ***உண்டாகுமோ-*** *உளதாகுமோ’ (இல்லை என்றபடி.)*

*இந்திரிய வசம் செய்வதைவிட அன்புடையராயிருத்தல் யார்க்கும் பெருஞ் செல்வம் ஆகும் என்பதாம். “உரிவை தைஇய ஊன் கெடு மார்பின், என்பு எழுந்து இயங்கும் யாக்கையர்” என்ற (முருகு 12 9 -130) அடிகளையொட்டி ‘என்பு தோல் உடையார்’ என்ற முனிவரரை அறிக. தேவர்கள்புண்ணிய சரீரம் உடையவர், பூதபௌதிக உடம்பு உடையவர் அல்லர் ஆதலின் ‘இலார்க்கும்’ என்றார். ‘முன்பு, பின்பு இன்றி’ இறந்த காலத்தும், எதிர்காலத்தும் இல்லாமல் நிகழ்காலத்தும் அன்பின்நல்ல ஆக்கம் இல்லை என உரைத்து, முக்காலத்திற்கும் ஒப்ப உயர்ந்த ஆக்கம் அன்பே என்றார்எனலும் ஆம்.* ***24***

## *1423. ‘வையம்ம மன் உயிர் ஆக, அம் மன் உயிர்*
## *உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு,*
## *ஐயம் இன்றி, அறம் கடவாது, அருள்*
## *மெய்யில் நின்றபின், வேள்வியும் வேண்டுமோ?*

***‘வையம்*** *- உலக மக்கள்;* ***மன் உயிர் ஆக -*** *நிலைத்த உயிராக;* ***அம்மன் உயிர்*** *- அந்த நிலைத்த உயிர்களை;* ***உய்ய*** *- வாழும்படி;* ***தாங்கும்*** *-சுமக்கின்ற;* ***உடல் அன்ன மன்னனுக்கு*** *- உடம்பை ஒத்த அரசனுக்கு;* ***ஐயம் இன்றி*** *- மேற்கொண்ட நெறியின் உறுதிபற்றிய சந்தேகம் இல்லாமல்;* ***அறம் கடவாது அருள் மெய்யில் நின்றபின் -*** *அறத்தை விட்டு விலகாது அருளிலும், சத்தியத்திலும் நிலைபெற்று நின்ற பிறகு;* ***வேள்வியும் வேண்டுமோ -*** *யாகங்களும் செய்தல் வேண்டுமோ’ (வேண்டாம் என்றபடி.)*

*அரசர்கள் பெரிய இராயசூயம், வாஜபேயம், அசுவமேதம் முதலிய யாகங்களைச் செய்தல் வேண்டும்என்பார். ஆயினும், அறம், அருள், சத்தியம் என்ற மூன்றிலும் நிலைத்து நின்று அரசாட்சிசெய்யின் அதுவே யாகமாம்; வேறு யாகம் செய்யவேண்டுவது இல்லை என்றாராம். “செயிர் இலாஉலகினில் சென்று நின்று வாழ், உயிர்எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்” 177) என்று தயரதனைப் பற்றி முன்னர்க் கூறியவாறு, மக்களை உயிராகவும் மன்னனை உடலாகவும் கூறுவது*

*கம்பரின்முடியரசில் குடியரசுக் கொள்கையாம். சங்ககாலத்தில் ''நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே, மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம், அதனால், யான் உயிர் என்பது அறிகை, வேன்மிகுதானைவேந்தற்குக் கடனே' என்று மக்களை உடலாகவும், மன்னனை உயிராகவும் கருதிக் கூறும் கொள்கை நிலைபெற்றதைக்காணலாம். (புறநா. 186.) உயிர் இல்லாத வழி உடல் இயங்காமை போல மக்கள் இல்லாதவழி மன்னனுக்குவேலை இல்லை என்பது கம்பர் கருத்து. மக்களுக்காக மன்னவனே அன்றி மன்னனுக்காக மக்கள் அல்லர்என்னும் இக்கருத்தே சாலப் பொருத்தம் உடையது அறம், அருள் சத்தியம் இல்லாதவன் யாகம் செய்வதுவீண் ஆரவாமேயன்றி வேறன்று. 25* ***1424. 'இனிய சொல்லினன்; ஈகையன்; எண்ணினன்;***
***வினையன்; தூயன்; விழுமியன்; வென்றியன்;***
***நினையும் நீதி நெறி கடவான் எனில்,***
***அனைய மன்னற்கு அழிவும் உண்டாம்கொலோ?***

*'(ஓர் அரசன்)* ***இனிய சொல்லினன்*** *- (கேட்டார்க்கு) இனிமை பொருந்தச்சொல்லும் இன்சொல் உடையவன்;* ***ஈகையன்*** *- நல்ல கொடைத்திறம் உள்ளவன்;* ***எண்ணினன்*** *- ஆராய்ச்சி உடையவன்;* ***வினையன்*** *- முயற்சி உடையவன்;* ***தூயன்*** *- தூய்மையானவன்;* ***விழுமியன்*** *- சிறந்தவன்;* ***வென்றியன்*** *- வெற்றி உடையவன்;* ***நினையும் நீதிநெறி கடவாதவன் -*** *ஆராய்ந்து அறியும் நேர்மையில் சிறிதும் அகலாதவன்;* ***எனில்*** *- என்றால்;* ***அனைய மன்னற்கு*** *- அப்படிப்பட்ட அரசனுக்கு;* ***அழிவும் உண்டாம்கொலோ?*** *- கேடும் உண்டாகுமோ?' (உண்டாகாது).*

*''இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற் றான்கண் டனைத் திவ் வுலகு'', ''கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ் செல்வம், நீடின்றி ஆங்கே கெடும்'' என்பனவற்றை(குறள். 387, 566.) இதனுடன் ஒப்பிடுக. ஈகை - வறியராய் வந்து கேட்பவர்களுக்கு இல்லை என்னாது கொடுத்தல். எண் - தான் செய்யும் செயல்களை ஆராய்ந்து செய்தல்; காலமும், இடனும், வலியும்அறிதலும்; கொடுத்தல், இன்சொல் சொல்லுதல், வேறுபடுத்தல், ஒறுத்தல் என்னும் நால்வகைஉபாயமும் தெரிந்து செயலும் இதனுள் அடங்கும். வினை என்பது அரசர்க்குரிய போர்த் தொழிலின்கண்ஊக்கம். மேற்சேறல் அரண்முற்றல், கோடல், பொருதல், வேறல் என்பனவாம். நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரித்தல், கூட்டல் என்பனவும் ஆகும். எனவே இவற்றைஅறிதற்கும், செய்தற்கும் இடைவிடாத மெய்ம்முயற்சி உடையனாதல் வேண்டும் என்க. 26*

***1425. 'சீலம் அல்லன நீக்கி, செம்பொன் துலைத***
***தாலம் அன்ன தனி நிலை தாங்கிய***
***ஞால மன்னற்கு, நல்லவர் நோக்கிய***
***காலம் அல்லது கண்ணும் உண்டாகுமோ?***

***சீலம் அல்லன நீக்கி*** *- நல்லொழுக்கத்திற்குப் படாதவைகளை நீக்கி;* ***செம்பொன்துலைத் தாலம் அன்ன*** *- சிவந்த பொன்னை நிறுத்துகின்ற தராசினது நடுநாவை ஒத்த;* ***தனிநிலை*** *- ஒப்பற்ற நடுவு நிலைமையை;* ***தாங்கிய*** *- உடைய;* ***ஞால மன்னற்கு*** *- உலகை ஆளும்அரசனுக்கு;* ***நல்லவர்*** *- அமைச்சர்கள்;* ***நோக்கிய*** *- ஆராய்ந்துரைத்த;* ***காலம்அல்லது*** *- பொழுது அல்லாமல்;* ***கண்ணும் உண்டாகுமோ?*** *- வேறு கண்ணும் உண்டாகுமோ?' (இல்லை).*

*நடுவு நிலைமை - பகை, நொதுமல், நட்பு என்னும் மூன்று திறத்தார் கண்ணும் அறத்தின் வழுவாதுஒப்ப நிற்கும் நிலைமை. தாலம் - தாலு - தாக்கு. துலையின் நடுமுள்ளை நாக்கு எனல் வழக்கு. நடுவு நிலைமைக்குத் துலாக்கோல் உவமையாதல்"சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல் அமைந்து ஒருபாற், கோடாமை சான்றோர்க் கணி" என்பதிற் (குறல். 118) காண்க. பொன்னெடை என்பது மிகத் துல்லியமாக நிறுக்கப்படுவது; ஆதலின் 'செம்பொன் துலை' என்றார். நல்லவர் - இங்கு அமைச்சர். 'காலமறிதல்' என்னும் திருக்குறள்அதிகாரத்தின்கண் 'காலம்' அரசர்க்கு இன்றியமையாத சிறப்புடையது எனல் காண்க.* ***27***

## *1426. "ஒர்வின் நல் வினை ஊற்றத்தினார் உரை போர் இல் தொல் விதி பெற்று உளது" என்று அரோ, தீர்வு இல் அன்பு செலுத்தலின், செவ்வியோர் ஆர்வம் மன்னவற்கு ஆயுதம் ஆவதே.*

***'ஓர்வின்*** *- ஆய்வினை உடைய;* ***நல்வினை ஊற்றத்தினார் -*** *நல்ல தொழிலின்கண் எப்பொழுதும் முயலும் முயற்சியை உடைய முனிவர்களது;* ***உரை*** *- மொழியை;* **பேர்வுஇல் தொல்விதி** *- மாறு படுதல் இல்லாத பழைய விதி;* **பெற்று உளது** *- அடைந்து (அவ்வுரைவழி) நடக்கின்றது;* **என்று** *- என்று கருதி;* **தீர்வுஇல் அன்பு செலுத்தலின்** *- அவர்களிடத்து நீங்காதஅன்பைச் செலுத்துகின்ற காரணத்தால்;* **செல்வியோர் ஆர்வம் -** *நன்மையுடைய அப்பெரியோர்தம்பால் செலுத்தும் விருப்பம்;* **மன்னவற்கு** *- அரசனுக்கு;* **ஆயுதம் ஆவது** *- படைக்கலம்ஆகும்.'*

*முன்னர் (1416) 'அவர் ஏவ நிற்கும் விதி' என்றதும் காண்க. முனிவர்க்கு ஊழும் கட்டுப்பட்டு நடக்கும். அதனால் அவர்களது பிரியத்தைச் சம்பாதித்துக்கொள்ளுதல் மன்னவற்குப் பெரும்படையாகும். 'அன்பீனும் ஆர்வம் உடைமை அதுவீனும், நண்பு என்னும் நாடாச் சிறப்பு" என்ற குறளைப்(குறள் - 74) பின்னிரண்டு வரிகளுடன் ஒப்பிடுக. 'அரோ' 'ஏ' ஈற்றசை.* ***28***

## *1427. 'தூமகேது புவிக்கு எனத் தோன்றிய வாம மேகலை மங்கையரால் வரும் காமம் இல்லை எனின், கடுங் கேடு எனும் நாமம் இல்லை; நரகமும் இல்லையே.'*

***'புவிக்கு*** *- இந்த உலகில் உள்ளவர்க்குத் (தீமை விளைக்கத் தோன்றும்);* **தூமகேது என** *- வால் நட்சத்திரம் என்று சொல்லும்படி;* **தோன்றிய** *- பிறந்துள்ள,* **வாம மேகலை மங்கையரால்** *- அழகிய மேகலாபரணம் அணிந்த பெண்களால்;* **வரும்** *-உண்டாகின்ற;* **காமம் இல்லை எனின் -** *காம நோய்மட்டும் இல்லையானால்;* **கடும்** *- கொடிய;* **கேடு எனும் நாமம் இல்லை** *- கெடுதி என்னும் சொல்லே இல்லையாகும்;* **நரகமும் இல்லையே** *- நரகத் துன்பமும் இல்லை.' பெருங்கேடு விளைதற்கு உற்பாதம் தூமகேது. அதுபோல மங்கையரும் கேடு விளைப்பர் என்றவாறாம். காமம் கேட்டிற்கும் நரகிற்கும் வாயில் என்றார். 'காமத்தால் வருவன நேரே பகையல்லவாயினும் ஆக்கம் சிதைத்தல், அழிவு தலைத்தருதல் என்னும் தொழில்களாற் பகையோடு ஒத்தலின் பகைப்பாற்படுவனவாம்' என்னும் திருக்குறள் 'பெண்வழிச் சேறல்' அதிகார முகவுரையிற் பரிமேலழகர் உரைத்தனவற்றை இங்குக் கருதுக. இனிப் பின்னர்க் கிட்கிந்தா காண்டம் அரசியற் படலத்து 'இராமன்*

*வசிட்டன்பால் கேட்டறிந்தனவற்றைச் சுக்கிரீவனுக்கு உரைத்தமை' "மங்கையர் பொருட்டால் எய்தும் மாநதாக்கு மரணம் என்றல், சங்கை இன்று உணர்த்தி...அங்கவர் தங்களாலே அல்லலும் பழியும் ஆதல், எங்களின் காண்டி" (4127) என்ற பாடலாற் கண்டு இதனுடன் இணைத்துக் கருதுக. 'ஏ' ஈற்றசை; தேற்றம் எனினும் ஆம்.*
***29***

*வசிட்டன் இராமனுடன் திருமால் கோயிலை அடைந்து சடங்குகள் இயற்றல்*

***1428. ஏனை நீதி இனையன, வையகப்***
***போனதற்கு விளம்பி, புலன் கொளீஇ,***
***ஆனவன்னொடும் ஆயிர மௌலியான்***
***தானம் நண்ணினன், தத்துவம் நண்ணினான்.***

***தத்துவம் நண்ணினான்** - மெய்ப்பொருள் உணர்வில் நெருங்கியவனாகிய வசிட்டன்; **வையகப் போனகற்கு** - உலகத்தை உண்டு வயிற்றகத் தடக்கித் காக்கும் திருமாலின் அம்சமான இராமனுக்கு; **இனையன ஏனை நீதியும்** - இப்படிப்பட்ட ஏனைய நீதிகளையும்; விளம்பி - சொல்லி; **புலன்கொளீஇ** - அறிவு கற்பித்து; **ஆனவன்னொடும்** - அவனுடனே; **ஆயிர மௌலியான்** - ஆயிர மணிமுடிகளை உடைய திருமாலினது; **தானம்** - திருக்கோயிலை; **நண்ணினான்** - சென்றடைந்தான்.*

*ஊழியிறுதியில் உலகம் உண்ட பெருவாயன் ஆதலின் திருமாலை 'வையகப் போனகன்' என்றார்; "உலகு யாவையும் மன் வயிற்றின் அடக்கிய மாயனை" என்று முன்னர்க் (1406) கூறியது காண்க. இதுவரை 15 பாடல்களால் கூறியனவற்றையும், இதுபோன்ற நீதிகளையும் உள்ளடக்கி "இணையன ஏனை நீதி" என்று ஹஅடக்கிக் கூறினார். தத்துவம் என்பது மெய்யணர்வு. அஃதாவது, பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களான் அன்றி உண்மையான் உணர்தல்' என திருக்குறள், மெய் உணர்தல் (அதி. 36) என்னும் அதிகாரத்து முகவுரையில் பரிமேலழகர் உரைத்தவாற்றான் அறிக. அங்ஙனம் உணர்ந்தவன் ஆதலின், வசிட்டன் இராமனையும் பரம்பொருள் என உணர்ந்தவனே, ஆயினும், அவன் கொண்ட வேடத்திற்கு ஏற்ப உபதேசித்தான் என்று உணர்த்தவே ஈண்டுத் "தத்துவம் நண்ணினான்" என்றார். ஆயிரம் மௌலி என்றது அளவிறந்த திருமுடிகள் என்னுங் கருத்தில் கூறியது.* ***30***

*வசிட்டன் இராமனுக்கு உரிய சடங்குகள் இயற்றல்*

***1429. நண்ணி, நாகணை வள்ளலை நான்மறைப்***
***புண்ணியப் புனல்ஆட்டி, புலமையோர்***
***எண்ணும் நல்வினை முற்றுவித்து, எற்றினான்,***
***வெண் நிறத்த தருப்பை விரித்து அரோ.***

***நாகணை வள்ளலை நண்ணி** - அரவணையில் அறிதுயில் அமர்ந்த அண்ணலைச் சென்றடைந்து;(வழிபட்டு அவனக்கு முன் இராமனை) **நான்மறை -** நால் வேத முறைப்படி அமைந்த; **புண்ணியப்புனல் ஆட்டி-** நன்மையுடைய தீர்த்தங்களால் நீராட்டி; **புலமையோர் எண்ணும்** - அறிவுடையோர் எண்ணுகின்ற; **நல்வினை** - நல்ல சடங்குகளை; **முற்றுவித்து** - முடியச்செய்து; **வெண்நிறத்த** - வெண்மையான; **தருப்பை***

***விரித்து*** - *தருப்பைப் புல்லைப் பரப்பி;* ***ஏற்றினான்*** - *அதன்மேல் எழுந்தருளச் செய்தான்.*

*பட்டம் பெற்று முடிசூடுவார்க்கு முன்னர் நிகழும் சடங்குகளில் திருமால் கோயிலில் நீராட்டுதலும்ஒன்று போலும். முதல்நாள் விரதம் இருக்கச் செய்தலின் தருப்பையைப் பரப்பி அதன்மேல் ஏறச்செய்தான். 'ஆயிர மௌலியான்' தானம் அடைந்து; நாகணை வள்ளலை - இராமனை, புனல் ஆட்டி என நேரே கூறலும்ஒன்று. நண்ணினான். என மேல் முடிய இங்கு நண்ணி எனத் தொடங்கியது அந்தாதித்தொடை. 'அரோ'-ஈற்றசை.* ***31***

*தயரதன் நகரை அழகுசெய்ய ஆணையிடல்*

***1430. ஏற்றிட, ஆண்தகை இனிது இருந்துழி,***
***நூல் தட மார்பனும், நொய்தின் எய்தப்போய்,***
***ஆற்றல் சால் அரசனுக்கு அறிவித்தான்; அவன்,***
***'சாற்றுக, நகர் அணி சமைக்க' என்றனன்.***

***ஏற்றிட*** - *(தர்ப்பாசனத்தில்) இருக்கச்செய்ய;* ***ஆண்தகை*** - *இராமன்;* ***இனிது இருந்துழி*** - *(விரதாதி சடங்குகளைச் செய்து கொண்டு) இனிமையாக இருந்தபொழுது;* ***நூல் தடமார்பனும்*** - *முப்புரி நூலைத் தரித்த அகன்ற மார்பினை உடைய வசிட்டனம்;* ***நொய்தின் எய்தப் போய்*** - *விரைவாக அடையச் சென்று;* ***ஆற்றல்சால் அரசனுக்கு*** - *வலிமை மிகுந்த சக்கரவர்த்திக்கு;* ***அறிவித்தான்*** - *(செய்தியைத் ) தெரிவித்தான்;* ***அவன்*** - *அம்மன்னவன்;* ***'நகர் அணி சமைக்க*** - *நகரத்தை அழகு செய்ய;* ***சாற்றுக*** - *பறையறைவிப்பீராக;* ***என்றனன்*** - *என்று சொன்னான்.*

*இருந்த உழி - இருந்துழி, விகாரம். எய்த - அருகில், வசிட்டன் இராமனுக்கு உரிய சடங்குகள்நிறைவேற்றப்பட்ட செய்தியைத் தெரிவித்தான். அதன் பின்னர் முரசு அறைக என்றான் தயரதன்.* *32*

***1431. ஏவின வள்ளுவர், 'இராமன், நாளையே***
***பூமகள் கொழுநனாய், புனையும் மௌலி; இக்***
***கோ நகர் அணிக!' என, கொட்டும் பேரி அத்***
***தேவரும் களி கொள, திரிந்து சாற்றினார்.***

***ஏவின வள்ளுவர்*** - *(அரசனால்) ஏவப்பட்ட வள்ளுவர்;* ***இராமன் -; நாளையே*** - *நாளைக்கே;* ***பூமகள் கொழுநனாய்*** - *நிலமகள் கணவனாய்;* ***மௌலி புனையும்*** - *மகுடம்சூடுவான்; (ஆதலால்)* ***இக்கோநகர்*** - *இந்தத் தலைமை நகரத்தை;* ***அணிக*** - *அலங்கரிக்க;* ***என*** - *என்று சொல்லி;* ***கொட்டும்*** - *முழுக்குகின்ற;* ***பேரி*** - *முரசத்தை;* ***அத்தேவரும் களிகொள***- *விண்ணுலகத்துத் தேவரும் மகிழ்ச்சிகொள்ள;* ***திரிந்து*** - *நகர் எங்கும் சுற்றி;* ***சாற்றினார்*** - *அடித்து முழக்கினார்கள்.*

*வள்ளுவர் பறையறைந்து முடிசூட்டுவிழாச் செய்தியைத் தெரிவித்தனர். தேவர் களிகொள்ளல்அரக்கர் குலம் அழியச் சமயம் அணுகியது என்பதால் ஆகும். பேரி - பெருமுரசு. கோநகர் -தலைநகர்; அரசு வீற்றிருக்கின்ற நகரம்.*
***33***

*மக்கள் மகிழ்ந்து, நகரை அழகு செய்தல்*

***1432. 'கவி அமை கீர்த்தி அக் காளை நாளையே***
***புவி அமை மணி முடி புனையும்' என்ற சொல்,***
***செவி அமை நுகர்ச்சியது எனினும், தேவர்தம்***
***அவி அமுது ஆனது, அந் நகர் உளார்க்கு எலாம்.***

*__கவி அமை கீர்த்தி அக் காளை__ - கவிதைகளில் புனையப்படும் புகழை உடைய அந்த இராமன்; __நாளையே__ - நாளைக்கே; __புவி அமை -__ அரசு புரிதற்குரிய; __மணிமுடி__ - அழகியமகுடத்தை; __புனையும் -__ தரிப்பான்; __என்ற சொல்__ - என்ற வள்ளுவர் வார்த்தை; __செவி அமை நுகர்ச்சியது எனினும் -__ காதுகளால் அனுபவிக்கப்படும் ஓசை இனிமையளவினதுதான் ஆனாலும்; __அந்நகர் உளோர்க்கு எலாம் -__ அயோத்தி நகரில் உள்ளவர்களுக் கெல்லாம்; __தேவர்தம் -__ தேவர்களது; __அவி அமுது ஆனது -__ அவியுணவையும் அமுதத்தையும் ஒத்திருந்தது.*

*செவி நுகர்ச்சிக்கு எட்டியது நிலவுலகச் சொல்லே; ஆயினும், தேவர்தம் அமுதமெனச் சுவைப்பயன் தந்தது என்பது கருத்து கீர்த்தி என்பது கொடைப்புகழ் ."உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று, ஈவார்மேல் நிற்கும் புகழ்" என்றார் வள்ளுவரும். (குறள். 232) அவி - வேள்வியில் கொடுக்கப்பெறுவது.அமுதம்- பாற்கடலில் இருந்து பெறப்பட்ட சாவா மருந்து. அவியமுது உம்மைத்தொகை. 'நாளையே'.'ஏ' தேற்றம். 34.*

***1433. ஆர்த்தனர்; களித்தனர்; ஆடிப் பாடினர்;***
***வேர்த்தனர்; தடித்தினர்; சிலிர்த்து மெய்ம் மயிர்***
***போர்த்தனர்; மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்;***
***தூர்த்தனர் நீள் நிதி, சொல்லினார்க்கு எலாம்.****

*(நகர மக்கள்) __ஆர்த்தனர்__ - ஆரவாரித்தனர்; __களித்தனர் -__ மகிழ்ந்தனர்; __ஆடிப் பாடினர் -__ ; __வேர்த்தனர் -__ உடல் வியர்க்கப் பெற்றனர்; __தடித்தனர் -__ (மகிழ்ச்சியால்) உடல் பெருத்தனர்; __மெய் -__ உடம்பில்; __மயிர் சிலிர்த்துப்போர்த்தனர் -__ மயிர்க்கூச்செறியப் பெற்று மூடப் பெற்றனர்; __மன்னனை -__ தயரதனை; __புகழ்ந்து__ - துதித்து; வாழ்த்தினர் -; __சொல்லினார்க்கு எலாம் -__ இந் நற்செய்தியைச் சொன்னவர்களுக்கொல்லாம்; __நீள்நிதி__ - பெருஞ்செல்வத்தை; __தூர்த்தனர்-__ நிரப்பினார்கள்.*

*எல்லாம் என்பது இருதிணைப் பொது. மகிழ்ச்சி மிகுதியால் புளகாங்கிதம் அடைதல் என்பதனையே 'மெய்ம்மயிர்ச் சிலிர்த்துப் போர்த்தனர்' என்றார்.*
***35***

***1434. திணி சுடர் இரவியைத் திருத்துமாறுபோல்,***
***பணியிடைப் பள்ளியான் பரந்த மார்பிடை***
***மணியிடை வேகடம் வகுக்குமாறுபோல்,***
***அணி நகர் அணிந்தனர் - அருத்தி மாக்களே.***

***அருத்தி மாக்கள்*** - *அன்புடைய அயோத்தி நகர மக்கள்;* ***திணி சுடர் இரவியைத்திருத்துமாறுபோல்*** - *நெருங்கிய கதிர்களையுடைய சூரியனைச் சீர்திருத்தும் தன்மையைப்போலவும்;* ***பணியிடைப் பள்ளியான்*** - *பாம்பின் இடையே படுத்துறங்கும் திருமாலின்;* ***பரந்தமார்பிடை*** - *அகன்ற மார்பின் நடுவில் அமைந்த;* ***மணியினை*** - *கௌஸ்துப மணியினை;* ***வேகடம் வகுக்குமாறுபோல்*** - *சாணை பிடித்து மாசு போக்குதலைப் போலவும்;* ***அணிநகர்அணிந்தனர்*** - *முன்போ அழகுற உள்ள அயோத்திநகரை மேலும் அலங்கரித்தார்கள்.*

*இயல்பாகவே அழகான அயோத்திநகரை மீண்டும் அழகு செய்தலை இரண்டு உவமைகளால்விளக்கினார். ஒளியுடைய சூரியனை மேலும் திருத்து தலையும். கௌஸ்துப மணியைப் பட்டை தீட்டி ஒளிஊட்டுதலையும் போல என்பதால், அவை இரண்டும் போல அயோத்தியும் இயற்கையாகவே அழகுடையது என்றாயிற்று, வேகடம் - சாணைபிடித்தல். அருத்தி - அன்பு. 'ஏ' ஈற்றசை.* ***36***

***1435.*** **வெள்ளிய, கரியன, செய்ய,**
**வேறு உள,**
**கொள்ளை வான் கொடி நிரைக்**
**குழாங்கள் தோன்றுவ -**
**கள் அவிழ் கோதையான்**
**செல்வம் காணிய,**
**புள்எலாம் திருநகர்**
**புகுந்த போன்றவே.**

***வெள்ளிய*** - *வெண்மையானவை;* ***கரியன*** - *கருமையானவை;* ***செய்ய*** - *செம்மையானவை;* ***வேறு உள*** - *வேறு பல நிறமானவை ஆக;* ***கொள்ளை***- *மிகுதியான;* ***வான்*** - *பெரிய;* ***கொடி நிரைக் குழாங்கள்*** - *கொடி வரிசைக் கூட்டங்கள்;* ***தோன்றுவ*** - *நகரில் தோன்றுகின்றன(அவை);* ***கள் அவிழ் கோதையான்***- *மதுவிரியும் மாலையணிந்த இராமனது;* ***செல்வம்*** - *முடிசூட்டு விழாச் செல்வத்தை;* ***காணிய*** - *காண விரும்பி;* ***புள் எலாம்*** - *பறவைகள் எல்லாம்;* ***திருநகர்*** - *அயோத்தியில்;* ***புகுந்த போன்ற*** - *நுழைந்தவை போன்றுள்ளன,*

*பலவகை நிறமுடைய கொடிகள் கட்டப்பெற்றதைப் பறவைகள் நகரிற் புகுந்தனபோல் என வருணித்தார். 'தோன்றுவ' படுத்தல் ஓசையாற் பெயராயிற்று. 'ஏ' காரம் ஈற்றசை* ***37***

***1436.*** ***மங்கையர் குறங்கு என வகுத்த, வாழைகள்;-***
***அங்கு - அவர் கழுத்து எனக் கமுகம் ஆர்ந்தன;***
***தங்கு ஒளி முறுவலின் தாமம் நான்றன;***
***கொங்கையை நிகர்த்தன, கனக கும்பமே.***

***அங்கு*** - *அயோத்தியில்;* ***மங்கையர் குறங்கு என*** - *மாதரது தொடை போல;* ***வாழைகள்*** - *வாழை மரங்கள்;* ***வகுத்த*** - *நிறுத்தப் பட்டன;* ***அவர் கழுத்து எனக்கமுகம் ஆர்ந்தன*** - *அம்மகளிர் கழுத்துப் போலக் கமுக மரங்கள் நிறைந்தன;* ***தங்கு ஒளி முறுவலின்*** - *(அவரிடத்தே) வெள்ளொளி நிறைந்த புன்சிரிப்புப் போல;* ***தாமம்***

***நான்றன*** - *முத்துமாலைகள் தொங்கின;* ***கனகக் கும்பம்*** - *பொன்மயமான பூர்ண கும்பங்கள்;* ***கொங்கையை நிகர்த்தன*** - *மகளிரது தனங்களை ஒத்து விளங்கின.*

*வாழை, கமுகு நிறைத்து, முத்துமாலைகள் தொங்கவிட்டு, பூர்ண கும்பங்கள் வைத்து நகரைஅழுகுபடுத்தினர். பெண்களைப் பற்றிய உவமைகளே அனைத்துக்கும் கூறியது நயம். வாழை திரட்சிக்கும், கமுகு வரைக்கும் மென்மைக்கும், தாமம் வெண்மைக்கும் வரிசைக்கும், கும்பம் வடிவமைப்புக்கும், ஒளிக்கும்உவமையாயின, இங்கே மரபுவழி உவமைகள் உவமேயங்களாக வந்தமை காண்க. 'ஏ' காரம் ஈற்றசை.* ***38***

## *1437.* **முதிர் ஒளி உயிர்த்தன, முடுகிக் காலையில்**
**கதிரவன் வேறு ஒரு கவின் கொண்டான் என -**
**மதி தொட நிவந்து உயர் மகர தோரணம்**
**புதியன அலர்ந்தன புதவ ராசியே.**

***புதவ ராசி -*** *கோபுர வாயிற் கதவுகளின் வரிசைத் தொகுதிகள்;* ***காலையில் கதிரவன்*** - *காலைப்பொழுதில் உள்ள இளஞ்சூரியன்;* ***முடுகி -*** *விரைந்து சென்று (நண்பகலில்);* **வேறுஒரு கவின் கொண்டான்** - *வேறுபட்ட ஒர் அழகைக் கொண்டனன்;* ***என*** - *என்றுசொல்லும்படி;* **மதி தொட நிவந்து உயர் மகர தோரணம் -** *சந்திரனைத் தொடும்படி உயர்ந்த மகரமீன் வடிவமாகச் செய்யப்பெற்ற தோரணங்கள்;* ***முதிர்ஒளி உயிர்த்தன-*** *மிக்கசோபையை வீசினவாய்;* ***புதியன*** - *புதியனவாய்;* ***அலர்ந்தன -*** *விளங்கப்பெற்றன.*

*கோபுர வாயிற் கதவுகளில் மகரதோரணங்கள் புதியனவாய்க் கட்டப் பெற்றமையை வருணித்தார். புதவம் - கதவு. புதா என்பது புதவு என ஆகி புதவம் என அம் சாரியை பெற்றது. "குறியதன் கீழ் ஆக்குறுகலும் அதனோடு உகரம் ஏற்றலும்" (நன். 172........) என்பது இலக்கணவிதி செஞ் சூரியனாகியஉதய சூரியன் நண்பகலில் வெள்ளொலி விரித்தல் வெளிப்படை. 'ஏ'காரம் ஈற்றசை.* ***39***

## *1438.* **துனி அறு செம்மணித் தூணம் நீல் நிறம்**
**வனிதை - ஓர் - கூறினன் வடிவு காட்டின;**
**புனை துகில் உறைதொறும் பொலிந்து தோன்றின.**
**பனி பொதி கதிர் எனப் பவளத் தூண்களே.**

***புனை துகில் உறை தொறும் பொலிந்து தோன்றின*** - *அழகிய (வெண்மையான) துணி உறைகளுக்குள்ளே விளங்கித் தோன்றுவனவாகிய;* ***துனி அறு*** - *குற்றம் அற்ற;* **செம்மணித்தூணம் -** *சிவந்த மாணிக்கத்தால் ஆகிய தூண்கள்;* ***நீல் நிற வனிதை*** - *நீல நிறம்உடைய பார்வதியை;* **ஓர் கூறினன்** - *தன்னுடைய இடப்பாகத்தில் உடையவன் ஆகிய சிவபெருமானது;* **வடிவு** - *(திருநீறு பூசிய செம்மை) வடிவத்தை;* ***காட்டின*** - *காண்பித்தன;* **பவளத் தூண்கள்** - *(வெள்ளுறையில் பொதிந்த) பவளத்தால் ஆகிய தூண்கள்;* **பனி பொதிகதிர் என** - *பனியில் மறைந்த காலைச் செஞ்சூரியன் என்னும்படி (பொலிந்து தோன்றின -விளங்கித் தோன்றின.)*

*செம்மணித் தூண்களும் பவளத் தூண்களும் வெண்மையான துணி உறையால் மூடப்பெற்றுள்ள காட்சியைச்சித்திரித்தார். திருநீறு வெண்மையான உறைக்கும், உள்ளே பொதிந்த செம்மேனி செம்மணித் தூணத்துக்கும்உவமையாம். அவ்வாறே பனி வெள்ளுறைக்கும், உட்பொதிந்த சிவந்த சூரியன் பவளத்தூணுக்கும்உவமையாம். 'புனைதுகில் உறைதொறும் பொலிந்து தோன்றின' என்ற மூன்றாம் அடியை முன்னும் பின்னும்கூட்டிப் பொருள் செய்க, இது இடை நிலைத் தீவக அணியோடு கலந்துவந்த உவமையணியாம். துகில் -வெண்மையான ஆடை. 'ஏ' காரம் ஈற்றசை. 40* ***1439.***

**முத்தினின் முழுநிலவு எறிப்ப, மொய்ம் மணிப்**
**பத்தியின் இள வெயில் பரப்ப, நீலத்தின்**
**தொத்துஇனம் இருள் வரத் தூண்ட, சோதிட**
**வித்தகர் விரித்த நாள் ஒத்த, வீதியே,**

***வீதி*** *- (அயோத்தி நகரத்) தெருக்கள்;* ***முத்தினின்*** *- (அலங்கரித்த முத்து மாலைகளில் உள்ள) முத்துக்களால்;* ***முழுநிலவு எறிப்ப*** *- முழுமையான நிலவொளியை எங்கும்விளங்கச் செய்ய;* ***மொய்*** *- நெருங்கிய;* ***மணிப் பத்தியின்*** *- மணிக்கற்கள்வரிசை;* ***இளவெயில் பரப்ப*** *- இளமையான வெயிலைப் பரவச் செய்ய;* ***நீலத்தின் தொத்துஇனம்*** *- (அழகுபடுத்திய) நீலமணிகளின் தொகுதியான கூட்டம்;* ***இருள் வரத் தூண்ட*** *- எங்கும் இருள் உண்டாகச் செய்ய; (இவற்றால்)* ***சோதிட வித்தகர்*** *- சோதிட நூல் அறிஞர்;* ***விரித்த*** *- விளக்கிக் கூறுகின்ற;* ***நாள் ஒத்த*** *- நாளை ஒத்தன.*

*பகல், நிலவு, இருள் ஆகியவற்றோடு கூடிய ஒருநாள் போல, இவ்வீதிகள் மணியால் இளவெயிலும்,முத்தால் நிலவொளியும், நீலமணியால் இருளும் பரப்பின என்று வருணித்தார். 'நீல மாலைத், தஞ்சுடையஇருள் தழைப்பத் தரளம் ஆங்கே தண்மதியின் நிலாக்காட்டப் பவளந் தன்னால் செஞ்சுடர வெயில்விரிக்கும் அழகு' என்ற திருமங்கையாழ்வார் வாக்கு (3.4.4) இக்கற்பனைக்கு மூலம்போலும். 41*

***1440.*** **ஆடல் மான் தேர்க் குழாம், அவனி காணிய,**
**வீடு எனும் உலகின் வீழ் விமானம் போன்றன;**
**ஓடை மாக் கட களிறு, உதய மால் வரை**
**தேட அருங் கதிரொடும் திரிவ போன்றவே.**

***ஆடல் மான்*** *- பல்விதமான செலவுகளினால் நடனம் இடுவது போன்ற குதிரைகள் பூட்டப்பெற்ற;* ***தேர்க் குழாம்*** *- தேர்த் தொகுதிகள்;* ***அவனி காணிய*** *- மண்ணுலகினைக்காணும் பொருட்டு;* ***வீடு எனும் உலகின் வீழ்*** *- சுவர்க்கம் என்கின்ற உலகத்திருந்தும்இறங்கிய;* ***விமானம் போன்றன*** *- விமானத்தை ஒத்தன;* ***ஓடை மாக் கட களிறு*** *- முகபடாம் அணிந்த பெரிய மதம் உடைய யானைகள்;* ***உதய மால் வரை*** *- பெரிய உதயமலை;* ***தேட அருங்கதிரொடும்*** *- ஒப்புச் சொல்லுதற்கரிய சூரியனோடும்;* ***திரிவ போன்ற*** *- நகர வீதிகளில் திரிவனவற்றை ஒத்திருந்தன.*

*வீதிகளில் குதிரை பூட்டிய தேர்களையும், முகபடாம் அணிந்த யானைகளையும் விமானம் ஆகவும்,உதய மலையாகவும் வருணித்தார். ஐங்கதி உடையமையால் ஆடல்மான் என்றார். ஐந்து கதியாவன; மல்ல கதி, மயூர கதி, வியாக்கிர கதி, வானர கதி, இடப கதி என்பன. பல்வேறு வகையான ஓட்டங்களைஇங்கே ஆடல் என்றார். 'ஏ' காரம் ஈற்றசை. 42*

***1441. வளம் கெழு திரு நகர் - வைகும் வைகலும்,***
***பளிங்குடை நெடுஞ் சுவர் படுத்த பந்தியில்***
***கிளர்ந்து எறி சுடர் மணி இருளைக் கீறலால், -***
***வளர்ந்தில, பிறந்தில, செக்கர் வானமே.***

***வளம் கெழு திருநகர்*** *- வளம் பொருந்திய அழகிய அயோத்தி நகரில்;* ***வைகும்*** *- பொருந்திய;* ***பளிங்குடை நெடுஞ்சுவர்*** *- பளிங்குக் கற்களையுடைய பெரிய சுவர்களில்;* ***படுத்த பந்தியில் கிளர்ந்து எறிசுடர்மணி -*** *சேர்த்தமைத்த வரிசையாய் அமைந்துமிக்கு மேலேறிப் பிரகாசிக்கின்ற ஒளிபடைத்த செம்மணிகள்;* ***வைகலும் -*** *நாள்தோறும்;* ***இருளைக் கீறலால் -*** *மாலைப் பொழுதில் மேல் எழும் இருளைப் போக்குதலால்;* ***செக்கர்வானம் -*** *செவ்வானமானது; (அங்கு)* ***பிறந்தில -*** *புதிதாகத் தோன்றவில்லை;* ***வளர்ந்தில-*** *வளரவும் இல்லை.*

*பளிங்குச் சுவரில் பதித்த செம்மணிகள் இருள் கீற ஒளிர்கின்றன. செவ்வானம் போல உள்ளன.மாலையில் தோன்றி மறையும் செவ்வானம் இந்நகரில் எப்பொழுதும் ஒரு தன்மையாக இருந்தது; தோன்றவும் வளரவும் இல்லை என்று படியாம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***43***

***1442. பூ மழை, புனல் மழை, புதுமென் கண்ணத்தின்***
***தூ மழை, தரளத்தின் தோம் இல் வெண் மழை.***
***தாம் இழை நெரிதலின் தகர்ந்த பொன் மழை.***
***மா மழை நிகர்த்தன - மாட வீதியே.***

***மாட வீதி*** *- மாளிகைகளையுடைய தெருக்களில்;* ***பூ மழை*** *- மலர் மழையும்;* ***புனல் மழை -*** *(நீர் தெளித்தலால்) நீர் மழையும்;* ***புதுமென் கண்ணத்தின் தூ மழை -*** *புதிய மென்மையான வாசனைப் பொடியின் தூய்மையான மழையும்;* ***தரளத்தின் தோம் இல் வெண்மழை-*** *முத்துக்கள் சிந்துதலால் குற்றமற்ற வெள்ளிய மழையும்;* ***இழைதாம் நெரிதலின் -*** *பொன்னணிகள் நெருங்கி நெரிகின்ற காரணத்தால்;* ***தகர்ந்த -*** *(ஒன்றுடன் ஒன்று மோதி) உடைந்து பிதிர்ந்து கொட்டிய;* ***பொன் மழை -*** *கனக மழையும் கூடி;* ***மா மழை-*** *பெரியமழை பொழிவதை;* ***நிகர்த்தன-*** *ஒத்தன.*

*நகரில் உள்ளவர் நீர் தெளித்து, மலர்களையும், சுண்ணப் பொடிகளையும் தூவி, முத்துகளைச்சிந்தி வீதியை அழகுபடுத்தினர், அப்போது அவர்தம் நெருக்கத்தால் அணிந்திருந்த பொன்னணிகள்மோதிப் பிதிர்ந்து பொன்மழையும் பொழிவதாயிற்று. இவையெல்லாம் பெருமழை பொழிவது போல் ஆயிற்று என்றார். 'ஏ' காரம் ஈற்றசை. 'தாம்' உரையசை.* ***44***

***1443. காரொடு தொடர் மதக் களிறு சென்றன.***
***வாரொடு தொடர் கழல் மைந்தர் ஆம் என;***
***தாரொடு நடந்தன பிடிகள், தாழ் கலைத்***
***தேரொடு நடக்கும் அத் தெரிவைமாரினே.***

***வாரொடு தொடர் கழல் மைந்தர் ஆம் என*** *- வார்கயிற்றாற் கட்டிய வீரக்கழலை உடைய வீரர் போல;* ***காரொடு தொடர் மதக் களிறு சென்றன -*** *மேகத்தோடு ஒப்புமை*

*பற்றுகின்ற மதநீர் உடைய யானைகள் சென்றன;* ***தாழ்கலைத் தேரொடு*** *- தொங்கக்கூடிய மேகலை யணிந்த தேர் போன்ற அல்குலோடு;* ***நடக்கும்*** *-நடந்து செல்லும்;* ***அத் தெரிவைமாரின்*** *- அந்நாட்டுப்பெண்களைப் போல;* ***பிடிகள்*** *- பெண் யாணைகள்;* ***தாரொடு நடந்தன -*** *தம்மேல்கட்டிய கிண்கிணி மாலையுடன் சென்றன.*

*அழகுபடுத்தப் பெற்ற களிறும் பிடியும் அந்நகரில் நடந்து சென்ற காட்சியை மைந்தரும் மாதரும் போல என்று வருணித்தார்; 'வார்' - தோற்கயிறு; வீரக் கழலைக் கட்டப் பயன்படுவது. தார் - கிண்கிணிச் சதங்கை கோத்த மாலை. 'கலைத்தேர்' அல்குலுக்கு வெளிப்படை. கலை - மேகலை, முதற்குறை, மேகலை யணிந்த தேர் எனவே அல்குலாயிற்று. இனி, இதனையே அந்நகரில் மைந்தர்களிறு போலச் சென்றனர் என்றும், தெரிவைமார் பிடிபோல நடந்தனர் எனவும் கொள்ள வைத்தநயம் அறிந்து மகிழற்பாலது, 'ஏ' காரம் ஈற்றசை. 45*

## *1444.* ஏய்ந்து எழு செல்வமும், அழகும், இன்பமும்,
## தேய்ந்தில; அனையது தெரிந்திலாமையால்,
## ஆய்ந்தனர் பெருகவும் - அமரர், இம்பரில்
## போந்தவர், 'போந்திலம்' என்னும் புந்தியால்.

***ஏய்ந்து எழு செல்வமும் -*** *பொருந்தி மேன்மேலும் வளர்கின்ற செல்வமும்;* ***அழகும் -; இன்பமும் -; தேய்ந்தில*** *- குறைந்திருக்க வில்லை (பொன்னகரிற் போலவே நிறைந்துள்ளன);* ***அனையது -*** *அத்தன்மையை ஒத்தது;* ***தெரிந்திலாமையால் -*** *முன்னர் அறியாதபடியால்;* ***இம்பரில் போந்தவர் அமரர் -*** *(இராமனது முடிசூட்டுவிழாக் காண) அயோத்திக்கு வந்தவராகியதேவர்;* ***'போந்திலம்'*** *- இன்னும் அயோத்திக்கு வந்தோம் இல்லை;* ***என்னும் புந்தியால்*** *- என்கின்ற எண்ணத்தால் ;* ***பெருகவும் ஆய்ந்தனர்*** *- மிகவும் ஆராய்ந்தனர்.*

*அயோத்தி பொன்னகரம் போலச் செல்வம், அழகு, இன்பங்களால் குறை வின்றி இருக்கிறது. அதனால் அயோத்திக்கு வந்த தேவர்கள் 'இன்னும் அயோத்திக்கு வந்தோம் இல்லையே, நம் பொன்னகரத்தில்தானே இருக்கின்றோம்' என்று பெரிதும் ஆலோசிக்கத் தொடங்கினார்கள் என்பதால் அயோத்திக்கும்பொன்னகரத்திற்கும் வேறுபாடில்லை என்றார். 36 ஆம் பாடல் முதல் இதுவரை அயோத்திநகரை அலங்கரித்தவாறுகூறினார். 46*

கூனியின் கோபம்

## *1445.* அந் நகர் அணிவுறும் அமலை, வானவர்
## பொன்னகர் இயல்பு எனப் பொலியும் ஏல்வையில்,
## இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்,
## துன்ன அருங் கொடு மனக் கூனி தோன்றினாள்.

***அந் நகர் -*** *அந்த அயோத்தி நகரத்தை;* ***அணிவுறும் -*** *அழகு படுத்துகின்ற;* ***அமலை -*** *பேராரவாரத்தால்;* ***வானவர்*** *- தேவர்களது;* ***பொன்னகர் இயல்பு என*** *- அமராவதி நகரத்தின் தன்மை எனச் சொல்லும்படி;* ***பொலியும்*** *- விளங்குகின்ற;* ***ஏல்வையின்*** *- நேரத்தில்;* ***இன்னல்செய்*** *- (உலகிற்குத்) துன்பம் செய்கின்ற;* ***இராவணன் இழைத்த***

***தீமைபோல் -*** *இராவணன் செய்த தீமை (அவனை அழிக்க இப்பிறப்பில் உரு எடுத்து வந்தது) போல;* ***துன்ன அருங் கொடு மன*** *- அணுகுதற்கரிய கொடிய மனம் படைத்த;* ***கூனி*** *- கூனிஎன்னும் மந்தரை;* ***தோன்றினாள் -*** *வெளியில் வந்து நகரைப் பார்த்தாள்.*

*கூனி அரச மாளிகை உப்பரிகையின் மீதேறி நகர் அலங்கரிக்கப் படுதற்கும் மக்கள் மகிழ்ச்சியுடன்இருத்தற்கும் காரணம் என்ன என்று தன்னருகே இருந்த இராமனது செவிலித்தாயை வினாவி உணர்ந்து புறப்பட்டாள் என்பது வான்மீகம். கூனி செய்த சூழ்ச்சியால் இராமன் காடு சென்று இராவண வதம்நடைபெற இருத்தலின், 'இராவணன் இழைத்த தீமை போல்' என்று கூனியைக் கூறினார். இராவணன் - அழுகிறவன் என்பது பொருள். கைலாய மலையைத் தூக்கியபோது அடியில் அகப்பட்டுக் கொண்டு கதறினான்.ஆதலின் இறைவன் இராவணன் என்று பெயர் கொடுத்தான் என்பர். இராவண வதநோக்கமாகத் தேவர்கள்அவளை அனுப்பினர். ஆதலின், அத் தேவ ரகசியத்தை உட்கொண்டு 'கூனி தோன்றினாள்' என்பாரும்உளர். ஏல்வை - பொழுது, காலம் எனப் பொருள்படும். 47*

***1446. தோன்றிய கூனியும், துடிக்கும் நெஞ்சினாள்;***
***ஊன்றிய வெகுளியாள்; உளைக்கும் உள்ளத்தாள்;***
***கான்று எரி நயனத்தாள்; கதிக்கும் சொல்லினாள்;***
***மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்.***

***தோன்றிய கூனியும் -*** *அவ்வாறு வெளியில் வந்த கூனியும்; (நகர் அணிசெயப் பெறுவருகண்டு ஆத்திரம் அடைந்து)* ***துடிக்கும் நெஞ்சினாள்-*** *கோபத்தால் துடிக்கின்ற மனமுடையவளாய்;* ***ஊன்றிய வெகுளியாள் -*** *கால்கொண்டு நிலைநின்ற கோபம் உடையவனாய்;* ***உளைக்கும் உள்ளத்தாள்*** *- வேதனைப்படும் மனம் உடையவனாய்;* ***கான்று எரி நயனத்தாள் -*** *நெருப்புக் கக்கி எரிகின்றகண்ணுடையளாய்;* ***கதிக்கும் சொல்லினாள் -*** *படபடப்பாகத் தோன்றும் சொல்லுடையவளாய்;* ***மூன்று உலகினுக்கும் -*** *மூவுலகங்களுக்கும்;* ***ஓர்*** *- ஒப்பற்ற;* ***இடுக்கண்*** *- (தீர்க்க முடியாத) துன்பத்தை;* ***மூட்டுவாள்*** *-செய்யத் தொடங்குகிறவளாய்(ஆயினள்)*

*இராமனது முடிசூட்டுவிழாச் செய்தி அறிந்த கூனி பொறுக்கலாற்றாமல் மனம் வெதும்பிச் சீறியபடியைக் கவி இங்ஙனம் எடுத்துக்காட்டினார். இவை கோபத்தின் மெய்ப்பாடுகள். மேற்பாடலில்'தோன்றினாள்' என முடித்து, இங்குத் 'தோன்றிய' எனத் தொடங்கியது அந்தாதித் தொடை. இச்செய்யுள் தொடர்ந்து சென்றுபின்னர் 1448 ஆம் பாடலில் 'விரைவின் எய்தினாள்' என்பதில் முடியும். 48*

*கூனி கைகேயியின் அரண்மனை அடைந்து அவளை எழுப்புதல்*

***1447. தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயில்மேல்***
***மண்டினாள் - வெகுளியின் மடித்த வாயினாள்,***
***பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ்***
***உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்.***

***பண்டைநாள் -*** *(இராமனது குழந்தைப் பருவமாகிய) முன்னாயில்;* ***இராகவன் -*** *இராமனது;* ***பாணி வில்*** *- கையில் உள்ள வில்லினால்;* ***உமிழ்-*** *வெளிப்படுத்தப்பெற்ற;*

***உண்டை*** - மண்ணுருண்டை; ***உண்டதனை-*** (தன்மேல்) பட்டதனை; ***தன் உள்ளத்து*** -தன் மனத்தின்கண்; ***உள்ளுவாள்*** - நினைத்து; ***வெகுளியின்*** - கோபத்தால்; ***மடித்த*** - கீழ் உதட்டை மடித்துக் கடித்த; ***வாயினாள் -*** வாயை உடையவனாய்; ***தொண்டை வாய்*** - கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயை உடைய; ***கேகயன் தோகை -*** கைகேயியின்; ***கோயில் மேல் -*** மாளிகையிடத்து; ***மண்டினாள்*** - நெருங்கி, (‘எய்தினாள்’எனமேல் முடியும்)

*இராமன் சிறுவனாய் இருந்தபொழுது கையிற் சிறு வில்லும் மண்ணுருண்டை கோத்த அம்பும் கொண்டுகுளத்தருகே விளையாடி வருகையில், இக்கூனி, குடங்கொண்டு நீர்மொண்டு மகளிருடனே கலந்து வரும்போது, தன் அரண்மனைத் தாதிதானே என்ற சொந்தத்தால், மண்ணுருண்டையை வில்லிற்கோத்து இவள்மேல் அடித்தான். இவள் கைநெகிழ்ந்து குடம் வீழ, மற்ற மகளிர் பரிகசிக்க, இவள் கடுங்கோபம் உற்று இராமனைத் துன்புறத்தச் சமயம் நோக்கி இருந்தாள் என்பதோர் கதை, இக்கதை வான்மீகத்தில்இல்லை; கம்பரும் விரிவாகக் கூறவில்லை; ஆயினும் “கூனகம் புகத் தெறித்த கொற்றவில்லி”. “கொண்டை கொண்ட கோதை மீது தேனுலாவு கூனி கூன் உண்டை கொண்டு அரங்க வோட்டி உள் மகிழ்ந்தநாதன்”, “கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்தாய்’ (திவ்யப். 780, 799, 2947) என்னும்ஆழ்வார்கள் அருளிச் செயலால் விரிவாக அறியப்படுகிறது. தொண்டை - கொவ்வைக் கனியைக் குறித்தது.;பொருளாகு பெயர்.* ***49***

***1448. நாற் கடல் படு மணி நளினம் பூத்தது ஓர்***
***பாற்கடல் படு திரைப் பவள வல்லியே-***
***போல், கடைக் கண் அளி பொழிய, பொங்கு அணை-***
***மேல் கிடந்தாள் தனை விரைவின் எய்தினாள்.***

***நாற்கடல் படு மணி*** - நான்கு கடல்களிலும் உண்டாகிய சிறந்த மாணிக்கங்களால் ஆகிய; ***நளினம்*** - தாமரை மலர்கள்; ***பூத்தது -*** பூத்ததாகிய; ***ஓர்*** - ஒப்பற்ற; ***பாற்கடல் படுதிரை*** - பாற்கடலின் அலைமேல் பொருந்திக் கிடந்த; ***பவள வல்லியேபோல்*** - பவளக் கொடிபோல; ***கண் கடை அளி பொழிய -*** கண்ணின் கடை அருளைச்சொரிய; ***பொங்கு அணை மேல் -*** (நுரை போலப்) பொங்குகின்ற (மெத்தென்ற வெள்ளிய) படுக்கையின்மேலே; ***கிடந்தாள்தனை -*** உறங்க்கின்றவளை; ***விரைவின் எய்தினாள் -*** விரைவாகச் சென்றடைந்தாள்.

*மணிகளால் ஆகிய தாமரைகள் பூத்த பவளக்கொடி பாற்கடல் அலைமேல் கிடத்தல்போல, வெண்மையான, தூய அணைமேல் செந்நிற மேனி உடைய அழகிய தாமரைபோலும் கண், கை, கால், முகம் உடைய கைகேயிஉறங்கினாள் என்பதாம். கைகேயி பவளக்கொடி போல்வாள்; வெள்ளிய மெத்தை பாற்கடல் படு திரை, கைகேயியின் உறுப்புகள் மணி நளினம் என உவமை காண்க. இது இல்பொருள் உவமையாம், “பாற்கடன் முளைத்ததோர் பவளப் பூங்கொடி, போற்சுடர்ந் திலங்கொளிப் பொன்செய் கோதை”, “பௌவ நீர்ப்பவளக் கொடி போல்பவள்” (சிந்தா. 2413, 874.) என முன்னோர் கூறியவற்றை இங்கு ஒப்பிடுக. கடைக்கண்களில் அருள்வழியக் கிடந்தாள் என உறங்கும்போது இவளைக் கண்டு கூறியதனால் இவளது உளத் தூய்மையும், தூய அன்பும், அகத்துள்ள பேரிரக்கமும் புலனாகும். இத்தகைய பேரருள் உள்ளமோவன்மனத்தோடு தயரதன்பால் வரம் கேட்டது என்று உணர்வார்க்கு உச்சநிலை தோன்ற, இவன் உள்ள நிலையை இங்குக் கூறினாராம்.*

*இத்தகைய அருள் உள்ளமுடையாளையும் திரித்தாள் எனப் பின்னர்க்கூனியின் சூழ்ச்சியாற்றலைப் புலப்படுத்தவும் இது வேண்டி நின்றது. இராமனது நாயகத்தன்மை, இலக்குவனதுஅடிமைத்திறம், பரதனது தியாக உள்ளம், சத்துருக்கனனது அடியார்க்கடியவனாம் தகைமை, அனுமனின் பக்தி, சுக்கிரீவ மகாராஜாவின் நட்பு, சடாயுவின் தியாகம் ஆகிய இன்ன பிற நற்குணங்கள்வெளிப்படவும், இராவணாதிகளின் சிறுமையும் இழிவும் உலகம் அறியவும், இமையோர் துன்பம் தீரத்தக்க காலத்தே தன் மனத்தைக் கன்மனம் ஆக்கிக்கொண்டு செய்த அருஞ்செயலுக்கு முதல் என்று கருதி, 'அளிபொழிய' என்றார் எனலும் ஆகும்.* ***50***

### *1449. எய்தி, அக் கேகயன் மடந்தை, ஏடு அவிழ்*
### *நொய்து அலர் தாமரை நோற்ற நோன்பினால்*
### *செய்த பேர் உவமைசால் செம் பொன், சீறடி.*
### *கைகளின் தீண்டினள் - காலக் கோள் அனாள்.*

***காலக் கோள் அனாள்*** *-தீய காலத்தே தோன்றித் தீங்கு பயக்கும் ராகு, கேது என்னும் கிரகங்களை ஒத்த கூனி;* ***எய்தி*** *- கைகேயியை அடைந்து;* ***அக்கேகயன் மடந்தை*** *-அந்தக் கைகேயினது;* ***ஏடு அவிழ்-*** *இதழ் விரிந்த;* ***நொய்து அலர்*** *- மென்மையாகமலர்ந்த; தாமரை - தாமரையானது;* ***நோற்ற நோன்பினால் -*** *(நீரில் ஒரு காலில் நின்று) செய்த அருந்தவத்தால்;* ***பேர் உவமை சால் செய்த*** *- பெரிய உவமையாகஅமையும்படி பொருந்திய;* ***செம்பொன் சீறடி*** *- சிவந்த பொன்னணி அணிந்த சிறிய பாதங்களை;* ***கைகளில் தீண்டினள்*** *- தன் கைகளால் தொட்டாள்.*

*தாமரை பல காலம் நீரில் நின்று செய்த தவத்தால் இவள் அடிக்கு உவமையாகப் பெற்றது என்றுஅடியைப் புனைந்துரைத்தார். மகளிர்க்கு அடிசிறுத்திருத்தல் வேண்டுமென்பது உடற்கூற்றியல் நலம்உணர்ந்தார். கூற்று. கண், தோள், அல்குல் என மூவழிப்பெருகியும், நுதல், நுகப்பு, அடி எனமூவழிச் சிறுகியும் இருத்தல் வேண்டும், ''அகல் அல்குல், தோள், கண் என மூவழிப் பெருகி, ஆதல், அடி, நுகப்பு என மூவழிச் சிறுகி'' (கலித் . 108: 2-3) என்றது காண்க. இதனால் கைகேயிபேரழகி என்பதும் உணர்க. படுக்கையில் உறங்கியிருந்த கைகேயியைத் துயிலுணர்த்த வேண்டித் தொட்டாள்என்பதைத் தீண்டினள் என்றார். தீமை நிகழ்தற்காதாரமாகத் தொடுகின்ற தொடுகையைத் தீண்டல்என்பது வழக்கு, 'பாம்பு தீண்டியது' என்றாற்போல இங்கு கூனியைக் காலக்கோள்' ஆகிய இராகு,கேது என்னும் பாம்பாகக் குறித்தாராதலின், அதற்கேற்பத் 'தீண்டல்' நயம் உடைய சொல்லாகிறது. 'காலக் கோள்' எப்தற்கு, உலகிற்குத் துன்பம் விளைக்கும் உற்பாதமாகிய 'தூமகேது'போன்ற கோள்களைக் குறிப்பினும் அமையும் என்க. கூனியைப் பின்னர் 'வெவ்விடம் அனையவள்'(1452) என்றதும் இதுபற்றியே என்க.* ***51***

*கூனியின் தொடக்கவுரை*

### *1450. தீண்டலும் உணர்ந்த அத் தெய்வக் கற்பினாள்,*
### *நீண்ட கண் அனந்தரும் நீங்குகிற்றிலள்;*
### *மூண்டு எழு பெரும் பழி முடிக்கும் வெவ் வினை*
### *தூண்டிட, கட்டுரை சொல்லல் மேயினாள்.*

*__தீண்டலும்__ - (கூனி ) காலைத் தடவிய அளவில்; __உணர்ந்த__ - துயிலுணர்ந்த; __அத்தெய்வக் கற்பினாள்__ - அந்தத் தெய்வத் தன்மை பொருந்திய கற்பினை உடைய கைகேயி; __நீண்ட கண்__ - தன் நீண்டமைந்த கண்களில்; __அனந்தரும்__ .- தூக்க மயக்கமும்; __நீங்குகிற்றிலள்__ - (முற்றாக) நீங்கப் பெற்றாளில்லை; (ஆனால் அதற்குள்ளாகவே கூனி) __மூண்டு எழு பெரும்பழி__ - மேலும் மேலும் மிக்கெழுகின்ற பெரும்பழியை; __முடிக்கும்__ - உண்டாக்கி முடிக்கப் போகின்ற; __வெவ்வினை__ - கொடிய வினையானது; __தூண்டிட__ - (அவள்உள் நின்று அவளைப் பேசும்படி) ஏவுதல் செய்ய; __கட்டுரை__ - பேச்சை; __சொல்லல் மேயினாள்__ - பேசத் தொடங்கினாள்.*

*கணவன் கருத்துக்கு மாறுபடாதிசைந்த உள்ளம் உடையவள் என்பார் 'தெய்வக் கற்பினாள்' என்றார்;தன் நன்மை கருதாது உலக நன்மைகருதியவள் ஆதலின் எனலும் ஆம். தூக்கம் நீங்கு முன்னரே பேசத் தொடங்கினாள் என்றது கூனியின் உள்ளக் கொதிப்பின் விரைவைப் புலனாக்கும். 'வினை தூண்டிட' என்பது இராவணன்வினை, கைகேயி வினை, கூனி வினை என்று பலவாறாகக் கொள்ள நிற்கும் ஆதலின் பொதுவாகக் கூறினார்.        52*

***1451. 'அணங்கு, வாள் விட அரா அணுகும் எல்லையும்
குணம் கெடாது ஒளி விரி குளிர் வெண் திங்கள்போல்,
பிணங்கு வான் பேர் இடர் பிணிக்க நண்ணவும்,
உணங்குவாய் அல்லை; நீ உறங்குவாய்' என்றாள்.***

*__'அணங்கு__ - வருத்துகின்ற; __வாள்__ - கொடிய; __விட அரா__ - விடப் பாம்பு ஆகிய இராகு; __அணுகும் எல்லையும்__ - நெருங்கும் நேரத்திலும்; __குணம் கெடாது__ - தன் தன்மை சிறிதும் மாறாமல்; __ஒளி விரி__ - ஒளியை எங்கும் வீசுகின்ற; __குளிர்வெண்திங்கள் போல்__ - குளிர்ச்சியையுடைய வெண்மையான சந்திரனைப் போல; __பிணங்கு__ - மாறுபடுகின்ற; __வான் பேர் இடர்__ - மிகப் பெரிய துன்பம்; __பிணிக்க__ - (உன்னைவருத்திக் கட்ட; __நண்ணவும்__ - நெருங்கி வரவும்; __நீ உணங்குவாய் அல்லை__ - நீ(அதற்கு) வருந்துபவளாக இல்லை; __'உறங்குவாய்'__ - (நிம்மதியாகத்) __தூங்குகின்றாய்;'__ என்றாள்.*

*"ஒருபுடை பாம்பு பொளினும் ஒருபுடை, அங்கண்மா ஞாலம் விளக்குறூ உந் திங்கள் போல்" (நாலடி.148) என்றது போல இங்கும் திங்களைச் சொன்னார். இராகு திங்களை விழுங்கும் என்பது புராணிகர் கூற்று கைகேயிக்கு வரும் பேர் இடர், அவள் மாற்றாளாகிய கோசலை செல்வம் பெறுதலாம். உணங்குவாய்,உறங்குவாய் நிகழ்காலம் எதிர் காலமாயிற்று, கால வழுவமைதி.        53*

*கைகேயியின் மறு மாற்றம்*

***1452. வெவ் விடம் அனையவள் விளம்ப, வேற்கணாள்,
'தெவ் அடு சிலைக் கை என் சிறுவர் செவ்வியர்;
அவ் அவர் துறைதொறும் அறம் திறம்பலர்;
எவ் இடர் எனக்கு வந்து அடுப்பது ஈண்டு?' எனா,***

*__வெவ்விடம் அனையவள்__ - கொடிய நஞ்சையொத்த கூனி; __விளம்ப__ - இவ்வாறுசொல்ல; __வேற்கணாள்__ - வேலையொத்த கண்ணையுடைய கைகேயி; __'தெவ் அடு சிலைக் கைஎன் சிறுவர்__ - பகைவரை அழிக்கும் வில்லைப் பிடித்த கைகை உடைய*

*என் புதல்வர்;* ***செல்வியர்*** *- நலமாய் இருக்கின்றனர்;* ***அவ் அவர் துறை தொறும் -*** *அவரவர்களுடைய தொழில்களில் எல்லாம்;* ***அறம் திறம்பவர்*** *- தருமத்திலிருந்து மாறுபடாதவர்கள்; (எனவே)* ***ஈண்டு -*** *இப்பொழுது;* ***எனக்கு; வந்து அடுப்பது*** *- வந்து நேர்வது;* ***எவ் இடர்?*** *- என்ன துன்பம்;* ***எனா*** *- என்று சொல்லி; (அடுத்த பாட்டில் முடியும்)*

*பிறரால் தீங்கு வராது காக்கவல்லவர் ஆதலின் "தெவ்வடு சிலைக்கை" யுடையவர்; தாம் தீங்குநெறிகளிற் செல்லாதவர் ஆதலின் 'அறம் திறம்பலர்;' அதுவே துன்பம் எப்படி வரும், என்ன துன்பம் வரும் என்றாள் கைகேயி. சிறுவர் என்பது நால்வரையும் குறித்தது.* *54*

## *1453.* **'பராவ அரும் புதல்வரைப் பயக்க, யாவரும்**
**உராவ அருந் துயரை விட்டு, உறுதி காண்பரால்;**
**விராவ அரும் புவிக்கு எலாம் வேதமே அன**
**இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?' என்றாள்.**

***'பராவ அரும் -*** *புகழ்தற்கு அரிய; (நற்குணம் உள்ள)* ***புதல்வரைப் பயக்க -*** *புத்திரரைப் பெறலால்;* ***யாவரும்*** *- எல்லோரும்;* ***உராவ அருந் துயரைவிட்டு -*** *பிறரால்நீங்குதற்கரிய வலிய துன்பத்தை விட்டு;* ***உறுதி காண்பர் -*** *நற்கதி அடைவர்;* ***விராவ அரும் புவிக்கு எலாம்*** *- ஒன்றோடொன்று கலவாத தனி வேறான உலகங்களுக்கு எல்லாம்;* ***வேதமே அன*** *- வேதத்தைப் போன்று விளங்குகின்ற;* ***இராமனைப் பயந்த எற்கு -*** *இராமனைப்பெற்றெடுத்த எனக்கு;* ***இடர் உண்டோ? -*** *துன்பம் உளதாகுமோ?;'* ***என்றாள் -*** *என்றும்கூறினாள்.*

*புத்திரரைப் பெற்றவர்கள் பிறரால் நீக்குதற்கரிய 'புத்' என்னும் நரகத் துன்பத்திலிருந்தும் நீங்குவார்கள்; நற்கதி அடைவார்கள் என்று அனைவரும் கூறுவர்; எல்லா உலகங்களுக்கும் வேதமே போல் விளங்கும் இராமனைப் பெற்ற எனக்குத் துன்பம் உண்டோ என்று வினாவினாள்; மேற்பாட்டில் சிறுவர் என்று நால்வரையும் பொதுவாகச் சொன்னவள் இப்பாட்டில் இராமனைப் பிரித்துப் பாராட்டி அன்பினால் நெகிழ்ந்தாளாம். 'ஆல்' ஈற்றசை.* *55*

*கூனி 'வாழ்ந்தனள் கோசலை' எனலும், கைகேயின் வினாவும்*

## *1454.* **ஆழ்ந்த பேர் அன்பினாள் அனைய கூறலும்,**
**சூழ்ந்த தீவினை நிகர் கூனி சொல்லுவாள்,**
**'வீழ்ந்தது நின் நலம்; திருவும் வீந்தது;**
**வாழ்ந்தனள் கோசலை, மதியினால்' என்றாள்.**

***ஆழ்ந்த பேர் அன்பினாள்*** *- (இராமன் பால்) ஆழங்காற்பட்ட பேரன்பு உடையவளாய கைகேயி;* ***அனைய கூறலும்*** *- அத்தகைய வார்த்தைகளைச் சொல்லுதலும்;* ***சூழ்ந்த தீவினை நிகர் கூனி*** *- (அவனைச்) சுற்றிக் கொண்ட பாவத்தை யொத்த மந்தரை;* ***சொல்லுவாள்*** *- பேசத் தொடங்கி;* ***'நின் நலம் வீழ்ந்தது*** *- உனது நன்மை அழிந்து போனது;* ***திருவும்*** *- உன் செல்வமும்;* ***வீந்தது*** *- கெட்டது;* ***கோசலை*** *- உன் மாற்றாளாய*

*கோசலை;* ***மதியினால்*** *- புத்தித் திறமையால்;* ***வாழ்ந்தனள்'*** *- செல்வமும் நன்மையும் பெற்று வாழ்ந்தாள்;'* ***என்றாள்*** *- என்று கூறினாள்.*

*இராமன்பால் அன்பு பெருகிய கைகேயி கூறவும், அவள் மனத்தைத் திரிக்கக் கூனி 'கோசலைவாழ்ந்தனள்' என்று பெண்ணுக்குப் பெண் பொறாமைப்படும் உலகியல்பு பற்றித் தூண்டினாள். சூழ்ந்ததீவினை கைகேயியைச் சுற்றின பாவம் என்றதனால் அது தன் பயனைச் செய்தே தீரும் என்றாராம். 'இனி வாழ்வாள்' என எதிர்காலத்தால் கூற வேண்டுவதை 'வாழ்ந்தனள்' என இறந்த காலத்தாற் கூறியது தெளிவுபற்றி வந்த கால வழுவமைதி. கோசலை தன் திறமையால் தயரதனிடம் இதனைச் சாதித்துக் கொண்டாள்என்பதுபடக் கூறிக் கைகேயியைத் தூண்டினாளாம்.* ***56***

***1455. அன்னவள் அவ் உரை உரைப்ப, ஆயிழை,***
***'மன்னவர் மன்னனேல் கணவன், மைந்தனேல்***
***பன்ன அரும் பெரும் புகழ்ப் பரதன்; பார்தனில்***
***என் இதன்மேல் அவட்கு எய்தும் வாழ்வு?' என்றாள்.***

***அன்னவள்*** *- மந்தரை;* ***அவ் உரை உரைப்ப*** *- (வாழ்ந்தனள் கோசலை என்ற)அந்த வார்த்தைகளைச் சொல்ல;* ***ஆயிழை*** *- ஆராய்ந்த அணிகளை அணிந்த கைகேயி;* ***'கணவன் -*** *நாயகன்;* ***மன்னவர் மன்னனேல்*** *- அரசர்களுக்கு அரசனாகிய சக்கரவர்த்திதயரதனானால்;* ***பன்ன அரும் -*** *எடுத்துரைத்தற்கரிய;* **பெரும் புகழ்ப் பரதன்** *- பெரிய புகழை உடைய பரதன்;* **மைந்தனேல்** *- மகனானால்;* **பார்தனில் -** *இவ்வுலகில்;* **இதன்மேல்** *- இதற்கும் மேலாக;* ***அவட்கு*** *- கோசலைக்கு;* ***எய்தும் வாழ்வு -*** *கிடைக்கக்கூடிய புதிய வாழ்வு;* ***என்?'*** *- என்ன இருக்கிறது;'* ***என்றாள்*** *- என்றுகூறினாள்.*

*கோசலையின் நாயகனோ சக்கரவர்த்தி; மகனோ புகழுடைய பரதன்; இதற்குமேல் அவளுக்கு வரக்கடவதாகிய வாழ்வு என்ன? ஏற்கெனவே மிகச் சிறப்பாக வாழ்ந்துகொண்டுதானே உள்ளாள் என்று கைகேயி கூறினாள். முன்பு 'இராமனைப் பயந்த எற்கு' என்று இராமனைத் தன்னோடு இணைத்துக் கூறிக்கொண்டது போலவே, வளர்த்தமை பற்றிப் பரதனைக் கோசலை மகன் என்று கூறிப் பாராட்டினாள். இனி இதனைக் கைகேயிமேற்றாகவே உரைப்பாரும் உளர். 'என் நாயகன் சக்கரவர்த்தி; என் மகன் பரதன்' என்றால் கோசலைக்குஎன்னைக் காட்டிலும் என்ன புதுவாழ்வு வந்துவிடப் போகிறது' என்றாள் என்பதாக விளக்குவர். முன்னர் இராமனைத் தன் மகன் என்று கூறியுள்ளாள் என்பதை நோக்க அப்பொருள் சிறவாது இச்செய்யுளிலும்'என்னின் மேல் அவட்கு எய்தும் வாழ்வு'என்னாது, 'இதன்மேல் அவட்கு எய்தும் வாழ்வு' என்று கூறியதும்அப்பொருளுக்கு நேரே உதவாமை காண்க. பரம் - பாரம் சுமப்பவன் பரதன். அரசைத் திருவடி நிலையில்வைத்து ஆள்பவன் என்னும் பொருளில் பரதன் எனும் பெயர் பொருந்துமாறு அறிக.* ***57***

*'நாளை இராமன் முடி சூடுவான்' என மந்தரை உரைத்தல்*

***1456. 'ஆடவர் நகை உற, ஆண்மை மாசு உற,***
***தாடகை எனும் பெயர்த் தையலாள் பட,***
***கோடிய வரி சிலை இராமன் கோமுடி,***
***சூடுவன் நாளை; வாழ்வு இது' எனச் சொல்லினாள்.***

*('என் இதன் மேல் அவட்கு எய்தும் வாழ்வு' என்று கேட்ட கைகேயிக்கு மந்தரை)* ***'ஆடவர்நகை உற*** *- ஆண்மையுடைய வீரர்கள் பரிகசிக்க;* ***ஆண்மை மாசு உற*** *- ஆண்மைத் தன்மை குற்றம் அடைய;* ***தாடகை எனும் பெயர்*** *- தாடகை என்ற பெயரை உடைய;* ***தையலாள் பட*** *- பெண் அழியும்படி;* ***கோடிய*** *- வளைந்த;* ***வரிசிலை*** *- கட்டமைந்த வில்லினை உடைய;* ***இராமன்-; நாளை-; கோமுடி*** *- அரச மகுடத்தை;* ***சூடுவன்*** *- சூடிக்கொள்வான்;* ***இது வாழ்வு*** *- இதுவே (கோசலைக்கு வரும்) வாழ்வு;'* ***என*** *- என்று;* ***சொல்லினாள்*** *- சொன்னாள்.*

*போரில் பெண்களை எதிர்த்துக் கொல்லுதல் கத்த வீரர்க்கு அழகன்று. ஆதலின், 'ஆடவர்பரிகசிப்பர், ஆண்மை மாசுற்றது' என்றாள். 'தாடகையைக் கொல்ல வளைந்த வில்லையுடையவன்' என்று சொல்லிய வார்த்தையிலேயே, பெண்ணைக் கொலை செய்தலால் 'கோடிய சிலை' நேர்மை தவறியது என்ற தொனிப் பொருள் தந்து நயம் செய்சிறது அத்தொடர். போர் முறை தவறி இன்று பெண்பாலார் பக்கல் இரக்கமின்றிக் கொலைபுரிந்த இராமன் உன் திறத்திலும் நாளை இரக்கமின்றி நடந்துகொள்வான்என்றாளாம். 'படை இழந்தோனையும், ஒத்தபடை எடாதோனையும், மடிந்த உள்ளத்தோனையும் மகப் பெறாதோனையும், மயிர் குலைந்தோனையும், அடிபிறக்கிட்டோனையும் பெண்பெயரோனையும் இன்னோ ரன்னோரையும் கொல்லாது விடுதலும், கூறிப் பொருதலும்' (தொல் - பொருள். புறத். 65. நச். உரை) என்பதை இங்குக் கருதுக. பெண் பெயருடையவர்களையே கொல்லுதல் அறமன்றெனின் பெண்ணையே கொல்லுதலும், எதிர்த்தலும்போரறம் அன்று என்பது சொல்லாமலேயே முடிந்தது. 'தாடகை எனும் பெயர்த் தையல்' என்னாது 'தையல் ஆள்' என்றலின் அவள் பெண்ணுருவில் உள்ள ஆண் என்பது போலத் தோன்றக் கூறியது கம்பர்சொற்றிறனுக்கு உரைக்கல்லாம். ''யாதென் றெண்ணுவது இக் கொடியாளையும், மாது என்று எண்ணுவதோ மணிப்பூணினாய்'' என்று ''பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைத்த'' பொழுது கூறிய விசுவாமித்திரர்கூற்றையும் இங்குக் கருதின், (376, 374.) இராமன் தாடகையைக் கொன்றதில் தவறு ஏதும் இல்லையென்பது விளங்கும். கூனியின் உள்ளக் கொதிப்பு இராமன்பால் தவறேற்றக் காரணம் ஆதலின் இங்ஙனம்கூறினாள் என்றார் கம்பர்.*
***58***

கைகேயி மகிழ்ந்து மாலை பரிசளித்தல்

***1457. மாற்றம் அஃது உரைசெய, மங்கை உள்ளமும்***
***ஆற்றல் சால் கோசலை அறிவும் ஒத்தவால்;***
***வேற்றுமை உற்றிலள், வீரன் தாதை புக்கு***
***ஏற்று அவள் இருதயத்து இருக்கவே கொலாம்?***

***அஃது மாற்றம் உரை செய*** *- அந்த வார்த்தையை மந்தரை சொல்ல;* ***மங்கை உள்ளமும்*** *- (அதுகேட்ட) கைகேயியின் மனமும்;* ***ஆற்றல் சால்-*** *பெருமை அமைந்த;* ***கோசலை அறிவும்-*** *கோசலையின் புத்தியும்;* ***ஒத்த -*** *ஒத்திருந்தன;* ***வேற்றுமை உற்றிலள் -*** *(கூனி கருதியது போல) வேறுபாடு கருதினாளில்லை; (ஏனெனில்)* ***வீரன் தாதை*** *- இராமன் தந்தையாகிய தயரதன்;* ***அவள் இருதயத்து*** *- அந்தக் கைகேயியின் இதயத்தில்;* ***புக்கு ஏற்று -*** *புகுந்து இணங்கி;* ***இருக்கவே கொல்*** *- இருந்ததனாற் போலும்.*

*கோசலை எவ்வாறு அறிந்தாளோ அவ்வாறே கைகேயி நினைத்தாள் என்பதாகும். காரணம் இருவர்க்கும் நாயகன் தயரதன் என்பதனால் 'எப்பொழுதும் கைகேயியின் மனத்தில் தயரதன் இணங்கிவீற்றிருத்தலின் தயரதன் மனமே கைகேயி மனமாயினது அன்றி வேறில்லை யாதலின்' எனக் கூறினும்பொருந்தும். ஆற்றல் என்பது பெருமை; மூவகையாற்றல்களுள் பெருமையும் ஒன்று. மூவகை ஆற்றலாவன -அறிவு, ஆண்மை, பெருமை என்பன. 'ஆல்', 'ஆம்' அசை.* ***59***

## *1458.* **ஆய பேர் அன்பு எனும் அளக்கர் ஆர்த்து எழ,**
**தேய்வு இலா முக மதி விளங்கித் தேசுற,**
**தூயவள் உவகை போய் மிக, சுடர்க்கு எலாம்**
**நாயகம் அனையது ஓர் மாலை நல்கினாள்.**

***தூயவள்*** *- தூய்மையான கைகேயி;* ***ஆய -*** *உண்டாகிய;* ***பேர் அன்பு -*** *பெரிய அன்பு;* ***எனும்*** *- என்கின்ற;* ***அளக்கர் -*** *கடல்;* ***ஆர்த்து எழ*** *- ஆரவாரித்து மேல்கிளம்ப;* ***தேய்வு இலா*** *- களங்கம் இல்லாத;* ***முகமதி*** *- முகமாகியசந்திரன்;* ***விளங்கி*** *- பிரகாசித்து;* ***தேசுஉற*** *- மேலும் ஒளியடைய;* ***உவகை*** *- மகிழ்ச்சி;* ***போய்மிக*** *- எல்லை கடக்க ;* ***சுடர்க்கு எலாம் -*** *மூன்று சுடர்களுக்கும்;* ***நாயகம் அனையது*** *- தலைமை பெற்றது போன்றதாகிய;* ***ஓர் மாலை*** *- ஒரு இரத்தினமாலையை;* ***நல்கினாள் -*** *(மந்தரைக்குப் பரிசாக) அளித்தாள்.*

*மகிழ்ச்சியான நற்செய்தி அறிவித்தமைக்குப் பரிசாக மாலையை அளித்தாள். 'முகமதி' என்ற உருவகத்தில் குறை நீக்கி, 'தேய்வுஇலா' என்றார். அன்புக்கடல் கைகேயி அகத்தே பொங்கி மேல்எழுந்தது, அதன் வெளிப்பாடு முகத்தில் தோன்றியது என்றார். மனமாற்றம் சிறிதும் எய்தப்பெறாதநிலையில், இங்கும் 'தூயவள்' என்றே கைகேயியைக் குறித்தது காண்க.* ***60***

*மாலையை எறிந்து, மந்தரை கூறுதல்*

## *1459.* **தெழித்தனள்; உரப்பினள்; சிறு கண் தீ உக**
**விழித்தனள்; வைதனள்; வெய்து உயிர்த்தனள்;**
**அழித்தனள்; அழுதனள்; அம் பொன் மாலையால்**
**குழித்தனள் நிலத்தை - அக் கொடிய கூனியே.**

***கொடிய அக் கூனி -*** *கொடுமை படைத்த அந்தக் கூனி;* ***தெழித்தனள்*** *- சப்தமிட்டாள்;* ***உரப்பினள் -*** *அதட்டினாள்;* ***சிறுகண் தீ உக விழித்தனள் -*** *சிறிய கண்களிலிருந்து நெருப்புப் பொறி சிந்த விழித்துப் பார்த்தாள்;* ***வைதனள்*** *- திட்டினாள்;* ***வெய்து உயிர்த்தனள்*** *- வெப்பமாக மூச்சு விட்டாள்;* ***அழித்தனள் -*** *(தன்கோலத்தைக்) கெடுத்துக்கொண்டாள்;* ***அழுதனள் - ; அம்பொன் மாலையால் -*** *(கைகேயி அளித்த) அழகிய பொன் மாலையினால்;* ***நிலத்தை -*** *பூமியை;* ***குழித்தனள் -*** *குழியாக்கினாள்.*

*கூனியின் கொடுமை - பெயரிலும், உடலிலும், சொல்லிலும், செயலிலும், குணத்திலும் உள்ளது. குழந்தையாய் இருக்கும்போது விளையாட்டாகச் செய்த செயலை வஞ்சம் வைத்துக்கொண்டு பழிதீர்க்கநினைத்தாள். ஆதலின் கொடியள்*

*ஆயினாள். பொன்மாலையை நிலத்தில் எறிந்தாள்; அது தாக்கி நிலம்பள்ளம் ஆயிற்று. 'ஏ' ஈற்றசை.* ***61***

## *1460. வேதனைக்கூனி, பின் வெகுண்டு நோக்கியே,*
## *'பேதை நீ பித்தி; நிற் - பிறந்த சேயொடும்*
## *நீ துயர்ப் படுக; நான் நெடிது உன் மாற்றவள்*
## *தாதியர்க்கு ஆட்செயத் தரிக்கிலேன்' என்றாள்.*

***வேதனைக் கூனி*** *- துன்பத்தைச் செய்கின்ற கூனியானவள்;* ***பின்*** *- பிறகு;* ***வெகுண்டு நோக்கி*** *- (கைகேயியை) கோபித்துப் பார்த்து;* ***'நீ பேதை*** *- நீ அறிவற்றவள்;* ***பித்தி*** *- மனநிலை சரியில்லாதவள்;* ***நீ நிற்பிறந்த சேயொடும்-*** *நீ உன்னிடம் பிறந்த பரதனோடும்;* ***துயர்ப்படுக*** *- துன்பப்படுவாயாக;* ***நான் - ; உன் மாற்றவள்*** *- உன் சக்களத்தி கோசலையின்;* ***தாதியர்க்கு*** *- தாதிகளுக்கு;* ***நெடிது*** *- நீண்ட காலம்;* ***ஆட்செய*** *- அடிச்சி வேலை செய்ய;* ***தரிக்கிலேன்'*** *- பொறுக்க மாட்டேன்;'* ***என்றாள்*** *- என்று சொன்னாள்.*

*இராமன் அரசனானால் கோசலை அரசன் தாயாவாள். கோசலையின் தோழியர் மற்றவர்களைத்தமக்குப் பணிசெய்ய அதிகாரம் இடுவர் ஆதலின் 'மாற்றவள் தாதியர்க்கு ஆட்செயத் தரிக்கிலேன்'என்று மந்தரை உரைத்தாள். 'நெடிது' - இராமன் அரசு வீற்றிருக்கும் காலம்வரை. ஆகவே, அது நீண்டதாயிற்று.எனவே என் ஆயுள் முழுக்கக் கோசலையின் அடிமைப் பெண்களுக்கு நான் அடிமை செய்து வாழ வேண்டி வந்துவிடும்;அதற்கு நான் சம்மதிக்கமாட்டேன் எனறாள் கூனி. தன்மையறியாமல் தனக்கு வரும் கேட்டை வரவேற்கிறாள்.ஆதலின், கைகேயியைப் பேதை என்றும் பித்தி என்றும் உரைத்தாள். இப்படியே போனால் கைகேயியாகியநீயும் கோசலைத் தாதியர்க்கு ஆட்செய்ய வேண்டி வரும் என்பதையும் கூனி குறிப்பால் அறிவித்தாளாம்.* ***62***

## *1461. 'சிவந்தவாய்ச் சீதையும் கரிய செம்மலும்*
## *நிவந்த ஆசனத்து இனிது இருப்ப, நின் மகன்,*
## *அவந்தனாய், வெறு நிலத்து இருக்கல் ஆன போது,*
## *உவந்தவாறு என்? இதற்கு உறுதி யாது ?' என்றாள்.*

***'சிவந்த வாய்ச் சீதையும்*** *- சிவந்த வாயினை உடைய சீதையும்;* ***கரிய செம்மலும்-*** *கருமையான மேனியுடைய இராமனும்;* ***நிவந்த*** *- உயர்ந்த;* ***ஆசனத்து*** *- சிங்காசனத்தில்;* ***இனிது இருப்ப*** *- இனிமையாக வீற்றிருப்ப;* ***நின் மகன்*** *- பரதன்;* ***அவந்தனாய்*** *- ஒன்றுமற்றவனாய்;* ***வெறு நிலத்து*** *- தரையில்;* ***இருக்கல்ஆன போது-*** *இருக்கும்படி நேரும் காலத்தில்;* ***உவந்தவாறு என்?*** *- (நீ)! மகிழ்ந்தகாரணம் யாது?;* ***இதற்கு உறுதி யாது'*** *- இம்மகிழ்ச்சி அடைவதற்கு (நீ பெற்ற) நன்மை யாது?;'* ***என்றாள்*** *- என்று கூறினாள். 'இராமனும் சீதையும் சிங்காதனத்தில் வீற்றிருக்கையில் அவர்கள் பாதத்தின் கீழ் வெறுந்தரையில் பரதன் இருப்பானே! இதற்கா மகிழ்ச்சி அடைகிறாய்? நீ மகிழ்ச்சி அடையும்படி உனக்குஉண்டான நன்மைதான் என்ன?' என்று மந்தரை கைகேயியை வினவினாள். தனக்கு வருகின்ற தொல்லையைமேற்பாட்டில் கூறியபிறகு. இங்குப் பரதனுக்கு வருகின்ற துன்பத்தைக் கூறினாள் என்க. அவத்தன்- அவந்தன் - வீணானவன் - ஒன்றுக்கும் பயனின்றிப் போனவன்.* ***63***

***1462. 'மறந்திலள் கோசலை, உறுதி; மைந்தனும்,***
***சிறந்த நல் திருவினில் திருவும் எய்தினான்,***
***இறந்திலன் இருந்தனன்; என் செய்து ஆற்றுவான்?***
***பிறந்திலன் பரதன், நீ பெற்றதால்' என்றாள்.***

***'கோசலை உறுதி மறந்திலள் -*** *கோசலை (தனக்குரிய) நன்மையை மறந்தாளில்லை; (அதனால்)* ***மைந்தனும் -*** *இராமனும்;* ***சிறந்த -*** *மேம்பட்ட;* ***நல் -*** *நல்ல;* ***திருவினில்திருவும் -*** *செல்வங்களுக்கெல்லாம் மேம்பட்ட அரசச் செல்வத்தையும்;* ***எய்தினான் -*** *அடைந்தான்;* ***நீ பெற்றதால் -*** *நீ பிள்ளையாகப் பெற்றதால்;* ***பரதன் -; இறந்திலன்-*** *செத்தானில்லை;* ***என்செய்து ஆற்றுவான் இருந்தனன் -*** *என்ன காரியம் செய்து முடிப்பதற்காக இருந்துகொண்டுள்ளான்;* ***பிறந்திலன் -*** *'பிறந்தும் பிறவாதவனே;'* ***என்றாள்-*** *என்று கூறினாள். அரசேற்று முடிசூடல் ஆகிய செயல் இராமனுக்கு உண்டானாற்போலப் பரதன் என் செயவாழ்கின்றான்; அவன் இருந்தும் இறந்தவனே என்றான் கூனி. இதுவும் பரதனுக்கு வருகின்ற இழப்பைக்காட்டி புலம்பி, கைகேயியின் மனத்தைத் திரிக்க முயன்றதாம். திருவினில் திரு - அரசச்செல்வம்; எல்லாச் செல்வங்களிலும் மேம்பட்டது.* ***6***

***1463. 'சரதம் இப் புவி எலாம், தம்பியோடும் இவ்***
***வரதனே காக்குமேல், வரம்பு இல் காலமும்,***
***பரதனும் இளவலும், பதியின் நீங்கிப் போய்,.***
***விரத மா தவம் செய விடுதல் நன்று' என்றாள்.***

***'இப் புவிஎலாம் -*** *இந்த உலகமெல்லாம்;* ***சரதம் -*** *மெய்யாக;* ***இவ்வரதனே-*** *இந்த இராமனே;* ***தம்பியோடும் -*** *இலக்குமணனோடும் (சேர்ந்து);* ***காக்குமேல்-*** *(அரசு நடாத்திக்) காப்பானாயின்;* ***பரதனும் இளவலும் -*** *பரதனும், சத்துருக்கனனும்;* ***வரம்பு இக்காலமும் -*** *(இராமன் அரசு செய்யும்) அளவற்ற காலங்கள்;* ***பதியின் நீங்கிப்போய் -*** *அயோத்தியிலிருந்து விலகிச் சென்று;* ***மாதவ விரதம் செயவிடுதல் -*** *உயர்ந்ததவமாகிய விரதத்தைச் செய்யும்படி அனுப்பி விடுதல்;* ***நன்று! -*** *அவனுக்கு நன்மை பயப்பதாம்;'* ***என்றாள் -*** *என்று கூறினாள்.*

*இராமன் ஆட்சியில் நகரவாசம் செய்வதைவிட, வனவாசம் சென்று தவம், விரதம் செய்தால்மறுமைக்காவது பயன் என்றாளாம். இலக்குமணனை இராமன் தம்பி என்றும், சத்துருக்கனனைப் பரதன்தம்பி என்றும் கூறினமை "பரதனும் இளவலும் ஒரு நொடி பகிராது ......வரதனும் இளவலும்" என்னும் முன்னைய செய்யுளாலும் (307) தேற்றமாதல் காண்க. இப்பாடலால் குறிப்பாக அரசு பெற்று ஆளாதவர் வனவாசம் செய்தல் வேண்டும் எனக் காட்டி, அதனையே பின்னர் (இராமனுக்கு) வரமாக வேண்ட வழிசெய்தாள்மந்தரை என்றும் கூறுலாம்.* ***65***

***1464. 'பண்ணுறு கட கரிப் பரதன், பார் மகள்***
***கண்ணுறு கவினராய் இனிது காத்த அம்***
***மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில்***
***எண்ணுறப் பிறந்திலன்; இறத்தல் நன்று' என்றாள்.***

*'**பண்உறு-** அலங்கரித்தல் அமைந்த; **கடகரி -** மத யானையையுடைய; **பரதன்-; பார்மகள் கண்ணுறு கவினராய்** - நிலமகள் விரும்பத் தக்க அழகுடையவராய்; **இனிது காத்த -** இனிமையாக அரசாண்ட; **அம்மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில் -** அந்த மார்ச்சனை செறிந்த முரசத்தினை உடைய அரசர் வரிசையில் வைத்து; **எண்ணுற -** நினைக்குமாறு(அரசனாக); **பிறந்திலன் -** பிறக்கவில்லை; **இறத்தல் நன்று** - (எனவே) உயிர்வாழ்வதனினும்இறப்பதே மேல்;' **என்றாள் -***

*அரசனாகும் பேறு இல்லாதவன் அரசகுலத்தில் பிறந்து வாழ்வதைவிடச் சாவதே மேல் என்றுபரதனுக்காக இரங்கினாளாம். மன்னர் மாலை - அரச பரம்பரை வரிசை. அது குலமுறை கிளத்து படலத்திற்கூறியவாற்றான் உணர்க. மண் - மார்ச்சனை - அஃதாவது ஒலிச்செறிவு ஆகும். அது மண்பூசப் பெறுதலால்உளதாகும் என்பர். **66***

***1465. 'பாக்கியம் புரிந்திலாப் பரதன்தன்னை, பண்டு***
***ஆக்கிய பொலங் கழல் அரசன், ஆணையால்,***
***தேக்கு உயர் கல் அதர், கடிது சேணிடைப்***
***போக்கிய பொருள் எனக்கு இன்று போந்ததால்.'***

*'**ஆக்கிய பொலங்கழல் அரசன் -** பொன்னாற் செய்த வீரக் கழலை அணிந்த தயரதன்; **பண்டு -** முன்பே; **பாக்கியம் புரிந்திலாப் பரதன் தன்னை** - (அரசாட்சி ஏற்கும்)பாக்கியம் செய்யாத பரதனை; **ஆணையால்-** கட்டளையால்; **தேக்கு உயர் கல் அதர் -** தேக்கு மரங்கள் நிரம்பிய மலைவழியில்; **சேணிடை -** வெகுதூரத்தில் (கேகய நாட்டுக்கு); **கடிது -** விரைவாக; **போக்கிய -** (செல்லும்படி) அனுப்பிவைத்த; **பொருள் -** காரணம்; **இன்று எனக்கு -; போந்தது -** தெரியவந்தது.*

*பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பியது, "ஆணையின் நினது மூதாதை, ஐய! நிற் காணியவிழைவதோர் கருத்தன்; ஆதலால் .......கேகயம் புக........போதி" என்றனன்' (1309.)என முன்னர் வந்துள்ளது. கேகய தேசத்தரசனான பரதனது மாமன் யுதாசித்து அழைக்கப் பரதனைத்தயரதன் அனுப்பினான். யுதாசித்து அழைப்பின் பேரில்தான் அனுப்பினானேயன்றித் தானாக அனுப்பவில்லைதயரதன். ஆயினும் அச்செயலைத் தன்கருத்திற் கேற்ப வளைத்துக்கொண்ட மந்தரை 'இராமனுக்கு முடிசூட்டப் பரதன் தடையாக இருப்பானோ என்று கருதியே தயரதன் பரதனைக் கேகயத்திற்கு விரைவாக அனுப்பிவைத்தான்' என்று கூறினாள். பரதன்பால் பிரிவு காட்டினாள் போன்று பேசிய மந்தரை 'கோசலை வாழ்ந்தனள்' என்றாற் போல, தயரதனும் திட்டமிட்டே இராமனுக்கு முடிசூடும் செயலை நடத்தத் தொடங்கினான்என்றும் கூறி, கைகேயியின் மனத்தில் மாசு ஏற்றினாள். கல்றவழியில் அனுப்பினான்; வெகுதூரத்தில்அனுப்பினான்; விரைவாக அனுப்பினான் என்றெல்லாம் சொற்களை அடுக்கிப் பெய்து மந்தரையின் சொற் சாதுரியத்தைக் கம்பர் காட்டிய அருமை அறிந்து இன்புறத் தக்கது. **67***

***1466. மந்தரை, பின்னரும் வகைந்து கூறுவாள்;***
***'அந்தரம் தீர்ந்து உலகு அளிக்கும் நீரினால்***
***தந்தையும் கொடியன்; நற்றாயும் தீயளால்;***
***எந்தையே! பரதனே! என் செய்வாய்?' என்றாள்.***

***மந்தரை -; பின்னரும்*** *- மறுபடியும்;* ***வகைந்து கூறுவாள் -*** *வகைப்படுத்திச்சொல்பவளாகி;* ***'எந்தையே! பரதனே!*** *- என்தந்தையே! பரதனே!;* ***அந்தரம் தீர்ந்து-*** *நடுவுநிலைமை விலகி;* ***உலகு அளிக்கும் நீரினால் -*** *அரசை இராமனுக்குக்கொடுக்கும் தன்மையால்;* ***தந்தையும் கொடியன் -*** *தயரதனும் கொடியவன்; (அச்செயலுக்கு மகிழும்காரணத்தால்);* ***நற்றாயும் தீயளால் -*** *உன்னைப் பெற்ற கைகேயியும் பொடியவள்;* ***என்செய்வாய்-*** *(இவர்களுக்கிடையில் நீ) யாது செய்வாய்?;'* ***என்றாள் -***

*கைகேயிக்குக் கூறுவதனால் பயனில்லை என்று கருதிப் பரதனை நோக்கிமுறையிட்டாற் போலக் கூறுகிறாள் மந்தரை. 'எந்தையே!' என்பது என்செல்வயே! என் அப்பா!'என்று பரிவு காட்டித் தன்னோடு நெருக்கிக்கொண்டாற் போலப் பேசும் மொழி. கைகேயிக்குத் தன்மகன்மேல் அன்பு இல்லாதது போலவும், இவளுக்குப் பரதன்மேல் அளவிறந்த பரிவு பெருகிவிட்டது போலவும் இல் அழைப்புகள் காட்டும். 'உலகு அளிக்கும்' என்பதற்கு, உலகைக் காப்பாற்றும் என்று பொதுவாகப்பொருள் உரைத்தலும் ஒன்று, 'ஆல்' தேற்றம்.* ***68***

## *1467. 'அரசர் இல் பிறந்து, பின் அரசர் இல் வளர்ந்து,*
## *அரசர் இல் புகுந்து, பேர் அரசி ஆன நீ*
## *கரை செயற்கு அருந்துயர்க் கடலில் வீழ்கின்றாய்;*
## *உரை செயக் கேட்கிலை; உணர்தியோ?' என்றாள்.*

*(மந்தரை மீண்டும்)* ***'அரசர் இல் பிறந்து*** *- அரச குலத்தில் பிறந்து;* ***பின்-*** *பிறகு;* ***அரசர் இல் வளர்ந்து -*** *அரசு குடும்பத்தில் வளர்ந்து;* ***அரசர் இல்புகுந்து -*** *அரச குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டு;* ***பேர் அரசி ஆன நீ -*** *(சக்கரவர்த்தியின்)பட்டத்தரசியாக ஆன நீ;* ***கரைசெயற்கு அருந்துயர்க் கடலில் -*** *கரை இடுவதற்கு முடியாத துன்பக்கடலில்;* ***வீழ்கின்றாய் -*** *வீழ்ந்து கொண்டேயிருக்கிறாய்;* ***உரை செய -*** *(நான்) எடுத்துச் சொல்லியும்;* ***கேட்கிலை -*** *கேட்கின்றாயில்லை;* ***உணர்த்தியோ?'*** *- பின் அனுபவத்தால் உணர்வாயோ?;'* ***என்றாள் -***

*அரச குலத்தில் பிறந்து வளர்ந்து பட்டத்தரசியாக இருக்கிற உனக்கு, உன் அரசனாகாது மாற்றாள் மகன் அரசன் ஆவதைச் சாதாரணமாக எடுத்துக் கொள்ள எப்படி நேர்ந்தது? என்று கூறினாள்கூனி. உணர்தியோ- அறிவினால் அறிந்து கொள்ளாத நீ அனுபவத்தால் எதிர்காலத்தில் சக்களத்தியிடம்துன்பப்பட்டுப் புரிந்துகொள்வாயோ என்பது பொருள். இனி உனக்கு உணர்ச்சி யுள்ளதோ என்பதுபொருந்துமேற் கொள்க.* ***69***

## *1468. 'கல்வியும், இளமையும், கணக்கு இல் ஆற்றலும்,*
## *வில் வினை உரிமையும், அழகும், வீரமும்,*
## *எல்லை இல் குணங்களும், பரதற்கு எய்திய;*
## *புல்லிடை உகுந்த அமுது ஏயும்போல்' என்றாள்.*

***பரதற்கு -*** *பரதனுக்கு;* ***கல்வியும் இளமையும் -; கணக்கு இல் ஆற்றலும் -*** *அளவில்லாத வல்லமையும்;* ***வில்வினை உரிமையும் -*** *வில் தொழிலில் திறமையும்;* ***அழகும், வீரமும் -; எல்லை இல் குணங்களும் -*** *அளவில்லாத நற்குணங்களும்;* ***எய்திய -*** *வந்து பொருந்தி உள்ளன; (அரசன் ஆகாவிடின் அவை அனைத்தும்)* ***புல்லிடை உகுந்த***

***அமுது ஏயும் போல்*** - புல்தரையில் சொரிந்த தேவர் அமுதம் போலப் பயனற்றதாக ஆகும் போலும்;' ***என்றாள்*** -

*அரசனாயிருந்தால் குணச்சிறப்புகள் மக்களுக்குப் பயன்செய்யும்; அவனுக்குப் புகழ் தரும். இல்லாவிடில் வீண் என்றால் மந்தரை. கைகேயியை நோக்கி 'உன் மகனுக்குஅரசன் ஆவதற்கு என்ன குறைச்சல்' என்று கேட்டாளாம். இவ்வளவு சிறப்புகள் உடைய உன் மகனை உன் அறியாமையால் பாழாக்குகிறாயே என்று இரங்கிக் கூறுவாள்போலப் பேசினாள். 'புல்லிடை உகுத்தல்',"வில்லினும் வாளினும் விரிந்த ஆண்தொழில், புல்லிடை உகுத்தனென்" என்று பின் (2214) வருவதும் காண்க. "அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால்" என்று (குறள். 720) வள்ளுவர்கூறும் உவமை இதற்கு ஒருபுடை ஒப்பு நோக்கலாகும்.* ***70***

*மந்தரை மாற்றத்தால் சீற்றமுற்ற கைகேயி கடிந்து உரைத்தல்*

*கலித்துறை*

***1469. வாய் கயப்புற மந்தரை வழங்கிய வெஞ் சொல்,***
***காய் கனல்தலை நெய் சொரிந்தென, கதம் கனற்ற,***
***கேகயர்க்கு இறை திருமகள், கிளர் இள வரிகள்***
***தோய், கயல் கண்கள் சிவப்புற நோக்கினள், சொல்லும்;***

***வாய் கயப்புற*** - வாய் கசக்கும்படி; ***மந்தரை*** - கூனி; ***வழங்கிய*** - கூறிய; ***வெஞ்சொல்*** - கொடிய வார்த்தை; ***காய்*** - எரிகின்ற, ***கனல்தலை*** - நெருப்பிடத்தில்; ***நெய் சொரிந்தென*** - நெய் ஊற்றினாற் போல; ***கதம்*** - கோபத்தை; ***கனற்ற*** - மேலும் தூண்டி எரியச்செய்ய; (அதனால்) . ***கேகயர்க்கு இறைதிருமகள்*** - கேகய நாட்டு அரசனது அழகுப் பெண்ணான கைகேயி; ***கிளர் இளவரிகள் தோய்*** - எழுந்த இளங்கோடுகள் பொருந்திய; ***கயல் கண்கள்*** - கயல் போன்ற கண்கள்; ***சிவப்புற***- (சினத்தால்) செம்மை அடைய; ***நோக்கினள்*** - பார்த்து; ***சொல்லும்*** - பேசத் தொடங்கினாள் (மேல் தொடரும்)

*நெய் விடவிட நெருப்பு எரிதல் போல மந்தரை பேசப் பேச கைகேயிக்குச் சினம் மூண்டது. இராமனிடம்சினம் மிகுந்து கூறிய சொற்கள் ஆதலின் சொன்ன அவளுக்கும் வாய் கசக்கும் என்றார். 'கைக்குமே, தேவரே தின்னினும் வேம்பு' என்றது (நாலடி. 95) போல, இனி வருவன கைகேயி மாற்றமாம்.* ***71***

***1470. 'வெயில் முறைக் குலக் கதிரவன்***
***முதலிய மேலோர்,***
***உயிர் முதல் பொருள் திறம்பினும்,***
***உரை திறம்பாதோர்;***
***மயில் முறைக் குலத்து உரிமையை,***
***மனு முதல் மரபை;***
***செயிர் உற, புலைச் சிந்தையால்,***
***என் சொனாய்? - தீயோய்!***

*'**தீயோய்! -** கொடியவளே!; **வெயில்முறை -** ஒளிவரிசையை உடைய; **குலக்கதிரவன் -** சிறந்த சூரியன்; **முதலிய மேலோர் -** முதலாகிய உயர்ந்தோர்கள்; **உயிர் முதல் பொருள் -** உயிர் முதலாகிய பொருள்கள்; **திறம்பினும் -** போவதாயினும்; **உரை திறம்பாதோர் -** சத்தியத்தினின்றும் மாறுபடார்; (அத்தகைய) **மயில்முறைக் குலத்துஉரிமையை -** மயிலினது முறைமையைக் கொண்ட அரசகுலத்து உரிமையை உடைய; **மனுமுதல் மரபை -** வைவச்சுத மனுவின் வழித் தோன்றல்களாக உள்ள அயோத்தியின்அரச பரம்பரையை; **செயிர் உற-** குற்றம் பொருந்தும்படி; **புலைச் சிந்தையால் -** கீழ்மைப் புத்தியால்; **என் சொனாய்?' -** யாது பேசினாய்?'*

*குலத்தின் முதல்வன் சூரியன்; அவன் மகனாய் இருந்து முதலில் அயோத்தியில் அரசாண்டவன்மனு. ஆதலால் இரண்டையும் கூறினார். மயில்முறைக் குலத்து உரிமையாவது - மயிலின் குஞ்சுகளுள் முதற்பார்ப்புக்கேதோகையின் பீலி பொன்னிறம் பெறும். அதன் வழிப்பார்ப்புகளுக்கு அவ்வாறாகாது. அதுபோல் மூத்தமகன்அரசுரிமை பெறுதலும், ஏனையோர் பெறாதொழிதலும் ஆம். அவ்வுரிமையை உடையமரபு 'மனுமுதல் மரபு' என்றார். எனவே, மூத்த மகனாகிய இராமன் அரசுரிமை பெறுதலும், பரதன், இலக்குவன், சத்துருக்கனன் முதலியோர் பெறாதொழிதலும் அம்மரபின் செய்தியே என்றாளாம். இனி, கேகயம் என்பது மயிலைக் குறிக்கும்சொல் ஆதலின், 'கேகய குலத்து உரிமையை' என்று பொருள்கூறி, கைகேயி தான் பிறந்த குலத்தைச்சுட்டினாள் எனலும் ஆம். 'யான் பிறந்த கேகய குலத்துக்கு, புகுந்த மனுமுதன் மரபுக்கும் குற்றம் அடைய என்ன வார்த்தை சொன்னாய்?' என்று கூனியைக் கடிந்தாள் எனலாம். பெண்டிர், புக்க குலத்தையும்,பிறந்த குலத்தையும் ஒக்க நினையும் வழக்கம் உண்டு என்பதை. "புக்க வழிக்கும் போந்த வழிக்கும், புகை வெந்தீ, ஒக்க விதைப்பான் உற்றனை அன்றோ?" என்ற (5224) பாடற் பகுதியிலும் காணலாம். முதற்பொருளோடு "பலாவம் பொழிலின் ஒரு தாய் உயிர்த்த பல மயிற்கும், கலாவம் புனைந்த களிமயில்மூத்தது எனக் கருத" என்ற பின்னுள்ளோர் பாடல் (தணிகைப். களவு. 244) பொருந்துவதாகும்.புலை - கீழ்மை. புல் என்பது அற்பம் என்றாகும். ஆதலின் அற்பத் தன்மை. எனவே கீழ்மை என்றாயிற்று.மந்தரை கூறியது அரச குலத்து முறைமைக்கு மாறுபடாமல் பொருந்துமேல் ஏற்றுக்கொள்ளலாம் என்பதுபோலச்சற்றே கைகேயியின் மனத்தில் மெல்ல மாற்றம் ஏற்பட்டுள்ளதையும் அறியலாம்.*
*72*

***1471. 'எனக்கு நல்லையும் அல்லை நீ;***
***என் மகன் பரதன் -***
***தனக்கு நல்லையும் அல்லை; அத்***
***தருமமே நோக்கின்,***
***உனக்கு நல்லையும் அல்லை;***
***வந்து ஊழ்வினை தூண்ட,***
***மனக்கு நல்லன சொல்லினை -***
***மதி இலா மனத்தோய்!***

*'**மதி இலா மனத்தோய் -** அறிவில்லாத நெஞ்சினை உடையவளே!; **நீ எனக்கு நல்லையும்அல்லை** - நீ எனக்கு நன்மையைச் செய்பவள் அல்லள்; **என்மகன் பரதன் தனக்கு நல்லையும்அல்லை -** என் மகனாகிய பரதனுக்கு நன்மையைச் செய்பவளும்*

*அல்லள்;* ***அத் தருமமே நோக்கின்-*** *அந்த அரச தருமத்தை ஆராய்ந்தால்;* ***உனக்கு நல்லையும் அல்லை -*** *உனக்கு நன்மையைச்செய்து கொள்பவளும் அல்லள்;* ***ஊழ் வினை வந்து தூண்ட -*** *(நீ) செய்த முன்னைய வினை (விதிவழியாக) வந்து உன்னைச் செலுத்த;* ***(அதனால்) மனக்கு நல்லன சொல்லினை -*** *உன் மனத்துக்கு இதமானவற்றைச்சொன்னாய்.'*

*மந்தரை சொல்லியபடி நடந்தால் பழி, பாவங்களுக்கு இடனாதலின் 'எனக்கும், என் மகன்பரதனுக்கும் நன்மையன்று' என்றாளாம். அன்றி, அரச தருமத்தை ஆராயின் இது ஒரு சதிவேலை என எண்ணப்படுதலின் மந்தரைக்கே தீதாய் முடியும் என்றும் கூறினாள் கைகேயி. புத்தி பூர்வமாக இல்லாவிடினும் இத்தகையமாறுபாடான செயல்கள் விதிவழியாகவே நிகழும் ஆதலின் 'ஊழ் வினை தூண்ட' என்ற சொன்னாள். மனக்கு- மனத்துக்கு அத்துக் கெட்டது. இதனாதல் முன்பு, "இராமனைப் பயந்த எற்கிடருண்டோ" (1453) என்றுகூறிய கைகேயி, "என்மகன் பரதன்" என்று பரதனைத் தன்மகன் என்று கட்டுகிற அளவுக்கு மந்தரையின்போதனையால் மனமாற்றம் அடைந்திருக்கிறாள் என்பது புனலாகும். 73*

***1472. 'பிறந்து இறந்து போய்ப் பெறுவதும்,***
***இழப்பதும், புகழே;***
***நிறம் திறம்பினும், நியாயமே***
***திறம்பினும், நெறியின்***
***திறம் திறம்பினம், செய் தவம்***
***திறம்பினும், செயிர் தீர்***
***மறம் திறம்பினும், வரன்முறை***
***திறம்புதல் வழக்கோ?***

***'பிறந்து இறந்து போய் -*** *(மக்கள்) பிறந்து இறந்து சென்று;* ***பெறுவதும் இழப்பதும்புகழே -*** *அடைவதும், இழந்துவிடுவதும் புகழே ஆகும்;* ***நிறம் திறம்பினும் -*** *ஒளி மாறுபட்டாலும்;* ***நியாயம் திறம் பினும் -*** *நேர்மை மாறுபடினும்;* ***நெறியின் திறம் திறம்பினும் -*** *நல்வழியின் கூறு மாறுபடினும்;* ***செய் தவம் திறம்பினும் -*** *செய்யும் நல்ல தவம் மாறுபடினும்;* ***செயிர்தீர் மறம் திறம்பினும் -*** *குற்றம் நீங்கிய வீரம் மாறுபடினும்;* ***வரன்முறை -*** *தம் குலத்தினது மரபு முறைமை;* ***திறம்புதல் -*** *மாறுபடுதல்;* ***வழக்கோ? -*** *நியாயமோ?'*

*எதை இழந்தாலும் புகழை இழக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும். பாரம்பரிய முறை தவறிநடந்தால் புகழுக்குக் கேடு உண்டாகும். ஆதலால் வழக்கன்று என்றாள். "தோன்றிற் புகழொடு தோன்றுக" (குறள்) என்பதாம். நிறம் - ஒளி - "தாம் உள காலத்து எல்லாரானும் நன்கு மதிக்கப் படுதல்". (குறள். 653. பரி. உரை) 'வசை என்ப வையத்தார்க்கெல்லாம் இசை என்னும் எச்சம் பெறா அவிடின்(குறள் 238) என்னும் வாக்கு நினையத்தக்கது. வரன்முறை திறம்பாமை' பரதன் அரசு ஏற்பதில் நியாயப்படுத்தப்பட்டால் மற்றவை திறம் புதலைப் பற்றி நான் கவலைப்படமாட்டேன் என்ற அளவில் கைகேயியின் மன மாற்றம்நமக்கு இங்கே புலனாகும். இதுவே கூனியின் முதல் முயற்சிக்குக் கிடைத்த வெற்றி எனலாம். செய்தவம் மேற்கதி, வீடுபேறுகளைக் கூட்டுவிப்பது இம்மைப் புகழை நோக்க அவற்றைக் கைவிடினும் விடலாம்என்ற கைகேயியின் மனமாற்றம் இங்கே*

*சிந்தித்தற்குரியதாகும்.* *74* ***1473. 'போதி, என் எதிர்நின்று; நின் புன்பொறி நாவைச்***
***சேதியாது இது பொறுத்தனென்; புறம் சிலர் அறியின்,***
***நீதி அல்லவும், நெறி முறை அல்லவும், நினைந்தாய்***
***ஆதி; ஆதலின், அறிவு இலி! அடங்குதி' என்றாள்.***

***'அறிவு இலி!** - அறிவற்றவளே!; **என் எதிர் நின்று போதி** - என் எதிரிலிருந்துஅகலுவாயாக; **நின் புன்பொறி நாவை** - உன்னுடைய அற்ப உரைக்கிடன் ஆகிய நாக்கை; **சேதியாது** - துண்டித்துப் போக்காமல்; **இது பொறுத்தனென்** - இக்குற்றத்தைப் பொறுத்தேன்; **புறம் சிலர் அறியின்** - புறத்தே உள்ள சில மனிதர் அறிவாராயின்; **நீதி அல்லவும் நெறிமுறை அல்லவும்** - நீதிக்கும் நெறி முறைகளுக்கும் மாறுபாடாக; **நினைந்தாய் ஆதி** - சதி செய்தாய் ஆவாய்; **ஆதலின்-; அடங்குதி** - பேசாமல் அடங்குவாய்' என்றாள்.*

*நீ என் தோழியாதலால் உன் நாவைத் துண்டிக்காமல் விட்டேன். இத்தகைய பேச்சுவெளியார் காதில் விழுந்தால் நீ அரசருக்கெதிராகச் சதி தீட்டியதாக அறிந்து அரச தண்டனை கிடைக்கும்.அதனால் வாயை மூடு' என்றாள் கைகேயி. அற்பத்தனமாகப் பேசியபடியால் நாக்கைப் 'புன்பொறி' என்றாள். 75*

*மந்தரை மீண்டும் பேசுதல்*

***1474. அஞ்சி மந்தரை அகன்றிலள்,***
***அம் மொழி கேட்டும்.***
***நஞ்சு தீர்க்கினும் தீர்கிலாது***
***அது நலிந்தென்ன,***
***'தஞ்சமே! உனக்கு உறு பொருள்***
***உணர்த்துகை தவிரேன்;***
***வஞ்சி போலி!' என்று,***
***அடிமிசை வீழ்ந்து, உரைவழங்கும்:***

***மந்தரை** - கூனியானவள்; **அம்மொழி கேட்கும்** - கைகேயி கூறிய அச்சொற்களைக்கேட்கும்; **நஞ்சு தீர்க்கினும்** - விடத்தை (மணி, மந்திரம், மருந்து முதலியவற்றால்)தீர்த்தாலும்; **தீர்கிலாது** - நீங்காது; **அது** - அந்த விடம்; **நலிந்தென்ன**- (மீண்டும்) வருத்துதல் போல; **'வஞ்சி போலி!** - வஞ்சிக் கொடி போல்பவளே!; **தஞ்சமே!** - (எனக்குப்) பற்றுக்கோடாக இருப்பவளே!; **உனக்கு உறுபொருள்** - உனக்குநன்மை தரும் செயல்; **உணர்த்துகை** - அளிவித்தலின்று; **தவிரேன்** - நீங்கமாட்டேன்;' **என்று** - என்று சொல்லி; **அடிமிசை வீழ்ந்து** - (கைகேயியின்) கால்களில் விழுந்து வணங்கி; **உரை வழங்கும்** - மீண்டும் பேசலானாள். மந்தரையின் பேச்சுகளைத் தொடர்ந்து எட்டுச் செய்யுள்கள் கூறும். விடம் மருந்தாலும் தீராது மீளவும் வருந்துதல் போலும், மந்தரை மீண்டும் கைகேயியின் மனத்தைக் கலைக்க முயல்வது என்றார். முன்பும் கூனியை, 'வெவ்விடம் அனையவள்' (1452) என்றார். 'வஞ்சி போலி' என்பதைப் பெயராக ஆக்காது, 'வஞ்சிக்கப்பட்டாய் போலும்' என்று மந்தரை கூறியதாகவும் கொள்ளலாம். அடி மிசை வீழ்தல் காரியம் சாதிக்க விரும்புவார் செய்யும் போலி ஆகாரம் ஆகும். 76*

*1475.* ***'மூத்தவற்கு உரித்து அரசு எனும்***
***முறைமையின் உலகம்***
***காத்த மன்னனின் இளையன் அன்றோ***
***கடல்வண்ணன்?***
***ஏத்து நீள் முடி புனைவதற்கு***
***இசைந்தனன் என்றால்,***
***மீத் தரும் செல்வம் பரதனை***
***விலக்குமாறு எவனோ?***

***'மூத்தவற்கு அரசு உரித்து -*** *வயதில் முதிர்ந்தவனுக்கு அரசு உரிமையானது;* ***எனும்முறைமையின் -*** *என்கின்ற முறையை வைத்துப் பார்த்தால்;* ***உலகம் காத்த மன்னனின் -*** *உலகத்தை ஆளுகின்ற தயரதனை விட;* ***கடல் வண்ணன் -*** *கடலின் நீல நிறத்தையுடைய இராமன்;* ***இளையன் அன்றோ -*** *வயதில் இளையவன் அல்லனோ?; (தன்னைவிட வயதில் இளைய இராமன்)* ***ஏத்தும் நீள்முடி புனைவதற்கு -*** *பாராட்டப் பெறும் நீண்ட மகுடத்தைச் சூடுதற்கு;* ***இசைந்தனன்என்றான் -*** *தயரதன் சம்மதித்தான் என்றால்;* ***மீத்தரும் செல்வம் -*** *மேம்பாட்டைத்தருகின்ற அரசச் செல்வம்;* ***பரதனை எவன் விலக்கு மாறு? -*** *இராமனில் இளைய பரதனை (உரியனல்லன்என்று) நீக்குவது எவ்வாறு?'*

*தயரதன், இராமன், பரதன் என்ற மூவருள் வயது முதிர்ந்த தயரதன் இருக்கும்பொழுது இராமன்அரசாளலாம் என்றால், வயதில் மூத்த இராமன் இருக்கும்பொழுது பரதன் ஏன் அரசாளக் கூடாது என்பதுகூனியின் வாதம். கைகேயி 'முறைமையன்று' என்பதனையே கூறி மந்தரையைக் கடிந்தாள். ஆதலின்,அதனை முதலில் தன் பேச்சால் மறுத்துக் கூறி, இதில் முறைமை இருக்கிறது என்பதைக் காட்டிக் கைகேயியைமுழுமையாக மனமாற்றம் செய்ய முற்பட்டான். 'மூத்தவன்' என்பது மூத்த பிள்ளை. அண்ணன் என்னும் பொருள் உடையது. அதுபற்றியே மூத்தவனுக்குப் பட்டம் என்னும் முறைமை நிகழ்கிறது - அவ்வாறுகாணுங்கால் எவ்வாற்றானும் பரதனை அது பற்றாது. ஆனால், மந்தரை தன் சொற் சாதுர்யத்தால் மூத்தவன்என்பதற்கு வயதில் முதிர்ந்தவன் என்று பொருள் கொண்டு நிறுவிக் கைகேயியை வளைத்தாள். நீள்முடி- உயர்ந்த மகுடம்.* *77*

*1476.* ***'அறன் நிரம்பிய அருளுடை அருந் தவர்க்கேனும்,***
***பெறல் அருந் திருப் பெற்றபின், சிந்தனை பிறிது ஆம்***
***மறம் நினைந்து உமை வலிகிலர் ஆயினும், மனத்தால்***
***இறல் உறும்படி இயற்றுவர், இடையறா இன்னல்.***

***'அறன் நிரம்பிய -*** *அறவாழ்வுக்குரிய நற்குணங்களால் நிறைந்த;* ***அருளுடை -*** *கருணையுடைய;* ***அருந்தவர்க்கேனும் -*** *செய்தற்கு அரிய தவத்தைச் செய்த முனிவர்களுக்கும்;* ***பெறல் அருந்திருப் பெற்ற பின் -*** *பெறுதற்கு அரிய செல்வத்தைப் பெற்ற பிறகு;* ***சிந்தனைபிறிது ஆம் -*** *எண்ணம் வேறுபடும்; (ஆதலால் இராமன் கோசலை முதலோர் அரச பதவி பெற்றபிறகு)* ***உமை -*** *உங்களை;* ***மறம் நினைந்து -*** *கொல்லுதல் கருதி;* ***வலிகிலர்ஆயினும் -*** *துன்புறுத்தாமல் விட்டாலும்;* ***இறல் உறும்படி -*** *(நீங்களாகவே)சாகும்படி;* ***மனத்தால் இடையறா இன்னல் இயற்றுவர் -*** *மனத்தால் கருதி இடையறாத துன்பத்தைச்செய்வார்கள்.*

*கோசலை முதலியோர் இன்றைக்கு உங்களிடும் நட்பாக இருப்பதுபோல் அரசபதவி பெற்றபிறகும்இருப்பார்கள் என்று கருதாதே, கருவியால் நேரே கொல்லாவிடினும், மனத்தால் துன்பத்தைச் செய்வர்; அது பொறாமல் நீங்களாகவே இறந்தபடுவீர்கள். செல்வம் பெற்றபின் சிந்தை வேறாவது முனிவர்க்கும் உள்ளது என்றால், சாமானியர்களாய இவர்கள் அதற்கு எம்மாத்திரம்? - என்பது கூனியின் வாதம், "என் சிறுவர் அறந் திறம்பலர்" "இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ" (1452, 1453) என்று கைகேயி கூறியதை அனுசரித்து, 'இப்போது அப்படி நீ நினைக்கலாம், அரசன் ஆன பிறகு எப்படியோ' என்றுமறுத்து தன் கருத்தை வலியுறுத்தினாள். முன்னிரண்டு வரிகளின் செய்தியைப் பின்னிரண்டு வரிகள்பாதுகாத்து நிற்கின்றன.*
*78*

***1477.*** ***'புரியும் தன் மகன் அரசு எனின்,***
***பூதலம் எல்லாம்***
***விரியும் சிந்தனைக் கோசலைக்கு***
***உடைமைஆம்; என்றால்,***
***பரியும் நின் குலப்***
***புதல்வற்கும், நினக்கும், இப் பார்மேல்***
***உரியது என், அவள்***
***உதவிய ஒரு பொருள் அல்லால்!***

***'தன் மகன் அரசு புரியும் எனின் -*** *தன் புதல்வன் அரசாளுவான் ஆயின்;* ***பூதலம்எல்லாம் -*** *இப்பூமி முழுவதும்;* ***விரியும் சிந்தனை -*** *(பெற்றது போதாது என்றுமேலும் பெறவேண்டும் என்று) அகன்று செல்லும் மனத்தை உடைய;* ***கோசலைக்கு -*** *கோசலா தேவிக்கு;* ***உடைமை ஆம் -*** *சொந்தமாகிவிடும்;* ***என்றால்-; நின்பரியும் குலப் புதல்வற்கும் -*** *உன்னிடத்து அன்புடைய சிறந்த புத்திர னாகிய பரதனுக்கும்;* ***நினக்கும் -*** *உனக்கும்;* ***இப்பார் மேல் -*** *இப்பூமியில்;* ***அவள் உதவிய ஒரு பொருள் அல்லால் -*** *அந்தக் கோசலை கொடுத்த செல்வம் அல்லாமல்;* ***உரியது என்? -*** *சொந்தமாக இருப்பது என்ன?'*

*'விரியும் சிந்தனை' என்பது இயல்பாகவே பேராசையால் விரிந்து செல்லும் மனம் உடையகோசலை உனக்கு என்ன கொடுப்பாள் என்று கேட்பது போலப் பொருள்பட்டது. 'பிறந்த சேயொடும் நீதுயர்ப்படுக', 'கரை செயற்கு அருந் துயர்க் கடலில் வீழ்கின்றாய்' என (1460,1467) மேல் கூறிய வற்றை இனி விவரிக்கின்றாள் எனலாம். இனி ஒரு பொருளும் உன் விருப்பின் படி பெறமுடியாது என்றாளாம்.*
*79*

***1478.*** ***'தூண்டும் இன்னலும், வறுமையும்,***
***தொடர்தரத் துயரால்***
***ஈண்டு வந்து உனை இரந்தவர்க்கு,***
***இரு நிதி, அவளை***
***வேண்டி ஈதியோ? வெள்குதியோ?***
***விம்மல் நோயால்***

***மாண்டு போதியோ? மறுத்தியோ?***
***எங்ஙனம் வாழ்தி?***

***'தூண்டும்*** *- (தம்மைப் பிச்சை எடுக்க) ஏவுகின்ற;* ***இன்னலும்*** *- துன்பமும்;* ***வறுமையும் -; தொடர்தர*** *- தம்மைப் பின்பற்றிவர;* ***ஈண்டுவந்து*** *- நின் மனைக்குவந்து;* ***உனை இரந்தவர்க்கு*** *- உன்னிடம் யாசித்தவர்களுக்கு;* ***இருநிதி*** *- மிக்க செல்வத்தை;* ***அவளை வேண்டி*** *- அந்தக் கோசலையைக் கேட்டு;* ***ஈதியோ? -*** *(வாங்கிக்)கொடுப்பாயா?; (அல்லது)* ***வெள்குதியோ?*** *- (அவளைக்) கேட்க மனம் இல்லாமல் நாணப்பட்டுநிற்பாயா?;* ***விம்மல் நோயால்*** *- (இந்த அவல நிலை நமக்கு உண்டாயிற்றே என்ற) துன்ப நோயினால்;* ***மாண்டு போதியோ!*** *- (இதைவிடச் சாவதே மேல் என்று) தற்கொலை செய்துகொள்வாயா(அல்லது);* ***மறுத்தியோ? -*** *(இரந்தவர்களிடமே போய்) இல்லையென்று மறுப்பாயா?;* ***எங்ஙனம்வாழ்தி? -*** *எவ்வாறு வாழப்போகிறாய்?'*

*'புகழே' சிறந்தது என்றாள் (1472) கைகேயி; அதனை இப்போது எடுத்துக்கொண்டு நீ புகழும்பெற இயலாது என்று சாடுகிறாள் கூனி, புகழ், கொடுப்பதனால் வருவது "உரைப்பார் உரைப்பவை எல்லாம்இரப்பார்க்கொன் றீவார்மேல் நிற்கும் புகழ்" (குறள் 232) அன்றோ? எனவே, உன்னிடம் வந்து இரந்தவர்களுக்கு நீ எவ்வாறு கொடுப்பாய்? என்று கேட்டாள். இராமன் அரசன்; கோசலை அவன் தாய்;உலகம் அவருடைமை; உனக்கு ஏது பொருள்? என்று கைகேயி மனத்தைக் கலக்கினாள். இரப்போர்க்கு ஈய முடியாத வழி இறந்துபடிதலே தக்கது ஆம் ஆதலின், 'மறுத்தியோ மாண்டு போதியோ' என்றாளாம். "சாதலின்இன்னாத தில்லை இனிததூஉம் ஈதல் இயையாக் கடை" (குறள் 230) என்பதை இங்குக் கருதுக. "இன்மை யுரைத்தார்க்கு அது நிறைக்கல் ஆற்றாக்கால்.தன்மெய் துறப்பான் மலை" என்ற (கலி. 43: 26-27) கலித் தொகையும்இதுவே.* ***80***

***1479. 'சிந்தை என் செயத் திகைத்தனை?***
***இனி, சில நாளில்,***
***தம்தம் இன்மையும், எளிமையும்,***
***நிற்கொண்டு தவிர்க்க,***
***உந்தை, உன் ஐ, உன் கிளைஞர், மற்ற***
***உன் குலத்து உள்ளோர்,***
***வந்து காண்பது உன் மாற்றவள்***
***செல்வமோ? மதியாய்!***

***'மதியாய்!*** *- அறிவுடையவளே!;* ***என்செய*** *- என்ன செய்யலாம் என்று கருதி;* ***சிந்தை -*** *(உன்) மனத்தில்;* ***திகைத்தனை? -*** *தடுமாற்றம் அடைந்தாய்;* ***இனி-*** *வருங்காலத்து;* ***சில நாளில்*** *- சில நாள்களில்;* ***உந்தை*** *- உன் தந்தை;* ***உன் ஐ*** *- உன் அண்ணன்;* ***உன் கிளைஞர் -*** *உன் பிறந்த வீட்டுக்கு உறவினர்கள்;* ***மற்று*** *- மேலும்;* ***உன் குலத்து உள்ளோர்*** *- உன் குலத்தைச் சேர்ந்தவர்கள் (ஆகியோர்);* ***தம்தம் இன்மையும்*** *- தங்கள் தங்களது வறுமையையும்;* ***எளிமையையும்*** *- தாழ்ச்சியையும்;* ***நிற்கொண்டு*** *- உன்னைக் கொண்டு;* ***தவிர்க்க*** *- போக்கிக் கொள்ளலாம் என்று;* ***வந்து*** *- இங்கே வந்து;* ***காண்பது -*** *(நீ அதற்கு முடியாமல் உள்ளபடியால்)பார்ப்பது;* ***உன் மாற்றவள் செல்வமோ*** *- உன் சக்களத்தியின் செல்வத்தையோ?* ***81***

***1480. 'காதல் உன் பெருங் கணவனை அஞ்சி,***
***அக் கனி வாய்ச்***
***சீதை தந்தை, உன் தாதையைத்***
***தெறுகிலன்; இராமன்***
***மாதுலன் அவன்; நுந்தைக்கு***
***வாழ்வு இனி உண்டோ?***
***பேதை! உன்துணை யார் உளர்***
***பழிபடப் பிறந்தார்?***

*'**பேதை! -** அறிவில்லாதவளே!; **காதல் உன் பெருங்கணவனை அஞ்சி -** உன்மேல்அளவிறந்த அன்புடைய உன் உயரிய நாயகனான தயரதனுக்குப் பயந்து; **அக்கனி வாய்ச் சீதை தந்தை-** அந்தக் கொவ்வைக் கனிபோலச்சிவந்த வாயையுடைய சீதையின் தந்தையாகிய சனகன்; **உன் தாதையைத் தெறுகிலன் -** உன்னுடையதந்தையாகிய கேகய ராசன் மீது படையெடுத்து அழித்திலன்; **அவன் இராமன் மாதுலன் -** அந்தசனகன் இராமனுக்கு மாமன்; **நுந்தைக்கு இனி வாழ்வு உண்டோ!? -** (இராமன் சக்கரவத்தியானால்சனகன் கை ஓங்கிவிடும்) உன் தந்தையாகிய கேகயனுக்கு இனி வாழ்வு உண்டா? (அழிவுதான்); **உன்துணை-** உன்னளவுக்கு; **பழிபடப் பிறந்தார் யார் உளர்? -** பழி உண்டாகும் படி பிறந்தவர்கள்யார் இருக்கின்றார்கள்' (ஒருவரும் இல்லை).*

*புகழ் இல்லாமற் போனாலும் போகட்டும் என்றால், பழியல்லவா உண்டாகும் போல் உள்ளதேஎன்றாள் கூனி, தசரதனுக்குக் கட்டுப்பட்டு சனகன் சும்மா இருக்கிறான்; எதிர்காலத்தில் இராமன்அரசனானால் சனகன் சும்மா இரான் என்றாள். சனகனுக்கும் கேகயனுக்கும் இயற்கையில் பகை உண்டு என்பதும்இதனால் விளங்கும்.* ***82***

***1481. 'மற்றும் நுந்தைக்கு வான்***
***பகை பெரிது உள; மறத்தார்***
***செற்றபோது, இவர் சென்று***
***உதவார் எனில், செருவில்***
***கொற்றம் என்பது ஒன்று,***
***எவ் வழி உண்டு? அது கூறாய்!***
***சுற்றமும் கெட, சுடு துயர்க்***
***கடல் விழத் துணிந்தாய்!***

*'**மற்றும்-** மேற்சொல்லியதன்மேலும்; **நுந்தைக்கு -** உன் தந்தையாகிய கேகயனுக்கு; **வான் பெரிது பகை உள -** மிகப் பெரிய பகைகள் இருக்கின்றன; **மறத்தார் -** அப்பகைவர்கள்; **செற்ற போது -** (உன் தந்தையை அழிக்கப்) போரிட முனைந்தபோது; **இவர்-** கோசல நாட்டார்; **சென்று உதவார் எனில் -** (உன் தந்தைக்கு உதவி யாகச்) சென்றுபோரில் உதவாவிட்டால்; **செருவில் -** சண்டையில்; **கொற்றம் என்பது ஒன்று -** வெற்றி என்பதாகிய ஒன்று; **எவ்வழி உண்டு? -** எப்படி எவ்விதத்தில் (உன் தந்தைக்கு)உண்டாகும்; **அது கூறாய் -** அந்த வழியைச் சொல்லு (ஆகவே); **சுற்றமும்***

*கெட* - *உறவின்முறையாரும் அழிய;* ***சுடு துயர்க்கடல் விழ*** - *சுடுகின்ற துன்பக் கடலில் (நீயும்) விழுவதற்கு;* ***துணிந்தாய்*** - *உறுதி கொண்டு விட்டாய் ( போலும்).'*

*இறுதி வரியை விளியாகவும் கொள்ளலாம். சனகன் போர் செய்யாவிடினும்வேறு அரசர்கள் உன் தந்தையோடு போர்செய்ய வரின் இராமன் உதவ வருவானோ? வாரான். எனவே, நீஉன் குலத்தையும் அழிக்க வழி செய்து கொண்டுள்ளாய் என்றாள் கூனி. கேகயனுக்குப் பகை மிகுதி உண்டு என்பதும் இதனால் போதரும். இவற்றால்உன் பெற்றோரைக் கருதியும் பரதனை அரசனாக்க வேண்டிய கட்டாயம் உனக்கு உளது என்றாளாம்.* ***83***

***1482. 'கெடுத்து ஒழிந்தனை உனக்கு அரும்***
***புதலவனை; கிளர் நீர்***
***உடுத்த பாரகம் உடையவன்***
***ஒரு மகற்கு எனவே***
***கொடுத்த பேர் அரசு, அவன் குலக்***
***கோமைந்தர்தமக்கும்.***
***அடுத்த தம்பிக்கும் ஆம்;***
***பிறர்க்கு ஆகுமோ?' என்றாள்.***

**'உனக்கு அரும் புதல்வனை** - *உன்னுடைய பெறுதற்கரிய மகனாகிய பரதனை;* **கெடுத்துஒழிந்தனை** - *வீணாக்கி அழிந்தாய்;* **கிளர்நீர்** - *மேலெழும்புகின்ற நீரையுடைய கடலை;* **உடுத்த பாரகம்** - *ஆடையாக உடுத்த நிலவுலகத்தை;* **உடையவன்** - *தன்னுடைமையாகப்பெற்ற சக்கரவர்த்தி தயரதன்;* **ஒரு மகற்கு எனவே** - *ஒப்பற்றதன் இராமனுக்காக;* **கொடுத்த பேர் அரசு** - *ஆட்சியுரிமை கொடுத்துவிட்ட கோசல அரசு;* **அவன் குலக் கோமைந்தர்தமக்கும்** - *இராமன் குலத்தில் தோன்றும் அரசகுமார்களுக்கும்;* **அடுத்த தம்பிக்கும்** - *இராமனை எப்பொழுதும் சார்ந்து கிடக்கின்ற தம்பியாகிய இலக்குமணனுக்கும்;* **ஆம்** - *ஆகும்;* **பிறர்க்கு ஆகுமோ?** - *(அப்படியல்லாது) வேறு பிறருக்கு (பரதனுக்கு) மீள வருமோ? (வராது);'* **என்றாள்** - *என்று கூறி முடித்தாள்.*

*இராமனுக்குப் பின் பரதன் ஆள்வான் என்று நினைத்தாயாயின் அதுவும் இயலாது என்றாள் கூனி. இப்பொழுதே பரதனை அரசனாக்குவதே விவேகம்; இல்லையேல் எப்போதும் பரதன் அரசனாக இயலாது என்றுகூறி முடித்தாள் கூனி. மகன்மேல் உள்ள பாசம், பிறந்த வீட்டுப் பாசம் இவற்றை அடியாக வைத்து மந்தரை கைகேயியின் மனத்தைத் திரித்தாள் என்க. "பிறர்க்கும் ஆகுமோ" என்ற பாடம் ஓசைக்குஒத்து வராது ஆதலின் கொள்ளப் பெறவில்லை.* ***84***

*கைகேயி மனம் மாறுதல்*

***1483. தீய மந்தரை இவ் உரை செப்பலும், தேவி***
***தூய சிந்தையும் திரிந்தது - சூழ்ச்சியின் இமையோர்***
***மாயையும், அவர் பெற்ற நல் வரம் உண்மையாலும்,***
***ஆய அந்தணர் இயற்றிய அருந் தவத்தாலும்.***

***தீய மந்தரை -*** கொடிய கூனி; ***இவ் உரை செப்பலும் -*** இவ் வார்த்தைகளைச்சொன்ன அளவிலே; ***சூழ்ச்சியின் இமையோர் மாயையும் -*** (எதை எவ்வாறு நடத்துவது என்ற) ஆலோசனையில் சிறந்த இமையோர்களது மாயையினாலும்; ***அவர் பெற்ற -*** தேவர்கள் (திருமாலிடம்) பெற்றுக்கொண்ட; ***நல்வரம் -*** நல்ல வரம்; ***உண்மையாலும் -*** இருக்கின்றபடியாலும்; ***ஆய அந்தணர் -*** அறவோர் ஆகிய வேதியர்; ***இயற்றிய -*** செய்த; ***அருந் தவத்தாலும் -*** செய்தற்கு அரிய தவத்தாலும்; ***தேவி தூய சிந்தையும் -*** கைகேயியின் தூய மனமும்; ***திரிந்தது -*** மந்தரை வழியில் மாறியது.

*'சூழ்ச்சியின்' என்பதற்கு மந்தரையின் சூழ்ச்சியினால் என்றும்பொருள் உரைப்பர். தேவர்கள் மாயையே கூனியாய் வந்தது என்பது ஒரு வழக்கு, இனி இராமன்பால்அளவுகடந்த பேரன்புடையவளும் தூயவளும் ஆகிய கைகேயித் தாய் கேவலம் கூனியால் மனமாற்றம் அடையக்கூடியஅளவுக்குச் சிறுமையுடைய சக்கரவர்த்தினியல்லள்; அவள் மனம் திரிவதற்கு அகக்காரணம் ஆகத் தேவர்மாயையும் அவர் பெற்ற வரமும், முனிவர்களது (இராவணாதிகள் அழிய வேண்டும் என்று இயற்றிய)அருந் தவமுமே இருந்தன. அதனாலேயே மனமாற்றம் அடைந்தாள் என்றார் என்க. 'இவ்வுரை' என்றது,'மூத்தவர்க்குரித்து அரசு' (1475) என்பது தொடங்கி, 'கெடுத்தொழிந்தனை' (1482) என்பதுவரை உள்ள எட்டுச் செய்யுள்களில் உள்ள அத்தனையையும் குறிப்பிடும். பெண்களுக்கே விடலாற்றாத பிறந்தவீட்டுப் பாசம் கூனியால் பெரிதும் எடுத்துப் பேசப்பட்டது. 'முறைமை அன்று' என்ற கைகேயிக்கு'முறைமை உண்டு' எனக் கூனி விளங்கினாள். காரிய காரணங்களோடு இயைத்துக் கூனி தன் கருத்தைக் கைகேயி ஏற்குமாற செய்தாளாம். இமையோர் வரம் என்றது, பாற்கடலிற் கண்வளரும் பரந்தாமனிடம்இந்திராதி தேவர்கள் வேண்டியதும், அப்பரமன் "வளை மதில் அயோத்தியில் வருதும் தாரணி" என்றும், "தசரதன் அனையவர் வரமும், வாழ்வும், ஓர், நிசரத கணைகளால் நீறு செய்ய யாம், கசரத துரகமாக்கடல்கொள் காவலன், தசரதன் மதலையாய் வருதும் தாரணி" என்றும், உலைவுறும் அமரருக் குரைத்தவார்த்தையை. (200, 201) 'தூய சிந்தையும் திரிந்தது" உம்மை சிறப்பும்மை. 'திரியாத மனமும்'என அதன் உயர்வு சிறப்பினை விளக்கி நின்றது.* ***85***

***1484. அரக்கர் பாவமும்,***
***அல்லவர் இயற்றிய அறமும்***
***துரக்க, நல் அருள் துறந்தனள்***
***தூ மொழி மடமான்;***
***இரக்கம் இன்மை அன்றோ,***
***இன்று, இவ் உலகங்கள், இராமன்***
***பரக்கும் தொல் புகழ்***
***அமுதினைப் பருகுகின்றதுவே?***

***அரக்கர் பாவமும் -*** இராக்கதர் (செய்த) தீவினையும்; ***அல்லவர் இயற்றியஅறமும் -*** தேவரும் முனிவரும் செய்த நல்வினையும்; ***துரக்க -*** (மறைந்து) ஏவுதலால்; ***நல் அருள் துறந்தனள் -*** நல்ல இரக்கத்தைக் கைவிட்டாள்; ***தூ மொழி மடமான் -*** தூய மொழிகளைப் பேசும் இளைய மான் போலும் கைகேயியின்; ***இரக்கம் இன்னை அன்றோ -*** கருணை இல்லாத தன்மையால்அல்லவா; ***இவ் உலகங்கள் -*** இந்த உலகம் எல்லாம்; ***இன்று -*** இன்றைக்கும்; ***இராமன் -*** இராமபிரானது; ***பரக்கும் -*** எங்கும் பரந்து

*செல்லும்;* ***தொல்புகழ்அமுதினை*** *- பழமையாகிய புகழ் என்கின்ற அமுதத்தை;* ***பருகுகின்றதுவே*** *- (செவிகளால்)உண்டு (ஆனந்தம் அடைகின்றது)!*

*கைகேயியின் மனமாற்றம் நிகழவில்லையானால் இராமாயண காவியம் தான்றாதாம்; இராமன்புகழை அனுபவிக்க உலகத்திற்கு வாய்பு இல்லையாம். கைகேயி மனம் திரிந்ததும் நல்லதாயிற்று. இராமன் புகழை உலகம் உண்டு பருகித் தேக்கெறிய உதவி செய்தது என்றார். புகழை அமுதென்றார். கேட்போர்க்குப் பிறவா நெறியாகிய பரமபதம் தந்து அருளுதலின், இங்கும் 'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும் ஆகிய பெரிய காரணங்களே உள் நின்று தூமொழி மடமானை இரக்கம் அற்றவளாகச் செய்தது என்றது காண்க. கைகேயியால் அல்லவா சிறையிருந்தவள் ஏற்றம் செப்பும் ஸ்ரீராமகதை கிடைத்தது என்று தீமையிலும் நன்மை தோன்றக் கூறினார்.* ***86***

*மனமாற்றம் அடைந்த கைகேயி பரதன் முடிசூட உபாயம் கேட்டல்*

***1485. அனைய தன்மையள் ஆகிய***
***கேகயன் அன்னம்,***
***வினை நிரம்பிய கூனியை***
***விரும்பினள், நோக்கி,***
***'எனை உவந்தனை; இனியை என்***
***மகனுக்கும்; அனையான்***
***புனையும் நீள் முடி பெறும்படி***
***புகலுதி' என்றாள்.***

***அனைய தன்மையள் ஆகிய*** *- அப்படிப்பட்ட மனம் மாறின தன்மை உடையளாகிய;* ***கேகயன்அன்னம்*** *- கைகேயி;* ***வினை நிரம்பிய கூனியை*** *- சூழ்ச்சி நிறைந்தவளாகிய மந்தரையை;* ***விரும்பினள் நோக்கி*** *- விரும்பிப் பார்த்து;* ***'எனை உவந்தனை*** *- என்னிடம்பிரியம் வைத்துள்ளாய்;* ***(நீ) என் மகனுக்கும் இனியை*** *- நீ என்மகனாய பரதனுக்கும் நல்லவளே;* ***அனையான்*** *- அந்தப் பரதன்;* ***புனையும் நீள்முடி*** *- அழகு செய்யப் பெற்ற உயர்ந்தமுடியை;* ***பெறும்படி*** *- அடையும் விதத்தை;* ***புகலுதி*** *- சொல்லுக;'* ***என்றாள்.***

*எடுத்த காரியத்தை எப்படி முடிப்பது என்பதில் தேர்ந்தவள் கூனி, தன் முதுகில் உண்டையடித்தான்என்பதனால் வஞ்சம் கொண்டு பழி வாங்கும் உணர்வுடன் இராமனைக் காட்டுக்கு அனுப்புவதே அவள் நோக்கம்; பரதனைப் பற்றி அவளுக்குக் கவலை இல்லை; ஆயினும் தன் நோக்கம் நிறைவேறக் கைகேயியையும்பரதனையும் கருவியாக அவள் பயன்படுத்திக்கொண்டாள். இதனை முடிக்கச் சதுரப்பாடான சொற்றிறமையும். கைகேயியின் பலவீனமும் எது என்பதறிந்து அவளைப் பயனுறுத்தி, பயமுறுத்தி மனம் மாறித் தன் கருத்திற்கிசையச் செய்து கொண்டதும்ஆகிய இவையே அவளை 'வினை நிரம்பிர கூனி' எனச் சொல்வதற்குப் போதுமானவை. இவ்விடத்தில், 'தீவினை நிரம்பிய கூனி' என்ற பொருள் சிறக்குமேற் கொள்க. 'முன் என் மகன் பரதன்'(1471) என்றது போல இங்கே 'என் மகன்' என்று கைகேயி கூறுவது காண்க. இனி, பரதனுக்கு அரசு பெறுமாறுஎவ்வாறு? என்று அதற்குரிய வழி*

*(உபாயம்) கூறுமாறு கூனி யையே கேட்கிறாள் கைகேயி. கூனியின்கட்டுப்பாட்டில் கைகேயி வந்துவிட்டாள் என்பதை இது காட்டுகிறது.* *87*

கூனியின் ஆணை

***1486. மாழை ஒண் கணி உரைசெய,***
***கேட்ட மந்தரை, 'என்***
***தோழி வல்லள்; என் துணை வல்லள்'***
***என்று, அடி தொழுதாள்;***
***'தாழும் மன் நிலை; என் உரை***
***தலைநிற்பின், உலகம்***
***ஏழும் ஏழும் உன் ஒரு மகற்கு***
***ஆக்குவென்' என்றாள்.***

***மாழை ஒண் கணி*** - *(பிளந்த) மாவடுவைப் போலும் ஒள்ளிய கண்களையுடைய கைகேயி;* ***உரைசெய*** - *(இவ்வாறு) சொல்ல;* ***கேட்ட*** - *அதுகேட்ட;* ***மந்தரை*** - *கூனி;* ***'என் தோழி வல்லள்*** - *என் தோழி வல்லமையுடையவள்;* ***என் துணை வல்லள்'*** - *என்உதவியாய தலைவி திறமைக்காரியே;* *என்று - எனச் சொல்லி;* ***அடி தொழுதாள்*** - *கைகேயி காலில் வணங்கினாள்; (பிறகு)* ***'மன் நிலை தாழும்*** - *அரசனாகிய தயரதன் கொண்டுள்ள முடிவுதாழ்ச்சியடையும்;* ***என் உரைதலை நிற்பின்*** - *என் சொல்லை (நீ) உன்னுடைய தலைமேற்கொண்டுநிற்பதனால்;* ***உன் ஒரு மகற்கு*** - *உன்னுடைய ஒப்பற்ற மகனாகிய பரதனுக்கு;* ***உலகம்ஏழும் ஏழும் ஆக்குவேன்'*** - *பதினான்கு உலகங்களையும் உரிமையாகச் செய்வேன்;'* ***என்றாள்*** - *என்று சொன்னாள்.*

*தன் கருத்துக்குக் கைகேயி உடன்பட்டமைபற்றிப் பாராட்டினாள். பிறகு தயரதனைக் கண்டோவேறு காரணத்தாலோ மனம் மாறிவிடக் கூடாது என்பதற்காக, 'என் உரை தலை நிற்பின்' என்றுஆணையிட்டாள். மனம் மாறாத பொழுது கெஞ்சுவதும், மனம் மாறித் தன் வசம் ஆனபோது விஞ்சுவதும் இத்தகைய சூழ்ச்சியாளர் இயல்பேயாம். முழுமையாகக் கைகேயியைத் தன் கட்டுப்பாட்டின்கீழ் கொண்டுவந்துமேற் கூறுகின்றாள். 88 மந்தரை உரைத்த உபாயம்*

***1487. 'நாடி ஒன்று உனக்கு உரைசெய்வென்;***
***நளிர் மணி நகையாய்!***
***தோடு இவர்ந்த தார்ச் சம்பரன்***
***தொலைவுற்ற வேலை***
***ஆடல் வென்றியான் அருளிய வரம்***
***அவை இரண்டும்***
***கோடி' என்றனள், உள்ளமும்***
***கோடிய கொடியாள்.***

***உள்ளமும் கோடிய கொடியாள்*** - *உடம்பு வளைந்து கூனி யானாற்போல; உள்ளமும் கோணிப்போனகொடியவளாய மந்தரை;* ***'நளிர்மணி நகையாய்!*** - *குளிர்ந்த முத்துமணியைப் போன்ற புன்சிரிப்பை உடையவளே!;* ***உனக்கு -; ஒன்று நாடி***

***உரைசெய்வென் -*** ஒரு செய்தியை ஆராய்ந்துசொல்லுகிறேன்; ***தோடு இவர்ந்த தார்ச் சம்பரன்-*** பூவிதழ் செறிந்த வெற்றிமாலை அணிந்தசம்பராசுரன்; ***தொலைவுற்ற வேலை*** - போரில் (தயரதன்பால்) தோல்வியுற்று அழிந்தபோது; ***ஆடல் வென்றியான் -*** விளையாட்டாகப் போரில் வெற்றி சூடும் தயரதன்; ***அருளிய -*** உனக்குக் கொடுத்த; ***வரம் அவை இரண்டும் -*** இரண்டு வரங்களாகிய அவற்றை; ***கோடி' -*** (இப்போது அவனிடம்) கொள்வாயாக;' ***என்றனள் -*** என்று (உபாயம்) கூறினாள்.

*சம்பராகர யுத்தத்தில் தயரதனுக்குத் தேர்ச்சாரதியாக இருந்தவள் கைகேயி. அப்போது ஓர்அபாயத்தில் தயரதனை மீட்டதற்கு அவன் உவந்து அவளுக்கு இரு வரம் பெறுக எனக் கொடுத்தான். அவள்வேண்டும்போது பெறுவதாகச் சொல்லி அப்போது கொள்ளாது அவ்வரங்களை விட்டாள்; அவற்றை அவன்பால் இப்போது கேட்டுப் பெறுக என்றாள் மந்தரை. 'அருளிய' என்றதனால் தயரதன் தானே உள்ள முவந்துதந்த வரங்கள், மறுக்க வொண்ணாதவை என்பது போதரும். 'உள்ளமும்' என்ற உம்மை எச்சவும்மை; உடலேயன்றி எனலின் இறந்தது தழீஇய எச்சவும்மையாம். விளையாட்டுப் போல் வெற்றி பெறுபவன்என்பதனை ஆடல் வென்றியான் என்றார் - போர்த் தொழில் எளிது என்பது தோன்ற. இனி ஆடல்- போர்த் தொழிலில். வென்றியான் - வெற்றிசூடுபவன் எனவும் உரைக்கலாம்.* ***89***

***1488. 'இரு வரத்தினில், ஒன்றினால்***
***அரசு கொண்டு, இராமன்***
***பெரு வனத்திடை ஏழ் - இரு***
***பருவங்கள் பெயர்ந்து***
***திரிதரச் செய்தி, ஒன்றினால்;***
***செழு நிலம் எல்லாம்.***
***ஒருவழிப்படும் உன் மகற்கு;***
***உபாயம் ஈது' என்றாள்.***

***'இரு வரத்தினில் -*** அவ்விரண்டு வரங்களுள்; ***ஒன்றினால் -*** ஒரு வரத்தால்; ***அரசு கொண்டு -*** அரசாட்சியை உன் மகனதாக ஆக்கிக்கொண்டு; ***ஒன்றினால் -*** மற்றொன்றினால்; ***இராமன் -; பெருவனத்திடை -*** பெரிய காட்டின்கண்; ***ஏழ் - இருபருவங்கள் -*** பதினான்கு ஆண்டுகள்; ***பெயர்ந்து திரிதரச் செய்தி -*** (அயோத்தியிலிருந்து)நீங்கி ஓரிடத்தில் இல்லாமல் சுற்றியலையச் செய்வாயாக; (செய்தால்) ***உன் மகற்கு -*** உன் மகனாகிய பரதனுக்கு; ***செழுநிலம் எல்லாம் -*** வளப்பமான உலகமுழுதும்; ***ஒரு வழிப்படும்-*** அடங்கி நேர்படும்; ***ஈது உபாயம் -*** இதுவே உபாயமாகும்; ***என்றாள் -***

*பருவம் என்பது இங்கு ஆண்டைக் குறித்தது. கூனிக்கு இராமன்பால் உள்ள சீற்றம் இங்குவிளங்குகிறது. 'பெருவனம்' என்பதும், 'திரிதரச் செய்தி' என்பதும் அதைக் காட்டும், பரதனுக்குஅரசு கிடைப்பதைவிட, இராமன் காடு செல்வதிலேயே கூனிக்கு நாட்டம். இராமன் ஏன் காடு செல்ல வேண்டும் என்று கைகேயி கேட்கக் கூடும் என்று கருதி இராமன் இங்கேயே இருந்தால் நாடு பரதன் வசப்படாது;ஆதலால், நாடு முழுவதும் பரதன் வசப்படி வேண்டுமாயின் இராமன் கோசலத்தில் இல்லாமல் இருப்பதுதான்நல்லது என்றாள் கூனி. இராமன் காடு செல்ல வரம் கேட்டு அவனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டால் இருப்பவருள் மூத்தவன் பரதன் நாடாள்வதில் சிக்கல்*

*இல்லை; முறையும் தவறாது என்று கருதினாள்எனலும் ஆம். இம்முறையில் இராமனைக் காட்டுக்கு அனுப்ப ஒரு வரம் கேட்டலே போதும் 'செழுநிலம் எல்லாம் உன் மகற்கு வழிப்படும்' என்றும் கூனி நினைத்துரைத்தாள் எனலும் ஆம்.*
***90***

கூனியைக் கைகேயி மகிழ்ந்து பாராட்டுதல்

***1489. உரைத்த கூனியை உவந்தனள்,***
***உயிர் உறத் தழுவி,***
***நிரைத்த மா மணி ஆரமும்***
***நிதியமும் நீட்டி,***
***'இரைத்த வேலை சூழ் உலகம் என் ஒரு***
***மகற்கு ஈந்தாய்;***
***தரைக்கு நாயகன் தாய் இனி நீ'***
***எனத் தணியா.***

***உரைத்த கூனியை** - (இவ்வுபாயம்) சொன்ன மந்தரையை; (கைகேயி) **உவந்தனள் -** மகிழ்ந்து; **உயிர் உறத் தழுவி -** இறுகத் தழுவிக் கொண்டு; **மாமணி நிரைத்த ஆரமும்நிதியமும் நீட்டி -** சிறந்த மணிக்கற்கள் வரிசையாக வைத்துச் செய்யப் பெற்ற மாலையும்,ஏனைய செல்வங்களும் அளித்து; **'என் ஒரு மகற்கு -** என் ஒப்பற்ற புதல்வனுக்கு; **இரைத்த வேலை சூழ் உலகம்** - ஒலிக்கும் கடல் சூழ்ந்த உலகத்தை; **ஈந்தாய் -** கொடுத்தாய்; **(ஆதலால்) இனி நீ தரைக்கு நாயகன் தாய்'-** இனிமேல்நீயே பூமிக்கரசனாகிய பரதனின் தாய் ஆவாய்;' **என -** என்று; **தணியா -** தாழ்ந்துபாராட்டி; (தொடரும்).*

*'பரதனுக்கு நான் பெற்ற தாய்; இன்று அரசை அவனுக்குப் பெற்றுத் தந்ததால் பரத அரசனுக்குநீயே தாய்' என்று கூனியைப் பாராட்டினாள். தழுவி, நீட்டி தணியா என்ற வினையெச்சங்கள் அடுத்தபாட்டில் முடியும். தணிதல் - தாழ்தல். 'தணியா' என்பது 'செய்யா' என்னும் வாய்பாட்டில் வந்த வினையெச்சம். அது உடன்பாட்டுப் பொருளது. தணிந்து - தாழ்ந்து என்றாம். தன்னைத் தாழ்த்திக்கொண்டு தயால்லள் என்று சொல்லி, அவளைத் தாய் என்று உயர்த்திப் பாராட்டினாளாம்.*
***91***

கைகேயியின் உறுதிமொழி

***1490. 'நன்று சொல்லினை; நம்பியை***
***நளிர் முடி சூட்டல்,***
***துன்று கானத்தில் இராமனைத் துரத்தல்***
***இவ் இரண்டும்***
***அன்றது ஆம் எனில், அரசன் முன்***
***ஆர் உயிர் துறந்து***
***பொன்றி நீங்குதல் புரிவென் யான்;***
***போதி நீ ' என்றாள்.***

*‘(**நீ) நன்று சொல்லினை** - நீ நல்ல உபாயம் சொன்னாய்; **நம்பியை நளிர்முடிசூட்டல்** - பரதனைச் செறிந்த மகுடத்தால் சூட்டுதலும்; **இராமனைத் துன்று கானத்தில் துரத்தல்**- இராமனை நெருங்கிய காட்டில் ஓட்டுதலும்; **இவ் இரண்டும்** - இந்த இரண்டும்; **அன்றது ஆம் எனில்** - அல்லாமல் போமாயின்; **அரசன் முன்** - சக்கரவர்த்தியாகியதயரதன் எதிரில்; **யான் ஆர் உயிர் துறந்து** - நான் என்னுடைய பெறுதற்கரிய உயிரை விட்டு; **பொன்றி** - இறந்து; **நீங்குதல்** - இவ்வுலகை விட்டு நீங்குதலை; **புரிவென்** - செய்வேன்; **நீ போதி** - நீ போவாயாக;’ **என்றாள்** - என்று சொநீன்னாள்.*

*இவ்வாறு கைகேயி உரைத்தபடியால் இனி இவள் சிறிதும் மாறமாட்டாள் என்ற உறுதி மந்தரைக்குஉண்டாயிற்று. இவ் வாக்குறுதியைப் பெறவே ‘என் உரை தலை நிற்பின்’ என்று (1486) முன்னர்க்கூனி கூறினாளாம். ‘இரண்டு வரங்களையும் பெறுவேன்; நாயகன் தராவிடின் நான் நமனுலகம் புகுவேன்’ என்று உறுதி உரைத்தாள் கைகேயி. இனியும் கூனி தாமதிப்பின் அவளால்தான் நிகழ்ந்தது என்றுஐயுறும் ஆதலின் அவளை ‘நீ போதி’ என்ற அப்புறப்படுத்தினாள். ‘தணியா’ என்ற முன்பாட்டின் வினையெச்சம் ‘என்றாள்’ என இங்கே முடிந்தது.* ***92***

## கைகேயி சூழ்வினைப் படலம்

கூனியினால் மனம் திரிந்த கைகேயி தன் அலங்காரத்தை அழித்துக் கொண்டு தரையில் கிடந்தாள். இராமன் முடிசூட இருப்பதை அவளுக்குத் தெரிவிக்க வந்த தயரதன் அவளை எடுத்து அவளது துயரத்திற்குக் காரணம் கேட்டான். அவள் அவனிடம் இரு வரங்களைக் கேட்க. அவனும் தருவேன் என்றான். கைகேயி இரு வரங்களைக் கேட்டாள். தயரதன் பெருந்துயர் உற்றான். அவள் காலில் விழுந்து ஒரு வரத்தைப் பெற்று, இராமனைக் காட்டுக்கு அனுப்பும் மற்றொரு வரத்தைக் கேட்காதிருக்குமாறு வேண்டினான். அவள் அதற்கு இணங்க வில்லை. அவன் மண்ணில் விழுந்து புலம்பினான். அவள் வரம் தர மறுத்தால் உயிர்விடுவதாகச் சொன்னாள். அவன் வரத்தை நல்கி மூர்ச்சை அடைந்தான். அவள் செயல் முற்றித் துயின்றாள். இரவு கழிந்தது; பொழுது விடிந்தது. இராமன் முடிசூடுவதைக் குறித்து நகர மக்கள் மகிழ்ந்தனர். முடிசூட்டு மண்டபத்துள் அரசர்கள், அந்தணர்கள் முதலியோர் நிறைந்தனர். வசிட்டன் முடி சூட்டுவதற்கு வேண்டுவன செய்தான். மன்னனை அழைத்துவரச் சுமந்திரனை அனுப்பினான். அவனிடம் இராமனை அழைத்துவருமாறு சொன்னாள் கைகேயி. அரண்மனைக்குச் செல்லும் இராமனைக் கண்டு மக்கள் மகிழ்ந்தனர். இராமன் அரண்மனையில் அரசனைக் காணாமல் கைகேயியின் அரண்மனை புகுந்தான். அவன் எதிரே கைகேயி வர, அவளை வணங்கினான். அவள், இராமன் காடு செல்ல வேண்டும் என்பது மன்னன் கட்டளை என்றாள். இராமன் மகிழ்ச்சியோடு அவளிடம் விடைபெற்றுக் கோசலையின் மாளிகைக்குச் சென்றான்.

இப் படலத்தில் இடம் பெறும் விடியற் கால நிகழ்ச்சிகள் பற்றிய பாடல்கள் தற்குறிப்பேற்றஅணி நயம் நிறைந்து கற்பனை வளம்செறிந்து உயர்ந்த கவிதைகளாய்த் திகழ்கின்றன.

கைகேயி தன் கோலம் அழித்தல்

**1491. கூனி போன பின், குல மலர்க்**
**குப்பைநின்று இழிந்தாள்;**
**சோனை வார் குழல் கற்றையில்**
**சொருகிய மாலை,**
**வாளை மா மழை நுழைதரு மதி**
**பிதிர்ப்பாள்போல்,**
**தேன் அறவாவுறு வண்டினம்**
**அலமர, சிதைத்தாள்.**

**கூனி போன பின்** - தன் பணிப்பெண்ணாகிய மந்தரை விடை பெற்றுச் சென்றபின்பு; **குல மலர்க் குப்பை நின்று இழிந்தாள்** - கைகேயி சிறந்த மலர்களின் குவியலால்ஆகிய படுக்கையிலிருந்து இறங்கி; **சோனை வார் குழல் கற்றையில்** - கருமேகம் போன்றதன் நீண்ட கூந்தல் தொகுதியில்; **சொருகிய மாலை** - சூடியிருந்த பூ மாலையை; **வான மா மழை நுழைதரு மதி** - விண்ணிலே பெரிய கார்காலத்து மேகத்தில் நுழைந்திருக்கின்ற சந்திரனை; **பிதிர்ப்பாள் போல்** - இழுத்துச் சிதறவிப்பவள் போல; **தேன் அவாவுறு**

***வண்டு இனம்அலமர* -** பூவில் உள்ள தேனை விரும்பி மொய்க்கின்ற வண்டுக் கூட்டம் நிலைகெட்டுச் சுழலுமாறு; ***சிதைத்தாள்* -** கூந்தலிலிருந்து பிடுங்கிச் சிதைத்தெறிந்தாள்.

கூந்தலில் சொருகியிருந்த பூமாலையைக் கைகேயி எடுத்தெறிந்தது மேகத்தில் நுழைந்த சந்திரனைப்பிதிர்ப்பது போல இருந்தது; தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. குப்பை - தொகுதி. மலர்க்குப்பை- ஆகுபெயராய்ப் படுக்கையைக் குறித்தது. இழிந்தாள் - முற்றெச்சம். கூந்தலிருந்து மாலையை எடுத்தெறிந்ததுஅவளுக்கு நேர இருக்கும் அமங்கலத்தைக் குறிப்பாய்க் காட்டுகிறது. *1*

*1492.* ***விளையும் தன் புகழ் வல்லியை***
***வேர் அறுத்தென்ன,***
***கிளை கொள் மேகலை சிந்தினள்;***
***கிண்கிணியோடும்***
***வளை துறந்தனள்; மதியினில் மறுத்***
***துடைப்பாள்போல்,***
***அளக வாள் நுதல் அரும் பெறல்***
***திலகமும் அழித்தாள்.***

***விளையும் தன் புகழ் வல்லியை* -** வளரும் தன்புகழாகிய கொடியை; ***வேர் அறுத்துஎன்ன* -** வேரொடு அறுத்தாற் போல; ***கிளை கொள் மேகலை*** - ஒளியைக் கொண்ட மேகலாபரணத்தை; ***சிந்தினாள்* -** அறுத்தெறிந்தாள்; ***கிண்கிணியோடும் வளை துறந்தனள்* -** பாதக் கிண்கிணியுடனே கை வளையல்களையும் கழற்றி நீக்கினாள்; ***மதியினில் மறு* -** சந்திரனிடத்தில்இருக்கும் களங்கத்தை; ***துடைப்பாள் போல*** - அகற்றுபவளைப் போல; ***அளக வாள் நுதல்* -** கூந்தலைச் சார்ந்து அமைந்துள்ள ஒளிபொருந்தியநெற்றியில் உள்ள; ***பெறல் அரும் திலகமும்*** - பெறுதற்கரிய திலகத்தையும்; ***அழித்தாள்-*** துடைத்தாள்.

மேகலையை அறுத்தெறிந்தது புகழை வேரொடும் அறுத்தது போலும் எனவும், நெற்றியில் திலகத்தைஅழித்தது மதியின் மறுவைத் துடைத்தது போலும் எனவும் கூறினார். இவை தற்குறிப்பேற்றம். திலகத்தின்அருமை நோக்கி 'அரும் பெறல்' என்னும் அடை மொழி தந்தார். அறுத்தென்ன - தொகுத்தல் விகாரம். கிண்கிணி - காரணப் பெயர். கிண்கிண் என ஒலித்தலான். *2*

*1493.* ***தா இல் மா மணிக் கலன் மற்றும்***
***தனித் தனி சிதறி,***
***நாவி ஓதியை நானிலம்***
***தைவரப் பரப்பி,***
***காவி உண் கண் அஞ்சனம்***
***கான்றிடக் கலுழா,***
***பூ உதிர்ந்தது ஓர் கொம்பு எனப்***
***புவிமிசைப் புரண்டாள்.***

***மற்றும் தா இல் மா மணிக் கலன்*** - *பின்னும் குற்றமற்ற பெரிய மணிகளால் ஆகியஅணிகளையும்;* ***தனித்தனி சிதறி*** - *வேறு வேறாகச் சிதைத்தெறிந்து;* ***நாவி ஓதியை*** - *புழுகுநெய் பூசப்பட்ட கூந்தலை;* ***நால்நிலம் தைவரப் பரப்பி*** - *தரையிலே புரளுமாறு பரப்பிக்கொண்டு* ***காவி உண்கண்*** - *நீலமலர் போன்ற மையுண்ட கண்கள்;* ***அஞ்சனம் கான்றிட*** - *மைகரைந்து சிந்தும்படி;* ***கலுழா*** - *கண்ணீர்விட்டு அழுதுகொண்டு;* ***பூ உதிர்ந்தது ஒர்கொம்பு என*** - *மலர்களை யெல்லாம் உதிர்த்துவிட்ட ஒரு வெறுங்கொம்புபோல;* ***புவிமிசைப்புரண்டாள்*** - *தரைமேல் விழுந்து உருண்டாள்.*

*மங்கலப் பொருள்கள் எல்லாவற்றையும் களைந்துவிட்டு அழுத கைகேயியின்தோற்றம் பின்னே தான் அடையப் போகும் கைம்மை நிலையை இப்பொழுதே அவள் மேற்கொண்டதைக்குறிப்பாற் புலப்படுத்தியது நானிலம் - ஈண்டு நால் வகை நிலத்தைச் சுட்டாமல் தரையைச்சுட்டியது. புவி - தரை. அணிகலன்கள் நீங்கிய நிலையில் மகளிர்க்குப் பூ உதிர்த்த கொம்பைஉவமை கூறுவதை ஆறுசெல் படலத்தில்*

> ***"தாஅரு நாண் முதல் அணி அலால், தகை***
> ***மே வரு கலங்களை வெறுத்த மேனியர்,***
> ***தேவரும் மருள்கொளத் தெரியும் காட்சியர்,***
> ***பூ உதிர் கொம்பு என, மகளிர் போயினர்"*** *(2277)*

*என்னும் பாட்டிலும் காணலாம்.* *3*

***1494. நவ்வி வீழ்ந்தென, நாடக மயில்***
***துயின்றென்ன,***
***'கவ்வை கூர்தரச் சனகி ஆம்***
***கடி கமழ் கமலத்து***
***அவ்வை நீங்கும்' என்று அயோத்தி வந்து***
***அடைந்த அம் மடந்தை***
***தவ்வை ஆம் என, கிடந்தனள்,***
***கேகயன் தனையை.***

***கேகயன் தனையை*** - *கேகயன் மகளாகிய கைகேயி;* ***நவ்வி வீழ்ந்து என*** - *மான் விழுந்தாற் போலவும்;* ***நாடகம் மயில் துயின்று என்ன*** - *ஆடும் இயல்புடைய மயில்ஆடல் ஒழிந்து தூங்கினாற் போலவும்;* ***'கவ்வை கூர்தர*** - *துன்பம் மிக;* ***சனகி ஆம்கடிகமழ் கமலத்து அவ்வை*** - *மணங்கமலும் செந்தாமரையில் வீற்றிருக்கும் தாயாகிய திருமகள்;* ***நீங்கும் என்று*** - *அயோத்தியை விட்டு நீங்குவாள்' என்று கருதி;* ***அயோத்தி வந்து அடைந்த*** - *அயோத்தி நகரத்தை வந்து சேர்ந்த;* ***அம் மடந்தை தவ்வை ஆம் என*** - *அத்திருமடந்தையின்தமக்கையாகிய மூதேவி என்னுமாறு;* ***கிடந்தனள்*** - *சோர்ந்து கிடந்தாள்.*

*ஓடும் மானையும் ஆடும் மயிலையும் கேகயன் மகளுக்கு உவமை கூறுவது இந்நாள் வரை அவளிடம்இருந்த இனிய தோற்றத்தைக் காட்டியது. திருமகள் இருந்த இடத்தைக் கைப்பற்றுவோம் என்று கருதிமூதேவி அங்கு வந்து குடிபுகுந்ததுபோலக்*

*கிடந்தாள் என்பது தற்குறிப்பேற்றம்.  அவ்வை - தாய்; தவ்வை - தமக்கை.*
***4***

*தயரதன் கைகேயியின் மாளிகைக்கு வருதல்*

***1495. நாழிகை கங்குலின் நள் அடைந்த பின்றை,***
***யாழ் இசை அஞ்சிய அம் சொல் ஏழை கோயில்,***
***'வாழிய' என்று அயில் மன்னர் துன்ன, வந்தான் -***
***ஆழி நெடுங் கை மடங்கள் ஆளி அன்னான்.***

***ஆழி நெடுங் கை -*** *ஆணைச் சக்கரம் ஏந்தும் நீண்ட கைகளை யுடைய;* ***ஆளி மடங்கள்அன்னான் -*** *சிங்க ஏறு போன்றவனான தயதன்;* ***கங்குலின் நாழிகை நள் அடைந்த பின்றை -*** *இராப்பொழுது நடுவை அடைந்த பின்னர்;* ***வாழிய என்று அயில் மன்னர் துன்ன -*** *'வாழ்க' என்று கூறிக்கொண்டு வேலேந்திய அரசர்கள் பக்கத்தில் சூழ்ந்துவர;* ***யாழ் இசை அஞ்சிய அம்சொல்ஏழை கோயில் -*** *யாழினது ஒலியும் அஞ்சப்பெற்ற அழகிய மொழியையுடைய கைகேயியின் மாளிகைக்கு;* ***வந்தான் -*** *வந்தடைந்தான்.*

*மறுநாள் இராமனுக்கு முடிசூட்டுவதற்குரிய விழா எற்பாடுகளைச் செய்வதில் காலம் கழிந்தமையால்இரவில் காலந் தாழ்த்துக் கைகேயியின் இருப்பிடம் நோக்கி மகிழ்ச்சியோடு தயரதன் சென்றான். ஏழை - பெண்; பிறர் பேச்சைக் கேட்டு ஆராயாது நடத்தலின் அறிவில்லாதவள் என்னும் குறிப்பும் புலப்பட வைத்தார். மடங்கல் - பிடரிமயிர் மடங்கியிருக்கப் பெற்றது; காரணப் பெயர்.* ***5***

***1496. வாயிலில் மன்னர் வணங்கி நிற்ப, வந்து ஆங்கு,***
***ஏயின செய்யும் மடந்தைமாரொடு ஏகி,***
***பாயல் துறந்த படைத் தடங்கண் மென் தோள்,***
***ஆயிழைதன்னை அடைந்த ஆழி மன்னன்.***

***மன்னர் வணங்கி வாயிலில் நிற்ப -*** *தன்னுடன் வந்த அரசர்கள் தொழுது அந்தப்புரவாயிலில் நிற்க;* ***ஆங்கு வந்து -*** *அவ்விடத்தில் ஓடிவந்து;* ***ஏயின செய்யும் மடந்தைமாரொடுஏகி -*** *கட்டளையிட்ட வற்றைச் செய்யும் பணிப்பெண்களோடு சென்று;* ***பாயல் துறந்த -*** *படுக்கையைவிட்ட;* ***படைத் தடங் கண் -*** *வேல் போலும் கூரிய பெரிய கண்களையும்;* ***மெல்தோள்-*** *மென்மையான தோள்களையும் உடைய;* ***ஆய் இழைதன்னை -*** *கைகேயி;* ***அடைந்த ஆழிமன்னன்-*** *சேர்ந்த அந்தச் சக்கரவர்த்தி (எடுக்கலுற்றான் என அடுத்த பாடலோடு முடியும்)*

*தயரதன் மாளிகையின் உள்ளே சென்று, தரையிலே அலங்கோலமாகக் கிடந்த கைகேயியைக் கண்டான்என்பது கருத்து. அந்தப்புரத்தில் அயல் ஆடவர் செல்ல இயலாதாகலின் மன்னர் வெளியே நின்றனர். ஆயிழை - பெண் என்னும் பொருட்டாய் நின்றது, கைகேயி அணிகலன்களைத் துறந்து கிடத்தலின்.* ***6***

*கைகேயியைத் தயரதன் எடுத்தலும், அவள் மண்ணில் வீழ்தலும்*

***1497.  அடைந்து , அவண் நோக்கி,***
***'அரந்தை என்கொல் வந்து***
***தொடர்ந்தது?' எனத் துயர்கொண்டு***
***சோரும் நெஞ்சன்,***
***மடந்தையை, மானை எடுக்கும்***
***ஆனையேபோல்,***
***தடங்கை கள் கொண்டு தழீஇ,***
***எடுக்கலுற்றான்.***

***அவண் அடைந்து*** - *அங்குச் சென்று;* ***நோக்கி*** - *கைகேயியின் நிலையைக் கூர்ந்துபார்த்துத் (துணுக்கம் கொண்டு);* ***அரந்தை என் கொல் வந்து தொடர்ந்தது என*** - *துன்பம்யாது வந்து சேர்ந்தது என்று எண்ணி;* ***துயர்கொண்டு சோரும் நெஞ்சன்*** - *வருத்தமடைந்து வாடும் மனமுடையவனாய்;* ***மானை எடுக்கும் ஆனையே போல்*** - *பெண்மானைத் துதிக்கையால் யானையைப்போல;* ***தடங்கைகள் கொண்டு*** - *தன் பெரிய கைகளால்;* ***மடந்தையைத் தழீஇ*** - *அவளைக் கட்டித் தழுவி;* ***எடுக்கல் உற்றான்*** - *தூக்கத் தொடங்கினான்.*

***1498.  நின்று தொடர்ந்த நெடுங் கைதம்மை நீக்கி,***
***மின் துவள்கின்றது போல, மண்ணில் வீழ்ந்தாள்.***
***ஒன்றும் இயம்பலள்; நீடு உயிர்க்கலுற்றாள் -***
***மன்றல் அருந் தொடை மன்னன் ஆவி அன்னாள்.***

***மன்றல் அருந் தொடை மன்னன்*** - *மணங் கமழும் அரிய மலர் மாலையைச் சூடியதயரதனுடைய;* ***ஆவி அன்னாள்*** - *உயிர் போன்ற வளான கைகேயி;* ***நின்று*** - *தன் நிலையில்மாறாது நின்று;* ***தொடர்ந்த*** - *தன்னைத் தழுவ நீண்ட;* ***நெடுங் கை தம்மை நீக்கி*** - *(அரசனுடைய) நீண்ட கைகளை விலக்கி;* ***மின் துவள்கின்றது போல*** - *மின்னற் கொடி துவண்டுவீழ்தல் போல;* ***மண்ணில் வீழ்ந்தாள்*** - *தரையில் வீழ்ந்து;* ***ஒன்றும் இயம்பலள்*** - *ஒன்றும் சொல்லாமல்;* ***நீடு உயிர்க்கல் உற்றாள்*** - *பெருமூச்சு விடத் தொடங்கினாள்.*

*தேவியர் மூவரில் கைகேயியை தயரதன் மிகவும் விழைந்தான் என்பது 'மன்னன் ஆவி அன்னாள்'என்னும் தொடரால் விளங்குகிறது. மன்னன் துயர் கண்டும் அவள் நெஞ்சு இளகாமல் இருந்தது தோன்ற'நின்று' என்றார். வீழ்ந்தாள், இயம்பலள் - முற்றெச்சங்கள்.* ***8***

*தயரதன் கைகேயியை நிகழ்ந்தது கூறப் பணித்தல்*

***1499.  அன்னது கண்ட அலங்கல்***
***மன்னன் அஞ்சி,***
***'என்னை நிகழ்ந்தது?'***
***இவ் ஏழு ஞாலம் வாழ்வார்,***
***உன்னை இகழ்ந்தவர் மாள்வர்;***
***உற்றது எல்லாம்***

***சொன்னபின் என் செயல் காண்டி;***
***சொல்லிடு' என்றான்.***

***அன்னது கண்ட*** - *கைகேயியின் அந்தச் செயலைப் பார்த்த;* ***அலங்கள் மன்னன்*** - *மாலையைப் பூண்ட அரசன்;* ***அஞ்சி*** - *அச்சம் உற்று;* ***'நிகழ்ந்தது என்னை*** - *நடந்தது யாது;* ***இஞ் ஞாலம் ஏழில் வாழ்வார்*** - *இவ்வேழுலகங்களில் வாழ்பவர்களுள்;* ***உன்னைஇகழ்ந்தவர் மாள்வர்*** - *உன்னை இழிவுபடுத்தியவர் எவராயிருந்தாலும் என்னால் கொல்லப்பட்டுஅழிவர்;* ***உற்றது எல்லாம்*** - *நிகழ்ந்தது அனைத்தையும்;* ***சொன்ன பின்*** - *நீகூறிய பிறகு;* ***என் செயல் காண்டி*** - *என் செய்கையைப் பார்;* ***சொல்லிடு*** - *காலந்தாழ்த்தாதுசொல்வாய்;'* ***என்றான்***- *என்று சொன்னான்.*

*இப்பாட்டு, தயரதன் கைகேயியின் அலங்கோல நிலையினைக் கண்டு, கொண்ட துணுக்கத்தினையும்அவள்மீது கொண்ட காதலால் அவளைத் தேற்ற முயலுதலையும் காட்டுகிறது. என்னால் கொல்லப்படுவர்என்பான் மாள்வர் எனத் தன்வினையால் கூறினான். சொல்லிடு; இடு- துணைவினை.* ***9***

*கைகேயி வரம் வேண்டுதல்*

***1500. வண்டு உளர் தாரவன் வாய்மை கேட்ட மங்கை,***
***கொண்ட நெடுங் கணின் ஆலி கொங்கை கோப்ப,***
***'உண்டு கொலாம் அருள் என்கண்? உன்கண் ஒக்கின்,***
***பண்டைய இன்று பரிந்து அளித்தி' என்றாள்.***

***வண்டு உளர்த் தாரவன்*** - *வண்டுகள் ஒலிக்கும் மாலையை அணிந்த அரசனது;* ***வாய்மை கேட்ட மங்கை*** - *சொற்களைச் செவியுற்ற கைகேயி;* ***நெடுங் கணின் கொண்ட ஆலி***- *நீண்ட கண்களில் கொண்ட நீர்த்துளிகள்;* ***கொங்கை கோப்ப*** - *மார்பில் வீழ(அழுது கொண்டு);* ***'என்கண் அருள் உன்கண் ஒக்கின்*** - *உன்னிடத்தில் உள்ள தானால்;* ***பண்டைய*** - *முன்னே எனக்குக் கொடுத்தவற்றை;* ***பரிந்து அளித்தி*** - *அன்புகொண்டுஅளிப்பாய்;'* ***என்றாள்*** - *என்ற சொன்னாள்.*

*இப் பாட்டில் கைகேயி நயமாகப் பேசித் தயரதனது சூளுரையைப் பெறவகை செய்கிறாள். 'நெடுங்கணின் கொண்ட ஆலி' என மாற்றில் கூட்டுக. பண்டைய என்றது - சம்பரனோடு போர் நிகழ்ந்தபோது கைகேயி உதவியதற்குத் தயரதன் மகிழ்ந்து கொடுத்த வரம் இரண்டையும் குறித்தது. பண்டைய - பலவின்பால் பெயர். தன் தருத்தை அறிந்தபின்னர் அரசன் அதற்கு உடன்படுதல் அரிதாகலின் 'பரிந்து அளித்தி' என்றாள்.* ***10***

*தயரதன் வாக்குறுதி அளித்தல்*

***1501. கள் அவிழ் கோதை கருத்து உணராத மன்னன்,***
***வெள்ள நெடுஞ் சுடர் மின்னின் மின்ன நக்கான்;***
***'உள்ளம் உவந்துள செய்வென்; ஒன்றும் லோபேன்;***
***வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை' என்றான்.***

***கள் அவிழ் கோதை-*** *தேன் வழியும் கூந்தலையுடைய கைகேயியினது;* ***கருத்து உணராதமன்னன் -*** *எண்ணத்தை அறியாத தயரதன்;* ***வெள்ள நெடுஞ் சுடர் மின்னின் -*** *மிகுந்தபேரொளியையுடைய மின்னல்போல;* ***மின்ன நக்கான்-*** *விளங்கும்படி சிரித்து;* ***'உள்ளம்உவந்துள செய்வேன்-*** *உன் மனம் விழைந்தனவற்றைச் செய்வேன்;* ***ஒன்றும் லோபேன் -*** *அதில் சிறிதும் உலோபம் செய்யேன்;* ***உன் மைந்தன் -*** *நினக்கு மகனும்;* ***வள்ளல் -*** *பெருவள்ளுலுமான;* ***இராமன் ஆணை -*** *இராமன்மேல் சத்தியம்;'* ***என்றான் -.***

*கைகேயியின் உபாயம் பயன் தந்தது இதனால் கூறப்பட்டது. தயரதன் நகைபிறர் பேதைமையான்எழுந்தது. கைகேயி இந்நாள்வரை இராமனிடம் பேரன்புடையவன் என்னும் உறுதியால் ' உன் மைந்தன்இராமன்' என்றான்.*

*கள்ளவிழ் கோதை; அடையடுத்த ஆகுபெயர். லோபம் - வடசொல்; ஈயாமை என்பதுபொருள்.* ***11***

கைகேயி பண்டைய வரங்களைத் தர வேண்டுதல்

***1502. ஆன்றவன் அவ் உரை கூற, ஐயம் இல்லாள்,***
***'தோன்றிய பேர் அவலம் துடைத்தல் உண்டேல்,***
***சான்று இமையோர்குலம் ஆக, மன்ன! நீ அன்று***
***ஏன்ற வரங்கள் இரண்டும் ஈதி' என்றாள்.***

***ஆன்றவன் -*** *குணங்களால் நிறைந்த தயரதன்;* ***அவ் உரை கூற -*** *அந்த உறுதிமொழியைச்சொல்ல;* ***ஐயம் இல்லாள் -*** *தன் கருத்து நிறைவேறும் என்பதில் ஐயம் நீங்கியவளான கைகேயி;* ***'மன்ன -*** *அரசனே;* ***தோன்றிய பேர் அவலம் துடைத்தல் உண்டேல் -*** *எனக்கு உண்டாகிய பெரிய துன்பத்தைக் களைவது உளதானால்;* ***இமையோர் குலம் சான்று ஆக -*** *தேவர்கூட்டம் சாட்சியாக;* ***நீ அன்று ஏன்ற வரங்கள் இரண்டும் ஈதி-*** *நீ சம்பராசுரப்போர்நிகழ்ந்த அந்நாளில் எனக்களிப்பதாக மனம் இசைந்த இரு வரங்களையும் இப்பொழுதுகொடுப்பாய்;'* ***என்றாள்-.***

*தயரதன் விருப்பத்திற்கு மாறான வரங்களைத் தான் கேட்கப்போவதால் அவன் வாக்குத் தவறினாலும் தவறலாம் என்பதால் அவனைக் கட்டுப்படுத்த எண்ணித் தேவர் கூட்டம்சான்றாக முன்பு தந்த வரங்களைத் தருமாறு அவனிடம் வேண்டுகிறாள்.*

*சான்று - சாட்சி. ஆக - வினையெச்சம். ஈதி - ஏவல் வினைமுற்று.* ***12***

மன்னன் வரமளிக்க இசைதல்

***1503. 'வரம் கொள இத்துணை மம்மர் அல்லல் எய்தி***
***இரங்கிட வேண்டுவது இல்லை; ஈவென்; என்பால்***
***பரம் கெட இப்பொழுதே, பகர்ந்திடு' என்றான் -***
***உரம் கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதான்.***

***உரம் கொள் மனத்தவள் -*** *வன்மை கொண்ட நெஞ்சத்தையுடைய கைகேயியின்;* ***வஞ்சம்ஓர்கிலாதான் -*** *வஞ்சனையை ஆராய்ந்து அறியாத தயரதன்;* ***'வரம் கொள***

***இத்துணை*** - *(யான் கொடுப்பதாகச் சொன்ன) 'வரங்களைப் பெற்றுக்கொள்ள இவ்வளவு;* ***மம்மர் அல்லல் எய்தி***- *தடுமாற்றம் தரும் துன்பம் அடைந்து;* ***இரங்கிட வேண்டுவது இல்லை*** - *நீ வருந்த வேண்டுவது இல்லை;* ***என்பால் பரம் கெட*** - *என்னிடத்துள்ள மனச்சுமை நீங்கும்படி;* ***இப்பொழுதேஈவென்*** - *இப்பொழுதே தருவேன்;* ***பகர்ந்திடு*** - *சொல்வாய்;'* ***என்றான்*** -.

*இயம்பில் மென்மையான கைகேயியின் மனம் கூனியின் சொல்லால் மாறி இப்பொழுது வன்மைகொண்டிருப்பதால் 'உரங்கொள் மனத்தவள்' என்றார். கைகேயியின் மீது கொண்ட அதிக அன்பால்அவள் சொற்களில் உள்ள வஞ்சத்தை ஆராய்ந்து அறியாதவனாகத் தயரதன் இருந்தமையால் 'ஓர்கிலாதான்' என்றார். ஓர்தல் - ஆராய்தல்.* ***13***

*கைகேயி கேட்ட இரு வரங்கள்*

***1504. 'ஏய வரங்கள் இரண்டின், ஒன்றினால், என்***
***சேய் அரசு ஆள்வது; சீதை கேள்வன் ஒன்றால்***
***போய் வனம் ஆள்வது' எனப் புகன்று, நின்றாள் -***
***தீயவை யாவையினும் சிறந்த தீயாள்.***

***தீயவை யாவையினும் சிறந்த தீயாள்*** - *கொடியவை என்று சொல்லப்படும் எல்லாவற்றிலும்மேம்பட்ட கொடியவளான கைகேயி;* ***'ஏய வரங்கள் இரண்டின்*** - *(நீ) கொடுத்த இரு வரங்களுள்;* ***ஒன்றினால்*** - *ஒரு வரத்தினால்;* ***என் சேய் அரசு ஆள்வது*** - *என்மகன் பரதன் நாட்டை ஆளுதல் வேண்டும்;* ***ஒன்றால்*** - *மற்றொன்றினால்;* ***சீதை கேள்வன் போய் வனம்ஆள்வது*** - *சீதைக்குக் கணவனாகிய இராமன் (இந்நாட்டை விட்டுச்) சென்று காட்டை ஆளுதல் வேண்டும்;* ***எனப் புகன்று*** - *என்று சொல்லி;* ***நின்றாள்*** - *மனங் கலங்காமல் உறுதியாக நின்றாள்.*

*தீயவை - நெருப்பு, கூற்றுவன், நஞ்சு, பாம்பு முதலியன 'சிறந்த' என்பது கொடிய என்னும்பொருளைத் தரும், 'நல்ல பாம்பு' 'நல்ல வெயில்' என்பவற்றில் நல்ல என்பது கொடிய என்னும் பொருளைத் தருவது போல, இத்தகைய கொடிய சொற்களை அஞ்சாது சொல்லி நிற்றல் இவளையன்றிப் பிறர்க்கு அரிது என்பதனால் 'புகன்று நின்றாள்' என்றார். ஆள்வது வியங்கோள் வினைமுற்று.*
***14***

*தயரதன் உற்ற துயரம்*

***1505. நாகம் எனும் கொடியாள், தன் நாவின் ஈந்த***
***சோக விடம் தொடர, துணுக்கம் எய்தா,***
***ஆகம் அடங்கலும் வெந்து அழிந்து, அராவின்***
***வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான்.***

***நாகம் எனும் கொடியாள்*** - *பாம்பு என்று சொல்லத்தக்க கொடியவளாகிய கைகேயி;* ***தன் நாவின் ஈந்த*** - *தனது நாக்கினின்றும் வெளியிட்ட;* ***சோக விடம் தொடர*** - *துன்பத்தைத் தரும் சொல்லாகிய நஞ்சு தன்னைப் பற்றிக்கொள்ள;* ***துணுக்கம் எய்தா*** -

*நடுக்கம் அடைந்து;* ***ஆகம் அடங்கலும் வெந்து அழிந்து -*** *தன் உடல் முழுவதும் வெதும்பிச் சோர்ந்து;* ***அராவின் வேகம் அடங்கிய -*** *நச்சுப் பாம்பினால் தன் ஊக்கம் தணியப்பெற்ற;* ***வேழம் என்ன -*** *யானை போல;* ***வீழ்ந்தான் -*** *(தயரதன் கீழே) விழுந்தான்.*

*இதனால் கைகேயியின் சொற்களில் இருந்த கொடுமை கூறப்பட்டது. சோக விடம் - உருவகம்.துயர்க் காரணம் சொற்களாதலால் 'நாவின் வந்த விடம்' என்று வேற்றுமையணியாகக் கூறினார்.ஆகம் வெந்து வீழ்ந்தான்' - சினை வினை முதலோடு முடிந்தது. அராவின் - இன் ஏதுப் பொருளில் வந்தது.* ***15***

## *1506. பூதலம் உற்று, அதனில் புரண்ட மன்னன்*
## *மா துயரத்தினை யாவர் சொல்ல வல்லார்?*
## *வேதனை முற்றிட, வெந்து வெந்து, கொல்லன்*
## *ஊது உலையில் கனல் என்ன, வெய்து உயிர்த்தான்.*

***பூதலம் உற்று -*** *தரையில் விழுந்து;* ***அதனில் புரண்ட மன்னன் -*** *அதன்மீது நிலைகொள்ளாதுஉருண்ட அரசனாகிய தயரதனது;* ***மாதுயரத்தினை -*** *பெருந்துன்பத்தினை;* ***சொல்ல வல்லார்யாவர் -*** *அளவிட்டுச் சொல்ல வல்லவர் யார்? (ஒருவரும் இல்லை);* ***வேதனை முற்றிட -*** *துன்பம் முதிர்ச்சி அடைய;* ***வெந்து வெந்து -*** *மனம் மிக வெதும்பி;* ***கொல்லன் ஊதுஉலையில் கனல் என்ன -*** *கருமான் (துருத்தியால் ஊதுகின்ற உலைக்களத்துத் தீயைப்போல;* ***வெய்து உயிர்த்தான் -*** *வெப்பம் மிக்க பெருமூச்சு விட்டான்.*

*இது கவிக்கூற்று, தயரதன் நெட்டுயிர்ப்பின் வெம்மைக்குக் கொல்லனது உலைக்களம் உவமை. உலைத்தீ ஊதுந்தொறும் மேலெழுந்து மீண்டும் அடங்குவது போல, மன்னனது வெப்பம் மிக்க உயிர்ப்பு மிக்கும் அடங்கியும் நிகழ்ந்தது. வெந்து வெந்து - அடுக்கு மிகுதிப்பொருளைக் காட்டுவது.* ***16***

## *1507. உலர்ந்தது நா; உயிர் ஓடலுற்றது; உள்ளம்*
## *புலர்ந்தது; கண்கள் பொடித்த, பொங்கு சோரி;*
## *சலம் தலைமிக்கது; 'தக்கது என்கொல்?' என்று என்று*
## *அலந்து அலையுற்ற, அரும் புலன்கள் ஐந்தும்.*

***நா உலர்ந்தது -*** *(தயரதனுக்கு) நாக்கு வறண்டது;* ***உயிர் ஓடல் உற்றது -*** *உயிர்போகத் தொடங்கியது;* ***உள்ளம் புலர்ந்தது -*** *மனம் வாடியது;* ***கண்கள் பொங்குசோரிபொடித்த -*** *கண்கள் மிகுதியாகக் குருதி சிந்தின;* ***சலம் தலைமிக்கது -*** *கவலை மிகுந்தது;* ***அரும் புலன்கள் ஐந்தும் -*** *அரிய ஐந்து பொறிகளும்;* ***தக்கது என்கொல் என்று என்று -*** *செய்யத்தக்கது என்ன என்று எண்ணி எண்ணி;* ***அலந்து அலையுற்ற -*** *கலங்கித் தவித்தன.*

*இதில் தயரதன் அடைந்த அவல மெய்ப்பாடுகள் கட்டப்படுகின்றன. கோபத்தால் கண்கள் இரத்தம்சிந்தின. புலன் - ஈண்டுப் பொறிகளைக் குறித்தது; ஆகுபெயர். 'அலந்து அலையுற்ற' என்பதனை 'அலந்தலைஉற்ற' என்று கொள்வாரும் உண்டு.*

*அலந்தலை - ஒருசொல்; கலக்கம் என்பது பொருள். சலம் - கோபமும்ஆம்.*
***17***

### *1508. மேவி நிலத்தில் இருக்கும்; நிற்கும்; வீழும்;*
### *ஓவியம் ஒப்ப உயிர்ப்பு அடங்கி ஓயும்;*
### *பாவியை உற்று எதிர் பற்றி எற்ற எண்ணும்;-*
### *ஆவி பதைப்ப, அலக்கண் எய்துகின்றான்.*

***ஆவி பதைப்ப -*** *உயிர் பதைக்கும்படி;* ***அலக்கண் எய்துகின்றான்-*** *பெருந்துன்பத்தை உறுகின்ற தயரதன்;* ***நிலத்தில் மேவி இருக்கும் -*** *தரையில்(சிறிதுபொழுது) பொருந்தி இருப்பான்;* ***நிற்கும் -*** *எழுந்து நிற்பான்;* ***வீழும் -*** *(மீண்டும்) விழுவான்;* ***ஓவியம் ஒப்ப -*** *சித்திரம் போல;* ***உயிர்ப்பு அடங்கி ஓயும் -*** *மூச்சு அடங்கி ஒய்வான்;* ***பாவியை எதிர் உற்றுப்பற்றி -*** *கைகேயியை எதிரே சென்று பிடித்து;* ***எற்ற -*** *மோத;* ***எண்ணும் -*** *நினைப்பான்.*

*இதனால் தயரதனது கலக்கநிலை உணர்த்தப்படுகிறது. இராமன்மீது இரக்கமின்றிக் கேடு சூழ்ந்தாளாதலின்கைகேயி பாவி என்று குறிக்கப்பட்டாள்.*
***18***

### *1509. பெண் என உட்கும்;*
### *பெரும் பழிக்கு நாணும்;*
### *உள் நிறை வெப்பொடு உயிர்த்து,*
### *உயிர்த்து, உலாவும்;*
### *கண்ணினில் நோக்கும் அயர்க்கும் -*
### *வன் கைவேல் வெம்*
### *புண் நுழைநிற்க உழைக்கும்*
### *ஆனை போல்வான்.*

***வன் கை வேல் -*** *வன்மையான கையினால் வீசப்பட்ட வேல்;* ***வெம் புண் நுழைநிற்க-*** *கொடிய புண்ணில் நுழைவதனால்;* ***உழைக்கும் ஆனை போல்வான் -*** *வருந்தும் யானைபோன்றமன்னன்;* ***பெண் என உட்கும் -*** *பெண் என்று கருதிக் கொல்ல அஞ்சும்;* ***பெரும் பழிக்கு-*** *(கைகேயியைப் பற்றி எற்றுவதனால்) வரக்கூடிய பெரிய பழிச்சொல்லுக்கு;* ***நாணும் -*** *நாணுவான்;* ***உள் நிறை வெப்பொடு -*** *தன்னுள்ளே மிக்கிருந்த தாபத்தோடு;* ***உயிர்த்து உயிர்த்து -*** *பலகால் பெருமூச்சு விட்டு;* ***உலாவும் -*** *அங்கும் இங்குமாக அலைவான்;* ***கண்ணினில் நோக்கும் அயர்க்கும் -*** *(கைகேயியைக்) கண்ணால் உற்றுப் பார்த்துப் பின்னர்ச் சோர்வான்.*

*கைகேயியைக் கொன்றுவிடலாமா என்ற கருதி தயரதன் அதனால் உண்டாகும் பழிக்கு நாணிஅதனைச் செய்யாமல் விடுத்தான். நாணுதலாவது தனக்குப் பொருந்தாத இழிந்த செயலில் மனம் ஒடுங்குதல். முதல் வரம் கொடும்புண் செய்ய, இரண்டாவது வரம் அப்புண்ணில் வேலை எடுத்து நழைத்தாற்போன்ற மிகுந்த துன்பம் விளைத்தது.*
***19***

*கைகேயியின் கலங்கா உள்ளம்*

***1510. கம்ப நெடுங் களி யானை அன்ன மன்னன்***
***வெம்பி விழுந்து எழும் விம்மல் கண்டு, வெய்துற்று,***
***உம்பர் நடுங்கினர்; ஊழி பேர்வது ஒத்தது;***
***அம்பு அன கண்ணவள் உள்ளம் அன்னதேயால்.***

***கம்ப நெடுங் களி யானை அன்ன மன்னன் -*** *கட்டுத்தறியில் கட்டுண்ட மிக்க மதத்தையுடையகளிற்றை யொத்த அரசனாகிய தயரதன்;* ***வெம்பி விழுந்து எழும் விம்மல் -*** *மனம் நொந்து கீழே விழுந்து எழுகின்றதுன்ப நிலையினை;* ***உம்பர் கண்டு -*** *தேவர்கள் பார்த்து;* ***வெய்துற்று நடுங்கினர் -*** *மனம் புழுங்கி நடுங்கினார்கள்;* ***ஊழி பேர்வது ஒத்தது -*** *பிரளய காலம் வந்தது போன்றிருந்தது;* ***அம்பு அன கண்ணவள் உள்ளம் -*** *(அந்நிலையிலும்) அம்பு போன்ற கண்களையுடைய கைகேயியினது மனம்;* ***அன்னதே -*** *முன்பு இருந்த அதே தன்மையில் இருந்தது.*

*தயரதன் சம்பரனைத் தொலைத்துத் தங்களுக்கு உதவியவன் ஆதலால் அவனது துன்பத்தைக் கண்டு தேவர்கள்வருந்தினர். உலகத்தவர் யாவரும் வருந்துதலால் 'ஊழிபேர்வது ஒத்தது' என்றார். அந்நிலையிலும்கைகேயி சிறிதும் மனம் இளகாமல் 'உறுதியோடு இருந்தாள் என்று அவளது கொடுமை குறித்தார். கட்டுத்தறியில்கட்டப்பட்ட யானை போல என்றும் உவமை வரத்தால் பிணிப்புண்ட தயரதன் நிலையினைக் காட்டுவது,'ஏ, ஆல் அசை.* ***20***

***1511. அஞ்சலள், ஐயனது அல்லல் கண்டும்; உள்ளம்***
***நஞ்சிலள்; 'நாண் இலள்' என்ன, நாணம் ஆமால்;***
***'வஞ்சனை பண்டு மடந்தை வேடம்' என்றே***
***தஞ்சு என மாதரை உள்ளலார்கள், தக்கோர்.***

***ஐயனது அல்லல் கண்டும் அஞ்சலள் -*** *(தன்) கணவனது துன்பத்தைக் கண்டும் அவள் அச்சம்கொள்ளவில்லை;* ***உள்ளம் நஞ்சிலள்-*** *மனம் இரங்கவில்லை;* ***'நாண் இலள்' என்ன -*** *'வெட்கப்படவும் இல்லை' என்று அவள் நிலையைக் கூற;* ***நாணம் ஆம் -*** *(சொல்லும்) நமக்கே வெட்கம் உண்டாகும்;* ***தக்கோர் -*** *சால்புடைய பெரியோர்;* ***'பண்டு -*** *தொன்றுதொட்டே;* ***வஞ்சனை -*** *வஞ்சனை என்பது;* ***மடந்தை வேடம் -*** *பெண்ணுருவம்;'* ***என்றே -*** *என்று எண்ணியே;* ***மாதரை -*** *பெண்களை;* ***தஞ்சு என -*** *பற்றுக்கோடு என்று;* ***உள்ளலார்கள்-*** *நினையார்கள்.*

*பெண்மைக் குணங்கள் யாதுமின்றி இருந்த கைகேயி நிலைபற்றிக் கூறுவது நாணம் தருகிறது என்கிறார்கம்பர். ஐயன் - கணவன், தலைவன், நஞ்சிலள் - நைந்திலள் என்பதன்போலி. தஞ்சு - தஞ்சம்என்பதன் விகாரம். 'ஆல்' அசை.*
***21***

*தயரதன் மீண்டும் வினவுதல்*

***1512. இந் நிலை நின்றவள் தன்னை எய்த நோக்கி,***
***நெய்ந் நிலை வேலவன், 'நீ திசைத்தது உண்டோ?***
***பொய்ந் நிலையோர்கள் புணர்த்த வஞ்சம் உண்டோ?***
***உன் நிலை சொல்; எனது ஆணை உண்மை!' என்றான்.***

***இந் நிலை நின்றவள் தன்னை -*** *இந்நிலையில் நின்ற கைகேயியை;* ***எய்த நோக்கி-*** *பொருந்தப் பார்த்து;* ***நெய்ந் நிலைவேலவன் -*** *நெய் பூசப்பட்ட வேலையுடைய தயரதன்;* ***'நீ திசைத்தது உண்டோ -*** *நீ மனம் பிரமித்தது உண்டோ?;* ***பொய்ந் நிலையோர்கள் புணர்த்த -*** *வஞ்சத் தன்மையுடையவர்கள் எவரேனம் கட்டிச்சொன்ன;* ***வஞ்சம் உண்டோ -*** *வஞ்சனைச் சொல் உள்ளதோ?;* ***எனது ஆணை -*** *என் மேல் ஆணையாக;* ***உன் நிலை உண்மை சொல் -*** *இந்த உனது நிலையின் காரணத்தை உண்மையாகச் சொல்வாய்;'* ***என்றான் -.***

*தயரதனுக்குக் கைகேயியின் மாறுபட்ட நிலை வியப்பாக இருத்தலின், 'நீ திசைத்தது உண்டோஅல்லது பொய்ம்மையாளர்கள் எவரேனும் உன் மனத்தைக் கெடுத்தனரோ?' என்கிறான். முன்பு இராமன்மீதுஆணையிட்டுக் கூறியவன் இப்பொழுது அவளக்கு அவன்பால் அன்பின்மையை உணர்ந்து தன்மேல் ஆணை என்றான். திசைத்தல் - திகைத்தல்; பிரமித்தல்.* ***22***

கைகேயியின் கொடுஞ் சொற்கள்

***1513. 'திசைத்ததும் இல்லை;***
***எனக்கு வந்து தீயோர்***
***இசைத்ததும் இல்லை; முன் ஈந்த***
***இவ் வரங்கள்,***
***குசைப் பரியோய்! தரின், இன்று***
***கொள்வென்; அன்றேல்,***
***வசைத் திறன் நின்வயின் நிற்க,***
***மாள்வென்' என்றாள்.***

***குசைப் பரியோய் -*** *(மன்னன் கூறக் கேட்ட கைகேயி அவனிடம்) 'கடிவாளம் பூட்டிய குதிரைகளைஉடைய அரசே!;* ***திசைத்ததும் இல்லை -*** *நான் திகைத்ததும் இல்லை;* ***தீயோர் எனக்குவந்து இசைத்ததும் இல்லை -*** *கொடியோர் எவரும் என்னிடம் வந்து வஞ்சனையாகச் சொன்னதும் இல்லை;* ***முன் ஈந்த இவ் வரங்கள் -*** *முன்னே (வாயாற்) கொடுத்த இவ்விரண்டு வரங்களை;* ***இன்று தரின் கொள்வென் -*** *இப்பொழுது கொடுத்தால் பெற்றுக்கொள்வேன்;* ***அன்றேல்-*** *அன்றிக் கொடுக்காமல் போனால்;* ***வசைத்திறன் நின்வயின் நிற்க -*** *பழியின் கூறுகள் நின்னிடம் நிலையாக இருக்குமாறு ;* ***மாள்வென் -*** *இறப்பேன்;'* ***என்றாள் -.***

*தயரதன் சொற்களால் அவனுக்குத் தான் கேட்ட வரங்களைத் தர விருப்பமில்லை என்று உணர்ந்தகைகேயி, 'வரம்கொடுத்தால் வாழ்வேன்; இன்றேல் சாவேன்' என்கிறாள். குசைப்பரியோய் -கருத்துடை யடைகொளி. யான் குதிரையைச் செலுத்தித் தேர் ஊர்ந்ததனால் அல்லவா நினக்குப்புகழ் உளதாயிற்று என்று குறிப்பித்தவாறு. கருத்துடை அடைகொளி அணி.* ***23*** *தயரதன் உற்ற பெருந் துயர்*

***1514. இந்த நெடுஞ் சொல் அவ் ஏழை கூறும் முன்னே,***
***வெந்த கொடும் புணில் வேல் நுழைந்தது ஒப்ப,***
***சிந்தை திரிந்து, திகைத்து, அயர்ந்து, வீழ்ந்தான்;-***
***மைந்தன் அலாது உயிர் வேறு இலாத மன்னன்.***

***மைந்தன் அலாது*** - *மகனாகிய இராமனைத் தவிர;* ***உயிர் வேறு இலாத மன்னன்*** - *தன்னுயிர் என்று வேறு ஒன்று இல்லாத அரசனாகிய தயரதன்;* ***அவ் ஏழை*** - *அந்த அறிவற்றவளானகைகேயி;* ***இந்த நெடுஞ் சொல் கூறும் முன்னே*** - *இந்தப் பெரிய வஞ்சினத்தைச்சொல்லிமுடிக்கு முன்னே;* ***வெந்த கொடும் புணில்*** - *முன்பே தீயினால் சுட்ட கொடிய புண்ணில்;* ***வேல் நுழைந்தது ஒப்ப*** - *கூரிய வேல் பாய்ந்தாற்போல;* ***சிந்தை திரிந்து*** - *மனம் தடுமாறி;* ***திகைத்து*** - *அறிவு மயங்கி;* ***அயர்ந்து வீழ்ந்தான்*** - *சோர்ந்துதரையில் சாய்ந்தான்.*

***1515. 'ஆ கொடியாய்! எனும்; ஆவி காலும்; 'அந்தோ!***
***ஓ கொடிதே அறம்!' என்னும்; 'உண்மை ஒன்றும்***
***சாக!' எனா எழும்; மெய் தளாடி வீழும் -***
***மாகமும் நாகமும் மண்ணும் வென்ற வாளான்.***

***மாகமும் நாகமும் மண்ணும்*** - *மேலுலகத்தையும் கீழுலகத்தையும் நிலவுலகத்தையும்;* ***வென்ற வாளான்-*** *வெற்றி கொண்ட வாட்படையையுடைய தயரதன்;* ***ஆ கொடியாய் எனும்*** - *(கைகேயியிபைப் பார்த்து) ஐயோ, கொடியவளே என்பான்;* ***ஆவி காலும்*** - *பெருமூச்சுவிடுவான்;* ***அந்தோ ஓ கொடிதே அறம் என்னும்*** - *ஐயோ! தருமம் மிகவும் கொடியதே என்பான்;* ***உண்மை ஒன்றும் சாக எனா*** - *சத்தியம் என்பதொன்று சாகட்டும் என்று சொல்லிக்கொண்டு;* ***எழும்*** - *எழுந்திருப்பான்;* ***மெய் தளாடி வீழும்*** - *உடம்பு நிற்க முடியாமல் தள்ளாடிவிழுவான்.*

*இப்பாட்டு ஒரு சோக சித்திரம்; மன்னவன் துயரத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது. ஆகொடியாய் - ஆ - இரக்கக் குறிப்பு. தயரதன் அறமும் உண்மையும் நன்மைக்குத் துணை புரியாமல் இராமன்காடு புகுதலாகிய தீமைக்கு வழி வகுத்தலின் அவற்றை இகழ்கிறான். மாகம் - துறக்கம். நாகம்- பாதாளம்.* ***25*** ***1516.***

***' "நாரியர் இல்லை இஞ் ஞாலம் எங்கும்" என்ன,***
***கூரிய வாள்கொடு கொன்று நீக்கி, யானும்,***
***பூரியர் எண்ணிடை வீழ்வென்' என்று, பொங்கும் -***
***வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்.***

***வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்*** - *பெருவீரர்கள் வீரத்தையும் வென்று தன்னுள்அடக்கி நிலைபெற்ற வேற்படையை உடைய தயரதன்;* ***இஞ் ஞாலம் எங்கும்*** - *இவ்வுலக முழுவதிலும்;* ***நாரியம் இல்லை என்ன*** - *பெண்கள் இல்லை என்னும்படி;* ***கூரிய வாள் கொடு கொன்றுநீக்கி*** - *கூர்மை பொருந்திய வாளால் கொலை செய்து போக்கி;* ***யானும் பூரியர் எண்ணிடைவீழ்வென் என்று*** - *யானும் கீழ்மக்கள் எண்ணிக்கையில் சேருவேன் என்று;* ***பொங்கும்*** - *சினம் மிகுவான்.*

*கைகேயியின் மேல் எழுந்த சீற்றத்தால் தயரதன் பெண்கள் கூட்டத்தையே அழித்துவிட எண்ணினான்.ஆனால், அச்செயல் தகாது என்று அடங்கினான். இதனால் அவன் சீற்ற மிகுதி வெளிப்படுகிறது.* ***26***

***1517. கையொடு கையைப் புடைக்கும்; வாய் கடிக்கும்;***
***'மெய்யுரை குற்றம்' எனப் புழுங்கி விம்மும்;***

**நெய் எரி உற்றென நெஞ்சு அழிந்து சோரும் -**
**வையகம் முற்றும் நடந்த வாய்மை மன்னன்.**

***வையகம் முற்றும் நடந்த*** *- உலகம் முழுவதும் பெருவழக்காய் அறியப் பெற்ற;* ***வாய்மை மன்னன்*** *- சத்தியம் தவறாத தயரதன்;* ***கையொடு கையைப் புடைக்கும்*** *- கையுடன்மற்றொரு கையை ஓங்கி அடிப்பான்;* ***வாய் துடிக்கும்*** *- உதட்டைக் கடிப்பான்;* ***மெய்உரை குற்றம் என*** *- உண்மை சொல்லுதல் தீங்கைத் தருவது என்று சொல்லி;* ***புழுங்கிவிம்மும்-*** *மனம் வெந்து பொருமுவான்;* ***நெய் எரி உற்று என*** *- நெய்யில் நெருப்புப் பட்டாற்போல;* ***நெஞ்சு அழிந்து*** *- மனம் உடைந்து;* ***சோரும்*** *- வருந்துவான்.*

*வாய்மை மன்னனாகிய தயரதனை மெய்யுரை குற்றம் என எண்ணச் செய்தது அவனுக்கு இராமபிரான்பால்உள்ள பேரன்பு. கைபுடைத்தல் வாய்கடித்தல் ஆகியவை சினத்தால் நிகழும் மெய்ப்பாடுகள்.* ***27***

*1518.* **'ஒறுப்பினும் அந்தரம், உண்மை ஒன்றும் ஓவா**
**மறுப்பினும் அந்தரம்' என்று, வாய்மை மன்னன்,**
**'பொறுப்பினும் இந் நிலை போகிலாளை வாளால்**
**இறுப்பினும் ஆவது இரப்பது' என்று எழுந்தான்.**

***வாய்மை மன்னன்*** *- சத்தியத்தைப் பேணிக் காக்கும் தயரதன்;* ***'ஒறுப்பினும்அந்தரம்*** *- இவளைத் தண்டித்தாலும் தீமை;* ***உண்மை ஒன்றும் ஓவா*** *- மெய்யைச்சிறிதும் காவாமல்;* ***மறுப்பினும் அந்தரம்*** *- கொடுத்த வரங்களைத் தர மறுத்தாலும்தீமை;'* ***என்று*** *- என்று கருதி;* ***'இந் நிலை போகிலாளை*** *- இந்நிலையினின்றும்மாறாதவளை;* ***பொறுப்பினும்*** *- பொறுத்து அடங்குவதைக் காட்டிலும்;* ***வாளால் இறுப்பினும்-*** *வாளால் கொல்வதைக் காட்டிலும்;* ***இரப்பது ஆவது*** *- இவளை வேண்டி யாசிப்பதே பொருத்தம்;'* ***என்று எழுந்தான்*** *- என்று கருதி, அது செய்யப் புறப்பட்டான்.*

*பலவாறாகத் துன்பப்பட்ட தயரதன் இறுதியில் இரந்து வேண்டுதல் ஒருவேளை பயன் தரலாம் என்றுகருதி அவ்வாறு செய்யத் துணிந்தான். பொறுப்பு, இறுப்பு - தொழிற்பெயர்கள்; இன் - உறழ்ச்சிப்பொருளில் வந்தது.* ***28***

*கைகேயியின் காலில் விழுந்து, தயரதன் இரத்தல்*

*கலிநிலைத்துறை*

*1519.* **'கோல் மேற்கொண்டும் குற்றம்**
**அகற்றக் குறிகொண்டார் -**
**போல், மேல் உற்றது உண்டு எனின்**
**நன்று ஆம் பொறை' என்னா,**
**கால்மேல் வீழ்ந்தான் - கந்து கொல்**
**யானைக் கழல் மன்னர்**
**மேல் மேல் வந்து முந்தி**
**வணங்கி மிடை தாளான்.**

***கந்து கொல் யானைக் கழல் மன்னர் -*** *கட்டுத்தறியை முறிக்கும் யானைப்படையையுடைய வீரக்கழல் அணிந்த அரசர் பலரும்;* ***மேல் மேல் முந்தி வந்து -*** *மேலே மேலே(ஒருவர்க் கொருவர்) முற்பட்டு வந்து;* ***வணங்கி மிடை தாளான் -*** *வழிபட்டு நெருங்குகின்றபாதங்களையடைய தயரதன்;* ***கோல் மேற்கொண்டும்-*** *தாம் ஆட்சியை மேற்கொண்டிருந்தாலும்;* ***குற்றம் அகற்றக் குறிக்கொண்டார்போல் -*** *(அதில்வரும்) குற்றங்களை நீக்கக்கருத்துக் கொண்ட நல்ல அரசரைப் போல;* ***மேல் உற்றது உண்டு எனின் -*** *மேலே வரும் நன்மைஉண்டென்றால்;* ***பொறை நன்று ஆம் என்னா -*** *பொறுமை நல்லதாகும் என்று எண்ணி;* ***கால்மேல் வீழ்ந்தான்-*** *கைகேயியின் கால்களில் விழுந்து வணங்கினான்.*

*தம் பதவியே பெரிதெனக் கருதாமல் குற்றம் நிகழாது காக்க அரும் பாடுபடும் அரசரைப் போலத்தன் பெருமை நோக்காது கைகேயியைச் சினம் தணிவித்துக் குற்றம் நிகழாது காக்க எண்ணிய தயரதன்அவள் காலில் விழுந்து வணங்கினான். கைகேயி மனம் மாறி வரங்களைத் தருமாறு வேண்டுவது தவிர்ந்தால்.அவளுக்கு வரந்தர மறுத்தலால் வரும் குற்றமும். இராமனுக்கு அரசளிப்பதாகச் சொன்ன வாக்குப் பொய்த்தலும் நீங்கி நன்மை உண்டாகும் என்ற எண்ணிஅவ்வாறு செய்தான். உற்றது - கால வழுவமைதி.* ***29***

***1520. ‘கொள்ளான் நின் சேய் இவ் அரசு;***
***அன்னான் கொண்டாலும்,***
***நள்ளாது இந்த நானிலம்;***
***ஞாலம்தனில் என்றும்***
***உள்ளார் எல்லாம்ஓத***
***உவக்கும் புகழ் கொள்ளாய்;***
***எள்ளா நிற்கும் வன் வழி கொண்டு***
***என் பயன்?’ என்றான்.***

***‘இவ் அரசு நின் சேய் கொள்ளான் -*** *இந்த அரசாட்சியை நினக்கு மகனாகிய பரதன்ஏற்றுக்கொள்ள மாட்டான்;* ***அன்னான் கொண்டாலும் -*** *(ஒருகால்) அவன் ஏற்றுக்கொண்டாலும்;* ***இந்த நானிலம் நள்ளாது -*** *இவ்வுலகம் அதனை விரும்பாது;* ***ஞாலம்தனில் உள்ளார் எல்லாம்-*** *உலகில் உள்ள எல்லோரும்;* ***என்றும் ஓத உவக்கும் -*** *எந்நாளும் புகழ்வதைவிரும்பும்;* ***புகழ் கொள்ளாய் -*** *கீர்த்தியைப் பெறமாட்டாய்;* ***எள்ளா நிற்கும்வன்பழி கொண்டு -*** *என்றும் எல்லோரும் இகழ்தற்குரிய வலிய பழியை ஏற்பதனால்;* ***பயன்என் -*** *பயன் யாது?;’* ***என்றான் -.***

*தயரதன் பரதன் பண்புகள் அறிந்தவனாதலின் அவன் அரசாட்சியைக் கொள்ளான் என்றான்.கொண்டாலும் - உம்மை கொள்ளுதலின் அருமை சுட்டியது. நானிலம் - ஆகுபெயராய் மக்களை உணர்த்திற்று.என்றும் என்பதனைப் பழியோடும் கூட்டி உரைக்க.* ***30***

***1521. ‘வானோர் கொள்ளார்; மண்ணவர் உய்யார்;***
***இனி, மற்று என்***
***ஏனோர் செய்கை? யாரொடு நீ***
***இவ் அரசு அள்வாய்***

*யானே சொல்ல, கொள்ள*
*இசைந்தான்; முறையாலே*
*தானேநல்கும் உன் மகனுக்கும்*
*தரை' என்றான்*

**'வானோர் கொள்ளார் -** *'இராமனைக் காட்டுக்குத் துரத்தி விட்டுப் பரதன் அரசாள்வதைத்தேவர்களும் ஏற்றுக் கொள்ளார்;* **மண்ணவர் உய்யார் -** *மண்ணுலகத்தவர் எவரும் உயிர்வாழார்;* **இனி மற்று ஏனோர் செய்கை என் -** *இனிமேல் பிறர் செய்கையைப் பற்றிச் சொல்லவேண்டுவது என்ன?;* **நீ இவ் அரசு யாரொடும் ஆள்வாய் -** *(அவ்வாறாயின்) நீஇந்த அரசினை யாரோடிருந்து ஆட்சி புரிவாய்?;* **யானே சொல்ல -** *நானே அவனை அரசேற்குமாறுசொல்ல;* **கொள்ள இசைந்தான் -** *ஏற்றுக்கொள்ள உடன்பட்டான்;* **முறையாலே -** *முறைப்படி;* **உன் மகனுக்கும் தானே தரை நல்கும் -** *உன் பிள்ளைக்கும் தானே நாட்டைக்கொடுப்பான்;'* **என்றான் -.**

*யான் வற்புறுத்த இராமக் அரசினை ஏற்க இசைந்தான்; அவன் ஆசை கொண்டு முயலவில்லை.பரதன் நாட்டைப் பெறுவதற்காக இராமனைக் காட்டிற்குத் துரத்த வேண்டுவதில்லை. நீ விரும்பினால்தானாகவே பரதனுக்கு நாட்டை அளித்துவிடுவான். அப்பொழுது முறைகேடு யாதும் நேராது என்றான்தயரதன். எங்ஙனமாவது இராமன் காடு செல்வதைத் தவிர்க்க வேண்டும் என்று கருதினான். வானோரையும்மண்ணில் வாழ்வோரையும் முற்கூறினமையின் ஏனோர் என்றது பிற மக்களையும் கீழுலகத்தவரையும் குறித்தது.* *31*

*1522. ' "கண்ணே வேண்டும்" என்னினும்*
*ஈயக் கடவேன்; என்*
*உள் நேர் ஆவி வேண்டினும், இன்றே*
*உனது அன்றோ? -*
*பெண்ணே! வண்மைக் கேகயன் மானே! -*
*பெறுவாயேல்,*
*மண்ணே கொள் நீ; மற்றையது ஒன்றும்*
*மற' என்றான்.*

**'பெண்ணே -** *'பெண்ணாகப் பிறந்தவளே!;* **வண்மைக் கேகயன் மானே -** *வள்ளன்மையுடைய கேகய மன்னன் மகளே!;* **கண்ணே வேண்டும் என்னினும் -** *என்கண்களையே (நீ)வேண்டும் என்றாலும்;* **ஈயக் கடவேன் -** *கொடுக்கக் கடமைப்பட்டுள்ளேன்;* **என் உள்நேர் ஆவி வேண்டினும் -** *எனது உடலின் உள்ளே நிலவும் உயிரை விரும்பினாலும்;* **இன்றேஉனது அன்றோ -** *இப்பொழுதே உன் வசமுள்ள தல்லவா?;* **பெறுவாயேல் -** *வரத்தைப் பெறவிரும்புவாயானால்;* **மண்ணே கொள்நீ -** *நாட்டை மட்டும் பெற்றுக் கொள்வாய்;* **மற்றையது ஒன்றும் மற -** *மற்றொரு வரத்தை மட்டும் மறந்துவிடு;'* **என்றான் -.**

*பெண்களுக்குரிய இரக்கம் உன்பால் இருக்க வேண்டுவதன்றோ என்னும் குறிப்போடு 'பெண்ணே' என்றும், உன் தந்தையின் வள்ளன்மை உனக்கும் இருத்தல் வேண்டுமன்றோ என்னும் கருத்தோடு 'வன்மைக் கேகயன் மானே' என்றும் கூறினான்.*

*கண்ணிற் சிறந்த உறுப்பு இல்லையாதலின் அதனையும், அக்கண்ணிற் சிறந்தது உயிராதலின் அதனையும் தருவதாகச் சொன்னான். உனது - குறிப்பு வினைமுற்று. மற்றையது- இராமனைக் காட்டிற்கு அனுப்புதல். அதனை வாயாற் சொல்லவும் அஞ்சி இவ்வாறு கூறினான். 32* ***1523. 'வாய் தந்தேன் என்றே; இனி,***

***யானோ அது மாற்றேன்;***
***நோய் தந்து என்னை***
***நோவன செய்து நுவலாதே;***
***தாய் தந்தென்ன, தன்னை இரந்தால்,***
***தழல் வெங் கண்***
***பேய் தந்தீயும்; நீ இது தந்தால்***
***பிழை ஆமோ?'***

***'யானோ வாய் தந்தேன் என்றேன் -*** *யான் வாயால் வரங்களைத் தந்தேன் என்றசொல்லிவிட்டேன்;* ***இனி அது மாற்றேன் -*** *இனி அதனைத் தவறமாட்டேன்;* ***என்னை நோய்தந்து -*** *எனக்கு வருத்தத்தைத் தந்து;* ***நோவன செய்து -*** *துன்புறத் தக்கவற்றைப் புரிந்து;* ***நுவலாதே -*** *(மேலும்) அத்தகைய சொற்களைச் சொல்லாதே;* ***தன்னை இரந்தால் -*** *தன்னை ஒருவர் இரந்து வேண்டினால்;* ***தாய் தந்து என்ன -*** *தாய் மனம் இரங்கித் தருவதுபோல;* ***தழல்வெம் கண் பேய் -*** *நெருப்புப் போலும் கொடிய கண்களையுடைய பேயும்;* ***தந்தீயும் -*** *கொடுக்கும்;* ***நீ இது தந்தால் -*** *நீ (யான் வேண்டும்) இதனைத்தருவாயானால்;* ***பிழை ஆமோ-*** *தவறாகுமோ?'*

*இரந்து கேட்டால் பேயும் தாய்போல இசையும் என்றால் பரதனுக்குத் தாயாகிய நீ இசைதல்தவறாகுமோ? என்றான். பேய் என்பதன்பின் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. தந்தீயும்- தரும்; வினைத் திரிசொல்.*
***33***

*கைகேயி மறுக்கத் தயரதன் மீண்டும் இரத்தல்*

***1524. இன்னே இன்னே பன்னி***
***இரந்தான் இகல் வேந்தன்;***
***தன் நேர் இல்லாத் தீயவள்***
***உள்ளம் தடுமாறாள்,***
***'முன்னே தந்தாய் இவ் வரம்;***
***நல்காய்; முன்வாயேல்,***
***என்னே? மன்னா! யார் உளர்***
***வாய்மைக்கு இனி?' என்றாள்.***

***இகல்வேந்தன் -*** *வெற்றியையுடைய அரசர்க்கரசனாகிய தயரதன்;* ***இன்னே இன்னேபன்னி இரந்தான் -*** *இவ்வாறாகப் பலமுறை சொல்லி வேண்டினான்;* ***தன் நேர் இல்லாத்தீயவள் -*** *தனக்கு நிகரில்லாத தீயவளான கைகேயி;* ***உள்ளம் தடுமாறாள் -*** *மனம்சிறிதும் இரங்கினாள் அல்லள்;* ***மன்னா -*** *அரசே;* ***இவ் வரம் முன்னே தந்தாய் -*** *இந்த வரங்களை முன்னர் வாயால் தந்துவிட்டாய்;* ***நல்காய் -*** *இப்போது செயற்படுத்தமாட்டாய்;* ***முனிவாயேல் -*** *கோபிப்பாயானால்;* ***என்னே -*** *என்னாவது?;*

***வாய்மைக்கு இனி யார் உளர்*** - *இனிமேல் வாய்மையைக் காப்பாற்றுதற்கு யார்இருக்கின்றார்?;'* ***என்றாள்*** -.

*தன் கணவன் எவ்வளவு இரந்து வேண்டியும் இரங்காமையின் 'தன் நேர் இல்லாத் தீயவள்' என்றார். 'தீயவை யாவையினும் சிறந்த தீயாள்' (1504) என்று முன்னர்க் குறித்தமை கருதத்தக்கது. நல்காய்என்பதனை முற்றெச்சமாக்கிச் செயற்படுத்தாமல் என்றும் பொருள் கொள்ளலாம். 'மன்னா? யார்உளர் வாய்மைக்கு இனி' என்பது இகழ்ச்சிக் குறிப்பு.* ***34***

***1525. அச் சொல் கேளா, ஆவி புழுங்கா,***
***அயர்கின்றான்,***
***பொய்ச் சொல் பேணா வாய்மொழி மன்னன்,***
***பொறை கூர,***
***'நச்சுத் தீயே பெண் உரு அன்றோ?'***
***என, நாணா,***
***முச்சு அற்றார்போல், பின்னும் இரந்தே***
***மொழிகின்றான்;***

***பொய்ச் சொல் பேணா*** - *பொய்யான சொற்களைப் போற்றாத;* ***வாய்மொழி மன்னன்***- *உண்மை மொழிகளைப் போற்றும் தயரதன்;* ***அச் சொல் கேளா*** - *அந்தச் சொற்களைக்கேட்டு;* ***ஆவி புழுங்கா*** - *உயிர் வெதும்பி;* ***அயர்கின்றான்*** - *சோர்ந்து;* ***பொறை கூர*** - *முன்னிலும் பொறுமை மேலிட;* ***நச்சுத் தீயே பெண் உரு அன்றோ' என*** - *'(கொல்லும் தன்மையுள்ள) நஞ்சும், தீயுமே இப்பெண்ணின் தோற்றமாக வந்துள்ளனவன்றோ' என்றுஎண்ணி;* ***நாணா***- *வெட்கமுற்று;* ***முச்சு அற்றார் போல்*** - *மூச்சு அடங்கியவரைப்போல இருந்து;* ***பின்னும் இரந்தே மொழிகின்றான்*** - *மேலும் இரத்தலை மேற்கொண்டேபேசுகின்றான்.*

*இது, கைகேயியின் இகழ்ச்சிக் சொல் கேட்ட தயரதன் உற்ற சோகத்தையும் தொடர்ந்து வேறுவழியின்றி அவனிடம் இரந்து நிற்றலையும் கூறுகிறது. பேணா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கேளா, நாணா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். கூர்- உள்ளது சிறத்தலாகிய குறிப்புணர்த்தும் உரிச்சொல். மூச்சு - மூச்சு என்பதன் குறுக்கல் விகாரம். 35*

***1526. 'நின் மகன் ஆள்வான்; நீ, இனிது ஆள்வாய்;***
***நிலம் எல்லாம்.***
***உன் வயம் ஆமே; ஆளுதி; தந்தேன்;***
***உரை குன்றேன்;***
***என் மகன், என் கண், என் உயிர்,***
***எல்லா உயிர்கட்கும்***
***நன்மகன் இந்த நாடு இறவாமை***
***நய' என்றான்.***

***'நின்மகன் ஆள்வான்-*** *'உனக்கு மகனாகிய பரதன் ஆட்சி புரிவான்;* ***நீ இனிதுஆள்வாய் -*** *நீ இன்பமாக அதிகாரம் செலுத்துவாய்;* ***நிலம் எல்லாம் -*** *மண்ணுலகம்முழுதும்;* ***உன் வயம் ஆமே -*** *உன் வழிப்பட்டதாக ஆகும்;* ***ஆளுதி -*** *ஆட்சிபுரிவாய்;* ***தந்தேன் -*** *கொடுத்தேன்;* ***உரை குன்றேன் -*** *பேச்சுத் தவறமாட்டேன்;* ***என்மகன் -*** *எனக்கு மகனும் ;* ***என் கண் -*** *எனக்குக் கண்போன்றவனும்;* ***என் மகன் -*** *அனைத்து உயிர்களுக்கும் சிறந்த பிள்ளை போன்றவனுமான இராமன்;* ***இந்த நாடு இறவாமை -*** *இந்த நாட்டை விட்டு வெளியேறாமை மட்டும்;* ***நய -*** *விரும்பிடுவாய்;'* ***என்றான் -.***

*இப்பாட்டின் பிற்பாதி தயரதன் இராமன்மீது கொண்டிருந்த அன்பின் மிகுதியையும், இராமன்சிறப்பையும் தெரிவிக்கிறது. 'உன் உயிர்க்கு என நல்லன் மன்னுயிர்க்கு எலாம்' (1350) எனவசிட்டன் உரைத்தது ஒப்பு நோக்கத்தக்கது.*
***36***

***1527. 'மெய்யே; என்தன் வேர்***
***அற நூறம் வினை நோக்கி***
***நையாநின்றேன், நாவும்***
***உலர்ந்தேன்; நளினம்போல்***
***கையான், இன்று, என்***
***கண் எதிர்நின்றும் கழிவானேல்,***
***உய்யேன்; நங்காய்! உன் அபயம்***
***என் உயிர்' என்றான்.***

***'மெய்யே -*** *'சத்திமே;* ***என்தன் வேர் அற நூறும் -*** *எனது மூலம் கெடும்படிஅழிக்கும்;* ***வினைநோக்கி -*** *எனது தீவினையை எண்ணி;* ***நையா நின்றேன் -*** *வருந்துகின்றேன்;* ***நாவும் உலர்ந்தேன் -*** *(உன்னோடு பேசிப் பேசி) நாக்கும் வறளப் பெற்றேன்;* ***இன்று -*** *இந்நாளில்;* ***நளினம் போல் கையான் -*** *தாமரை போலும் கைகளையுடைய இராமன்;* ***என் கண் எதிர்நின்றும் கழிவானேல் -*** *என் பார்வையினின்று நீங்கிக் காடு செல்வான்என்றால்;* ***உய்யேன் -*** *யான் பிழைத்திருக்கமாட்டேன்;* ***நங்காய் -*** *(ஆதலால்)பெண்ணே!;* ***என் உயிர் உன் அபயம் -*** *என்னுடைய உயிர் உன் அடைக்கலம் ஆகும்';* ***என்றான்-.***

*தயரதன் இராமன் காடு சென்றால் தன் உயிர் நீங்கிவிடும் என்பதனைத் தெரிவித்துத் தன்னைக்காத்திடுமாறு கைகேயியை வேண்டினான். 37 கைகேயி 'வரத்தைத் தவிருமாறு கூறுதல் அறமோ?' எனல்*

***1528. இரந்தான் சொல்லும் இன் உரை கொள்ளான்.***
***முனிவு எஞ்சாள்,***
***மரம்தான் என்னும் நெஞ்சினள், நாணாள்,***
***வசை பாராள்,***
***'சரம் தாழ் வில்லாய்! தந்த வரத்தைத்***
***"தவிர்க்" என்றல்,***

***உரம்தான் அல்லால், நல் அறம் ஆமோ?***
***உரை' என்றாள்.***

**இரந்தான் சொல்லும் இன் உரை கொள்ளாள் -** *தயரதன் தன் பால் குறையிரந்துசொல்லும் இனிய சொற்களைக் கேளாதவளும்;* **முனிவு எஞ்சாள் -** *கோபம் தணியாதவளும்;* **மரம்தான் என்னும் நெஞ்சினள் -** *மரம் என்று சொல்லத்தக்க வன்மையான மனத்தைக் கொண்டவளும்;* **நாணாள் -** *வெட்கம் இல்லாதவளும்;* **வசை பாராள் -** *பழியைப் பற்றிக் கவலைப்படாதவளுமானகைகேயி;* **'சரம் தாழ் வில்லாய் -** *(தயரதனைத் பார்த்து) 'அம்புகள் தங்கும் வலியவில்லையுடையே அரசே!;* **தந்த வரத்தைத் 'தவிர்க' என்றல் -** *முன்பு கொடுத்த வரத்தை விட்டுவிடு என்று வேண்டுவது;* **உரம்தான் அல்லால் -** *மன வலிமையேயன்றி;* **நல் அறம் ஆமோ உரை -** *நல்ல தருமம் ஆகுமோ சொல்லாய்;'* **என்றாள்-.**

*கைகேயியின் வலிய நெஞ்சுக்கு மரத்தை உவமையாகச் சொன்னார் - திருத்தற்கு அரிதாதலின்.இரும்பாயின் நெருப்புக்கு இளகும்; மரமோ சாம்பலாகுமோ தவிரநெகிழாது. கைகேயி நெகிழாமல் நின்றமை உணர்த்தப்பட்டது கொள்ளாள், நெஞ்சினள், நாணாள், பாராள் - வினையாலணையும் பெயர்கள்.* ***38***

*மண்ணில் விழுந்து, மன்னன் புலம்புதல்*

***1529. கொடியாள் இன்ன கூறினள்; கூற,***
***குல வேந்தன்,***
***'முடி சூடாமல் வெம்பரல்***
***மொய் கானிடை, மெய்யே***
***நெடியான் நீங்க, நீங்கும் என்***
***ஆவி இனி' என்னா,***
***இடி ஏறுண்ட மால் வரைபோல்,***
***மண்ணிடை வீழ்ந்தான்.***

**கொடியாள் -** *கொடியவளான கைகேயி;* **இன்ன கூறினள் -** *இப்படிப்பட்டவற்றைச்சொன்னாள்;* **கூற -** *சொல்ல;* **குல வேந்தன் -** *சிறந்த மன்னர் மன்னனாகிய தயரதன்;* **இனி -** *இனிமேல்;* **நெடியான் -** *இராமன்;* **முடிசூடாமல் -** *மகுடம் சூட்டிக்கொள்ளாமல்;* **வெம்பரல் மொய் கானிடை நீங்க -** *கொடிய பருக்கைக் கற்கள் நிறைந்த காட்டில் உறையச்செல்ல;* **மெய்யே என் ஆவி நீங்கும் என்ன-** *உண்மையாக என் உயிர் பிரியும் என்றும் சொல்லி;* **இடி ஏறுண்ட மால்வரை போல -** *இடியினை ஏற்ற பெரிய மலையைப்போல;* **மண்ணிடை - பூமியில்;** **வீழ்ந்தான் -** *சாய்ந்தான்.*

*திருமாலாதலின் இராமன் நெடியோன் என்று குறிக்கப்பெற்றான். ஏறுண்ட - தாக்கப்பட்ட; 'இடிஏறு உண்ட' எனப் பிரித்தும் 'பேரிடி வீழ்ந்த' எனப் பொருள் உரைப்பாரும் உண்டு. 'காத்தலும்'என்ற பாடத்தினும் 'வெம்பரல்' என்று பாடமே சரி.* ***39***

***1530. வீழ்ந்தான்; வீழா, வெந் துயரத்தின்***
***கடல் வெள்ளத்து***
***ஆழ்ந்தான்; ஆழா, அக் கடலுக்கு***
***ஓர் கரை காணான்;***
***சூழ்ந்தாள் துன்பம் சொற்***
***கொடியாள், சொல்கொடு நெஞ்சம்***
***போழ்ந்தாள், உள்ளப் புன்மையை***
***நோக்கிப் புலர்கின்றான்.***

***வீழ்ந்தான் -*** *(தயரதன்) மண்ணில் விழுந்தான்;* ***வீழா -*** *விழுந்து;* **வெம் துயரத்தின் கடல் வெள்ளத்து -** *கொடிய துயரமாகிய கடலின் வெள்ளத்தில்;* ***ஆழ்ந்தான்-*** *அமுந்தினான்;* ***ஆழா -*** *அழுந்தி;* ***அக்கடலுக்கு ஓர் கரை காணான் -*** *அந்தக்கடலுக்கு ஒர் எல்லை காணாதவன் ஆனான்;* **துன்பம் சூழ்ந்தாள் -** *தனக்குப் பெருந்துன்பத்தைச் சூழ்ந்துகொண்டவளும்;* **சொல் கொடியாள் -** *கொடிய சொற்களையுடையவளும்;* **சொல்கொடுநெஞ்சம் போழ்ந்தாள் -** *தன் பேச்சால் மனத்தைப் பிளந்தவளுமான கைகேயியின்;* **உள்ளன்புன்மையை நோக்கிப் -** *மனத்தின் சிறுமையை எண்ணி;* **புலர்கின்றான் -** *வாடுகின்றான்.*

*துயரத்தைக் கடலாக உருவகித்ததற்கு ஏற்பக் 'கரை காணான்' என்றார். வீழ்ந்தான் - வினைமுற்று. சூழ்ந்தாள், கொடியாள், போழ்ந்தாள் - வினையாலணையும் பெயர்கள்.* ***40***

***1531. ' "ஒன்றாநின்ற ஆர் உயிரோடும்,***
***உயர் கேள்வர்***
***பொன்றா முன்னம் பொன்றினர்"***
***என்னும் புகழ் அல்லால்,***
***இன்று ஓர்காறும், எல் வளையார்,***
***தம் இறையோரைச்***
***கொன்றார் இல்லை; கொல்லுதியோ நீ? -***
***கொடியோளே!***

**'எல் வளையார் -** *ஒளி பொருந்திய வளையலையுடைய மகளிர்;* **ஒன்றா நின்ற ஆர்உயிரோடும் -** *உடலோடு ஒன்று சேர்ந்த அரிய உயிருடனே;* ***உயர் கேள்வர் -*** *தம்உயர்ந்த கணவர்;* **பொன்றா முன்னம் பொன்றினர் -** *இறப்பதற்கு முன்னே தாங்கள் இறந்தனர்;* **என்னும் புகழ் அல்லால் -** *எனப்படும் கீர்த்தியைக் கொண்டனரேயன்றி;* **இன்றுகாறும்-** *இன்றுவரை;* **தம் இறையோரைக் கொன்றார் இல்லை -** *தம் கணவரைக் கொலை செய்தவர்இல்லை;* **கொடியாளே-** *கொடுமையுள்ளங் கொண்டவே!;* **நீ கொல்லுதியோ -** *(அவ்வுலகஇயல்புக்கு மாறாக) நீ (என்னைக்) கொல்லுகின்றாயோ -'*

*இது முதல் ஐந்து பாடல்கள் ஒரு தொடர். 45 ஆம் பாட்டொடு முடியும். அப்பாட்டில் வரும் தோளான்என்பது இவற்றிற்கு எழுவாய். இன்று ஓர் காறும்; ஓர் - அசை.*

*இதுவரை கணவனைக் கொன்ற மகளிர் இல்லை. நீ கணவனாகிய என்னைக் கொல்லுகின்றாய் ஆதலின்உன்போலக் கொடியவர் உண்டோ என்று தயரதன் கைகேயியை இகழ்ந்தான். பத்தினிப் பெண்டிர்கணவன் இறந்தபின் உயிர்வாழா இயல்பினர் என்று நூல்கள் கூறும்.*

***"பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்பு அற***
***வள்இதழ் அவிழ்ந்த தாமரை***
***நள்இரும் பொய்கையும் தீயும் ஓர் அற்றே"*** ***(புறம் 246)***

***"தன் உயிர் கொண்டு அவன் உயிர் தேடினள் போல்,***
***பெருங் கோப்பெண்டும் ஒருங்கு உடன் மாய்ந்தனன்"***
***(சிலம்பு 3:25: 85 - 86)***

***"காதலர் இறப்பின் கனைஎரி பொத்தி,***
***ஊது உலைக் குருகின் உயிர்த்து அகத்து அடங்காது***
***இன்உயிர் ஈவர்; ஈயார் ஆயின்,***
***நன்நீர்ப் பொய்கையின் நளிஎரி புகுவர்"***
***(மணிமேகலை; 2:42 - 48)***

***"தரைமகளும் தன்கொழுநன் உடலம் தன்னைத்***
***தாங்காமல் தன்கரத்தால் தாங்கி விண்நாட்டு***
***அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்***
***ஆவி ஒக்க விடுவாளைக் காண்மின் காண்மின்"***
***(கலிங்கத்துப் பரணி, 483)***

***"போரில்,***
***விடன் ஏந்தும் வேலாற்கும் வெள்வளையினாட்கும்***
***உடனே உலந்தது உயிர்"***
***(புறப்பொருள் வெண்பா மாலை: (262)***

*ஆகியவை காணத்தக்கன.* *41* ***1532. 'ஏவம் பாராய்; இல் முறை நோக்காய்;***
***அறம் எண்ணாய்;***
***"ஆ!" என்பாயோ அல்லை; மனத்தால்***
***அருள் கொன்றாய்;***
***நா அம்பால், என் ஆர் உயிர் உண்டாய்;***
***இனி, ஞாலம்***
***பாவம் பாராது, இன் உயிர்***
***கொள்ளப் படுகின்றாய்!***

***'ஏவம் பாராய் -*** *(என்) துன்பத்தைப் பார்க்கின்றாய் அல்லை;* ***இல் முறை நோக்காய்-*** *நற்குடிப் பிறந்த பெண்ணின் நடைமுறையையும் கருதுவாய் அல்லை;* ***அறம்***

***எண்ணாய் -*** *தருமத்தையும் நினைக்க மாட்டாய்;* ***ஆ என்பாயோ அல்லை -*** *ஐயோ என்று இரங்குவாயும் அல்லை;* ***மனத்தால் அருள் கொன்றாய் -*** *உன் மனத்தில் அருள் என்னும் பண்பையே கொன்றுவிட்டாய்;* ***என் ஆர் உயிர் -*** *என்னுடைய அரிய உயிரையும்;* ***நா அம்பால் உண்டாய் -*** *உன் நாக்காகியஅம்பினால் கொன்றாய்;* ***இனி ஞாலம் பாவம் பாராது -*** *இனி இவ் வுலகத்து மக்களால் (பெண்கொலை)பாவம் என்று பாராமல்;* ***இன் உயிர் கொள்ளப் படுகின்றாய் -*** *உன் இனிய உயிரைக்கொள்ளப்படப் போகின்றாய்.*

*பெண்ணிற்குரிய எந்த நற்பண்பும் இல்லாத உன்னை உலகத்தாரே கொன்றொழிப்பர் என்கிறான்.ஏவம் - எவ்வம் என்பதன் விகாரம் மனத்தால் அருள் - உருபு மயக்கம். உண்டாய் - தெளிவு பற்றிவந்தகால வழுவமைதி.*
*42*

***1533. 'ஏண்பால் ஓவா நாண்,***
***மடம், அச்சம், இவையே தம்***
***பூண்பால் ஆகக் காண்பவர் நல்லார்;***
***புகழ் பேணி***
***நாண்பால் ஓரா நங்கையர்***
***தம்பால் நணுகாரே;***
***ஆண்பாலாரே; பெண்பால்***
***ஆரோடு அடைவு அம்மா?***

***'ஏண்பால் ஓவா -*** *பெருமையின் பகுதியிலிருந்து நீங்காத;* ***நாண், மடம் அச்சம்-*** *நாணம், மடம், அச்சம் முதலிய;* ***இவை தம் பூண்பால் ஆக*** *- இவற்றைத் தம்முடையஅணிகலன்களாக;* ***காண்பவர் நல்லார் -*** *கருதுபவர் நற்பெண்டிர் ஆவர்;* ***புகழ் பேணி -*** *புகழை விரும்பி;* ***நாண்பால் ஓரா நங்கையர் -*** *நாணத்தின் தன்மையை அறியாத மகளிர்;* ***தம் பால் நணுகாரே*** *- தம் இனத்தில் சேர்ந்தவர் ஆகார்;* ***ஆண்பாலாரே -*** *(அவர்கள்) ஆண்மக்களே;* ***பெண்பால் ஆரோடு அடைவு அம்மா -*** *பெண்ணினத்தில் யாரோடுசார்ந்தவர் ஆவார்?' (ஒருவரோடும் சார்ந்தவர் அல்லர்)*

*பெண்களுக்குரிய சிறந்த பண்புகள் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன. உபலட்சணத்தால் பயிர்ப்பும் கொள்ளத் தக்கது. நாணம் - தகாதவற்றின்கண்உள்ளம் ஒடுங்குதல்; மடம் - அனைத்தும் அறிந்தும் அறியாதது போல் இருத்தல்; அச்சம் - என்றும்காணாததைக் கண்டவிடத்து அஞ்சுதல்; பயிர்ப்பு - தன் கணவன் அல்லாதவரின் கைமுதலியன மேற்படின் அருவருத்தல். ஆண்பாலாரே - ஏகாரம் தேற்றம்; நணுகாரே - ஏகாரம் அசை; அம்மா - வியப்பிடைச்சொல்.* *43*

***1534. 'மண் ஆள்கின்றார் ஆகி,***
***வலத்தால் மதியால் வைத்து***
***எண்ணா நின்றார் யாரையும்,***
***எல்லா இகலாலும்,***
***விண்ணோர்காறும், வென்ற எனக்கு,***
***என் மனை வாழும்***

***பெண்ணால் வந்தது, அந்தரம்***
***என்னப் பெறுவேனோ?'***

***'மண் ஆள்கின்றார் ஆகி*** *- நாட்டை ஆளுகின்ற அரசர்களாகப் பட்டம் ஏற்று;* ***வலத்தால் -*** *வலிமையாலும்;* ***மதியால் -*** *அறிவினாலும்;* ***வைத்து எண்ணாநின்றார்யாரையும் -*** *மேலாக வைத்துப் போற்றப்படுகின்ற அரசர்கள் எல்லாரையும்;* ***விண்ணோர்காறும்-*** *தேவர்கள் வரையிலும்;* ***எல்லா இகலாலும் -*** *எல்லாப் போரிலும்;* ***வென்ற எனக்கு-*** *வெற்றி கொண்ட எனக்கு;* ***என்மனை வாழும் பெண்ணால் -*** *என் அரண்மனையில் வாழும்பெண்ணினால்;* ***அந்தரம் வந்தது என்னப் பெறுவேனோ -*** *முடிவு நேர்ந்தது என்று சொல்லத்தக்க நிலையை அடைவேனோ!'*

*வலமும் மதியும் நிறைந்த மன்னர்களை வென்ற எனக்கு அவையில்லாத மனைவியால்முடிவுவந்துவிடுமோ என்கிறான். மனை வாழும் பெண் - மனைவி இகலால் - உருபுமயக்கம். 44*

***1535. என்று, என்று, உன்னும்;***
***பன்னி இரக்கும்; இடர் தோயும்;***
***ஒன்று ஒன்று ஒவ்வா இன்னல்***
***உழக்கும்; 'உயிர் உண்டோ?***
***இன்று! இன்று! ' என்னும்***
***வண்ணம் மயங்கும்; இடையும் - பொன் -***
***குன்று ஒன்று ஒன்றோடு***
***ஒன்றியது என்னக் குவி தோளான்.***

***பொன்குன்று ஒன்று -*** *பொன்மலை ஒன்று;* ***ஒன்றோடு ஒன்றியது என்ன -*** *மற்றொருபொன்மலையோடு கூடியது என்னுமாறு;* ***குவி தோளான்*** *- திரண்ட தோள்களையுடைய தயரதன்;* ***என்று என்று உன்னும் -*** *முற்கூறியவாறு பலபடியாக நினைப்பான்;* ***பன்னி இரங்கும் -*** *வாயினால் பல சொல்லி வருந்துவான்;* ***இடர் தோயும்-*** *துன்ப வெள்ளத்தில் அழுந்துவான்;* ***ஒன்று ஒன்று ஒவ்வா -*** *ஒன்றோடு ஒன்று பொருந்தாத;* ***இன்னல் உழக்கும் -*** *பலவகைத்துன்பங்களால் வருந்துவான்;* ***உயிர் உண்டோ -*** *மூச்சு இருக்கிறதோ;* ***இன்று இன்று என்னும்வண்ணம் -*** *இல்லை இல்லை என்று கூறும்படி;* ***மயங்கும் -*** *மூர்ச்சையுறுவான்;* ***இடையும்-*** *(நெஞ்சம்) உடைவான்.*

*தோய்தல் என்னும் வினைக்கு ஏற்றவாறு இடர் வெள்ளமாக உரைக்கப் பட்டது. 'பொன் குன்றுஒன்று ஒன்றோடு ஒன்றியது என்ன' - இல்பொருள் உவமை.*
*45*

*கைகேயி, 'உரை மறுத்தால் உயிர் விடுவேன்' எனல்*

***1536. ஆழிப் பொன் - தேர் மன்னவன்***
***இவ்வாறு அயர்வு எய்தி,***
***பூழிப் பொன் - தோள் முற்றும் அடங்கப்***
***புரள் போழ்தில்,***

***"ஊழின் பெற்றாய்" என்று உரை; இன்றேல்,***
***உயிர் மாய்வென்;***
***பாழிப் பொன் - தார் மன்னவ!' என்றாள்,***
***பசை அற்றாள்.***

***ஆழிப் பொன் தேர் மன்னவன்*** *- சக்கரங்களையுடைய பொன்னால் ஆகிய தேரையுடையதயரதன்;* ***இவ்வாறு அயர்வு எய்தி*** *- இப்படித் தளர்ச்சி அடைந்து;* ***பொன் தோள் முற்றும்பூழி அடங்க*** *- அழகிய தன் தோள்கள் முழுவதும் புழுதி போர்க்க;* ***புரள் போழ்தில்*** *- (தரையில்) உருளும்போது;* ***பசை அற்றாள்*** *- நெஞ்சில் ஈரமில்லாத கைகேயி;* ***'பாழி பொன் தார் மன்னவ*** *- பெருமை பொருந்திய பொன் மாலை அணிந்த அரசே;* ***ஊழின் பெற்றாய்*** *- முறையாகப் பெற்றாய்;* ***என்று உரை*** *- என்று உன்வாயால் சொல்;* ***இன்றேல்*** *- அவ்வாறு சொல்லாவிட்டால்;* ***உயிர் மாய்வென்*** *- நான் உயிரைப் போக்கிக்கொள்வேன்;'* ***என்றாள் -.***

*இப்பாட்டு, கைகேயியின் கல்நெஞ்சைக் காட்டுகிறது. 'மன்னவ' என்னும் விளி சொன்னசொல்லைக் காத்தலும், அறத்தைப் போற்றுதலும் அரசனாகிய உன் கடமை ஆகும். அதனைச் செய்க என்னும் கருத்தைக் காட்டுகிறது. ஆழிப் பொன் தேர் மன்னவன்என்பதில் தசரதன் என்பதன் பொருள் அடங்கியிருக்கிறது. பூழி - புழுதி. பசை - ஈரம், இரக்கம்.* ***46***

***1537. 'அரிந்தான், முன் ஓர் மன்னவன்***
***அன்றே அரு மேனி,***
***வரிந்து ஆர் வில்லாய்! வாய்மை வளர்ப்பான்!***
***வரம் நல்கி,***
***பரிந்தால், என் ஆம்?' என்றனள் -***
***பாயும் கனலேபோல்,***
***எரிந்து ஆறாதே இன் உயிர் உண்ணும்***
***எரி அன்னாள்.***

***பாயும் கனலேபோல்*** *- பரந்து எரியும் தீயைப்போல;* ***எரிந்து ஆறாதே*** *- எரிந்துதணியாமல்;* ***இன்உயிர் உண்ணும்*** *- இனிய உயிரை அழிக்கின்ற;* ***எரி அன்னாள்*** *- நெருப்புப் போன்ற கைகேயி;* ***'வரிந்து ஆர் வில்லாய்*** *- இறுக்கிக் கட்டப்பட்டவில்லை உடையவனே!;* ***முன் ஓர் மன்னவன்*** *- உன் குலத்தில் முன்பு தோன்றிய ஓர் அரசன்;* ***வாய்மை வளர்ப்பான்*** *- சத்தியத்தைக் காப்பதற்காக;* ***அருமேனி அரிந்தான் அன்றே-*** *அரிய தன் உடலை அரிந்து கொடுத்தான் அல்லவா?;* ***வரம் நல்கி*** *- (அவ்வாறிக்க) நீ முன்னே வரத்தைத் தந்துவிட்டு;* ***பரிந்தால் என் ஆம்*** *- இப்போது வருந்தினால் என்னபயன் உண்டாகும்;'* ***என்றனள்-.***

*வாய்மை காக்க அருமேனி அரிந்த மன்னவன் சிபிச் சக்கரவர்த்தி ஆவான். ஒரு பொருளைக்பற்றி எரித்த பின் தீயானது தணிந்துவிடுவதாய் இருக்கக் கைகேயியாகிய தீயோ உயிரோடு கூடியமன்னவனைப் பற்றி எரித்தும் தணியாது அவன் உயிரையும் கொள்ளுகிறது என வேற்றுமையணி தோன்ற, எரிந்து ஆறாதே இன் உயிர் உண்ணும் எரி அன்னால்' என்றார்.* ***47***

*தயரதன் வரம் தருதல்*

***1538. 'வீய்ந்தாளே இவ் வெய்யவள்' என்னா,***
***மிடல் வேந்தன்***
***'ஈந்தேன்! ஈந்தேன்! இவ் வரம்;***
***என் சேய் வனம் ஆள,***
***மாய்ந்தே நான் போய் வான் உலகு***
***ஆள்வென்; வசை வெள்ளம்***
***நீந்தாய், நீற்தாய், நின்***
***மகனோடும் நெடிது!' என்றான்.***

***மிடல் வேந்தன் -** வலிமை பொருந்திய தயரதன்; **'இவ் வெய்யவன் வீய்ந்தாளேஎன்னா -** இந்தக் கொடியவள் நாம் உடன்படாவிட்டால் இறுந்துவிடுவான் என்று கருதி;' **இவ் வரம் ஈந்தேன் ஈந்தேன் -** இந்த வரங்களைக் கொடுத்தேன்,கொடுத்தேன்; **என் சேய் வனம் ஆள -** என் மகன் இராமன் காட்டை ஆள; **நான் மாய்ந்துபோய் -** யான் இறந்துபோய்; **வான் உலகு ஆள்வென் -** விண்ணுலகை ஆள்வேன்; **நெடிது-** நெடுங்காலம்; **நின் மகனோடும் -** (நீ) நின் பிள்ளையாகிய பரதனுடன் கூடி; **வசை வெள்ளம் -** பழியாகிய கடலை; **நீந்தாய் நீந்தாய் -** கடக்க முடியாமல் அதனுள்நீந்திக்கொண்டே இருப்பாய்;' **என்றான் -.***

*தயரதன், வரம் தராவிட்டால் கைகேயி உயிரை விடுதல் உறுதி என்று அஞ்சி, 'ஈந்தேன், ஈந்தேன்' என்று விரைந்து கூறினான். இவ் அடுக்கு - தேற்றத் தையும் வெகுளியையும் காட்டுவது. வீய்ந்தாள்- துணிவு பற்றி இறந்த காலத்தில் கூளினார்.*
***48***

*தயரதன் துயர் கொள்ள, கைகேயி துயிர் கொள்ளல்*

***1539. கூறா முன்னம், கூறுபடுக்கும் கொலை வாளின்***
***ஏறு ஆம் என்னும் வன் துயர் ஆகத்திடை மூழ்க,***
***தேறான் ஆகிச் செய்கை மறந்தான்; செயல் முற்றி,***
***ஊறா நின்ற சிந்தையினாளும் துயிலுற்றாள்.***

***கூறா முன்னம் -** (தயரதன் இவ்வரத்தை ஈந்தேன் என்று, கூறி முடிப்பதற்குள் முன்னே; **கூறுபடுக்கும் -** இரு கூறாகப் பிளக்கின்ற; **கொலைவாளின் ஏறு ஆம் என்னும் -** கொலைத் தொழிலையுடைய வாளின் தாக்குதலோடு ஒத்ததாகும் என்று சொல்லத்தக்க; **வன் துயர் ஆகத்து இடை மூழ்க -** கொடிய துன்பம் மனத்தில் புக; **தேறான் ஆகி -** உணர்வற்றவன்ஆகி; **செய்கை மறந்தான் -** செயல்மறந்து மயங்கினான்; **செயல்முற்றி -** (தன்காரியம்) முடிவுற்றதனால்; **ஊறா நின்ற சிந்தையினாளும் -** மகிழ்ச்சி ஊறுகின்ற மனமுடையகைகேயியும்; **துயிலுற்றாள் -** உறங்கினாள்.*

*இப்பாட்டில், தயரதன் துயரினால் செயலற்றுக் கிடக்க, கைகேயி மகிழ்ச்சியினால் மெய்ம்மறந்துதூங்கினாள் எனக் துயருற்றார்க்கும் மகிழ்ச்சியடைந்தார்க்கும் ஒரேநிலை நிகழ்ந்த தன்மை கூறப்பட்டது.வாள் ஏறு - வாளின் தாக்குதல். இடியேறு*

*என்பது போல, செயல் முற்றலாவது - தான் வேண்டிய வரங்களைப்பெற்றுக்கொண்டது.* ***49***

இரவு கழிதல்

எழுசீர் ஆசிரிய விருத்தம்

***1540. சேண் உலாவிய நாள் எலாம் உயிர்ஒன்று***
***போல்வன செய்து, பின்***
***ஏண் உலாவிய தோளினான் இடர் எய்த,***
***ஒன்றும் இரங்கிலா***
***வாள் நிலா நகை மாதராள் செயல் கண்டு,***
***மைந்தர் முன் நிற்கவும்***
***நாணினாள் என ஏகினாள் -***
***நளிர் கங்குல் ஆகிய நங்கையே.***

***சேண் உலாவிய நாள் எலாம் -*** *நீட்சி பொருந்திய மிகப் பல நாளும்;* ***உயிர்ஒன்று போல்வன செய்து -*** *இருவருக்கும் உயிர் ஒன்றே என்று சொல்லத்தக்க செயல்களைப் புரிந்து;* ***பின் -*** *பிறகு;* ***ஏண் உலாவிய தோளினான் -*** *வலிமை பொருந்திய தோள்களையுடையகணவன்;* ***இடர் எய்த -*** *துன்பத்தை அடைய;* ***ஒன்றும் இரங்கிலா -*** *அது கண்டுசிறிதும் மனம் நெகிழாத;* ***வாள் நிலா நகை மாதராள் -*** *ஒளிமிக்க பற்களையுடைய கைகேயியின்;* ***செயல்கண்டு -*** *தீச்செயலைப் பார்த்து;* ***நளிர் கங்குல் ஆகிய நங்கை -*** *குளிர்ந்தஇரவாகிய பெண்;* ***மைந்தர்முன் நிற்கவும் நாணினாள் என -*** *ஆடவர் முன்னே நிற்பதற்கும்வெட்கமுற்றாள் என்னும்படி;* ***ஏகினாள் -*** *அகன்று போனாள் (இரவு கழிந்தது)*

*சேண் உலாவிய நாள் எலாம் - நீண்ட காலமாக; பல ஆண்டுகளாக; அஃதாவது திருமணம் ஆனதுமுதல்அதுவரை உள்ள நிண்ட காலம். இவ்வளவு காலமும் ஈருடலும் ஒருயிரும் போலக் கணவனுடன் ஒன்றுபட்டு அவன் இன்பத்தில் தான் இன்புற்றும், அவன் துன்பத்தில் தான் துன்புற்றும் வாழ்ந்தவள் இப்போதுமாறுபட்டு இரக்கமின்றி அவன் பெருந் துயரத்திற்கும் காரணமாகிப் பழியேற்றது கண்டு, அது பெண்குலத்திற்கேஇழுக்க என்று கருதிக் கங்குலாகிய நங்கை ஆடவர் முன் நின்றகவும் நாணி அகன்றாள். தற்குறிப்பேற்றஅணி. வாள்நிலா - ஒரு பொருட் பன்மொழி. நிற்கவும் - உம்மை இழிவு சிறப்பு.* ***50***

***1541. எண் தரும் கடை சென்ற***
***யாமம் இயம்புகின்றன - ஏழையால்,***
***வண்டு தங்கிய தொங்கல் மார்பன்***
***மயங்கி விம்மியவாறு எலாம்***
***கண்டு, நெஞ்சு கலங்கி, அம் சிறை ஆன***
***காமர் துணைக் கரம்***
***கொண்டு, தம் வயிறு எற்றி எற்றி விளிப்ப***
***போன்றன - கோழியே.***

***எண்தரும் கடை சென்ற யாமம் -*** எண்ணப்படுகிற யாமங்களில் கடைசியாய் வந்த யாமத்தில்; ***இயம்புகின்றன கோழி -*** கூவுகின்றன வாகிய கோழிகள்; ***ஏழையால் -*** அறிவற்றவளானகைகேயியால்; ***வண்டு தங்கிய தொங்கல் மார்பன் -***வண்டுகள் மொய்க்கின்ற மாலையை அணிந்த மார்பினையுடைய தயரதன்; ***மயங்கி -*** அறிவு அழிந்து; ***விம்மியவாறு எலாம் கண்டு -*** புலம்பியவற்றை எல்லாம் பார்த்து; ***நெஞ்சு கலங்கி -*** மனம் கலங்கி; ***அம் சிறை ஆன -*** அழகிய சிறகுகளாகிய; ***காமர் துணைக் கரம்கொண்டு-*** அழகிய இரு கைகளால்; ***தம் வயிறு எற்றி எற்றி -*** தம் வயிற்றில் பலமுறை அடித்துக்கொண்டு; ***விளிப்ப போன்றன -*** அழுவன போன்றிருந்தன.

*இது முதல் பதினாறு பாடல்களில் வைகறைப் பொழுதில் நிகழும் நிகழ்ச்சிகள் புனைந்துரைக்கப்படுகின்றன. வைகறையில் இயல்பாகக் கூவும் கோழிகள் கைகேயியால் துன்புற்ற தயரதனைப் பார்த்து அடித்துக்கொண்டு அழுவன போன்றிருந்தன என்பது தற்குறிப்பேற்ற அணி. இந்த அணிக்கு, 'சிறை ஆன காமர் துணைக்கரம் என வரும் உருவக அணி அங்கமாய் அமைந்தது. கோழி - பால்பகா அஃறிணைப் பெயர். ஏ - ஈற்றசை.*

***ஒப்பு:*** ***தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாம்***
***கையால் வயிறலைத்துக் காரியருள்வாய் - வெய்யோனை***
***வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்***
***கூவினவே கோழிக் குலம் (நளவெண்பா 280)*** ***51***

***1542. தோய் கயத்தும், மரத்தும், மென் சிறை துள்ளி,***
***மீது எழு புள் எலாம்***
***தேய்கை ஒத்த மருங்குல் மாதல் சிலம்பின்***
***நின்று சிலம்புவ -***
***கேகயத்து அரசன் பயந்த விடத்தை,***
***இன்னது ஓர் கேடு சூழ்***
***மா கயத்தியை, உள் கொதித்து,***
***மனத்து வைவன போன்றவே.***

***தோய் கயத்தும் -*** நீராடும் குளங்களிலிருந்தும்; ***மரத்தும் -*** மரங்களிலிருந்தும்; ***மென் சிறை துள்ளி -*** மெல்லிய சிறகுகளால் குதித்துக்கொண்டு; ***மீது எழு புள் எலாம் -*** வானத்தில் பறக்கின்ற பறவைகள் எல்லாம்; ***தேய்கை ஒத்த மருங்குல் -*** தேய்வு பொருந்திய சிற்றிடையையுடைய; ***மாதல் சிலம்பின் நின்று -*** பெண்களின் பாதச் சிலம்புகள்போலிருந்து; ***சிலம்புவ -*** ஒலிப்பவை; ***கேகயத்து அரசன் பயந்த விடத்தை -*** கேகேய மன்னன் பெற்றெடுத்த விடம்போன்றவளை; ***இன்னது ஓர்கேடு சூழ் -*** இத்தகைய கெடுதியைச்சூழ்ந்து செய்த; ***மா கயத்தியை -*** மிக்க கீழ்மையுடையவளை; ***உட்கொதித்து -*** உள்ளம் புழுங்கி; ***மனத்து வைவன போன்ற -*** மனத்திற்குள் ஏசுவனவற்றை ஒத்திருந்தன; ***ஏ -*** அசை.

*பறவைகள் விடியற் காலத்தில் ஒலிப்பதைக் கைகேயி செயல்கண்டு அவளைத் தம் மனத்தினுள் வைவது போலும் என்றார். இது தற்குறிப்பற்ற அணி, கணவன் உயிரை*

*வாங்கக் காரணமாதலின்‘விடத்தை’ என்றார். கயத்தி - கயவன் என்பதன் பெண்பால்; கீழ்மையுடையவள். அவள் செயலின் கொடுமை நோக்கி ‘மா கயத்தி’ என்றார். ஏ - அசை* ***52***

*யானைகள் துயில் ஒழிந்து எழுதல்*

***1543. சேமம் என்பன பற்றி, அன்பு திருந்த***
***இன் துயில் செய்தபின்,***
***‘வாம மேகலை மங்கையொடு வனத்துள்,***
***யாரும் மறக்கிலா***
***நாம நம்பி, நடக்கும்’ என்று***
***நடுங்குகின்ற மனத்தவாய்,***
***‘யாமும் இம் மண் இறத்தும்’***
***என்பனபோல் எழுந்தன - யானையே.***

***யானை -*** *யானைகள்;* ***சேமம் என்பன பற்றி -*** *தமக்குப் பாதுகாப்பான கூடங்களில்பொருந்தி;* ***அன்பு திருந்த இன்துயில் செய்தபின் -*** *இராமபிரானிடத்து அன்பு மிக இனிதுதூக்கத்தைச் செய்த பின்பு;* ***வாம மேகலை மங்கையொடு -*** *அழகிய மேகலை அணிந்த சீதை யோடு;* ***யாரும் மறக்கிலா நாம நம்பி -*** *எவரும் மறக்க முடியாத திருப்பெயரை உடைய இராமபிரான்;* ***வனத்துள் நடக்கும் என்று -*** *காட்டிற்குச் செல்வான் என்று;* ***நடுங்குகின்ற மனத்தவாய்-*** *வருந்துகின்ற நெஞ்சையுடையவனவாய்;* ***‘யாமும் இம் மண் இறத்தும் -*** *நாமும் இந்த நாட்டைவிட்டுச் செல்வோம்;’* ***என்பன போல் -*** *என்று கூறுவன போல;* ***எழுந்தன -*** *கிளம்பின.*

*யானைகள் எழுந்ததை, இராமபிரான் நாட்டை விட்டுக் காட்டுக்குச் செல்லப் போவதனால் நாமும்இந்நாட்டைவிட்டுச் செல்வோம் என எழுந்தது போலத் தோன்றியது என்கிறார். இது தற்குறிப்பேற்றஅணி. சேமம் - கூட்டு மிடம்; கூடம். வாமம் - அழகு. மேகலை - எண்கோவை மணி. யானை - பால்பகாஅஃறிணைப் பெயர்.* ***53***

*விண்மீன்கள் மறைதல்*

***1544. சிரித்த பங்கயம் ஒத்த செங் கண் இராமனை,***
***திருமாலை, அக்***
***கரிக் கரம் பொரு கைத்தலத்து, உயர் காப்பு***
***நாண் அணிதற்குமுன்***
***வரித்த தண் கதிர் முத்தது ஆகி,***
***இம்மண் அனைத்தும் நிழற்ற, மேல்***
***விரித்த பந்தர் பிரித்தது ஆம் என,***
***மீன் ஒளித்தது - வானமே.***

***சிரித்த பங்கயம் ஒத்த -*** *மலர்ந்த தாமரைப் பூக்களைப் போன்ற;* ***செங்கண்திருமாலை இராமனை -*** *சிவந்த கண்களையுடைய திருமாலாகிய இராமபிரானது;* ***கரிக் கரம்பொரு அக் கைத்தலத்து -*** *யானையினது துதிக்கையை நிகர்ந்த அந்தக் கையில்;* ***உயர்காப்பு நாண் -*** *சிறந்த மங்கல நாணை;* ***அணிதற்கு முன் -*** *பூண்பதற்கு முன்னமே;* ***இம் மண் அனைத்தும் நிழற்ற -*** *இவ்வுலகம் முழுவதும் நிழல் செய்யும் வண்ணம்;* ***வரித்ததண் கதிர் முத்தது ஆகி-*** *கட்டின குளிர்ந்த கிரணங்களையுடைய முத்து வரிசைகளையுடையதாய்;* ***மேல் விரித்த -*** *வானத்தில் பரப்பி வேயப்பட்டிருந்த;* ***பந்தர் -*** *பந்தல்;* ***பிரித்தது ஆம் என-*** *பிரிக்கப்பட்டது போல;* ***வானம் -*** *ஆகாயம்;* ***மீன் ஒளித்தது-*** *விண்மீன்களோடு மறைந்தது.*

*வானத்தையே பந்தலாகவும், விண்மீன்களை முத்துச்சரங்களாகவும் கொண்டு, காலையில் விண்மீன்கள்மறைவதைப் பந்தலைப் பிரிக்கையில் முத்துச்சரங்கள் அகற்றப்பெற்றன போன்றிருந்தது என்றார்.இது தற்குறிப்பேற்றம். மங்கல நிகழ்ச்சிகளுக்கு முன், அதற்குரிய தலைவன் வலங்கையில்காப்புக் கயிறு (இரட்சா பந்தனம்) கட்டுதல் மரபு. சிரித்த பங்கயம் - இல்பொருள் உவமை. இராமனை - இராமனுக்கு; வேற்றுமை மயக்கம்.* ***54***

*மகளிர் எழுதல்*

***1545. 'நாம விற் கை இராமனைத் தொழும் நாள்***
***அடைந்த நமக்கு எலாம்,***
***காம விற்கு உடை கங்குல் மாலை கழிந்தது'***
***என்பது கற்பியா,***
***தாம் ஒலித்தன பேரி; அவ் ஒலி,***
***சாரல் மாரி தழங்கலால்,***
***மா மயில் குலம் என்ன, முன்னம்***
***மலர்ந்து எழுந்தனர், மாதரே,***

***நாம வில் கை இராமனை -*** *பகைவர்க்கு அச்சத்தைத் தரும் கோதண்டம் ஏந்திய கையையுடையஇராமனை;* ***தொழும் நாள் அடைந்த நமக்கு எலாம் -*** *வணங்கும் நல்ல நாளைப் பெற்ற நம்அனைவர்க்கும்;* ***காமன் விற்கு உடை கங்குல் மாலை -*** *மன்மதனது கரும்பு வில்லுக்குத் தோற்றுத்துன்புறுதற்கு இடமான இராப்பொழுது;* ***கரித்தது -*** *நீங்கியது;* ***என்பது கற்பியா -*** *என்பதைத் தெரிவித்துக் கொண்டு;* ***பேரி ஒலித்தன -*** *முரசங்கள் ஒலித்தன;* ***அவ் ஒலி-*** *அந்த ஓசை;* ***சாரல் மாரி தழங்கலால் -*** *மலைப் பக்கங்களில் தங்கிய மேகம்போல முழங்கியதால்;* ***மாமயில் குலம் என்ன -*** *பெரிய மயில்களின் கூட்டம் எழுந்தாற்போல;* ***மாதர் -*** *மகளிர்;* ***முன்னம் மலர்ந்து எழுந்தனர் -*** *தம் கணவர் எழுவதற்குமுன்னே முகம் மலர்ந்து துயிலினின்றும் எழுந்தனர்;*

*நாமம் - அச்சம். கங்குல் மாலை - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஏ - ஈற்றசை.* ***55***

***1546. இன மலர்க் குலம்வாய் விரித்து,***
***இள வாச மாருதம் வீச, முன்***
***புனை துகிற்கலை சோர, நெஞ்சு***

***புழுங்கினார் சில பூவைமார்;***
***மனம் அனுக்கம் விட, தனித்தனி, வள்ளலைப்***
***புணர் கள்ள வன்***
***கனவினுக்கு இடையூறு அடுக்க, மயங்கினார்***
***சில கன்னிமார்.***

***சில பூவைமார்*** - *பெண்கள் சிலர்;* ***இன மலர் குலம் வாய் விரித்து-*** *பல்வகையானபூக்களின் கூட்டங்கள் வாய்விட்டு மலர;* ***வாச இள மாருதம் வீச -*** *நறுமணம் கலந்த இளங்காற்றுவீசுதலினால்;* ***முன் புனை-*** *முன்னே தாம் அரையில் உடுத்தியிருந்த;* ***துகில் கலைசோர -*** *அடையும் மேகலையும் குலைய;* ***நெஞ்சு புழுங்கினார் -*** *மனம் வருந்தினார்கள்;* ***சில கன்னிமார் -*** *மணமாகா மகளிர் சிலர்;* ***மனம் அனுக்கம் விட -*** *நெஞ்சில் உள்ள வருத்தம் தீர;* ***தனித்தனி -*** *தனித்தனியே (ஒவ்வொருவரும்);* ***வள்ளலைப்புணர்-*** *இராமபிரானைச் சேர்வதாகக் கண்ட;* ***கள்ளம் வன் கனவுக்கு -*** *மிக்க வஞ்சனையையுடையகனாவிற்கு;* ***இடையூறு அடுக்க -*** *காற்றினால் தடை பொருந்துதலினால்;* ***மயங்கினார் -*** *திகைத்தனர்.*

*தென்றல் வீசுவதனால் காம விருப்பம் மிகக் கணவனைப் பிரிந்த மாதர்கள் புழுங்கினர். திருமணமாகாதபெண் காற்றினால் தூக்கம் கலைந்து கனவு நீங்க, உண்மையறிந்து மயங்கினர். விரித்து -விரிய; செய்தென் எச்சம் செயவென் எச்சமாயிற்று; எச்சத்திரிபு.* ***56***

குமுதங்கள் குவிதல்

***1547. சாய் அடங்க, நலம் கலந்து தயங்கு***
***தன் குல நன்மையும்***
***போய் அடங்க, நெடுங் கொடுங் பழிகொண்டு,***
***அரும் புகழ் சிந்தும் அத்***
***தீ அடங்கிய சிந்தையாள் செயல்கண்டு,***
***சீரிய நங்கையார்.***
***வாய் அடங்கின என்ன வந்து குவிந்த -***
***வண் குமுதங்களே.***

***சாய் அடங்க -*** *தன் பெருமை அழியவும்;* ***நலம் கலந்து தயங்கு தன்குல நன்மையும்-*** *நன்மை பொருந்தி விளங்குகின்ற தனது குலத்தின் சிறப்பும்;* ***போய் அடங்க -*** *கெட்டழியவும்;* ***நெடுங் கொடும் பழி கொண்டு*** *- நெடுங்காலம் நிற்பதாகிய கொடிய பழியையேற்றும்;* ***அரும் புகழ் சிந்தும்*** *- பெறுதற்கரிய புகழைச் சிதறுகின்ற;* ***அத் தீ அடங்கிய சிந்தையாள்-*** *அந்தக் கொடுமை பொருந்திய மனத்தையுடைய கைகேயியினது;* ***செயல் கண்டு -*** *தகாத செயலைப்பார்த்து;* ***சீரிய நங்கைமார் வாய் -*** *சிறந்த பெண்களின் வாய்கள்;* ***அடங்கின என்ன-*** *அடங்கி மூடினாற்போல;* ***வண் குமுதங்கள் -*** *வளப்பத்தையுடைய செவ்வாம் பல் மலர்கள்;* ***வந்து குவிந்த*** *- (இதழ்கள் கூடி) மூடின.*

*ஆம்பல் மலர் காலையில் குவிதல் இயற்கை நிகழ்ச்சி. அது கைகேயியின் கொடுமை கண்டு குலப்பெண்டிர்வாயடங்கியிருந்தாற்போன்று இருந்தது என்பது தற்குறிப்*

*பேற்றம். பழி கொண்டு புகழ் சிந்தினாள்என்பது மாற்றுநிலை அணி (பரிவர்த்தனாலங்காரம்). தீ - உலமவாகு பெயர்; தீப்போலும் கொடுமையைக்குறித்தது.*
*57*

***1548. மொய் அராகம் நிரம்ப, ஆசை முருங்கு***
***தீயின் முழங்க, மேல்***
***வை அராவிய மாரன் வாளியும், வான்***
***நிலா நெடு வாடையும்,***
***மெய் அராவிட, ஆவி சோர வெதும்பு***
***மாதர்தம் மென் செவி,***
***பை அரா நுழைகின்ற போன்றன -***
***பண் கனிந்து எழு பாடலே.***

***மொய் அராகம் நிரம்ப** - அடர்ந்த காம வேட்கை மனத்தில் நிறையும்படியும்; **ஆசை முருங்கு தீயின் முழங்க** - ஆசை கிளர்ந்த எரியும் நெருப்பைப் போல மிகுந்திடுமாறும்; **மேல்** - வெளியே; **வை அராவிய மாரன் வாளியும்**- கூர்மை செய்யப்பட்ட மன்மதன்அம்புகளும்; **வான் நிலா நெடு வாடையும்**- விண்ணில் நிலவும் நீண்ட வாடைக்காற்றும்; **மெய் அராவிட** - உடலை அறுத்தலால்; **ஆவி சோர** - உயிர் தளர; **வெதும்பும்மாதர்தம் மென்செவி** - வாடுகின்ற மகளிருடைய மெல்லிய காதுகளில்; **பண் கனிந்து எழுபாடல்** - இசை முதிர்ந்து எழுகின்ற பாடல்கள்; **பை அரா நுழைகின்ற போன்றன** - படத்தையுடைய பாம்புகள் நுழைவனவற்றை ஒத்தன;*

*கணவனைப் பிரிந்த மாதரை மாரன் அம்புகளும், வாடைக் காற்றும் இரவில் வருத்த. காலையில்எழுந்த பாடல்கள் அவ் வருத்தத்தை மிகுவித்துத் துன்புறுத்தின. அராகம் - காதல்; பொருளிடத்துத் தோன்றும் பற்றுள்ளம். ஆசை - உள்ளம்விரும்பியதைப் பெறவேண்டும் என்று மேலும் மேலும் நிகழ்வது. நிலா நெடுவாடை - நிலாவும் நெடியவாடைக் காற்றும். பாடல் - பள்ளியெழுச்சிப் பாடல். ஏ - ஈற்றசை.* ***58***

*ஆடவர் பள்ளியெழுச்சி*

***1549. ‘ஆழியான் முடி சூடும் நாள்,***
***இடை ஆன பாவிஇது ஓர் இரா***
***ஊழி ஆயினவாறு’ எனா, உயர்த***
***போதின்மேல் உறை பேதையும்,***
***ஏழு லோகமும், எண் தவம் செய்த***
***கண்ணும், எங்கள் மனங்களும்,***
***வாழும் நாள் இது’ எனா எழுந்தனர் -***
***மஞ்ச தோய் புய மஞ்சரே.***

***மஞ்சு தோய் புய மஞ்சர்** - மேகத்தை யொத்த கைகளையுடைய ஆடவர்; **ஆழியான்முடிசூடும் நாள்** - சக்கரப்படை ஏந்திய இராம பிரான் மகுடம் சூடிக்கொள்ளும் நாளுக்கு; **இடை ஆன** - நடுவிலே வந்த; **பாவி இது ஓர் இரா** - பாவியாகிய இந்த ஓர் இரவு; **ஊழி ஆயினவாறு எனா** - ஊழிக்காலம் போல நெடிதாய்*

*இருந்தது என்னோ என்று எண்ணியும்;* ***உயர் போதின்மேல் உறை பேதையும் -*** *சிறந்த தாமரைமலரில் தங்கியுள்ள திருமகளும்;* ***ஏழுலோகமும் -*** *ஏழு உலகத்தில் வாழ்வோரும்;* ***எண் தவம் செய்த கண்ணும் -*** *முடி சூட்டுவிழாவைக் காணப் பெருமைக்குரிய தவத்தைப் புரிந்த எங்கள் கண்களும்;* ***எங்கள் மனங்களும் -*** *அத்தகைய எங்கள் நெஞ்சங்களும்;* ***வாழும் நாள் இது எனா -*** *வார்ச்சியுறும் காலம் இந்நாள்என்று எண்ணியும்;* ***எழுந்தனர் -*** *படுக்கையிலிருந்து எழுந்தனர்.*

*இராமன் முடிசூடும் விடியலுக்குக் காத்திருந்தமையால், இரவு நீண்டு செல்வதாகத் தோன்றியது.எனவே, 'பாவி இரா' என்று பழித்தனர். எனினும், கைகேயி சூழ்ச்சி செய்த இரவாக அது அமைந்துஉண்மையிலேயே பாவி இரவாக ஆயிற்று. எண் தவம் செய்த என்னும் அடையினை மனங்களோடும் கூட்டுக.வாழும் நாள் - தாம் தோன்றியதற்குரிய பயனைஅடையும் நாள். இரவைப் பாவி என்றது.'அழுக்காறு எனஒரு பாவி' (குறள்.168) என்பது போல.* ***59***

*மகளிர் எழுதல்*

***1550. ஐஉறும் சுடர் மேனியான் எழில் காண***
***மூளும் அவாவினால்,***
***கொய்யுறும் குல மா மலர்க் குவைநின்று***
***எழுந்தனர் - கூர்மை கூர்***
***நெய் உறும்சுடர் வேல் நெடுங்கண் முகிழ்த்து,***
***நெஞ்சில் நினைப்பொடும்***
***பொய் உறங்கும் மடந்தைமார் - குழல் வண்டு***
***பொம்மென விம்மவே.***

***கூர்மை கூர் -*** *கூர்மை மிக்க;* ***நெய்உறும் சுடர் வேல் -*** *நெய் பூசப்பட்டஒளிபொருந்திய வேல் போன்ற;* ***நெடுங் கண் முகிழ்ந்து -*** *நீண்ட கண்களை மூடிக்கொண்டு;* ***நெஞ்சில் நினைப்பொடும் -*** *மனத்தில் இராமனைப் பற்றிய எண்ணத்தோடு;* ***பொய்உறங்கும் மடந்தைமார் -*** *கள்ளத்துயில் கொண்ட மகளிர்;* ***ஐ உறும் சுடர் மேனியான் -*** *வியப்பைத் தருகின்ற ஒளிவீசும் திருமேனியையுடைய இராமபிரானது;* ***எழில் காண -*** *முடிசூடியபுதிய அழகைக் காண்பதற்கு;* ***மூளும் அவாவினால் -*** *கிளர்ந்தெழுகின்ற ஆசையினால்;* ***கொய் உறும் குல மா மலர்க் குவை நின்று -*** *கொய்யப்பட்ட சிறந்த பெரிய மலர்த்தொகுதியினால்செய்யப்பட்ட படுக்கையிலிருந்து;* ***குழல்வண்டு பொம்என விம்ம-*** *இசைப்பாட்டையுடைய வண்டுகள் பொம்மென்று ஆளத்திவைக்க;* ***எழுந்தனர்-.***

*'நாம விற்கை' (1545) என்று தொடங்கும் பாடல் தத்தம் கணவரோடு கூடியிருந்த பெண்கள்விழித்ததைத் தெரிவிப்பது; இப்பாடல் கன்னிப்பெண்கள் விழித்தெழுந்ததைக் கூறுவது. இராமனது முடிசூட்டு விழாவைக் காணும் ஆசை நெஞ்சில் மூண்டெழுவதால் உறக்கம் வராதிருக்கவும் கண்மூடிக் கிடந்தனர். ஆதலின் அது 'பொய் உறக்கம்' ஆயிற்று. எழில் - மேலும் மேலும் வளர்ந்து சிறக்கும் அழகு. குவை - ஆகுபெயராய் மலர்களால் ஆகிய படுக்கையை உணர்த்திற்று. குழல் வண்டு - குழல்போல இசைபாடும்வண்டு. "பொன் பால் பொருவும் விரை அல்லி புல்லிப் பொலிந்த பொலந்தாது, தன்பால் தழுவும்குழல்வண்டு, தமிழ்ப் பாட்டு இசைக்கும்*

*தாமரையே" (3736) என்னும் இடத்தும் இப்பொருளில்வருதல் காணலாம். பொம்மென - ஒலிக்குறிப்பு.* ***60***

*ஊடிய மகளிர் கூடல் புரியாது பிரிதல்*

***1551. ஆடகம் தரு பூண் முயங்கிட***
***அஞ்சி அஞ்சி, அனந்தரால்***
***ஏடு அகம் பொதி தார் பொருந்திட,***
***யாம பேரி இசைத்தலால்,***
***சேடகம் புனை கோதை மங்கையர்***
***சிந்தையில் செறி திண்மையால்,***
***ஊடல் கண்டவர் கூடல் கண்டிலர்,***
***நையும் மைந்தர்கள் உய்யவே.***

***சேடகம் புனை கோதை மங்கையர் -*** *சிறப்புப் பொருந்திய மலர்மாலையை அணிந்த மகளிர்;* ***சிந்தையில் செறி திண்மையால் -*** *மனத்தில் பொருந்திய வலிமையோடு;* ***ஊடல் கண்டவர் -*** *தத்தம் கணவன் மாரோடு புலந்தவர்கள்;* ***ஆடகம் தரு பூண் முயங்கிட அஞ்சி அஞ்சி -*** *(கணவன்மார்) தம் மார்பில் அணிந்தபொன்மாலையோடு தழுவுவதற்கு (மகளிர் மார்பில்) உறுத்துமே என்று மிகவும் அச்சம் கொண்டு;* ***அனந்தரால் -*** *மனத்தடுமாற்றத்தோடு;* ***ஏடு அகம் பொதி தார் புனைந்திட -*** *பூக்களால்கட்டிய மாலையை அணிந்துகொள்ள;* ***யாம பேரி இசைத்தலால் -*** *அப்பொழுது கடையாமம் கழிந்ததைஅறிவிக்கும் முரசம் ஒலித்தலால்;* ***நையும் மைந்தர்கள் உய்ய -*** *மனைவியரின் ஊடலால்வருந்தும் கணவன்மார் அத்துன்பத்தினின்றும் தப்பும்படி;* ***கூடல் கண்டிலர் -*** *கூடி மகிழ்தலைப்பெற்றாரில்லை.*

*மகளிரின் ஊடலைக் கணவன்மார் போக்குவதற்கு முன்னே யாமம் கழிந்ததால் அம்மகளிர் கூடல்பெறாமல் பிரிந்தனர். ஊடல் - கணவனும் மனைவியும் ஓர் அமளியில் இருக்கும்போது, கணவனிடத்துப்புலத்தற்கும் காரணம் இல்லாமல் இருந்தும், மிகுந்த காதலால் ஒரு காரணத்தைக் கற்பித்துக்கொண்டுமனைவி மனம் மாறுபட்டு நிற்றல். மைந்தர் உய்யக் கூட்டம் நிகழாமையால் மகளிரும் வாடினர் என்பது விளங்கும்.* ***61***

*பல்வகை ஒலிகள்*

***1552. தழை ஒலித்தன; வண்டு ஒலித்தன;***
***தார் ஒலித்தன; பேரி ஆம்***
***முழவு ஒலித்தன; தேர் ஒலித்தன;***
***முத்து ஒலித்து எழும் அல்குலார்***
***இழை ஒலித்தன; புள் ஒலித்தன;***
***யாழ் ஒலித்தன; - எங்கணும் -***
***மழை ஒலித்தனபோல் கலித்த,***
***மனத்தின் முந்துறு வாசியே.***

***எங்கணும்*** - *நகரின் எல்லா இடங்களிலும்;* ***தழை ஒலித்தன*** - *பீலிக்குஞ்சங்கள்விளங்கின;* ***வண்டு ஒலித்தன*** - *வண்டுகள் ஆரவாரம் செய்தன;* ***தார் ஒலித்தன*** - *மலர்மாலைகள் விளங்கின;* ***பேரி ஆம் முழவு ஒலித்தன*** - *மலர்மாலைகள் விளங்கின;* ***பேரிஆம் முழவு ஒலித்தின*** - *பேரிகை ஆகிய வாத்தியங்கள் ஒலித்தன;* ***தேர் ஒலித்தன*** - *தேர்கள் தெருவில் ஓடும்போது ஒலி எழுப்பின;* ***முத்து ஒலித்து எழும் அல்குலார்*** - *முத்துவடங்கள்உராய்ந்து ஒலி யெழுப்பும் இடையினையுடைய பெண்களுடைய;* ***இழை ஒலித்தன*** - *அணிகலன்கள் ஒலித்தன;* ***புள் ஒலித்தன*** - *பறவைகள் கூவின;* ***யாழ் ஒலித்தன*** - *வீணைகள் இசைத்தன;* ***மனத்தின் முந்துறு வாசி*** - *மனத்தின் வேகத்தைக் காட்டிலும் விரைந்து ஓடும் குதிரைகள்;* ***மழை ஒலித்தன போல்*** - *மேகங்கள் முழங்கினாற்போல;* ***கலித்தன*** - *ஒலித்தன. ஒலித்தன என்னும் சொல் பல்வேறு பொருள்களில் அடுத்தடுத்து வந்தமையால் சொற்பின்வருநிலை அணி.*
***62***

*விளக்குகள் ஒளி மழுங்குதல்*

***1553. வையம் ஏழும் ஓர் ஏழும் ஆர் உயிரோடு***
***கூட வழங்கும் அம்***
***மெய்யன், வீரருள்வீரன், மா மகன்மேல்***
***விளைந்தது ஒர்காதலால்***
***நைய நைய, நல் ஐம்புலன்கள்***
***அவிந்து அடங்கி நடுங்குவான்***
***தெய்வ மேனி படைத்த சேயொளி***
***போல் மழுங்கின - தீபமே.***

***வையம் ஏழும் ஓர் ஏழும்*** - *பதினான்கு உலகங்களையும்;* ***ஆர் உயிரோடு கூட வழங்கும்அம் மெய்யன்*** - *தன் அரிய உயிருடனே சேர்த்துக் கொடுக்கின்ற அந்த மெய்ம்மையாளனும்;* ***வீரருள் வீரன்*** - *வீரர்களுக்குள் வீரனாய் இருப்பவனுமாகிய தயரதன்;* ***மா மகன்மேல் விளைந்தது ஓர் காதலாதல்-*** *தன் மூத்த பிள்ளையிடத்து எழுந்த ஒப்பற்ற பாசத்தால்;* ***நையநைய*** - *மிகவும் வருந்த;* ***நல் ஐம்புலன்கள் அவிந்து அடங்கி*** - *சிறந்த ஐந்து புலன்களும்கெட்டு அடங்கிப்போக;* ***நடுங்குவான் தெய்வமேனி படைத்த*** - *நடுங்குகின்றவனாகிய தயரதனதுதெய்வத்தன்மை பொருந்திய உடலில் இருந்த;* ***சேய் ஒளிபோல்*** - *செவ்விய ஒளி மெல்ல மெல்லமழுங்குவது போல;* ***தீபம் மழுங்கின*** - *விளக்குகள் (பொழுது விடிவதால்) ஒளி குறைந்தன.*

*தயரதன் மேனி ஒளியிழந்தது போலத் தீபங்களும் ஒளியிழந்தன. மா மகன் - மூத்த மகன்,ஈண்டுப் பிறப்பானும் சிறப்பானும் முதல்வனாகிய இராமனைக் குறித்தது. திருவுடை மன்னன் திருமாலாகக்கொள்ளப்படுதலின், அவன் மேனி 'தெய்வமேனி' எனச் சிறப்பிக்கப்பட்டது. உயிர்ப்பிரியும் காலம் அடுத்தபோது, புலன்கள் கலங்கி ஒடுங்குதலும், உடம்பின் ஒளி குன்றுதலும் நிகழ்வனவாகும்.* ***63***

*பல்வகை இசையொலி*

***1554. வங்கியல் பல தேன் விளம்பின.;***
***வாணி முந்தின பாணியின்***

***பங்கி அம்பரம் எங்கும் விம்மின;***
***பம்பை பம்பின; பல் வகைப்***
***பொங்கு இயம் பலவும் கறங்கின;***
***நூபுரங்கள் புலம்ப, வெண்***
***சங்கு இயம்பின; கொம்பு அலம்பின,***
***சாம கீதம் நிரந்தவே.***

***வங்கியம் பல** - இசைக் குழல்கள் பலவும்; **தேன் விளம்பின** - தேன்போலும் இனிய இசையை ஒலித்தன; **வாணி முந்தின பாணியின் பங்கி** - சொற்கள் முற்பட்ட இசைப்பாட்டின் வகைகள்; **அம்பரம் எங்கும் விம்மின** - வானம் எங்கும் நிறைந்தன; **பம்பை பம்பின** - பம்பை என்னும் வாத்தியங்கள் பேரொலி செய்தன; **பல்வகை** - பலவகையான; **பொங்கு இயல் பலவும்** - மகளிரின் காற்சிலம்புகள் ஒலிக்க; **வெண்சங்குஇயம்பின** - வெள்ளிய வளையல்கள் அவற்றிற்கேற்ப ஒலித்தன; **கொம்பு அலம்பின** - ஊது கொம்புகள் ஒலித்தன; **சாமகீதம் நிரந்த** - சாமவேத இசை நிரம்பின.*

*அயோத்தி நகரில் காலையில் எழுந்த பல்வேறு ஒலிகள் குறிக்கப்பட்டன. கொட்டுவன, தட்டுவன, ஊதுவன முதலிய வாத்தியங்கள் பலவகை. நூபுரங்கள் புலம்ப என்பதற்கு மகளிர் காற்சிலம்பு என்றுபொருள் கொண்டதற்கு ஏற்பச் 'சங்கு இயம்பின' என்பதற்கு வளையல்கள் ஒலித்தன என்றுபொருள்கொள்ளப்பட்டது. சங்கு - சங்கினால் ஆகிய வளையல். ஏ - ஈற்றசை.* ***64***

கதிரவன் தோற்றம்

***1555. தூபம் முற்றிய கார் இருட் பகை***
***துள்ளி ஓடிட, உள் எழும்***
***தீபம் முற்றவும் நீத்து அகன்றென***
***சேயது ஆர் உயிர் தேய, வெம்***
***பாபம் முற்றிய பேதை செய்த பகைத்***
***திறத்தினில், வெய்யவன்***
***கோபம் முற்றி மிகச் சிவந்தனன்***
***ஒத்தனன், குண குன்றிலே.***

***தூபம் முற்றிய** - புகைபோல எங்கும் சூழ்ந்த; **கார் இருள் பகை துள்ளி ஓடிட**- கரிய இருளாகிய பகை குதித்து ஓடிப்போகவும்; **உள் எழும் தீபம் முற்றவும்**- வீடுகளின்உள்ளே எரிகின்ற விளக்குகள் எல்லாம்; **நீத்து அகன்றென** - ஒளியைத் துறந்து மழுங்கியபோல; **சேயது ஆர் உயிர் தேய** - தன் குலத்தில் பிறந்த தயரதனது அரிய உயிர் மெலியும்படி; **வெம் பாபம் முற்றிய பேதை செய்த** - தீவினை முதிர்ந்த கைகேயி புரிந்த; **பகைத் திறத்தினில்**- பகைச் செயலால்; **வெய்யவன்** - சூரியன்; **குண குன்றின்** - கிழக்கு மலையில்; **கோபம் முற்றி மிகச் சிவந்தனன் ஒத்தனன்** - சினம் முதிர்ந்து மிகவும் செந்நிறம்கொண்டவன் போலக் காணப்பட்டான்.*

*சூரியன் கிழக்கு மலையில் சிவந்து தோன்றியதனைத் தன் குலத்தில் பிறந்த தயரதனது உயிர்ஒடுங்குமாறு கேடு சூழ்ந்த கைகேயியின்மீது கோபம் கொண்டவன்*

*போலத் தோன்றினான் என்றது ஏதுத்தற்குறிப்பேற்ற அணி. குண குன்று - கதிரவன் எழும் கிழக்கு மலை. குணக்கு - கிழக்கு* ***65*** *தாமரைகள் மலர்தல்*

***1556. மூவர் ஆய், முதல் ஆகி, மூலம்***
***அது ஆகி, ஞாலமும் ஆகிய***
***தேவ தேவர் பிடித்த போர் வில்***
***ஒடித்த சேவகன், சேண் நிலம்***
***காவல் மா மூடி சூடு பேர் எழில்***
***காணலாம் எனும் ஆசை கூர்***
***பாவைமார் முகம் என்ன முன்னம்***
***மலர்ந்த - பங்கய ராசியே.***

***மூவர் ஆய் -*** *அயன், அரி, அரன் என்னும் மூன்று மூர்த்திகளாகி;* ***முதல் ஆகி-*** *அம்மூவர்க்குள்ளும் திருமாலாகிய முதல்வனாகி;* ***மூலம் அது ஆகி -*** *இவையெல்லாவற்றிற்கும்அடியாய் ஆகி;* ***ஞாலமும் ஆகி -*** *உலகத்துள்ள எல்லாப் பொருள்களும் தானே ஆகி;* ***அத்தேவதேவர் பிடித்த போர் வில் -*** *அந்த மகாதேவராகிய சிவபெருமான் பிடித்த போரிற்குரியவில்லை;* ***ஒடித்த சேவகன் -*** *(சீதையை மணத்தற்காக) ஒடித்த வீரன் ஆகிய இராமபிரான்;* ***சேண் நிலம் காவல் -*** *பெரிய மண் முழுதும் காத்தற்குரிய;* ***மாமுடிசூடுபேர் எழில் -*** *சிறந்த மகுடத்தைச் சூட்டிக்கொள்ளும் பேரழகை;* ***காணலாம் எனும் ஆசை கூர்-*** *பார்க்கலாம் என்னும் ஆவல் மிகுந்த;* ***பாவைமார் முகம் என்ன -*** *பெண்களின் முகங்கள்போல;* ***பங்கயராசி முன்னம் மலர்ந்த*** *- தாமரைப் பூக்களின் கூட்டம் முந்தி மலர்ந்தன.*

*தாமரைப் பெண்களின் முகத்திற்கு உவமையாகச் சொல்வதே வழக்கம். இங்குப் பெண்களின் முகம்போலத்தாமரை மலர்ந்தன என்றார். இது எதிர் நிலை உவமை அணி.*

***"முதலாவார் மூவரே; அம்மூவர் உள்ளும்***
***முதலாவான் மூரிநீர் வண்ணன்"***

*என்பது பொய்கையாரின் முதல் திருவந்தாதி.* ***66***

*அயோத்தி நகர மக்கள் நிலை*

***1557. இன்ன வேலையின், ஏழு வேலையும்***
***ஒத்த போல இரைத்து எழுந்து,***
***அன்ன மா நகர், 'மைந்தன் மா முடி சூடும்***
***வைகல் இது ஆம்' எனா,***
***துன்னு காதல் துரப்ப வந்தவை***
***சொல்லல் ஆம் வகை எம்மனோர்க்கு***
***உன்னல் ஆவன அல்ல என்னினும்,***
***உற்றபெற்றி உணர்த்துவாம்.***

**இன்ன வேலையின் -** இப்படிப்பட்டவேளையில்; **ஏழு வேலையும் ஒத்த போலஇரைத்து எழுந்து -** ஏழு கடலும் ஒருசேர இரைத்து எழுந்தாற்போல; **அன்ன மாநகர் -** அந்தப் பெரிய நகரத்தில் உள்ளார்; **இது மைந்தன் மாமுடி சூடும் வைகல் ஆம் எனா -** இந்நாள் இராமன் பெருமை பொருந்திய மகுடம் சூடும் நாள் ஆகும் என்று எண்ணி; **துன்னு காதல்துரப்ப -** நிறைந்த விருப்பம் தூண்டுதலால்; **வந்தவை -** செய்து வந்தவற்றை; **சொல்லல் ஆம் வகை -** சொல்லுவதற்கு உரிய வகைகள்; **எம் அனோர்க்கு -** என்போன்றவர்களுக்கு; **உன்னல் ஆவன அல்ல என்னினும்** - கருதுவதற்கும் தக்கவை அல்லனஎன்றாலும்; **உற்ற பெற்றி உயர்த்துவாம்** - முடிந்த அளவு சொல்லுவோம்.

இராமன் எல்லார்க்கும் நன்மகனாதலால் பொதுவாக 'மைந்தன்' என்றார். உன்னல் ஆவன அல்ல- இழிவு சிறப்பும்மை விகாரத்ததால் தொக்கது. உணர்த்துவாம் - தன்மைப்பன்மைவினைமுற்று. *67*

மங்கையர் செயல்

கலிவிருத்தம்

*1558.* **குஞ்சரம் அனையார் சிந்தை கொள் இளையார்,**
**பஞ்சினை அணிவார்; பால் வளை தெரிவார்;**
**அஞ்சனம் என, வாள் அம்புகள் அடையே.**
**நஞ்சினை இடுவார்; நாள்மலர் புனவார்.** *

**குஞ்சரம் அனையார் -** யானைபோலும் பெருமிதமுடைய ஆடவர் களின்; **சிந்தைகொள்இளையார் -** மனத்தைக் கவர்கின்ற இளைய மங்கையர்; **பஞ்சினை அணிவார் -** செம்பஞ்சுக் குழம்பைக் கால்களில் பூசுவர்; **பால்வளை தெரிவார் -** பால்போலும்சங்குவளையல் களைத் தேர்ந்தெடுத்துக் கைகயில் அணிவர்; **அஞ்சனம் என -** மை என்று பேர் சொல்லிக்கொண்டு; **வாள் அம்புகள் இடையே -** வாளும் அம்பும் போன்ற கொடிய கண்களில்; **நஞ்சினை இடுவார் -** விடத்தை இடுவர்; **நாள்மலர் புனைவார் -** புதிய மலர்களைத்தலையில் சூடுவர்.

இளையார் என்பது மகளிரைக் குறித்தது. 'இளையவர் தம்மொடுஅவர் தரும் கல்வியே கருதி ஓடினேன்'என்னும் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியிலும் (1) இச்சொல் இப்பொருளில் வருதல்காணலாம். 'பந்தினை இளையவர் பயில் இடம்' (79) என்னும் இடத்தும் இப்பொருட்டாதல் கருதத்தக்கது. கண்ணில் இடும மையினை நஞ்சு எனக் கற்பனை செய்தல்த (1564) பின்னும்காணலாம். *68*
குமரனின் மகிழ்ச்சி

அறுசீர் ஆசிரிய விருத்தம்

*1559.* **பொங்கிய உவகை வெள்ளம் பொழிதர,**
**கமலம் பூத்த**
**சங்கை இல் முகத்தார், - நம்பி**
**தம்பியர் அனையர் ஆனார் -**
**செங் கயல் நறவம் மாந்திக் களிப்பன**

**சிவனும் கண்ணார்**
**குங்குமச் சுவடு நீங்காக் குவவுத்**
**தோற் குமரர் எல்லாம்.**

**பொங்கிய உவகை வெள்ளம் பொழிதர** - மேலெழுந்த மகிழ்ச்சியால் தோன்றியமகிழ்ச்சிப் பெருக்குப் பெருக; **கமலம் பூத்த சங்கை இல் முகத்தார்** - தாமரைபோல்மலர்ந்த களங்கமில்லாத முகத்தை உடையவராகிய; **நறவம் மாந்தி** - தேனையுண்டு; **களிப்பன செங்கயல் சிவணும் கண்ணார்** - களிப்பவையான செவ்விய கெண்டை மீன்களை ஒத்தகண்களையுடைய மகளிரது; **குங்குமச் சுவடு நீங்கா** - (மார்பில் அப்பிய) குங்குமக்குழம்பினது அடையாளம் நீங்காத; **குவவுத் தோள் குமரர் எல்லாம்** - திரண்ட புயங்களையுடையஆடவர் அனைவரும்; **நம்பி தம்பியர் அனையர் ஆனார்** - இராமபிரானுடைய தம்பிமாரை ஒத்தவராக ஆயினர்.

இராமபிரானைக் காட்டிலும் வயது குறைந்த இளைஞர்கள் தங்கள் தமையனுக்கு முடிசூட்டுவிழாநடப்பதாக எண்ணி மகிழ்ந்தனர். மதுவைக் குடித்துக் களித்திருக்கும் செங்கயலைச் செவ்வரிபடர்ந்து களித்திருக்கும் மகளிர் கண்களுக்கு உவமை கூறினார். சோக வெள்ளத்தை நீக்குவதற்கு உவகை வெள்ளம் என்றார். சங்கை - குற்றம், களங்கம், சிவணல் - நிகர்த்தல். ***69***

பெரும்பாலோர் மனநிலை

***1560.*** **மாதர்கள், கற்பின் மிக்கார்,**
**கோசலை மனத்தை ஒத்தார்;**
**வேதியர் வசிட்டன் ஒத்தார்;**
**வேறு உள மகளிர் எல்லாம்**
**சீதையை ஒத்தார்; அன்னாள் திருவினை**
**ஒத்தாள்; அவ் ஊர்ச்**
**சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன்**
**தன்னை ஒத்தார்.**

**அவ் ஊர்** - அந்த அயோத்தி நகரத்தில் வாழும்; **கற்பின் மிக்கார் மாதர்கள்** - கற்பிற் சிறந்த முதிய மகளிர்கள்; **கோசலை மனத்தை ஒத்தார்** -இராமனுடையதாய் கோசலையின் மனம் போன்ற மனம் உடையவர் ஆயினர்; **வேறு உள மகளிர்எல்லாம்** - மற்ற இளம் பெண்கள் எல்லாம்; **சீதையை ஒத்தார்** - மகிழ்ச்சியில்சீதையைப் போன்றவர் ஆயினர்; **அன்னாள் திருவினை ஒத்தாள்** - அந்தச் சீதை இலக்குமியை ஒத்தவள்ஆயினாள்; **வேதியர் வசிட்டன் ஒத்தார்** - மறையவர்கள் வசிட்டமுனிவரைப் போன்றவர் ஆயினர்; **சாதுகை மாந்தர் எல்லாம்** - சாதுக்களான முதிய ஆடவர்எல்லாரும்; **தயரதன் தன்னை ஒத்தார்** - தயரத மன்னனைப் போன்றவர் ஆயினர்.

நகர மக்கள் அவரவர் தகுதிக்கேற்ப அடைந்த மகிழ்ச்சிபொருந்திய மனநிலை அழகுற எடுத்துக் காட்டப்படுகிறது. இராமன் முடிசூடுவது அரசத் திருவைமனத்தலாதலால் அத்திருமகள் மகிழ்வதுபோலச் சீதை மகிழ்ந்தாள் என்றார். ***70***

***1561. இமிழ் திரைப் பரவை ஞாலம்***
***எங்கணும் வறுமை கூர,***
***உமிழ்வது ஒத்து உதவு காதல்***
***உந்திட, வந்தது அன்றே -***
***குமிழ் முலைச் சீதை கொண்கன்***
***கோமுடி புனைதல் காண்பான்,***
***அமிழ்து உணக் குழுமுகின்ற அமரரின்.***
***அரச வெள்ளம்.***

***அரச வெள்ளம் -*** *அரசர்களின் பெருந்திரள்;* ***குமிழ் முலைச் சீதை கொண்கன் -*** *குவிந்த நகில்களையுடைய சீதைக்குக் கணவனாகிய இராமபிரான்;* ***கோமுடி புனைதல் காண்பான்-*** *அரசுக்குரிய மகுடம் சூட்டிக்கொள்ளுவதைக் காண்பதற்கு;* ***உமிழ்வது ஒத்து உதவுகாதல் உந்திட*** *- (உள்ளே நிறைந்து) புறம்பே வெளிப்படுவது போன்று மிகுகின்ற விருப்பம்தம்மைத்தூண்ட;* ***அமிழ்து உணக் குழுமுகின்ற அமரரின் -*** *அமுதத்தை உண்பதற்கு ஆவலோடுதிரண்ட தேவர்களைப் போல;* ***இமிழ்திரைப் பரவை ஞாலம் -*** *ஒலிக்கும் அலைகளையுடையகடலால் சூழப்பட்ட உலகம்;* ***எங்கணும் வறுமை கூர -*** *எல்லா இடத்தும் வெறுமையடையும்படி;* ***வந்தது -*** *வந்து கூடிற்று;*

*அரசர் கூட்டத்திற்குத் தேவர் கூட்டத்தை உவமை கூறினார். உவமை அணி. பரவை - பரவிஇருப்பது; ஐ - வினைமுதல் விகுதி. அன்று, ஏ - அசைகள்.*
*71 தெருக்களில் மக்கள் நெருக்கம்*

***1562. பாகு இயல் பவளச் செவ்வாய்,***
***பணை முலை, பரவை அல்குல்,***
***தோகையர் குழாமும், மைந்தர் சும்மையும்***
***துவன்றி, எங்கும்,***
***'ஏகுமின், ஏகும்' என்று என்று,***
***இடை இடை நிற்றல் அல்லால்,***
***போகில; மீளகில்லா -***
***பொன் நகர் வீதி எல்லாம்.***

***பொன் நகர் வீதி எல்லாம் -*** *அந்த அழகிய நகரத்தின் தெருக்களில் எல்லாம்;* ***பாக இயல் பவளச் செவ்வாய் -*** *தேன்பாகு போன்ற இனிமையையும் பவளம் போன்றசெய்மையையும் உடைய உதடுகளையும்;* ***பணை முலை -*** *பருத்த தனங்களையும்;* ***பரவை அல்குல்-*** *பரந்த அரைப் பகுதியினையும் உடைய;* ***தோகையர் குழாமும் -*** *மகளிரது கூட்டமும்;* ***மைந்தர் சும்மையும் -*** *ஆடவர் கூட்டமும்;* ***எங்கும் துவன்றி -*** *எல்லாஇடங்களிலும் நெருங்கி;* ***ஏகுமின் ஏகும் என்று என்று -*** *செல்லுங்கள் செல்லுங்கள் என்றுபலமுறை சொல்லிக்கொண்டு;* ***இடை இடை நிற்றல் அல்லால் -*** *தாம் தாம் நின்றஇடங்களிலேயே நிற்பதை அன்றி;* ***போகில -*** *முன்னேறிச் செல்லவுமில்லை;* ***மீளகில்லா-*** *திரும்பிச் செல்ல ஆற்றலற்றனவும் ஆயின.*

*இது நகரத்தில் உண்டான போக்குவரத்து நெருக்கடியைக் கூறுமுகமாகக் கூட்டத்தின் மிகுதியைப்புலப்படுத்தியது. தோகையர் - மயில்போலும் சாயலுடையவர். சும்மை - கூட்டம்.* *72*

*கூட்டத்தின் பெருக்கம் பற்றிய பேச்சு*

***1563.*** ***'வேந்தரே பெரிது' என்பாரும்,***
***'வேதியர் பெரிது' என்பாரும்,***
***'மாந்தரே பெரிது' என்பாரும்,***
***'மகளிரே பெரிது' என்பாரும்,***
***போந்ததே பெரிது' என்பாரும்,***
***'புகுவதே பெரிது' என்பாரும்,***
***தேர்ந்ததே தேரிந் அல்லால், யாவரே***
***தெரியக் கண்டார்?***

**வேந்தரே பெரிது என்பாரும் -** *(அந்தக் கூட்டத்தில்) அரசர்களின் தொகுதியேமிகுதி என்பவரும்;* **வேதியர் பெரிது என்பாரும் -** *மறையவர் தொகுதியே மிகுதிஎன்பவரும்;* **மாந்தரே பெரிது என்பாரும் -** *ஆடவர் தொகுதியே மிகுதி என்பவரும்;* **மகளிரே பெரிது என்பாரும் -** *பெண்டிர் தொகுதியேமிகுதி என்பவரும்;* **போந்ததே பெரிது என்பாரும் -** *வந்து சேர்ந்தவர் கூட்டமே மிகுதிஎன்பவரும்;* **புகுவதே பெரிது என்பாரும் -** *வரப்போகும் கூட்டமே மிகுதியாக இருக்கும் என்பவரும் ஆக;* **தேர்ந்ததே தேரின் அல்லால் -** *தாம் அறிந்ததையே அறிந்ததன்றி;* **யாவரே தெரியக் கண்டார் -** *எவர்தாம் முழுவதும் நன்றாய் அறிந்தவர்? (ஒருவருமில்லைஎன்றபடி).*

*இதனால் ஒவ்வொரு குழுவும் அளவிட முடியாதவாறு மிகுதியாய் இருந்தது என்பது குறிக்கப்பட்டது. வேந்தர் முதலியவர் அவரவர் தொகுதிக்கு ஆகிவந்தனர்; ஆகுபெயர். பெரிது என்னும் ஒன்றன்பால் வினைமுடிபுக்கு ஏற்ப அவ்வாறு கொள்ளல் வேண்டும். மகளிரைப் பின்னர்க் குறித்தமையின்மாந்தர் என்பது அவர்களை நீக்கி ஆடவரை மட்டும் கூட்டியது.* *73*

*மகளிர் கூட்டத்தின் வருகை*

***1564.*** ***குவளையின் எழிலும், வேலின்***
***கொடுமையும், குழைத்துக் கூட்டி,***
***திவளும் அஞ்சனம் என்று ஏய்ந்த***
***நஞ்சினைத் தெரியத் தீட்டி,***
***தவள ஒண் மதியுள் வைத்த***
***தன்மை சால் தடங் கண் நல்லார்,***
***துவளும் நுண் இடையார், ஆடும்***
***தோகை அம் குழாத்தின் தொக்கார்.***

**குவளையின் எழிலும் -** *கருங்குவளை மலரின் அழகையும்;* **வேலின் கொடுமையும் -** *வேற்படையின் கொலைத் தன்மையையும்;* **குழைத்துக் கூட்டி -** *ஒன்றாய்க் கலந்து*

*சேர்த்து;* ***திவளும் அஞ்சனம் என்று ஏய்ந்த-*** *விளங்குகின்ற மை என்று பெயர்பொருந்திய;* ***நஞ்சினைத் தெரியத் தீட்டி*** *- விடத்தை விளங்கப் பூசி ;* ***தவளஒன்மதியுள் வைத்த தன்மை சால் -*** *வெள்ளிய ஒளிமிக்க சந்திரனிடத்தில் வைத்தாற்போன்றதன்மை அமைந்த;* ***தடங் கண் நல்லார் -*** *பெரிய கண்களையுடைய அழகியவரும்;* ***துவளும் நுண் இடையார்-*** *துவளுகின்ற மெல்லிய இடையினையுடையவரும் ஆகிய மகளிர்;* ***ஆடும் தோகைஅும் குழாத்தின் -*** *நடனமாடும் ஆழகிய மயிற்கூட்டம் போல;* ***தொக்கார் -*** *வந்துகூடினர்.*

*குவளையின் அழகையும் வேலின் கொடுமையையும் சேர்த்து, மையாகிய நஞ்சினைப்பூசி, மதியுள்வைத்தன போலும் கண்கள் என்பது இல்பொருள் உவமை. 'அஞ்சனம் என்று ஏய்ந்த நஞ்சு' என்பது உருவகம். தோகை - ஆகுபெயர். 74* *முடிசூட்டு விழாவுக்கு வருகை தாராதவர்*

***1565.  நலம் கிளர் பூமி என்னும்***
***நங்கையை நறுந் துழாயின்***
***அலங்கலான் புணரும் செல்வம்***
***காண வந்து அடைந்திலாதார் -***
***இலங்கையின் நிருதரே; இவ்***
***ஏழ் உலகத்து வாழும்***
***விலங்கலும், ஆசை நின்ற***
***விடா மத விலங்கலேயால்.***

***நறுந் துழாய் அலங்கலான் -*** *மணம் பொருந்திய துளசி மாலையைச் சூடும் திருமாலானஇராமபிரான்;* ***நலம் கிளர் பூமி என்னும் நங்கையை -*** *சிறப்பு மிக்க மண்மகள் என்னும்பிராட்டியை;* ***புணரும் செல்வம் காண -*** *சேருகின்ற பேற்றினைக் காண்பதற்கு;* ***வந்து அடைந்திலாதார் -*** *வந்து சேராதவர்;* ***இலங்கையின் நிருதரே -*** *இலங்கையில் உள்ளஅரக்கர் மட்டுமே ஆவர்;* ***இவ் ஏர் உலகத்து வாழும் விலங்கலும் -*** *அவரே யன்றி, இந்தஏழு உலகங்களிலும் உள்ள மலைகளும்;* ***ஆசை நின்ற விடா மதம் விலங்கள் -*** *எட்டுத்திக்குகளிலும் நீங்காமல் நின்ற மதம் பொழியும் யானைகளுமே ஆகும்.*

*அரக்கர்களும், அஃறிணைப் பொருள்களான மலைகளும், திசையானைகளும் மட்டுமே வரவில்லைஎன்பதால் பிறர் எல்லாரும் வந்தனர் என்பதாம். அரக்கர் பகையானும், மலைகள்,அசைதலின்மையானும், திசையானைகள் திசைகளைச் சுமத்தலைவிட்டு வரக்கூடாமையானும் வரவில்லை. நங்கை - குணங்களால் நிறைந்தவள். ஆல் - அசை. 75*

*மன்னர்கள் முடிசூட்டு மண்டபம் புகுதல்*

***1566.  சந்திரர் கோடி என்னத் தரள***
***வெண் கவிகை ஓங்க,***
***அந்தரத்து அன்னம் எல்லாம்***
***ஆர்ந்தெனக் கவரி துன்ன,***
***இந்திரற்கு உவமை சாலும்***

***இருநிலக் கிழவர் எல்லாம்***
***வந்தனர்; மௌலி சூட்டும்***
***மண்டபம் மரபின் புக்கார்.***

***இந்திரற்கு உவமை சாலும் -*** *தேவேந்திரனுக்கு உவமையாகத்தக்க;* ***இரு நிலக்கிழவர் எல்லாம் -*** *பெரிய நாடுகளுக்குத் தலைவர்களான அரசர்கள் எல்லாரும்;* ***சந்திரர்கோடி என்ன -*** *சந்திரர் எண்ணற்றோர் என்னும்படி;* ***தரள வெண் கவிகை ஓங்க -*** *முத்துகளால் ஆகிய வெள்ளியகுடைகள் மேலோங்கவும்;* ***அந்தரத்து அன்னம் எல்லாம் ஆர்ந்தெனத-*** *வானில் அன்னப்பறவைகள் எல்லாம் நிறைந்தன என்னும்படி;* ***கவனி துன்ன -*** *வெண்சாமரங்கள் நெருங்கவும்;* ***வந்தனர் -*** *வந்து;* ***மௌலி சூட்டும் மண்டபம் -*** *இராமபிரான் முடிபுனைதற்குரிய மண்டபத்துள்;* ***மரபின் புக்கார் -*** *முறைப்படி புகுந்தனர்.*

*மன்னர்கள் தம் வரிசையோடு மண்டபத்தில் முறைப்படி புகுந்தனர் என்பது கருத்து. இன்பத்துய்ப்பில் இந்திரனுக்கு மேலானவர் என்பார். 'இந்திரற்கு உவகை சாலும்' என்றார். வெண்சாமரைகள் அசைவு, நிறம் ஆகியவற்றால் அன்னம் போல்வன. வந்தனர் - முற்றெச்சம்.* ***76***

வேதம் வல்லார் வருகை

***1567. முன் பயந்து எடுத்த காதல்***
***புதல்வனை முறையினோடும்***
***இற் பயன் சிறப்பிப்பாரின்.***
***ஈண்டிய உவகை தூண்ட,***
***அற்புதன் திருவைச் சேரும்***
***அரு மணம் காணப் புக்கார் -***
***நல் பயன் தவத்தின் உய்க்கும்***
***நான்மறைக் கிழவர் எல்லாம்.***

***தவத்தின் நல் பயன் உய்க்கும் -*** *தம் தவத்தின் ஆற்றலால் நல்ல பயன்களைத்தருகின்ற;* ***நால் மறை கிழவர் எல்லாம் -*** *நான்கு வேதங்களுக்கும் உரிய அந்தணர்எல்லோரும்;* ***முன் பயந்து எடுத்த காதல் புதல்வனை -*** *தாம் முற்படப் பெற்றெடுத்தஅன்புக்குரிய பிள்ளையை;* ***முறையினோடும் -*** *முறைமையுடன்;* ***இல் பயன் சிறப்பிப்பாரின் -*** *இல்வாழ்க்கைப் பயனில் மேம்பட மணஞ்செய்விப்பவர் போல;* ***ஈண்டிய உவகைதூண்ட-*** *மிக்க மகிழ்ச்சி செலுத்த;* ***அற்புதன் திருவைச் சேரும்-*** *இராமபிரான்அரசத் திருவைச் சேர்கின்ற;* ***அருமணம் காணப் புக்கார் -*** *அரிய திருமணத்தைக் காணமண்டபத்தினுள் புகுந்தனர்.*

*தம் மூத்த மகனுக்குத் திருமணம் செய்விக்கும்போது எவ்வளவு உவகை கொள்வாரோ அவ்வளவுஉவகையோடு அந்தணர்கள் இராமபிரான் முடிசூட்டுவிழாவைக் காண மண்டபத்தினுள் புகுந்தனர். அற்புதன் - மாய விளையாட்டுடையவன்.* *77*

பலவகை நிகழ்ச்சிகள்

***1568. விண்ணவர் விசும்பு தூர்த்தார்;***
***விரிதிரை உடுத்த கோல***
***மண்ணவர் திசைகள் தூர்த்தார்;***
***மங்கலம் இசைக்கும் சங்கம்,***
***கண் அகல் முரசின், ஓதை***
***கண்டவர் செவிகள் தூர்த்த;***
***எண் அருங் கனக மாரி***
***எழு திரைக் கடல்கள் தூர்த்த.***

***விண்ணவர் விசும்பு தூர்த்தார் -*** *(அவ் விழாவைக் காண வந்த) வானவர் ஆகாயத்தைநிரப்பினர்;* ***விரிதிரை உடுத்த கோல மண்ணவர்-*** *பரந்த கடலை ஆடையாக உடுத்த அழகியபூமியில் உறைவோர்;* ***திசைகள் தூர்த்தார் -*** *எட்டுத் திக்குகளையும் நிரப்பினர்;* ***மங்கலம் இசைக்கும் சங்கம் ஓதை -*** *மங்களகரமாக ஒலிக்கும் சங்குகளினடைய ஒலியும்;* ***கண் அகல் முரசின் ஓதை-*** *அகன்ற கண்ணையுடைய முரசவாத்தியங்களினுடைய ஒலியும்;* ***கண்டவர் செவிகள் தூர்த்த -*** *விழாக்காண வந்தவர் செவிகளை நிரப்பின;* ***எண் அருங்கனக மாரி -*** *தானமாகத் தரப்பட்ட அளவிடற்கு அரிய பொன்மழை;* ***எழுதிரைக் கடலும்தூர்த்த -*** *அலைகளையுடைய ஏழு கடல்களையும் நிரப்பின.*

*மண்டபத்துள் சங்க நாதமும், முரசின் ஒலியும் செவிகளை நிறைக்க. பொன்மழைபொழியப்பட்டது. செவிகள் தூர்த்த என்னும் பலவின்பால் வினைமுற்றுக்கேற்ப, ஓதை என்பதைப்பிரித்துச் சங்கத்தோடும் முரசோடும் கூட்டிச் சங்கின் ஓசையும் முரசின் ஓசையும் தூர்த்தனஎனப் பொருள் கொள்க. தூர்த்தல் என்பது பலமுறை ஒரே பொருளில் வந்தது. சொற்பொருட் பின்வரு நிலை அணி.*
***78***

*எங்கும் ஒளிவெள்ளம்*

***1569. விளக்கு ஒளி மறைத்த, மன்னர்***
***மின் ஒளி; மகுட கோடி***
***துளக்கு ஒளி, விசும்பின் ஊரும்***
***சுடரையும் மறைத்த; சூழ்ந்த***
***அளக்கர் வாய் முத்த மூரல்***
***முறுவலார் அணியின் சோதி,***
***'வளைக்கலாம்' என்று, அவ் வானோர்***
***கண்ணையும் மறைத்த அன்றே.***

***மன்னர் மின் ஒளி -*** *மன்னர்களின் உடம்பின் ஒளிக்கதிர்கள்;* ***விளக்கு ஒளி மறைத்த -*** *விளக்கின் ஒளியை மறையச் செய்தன;* ***மகுட கோடி துளக்கு ஒளி -*** *மகுடங்களின் தொகுதிகள் அசைதலால் உண்டாகும் ஒளிக்கற்றைகள்;* ***விசும்பின் ஊரும் சுடரையும்மறைக்கு -*** *வானத்தில் செல்லும் சூரியனையும் மறைந்தன;* ***சூழ்ந்த அளக்கர் வாய் முத்த மூரல் முறுவலார்-*** *பூமியைச் சூழ்ந்துள்ள கடலில் தோன்றிய முத்துப் போன்ற பற்களையும் புன்னகையையும் உடையபெண்களுடைய;* ***அணியின் சோதி -***

ஆபரணங்களின் ஒளிக்கதிர்கள்; **வளைக்கலாம்என்று** - தேவலோகத்தையும் வளைத்துக் கொள்ளலாம் என்று கருதி; **அவ் வானோர் கண்ணையும்** - அந்தக் தேவர்களின் கண்களையும்; ***மறைத்த*** - மறைத்தன;

கோடி என்பது மிகுதி குறித்தது. 'மறைத்த' என்னும் பலவின்பால் வினைமுற்றுக்கேற்ப ஒளி, சோதி என்பவற்றை ஒளிக்கதிர்கள் என்று பன்மையாகக் கொள்ளல் வேண்டும். இன்றேல், ஒருமைபன்மை மயக்கமாகும். அன்று, ஏ - அசைகள். *79*

வசிட்ட முனிவன் வருகை

***1570. ஆயது ஓர் அமைதியின்கண்,***
***ஐயனை மகுடம் சூட்டற்கு***
***ஏயும் மங்கலங்கள் ஆன***
***யாவையும் இயையக் கொண்டு,***
***தூய நான்மறைகள்***
***வேதபாரகர் சொல்ல, தொல்லை***
***வாயில்கள் நெருக்கம் நீங்க,***
***மா தவக் கிழவன் வந்தான்.***

**ஆயது ஓர் அமைதியின்கண்** - அத்தகைய சூழலில்; **மாதவக் கிழவன்** - பெரிய தவத்தைச் செய்த வசிட்ட முனிவன்; **ஐயனை மகுடம் சூட்டற்கு** - இராமபிரானைமுடிசூட்டுவதற்கு; **ஏயும் மங்கலங்கள் ஆன யாவையும்** - பொருந்திய மங்கலப் பொருள்களாகியஎல்லாவற்றையும்; **இயையக் கொண்டு** - பொருத்தமுற எடுத்துக்கொண்டு; **வேத பாரகத் தூயநான்மறைகள் சொல்ல** - வேதங்களைக் கரை கண்டவர்களான அந்தணர்கள் தூய்மையான நான்குவேதங்களை ஓதிவர; **தொல்லை வாயில்கள் நெருக்கம் நீங்க** - பழைய வாயில்களில்உள்ளவர்கள் நெருக்கத்தை நீங்கி விலகிக்கொள்ள; **வந்தான்** - முடிசூட்டு மண்டபத்துக்கு எழுந்தருளினான்.

வசிட்ட முனிவன்மீது உள்ள மரியாதையால் அங்கங்கே வாயில்களில் நின்றவர்கள் விலகிவழிவிட்டனர். வாயில்கள் பழையன எனினும் நெருக்கம் புதியது. வேத பாரகர். - வேதத்தைக்கரை கண்டவர்கள்; பாரம் - அக்கரை.
*80*

வசிட்ட முனிவன் செயல்

***1571. கங்கையே முதல ஆய கன்னி***
***ஈறு ஆன தீர்த்த***
***மங்கலப் புனலும், நாலு வாரியின்***
***நீரும் பூரித்து.***
***அங்கியின் வினையிற்கு ஏற்ற***
***யாவையும் அமைத்து, வீரச்***

**சிங்க ஆசனமும் வைத்து,**
**செய்வன விறவும் செய்தான்.**

***கங்கை முதல் ஆய* -** *கங்கையாறு முதலாக;* ***கன்னி ஈறு ஆன* -** *குமரியாறு ஈறாகஉள்ள;* ***தீர்த்த மங்கலப் புனலும்* -** *புன்ணிய தீர்த்தங்களின் மங்களகரமான நீரையும்;* ***நாலு வாரியின் நீரும்* -** *நான்கு கடல்களில் நீரையும்;* ***பூரித்து* -** *குடங்களில்நிறைத்துவைத்து;* ***அங்கியின் வினையிற்கு*** *- அக்கினியில் செய்யவேண்டும் ஓமம் முதலியசடங்குகளுக்கு;* ***ஏற்ற யாவையும் அமைத்து* -** *பொருந்திய எல்லா வற்றையும்தக்கவாறு செய்து;* ***வீரச் சிங்க ஆதனமும் வைத்து* -** *வீர சிம்மாசனத்தையும் உரிய இடத்தில் அமைத்து;* ***செய்வன பிறவும் செய்தான்* -** *மேலும் செய்ய வேண்டுவனவற்றையும்செய்தான்.*

*வசிட்ட முனிவன் ஒமத்திற்கும் நீராட்டத்திற்குத் வேண்டுவன எல்லா வற்றையும்அமைத்துவைத்தான். அங்கியின் வினை - ஓமம்; அதற்குரியன அட்சதை, தருப்பை, சமித்து,நெய், அகப்பை முதலியன. 'பிறவும்' என்பது ஓமத்திற்குரிய புரோகிதர் முதலாயினோரைவரித்தல், அங்குரார்ப்பணம். சுமங்கலி அமைத்தல், யானை, குதிரை, அத்திமரத்தால் செய்தபீடம் முதலிய வற்றைக் குறித்தது.*
***81***

*தயரதனை அழைத்துவரச் சுமந்திரன் செல்லுதல்*

***1572.* கணித நூல் உணர்ந்த மாந்தர்,**
**'காலம் வந்து அடுத்தது' என்ன,**
**பிணி அற நோற்று நின்ற**
**பெரியவன், 'விரைவின் ஏகி**
**மணி முடி வேந்தன் தன்னை**
**வல்லையின் கொணர்தி' என்ன,**
**பணி தலைநின்ற காதல் சுமந்திரன்**
**பரிவின் சென்றான்.**

***கணித நூல் உணர்ந்த மாந்தர்* -** *சோதிட நூலில் துறைபோய சோதிடர்கள்;* ***'காலம் வந்து அடுத்தது* -** *முகூர்த்த நேரம் வந்து நெருங்கியது;'* ***என்ன* -** *என்றுதெரிவித்ததனால்;* ***பிணி அற நோற்று நின்ற பெரியவன்* -** *பிறவிநோய் நீங்கும்படிதவஞ்செய்து அந்நிலையில் வழுவாமல் நின்ற வசிட்ட முனிவன்;* ***விரைவின் ஏகி* -** *வேகமாகச் சென்று;* ***மணிமுடி வேந்தன் தன்னை* -** *இரத்தின் கிரீடம் அணிந்தசக்கரவத்தியை;* ***வல்லையின் கொணர்தி* -** *விரைவில் இங்குக் கொண்டு வருவாய்;* ***என்ன* -** *என்று பணிக்க;* ***பணி தலைநின்ற காதல்சுமந்திரன்* -** *அம்முனிவனது கட்டளையைத் தலைமேற் கொண்டு நின்ற அன்பு நிறைந்தசுமந்திரன்;* ***பரிவின் சென்றான்* -** *அன்போடு விரைந்து சென்றான்.*

*வசிட்ட முனிவனுடைய தகுதிகளை நோக்கிப் 'பெரியவன்'என்றார் நோற்றலினும் அந்நெறி வழுவாது நிற்றல் அருமைத்தாதலின் 'நோற்று நின்ற'என்றார். 'குணவாயிற் கோட்டத்து அரசு துறந்து இருந்த' என்பதில் (சிலப்பதிகம் - 1) 'இருந்த' என்பது போன்றது 'நின்ற' என்னும் இது.* ***82***

*கைகேயி, 'இராமனை அழைத்து வா' எனல்*

***1573.* வின் தொட நிவந்த கோயில், வேந்தர்தம்**
**வேந்தன் தன்னைக்**
**கண்டிலன்; வினவக் கேட்டான்;**
**கைகயள் கோயில் நண்ணி,**
**தொண்டை வாய் மடந்தைமாரின் சொல்ல,**
**மற்று அவரும் சொல்ல,**
**பெண்டிரில் கூற்றம் அன்னாள்,**
**'பிள்ளையைக் கொணர்க' என்றாள்.**

**விண்தொட நிவந்த கோயில் -** வானை அளாவி உயர்ந்து நின்ற அரண்மனையில்; **வேந்தர்தம் வேந்தன் தன்னை -** அரசர்களுக்கு அரசனாகிய தயரதனை; **கண்டிலன் -** காணாதவானகி; **வினவ -** (அங்குள்ளாரைக்) கேட்க; **கேட்டான் -** (அவர்கள்)சொல்லக் கேட்டு; **கைகயள் கோயில் நண்ணி -** கைகேயியின் அரண்மனையை அடைந்து; **தொண்டைவாய் மடந்தைமாரின் சொல்ல -** கொவ்வைக் கனிபோன்ற வாயினையுடையதாதியரித்தில் தன் வருகையைத் தெரிவிக்க; **அவரும் சொல்ல -** அத்தாதியரும்கைகேயியிடத்துத் தெரிவிக்க; **பெண்டிரில் கூற்றம் அன்னாள் -** மகளிருள் யமனைப்போன்ற அவள்; **'பிள்ளையைக் கொணர்க -** இராமனை அழைத்து வருக;' **என்றாள் -** என்று சுமத்திரனை நோக்கிக் கூறினாள்.

தயரதன், கைகேயியின் அரண்மனையில் இருத்தலைக் கேட்டுச் சுமந்திரன் அங்கே செல்ல, அவன் சக்கரவத்தியைக் காண்பதற்கு முன்னே கைகேயி அவனைப் பார்த்து இராமனை அழைத்துவரப்பணிந்தாள். கணவனைக் கொல்லத் துணிந்தவாளாதலின், 'கூற்றம் அன்னாள்' என்றார். கண்டிலன், கேட்டான் - முற்றெச்சங்கள். மற்று - அசை. ***83***

*சுமந்திரன் இராமனை அழைத்துவரச் செல்லுதல்*

***1574.* 'என்றனள்' என்னக் கேட்டான்;**
**எழுந்த பேர் உவகை பொங்கப்**
**பொன் திணி மாட வீதி**
**பொருக்கென நீங்கி, புக்கான்;**
**தன் திரு உள்ளத்துள்ளே**
**தன்னையே நினையும் மற்று அக்**
**குன்று இவர் தோளினானைத்**
**தொழுது, வாய் புதைத்து, கூறும்;**

**'என்றனள்' -** 'பிள்ளையைக் கொணர்க' என்று கைகேயி சொன்னாள்; **என்னகேட்டான் -** என்று கூறக் கேட்டான் சுமந்திரன்; **எழுந்த பேர் உவகை பொங்க -** உண்டாகிய மிக்க மகிழ்ச்சி மேலும் மேலும் பெருக; **பொன் திணி மாட வீதி -** பொன்மயமான மாடங்களையுடைய தெருக்களை; **பொருக்கென நீங்கி -** விரைவாகக் கடந்து; **புக்கான் -** (இராமனது மாளிகையினுள்) புகுந்தான்; **தன் திரு உள்ளத்துள்ளே -**

*(அங்குத்) தனது மனத்திற்குள்ளே;* ***தன்னையே நினையும் அக்குன்று இவர் தோளினாளை-*** *தன்னையே நினைத்துக்கொண்டிருக்கின்ற அந்தக் குன்று போன்ற புயங்களையுடைய இராமபிரானை;* ***தொழுது வாய் புதைத்து -*** *(கண்டு) வணங்கி வாயை மூடிக்கொண்டு;* ***கூறும் -*** *(பின்வருமாறு) சொல்லலானான்.*

*இராமபிரான் தான் கொண்ட மானிட வேடத்திற்கு ஏற்றவாறு, உண்ணாமல் நோன்புமேற்கொண்டு நாராயணனைத் தியானித்து நிற்றலின் 'தன்னையே நினையும்' என்றார். இராமனைவாழ்த்தித் தயரதனுடன் சேர்த்து அனுப்பக் கருதியே கைகேயி இராமனை அங்கேஅழைத்திருப்பதாகச் சுமந்திரன் எண்ணியதால் எழுந்த பேருவகைபொங்குவதாயிற்று.* ***84***

*சுமந்திரன் இராமனை அழைத்தல்*

***1575. 'கொற்றவர், முனிவர், மற்றும்***
***குவலயத்து உள்ளார், உன்னைப்***
***பெற்றவன் தன்னைப் போலப்***
***பெரும் பரிவு இயற்றி நின்றார்;***
***சிற்றவைதானும், "ஆங்கே கொணர்க"***
***எனச் செப்பினாள்; அப்***
***பொன் - தட மகுடம் சூடப்***
***போதுதி, விரைவின்' என்றான்.***

***'கொற்றவ -*** *அரசர்களும்;* ***முனிவர் -*** *இருடிகளும்;* ***மற்றும் குவலயத்துஉள்ளார் -*** *பின்னும் இந்நிலவுலகத்தில் உள்ள மக்களும்;* ***உன்னைப் பெற்றவன்தன்னைப் போல -*** *உன்னைப் பெற்ற தயரதனைப் போல;* ***பெரும் பரிவு இயற்றி நின்றார் -*** *(உன்னிடம்) மிகுந்த அன்பைக் காட்டி நின்றார்;* ***சிற்றவைதானும் -*** *சிற்றன்னை யாகிய கைகேயியும்;* ***ஆங்கே கொணர்க எனச் செப்பினாள் -*** *அவனிடம் உன்னை அழைத்து வருமாறு சொன்னாள்;* ***அப் பொன்தட மகுடம் சூட-*** *(ஆதலால்) அந்தப் பொன்னால் ஆகியபெரிய முடியை (நீ) சூடுவதற்கு;* ***விரைவின் போதி -*** *விரைவாக வருவாய்;'* ***என்றான் -*** *என்று சுமந்திரன் சொன்னான்.*

*கொணர்கென - தொகுத்தல் விகாரம்; அகரம் தொக்கது. அவை - அவ்வை; தாய்; இடைகுறைந்தது.* ***85***

*இராமன் தேரில் ஏறிச் செல்லுதல்*

***1576. ஐயனும், அச் சொல் கேளா,***
***ஆயிர மௌலியானைக்***
***கைதொழுது, அரச வெள்ளம்***
***கடல் எனத் தொடர்ந்து சுற்ற,***
***தெய்வ கீதங்கள் பாட,***
***தேவரும் மகிழ்ந்து வாழ்த்த,***

***தையலார் இரைத்து நோக்க,***
***தார் அணி தேரில் சென்றான்.***

***ஐயனும் -*** *இராமபிரானும்;* ***அச் சொல்கேளா -*** *அந்தச் சொற்களைக் கேட்டு;* ***ஆயிரம் மௌலியானைக் கைதொழுது -*** *ஆயிரம் திருமுடிகளையுடைய திருமாலை வணங்கி;* ***அரசவெள்ளம் -*** *அரசர் கூட்டம்;* ***கடல் எனத் தொடர்ந்து சுற்ற -*** *கடல் போலப் பின்தொடர்ந்து சூழவும்;* ***தெய்வ கீதங்கள் பாட -*** *கடவுளைப் போற்றும் இசைகளை இசைவாணர்கள் பாடிவரவும்;* ***தேவரும் மகிழ்ந்து வாழ்த்த -*** *(வானில் கூடிய) தேவர்களும்உவகைகொண்டு வாழ்த்தவும்;* ***தையலார் இரைத்து நோக்க -*** *மகளிர் ஆரவாரித்துத் தன்னைவிரும்பிப் பார்க்கவும்;* ***தார் அணி தேரில் சென்றான் -*** *மாலைகளால் ஒப்பனைசெய்யப்பட்ட தேரில் போனான்.*

*இராமன் சுமந்திரன் சொற்கேட்டுத் தன் குலதெய்வமான அரங்கநாதனைத் தொழுது தேரில் புறப்பட்டான். இரைத்தல் - மகிழ்ச்சியால் ஆரவாரித்தல்.*
***86***

*மகளிர் செயல்கள்*

*1577.* ***திரு மணி மகுடம் சூடச் சேவகன்***
***செல்கின்றான் என்று,***
***ஒருவரின் ஒருவர் முந்த,***
***காதலோடு உவகை உந்த,***
***இரு கையும் இரைத்து மொய்த்தார்;***
***இன் உயிர் யார்க்கும் ஒன்றாய்ப்***
***பொரு அரு தேரில் செல்ல,***
***புறத்திடைக் கண்டார் போல்வார்.***

***சேவகன் திரு மணி மகுடம் சூட -*** *(அப்பெண்கள்) வீரனாகிய இராமன் அழகிய இரத்தினம் பதிக்கப்பெற்ற கிரீடம் சூட்டிக்கொள்வதற்கு;* ***செல்கின்றான் என்று -*** *(தேரில்) போகின்றான் என்று அறிந்து;* ***காதலோடு உவகை முந்த -*** *அன்பும் மகிழ்ச்சியும் தூண்டுதலால்;* ***ஒருவரின் ஒருவர் முந்த -*** *ஒருவருக்கொருவர் முற்பட்டு;* ***இருகையும் இரைத்து மொய்த்தார் -*** *இரு பக்கங்களிலும் ஆரவாரித்துக்கொண்டு நெருங்கினார்கள்;* ***இன் உயிர் யார்க்கும் ஒன்றாய் -*** *(அவர்கள்) இனிய உயிர் எல்லார்க்கும் ஒன்றாகி;* ***புறத்திடை பொரு அருதேரில் செல்ல -*** *வெளியில் ஒப்பற்ற தேரில் போக;* ***கண்டார் போல்வார் -*** *அதனைப் பார்த்தவரைப் போல்பவரானார்.*

*மகளிர் தம் உயிரெல்லாம் திரண்டு இராமன் என்னும் ஒருவடிவம் கொண்டு புறத்தே போவதைக்கண்டவர் போன்றவர் ஆயினர் என்பது கருத்து. இரு கை - தெருவின் இருபக்கங்கள்.* ***87***

*1578.* ***துண்ணெனும் சொல்லாள் சொல்ல,***
***சுடர் முடி துறந்து, தூய***
***மண் எனும் திருவை நீங்கி***
***வழிக்கொளா முன்னம், வள்ளல்***

***பண் எனும் சொல்லினார்தம்***
***தோள் எனும் பணைத்த வேயும்,***
***கண் எனும் கால வேலும்,***
***மிடை நெடுங் கானம் புக்கான்.***

***துண்ணெனும் சொல்லாள் சொல்ல -*** *நடுங்கத்தக்க சொல்லினையுடைய கைகேயி சொல்லுதலால்;* ***வள்ளல் -*** *இராமபிரான்;* ***சுடர் முடி துறந்து -*** *ஒளி பொருந்திய முடிசூடுதலைத் தவிர்ந்து;* ***தூய மண் எனும் திருவை நீங்கி -*** *தூய்மையுடைய நிலமகள் என்னும் செல்வியையும் பிரிந்து;* ***வழிக் கொளா முன்னம் -*** *(காடு) செல்லுவதற்கு முன்னரே;* ***பண் எனும் சொல்லினார்தம் -*** *இசைப்பாட்டு என்று சொல்லத்தக்க சொற்களையுடைய பெண்களில்;* ***தோள் எனும் பணைத்த வேயும் -*** *தோள்களாகிய பருத்த மூங்கில்களும்;* ***கண் எனும் கால வேலும் -*** *கண்கள் என்னும் யமனைப் போன்ற வேல்களும்;* ***மிடை நெடுங்கானம் புக்கான் -*** *செறிந்த பெருங்காட்டில் புகுந்தான்.*

*பெண்கள் கூட்டம் மொய்த்து நோக்க, இராமபிரான் தேரில் சென்றான் என்பதாம். பின்வரும் நிகழ்ச்சியை முன்னே பொருந்திக் கூறியுள்ள நயம் கருதத்தக்கது. இவ்வாறு கம்பர்பாடுதலை 20, 2828, 3151, 4759 முதலிய பாடல்களாலும் உணரலாம். 88*

***1579. சுண்ணமும் மலரும் சாந்தும்***
***கனகமும் தூவ வந்து,***
***வண்ண மேகலையும் நாணும்***
***வளைகளும் தூவுவாரும்;***
***புண் உற அனங்கன் வாளி***
***புழைத்ததம் புணர் மென் கொங்கை***
***கண் உறப் பொழிந்த காம***
***வெம் புனல் கழுவுவாரும்.***

***சுண்ணமும் மலரும் சாந்தும் கனகமும் -*** *(அப்பெண்கள்) நறுமணப் பொடியையும், பூக்களையும், சந்தனத்தையும், பொன்னையும்;* ***தூவ வந்து -*** *இராமன்மேல் சிதறுவதற்குவந்து;* ***வண்ண மேகலையும் -*** *(தங்கள்) அழகிய மேகலாபரணங்களையும்;* ***நாணும் -*** *நாணத்தையும்;* ***வளைகளும் -*** *வளையல்களையும்;* ***தூவுவாரும் -*** *நெகிழ விடுபவர்களும்;* ***அனங்கள் வாளி புண் உறப் புழைத்த -*** *மன்மதனின் மலரம்புகள் புண் உண்டாகும்படிதுளைத்த;* ***தம் புணர்மென் கொங்கை -*** *தம்முடைய நெருங்கிய மென்மையான தனங்களை;* ***கண் உறபொழிந்த -*** *தங்கள் கண்கள் மிகுதியாகச் சிந்திய;* ***காம வெம்புனல் -*** *காமத்தால் தோன்றிய வெந்நீரால்;* ***கழுவுவாரும் -*** *கழுவுகின்றவர்களும் (ஆகி என ஒருசொல் வருவிக்க)*

*இது குளகம், அடுத்த பாட்டில் வரும் நைவார் என்னும் வினைகொண்டு முடியும். இராமன்மேல்மங்கலப் பொருள்கைளைத் தூவ வந்த மகளிர் அதனை மறந்து இராமன்மீது உண்டான காதலால்தடுமாறி, தங்கள் ஆபரணங்களை நெகிழவிட்டனர். நாணமே மகளிர்க்குச் சிறந்த அணி; அதனையும் அணிகலன்களுடன் சேர்த்துச் சிந்தினர்.* ***89***

***1580. ' "அங்கணண் அவனி காத்தற்கு ஆம்***
***இவன்" என்னல் ஆமோ?***
***நம் கண் அன்பு இலன்' என்று, உள்ளம்***
***தள்ளுற நடுங்கி நைவார்.***
***'செங் கணும், கரிய கோல***
***மேனியும், தேரும், ஆகி,***
***எங்கனும் தோன்றுகின்றான்;***
***எனைவரோ இராமன்?' என்பார்.***

***'அங்கணன் இவன் -*** *அழகிய கண்களையுடைய இந்த இராமன்;* ***அவனி காத்தற்கு ஆம்-*** *இவ்வுலகைக் காப்பாற்றுவதற்குத் தக்கவன் ஆவான்;* ***என்னல் ஆமோ-*** *என்று கூறுதல்பொருந்துமோ? (பொருந்தாது);* ***நம் கண் அன்பு இலன் -*** *நம்மீது அன்பு இல்லாதவனாக. இருக்கின்றானே;'* ***என்று -*** *என்று எண்ணி;* ***உள்ளம் தள்ளுற நடுங்கி நைவார் -*** *மனம் தடுமாறுவதால் உடல் நடுங்கித் துன்புறுவாராகி;* ***'செங்கணும் -*** *சிவந்தகண்களும்;* ***கரிய கோல மேனியும் -*** *கருநிறம் வாய்ந்த அழகிய திருமேனியும்;* ***தேரும்ஆகி -*** *தேருமாகப் பொருந்தி;* ***எங்கணும் தோன்றுகின்றான் -*** *(இராமன்) எங்குப்பார்த்தாலும் காட்சி தருகின்றான்;* ***இராமன் எனைவரோ -*** *இராமன் வடிவுடையோர் எத்தனை பேரோ;'* ***என்பார் -*** *என்று வியப்புடன் கூறுவார்.*

*நமக்கு அருள் புரியாதவன் எப்படி உலகத்திற்கு அருள்புரிந்து காப்பாற்றப் போகிறான் என்றுமனம் தடுமாறினார்கள் அவன்மீது காதல் கொண்ட பெண்கள். காம மிகுதியால் பார்க்குமிடம்எங்கும் இராமனைக் கண்டனர். இஃது உருவெளித்தோற்றம்.* ***90***

*முனிவர் முதலியோர் நினைப்பும் பேச்சும்*

***1581. இனையராய் மகளிர் எல்லாம்***
***இரைத்தனர், நிரைத்து மொய்த்தார்;***
***முனைவரும், நகர மூதூர்***
***முதிஞரும் இளைஞர் தாமும்,***
***அனையவன் மேனி கண்டார்,***
***அன்பினுக்கு எல்லை காணார்,***
***நினைவன மனத்தால், வாயால்***
***நிகழ்த்தது, நிகழ்த்தலுற்றாம்;***

***மகளிர் எல்லாம் -*** *பெண்கள் எல்லாரும்;* ***இனையராய் -*** *இத் தன்மையினராய்; இரைத்தனர் ஆரவாரித்து;* ***நிரைத்து மொய்த்தார் -*** *கூட்டமாகி(இராமபிரானை) நெருங்கினார்கள்;* ***முனைவரும் -*** *பற்றற்ற முனிவர்களும்;* ***நகர மூதூர்முதிஞரும் -*** *அயோத்தி நகரமாகிய அந்தப் பழைய ஊரில் வாழும் மூத்தவர்களும்;* ***இளைஞர்தாமும் -*** *சிறியவர்களும்;* ***அனையவன் மேனி கண்டார் -*** *இராமபிரானது திருமேனி அழகைக் கண்டு;* ***அன்பினுக்கு எல்லை காணார்-*** *அவன் மீது கொண்ட அன்புக்கு வரம்பு காணாமல்;* ***மனத்தால் நினைவன -*** *மனத்தால்*

*நினைப்பனவற்றையும்;* ***வாயால்நிகழ்ந்தது -*** *வாயால் கூறியதையும்;* ***நிகழ்த்தலுற்றாம் -*** *சொல்லத்தொடங்குவோம்.*

*இராமபிரான் சிறப்புகள் அனைவரையும் ஈர்க்க வல்லவனவாதலின், பற்றற்ற முனிவர்களும்அவன் முடிசூட்டிக்கொள்வதைக் காண விருப்பம் கொண்டு வந்தனர் என்பதாம். நிகழ்ந்தது -நிகழ்த்தியது; பிறவினை விகுதி மறைந்துள்ளது. இதனை அந்தர்ப்பாவிதணிச் என்பர் வடநூலார். கண்டார், காணார் - முற்றெச்சங்கள்.*
***91***

***1582. 'உய்ந்தது இவ் உலகம்' என்பார்;***
***'ஊழி காண்கிற்பாய்' என்பார்;***
***'மைந்தே! நீ கோடி எங்கள்***
***வாழ்க்கை நாள் யாவும்' என்பார்;***
***'ஐந்து அவித்து அரிதின் செய்த***
***தவம் உனக்கு ஆக' என்பார்;***
***'பைந் துழாய்த் தெரியலாய்க்கே***
***நல்வினை பயக்க' என்பார்.***

***இவ் உலகம் உய்ந்தது என்பார் -*** *(அவர்களுள்) இந் நிலவுலகம் கரைமரம்சேர்ந்தது என்பார் சிலர்;* ***ஊழி காண்கிற்பாய் என்பார் -*** *நீ ஊழியின் முடிவு கண்டுவாழ்வாய் என்பார் சிலர்;* ***மைந்த -*** *ஐயனே;* ***எங்கள் வாழ்க்கை நாள் யாவும் நீகோடி என்பார் -*** *எங்கள் ஆயுள் முழுவதையும் நீ எடுத்துக்கொள்வாய் என்பார் சிலர்;* ***ஐந்து அவித்து அரிதின் செய்த தவம் -*** *நாங்கள் ஐம்புலன்களையும் அடக்கி அரிதாகச் செய்த தவத்தின் பயன்;* ***உனக்கு ஆக என்பார் -*** *உனக்கு அரிதாகச் செய்த தவத்தின்பயன்;* ***உனக்கு ஆக என்பார் -*** *உனக்கு உளதாகுக என்பார் சிலர்;* ***பைந் துழாய்த்தெரியலாய்க்கே -*** *பசிய துளசிமாலையை அணிந்த உனக்கே;* ***நல்வினை பயக்க என்பார் -*** *புண்ணியம் உண்டாவதாக என்பார் சிலர்.*

*மக்கள் அனைவரும் தங்கள் ஆர்வம் தோன்ற இராமபிரானை வெவ்வேறு முறையில்வாழ்த்தினர். 'எங்கள் வாழ்க்கை நாள் யாவும் நீ கோடி'' என்பதனோடு ''யான் வாழு நாளும்பண்ணன் வாழிய'' (புறம். 173) என்பது ஒப்பு நோக்கத் தக்கது. ஐந்து என்னும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது.* ***92***

***1583. 'உயர் அருள் ஒண் கண் ஒக்கும்***
***தாமரை, நிறத்தை ஒக்கும்***
***புயல் பொழி மேகம், என்ன***
***புண்ணியம் செய்த' என்பார்;***
***'செயல் அருந் தவங்கள் செய்து, இச்***
***செம்மலைத் தந்த செல்வத்***
***தயரதற்கு என்ன கைம்மாறு***
***உடையம் யாம் தக்கது?' என்பார்.***

**'உயர் அருள் ஒண்கண் ஒக்கும் தாமரை -** *மிகுந்த கருணை நிறைந்த ஒளிபடைத்தஇவன் கண்களைப் போன்ற தாமரை மலரும்;* **நிறத்தை ஒக்கும் புயல்பொழி மேகம் -** *திருமேனியின் நிறத்தைப் போன்ற நீரைப் பொழியும் கார் மேகமும்;* **என்ன புண்ணியம்செய்த என்பார் -** *என்ன நல்வினை புரிந்தன' என்று கூறுவார் சிலர்;* **செயல் அருந் தவங்கள் செய்து -** *பிறரால் செய்வதற்கு முடியாத தவங்களைச் செய்து;* **இச் செம்மலைத்தந்த** *- இந்த நம்பியைப் பெற்று (நமக்குக்) கொடுத்த;* **செல்வத் தயரதற்கு -** *பேற்றினையுடைய சக்கரவர்திக்கு;* **தக்கது -** *அவர் செய்த நன்றிக்குத் தக்கதான;* **என்ன கைம்மாறு யாம் உடையம் -** *எந்த மறு உதவி உடையராய் இருக்கின்றோம்?;* **என்பார் -** *என்று கூறுவர் சிலர்.*

*இராமன் கண்ணழகிலும் மேனியழகிலும் ஈடுபட்டு அவற்றிற்கு உவமையாகும் தகுதிபெற்ற தாமரையையும், மேகத்தையும் புகழ்ந்தனர் சிலர், இராமனைப் பெற்றுத் தந்த தயரதன் தந்தகொடைக்கு ஈடாக எந்தக் கைம்மாறும் நம்மால் செய்ய இயலாது நன்றியால் நிறைந்தனர் சிலர். புயல் - நீருக்கு இலக்கணை.* ***93***

***1584. 'வாரணம் அரற்ற வந்து,***
***கரா உயிர் மாற்றும் நேமி***
***நாரணன் ஒக்கும், இந்த***
***நம்பிதன் கருணை' என்பார்;***
***ஆரணம் அறிதல் தேற்றா***
***ஐயனை அணுகி நோக்கி,***
***காரணம் இன்றியேயும்,***
***கண்கள் நீர் கலுழ நிற்பார்.***

**இந்த நம்பிதன் கருணை -** *இந்தக் குணங்களால் நிறைந்தவனாகிய இராமபிரானதுதிருவருள்;* **வாரணம் அரற்ற வந்து -** *முதலை வாய்ப்பட்ட கயேந்திரன் என்னும் யானைஆதிமூலமே என்று கதற அங்குத் தோன்றி;* **கரா உயிர் மாற்றும் -** *முதலையின் உயிரைப்போக்கிய;* **நேமி நாரணன்** *(கருணை)* **ஒக்கும் -** *சக்கரப் படையையுடைய திருமாலின்திருவருளை ஒத்ததாகும்;* **என்பார்-** *என்று கூறுவர் சிலர்;* **ஆரணம் அறிதல் தேற்றா-** *மறைகளும் இனையன் என்று அறிய இயலாத;* **ஐயனை அணுகி நோக்கி-** *(திருமாலாகிய)இராமபிரானை நெருங்கி நன்கு பார்த்து;* **காரணம் இன்றியேயும் -** *(அன்பு தவிர வேறு) காரணம் இல்லாமலே;* **கண்கள் நீர் கலுழ நிற்பார் -** *கண்களிலிருந்து நீர் சொரியநிற்பார் சிலர்.*

*நாரணன் - நாராயணன் என்பதன் சிதைவு. நாரணன் என்பதன் பின்னும் கருணை என்பதனைப்பிரித்துக் கூட்டுக. காரணமின்றிக் கண்ணீர் சொரிந்தனர் என்பது அவர்களது பரவசநிலையினைக்காட்டும்.* ***94***

***1585. 'நீல மா முகில் அனான்தன்***
***நினையினோடு அறிவும் நிற்க.***
***சீலம் ஆர்க்கு உண்டு? கெட்டேன்?***
***தேவரின் அடங்குவானோ?***
***காலமாக் கணிக்கும் நுண்மைக்***
***கணக்கையும் கடந்து நின்ற***

***மூலம் ஆய், முடிவு இலாத***
***மூர்த்தி இம் முன்பன்' என்பார்.***

***நீல மா முகில் அனான்தன் -*** *கரிய பெரிய மேகத்தைப் போன்ற இராமபிரானது;* ***நிறையினோடு அறிவு நிற்க -*** *நிறையும் பேரறிவும் ஒருபுறம் இருக்க;* ***சீலம் ஆர்க்கு உண்டு-*** *அவனது நீர்மைக்குணம் வேறு எவருக்கு உண்டு? (ஒருவர்க்கும் இல்லை);* ***இம் முன்பன் -*** *இந்த முன்னவனாகிய இராமபிரான்;* ***தேவரின் அடங்குவானோ -*** *தேவர்களுள் ஒருவனாய் அமைவானோ? (அமையான்);* ***காலமாக் கணிக்கும் -*** *கால அளவாகக் கணக்கிடப்படுகின்ற;* ***நுண்மைக் கணக்கையும் கடந்து நின்ற -*** *நுட்பமாகிய எண்களையும் கடந்து அப்பால் நின்ற;* ***மூலம் ஆய் -*** *முதற்பொருளாகி;* ***முடிவிலாத மூர்த்தி -*** *அழிவில்லாத பரம்பொருள் ஆவான்;* ***கெட்டேன் -*** *(இதனை உணராமல் இது காறும்) 'கெட்டேன்';* ***என்பார் -*** *என்று சொல்வர் சிலர்.*

*இராமனுடைய நிறையும் அறிவும் அல்லாமல், நீர்மையே அவனைப் பரம் பொருள் என்பதனைக்காட்டிக்கொடுக்கிறது. அதனை அறியாமல் நாளைப் பழுதே போக்கினேனே' என்று தனித்தனியேதன்னிரக்கம் கொண்டனர் சிலர்.*

*நிறை - தன் நெஞ்சைத் தடுத்து நிறுத்தும் திறன். சீலம் - உயர்த்தார், தாழ்ந்தார்என்னும் வேறுபாடின்றி நீரோடு நீர் கலந்தாற்போல இரண்டறக் கலந்து பழகுதல். இப்பாட்டின்பின்னிரண்டு அடிகளின் கருத்துப் பின்னும் "மூலமும் நடுவும் ஈறும் இல்லது ஓர் மும்மைத்து ஆய, காலமும் கணக்கும் நீத்த காரணன்" (1584) என இடம் பெறுதல்காணலாம்.* ***95***

***1586. 'ஆர்கலி அகழ்ந்தோர், கங்கை***
***அவனியில் கொணர்ந்தோர், முந்தைப்***
***போர் கெழு புலவர்க்கு ஆகி***
***அசுரரைப் பொருது வென்றோர்.***
***பேர்கெழு சிறப்பின் வந்த***
***பெரும் புகழ் நிற்பது, ஐயன்***
***தார் கெழு திரள் தோள் தந்த***
***புகழினைத் தழுவி' என்பார்.***

***ஆர்கலி அகழ்ந்தோர் -*** *கடலைத் தோண்டியவரும்;* ***கங்கை அவனியில்கொணர்ந்தோர் -*** *ஆகாய கங்கையை உலகத்திற்குக் கொண்டுவந்தவரும்;* ***முந்தை -*** *பழமையாகிய;* ***போர் கெழு புலவர்க்கு ஆகி -*** *(அசுரரோடு) போர்மிக்க தேவர்களுக்குத்துணையாகி;* ***அகரரைப் பொருது வென்றோர்-*** *அசுரர்களைப் போரிட்டு வெற்றிபெற்றவரும் (ஆகிய இக் குலத்து முன்னோர் பலருக்கும்);* ***பேர் கெழு சிறப்பின் வந்த -*** *விளங்குகின்ற மேன்மையோடு உண்டாகிய;* ***பெரும் புகழ் நிற்பது -*** *மிக்க கீர்த்திநிலைத்து நிற்பது;* ***ஐயன் தார் கெழு -*** *இராமபிரானது வெற்றிமாலை பொருந்திய;* ***திரள்தோள்தந்த புகழினை -*** *திரண்ட தோள்கள் உண்டாக்கிய கீர்த்தியை;* ***தழுவி -*** *தழுவியே யாம்;* ***என்பார்.*** *ஆர்கலி அகழ்ந்தவர் சகரர்; கங்கை தந்தோன் - பகீரதன்; அசுரரை வென்றோர் -ககுத்தன், முசுகுந்தன் முதலியோர். ஐயன் திரள் தோற்களுக்குத் தாடகைவதம், சிவனது வில்லைமுறித்தது, பரசுராமனை அடக்கியது. ஆகியவற்றால் புகழ் உண்டாயிற்று. புலவர் -அறிவினையுடைய தேவர்கள். அசுரர் -*

*சுரர்க்குப் பகைவர். சுரர் - தேவர்; அமுதத்தை (சுராவை) உண்டவர்.*
***96***

பலர் செயல்

கலிவிருத்தம்

***1587. 'சந்தம் இவை; தா இல்மணி***
***ஆரம் இவை; யாவும்***
***சிந்துரமும் இங்கு இவை;***
***செறிந்த மத வேழப்***
***பந்திகள், வயப் பரி,***
***பசும் பொனின் வெறுக்கை,***
***மைந்த! வறியோர் கொள***
***வழக்கு' என நிரைப்பார்.***

***மைந்த -*** *வீரனே!;* ***இவை சத்தம் -*** *இவை சந்தனக் கலவைகள்;* ***இவை தாஇல் மணி ஆரம் -*** *இவை குற்றமில்லாத இரத்தின மாலைகள்;* ***இங்கு இவை -*** *இவ்விடத்திலுள்ள இவை;* ***சிந்துரமும் -*** *திலகமும்;* ***யாவும் -*** *மற்றை எல்லாஅணிகளும் ஆகும்;* ***செறிந்த மதவேழப் பந்திகள் -*** *பொருந்திய மதயானை வரிசைகள்;* ***வயப் பரி -*** *வெற்றியையுடைய குதிரைகள்;* ***பசும் பொனின் வெறுக்கை -*** *பசும்பொன்னாலாகிய செல்வங்கள்;* ***வறியோர் கொள -*** *(இவற்றையெல்லாம்) பொருளில்லாத ஏழைகள் பெற்றுக்கொள்ளும்படி;* ***வழக்கு -*** *(உன்கையால்) எடுத்துக் கொடு;* ***எனநிரைப்பார் -*** *என்று வரிசையாகக் கொண்டுவந்து வைப்பவர் சிலர்.*

*இராமனுக்கு முடிசூட்டுவிழா நிகழும் காலத்தில் அவனுக்கு நன்மை விளைய வேண்டும் என்று கருதிய சிலர் தம்முடைய பொருளான சந்தனம் முதலியவற்றை அவன் கையில்கொடுத்து வறியவர்களுக்கு வழங்க வேண்டும் என்று வேண்டினர். வழங்குதல் - வரம்பு இல்லாமல் கொடுத்தல்.* ***97***

***1588. மின் பொருவு தேரின்மிசை***
***வீரன் வரு போழ்தில்,***
***தன் பொருவு இல் கன்று தனி***
***தாவி வரல் கண்டாங்கு***
***அன்பு உருகு சிந்தையொடும்***
***ஆ உருகுமாபோல்,***
***என்பு உருகி, நெஞ்சு உருகி,***
***யார் உருககில்லார்?***

***வீரன் -*** *வீரனாகிய இராமன்;* ***மின் பொருவு தேரின்மிசை -*** *மின்னலையொத்த தேரின்மீது ஏறிவரும்போது;* ***ஆ -*** *பகவானது;* ***தன் பொருவு இல் கன்று -*** *தனது ஒப்பற்ற கன்று;* ***தனி தாவி வரல் கண்டாங்கு -*** *தனியே துள்ளிக் குதித்து வருதலைப்பார்த்தபோது;* ***அன்பு உருகு சிந்தையொடும் -*** *அன்பினால் கரைகின்ற*

*மனத்தோடு;* ***உருகுமா போல் -*** *உருகும் வகைபோல;* ***என்பு உருகி -*** *உடம்பு நெகிழ்ந்து;* ***நெஞ்சு உருகி -*** *மனம் உருகி (நிற்பதன்றி);* ***உருககில்லார்யார் -*** *உருகாமல் வன்மையோடுநின்றவர் யார்? (எவரும் இலர்).*

*இராமனைக் கண்ட எல்லாரும் தம்மையறியாமலே அவன்மீது அன்பு தோன்றி உள்ளமும் உடலும்உருகி நிற்பர் என்றவாறு. கண்டாங்கு - தொகுத்தல் விகாரம், அகரம் தொக்கது. உருகுமா போல்- உருகுமாறுபோர்ல; ஆ - ஆறு என்பதன் விகாரம். பின்னிரண்டு அடிகளில் உருகுதல் என்ற சொல் பலமுறை ஒரே பொருளில் வந்தது சொற்பொருட் பின்வருநிலை அணி.* ***98***

***1589. 'சத்திரம் நிழற்ற, நிமிர் தானையொடு நானா***
***அத்திரம் நிழற்ற, அருளொடு அவனி ஆள்வார்,***
***புத்திரர் இனிப் பெறுதல் புல்லிது' என, நல்லோர்.***
***சித்திரம் எனத் தனி திகைத்து, உருகி, நிற்பார்.***

***நல்லோர் -*** *நற்பண்புடையவர்;* ***சத்திரம் நிழற்ற -*** *வெண்கொற்றக்குடைநிழலைச் செய்யவும்;* ***நிமிர் தானையொடு -*** *பெருகிய சேனையுடன்;* ***நானா அத்திரம்நிழற்ற -*** *பல்வகைப் படைகளும் ஒளிவீசவும்;* ***அருளோடு அவனி ஆள்வார் -*** *அருளுடன்பூமியை ஆளும் அரசர்கள்;* ***இனி -*** *இராமபிரான் பிறந்த பின்பு;* ***புத்திரர் பெறுதல் புல்லிது -*** *மைந்தர்களைப் பெறுவது சிறுமையுடையது;* ***என -*** *என்று சொல்லி;* ***திகைத்து -*** *திகைத்தும்;* ***உருகி -*** *மனம் உருகியும்;* ***சித்திரம் என நிற்பார் -*** *ஓவியம்போல் அசைவற்று நிற்பர்,*

*இராமனைப் போன்ற பிள்ளையை இனி எவரும் பெறல் அரிது என்பது கருத்து. அத்திரங்கள்எய்வன, எறிவன, குத்துவன, வெட்டுவன எனப் பல வகைப்படுதலால் 'நானா அத்திரம்' என்றார்.நிழல் - சாயை, ஒளி என்னும் இருபொருள் தருவது.*
***99***

***1590. 'கார் மினொடு உலாயது என***
***நூல் கஞலும் மார்பன்,***
***தேர்மிசை, நம் வாயில் கடிது***
***ஏகுதல் செய்வானோ?***
***கூர் கனக ராசியொடு***
***கோடி மணியாலும்***
***தூர்மின், நெடு வீதியினை'***
***என்று சொரிவாரும்.***

***கார் மினொடு உலாயது என -*** *மேகம் மின்னலொடு உலாவியது போல;* ***நூல் கஞலும்மார்பன் -*** *முப்புரி நூல் விளங்கும் மார்பையுடைய இராமபிரான்;* ***நம் வாயில் -*** *நமது வீட்டு வாயில் வழியாக;* ***தேர்மிசை -*** *தேரின்மேல்;* ***கடிது ஏகுதல் செய்வானோ-*** *வேகமாகக் கடந்து சென்றுவிடுவானோ?;* ***கூர் கனக ராசியொடு -*** *(அத்தேரைத்தடுப்பதற்காக) மிகுந்த பொற்குவியலோடு;* ***கோடி மணியாலும் -*** *அளவற்ற மனணிகளாலும்;* ***நெடு வீதியினைத் தூர்மின் -*** *பெரிய தெருவினை*

*நிரப்புங்கள்;* **என்று சொரிவாரும் -** *என்று சொல்லிக்கொண்டு அவற்றைக் கொட்டுவாரும் சிலர்.*

*இராமன் வடிவழகைக் காண அவனது தேர் விரைந்து செல்லாதபடி பொன்னையும் மணியையும்வழியில் கொட்டும்படி சொல்லிச் சிலர் அவற்றைப் பொழிந்துவைத்தனர். கார் - இராமன்திருமார்பிற்கும், மின்னல் முப்புரி நூலுக்கும் உவமை.* ***100***

***1591. 'தாய் கையில் வளர்ந்திலன்;***
***வளர்த்தது, தவத்தால்***
***கேகயன் மடந்தை; கிளர்***
***ஞாலம் இவன் ஆள,***
***ஈகையில் உவந்த அவ்***
***இயற்கை இது என்றால்,***
***தோகை அவள் பேர் உவகை***
***சொல்லல் அரிது?' என்பார்.***

***தாய் கையில் வளர்ந்திலன் -*** *இராமபிரான் ஈன்ற தாயாகிய கோசலையின் கையில்வளர்ந்தானில்லை;* ***வளர்ந்தது*** *- அவனை வளர்த்தது;* ***தவத்தால் கேகயன் மடந்தை -*** *முன்செய்த தவப்பயனால் கேகயமன்னன் மகளாகிய கைகேயியை;* ***கிளர் ஞாலம் இவன் ஆள -*** *(அதனால்) விளங்குகின்ற நாட்டினை இவ் இராமன் ஆள;* ***ஈகையில் உவந்த*** *- கொடுப்பதில்(பெற்ற தாய்போல) மகிழ்ச்சியுற்ற ;* ***இயற்கை இது என்றால்*** *- (அவளது) தன்மைஇதுவாயின்;* ***தோகை அவள் பேர் உவகை -*** *அக் கைகேயியினது பெருங்களிப்பு;* ***சொல்லல்அரிது -*** *சொல்லுதல் முடியாது;* ***என்பார் -*** *என்று கூறுவார்கள்.*

*இராமனை வளர்த்தவள் கைகேயியாதலின் அவளுக்கே மிக்க மகிழ்ச்சி உண்டு என்றனர்சிலர். அவள் இந்நாள் வரை இராமனிடம் பேர்புன் கொண்டவளாய் இருந்தமையை அனைவரும்அறிவராதலின் இவ்வாறு கூறினர்.*
***101***

***1592. 'பாவமும் அருந் துயரும் வேர் பறியும்' என்பார்;***
***'பூவலயம் இன்று தனி அன்று; பொது' என்பார்;***
***'தேவர் பகை உள்ளன இவ் வள்ளல் தெறும்' என்பார்;***
***'ஏவல் செயும் மன்னர் தவம் யாவது கொல்?' என்பார்.***

***பாவமும் அருந் துயரும்-*** *இவன் ஆளப்போவதால் தீ வினைகளும் தீர்த்தற்கரியதுன்பங்களும்;* ***வேர் பறியும் என்பார் -*** *அடியோடு அழியும் என்பார்;* ***பூவலயம் -*** *இந்தப் பூமண்டலம்;* ***இன்று தனி அன்று -*** *இப்பொழுது இராமன் ஒருவனுக்கே தனியுரிமை உடையதுஅன்று;* ***பொது என்பார் -*** *எல்லார்க்கும் பொதுவுடைமை ஆகும் என்பார்;* ***தேவர் பகை உள்ளன -*** *தேவர்களுக்குப் பகையாய் உள்ள அரக்கர் கூட்டங்களை;* ***இவ் வள்ளல் தெறும் என்பார் -*** *இவ் இராமன் அழிப்பான் என்பார்;* ***ஏவல் செயும் மன்னர் -*** *இவனுக்குஏவல் செய்யும் அரசர்களது;* ***தவம் யாவது கொல் என்பார் -*** *நல்வினை எத்தன்மையதோஎன்பார்.*

*இராமன் ஆட்சியில் தம் பாவமும் துயரும் தீரும் என்றார் சிலர். இராமன் மக்கள்குறைகளைக் கேட்டறிந்து, அவர்கள் தாமே ஆட்சிபுரிந்தால் எவ்வாறு நன்மையைப் பெறலாமோஅவ்வாறு நன்மையைப் பெறச்செய்வான் என்னும் உறுதிப்பாட்டால் 'பூவலயம் இன்று தனி அன்று; பொது' என்றார் சிலர். இராமன் ஆளும்போது தாங்களே ஆளுவதாகக் கருதினர் என்பதாம்.*
***102***

***1593. ஆண்டு, இனையராய் இனைய கூற, அடல் வீரன்,***
***தூண்டு புரவிப் பொரு இல் சுந்தர மணித் தேர்,***
***நீண்ட கொடி மாட நிரை வீதி நிறையப் போய்,***
***பூண்ட புகழ் மன்னன் உறை கோயில் புகலோடும் -***

***ஆண்டு*** *- (நகரமக்கள் வீதியாகிய) அவ்விடத்து;* ***இனையராய்*** *- இத்தன்மையராகி;* ***இனைய கூற*** *- இத்தன்மையனவற்றைச் சொல்லிக்கொண்டிருக்க;* ***அடல்வீரன்*** *- வெற்றி வீரனாகிய இராமபிரான்;* ***தூண்டு புரவி*** *- (சுமந்திரனால்)செலுத்தப்பட்ட குதிரைகள் பூட்டப்பட்ட;* ***பொரு இல் சுந்தர மணித் தேர்*** *- ஒப்பற்றஅழகிய மணிகள் கட்டிய தேரில்;* ***நீண்ட கொடி மாட நிரை வீதி*** *- உயர்ந்தகொடிகளையுடைய மாளிகை வரிசையினையுடைய தெரு;* ***நிறையப் போய்*** *- நிறைவாக விளங்கும்படிசென்று;* ***புகழ்பூண்ட மன்னன் உறை கோயில்*** *- புகழை ஆபரணமாக அணிந்துள்ள தயரதன்தங்குகின்ற அரண்மனையை;* ***புகலோடும்*** *- அடைந்த அளவில்.*

***இனையர், இனைய*** *- குறிப்பு வினையாலனையும் பெயர்.* ***புகலோடும்*** *- உம்மீற்று வினையெச்சம்.* ***103***

*அரண்மனையில் இராமன் அரசனைக் காணாமை*

***1594. ஆங்க வந்து அடைந்த அண்ணல்,***
***ஆசையின் கவரி வீச,***
***பூங் குழல் மகளிர் உள்ளம்***
***புதுக் களி ஆட, நோக்கி,***
***வீங்கு இருங் காதல் காட்டி,***
***விரி அரி சுமந்த பீடத்து***
***ஓங்கிய மகுடம் சூடி,***
***உவகை வீற்றிருப்பக் காணான்.***

***ஆங்கு வந்து அடைந்த அண்ணல்*** *- தயரதனின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தஇராமபிரான்;* ***ஆசையின் கவரி வீச*** *- திசைகள் தோறும் சாமரைகள் வீச;* ***பூங் குழல்மகளிர் உள்ளம்*** *- பூவை அணிந்துள்ள குழலையுடைய மங்கையர் மனம்;* ***புதுக் களி ஆட*** *- புதிய மகிழ்ச்சியால் ஆடவும்;* ***வீங்கு இருங் காதல் காட்டி*** *- மிகுந்த விருப்பத்தை (தன்வருகையில்) காட்டி;* ***ஓங்கிய மகுடம் சூடி*** *- சிறந்த கிரீடத்தை அணிந்த;* ***அரசன்*** *- தயரதன்;* ***விரி அரி சுமந்த பீடத்து*** *- விசாலமான சிங்கம் தாங்கும்ஆசனத்தில்;* ***உவகை வீற்றிருப்பக் காணான்*** *- மகிழ்வுடன் வீற்றிருக்கவும்கண்டானில்லை.*

*மகளிர் உவகையால் ஆடுதலையும் தயரதன் காதல் காட்டி வீற்றிருத்தலையும் இராமன்காணவில்லை அரண்மனை பொலிவின்றி இருந்தது. என்றவாறு. ஆசை - திசை. வீற்றிருத்தல் -மற்றொருவர்க்கு இல்லாத சிறப்போடு விளங்கித் தோன்றுதல்.*
***104***

***1595. வேத்தவை, முனிவரோடு,***
***விருப்பொடு களிக்கும் மெய்ம்மை***
***ஏத்து அவை இசைக்கும், செம் பொன்***
***மண்டபம் இனிதின் எய்தான்,***
***ஒத்து அவை, உலகத்து எங்கும்***
***உள்ளவை, உணர்ந்தார் உள்ளம்***
***பூத்தவை, வடிவை ஒப்பான், -***
***சிற்றவை கோயில் புக்கான்.***

***ஒத்து அவை -*** *மறைகளையும்;* ***உலகத்து எங்கும் உள்ளவை -*** *உலகு எங்கும்இருக்கும் அறிவு நூல்களையும்;* ***உணர்ந்தார் உள்ளம் பூத்தவை -*** *நன்கு உணர்ந்தஞானிகளின் நெஞ்சத்தில் தோன்றுவனவாகிய; இராமபிரான்;* ***வேத்தவை -*** *அரசர் கூட்டம்;* ***முனிவரோடு -*** *முனிவர்களுடனே கூடி;* ***விருப்பொடு களிக்கும் -*** *அன்புடன்மகிழ்கின்ற;* ***மெய்ம்மை ஏத்து அவை இசைக்கும் -*** *உண்மையான கீர்த்திகளைப் பாடுகின்ற;* ***செம் பொன் மண்டபம் -*** *சிறந்த பொன்னால் ஆகிய மண்டபத்தினுள்ளே;* ***இனிதின் எய்தான் -*** *இனிமையாகப் புகாதவனாகி;* ***சிற்றவை கோயில் புக்கான் -*** *சிறிய தாயாகிய கைகேயியினுடைய மாளிகையில் புகுந்தான்.*

*அரசரும் முனிவரும் தன் கீர்த்தியைப் பாடிக்கொண்டிருக்கும் விழாமண்டபத்தில் நுழையாமல்இராமன் கைகேயியின் மாளிகையில் புகுந்தான். உலகத்து எங்கும் உள்ளவை - ஆறு அங்கங்கள், மீமாம்சை, புராணங்கள், தரும சாத்திரங்கள்முதலியன.*
***105***

***1596. புக்கவன் தன்னை நோக்கி,***
***புரவலர், முனிவர், யாரும்,***
***'தக்கதே நினைந்தான்; தாதை***
***தாமரைச் சரணம் சூடி,***
***திக்கினை நிமிர்ந்த கோலச்***
***செங்கதிர்ச் செல்வன் ஏய்ந்த***
***மிக்கு உயர் மகுடம், சூட்டச்***
***சூடுதல் விழுமிது' என்றார்.***

***புரவலர் முனிவர் யாரும் -*** *அரசர்களும், முனிவர்களும் மற்றுள்ள எல்லோரும்;* ***புக்கவன் தன்னை நோக்கி -*** *கைகேயியின் மாளிகையில் எல்லோரும்;* ***புக்கவன் தன்னைநோக்கி -*** *கைகேயின் மாளிகையில் புகுந்த இராமபிரானைக் கண்டு;* ***'தக்கதேநினைந்தான் -*** *இராமன் தகுதியான செயலையே எண்ணினான்;* ***தாதை தாமரைச் சரணம் சூடி -*** *தன் தந்தையின் தாமரை மலர் போலும் திருவடிகளை முன்னதாக வணங்கி;* ***திக்கினில்நிமிர்ந்த கோலச் செங்கதிர் -*** *எல்லாத் திசைகளிலும்*

*உயர்ந்து தோன்றுகிறதுவடிவுபடைத்த செந்நிறக் கதிர்களைச் செல்வமாக உடைய சூரியன் தொடங்கி; **ஏய்ந்த மிக்குஉயர் மகுடம் -** அணிந்த மிக உயர்ந்த கிரீடத்தை; **சூட்ட -** நூல்முறைப்படி அணிவிக்க; **சூடுதல் விழுமிது என்றார் -** தான் அணிந்துகொள்வது சிறந்தது என்றார்.*

*விழா மண்டபத்தில் இருந்தோர் முடிசூடுவதற்கு முன்னே இராமன் தந்தையை வணங்கி வாழ்த்துப்பெறப்போகிறான் என்று கருதி அவனைப் பாராட்டினர். தாமரைச் சரணம் - உவமத்தொகை.* ***106***

*இராமபிரான் கைகேயியைச் சந்தித்தல்*

***1597. ஆயன நிகழும் வேலை,***
***அண்ணலும் அயர்ந்து தேறாத்***
***தூயவன் இருந்த சூழல்***
***துருவினன் வருதல் நோக்கி,***
***'நாயகன் உரையான் வாயால்;***
***நான் இது பகர்வென்' என்னா,***
***தாய் என நினைவான் முன்னே***
***கூற்று எனத் தமியள் வந்தாள்.***

*__ஆயன நிகழும் வேலை -__ அப்படிப்பட்டவை நடந்துகொண்டிருக்கும் வேளையில்; **அண்ணலும் -** இராமபிரானும்; **அயர்ந்து தேறா -** முதலில் மனம் சோர்ந்து பின்னர்த் தெளிவுற்று; **தூயவன் இருந்த சூழல் -** நல்லவனானதயரதன் இருந்த இடத்தை; **துருவினன் வருதல் நோக்கி -** தேடி வருவதைப் பார்த்து; **நாயகன் வாயால் உரையான் -** கணவன் தன் வாயால் சொல்ல மாட்டான்; **நான் இதுபகர்வேன் என்னா-** நானே இதனைச் சொல்லுவேன்' என்று எண்ணிக் கொண்டு; **தாய் என நினைவான் முன்னே -** தன்னைத் தாய் என்று கருதும் இராமபிரான் முன்னே; **கூற்று என -** எமன் போல; **தமியள் வந்தாள் -** நிகரற்ற கொடுமைக்காரியான கைகேயி வந்தாள்.*

*அன்பு பொழியும் தாய் என்று கருதுபவன் முன்னே துன்பு தரும் எமன் போல வந்தாள் என்க. 'வாயால்' என்று வேண்டாது கூறினார். இராமனுக்கு நன்மை பயப்பனவற்றையே சொல்லிப் பழகியவாய் என்று அறிவித்தற்கு. இது என்றது. அவள் பெற்ற இருவரங்களைத் தெரிவித்தலைச் சுட்டியது.* ***107***

*இராமபிரான் கைகேயியை வணங்குதல்*

***1598. வந்தவள் தன்னைச் சென்னி***
***மண் உற வணங்கி, வாசச்***
***சிந்துரப் பவளச் செவ்வாய்***
***செங்கையின் புதைத்து, மற்றைச்***
***சுந்தரத் தடக் கை தானை***
***மடக்குறத் துவண்டு நின்றான்-***

*அந்தி வந்து அடைந்த தாயைக்*
*கண்ட ஆன் கன்றின் அன்னான்.*

***அந்தி வந்து அடைந்த** - மாலைப்பொழுதில் வந்து சேர்ந்த; **தாயைக் கண்ட ஆன்கன்று அன்னான்-** தாய்ப்பசுவைக் கண்ட பசுவின் கன்றைப் போன்ற இராபிரான்; **வந்தவள் தன்னை -** தன் முன்னே வந்த அக்கைகேயியை; **சென்னி மண் உற வணங்கி -** நெற்றி தரையில் பொருந்த விழுந்து வணங்கி; **வாசச் சிந்துரப் பவளச் செவ்வாய்-** மணம் வீசுவதும் சிந்தூரத்தையும் பவளத்தையும் போன்ற சிவந்த வாயை; **செங் கையின்புதைத்து -** சிவந்த (வலக்) கையால் பொத்திக்கொண்டு; **மற்றைச் சுந்தரத் தடக் கை -** மற்றொன்றாகிய அழகுபொருந்திய பெரிய இடக் கையானது; **தானை மடக்குற -** ஆடையைமடக்கிக்கொள்ள; **துவண்டு நின்றான் -** வணங்கி நின்றான்.*

*இப்பாட்டு இராமபிரானுடைய அடக்கத்தைக் காட்டுகிறது. அடக்கம் என்பது உயர்ந்தோர்முன்பணிந்த மொழியும், தணிந்த நடையும், தாளை மடக்கலும், வாய் புதைத்தலும், தலைதாழ்த்திநிற்றலும் கொண்டு அடங்கியொழுகுதலாம். இராமபிரான் அடக்கத்திற்கு விளக்கம் தருவதுபோல நிற்றல் போற்றி மகிழத்தக்கது. சென்னி ஈண்டு இலக்கணையாய நெற்றியைக் குறித்தது. இன உருபுபொருளில் வந்தது.*
*108 கூற்றம் அன்ன கைகேயி கூற்று*

*1599. நின்றவன்தன்னை நோக்கி,*
*இரும்பினால் இயன்ற நெஞ்சின்*
*கொன்று உழல் கூற்றம் என்னும்*
*பெயர்இன்றிக் கொடுமை பூண்டாள்,*
*'இன்று எனக்கு உணர்த்தல் ஆவது*
*ஏயதே என்னின், ஆகும்:*
*ஒன்று உனக்கு உந்தை, மைந்த!*
*உரைப்பது ஓர் உரை உண்டு' என்றாள்.*

***இரும்பினால் இயன்ற நெஞ்சின்-** இரும்பினால் ஆகிய மனத்தோடு; **கொன்று உழல்கூற்றம் என்னும் பெயர் இன்றி -** உயிர்களைக் கொன்று திரியும் எமன் என்னும்பெயர்மட்டும் இல்லாமல்; **கொடுமை பூண்டாள் -** அவனுடைய கொடுந்தன்மையைமேற்கொண்டவளாகிய கைகேயி; **'மைந்த** - மகனே; **உந்தை உனக்கு உரைப்பது -** உன் தந்தை உனக்குச் சொல்வதாகிய; **ஓர் உரை ஒன்று உண்டு -** சொல் ஒன்று உள்ளது; **இன்று எனக்கு உணர்த்தல் ஆவது ஏயது என்னில் -** இப்பொழுது எனக்கு (உன்னிடம் அதைச்)சொல்வது பொருத்தமானது என்று நீ கருதினால்; **ஆகும் என்றாள் -** நான் அதனைத்தெரிவிக்கலாம் என்றாள்.*

*கைகேயி தான் சொல்லப்போவது இன்னாத சொல்லாதலின் அதனை விரையக் கூறாது, இராமனுடையஇசைவு பெற்றுத் தெரிவிக்க எண்ணி நயமாகப் பேசுகிறாள். இது கைகேயியின் வஞ்சக மனத்தைக்காட்டுகிறது. 109*

*இராமனின் பணிவுரை*

***1600.  ‘எந்தையே ஏவ, நீரே***
***உரைசெய இயைவது உண்டேல்,***
***உய்ந்தனென் அடியேன்; என்னின்***
***பிறந்தவர் உளரோ? வாழி!***
***வந்தது, என் தவத்தின் ஆய***
***வரு பயன்; மற்று ஒன்று உண்டோ?***
***தந்தையும், தாயும், நீரே;***
***தலைநின்றேன்; பணிமின்’ என்றான்.***

**‘எந்தையே ஏவ -** *என் தந்தையாரே கட்டளைவிட;* **நீரே உரை செய இயைவது உண்டேல்-** *(அதனை) நீரே தெரிவிக்க இசைவதானால்;* **அடியேன் உய்ந்தனென் -** *நான்ஈடேறிவிட்டேன்;* **என்னின் பிறந்தவர் உளரோ -** *என்னைச் காட்டிலும் (மேன்மைஅடையும்படி) பிறந்தவர் வேறொருவர் இருக்கின்றாரோ? (இல்லை);* **என் தவத்தின் ஆய பயன் வந்தது -** *என் முன்னைத் தவத்தால் உண்டாகிய பயன் வந்துவிட்டது;* **வரு பயன் மற்று ஒன்று உண்டோ? -** *இதனினும் சிறந்ததாக வரக்கூடிய நற்பயன் பிறிதொன்று உள்ளதோ? (இல்லை);* **தந்தையும்தாயும் நீரே -** *எனக்கு நன்மையானவற்றைச் செய்யும் தகப்பனும், இனிமையானவற்றைச்செய்யும் தாயும் நீரே ஆவீர்;* **தலைநின்றேன் பணிமின் என்றான் -** *நீர்சொல்லப்போவதைத் தலைமேற் கொண்டு நின்றேன் கட்டளையிடுங்கள்;’* **என்றான் -.**

*இதனால் தாய் தந்தையரிடம் இராமன் காட்டிய மரியாதை புலப்படுகிறது. நீரே - பிரிநிலைஏகாரம். வாழி - முன்னிலை அசை. தலைநின்றேன் - கால வழுவமைதி; தெளிவுபற்றிஎதிர்காலம் இறந்த காலமாயிற்று. பயன் - இடைநிலை விளக்காக நின்று முன்னும் பின்னும் இயைந்தது.* ***110***

*கைகேயி தெரிவித்த அரச கட்டளை*

***1601.  ‘ “ஆழி சூழ் உலகம் எல்லாம்***
***பரதனே ஆள, நீ போய்த்***
***தாழ் இருஞ் சடைகள் தாங்கி,***
***தாங்க அருந் தவம் மேற்கொண்டு,***
***பூழி வெங் கானம் நண்ணி,***
***புண்ணியத் துறைகள் ஆடி,***
***ஏழ் - இரண்டு ஆண்டின் வா” என்று,***
***இயம்பினன் அரசன்’ என்றாள்.***

**‘ஆழி சூழ் உலகம் எல்லாம் -** *கடலால் சூழப்பட்ட உலகம் முழுவதையும்;* **பரதனே ஆள-** *பரதனே முடிசூடி ஆண்டுகொண்டிருக்க;* **நீபோய் -** *நீ நாட்டை விட்டுச் சென்று;* **தாழ் இருஞ் சடைகள் தாங்கி -** *தொங்குகின்ற பெரிய சடைகளைத் தாங்கிக்கொண்டு;* **தாங்க அருந் தவம் மேற்கொண்டு -** *தாங்குவதற்கரிய தவத்தை ஏற்று;* **பூழி வெம் கானம் நண்ணி** *- புழுதி நிறைந்த கொடிய காட்டை அடைந்து;* **புண்ணியத் துறைகள் ஆடி -** *புண்ணியத் தீர்த்தங்களில் நீராடி;* **ஏழ் இரண்டு ஆண்டின் வா என்று -**

*பதினான்குஆண்டுகள் கழித்த பின்பு திரும்பி வருவாய் என்று;* ***அரசன் இயம்பினன் என்றாள் -*** *அரசன்கொன்னான் என்றாள்.*

*இது, கைகேயியின் மனத்தையும் அவள் பேச்சின் நயத்தையும் காட்டுகிறது. பரதனே என்பதில்உள்ள பிரிநிலை ஏகாரம் அவள் ஆசையைக் காட்டுகிறது. தாழ்இருஞ் சடை தாங்குதல், தவம் மேற்கொள்ளல், கானம் சேர்தல், புண்ணியத் துறைகள் ஆடுதல் முதலிய நற்பயன்கள் கிட்டவேஅரசன் இவ்வாறு பணித்தான் என்று கூறித் தான் வரங்கேட்டதை மறைத்தலின் அவளது வஞ்சகம்தெரிகிறது. பதினான்கு ஆண்டுகள் என்னாது 'ஏழ் இரண்டு ஆண்டு' என்று சுருக்கிக் கூறுதல் அவளது கரவுப் பேச்சைப் புலப்படுத்துகிறது. தான் பழியற்றவள் என்பதைக் காட்டுவதற்காக 'இயம்பினன்அரசன்' என்றாள். மேலும் தந்தை என்னாது அரசன் கூறினான் என்பதால் அரசு ஆணை இது மீறுதற்கு அரிது என்பதைச் சுட்டினாள்.* ***111***

இராமனது தோற்றப் பொலிவு

***1602. இப் பொழுது, எம்ம னோரால்***
***இயம்புதற்கு எளிதே? - யாரும்***
***செப்ப அருங் குணத்து இராமன்***
***திருமுகச் செவ்வி நோக்கின்;***
***ஒப்பதே முன்பு பின்பு;***
***அவ் வாசகம் உணரக் கேட்ட***
***அப் பொழுது அலர்ந்த செந்தா***
***மரையினை வென்றது அம்மா!***

***யாரும் செப்ப அருங் குணத்து இராமன் -*** *எவராலும் சொல்லுதற்கரியநற்பண்புகளையுடைய இராமபிரானது;* **திருமுகச் செவ்லி நோக்கின் -** *திருமுகத்தின் அழகைப்பார்த்தால்;* **எம்மனோரால் இயம்புதற்கு எளிதே -** *(அது) எம்மைப் போன்றவர்களால்சொல்லுவதற்கு எளிதோ? (அன்று);* **முன்பு பின்பு ஒப்பதே -** *கைகேயி சொன்னவற்றைக் கேட்பதற்கு முன்பும் அவற்றைக் கேட்டதற்குப் பின்பும் செந்தாமரையைப் போன்றிருந்தது;* ***அவ்வாசகம் உணரக் கேட்ட அப்பொழுது -*** *அந்தச் சொற்களைத் தெரியும்படி கேட்ட அந்தச்சொற்களைத் தெரியும்படி கேட்ட அந்தச் சமயத்தில்;* ***அலர்ந்த செந்தாமரையினை -*** *மலர்ந்த செந்தாமரை மலரினை;* **வென்றது -** *வென்றுவிட்டது.*

*கைகேயியின் கொடி சொற்கள் இராமனைத் துன்புறுத்தாமல் இன்புறுத்தியதால் அப்பொழுது அவன்முகம் தாமரையின் அழகை வென்றது என்பதாம். எளிதே - ஏகாரம் எதிர்மறை. அம்மா - வியப்புஇடைச்சொல். இதனோடு, "மெய்த் திருப்பதம் மேவு" என்ற போதினம் "இத் திருக் துறத்துஏகு" என்ற போதினும், சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை, ஒத்திருக்கும் முகத்தினைஉன்னுவாள்" (5088) என்னும் சுந்தர காண்டப் பாடல் ஒப்பு நோக்கத்தக்கது.* ***112***

***1603. தெருளுடை மனத்து மன்ன***
***ஏவலின் திறம்ப அஞ்சி,***
***இருளுடை உலகம் தாங்கும்***

**இன்னலுக்கு இயைந்து நின்றான்,**
**உருளுடைச் சகடம் பூண்ட,**
**உடையவன் உய்த்த கார் ஏறு**
**அருளுடை ஒருவன் நீக்க**
**அப் பிணி அவிழ்ந்தது ஒத்தான்.**

**தெருள் உடை மனத்து -** தெளிவு பொருந்திய நெஞ்சினையுடைய; **மன்னன் ஏவலின்திறம்ப அஞ்சி-** தயரத மன்னனின் கட்டளையிலிருந்து மாறுபடுவதற்குப் பயந்து; **இருள்உடை உலகம் தாங்கும் -** துன்ப இருள் நிறைந்த உலகத்தைத் தாங்குகின்ற; **இன்னலுக்குஇயைந்து நின்றான் -** துன்பத்திற்கு ஒருப்பட்டு நின்றவனாகிய இராமன்; **உருள் உடைச்சகடம் பூண்ட -** சக்கரத்தையுடைய வண்டியில பூட்டப்பட்ட; **உடையவன் உய்த்த கார் ஏறு -** உடையவனாலே செலுத்தப்பட்ட கரிய காளையானது; **அருள் உடை ஒருவன் நீக்க -** கருணையையுடைய ஒருவன் வண்டியிற் பூட்டிய பூட்டினை அவிழ்த்து விட; **அப் பிணி அவிழ்ந்ததுஒத்தான் -** அப் பிணிப்பிலிருந்து விடுபட்டதைப் போல ஆனான்.

அரசபாரத்தை வண்டியாகவும், அதனைச் சுமப்பவனை வண்டியிற் பூட்டிய காளையாகவும் கூறுதல்மரபாதலால், அரசச் சுமையை நீங்கிய இராமன் வண்டிச் சுமையை நீங்கிய எருதுபோல வருத்தம்நீங்கி இருந்தனன் என்றவாறு. இஃது உவமை அணி. சகடம் - அரசாட்சி; உடையவன் - தயரதன்;கார் ஏறு - இராமன் இருள் - இடத்து நிகழ் பொருளின் தன்மை இடத்தின்மேல் ஏற்றிஉரைக்கப்பட்டது. நின்றான் - வினையாலணையும் பெயர். 113

கைகேயியினிடம் இராமன் விடை கொள்ளுதல்

**1604. ‘மன்னவன் பணி அன்றாகின்,**
**நும் பணி மறுப்பெனோ? என்**
**பின்னவன் பெற்ற செல்வம்**
**அடியனேன் பெற்றது அன்றோ?**
**என் இனி உறுதி அப்பால்?**
**இப் பணி தலைமேல் கொண்டேன்;**
**மின் ஒளிர் கானம் இன்றே**
**போகின்றேன்; விடையும் கொண்டேன்.’**

**‘மன்னவன் பணி அன்று ஆகின் -** அரசன் கட்டளை அன்று என்றாலும்; **நும் பணிமறுப்பெனோ -** நமது கட்டளையை யான் செய்யமாட்டேன் என்பேனோ?; **என் பின்னவன்பெற்ற செல்வம் -** என் தம்பி பரதன் அடைந்த பேறு; **அடியனேன் பெற்றது அன்றோ -** நான் அடைந்தது அன்றோ?; **அப்பால் என் இனி உறுதி -** இதற்குப் புறம்பான நன்மை வேறுயாது?; **இப் பணி தலைமேல் கொண்டேன் -** இக்கட்டளையைத் தலையின்மேல்ஏற்றுக்கொண்டேன்; **மின் ஒளிர் கானம் -** மின்னல் போல வெயிலொளி வீசும்காட்டிற்கு; **இன்றே போகின்றேன் -** இப்பொழுதே போகின்றேன்; **விடையும்கொண்டேன் -** நும்மிடம் விடையும் பெற்றுக்கொண்டேன்.

*அரசன் கட்டளையிட வேண்டும் என்பதில்லை; நமது கட்டளையே போதும். கானகம் செல்வேன்என்றான் இராமன். 'மன்னவன் பணி அன்று ஆகின்' என்பதில் உம்மை தொக்கது. விடையும் கொண்டேன் - விரைவு பற்றி இறந்த காலத்தால்கூறப்பட்டது; கால வழுவமைதி.* ***114***

*இராமன் கோசலையின் மாளிகை புகுதல்*

***1605. என்று கொண்டு இனைய கூறி,***
***அடி இணை இறைஞ்சி, மீட்டும்,***
***தன் துணைத் தாதை பாதம் அத்***
***திசை நோக்கித் தாழ்ந்து,***
***பொன் திணி போதினாளும்,***
***பூமியும், புலம்பி நைய,***
***குன்றினும் உயர்ந்த தோளான்***
***கோசலை கோயில் புக்கான்.***

***குன்றினும் உயர்ந்த தோளான் -*** *மலையினும் சிறந்த தோள்களையுடைய இராமபிரான்;* ***என்று கொண்டு இனைய கூறி -*** *என்று விடைகொண்டு இத்தகையவற்றைச் சொல்லி;* ***மீட்டும் அடி இணை இறைஞ்சி -*** *மீண்டும் கைகேயியின் கால்களில் விழுந்து வணங்கி;* ***தன் தந்தை துணைப் பாதம் -*** *தன் தகப்பனாராகிய தயரதன் அடியிணையை;* ***அத் திசைநோக்கிதாழ்ந்து -*** *அத்திக்கு நோக்கி வணக்கம் செய்து;* ***பொன்திணி போதினாளும் -*** *பொற்றாமைரைப் பூவில் வீற்றிருக்கும் திருமடந்தையும்;* ***பூமியும் -*** *மண்மடந்தையும்;* ***புலம்பி நைய -*** *தனிமைத் துயரால் வருந்தி அழ;* ***கோசலை கோயில் புக்கான் -*** *(அங்கிருந்து புறப்பட்டுக்) கோசலையின் மாளிகையைச் சேர்ந்தான்.*

*பெரியோர்களைக் கண்டவுடன் வணங்குவதேயன்றிப் பிரியும்போதும் வணங்குதல் முறையாகலின்,இராமன் கைகேயியை மீண்டும் வணங்கிச் சென்றான். தந்தையைக் காண முடியாமையின் அவன் இருக்கும்திசை நோக்கி வணங்கினான். தான் வனம் செல்வதனைத் தெரிவிக்கவும், அதனால் தயரதனுக்குஉண்டாகும் பிரிவுத் துயரைத் துடைக்குமாறு வேண்டவும் தன் தாய் கோசலை இல்லம் சென்றான்என்க. புலம்பு - தனிமை. புக்கான் - 'புகு' என்னும் பகுதி இரட்டித்துக் காலங்காட்டிற்று.* ***115***

## நகர் நீங்கு படலம்

தயரதன்பால் கைகேயி கொண்ட வரத்தால் இராமன் காட்டிற்குச் செல்ல அயோத்தி நகரைவிட்டு நீங்கிச் செல்வதைச் சொல்லும் பகுதி ஆதலின் நகர் நீங்கு படலம் எனப் பெயர்பெற்றது.

இனி, இராமன் காடு செல்லும்பொழுது அயோத்தி நகர மக்கள் அனைவரும் அவனுடனே சென்றதாகக்கூறுதலின் நகரமே நீங்குகிற படலம் என நயப்பொருள் உரைக்கவும் பெறும்.

கைகேயி வரத்தால் காடுசெல்லப் புக்க இராமன் தன் தாய் கோசலையிடம் விடைபெறச்செல்கிறான். செய்தி அறிந்த கோசலை வருத்தம் உற, அவளை இராமன் தேற்றுகிறான். 'வனத்திற்கு யானும் உடன் வருவேன்' என்ற கோசலையைத் தடுத்துப் பேசுகிறான். பின்னர்இராமன் சுமித்திரை மாளிகைக்குச் செல்கிறான். கோசலை இராமன் வனம் புகுவதைத் தடுக்கத்தசரதன்பால் செல்கிறாள். தசரதன் சோகநிலை கண்டு கோசலை வருந்துகிறாள். கைகேயி மூலம்வசிட்டன் நிகழ்ந்ததை அறிகிறான். தயரதனைத் தேற்றி, வசிட்டன் கைகேயிக்கு அறிவுரை கூற, அவள் மறுத்து மொழிய, அவளைக் கடிந்து பேசுகிறான். தசரதன் 'கைகேயி என் தாரம் அல்லள், பரதன் உரிமைக்கு ஆகான்' எனப் பேசுகிறான். தயரதன் மேலும் வருந்த, வசிட்டன் அவனைத்தேற்றி அகல்கிறான். கணவன் நிலை கண்டு வருந்துகிற கோசலையிடம் தயரதன் தன் பழைய சாபவரலாற்றைக் கூறுகிறான்.

வசிட்டன் அரசவை சேர்ந்து நிகழ்ந்தவற்றைக் கூறுகிறான். இராமன் காடு செல்வது கேட்டமக்கள் துயரம் அடைகிறார்கள். இலக்குவன் சீற்றம் அடைகிறான்; போர்க்கோலம்பூணுகிறான். இலக்குவனுடன் இராமன் உரையாடிச் சீற்றம் தணிக்கிறான். இருவரும் சுமித்திரைஅரண்மனையை அடைகின்றனர். அங்கே கைகேயி மூலம் வந்த மரவுரியை இலக்குவன் பெற்றுத் தன் தாயைவணங்க, அவளும் அவனுக்கு அறிவுரை கூறுகிறாள். இராமன் தடுத்தும் வணங்க, அவளும் அவனுக்கு அறிவுரைகூறுகிறாள். இராமன் தடுத்தும் கேளாது இலக்குவன் உடல் புறப்படுகிறான். வசிட்டன் இராமனைக்கான் ஏகாது தடுக்க முயல்கிறான். இராமன் மறுத்துப் புறப்படுகிறான். மக்கள் துயரம்மேலிடப்பெறுகிறார்கள் அரசன் தேவியர் அழுகிறார்கள், இராமன் தன் அரண்மனை செல்கிறான். இராமனைக் கண்டார் வருந்துகின்றனர். நகர் பொலிவழிகிறது. இராமன் சீதையைக் காண்கிறான். அவள் நடுக்கம் அடைகிறாள். செய்தி அறிந்த சீதை 'கானகத்துக்கு யானும் உடன்வருவேன்' என்கிறாள். இராமன் தடுக்கவும் கேளாது மரவுரி உடுத்துப் புறப்படுகிறாள். இராமன்,சீதை, இலக்குவன் மூவரும் புறப்படுகிறார்கள், நகர மாந்தர் அனைவரும் இராமனைப் பின் தொடர்ந்து அயோத்தி நகரை நீங்கிக் காடு நோக்கிச் செல்கின்றனர். இராமன் தாயரைக்கும்பிட்டு மன்னனைத் தேற்றுமாறு கூறி, அவர்கள் ஆசி பெற்றுத் தம்பியோடும், மனைவியோடும் தேற் ஏறிச் செல்கிறான். இச்செய்திகள்இப்படலத்துக்கண் கூறப்பெறுகின்றன.

கோசலை இராமன் உரையாடல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

*1606.* ***குழைக்கின்ற கவரி இன்றி,***
***கொற்ற வெண்குடையும் இன்றி,***
***இழைக்கின்ற விதி முன் செல்ல,***
***தருமம் பின் இரங்கி ஏக,***
***'மழைக்குன்றம் அனையான் மௌலி***
***கவித்தனன் வரும்' என்று என்று***
***தழைக்கின்ற உள்ளத்து அன்னாள்முன்,***
***ஒரு தமியன் சென்றான்.***

***'மழைக்குன்றம் அனையான் -*** *மேகத்தால் மூடப்பெற்ற மலையை ஒத்தவனாகிய இராமன்;* ***மௌலி கவித்தனன் வரும்' என்று என்று -*** *மகுடம் சூடிக்கொண்டு வருவான் என்று நினைத்துநினைத்து;* ***தழைக்கின்ற உள்ளத்து அன்னாள் முன் -*** *மகிழ்ச்சியால் செழித்தமனம் உடையவளாகிய அக்கோசலையின் முன்பு;* ***குழைக்கின்ற கவரி இன்றி -*** *பக்கங்களில்வீசுகின்ற வெண்சாமரை இல்லாமல்;* ***கொற்ற வெண்குடையும் இன்றி -*** *வெண் கொற்றக்குடையும் இல்லாமல்;* ***இழைக்கின்ற விதி முன் செல்ல -*** *நன்மை தீமைகளை மெல்ல மெல்லச்செல்லச் செல்லக் காட்டி நடத்துகின்ற விதி முன்னே அழைத்துச் செல்ல;* ***தருமம் பின்இரங்கி ஏக-*** *அறக்கடவுள் வருந்திப் பின்னே தொடர்ந்து வர;* ***ஒரு தமியன் சென்றான்-*** *தன்னந் தனியனாய்ச் சென்றான்.*

*அரசராவார் முன்னர்ச் சாமரை வீச, பின்னர் வெண்கொற்றக் குடைபிடிக்க வருவர் ஆதலின் தன் மகனும் அவ்வாறு மகுடம் சூடி வருவான் என்று தாய்கோசலை எண்ணி மகிழ்ந்திருந்தாள். அவனோ அவள் கண்ணுக்குத் தன்னந் தனியனாய் வருகிறான். ஆயினும், அவனுக்கு முன்னால் விதி செல்கிறது. பின்னால் தருமம் இரங்கி அழுதுகொண்டே வருகிறதுசாமரையும் குடையும் போல என்கிறார் கவிஞர்.*

*விதி நிகழ்வுகள் முன்தெரிவதில்லை. நிகழ நிகழத்தான் தெரியும் ஆதலின், 'இழைக்கின்றவிதி' என்றது அரிய சொல்லாட்சி. கோலம் போடுகிற போது போடப் போடவே கோல வடிவுபெறுதல் போலவே விதியும் தன் வேலையை நிகர்த்தும்.*
***1***

*1607.* ***'புனைந்திலன் மௌலி; குஞ்சி***
***மஞ்சனப் புனித நீரால்***
***நனைந்திலன்; என்கொல்?' என்னும்***
***ஐயத்தாள் நளின பாதம்.***
***வனைந்த பொன் கழற்கால் வீரன்***
***வணங்கலும், குழைந்து வாழ்த்தி,***
***'நினைந்தது என்? இடையூறு உண்டோ***
***நெடு முடி புனைதற்கு?' என்றாள்.***

***'மௌலி புனைந்திலன் -*** *மகுடம் சூடவில்லை;* ***குஞ்சி -*** *தலைமுடி;* ***மஞ்சனப் புனித நீரால் நனைந்திலன் -*** *அபிடேகமாகிய தூய நதிகளின் தண்ணீரால் நனையப்பெற்றான்இல்லை;* ***என்கொல்?' -*** *என்ன காரணம்;* ***என்னும் ஐயத்தாள் -***

*என்கின்ற சந்தேகத்தை உடையவளாக இருக்கின்ற கோசலைத்தாயின்;* ***நளின பாதம் -*** *தாமரையாகிய அடிகளை;* ***வனைந்த பொன் கழற்கால் வீரன் வணங்கலும் -*** *பொன்னாற்செய்யப்பெற்ற வீரக்கழல் அணிந்த இராமன் வணங்கிய அளவில்;* ***குழைந்து வாழ்த்தி -*** *மனம் உருகி ஆசி கூறி;* ***'நினைந்தது என்?' -*** *சக்கரவர்த்தி எண்ணிய செயல்என்னாயிற்று;* ***நெடுமுடி புனைதற்கு இடையூறு உண்டோ? -*** *உயர்ந்த மகுடத்தைச் சூடுதற்குஏதேனும் தடை உளதோ;'* ***என்றாள் -*** *என்று கேட்டாள்.*

*குஞ்சி - ஆடவர் தலைமுடி. மகனை முதல் வாழ்த்தினாள், பின்னர் வினவினாள் என்பதுஅறியற்பாலது.* *2*

*கலிவிருத்தம்*

***1608. மங்கை அம் மொழி கூறலும், மானவன்***
***செங் கை கூப்பி, 'நின் காதல் திரு மகன்,***
***பங்கம் இல் குணத்து எம்பி, பரதனே,***
***துங்க மா முடி சூடுகின்றான்' என்றான்.***

***மங்கை -*** *கோசலை;* ***அம்மொழி கூறலும் -*** *'நெடுமுடி புனைதற்கு இடையூறுஉண்டோ?' என்ற அந்த வார்த்தையைச் சொல்லிய உடன்;* ***மானவன் -*** *பெருமை குறையாதஇராமன்;* ***செங்கை கூப்பி -*** *(தாயைச்) சிவந்த கைகளைக் கூப்பித் தொழுது;* ***'நின்காதல் திருமகன் -*** *உன்னுடைய அன்பிற்குரிய சிறந்த புதல்வன்;* ***பங்கம் இல் குணத்து எம்பி -*** *குற்றமற்ற குணநலன்களை உடைய என் தம்பி;* ***பரதனே -; துங்க மாமுடி சூடுகின்றான்' -*** *பரிசுத்தமான சிறந்த முடியைச் சூடப்போகிறான்;'* ***என்றான்***

*தாயிடத்துக் கூறுகின்றான் ஆதலின், அவள் வேற்றுமை இன்றிஉணர வேண்டி முன்னதாகவே 'நின்காதல் திருமகன்' 'பங்கம் இல் குணத்து எம்பி' என்றெல்லாம்இராமன் எடுத்துக் கூறினான். பரதன் என்ற சொல்லுக்கு நாட்டைப் பரிப்பவன்' தாங்குபவன்என்பது பொருள். அப்பெயர்க்கேற்ப அவன் ஆட்சி உரிமை எய்தியது உணர்ந்து இன்புறற்குரியது.* *3*

***1609. 'முறைமை அன்று என்பது ஒன்று***
***உண்டு; மும்மையின்***
***நிறை குணத்தவன்;***
***நின்னினும் நல்லனால்;***
***குறைவு இலன்' எனக்***
***கூறினள் - நால்வர்க்கும்***
***மறு இல் அன்பினில்,***
***வேற்றுமை மாற்றினாள்.***

***நால்வர்க்கும் -*** *இராமலக்குமண பரத சத்துருக்கனர்களாகிய நால்வரிடத்தும்;* ***மறு இல் அன்பினில் -*** *குற்றம் அற்ற அன்பு செலுத்துவதில்;* ***வேற்றுமை மாற்றினாள் -*** *வேறுபாட்டை நீக்கி ஒரே தன்மையளாய் உள்ள கோசலை;* ***'முறைமை அன்று என்பது***

***ஒன்று உண்டு*** - *மூத்தவன் இருக்கும் போது இளையவன் அரசாளுவது முறைமை அன்று என்ற ஒரு குறை உண்டு;* ***மும்மையின்நிறை குணத்தவன் -*** *மூன்று மடங்கு எல்லாரினும் மேம்பட்டு நிறைந்த குணத்தினை உடையவன்;* ***நின்னினும் நல்லன் -*** *உன்னையும்விட நல்லவன்;* ***குறைவு இலன் -*** *கல்வி, இளமை, வீரம், குணம் முதலிய யாவற்றாலும் யாதொரு குறைவும் இல்லாதவன்;'* ***எனக்கூறினாள் -*** *என்று சொன்னாள்.*

*கைகேயியின் அன்பு பெரிதும் இராமனுக்கும், கோசலையின் அன்பு பெரிதும் பரதனுக்கும்அமைந்துள்ளதை இக்காவிய ஓட்டத்தில் காணலாகும். 'நின்னினும் நல்லன்' என்பதைப் பின் வரும்எண்ணில் கோடி இராமர்கள் என்னினும், அண்ணல் நின் அருளுக்கு அருகாவரோ' என்ற (10181.) கோசலைக் கூற்றை ஒப்பு நோக்கி உணர்க.*
***4***

## *1610. என்று, பின்னரும், ' மன்னவன் ஏவியது*
## *அன்று எனாமை, மகனே! உனக்கு அறன்;*
## *நன்று, நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து,*
## *ஒன்றி வாழுதி, ஊழி பல' என்றாள்.*

***என்று -*** *என்று கூறி;* ***பின்னரும் -*** *பிறகும்;* ***' மகனே! -*** *இராமகனே;* ***மன்னவன் ஏவியது -*** *சக்கரவர்த்தி ஆணையிட்டது எதுவாயினும்;* ***அன்றுஎனாமை -*** *நீதியன்று என்று மறுக்காமல் அப்படியே ஏற்றுச் செய்வது;* ***உனக்கு அறன் -*** *உனக்குரிய தருமம் ஆகும்;* ***நன்று -*** *நல்லது;* ***நீ - ; நும்பிக்கு -*** *உன்தம்பியாகிய பரதனுக்கு;* ***நானிலம் கொடுத்து -*** *இவ்வுலகை ஆளும் உரிமையைத் தந்து; (அவனுடன்)* ***ஊழி பல -*** *பல நெடுங்காலங்கள்;* ***ஒன்றி வாழுதி -*** *ஒன்றுபட்டுவாழ்வாயாக;' என்றாள்-.*

*தந்தை சொல்லை மகன் மறுக்கவும் கூடுதல் உலகியல், ஆயினும் அரசன் ஆணை மீறமுடியாதது.ஆகையால் அதுபற்றித் 'தந்தை ஏவியது' என்று கூறாமல், 'மன்னவன் ஏவியது' என்று கோசலை கூறினாள் என்க. 'ஏவினன் அரசன்' (1601) என முன்னும்வந்தது. 'மூத்தவனுக்கு அரசு உரியது' என்ற கருத்தில் உள்ளவள் கோசலை ஆதலின், 'நும்பிக்குநானிலம் நீ கொடுத்து' என்று கூறினாள். 'ஆல்' உரையசை.*
***5***

## *1611. தாய் உரைத்த சொல் கேட்டுத் தழைக்கின்ற*
## *தூய சிந்தை அத் தோம் இல் குணத்தினான்,*
## *'நாயகன், எனை நல் நெறி உய்ப்பதற்கு*
## *ஏயது உண்டு, ஓர் பணி' என்று இயம்பினான்.*

***தாய் உரைத்த சொல் கேட்டு -*** *தாயாகிய கோசலை கூறிய சொற்களைக் கேட்டு;* ***தழைக்கின்ற -*** *மகிழ்ச்சி அடைகின்ற;* ***தூய சிந்தை-*** *தூய்மையான மனம் உடைய;* ***அத் தோம் இல் குணத்தினான் -*** *அந்தக் குற்றம் இல்லாத குணத்தை உடைய இராமன்; (அவளைநோக்கி)* ***'நாயகன்*** *- தயரதச் சக்கரவர்த்தி;* ***எனை நல்நெறி உய்ப்பதற்கு -*** *என்னை நல்ல வழியில் செலுத்துவதற்கு;* ***ஏயது -*** *ஏவிய;* ***ஓர் பணி உண்டு' -*** *ஒரு கட்டளை உள்ளது;* ***என்று இயம்பினான் -*** *என்று சொன்னான்.*

*கானகம் ஏகச் சொன்னான் என்று முதலிற் கூறாமல் 'நன்னெறி உய்ப்பதற்கு' என்று கூறியது தாயின் மனத்தைத் திடப்படுத்தக் கூறியதாக அமைந்து அழகு செய்கிறது. இங்கம் தந்தைஎன்னாமல் 'சக்கரவர்த்தி' என்னும் பொருளில் 'நாயகன்' என்றது காண்க. பரதனைப் பற்றிக்கோசலை கூறிய சொற்கள் இராமனை மகிழ்ச்சியில் ஆழ்த்தின என்பது இராமனின் குண அழகைமேலும் ஒளிவிடச் செய்வதாம்.*
***6***

***1612. "ஈண்டு உரைத்த பணி என்னை" என்றவட்கு.***
***' "ஆண்டு ஓர் ஏழினொடு ஏழ், அகன் கானிடை,***
***மாண்ட மா தவத்தோருடன் வைகி, பின்,***
***மீண்டு நீ வரல் வேண்டும்" என்றான்' என்றான்.***

***'ஈண்டு** - இவ்விடத்தில்; **உரைத்த** - (சக்கரவர்த்தி உனக்குச்) சொல்லிய; **பணி என்னை'** - கட்டளை யாது; **என்றவட்கு** - என்று கேட்டகோசலைக்கு; **ஓர் ஏழினோடு ஏழ் ஆண்டு** - ஒரு பதினான்கு ஆண்டுக் காலம்; **அகன்கானிடை** - அகன்ற காட்டிடத்தில்; **மாண்ட** - மாட்சிமை பொருந்திய; **மாதவத்தோருடன்** - முனிவர்களுடன்; **வைகி** - தங்கி; **பின்** - பிறகு; **நீ மீண்டு வரல் வேண்டும்** - நீ திரும்பி வருதல் வேண்டும்; **என்றாள்'** - என்று கூறினான்; **என்றான் -.***

*கோசலை வருந்தாதிருக்கக் 'காட்டிற்கு அனுப்பி விட்டான்'என்று கூறாமல், முனிவர்களுடன் தங்கித் திரும்பிவருதல் வேண்டும் என்று நாயகன் பணித்தான்என்ற இராமன் சொல்திறம் போற்றுதற்குரியது. ஈண்டு - முன்னிலையிடத்தின் கண் வந்தது.*
*7 கோசலை துயரம்*

***1613. ஆங்கு, அவ் வாசகம் என்னும் அனல், குழை***
***தூங்கு தன் செவியில் தொடராமுனம்,***
***ஏங்கினாள்; இளைத்தாள்; திகைத்தாள்; மனம்***
***வீங்கினாள்; விம்மினாள்; விழுந்தாள் அரோ.***

***ஆங்கு** - அப்பொழுது; **அவ் வாசகம் என்னும் அனல்** - (இராமன் காடு செல்லவேண்டும் என்று தயரதன் கூறிய) அந்த வார்த்தை என்கிற நெருப்பு; **குழை தூங்கு தன் செவியில்தொடராமுனம்** - காதணி அசைகின்ற தன்னுடைய காதுகளில் வந்து விழுதற்கு முன்னமே (கோசலை); **ஏங்கினாள்; இளைத்தாள்; திகைத்தாள்** - இரங்கி, மெலிந்து, தடுமாறி; **மனம்வீங்கினாள்; விம்மினாள்; விழுந்தாள்** - மனம் வீங்கி, வருந்தி, மயக்கமுற்றுக்கீழே விழுந்தாள்.*

*'வாசகம் என்னும் அனல்' என்பது, 'ஊர் எனப்படுவது உறையூர்' என்றார்போல வாசகத்தின்கொடுமை உணர்த்தி நின்றது. நெருப்புச் சேர்த்தாரைச் சுடும், இவ்வாசகம் சேராமுன்னமே சுடும்தன்மை படைத்தது என்பதாம். தூங்குதல் - தொங்கதல்; காதில் இறுக அணிவது தோடு; தொங்க அணிவது குழை; தொங்கூட்டம் என்று இவ்வணியைக் கூறுவர். 'அரோ' ஈற்றசை.* ***8***

***1614. 'வஞ்சமோ, மகனே! உனை, "மா நிலம்***
***தஞ்சம் ஆக நீ தாங்கு" என்ற வாசம்?***

***நஞ்சமோ! இனி, நான் உயிர் வாழ்வெனோ?***
***அஞ்சம்; அஞ்சும்; என் ஆர் உயிர் அஞ்சுமால்!'***

***'மகனே! - ; உனை 'மாநிலம் தஞ்சம் ஆக நீ தாங்கு' என்ற வாசகம்*** - *உன்னைநோக்கி (தசரத சக்கரவர்த்தி) நீ இந்தப் பூமியைப் பற்றுக்கோடாக இருந்து காப்பாற்றுவாயாக என்று சொல்லிய வார்த்தை;* ***வஞ்சமோ? -*** *வஞ்சனையோ?;* ***நஞ்சமோ? -*** *விடம் போலக் கொடியதோ?;* ***நான் இனி உயிர் வாழ்வெனோ? -*** *நான்இனிமேல் உயிர்வாழ மாட்டுவேனோ?;* ***என் ஆர் உயிர் அஞ்சும் அஞ்சும் அஞ்சும் -*** *என் அரிய உயிர் மிகவும் பயப்படும்.'*

*அரசாளச் சொல்லியிராவிட்டால் காடு போகவும் நேர்ந்திராது என்ற கணிப்பால் கோசலை'வாசகம் வஞ்சமோ' என்றாள். 'தஞ்சம் இவ் உலகம் நீ தாங்குவாய் என' இத்தொடர் பரதனைநோக்கி வசிட்டன் கூறியதாகப் பின்னரும் வருதல் (2255.) அறிக. முன் இனிதாகிடும்நஞ்சுகூடப் பின் கொல்லும், அதுபோல், 'அரசாள்க' என்றது இனிதாகிப் பின்னர்க் 'காடு ஏகு'என முடிதலின் 'நஞ்சமோ' எனக் கூறினாள் - 'ஆல்' ஈற்றசை. 'அஞ்சும்' என்பதுஅடுக்கு.* ***9***

***1615. கையைக் கையின் நெரிக்கும்; தன் காதலன்***
***வைகும் ஆல் இலை அன்ன வயிற்றினைப***
***பெய் வளைத் தளிரால் பிசையும்; புகை***
***வெய்து உயிர்க்கும்; விழுங்கும், புழுங்குமால்.***

*(கோசலை),* ***கையைக் கையின் நெரிக்கும் -*** *கையை மற்றொரு கையால் நெரிப்பாள்;* ***தன்காதலன் வைகும் -*** *தன் மகளாகிய இராமன் தங்கிய;* ***ஆல் இலை அன்ன வயிற்றினைப்பெய் வளைத்தளிரால் பிசையும் -*** *ஆல் இலை போன்ற தன் வயிற்றைத் தனது வளையல் அணிந்ததளிர் போன்ற கைகளால் விசைவாள்;* ***புகை வெய்து உயிர்க்கும் -*** *உள் நெருப்பால்புகையோடு கூடிய வெப்ப மூச்சு விடுவாள்;* ***விழுங்கும் -*** *அவ் உயிர்ப்பை அடக்குவாள்;* ***புழுங்கும் -*** *வெம்பிப் போவாள்.*

*கோசலையின் துயரத் துடிப்பின் மெய்ப்பாடுகள் இங்கு அடுக்கியுள்ளன. 'ஆல்'ஈற்றசை.* ***10***

***1616. 'நன்று மன்னன் கருணை' எனா நகும்;***
***நின்ற மைந்தனை நோக்கி, 'நெடுஞ் சுரத்து***
***என்று போவது? எனா எழும்; இன் உயிர்***
***பொன்றும் போது உற்றது உற்றனள் போலுமே.***

***'மன்னன் கருணை நன்று' எனா நகும் -*** *'சக்கரவர்த்தி உன்பால் காட்டிய இரக்கம்மிக நன்றாய் இருந்தது' என்று சிரிப்பாள்;* ***நின்ற மைந்தனை நோக்கி -*** *தன் எதிரேநின்ற இராமனைப் பார்த்து;* ***' நெடுஞ் சுரத்துப் போவது என்று' எனா எழும் -*** *நீண்டகாட்டு வழியில் போவது எப்போது என்று சொல்லி எழுந்திருப்பாள்;* ***இன் உயிர் பொன்றும்போது உற்றது -*** *இனிய உயிர் போகும்போது அடைகின்ற மரண வேதனையை;* ***உற்றனள் போலும் -*** *தற்போது அடைந்தாள் போல ஆனாள்.*

*தானும் உடன் செல்வாள்போல எழுவாளாயினள் என்க. சாவுத்துயர் அடைந்தாள் என்பதாம். 'ஏ' ஈற்றசை.* ***11***

## *1617. 'அன்பு இழைத்த மனத்து அரசற்கு, நீ*
## *என் பிழைத்தனை?' என்று, நின்று ஏங்குமால் -*
## *முன்பு இழைத்த வறுமையின் முற்றினோர்,*
## *பொன் பிழைக்கப் புலம்பினர் போலவே.*

***'அன்பு இழைத்த மனத்து அரசற்கு -*** *உன்னிடத்துப் பேரன்பு செய்துவந்து மனத்தை உடையதயரத சக்கரவர்த்திக்கு;* ***நீ என் பிழைத்தனை' -*** *நீ என்ன தவறு செய்தாய்;'* ***என்றுநின்று -*** *என்று சொல்லிக் கொண்டு;* ***முன்பு இழைத்த வறுமையின் முற்றினோர் -*** *முற்பிறவியிற் செய்த வினையால் இப்போது வறுமையில் வாடியவர்கள்;* ***பொன் பிழைக்க -*** *எதிர்பாராமல்கிடைத்த பொன்னானது தவறியதால்;* ***புலம்பினர் போல-*** *புலம்பியவர்களைப் போல;* ***ஏங்கும் -*** *வருந்து வாள் ஆயினள்.*

*பெறாது பெற்ற செல்வமாகிய புத்திரப் பேற்றைப் இப்போது காட்டிற்கு அனுப்பி இழக்கநேர்ந்தபடியால் வறுமையில் வாடியவர் பொன்னைப் பெற்று அதுவும் கைநழுவியபோது வருந்துவது போலவருந்தினாள் என உவமை கூறினார் - பொன் தவறிப்போக இருக்க அதைத் திரும்ப இறுக்க மூடிப்பிடிப்பவர் எனவும், பொன் தவறிப் போகப் பொதிந்தனர் - அதாவது முகத்தை மூடிக்கொண்டுஅழுபவர் போல எனவும், பொன் தவறிப்போகும்படி வைத்திருந்தவர் போல எனவும் பொருள் கூறுவது உண்டு, ஏற்பது கொள்க. 'ஆல்', 'ஏ' அசைகள்.* ***12***

## *1618. 'அறம் எனக்கு இலையோ?' எனும்; 'ஆவி நைந்து*
## *இறவு அடுத்தது என், தெய்வதங்காள்?' எனும்;*
## *பிற உரைப்பது என்? கன்று பிரிந்துழிக்*
## *கறவை ஒப்பக் கரைந்து கலங்கினாள்.*

***'எனக்கு அறம் இலையோ' எனும் -*** *எனக்குத் தருமம் துணையாக இல்லையோ என்பாள்;* ***தெய்வதங்காள் -*** *தெய்வங்களே!;* ***ஆவி நைந்து இறவு அடுத்தது என்? எனும் -*** *உயிர்தேய்ந்து சாகும்படி வந்து நேர்ந்தது என்ன காரணம் என்பாள்;* ***பிற உரைப்பது என்? -*** *கோசலையின் அப்போதைய மனநிலைக்கு வேறு உவமை சொல்வது என்ன பயனுடைத்து;* ***கன்று பிரிந்துழி கறவை ஒப்பக் கரைந்து கலங்கினாள் -*** *தன் கன்று பிரிந்த பொழுது கறவை ஒப்பக்பசு துடிப்பதுபோல மனம் உருகித் கலங்கித் துடித்தாள்.*

*'இற அடுத்தது' என அமைத்து 'வ' கரத்தை உடம்படுமெய்யாக்குதலே நன்று. 'இற' செயவென்வாய்பாட்டு வினையெச்சம். மரத்துப் போன பகக்கன்று பிரிந்துழிக் கலங்காது ஆதலின் 'கறவை'என்னும் சொல்லால் ஈன்றணிமை உணர்த்தினார் என்க.* ***13***

### இராமன் கோசலைக்கு ஆறுதல் கூறுதல்

## *1619. இத் திறத்தின் இடர் உறுவாள்தனைக்*
## *கைத்தலத்தின் எடுத்து, 'அருங் கற்பினோய்*

***பொய்த் திறத்தினன் ஆக்குதியோ? - புகல் -***
***மெய்த் திறத்து நம் வேந்தனை, நீ?' என்றான்.***

*(இராமன்)* ***இத் திறத்தின் இடர் உறுவாள்தனை -*** *இவ்வாறு சொல்லிப் புலம்பித்துன்பம் அடைகின்றவளாகிய கோசலைத் தாயை;* ***கைத்தலத்தின் -*** *கைகளால் தூக்கி;* ***'அருங் கற்பினோய்! -*** *பெண் டிர்க்கு அரிய கற்பினை உடையவளே;* ***மெய்த்திறத்துத நம் வேந்தனை-*** *உண்மைக் கூற்றில்ஒரு சிறிதும் பிறழாத நம் சக்கரவர்த்தியை;* ***நீ பொய்த் திறத்தினன் ஆக்குதியோ? புகல்' -*** *சொன்ன சொல்லை மாற்றிக் கொள்ளும் பொய்த்தன்மை உடையவனாக நீசெய்துவிடுவாயோ, சொல்வாயாக;* ***என்றான் -.***

*சொன்னதைச் சொன்னவாறே நிறைவேற்றல் சத்தியமாம். 'வனம்போகு' என்ற பின்னர் வனம்போகாமல் இருந்தால் அரசன் சத்தியம் பாழாகும் என்பதைத் தாய்க்கு நினைவுறுத்தி, நாயகனைச்சத்தியத்தில் காப்பது நாயகியின் கற்புநலம் என்பதைக் குறிப்பால் புலப்படுத்தி'அருங்கற்பினோய்' என்று தாயை விளித்தானாம்.*
***14***

***1620. பொற்புறுத்தன, மெய்ம்மை பொதிந்தன,***
***சொற்புறுத்தற்கு உரியன, சொல்லினான் -***
***கற்பு உறுத்திய கற்பு உடையாள்தனை***
***வற்புறுத்தி, மனம் கொளத் தேற்றுவான்.***

***கற்பு உறுத்திய கற்பு உடையாள்தனை -*** *கற்பு என்பது இப்படிப் பட்டது என்பதைஉலகிற்கு உணர்த்தி நிறுத்திய பெருங் கற்பினை உடைய கோசலையை;* ***வற்புறுத்தி -*** *மனஉறுதிப்படுத்தி;* ***மனம் கொள -*** *மனத்தில் படும்படி;* ***தேற்றுவான் -*** *தெளியப்பண்ண வேண்டி;* ***பொற்ப உறுத்தன -*** *அழகு பொருந்தியனவும்;* ***மெய்ம்மை பொதிந்தன -*** *உண்மை நிரம்பியனவும்;* ***சொற்புறுத்தற்கு உரியன -*** *தாய்க்கு மகன் சொல்லுதற்குத் தகுந்தனவுமாகிய சொற்களைச்;* ***சொல்லினான் -*** *சொன்னான்.*

*கல்லின் தன்மை போல உறுதிப்பாடுடைய கற்பு என உரைப்பினும் அமையும். கற்பின் தன்மை உலகம் அறிய உணர்த்திய கற்பு என்பதைச் 'சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவேஎன்று (2061.) இராமன் சீதையை அழைப்பது கொண்டும் அறிக.* ***15***

***1621. 'சிறந்த தம்பி திரு உற, எந்தையை***
***மறுந்தும் பொய் இலன் ஆக்கி, வனத்திடை***
***உறைந்து தீரும் உறுதி பெற்றேன்; இதின்,***
***பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ?***

***'சிறந்த தம்பி திரு உற -*** *(என்னிலும்) சிறந்த தம்பியாகிய பரதன் அரசச்செல்வம் பெற;* ***எந்தையை -*** *என் தந்தையாகிய தயரதனை;* ***மறந்தும் பொய் இலன்ஆக்கி -*** *மறப்பினாலும் பொய் சொல்லாத சத்திய வாக்கினனாகச் செய்து;* ***வனத்திடை -*** *காட்டில்;* ***உறைந்து தீரும் உறுதி பெற்றேன் -*** *வசித்துத் திரும்பி வருகின்ற நன்மையைஅடைந்தேன்;* ***இதின் -*** *இதைக்காட்டிலும்;* ***யான் பிறந்து பெறும் பேறு***

***என்பது யாவதோ?' -*** *யான் பிறவி எடுத்துப் பெறுகின்ற பாக்கியம் என்பது வேறு என்ன இருக்கிறது; (இல்லை).*

*'பங்கம் இல் குணத்து எம்பி' என்றது (1608.) போல இங்கும் 'சிறந்த தம்பி' என்றதுகாண்க. 'யாவதோ' ஓகாரம் வினாப் பொருளில் வந்தது. இனி, யாவது என்பதே வினாவாதலின்,'ஓ' காரம் எதிர்மறை குறித்தது எனினும் ஆம்.*
***16***

***1622. 'விண்ணும் மண்ணும், இவ் வேலையும், மற்றும் வேறு***
***எண்ணும் பூதம் எலாம் அழிந்து ஏகினும்,***
***அண்ணல் ஏவல் மறுக்க, அடியனேற்கு***
***ஒண்ணுமோ? இதற்கு உள் அழியேல்' என்றான்.***

**'விண்ணும் -** *ஆகாயமும்;* **மண்ணும் -** *பூமியும்;* **இவ்வேலையும் -** *இந்தக் கடல்களும்;* ***மற்றும் வேறு எண்ணும் பூதம் எலாம்-*** *வேறாகிய தீ, காற்று முதலாகிய மூலப்பொருள்களும்;* ***அழிந்து ஏகினும் -*** *மாறுபட்டுக் கெட்டுப் போனாலும்;* ***அண்ணல் -*** *தயரதனது;* ***ஏவல் -*** *கட்டளையை;* ***மறுக்க -*** *மறுப்பதற்கு;* ***அடியனேற்கு ஒண்ணுமோ -*** *அடியேனுக்குத் தகுமோ;* **இதற்கு -;** ***உன் அழியேல்' -*** *(நீ) மனம் வருந்தாதே;'* ***என்றான் -.***

*'ஏகினும்' என்பது அவை நிலை கெடாமை உணர்த்தி நின்றது - தயரதன் கட்டளையை அவ்வாறேநிறைவேற்றுதலே தனக்குத் தகுதி என்றான் இராமன்.*
***17***

கோசலை வேண்டுகோள்

***1623. 'ஆகின், ஐய! அரசன்தன் ஆணையால்***
***ஏகல் என்பது யானும் உரைக்கிலென்;***
***சாகலா உயிர் தாங்க வல்லேனையும்,***
***போகின் நின்னொடும் கொண்டனை போகு' என்றான்.***

***'ஐய! -*** *இராமனே!;* ***ஆகின் -*** *அப்படியானால்;* ***அரசன்தன் ஆணையால் -*** *அரசன் இட்ட கட்டளை என்பதால்;* ***யானும் ஏகல் என்பது உரைக்கிலென் -*** *நானும் நீ வனம் போகாதே என்பதைச் சொல்லவில்லை;* ***போகின் -*** *(நீ) வனம் போவதாயின்;* ***சாகலா உயிர் தாங்க வல்லேனையும் -*** *சாகாத இவ்வியிரத் தூக்கமாட்டால் சுமக்கின்றவளாகிய என்னையும்;* ***நின்னொடும் கொண்டனை போகு' -*** *உன்னோடு அழைத்துக்கொண்டு போவாயாக;'* ***என்றான் -.***

*'அரசன் கட்டளையைக் குடிமகன் மறுத்தல் கூடாது; ஆகையால், அதை நான் மறுக்கவில்லை,உன்னைப் பிரிந்து உயிரைச் சுமந்து என்னால் வாழ முடியாது; உயிர்போகவும் போகாது; ஆகையால்உன்னோடு என்னையும் காட்டிற்கு அழைத்துச் செல்' என்றாள் கோசலை. 'பரதன் அரசளாளுதல்,இராமன் வனம்போதல்' என்ற இரண்டையும் கோசலை ஏற்றுக்கொள்ளச் செய்வதில் இராமன் வெற்றிஅடைந்தான் என்பது இதனால் போதரும்.* ***18***

*1624.* ***‘என்னை நீங்கி இடர்க் கடல் வைகுறும்***
***மன்னர் மன்னனை வற்புறுத்தாது, உடன்***
***துன்னு கானம் தொடரத் துணிவதோ?***
***அன்னையே! அறம் பார்க்கிலை ஆம்’ என்றான்.***

***‘அன்னையே!*** *- தாயே;* ***என்னை நீங்கி*** *- என்னைப் பிரிந்து;* ***இடர்க்கடல் வைகுறும்*** *- துன்பக்கடலில் தங்கியுள்ள;* ***மன்னர் மன்னனை*** *-சக்கரவர்த்தியை;* ***வற்புறுத்தாது*** *- மன உறுதி செய்து தைரியப்படுத்தாமல்;* ***உடன்*** *- என்னோடு;* ***துன்னு கானம்*** *- நெருங்கிய காட்டிற்கு;* ***தொடர*** *- பின்பற்றிவர;* ***துணிவதோ?*** *- மனத்தில் நிச்சயிப்பது தகுமோ;* ***அறம் பார்க்கிலை ஆம்!*** *- மனைவிக்குள்ள தருமத்தை ஆராய்ந்து கருதவில்லை போலும்;’* ***என்றான் -.***

*மனைவியின் தர்மம் கணவனைக் காத்தல். ‘தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற,சொற்காத்துச் சோர்விலாள் பெண்’ என்றார் வள்ளுவரும். (குறள். 56) இந்தப் பத்தினிதர்மத்தை இராமன் தன் தாய்க்கு நினைவு படுத்தினான்.*
***19***

*1625.* ***‘வரி வில் எம்பி இம் மண் அரசு ஆய், அவற்கு***
***உரிமை மா நிலம் உற்றபின், கொற்றவன்***
***திருவின் நீங்கித் தவம் செயும் நாள், உடன்,***
***அருமை நோன்புகள் ஆற்றுதி ஆம் அன்றே!***

***‘வரிவில் எம்பி*** *- கட்டமைந்த வில்லினை உடைய என்தம்பி பரதன்;* ***இம் மண்அரசு ஆய்*** *- இந்தக் கோசல நாட்டுக்கு அரசன் ஆகி; அவற்கு - அந்தப் பரதனுக்கு;* ***மாநிலம் உரிமை உற்றபின்*** *- பெரிய இராச்சியத்தின் உரிமை நிலைப்பட்ட பிறகு;* ***கொற்றவன்*** *- தயரதன்;* ***திருவின் நீங்கி*** *- அரச போக வாழ்க்கையிலிருந்துவிலகி;* ***தவம் செய்யும் நாள்*** *- தவம் செய்கின்ற காலத்தே;* ***உடன்*** *- அவனோடு சேர்ந்து;* ***அருமை நோன்புகள்*** *- செயற்கரிய விரதங்களை;* ***ஆற்றுதி ஆம்*** *- செய்வாயாக.’*

*வரத்தால் அரசன் ஆயினும், மக்கள் அவன் வழிப்படவும் அவன் ஆட்சி உறுதி பெறவும்சிலகாலம் செல்லுமாகலின், ‘மாநிலம் உரிமை உற்றபின்’ என்றான் இராமன். வானப்பிரந்தநிலையில் மனைவியை உடன்கொண்டு தவம் செய்தல் உண்டாதலின் உடன்சென்று அரிய விரதங்களைச்செய்க என்றானாம். ‘அன்று’, ‘ஏ’ அசைகள்.* *20*

*1626.* ***‘சித்தம் நீ திகைக்கின்றது என்? தேவரும்***
***ஒத்த மா தவம் செய்து உயர்ந்தார் அன்றே?***
***எத்தனைக்கு உள ஆண்டுகள்? ஈண்டு, அவை***
***பத்தும் நாலும் பகல் அலவோ?’ என்றான்.***

***‘நீ சித்தம் திகைக்கின்றது என்?*** *- தாயே, நீ மனம் தடுமாறுவது எதனால்;* ***தேவரும்*** *- தேவரும்;* ***ஒத்த*** *- தம் நிலைக்குப் பொருந்திய;* ***மாதவம் செய்து*** *- சிறந்த தவத்தைச் செய்து;* ***உணர்ந்தார் அன்றே?*** *- தம் நிலைக்கு மேலாகஉயர்ந்தார்கள் அல்லவா;*

***ஆண்டுகள் எத்தனைக்கு உள*** - *(நான் பிரிந்து செல்கிற)ஆண்டுகள் எவ்வளவு உள்ளன;* ***அவை பத்தும் நாலும் பகல் அல்லவோ? -*** *அந்தப் பதினான்குஆண்டுகளும், பதினான்கு நாள்கள் அல்லவா? (இதற்கு வருந்துவானேன்.)*

*'நான் காட்டிற் சென்று தவம் புரிந்து மேன்மை அடைய அல்லவா போகிறேன்! இதற்கு நீமனம் தடுமாறலாமா' என்று தாயைத் தேற்றினான். ஆண்டுகளை நாள்கள் என்று குறுக்கியது தேறுதல்வார்த்தை யாகும். "எண்ணிய சில நாளில் குறுகுதும்' என்று பின் (1984) குகனிடமும் இவ்வாறு கூறுதல் காண்க.* ***21***

## *1627. 'முன்னர், கோசிகன் என்னும் முனிவரன் -*
## *தன் அருள்தலை தாங்கிய விஞ்சையும்,*
## *பின்னர் எய்திய பேறும் பிழைத்தவோ?*
## *இன்னம் நன்று அவர் ஏயின செய்தலே.*

***'முன்னர் -*** *தந்தையார் விசுவாமித்திர முனிவனிடம் வேள்விகாக்க அனுப்பிக்கையடை கொடுத்த போது;* ***கோசிகன் என்னும் முனிவரன் -*** *விசுவாமித்திரனாகிய கௌகிசமுனிவனது;* ***அருள்தலை -*** *கருணையினால்;* ***தாங்கிய -*** *(நாங்கள்) பெற்ற;* ***விஞ்சையும் -*** *மந்திர வித்தைகளும்;* ***பின்னர் எய்திய பேறும் -*** *பிறகு அடைந்ததிருமணப் பேறும்;* ***பிழைத்தவோ? -*** *தவறியவோ;* ***அவர் ஏறிய செய்தல் -*** *வனம்சென்று அத்தகைய முனிவர்கள் ஏவிய காரியங்களைச் செய்து முடித்தல்;* ***இன்னம் நன்று -*** *இன்னமும் நல்லதையே தரும்.*

*விசுவாமித்திரனால் கிடைத்த விஞ்சை பலை, அதிபலை என்ற இரண்டு மந்திரங்கள். பின்புஎய்திய பேறு சீதா கல்யாணம், அடுத்துப் பரசுராமனது ஆற்றலை ஒடுக்கியதையும் சொல்லலாம்.மேலும், முனிவர்களுக்குத் தொண்டு செய்து வனத்தில் தங்குவதால் நலமே விளையும் என்றான்இராமன். 'ஏ' காரம் ஈற்றசை.*
***22***

## *1628. 'மா தவர்க்கு வழிபாடு இழைத்து, அரும்*
## *போதம் முற்றி, பொரு அரு விஞ்சைகள்*
## *ஏதம் அற்றன தாங்கி, இமையவர்*
## *காதல் பெற்று, இந் நகர் வரக் காண்டியால்,*

***'மாதவர்க்கு வழிபாடு இயற்றி -*** *சிறந்த முனிவர்களுக்குப் பணி விடைகளைச் செய்து;* ***அரும் போதம் முற்றி -*** *(அவரால்) பெறுதற்கு அரிய ஞானம் நிரம்பப் பெற்று;* ***பொருஅரு விஞ்சைகள் -*** *ஒப்பற்ற வித்தைகள்;* ***ஏதம் அற்றன -*** *குற்றம் இல்லாதனவற்றை;* ***தாங்கி -*** *பெற்று;* ***இமையவர் காதல் பெற்று -*** *தேவர்களின் அன்பை அடைந்து;* ***இந்நகர் வரக் காண்டி-*** *(யான்) இந்நகரத்துக்குத் திரும்பி வருதலைப் பார்ப்பாயாக.'*

*போதம் என்பது வீடுபேற்றிற்குரியதாகிய பரமஞானம். பின்னர் அகத்தியர் முதலியமுனிவர்களால் இவ் அரும் போதம் இராமனுக்குக் கிடைக்கிறது. இராமவணாதி வதத்தால்தேவர்களின் அன்பையும் இராமன் பெறுகிறான் என்பது*

*இங்கே குறிப்பிற் புலப்படும். 'ஆல்' ஈற்றசை. தேற்றம் என்பதும் பொருந்தும்.*
***23***

## *1629. 'மகர வேலை மண் தொட்ட, வண்டு ஆடு தார்ச்*
## *சகரர் தாதை பணி தலைநின்று, தம்*
## *புகர் இல் யாக்கையின் இன் உயிர் போக்கிய*
## *நிகர் இல் மாப் புகழ் நின்றது அன்றோ?' எனா.*

*'**மகர வேலை மண் தொட்ட -** சுறாமீன்களை உடைய கடலாற் சூழப்பெற்ற இப்பூமியைத்தோண்டிய; **வண்டு ஆடு தார்ச் சகரர் -** வண்டுகள் தேனுண்டு ஆடுகின்ற மாலை அணிந்த சகரபுத்திரர்கள்; **தாதை பணிதலை நின்று -** தம் தந்தை சொல்லைத் தம் தலைமீது கொண்டு சென்று; **தம் புகர் இல் யாக்கையின் இன் உயிர் போக்கிய -** தமது குற்றமற்றஉடம்பின்கண் உள்ள இனிய உயிரை இழந்ததனால் உண்டாகிய; **நிகர் இல் மார்புகழ் -** சமானம் இல்லாத பெரும்புகழ்; **நின்றது அன்றோ -** இவ் வுலகத்தில் இன்றும் நிலைபெற்றுள்ளது அல்லவா;' **எனா -** என்று சொல்லி.*

*ஒருவேளை தந்தையினது கட்டளையை மேற்கொண்டு வனம் சென்று உயிர் போமாயினும் அதுவும்பெரும்புகழையே தனக்குத் தரும் என்றான். சகரர் தந்தை கட்டளைப்படி வேள்விக் குதிரையை நாடிச்சென்று அதனாலேயே சாம்பலானார்கள். ஆயினம், அதுவே அவர்களுக்குப் பெரும் புகழைத் தந்தது என்பது கூறி, 'என் முன்னோர் தந்தை பணி கடவாமை போல யானும் அவ்வாறே நடத்தல் என் குலதருமம் அன்றோ' என்றான் இராமன். 'மண்ணில் மகர வேலை தொட்ட' என இயைத்துப் பூமியின் கடலைத் தோண்டிய எனப் பொருள் கூறுலும் ஒன்று. சகரரால் தோண்டப்பட்டது. ஆதலின் 'சாகரம்' எனக் கடலுக்குப் பெயர் ஆயிற்று. 'இவர் குலத்தோர் உவர்நீர்க், கடல்தொட்டார் எனின் வேறுஓர் கட்டுரையும் வேண்டுமோ' (644.) என்ற இடத்து இவ்வரலாற்றைக்காண்க. 24*

## *1630. 'மான் மறிக் கரத்தான் மழு ஏந்துவான்,*
## *தான் மறுத்திலன் தாதைசொல்; தாயையே.*
## *ஊன் அறக் குறைத்தான்; உரவோன் அருள்*
## *யான் மறுப்பது என்று எண்ணுவதோ?' என்றான்.*

*'**மான் மறிக் கரத்தான் -** மான் குட்டியைக் கையிலே ஏந்திய சிவ பெருமானடைய; **மழு -** கோடரிப் படையை; **ஏந்துவான் தான் -** சுமந்துள்ள பரசுராமன் ஆனவன்; **தாகை சொல் மறுத்திலன் -** தந்தையாகிய சமதக்கினியின் ஆணையை மறுக்கவில்லை; **தாயையே. ஊன் அறக் குறைத்தான்-** தன் தாயாகிய இரேணுகையைத் தந்தை கட்டளைப்படி உடம்புதுண்டாகும்படி வெட்டினான்; (அவ்வாறே) **உரவோன் -** தசரதனது; **அருள் -** ஆணையை; **யான் மறுப்பது என்று எண்ணுவதோ? -** நான் மறுப்பதாக நினைத்தலும் தகுமோ;' **என்றான்-.***

*'தாயையே வெட்டும்படி கூறிய தந்தையின் ஆணையை மீறாது அப்படியே மைந்தன் பரசுராமன்நிறைவேற்றினானாக, அவ்வளவு கொடிய ஆணை இடாது என் நலன் குறித்த ஆணையை இட்டுள்ள என் தந்தையை நான் மீறி நடத்தல் தகுதியோ' என்றான் இராமன். 'ஊ' என்பது தசை. அது 'ஊன்உளதுணை இங்கே ஆகபெயராய்*

*உடலை உணர்த்திற்று. குகப்படலத்து 'ஊன் உளதுணை நாயேன் உயிர் உள'என்ற இடத்தும் இவ்வாறே 'உடல்' எனப் பொருள்படுதல் காண்க. (1981.) "ஊனில் வாழ் உயிரே"என்ற திருவாய்மொழி (திவ்ய. 3031) யிலும் 'ஊன்' உடம்பு என்னும் பொருளில் வருதல் காண்க. இவ் வரலாற்றைப் பரசுராமப் படலம் கொண்டு அறிக. கும்பகருணன் வதைப் படலத்துள் (7415.)'அறத்தினை நோக்கி, ஈன்ற, தாய்வினை செய்ய அன்றோ கொன்றனன் தவத்தின் மிக்கான்' என்று பின்னும் இவ்வரலாறு பேசப்படுகிறது.*
***25***

*கோசலை மகனைக் கான் ஏகாது தடுக்கத் தயரதனிடம் சேறல்*

***1631. இத் திறத்த எனைப் பல வாசம்***
***உய்த்து உரைத்த மகன் உரை உட்கொளா,***
***'எத் திறத்தும் இறக்கும் இந் நாடு' எனா,***
***மெய்த் திறத்து விளங்கிழை உன்னுவாள்.***

***மெய்த் திறத்து விளங்கிழை** - சத்தியமாகிய அணிகலனை அணிந்த கோசலை; **இத்திறத்து எனைப் பல வாசகம் உய்த்து உரைத்த மகன் உரை** - மேற் கூறியவாறு பலவார்த்தைகளைக் கொண்டு வந்து சொல்லித் தேற்றிய இராமனது சொற்களை; **உட்கொளா** - மனத்தில் கொண்டு; **'எத் திறத்தும் இந்நாடு இறக்கும்' எனா** - எப்படியும் இவன்இந்நாட்டைக் கடந்து காடு செல்வான் என்று; **உன்னுவாள்** - மனத்தில் கருதுபவளாகி,*

*தடுக்கத் தயரதன்பால் சென்றாள் என்று அடுத்த செய்யுளில் முடியும். உன்னுவாள் - முற்றெச்சம். காடு செல்லாமல் தயரதன் மூலம் ஆணையை மாற்றலாம் என்பது கோசலைகருத்து.* ***26***

***1632. 'அவனி காவல் பரதனது ஆகுக;***
***இவன் இஞ்ஞாலம் இறந்து, இருங் கானிடைத்***
***தவன் நிலாவகை காப்பென், தகவினால்***
***புவனி நாதன்- தொழுது' என்று, போயினாள்.***

***'அவனி காவல் பரதனது ஆகுக** - இந்த உலகத்தை ஆளும் அரசாட்சி பரதனுடையதுஆகட்டும்; **இவன்** - இராமன்; **இஞ்ஞாலம் இறந்து** - இக் கோசல நாட்டைத்தாண்டி; **இருங் கானிடை** - பெரிய காட்டிடத்தே; **தவன் நிலாவகை** - தவத்தில்நில்லாதபடி; **தகவினால்** - நடுவு நிலைமையால்; **புவனி நாதன் தொழுது** - தயரதனைவணங்கி வேண்டி; **காப்பென்** - 'காப்பாற்றுவேன்; **என்று போயினாள்** - என்று (தயரதன் இருக்கும் கைகேயி அரண்மனைக்கு) சென்றாள்.*

*முறைப்படி அரசன்பால் வேண்டி அவன் இட்ட ஆணையே மாற்ற எண்ணுதலின் 'தகவினால்'என்றார். தவம், தவன் என்றமைந்தது ஈற்றுப் போலி.*
***27***

*இராமன் சுமித்திரை மாளிகை அடைதல்*

***1633. போகின்றாளைத் தொழுது, புரவலன்***
***ஆகம் மற்று அவள்தன்னையும் ஆற்றி, இச்***

***சோகம் தீர்ப்பவள்' என்று, சுமித்திரை***
***மேகம் தோய் தனிக் கோயிலை மேயினான்.***

*(இராமன்)* ***போகின்றானைத் தொழுது -*** *செல்கின்ற கோசலையை வணங்கி;* ***புரவலன்ஆகம் மற்று அவள் தன்னையும் -*** *தயரதனது உடம்பையும் கோசலையையும்;* ***ஆற்றி -*** *துன்பத்திலிருந்து ஆறுதல் அடையச் செய்து;* ***இச்சோகம் தீர்ப்பவள்' -*** *இந்தத் துயரநிலையை நீக்கக்கூடியவள்;* ***என்று -*** *எனக் கருதி;* ***சுமித்திரை -*** *சிற்றன்னையாகிய சுமித்திரையின்;* ***மேகம் தோய் தனிக்கோயிலை -*** *மேகம்தங்குகின்ற உயர்ந்த ஒப்பற்ற மாளிகையை;* ***மேயினான் -*** *அடைந்தான்.*

*'புரவலனது ஆகமாகிய மற்றவள்' எனவும் உரைப்பர். 'மன்னன் உயிர் அவள் உடல்'என்றார்.* ***28***

*கோசலை தயரதன் நிலை கண்டு புலம்புதல்*

***1634. நடந்த கோசலை, கேகய நாட்டு இறை***
***மடந்தை கோயிலை எய்தினள்; மன்னவன்***
***கிடந்த பார்மிசை வீழ்ந்தனள் - கெட்டு உயிர்***
***உடைத்த போழ்தின் உடல் விழுந்தென்னவே.***

***நடந்த கோசலை -*** *தயரதன் இருக்கும் இடத்துக்கு நடந்து சென்ற கோசலை;* ***கேகயநாட்டு இறை மடந்தை -*** *கேகய நாட்டு மன்னனுக்கு மகளாகிய கைகேயியின்;* ***கோயிலை -*** *மாளிகையை;* ***எய்தினள் -*** *அடைந்தாள்;* ***மன்னவன் கிடந்த பார்மிசை -*** *தயரதன்விழுந்து கிடக்கின்ற மண்ணில்;* ***உயிர் கெட்டு உடைந்த போழ்தின் -*** *உயிர் கெட்டுச்சிதறிய காலத்து;* ***உடல் விழுந்து என்னவே -*** *உடலானது கீழே விழுந்தாற் போல;* ***வீழ்ந்தனள் -*** *விழுந்தாள்.* ***29***

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***1635. 'பிறியார் பிரிவு ஏது?' என்னும்;***
***'பெரியோய் தகவோ!' என்னும்;***
***நெறியோ, அடியேன் நிலை?***
***நீ நினையா நினைவு ஏது?' என்னும்,***
***'வறியோர் தனமே!' என்னும்;***
***'தமியேன் வலியே!' என்னும்;***
***'அறிவோ; வினையோ?' என்னும்;***
***'அரசே! அரசே!' என்னும்.***

*(கோசலை தயரதன் நிலை கண்டு)* ***'பிறியார் பிரிவு எது?' என்னும் -*** *பிரியக்கூடாதவர்களுடைய பிரிவுக்குக் காரணம் என்ன என்பாள்;* ***பெரியோய்! தகவே' என்னும் -*** *பெருமை உடையவனே! இது உனக்குத் தகுதியோ என்பாள்;* ***நெறியோ, 'அடியேன்நிலை -*** *அடியோங்களாகிய எங்கள் தற்போதைய நிலை நீதியாகுமா?;* ***நீ நினையா நினைவுஏது' என்னும் -*** *இந்த நிலையை நீ நினையாமல் இருப்பது என்ன காரணம் என்பாள்;* ***'வறியோர் தனமே!' என்னும் -*** *வறுமையுற்றவர்களுக்குச்*

*செல்வமானவே என்பாள்;* ***'தமியேன் வலியே!' என்னும்*** *- தனியளான எனக்கு வலிமையான துணையே என்பாள்;* ***'அறிவோ,வினையோ' என்னும் -*** *இது உனக்கு அறிவு தானோ, அறிந்து செய்யாது ஊழ்வினையால்ஏற்பட்டதோ என்பாள்;* ***'அரசே! அரசே!' என்னும் -*** *மன்னனே மன்னனே என்றுபுலம்புவாள்.*

*'பிரியார்' என்பது எதுகை நோக்கி 'பிரியார்' என வல்லினமாயிற்று என்றும்பிரியாதவர்களாகிய நாம் இன்று பிரிய நேருமோ என்று கூறிக் கோசசலை அஞ்சினாள் ஆயிற்று.'அறிவு ஒலினையோ' என்ற ஆக்கி, அறிவு நீங்கினையோ என்று பொருள் உரைப்பதும் உண்டு, செய்யுளின் போக்கிற்குத் தனித்தனி 'அறிவோ,வினையோ' என உரைப்பதே சிறப்பாகும்.* ***30***

***1636. 'இருள் அற்றிட உற்று ஒளிரும்***
***இரவிக்கு எதிரும் திகிரி***
***உருளத் தனி உய்த்து, ஒரு கோல் நடையின்***
***கடை காண் உலகம்***
***பொருள் அற்றிட முற்றுறும்***
***அப் பகலில் புகுதற்கு என்றோ,***
***அருளக் கருதிற்று இதுவோ?***
***அரசர்க்கு அரசே!' என்னும்.***

***'அரசர்க்கு அரசே!' -*** *சக்கரவர்த்தியே;* ***இருள் அற்றிட உற்று ஒளிரும்இரவிக்கு -*** *இருள் ஒழியும்படி பொருந்தி விளங்குகின்ற சூரியனுக்கு;* ***எதிரும் திகிரி -*** *ஒப்பாகிய ஆணைச் சக்கரத்தை;* ***உருளத்தனி உய்த்து -*** *உலகெங்கும் செல்லும்படி ஏகசக்ராதிபதியாகச் செலுத்தி;* ***ஒரு கோல் நடையின் -*** *ஒப்பற்ற செங்கோல் செலுத்தப் படுதலின்;* ***கடைகாண் உலகம் -*** *யாதொரு இடையூரும் இன்றி முடிவு அழியும்படி;* ***முற்றுறும் அப்பகலில் -*** *முடிவடைகின்ற அந்த ஊழிக்காலத்தில்;* ***புகுதற்கு என்றோ அருளக்கருதிற்று -*** *செல்லும்படி நுழைதற்காகவோ நீ அருள்கொண்டு செய்யக் கருதிய செயல்;* ***இதுவோ? -*** *இதுதானோ;* ***என்னும் -*** *என்பாள்.*

*மக்களது வறுமை, அறியாமை இருளகல விளங்குதல், நாட்டின் எல்லா இடங்களிலும் செல்லுதல்ஆகியவற்றால் சூரியனுக்கு ஒப்பானது ஆணைச் சக்கரம் என்பதாம். உன் அரசாட்சியில் நலம்பெற்றஉலகம் பிரளயகாலத்து அழியை அடையக் கருதியோ இத்தகைய செயலைச் செய்யக் கருதியது என்றுதயரதனை நோக்கிப் புலம்பினள் கோசலை.* ***31***

***1637. 'திரை ஆர் கடல் சூழ் உலகின்***
***தவமே! திருவின் திருவே!***
***நிரை ஆர் கலையின் கடவே!***
***நெறி ஆர் மறையின் நிலையே!***
***கரையா அயர்வேன்; எனை, நீ,***
***கருணாலயனே! " என்?" என்று***
***உரையா இதுதான் அழகோ?***
***உலகு ஏழ் உடையாய்!' என்னும்.***

***'திரை ஆர் கடல்சூழ் உலகின் தவமே!*** - அலை பொருந்திய கடலாற் சூழப்பெற்றஉலகம் செய்த தவத்தின் பயனே; ***திருவின் திருவே!*** - செல்வங்களுக்கெல்லாம் மேலான செல்வமே; ***நிரை ஆர் கலையின் கடவே!*** - ஒழுங்குபொருந்திய கல்விக்கலையில் கடல் ஆனவனே; ***நெறி ஆர் மறையின் நிலையே!*** - நீதிபொருந்திய வேதத்தின் உண்மைப் பொருளே; ***கருணாலயனே!*** - அருட்கோயிலாக உள்ளவனே; ***உலகு ஏழ் உடையாய்!*** - ஏழ் உலகங்களையும் உடையவனே; ***கரையா அயர்வேன் எனை*** - மனம் உருகிச் சோர்வடைகின்ற என்னை; ***நீ என் என்று உரையா இதுதான் அழகோ'*** - நீஏன் வருந்துகிறாய் என்று ஆறுதல் கூறாது இப்படிக் கிடப்பதுதான் அழகாகுமோ; **என்னும்-**

*தன் மனைவிபடும் துயரத்தைக் கண்டுவைத்தும் எழுந்து அவளுக்கு ஆறுதல் சொல்லாது கணவன்கிடக்கின்ற நிலை கண்டு மனம் வருந்திப் புலம்பினாள். 32*

***1638. 'மின் நின்றனைய மேனி,***
***வெளிதாய்விட நின்றதுபோல்***
***உன்னும் தகைமைக்கு அடையா உறு நோய்***
***உறுகின்று உணரான்;***
***என் என்று உரையான்; என்னே?***
***இதுதான் யாது என்று அறியேன்;***
***மன்னன் தகைமை காண***
***வாராய்; மகனே!' என்னும்.***

***'மகனே!*** - இராமனே; ***மின் நின்றனைய மேனி*** - மின்னல் மறையாது ஒருபடித்தாக நின்றால் ஒத்த ஒளிவீசும் உடம்பு; ***வெறிதாய் விட நின்றது போல்*** - உள்ளே உயிரற்றுக் கிடப்பது போல; ***உன்னும் தகைமைக்கு அடையா உறுநோய்*** - நினைக்கும்தன்மைக்கும் வாராத பெரும் பிணியை; ***உறுகின்ற உணரான்*** - அடைகின்றதையும் உணர முடியாதவனாய்; ***என்என்று உரையான்*** - அழுகின்ற என்னைப் பார்த்து ஏன் புலம்புகிறாய் என்றும் சொல்லாதவனாய்உள்ளான் உன் தந்தை; ***என்னே!*** - என்ன காரணமோ; ***இதுதான் யாது என்று அறியேன்*** - இது எதனால் ஆகியது என்று அறியாதவளாக இருக்கின்றேன்; ***மன்னன் தகைமை காண*** - அரசனாய் தயரதனது நிலைமையைப் பார்க்க; ***வாராய்'*** - வருவாயாக; ***என்னும் -***

*உணர்வு இழந்து மூர்ச்சித்துக் கிடக்கிற மன்னனைப் பார்த்து அவன் நிலை காண வரும்படிமகனை அழைத்துப் புலம்பகிறாள் கோசலை. 33*

வசிட்டன் வருதல்

***1639. இவ்வாறு அழுவாள் இரியல்***
***குரல் சென்று இசையாமுன்னம்,***

***'ஒவ்வாது, ஒவ்வாது' என்னா,***
***ஒளிவாள் நிருபர், முனிவர்,***
***'அவ் ஆறு அறிவாய்' என்ன,***

**வந்தான் முனிவன்; அவனும்,**
**வெவ் வாள் அரசன் நிலை கண்டு,**
**'என் ஆம் விளைவு?' என்று உன்னா.**

***இவ்வாறு அழுவாள் இரியல் குரல்சென்று இசையாமுன்னம் -*** *இப்படிச் சொல்லிப்புலம்புகிற கோசலையின் கூக்குரல் போய் மன்னர்கள் கூடியிருக்கும் அவையை அடைந்த அளவில்;* ***ஒளிவாள் நிருபர், முனிவர்-*** *ஒளி பொருந்திய வாள் உடைய அரசர்களும் முனிவர்களும்;* ***'ஒவ்வாது ஒவ்வாது' என்னா -*** *இது இக்கால இயல்புக்குப் பொருந்தாது என்று தம்முள் கூறி;(வசிட்டனை நோக்கி);* ***அவ் ஆறு அறிவாய் என்ன -*** *இந்த அழுகையின் காரணத்தை உடனேசென்று அறிக என்று சொல்ல;* ***முனிவன் வந்தான் -*** *வசிட்ட முனிவன் அங்கு வந்து சேர்ந்தான்;* ***அவனும் -*** *வசிட்டனும்;* ***வெவ்வாள் அரசன் நிலை கண்டு-*** *கொடியவாளை உடைய தசரதன் நிலைமையைப் பார்த்து;* ***விளைவு என்னாம்' என்று உன்னா -*** *நடந்ததுஎன்னவோ என்று கருதி.*

*கைகேயி வரம் பெற்றது முதலிய நிகழ்வுகை அறியாதவன் வசிட்டன் ஆதலின், 'என்னாம்விளைவு' என்று கருதினான். இதன் முடிவு என்னாகுமோ? என்ற அஞ்சியதாகவும் கூறலாம். முடிசூட்டுவிழாவுக்குக் கூடிய மன்னர் முனிவர் காதில் அழுகைக்குரல் விழுந்தபடியால் அவர்கள் பதற்றம் அடைந்து 'ஒவ்வாது ஒவ்வாது' என்றனர். இது விரைசொல் அடுக்கு.* *34*

*வசிட்டன் கருதுதல்*

***1640.*** **'இறந்தான் அல்லன் அரசன்;**
**இறவாது ஒழிவான் அல்லன்;**
**மறந்தான் உணர்வு' என்று உன்னா,**
**'வன் கேகயர்கோன் மங்கை**
**துறந்தாள் துயரம் தன்னை;**
**துறவாது ஒழிவாள் இவளே;**
**பிறந்தார் பெயரும் தன்மை**
**பிறரால் அறிதற்கு எளிதோ,**

***'அரசன் இறந்தான் அல்லன் -*** *தசரத மன்னன் உண்மையில் இறப்பு அடையவில்லை;* ***இறவாது ஒழிவான் அல்லன் -*** *இனிச் சாவாமல் இருப்பவனும் இல்லை;* ***உணர்வு மறந்தான்' -*** *நினைவு இழந்து மூர்ச்சித்தான்;* ***என்று உன்னா -*** *என்று தன் மனத்தில் கருதி;* ***'வன் கேகயர் கோன் மங்கை துயரம் தன்னைத் துறந்தாள் -*** *வலிய கேகய நாட்டு அரசன் மகளாகிய கைகேயியோ துன்பம் இல்லாமல் இருக்கிறாள்;* ***இவளேதுறவாது ஒளிவாள் -*** *இக்கோசலையோ துன்பத்தால் விடாமல் அழுகிறாள்;* ***பிறந்தார்பெயரும் தன்மை -*** *உலகத்துப் பிறந்தவர்கள் நிலை வேறுபடுகின்ற இயல்பு;* ***பிறரால்அறிதற்கு எளிதோ?-*** *மற்றொருவரால் அறியக் கூடியதோ (இல்லை என்றபடி).*

*கைகேயி துன்பமற்றிருப்பதால் அவள் மனம் மாறியபடி கண்டு வசிட்டன் இவ்வாறு கூறினான்என்க. அரசன் பிரக்ஞை இழந்திருப்பதும், இனி நிச்சயம் இறந்து படுவான் என்பதும் உணர்ந்தவசிட்டன், அவ்விடத்தே கைகேயி துக்கமின்றி*

இருப்பதும், கோசலை வருந்திப் புலம்புவதும்கண்டு கைகேயி இந்நிலைக்குக் காரணமாயிருந்தல் வேண்டும் என உய்த்துணர்ந்து உலகிற்பிறந்தார் மனம் வேறுபடல் யாராலும் அறியமுடியாது. நேற்றுவரை மன்னன்பால் பெருங்காதலுடையகைகேயி இன்று அவன் மூர்ச்சிக்கவும் வருந்தாதுள்ளபடியால் யாருடைய மனம் எப்போது எப்படிமாறுபடும் என்பதை அறிய இயலாது என்று கருதி மேலும் கைகேயியை வினாவச் செல்கிறான் என்று அடுத்தசெய்யுளில் தொடருமி. அறுபதினாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக ஆட்சி நடத்திய மன்னவன் இறந்துபடும்நிலை கிட்டியது கண்டு 'பிறந்தார் பெயருந்தன்மை பிறரால் அறிதற்கெளிதோ' என்றான் எனலும்ஆம். இங்கே பிறந்தார் பெயர்தல் என்பது பிறந்தவர் இறத்தலாம்.
*35*

கைகேயி வசிட்டனிடம் நிகழ்ந்தவை கூறல்

**1641. என்னா உன்னா, முனிவன்,**
**'இடரால் அழிவாள் துயரம்**
**சொன்னாள் ஆகாள்' என, முன்**
**தொழு கேகயர்கோன் மகளை,**
**'அன்னாய்! உரையாய்; அரசன்**
**அயர்வான் நிலை என்?' என்ன,**
**தன்னால் நிகழ்ந்த தன்மை**
**தானே தெரியச் சொன்னாள்.**

**முனிவன் என்னா உன்னா** - வசிட்டன் இவ்வாறு கருதி; **'இடரால் அழிவாள்துயரம் சொன்னாள் ஆகாள்' என** - துன்பத்தால் வருந்துபவளாகிய கோசலை துயர்க்குரியகாரணத்தைச் சொல்லுதற்கு இயலாள் எனக் கருதி; **முன் தொழு கேகயர் கோன் மகளை** - தன்னை முன்வந்து வணங்குகின்ற கைகேயியை; **'அன்னாய்!** - தாயே; **அயர்வான் அரசன்நிலை என்? உரையாய்' என்ன** - மூர்ச்சித்துச் சோர்ந்துள்ள வனாகிய சக்கரவர்த்தியின்நிலைக்குக் காரணம் என்ன, சொல்வாயாக என்று கேட்க; **தன்னால் நிகழ்ந்த எல்லாம் தானேதெரியச் சொன்னாள்** - (அவள்) தன்னால் உண்டாகிய செயல்கள் எல்லாவற்றையும் தானே (முனிவனுக்கு) நன்கு விளங்கும்படி சொன்னாள். கோசலையால் சொல்ல இயலாது என்று கருதி, துயரற்றவளாக உள்ள கைகேயியை வினாவினான்வசிட்டன் என்க. அரசனது நிலைக்குக் காரணம் கைகேயியாக இருக்கலாம் என்னும் ஐயம் முனிவனுக்குஇருக்கலாம் அன்றி அவள்தான் என்னும் உறுதி முன் இல்லாமையால் அறிந்து வினாவினான் ஆகாமைஅறிக.
*36*

வசிட்டன் மன்னனைத் தெளிவித்தல்

**1642. சொற்றாள், சொல்லாமுன்னம்,**
**சுடர் வாள் அரசர்க்கு அரசை,**
**பொன் - தாமரை போல் கையால்,**
**பொடி சூழ் படிநின்று எழுவி,**
**'கற்றாய், அயரேல்; அவளே**
**தரும், நின் காதற்கு அரசசை;**

***எற்றே செயல் இன்று ஒழி நீ***
***என்று என்று இரவாநின்றான்.***

***சொற்றாள் -*** *(கைகேயி) சொன்னாள்;* ***சொல்லாமுன்னம் -*** *அவள் சொல்லிய அளவிலே (வசிட்டன்);* ***சுடர்வாள் அரசர்க்கு அரசை -*** *ஒளி பொருந்திய வாளைஉடைய சக்கரவர்த்தியை;* ***பொன் தாமரை போல் கையால் -*** *தன்னுடைய பொற்கமலம் போன்றகைகளால்;* ***பொடி சூழ் படி நின்ற எழுவி -*** *புழுதி சூழப்பெற்ற மண்ணிலிருந்து தூக்கி;* ***'கற்றாய்! அயரேல் -*** *எண்ணில் பல்நூல் ஆய்ந்து கடந்த அறிவாளனே, சோர்வடையாதே;* ***அவளே நின் காதற்கு அரசைத் தரும் -*** *அந்தக் கைகேயியை நின் அன்பு மகனாகிய இராமனுக்குஅரசாட்சியைத் தருவாள்;* ***செயல் எற்று? -*** *வருந்தும் செயல் எத்தன்மைத்து;* ***நீ இன்றுஒழி' -*** *நீ இவ்வருத்தத்தை இப்பொழுதே ஒழிப்பாயாக;* ***என்று என்று இரவா நின்றான் -*** *என்று பலமுறை சொல்லி வேண்டி நின்றான்.*

*துன்பம் வந்துழி வருந்தல் கற்றோர்க்கு அழகன்று என்பதால் 'கற்றாய்! அயரேல்' என்றான். காதலுக்கு (அன்புக்கு) உரியவனைக் 'காதல்' என்றே குறித்த ஆகுபெயர் நயம்உணர்க.* ***37***

***1643. சீதப் பனி நீர் அளவி,***
***திண் கால் உக்கம் மென் கால்***
***போதத்து அளவே தவழ்வித்து,***
***இன்சொல் புகலாநின்றான்;***
***ஓதக் கடல் நஞ்சு அனையாள்***
***உரை நஞ்சு ஒருவாறு அவிய,***
***காதல் புதல்வன் பெயரே***
***புகல்வான் உயிரும் கண்டான்***

*(இவ்வாறு வேண்டி மேலும்)* ***சீதப் பனிநீர் அளவி -*** *குளிர்ச்சியை உடைய பனிநீரைக்கலந்து;* ***திண்கால் உக்கம் -*** *வலிய கைப்பிடி உடைய விசிறியினது;* ***மென்கால் -*** *மெல்லிய காற்றை;* ***போதத்து அளவே தவழ்வித்து -*** *மூர்ச்சை தெளிந்து அறிவுண்டாகும்அளவில் நிகழச் செய்து;* ***இன்சொல் புகலாநின்றான் -*** *இனிய சொற்களைச்சொல்லுகின்றவன்;* ***ஓதக் கடல் நஞ்சு அனையாள் உரை நஞ்சு ஒரு வாறு அவிய -*** *கடலின்கண்எழுந்த விடம் போன்ற கைகேயியின் வரம் என்னும் வார்த்தையாகிய விடம் ஓரளவுக்கு நீங்க;* ***காதற் புதல்வன் -*** *அன்பு மகனாகிய இராமனது;* ***பெயரே புகல்வான் -*** *பெயரையேசொல்லிக் கொண்டிருக்கும் தயரதனது;* ***உயிரும் கண்டான் -*** *உயிரையும் பார்த்தான்.*

*முனிவன் மென்காற்று வீசி, இன்சொல், கூறி, சோகம், தணிவிக்க, சற்றே மூர்ச்சைதெளிந்து 'இராமா, இராமா' என்று பிதற்றுகின்ற தயரதனுக்கு உயிர்ப்பு நிலை வந்தது; அதுகண்டான் என்பதாம்.* ***38***

***1644. காணா, 'ஐயா! இனி, நீ***
***ஒழிவாய் கழி பேர் அவலம்;***
***ஆண் நாயகனே, இனி, நாடு***

***ஆள்வான்; இடையூறு உளதோ?***
***மாணா உரையாள், தானே***
***தரும்; மா மழையே அனையான்***
***பூணாது ஒழிவான் எனின், யாம்***
***உளமோ? பொன்றேல்' என்றான்.***

***காணா*** - *அரசன் மூர்ச்சை தெளிந்தது கன்டு;* ***'ஐயா! -*** *ஐயனே;* ***நீ இனிகழிபோர் அவலம் ஒழிவாய் -*** *நீ இனிமேல் இம்மிகப் பெரிய துன்பத்தை நீக்கிக்கொள்வாயாக;* ***ஆண் நாயகனே இனி நாடு ஆள்வான் -*** *புருஷோத்தமனாகிய இராமனே இனிஇந்நாட்டை ஆட்சி செய்வான்;* ***இடையூறு உளதோ? -*** *அதற்கு வேறு இடையூறு ஏதேனும் இருக்கின்றதா, இல்லை;* ***மாணா உரையாள் -*** *மாட்சியை இல்லாத வார்த்தையாகியவரத்தைக் கேட்ட கைகேயியானவள்;* ***தானே தரும் -*** *(அரசைத்) தானே இராமனக்குத்திருப்பித் தருவாள்;* ***மாமழையே அனையான் -*** *பெரிய மேகத்தை ஒத்தவனாகிய இராமன்;* ***பூணாது ஒழிவான் எனின் -*** *அரசை மீண்டும் மேற் கொள்ளாது போவானாயின்;* ***யாம் உளமோ?-*** *நாங்களும் இருக்கப் போகிறோமா;* ***பொன்றேல்! -*** *மனம் அழியாதே;* ***என்றான் -***

*தன் சொற்கேட்டுக் கைகேயி மறுக்க மாட்டாள் என்னும் துணிபுபற்றி வசிட்டன் 'ஆண்நாயகனே இனி நாடு ஆள்வான்' என்றான். 'ஏ' காரம் தேற்றம். கைகேயி தந்துவிடுவாள்,ஒருவேளை இராமன் ஏற்காது போனால் என்று ஓர் ஐயத்தை எழுப்பி, அப்படியாயின், 'யாம் உளமோ' என்று அதற்கு ஒரு பதிலும் உரைத்தான் முனிவன்.*
***39***

தயரதன் வசிட்டனிடம் வேண்டுதல்

***1645. என்ற அம் முனிவன் தன்னை,***
***'நினையா வினையேன், இனி, யான்***
***பொன்றும் அளவில் அவனைப்***
***புனை மா மகுடம் புனைவித்து,***
***ஒன்றும் வனம் என்று உன்னா***
***வண்ணம் செய்து, என்உரையும்,***
***குன்றும் பழி பூணாமல்,***
***காவாய்; கோவே!' என்றான்.***

***என்ற அம்முனிவன் தன்னை -*** *என்று ஆறுதல் கூறிய அவ்வசிட்ட முனிவனை நோக்கி(தயரதன்);* ***'கோவே! -*** *ஆசார்யத் தலைவனே!;* ***நினையா வினையேன் யான் இனிப்பொன்றும் அளவில் -*** *நினைக்க இயலாத கொடிய வினையுடைய யாம் மேல் இறந்துபடுவதற்குமுன்னால்;* ***அவனைப் புனைமா மகுடம் புனைவித்து -*** *அந்த இராமனை அணிதற்குரிய முடியைச் சூடும்படி செய்து;* ***ஒன்றும் வனம் என்று -*** *காட்டுக்குப் போவோம் என்று;* ***(அவன் தன்மனத்தில்) உன்னா வண்ணம் செய்து -*** *நினையாதபடி செய்து;* ***என் உரையும் -*** *என் வாக்கும்;* ***குன்றும் பழி பூணாமல் -*** *இழிவாகிய பழி மேற் கொள்ளாதபடி;* ***காவாய் -*** *காப்பாற்றுவாயாக!* ***என்றான் -***

*கைகேயியால் இம்மாற்றம் நிகழ வேண்டும் என்பதை 'என் உரையும் குன்றும் பழி பூணாமல்காவாய்' என்ற தயரதன் வேண்டுகோளால் அறியலாம். தன் சத்தியத்தில் சிறிதும் தவறாததயரதன் பெருங் குணநலமும் இங்கே வெளிப்படுகிறது.*
***40***

*வசிட்டன் அறிவுரையைக் கைகேயி மறுத்தல்*

***1646. முனியும், முனியும் செய்கைக்***
***கொடியாள் முகமே முன்னி,***
***'இனி, உன் புதல்வற்கு அரசும்,***
***எனையோர் உயிர்க்கு உயிரும்***
***மனுவின் வழி நின் கணவற்கு***
***உயிரும் உதவி, வசை தீர்***
***புனிதம் மருவும் புகழே***
***புனையாய்; பொன்னே!' என்றான்.***

***முனியும் -** வசிட்ட முனிவனும்; **முனியும் செய்கைக் கொடியாள் -** வெறுக்கும்செயலைச் செய்த கொடியவளாகிய கைகேயியின்; **முகமே முன்னி -** முகத்தை நோக்கி; **'பொன்னே! -** பொன்னெனச் சிறந்தவளே; **இனி -** இப்பொழுது; **உன் புதல்வற்குஅரசும் -** உன் மகனாகிய இராமனுக்கு அரசாட்சியையும்; **எனையோர் உயிர்க்கு உயிரும் -** மற்றவர்களது உயிர்க்கு உயிர்ப்பையும்; **மனுவின் வழி நின் கணவற்கு உயிரும் -** வைவஸ்வத மனுவின் வமிசத்திற் பிறந்த உன்னுடைய நாயகனான தசரதனுக்கு உயிரையும்; **உதவி -** கொடுத்து; **வசை தீர் -** பழிநீங்கிய; **புனிதம் மருவும் -** தூய்மை பொருந்திய; **புகழே புனையாய்! -** புகழை அணிகலனாக அணிந்து கொள்வாய்; **என்றான் -***

*இராமனுக்கு அரசு கொடுத்தாலன்றி ஏனைய எதுவும் நிலை பெறாது ஆகையால் அதனை முதலிற்கூறினான். இராமனைக் கான் ஏகாது தடுத்தல் நோக்கம் ஆயினும் இராமன் கான் ஏகாமல்அரண்மனையில் இருந்தால் அவனே அரசேற்க உரியவன் ஆதலின் 'அரச உதவி' என்றான். இராமனை 'உன்புதல்வன்' என்ற கைகேயி கூற்றும், "தாய் கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால்கேகயன் மடந்தை" என்ற நகர மக்கள் கூற்றும் (1453, 1591) உறுதிப் படுத்தல்அறிக.* ***41***

***1647. மொய்ம் மாண் வினை வேர் அற வென்று***
***உயர்வான் மொழியாமுன்னம்***
***விம்மா அழுவாள், 'அரசன்***
***மெய்யின் திரிவான் என்னில்,***
***இம் மாண் உலகத்து உயிரோடு***
***இனி வாழ்வு உகவேன்; என் சொல்***
***பொய்ம் மாணாமற்கு, இன்றே,***
***பொன்றாது ஒழியேன்' என்றாள்.***

***மொய்ம் மாண் வினை வேர் அற வென்று உயர்வான் -*** *நெருங்கிய ஆற்றல் அமைந்தவினைகளை அடியோடு போம்படி வெற்றி கொண்டு தவத்தால் உயர்ந்த வசிட்டன்;* ***மொழியாமுன்னம் -*** *சொல்லிய அளவில் (கைகேயி);* ***விம்மா அழுவாள் -*** *விம்மி அழுது;* ***'அரசன் மெய்யின் திரிவான் என்னின் -*** *சக்கரவர்த்திதான் கொடுத்தவரமாகிய சத்தியத்திலிருந்து மாறுபடுவானாயின்;* ***இம் மாண் உளகத்து உயிரோடு இனி வாழ்வு உகவேன் -*** *இந்தப் பெருமை பொருந்திய உலகத்தில் உயிரோடு இனிமேல் வாழ்தலை விரும்பமாட்டேன்;* ***என்சொல் பொய்ம் மாணாமற்கு*** *- என் வார்த்தை பொய்யாகாமைக்காக;* ***இன்றே-*** *இன்றைக்கே;* ***பொன்றாது ஒழியேன் -*** *இறந்து படாமல் இருக்க மாட்டேன்;* ***என்றாள்-.*** *அரசன் சொன்ன சொல் தவறினாலும், நான் சொல்லிய சொல்லிருந்து தவற மாட்டேன்,தவறினால் உயிர்துறப்பேன் என்றாள் கைகேயி. அழுவாள்- முற்றெச்சம்.*
*42*

*கைகேயி வசிட்டன் நிந்தித்தல்*

***1648. 'கொழுநன் துஞ்சும் எனவும்,***
***கொள்ளாது உலகம் எனவும்,***
***பழி நின்று உயரும் எனவும்,***
***பாவம் உளது ஆம் எனவும்,***
***ஒழிகின்றிலை; அன்றியும், ஒன்று***
***உணர்கின்றிலை; யான் இனிமேல்***
***மொழிகின்றன என்?' என்னா,***
***முனியும், 'முறை அன்று' என்பான்.***

***முனியும் -*** *வசிட்டனும் (கைகேயியை நோக்கி);* ***'கொழுநன் துஞ்சும் எனவும் -*** *கணவன் இறந்துபடுவான் என்றும்;* ***உலகம் கொள்ளாது எனவும்*** *- உலகம் இக்கருத்தைஏற்றுக்கொள்ளாது என்றும்;* ***பழி நின்று உயரும் -*** *(இம்மையில்) பழிச்சொல்நின்பால் தங்கி ஓங்கும் என்றும்;* ***பாவம் உளது ஆம் எனவும் -*** *(மறுமைக்குப்) பாவமும்இதனால் உண்டாகும் என்றும்;* ***ஒழிகின்றிலை -*** *(கருதி உன் கருத்தை) நீக்கிக்கொள்வாயல்லை;* ***அன்றியும் ஒன்று உணர்கின்றிலை*** *- அதன் மேலும் நான் சொல்லுகிற ஒன்றையும் உணர்வாய் அல்லை;* ***யான் இனிமேல் மொழிகின்றன என்?'*** *- நான்இனிமேல் உனக்குச் சொல்கின்ற வார்த்தைகளால் என்ன பயன்;'* ***என்னா -*** *என்றுசொல்லி;* ***'முறை அன்று' என்பான்*** *-'நீ செய்யும் செயல் நேர்மையானது அல்ல'என்பானானான்.*

*'ஏவவும் செய்கலான் தான் தேறான்' என்பது போல (குறள் 848.) உள்ளான் கைகேயி என்பது முனிவன் கருத்து. இறுதியாக நீ செய்யும் செயல் தர்மத்துக்கும் நியாயத்துக்கும் ஒத்தது அன்று என்று கைகேயியை நோக்கிக் கடிந்துரைத்தான் வசிட்டன்.*
*43*

***1649. 'கண்ணோடாதே, கணவன்***
***உயிர் ஓடு இடர் காணேதே,***
***"புண்ணூடு ஓடும் கனலோ? விடமோ?"***
***என்னப் புகல்வாய்;***

*பெண்ணோ? தீயோ? மாயாப்*
*பேயோ? கொடியாய்! நீ; இம்*
*மண்ணோடு உன்னோடு என் ஆம்?*
*வசையோ வலிதே!' என்றான்.*

*'**கண்ணோடாதே** - இரக்கம் இல்லாமல் கணவன் - தயரதனது; **உயிர் ஓடு இடர்காணாதே** - உயிர் உடலைவிட்டுச் செல்லும் துன்பத்தையும் அறியாமல்; **'புண்ணூடு ஓடும்கனலோ; விடமோ' என்னப் புகல்வாய்**- புண்ணிற் புகும் நெருப்போ, விடமோ என்று கருதும்படி பேசுகிறாய்; **பெண்ணோ?** - அல்லது என்றும் அழியாத பேயோ; **நீகொடியாய்!** - நீ கொடியவள்; **இம்மண்ணோடு உன்னோடு என்னாம்** - இந்த மண்ணோடு உனக்கு என்ன உறவு இருக்கிறது; **வசையோ வலிது**- உனக்கு வர இருக்கும் பழியோமிகவலிது; **என்றாள்-.***

*உலகோர் கருத்தும், ஆன்றோர் கருத்தும், கணவன் உயிரும் கருதாமல் செயலிழைக்கும் உனக்குஇந்த உலகத்தோடு என்ன உறவு இருக்கிறது என்றான் வசிட்டன். 'வெந்த புண்ணில் வேல் செருகியது போல' என்னும் பழமொழியை ஒருபுடை கருதி, 'புண்ணூடு ஓடும் கனலோ விடமோ' என்பது வந்தது. 'வலிதே' 'ஏ' காரம் தேற்றம். 44*

*1650. 'வாயால், மன்னன், மகனை,*
*"வனம் ஏகு" என்னா முன்னம்,*
*நீயோ சொன்னாய்; அவனோ,*
*நிமிர் கானிடை வெந் நெறியில்*
*போயோ புகலோ தவிரான்;*
*புகழோடு உயிரைச் சுடு வெந்*
*தீயோய்! நின்போல் தீயார்*
*உளரோ? செயல் என்?' என்றான்.*

*'**புகழோடு உயிரைச் சுடு வெந்தீயோய்!** - புகழையும் உயிரையும் எரிக்கும் கொடுநெருப்பானவளே; **மன்னன்** - தயரதன்; **வாயால்** - தன் வாயால்; **மகனை** - இராமனை; **'வனம் ஏகு'** - காட்டிற்குச் செல்; **என்னா முன்னம்** - என்றுசொல்வதற்கு முன்னாலேயே; **நீயோ சொன்னாய்** - நீதான் சொன்னாய்; **அவனோ** - அந்த இராமனோ; **நிமிர் கானிடை** - உயர்ந்த காட்டில்; **வெந் நெறியில்** - கொடிய வழியில்; **போயோ புகலோ தவிரான்** - போவதையோ புகுவதையோ ஒழியான்; **நின்போல் தீயார் உளரோ?** - உன்னைப் போல் கொடியவர்கள் இருக்கிறார்களா?; **செயல் என்?'** - இதைக் காட்டிலும் கொடிய செயல் வேறு என்ன இருக்கிறது;' **என்றான் -.***

*அரசன் கூறுவதற்கு முன் நீ கூறிவிட்டாய். ஆகையால், இதில் அரசன் சத்தியம் தவறுதல்எங்ஙனம்? என்று வினாவை எழுப்பி, 'அரசன் மெய்யில் திரிவான் என்னின்' என்று கைகேயிமுன்னர்க் கூறியதை (1647) மறுத்தான் வசிட்டன் என்க. அரசன் இறப்பது உறுதி, இனி வேறுசெயல் என்ன இருக்கிறது என்றும் 'செயல் என்' என்பதற்குப் பொருள்உரைக்கலாம். 45* *1651. தா இல் முனிவன் புகல,*
*தளராநின்ற மன்னன்,*

***நாவில் நஞ்சம் உடைய***
***நங்கை தன்னை நோக்கி,***
***'பாவி! நீயே, "வெங் கான்***
***படர்வாய்" என்று, என் உயிரை***
***ஏவினாயோ? அவனும்***
***ஏகினானோ?' என்றான்.***

***தா இல் முனிவன் புகல் -*** *குற்றமற்ற வசிட்டமுனிவன்இவ்வாறு சொல்ல;* ***தளராநின்ற மன்னன் -*** *வருத்தத்தால் தளர்கின்ற சக்கரவர்த்தி;* ***நாவில் நஞ்சம் உடைய நங்கை தன்னை நோக்கி -*** *நாக்கிலே விடம் உடைய பெண்ணாகியகைகேயியைப் பார்த்து;* ***'பாவி! நீ என் உயிரை வெங்கான் படர்வாய்' என்று-*** *பாவியாகிய நீ என் உயிராகிய இராமனைக் கொடிய காட்டிற்குச் செல்க என்று;* ***ஏவினாயோ! -*** *கட்டளையிட்டாயோ;* ***அவனும் ஏகினானோ?-*** *அந்த இராமனும் காட்டிற்குச்சென்றுவிட்டானோ;'* ***என்றான்-.***

*"நாகம் எனும் கொடியாள்தன் நாவின் வந்த சோகவிடம்" என முன்னும் (1505.) வந்துள்ளதை 'நாவில் நஞ்சம் உடைய நங்கை' என்பதனுடன் ஒப்பிடுக. 'நீயே' 'ஏ' காரம் பிரிநிலை. 'ஓ'காரம் வினாப் பொருட்டு.* ***46***

***1652. 'கண்டேன் நெஞ்சம்; கனிவாய்க்***
***கனி வாய் விடம் நான் நெடு நாள்***
***உண்டேன்; அதனால், நீ என்***
***உயிரை முதலோடு உண்டாய்;***
***பண்டே, எரிமுன், உன்னை,***
***பாவி! தேவி ஆகக்***
***கொண்டேன் அல்லேன்; வேறு ஓர்***
***கூற்றம் தேடிக் கொண்டேன்.***

***'பாவி! -*** *பாவியே;* ***நெஞ்சம் கண்டேன் -*** *உன் மனக்கருத்தை இப்போது அறிந்தேன்;* ***நான் கனிவாய்க் கனி வாய் விடம் நெடுநாள் உண்டேன் -*** *நான் அன்போடு பழம்போன்ற உன்னுடைய வாயிலிருந்த விடத்தை நீண்ட நாள் சாப்பிட்டுவிட்டேன்;* ***அதனால்-; நீ என் உயிரை முதலோடு உண்டாய் -*** *நீ என்னுடைய உயிரை அடியோடு சாப்பிட்டுவிட்டாய்;* ***உன்னைப் பண்டே எரிமுன் தேவியாகக் கொண்டேன் அல்லேன் -*** *உன்னை முன்பு வேள்வித் தீயின்முன் மனைவியாக (நான்) கொள்ளவில்லை;* ***வேறு ஓர் கூற்றம்தேடிக் கொண்டேன்'-*** *(எனக்கு) வேறு ஒரு தனியான யமனைத் தேடித் திருமணம் என்ற பெயரில் செய்து கொண்டேன்.'*

*'நாவில் நஞ்சம்' என்றது போலக் 'கனிவாய் விடம்' என்றது காண்க. 'நீமனைவியல்லள், என் உயிரைக் கொல்ல வந்த யமன்' என்றாள் தசரதன். "எரி என்றுஎதிர்நிற்பாள் கூற்றம் சிறுகாலை, அட்டில் புகாதாள் அரும்பிணி அட்டதனை, உண்டி உவவாதாள்இல்வாழ் பேய் இம்மூவர், கொண்டானைக் கொல்லும் படை" என்பது (நாலடி. 363.) நினைத்தற்குரியது.* ***47***

*1653.* ***'விழிக்கும் கண் வேறு இல்லா,***
***வெங்கான், என் கான்முளையைச்***
***சுழிக்கும் வினையால் ஏகச்***
***சூழ்வாய்; என்னைப் போழ்வாய்;***
***பழிக்கும் நாணாய்; மாணாப்***
***பாவி! இனி, என் பல? உன்***
***கழத்தின் நாண், உன் மகற்குக்***
***காப்பின் நாண் ஆம்' என்றான்.***

***'விழிக்கும் கண் வேறு இல்லா என் கான்முளையை*** *- விழித்துப் பார்க்கும் கண்இராமனையன்றி வேறாகப் பெற்றிராத என்னுடைய மகனாகிய இராமனை;* ***வெங் கான் -*** *கொடியகாட்டிற்கு;* ***சுழிக்கும் வினையால் -*** *சூழ்வினையால்;* ***ஏக -*** *போகும்படி;* ***சூழ்வாய்! -*** *தீய ஆலோசனை செய்தவளே;* ***என்னைப் போழ்வாய் -*** *என்னைப் பிளப்பவளே;* ***பழிக்கும் நாணாய் -*** *வருகின்ற பழிக்குச் சிறிதும் நாணமுறாதவளே;* ***மாணாப் பாவி -*** *மாட்சிமை இல்லாத பாவியே;* ***இனி என் பல? -*** *இனிப் பல பேசிப்பயன் என்ன;* ***உன் கழுத்தின் நாண் -*** *உன் கழுத்தில் நான் கட்டிய மங்கலக் கயிறு;* ***உன் மகற்கு -*** *உன் பிள்ளையாகிய பரதனுக்கு;* ***காப்பின் நாண் ஆம்! -*** *பட்டாபிஷேக காலத்தில் கையில் கட்டுகின்ற ரக்ஷாபந்தனமாகிய காப்புக் கயிறாக ஆகும்;'* ***என்றான் - .***

*"என் மகன் என்கண் என்னுயிர்" என்று முன் சொல்யது போல(1526) விழிக்கும் கண் இராமனையன்றி எனக்கு வேறில்லை என்றான் தயரதன். வரத்தைவலியுறுத்தலால் உன் கணவனாகிய யான் இறப்பேன்; அப்போது நீ அறுத்தெறிகின்ற தாலிக்கயிறு உன்மகனுக்குக் காப்புக் கயிறு ஆக உதவும் என்று கூறினான்.* ***48***

*கைகேயி, பரதன் இருவரையும் தயரதன் துறத்தல்*

*1654.* ***இன்னே பலவும் பகர்வான்,***
***இரங்காதாளை நோக்கி,***
***'சொன்னேன் இன்றே; இவள் என்***
***தாரம் அல்லள்; துறந்தேன்;***
***மன்னே ஆவான் வரும் அப்***
***பரதன் தனையும் மகன் என்று***
***உன்னேன்; முனிவா! அவனும்***
***ஆகான் உரிமைக்கு' என்றான்.***

***இன்னே -*** *இவ்வாறு;* ***பலவும் பகர்வான் -*** *பல சொற்களையும் சொல்பவனாயதயரதன்;* ***இரங்காதாளை நோக்கி -*** *சிறிதும் மனம் இளகாத கைகேயியைப் பார்த்து;* ***முனிவா! -*** *முனிவரே;* ***இன்றே சொன்னேன், இவள் என் தாரம் அல்லள், துறந்தேன் -*** *இப்பொழுதே சொல்லிவிட்டேன்;* ***இவள் இனி என் மனைவி என்னும் தகுதிக்கு உரியவள்அல்லள் -*** *இவளை நான் கைவிட்டேன்;* ***மன்னே ஆவான் வரும் அப்பரதன்தனையும் -*** *அரசனாக முடி சூடுதற்கு வருகின்ற இவள் மகனாகிய அந்தப் பரதனையும்;* ***மகன் என்று உன்னேன் -*** *என் மகன் என்ற கருதேன்;* ***அவனும்***

***உரிமைக்கு ஆகான்*** - *அப்பரதனும் எனக்குச் செய்யவேண்டிய இறுதிக்கடன்களுக்கு உரியவனாகான்;'* ***என்றான்-.***

*கைகேயியை மனைவி அல்லள் எனவும், பரதனை மகன் அல்லன் எனவும் துறந்தான் தயரதன். அதை முனிவன்பால் அறிவித்தான். பகர்வான், இரங்காதாள் - வினையாலணையும் பெயர்கள். சொன்னேன் - உறுதிபற்றிய கால வழுவமைதி.*
***49***

*கோசலையின் துயர்நிலை*

***1655. 'என்னைக் கண்டும் ஏகாவண்ணம்***
***இடையூறு உடையான்***
***உன்னைக் கண்டும் இலனோ?'***
***என்றான், உயர் கோசலையை;***
***பின்னைக் கண்தான் அனையான்***
***பிரியக் கண்ட துயரம்,***
***தன்னைக் கண்டே தவிர்வாள்;***
***தளர்வான் நிலையில் தளர்வாள்.***

*(தயரதன்)* ***உயர் கோசலையை*** - *உயர்ந்த கோசலையைப் பார்த்து;'* ***என்னைக்கண்டும் ஏகாவண்ணம் இடையூறு உடையான்*** - *என்னைப் பார்த்துப் போகாதவாறு இடையூறு உடையஇராமன்;* ***உன்னைக் கண்டும் இலனோ?*** - *உன்னையும் பார்த்துப் போகவில்லையோ;'* ***என்றான் - ; பின்னை*** - *பிறகு;* ***கண்தான் அனையான்*** - *தசரதனின் கண்ணை ஒத்த இராமன்;* ***பிரியக் கண்ட துயரம்***- *தன்னைப் பிரியஅதனால் தயரதன்பால் ஏற்பட்ட துன்பத்தை;* ***கண்டே*** - *பார்த்து;* ***தவிர்வாள்*** - *(இராமனைக் கான் ஏகாதபடி தயரதன்பால் சொல்லித் தடுக்க வேண்டும் என்று எண்ணி வந்தகருத்தை) ஒழிவாளானாள்;* ***தளர்வான் நிலையில் தளர்வாள்*** - *சோர்கின்ற தயரதனைப்போலவே அவளும் சோர்வாளானாள்.*

*தந்தையைப் பார்த்துச் சொல்லிவிட்டுக் காடு ஏகுவதாயின் முடியாது. அச்செயல் இடையூறுபடும்என்று கருதி இராமன் தயரதனைப் பார்த்துச் சொல்லிக்கொள்ளாமல் சென்றான் என்பதுபற்றி 'இடையூறு உடையான்' என்றார். இராமனைக் கான் ஏகாது தடுக்கும் தன்மை தயரதன்பால் இல்லை என்பதும், கைகேயி மாட்டே அது உள்ளது என்பதும் நிகழ்வுகளின் மூலம் அறிந்தாள் ஆதலின்வந்த கருத்தை ஒழித்துத் தயரதன் போலவே அவளும் தளர்வாளானாள். 1632 ஆம் பாடல்காண்க.* ***50***

***1656. மாற்றாள் செயல் ஆம் என்றும்,***
***கணவன் வரம் ஈந்து உள்ளம்***
***ஆற்றாது அயர்ந்தான் என்றும்,***
***அறிந்தாள்; அவளும், அவனைத்***
***தேற்றா நின்றாள்; மகனைத்***
***திரிவான் என்றாள்; 'அரசன்***

*தோற்றான் மெய்' என்று, உலகம்*
*சொல்லும் பழிக்கும் சோர்வாள்.*

***மாற்றாள் செயல் ஆம் என்றும்-*** *(இது) மாற்றாளாகிய கைகேயியின் செயலாகும் என்றும்;* ***கணவன் வரம் ஈந்து உள்ளம் ஆற்றாது அயர்ந்தான் என்றும் -*** *கணவனாய தயரதன்கைகேயிக்கு வரம் கொடுத்து அதனால் மனம் பொறுக்கமாட்டாமல் சோர்வடைந்தான் என்றும்;* ***அறிந்தாள் -*** *அறிந்துகொண்ட;* ***அவளும் -*** *கோசலையும்;* ***அவனைத் தேற்றாநின்றாள் -*** *தசரதனைத் தெளிவித்த வண்ணமிருந்தாள்;* ***மகனைத் திரிவான்என்றாள் -*** *தன் மகனாகிய இராமனைப் பற்றி அவன் காட்டகத்தே திரிவான் (வேறு வழிஇல்லை)எனத் தன்னுள் சொல்லிக் கொள்வாள்;* ***'அரசன் மெய் தோற்றான்' என்று -*** *தசரதன்சத்தியத்தில் தவறினான் என்று;* ***உலகம் சொல்லும் பழிக்கும் சோர்வாள் -*** *உலகத்தார் சொல்லும் பழிச்சொல் கருதியும் மனம் சோர்கின்றவளானாள்.*

*மகனைக் காட்டுக்குப் போக வரம் ஈந்து மன்னன் இறந்துபடும் நிலையில் வருந்துகிறான். மகனைக் காட்டுக்குச் செல்ல வேண்டாம் என்றாலோ மன்னன் சத்தியம்தவறினான் என்று உலகம் பழி சொல்லும்; என்கின்ற அறச் சங்கடத்தில் அகப்பட்டுத்தவிக்கிறாள் கோசலை என்றவாறாம்.*

*1657. 'தள்ளா நிலை சால் மெய்ம்மை*
*தழுவா வழுவாவகை நின்று,*
*எள்ளா நிலை கூர் பெருமைக்கு*
*இழிவுஆம் என்றால், உரவோய்!*
*விள்ளா நிலை சேர் அன்பால்*
*மகன்மேல் மெலியின், உலகம்*
*கொள்ளாது அன்றோ' என்றாள்,*
*கணவன் குறையக் குறைவாள்.*

***'உரவோய்! -*** *வலியவனே;* ***தள்ளா நிலை சால் மெய்ம்மை -*** *தவறக் கூடாததன்மை பொருந்திய சத்தியத்தை;* ***தழுவா -*** *ஏற்று;* ***வழுவாவகை நின்று -*** *அது சிறிதும் தவறுபடாத வகையில் நிலைத்து நின்று;* ***என்னா நிலைகூர் பெருமைக்கு இழிவு ஆம்என்றால் -*** *இகழப்படாத தன்மை பொருந்திய நினது பெருந்தன்மைக்கு இழிவை உண்டாக்கும் என்றால்;* ***விள்ளா நிலை சேர் அன்பால் -*** *விண்டுரைக்க முடியாத தன்மை பொருந்தியகாதலால்;* ***மகன்மேல் மெலியின் -*** *பிள்ளையைக் கருதித் தளர்ந்தால்;* ***உலகம்கொள்ளாது அன்றோ -*** *உலகோர் அதனை ஏற்றுக் கொள்ளார்கள் அல்லவா;'* ***என்றாள் -*** *என்று சொல்லி;* ***கணவன் குறையக் குறைவாள் -*** *கணவனாகிய தயரதன் மெலிவடையத் தானும்மெலிவடைவாளானாள்.*

*மகன்மேல் அன்பால் சத்தியம் தவறுதல், சத்தியம் தவறாமல் வரம் கொடுத்த பிறகுமனம் தளர்தல் என்ற இரண்டில் ஒன்றே செய்யத்தக்கது என்றாள் கோசலை. இதனுள் சத்தியம்தவறாமையே செய்யத்தக்கதாகலின், அதனைத் தளராது செய்தலால் நாயகனது இழப்பு உண்டாகுமே என்று கருதிக் கோசலை மேலும் அவன் போலவே தளர்வாளானாள்.* ***52***

கோசலையின் பெருந்துயர்

***1658. 'போவாது ஒழியான்' என்றாள்,***
***புதல்வன் தன்னை; கணவன்***
***சாவாது ஒழியான் என்று என்று,***
***உள்ளம் தள்ளுற்று அயர்வாள்;***
***'காவாய்' என்னாள் மகனை;***
***கணவன் புகழுக்கு அழிவாள்;***
***ஆ! ஆ! உயர் கோசலை ஆம்***
***அன்னம் என் உற்றனளே!***

***புதல்வன்தன்னை -*** *மகனாகிய இராமனை;* ***'போவாது ஒழியான்' என்றாள் -*** *வனம் போகாமல் இருக்கமாட்டான் என்று சொன்னாள்;* ***கணவன் 'சாவாது ஒழியான்' என்று என்று-*** *(அப்படி இராமன் காடு செல்லின்) கணவனாய தயரதன் சாகாமல் இருக்க மாட்டான் என்று கருதி;* ***உள்ளம் தள்ளுற்று அயர்வாள் -*** *மனம் தடு மாறிச் சோர்வாள்;* ***'மகனைக் காவாய்' என்னாள் -*** *வனம் போகாமல் இருந்து தந்தையின் உயிரைக் காப்பாற்றுவாய் என்று மகனைப் பார்த்துச் சொல்லமாட்டாள்;* ***கணவன்புகழுக்கு அழிவாள் -*** *தயரதனது புகழுக்குக் கேடு வருமோ என்று மனம் வருந்துவாள்;* ***ஆ! ஆ!- ; உயர் கோசலை ஆம் அன்னம் -*** *உயர்ந்த கோசலையாகிய அன்னம் போல்வாள்;* ***என் உற்றனள் -*** *என்ன துன்பப்பட்டாள்.*

*மகனைத் தடுத்தால் கணவன் புகழுக்கு அழிவு, மகனைத் தடுக்காது விட்டால் கணவன் உயிர்க்குஅழிவு. இரண்டில் எதனையும் செய்ய இயலாது உள்ளம் தடுமாறினாள். ஆ! ஆ! இரக்கக் குறிப்பு.அந்தோ, ஐயகோ என்னும் பொருளது.*
*53*

*தயரதன் புலம்பல்*

***1659. உணர்வான், அனையாள் உரையால்,***
***'உயர்ந்தான் உரைசால் குமரன்***
***புணரான் நிலமே, வனமே***
***போவானே ஆம்' என்னா; -***
***இணர் ஆர்தரு தார் அரசன் -***
***இடரால் அயர்வான்; 'வினையேன்***
***துணைவா! துணைவா' என்றான்;***
***'தோன்றால், தோன்றாய்!' என்றான்.***

***இணர் ஆர்தரு தார் அரசன்-*** *பூங்கொத்துகள் பொருந்திய மாலை அணிந்த தயரதமன்னன்;* ***அனையாள் உரையால்-*** *அந்தக் கோசலையின் வார்த்தையால்;* ***'உயர்ந்தான் உரைசால் குமரன் -*** *உயர்ந்தவனாகிய புகழ் பெற்ற இராமன்;* ***நிலமேபுணரான் -*** *நிலத்தை ஆள மாட்டான்;* ***வனமே போவானே ஆம்! -*** *காட்டிற்குப்போபவனே ஆவான்;* ***என்னா -*** *எனக் கருதி;* ***இடரால் அயர்வான் -*** *துன்பத்தால் சோர்கின்றவன்;* ***'வினையேன் துணைவா! துணைவா' என்றான் -*** *தீவினையேனாகிய என்னுடைய தோழனே தோழனே என்றான்;* ***'தோன்றால்! தோன்றாய் -*** *மகனே என்முன் வருவாயாக;* ***என்றான் -.***

*‘துணைவா துணைவா’ புலம்பலில் வந்த அடுக்கு.* *54*

***1660. ‘கண்ணும் நீராய், உயிரும்***
***ஒழுக, கழியாநின்றேன்;***
***எண்ணும் நீர் நான்மறையோர்,***
***எரிமுன் நின்மேல் சொரிய,***
***மண்ணும் நீராய் வந்த***
***புனலை, மகனே! வினையேற்கு***
***உண்ணும் நீராய் உதவி,***
***உயர் கான் அடைவாய்!’ என்றான்.***

***‘மகனே!*** *- இராமனே;* ***கண்ணும் நீராய்*** *- கண்கள் இரண்டும் நீராகி;* ***உயிரும் ஒழுக*** *- உயிரும் உடலை விட்டு வெளியில் செல்ல;* ***கழியாநின்றேன்*** *- இறந்துகொண்டுள்ளேன்;* ***வினையேற்கு*** *- இப்படித் தீவினையுடைய எனக்கு;* ***எண்ணும் நீர்நான் மறையோர்*** *- மதிக்கப்படும் தன்மையுடைய வேதம் வல்ல அந்தணர்;* ***எரி முன்நின்மேல் சொரிய*** *- மூடிசூட்டு விழாவிற்கு முன்னர் உண்டாக்கப்பட்ட வேள்வித்தீயின் முன்னால் உன்மேல் அபிடேகம் செய்யவேண்டி;* ***மண்ணும் நீராய் வந்த புனலை*** *- அபிடேகசுத்த நீராக வந்த தீர்த்த நீரை; (இனி அதற்குத் தேவை இன்மையால்)* ***உண்ணும் நீராய்உதவி*** *- நான் இறந்த பிறகு எனக்குச் செய்யப்பெறும் பிரேத தாகசாந்தி நீராகக் கொடுத்து (பிறகு);* ***உயர்கான் அடைவாய்’*** *- உயர்ந்த காட்டை அடைவாயாக;* ***என்றான்-***

*முடிபுனைந்து நீராட்டப் புண்ணிய தீர்த்தங்கள் கொண்டுவருவர். அது ‘மண்ணு மங்கலம்’ எனப்படும். அதுவே ‘மண்ணும் நீர்’ எனப்பட்டது. இறந்த பின் பத்து நாளும் வளர்ந்துஎழுகின்ற பிரேத பூதத்துக்குத் தாகசாந்தி செய்ய நித்தியவதி என்னும் பெயரால் நீர்க்கடன்இறுத்தல் மகனது கடன்; ஆதலால் அதனைத் தயரதன் இராமனைச் செய்ய வேண்டினான்.* *55*

***1661. ‘படைமாண் அரசைப் பல கால்***
***பழுவாய் மழுவால் எறிவான்,***
***மிடை மா வலி தான் அனையான்,***
***வில்லால் அடுமா வல்லாய்!***
***"உடைமா மகுடம் புனை" என்று***
***உரையா, உடனே கொடியேன்***
***சடை மா மகுடம் புனையத்***
***தந்தேன்; அந்தோ!" என்றான்.***

***படைமாண் அரசை*** *- சேனைகளினது மாட்சிமையுடைய அரசர்களை;* ***பல கால்*** *- இருபத்தொரு தலைமுறை;* ***பழுவாய் மழுவால்*** *- பழுக்கக் காய்ச்சிக் கூர்மையாக்கப்பட்டமழுப்படையால்;* ***எறிவான்*** *- வெட்டி அழித்தவனும்;* ***மிடை மா வலி தான் அனையான்*** *- செருக்கிய மிக்க பலத்தில் தன்னைத் தானே ஒத்தவனும் ஆகிய பரசுராமனை;* ***வில்லால் அடுமாவல்லாய்!*** *- வில்லாலே வெல்லும் ஆற்றல் வல்லவனே; (உன்னை)* ***‘உடைமா மகுடம் புனை’ என்று உரையா*** *- உன்னுடைய பெரிய*

*முடியைச் சூடிக்கொள் என்று சொல்லி;* ***உடனே-*** *அப்பொழுதே;* ***சடை மா மகுடம் புனையத் தந்தேன் அந்தோ' -*** *சடையாகிய பெரியமகுடத்தை அணிந்துகொள்ளும்படி தந்துவிட்டேனே ஐயகோ;* ***என்றான்-*** *'நிருபர்க்கு ஒரு பழிபற்றிட (1275) என்ற பரசுராமப் படலப்பாடலில், 'இருபத்தொரு படிகால்' என்று இந்நிகழ்ச்சி கூறப்பெறுதல் அறிக. 'இருபத்தொருகால்அரசு களைகட்ட பரசுராமன், மேவரும் சாந்திமத்தீ வரண் கருதி இருத்திய செம்பொன் திருத்தகுமுடியும்' என்னும் முதலாம் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியும் இதனைக் கூறும். அடுமா -அடுமாறு.* ***56***

***1662. "கறுத்தாய் உருவம்; மனமும்***
***கண்ணும் கையும் செய்யாய்;***
***பொறுத்தாய் பொறையே; இறைவன்,***
***புரம் மூன்று எரித்த, போர் வில்***
***இறுத்தாய்; "தமியேன்" என்னாது,***
***என்னை இம் மூப்பிடையே***
***வெறுத்தாய்; இனி, நான் வாழ்நாள்***
***வேண்டேன்! வேண்டேன்! என்றான்.***

***'உருவம் கறுத்தாய்! -*** *திருமேனி கறுத்திருப்பவனே;* ***மனமும் கண்ணும் கையும்செய்யாய்! -*** *உள்ளமும் கண்ணும் கையும் செம்மையாக இருப்பவனே;* ***பொறையேபொறுத்தாய்! -*** *பொறுமையையே தரித்திருப்பவனே;* ***இறைவன் -*** *சிவபிரான்;* ***மூன்று புரம் எரித்த போர்வில் இறுத்தாய்! -*** *முப்புரங்களை எரித்த காலத்துப் பிடித்த போர்க்குரிய வில்லை (சீதா கல்யாணத்துக்கு முன்) ஒடித்தவனே;* ***'தமியேன்' என்னாது -****தனித்துத் துணையின்றி உள்ளேன் என்ற கருதாது;* ***என்னை இம் மூப்பிடையே வெறுத்தாய் -*** *என்னை இம்முதுமைக் காலத்தில் வெறுத்திட்டாய்;* ***இனி நான் வாழ்நாள் வேண்டேன்வேண்டேன்' -*** *இனிமேல் நான் வாழும் நாளை விரும்பமாட்டேன்;* ***என்றான் - .***

*இராமன் சிறப்புகளை எல்லாம் நினைந்து நைந்துருகுகிறான் தயரதன். 'வேண்டேன், வேண்டேன்'புலம்பலில் வந்த அடுக்கு. உள்ளத்துக்குச் செம்மை கோட்ட மின்மையாம். மற்றவைநிறம்.* *57*

***1663. 'பொன்னின் முன்னம் ஒளிரும்***
***பொன்னே! புகழின் புகழே!***
***மின்னின் மின்னும் வரிவில்***
***குமரா! மெய்யின் மெய்யே!***
***என்னின் முன்னம் வனம் நீ***
***அடைதற்கு, எளியேன் அல்லேன்;***
***உன்னின் முன்னம் புகுவேன்,***
***உயர் வானகம், யான்' என்றான்.***

***'பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே! -*** *பொன்னுக்கு மேற்பட்டுப்பிரகாசிக்கின்ற பொன் போன்றவனே;* ***புகழின் புகழே! -*** *புகழுக்குப் புகழானவனே!;* ***மின்னில் மின்னும் வரிவில் குமரா! -*** *மின்னலைப் போல் விட்டு*

*விளங்கும் கட்டமைந்தவில்லை உடைய குமரனே;* **மெய்யின் மெய்யே! -** *உண்மையின் நிலைபேறே;* **என்னின் முன்னம் -** *எனக்கு முற்பட்டு;* **நீ வனம் அடைதற்கு-** *நீ காடு புகுவதற்கு;* **யான்எளியேன் அல்லேன் -** *நான் எளிமை உடையவன் அல்லன்;* **உன்னின் முன்னம் -** *உனக்குமுன்னால்;* **உயர் வானகம் புகுவேன்!-** *உயர்ந்த விண்ணை அடைவேன்;'* **என்றான்-.**

*'கானகமே மிக விரும்பி நீ துறந்த வள நகரைத் துறந்து நானும், வானகமே மிக விரும்பிப்போகின்றேன். மனுகுலத்தார் தங்கள் கோவே' என்ற (திவ்ய.738) குலசேகராழ்வார் பாசுரமும்காண்க.* ***58***

***1664. 'நெகுதற்கு ஒத்த நெஞ்சும்,***
***நேயத்தாலே ஆவி***
***உகுதற்கு ஒத்த உடலும்,***
***உடையேன்; உன்போல் அல்லேன்;***
***தகுதற்கு ஒத்த சனகன்***
***தையல் கையைப் பற்றிப்***
***புகுதக் கண்ட கண்ணால்,***
***போகக் காணேன்' என்றான்.***

**'நெகுதற்கு ஒத்த நெஞ்சும் -** *உருகுதற்குப் பொருந்திய மனமும்;* **நேயத்தாலே-** *அன்பினால்;* **ஆவி உகுதற்கு ஒத்த உடலும் உடையேன்-** *உயிர் விடுதற்குப் பொருந்தியஉடலையும் உடையவன் யான்;* **உன்போல் அல்லேன் -** *உன்னைப்போல் வன்மனமும், வலியஉடலும் உடையேனல்லேன்;* **தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றி -** *தகுதிக்கு ஒத்தசனக ராசனுக்கு மகளாகிய சானகியின் கையைப் பிடித்துக் கொண்டு;* **புகுதக் கண்ட கண்ணால் -** *அயோத்தி நகருக்குள் (நீ) புகுவதைப் பார்த்த கண்களால்;* **போகக் காணேன்'-** *(அயோத்தியைவிட்டுக்) காடு செல்வதைக் காண மாட்டேன்;'* **என்றான்-.**

*'ஏ' காரம் அசை. தன் நிலை இவ்வாறாகவும் இராமன் வனமேத் துணிந்தமை பற்றி'உன்போல் அல்லேன்' என்று அவனை வன் மனமும் வல் உடலும் உடையவனாகக் குறித்தான்தயரதன்.* ***59***

***1665. 'எற்றே பகர்வேன், இனி, யான்?***
***என்னே! உன்னின் பிரிய***
***வற்றே உலகம் எனினும்,***
***வானே வருந்தாது எனினும்,***
***பொன் - தேர் அரசே! தமியேன்***
***புகழே! உயிரே! உன்னைப்***
***பெற்றேன்; அருமை அறிவேன்;***
***பிழையேன்! பிழையேன்!' என்றான்.***

**உன்னின் பிரியவற்றே உலகம் எனினும் -** *(இராமா!) உன்னிடத்திருந்து உலகம் பிரியும் வல்லமை உடையதாயினும்;* **வானே வருந்தாது எனினும் -** *தேவர்களும்*

*மனம்வருந்தார் ஆனாலும்;* ***பொன்தேர் அரசே!*** *- பொன் மயமான தேரில் ஏறி வரும் அரசனே;* ***தமியேன் புகழே!*** *- துணையில்லாத எனது புகழே;* ***உயிரே!*** *- என் உயிரே;* ***உன்னைப் பெற்றேன், அருமை அறிவேன்*** *- உன்னைப் பெற்று உன் அருமையை அறிந்துள்ளேன்;* ***இனி யான் எற்றே பகர்வேன்-*** *இனி மேல் நான் என்ன சொல்லுவேன்;* ***என்னே-; பிழையேன் பிழையேன்*** *- பிழைக்க மாட்டேன்;* ***என்றான்-***

*வானும் உலகமும் உன் பிரிவை ஏற்கும் வல்லமை உடையதாயினும் என்னால் அது இயலாதுஎன்றான். 'பிழையேன், பிழையேன்' புலம்பலில் வந்த அடுக்கு.*
*60*

***1666. 'அள்ளற் பள்ளப் புனல் சூழ்***
***அகல் மா நிலமும், அரசும்,***
***கொள்ளக் குறையா நிதியின்***
***குவையும், முதலா எவையும்,***
***கள்ளக் கைகேசிக்கே***
***உதவி, புகழ் கைக்கொண்ட***
***வள்ளல்தனம் என் உயிரை***
***மாய்க்கும்! மாய்க்கும்! என்றான்.***

***அள்ளல் பள்ளப் புனல் சூழ் அகல் மா நிலமும் அரசும்*** *- குழைந்த சேறுடைய பள்ளங்கள் நிறைந்த நீரால் சூழப்பெற்ற அகன்ற கோசல நாடும் ஆட்சியும்;* ***கொள்ளக் குறையாநிதியின் குவையும்*** *- கொடுக்கக் குறைவுபடாத செல்வக் குவியலும்;* ***முதலா எவையும்-*** *மற்றுள்ள எல்லாவற்றையும்;* ***கள்ளக் கைகேசிக்கே உதவி*** *- வஞ்சகமுள்ள கைகேசிக்குக்கொடுத்து;* ***புகழ் கைக்கொண்ட-*** *புகழைப் பெற்றுக்கொண்ட;* ***வள்ளல்தனம்*** *- உன்னுடைய உதாரகுணம்;* ***என் உயிரை மாய்க்கும் மாய்க்கும்'*** *- என் உயிரைப் போக்கடிக்கவல்லதாய் நின்றது;* ***என்றான்-*** *.*

*இராமனது வண்மைக் குணம் வெளிப்பட்டு, அது மேலும் தயரதன் மனத்தைப் பலம் இழக்கச்செய்கிறபடி. 'மாய்க்கும், மாய்க்கும்' புலம்பல் அடுக்கு. 'ஏ' காரம் தேற்றம்.* *61*

***1667. 'ஒலி ஆர் கடல் சூழ் உலகத்து,***
***உயர் வானிடை, நாகரினும்,***
***பொலியா நின்றார் உன்னைப்***
***போல்வார் உளரோ? பொன்னே!***
***வலி யார் உடையார்?' என்றான்;***
***'மழுவாள் உடையான் வரவும்***
***சலியா நிலையாய் என்றால்,***
***தவிர்வார் உளரோ' என்றான்.***

***'பொன்னே!*** *- பொன் போலச் சிறந்தவனே;* ***ஒலிஆர் கடல்சூழ் உலகத்து*** *- ஒலிக்கின்ற கடலாற் சூழப்பெற்ற இப்பூமியில்;* ***உயர் வானிடை*** *- உயர்ந்தவிண்ணுலகத்தில்;* ***நாகரினும்*** *- நாகலோகமாகிய பாதலத்திடத்தும்;* ***பொலியாநின்றார்*** *- சிறந்து நின்றவர்கள்;* ***உன்னைப் போல்வார் உளரோ?*** *- உன்னைஒத்தவர்கள் வேறு இருக்கின்றார்களோ?;* ***'வலி உடையார் யார்' என்றான்*** *-*

*வலிமைஉடையவர்கள் யார் உளர் என்று சொல்லி;* ***மழுவாள் உடையான் வரவும் -*** *மழுப்படைஉடைய பரசுராமன் வரவும்; (அது கண்டு)* ***சலியா நிலையாய் -*** *(சிறிதும்) தளராத நிலை உடையவனாய் இருந்தாய்;* ***என்றால்-; தவிர்வார் உளரோ?*** *- (நீ ஒன்று செய்தால்)உன்னைச் செய்யாதே என்று தடுப்பார் இருக்கின்றார்களா;'* ***என்றான்-.***

*மிக்க வலியுடையவர்கள் தம் விருப்பம்போலச் செய்ய இயலும். அவர்களைத் தடுக்க வல்லவர்யாரும் இலர். ஆதலின், என் நிலை கருதி 'இராமா! நீ வனம் போகாதிருப்பின் உன்னை யாரால்தடுக்க முடியும்' என்று குறிப்பால் வினாவிப் புலம்பினன் தயரதன்.* ***62***

***1668. 'கேட்டே இருந்தேன் எனினும்,***
***கிளர் வான் இன்றே அடைய***
***மாட்டேன் ஆகில் அன்றோ,***
***வன்கண் என்கண்? மைந்தா!***
***காட்டே உறைவாய் நீ! இக்***
***கைகேசியையும் கண்டு, இந்***
***நாட்டே உறைவேன் என்றால்,***
***நன்று என் நன்மை!' என்றான்.***

***'மைந்தா!*** *- இராமா!;* ***கேட்டு இருந்தேன் எனினும் -*** *நீ காட்டுக்குச் செல்வதைக் கேட்டுவைத்தும் இங்கிருந்தேன் ஆனாலும்;* ***கிளர்வான் -*** *ஒளிபடைத்தவானுலகத்தை;* ***இன்றே அடையமாட்டேன் ஆகில் அன்றோ -*** *இன்றைக்கே சென்று சேராமல்இருந்தால் அல்லவா;* ***என்கண் வன்கண் -*** *என்னிடம் கொடுமைத்தன்மை உள தாகும்;* ***நீ காட்டே உறைவாய் -*** *நீ வனத்தில் வசிப்பாய்;* ***இக் கைகேசியையும் கண்டு-*** *இந்தக் கைகேயியையும் பார்த்துக்கொண்டு;* ***இந்நாட்டே உறைவேன் என்றால்-*** *இந்த நாட்டிலேயே (நான்) வசிப்பேன் ஆனால்;* ***என் நன்மை நன்று -*** *எனதியல்புநன்றாயிருந்தது;'* ***என்றான்-***

*'இன்றே' 'ஏ'காரம் தேற்றம். கேட்டே ஏகாரம் சிறப்பு. காட்டே, நாட்டே ஏகாரங்கள்அசை. நன்று இகழ்ச்சிக் குறிப்பு.* ***63***

***1669. 'மெய் ஆர் தவமே செய்து, உன்***
***மிடல் மார்பு அரிதின் பெற்ற செய்யாள்***
***என்னும் பொன்னும்,***
***நிலமாது என்னும் திருவும்,***
***உய்யார்! உய்யார்! கெடுவேன்;***
***உன்னைப் பிரியின், வினையேன்,***
***ஐயா! கைகேசியை***
***நேராகேனோ நான்? என்றான்.***

***ஐயா!*** *- ஐயனே;* ***மெய் ஆர் தவமே செய்து-*** *உண்மை பொருந்திய தவத்தைச்செய்து;* ***உன் மிடல் மார்பு அரிதின் பெற்ற -*** *உன்னுடைய வலிய மார்பைக் கிடைத்தற்கருமையாகப் பெற்ற;* ***செய்யாள் என்னும் பொன்னும்-*** *திருமகள் என்னும்*

*பெண்ணும்;* ***நிலமாது என்னும் திருவும்-*** *நிலமகள் என்னும் செல்வியும்;* ***உய்யார் உய்யார் -*** *நீவனம் செல்லப் பிழைக்கமாட்டார்;* **கெடுவேன் -** *பாவியாகியவனும்;* ***வினையேன் நான் -*** *தீவினை உடையவனுமாகிய நான்;* ***உன்னைப் பிரியின் -*** *உன்னைப் பிரிந்து (உயிர்வாழ்ந்தால்);* **கைகேசியை நேராகேனோ' -** *கைகேயிக்கு ஒப்பாகிவிட மாட்டேனா;'* ***என்றான்-***

*உன்னைப் பிரிந்து உயிர்தரித்தால் கைகேயிக்கும் எனக்கும் என்ன வேறுபாடு? நானும் அவள்போல வன்கண்மை உடையவனாய்விடுவேன் அல்லவா - என்றான்.*
***64***

***1670. பூண் ஆர் அணியும், முடியும்,***
***பொன் ஆசனமும், குடையும்,***
***சேண் ஆர் மார்பும், திருவும்,***
***தெரியக் காணக் கடவேன்,***
***மாணா மர வற்கலையும்,***
***மானின் தோலும் அவை நான்***
***காணாது ஒழிந்தேன் என்றால்,***
***நன்று ஆய்த்து அன்றோ கருமம்?'***

***'பூண் ஆர் அணியும் -*** *அணிதற்குப் பொருந்திய அணிகலன்களும்;* **பொன் ஆசனமும்-** *பொன்மயமான சிங்காதனமும்;* **குடையும் -** *வெண்கொற்றக் குடையும்;* **சேண் ஆர்மார்பும் -** *அகன்று பொருந்திய மார்பும்;* **திருவும் -** *அங்கே வீற்றிருக்கும்திருமகளும்;* ***தெரியக் காணக் கடவேன் நான் -*** *விளங்கப் பார்த்தற்குக் கடமைப்பட்ட யான்;* ***மாணா மர வற்கலையும் -*** *மாட்சிமை இல்லாத மரவுரியும்;* ***மானின் தோலும் -*** *மேனியில் போர்த்துக்கொள்ள மான் தோலும்;* ***அவை -*** *ஆகிய அவற்றை;* ***காணாது ஒழிந்தேன் என்றால் -*** *பாராமல் (விண்ணுலகு) சென்றுவிட்டேன் என்றால்;* ***கருமம் நன்றுஆய்த்து அன்றோ? -*** *என் செயல் நல்லதாக ஆய்விடும் அல்லவா?*

*அரச கோலத்தைக் காணவேண்டிய நான் தவக்கோலம் காண நேர்ந்ததே; இதைக் காணாமல்போய்விட்டால் நல்லதல்லவா என்று புலம்பினான். 'பூ மருவு நறுங்குஞ்சி புன்சடையாப் புனைந்து பூந்துகில்சேர் அல்குற், காமர் எழில் விழல் உடுத்துக் கலன் அணியாது அங்கங்கள் அழகுமாறி, ஏ மருதோள் என் புதல்வன் யான் இன்று செலத்தக்க வனம் தான் சேர்தல், தூமறையீர் இது தகவோ, சுமந்திரனே வசிட்டனே சொல்லீர் நீரே' என்ற குலசேகர ஆழ்வார் பாசுரம் (திவ்ய.735.) இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. தவம் செய்வோர் மரவுரி உடுத்து மான் தோல் போர்த்தல் மரபு.*
***65***

*மன்னனைத் தேற்றி வசிட்டன் சொல்லுதல்*

***1671. ஒன்றோடு ஒன்று ஒன்று ஒவ்வா***
***உரை தந்து, அரசன், 'உயிரும்***
***சென்றான் இன்றோடு' என்னும்***
***தன்மை எய்தித் தேய்ந்தான்,***

***மென் தோல் மார்பின் முனிவன்.***
***'வேந்தே! அயரேல்; அவனை,***
***இன்று ஏகாத வண்ணம்***
***தகைவென் உலகோடு' என்னா.***

***அரசன் -*** *தயரத மன்னன்;* ***ஒன்றோடு ஒன்று ஒன்று ஒவ்வா உரை தந்து -*** *ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் புலம்பி;* ***'உயிரும் இன்றோடு சென்றான்' என்னும்தன்மை எய்தித் தேய்ந்தான் -*** *உயிரும் இன்றோடு போகப் பெற்றான் என்கின்ற நிலைஅடைந்து அழிந்தான்;* ***மேன் தோல் மார்பின் முனிவன் -*** *மெல்லிய தோல் போர்த்திய மார்பினை உடைய வசிட்டன்;* ***'வேந்தே -*** *தசரத மன்னனே;* ***அயரேல் -*** *சோர்வடையாதே;* ***அவனை -*** *இராமனை;* ***இன்று -*** *இன்றைக்கு;* ***ஏகாத வண்ணம் -*** *காடு செல்லாதபடி;* ***உலகோடு தகைவென்' -*** *நாட்டு மக்களோடு சேர்ந்து தடுப்பேன்;* ***என்னா -*** *என்று.*

*தானே சென்று சொன்னால் இராமனைத் தடுத்தல் இயலாது என்பதால் 'உலகோடு சென்றுதகைவென்' என்றான்.* ***66*** *தயரதன் நிலையும் கோசலை புலம்பலும்*

***1672. முனிவன் சொல்லும் அளவில்,***
***'முடியும்கொல்?' என்று, அரசன்***
***தனி நின்று உழல் தன் உயிரைச்***
***சிறிதே தகைவான்; 'இந்தப்***
***புனிதன் போனால், இவனால்***
***போகாது ஒழிவான்' என்னா,***
***மனிதன் வடிவம் கொண்ட***
***மனுவும் தன்னை மறந்தான்.***

***முனிவன் சொல்லும் அளவில் -*** *முனிவன் இவ்வாறு (இராமனை வனம்போகாது தடுப்பேன்)என்று சொல்லுகின்ற போது;* ***'முடியும் கொல'-*** *(இது இவனால்) முடியும்போலும்;* ***என்று-*** *எனக் கருதி;* ***அரசன்-*** *தயரதன்;* ***தனி நின்று உழல் தன் உயிரைச் சிறிதே தகைவான்-*** *தனியாக நின்று (வருந்துகிற) போவது வருவதாய் உள்ள தன்னுடைய உயிரைச் சிறிதளவு தடுத்து நிறுத்தி;* ***இந்தப் புனிதன் போனால் -*** *இந்த வசிட்டன் போய்ச் சொன்னால்;* ***இவனால் போகாது ஒழிவான்' என்னா -*** *இவன் சொற்கேட்டு இராமன்வனம் போகாமல் தங்குவான் என்று கருதி;* ***மனிதன் வடிவம் கொண்ட மனுவும் -*** *மானுடவடிவம் தாங்கியுள்ள வைவஸ்வத மனுச் சக்கரவர்த்தியாகிய தயரதனும்;* ***தன்னை மறந்தான் -*** *நினைவிழந்தான்.*

*வசிட்டன் வார்த்தை கேட்டு நம்பிக்கை எய்திப் போகிற உயிரைத் தடுத்து நிறுத்திமூர்ச்சையானான் தயரதன். வைவஸ்வதமனு - சூரியன் மகன் - தயரதன் குலத்து முன்னோன்.ஆட்சிச் சிறப்பாலும், ஆற்றல் முதலியவற்றாலும் அவனை ஒத்தவன் என்றார்.* ***67***

***1673. 'மறந்தான் நினைவும் உயிரும்,***
***மன்னன்' என்ன மறுகா,***

***'இறந்தான் கொல்லோ அரசன்?'***
***என்னா, இடர் உற்று அழிவாள்,***
***'துறந்தான் மகன் முன் எனையும்;***
***துறந்தாய் நீயும்; துணைவா!***
***அறம்தான் இதுவோ? ஐயா!***
***அரசர்க்கு அரசே!' என்றாள்.***

***மன்னன் நினைவும் உயிரும் மறந்தான்' என்ன மறுகா -*** *அரசன் ஞாபகமும் உயிரும்மறக்கப்பெற்றான் என்ற கருதி மனம் கலங்கி;* ***'அரசன் இறந்தான் கொல்லோ' என்னா இடர் உற்று அழிவாள் -*** *அரசன் இறந்தான் போலும் என்று துன்பமுற்று வருந்தும் கோசலை;'* ***மகன் முன்எனையும் துறந்தான்' -*** *மகனாகிய இராமனும் முன்னால் என்னைக் கைவிட்டான்;* ***'நீயும்துறந்தாய்' -*** *கணவனாகிய நீயும் என்னைக் கைவிட்டாய்;* ***துணைவா! -*** *என்துணைவனே!;* ***ஐயா! -*** *ஐயனே!;* ***அரசர்க்கு அரசே! -*** *இராச இராசனே!;* ***அறம்தான் இதுவோ' -*** *அறம் என்பது இதுதானோ;* ***என்றாள் -.***

*தாயை மகன் துறப்பதும், மனைவியைக் கணவன் துறப்பதும்தான் தருமமா? என்று வினாவிப்புலம்பினாள் - 'கொல' ஐயம், 'ஓ' வினாப் பொருளில் வந்தது. 'எனையும்' என்பதிலுள்ள உம்மை'மகன்' என்பதனோடு கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது.*
***68***

***1647. 'மெய்யின் மெய்யே! உலகின்***
***வேந்தர்க்கு எல்லாம் வேந்தே!***
***உய்யும்வகை நின் உயிரை***
***ஓம்பாது இங்ஙன் தேம்பில்,***
***வையம் முழுதும் துயரால்***
***மறுகும்; முனிவனுடன் நம்***
***ஐயன் வரினும் வருமால்;***
***அயரேல்; அரசே!' என்றாள்.***

***'மெய்யின் மெய்யே! -*** *சத்தியத்தின் சத்தியமே;* ***உலகின் வேந்தர்க் கெல்லாம் வேந்தே! -*** *உலகில் உள்ள அரசர்க்கெல்லாம் அரசனே;* ***நின் உயிரை உய்யும் வகை ஓம்பாது -*** *உன்னுடைய உயிரைப் பிழைக்கும் வகையில்பாதுகாக்காமல்;* ***இங்ஙன் தேம்பில் -*** *இவ்வாறு வாடினால்;* ***வையம் முழுதும் துயரால்மறுகும் -*** *இவ்வுலகம் முழுதும் துன்பத்தால் கலங்கிச் சுழலும்;* ***அரசே! - ; நம் ஐயன் -*** *நம் மகன்;* ***முனிவனுடன் வரினும் வரும் -*** *வசிட்டனுடன் (கான் ஏகாது) திரும்பி வந்தாலும் வருவான்;* ***அயரேல் -*** *சோர்வடையாதே;'* ***என்றாள் -***

*உலகத்துக்காக வாழ்ந்த நீ துன்புற்றால் இப்பொழுது உலகமும் துன்புறும். உனக்காகஇல்லாவிடினும் உலக மக்களுக்காகத் துன்பத்தில் துவளாமல் இருக்க என வேண்டினாள் - 'வரினும்வரும்' என்பது ஐயம். வருவது உறுதியில்லை என்பது அவள் அறிந்தபடியைப் புலப்படுத்தி நின்றது. 'ஆல்' அசை.* ***69***

*தயரதன் கோசலைபால் 'இராமன் வருவானா' எனக் கேட்டு வருந்தல்*

*1675.* ***என்று என்று, அரசன் மெய்யும்,***
***இரு தாள் இணையும், முகனும்,***
***தன்தன் செய்ய கையால்***
***தைவந்திடு கோசலையை,***
***ஒன்றும் தெரியா மம்மர்***
***உள்ளத்து அரசன், மெள்ள,***
***'வன் திண் சிலை நம் குரிசில்***
***வருமே? வருமே?' என்றான்.***

***என்று என்று -*** *என இவ்வாறு கூறி;* ***அரசன் மெய்யும் -*** *அரசனது உடம்பையும்;* ***இருதாள் இணையும் முகனும் தன்தன் செய்ய கையால் தைவந்திடு கோசலையை -*** *இரண்டு அடிகளையும் முகத்தையும் தன்னுடைய சிவந்த கைகளால் தடவிக் கொடுக்கின்ற கோசலையைப்பார்த்து;* ***ஒன்றும் தெரியா மம்மர் உள்ளத்து அரசன் -*** *ஒரு செய்தியும் அறியாது மயங்கிய மனம் உடைய தசரதன்;* ***மெள்ள -*** *மெதுவாக;* ***'வன் திண் சிலை நம் குரிசில்வருமே? வருமே? -*** *வலிய கட்டமைந்த வில்லை உடைய நம்முடைய இராமன் வருவானா, வருவானா;'* ***என்றான்-.***

*தன்தன் எதுகை நோக்கிய அடுக்கு. 'வருமே வருமே' அடுக்கு.* ***70***

*1676.* ***'வன் மாயக் கைகேசி,***
***வாக்கால், என்தன் உயிரை***
***முன் மாய்விப்பத் துணிந்தா***
***ளேனும், கூனி மொழியால்,***
***தன் மா மகனும் தானும்***
***தரணி பெறுமாறு அன்றி,***
***என் மா மகனை, "கான் ஏகு"***
***என்றாள்; என்றாள்' என்றான்.***

***'வன் மாயக் கைகேசி, வாக்கால் என்தன் உயிரை முன் மாய்விப்பத் துணிந்தாளேனும் -*** *வலிய வஞ்சனை உள்ள கைகேயி தன் சொல்லால் என் உயிரை முன்னால் அழிக்கத் துணிந்தாள்ஆனாலும்;* ***கூனி மொழியால் -*** *கூனியின் துர்ப் போதனையால்;* ***தன் மா மகனும் தானும்தரணி பெறுமாறன்றி -*** *தன் சிறந்த மகனாகிய பரதனும், அவளும் ஆட்சியைப் பெறுவது அல்லாமல்;* ***என் மா மகனை -*** *என் சிறந்த மகனாகிய இராமனை;* ***'கான் ஏகு' என்றாள்; என்றாள் -*** *காட்டிற்குச் செல் என்று சொன்னாள்;'* ***என்றான் -.***

*கூனி மொழியால்தான் கைகேயி வரம் கேட்டாள் என்பதைத் தசரதன் உணர்ந்தமை இதனால்புலப்படுகிறது. முன் கைகேசி சூழ்வினைப் படலத்து 'பொய்ந்நிலையோர்கள் புணர்த்த வஞ்சம்உண்டோ' என்ற தசரதன் கேள்விக்கு, 'எனக்கு வந்து தீயோர் இசைத்ததும் இல்லை' என்ற கைகேயி பதில் கூறினாள். ஆயினும் (1512, 1513) தசரதன் கூனியால்தான் கைகேயி மனம் மாறினாள்என்பதை உணர்ந்தபடியை அங்குக் கூறாது விட்ட கம்பர் இங்கே அவனால் அது*

*உணரப்பட்டபடியைச்சொன்னார் எனக் கொள்க. 71 தசரதன் கோசலையிடம் தன் பழைய சாப வரலாறு கூறல்*

***1677. ‘பொன் ஆர் வலயத் தோளான்,***
***கானோ புகுதல் தவிரான்;***
***என் ஆர் உயிரோ அகலாது***
***ஒழியாது; இது, கோசலை கேள்;***
***முன் நாள், ஒரு மா முனிவன்***
***மொழியும் சாபம் உளது’ என்று,***
***அந் நாள் உற்றது எல்லாம்***
***அவளுக்கு அரசன் அறைவான்.***

***‘கோசலை!*** - *கோசலையே;* ***பொன் ஆர் வலயத் தோளான்*** - *பொன்னாற்செய்யப் பெற்ற வாகுவலயம் அணிந்த தோளை உடைய இராமன்;* ***கான் புகுதல் தவிரான்*** - *காட்டிற் செல்லுதலைக் கை விடான்;* ***என் ஆர் உயிரோ அகலாது ஒழியாது*** - *என்னுடையஅரிய உயிரோ போகாமல் நிற்காது;* ***இது கேள்*** - *இதனைக் கேட்பாயாக;* ***‘ஒருமா முனிவன் முன்நாள் மொழியும் சாபம் உளது’ என்று*** - *ஒரு சிறந்த தவசி முன்னொரு காலத்து(என்னை நோக்கிக்) கூறிய சாபம் உண்டு’ என்று;* ***அந்நாள் உற்றது எல்லாம்*** - *அந்தநாளில் நடந்த நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும்;* ***அவளுக்கு*** - *அந்தக் கோசலையிடம்;* ***அரசன்*** - *தயரதன்;* ***அறைவான்*** - *கூறுவான் ஆனான்.*

*இராமன் காடு செல்வதும் தயரதன் உயிர் போவதும் நிச்சயம் நிகழ்ந்தே தீரும் முன்னாளையசாப வரலாறு உறுதிப்படுத்துவது ஆதலின் அதனைக் கோசலைக்குக் கூறலாயினன். ‘கானோ’ ‘ஓ’ காரம்தெரிநிலை. அகலாது ஒழியாது இரண்டு எதிர்மறைகள் கூடி ‘அகலும்’ என்ற உடன்பாட்டுப் பொருள்தந்தன. ‘உற்றது எல்லாம்’ ஒருமை பன்மை மயக்கம். ‘உற்றவை’ என வரல் வேண்டும். “எல்லாம் என்னும் பெயர் நிலைக் கிளவி, பல்வழி நுதலிய நிலைத் தாகும்மே” என்பது தொல்காப்பியம். (தொல். சொல். 188) ‘அவளுக்கு’ ‘அவளிடம்’ என்று ஏழாவதன்கண் நான்காவது வந்த உருபு மயக்கம். முனிவன் - சல போசனன் (நீரையே ஆகாரமாக உடையவன்). 72*

***1678. ‘வெய்ய கானத்திடையே,***
***வேட்டை வேட்கை மிகவே,***
***ஐய, சென்று, கரியோடு***
***அரிகள் துருவித் திரிவேன்,***
***கையும் சிலையும் கணையும்***
***கொடு, கார் மிருகம் வரும் ஓர்***
***செய்ய நதியின் கரைவாய்ச்***
***சென்றே மறைய நின்றேன்.***

***‘வேட்டை வேட்கை மிக*** - *வேட்டையாடுதலில் விருப்பம் மேற்செல்ல;* ***வெய்யகானத்திடையே சென்று*** - *கொடிய காட்டின்கண் போய்;* ***ஐய கரியோடு அரிகள் துருவித்திரிவேன்*** - *அழகிய யானையோடு சிங்கங்களைத் தேடிச் சுற்றுகின்ற யான்;* ***கார்***

***மிருகம்வரும்-*** *கரிதான விலங்காகிய யானை முதலிய வருகின்ற;* ***ஓர் செய்ய நதியின் கரைவாய்*** *- ஒரு துறையொழுங்கு உடைய ஆற்றின் கரைக்கண்;* ***கையும் சிலையும் கணையும் கொடு -*** *கையில் வில்லும் அம்பும் கொண்டு;* ***சென்று மறைய நின்றேன் -*** *சென்று மறைவாகநின்றேன்.*

*ஐய - அழகாக எனப் பொருள்படும், வளர்ச்சியாலும் வனப்பாலும் வியப்புத்தரும் எனலுமாம்.கார் மிருகம் - யானை, செய்ய நதி - துறை ஒழுங்கு இங்கே ஆற்றுக்குச் செம்மை. அதனால்மனிதரும் தண்ணீர் எடுக்க வசதியான ஆறு எனல் ஆகும். 'ஏ' இரண்டும் அசை. 73*

***1679. 'ஒரு மா முனிவன் மனையோடு,***
***ஒளி ஒன்றிலவாய் நயனம்***
***திரு மா மகனே துணையாய்,***
***தவமே புரி போழ்தினின்வாய்,***
***அரு மா மகனே, புனல் கொண்டு***
***அகல்வான் வருமாறு, அறியேன்,***
***பொரு மா கணை விட்டிடலும்,***
***புவிமீது அலறிப் புரள.***

***'ஒரு மா முனிவன் -*** *ஒப்பற்ற சிறந்த முனிவன்;* ***மனையோடு -*** *தன்மனைவியோடு;* ***நயனம் ஒளி ஒன்றிலவாய் -*** *கண்கள் பார்வை ஒளி இழந்தனவாகி;* ***திருமா மகனே -*** *அழகிய சிறந்த மகனே;* ***துணையாய் -*** *தனக்கு உதவியாகக் கொண்டு;* ***தவமே புரி போழ்தினின்வாய் -*** *தவம் செய்துகொண்டிருக்கின்ற காலத்தின்கண்;* ***அரு மாமகனே -*** *அரிய சிறந்த அம்மகனே;* ***புனல் கொண்டு அகல்வான் -*** *நீர் எடுத்துக்கொண்டு செல்வதற்காக;* ***வருமாறு அறியேன் -*** *வரும் தன்மையை அறியாதவனாய்;* ***பொரு மா கணை விட்டிடலும் -*** *அழிக்கின்ற சிறந்த அம்பை விட்ட அளவில்;* ***புவிமீது அலறிப்புரள -*** *(அம்பு பட்டு அம்மகன்) மண்ணின் மீது புரண்டு அலற.*

*மகன் - புரோசனன், மகனே துணையாய்த் தவம் செய்தனர் என்பதால் முனிவனும் அவன் மனைவியும் இருவரும் பார்வை இழந்தவர்கள் என்பதாம். நீர் முகக்கும்ஓசை கேட்டு ஓசையின்மூலம் அம்பைவிடும் 'சப்த வேதி' என்னும் முறையில், யானை நீர்குடிப்பதாகக் கருதி அம்பை எய்தான் ஆதலின் 'அறியேன்' என்றான். இருமுதுகுரவர்க்கும் கடமைஆற்றும் சிறப்பு நோக்கி, 'திரு மா', 'அரு மா' என்று அம்மகனைச் சிறப்பித்தார். மகனே'ஏ' காரம் பிரிநிலை. வேறு துணையில்லை என்றவாறாம்.* ***1680. 'புக்குப் பெரு நீர் நுகரும்***
***பொரு போதகம் என்று, ஒலிமேல்***
***கைக்கண் கணை சென்றது அலால்,***
***கண்ணின் தெரியக் காணேன்,***
***அக் கைக் கரியின் குரலே***
***அன்ற ஈது' என்ன வெருவா,***
***'மக்கள் - குரல்' என்று அயர்வேன்,***
***மனம் நொந்து, அவண் வந்தனெனால்.***

*'(அது கேட்டு)* ***புக்கு -*** *ஆற்றில் நுழைந்து;* ***பெரு நீர் நுகரும் -*** *மிகுதியானநீரைக் குடிக்கும்;* ***பொரு போதகம் என்று -*** *போரிடும் யானை என்று கருதி (அவ்வோசைவழியே);* ***கைக்கண் கணை சென்றது அலால் -*** *கையின்கண் இருந்த அம்பு சென்றதேஅல்லாமல்;* ***கண்ணின் தெரியக் காணேன் -*** *கண்ணால் நன்கு விளங்கப் பார்க்காத நான்; (அலறும் ஒலி வந்தவுடன்);* ***'ஈது அக் கைக்கரியின் குரல் அன்று' என்ன வெருவா -*** *இதுநாம் நினைத்த துதிக்கை உடைய யானையின் ஒலி அன்று என்று கருதிப் பயந்து;* ***'மக்கள் குரல்' என்று அயர்வேன் -*** *மனிதக் குரல் என்று கருதிச் சோர்ந்து;* ***மனம் நொந்து -*** *மனம் வருந்தி;* ***அவண் வந்தனென் -*** *நீர் முகக்கும் துறைக்கு வந்தேன்.'*

*விழுந்து அலறிய போதுதான் மனிதக் குரல் என்று வேறுபாடு அறிந்தேன். நடுங்கினேன்என்றான். 'ஆல்' அசை.* *75*

***1681. 'கையும் கடனும் நெகிழக்***
***கணையோடு உருள்வோற் காணா,***
***மெய்யும் தனுவும் மனனும்***
***வெறிது ஏகிட, மேல் வீழா,***
***'ஐய! நீதான் யாவன்?***
***அந்தோ! அருள்க" என்று அயர,***
***பொய் ஒன்று அறியா மைந்தன்,***
***"கேள் நீ " என்னப் புகல்வான்.***

***'கையும் கடனும் நெகிழ -*** *கையும் குடமும் நெகிழ்ந்து விலக;* ***கணையோடுஉருள்வோன் காணா -*** *அம்போடு தரையில் உருளுகின்ற முனிமகனைக் கண்டு;* ***மெய்யும் தனுவும்மனனும் வெறிது ஏகிட -*** *(என்) உடலும் வில்லும் மனமும் வெறுமையாகிச் செல்ல;* ***மேல்வீழா -*** *மேலே விழுந்து;* ***'அந்தோ! -*** *ஐயோ;* ***ஐய! -*** *ஐயனே;* ***நீ தான்யாவன் -*** *நீ யார்;* ***அருள்க' -*** *சொல்வாயாக;'* ***என்று அயர -*** *என்றுகேட்டுச் சோர்வடைய;* ***பொய் ஒன்று அறியா மைந்தன் -*** *சத்திய வாக்கினன் ஆகிய அம் முனி மகன்;* ***'நீ கேள்' எனப் புகல்வான் -*** *நீஇதனைக் கேள் என்று தன் வரலாற்றைச் சொல்வானாயினன்.'*

*தான் செய்த தவறால் உள்ளீடற்று மனமும் உடலும் வெறுமையானது என்றானாம். வில் கீழேவிழுந்து விட்டதாகலின் வெறுமையானது. கடம் - கடன் போலி; மனன் - மனம்; இதுவும் போலி.* *76*

***1682. ' "இரு கண்களும் இன்றிய தாய்***
***தந்தைக்கும், ஈங்கு, அவர்கள்***
***பருகம் புனல் கொண்டு அகல்வான்***
***படர்ந்தேன்; பழுது ஆயினதால்; -***
***இரு குன்று அனைய புயத்தாய்! -***
***இபம் என்று, உணராது எய்தாய்;***
***உருகும் துயரம் தவிர், நீ;***
***ஊழின் செயல் ஈது!' என்றே.***

***‘இரு குன்று அனைய புயத்தாய்!* -** *இரண்டு மலைகளைப் போன்ற தோளை உடையவனே!;* ***‘ஈங்கு இரு கண்களும் இன்றிய தாய் தந்தைக்கும்* -** *இப்பொழுது இரு கண்களும் இல்லாத தாய்தந்தை இருவர்க்கும்;* ***பருகும் புனல் கொண்டு அகல்வான் படர்ந்தேன்* -** *உண்ணுகின்றநீரை முகந்து கொண்டு செல்ல வேண்டி வந்தேன்;* ***பழுது ஆயினது* -** *அச்செயல் பழுது ஆய்விட்டது;* ***உணராது* -** *அறியாமல்;* ***இபம் என்று எய்தாய்* -** *யானை என்று கருதி(என்மீது) அம்பு தொடுத்தாய்;* ***ஈது ஊழின் செயல்* -** *இது விதியினது தொழில் (என்று நினைந்து);* ***நீ உருகும் துயரம் தவிர்’* -** *நீ மனம் கரைகின்ற துன்பத்தை விடு;* ***என்று-*** *எனச் சொல்லி.*

*‘பழுது ஆயினது’ எனக்கு இத்தீமை உண்டாயிற்று எனலும் ஆம். தனக்கு உண்டான தீமை கருதாதுபெற்றோர்களுக்கு நிர் கொண்டு போம் செயல் குன்றி விட்டதே என்பதை நினைத்து வருந்துவதாகமுனிமகனைக் கூறல் அவனது பண்பை மேலும் சிறப்பிப்பது ஆகும். ‘ஆல்’ ‘ஏ’ அசைகள்.* *77*

***1683. ‘ “உண் நீர் வேட்கை மிகவே***
***உயங்கும் எந்தைக்கு, ஒரு நீ,***
***தண்ணீர் கொடு போய் அளித்து, என்***
***சாவும் உரைத்து, உம் புதல்வன்***
***விண்மீது அடைவான் தொழுதான்’***
***எனவும், அவர்பால் விளம்பு” என்று,***
***எண் நீர்மையினான் விண்ணோர்***
***எதிர்கொண்டிட, ஏகினனால்.***

***‘நீர் உண் வேட்கை மிகவே* -** *நீர் உண்ணுகின்ற விருப்பம் மிகுதலால்;* ***உயங்கும் எந்தைக்கு* -** *வருந்துகின்ற என் தந்தைக்கு;* ***ஒரு நீ*** *- ஒப்பற்ற நீ;* ***தண்ணீர் கொடுபோய் அளித்து* -** *குளிர்ந்த நீரைக் கொண்டுபோய்க் கொடுத்து;* ***என் சாவும் உரைத்து*** *- என் இறப்பையும் அவர்களுக்குத் தெரிவித்து;* ***‘உம் புதல்வன்விண்மீது அடைவான் தொழுவான்’ எனவும் விளம்பு*** *- உம் மகன் இறந்து சுவர்க்கம் செல்கின்றவன் உம்மை வணங்கினான் என்கின்ற செய்தியையும் அறிவிப்பாயாக;* ***என்று* -** *எனச் சொல்லி;* ***எண் நீர்மையினான்* -** *புகழத்தக்க நற்குண நற் செயல்களால்;* ***விண்ணோர் எதிர்கொண்டிட* -** *தேவர்கள் வரவேற்க;* ***ஏகினன்* -** *(பரலோகத்திற்குச்) சென்றான்.*

*‘எந்தை’ எனவே தாயும் அடங்கியது. ‘அவர்’ என்று பின்வரும் பன்மையும் - ‘உம்’ என்ற முன்னிலையும் அதுபற்றி வந்தனவே. செய்த குற்றத்தை நினைத்துக்கசிந்துருகித் துடிக்கும் மனம் உடையவனாயினமை பற்றித் தயரதனை ‘ஒரு நீ’ என்றான் முனிகுமரன்.‘ஆல்’ அசை.* *78*

***1684. ‘மைந்தன் வரவே நோக்கும்,***
***வள மாதவன் பால், மகனோடு***
***அம் தண் புனல் கொண்டு அணுக,***
***“ஐயா, இதுபோது அளவாய்***
***வந்து இங்கு அணுகாய்; என்னோ***
***வந்தது? என்றே, நொந்தேம்;***

***சந்தம் கமழும் தோளாய்,***
***தழுவிக் கொள வா" எனவே.***

**'மைந்தன் வரவே நோக்கும் -** *மகனது வருகையையே எதிர் பார்த்துக்கொண்டிருக்கின்ற;* **வள மாதவன்பால் -** *மிக்க தவத்தை உடைய முனிவனிடம்;* **மகனோடு -** *(இறந்த) மகனோடு;* **அம் தண்புனல் கொண்டு அணுக -** *அழகிய குளிர்ந்த நீரை எடுத்துக் கொண்டு நெருங்கிச் செல்ல;* **'ஐயா! -** *மகனே;* **இது போது அளவாய் -** *இவ்வளவு நேரமாய்* **; வந்து இங்கு அணுகாய் -** *இங்கு வந்து சேராமையால்;* **என்னோ வந்தது? -** *உனக்கு என்ன நேர்ந்ததோ;* **என்றே -** *என்று நினைத்து;* **நொந்தேம்-** *வருந்தினோம்;* **சந்தம் கமழும் தோளாய்! -** *சந்தனம் மணக்கின்ற தோளைஉடைய மகனே;* **தழுவிக் கொள வா' -** *நாங்கள் தழுவிக் கொள்ளும்படி (அருகில்) வா;* **என -** *என்று சொல்லி.*

***தசரதன் இறந்த மகன் உடலை எடுத்துக்கொண்டு தண்ணீருடன் கண் இழந்த முனி தம்பதிகளைஅணுக, அவர்கள் தம் மகன் வந்ததாகவே கருதினர் என்பது இதனால் விளங்கும். 'ஏ' ஈற்றசை.*** *79*

*1685.* ***' "ஐயா! யான் ஓர் அரசன்;***
***அயோத்தி நகரத்து உள்ளேன்;***
***மை ஆர் களபம் துருவி,***
***மறைந்தே வதிந்தேன், இருள்வாய்;***
***பொய்யா வாய்மைப் புதல்வன்***
***புனல் மொண்டிடும் ஓதையின்மேல்,***
***கை ஆர் கணை சென்றதுஅலால்,***
***கண்ணின் தெரியக் காணேன்.***

**'ஐயா! -** *சுவாமி;* **யான் அயோத்தி நகரத்து உள்ளேன் ஓர் அரசன் -***அயோத்தி நகரத்தில் உள்ள ஓர் அரசனாவேன்;* **மைஆர் களபம் துருவி மறைந்து வதிந்தேன்-** *கருமை பொருந்திய யானையைத் தேடி மறைந்து தங்கியிருந்தேன்;* **இருள்வாய் -** *இருட்டில்;* **பொய்யா வாய்மைப் புதல்வன் -** *சத்திய வாக்கினை உடைய உங்கள் மகன்;* **புனல் மொண்டிடும் ஓதையின்மேல் -** *நீரை முகக்கும் ஓசையினிடமாக;* **கை ஆர் கணைசென்றது அலால் -** *கையில் உள்ள அம்பு சென்றதே அல்லாமல்;* **கண்ணில் தெரியக்காணேன்' -** *(நீர் முகப்பாரைக்) கண்ணில் விளங்கப் பார்த்தறியேன்' ஆயினேன்.*

*ஓசையின் மூலம் அம்பு எய்தேன். பார்த்து எய்தேனில்லை என்பதால் அறிவுபூர்வமாகநிகழ்ந்த கொலை அன்று என்றானாம். 'மறைந்தே' 'ஏ' காரம் தேற்றம்.*
*80*

*1686.* ***' "வீட்டுண்டு அலறும் குரலால்,***
***வேழக் குரல் அன்று எனவே***
***ஓட்டந்து எதிரா, ' நீ யார்?'***
***என, உற்ற எலாம் உரையா,***
***வாட்டம் தரும் நெஞ்சினன் ஆய்,***

***நின்றான் வணங்கா, வானோர்***
***ஈட்டம் எதிர் வந்திடவே,***
***இறந்து ஏகினன் விண்ணிடையே.***

***'வீட்டு உண்டு** - அம்பு விடுதலால் அடிபட்டு; **அலறும் குரலால்** - கதறுகின்றசப்தத்தால்; **வேழக் குரல் அன்று எனவே** - யானையின் குரல் அன்று என்று கருதி; **ஓட்டந்து** - ஓடி; **எதிரா** - (உங்கள் மகனைச்) சந்தித்து; **'நீ யார்' என** - நீ யார் என்று (நான் கேட்க குமரன்); **உற்ற எலாம் உரையா** - நடந்தவை அனைத்தையும்சொல்லி; **வாட்டம் தரு நெஞ்சினனாய்** - வாடிப் போன மனம் உடையவனாகி; **வணங்கா நின்றான்** - உங்களிருவருக்கும் வணக்கம் தெரிவித்து, பேச்சு அடங்கினான்; **வானோர் ஈட்டம் எதிர் வந்திட** - தேவர்கள் கூட்டம் எதிர்வந்து வரவேற்க; **இறந்து விண்ணிடை** - இறந்து மேல்உலகத்தின்கண்; **ஏகினன்** - சென்றான்:*

*வாட்டம் தரும் நெஞ்சு - தன்னைப் பிரிந்தமையால் கண் இழந்த பெற்றோர் முதுமையில்உதவுவாரின்றி வாடுவர் என்பது பற்றிய வாட்டம் என்க. இறுதி 'ஏ' காரம் ஈற்றசை.* ***81***

***1687. ' "அறுத்தாய் கணையால் எனவே,***
***அடியேன்தன்னை, ஐயா!***
***கறுத்தே அருளாய், யானோ***
***கண்ணின் கண்டேன் அல்லேன்,***
***மறுத் தான் இல்லான் வனம்***
***மொண்டிடும் ஓதையின் எய்தது அலால்;***
***பொறுத்தே அருள்வாய்!" என்னா,***
***இரு தாள் சென்னி புனைந்தேன்.***

***'ஐயா!** - ஐயனே; **கணையால் அறுத்தாய் எனவே** - (என் மகனை) அம்பால்எய்து அழித்தாய் என்று; **அடியேன் தன்னை** - அடியேனை; **கறுத்தே அருளாய்** - கோபித்து விடாமல் இருப்பாயாக; **மறுத்தான் இல்லான்** - களங்கம் சிறிதும் இல்லாதவனாயநின்மகன்; **வனம் மொண்டிடும் ஓதையின்** - நீரை முகக்கின்ற ஓசையினால்; **எய்தது அலால்** - அம்பு எய்தது அல்லாமல்; **யானோ கண்ணில் கண்டேன் அல்லேன்** - யான்கண்ணால் பார்த்து (அம்பு எய்தேன் அல்லேன்); **பொறுத்து அருள்வாய்'** - (இந்த எனதுபிழையைப்) பொறுத்தருள்வாயாக; **என்னா** - என்று; **இரு தாள்** - (அம்முனிவனது) இரு திருவடிகளையும்; **சென்னி புனைந்தேன்** - (விழுந்து வணங்கி) என் தலைமேல் சூடிக்கொண்டேன்.*

*கறுத்தல்- கோபித்தல். ''கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள்'' (தொல். சொல்.372.) என்பது காண்க. அருளுதல் துணைவினை. கறுத்தருளாய் என ஒன்றாக்குக. பெரியோர் செயலைச்சொல்லும் இடத்து 'அருளாய் ' எனும் சொல் வரும். அருளாய் என்பதில் ஆகாரம் எதிர்மறை.* ***82***

***1688. 'வீழ்ந்தார்; அயர்ந்தார்; புரண்டார்;***
***"விழி போயிற்று, இன்று" என்றார்;***
***ஆழ்ந்தார் துன்பக் கடலுள்;***

***"ஐயா! ஐயா!" என்றார்;***
***"போழ்ந்தாய் நெஞ்சை" என்றார்;***
***"பொன்நாடு அதனில் போய், நீ***
***வாழ்ந்தே இருப்பத் தரியேம்;***
***வந்தேம்! வந்தேம்! இனியே."***

*(மகன் இறந்தான் என்பது கேட்ட அவ் இரு முதுகுரவரும்)* ***'வீழ்ந்தார் அயர்ந்தார்புரண்டார் -*** *தரையில் விழுந்து சோர்வு அடைந்து புரண்டார்கள்;* ***'இன்று விழிபோயிற்று' என்றார் -*** *இன்றைக்கு எங்கள் கண்கள் போயின என்றார்;* ***துன்பக் கடலுள்ஆழ்ந்தார் -*** *துன்பம் எனும் பெருங்கடலுள் மூழ்கினர்;* ***'ஐயா! ஐயா' என்றார் -*** *(மகனை நினைத்து) ஐயனே ஐயனே என்றார்;* ***'நெஞ்சைப் போழ்ந்தாய்' என்றார் -*** *(எங்கள்) மனத்தைப் பிளந்துவிட்டாய் என்றார்;* ***'நீ பொன்நாடு அதனில் போய் வாழ்ந்தே இருப்பத் தரியேம்' -*** *நீ பொன்னுலகம் சென்று அங்கு வாழ்ந்து இருப்ப நாங்கள்தனித்திருக்க மாட்டேம்;* ***இனியே வந்தேம், வந்தேம் -*** *இப்பொழுதே வந்துவிட்டோம், வந்து விட்டோம் (என்ற புலம்பினர்.)*

*இறந்த மகனின் பெற்றோர்கள் புலம்பினர். இனி ஒரு செயலும் செய்ய இயலாதவர்களாகஆனோம் என்பது கருத்து.* ***83***

***1689. 'என்று என்று அயரும் தவரை,***
***இரு தாள் வணங்கி, " யானே***
***இன்று உம் புதல்வன்; இனி, நீர்***
***ஏவும் பணி செய்திடுவேன்;***
***ஒன்றும் தளர்வுற்று அயரீர்;***
***ஒழிமின் இடர்" என்றிடலும்,***
***"வண் திண் சிலையாய் கேண்மோ"***
***எனவே, ஒரு சொல் வகுத்தான்:***

***'என்று என்று -*** *இவ்வாறு பலபடியாகப் புலம்பி;* ***அயரும் -*** *சோர்வடைகிற;* ***தவரை -*** *முனிவரை;* ***இருதாள் வணங்கி -*** *திருவடிகளில் வணங்கி;* ***யானே இன்றுஉம் புதல்வன் -*** *நான் இன்று முதல் உங்கள் மகன் ஆவேன்;* ***இனி நீர் ஏவும்பணிசெய்திடுவேன் -*** *இனி மேல் நீங்கள் இடும் கட்டளையைச் செய்து முடிப்பேன்;* ***ஒன்றும்தளர்வுற்று அயரீர் -*** *சிறிதும் சோர்வடையாதீர்;* ***இடர் ஒழிமின்'-*** *துன்பம்நீங்குங்கள்;* ***என்றிடலும் -*** *என்று சொல்லவும்;* ***'வன் திண் சிலையாய்! -*** *வலிய கட்டமைந்த வில்லை உடையவனே;* ***கேண்மோ' -*** *கேட்பாயாக;* ***எனவே -*** *என்று;* ***ஒரு சொல் வகுத்தான் -*** *(அம்முனிவன்) ஒரு வார்த்தை சொன்னான்.*

*'யானே' 'ஏ' காரம் தேற்றம். ஒழிமின் - முன்னிலைப் பன்மை வினைமுற்று. 'கேண்மோ' -'மோ' முன்னிலை அசைச்சொல். காமம் செப்பாது கண்டது மொழிமோ' (குறுந்.2) என்புழிப் போல.* ***84***

***1690. ' "கண்ணுள் மணிபோல் மகவை***
***இழந்தும் உயிர் காதலியா,***

*உண்ண எண்ணி இருந்தால்,*
*உலகோர் என் என்று உரையார்?*
*விண்ணின்தலை சேருதும் யாம்;*
*எம்போல், விடலை பிரிய,*
*பண்ணும் பரி மா உடையாய்;*
*அடைவாய், படர் வான்" என்னா.*

***'கண் உள் மணி போல் மகவை இழந்தும்*** *- கண்ணிற்குள்ளே உள்ள கருமணிப் பாவைபோன்ற சிறந்த மகனை இழந்த பிறகும்;* ***உயிர் காதலியா*** *- உயிர்மேல் ஆசை வைத்து;* ***உண்ண எண்ணி இருந்தால்*** *- உண்பதற்கு நினைத்து (உலகில் வாழ்ந்து) இருந்தால்;* ***உலகோர் என் என்று உரையார்?*** *- உலகில் உள்ளவர்கள் (எங்களை) என்னவென்று பழியார்;* ***யாம் விண்ணின்தலை சேருதும்*** *- நாங்களும் (இறந்து) மேல் உலகம் சேர்கிறோம்;* ***பண்ணும் பரிமா உடையாய்*** *- அலங்கரிக்கப் பெற்ற குதிரையை உடைய மன்னனே;* ***எம்போல்*** *- எங்களைப் போல;* ***விடலை பிரிய*** *- மகன் பிரிந்து செல்ல;* ***படர்வான் அடைவாய்'*** *- அகன்ற வானுலகை அடைவாயாக;* ***என்னா*** *- என்று சொல்லி.*

*உலகோரது பழிமொழிக்கு அஞ்சி யாங்கள் வானுலகு சேர்வோம் என்று மனைவியையும்,உளப்படுத்தி முனிவன் கூறினான் - 'கண்ணிற் கருமணி' என்றான் மகனை; இதுவரை இவர்களுக்குப்பார்வையாக இருந்தவன் ஆதலின்.*
*85*

***1691.*** *' " தாவாது ஒளிரும் குடையாய்!*
*'தவறு இங்கு இது; நின் சரணம்,*
*காவாய்' என்றாய்; அதனால்,*
*கடிய சாபம் கருதேம்;*
*ஏவா மகவைப் பிரிந்து, இன்று*
*எம்போல் இடர் உற்றனை நீ*
*போவாய், அகல் வான்" என்னா,*
*பொன் நாட்டிடை போயினரால்.*

***'தாவாது ஒளிரும் குடையாய்!*** *- கெடாது ஒளிவீசும் வெண்குடை வேந்தே;* ***'இங்குஇது தவறு, நின் சரணம், காவாய்' என்றாய்*** *- இங்கு நான் செய்த இச்செயல் என் தவறே,நின் திருவடியைப் புகலாக அடைந்தேன், என்னைக் காப்பாற்று என்று சொன்னாய்;* ***அதனால்*** *- (குற்றத்தை ஒப்புக்கொண்டு) சரணம் அடைந்தமையால்;* ***கடிய சாபம் கருதேம்*** *- கொடிய சாபம் கொடுக்கக் கருதவில்லை;* ***ஏவா மகவைப் பிரிந்து*** *- கட்டளை இடவேண்டாது குறிப்பறிந்து செய்யும் நன்மகனைப் பிரிந்து;* ***இன்று எம்போல்*** *- இன்று நாங்கள் துன்பப்படுவது போல்;* ***இடர் உற்றனை*** *- துன்பம் அடைந்தனையாய்;* ***நீ அகல் வான்போவாய்*** *- நீ அகன்ற வானத்தை அடைவாய்;* ***என்னா*** *- என்று சாபம் தந்து;* ***பொன் நாட்டிடை போயினர்*** *- விண்ணுலகம் சென்றார்கள்.*

*'கடிய சாபம்' என்பது 'பிள்ளை இறக்க' என்று சொல்லாமல், பிள்ளை பிரிய என்றுசொல்லியது கருதி. 'எம்போல்' என்றாலும், பிள்ளை இறப்பதை நீக்கிய*

*உவமை; நாங்கள் உயிர்துறப்பது போல் நீயும் உயிரிழப்பாய் என்று சுட்டும் அளவில் நின்றது. 'ஆல்' ஈற்றசை.* ***86***

***1692. 'சிந்தை தளர்வுற்று, அயர்தல்***
***சிறிதும் இலெனாய், "இன் சொல்***
***மைந்தன் உளன்' என்றதனால்,***
***மகிழ்வோடு இவண் வந்தனெனால்;***
***அந்த முனி சொற்றமையின்,***
***அண்ணல் வனம் ஏகுதலும்,***
***எம்தம் உயிர் வீகுதலும்,***
***இறையும் தவறா' என்றான்.***

***'சிந்தை தளர்வுற்று அயர்தல் சிறிதும் இலெனாய்*** *- மனம் தளர்ந்து சோர்வடைதல்சிறிதும் இல்லாமல்;* ***இன் சொல் மைந்தன் உளன்' என்றதனால்*** *- இனிய சொற்களைப்பேசும் மகன் பிறப்பான்' என்பது அவன் சாபத்தால் ஏற்பட்டதனால்;* ***இவண்*** *-நகரத்துக்கு; மகிழ்வோடு வந்தனென் - மகிழ்ச்சியோடு வந்து சேர்ந்தேன்;* ***அந்த முனி சொற்றமையின்*** *- அந்த முனிவன் சொன்னபடியால்;* ***அண்ணல் வனம் போகுதலும்*** *-இராமன் (என்னைப்) பிரிந்து காடு செல்லுதலும்;* ***எம்தம் உயிர் வீகுதலும்*** *- என்னுடைய உயிர் போவதும்;* ***இறையும் தவறா'*** *- சிறிதளவும் மாறா;* ***என்றான் -***

*மகன் இன்றி இருந்த தயரதனுக்கு முனிவன் சாபம் மகன் உண்டு என்பதை உணர்த்திற்று என்பதால் அப்போதைக்கு அது மகிழ்ச்சியானதாகவே ஆயிற்று என்றானாம் - மகன் பிறப்பது முனிவன் சாபத்தால் உண்மையாகி நிறைவேறியமையின் மகன்பிரிவதும், தன்னுயிர் போவதும்கூட அச்சாபப்படி நிறைவேறுவது உறுதி என்றான். 'ஆல்' அசை. 'என்றா ன்' என்றமையவேண்டியது எதுகை நோக்கி எந்தம் என நின்றது.* ***87***

வசிட்டன் அரசவை அடைதல்

கலிவிருத்தம்

***1693. உரை செய் பெருமை உயர்***
***தவத்தோர் ஓங்கல்,***
***புரைசை மத களிற்றான்***
***பொற் கோயில்முன்னர்,***

***முரைசம் முழங்க, முடி சூட்ட***
***மொய்த்து, ஆண்டு***
***அரைசர் இனிது இருந்த நல்***
***அவையின் ஆயினான்.***

***உரைசெய் பெருமை*** *- புகழப்படும் பெருமை உடைய;* ***உயர் தவத்தோர் ஓங்கல்*** *- உயர்ந்த முனிவர்களுக்கெல்லாம் மலைபோல உயர்ந்த வசிட்டன்;* ***புரைசை மத***

***களிற்றான்பொன் கோயில் மன்னர்*** - *மணிகட்டிய கயிற்றை உடைய மத யானையை உடைய மன்னனது அரண்மனைமுன்றிலில்;* ***முரைசம் முழங்க*** - *முரச வாத்தியம் ஒலிக்க;* ***முடி சூட்ட மொய்த்து*** - *இராமனுக்குப் பட்டாபிடேகம் செய்ய நெருங்கி;* ***ஆண்டு*** - *அவ்விடத்தே;* ***அரைசர்*** - *மன்னர்கள்;* ***இனிது இருந்த நல் அவையின் ஆயினான்*** - *இனிமையாக வீற்றிருந்த நல்லசபாமண்டபத்தை வந்து அடைந்தான்.*

*இராமனது முடிசூட்டு விழாவை முன்னிட்டு மன்னர்கள் நெருங்கியிருந்த அத்தாணி மண்டபத்துக்குவசிட்டன் வந்து சேர்ந்தான். முன்பே அரசர்கள் கோசலையின் புலம்பல் கேட்டு 'அவ் ஆறுஅறிவாய் ' என்ன முனிவன் வந்தவன் ஆதலின், (1639.) அவர்களுக்குச் செய்தி அறிவிக்கச்சென்று சேர்ந்தான் என்க. புரசை என்பது எதுகை நோக்கி' புரைசை' என நின்றது. யானைக்கழுத்தில் இடும் கயிறு என்பது பொருள். முரசம் - முரைசம் போலி.* ***88***

*அரசர் முனிவனைக் கேட்டல்*

***1694. வந்த முனியை முகம் நோக்கி,***
***வாள் வேந்தர்,***
***'எந்தை! புகுதற்கு இடையூறு***
***உண்டாயதோ?***
***அந்தம் இல் சோகத்து அழுத***
***குரல்தான் என்ன?***
***சிந்தை தெளிந்தோய்! தெரி எமக்கு ஈது'***
***என்று உரைத்தார்.***

***வாள் வேந்தர்*** - *வாள் உடைய அரசர்;* ***வந்த முனியை முகம் நோக்கி*** *-வந்த வசிட்டனைப் பார்த்து;* ***'சிந்தை தெளிந்தோய்!*** - *மனம் தெளிந்த மாமுனிவனே;* ***எந்தை!*** - *எம் தந்தை போல்பவனே;* ***புகுதற்கு இடையூறு உண்டாயதோ?*** - *இராமன்முடிசூட்டு விழாவிற்கு வருதற்கு ஏதேனும் தடை உண்டாகியதா;* ***அந்தம் இல் சோகத்து அழுதகுரல்தான் என்ன?*** - *முடிவில்லாத துன்பத்துடன் கூடிய அழுகையொலி எதனால் ஆகியது;* ***எமக்குஈது தெரி'*** - *எங்களுக்கு இதனைத் தெரிவிப்பாயாக;'* ***என்று உரைத்தார்*** *-. இங்கே 'எந்தை' என்பதை முனிவனை நோக்கிய விளியாக ஆக்காமல், தயரதன் என்றோ,'இராமன் என்றோ பொருள் உரைத்து, முடிசூட்டு விழாவிற்கு தயரதன் வந்து சேர' அல்லது 'இராமன் வந்து சேர' தடை உண்டாகியதா என்று அரசர் வினாவியதாகக் கொள்வதும் நேரிய உரையேயாகும். முடி சூடிய பின்னர் இராமன் மன்னர் மன்னன் ஆகிவிடுவான் ஆதலின், அதுபற்றிஅரசர் இராமனை 'எம் தலைவன்' எனும் பொருளில் 'எந்தை' என வழங்கல் முறையே ஆகும்.* ***89***

*வசிட்டன் நடந்தவை உரைத்தல்*

***1695. 'கொண்டாள் வரம் இரண்டு,***
***கேகயர்கோன் கொம்பு; அவட்குத்***
***தண்டாத செங்கோல்***
***தயரதனும்தான் அளித்தான்;***
***"ஒண் தார் முகிலை வனம் போகு"***

***என்று, ஒருப்படுத்தாள்;***
***எண்தானும் வேறு இல்லை;***
***ஈது அடுத்தவாறு' என்றான்.***

***'கேகயர் கோன் கொம்பு*** *- கேகய நாட்டு அரசன் மகளாகிய கைகேயி;* ***இரண்டுவரம் கொண்டாள்*** *- இரண்டு வரங்களைப் (தசரதன்பால்) பெற்றுக் கொண்டாள்;* ***தண்டாதசெங்கோல்*** *- தடைபடாத செங்கோலாட்சியிற் சிறந்த;* ***தயரதனும்தான்*** *- தயரதமன்னனும்;* ***அவட்கு*** *- கைகேயிக்கு;* ***அளித்தான்*** *- (அவ்வரங்களைக்) கொடுத்தான் (அவ்வரங்களில் ஒன்றால்);* ***'ஒண்தார் முகிலை வனம் போகு' என்று ஒருப்படுத்தாள்*** *- ஒள்ளிய மாலை அணிந்த மேகம் போன்ற இராமனைக் காட்டிற்குச் செல்' என்று சொல்ல (அரசனை) உடன்பட வைத்தாள்;* ***எண் தானும் வேறு இல்லை*** *- எண்ண வேண்டிய வேறு துன்பம் ஏதும் இல்லை;* ***அடுத்த ஆறு ஈது'*** *- நடந்த நிகழ்ச்சி இதுவே;* ***என்றான்*** *-*

*'கொம்பு' உவமையால் கைகேயியை உணர்த்திற்று. இராமன் வனம் போகின்ற வரத்தை'முதலில் கொண்டதாக முனிவன் அரசவைக்குக் குறிப்பிட்டதில் ஒரு நயம் உண்டு. இராமன் காடுசென்று விடின் மிகுந்து நிற்போருள் மூத்தவன் பரதனே ஆதலின், இயல்பாகவே அவனுக்கு நாடாளும்உரிமையை உண்டாக்கிவிடுதலின். இதனையே கைகேயி மனம் திரிக்க வந்த மந்தரையும் முன்னர், 'மூத்தவற்கு உரித்து அரசு எனும் முறைமையின் உலகம், காத்த மன்னனின் இளையன் அன்றோ கடல் வண்ணன், ஏத்தும் நீள்முடி புனைவதற்கு இசைந்தனன் என்றால், மீத்தரும் செல்வம் பரதனைவிலக்குமாறு எவனோ' (1475) என்று கேட்டாள். தயரதன் முதியவன், மூத்தவன், அவன் தவம்செய்ய வனம் சென்றால், அவனிலும் இளையனாகிய இராமன் ஆட்சி உரிமை அடைவான் எனில், இராமன் வனம் புகுமாறு செய்யப்பெற்றால் பரதன் ஆட்சியுரிமை எய்து வதில் தடை என்ன என்பது மந்தரையின் வாதம். அதை ஒட்டியே இங்கே வசிட்டனும் மன்னர் பேரவைக்கு இராமன் வனம் புகு வரத்தை முன்னர் அறிவித்ததாக அமைந்திருப்பது அறிந்து இன்புறத்தக்கது.* ***90***

***1696. 'வேந்தன் பணியினால்,***
***கைகேசி மெய்ப் புதல்வன்,***
***பாந்தள்மிசைக் கிடந்த***
***பார் அளிப்பான் ஆயினான்;***
***ஏந்து தடந் தோள்***
***இராமன், திரு மடந்தை***
***காந்தன், ஒரு முறை போய்க்***
***காடு உறைவான் ஆயினான்.'***

***'வேந்தன் பணியினால்*** *- சக்கரவர்த்தியின் கட்டளையால்;* ***கைகேசி மெய்ப்புதல்வன்*** *- கைகேயியின் சத்திய மைந்தனாகிய பரதன்;* ***பாந்தள்மிசைக் கிடந்தபார்*** *- ஆதிசேடன் தலைமேல் தங்கிய இப்பூமியை;* ***அளிப்பான் ஆயினான்*** *- காப்பாற்றும் அரசுரிமையை எய்தியவன் ஆனான்;* ***ஏந்து தடந்தோள் இராமன் திருமடந்தை காந்தன்*** *- உயர்ந்த அகன்ற தோள்களை உடைய இராமனாகிய திருமகள் கணவன்;* ***ஒருமுறைகாடுபோய்***

***உறைவான் ஆயினான்*** - *ஒருமுறையாகக் காடு சென்று தங்குவான் ஆனான், (என்றான்முனிவன்.)*

*மேல்பாட்டின் மூலமாகவே மன்னர்களுக்கு இராமன் காடு செல்வதும், பரதன் நாடாள்வதும்அறிய வந்துவிடுகிறது. ஆயினும், முனிவன் அவைக்குக் கருத்து அறிவிக்க வேண்டியது முறை ஆதலின்முடிவு காட்டி இதனைக் கூறினானர்க்கே கூறியதாக்குக. ஒருமுறை எனக்கு தயரதன் தந்த வரத்தின்படி இராமன் காடு செல்வதும் ஒருவகையில் முறையானதே என்பதைச் சுட்டிற்று. (முறை -நீதி)* ***91***

இராமன் காடு செல்வது கேட்ட மக்கள் துயர்நிலை

***1697. வார் ஆர் முலையாரும்,***
***மற்று உள்ள மாந்தர்களும்,***
***ஆராத காதல்***
***அரசர்களும், அந்தணரும்,***
***பேராத வாய்மைப்***
***பெரியோன் உரை செவியில்***
***சாராத முன்னம்,***
***தயரதனைப்போல் வீழ்ந்தார்.***

**பேராத வாய்மைப் பெரியோன் உரை** - *பிறழ்ந்து போகாத உண்மைக்கு உறைவிடமான வசிட்ட முனிவனது வார்த்தை;* ***செவியில் சாராத முன்னம்*** *-(தங்கள்) காதுகளில் சேர்வதற்கு முன்னமே;* ***ஆராத காதல் அரசர்களும்*** *- (இராமனதுமுடிசூட்டு விழாவில்) அடங்காத அன்பை உடைய அரசர்களும்;* ***அந்தணரும்*** *- வேதியரும்;* ***மற்று உள்ள மாந்தர்களும்*** *- வேறு உள்ள மனிதர்களும்;* ***வார் ஆர் முலையாரும்*** *- கச்சணிந்த தனத்தையுடைய மகளிரும்;* ***தயரதனைப் போல் வீழ்ந்தார்*** *-*

*மற்றுள்ள மாந்தர்கள் - அமைச்சர், சேனைத் தலைவர், தூதுவர் முதலியவர். பெண்டிர்துன்பம் பெரிதாய்த் தோன்றுமாதலின் செய்யுளில் முதற்கண் உரைக்கப்பட்டது. தயரதன்தன்மகன் காரணமாகத் துன்பத்தில் ஆழ்ந்தது போலவே அத்தகைய அன்புடையவர்கள் இவர்களும்ஆதலின் 'தயரதனைப் போல் ' துன்புற்றார் என்றார். அதனையே 'ஆராத காதல்' எனவும் கூறினார்.* ***92***

***1698. புண் உற்ற தீயின்***
***புகை உற்று உயிர் பதைப்ப,***
***மண் உற்று அயர்ந்து***
***மறுகிற்று, உடம்பு எல்லாம்,;***
***கண் உற்ற வாரி***
***கடல் உற்றது; அந் நிலையே,***
***விண் உற்றது, எம் மருங்கும்***
***விட்டு அழுத பேர் ஓசை.***

***உடம்பு எல்லாம்*** -மக்கள் உடல்கள் எல்லாம்; ***புண் உற்ற தீயின்*** - புண்ணில் பட்ட நெருப்புப் போல; ***புகை உற்று*** - அனல் மூச்சு விட்டு; ***உயிர் பதைப்ப*** - உயிர் துடிதுடிக்க ***; மண் உற்று*** - நிலத்தில் பொருந்தி; ***அயர்ந்து*** -சோர்ந்து; ***மறுகிற்று*** - சுழன்று புரண்டது; ***கண் உற்ற வாரி*** - கண்ணிலிருந்து வந்தநீர்ப்பெருக்கு; ***கடல் உற்றது*** - கடலாகப் பெருகியது; ***எம் மருங்கும்*** - எப்பக்கத்திருந்தும்; ***விட்டு அழுத பேரோசை*** - (எல்லோரும்) வாய்விட்டு அழுத குரல் ஒலி; ***விண் உற்றது*** - வானத்தை அடைந்தது.

*'உடம்பு எல்லாம் மறுகிற்று' ஒருமை பன்மை மயக்கம். தொகுதி ஒருமை எனக் கூறி வழாநிலைஎனலும் ஆம். கண்ணீர்ப் பெருக்கு கடலைச் சென்று அடைந்தது எனலும்ஆம்.* ***93***

***1699. மாதர் அருங் கலமும்***
***மங்கலமும் சிந்தி, தம்***
***கோதை புடைபெயர,***
***கூற்று அனைய கண் சிவப்ப,***
***பாத மலர் சிவப்ப,***
***தாம் பதைத்துப் பார் சேர்ந்தார் -***
***ஊதை எறிய***
***ஒசி பூங் கொடி ஒப்பார்.***

***மாதர்தாம்*** - மகளிர்; ***அருங்கலமும் மங்கலமும் சிந்தி*** - அரிய அணிகலன்களும் மங்கலநாணும் கீழே விழ; ***தம் கோதை புடை பெயர*** - தம்முடைய கூந்தல்பக்கத்தில் குலைந்து விழ; ***கூற்று அனைய கண் சிவப்ப*** - யமனை ஒத்த கண்கள்சிவக்க; ***பாதமலர் சிவப்ப*** - அடிமலர் சிவக்க; ***ஊதை எறிய*** - பெருங்காற்று வீசுவதனால்; ***ஒசி*** - ஒடிந்து வீழ்கின்ற; ***பூங்கோடி ஒப்பார்*** - பூங்கொடியைஒத்தவர்களாய்; ***பதைத்துப் பார் சேர்ந்தார்*** - துடித்துப் பூமியில் விழுந்தார்கள்.

*'பூங்கொடி' இயல்பில் மெல்லிய மகளிர்க்கு உவமை. இங்கே 'ஊதை எறிய' என்றபடியால், துயர நிலையில் துடித்துத் தரையில் வீழும் பெண்களுக்கு உவமை ஆயிற்று.* ***94***

***1700. 'ஆ! ஆ! அரசன் அருள்***
***இலனே ஆம்' என்பார்;***
***'காவா, அறத்தை இனிக்***
***கைவிடுவேம் யாம்' என்பார்; -***
***தாவாத மன்னர் -***
***தலைத்தலை வீழ்ந்து ஏங்கினார்;***
***மா வாதம் சாய்த்த***
***மராமரமே போல்கின்றார்.***

***தாவாத மன்னர்*** - (வலி) அழியாத அரசர்; ***ஆ! ஆ!*** - அந்தோ! அந்தோ; ***அரசன்*** - தசரதன்; ***அருள் இலன்ஆம்'*** - இரக்கம் இல்லாதவன்; ***என்பார்-; யாம் இனி அறத்தைக் காவா கைவிடுவேம்'*** - நாங்கள் இனிமேல் தருமத்தைப்பாதுகாக்காமல் கைவிட்டு

*விடுவோம்;* ***என்பார்-; மா வாதம் சாய்த்த மராமரமேபோல்கின்றார்*** *- பெருங் காற்றால் வீழ்த்தப்பட்ட ஆச்சா மரத்தைப் போன்றவராய்;* ***தலைத் தலை*** *- மண்மேல்;* ***வீழ்ந்து ஏங்கினார்*** *- விழுந்து அழுதார். தயரதன் தருமம் காத்து அவலத்திற் பட்டதால், இனி இத்தருமத்தை யாமும் கைவிடுவோம் என்றார். 'இலனே' 'ஏ' காரம் தேற்றம். தலைத் தலை- முதல்தலை இடப்பெயர். இராண்டாவது தலை ஏழன் உருபு - தாமிருந்த இடத்தின்கண் விழுந்து அழுதார் 'என்பது பொருள். 95*

***1701. கிள்ளையொடு பூவை***
***அழுத; கிளர் மாடத்து -***
***உள் உறையும் பூசை***
***அழுத; உரு அறியாப்***
***பிள்ளை அழுத;***
***பெரியோரை என் சொல்ல? -***
***'வள்ளல் வனம் புகுவான் '***
***என்று, உரைத்த மாற்றத்தால்.***

***வள்ளல்*** *- இராமன்;* ***'வனம் புகுவான்*** *- காடு செல்வான்;'* ***என்று உரைத்த மாற்றத்தால்*** *- என்று சொல்லிய சொல்லால்;* ***கிள்ளையொடு பூவை அழுத*** *-கிளியும், நாகணவாய்ப் பறவையும் அழுதன;* ***கிளர் மாடத்து உள் உறையும் பூசை அழுத*** *-விளங்குகின்ற மாளிகையின் உள்ளே வசிக்கின்ற வீட்டுப் பூனைகள் அழுதன;* ***உரு அறியாப்பிள்ளை அழுத*** *- வடிவத்தைப் பார்த்து அறிய மாட்டாத சிறு குழந்தைகள் அழுதன;* ***பெரியோரை என் சொல்ல?*** *- பெரியோர்கள் அழுதமைமையப் பற்றி என்னவென்று சொல்வது?*

*அஃறிணைப் பொருள்களும் இராமன் பிரிவால் துயர் உறுவனவாகச் சொல்கிறார். ' உரு அறியாப் பிள்ளை' கருவில் இருக்கும் வடிவு காணாத குழந்தைகளும் அழுதன என்று துக்கத்தின் உச்சநிலையைக் காட்டிப் பொருள் உரைப்பினும் அமையும். இவையே இவ்வாறாயினமையின் பெரியோர்கள்அழுதமைபற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. 96*

***1702. சேதாம்பல் போது அனைய***
***செங் கனி வாய் வெண் தளவப்***
***போது ஆம் பல் தோன்ற,***
***புணர் முலைமேல் பூந் தரளம்***
***மா தாம்பு அற்றென்ன***
***மழைக் கண்ணீர் ஆலி உக,***
***நா தாம் பற்றா மழலை***
***நங்கைமார் ஏங்கினார்.***

***நா தாம் பற்றா மழலை நங்கைமார்*** *- நாவின் கண் பிடிப்புப் பொருந்தாத மழலைச்சொற்களைப் பேசுகின்ற இனிய இளமகளிர்;* ***சேதாம்பல் போது அனைய செங்கனிவாய்*** *-செவ்வல்லிப் பூவை ஒத்த சிவந்த பழம் போன்ற வாயிலிருந்து;* ***வெண் தளவப் போது ஆம்பல் தோன்ற*** *- வெண்மையான முல்லையின் மலர் அரும்பு ஆகிய*

*பல் வெளித் தெரிய;* ***புணர்முலைமேல்*** *- இரண்டாகச் சேர்ந்த மார்பகங்களின் மேல்;* ***மழைக் கண்ணீர் ஆலி*** *-மழை போன்ற கண்ணீர்த் துளி;* ***பூந்தரளம்*** *- அழகிய முத்து;* ***மா தாம்பு அற்று என்ன*** *- சிறந்த கயிறுஅறுந்து ஒவ்வொன்றாக விழுவது போல;* ***உக*** *- சிந்த;* ***ஏங்கினார்*** *- அழுதார்கள்.*

*எழுத்து விளங்காத மழலைப் பேச்சு என்பார் 'நா தாம் பற்றா மழலை' என்றார். ' வாயில்பல் வெளித் தோன்ற அழுதார்' என்பது அவலத்தின் உச்சம். இளமகளிர் நாணத்தாற் சிறந்தவர்ஆதலின் பல் வெளித் தோன்ற நகுதலும் செய்யார், இன்று பல் வெளித் தோன்ற அழுகின்றனர்என்பதாம். இதனை இவள் மன்னும் ஒள்நுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்; முன்நுனைதோன்றாமை முறுவல் கொண்டு அடக்கித் தன், கண்ணினும் முகத்தினும் நகுபவள்; பெண் இன்றி, யாவரும் தண் குரல் கேட்ப நிரை வெண்பல் மீயுயர் தோன்ற நகா அ நக்காங்கே, .....உண்கண்ஆயிதழ் மல்க அழும ' என்னும் (கலித். 142. 6 -12) பாடற் பகுதி கொண்டு விளங்க அறிக. கழுத்தில் அணிந்த முத்துவடக் கயிறு அறுந்து ஒவ்வொரு முத்தாக மார்பில் விழுவது போலக்கண்ணீர்த் துளி முலைத்தலை வீழ்கிறது என்றார்.* ***97***

***1703. ஆவும் அழுத; அதன் கன்று***
***அழுத; அன்று அலர்ந்த***
***பூவும் அழுத; புனல் புள்***
***அழுத; கள் ஒழுகும்***
***காவும் அழுத; களிறு அழுத;***
***கால் வயப் போர்***
***மாவும் அழுத; - அம்***
***மன்னவனை மானவே.***

***அம் மன்னவனை மான*** *- (இராமன் பிரிவால் துயர் உறும்) தசரதனை ஒப்ப;* ***ஆவும்அழுத*** *- பசுக்கள் அழுதன;* ***அதன் கன்று அழுத*** *- அப் பசுக்களின் கன்றுகள் அழுதன;* ***அன்று அலர்ந்த பூவும் அழுத*** *- அப்போது மலர்ந்த பூக்களும் அழுதன;* ***புனல் புள் அழுத*** *- நீர்வாழ் பறவை இனங்கள் அழுதன;* ***கள் ஒழுகும் காவும் அழுத*** *- தேன் சிந்தும் மலர்ச்சோலைகள் அழுதன;* ***களிறு அழுத*** *- யானைகள் அழுதன;* ***கால் வயப் போர் மாவும் அழுத*** *- காற்றை ஒத்த வலிய போர் வல்ல குதிரைகளும் அழுதன.*

*ஓரறிவுயிர் முதலாக ஐயறிவுயிர் வரை அனைத்தும் இராமனது பிரிவால் அழுதன என்பார் முதலும் முடிவும் கூறினார்.* ***98***

***1704. ஞானீயும் உய்கலான்***
***என்னாதே, நாயகனைக்***
***'கான் ஈயும் ' என்று உரைத்த***
***கைகேசியும், கொடிய***
***கூனீயும் அல்லால்,***
***கொடியார் பிறர் உளரோ? -***
***மேனீயும் இன்றி,***
***வெறு நீரே ஆயினார்.***

***'ஞானீயும் உய்கலான் ' என்னாதே*** - *உலகில் பிறந்தார்க்குப் பிரிவும் சிறப்பும் இயல்பானவை என்பதைத் தெளிய உணர்ந்த ஞானியும்கூட இராமன் பிரிவால் பிழைக்க மாட்டான் என்று கருதாமல்;* ***நாயகனைக் 'கான் ஈயும்' என்று உரைத்த கைகேசியும்*** - *தன் கணவனைப் பார்த்து (இராமனுக்குக்) காட்டைக் கொடும் என்று சொல்லிய கைகேயியும்;* ***கொடிய கூனீயும் அல்லால்*** - *அவளுக்குத் துர்ப்போதனை செய்த கூனியும் தவிர;* ***பிறர் கொடியார் உளரோ?*** - *வேறு யாரேனும் மிகக் கொடியவர்கள் இருக்கின்றார்களோ (மற்றவர்கள் அனைவரும்);* ***மேனீயும் இன்றி*** - *உடம்பும் இல்லாமல்;* ***வெறு நீரே ஆயினார்*** - *வெறுமைத் தன்மை அடைந்தவர் ஆயினர்.*

*'கான் ஈயும் ' என்பதற்கு ஏற்ப, ஞானி, கூனி, மேனி என்ற இகரங்கள் நீண்டன எதுகை நயம் பற்றி. 'ஞானியே உய்கலான்' என்றால் மற்றவர் நிலை சொல்லவேண்டுவதில்லை என்றபடி.*

***1705. தேறாது அறிவு அழிந்தார்***
***எங்கு உலப்பார்? தேர் ஓட***
***நீறு ஆகி, சுண்ணம்***
***நிறைந்த தெரு எல்லாம்,***
***ஆறு ஆகி ஓடின***
***கண்ணீர்; அரு நெஞ்சம்***
***கூறு ஆகி ஓடாத***
***இத்துணையே குற்றமே.***

***(இராமனது பிரிவால்) தேறாது*** - *தெளியாமல்;* ***அறிவு அழித்தார்*** - *அறிவு நீங்கப் பெற்றவர்கள்;* ***எங்கு உலப்பார்?*** - *எவ்விடத்து எந்நிலைமையால் கணக்கில் அடங்குவர்;* ***தேர் ஓட நீறு ஆகிச் சுண்ணம் நிறைந்த தெரு எல்லாம்*** - *தேர் ஓடுவதனால் புழுதி ஆகி மண் பொடி நிறைந்திருந்த தெருக்களில் எல்லாம்;* ***கண்ணீர்*** - *மக்கள் அழுத கண்ணீர்; ஆறு ஆகி ஓடின - ஆறு போலச் சென்று ஓடின;* ***அரு நெஞ்சம்*** - *அவர்களது அரிய மனம்;* ***கூறு ஆகி ஓடாத இத் துணையே குற்றம்*** - *பிளந்து பிரிந்து நீங்காத இவ்வளவே குற்றம்.*

*துயரத்தால் அறிவு மயங்கியவர்கள் கணக்கில் அடங்கார் என்பதை 'எங்கு உலப்பார்' என்று குறித்தார். புழுதி நிறைந்த தெரு ஆறாகிவிட்டது என்றால் கண்ணீரின் பெருக்கத்தை அறிய முடிகிறது. நெஞ்சம் பிளந்து ஓடியதைப் பார்க்க முடியவில்லையே தவிர மற்றவை எல்லாம் நடந்து முடிந்துவிட்டன என்பார் இத்துணையே குற்றம் ' என்றார். 'ஏ' காரம் ஈற்றசை.* ***100 1706.***

***''மண் செய்த பாவம் உளது'***
***என்பார்; 'மா மலர்மேல்***
***பெண் செய்த பாவம் அதனின்***
***பெரிது ' என்பார்;***
***'புண் செய்த நெஞ்சை, விதி'***
***என்பார்; ' பூதலத்தோர்***

***கண் செய்த பாவம்***
***கடலின் பெரிது ' என்பார்.***

*( நகர மாந்தர் ) **'மண்செய்த பாவம் உளது' என்பார்** - 'நிலமகள் செய்த தீவினை மிகுதியாக உள்ளது' என்பர்; **' மாமலர் மேல் பெண் செய்த பாவம் அதனின் பெரிது'** - சிறந்த தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் திருமகள் செய்த தீவினை அதைக்காட்டிலும் மிகுதி; **' என்பார்-; 'புண் செய்த நெஞ்சை விதி** - புண்பட்ட மனத்தைப் பார்த்து இது விதியால் விளைந்தது;' **என்பார் - ; பூதலத்தோர் கண் செய்த பாவம் கடலின் பெரிது'** - இப்பூமியில் உள்ளவர்களின் கண் செய்த தீவினை கடலைக்காட்டிலும் மிகுதி;' **என்பார் -** .*

*இராமனால் ஆளப் பெறாமையால் பூமியும், அனுபவிக்கப் பெறாமையால் செல்வமகளும் பாவம் செய்தவர் ஆயினர். மணி முடி தரித்துச் செல்லும் காட்சியைக் காணவேண்டிய கண்கள் மரவுரி தரித்துக் காடு செல்லும் காட்சியைக் காண நேரிட்டமையின் கண் செய்த பாவம் மிகுதியாம்.* ***101***

***1707. 'ஆளான் பரதன் அரசு'***
***என்பார்; 'ஐயன், இனி***
***மீளான்; நமக்கு விதி***
***கொடிதேகாண்' என்பார்;***
***'கோள் ஆகி வந்தவா,***
***கொற்ற முடிதான்' என்பார்;***
***'மாளாத நம்மின் மனம்***
***வலியார் ஆர்?' என்பார்.***

*__'பரதன் அரசு ஆளான்__ - பரதன் அரசாட்சியை ஏற்கமாட்டான்;' **என்பார் - ; ' ஐயன் இனி மீளான்** - இராமன் இனிமேல் நாடு திரும்ப மாட்டான்; **நமக்கு விதி கொடிதே காண்'** - நமக்கு ஊழ் வினை மிகவும் கொடுமையானது;' **என்பார் - ; ' கொற்ற முடிதான்** - வெற்றியுடைய மகுடம்; **கோள் ஆகி வந்தவா'** - தீய இடையூறாகி வந்து சேர்ந்தபடி என்னே;' **என்பார் - ; மாளாத நம்மின் மனம் வலியார் ஆர்?'** - (இத்தனையும் கேட்டு வைத்தும் கண்டு வைத்தும் ) இறந்துபடாத நம்மைக் காட்டிலும் உலகில் கொடுமனம் உடையவர்கள் யார் உளர்;' **என்பார் -.***

*முடிசூடுதல் என்ற பேச்சு வரவில்லையானால் வனம் செல்லும் துயர்நிலை இராமனுக்கு வந்திராதேஎன்னும் ஆதங்கத்தால் முடியே இடையூறாகித் தீங்கு செய்தது என்பாராயினர்.*

***1708. 'ஆதி அரசன், அருங்***
***கேகயன் மகள்மேல்***
***காதல் முதிர, கருத்து***
***அழிந்தான் ஆம்' என்பார்;***
***'சீதை மணவாளன்***
***தன்னோடும் தீக் கானம்***

**போதும்; அது அன்றேல்,**
**புகுதும் எரி' என்பார்.**

**'ஆதி அரசன்** - மூல முதல் வேந்தனான தயரதன்; **அருங்கேகயன் மகள்மேல்** -அரிய கைகேயிமாட்டு; **காதல் முதிர** - அன்பு முற்றுதலால்; **கருத்து அழிந்தான் ஆம்** - மனம் மயங்கி அறிவு தடுமாறிவிட்டான்போலும்;' **என்பார்-; 'சீதை மணவாளன்தன்னோடும் தீக்கானம் போதும்** - (நாம்) சீதைக்கு நாயகனான இராமனோடு கொடிய காட்டிற்குப் போவோம்; **அது அன்றேல்** - அது முடியாமற் போகுமானால்; **எரி புகுதும்** - நெருப்பில் வீழ்ந்து உயிர் விடுவோம்;' **என்பார் - .**

**ஆதி அரசன்** - தசரதன், பிரதான மன்னன் என்பதாம். "ஆதி மன்னனை ஆற்றுமின்நீர்" என்று (1837.) வருதல் காண்க. **103**

**1709. கையால் நிலம் தடவி,**
**கண்ணீர் மெழுகுவார்**
**'உய்யாள் போல் கோசலை' என்று,**
**ஓவாது வெய்து உயிர்ப்பார்;**
**'ஐயா! இளங்கோவே!**
**ஆற்றுதியோ நீ' என்பார்;**
**நெய் ஆர் அழல் உற்றது**
**உற்றார், அந் நீள் நகரார்.**

**அந்நீள் நகரார்** - அந்தப் பெரிய அயோத்தி நகரத்தில் உள்ளவர்கள்; **கையால் நிலம் தடவிக் கண்ணீர் மெழுகுவார்** - கையால் தரையைத் தடவித் தம் கண்ணீர்கொண்டு அதனை மெழுகுவாராயினர்; **'கோசலை உய்யாள்' என்று** - 'இனிக் கோசலை பிழைக்கமாட்டாள்' என்று சொல்லி; **ஓவாது வெய்து உயிர்ப்பார்** - இடைவிடாமல் வெப்பப் பெருமூச்சு விடுவார்கள்; **'ஐயா! இளங்கோவே! நீ ஆற்றுதியோ?** - 'ஐயனே இளைய அரச குமாரனாகிய இலக்குவனே நீ இதனைப் பொறுத்துக் கொள்வாயோ;' **என்பார் -; நெய் ஆர் அழல் உற்றது உற்றார்** - நெய் பொருந்திய நெருப்பில் விழுந்தால் ஒத்த தன்மையை அடைந்தார்கள்.

'போல்' என்பது உரையசை. 'ஆங்க உரையசை' ஒப்பில் போலியும் அப்பொருட்டாகும்'(தொல்.சொல். 279, 280) என்னும் நூற்பாக்களைப் பார்த்து அறிக. இராமன்பால் அன்பிற்செறிந்தவன் ஆதலின் இராமனுக்கு வந்த தீங்கை இலக்குவன் பொறுத்துக்கொண்டு சும்மா இரான்என்பது மக்கள் கணிப்பு.
**104**

**1710. 'தள்ளூறு வேறு இல்லை;**
**தன் மகற்குப் பார் கொள்வான்,**
**எள்ளூறு தீக் கருமம்**
**நேர்ந்தாள் இவள்' என்னா,**
**கள் ஊறு செவ் வாய்க்**
**கணிகையரும், 'கைகேசி,**

***உள் ஊறு காதல் இலள்போல்'***
***என்று, உள் அழிந்தார்.***

***கள் ஊறு செவ்வாய்க் கணிகையரும்*** *- எப்பொழுதும் குடிப்பதால் கள் ஊறுகின்றசிவந்த வாயை உடைய பரத்தையரும்;* ***'இவள்*** *- இக்கைகேயி;* ***தள்ளூறு வேறு இல்லை*** *-தள்ளுவதற்கு வேறு காரணம் இல்லை;* ***தன் மகற்குப் பார்கொள்வான்*** *- தன் மகனாகியபரதனுக்கு அரசு கொள்ள ஆசைப்பட்டு;* ***எள்ளூறு தீக்கருமம் நேர்ந்தாள்*** *- உலகரால் இகழப்படுகின்ற தீச்செயலைச் செய்ய உடன்பட்டாள்;* ***என்னா*** *- என்று சொல்லி;* ***கைகேசி உள் ஊறு காதல் இலள்*** *- மன்னன் மாட்டு அகம் பொருந்தி எழும் அன்புடையாள்இல்லை;* ***என்று - ; உள் அழிந்தார்*** *- மனம் கெட்டு வருந்தினர். அந்நகரக் கணிகையர் தம்மைப்போலவே கைகேயியும் தயரதனாகிய நாயகன்பால் அன்பின்றிமண்ணாசை யாகிய பொருட்பற்றினால் இத்தீய செயலைச் செய்திருக்கிறாள் என்றனர் - கணவன்இறப்பைப் பொருட் படுத்தாது தன் மகனுக்கு அரசு பெறுவதில் குறியாய் இருத்தலின் அன்பினால்முயங்காது பொருளாசையால் முயங்கும் கணிகையார் நிலை கைகேயிமாட்டு உள்ளதாம். தீக்கருமம் -கணவன் இறக்கவும், மகன் காடு செல்லவும் செய்தலாகிய செயற்கு முன்னிலையாகிய வரம். இதுகாறும் இராமன்பாலும் தயரதன்பாலும் அன்புடையான் ஆக இருந்தான் ஆதலின் தள்ளூறுதற்கு அதாவது இராமனைஅகற்றி விடுவதற்கு வேறு காரணம் இல்லை. தன் மகனாகிய பரதனுக்குப் பார் கொள்ள வேண்டியேஎன்று முடிவு கட்டினர். தள்ளூறு, எள்ளூறு என்பன எதுகை நோக்கி, தள்ளூறு, எள்ளூறு என நீண்டன. 'இலள் போல்' போல் உரையசை. தள், உள்: முதனிலைத் தொழிற்பெயர்கள்.* *105*

***1711. 'நின்று தவம் இயற்றித்***
***தான் தீர நேர்ந்ததோ?***
***அன்றி, உலகத்துள்***
***ஆர் உயிராய் வாழ்வாரைக்***
***கொன்று களையக்***
***குறித்த பொருளதுவோ?***
***நன்று! வரம் கொடுத்த***
***நாயகற்கு, நன்று!' என்பார்.***

***'தான்*** *- சக்கரவர்த்தி;* ***தவம் இன்றி*** *- (காடு சென்று) தவம் செய்து;* ***தீர நேர்ந்ததோ?*** *- இவ்வுலகினின்று விடுதலை பெற உடன் பட்டதோ;* ***அன்றி*** *-அதுவல்லாமல்;* ***உலகத்துள்*** *- இப்பூமியின்கண்;* ***ஆர் உயிர் ஆய*** *ு- அரியஉயிரோடு கூடி;* ***வாழ்வாரை*** *- வாழ்கின்ற மக்களையெல்லாம்;* ***கொன்று களையக்குறித்த பொருளதுவோ?*** *- கொன்று அடியோடு அழிக்க மனத்தில் கருதிய காரியமோ;* ***நன்று!*** *- நன்றாயிருந்தது;* ***வரம் கொடுத்த நாயகற்கு*** *- வரம் கொடுத்த தயரதனுக்கு;* ***நன்று!*** *- வரம் கொடுத்த செயல் மிக நன்றாயிருந்தது;'* ***என் பார் -.***

*நன்று நன்று என்பது இகழ்ச்சிக் குறிப்பு. இவ்வரத்தால் இராமன் காடு செல்லின் மக்கள்இறந்துபடுவர் என்பது அரசன் அறியாததன்று. அறிந்தே மக்களைக் கொன்று தீர்க்க வரம்கொடுத்தானோ எனப் புலம்பினர். 'உலகத்துள்ளார் உயிராய் வாழ்வார் இராமனை உயிராகக்கொண்டு வாழ்பவர் ஆகிய உலகினரை ' எனினும் ஆம்.*
***106***

***1712. 'பெற்றுடைய மண் அவளுக்கு***
***ஈந்து, பிறந்து உலகம்***
***முற்று உடைய கோவைப்***
***பிரியாது மொய்த்து ஈண்டி,***
***உற்று உறைதும்; யாரும்***
***உறையவே, சில் நாளில்.***
***புற்று உடைய காடு எல்லாம்***
***நாடாகிப் போம்' என்பார்.***

***'பெற்றுடைய மண் அவளுக்கு ஈந்து*** *- (வரத்தால்) பெற்றுத் தனக்குச் சொந்தமாகிக்கொண்ட இராச்சியத்தைக் கைகேயிக்குக் கொடுத்து;* ***பிறந்து*** *- (மூத்தவனாகப்) பிறந்து;* ***உலகம் முற்றுடைய கோவை*** *- உலகம் முழுதும் தனக்கு உரியதாகப்பெற்ற இராமனை;* ***பிரியாது*** *- பிரிந்து நகரத்தில் வாழாது;* ***யாரும் மொய்த்து ஈண்டி உற்று உறைதும்*** *- எல்லாரும் நெருங்கிச் சென்று (அவனுடைய) தங்கி வசிப்போம்;* ***உறையவே*** *- (அவ்வாறு நாம் எல்லாம் சென்று தங்கி) வசிக்கவே;* ***புற்று உடைய காடு எல்லாம் நாடு ஆகிப்போம்'*** *- பாம்புப் புற்றுகளை உடைய காடுகள் மக்கள்வசிக்கும் நாடாகிவிடும்;'* ***என்பார்-.***

*'பெற்றுடைய மண்', 'பிறந்துடைய மண்' என்பது அழகிய வாசகம். மக்கள் சென்று உறையக்காடு நாடாகும் என்பதால், இராமனின்றிக் கைகேயி பெற்றுடைய மண்ணை ஆளும் பொழுது மக்கள்இல்லாத நாடு காடாகிவிடும் என்றாராம். இராமன் சென்ற காடும் நாடாம், கைகேயி ஆளும் நாடும் காடாகும் ஆதலின் இராமனுக்குக் கைகேயி அளித்த காட்டை நாம் அவளுக்கு அவள் இருக்கிறநகரத்திலேயே உண்டாக்கிவிடுவோம் என்பதும் நகரமாந்தர் குறிப்பாகக் கொண்டு நயம்காணலாம்.* ***107***

***1713. 'என்னே, நிருபன் இயற்கை இருந்தவா!***
***தன் நேர் இலாத தலைமகற்குத் தாரணியை***
***முன்ன கொடுத்து, முறை திறம்பத் தம்பிக்குப்***
***பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய்?' என்பார்.***

***'நிருபன்*** *- சக்கரவர்த்தியின்;* ***இயற்கை இருந்தவா என்னே!*** *- இயல்பு இருந்த விதம் என்னவாய்உள்ளது;* ***தன் நேர் இல்லாத தலைமகற்குத் தாரணியை முன்னே கொடுத்து*** *- தனக்குச்சமானமில்லாத மூத்த மகனுக்குப் பூமியை முன்னர் ஆளக் கொடுப்பதாக அவையில் சொல்லிவிட்டு;* ***முறை திறம்ப*** *- அச் சொல் முறை மாறுபடும்படி;* ***பின்னே*** *- பிறகு (கைகேயியின்அந்தப்புரத்தில்);* ***தம்பிக்குக் கொடுத்தால்-*** *பரதனுக்குக் கொடுத்தால்;* ***மெய் பிழையதோ?'*** *- சத்தியம் தவறுபடாதோ;'* ***என்பார் -.***

*நகர மாந்தர் அவல மனநிலையினும் இராமன்பால் கொண்ட அன்பின் மனநிலையினும்எழுந்ததாயினும். இஃது ஒர் அரிய வாதம். வரம் கொடுத்து மறுத்தால் சத்தியம் தவறுமாயின்,அவையில் சொல்லிய வார்த்தயை அந்தப்புரத்தில் மாற்றினால் அச் சத்தியம் தவறாதோ என்பது மக்கள் வாதம். மேம்போக்காகத் தயரதனை மெய் பிறழ்ந்தவனே என்று காட்டும் இவ்வாதம்; ஆயினும் கூர்ந்து நோக்குவார் உண்மை உணர்வார். கைகேயிக்கு வரம்அளிக்கப்பெற்றது மிகவும் முன்பாகும்; அரசவையில்*

*இராமனுக்கு அரசு உரிமை அளிக்கப்பெறுதற்கு மிகநெடுங்காலம் முன்னரே கைகேயிக்கு அளித்த வரம்தான் இப்பொழுது மீண்டும் எடுத்துமெய்ப்பிக்கப்பட்டுள்ளது. 'வரம் எது' என்ற விளக்கம் இப்பொழுது வந்ததே அன்றி, வரம்முன்பே உள்ளது ஆதலின் அஃது எதுவாயினும் அதனை அளிப்பதுதான் தசரதனது, வாய்மையாம். முதற்சொல்லிய சொல்லிற் பிறழாமையே வாய்மை காத்தல் ஆதலின், அதனைக் காத்தற்குப்பின்னர்க் கூறிய அவையிடை நிகழ்ந்த உரையை மாற்றுதல் வாய்மை தவறுதலாகாதாம் என்பதால்வாய்மை காக்கவே வரம் கொடுக்கிறான் தசரதன் - அவையினில் கூறிய சொல் தவறாமைப்பொருட்டுத் தன் உயிரை இழக்கிறான்; இதனால் பின்னால் 'வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர்துறந்த வள்ளல்' என்று (4018) வாலியால் தயரதன் போற்றப்பட்டதாகக் கம்பர்அமைத்தார் எனலாம். 108*

***1714. ' கோதை வரி வில் குமரற் கொடுத்த நில***
***மாதை ஒருவர் புணர்வாராம்? வஞ்சித்த***
***பேதை சிறுவனைப் பின் பார்த்து நிற்குமே,***
***சீதை பிரியினும் தீராத் திரு?' என்பார்.***

***'கோதை வரிவில் குமரன் கொடுத்த நிலமாதை** - வெற்றி மாலை சூடிய கட்டமைந்தகோதண்டத்தை உடைய இராமனுக்குப் பேரவையில் கொடுக்கப் பெற்ற நிலமகளை; **ஒருவர்புணர்வார்** - வேறு ஒருவர் (பரதன்) கூடுவார்; (அப்படிக் கூடினால்); **சீதை பிரியினும் -** சீதாபிராட்டி காடு சென்றாலும்; **தீராத் திரு -** தானும் காடு செல்லாமல்தங்கிவிட்ட செல்வமகள்; **வஞ்சித்த பேதை -** வஞ்சனை செய்த கைகேயியின்; **சிறுவனை-** மகனாகிய பரதனை; **பார்த்துப் பின் நிற்குமே?' -** பார்த்துக்கொண்டுஏற்றுக்கொண்டு நிற்பாளா;' **என்பார்-.***

*'ஆம்' உரையசை. 'சீதை பிரியினும் தீராத் திரு' என்பது சீதை இந்நகரத்தை விட்டுப்பிரிந்த அளவில் செல்வ மகளும் இந்நகரை விட்டுப் போய்விடுவாள் என்பது குறித்தது. **109***

***1715. உந்தாது, நெய் வார்த்து உதவாது, கால் எறிய***
***நந்தா விளக்கின் நடுங்குகின்ற நங்கைமார்,***
***"செந்தாமரைத் தடங் கண் செல்வி அருள் நோக்கம்***
***அந்தோ! பிரிதுமோ? ஆ! விதியே! ஓ!' என்பார்.***

***'உந்தாது -** தூண்டப்படாமல்; **நெய்வார்த்து உதவாது -** நெய்ஊற்றி உதவிசெய்யாமல்; **கால் எறிய -** காற்று வீசுதலால்; **நந்தா விளக்கின் -** (நடுங்குகின்ற) கெடாத விளக்குப் போல; **நடுங்குகின்ற நங்கைமார் -** துடிக்கின்றமகளிர்; **'செந்தாமரைத் தடங்கண் -** (இராமரை) செந்தாமரை மலர் போன்ற விசாலமானகண்களாற் பெறும்; **செல்வி அருள் நோக்கம்-** தக்க பருவத்தே விளையும் அருள்பார்வையை; **பிரிதுமோ? -** பிரியப் போகிறோமோ; **அந்தோ! ஆ! விதியே! ஓ!'என்பார் -.***

*நந்தா விளக்காயினும் தூண்டுதல், நெய்வார்த்தல் முதலிய உதவியில்லை மாறாகக் காற்று எறிகிறது; எனவே அணையாமலும் இருக்கிறது, நடுங்கவும் எப்போது*

*அணையுமோ என்பது போல் உள்ளது. மகளிர் உயிர்விடவும் செய்யாது வாழவும் இயலாமல் அவலத்தில் துடிக்கின்றனர் என்பதாம். 'அந்தோ! ஆ! ஓ' என்பன இரக்கக் குறிப்புகள்.* ***110*** இலக்குவன் சினம்

*கலித்துறை*

***1716. கேட்டான் இளையோன்;***
***'கிளர் ஞாலம் வரத்தினாலே***
***மீட்டாள்; அளித்தாள் வனம்***
***தம்முனை, வெம்மை முற்றி;-***
***தீட்டாத வேல் கண் சிறு***
***தாய்' என, யாவராலும்***
***மூட்டாத காலக்***
***கடைத் தீ என மூண்டு எழுந்தான்.***

***இளையோன்** - இளைய பெருமாளாகிய இலக்குமணன்; **'தீட்டாத வேல் கண்சிறு தாய் -** (இயல்பில் கூர்மை உடைய) தீட்டப் படாத வேல் போன்ற கண்ணை உடையசிற்றன்னையாகிய கைகேயி; வெம்மை முற்றி - கொடுமை மிகுந்து; **கிளர் ஞாலம்** -விளங்குகின்ற பூமியை; **வரத்தினாலே மீட்டாள் -** அரசனிடம் பெற்ற வரத்தால்(தன்மகன் பரதன் பக்கமாக) திருப்பிக்கொண்டாள்; **தம்முனை - தன்** அண்ணனாகியஇராமனுக்கு; **வனம் அளித்தாள்.'** காட்டைக் கொடுத்தாள்; **என -** என்று; **கேட்டான் -** கேள்விப்பட்டு; **யாவராலும் மூட்டாத -** ஒருவராலும் உண்டாக்கப்படாத (இயற்கைச் சீற்றம் ஆகிய); **காலக் கடைத்தீ என -** ஊழி இறுதியில் உண்டாகும் பெருநெருப்பு என்று சொல்லும்படி; **மூண்டு எழுந்தான் -** சீற்றம் மிகுந்து எழுந்தான்.*

*மீட்டல்- இராமனிடம் சென்ற அரசாட்சியைப் பரதனுக்குத் திருப்பியது. 'தம்முனை -உருபுமயக்கம் - நான்காவதன்கண் இரண்டாவது வந்தது. 'தமன்முனுக்கு' என வரும்.* ***111***

***1717. கண்ணின் கடைத் தீ உக,***
***நெற்றியில் கற்றை நாற,***
***விண்ணில் சுடரும் சுடர் தோன்ற,***
***மெய்ந்நீர் விரிப்ப,***
***உள் நிற்கும் உயிர்ப்பு எனும்***
***ஊதை பிறக்க, நின்ற***
***அண்ணல் பெரியோன் தனது***
***ஆதியின் மூர்த்தி ஒத்தான்.***

***கணணின் கடைத் தீ உக -** கண் முனையிலிருந்து நெருப்புப் பொறி சிந்த; **நெற்றியில் கற்றை நாற -** அந்நெருப்புப் பட்டு நெற்றி மயிர் சுருஏறி நாற; **விண்ணில் சுடரும் சுடர் தோன்ற -** வானத்தில் ஒளிவீசும் சூரியன்இலக்குமணனிடமாகித் தோன்ற; **மெய்ந்நீர் விரிப்ப -** உடம்பு வியர்வைத் துளிகளைஎங்கும் பரவச் செய்ய; **உள் நிற்கும் உயிர்ப்பு எனும் ஊதை பிறக்க -** உடம்பின் உள்ளே உள்ள நெடு மூச்சு என்னும் காற்று வெளித்*

*தோன்ற;* ***நின்ற அண்ணல்பெரியோன் -*** *சீறி நின்ற தலைமைப்பாடு உடைய இலக்குமணன்;* ***தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்*** *- தனது பூர்வ வடிவமாகிய (ஆயிரம் தலை உடைய) ஆதி சேடனைப் போன்றிருந்தான்.*

*'நெற்றியில் கற்றை நாற' என்பதற்கு நெற்றி மேல் புருவமயிர் தொகுதி தோன்ற எனஉரைக்கலாம். சீற்றம் மிக்குழிப் புருவம் நெரிந்து நெற்றிமேல் ஏறல் மெய்ப்பாடாம்; இங்கே நாற என்பது தோன்ற என்னும் பொருள். பெறும். 'புன்புல மயிரும் பூவாக் கட்புலம் புறத்து நாறா வன்பறழ்' என்புழிப் (4746.) போல இலக்குவன் ஆதிசேடனது அவதாரம் ஆதலின்' ஆதியின்மூர்த்தி' என்றார். அரவின் சீற்றம் போன்றது இலக்குவன் சீற்றம் என்பதாம். சூரியன்நெற்றியில் தோன்றச் சினநெருப்பு ஒளிவீசுதல் சூரியன் போலுதலாகும்.* ***112***

கைகேயிமேல் சினந்து இலக்குவன் போர்க்கோலம் மேற்கொளல்

***1718. 'சிங்கக் குருளைக்கு இடு தீம்***
***சுவை ஊனை, நாயின்***
***வெங் கண் சிறு குட்டனை***
***ஊட்ட விரும்பினாளே!***
***நங்கைக்கு அறிவின் திறம்!***
***நன்று, இது! நன்று, இது!' என்னா,***
***கங்கைக்கு இறைவன்***
***கடகக் கை புடைத்து நக்கான்.***

***'சிங்கக்*** *குருளைக்கு* ***இடு தீம்சுவை ஊனை -*** *சிங்கக் குட்டிக்குக் கொடுத்தற்குரிய இனிய சுவையுடைய மாமிசத்தை; வெங்கண்நாயின் சிறு குட்டனை - கொடிய கண்ணை உடைய நாயின் சிறு குட்டிக்கு; ஊட்ட விரும்பினாளே! -உண்பிக்க ஆசைப்பட்டாளே; நங்கைக்கு - கைகேயிக்கு;* ***அறிவின் திறம் நன்று இது! நன்று இது' -*** *புத்தி வன்மையாகிய இது நன்றாயிருந்தது;'* ***என்னா -*** *எனச் சொல்லி;* ***கங்கைக்கு இறைவன் -*** *இலக்குவன்;* ***கடகக் கை -*** *கடகம் அணிந்ததன்னுடைய கையை;* ***புடைத்து -*** *தட்டி;* ***நக்கான் -*** *சிரித்தான்.*

*பொருத்தம் அற்ற செயல் செய்தாள் கைகேயி என்பதை இவ்வாறு கூறினான். சிறுகுட்டனை -குட்டனுக்கு உருபுமயக்கம்; நான்காவதன்கண் இரண்டாவது வந்தது. 'நன்று இது' இகழ்ச்சிக்குறிப்பு - கங்கைவரை உள்ள நாடு கோசலம் ஆதலின் இலக்குவன்* ***'கங்கைக்கிறைவன்'*** *எனப்பட்டான்.* ***இனி*** *சரயு நதிக்கு 'இராமகங்கை' எனும் பெயருண்மையின் அதுபற்றிக் 'கங்கைக் கிறைவன்' எனப்பட்டான் என்பது ஏற்குமேல் கொள்க.* ***113***

***1719. சுற்று ஆர்ந்த கச்சில்***
***சுரிகை புடை தோன்ற ஆர்த்து,***
***வில் தாங்கி, வாளிப்***
***பெரும் புட்டில் புறத்து வீக்கி,***
***பற்று ஆர்ந்த செம் பொன்***
***கவசம், பனி மேரு ஆங்கு ஓர்***

***புற்று ஆம் என ஓங்கிய***
***தோளொடு, மார்பு போர்க்க.***

***சுற்று ஆர்ந்த கச்சில்-*** *இடையைச் சுற்றி அமைந்த இடைக்கச்சிலே;* ***கரிகை -*** *வாளை;* ***புடை தோன்ற ஆர்த்து -*** *வெளியில் தெரியும்படி கட்டி;* ***வில் தாங்கி -*** *வில்லைச் சுமந்து;* ***வாளிப் பெரும்புட்டில் புறத்து வீக்கி -*** *அம்புகள் அமைந்த பெரியதூணியை முதுகுப்புறத்தில் கட்டியமைத்து;* ***பற்று ஆர்ந்த செம்பொன் கவசம் -*** *நன்றாகப்பிடிப்புப் பொருந்திய செம்பொன்னாலாகிய கவசம்;* ***பனிமேரு ஆங்கு ஓர் புற்று ஆம் என -*** *குளிர்ந்த மேரு மலை ஒரு புற்று ஆகும் என்று சொல்லும்படி;* ***ஓங்கிய தோளொடு -*** *உயர்ந்துள்ள தோளோடு;* ***மார்பு போர்க்க -*** *மார்பையும் மூடிக்கொள்ள.*

*இடுப்பைச் சுற்றியுள்ள கச்சில் வாளைச் செருகுதல் இயல்பு. தோளின் பெருமை நோக்கமேருமலை ஒரு புற்றுப் போலத் தோன்றும் என்றார்.* ***114***

***1720. அடியில் சுடர் பொன்***
***கழல் ஆர்கலி நாண ஆர்ப்ப***
***பிடியில் தடவும் சிலை***
***நாண் பெரும் பூசல் ஓசை,***
***இடியின் தொடர,***
***கடல் ஏழும் மடுத்து, இஞ் ஞால***
***முடிவில் குமுறும்***
***மழை மும்மையின்மேல் முழங்க,***

***அடியில் சுடர் பொன் கழல் ஆர்கலி நாண ஆர்ப்ப -*** *பாதங்களில் ஒளிவீசும்பொன்னால் ஆகிய வீரக்கழலை கடல் வெட்கமுறும் படி பேரொலி செய்ய; பிடியில்* ***தடவும் -*** *கைப்பிடியால் தடவப் பெறுகின்ற; சிலை நாண் பெரும்* ***பூசல் ஓசை -*** *வில்லினதுகயிற்றைத் தெறிப்பதால் உளதாகும் பெரிய ஆரவார ஒலி;* ***இஞ்ஞால முடிவில் -*** *இந்த உலக முடிவில்; கடல் ஏழும் மடுத்து - ஏழு கடல்களையும் குடித்து;* ***இடியின் தொடர -*** *இடிகளோடு தொடர்ந்து; குமுறும்- முழங்குகின்ற;* ***மழை -*** *மழையைக்காட்டிலும்;* ***மும்மையின் மேல் முழங்க-*** *மூன்று மடங்கு அதிகமாக ஒலிக்க.*

*வில்லில் நாண் ஏற்றிய பிறகு நாணின் இறுக்கத்தைச் சோதித்துத் தெறிப்பர்;தெறிக்கும்போது எழும் ஓசை பேரொலியாக உண்டாகும். அதை வருணிப்பது கவிமரபு.* ***115***

***1721. வானும் நிலனும் முதல் ஈறு இல்***
***வரம்பு இல் பூதம்***
***மேல்நின்று கீழ்காறும்***
***விரிந்தன வீழ்வபோல,***
***தானும், தன தம்முனும் அல்லது,***
***மும்மை ஞாலத்து***
***ஊனும் உயிரும் உடையார்கள்***
***உளைந்து ஒதுங்க,***

***தானும் தன தம் முனும் அல்லது*** - இலக்குமணனும், அவனுக்குத் தமையனாகிய இராமனும்அல்லாமல்; ***மும்மை ஞாலத்து*** - மூன்று உலகங்களிலும் உள்ள; ***ஊனும் உயிரும்உடையார்கள்***- உடம்பும் உயிரும் உடைய அனைவரும்; ***வானும் நிலனும் முதல் ஈறு இல் மேல்நின்று கீழ்காறும் விரிந்தன*** - வானும், நிலமும் முதலிய, அழிவற்ற, மேலிருந்து கீழ்வரை விரிந்துள்ளனவாகிய; ***வரம்பில் பூதம்*** - கணக்கில்லாத பூதங்கள்; ***வீழ்வ போல*** - விழுகின்றன போலக் கருதி; ***உளைந்து ஒதுங்க*** - வருந்தி விலக.

*நிலம் நீர் தீ காற்று ஆகாயம் முதலிய ஐந்து பெரும் பூதங்களும் அழிவற்றவை. மேலிருந்துகீழ்வரை விரிந்துள்ளவை. அப்பூதங்கள் விழுவனவாகக் கருதினர் அனைவரும் என்பதாம். ஐம்பூதங்களில் முதலதான வானும் இறுதியதான நிலனும் கட்டி, ஐந்தையும்பெறவைத்தார். இலக்குவனது சீற்ற ஆவேசம் அப்படி இருந்தது என்றார்.* ***116***

***1722. 'புவிப் பாவை பரம் கெட,***
***போரில் வந்தோரை எல்லாம்***
***அவிப்பானும், அவித்து அவர்***
***ஆக்கையை அண்டம் முற்றக்***
***குவிப்பானும், எனக்கு ஒரு***
***கோவினைக் கொற்ற மௌலி***
***கவிப்பானும், நின்றேன்; இது***
***காக்குநர் காமின்' என்றான்.***

***'புவிப் பாவை பரம் கெட*** - உலகம் என்னும் மகள்தன் சுமை நீங்க; ***போரில் வந்தோரை எல்லாம்*** - என்னோடு போர்க்கண் வந்தவர்களைஎல்லாம்; அவிப்பானும் - அழிப்பதற்காகவும்; ***அவித்து - அழித்து; அவர் ஆக்கையை***- அவர்களின் உடல்களை; ***அண்டம் முற்றக் குவிப்பானும்***- உலகஅண்டமெல்லாம் நிறையக் குவிப்பதற்காகவும்; ***எனக்கு ஒரு கோவினை*** - எனக்கு ஒப்பற்றதலைவனாக உள்ள இராமனுக்கு; ***கொற்ற மௌலி*** - வெற்றி பொருந்திய மகுடத்தை; ***கவிப்பானும்*** - சூட்டுதற்காகவும்; ***நின்றேன் -*** (இப்போது ஆயத்தமாக) நிற்கின்றேன் ***; இது காக்குநர் காமின்' -*** இதைத் தடுத்துக் காத்துக்கொள்ளக் கூடியவர்கள் காப்பாற்றிக்கொள்ளுங்கள்;' ***என்றான்.***

*இது கைகேயியையும் அவளைச் சார்ந்தோரையும் நோக்கிக் கூறியதாகக் கொள்க. 'காக்குநர்- படர்க்கை. காமின் - முன்னிலை இட வழுவமைதி.* ***117***

***1723. விண் நாட்டவர், மண்ணவர்,***
***விஞ்சையர், நாகர், மற்றும்***
***எண் நாட்டவர், யாவரும்***
***நிற்க; ஓர் மூவர் ஆகி,***
***மண் நாட்டுநர், காட்டுநர்,***
***வீட்டுநர் வந்தபோதும்,***
***பெண் நாட்டம் ஒட்டேன். இனிப்***
***பேர் உலகத்துள்' என்னா.***

‘**விண் நாட்டவர்** - தேவர் உலகத்துள்ளவர்; **மண்ணவர்** - மண்னுலகில் உள்ளவர்; விஞ்சையர் - வித்தியாதரர்; **நாகர்** - பாதல உலகத்தில் வசிப்போர்; **மற்றும்** - வேறாக; **எண் நாட்டவர்** - எண்ணப்படும் நாட்டில் உள்ளவர்; **யாவரும்** - அனைவரும்; **நிற்க** - கிடக்கட்டும்; (அவரினும் மேம்பட்டு) **ஓர் மூவர்ஆகி** - மூன்று பேராக இருந்து; **மண் நாட்டுநர்** - உலகத்தை நிலை நிறுத்திக்காக்கின்ற திருமாலும்; **காட்டுநர்** - படைக்கின்ற பிரமனும்; **வீட்டுநர்** - அழிக்கின்ற உருத்திரனும் ஆகிய மூவர் (துணையாக); **வந்த போதும்** - வந்தாலும்; **இனிப் பேர் உலகத்துள் பெண் நாட்டம்** - இனி இவ்வுலகில் பெண்ணின் மனக்கருத்துக்கு; **ஒட்டேன்** - உடன்படேன்; **என்னா** - என்று சொல்லி. யார் துணையாக வரினும் கைகேயியின் மனக்கருத்து நிறைவேற விடமாட்டேன் என்பான் இவ்வாறுகூறினான். நாட்டுதல் - நிலைபெறுத்தல்- நிலைநிறுத்தல் அதாவது காத்தலாம். “உலகம்யாவையும் தாம் உளவாக்கலும், நிலை பெறுத்தலும், நீக்கலும்” என்பது (1.) காண்க. 118

*1724.* **காலைக் கதிரோன் நடு உற்றது ஓர்**
**வெம்மை காட்டி,**
**ஞாலத்தவர் கோ மகன், அந்**
**நகரத்து நாப்பண்,**
**மாலைச் சிகரத் தனி**
**மந்தர மேரு முந்தை**
**வேலைத் திரிகின்றதுபோல்,**
**திரிகின்ற வேலை,-**

**ஞாலத்தவர் கோ மகன்** - சக்கரவர்த்தியின் இளைய மகனாகிய இலக்குவன்; **காலைக் கதிரோன்** - காலை இள ஞாயிறு; **நடு உற்றது ஓர் வெம்மை காட்டி** - உச்சிக்கு வந்தாற்போன்ற ஒரு வெப்பக் கடுமையைக் காட்டி; **முந்தை** - முன்காலத்தில்; **மாலைச் சிகரத் தனி மந்தர மேரு** - ஒழுங்கான குடுமிகளை உடைய ஒப்பற்ற மந்தர மலை; **வேலைத் திரிகின்றது போல** - கடலின் கண் (மத்தாக) சுழல்கின்றது போல; **அந்நகரத்து நாப்பண்** - அவ் அயோத்தி நகர நடுவில்; **திரிகின்ற வேலை** - சுழன்று வருகின்ற நேரத்தில்.

பாற்கடலைக் கடையும்போது மந்தர மலையை மத்தாக்கிக் கடைந்த போது ‘மந்தரமாலைசுழன்றதுபோல’ என அதனை இலக்குவன் திரிகின்றமைக்கு உவமையாக்கினார். *119*

இலக்குமணன் நாணொலி கேட்டு இராமன் வருதல்

*1725.* **வேற்றுக் கொடியாள்**
**விளைவித்த வினைக்கு விம்மி,**
**தேற்றத் தெளியாது அயர்**
**சிற்றவைபால் இருந்தான்,**
**ஆற்றல் துணைத் தம்பிதன்**
**வில் - புயல், அண்ட கோளம்**

**கீற்று ஒத்து உடைய, படும்**
**நாண் உரும் ஏறு கேளா.**

**வேற்றுக் கொடியாள் -** மனம் வேறுபட்ட கொடியவளான கைகேயி; **விளைவித்தவினைக்கு -** உண்டாக்கிய துன்பச் செயலுக்கு; விம்மி - கலங்கி; தேற்ற - ஆறுதல் கூறவும்; **தெளியாது -** மனம் சமாதானம் அடையாமல்; அயர் - சோர்கின்ற; **சிற்றவைபால் இருந்தான் -** சுமித்திரையாகிய சிற்றன்னையிடத்தே இருந்தவனாகிய இராமன்; **ஆற்றல்-** வலியிற் சிறந்த; **துணைத் தம்பிதன்-** தனக்குத் துணையாகிய இலக்குவனது; **வில்புயல் -** வில் என்கிற மேகத் திருந்து; **அண்ட கோளம்** - உலக உருண்டை; **கீற்று ஒத்து உடைய** - கீறு கீறாகப் பிளவுபட்டுத் தரும்படி; **படும்** - உண்டாகிய; **நாண் உரும் ஏற** - நாணொலியாகிய இடியேற்றொலியை; **கேளா** - கேட்டு.

இராமன் சுமித்திரை மாளிகை சென்றதை இப்படலத்து இருபத்தெட்டாம் பாடலிற் காண்க. கேளா - செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். அது 'வந்தான்' என அடுத்த பாட்டில் முடியும். *120*

*1726.* **வீறு ஆக்கிய பொற் கலன்**
**வில்லிட, ஆரம் மின்ன,**
**மாறாத் தனிச் சொல் துளி**
**மாரி வழங்கி வந்தான்-**
**கால் தாக்க நிமிர்ந்து, புகைந்து**
**கனன்று, பொங்கும்**
**ஆறாக் கனல் ஆற்றும் ஓர்**
**அஞ்சன மேகம் என்ன.**

**வீறு ஆக்கிய பொன் கலன் வில்லிட** - அழகிற் சிறந்த பொன்னால் ஆகிய அணிகலன்ஒளி வீச; **ஆரம் மின்ன** - (மார்பில்) முத்துவடம் ஒளிவிட்டு விளங்க; **கால்தாக்க** - புயற்காற்று வீச; **நிமிர்ந்து** - மேல்நோக்கி; **புகைந்து** - புகைபொங்கி; **கனன்று** - எரிந்து; **பொங்கும்** - மேலும் மிகுகின்ற; **ஆறாக்கனல்** - அணையாத நெருப்பை; **ஆற்றும்** - அணைக்கின்ற; **ஓர் அஞ்சன மேகம் என்ன** - ஒரு மை போலும் கரிய மேகம் போல; **மாறா** - மாறுபடாத; **தனிச் சொல் மாரித்துளி** - ஒப்பற்ற சொல்லாகிய மழைத் துளியை; **வழங்கி** - சொல்லிக்கொண்டு; **வந்தான்** -

நெருப்பு. இலக்குவன் சீற்றம். அது தணிக்குஞ் சொல் மழைத்துளி வழங்கும் அஞ்சன மேகம்இராமன் என உருவகம் கொள்க. *121*

இராமன் இலக்குவனுடன் உரையாடுதல்

*1727.* **மின் ஒத்த சீற்றக் கனல் விட்டு**
**விளங்க நின்ற,**
**பொன் ஒத்த மேனிப் புயல் ஒத்த**
**தடக் கையானை,**
**'என் அத்த! என், நீ, இமையோரை**

*முனிந்திலாதாய்,*
*சன்னத்தன் ஆகித் தனு ஏந்துதற்கு*
*ஏது?' என்றான்.*

***மின் ஒத்த சீற்றக் கனல் விட்டு விளங்க நின்ற*** - *மின்னலைப் போன்று கோபநெருப்பு விட்டுப் பிரகாசிக்கும்படி நின்றுகொண்டிருந்த;* ***பொன் ஒத்த மேனி*** -*பொன்னிறமான திருமேனியையும்;* ***புயல் ஒத்த தடக் கையானை*** - *மேகம் போன்றவாரிவழங்கும் வண்மையுடைய பெரிய கையினையும் உடைய இலக்குவனை (நோக்கி);* ***'என் அத்த*** - *என் தலைவனே!;* ***இமையோரை முனிந்திலாதாய்*** - *(இவ்வாறு நிகழ்தற்கு மூலமாகிய - ஏதுவாகிய) தேவர்களைக் கோபிக்காதவனாகிய;* ***நீ -; சன்னத்தன் ஆகி*** - *யுத்தமுனைப்புடையவனாய்;* ***தனு ஏந்துதற்கு ஏது என்?'*** - *வில்லை ஏந்துதற்குக் காரணம் என்ன;* ***என்றான் -***

*அத்த என்பது அன்புபற்றி வந்த உயர்சொல் 'இவ்வாறு எல்லாம் நிகழத் தேவர்களே மூலகாரணம். அவர்களை வெறாத நீ இப்பொழுது வில் ஏந்த என்ன காரணம்' என்று வினவியதாகக்கொள்க. 'இறையேனும் முனிந்திலாதாய்' என்ற பாடம் இவ்விடத்தில் சிறப்புடையது.சிறிதளவேனும் எப்பொழுதும் கோபம் வராத சாந்தமூர்த்தியாக விளங்கும் நீ இன்று சினம் மூண்டு வில் ஏந்தக் காரணம் என்ன என்று கேட்டதாக உரைக்கப் பொருள் சிறத்தல் காண்க. அது பின்னர் 'அறம் வற்றிட ஊழ் வழுவுற்ற சீற்றம் விளையாத நிலத்து உனக்கு எங்ஙன்விளைந்தது?" (1730) என வருவதனோடும் பொருந்துமாறும் காண்க. இனித் தேவர்களிடம் பெரிய பக்தி உடைய நீ - அவர்களை முனியாத நீ இன்று வில் ஏந்தக் காரணம் என்ன என்று கூறியதாகக்கொண்டு முன்னர் இப்படலத்து 118 ஆம் பாடலாற் கூறிய இலக்குவன் வார்த்தை செவிப்பட்டு இராமன் கூறுவதாகவும் கொள்ளப் பொருள் ஒன்றும்.*
*122*

இலக்குவன் உரை

*1728. 'மெய்யைச் சிதைவித்து, நின்மேல்*
*முறை நீத்த நெஞ்சம்*
*மையின் கரியாள் எதிர், நின்னை அம்*
*மௌலி சூட்டல்*
*செய்யக் கருதி, தடை செய்குநர்*
*தேவரேனும்,*
*துய்யைச் சுடு வெங் கனலின்*
*சுடுவான் துணிந்தேன்.*

***'மெய்யைச் சிதைவித்து*** - *சத்தியத்தை அழியச் செய்து;* ***நின் மேல் முறை*** - *உன்னுடைய சிறப்பான அரசு முறைமையை;* ***நீத்த*** - *நீக்கின;* ***நெஞ்சம் மையின்கரியாள் எதிர்*** - *மனத்தால் மை போலக் கரியவளான கைகேயியின் எதிரே;* ***நின்னை*** - *உன்னை;* ***அம் மௌலி சூட்டல் செய்யக் கருதி*** - *அந்த மகுடத்தை அணிந்து கொள்ளுதல்செய்ய நினைத்து;* ***தடை செய்குநர் தேவரேனும்*** - *தடை செய்பவர்கள் தேவராயினும்;* ***துய்யைச் சுடு*** - *பஞ்சை எரிக்கின்ற;* ***வெங் கனலின்*** - *கொடு நெருப்புப் போல;* ***சுடுவான்*** - *எரித்திட;* ***துணிந்தேன்*** - *உறுதிசெய்தேன்.'*

*'நின் மேல் முறை' - 'உன் மேல் உள்ள மகன் என்கின்ற அன்பு முறைமையை' என்றும்பொருள் உரைக்கலாம் - இது காறும் கைகேயியின் அன்பு மகன் என இராமன் வளர்ந்ததை அவனும்அறிவான் ஆதலின். 'இமையோரை முனிந்திலாதாய்' இன்று முனிவானேன் என்ற இராமன் வினாவிற்கு; தடை செய்குநர் தேவரேனும்' என்பது இலக்குவன் உரைத்த பதில் எனக்கொள்ளின்; 'இமையோரை' என்னும் பாடம் வன்மை பெற இதுவும் ஒரு சான்றாகும்.* ***123***

***1729. 'வலக் கார் முகம் என் கையது ஆக,***
***அவ் வானுளோரும்***
***விலக்கார்; வேர் வந்து விலக்கினும்,***
***என் கை வாளிக்கு***
***இலக்கா எரிவித்து, உலகு எழினோடு***
***ஏழும், மன்னர்***
***குலக் காவலும், இன்று, உனக்கு யான் தரக்***
***கோடி' என்றான்.***

***'வலக் கார்முகம்*** *- வலிமை படைத்த வில்;* ***என் கையது ஆக*** *- என்கையின்கண் இருப்பதாக;* ***அவ்வானுளோரும்*** *- அந்தத் தேவர்களும்;* ***விலக்கார்*** *-என்னைத் துணிந்து தடுக்கமாட்டார்;* ***அவர் வந்து விலக்கினும்*** *- (ஒருவேளை) அவர் வந்து தடுத்தாலும்;* ***என் கை வாளிக்கு*** *- என் கையில் உள்ள அம்புக்கு;* ***இலக்கா*** *-குறியாகும்படி;* ***எரிவித்து*** *- (அவர்களை) எரியச் செய்து;* ***உனக்கு -; உலகு ஏழினோடுஏழும்*** *- பதினான்கு உலகங்களும்;* ***மன்னர் குலக் காவலும்*** *- அரசர் குலத்துக் காவல்தொழிலாகிய சக்கரவர்த்தியாம் தன்மையும்;* ***இன்று*** *- இப்பொழுதே;* ***யான் தர*** *- நான் கொடுக்க;* ***கோடி'*** *- கொள்வாய்;'* ***என்றான்-***

*கார்முகம் - வில். தசரதன் மன்னர் மன்னன் ஆதலின் 'மன்னர் குலக் காவலும்'இராமனுக் குரியதாக்குவேன் என்றான் இலக்குவன்.* ***124***

*இராமன் உரை*

***1730. இளையான் இது கூற,***
***இராமன், 'இயைந்த நீதி***
***வளையாவரும் நல் நெறி நின்***
***அறிவு ஆகும் அன்றே?***
***உளையா அறம் வற்றிட,***
***ஊழ் வழுவுற்ற சீற்றம்,***
***விளையாத நிலத்து, உனக்கு***
***எங்ஙன் விளைந்தது?' என்றான்.***

***இளையான்*** *- இலக்குவன்;* ***இது கூற*** *- இதனைச் சொல்ல;* ***இராமன்-; 'இயைந்த நீதி வளையாவரும் நல்நெறி நின் அறிவு ஆகும் அன்றே?*** *- அரசர்க்குப் பொருந்தியநீதிக்குச் சிறிதும் மாறுபடாத நல்ல வழியிற் செல்லுவது நின் அறிவாகும் அல்லவா;* ***ஊழ் வழுவுற்ற சீற்றம்*** *- முறைமைக்கு மாறாக உள்ள கோபம்;* ***விளையாத நிலத்து*** *-*

*உண்டாகாத உன் மனத்தில்;* ***அறம் உளையா வற்றிட*** *- தருமம் மனம் வருந்திக் கெடும்படி;* ***உனக்கு விளைந்தது எங்ஙன்?*** *- உனக்கு உண்டாகியது எவ்வாறு;* ***'என்றான்-.***

*விளையாத நிலத்து - உண்டாகாத குடும்பத்தில் என்று பொருள் உரைத்து, 'வாய்மையும் நீதிமுறைமையும் சிறிதும் தவறாத தயரத மன்னன் வழிவில் வந்த உனக்கு எப்படி முறை தவறிய சீற்றம்விளைத்து' என்று கேட்டதாக உரைப்பதும் ஒரு பொருள் உண்டு. இராமனது பண்பு நலத்துக்கு அவன்அவ்வாறு கூறியதாகக் கேட்டு பொருந்தாமையின் அவ்வுரைசிறவாதாம்.* ***125***

இலக்குவன் கேள்வி

***1731. நீண்டான் அது உரைத்தலும்,***
***நித்திலம் தோன்ற நக்கு,***
***' "சேண்தான் தொடர் மாநிலம்***
***நின்னது" என்று, உந்தை செப்பப்***
***பூண்டாய்; "பகையால் இழந்தே,***
***வனம் போதி" என்றால்,***
***யாண்டோ, அடியேற்கு இனிச்சீற்றம்***
***அடுப்பது?' என்றான்.***

***நீண்டான்*** *- நெடியோனாய இராமன்;* ***அது உரைத்தலும்*** *- அச்சொற் கூறுதலும்;* ***நித்திலம் தோன்ற நக்கு*** *- (இலக்குவன்) பற்கள் வெளித் தோன்றச்சிரித்து;* ***'சேண்தான் தொடர் மாநிலம் நின்னது' என்று உந்தை செப்ப*** *- நெடுந்தூரம்பற்றியுள்ள அகன்ற பெரிய கோசல அரசு உன்னுடையது என்று உன் தந்தை சொல்ல;* ***பூண்டாய்*** *- சரி என்று அதனை மேற்கொண்டாய்;* ***பகையால்*** *- பகைவர்களால்;'* ***இழந்து வனம் போதி என்றால்*** *- அரசை இழந்து காட்டிற்குச் செல்' என்று சொன்னால்;* ***அடியேற்கு*** *- அடியேனுக்கு;* ***சீற்றம் அடுப்பது*** *- கோபம் உண்டாவது;* ***இனி யாண்டோ'*** *-இனி எந்த இடத்திலோ;'* ***என்றான்-*** *இராமனை வனம் போகச் சொன்ன கோபம் கொண்டு எந்தை என்னாமல் தயரதனை 'நுந்தை'என்றான். சொன்ன சொல்லைப் பகையாளர் பேச்சைக் கேட்டு மாற்றிய இவ்விடத்தில் அல்லவாகோபம் வரவேண்டும். வேறு எவ்விடத்தில் இனிக் கோபம் விளைவது? என்றான் இலக்குவன் என்க. நித்திலம் - முத்து, இங்கே பற்களைக் குறித்தது.* ***126***

***1732. 'நின்கண் பரிவு இல்லவர்***
***நீள் வனத்து உன்னை நீக்க,***
***புன்கண் பொறி யாக்கை***
***பொறுத்து, உயிர் போற்றுகேனோ -***
***என் கட்புலமுன் உனக்கு***
***ஈந்துவைத்து, "இல்லை" என்ற***
***வன்கண் புலம் தாங்கிய***
***மன்னவன் காண்கொல்?' என்றான்.***

***'என் கண்புல முன் உனக்கு ஈந்து வைத்து*** - என் கண் எதிரே உனக்கு அரசைக்கொடுத்து; *'இல்லை' என்ற*- பிறகு உனக்கு அரசு இல்லை என்று சொல்லிய; ***வன் கண் புலம்தாங்கிய மன்னவன் காண்கொல்?*** - கொடுந் தன்மை உடைய தயரதனோ யானும்; ***நின்கண்பரிவு இல்லவர்?*** - உன்னிடத்து அன்பு இல்லாதவர்கள்; ***நீள்வனத்து*** - நீண்டகாட்டில்; ***உன்னை நீக்க*** - உன்னை அனுப்ப (அதன் பிறகும்); ***புன்கண் கொறி யாக்கை பொறுத்து*** - பொலிவழிந்த ஐம்பொறிகளை உடைய உடம்பைச் சுமந்து; ***உயிர் போற்றுகேனோ?'*** - உயிரைப் பாதுகாத்து (தயரதன் போல்) வாழ்வேனா;' ***என்றான். -***

*இராமனை வனம் அனுப்பித் தயரதன் உயிர் வாழ்வதாக நினைத்தவன் ஆதலின் நானும்அவ்வாறானவன் அல்லன் என்று இங்ஙனம் கூறினான் இலக்குவன். வன் - கொடிய, கண் புலம் -கண்ணாகிய புலம் எனினும் ஆம்.*
*127*

இராமன் பதில்

***1733. ' "பின், குற்றம் மன்னும் பயக்கும்***
***அரசு" என்றல், பேணேன்;***
***முன், கொற்ற மன்னன், "முடி***
***கொள்க" எனக் கொள்ள மூண்டது***
***என் குற்றம் அன்றோ? இகல்***
***மன்னவன் குற்றம் யாதோ? -***
***மின் குற்று ஒளிரும் வெயில்***
***தீக்கொடு அமைந்த வேலோய்!***

***மின் குற்று ஒளிரும் வெயில் தீக் கொடு அமைந்த வேலோய்!-*** மின்னலை வென்று விளங்குகின்ற வெயிலையும் நெருப்பையும் கொண்டு செய்யப் பெற்ற வேலை உடைய இலக்குவனே; ***கொற்ற மன்னன்*** - வெற்றியுடைய தயரதன்; ***முன் -; 'முடிகொள்க' என*** - மகுடத்தைச் சூடி அரசு ஏற்க எனச் சொல்ல; ***'அரசு பின் மன்னும்குற்றம் பயக்கும்' என்றல் பேணேன்*** - அரசாட்சி பிறகு மிகுதியும் நமக்குக் குற்றங்களை உண்டாக்கும் என்று கருதாமல்; ***கொள்ள மூண்டது*** - ஏற்றுக்கொள்ள முயன்றது; ***என்குற்றம் அன்றோ?*** - (இதில்) பகைவன்மை அழிக்கும் தயரதனாகிய மன்னவனது தவறு யாதுளது.'

*ஆராயாமல் அரசு ஆள ஒப்புக்கொண்டது என் தவறுதானே அன்றி, அளித்தவன்மேல் தவறு இல்லைஎன்றான் இராமன். அரசு பலர் ஆசைப்படக் கூடிய ஒன்று. இதனாற் பின்னர்ப் பல தீமைகள்விளையும் என்று நான் கருதாமல் ஒப்புக்கொண்டமையால் என்னைத்தான் தண்டிக்க வேண்டுமேஅன்றி, எந்தையைக் குறைகூறல் சரியன்று என்று சமத்காரமாகக் கூறித் தம்பியை அடக்கினான்இராமன் என்க.* ***128***

***1734. 'நதியின் பிழை அன்று***
***நறும் புனல் இன்மை; அற்றே,***
***பதியின் பிழை அன்று;***
***பயந்து நமைப் புரந்தாள்***

***மதியின் பிழை அன்று;***
***மகன் பிழை அன்று; மைந்த!***
***விதியின் பிழை; நீ இதற்கு***
***என்னை வெகுண்டது?' என்றான்.***

*__'மைந்த!__ - மகனே!; __நறும் புனல் இன்மை__ - (என்றும் நீர் உள்ள ஆற்றிலே ஒரு சில காலங்களில்) நல்ல நீர் இல்லாமல் வற்றிப் போவது; __நதியின் பிழைஅன்று__ -அவ் ஆற்றின் குற்றம் அன்று; __அற்றே__ - அது போலவே; __பதியின் பிழைஅன்று__ - (என்னைக் காடு செல்லும்படி சொன்னது) தந்தையின் குற்றம் அன்று; __பயந்துநமைப் புரந்தாள்__ - (காடு செல்லும்படி வரம் வாங்கியது) பெற்று நம்மைக்காப்பாற்றிவளர்த்தவள் ஆகிய கைகேயியின்; __மதியின் பிழை அன்று__ - அறிவினது குற்றமும் அன்று; __மகன் பிழை அன்று__ - அவள் மகனாகிய பரதனது குற்றம் அன்று; __விதியின் பிழை__ - விதியால் (நமது ஊழ்வினையால்) விளைந்த குற்றமே ஆகும். இங்ஙனம் இதனை ஆராயாது; __நீஇதற்கு வெகுண்டது என்னை?'__ - நீ இந்தச் செயலுக்கு இவர்களைக் காரணமாக்கிக் கோபித்தது ஏன்?' __என்றான் -.__*

*ஊழ்வினை செலுத்தத் தாயும் தந்தையும் அவ்வினையின் கருவியாக இருந்து செயல்பட்டனரேஅன்றி அவர்களாக நம்மேல் பகை கொண்டு செய்தாரில்லை. மழைநீர் வரத்து இன்மையால் சிலகாலம் ஆற்றில் நீர் வற்றுவது போல் வினைவலியால் பெற்றோர் அன்பின்மை உடையார் போலத் தோன்றுவர், அவ்வளவேஎன்றானாம். மூவரையும் தாயர் என ஒப்பக் கருதல் பற்றிக் 'கைகேயியைப் பயந்து நமைப்புரந்தாள்' என்றான் இராமன்.*
***129***

இலக்குவன் பதில்

***1735. உதிக்கும் உலையுள் உறு தீ என***
***ஊதை பொங்க,***
***'கொதிக்கும் மனம் எங்ஙனம்***
***ஆற்றுவென்? கோள் இழைத்தாள்***
***மதிக்கும் மதி ஆய், முதல்***
***வானவர்க்கும் வலீஇது ஆம்,***
***விதிக்கும் விதி ஆகும், என்***
***வில் - தொழில் காண்டி' என்றான்.***

*__உலையுள் உதிக்கும் உறு தீ என ஊதை பொங்க__ - (கொல்லன்) உலைக்களத்துள்பிறக்கின்ற மிக்க நெருப்பைப் போல வெப்பமான பெருமூச்சு மேலே பொங்கிவர; __'கொதிக்கும் மனம்__ - வெம்புகின்ற மனத்தை; __எங்ஙனம் ஆற்றுவென்__ - எவ்வாறுதணியச் செய்வேன்; __கோள் இழைத்தாள்__ - தீங்கு செய்தவளாகிய கைகேயியின்; __மதிக்கும் மதி ஆய்__ - அறிவுக்கும் அறிவு தருவதாய்; __முதல் வானவர்க்கும்__ - மும் மூர்த்திகளாய தேவர்களுக்கும்; __வலிது ஆம்__ - வலிமையான; __விதிக்கும் விதி ஆகும்__ - (நீ சொல்லிய) ஊழ்வினையையும் வென்று மாற்ற வல்ல ஊழ் ஆகிய; __என் வில் தொழில்காண்டி'__ - எனது வில்லின் செயலைப் பார்ப்பாயாக;' __என்றான் -.__*

*விதியால் விளைந்தது என இராமன் சொல்ல, அந்த விதியையும் மாற்ற வல்ல விதி என்வில் என்றான் இலக்குவன். துடிக்கின்ற மனத்தை ஆற்ற முடியாமல் திணறுகிறேன் என்ற அவதியைமுதலில் வெளிப்படுத்துகிறான்; பின்னர் இதற்கு ஏதாவது முடிவு கண்டால்தான் என்மனம் ஆறும் என்பதாகப் பேசுகிறான்.*
***130***

*இராமன் தணிப்புரை*

***1736. ஆய்தந்து, அவன் அவ் உரை***
***கூறலும், 'ஐய! நின்தன்***
***வாய் தந்தன கூறுதியோ,***
***மறை தந்த நாவால்?***
***நீ தந்தது, அன்றே,***
***நெறியோர்கண் நிலாதது? ஈன்ற***
***தாய் தந்தை என்றால், அவர்மேல்***
***சலிக்கின்றது என்னோ?'***

***அவன்** - இலக்குவன்; **ஆய்தந்து** - ஆராய்ந்து; **அவ் உரை கூறலும்** -அந்தச் சொற்களைச் சொன்ன அளவில் (இராமன் அவனை நோக்கி); **'ஐய!** - தம்பி; **மறை தந்த நாவால்** - வேதங்களைச் சொன்ன நாக்கினால்; **நின்தன் வாய்தந்தனகூறுதியோ?** - உன் வாயில் வந்தவைகளைக் கூறுகின்றாயோ, **நீ தந்தது** - நீஇப்பொழுது (உன் வாயால்) தந்த சொல்; **நெறியோர்கண் நிலாதது அன்றே?** -நல்நெறியில் நடப்பவர்கள் இடத்தில் நிற்கத்தகாத சொல் அல்லவா; **ஈன்ற தாய் தந்தை என்றால்** - (உன் கருத்திற்கு மாயாக நடப்பவர்) பெற்ற தாயும் தந்தையும் ஆனால்; **அவர் மேல் சலிக்கின்றது** - அவரிடத்தில் கோபிப்பது; **என்னோ?'** - எப்படிப்பொருந்தும்.*

*வேதத்தைக் கற்றுணர்ந்த இலக்குமணன் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்றுஅறிந்துள்ளவன். ஆகவே, அன்னைக்கும் தந்தைக்கும் மாறாக வாய்தந்த வார்த்தைகளைப் பேசுதல்நெறியற்றோர் செயலாகும் என்பது இராமன் சொல்லியதாகும்.* ***131***

*இலக்குவன் பிடிவாதம்*

***1737. 'நல் தாதையும் நீ; தனி***
***நாயகம் நீ; வயிற்றில்***
***பெற்றாயும் நீயே; பிறர் இல்லை;***
***பிறர்க்கு நல்கக்***
***கற்றாய்! இது காணுதி இன்று'***
***என, கைம்மறித்தான் -***
***முற்றா மதியம் மிலைந்தான்***
***முனிந்தானை அன்னான்.***

***முற்றா மதியம் மிலைந்தான்*** - இளம்பிறை அணிந்த சிவபெருமான்; ***முனிந்தானை*** - சினங் கொண்ட நிலையடைந்தானை; ***அன்னான்*** - ஒத்தவனாகிய இலக்குவன் (இராமனைநோக்கி); ***'நல்தாதையும் நீ*** - (எனக்கு) நல்ல தந்தையும் நீ; ***தனி நாயகன் நீ*** - ஒப்பற்ற தலைவனும் நீ; ***வயிற்றில் பெற்றாயும் பிறர் இல்லை நீயே*** - (என்னைப் )பெற்றெடுத்த தாயும் பிறர் யாரும் இல்லை நீயே; ***பிறர்க்கு நல்கக் கற்றாய்*** - (எல்லாவற்றையும்) மற்றவர்களுக்குக் கொடுத்து விடக் கற்றவனே; ***இன்று இது காணுதி*** -இன்று (நான் உனக்கு அரசைப் பெற்றுத் தருவதாகிய) இதனைப் பார்ப்பாயாக;' ***என*** -என்று சொல்லி; ***கைம் மறித்தான்*** - (இராமனைத் ) தடுத்தான்.

*எனக்குத் தந்தையும் தாயும் நீயே, தயரதனும் கைகேயியும் அல்லர்; ஆகையால் உனக்குத்தீமை செய்த அவர்களைத் தண்டிப்பது வேதம் கற்றறிந்தமைக்கு முரணாகாது என்றான் இலக்குவன். இது என்பது 'எனது வில் தொழில்' என்று அவன் கூறியதாகக் கொள்ளினும் அமையும்.* ***132***

இராமன் மறுத்து உரைத்தல்

***1738. வரதன் பகர்வான்; 'வரம்***
***பெற்றவள்தான் இவ் வையம்***
***சரதம் உடையாள்; அவள், என்***
***தனித் தாதை, செப்பப்***
***பரதன் பெறுவான்; இனி, யான்***
***படைக்கின்ற செல்வம்***
***விரதம்; இதின் நல்லது***
***வேறு இனி யாவது?" என்றான்.***

***வரதன்*** - இராமன்; ***பகர்வான்*** - கூறுவான்; ***'வரம் பெற்றவள் தான்*** - (அரசனுக்குச் சாரதியாய் இருந்து ) வரம் வாங்கிக் கொண்டவளாகிய கைகேயியை; ***இவ்வையம் சரதம் உடையாள்*** - இவ் வுலக ஆட்சியை மெய்யாகப் பெறுதற்கு உரிமை உடையவளாவாள்; ***அவள், என் தனித் தாதை செப்பப் பரதன் பெறுவான்*** - அவளும், என்ஒப்பற்ற தந்தையாகிய தயரதனும் சொல்லப் பரதன் (இவ்வரசாட்சியைப் ) பெறுவான்; ***இனி*** - அடுத்து; ***யான் படைக்கின்ற செல்வம்*** - நான் பெறுகின்ற செல்வம்; ***விரதம்*** - தவம் ஆகும்; ***இதின் நல்லது*** - இத்தவத்தினும் நன்மையானது; ***இனி வேறு யாவது?*** - இனி வேறு என்ன உள்ளது;' ***என்றான் -.***

*நான் இதனை நல்லது என்றும், இதற்கு மேலாக, நன்மை வேறில்லை என்றும்எண்ணுகிறபோது, என்னையே தாயும் தந்தையும் ஆகக் கருதும் நீ என்னுடைய நன்மையைக் கெடுக்கமுயற்சிக்கலாமா? என்பது குறிப்பு.*
***133***

***1739. ஆன்றான் பகர்வான் பினும்;***
***'ஐய! இவ் வைய மையல்***
***தோன்றா நெறி வாழ் துணைத்***
***தம்முனைப் போர் தொலைத்தோ?***
***சான்றோர் புகழும் தனித்***

**தாதையை வாகை கொண்டோ?**
**ஈன்றாளை வென்றோ, இனி,**
**இக் கதம் தீர்வது?' என்றான்.**

***ஆன்றான்*** - *குணங்களால் உயர்ந்து அமைந்தவனாகிய இராமன்;* ***பினும்பகர்வான்*** - *மேலும் சொல்வான்;* ***'ஐய!*** - *ஐயனே;* ***இவ் வைய மையல் தோன்றா நெறிவாழ்*** - *இந்த உலக அரசாட்சி என் கின்ற மயக்கம் அற்ற நன்னெறியில் இருந்து கொண்டுள்ள;* ***துணைத் தம்முனைப்*** *-உன்னுடைய துணையாகிய அண்ணனைப் (பரதனை)ப்;* ***போர் தொலைத்தோ?*** - *சண்டையில்தோல்வியடையச் செய்தோ;* ***சான்றோர் புகழும் தனித் தாதையை வாகை கொண்டோ?*** - *பெரியோர்களாற் புகழப்பெறும் ஒப்பற்ற நம் தந்தையாகிய தயரதனை வெற்றி கொண்டோ;* ***ஈன்றாளை வென்றோ?*** - *பெற்ற தாயை (கைகேயியை) வெற்றி கொண்டோ;* ***இக்கதம்*** *-(உனக்கு வந்துள்ள) இக் கோபம்;* ***இனித் தீர்வது?'*** - *இனி நீங்குவது;'* ***என்றான்-.***

*அரசாட்சி பரதனுக்குக் கிடைத்திருப்பது என்பதெல்லாம் அயோத்தியில் உள்ளார் அறிந்தனவே. கேகய நாட்டில் உள்ள பரதனுக்கு அச்செய்தி இன்னும்தெரியாது ஆகலின், 'இவ் வையம் என்கிற மையல் அறியப்படாத கேகய நாட்டில் வாழும் உன்அண்ணனாகிய பரதனை' என்றும் இராமன் கூறியதாகக் கொள்க. 'எள்ளரிய குணத்தால்' இராமனையே அனையவன் பரதன் ஆகையால், இராமனுக்கு அரசில் ஆசையின்றிச் சன்மார்க்கத்தில் ஆசைசெல்லுமாப் போல; பரதனும் வைய மையலின்றி நன்னெறியில் வாழ்கின்றவன்' என்பது உரைவிளக்கமாகும். 134*

இலக்குவன் சினம் அடங்கல்

*1740.* **செல்லும் சொல் வல்லான் எதிர்**
**தம்பியும், 'தெவ்வர் சொல்லும்**
**சொல்லும் சுமந்தேன்; இரு**
**தோள் எனச் சோம்பி ஓங்கும்**
**கல்லும் சுமந்தேன்; கணைப்**
**புட்டிலும், கட்டு அமைந்த**
**வில்லும், சுமக்கப் பிறந்தேன்;**
**வெகுண்டு என்னை?' என்றான்.**

***செல்லும் சொல் வல்லான் எதிர்*** - *(குறித்த செயலை) நிறைவேற்ற வல்லசொற்களைக் கூறுதல் வல்ல இராமன் எதிரே;* ***தம்பியும்*** - *இலக்குவனும்;* ***'தெவ்வர்சொல்லும் சொல்லும் சுமந்தேன்*** - *உன் பகைவர்களாகிய கைகேயி முதலியவர்கள் சொல்கின்றசொல்லையும் தாங்கினேன்;* ***இரு தோள் எனச் சோம்பி ஏங்கும் கல்லும் சுமத்தேன்*** - *(அப் பகைவர்களை அழிக்க முயலாது) இரண்டு தோள்எனப் பெயர்பெற்று வேலையின்றி ஓய்ந்து கிடக்கும் மலைகளையும் தாங்கியுள்ளேன்;* ***கணைப் புட்டிலும், கட்டு அமைந்த வில்லும்*** *-அம்பு அறாத் தூணியும், நன்கு கட்டிச் செய்யப்பெற்ற வில்லும் ஆகியவற்றையும்;* ***சுமக்கப்பிறந்தேன்*** - *பயனின்றித் தூக்கிக்கொண்டு கிடக்கப் பிறவி எடுத்தேன் (இத்தகைய துர்ப்பாக்கியனாகிய யான்);* ***வெகுண்டு என்னை?'*** - *கோபிப்பதால் என்ன பயன்;'* ***என்றான் -.*** *'தெவ்வர் சொல்லும் சொல்லும் சுமந்தேன்' என்பதற்கு இதுவரை பகைவர்களால் புகழப்படும் சொல்லைச்*

*சுமந்தனோகிய யான் என்று இலக்குவன் கூறியதாகப்பொருள் கோடலும் உண்டு. ஆயினும், இங்கே இலக்குவன் கூற்றில் வரும் மூன்றும் சினத்தாற்பயனில்லை என்கிற அவலநிலையில் கூறுவதாக ஒரு தொடராகப் பொருள் கோடலே சிறப்பாதல் கூர்ந்து அறிக. 'சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை, இகல்வெல்லல் யார்க்கும்அரிது' வெகுண்டு என்னை?' என்றான்.* ***135***

இராமன் வெறுப்புரை

***1741. 'நன் சொற்கள் தந்து ஆண்டு, எனை***
***நாளும் வளர்த்த தாதை***
***தன் சொல் கடந்து, எற்கு***
***அரசு ஆள்வது தக்கது அன்றால்;***
***என் சொல் கடந்தால், உனக்கு***
***யாது உளது ஊற்றம்?' என்றான் -***
***தேன்சொல் கடந்தான்,***
***வடசொல் - கலைக்கு எல்லை தேர்ந்தான்.***

**தென்சொல் கடந்தான்** - *தமிழ் மொழியின் எல்லை கண்டவனாம்;* **வடசொல்கலைக்கு எல்லை தேர்ந்தான்** - *வடமொழிச் சாத்திரங்களின் முடிவிடத்தை ஆராய்ந்து அறிந்தவனும் ஆகிய இராமன் (இலக்குணனை நோக்கி);* **'நன் சொற்கள் தந்து ஆண்டு எனை நாளும்வளர்த்த தாதை தன்** - *இன் மொழிகள் பேசி என்னைப் பாதுகாத்து என்னை நாளும் வளர்த்துவந்த தந்தை தயரதனது;* **சொல் கடந்து** - *சொற்களை மீறி;* **அரசு ஆள்வது** - *அரசு ஆட்சி செய்வது என்பது;* **எற்கு** - *எனக்கு;* **தக்கது அன்று** - *தகுதியானசெயல் அன்று;* **(ஆனால் உனக்கோ) என் சொல் கடந்தால்** - *(நீ தந்தையும் தாயும் என்றகருதும்) என்னுடைய சொல்லை மீறினால்;* **யாது உளது ஊற்றம்?'** - *என்ன நன்மைவந்துவிடும் (ஒன்றும் வராது);* **என்றான் -**

*'என்னைத் தந்தையும் தாயும் என்று நீ கருதுவது உண்மையாயின் என் சொல்லை மீறுவது உனக்கும் தகாது' என்று கூறுவதாகக் கருத்துக் கொள்ளல் வேண்டும். 'ஆல்'அசை.* ***136***

இலக்குவன் சீற்றம் தணிதல்

***1742. சீற்றம் துறந்தான்; எதிர்நின்று***
***தெரிந்து செப்பும்***

***மாற்றம் துறந்தான்; மறை நான்கு***
***என வாங்கல் செல்லா***
***நால் தெண் திரை வேலையின்,***
***நம்பி தன் ஆணையாலே,***
***ஏற்றம் தொடங்காக் கடலின்,***
***தணிவு எய்தி நின்றான்.***

*(இலக்குவன்)* ***மறை நான்கு என வாங்கள் செல்லா நால் தெண்திரை வேலையின் நம்பிதன்ஆணையால்*** - *வேதங்கள் நான்கு என்று என்றும் குறைவுபடாத நான்கு கடல்களை உடைய ஆடவர் திலகமாகிய இராமனது கட்டளையால்;* ***சீற்றம் துறந்தான்*** - *சினத்தைக் கைவிட்டான்;* ***எதிர் நின்று*** - *(இராமன்) எதிரில் இருந்து;* ***தெரிந்து*** - *ஆராய்ந்து;* ***செப்பும்*** - *கூறுகின்ற;* ***மாற்றம்*** - *(தர்க்கவாத) வார்த்தைகளை;* ***துறந்தான்*** - *கைவிட்டான்;* ***ஏற்றம் தொடங்காக் கடலின்*** - *கரையைக் கடவாத கடல் போல;* ***தணிவு எய்தி நின்றான்*** - *(சினம்) அடங்கி நின்றான்.*

*'என்றும் வற்றாத நாற்பெருங் கடல் போன்ற நான்கு வேதங்களை உடைய நம்பி' எனஇயைக்க, சீற்றத் தணிவுக்குக் கடல் உவமை. அலை ஓயாது; ஆயினும் கட்டுக்குள் நிற்கும். இலக்குவன் உணர்ச்சி ஓயாது; ஆயினும், இராமபிரானின் சொல்லுக்குக்கட்டுப்பட்டான்.* *137*

இராமனும் இலக்குவனும் சுமித்திரை கோயில் சேர்தல்

***1743. அன்னான்தனை, ஐயனும்,***
***ஆதியொடு அந்தம் ஒன்றாம்***
***தன்னாலும் அளப்ப அருந்***
***தானும், தன் பாங்கர் நின்ற***
***பொன் மான் உரியானும்***
***தழீஇ எனப் புல்லி, பின்னை,***
***சொல் மாண்புடை அன்னை***
***சுமித்திரை கோயில் புக்கான்.***

***ஐயனும்*** - *இராமனும்;* ***ஆதியொடு அந்தம் ஒன்றாம் தன்னாலும் அளப்ப அருந் தானும்*** - *முதலும் முடிவும் ஒன்றாக உள்ள தன்னாலும் வரையறுத்துக் கூறமுடியாதுள்ள திருமாலாகிய தானும்; தன் பாங்கர் ***பொன்னிறமான மான் தோலை உடைய சிவபிரானும்;* ***தழீஇ என*** - *தழுவிக் கொண்டாற் போல;* ***அன்னான் தனை*** - *அந்த இலக்கு வனை;* ***புல்லி*** - *தழுவி;* ***பின்னை*** - *பிறகு;* ***மாண்பு உடை சொல் அன்னை*** - *மாட்சிமை உடைய சொற்களை உடையளாகிய சுமித்திரைத் தாயின்;* ***கோயில் புக்கான்*** *-மாளிகையை அடைந்தான்.*

*இராமன் இலக்குவனைத் தழுவிய காட்சி திருமால் சிவபெருமானைத் தழுவி நின்றது போலும் என்றார். இலக்குவன் பொன்னிற மேனியன் ஆதலின் பொன்னிறமான மான் உரி போர்த்தசிவபிரான் போல ஆயினன். ஆதியும் அந்தமும் இல்லாத என்பதனை 'ஆதியும் அந்தமும் ஒன்றாகும்' என்றார். ஆதிவேறு அந்தம் வேறு என்றால் ஆதி அந்தம் இரண்டாகி உண்டு என ஏற்படும். 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி' (திருவா. திருவெம்.1) என்று இறை இயல்புஇவ்வாறே பேசப்படுதல் காண்க. 'தன் பெருமை தான் அறியாத் தன்மையன்' என்கிறபடி உள்ளவன் ஆதலின் 'தன்னாலும் அளப்பருந் தானும்' என்றார். 'தானும் காண்கிலன் இன்னமும் தன் பெரும்தலைமை' என்று (கந்த. சூரன் அமைச்சியல் - 128) சிங்கமுகன் சூரபத்மனுக்கு முருகனைப்பற்றிக் கூறுவதும் காண்க. திருமாலும் சிவனும் இணைந்துள்ள காட்சியை ஆழ்வார்கள். அனுபவித்துக் கூறியுள்ளனர். 'அரன் நாரணன் நாமம் ஆன் விடை புள் ஊர்தி, உரை நூல் மறை உறையும்கோயில் - வரைநீர், கருமம் அழிப்பு அளிப்புக் கையது வேல் நேமி, உருவம் எரி கார்மேனி ஒன்று' (திவ்ய. 2086)*

*'தாழ் சடையும் நீள் முடியும் ஒண் மழுவும் சக்கரமும், துழாயும்பொன்னாணும் தோன்றுமால் - சூழம், திரண்டு அருவிபாயும் திருமலைமேல் எந்தைக்கு இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து' (திவ்ய. 2344.) என்ற முதலாழ்வார் பாசுரங்களை இங்கேகாண்க.* ***138***

*இராமன் சுமித்திரை துயரை ஆற்றுதல்*

***1744. கண்டாள், மகனும் மகனும்***
***தன கண்கள் போல்வார்,***
***தண்டாவனம் செல்வதற்கே***
***சமைந்தார்கள் தம்மை;***
***புண்தாங்கு நெஞ்சத்தனளாய்ப்***
***படிமேல் புரண்டாள்;***
***உண்டாய துன்பக் கடற்கு***
***எல்லை உணர்ந்திலாதாள்.***

***(சுமித்திரை) தண்டா வனம் செல்வதற்கே சமைந்தார்கள்*** *- தடைபடாத காட்டுக்குச்செல்வதற்கு உறுதி செய்தவர்களாகிய;* ***மகனும் மகனும்*** *- இராமனும் இலக்குவனும்;* ***ஆகிய தன கண்கள் போல்வார் தம்மை*** *- தன் இரண்டு கண்களையும் போன்றவர்களை;* ***கண்டாள்*** *- பார்த்தாள்;* ***புண்தாங்கு நெஞ்சத்தனளாய்*** *- புண்பட்ட மனம் உடையவளாய்;* ***உண்டாய துன்பக் கடற்கு எல்லை உணர்ந்திலாதாள்*** *- தோன்றிய துன்பம்எனும் கடலுக்கு முடிவு காண மாட்டாது;* ***படிமேல்*** *- மண்ணின் மேல்;* ***புரன்டாள்*** *-விழுந்து புரண்டாள். தண்டா வனம் - எனப் பிரிக்காது ஒன்றாக்கித் தண்டகாரணியம் என்பதாகவும்உரைக்கலாம். சுமித்திரை இந்நிலையில் குறிப்பிட்டு ஓர் இடத்தைச் சுட்டுவது பொருத்தமாய்இராது என்பதால் தண்டா வனம் என்பதாகப் பிரித்துப் பொருள் உரைக்கப் பெற்றது.தண்டகாரணியம் என்பது விந்திய மலைக்கும் சைவல மலைக்கும் இடையில் உள்ள காடு.* ***139***

***1745. சோர்வாளை, ஓடித் தொழுது***
***ஏந்தினன்; துன்பம் என்னும்***
***ஈர் வாளை வாங்கி, மனம்***
***தேறுதற்கு ஏற்ற செய்வான்;***
***'போர் வாள் அரசர்க்கு இறை***
***பொய்த்தனன் ஆக்ககில்லேன்;***
***கார்வான்நெடுங் கான் இறை***
***கண்டு, இஙன் மீள்வென்' என்றான்.***

***சோர்வாளை*** *- தளர்கின்ற சுமித்திரையை;* ***தொழுது*** *- (இராமன்) மத வணங்கி ஓடி ஏந்தினன் - விரைந்து சென்று தாங்கிக்கொண்டான்;* ***துன்பம் என்னும் ஈர்வாளை வாங்கி*** *- (அவளது) துயர் என்கிற மனத்தை அறுக்கும் வாளை வெளியே எடுத்து;* ***மனம்தேறுதற்கு*** *- மனம் தெளிவடைவதற்கு;* ***ஏற்ற செய்வான்*** *- தக்க செயல்களைச்செய்பவனாய்;* ***'போர் வாள் அரசர்க்கு இறை*** *- போர் செய்வதில் வல்லவாளை உடையசக்கரவர்த்தியை;* ***பொய்த்தனன் ஆக்ககில்லேன்*** *- சத்தியம்*

*தவறியவனாகச் செய்யமுடியாதவனாய் உள்ளேன்;* ***கார்வான் நெடுங்கானம்*** *- கரிய மேகம் சூழ்ந்த பெரியகாட்டை;* ***இறைகண்டு*** *- சிறிது பார்த்துவிட்டு;* ***இஙன் மீள்வென்'*** *-இவ்விடத்தே திரும்புவேன்;* ***என்றான் -.***

*'இறை' என்பது சிறிது நேரம் என்பதாம். அவள் மனம் தேறச் சொல்கின்றான் ஆதலின் 14 ஆண்டுகளை 'இறை' எனக் கூறினான். இஙன்- இங்ஙன் என்பதன்விகாரம்.* ***140***

***1746. 'கான் புக்கிடினும்,***
***கடல் புக்கிடினும், கலிப் பேர்***
***வான் புக்கிடினும்,***
***எனக்கு அன்னவை மாண் அயோத்தி***
***யான் புக்கது ஒக்கும்; எனை***
***யார் நலிகிற்கும் ஈட்டார்?***
***ஊன் புக்கு, உயிர் புக்கு,***
***உணர் புக்கு, உலையற்க!' என்றான்.***

*(அம்மா!)* ***'கான் புக்கிடினும்*** *- காட்டில் சென்றாலும்;* ***கடல் புக்கிடினும்*** *- கடலிற் சென்றாலும்;* ***கலிப் பேர் வான் புக்கிடினும்*** *- ஆரவாரத்தையும் பெருமையையும் உடைய தேவலோகத்தை அடைந்தாலும்;* ***எனக்கு -; அன்னவை*** *- அந்த இடங்கள்;* ***யான் மாண் அயோத்தி புக்கது ஒக்கும்*** *- யான் சிறந்தஅயோத்தி நகரத்துக்குள் இருப்பதைப் போலவே ஆகும்;* ***எனை நலிகிற்கும் ஈட்டார் யார்?*** *- என்னைத் துன்புறுத்தும் ஆற்றல் உடையவர் யார் உளர்;* ***ஊன்புக்கு, உயிர்புக்கு, உணர்புக்கு உலையற்க'*** *- உடம்பு, உயிர், உணர்வு ஆகியவற்றுக்குள் (துயரம்) ஊடுருவித்தளரா தொழிக;* ***என்றான் -.***

*எந்நிலையில் இருந்தாலும் ஒரே தன்மையான மனம் உடையவன் ஆதலால் எல்லாம் எனக்குஅயோத்தியே என்றான். இத்தகைய சுத்த சாத்துவிக மனம் உடையானைத் துன்புறுத்த வல்லார்யார்? ஆகவே, மனம் தளராதீர்கள் என்று சுமித்திரையைத் தேற்றினான். உணர்பு உக்கு எனப் பிரித்து உணர்வழிந்து என உரைப்பினும் அமையும். 'ஊன் கெட்டு, உயிர் கெட்டு, உணர்வுகெட்டு, என் உள்ளமும் போய் நான் கெட்டவா பாடி' என்ற (திருவா. திருத்தெள்.18.) மணிவாசகர் பாட்டில் இவ்வரிசை அமைதல் காண்க.* ***141***

*கைகேயி மரவுரி அனுப்புதல்*

***1747. தாய், ஆற்றுகிலாள்தனை,***
***ஆற்றுகின்றார்கள் தம்பால்,***
***தீ ஆற்றுகிலார், தனிச்***
***சிந்தையினின் செற்ற***
***நோய் ஆற்றுகில்லார் உயிர்***
***போல நுடங்கு இடையார்***

***மாயாப் பழியாள் தர,***
***வற்கலை ஏந்தி வந்தார்.***

***ஆற்றுகிலாள் தாய்தனை*** - *துயரத்தை ஆற்றமாட்டாதவளாய் உள்ள தாய் சுமித்திரையை;* ***ஆற்றுகின்றார்கள் தம்பால்*** - *தேற்றித் தெளிவிக்கின்ற அந்த இராமலக்குவர்கள் இடத்தில்;* ***தீ ஆற்றுகிலார்*** - *பிரிவுத் தீயை அணைக்கமாட்டார்;* ***தனிச்சிந்தையினின்று செற்ற நோய்*** - *துணையற்ற தனித்த மனத்திலிருந்து கொல்லுகின்ற வேதனையை ஆற்றுகில்லார் - ஆற்ற மாட்டாத;* ***உயிர் போல நுடங்கு இடையார்*** - *நுண்ணியதாகிய உயிர்போலத் துவளுகின்ற இடையை உடைய மகளிர்;* ***மாயாப் பழியாள் தர*** *-என்றும் அழியாத பழியை உடைய கைகேயியானவள் கொடுத்தனுப்ப;* ***வற்கலை ஏந்தி வந்தார்*** - *மரவுரியைச் சுமந்து வந்தார்கள்.*

*ஏவர் மகளிர் ஆயினும் அவரும் இராமன் பிரிவுத் துயரத்தால் துடிக்கின்றனர். அவர்கள்கையில் மரவுரி கொடுத்து அனுப்பினாள் கைகேயி என்பதாம். முன்பும் ''கைகேசியும் கொடியகூனியும் அல்லாமல் கொடியார் பிறர் உளரோ'' என்ற (1704.) படியாள் இவ்விருவர் தவிரமற்றவர் அனைவரும். துயரால் துடிக்கின்றவர்களே என்பது போந்தது. ' மாயாப் பழியாள்' கைகேயி பின்பும் பரதன்' மாயா வன்பழி தந்தீர்' (2177.) என்பது காண்க. வன் கலை - வலிய ஆடை, மாவுரி - 'வற்கலா' என்னும் வடசொல் வற்கலை எனத்தமிழ்முடிபு பெற்றது எனலாம்.* ***142***

***1748. கார் வானம் ஒப்பான்தனைக்***
***காண்தொறும் காண்தொறும் போய்***
***நீர் ஆய் உக, கண்ணினும்***
***நெஞ்சு அழிகின்ற நீரார்,***
***'பேரா இடர்ப்பட்டு அயலார்***
***உறு பீழை கண்டும்***
***தீரா மனத்தாள் தர,***
***'வந்தன சீரம்' என்றார்.***

***கார் வானம் ஒப்பான்தனை*** - *மழை மேகத்தை ஒத்த கருமையும் தண்மையும் உடையஇராமனை;* ***காண்தொறும் காண்தொறும்*** - *பார்க்கப் பார்க்க;* ***கண்ணினும் போய்*** - *பார்க்கின்ற கண்ணைக் காட்டிலும் போய்;* ***நீர் ஆய் உக*** - *நீராகிச் சிந்த;* ***நெஞ்சு அழிகின்ற நீரார்*** - *மனம் கெட்டு வருந்துகின்ற தன்மையுடைய ஏவல் மகளிர்(இராமனைப் பார்த்து)* ***'பேரா இடர்ப்பட்டு*** - *நீங்க முடியாத துன்பப் பட்டு;* ***அயலார் உறு பீழை கண்டும்*** - *அயலார்கள் படுகின்ற துன்பத்தைக் கண்டு வைத்தும்;* ***தீரா மன்த்தாள்*** - *தன் கொள்கையிலிருந்து நீங்காத மனம் உடைய கைகேயி; தர - கொடுத்தனுப்ப;* ***வந்தன சீரம்*** - *வந்தனவாகிய மரவுரி இவை;* ***என்றார் -***

*நேரில் இராமனைக் காணும்போது மேலும் நெஞ்சு புண்ணாகிறது அச்சேடியர்களுக்கு. சேடியரது உள்ளத் துயர் இப்பாடலில்ல தெள்ளத் தெளிவு ஆகும்.* ***143***

*இலக்குவன் மரவுரியை ஏற்றுத் தாயைப் பணிதல்*

*1749.* ***வாள் நித்தில வெண் நகையார் தர,***
***வள்ளல் தம்பி,***
***'யாணர்த் திருநாடு இழப்பித்தவர்***
***ஈந்த எல்லாம்***
***பூணப் பிறந்தானும் நின்றான்;***
***அவை போர் விலோடும்***
***காணப் பிறந்தேனும் நின்றேன்;***
***அவை காட்டும் ' என்றான்.***

***வாள் நித்தில வெண் நகையார் தர*** - ஒளியுடைய முத்துப் போலும் வெள்ளிய பற்களை உடையாராய ஏவல் மகளிர் கொடுக்க; ***வள்ளல்*** - இராமன் தம்பியாயஇலக்குவன்; ***'யாணர்த் திருநாடு இழப்பித்தவர்*** - புதிய வருவாய்களைச் சிறந்த கோசல நாட்டை இழக்கும்படி செய்த கைகேயி; ***ஈந்த எல்லாம்*** - கொடுத்த எல்லாப் பொருளையும்; ***பூணப் பிறந்தானும் நின்றான்*** - அணிந்து கொள்ளப் பிறந்தவனாகிய என் தமயனும்இருக்கின்றான்; ***அவை*** - அந்தக் காட்சிகளை; ***போர் விலோடும்*** - போரில்ஆற்றல் காட்டும் வில்லைச் சுமந்து கொண்டே; ***காணப் பிறந்தேனும் நின்றேன்*** -காண்பதற்குப் பிறந்த நானும் இருக்கின்றேனே; ***அவை காட்டும்'*** - அவற்றைக்காண்பியுங்கள்; ***'என்றான் -***

நாடு இழப்பித்த கைகேயியை ஒன்றும் செய்ய இயலாத எனக்குப் 'போர் வில்' எதற்காகஎன்ற தன்னிரக்கமாகக் கூறியது 'போர்விலோடும்' என்ற தொடர்.
*144*

*1750.* ***அன்னான், அவர் தந்தன,***
***ஆதரத்தோடும் ஏந்தி,***
***இன்னா இடர் தீர்ந்து, "உடன்***
***ஏகு" என, எம்பிராட்டி***
***சொன்னால், அதுவே துணை ஆம்'***
***என, தூய நங்கை***
***பொன் ஆர் அடிமேல் பணிந்தான்;***
***அவளும் புகன்றாள்;***

***அன்னான்*** - அந்த இலக்குவன்; ***அவர் தந்தன*** - அவ் ஏவல் மகளிர் கொடுத்தனவாகிய மரவுரியை; ***ஆதரத்தோடும் ஏந்தி*** - அன்போடு பெற்றுக்கொண்டு ; ***'இன்னா இடர் தீர்ந்து*** - துன்பத் துயரம் நீங்கி; ***உடன் ஏகு' என*** - இலக்குவ! இராமனுடன் நீயும் துணையாக வனம் செல்க என்று; ***எம்பிராட்டி சொன்னால்*** - என் தாய்சுமித்திரை சொல்வாளாயின்; ***அதுவே துணை ஆம்'*** - அதுவே எனக்குப் பற்றுக் கோடாகஆகும்; ***என*** - என்று நினைத்து; ***தூய மனம் உடைய சுமித்திரையின்; ***பொன் ஆர்அடி மேல்*** - பொன் போலப் பொலிந்த பாதத்தின் மேல்; ***பணிந்தான்*** -வணங்கினான்; ***அவளும் புகன்றாள்*** - அவளும் சில சொற்கள் கொன்னாள்;

தாயின் உத்தரவு பெற்று இராமனுடன் செல்லும் ஆசையால் அவள் வாயாலேயே முதலில் அச்சொல்வரவேண்டும் என எதிர்பார்த்துப் பணிகிறான் இலக்குவன்.

*மரவுரிமை ஏற்ற இலக்குவன்குறிப்பறிந்து தாயும் அவனைப் பார்த்துச் சொன்னாள்.*
***145***

*சுமித்திரை இலக்குவனுக்கு அறிவுரை கூறல்*

***1751. ‘ஆகாதது அன்றால் உனக்கு -***
***அவ் மனம் இவ் அயோத்தி;***
***மா காதல் இராமன் நம்***
***மன்னவன்; வையம் ஈந்தும்***
***போகா உயிர்த் தாயர் நம்***
***பூங் குழல் சீதை - என்றே***
***ஏகாய்; இனி, இவ் வயின்***
***நிற்றலும் ஏதம்’ என்றாள்.***

*(இராமனுக்கு ஆகிய)* ***அவ்வனம்*** *- அந்தக் காடு;* ***உனக்கு ஆகாதது அன்றால்*** *-நீ செல்லுதற்குத் தகாதது அன்று;* ***இவ் அயோத்தி*** *- இந்த அயோத்தி மாநகர் போன்றதேஆகும்;* ***மா காதல் இராமன் நம் மன்னவன்*** *- சிறந்த அன்பினை உடைய இராமனே (உனக்குஇனி) நம் மன்னனாகிய தயரதன் ஆம்;* ***நம் பூங்குழல் சீதை*** *- நம்முடைய பூக்கள் அணிந்தகூந்தலை உடைய சீதையே;* ***வையம் ஈந்தும்*** *- இராமன் பூமியைப் பரதனுக்குக் கொடுத்துக்காடு செல்லத் துணிந்த பின்னும்* ***; போகா உயிர்த் தாயர்*** *- போகாத உயிரையுடையதாய்மார்கள் ஆவர்;* ***என்று*** *- எனக் கருதி;* ***ஏகாய்*** *- வனத்திற்கு இராமனுடன்செல்வாயாக;* ***இனி இவ்வயின் நிற்றலும் ஏதம்’*** *- இனிமேல் இங்கே நீ நின்றுதாமதிப்பதும் குற்றமாகும்;* ***என்றாள் -***

*‘இராமன் இருக்கும் இடம் அயோத்தி’ என்னும் உலக வழக்கையே சுமித்திரை மகனுக்குக்கூறினாள். இராமனையும் சீதையையும் தந்தை தாயாகவும், வனத்தை அயோத்தியாகவும் கருதி இங்குள்ளது போலவே வனத்தில்இரு என்றாளாம். ‘என்றே’ ‘ஏ’ காரம் தேற்றம்.* ***146***

***1752. பின்னும் பகர்வாள், ‘மகனே!***
***இவன்பின் செல்; தம்பி***
***என்னும்படி அன்று, அடியாரினின்***
***ஏவல் செய்தி;***
***மன்னும் நகர்க்கே இவன்***
***வந்திடின், வா; அது அன்றேல்,***
***முன்னம் முடி’ என்றனள்,***
***வார் விழி சோர நின்றாள்.***

***பின்னும்*** *- மேலும்;* ***பகர்வான்*** *- கூறுவாள்;* ***‘மகனே! -; இவன்பின்செல்*** *- இந்த இராமன் பின்னால் செல்வாயாக;* ***தம்பி என்னும்படி அன்று*** *- இவன்தம்பி என்கின்ற முறையில் நடந்துகொள்ள அன்று;* ***அடியாரினின் ஏவல் செய்தி*** *- இவன்தொண்டர்களைப் போல இவன் இட்ட பணிகளைச் செய்;* ***மன்னும் நகர்க்கே*** *- நிலைபெற்ற அயோத்தி நகரத்துக்கு;* ***இவன் வந்திடின் வா*** *- இவன் திரும்பி*

*வருவானாயின் நீயும்வருக;* ***அது அன்றேல்*** *- இவன் அயோத்திக்கு வரமுடியாமல் போகுமானால்;* ***முன்னம் முடி'*** *- இவனுக்கு முன்னம் நீ உயிரைத் துறந்துவிடு;'* ***என்றன*** *ள் - என்று* ***கூறி வார் விழி சோர நின்றாள்*** *- நீண்ட கண்களிலிருந்து நீர் பெருக நின்றாள்.*

*சுமித்திரை தன் மகனுக்குத் தந்த இவ் அறிவுரை நினைக்க நினைக்கப் பெருமிதம் தருவதாகும். இராமனுக்கு ஏதேனும் ஆபத்து வரின் அதனைத் தடுக்க உன் உயிரை விடவும் தயங்காதேஎன்றாள், 'முன்னம் முடி' என்ற சொல்லால். 'இந் நெடுங் சிலைவலானுக்கு ஏவல் செய அடியன்யானே' என்று (3778.) அனுமனிடம் இலக்குவன் பின்னர்த் தன்னை அறிமுகப் படுத்திக்கொள்வதும் காண்க.* ***147***

*இராம இலக்குவர் சுமித்திரையிடம் விடைபெறல்*

*கலிவிருத்தம்*

***1753. இருவரும் தொழுதனர்; இரண்டு கன்று ஒரீஇ***
***வெருவரும் ஆவினின் தாயும் விம்மினாள்;***
***பொரு அருங் குமரரும் போயினார் - புறம்***
***திரு அரைத் துகில் ஒரீஇ, சீரை சாத்தியே.***

***இருவரும் தொழுதனர்*** *- இராம இலக்குவர்கள் இருவரும் (தாயை) வணங்கினர்;* ***தாயும்*** *-சுமித்திரையும்;* ***இரண்டு கன்று ஒரீஇ வெருவரும் ஆவினின்*** *- இரண்டு கன்றுகளை நீங்கிஅஞ்சுகின்ற பசுப்போல;* ***விம்மினாள்*** *- மனம் கலங்கித் துடித்தாள்;* ***பொரு அரும்குமரரும்*** *- ஒப்பற்ற மைந்தர்களும்;* ***புறம் திரு அரைத் துகில் ஒரீஇ, சீரைசாத்திப் போயினார்*** *- உடம்பின் வெளியே அழகிய இடுப்பில் அணிந்திருந்த மெல்லிய ஆடைகளை நீக்கிமரவுரியைத் தரித்துக் கொண்டு சென்றார்கள்.*

*இரண்டு கன்றுகளைப் பிரிந்த பசுத் துடிக்குமாறு போல இராமனையும் இலக்குவனையும்பிரிகின்ற சுமித்திரை விம்முகிறாள். 'திரு அரைத்துகில் ஒரீஇ புறம் சீரை சாத்தி' எனஇயைக்கலாம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***148***

*இலக்குவனைப் பெற்றோருடன் இருக்க இராமன் கூறுதல்*

***1754. தான் புனை சீரையைத் தம்பி சாத்திட,***
***தேன் புனை தெரியலான் செய்கை நோக்கினான்;***
***'வான் புனை இசையினாய்! மறுக்கிலாது, நீ***
***யான் புகல் இனையது ஓர் உறுதி கேள்' எனா,***

***தான் புனை சீரையை*** *- (இராமன்) தான் அணிந்துள்ளது போன்ற மரவுரியை;* ***தம்பி சாத்திட*** *- தம்பியாகிய இலக்குவனும் அணிந்துகொள்ள;* ***தேன் புனை தெரியலான்செய்கை நோக்கினான்*** *- தேன் நிறைந்த மாலை அணிந்த இலக்குவனின் செயலை இராமன் பார்த்து;* ***'வான்புனை இசையினாய்!*** *- தேவருலகம் புகழும் புகழினை உடையாய்;* ***நீ மறுக்கிலாது*** *- நீ மறுக்காமல்;* ***யான் புகழ்*** *- நான்*

*சொல்லுகின்ற;* ***இனையது ஓர் உறுதி*** *- இத்தகைய ஒரு நல்ல சொல்லை;* ***கேள்'*** *- கேட்பாயாக;* ***' எனா*** *- என்று சொல்லி.*

*புனை சீரை என்றாரேனும் புனைந்தது போலும் சீரை என்றுபொருள் கொள்க. 'தம்பியும் சாத்திட' என்ற எச்சவும்மை வருவித்துரைக்கப்பட்டது. தெரியலான் செய்கை - இலக்குவன் செயல். பார்த்து; முற்றெச்சம் இலக்குவன் செய்ததைப்பார்த்து இராமன் ஒரு கருத்தைக் கூறலானான்.* ***149***

***1755. 'அன்னையர் அனைவரும், ஆழி வேந்தனும்***
***முன்னையர் அல்லர்; வெந் துயரின் மூழ்கினார்;***
***என்னையும் பிரிந்தனர்; இடர் உறாவகை,***
***உன்னை நீ என்பொருட்டு உதவுவாய்' என்றான்.***

***'அன்னையர் அனைவரும்*** *- (தம்பி!) தாய்மார்கள் எல்லோரும்;* ***ஆழி வேந்தனும்*** *- தயரதனும்;* ***முன்னையர் அல்லர்*** *- முன்பிருந்த நிலைமையில் இருக்கின்றாரல்லர்;* ***வெந் துயரின் மூழ்கினார்*** *- கொடிய துன்பத்தில் முழுகியிருக்கிறார்கள்;* ***என்னையும் பிரிந்தனர்*** *-(இந்நிலையில்) என்னையும் பிரிய உள்ளார்கள்.* ***இடர் உறா வகை*** *-இவர்கள் துன்பம் அடையாதபடி;* ***என்பொருட்டு நீ உன்னை உதவுவாய்'*** *- எனக்காக நீ உன்னையே உதவுவாயாக;'* ***என்றான் -.***

*அன்னையர் அனைவரும் - கோசலையும் சுமித்திரையும் ஏனைய உரிமை மகளிரும். இராமன்நோக்கில் கைகேயி விலக்கப்பட்டாள் ஆயினும் 'வெந்துயரின் மூழ்கினார்' என்னும் பின்வந்த வினையால் கைகேயி விலக்கப்பட்டாளாம்.*
***150***

இலக்குவன் பதில்

***1756. ஆண்தகை அம் மொழி பகர, அன்பனும்,***
***தூண் தகு திரள் புயம் துளங்க, துண்ணெனா,***
***மீண்டது ஓர் உயிர் இடை விம்ம விம்முவான்,***
***'ஈண்டு, உனக்கு அடியனேன் பிழைத்தது யாது?'***
***என்றான்,***

***ஆண் தகை அம்மொழி பகர*** *- ஆடவருள் சிறந்தோனாகிய இராமன் அந்த வார்த்தைசொல்ல;* ***அன்பனும்*** *- இலக்குவனும்;* ***தூண்தரு திரள் புயம்*** *-தூணுக்கு ஒப்பாகியதிரண்ட தோள்;* ***துளங்க*** *- நடுங்கும்படி;* ***துண் எனா*** *- திடுக்கென்று அஞ்சி;* ***மீண்டது ஓர் உயிர் இடைவிம்ம விம்முவான்*** *- திரும்பிவந்ததாகிய ஓர் உயிர் இடையில் மீண்டும் கலங்குமாறு துடிப்பவனாய் (இராமனை நோக்கி* ***); 'உனக்கு -; அடியனேன்*** *- யான்;* ***ஈண்டுப் பிழைத்தது யாது?'*** *- இங்கே செய்த தவறு என்ன;* ***என்றான் -***

*இராமனுடன் சீரை சாத்திய போது உயிர் திரும்பியது இலக்குவனுக்கு. இப்போதுஅயோத்தியில் பெற்றோர்க்கு உதவியாக இரு என்று இராமன் தனன்னோடு வராதபடி தடுத்தபோது இடையே இருப்பதா. போவதா என்று துடிக்கிறது எனக் கொள்க.* ***151***

***1757. 'நீர் உளஎனின் உள, மீனும் நீலமும்;***
***பார் உளஎனின் உள, யாவும்; பார்ப்புறின்.***
***நாள் உள தனு உளாய்! நானும் சீதையும்***
***ஆர் உளர்எனின் உளம்? அருளுவாய்!' என்றான்.***

***'நார் உள தனு உளாய்!*** *- நாணை உடைய வில்லை ஏந்தியவனே; பார்ப்புறின் ஆராய்ந்து பார்த்தால்;* ***நீர் உள எனின்*** *- தண்ணீர் இருக்குமானால்;* ***மீனும்நீலமும் உள*** *- மீன்களும், கருங்குவளையும் உள்ளனவாம்;* ***பார் உள எனின்*** *- இந்தப்பூமி இருக்கும் எனில்;* ***யாவம் உள*** *- எல்லாப் பொருளும் உள்ளனவாம் (அவை போலவே);* ***நானும் சீதையும் -; ஆர் உளர் எனின் உளம்*** *- யார் இருந்தால் இருக்கின்றவர்கள்ஆவோம்;* ***அருளுவாய் '*** *- கூறுவாயாக;* ***' என்றான்-.***

*தன்ணீர் உள்ள வரை மீனும் நீலமும் இருக்கும். அதுபோல, இராமன் உள்ளதுணையும்இலக்குவனும் சீதையும் உளர் என்பதாம். மீன் நீர் உள்ள அளவும் இருந்து நீர்வற்றிஇல்லாமற் போனால் இறந்துபட்டொழியும். அது இலக்குவனுக்கு உவமை. நீலம் நீர் உள்ள துணையும்வாழும் நீர்வற்றி இல்லாமற் போனால் காய்ந்து கிழங்காகக் கிடக்கும்; மீண்டும் நீர்வந்துழி முளைவிட்டுத் தளிர்த்து மேல் வந்து பூக்கும். அது சீதைக்கு உவமை. பின்னர்ச்சிலகாலம் இராமனைப் பிரித்து அசோக வனத்தில் இருந்து வற்றிக் கிடந்து மீண்டும்இராமனைக் கண்டு கூடித் தளிர்த்தாள் ஆதலின், சிறிதளவு கூடத் தன்னால் பிரிந்து வாழ இயலாது என்பான் இலக்குவன் தன்னை மீனாகச் சொல்லிக்கொண்டான் என்பது நயம், பூமி இருந்தால் எல்லாப் பொருளும் இருக்கும். அது போல இராமன் இருந்தால் அனைவரும் வாழ்வர். 'அருளுவாய்' என்றுஇராமனையே பதில் கூறும்படி வைத்த இலக்குவனது சாதுரியம் ஈண்டுநுகரத்தக்கது.* ***152***

***1758. 'பைந்தொடி ஒருத்தி சொல் கொண்டு, பார்மகள்***
***நைந்து உயிர் நடுங்கவும், "நடத்தி கான்" எனா,***
***உய்ந்தனன் இருந்தனன் உண்மை காவலன்***
***மைந்தன் என்று, இனைய சொல் வழங்கினாய்?' எனா.***

**'பைந்தொடி ஒருத்தி சொல் கொண்டு** *- பசிய பொன்னால் ஆகிய வளையல்களை அணிந்த ஒரு கைகேயியின் வார்த்தையை வைத்து;* **பார்மகள்** *-நிலமகள்;* **நைந்து உயிர் நடுங்கவும்** *- தேய்ந்து உயிர் தடுமாறவும் (அது கருதாது);* ***'கான் நடத்தி எனா'*** *- காட்டிற்குச் செல் என்று (உன்னை ஏவி);* ***உய்ந்தனன்இருந்தனன் உண்மை காவலன்*** *- பிழைத்து உயிர்வாழும் சத்தியத்தைக் காக்கின்ற மன்னன* ***து; மைந்தன் என்று*** *- மகன் தானே என்று கருதி;* ***இனைய சொல்வழங்கினாய்?'*** *- (என்னைப் பிரிந்து அயோத்தியில் இரு என) இத்தகைய கொடுஞ் சொல்லைச் சொன்னாய்;* ***' எனா*** *- என்று சொல்லி,*

*'நின்கண் பரிவு இல்லவர்' என்ற (1732) செய்யுளோடு இதனை ஒப்பிட்டால் இலக்குவன்கூற்றுத் தெளிவாகும். "தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால்" இவ்வாறு கூறினாயோ என்றான் இலக்குவன். 'உண்மை காவலன்' இங்கு இலக்குவன் நோக்கில் இகழ்ச்சிக் குறிப்பாம்.* ***153***

***1759. ' "மாறு இனி என்னை? நீ வனம் கொள்வாய்" என***
***ஏறின வெகுளியை, யாதும் முற்றுற***
***ஆறினை, தவிர்க்க' என, 'ஐய! ஆணையின்***
***கூறிய மொழியினும் கொடியது ஆம்' என்றான்.***

***'ஐய!*** *- இராமனே;* ***'நீ வனம் கொள்வாய்' என*** *- நீ காடு செல்வாய் என்பது கேட்டு;* ***ஏறின வெகுளியை*** *- எனக்கு மேல் மிகுந்த சினத்தை;* ***"யாதும் முற்றுற*** *- சிறிதும் இல்லாதபடி போக;* ***ஆறினை, தவிர்க்க'*** *- அடங்கிநீங்குக; "* ***என*** *- என்று;* ***ஆணையின்*** *- கட்டளையாக;* ***கூறிய மொழியினும்*** *- (நீ) முன்பு கூறிய சொல்லைக் காட்டிலும்;* ***கொடியது ஆம்*** *- (இப்போது கூறியஇச்சொல்) கொடுமை உடையது ஆகும்;* ***இனி மாறு என்னை?*** *- இனி இச்சொல்லுக்கு ஒப்பாகச்சொல்லத்தக்கது வேறு என்ன உள்ள;'* ***என்றான் -***

*'சினம் தவிர்க' என்று சொன்னதைவிட, 'அயோத்தியில் தங்குக' என்ற சொல் மிகக்கொடிது என்றான் இலக்குவன்.* ***154***

***1760. 'செய்துடைச் செல்வமோ, யாதும் தீர்ந்து, எமை,***
***கை துடைத்து ஏகவும் கடவையோ? - ஐயா!***
***நெய் துடைத்து, அடையலர் நேய மாதர் கண்***
***மை துடைத்து, உறை புகும் வயம் கொள் வேலினாய்!'***

***'ஐயா!*** *-;* ***நெய் துடைத்து*** *- நெய்யால் துடைக்கப்பட்டு;* ***அடையலர்*** *- பகைவரது;* ***நேய மாதர்*** *- அன்புடை மனைவியரது;* ***கண் மை துடைத்து*** *- கண்ணில்எழுதிய மையை அழித்து;* ***உறை புகும்*** *- உறையின்கண் தங்குகின்ற;* ***வயம் கொள்*** *-வலிமை கொண்ட;* ***லேலினாய்!*** *- வேலை உடையவனே;* ***செய்துடைச் செல்வமோ*** *- நின் முன்னோர்களால் தேடப்பெற்றுப் பரம்பரை முறையால் நினக்குரியதாகி உள்ளசெல்வமாகிய;* ***யாதும் தீர்ந்து*** *- எல்லாவற்றையும் நீங்கி;* ***எமைக் கை துடைத்து*** *- எங்களையும் கைவிட்டு;* ***ஏகவும் கடவையோ?*** *- (காட்டிற்குப்) போவதற்கும் கடவாயோ.*

*துருப் பிடிக்காமைப் பொருட்டு வேலுக்கு நெய் பூசுதல் வழக்கம் ஆதலின், 'நெய்யால்துடைத்து' என்றார். பகைவரைப் போரில் கொல்லுதலின் அவர் காதலியர் அழுத அழுகையால்அவர்தம் கண் மை கரைந்து அழியும் ஆதலின், 'கண் மை துடைத்தது' வேல் என்று எண்ணினேன், எங்களையும் கைவிட்டுச் செல்லத் தயாராகி விட்டாயோ? என்றான் - எமை என்றது சீதையையும் உளப்படுத்தியதாகும்.* ***155***

இராமன் உளம் நெகிழ்தல்

***1761. உரைத்தபின், இராமன் ஒன்று***
***உரைக்க நேர்ந்திலன்;***
***வரைத் தடந் தோளினான்***
***வதனம் நோக்கினான்;***
***விரைத் தடந் தாமரைக்***
***கண்ணை மிக்க நீர்***

***நிரைத்து இடை இடை விழ,***
***நெடிது நிற்கின்றான்.***

***உரைத்தபின்*** - *(இவ்வாறு இலக்குவன்) உரைத்த பிறகு;* ***இராமன்-; ஒன்று உரைக்க நேர்ந்திலன்*** - *ஒரு வார்த்தையும் சொல்ல முடியடாதவனாகி;* ***வரைத் தடந்தோளினான் வதனம்*** - *மலை போன்ற அகன்ற தோள்களை உடைய இலக்குவனது முகத்தை* ***நோக்கினான்*** - *பார்த்து;* ***விரைத் தடந் தாமரைக் கண்ணை மிக்க நீர்*** - *வரும்நீரானது;* ***நிரைந்து இடை இடை விழ*** - *ஒழுங்காய் இடை இடையே விழும்படி;* ***நெடிது*** *-நீண்ட நேரம்;* ***நிற்கின்றான்*** - *நிற்பவன் ஆனான்.*

*மறு மாற்றம் சொல்ல இயலாது இராமன் உடன்பட்டபடி. இலக்குவன் முகம் பார்த்த அளவில்மனம் உருகிக் கண்ணீர் சொரியலானான் இராமன். இலக்குவன் பரிவும் உரமும் இராமனைஅசையாநிலைக்கு ஆளாக்கின.* ***156***

*வசிட்டன் வருதலும் சிந்தித்தலும்*

***1762. அவ்வயின், அரசவை நின்றும் அன்பினன்***
***எவ்வம் இல் இருந் தவ முனிவன் எய்தினான்;***
***செவ்விய குமரரும் சென்னி தாழ்ந்தனர்;***
***கவ்வை அம் பெருங் கடல், முனியும் கால் வைத்தான்.***

***எவ்வம் இல் அருந்தவ முனிவன்*** - *துன்பமற்ற அரிய தவத்தைச் செய்த முனிவனாயவசிட்டன்;* ***அரசவை நின்றும்*** - *அரச சபை மண்டபத்திலிருந்தும்;* ***அன்பினன்*** *-இராமனிடத்து அன்பை உடையனாய்;* ***அவ்வயின்*** - *அச் சுமித்திரை மாளிகையின்கண்;* ***எய்தினன்*** - *அடைந்தான்;* ***செவ்விய குமரரும்*** - *நேரிய மைந்தர்களாய இராமலக்குவர்களும்;* ***சென்னி தாழ்ந்தனர்*** - *தலையால் வணங்கினார்கள்;* ***முனியும்*** - *வசிட்டனும்;* ***கவ்வை அம் பெருங்கடல்*** - *துன்பம் என்னும் பெரிய கடலில்;* ***கால்வைத்தான்*** - *இறங்கத் தொடங்கினான்.*

*துன்பம் ஏதும் எய்தாது அருந்தவம் முடித்தவன் அன்பினால் இப்போது துன்பக் கடலில்கால்வைத்தான் என்றது ஒரு நயம். 'அன்னமும் துயர்க்கடல் அடி வைத்தாள் அரோ' (2461.) என்றுபின்வருவதும் காண்க.* ***157***

***1763. அன்னவர் முகத்தி னோடு அகத்தை நோக்கினான்;***
***பொன் அரைச் சீரையின் பொலிவு நோக்கினான்;***
***என் இனி உணர்த்துவது? எடுத்த துன்பத்தால்,***
***தன்னையும் உணர்ந்திலன், உணரும் தன்மையான்.***

***உணரும் தன்மையான்*** - *எல்லாவற்றையும் உணரும் மகா ஞானியாகிய வசிட்டன்;* ***அன்னவர்*** - *இராமலக்குவர்களின்;* ***முகத்தினோடு அகத்தை நோக்கினான்*** - *முகத்தையும் மனத்தையும் கண்ணாலும் நெஞ்சத்தாலும் நோக்கினான்;* ***பொன் அரைச் சீரையின்பொலிவு நோக்கினான்*** - *அழகிய இடையின்கண் அணிந்துள்ள மரவுரியின் பொலிவையும்பார்த்தான்.* ***எடுத்த துன்பத்தால்*** - *மேல் ஏறிய துயரத்தால்;* ***தன்னையும்***

***உணர்ந்திலன்*** *- தன்னையும் மறந்தான்;* ***இனி உணர்த்துவது என்?*** *- இனி அவன்துன்பத்தைப்பற்றி சொல்வது எவ்வாறு?*

*கண்ணால் நோக்குதல், மனத்தால் நோக்குதல் என்ற நோக்கம் இருவகையாதலின், முகமும்அகமும் நோக்கினான் என்றார். இவர்கள் அணிந்த படியால் சீரை பொலிவு பெற்றது என்பார்'சீரையின் பொலிவு' என்றார். இதுவும் ஒரு நயம்.*
***158***

## *1764. ' வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்,*
## *தாழ் வினை அது வர, சீரை சாத்தினான்;*
## *சூழ் வினை நான்முகத்து ஒருவன் சூழினும்,*
## *ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற்பாலதோ!*

***'வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்*** *- மகுடம் தரித்து அரச வாழ்வு வாழக்கருதப்பெற்ற அதே மங்கல நல் நாளிலே;* ***தாழ்வினை அது வர*** *- தாழ்த்துகின்றவினையானது வருதலால்;* ***சீரை சாத்தினான்*** *; - இராமன் மரவுரியை அணிந்தான்;* ***சூழ்வினை நான்முகத்து ஒருவன்*** *- விதியை வகுத்து அளிக்கும் பிரம தேவனே;* ***சூழினும்*** *- தவிர்க்கும் வழியைஆலோசித்தாலும்;* ***ஊழ்வினை*** *- (செய்தவனைச் சென்று அடையும்) அந்த ஊழ்வினை;* ***ஒருவரால் -; ஒழிக்கற்பாலதோ?*** *- நீக்கிக்கொள்ளும் தன்மை உடையதோ? இல்லைஎன்றபடி.*

*''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினும் தான் முந்துறும்'' என்ற திருக்குறளை இதனோடுஒப்பிடுக. முன்னர் நிகழ்ச்சியும், பின்னர் உலகொப்பிய ஒரு கருத்தும் ஒத்து வருதலின்வேற்றுப் பொருள் வைப்பணி. விதிக் கடவுளாகிய பிரம தேவனாலேயே ஊழ்வினையைத் தடுக்க இயலாதாயின் வேறு ஒருவரலாலும் இயலாது என்றபடி. திருமாலின் அவதாரமாகிய இராமனுக்கு வினைஎன்பது ஒன்றில்லை; ஆயினும், தேவர் வேண்டச் செய்துகொண்ட சங்கற்பம்தானே இம்மனிதவடிவ நிகழ்ச்சியில் வினையாயிற்றென உய்த்து உணர்க. செய்த சங்கற்பம் அவ்வாறே இறைவற்கும்நிகழும்; அதுவும் மாற்ற ஒண்ணாததாம். 'ஓ' வினாப்பொருட்டு.* ***159***

## *1765. 'வெவ் வினையவள் தர விளைந்ததேயும் அன்று;*
## *இவ் வினை இவன்வயின் எய்தற்பாற்றும் அன்று;*
## *எவ் வினை நிகழ்ந்ததோ? ஏவர் எண்ணமோ?*
## *செவ்விதின், ஒருமுறை தெரியும் பின்' என்றான்.*

***இவ்வினை*** *- இச்சீரை சுற்றிக் காடுபோதலாகிய செயல்;* ***வெவ்வினையவள் தரவிளைந்ததேயும் அன்று*** *- கொடு வினை படைத்த கைகேயி கொடுக்க அவளால் உண்டாகியதும்அன்று;* ***இவன் வயின் எய்தற்பாற்றும் அன்று*** *- வேறொரு வகையால் சத்துவகுண வடிவனாகிய இவன்பால் வரக்கடவதும் அன்று;* ***எவ்வினை நிகழ்ந்ததோ?*** *- எந்தச் செயலால் இப்படிநடைபெற்றதோ?;* ***ஏவர் எண்ணமோ?*** *- யாருடைய மனக்கருத்தால் நடந்ததோ;* ***பின்ஒருமுறை*** *- பிற்காலத்தில் ஒரு படியாக;* ***செவ்விதின் தெரியும்'*** *- நன்குவிளங்கும்;* ***என்றான்*** *- என மனத்துள் சொல்லிக்கொண்டான்.*

*மெய்யுணர் ஞானியாகிய வசிட்டன் முன்பு 'ஈது முன் நிகழ்ந்த வண்ணம் என இதயத்து எண்ணி'(208.) யவன் ஆதலின், இந்நிகழ்ச்சியின் வித்து அவனுக்குத் தெரியும். ஆயினும், அதுஅப்போது அவனுக்குத் தெரிந்தது; இப்போது மாயையால் ஒன்றும் அறிகிலன் ஆயினன்; அறிவானாயின் இராமனை வேண்டலும், கைகேயியைக் கடிந்துரைத்தலும் முதலியன அவனால்நடைபெறாவாம். அதனாலேயே 'எவ்வினை நிகழ்ந்ததோ ஏவர் எண்ணமோ' என இறைமாயையால்முன்னறிந்ததனையே மறந்து அறியாதவன் ஆயினான் என்க.* ***160***

*வசிட்டன் இராமனைத் தடுத்தல்*

***1766. வில் தடந் தாமரைச் செங் கண் வீரனை***
***உற்று அடைந்து, 'ஐய! நீ ஒருவி, ஓங்கிய***
***கல் தடம் காணுதி என்னின், கண் அகல்***
***மல் தடந் தானையான் வாழ்கிலான்' என்றான்.***

*(வசிட்டன்)* ***வில் தடந் தாமரைக் செங்கண் வீரனை*** *- வில் ஏந்திய பெரிய தாமரைமலராகிய சிவந்த கண்களையுடைய இராமனை;* ***உற்று அடைந்து*** *- நெருங்கி வந்து;* ***'ஐய!-; நீ ஒருவி*** *- அரண்மனையை விட்டு நீங்கி;* ***ஓங்கிய கல் தடம் காணுதி என்னின்*** *- உயர்ந்த மலை வழியில் செல்லக் காணுவாய் எனில்;* ***கண் அகல்*** *- இட மகன்ற;* ***மல் தடந் தானையான்*** *- வலிமிக்க பெருஞ்சேனையையுடைய தசரதன்;* ***வாழ்கிலான்'*** *- வாழ மாட்டான்; (இறந்துபடுவான்);* ***என்றான் -.*** ***161***

*இராமன் வசிட்டனுக்கு உரைத்த மறுமொழி*

***1767. 'அன்னவன் பணி தலை ஏந்தி ஆற்றுதல்***
***என்னது கடன்; அவன் இடரை நீக்குதல்***
***நின்னது கடன்; இது நெறியும்' என்றனன் -***
***பன்னகப் பாயலின் பள்ளி நீங்கினான்.***

***பன்னகப் பாயலின் பள்ளி நீங்கினான்*** *- ஆதிசேடனாகிய படுக்கையில் அறிதுயில்செய்தல் நீங்கி அயோத்தி வந்த இராமன் (முனிவனை நோக்கி);* ***'அன்னவன்*** *-தயரதனது;* ***பணி தலை ஏந்தி ஆற்றுதல் என்னது கடன்*** *- கட்டளையைச் சிரமேற் கொண்டுசெய்தல் எனது கடமையாகும்;* ***அவன் இடரை நீக்குதல் நின்னது கடன்*** *- அத்தயரதனது துன்பத்தைப் போக்கி ஆற்றுவித்தல் உனது கடமையாகும்;* ***இது நெறியும்'*** *- இது நீதியும்ஆகும்;'* ***என்றனன் -.***

*அவதார நோக்கம் கானகம் செல்வது, அதற்காகவே வந்தவன் என்பதை அறிவிக்க, 'பன்னகப்பாயலின் பள்ளி நீங்கினான்' என்றார்.* ***162***

*வசிட்டன் மறுமொழி*

***1768. ' " வெவ் வரம்பை இல் சுரம்***
***விரவு" என்றான் அலன்;***
***தெவ்வர் அம்பு அனைய சொல்***

**தீட்டினாள்தனக்கு,**
**அவ் அரம் பொருத வேல்**
**அரசன், ஆய்கிலாது,**
**“இவ் வரம் தருவென்” என்று ஏன்றது**
**உண்டு’ என்றான்.**

*(அது கேட்ட வசிட்டன் இராமனை நோக்கி)* **‘வெவ்** - *கொடிய;* **வரம்பை இல்** - *எல்லை இல்லாத;* **சுரம்** - *காட்டை;* **விரவு’** - *சேர்வாய்;* **என்றான்அலன்’** - *என்று உன்னைப் பார்த்து அரசன் சொன்னானில்லை;* **தெவ்வர் அம்பு அனைய சொல் தீட்டினாள் தனக்கு** - *பகைவரது கணையை ஒத்த கொடிய வார்த்தையை மேலும் கொடுமையாகச் சொன்ன கைகேயிக்கு;* **அவ் அரம் பொருத வேல் அரசன்** - *அந்த அரத்தால் அராவிக் கூர்மை செய்யப்பெற்ற வேலை உடைய தசரதன்;* **ஆய்கிலாது** - *ஆராயாமல்;* **‘இவ் வரம் தருவென்’ என்று ஏன்றது உண்டு** - *இந்த வரத்தைத் தருவேன் என்று ஒப்புக்கொண்டது உண்டு அவ்வளவே;* **என்றான்-**

*தயரதன் உன்னைக் காட்டுக்கு ஏகும்படி நேராக ஆணையிடவில்லை. கைகேயிக்கு வரம் தந்தேன் என்று ஒப்புக்கொண்ட அளவேதான். ஆகவே, இதில் அரசனது ஆணையை மீறல் என்பது இல்லை என்று இராமனுக்கு வசிட்டன் கூறினான். வரம்பை; வரம்பு; ஐகாரம் சாரியை.* ***163***

*இராமன் தந்த விளக்கம்*

***1769.*** **‘ஏன்றனன் எந்தை இவ் வரங்கள்; ஏவினாள்**
**ஈன்றவள்; யான் அது சென்னி ஏந்தினேன்;**
**சான்று என நின்ற நீ தடுத்தியோ?’ என்றான் -**
**தோன்றி நல் அறம் நிறுத்தத் தோன்றினான்.**

**தோன்றிய நல் அறம் நிறுத்தத் தோன்றினான்** - *விளங்கிய நல்ல தருமத்தை உலகில் நன்கு நிலைபெறுத்த அவதாரம் செய்த இராமன் (வசிட்டனை நோக்கி);* **‘எந்தை** - *என் தந்தையாகிய தசரதன்;* **இவ்வரங்கள்** - *இந்த இரண்டு வரங்களையும்;* **ஏன்றனன்** - *தருவதாக - தந்ததாக ஒப்புக்கொண்டான்;* **ஈன்றவள்** - *என் தாய்;* **ஏவினாள்** - *ஆணை இட்டாள்;* **அது** - *அந்த உத்தரவை;* **யான் -; சென்னி ஏந்தினேன்** - *தலைமேல் தாங்கினேன்;* **சான்று என நின்ற நீ** - *இவற்றுக் கெல்லாம் சாட்சியாக இருந்த நீ;* **தடுத்தியோ?** - *இதனை விலக்குகிறாயோ?’* **என்றான் -.**

*வரம் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட பிறகு அரசன் ‘என்னை நேராகக் காட்டுக்குச் செல்’ என்று பார்த்துச் சொல்லவில்லை; ஆதலின், காடு செல்வது அரசன் ஆணையன்று என்று வாதிடுவது பொருந்துமா?’ என்கிறான் இராமன். ‘சகல சாத்திரங்களும் அறிந்தவனாகிய நீ இப்படிச் சொல்லலாமா’ என்பான் ‘சான்று என நின்ற நீ’ என்றான் என்பதும் ஆம்.* ***164***

*இராமன் புறப்பாடு*

***1770. என்றபின், முனிவன் ஒன்று இயம்ப நேர்ந்திலன்;***
***நின்றனன், நெடுங் கணீர் நிலத்து நீர்த்து உக;***
***குன்றன தோளவன் தொழுது, கொற்றவன்***
***பொன் திணி நெடு மதில் வாயில் போயினான்.***

**என்றபின்** - இராமன் இவ்வாறு கூறிய பிறகு; **முனிவன்** - வசிட்டன்; **ஒன்று இயம்ப நேர்ந்திலன்** - ஒரு வார்த்தையும் சொல்ல இயலாது; **நெடுங்கண் நீர்நிலத்து நீர்த்து உக** - நீண்ட தன் கண் நீரானது நிலத்தில் ஈரம் செய்து சிந்த; **நின்றனன்-; குன்றன தோளவன்** - மலை போன்ற தோள்களை உடைய இராமன்; **தொழுது** - (முனிவனை) வணங்கி; **கொற்றவன் பொன் திணி நெடுமதில் வாயில்** - அரசனது பொன்னாற செய்யப் பெற்ற அரண்மனை மதிலின் வாயிலில்; **போயினான்** - போய்ச் சேர்ந்தான்.

குன்றன தோளவனைப் தொழுது கொற்றவனாய இராமன் நெடுமதில் வாயில் போயினான் என்பதும் ஓர் உரை ஆயினும், வசிட்டனைக் 'குன்றன தோளவன்' எனல்ஏற்புடைத்தாகாமையின் அவ்வுரை பொருந்தாமை அறிக. நீர்த்து - நீரின் தன்மை. செய்து அதாவதுஈரம் செய்து என்பதாகும். ***165***

மக்கள் துயரம்

***1771. சுற்றிய சீரையன், தொடரும் தம்பியன்.,***
***முற்றிய உவகையன், முளரிப் போதினும்***
***குற்றம் இல் முகத்தினன், கொள்கை கண்டவர்***
***உற்றதை ஒருவகை உணர்த்துவாம் அரோ.***

**சுற்றிய சீரையன்** - இடையில் கட்டிய மரவுரி உடையனாய்; **தொடரும் தம்பியன்** - தன்னைப் பின்பற்றிவரும் தம்பியோடு; **முற்றிய உவகையன்** - நிரம்பியமகிழ்ச்சியுடன்; **முளரிப் போதினும்** - தாமரை மலரைவிட; **குற்றம் இல்முகத்தினன்** - குற்றமற்ற முகமலர்ச்சி கொண்டு செல்கின்ற இராமனின்; **கொள்கை** - மனக் கருத்தை ; **கண்டவர்** - அறிந்த அந்நகர மக்கள்; **உற்றதை** - அடைந்ததுன்பத்தை; **ஒருவகை** - ஓரளவுக்கு; **உணர்த்துவாம்** - சொல்லுவோம்.

கான் புகும் இராமனது முகமலர்ச்சி தாமரை மலரினும்பொலிந்தது என்பதால் அவனது மனத்தின் சமநிலை அறியலாறிற்று. 'அரோ' ஈற்றசை.
***166***

***1772. ஐயனைக் காண்டலும், அணங்கு அனார்கள்தாம்,***
***மொய் இளந் தளிர்களால் முளரிமேல் விழும்***
***மையலின் மதுகரம் கடியுமாறு என,***
***கைகளின் மதர் நெடுங் கண்கள் எற்றினார்.***

**அணங்கு அனார்கள் தாம்** - தெய்வ மகளிரை ஒத்த அயோத்தி நகர மகளிர்; **ஐயனைக் காண்டலும்** - (வனம் புகும் மரவுரி அணிந்த) இராமனைக் கண்டவுடன்; **மொய்இளந்தளிர்களால்** - நெருங்கி இளமையான தளிர்களைக் கொண்டு; **முளரிமேல் விழும்** -தாமரை மலர்மேல் வந்து விழுகின்ற; **மையலின்** - கள்ளுண்ட மயக்கமுடைய;

*மதுகரம் - வண்டுகளை; **கடியுமாறு என** - ஒட்டும் தன்மை போல; **கைகளின்** - தம் கைகளால்; **மதல்நெடுங்கண்கள்** - செருக்கிய நீண்ட கண்களை; **எற்றினார்** - மோதினார்கள்.*

*தளிர்கள் -கைகள், தாமரை - முகம். வண்டு - கண்கள்,.ஒட்டுதல் - கை களால் மோதுதல் என உவமை காண்க. முடிசூட வேண்டிய அரச மகன்மரவுரி தரித்தகோலம் அவர்கள் கண்களாற் பார்க்கப் பொறுக்க முடியவில்லை; ஆதலின் இப்படிச் செய்தனர்.*
***167***

*1773.* ***தம்மையும் உணர்ந்திலர் - தணிப்பு இல் அன்பினால்***
***அம்மையின் இரு வினை அகற்றவோ? அன்றேல்,***
***விம்மிய பேர் உயிர் மீண்டிலாமைகொல்?-***
***செம்மல்தன் தாதையின் சிலவர் முந்தினார்.***

***சிலவர்த** - சிலர்; **தணிப்பு இல் அன்பினால்** - அடக்க முடியாத அன்பால்; **தம்மையும் உணர்ந்திலர்** - தம் நிலையையும் அறியாதவர் கள் ஆயினராய்; **செம்மல்தன் தாதையின்** - இராமபிரானது தந்தையாகிய அயரதனைவிட ; **முந்தினார்** -முற்பட்டு இறந்து விண் சென்றனர்; **அம்மையின்** - வருகின்ற பிறப்பில்; **இருவினைஅறுக்கவோ?** - இருவினைகளையும் இல்லாமல் நீக்கிக்கொள்ளவா; **அன்றேல்** - அப்படி இல்லாமற்போனால்; **விம்மிய பேர் உயிர் மீண்டிலாமை கொல்** - பிரிவினால் துடித்தஅரிய உயிர் வெளிப் போனது திரும்ப மீளாமையாலோ.*

*சென்ற உயிர் இனித் திரும்பாமல் மீளா உலகம் சேர்ந்ததுஆகலின், 'இரு வினை அகற்றவோ' என்றார். இருவினை அற்றவர் மீளா உலகம் சேர்வர்ஆதலின்.*
***168***

*1774.* ***விழுந்தனர் சிலர்; சிலர் விம்மி விம்மி மேல்***
***எழுந்தனர்; சிலர் முகத்து இழி கண்ணீரிடை***
***அழுந்தினர்; சிலர் பதைத்து, அளகவல்லியின்***
***கொழுந்து எரி உற்றென, துயரம் கூர்கின்றார்.***

***சிலர் விழுந்தனர் -; சிலர் மேல் விம்மி விம்மி எழுந்தனர்** - சிலர் மேலும்மேலும் அழுதழுது எழுந்தார்கள்; **சிலர் -; முகத்து இழி கண்ணீரிடை அழுந்தினர்** - முகத்திலிருந்து இறங்குகின்ற கண்ணீரினிடத்து அழுந்திப் போனார்கள்; **சிலர்-; பதைத்து** - துடித்து; **அனகவல்லியின்** - மயிர்க் கொடியின்; **கொழுந்து எரி உற்றென** - நுனிதீப்பற்றியது போல; **துயரம் கூர்கின்றார்** - துன்பம் மிகுகின்றார். அனகம் என்று பாடங்கொண்டு நீர் எனப் பொரு படுமாதலின் தண்ணீரில் உள்ள கொடியின் கொழுந்து தீப்பற்றியது போல என உரைப்பினும்அமையும்.* ***169***

*1775.* ***கரும்பு அன மொழியினர், கண் பனிக்கிலர்,-***
***வரம்பு அறு துயரினால் மயங்கியேகொலாம்.***
***இரும்பு அன மனத்தினர் என்ன நின்றனர்!-***
***பெரும் பொருள் இழந்தவர் போலும் பெற்றியார்.***

***கரும்பு அன மொழியினர்*** - *கரும்பு போன்ற பேச்சினை உடைய மகளிர்;* ***கண்பனிக்கிலர்*** - *கண்ணீர் அரும்பாதவராய்;* ***பெரும் பொருள் இழந்தவர் போலும்பெற்றியர்*** - *பெரிய செல்வத்தை இழந்து விட்டவர்களது தன்மையை உடையவராகி;* ***இரும்புஅளமனத்தினர் என்ன நின்றனர்*** - *இரும்பை ஒத்த மனம் உடையவர் என்று கண்டோர் சொல்லும்படி நின்றார்கள்;* ***வரம்பு அறு துயரினால் மயங்கியே கொல்*** - *(இவ்வாறுஆனது) அளவற்ற துன்பத்தால் திகைத்ததாலோ?*

*பெருந்துன்பத்தில் மனம் இறுகிப் போதல் உலகியல்; அவ்வாறு ஒருசிலர் இருந்தனர், 'ஆம்' அசை.* ***170***

## *1776.* ***நெக்கன உடல்; உயிர் நிலையில் நின்றில;*** ***'இக் கணம்! இக் கணம்!' என்னும் தன்மையும்*** ***புக்கன; புறத்தன; புண்ணின் கண் மலர்*** ***உக்கன, நீர் வறந்து, உதிர வாரியே!***

***உடல் நெக்கன*** - *(சிலர்) உடல்கள் உடைந்தன;* ***உயிர் நிலையில் நின்றில*** - *உயிர் இருப்பில் நிலையாக இல்லாமல் போயின;* ***இக்கணம்! இக்கணம்! என்னும்தன்மையும் புக்கன, புறந்தன*** - *இந்தக் கணம் போய்விடும் என்னும் தன்மையும் உடையவாய்உயிர்கள் உள்ளே நுழைந்தன, வெளியே போயின;* ***கண் மலர்*** - *மலர்க்கண்கள்;* ***நீர்வறந்து*** - *நீர்வற்றி;* ***புண்ணின்*** - *புண்ணைப் போல;* ***உதிர வாரி*** - *இரத்தப் பெருக்கை;* ***உக்கன*** - *சிந்தின.*

*உடல் நெக்குவிட்டு உயிர் இதோ போய்விடும் என்கின்ற நிலையில் உடலினுள் நுழைவதும்போவதுமாய் ஒரு நிலையில் நில்லாமல் இருந்தது என்பதாம். கண்கள் குருதி சிந்தின புண்ணைப்போல், 'ஏ' ஈற்றசை.* ***171***

## *1777.* ***இரு கையின் கரி நிகர் எண் இறந்தவர்,*** ***பெருளகு ஐயில் பெயர்த்தனர், தலையைப் பேணவர்.*** ***ஒரு கையில் கொண்டனர், உருட்டுகின்றனர்;*** ***கரிகையின் கண் மலர் சூன்று நீக்கினார்.***

***இரு கையின் கரி நிகர் எண் இறந்தவர்*** - *இரண்டு கைகளை உடைய யானையை ஒத்த கணக்கற்ற வீரர்கள்;* ***பெருகு ஐயில்*** - *பெரிய கைவாளினால்;* ***தலையைப் பேணலர்*** - *தலையை விரும்பாதவர்களாய்;* ***பெயர்த்தனர்*** - *பேர்த்து எடுத்து;* ***ஒரு கையில் கொண்டனர்*** - *ஒரு கையில் வைத்துக் கொண்டு;* ***உருட்டுகின்றனர்*** - *உருள விடுகின்றார் (வேறுசிலர்);* ***சுரிகையின்*** *-குற்றுடைவாளால்;* ***கண் மலர் ?*** - *மலராகிய கண்ணை;* ***துன்று*** - *குடைந்து;* ***நீக்கினார்*** - *போக்கினார்.*

*ஆடல் வீரர்க்கு 'இரு கையின் கரி' என உவமை கூறினார். 'இருகை வேழத்து இராகவன்' என்பது பாலகாண்டத்தொடர். மகளிர் செயல் கூறியவர், இதனால் ஆடவ வீரர்செயலைக் கூறினார். ஐயில்; அயில்-முதற்போலி.* ***172***

## *1778.* ***சிந்தின அணி; மணி சிதறி வீழ்ந்தன;*** ***பைந் துணர் மாலையின் பரிந்த, மேகலை;***

**நந்தினர், நகை ஒளி விளக்கம்; நங்கைமார்**
**சுந்தர வதனமும், மதிக்குத் தோற்றவே.**

*__நங்கைமார்__ - மகளிரின்; __அணி சிந்தின__ - ஆபரணங்கள் எங்கும் சிதறின; __மணி சிதறி வீழ்ந்தன__ - அவற்றில் பொதிதந்த மணிகள் எங்கும் உதிர்ந்து விழுந்தன; __மேகலை__ - அவர் இடையில் அணிந்த மேகலாபரணம்; __பைந்துணர் மாலையின்பரிந்த__ - பசிய பூங்கொத்தால் ஆகிய மாலை அறுந்து விழுவது போல அறுந்து விழுந்தன; __நகைஒளி விளக்கம்__ - புன்சிரிப்பாகிய முக ஒளி மலர்ச்சி; __நந்தின__ - கெட்டன; __சுந்தர வதனமும்__ - அவர்கள் அழகிய முகமும்; __மதிக்குத் தோற்ற__ - நிலவுக்குத்தோற்றன.*

*முன்பு மதியை வென்ற முகம் இப்போது துக்கத்தால்பொலிவிழத்தலின் மதிக்குத் தோற்றது என்றவாறாம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***173***

*அரசன் தேவியர் துயரம்*

***1779.*** **அறுபதினாயிரர் அரசன் தேவியர்,**
**மறு அறு கற்பினர், மழைக் கண்ணீரினர்,**
**சிறுவனைத் தொடர்ந்தனர்; திறந்த வாயினர்;**
**எறி திரைக் கடல் என இரங்கி ஏங்கினார்.**

*__மறு அறு கற்பினர்__ - குற்றமற்ற கற்பினை உடைய; __அறுபதினாயிரர் அரசன்தேவியர்__ - அறுபதினாயிரம் பேராகிய தசரதனுடைய மனைவியர்; __மழைக் கண் நீரினர்__ - மழை போன்ற கண்ணீரை உடையவராய்; __சிறுவனைத் தொடர்ந்தனர்__ - இராமனைப் பின்தொடர்ந்து; __திறந்த வாயினர்__ - வாய் திறந்து; __எறி திரைக்கடல் என இரங்கிஏங்கினார்__ - அலை வீசும் கடல் போல அழுது வருந்தினார்கள். இவர் உரிமை மகளிர் ஆவர். பரசுராமனிடம் இருந்து தன்னைக் காத்துக் கொள்ள ஒவ்வொருஆண்டும் மணக் கோலத்துடன் இருக்க வேண்டிய; தயரதன் அறுபதினாயிரம் மகளிரை அறுபதினாயிரம் ஆண்டுகளில் மணந்தான் என்று ஒரு கதை உண்டு. இதுவே வான்மீகத்தில் முந்நூற்றைம்பதின்மர் எனப்பேசப்பெற்றுள்ளது. மூவரே பட்டத்தரசியர் ஆவர்.* ***174***

***1780.*** **கன்னி நல் மயில்களும், குயில் கணங்களும்,**
**அன்னமும், சிறை இழந்து அவனி சேர்ந்தன**
**என்ன, வீழ்ந்து உழந்தனர் - இராமன் அல்லது,**
**மன் உயிர்ப் புதல்வரை மற்றும் பெற்றிலார்.**

*__இராமன் அல்லது__ - இராமனை அல்லாமல்; __மற்றும்__ - வேறு; __மன் உயிர்ப் புதல்வரைப் பெற்றிலார்__ - நிலைபெற்ற உயிராக உள்ள புத்திரர்களைப்பெறாதவர்களாகிய அத்தேவியர்; __கன்னி நல்மயில்களும்__ - இளமையான நல்ல மயில்களும்; __குயில் கணங்களும்__ - குயிற் கூட்டங்களும்; __அன்னமும்__ - அன்னப் பறவைகளும்; __சிறை இழந்து__ -இறக்கைகளை இழந்து; __அவனி சேர்ந்தன என்ன__ - பூமியை அடைந்தவை போல; __வீழ்ந்து உழந்தனர்__ .- தரையில் விழுந்து வருந்தினார்கள்.*

*பறவைகளுக்குச் சிறகுகள் வாழ்வின் ஆதாரம். அதை இழந்த பிறகு அவை வாழ இயலா. அதுபோலவே இராமனே இவர்கள் அனைவர்க்கும் உயிராவான். இராமனை இழந்து உயிர் வாழஇயலாதவராக ஆயினர்.* ***175***

***1781. கிளையினும், நரம்பினும், நிரம்பும் கேழன,***
***அளவு இறந்து உயிர்க்க விட்டு அரற்றும் தன்மையால்,***
***தொளை படு குழலினோடு, யாழ்க்குத் தோற்றன -***
***இளையவர் அமுதினும் இனிய சொற்களே.***

***இளையவர் அமுதினும் இனிய சொற்கள்*** *- இளைய அத்தேவியரின் அமுதத்தைக் காட்டிலும்இனிமையான சொற்கள்;* **அளவு இறந்து உயிர்க்க விட்டு அரற்றும் தன்மையால்** *-அளவில்லாமல் பெருமூச்சு விட்டு அழுகின்ற காரணத்தால்;* **கிளையினும் நரம்பினும் நிரம்பும்கேழன** *- மூங்கிலாலும், நரம்பாலும் செய்யப் பெற்றனவாகிய;* **தொளைபடு குழலினோடுயாழ்க்குத் தோற்றன** *- உள்தொளை உடைய புல்லாங்குழலோடு யாழிசைக்குத் தற்போது தோற்றுப்போயின.*

*கிளை - மூங்கில். ஆகுபெயராய்ப் புல்லாங்குழலின் இசையைக் குறித்தது. நரம்பும்அவ்வாறே யாழிசையைக் குறித்தது. கேழன - சுவை உடையன முன்பு அம்மகளிர் குரல் ஒலி குழலையும்யாழையும் வென்றது. இப்போது அமுது அரற்றிய காரணத்தால் தோற்றது என்பதாம்.* ***176***

***1782. 'புகழ் இடம், கொடு வனம் போலும், என்று, தம்***
***மகன்வயின் இரங்குறும் மகளிர் வாய்களால்,***
***அகல் மதில் நெடு மனை, அரத்த ஆம்பல்கள்***
***பகலிடை மலர்ந்தது ஓர் பழனம் போன்றவே.***

***'புகல் இடம் கொடு வனம் போலும் என்று'*** *- இராமனுக்கு இனித் தங்கும் இடம்கொடிய வனம் என்று சொல்லி;* **தம் மகன் வயின்** *- தம்முடைய மகனாகிய இராமனிடம்;* **இரங்குறும்** *- அவலிக்கின்ற* ***; மகளிர் வாய்களால்*** *- அத்தேவியரது அமுது மேலும்சிவந்த வாய்களால்* ***; அகல் மதில் நெடு மனை*** *- அகன்ற மதிலை உடைய பெரிய அரண்மனை;* **அரத்த ஆம்பல்கள்** *- செவ்வாம்பற் பூக்கள்;* **பகலிடை** *- பகற்காலத்தில்;* **மலர்ந்தது** *- மலர்ந்துள்ளதான;* **ஓர் பழனம் போன்ற** *- ஒரு வயலைப் போன்று ஆயின.*

*வாய்க்கு ஆம்பல் உவமை. அழுதலால் மேலும் சிவந்த வாய் செவ்வாம்பல் மலர்ந்தாற் போலும், பல்லாயிரம் தேவியர் அழுதலால் பல செவ்வாம்பல்கள்பகலில் மலர்ந்த வயல் போன்றாயிற்று அரண்மனை என்றார். 'ஏ' காரம் ஈற்றசை.*
***177***

***1783. திடருடைக் குங்குமச் சேறும், சாந்தமும்***
***இடை இடை வண்டல் இட்டு ஆரம் ஈர்த்தன;***
***மிடை முலைக் குவடு ஒரீஇ, மேகலைத் தடங்***
***கடலிடைப் புகுந்த, கண் கலுழி ஆறு அரோ.,***

***கண் கலுழி ஆறு*** - (அம் மகளிரது) கண்ணீர்ப் பெருக்காகிய கலங்கிய ஆற்றுவெள்ளம்; **திடர் உடைக் குங்குமச் சேறும், சாந்தமும் இடை இடை வண்டல் இட்டு** -திட்டுத் திட்டாகப் பொருந்திய (மார்பகத்தில் பூசப்பெற்ற) குங்குமச் சேறும் செஞ்சாந்தமும்ஆகியவற்றை நடுநடுவே சேற்றுக் குழம்பாகக் கொண்டு; **ஆரம் ஈர்த்தன** - (அவர்கள் மார்பில் அணிந்துள்ள) முத்துமாலையை இழுத்துக்கொண்டு; **மிடைமுலைக் குவடு ஒரீஇ** -நெருங்கியுள்ள முலைச் சிகரங்களிலிருந்து கீழ் இறங்கி; **மேகலைத் தடங் கடலிடைப் புகுந்த** - மேகலையாகிய அகன்ற கடலுக்குள் நுழைந்து பாய்ந்தன.

கலுழி - கலங்கிய நீர் ஆரம் - ஆற்றை நோக்கின்சந்தனமாம். மகளிரை நோக்க முத்தாரமாம். இங்கு முத்துவடம் சிலேடையாக அமைந்தது. மற்றவைஉருவகம்.
***178***

## *1784. தண்டலைக் கோசலத் தலைவன் மாதரைக்*
## *கண்டனன் இரவியும், கமல வாள் முகம் -*
## *விண் தலத்து உறையும் நல் வேந்தற்கு ஆயினும்,*
## *உண்டு இடர் உற்ற போது என் உறாதன?*

**தண்டலைக் கோசலத் தலைவன் மாதரை** - சோலை சூழ்ந்த கோசல நாட்டுக்குத் தலைவனாய தயரதன் தேவியரை; **இரவியும்** - சூரியனும் (இப்போது); **கமல வாள்முகம் கண்டனன்** - தாமரை மலர் போன்ற ஒளியுடைய முகத்தை (இது காறும் ஒருபொழுதும் காணாதவன்) கண்டான்; **விண் தலத்து உறையும் நல்வேந்தற்கு ஆயினும்** - விண்ணின் கண் தங்கியுள்ள தேவ அரசனுக்கு ஆனாலும்; **இடர் உற்றபோது** - துன்பம் வந்தபோது; **உறாதன என் உண்டு?** - எவைதாம் வராதவை உண்டு.

வேற்றுப்பொருள் வைப்பணி. துன்பத்தில் இருப்பவர்களுக்கு எல்லா அவமானமும் வந்து சேரும் என்பது உலகியல்; அரண்மனையை விட்டு வெளியே வராதவர் ஆதலின்இதுகாறும் சூரியனால் பார்க்கப்படாதது அவர் முகம் என்றானாம்.
***179***

## *1785. தாயரும், கிளைஞரும், சார்ந்துளார்களும்,*
## *சேயரும், அணியரும், சிறந்த மாதரும்,*
## *காய் எரி உற்றனர் அனைய கவ்வையர்;*
## *வாயிலும் முன்றிலும் மறைய மொய்த்தனர்.*

**தாயரும்** - தாய்மார்களும்; **கிளைஞரும்** - உறவினர்களும்; **சார்ந்துளார்களும்** - சார்ந்து பற்றுக்கோடாய் எண்ணித் தங்கியுள்ளவர்களும்; **சேயரும்அணியரும்** - சேய்மையிலும் அண்மையிலும் உள்ளாரும்; **சிறந்த மாதரும்** - அழகிற்சிறந்த மகளிரும்; **காய் எரி உற்றனர் அனைய** - சீறும் நெருப்பில் விழுந்தாற்போன்ற; **கவ்வையர்** - துன்பமுற்று; **வாயிலும் முன்றிலும் மறைய** - அரண்மனைவாயிலும் முற்றமும் மறையும்படி; **மொய்த்தனர்** - நெருங்கினார்கள்.

கவ்வை - அரற்றுதலுக்கு ஏதுவாகிய பெருந்துன்பம். ***180***

*இராமன் தன் மனையை அடைதல்*

***1786.* இரைத்தனர், இரைத்து**
**எழுந்து ஏங்கி, எங்கணும்,**
**திரைப் பெருங் கடல் எனத்**
**தொடர்ந்து பின் செல,**
**உரைப்பதை உணர்கிலன்,**
**ஒழிப்பது ஓர்கிலன்,**
**வரைப் புயத்து அண்ணல் தன்**
**மனையை நோக்கினான்.**

*(அனைவரும் )* **இரைத்தனர்** *- அழுதனர்;* **இரைத்து எழுந்து ஏங்கி** *- அழுது மெல்ல எழுந்து புலம்பி;* **எங்கணும்** *- எவ்விடத்தும்;* **திரைப் பெருங்கடல் என** *- அலை வீசுகின்ற பெருங்கடல் (தொடர்வது) போல;* **தொடர்ந்து பின் செல** *-(இராமனைப்) பின்பற்றித் தொடர்ந்து செல்ல;* **வரைப்புயத்து அண்ணல்** *- மலைபோன்றதோளை உடைய தலைவனாகிய இராமன்;* **உரைப்பதை உணர்கிலன்** *- (அவர்களுக்கு) ஆறுதல்சொல்வதை அறியாமலும்;* **ஒழிப்பது ஓர்கிலன்** *- (அவர்களை) வராமல் தடுப்பதுபற்றிஆராயாமலும்;* **தன் மனையை நோக்கினான்** *- தன் இல்லத்தை நோக்கிச் சென்றான்.*

*பின்பற்றி வருவாரைத் தடுத்து நிறுத்தி ஆறுதல் கூறி அகற்ற இயலாமல் இராமன் தன் மனைக்குச் சென்றான் என்பதாம். 'உரைப்பதை' என்பதற்கு அவர்கள்புலம்பிக் கூறுவதை உணராதவனாய் என உரைப்பினும் அமையும்.* ***181***

***1787.* நல் நெடு நளிர் முடி சூட, நல் மணிப்**
**பொன் நெடுந் தேரொடும் பவனி போனவன்,**
**துள் நெடுஞ் சீரையும் சுற்றி, மீண்டும், அப்**
**பொன் நெடுந் தெருவிடைப் போதல் மேயினான்.**

**நல் நெடு நளிர் முடி சூட** *- சிறந்த பெரிய பெருமை உடைய மகுடத்தைச்சூடிக்கொள்ள;* **நல் மணிப் பொன் நெடுந் தேரொடும் பவனி போனவன்** *- நல்ல மணிகள்கட்டப்பெற்ற பொன்னால் ஆகிய பெரிய தேரின்மீது உலாச் சென்ற இராமன்;* **மீண்டும்** *- திரும்பவும்;* **அப் பொன் நெடுந் தெருவிடை** *- பொலிவுபெற்ற அதே பெருவீதியில்;* **துன் நெடுஞ் சீரையும் சுற்றி** *- நெருங்கிய பெரிய மரவுரியைச் சுற்றிக் கொண்டு;* **போதல் மேயினான்** *- போவதைப் பொருந்தினான்.*

*தேரொடு சென்றவன், சீரையொடு கொண்டு வந்தான் என்பது ஒரு சொல் நயம். இரண்டையும் இணைத்துக் காட்டி அவலத்தை மேலும் அதிகமாக்கினார் கம்பர். 'கீழ்த்திசை வாயில் கணவனொடு புகுந்தேன், மேற்றிசை வாயில் வறியேன் பெயர்க்கு' (சிலப். 23:182 - 3) என்ற கண்ணகி நிலையை ஒப்பிடுக.*
***182***

*இராமனை வீதியில் கண்டார் உற்ற வருத்தம்*

***1788. அந்தணர், அருந் தவர், அவனி காவலர்,***
***நந்தல் இல் நகருளார், நாட்டுளார்கள், தம்***
***சிந்தை என் புகல்வது? தேவர் உள்ளமும்***
***வெந்தனர், மேல் வரும் உறுதி வேண்டலர்.****

***அருந்தணர்-; அருந்தவர்*** *- அரிய முணிவர்கள்;* ***அவனிகாவலர்*** *- பூமிஅரசர்கள்;* ***நந்தல் இல் நகருளார்*** *- கெடுதலில்லாத அயோத்தி நகரில் உள்ளவர்கள்;* ***நாட்டுளார்கள்*** *- கோசல நாட்டில் உள்ளவர்கள்;* ***தம் சிந்தை புகல்வது என்?*** *- மனம்பட்ட துன்பத்தைச் சொல்வது எவ்வாறு;* ***மேல்வரும் உறுதி வேண்டலர்*** *- (இராமன்காடு செல்வதால் தங்களுக்கு) எதிர்காலத்தில் வரும் நன்மையும் விரும்பாதவர்களாய்;* ***தேவர்உள்ளமும் வெந்தனர்*** *- (இராமனது மரவுரிக் கோலம் கண்டும்) தேவர்களும் உள்ளம் வெந்துபோனார்கள்.*

*தேவர்களுக்காகவே இராமன் மரவுரி தரித்துக் காடு சென்றானாகத் தேவர்களே அக்கோலம் கண்டு தரியாதவர்களாக மனம் வெந்தனர் ஆயின் மற்றவர் நிலையைச்சொல்வது எவ்வாறு? என்றாராம்.* ***183***

***1789. 'அஞ்சன மேனி இவ் அழகற்கு எய்திய***
***வஞ்சனை கண்டபின், வகிர்ந்து நீங்கலா***
***நெஞ்சினும் வலிது உயிர்; நினைப்பது என் சில?***
***நஞ்சினும் வலிய, நம் நலம்' என்றார் - சிலர்.***

***சிலர்-; 'அஞ்சன மேனி இவ் அழகற்கு எய்திய*** *- மை போன்ற உடம்பினை உடையஇந்த எழிலையுடைய இராமனுக்குப் பொருந்திய;* ***வஞ்சனை*** *- பொல்லாங்கை;* ***கண்டபின்*** *- பார்த்த பிறகும்;* ***வகிர்ந்து நீங்கலா நெஞ்சினும்*** *- பிளவுண்டு போகாத மனத்தைக்காட்டிலும்;* ***உயிர் வலிது*** *- நம் உயிர் வலிமையாக இருக்கிறது;* ***சில நினைப்பது என்?*** *- வேறு சில நினைப்பதனால் பயன் என்ன;* ***நம் நலம்*** *- நமது நன்மை;* ***நஞ்சினும் வலிய'*** *- விடத்தினும் வலியதாயிராநின்றது;'* ***என்றார்-.***

*இராமனுக்கு நிகழ்ந்த இக் கொடுமை கண்ட பிறகும், நம்நெஞ்சு பிளக்க வில்லை. உயிர் போகவில்லை, நமது நலம் அழகாயிருந்தது என்று தம்மைத்தாமே நொந்துகொள்கின்றனர்.* ***184***

***1790. ' "மண்கொடு வரும்" என, வழி இருந்தது, யாம்,***
***எண்கொடு சுடர் வனத்து எய்தல் காணவோ?***
***பெண் கொடுவினை செயப்பெற்ற நாட்டினில்***
***கண்கொடு பிறத்தலும் கடை' என்றார் - சிலர்.***

***சிலர்-; 'மண் கொடு வரும்' என*** *- இராமன் அரசாட்சி கொண்டு முடி புனைந்துவருவான் என (அக்காட்சி காண);* ***யாம் வழியிருந்தது*** *- வழியில் காத்திருந்தது;* ***எண் கொடு சுடர் வனத்து எய்தல் காணவோ?*** *- நினைக்கக் கொடிய வெப்பமுள்ள காட்டில்செல்லுதலைப் பார்ப்பதற்கோ?;* ***பெண் கொடுவினை செயப்பெற்ற நாட்டினில்*** *- பெண்கொடுந்தொழில் செய்யப் பொருந்திய நாட்டில்;*

***கண் கொடு பிறத்தலும் கடை*** -(அந்தக் கொடுமைகளைக் காண) கண் உடையவர்களாகிப் பிறத்தலும் கீழ்த்தரமானது;' ***என்றார் -.***

*'கண் செய்த பாவம் கடலிற் பெரிது' என்று (1706.) முண்சொல்லியதை ஒத்தது இது.*

*185* ***1791. 'முழுவதே பிறந்து உலகு உடைய மொய்ம்பினோன்,***
***"உழுவை சேர் கானகத்து உறைவென் யான்" என,***
***எழுவதே? எழுதல் கண்டு இருப்பதே? இருந்து,***
***அழுவதே? அழகிது இவ் அன்பு!' என்றார் - சிலர்.***

***சிலர் -; பிறந்து உலகு முழுவதே உடைய மொய்ம்பினோன்*** - மூத்தவனாகப் பிறந்துஉலகம் முழுவதையும் தனக்கு உடைமையாகப் பெற்ற வலிமை உடைய இராமன்; ***'உழுவை சேர்கானகத்து உறைவெற் யான்' என எழுவதே?*** - புலி உள்ள காட்டில் தங்குவேன் யான் என்று சொல்லிப் புறப்படுவதா; ***எழுதல் கண்டு இருப்பதே?*** - அவன் புறப்படுவதைப் பார்த்தும்(உடன் செல்லாமல்) நாம் இங்கு சும்மா இருப்பதா; ***இருந்து அழுவதே?*** -; ***இவ் அன்பு அழகிதே?*** - (நாம் இவனிடத்தில் வைத்த அன்பு அழகாயிருந்தது;' ***என்றார்-.***

*'எழுவதே? எழுதல் கண்டு இருப்பதே? இருந்து அழுவதே?' இவ் வடியில் ஒரு சொல்லை இன்னொருசொல் பற்றித் தொடர்ந்து வந்துள்ள அழகு காண்க. 'ஒற்றைச் சர மாலை யணி' என இதனைக்கூறுவர்; வடமொழியில்'ஏகாவளி எனப்பெறும்.*
*186*

***1792. வலம் கடிந்து, ஏழையர் ஆய மன்னரை***
***'நலம் கடிந்து, அறம் கெட, நயக்கலீர்கள்; நும்***
***குலம் கடிந்தான் வலி கொண்ட கொண்டலை,***
***நிலம் கடிந்தாளொடு நிகர்' என்றார் - சிலர்.***

***சிலர் -; வலம் கடிந்து*** - வலிமை போக்கி; ***ஏழையர் ஆய மன்னரை*** -(ஏதும் செய்யாமல்) அறிவீனர்களாய் இருக்கும் அரசரைப் பார்த்து; ***'நலம் கடிந்து அறம் கெட நயக்கலீர்கள்*** - நன்மை நீக்கி, தருமம் அழியும்படி செயல் செய்ய விரும்பாதீர்கள்(அப்படிச் செய்தால்); ***நும் குலம் கடிந்தான் வலி கொண்ட கொண்டலை*** - உம்முடையஅரசர் குலத்தை (இருபத்தொரு தலைமுறை) கருவறுத்தவனாகிய பரசுராமனது பலிமையை வெற்றி கொண்டமேகவண்ண இராமனை; ***நிலம் கடிந்தாளொடு*** - அரசாட்சி நிலவுரிமையிலிருந்து நீக்கியகைகேயியோடு; ***நிகர்'*** - நீங்களும் ஒப்பாவீர்;' ***என்றார் -.***

*அரசர்களை நோக்கி; 'அறத்துக்குப் போராடுங்கள்; இராமனை மீண்டும் ஆட்சியில்அமர்த்துங்கள்; இல்லையேல் நீங்களும் கைகேயிக்குச் சமானமாவீர்கள் என்றனர் சிலர்என்க.* *187*

***1793. 'திரு அரை சுற்றிய***
***சீரை ஆடையன்,***
***பொரு அருந் துயரினன்,***
***தொடர்ந்து போகின்றான்.***

***இருவரைப் பயந்தவள்***
***ஈன்ற கான்முளை***
***ஒருவனோ, இவற்கு இவ்***
***ஊர் உறவு?' என்றார் - சிலர்***

***சிலர் -; 'திரு அரை சுற்றிய சீரை ஆடையன்*** *- அழகிய இடுப்பின்கண் கட்டிய மரவுரி உடையை உடையவனாய்;* ***பொரு அருந்துயரினன்*** *- ஒப்பற்ற பெரும் துன்பத்தோடு;* ***தொடர்ந்து போகின்றான்*** *- (இராமனைப் ) பின்பற்றித் துணையாகச் செல்கின்ற;* ***இருவரைப் பயந்தவள்*** *- (இலக்குமண சத்துருக்கனராகிய) இரு பிள்ளைகளைப் பெற்றசுமித்திரையானவள்;* ***ஈன்ற*** *- பெற்றெடுத்த;* ***கான்முளை*** *- மகனாகிய இலக்குவன்;* ***ஒருவனோ?*** *- ஒருவன் மட்டும்தானா?;* ***இவற்கு இவ்ஊர் உறவு'*** *- இராமனுக்கு இந்தஊரில் உறவாக இருப்பவர் (வேறு யாரும் இலரோ);'* ***என்றார் -.***

*தாம் இவ்வளவு பேர் இருக்கவும் இலக்குவன் மட்டுமே பின் தொடர்ந்து, செல்வது கண்டு தம்மைத் தாமே நொந்துகொண்டவர் பேசிய பேச்சுஇது.*
***188***

***1794. 'முழுக் கலின் வலிய நம் மூரி நெஞ்சினை,***
***மழுக்களின் பிளத்தும்' என்று, ஓடுவார்; வழி***
***ஒழுங்கிய கண்ணின் நீர்க் கலுழி ஊற்றிடை***
***இழுக்கலில் வழுக்கி வீழ்ந்து, இடர் உற்றார் - சிலர்***

***சிலர் -; "முழுக் கலின் வலிய நம் மூரி நெஞ்சினை*** *- பெரிய கல்லைப் போலவலியதாக உள்ள நமது கடு மனத்தை;* ***மழுக்களின் பிளத்தும்'*** *- கோடரியால்இரண்டாக்குவோம்;' என்று ;* ***ஓடுவார் -*** *ஓடுகின்றார்கள்;* ***வழி ஒழுக்கியகண்ணின் நீர்க் கலுழி ஆற்றிடை*** *- வழியில் ஒழுகவிடப்பட்ட கண்ணீராகிய கலங்கியநீர்ப்பெருக்காகிய ஆற்றின்கண்;* ***இழுக்கலில்*** *- சேற்றில்;* ***வழுக்கி வீழ்ந்து*** *- சறுக்கி விழுந்து;* ***இடர் உற்றார்*** *- துன்பம் அடைந்தார்.*

*கலின் - கல்லின் என்பதன் விகாரம். மழு - கோடரி. ஓடுகின்றவர் தமது கண்ணீர் ஆற்றுச் சேற்றில் வழுக்கி, வீழ்ந்தார்கள் என்பதாம். இழுக்கல் - சேறு. "இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல்' என்னும் குறள் காண்க. (குறள். 415.)*
***189***

***1795. பொன் அணி, மணி அணி, மெய்யின் போக்கினர்,***
***மின் என மீன் என விளங்கும் மெய் விலைப்***
***பல் நிறத் துகிலினைப் பறித்து நீக்கினர்,***
***சின்ன நுண் துகிலினைச் செறிக்கின்றார் - சிலர்.****

***சிலர்-; மெய்யின்*** *- தம் உடம்பிலிருந்து;* ***பொன் அணி, மணி அணிபோக்கினர்*** *- பொன்னாலும் மணியாலும் இயன்ற அணிகலன் களைக் கழற்றி எறிந்தனராகி;* ***மின் என விளங்கும் மெய்*** *- மின்னலைப் போல விட்டுவிளங்கும் தமது உடம்பில்;* ***மீன் என விலைப் பல்நிறத் துகிலினை*** *- விண்மீனைப்போன்ற சிறந்த விலை படைத்த பல நிறமுள்ள உயர்ந்த ஆடைகளைப்;* ***பறித்து நீக்கினர்*** *- பிடித்திழுத்து அப்பால் வீசி*

*எறிந்து;* ***சின்ன நுண்துகிலினைச் செறிக்கின்றார்*** *-சிறிய நுண்ணிய ஆடையை இறுகக் கட்டுகின்றார்.*

*இராமன் அணிதுறந்து மரவுரி கொண்டு செல்லும்போது தமக்கு அலங்யையும், மீன்என -ஆடையையும் குறித்ததாகக் கொள்க.* ***190***

***1796. 'நிறை மக உடையவர், நெறி செல் ஐம்பொறி***
***குறை மகக் குறையினும், கொடுப்பராம் உயிர்***
***முறை மகன் வனம் புக, மொழியைக் காக்கின்ற***
***இறைமகன் திருமனம் இரும்பு' என்றார் - சிலர்.***

***சிலர்-; 'நிறை மக உடையவர்*** *- பல பிள்ளைகளை உடையவர்கள்;* ***நெறி செல்ஐம்பொறி குறை*** *- மனத்தின் வழியில் செல்கின்ற ஐம்பொறிகளில் ஒன்றிரண்டு குறைந்து ஊனமுற்ற;* ***மக*** *- பிள்ளை;* ***குறையினும்*** *- அழிந்தாலும்;* ***உயிர் கொடுப்பர்*** *- தங்கள் உயிரைப் போக்கிக்கொள்வர் (இது உலக வழக்கமாகவும்);* ***முறைமகன் வனம் புக*** *- அரச உரிமைக்கு முறையாக உரிய மூத்த பிள்ளை காடு செல்ல;* ***மொழியைக் காக்கின்ற இறைமகன்*** *- வாய்மையைக் காத்து வரம் கொடுத்துள்ள சக்கரவர்த்தியின்;* ***திருமனம்இரும்பு'*** *- அழகிய மனம் இரும்பாகும்;'* ***என்றார் -***

*குறை மக - ஊமை, செவிடு, குருடு முதலிய குறை உடைய பிள்ளை. 'ஆம்' உரையசை.* ***191***

***1797. வாங்கிய மருங்குலை வருத்தும் கொங்கையர்,***
***பூங்கொடி ஒதுங்குவபோல், ஒதுங்கினர்;***
***ஏங்கிய குரலினர்; இணைந்த காந்தளின்***
***தாங்கிய செங் கை தம் தலையின்மேல் உளார்.***

***வாங்கிய மருங்குலை*** *- உள்வாங்கிய மெலிந்து வளையும் இடையை;* ***வருத்தும்கொங்கையர்*** *- தமது பாரத்தால் வருத்துகின்ற தனங்களை உடைய அழகிய மகளிர்;* ***பூங்கொடி ஒதுங்குவபோல் ஒதுங்கினர்*** *- மலர் பூத்த கொடி அசைவது போல் ஒதுங்கி;* ***ஏங்கிய குரலினர்*** *- அழுத குரல் உடையதாய்;* ***இணைந்த காந்தனின்*** *- இரட்டையானகாந்தள் மலர்போல்;* ***செங்கை*** *- சிவந்த கையை;* ***தம் தலையின் மேல் தாங்கியஉளார்*** *- தம் தலைகளின் மேல் தாங்கியவராய் உள்ளனர். மகளிர் தம் தலைமீது கைவைத்து அழுதவண்ணம் உளர் என்றார். 'கை தலையின்மீது உளார் பூங்கொடி ஒதுங்குவது போல் ஒதுங்கினர்' என முடிப்பினும்அமையும்.*
***192***

***1798. தலைக் குவட்டு அயல் மதி தவழும் மாளிகை***
***நிலைக் குவட்டு இடை இடை நின்ற நங்கைமார்,***
***முலைக் குவட்டு இழி கணீர் ஆலி மொய்த்து உக,***
***மலைக் குவட்டு அகவுறு மயிலின் மாழ்கினார்.***

***தலைக்குவட்டு அயல்*** *- உச்சிச் சிகரத்துக்குப் பக்கத்தில்;* ***மதிதவழும்மாளிகை*** *- சந்திரன் தவழ்ந்து செல்லும் உயர்ந்த மாளிகையினது;* ***நிலைக் குவட்டு இடைஇடை*** *- மேல்*

*நிலை என்னும் உப்பரிகை இடங்கள்தோறும்;* ***நின்ற நங்கைமார்*** *-நின்ற மகளிர்;* ***இழி கணீர். ஆலி முலைக் குவட்டு மொய்த்து உக*** *- இறங்குகின்ற கண்ணீர்த் துளி தமது முலைச் சிகரங்களில் நெருங்கிச் சிந்த;* ***மலைக் குவட்டு*** *-மலைச் சிகரத்தில்;* ***அகவுறு மயிலின்*** *- அகவுகின்ற மயிலைப் போல;* ***மாழ்கினார்*** *- மயங்கினர்.*

*மயில் அகவுதல் - கூவுதலாம்; இங்கே மகளிர் அழுதலாம். நிலைக்குவட்டு இடை இடை என்பது 'பால்கனி' என்று சொல்லப்படுவதாகவும்கொள்ளலாம்.*
***193***

***1799. மஞ்சு என அகிற் புகை வழக்கு மாளிகை***
***எஞ்சல் இல் சாளரத்து, இரங்கும் இன் சொலார்***
***அஞ்சனக் கண்ணீன் நீர் அருவி சோர்தர,***
***பஞ்சரத்து இருந்து அழும் கிளியின் பன்னினார்.***

***மஞ்சு என அகிற் புகை வழங்கும் மாளிகை*** *- மேகம் போன அகிற் புகையானது சஞ்சரிக்கும் மாளிகையினது;* ***எஞ்சல் இல்சாளரத்து*** *- குறைதல் இல்லாத (காற்று வழங்கும்) பலகணி வழியாக (இராமனைக் கண்டு);* ***இரங்கும் இன்சொலார்*** *- வருந்தும் இனியசொல்லினை உடைய மகளிர்;* ***அஞ்சனக் கண்ணின்*** *- மை தீட்டப் பெற்ற கண்ணிலிருந்* ***து; நீர் அருவி சோர்தர*** *- நீர் அருவியாக வழிய;* ***பஞ்சரத்து இருந்து அழும் கிளியின்*** *- கூட்டின்கண் இருந்து அழுகின்ற கிளியைப் போல;* ***பன்னினார்*** *- சொன்னதையே சொல்லிச் சொல்லிப் புலம்பினார்.*

*பலகணி வழியாகத் தலைகாட்டி அழும் மகளிர் கூட்டில் இருந்து அழும் கிளி, போன்றனர்என்க. பன்னுதல் - திரும்பத் திரும்பச் சொல்லுதல், கிளி சொன்னதைத் திரும்பத் திரும்பச்சொல்லும் ஆதலின் இங்கே பன்னுதலுக்கும் உவமையாயிற்று.*
***194 1800. நல் நெடுங் கண்களின் நான்ற நீர்த் துளி -***
***தன் நெடுந் தாரைகள் தளத்தின் வீழ்தலால்,***
***மன் நெடுங் குமரன்மாட்டு அழுங்கி, மாடமும்***
***பொன் நெடுங் கண் குழித்து, அழுவ போன்றவே.***

***நல் நெடுங் கண்களின் நான் நீர்த்துளிதன்ற*** *- (மேல்மாடத்திருந்து இராமனைக்கண்ட மகளிர்) நல்ல நீண்ட கண்களிலிருந்து விழுந்த நீர்த்துளியினது;* ***நெடுந் தாரைகள்*** *- நீண்ட நீர்ப்பெருக்கு;* ***தளத்தின் வீழ்தலால்*** *- மேல் தளத்திலிருந்து கீழேவிழுகின்ற தன்மையால்;* ***மாடமும்*** *- மாளிகையும்;* ***மன் நெடுங் குமரன் மாட்டு அழுங்கி*** *- அரச குமாரனிடத்தில் வருந்தி;* ***பொன் நெடுங் கண் குழித்து*** *- அழகிய பெரிய இடத்தைக் குழி செய்து;* ***அழுவ போன்றவே*** *- அழுகின்றன போல்வன.*

*மேல் மாடியிலிருந்து காணும் மகளிர் கண்ணீர்த் தாரை மாடித் தளத்திலிருந்து கீழே விழும் காட்சி மாளிகையே அழுவதுபோல் என்பது தற்குறிப் பேற்றயிணயாம்- கண் - இடம் (விழி) சிலேடை.* ***195***

***1801. மக்களை மறந்தனர் மாதர்; தாயரைப்***
***புக்க இடம் அறிந்திலர் புதல்வர்; பூசலிட்டு***

***உக்கனர்; உயங்கினர்; உருகிச் சோர்ந்தனர் -***
***துக்கம் நின்று அறிவினைச் சூறையாடவே.***

***துக்கம் நின்று*** - *துயரம் நிலைத்து நின்று;* ***அறிவினைச் சூறையாட*** - *அறிவைக் கொள்ளையிட்டுச் செல்ல (அதனால் உணர்வு மயங்கி);* ***மாதர்*** - *தாய்மார்கள்;* ***மக்களை மறந்தனர்*** - *தங்கள் பிள்ளைகளை மறந்துபோனார்கள்;* ***புதல்வர்*** - *பிள்ளைகள்;* ***தாயரைப் புக்க இடம் அறிந்திலர்*** - *தாய்மார்கள்புகுந்த இடத்தை அறியாதவர் ஆயினர்;* ***பூசல் இட்டு*** - *அழுது ஆர்ப்பரித்து;* ***உக்கனர்*** - *மனம் உடைந்து;* ***உயங்கினர்*** - *வாடி;* ***உருகி*** - *கரைந்து;* ***சோர்ந்தனர்*** - *சோர்வடைந்தார்கள்.*

*பிள்ளைகள் தாயரைத் தேடும் இயல்புடையவர் ஆதலின், தேடிக் கிடையாதவழி பூசல் இட்டுஉயங்கி உருகினர் என்க. இதற்குக் காரணம் தாயர் பிள்ளைகளை மறந்தமையே. அவர்கள் துக்கம்நின்று அறிவு கொள்ளை போனதால் மறந்தனர். எனவே, இராமன் காடு புகுவது நகரமாந்தரைப்படுத்திய விதம் அறிவித்தவாறு - 'ஏ' காரம் ஈற்றசை.* ***196***

***1802. காமரம் கனிந்தெனக் கனிந்த மென் மொழி***
***மா மடந்தையர் எலாம் மறுகு சேர்தலால்,***
***தே மரு நறுங் குழல் திருவின் நீங்கிய***
***தாமரை ஒத்தன - தவள மாடமே.***

***காமரம் கனிந்து என*** - *காமரம் என்னும் பண் முற்றிப் பழுத்தாற்போல;* ***கனிந்த மென் மொழி*** - *இனிய மென்மையான பேச்சினை உடைய;* ***மா மடந்தையர் எலாம்*** - *பெருமயுற்ற மகளிர் எல்லாரும்;* ***மறுகு சேர்தலால்*** - *வீதியை அடைந்தபடியால்;* ***தவளமாடம்*** - *வெண்ணிற மாளிகைகள்;* ***தே மரு நறுங்குழல் திருவின் நீங்கிய தாமரை ஒத்தன*** - *தேன் பொருந்திய நறுமணம் வீசும் சுடர் தலை உடைய திருமகளை விட்டுப் பிரிந்த தாமரைமலர்போல் ஆயின.*

*காமரம் என்பது பண் நிரம்பினாற் போன்ற பேச்சு. மகளிர் போனபடியால் வெறுமைஅடைந்த மாளிகையைத் திருமகள் நீங்கிய தாமரைபோல் என்றார். தவளம் - வெண்மை. "திருப்புறக் கொடுத்த செம்பொன் தாமரை போன்று கோயில், புரிக்குழல மடந்தை போகப் புலம்பொடு மடிந்த அன்றே" என்ற சிந்தாமணி (560) இங்கு ஒப்பு நோக்கற்குரியது. 'ஏ' காரம்ஈற்றசை.* ***197***

***1803. மழைக் குலம் புரை குழல் விரிந்து மண் உற,***
***குழைக் குல முகத்தியர் குழாம் கொண்டு ஏகினர் -***
***இழைக் குலம் சிதறிட, ஏவுண்டு ஓய்வுறும்***
***உழைக் குலம் உழைப்பன ஒத்து, ஓர் பால் எலாம்.***

***ஓர் பால் எலாம்*** - *ஒரு பக்கத்தில் எல்லாம்;* ***ஏ உண்டு*** - *அம்பு பட்டு;* ***ஒய்வுறும்*** - *சோர்வடைந்து இறக்கும் நிலை எய்திய;* ***உழைக்குலம்*** - *மான்கூட்டம்;* ***உழைப்பன ஒத்து*** - *துடித்து வருந்துவன போல்;* ***இழைக்குலம் சிதறிட*** - *அணிகலன்கள் கீழே சிந்த;* ***மழைக்குலம் புரை குழல்*** - *மேகக் கூட்டம் ஒத்த கூந்தல்;* ***விரிந்து மண் உற*** - *அவிழ்ந்து தரையில் புரள;* ***குழாம் கொண்டு*** - *கூட்டமாகி;* ***ஏகினார்*** - *சென்றார்கள்.*

*தோடு எனப் பொருள் கூறினோம் ஆயினும் குழை என்பது தொங்கலாக இடப்பெற்ற காதணியைக்குறிக்கும். தோடு - செறித்த காதணியாம். கோடு - பனை யோலை, குழை - தளிர் என இவற்றை ஒப்பு நேரிக்கி அமைந்த பெயர்கள்.*
***198***

*நகரின் பொலிவு அழிதல்*

***1804. கொடி அடங்கின மனைக் குன்றம்; கோ முரசு***
***இடி அடங்கின; முழக்கு இழந்த பல் இயம்;***
***படி அடங்கலும், நிமிர் பசுங் கண் மாரியால்,***
***பொடி அடங்கின, மதில் புறத்து வீதியே.,***

***மனைக்குன்றம்*** *- மனைகளாகிய மலைகளில்;* ***கொடி அடங்கின*** *- கொடிகள் அடங்கிப் போயின;* ***கோ முரசு*** *- அரச முரசம்;* ***இடி அடங்கின*** *- ஒலித்தல்இல்லாமற் போயின;* ***பல் இயம்*** *- பல வாத்தியங்கள்;* ***முழக்கு இழந்த*** *- ஒலியைஇழந்தன;* ***படி அடங்கலும்*** *- பூமி முழுவதிலும்;* ***மதில்புறத்து வீதி*** *- மதிலின் புறம்பே உள்ள வீதிகள;* ***நிமிர்பசுங்கண் மாரியால்*** *- பெருகுகின்ற கண்ணீர் மழையால்;* ***பொடி அடங்கின*** *- புழுதிஅடங்கப் பெற்றன.*

*கொடி கட்டப்பெற்ற மாடங்கள் கொடி இன்றி இருத்தல் வாத்தியங்கள் ஒலியாமை முதலியனதுயரச் சின்னங்களாம். அயோத்தியின் துயரத்தை உலகத்தின்மேல் ஏற்றிக் கூறியது உயர்வுநவிற்சியே; ஆயினும், உலகமே வேதனைப் படுதற்குரியநிகழ்ச்சிதானே!* ***199***

***1805. அட்டிலும் இழந்தன புகை; அகிற் புகை***
***நெட்டிலும் இழந்தன; நிறைந்த பால், கிளி***
***வட்டிலும் இழந்தன; மகளிர் - கால் மணித்***
***தொட்டிலும் இழந்தன, மகவும் - சோரவே.***

***அட்டிலும் புகை இழந்தன*** *- சமையற்கட்டுகள் (சமைத்தல் இல்லாமையால்) புகையைஇழந்தன;* ***நெட்டிலும்*** *- உயர்ந்த மேல் மாடங்கள்;* ***அகில் புகை இழந்தன*** *- (பெண்கள் கூந்தலைப் புகை செய்யாமையால்) அகில் புகைகளை இழந்தன;* ***கிளி*** *- கிளிகள்;* ***பால் நிறைந்த வட்டிலும் இழந்தன*** *- (ஊட்டுவார் இன்மையால்) பால்நிரம்பிய கிண்ணத்தை இழந்தன;* ***மகளிர் சோர*** *- தாய்மார்கள் துயரத்தால்சோர்ந்தபடியால்;* ***மகவும்*** *- பிள்ளைகளும்;* ***கால் மணித் தொட்டிலும் இழந்தன*** *- கால் உடைய மணிகள் அழுத்திச் செய்யப்பெற்ற தொட்டிலை இழந்தன.*

*துயர மிகுதியால் நகர் தொழில் மறந்தபடியைச் சொன்னார். நெடு(மை) + இல் =நெட்டில்.* ***200***

***1806. ஒளி துறந்தன முகம், உயிர் துறந்தென;***
***துளி துறந்தன, முகில் தொகையும்; தூய நீர்த்***
***தளி துறந்தன பரி; தான யானையும்***
***களி துறந்தன, மலர்க் கள் உண் வண்டினே.***

***உயிர் துறந்தென*** - *உயிர் போனார் போல;* ***முகம்*** - *எல்லோருடையமுகமும்;* ***ஒளி துறந்தன*** - *ஒளி மழுங்கின;* ***முகில் தொகையும்*** - *மேகக்கூட்டமும்;* ***துளி துறந்தன*** - *மழைத் துளி துளிர்த்தலைக் கைவிட்டன;* ***பரி*** - *குதிரைகள்;* ***தூய நீர்த் தளி துறந்தன***- *தூய்மையான நீர்ச் சாலைகளை இழந்தன;* ***தானயானையும்*** - *மதப் பெருக்கையுடைய யானைகளும்;* ***மலர்க் கள் உண் வண்டின்*** - *மலரில் தேன் உண்ணும் வண்டைப் போல;* ***களி துறந்தன*** - *களித்தலைக் கை விட்டன. தளி - கூடம். வண்டுகள் தேன் உண்டால் களிக்கும். இங்கே வண்டுகள் களிதுறந்தன என்றதால்இராமன் காடு ஏகும் துயரத்தால் மலர்களில் தேன் இல்லையாயிற்று.* *201*

***1807. நிழல் பிரிந்தன குடை; நெடுங் கண் ஏழையர்***
***குழல் பிரிந்தன மலர்; குமரர் தாள் இணை***
***கழல் பிரிந்தன; சினக் காமன் வாளியும்***
***அழல் பிரிந்தன; துணை பிரிந்த, அன்றிலே.***

***குடை***- *குடைகள்;* ***நிழல் பிரிந்தன***- *நிழல் செய்தலைக் கைவிட்டன;* ***நெடுங்கண் ஏழையர் குழல்*** - *நீண்ட கண்ணை உடைய மகளிர் கூந்தல்கள்;* ***மலர்பிரிந்தன*** - *மலர் சூடுதலை விட்டன;* ***குமரர்தாள் இணை கழல் பிரிந்தன*** - *வீரர்களது அடிகள் கழல் அணிதலைக் கைவிட்டன;* ***சினக் காமன் வாளியும்*** - *கோபம் உடைய மன்மதனது மலர் அம்புகளும்;* ***அழல் பிரிந்தன*** - *காம வெப்பத்தை உண்டாக்குதலை ஒழித்தன;* ***அன்றில்*** - *(என்றும் பிரியாது ஒன்றியிருக்கும்) அன்றிற் பறவைகள்;* ***துணை பிரிந்த***- *தம் துணையைப் பிரிந்து தனித்திருப்பவாயின.*

*இராமனது பிரிவு உயிரினங்கள் இன்பத்தை இழக்கச்செய்தபடி. யாரும் குடைபிடித்துச் செல்வது இல்லை ஆதலின் குடை நிழல் பிரிந்தன என்றார்.யாரும் வேட்கை உற்றிலர் என்பதனை மன்மதன்வாளி வெப்பத்தை விட்டது என்பதால் உணர்த்தினார். 'ஏ' காரம் ஈற்றசை.* ***202***

***1808. தார் ஒலி நீத்தன, புரவி; தண்ணுமை***
***வார் ஒலி நீத்தன, மழையின் விம்முறும்;***
***தேர் ஒலி நீத்தன, தெருவும் - தெண் திரை***
***நீர் ஒலி நீத்தன நீத்தம் போலவே.***

***புரவி*** - *குதிரைகள்;* ***தார் ஒலி நீத்தன*** - *கழுத்திற் கட்டிய கிண்கிணிமாலையின் ஓசையைக் கையிட்டன;* ***தண்ணுமை*** - *மத்தளம்;* ***வார் ஒலி நீத்தன*** - *வாரை இழுத்துக் கட்டலால் விளையும் ஓசையைக் கைவிட்டன;* ***தெருவும்*** - *வீதிகளும்;* ***தெண்திரை நீர் ஒலி நீத்தன நீத்தம் போல*** - *தெளிந்த அலை நீர் ஒலியை விட்ட கடல் போல;* ***மழையின்*** - *மேகம் போல;* ***விம்முறும் தேர் ஒலி நீத்தன*** - *ஒலிக்கின்ற தேர்களின் ஒலியை இழந்தன.*

*குதிரை ஒட்டுவாரில்லை, மத்தளம் அடிப்பார் இலர், தெருவில் தேர்கள் ஓடவில்லைஎன்றார். அலை ஒழிந்த கடல் தேரோசை இழந்த தெருவுக்கு உவமை ஆயிற்று. 'ஏ'ஈற்றசை.* ***203***

***1809. முழவு எழும் ஒலி இல; முறையின் யாழ் நரம்பு***
***எழ எழும் ஒலி இல; இமைப்பு இல் கண்ணினர்***
***விழவு எழும் ஒலி இல; வேறும் ஒன்று இல,***
***அழ எழும் ஒலி அலது - அரச வீதியே.***

***அரச வீதி*** *- அரசர்களுக்குரிய வீதிகள்;* ***முழவு எழும் ஒலி இல*** *- தண்ணுமையிலிருந்து உண்டாகும் ஒலிகள் இல;* ***முறையின்*** *- இசை முறைப்படி;* ***யாழ் நரம்புஎழ*** *- யாழின் கண் நரம்பு எழுப்ப;* ***எழும் ஒலி இல*** *- எழுகின்ற ஒலிகள் இல;* ***இமைப்பு இல் கண்ணினர்*** *- இமையாக் கண்ணினராய தேவர்களது;* ***விழவு*** *- விழாவிற்காக;* ***எழும் ஒலி இல*** *- உண்டாகின்ற ஒலிகளும் இல;* ***அழ எழும் ஒலி அலது வேறும் ஒன்று இல*** *- அழுவதனால் உண்டாகின்ற கூக்குரல் ஓசை அல்லாமல் வேறு ஓர் ஒலிஇலவாயின.*

*முழவு - மத்தளம். தண்ணுமை குடமுழா என்பன ஒரு நிகரன. முறை என்பது பண்ணாகும்.தேவர்களுக்குச் செய்யும் திருவிழாக்களும் நின்று போயின. கேட்க வேண்டிய ஓசைகள்கேட்கவில்லை; கேட்கத் தகாத ஓசை மட்டுமே கேட்டது.*
***204***

***1810. தெள் ஒளிச் சிலம்புகள் சிலம்பு பொன் மனை***
***நள் ஒலித்தில; நளிர் கலையும் அன்னவே;***
***புள் ஒலித்தில, புனல்; பொழிலும் அன்னவே;***
***கள் ஒலித்தில, மலர்; களிறும் அன்னவே.****

***தென் ஒலிச் சிலம்புகள் சிலம்பு பொன்மனை*** *- தெளிந்த ஒலியையுடைய காற்சிலம்புகள் இடையறாது ஒலிக்கின்ற அழகிய வீடுகள் (இப்போது);* ***நள் ஒலித்தில*** *- நள்ளென்ற ஓசை உடையவாய் ஒலிக்கவில்லை;* ***நளிர்*** *- செறிந்த;* ***கலையும் அன்ன*** *- மேகலை அணிகளும் ஒலிக்கா ஆயின;* ***புனல்*** *- நீரில்;* ***புள் ஒலித்தில*** *- பறவைகள் ஒலிக்கவில்லை;* ***பொழிலும்*** *- சோலைகளும்;* ***அன்ன*** *- அதுபோலப் புள் ஒலிக்கா ஆயின;* ***மலர்*** *- பூக்களில்;* ***கள்*** *- வண்டுகள் ஒலித்தில;* ***களிறும்*** *- யானைகளும் (மதநீர் படாமையால்);* ***அன்ன*** *- அதுபோல வண்டுகள் ஒலிக்காவாயின.*

*சிலம்பு, மேகலை அணிவாரும் இயங்குவாரும் இல்லை. பறவைகள் அடங்கின. வண்டுகளும்ஒடுங்கின என்றார். 'ஏ' காரங்கள் அசை.* ***205***

***1811. செய்ம் மறந்தன புனல்; சிவந்த வாய்ச்சியர்***
***கைம் மறந்தன, பசுங் குழவி; காந்து எரி***
***நெய்ம் மறந்தன; நெறி அறிஞர் யாவரும்***
***மெய்ம் மறந்தனர்; ஒலி மறந்த, வேதமே.***

***புனல்*** *- நீரை;* ***செய்ம் மறந்தன*** *- வயல்களை மறந்து விட்டன;* ***பசுங்குழவி*** *- இளங் குழந்தைகளை;* ***சிவந்த வாய்ச்சியர் கை*** *- சிவந்த வாயுடையதாய் மகளிர் கைகள்;* ***மறந்தன்-*** *மறந்து போயின;* ***காந்து எரி*** *- விளங்கும்வேள்வித் தீ;* ***நெய்ம் மறந்தன*** *- நெய்யை மறந்து போயின;* ***நெறி அறிஞர் யாவரும்-*** *சாத்திரம் அறிந்த ஞானிகள் அனைவரும்;* ***மெய்-*** *தத்துவப் பொருளை;* ***மறந்தனர்-*** *மறந்து போயினர்;* ***வேதம்-,*** *ஒலி மறந்த- ஒலித்தலை மறந்து போயின.*

*வயலுக்கு நீர் பாய்ச்சுவார் இல்லை. குழந்தைகள் பால் உண்ணவில்லை. வேள்விகள் நடைபெறவில்லை. சாத்திர விசாரணை செய்வாரில்லை. வேதபாராயணங்கள் நடைபெறவில்லை என்பதாம். 'ஏ' காரம் ஈற்றசை. **206***

### *1812. ஆடினர் அழுதனர்; அமுத ஏழ் இசை*
### *பாடினர் அழுதனர்; பரிந்த கோதையர்,*
### *டினர் அழுதனர்; உயிரின் அன்பரைக்*
### *கூடினர் அழுதனர் - குழாம் குழாம்கொடே.*

***குழாம் குழாம் கொடு-** கூட்டம் கூட்டமாகத் திரண்டு; **ஆடினர்-** நடனம்ஆடிக் கொண்டிருந்தவர்கள்; **அழுதனர்-; அமுத ஏழ் இசை-** அமுதம் போன்ற இனியஏழு சுரங்களை; **பாடினர் அமுதனர்-** பாடிக்கொண்டிருந்தவர்கள் அழுதனர்; **பரிந்தகோதையர் ஊடினர்-** அறுத்து வீசிய மாலையராய் ஊடிக்கொண்டிருந்தவர்கள்; **அழுதனர்-; உயிரின் அன்பரைக் கூடினர்-** உயிர்போலச் சிறந்த காதலரைக் கூடிய மகளிர்; **அழுதனர்-.***

*வெவ்வேறு இன்பமான தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் அத்தொழிலைக் கைவிட்டு அழுதனர்என்பதாம். 'ஏ' ஈற்றசை. **207***

### *1813. நீட்டில, களிறு கை நீரின்; வாய் புதல்*
### *பூட்டில, புரவிகள்; புள்ளும், பார்ப்பினுக்கு*
### *ட்டில இரை; புனிற்று ஈன்ற கன்றையும்*
### *ட்டில, கறவை; நைந்து உருகிச் சோர்ந்தவே.*

***களிறு-** யானைகள்; **நீரின்-** நீரில்; **கை நீட்டில-** துதிக்கையை நீட்டவில்லை; **புரவிகள்-** குதிரைகள்; **வாய்-** வாயில்; **புதல்-** புல்; **பூட்டில-** பூட்டப்பெறவில்லை; **புள்ளும்-** பறவைகளும்; **பார்ப்பினுக்கு-** தம் குஞ்சுகளுக்கு; **இரை ஊட்டில-** இரை உண்பிக்கவில்லை; **கறவை-** பசுக்கள்; **புனிற்று-** ஈன்றணிமையான; **ஈன்ற கன்றையும்-** தாம்பெற்ற கன்றையும்; **ஊட்டில-** பால் ஊட்ட விடவில்லை; **நைந்து உருகிச் சோர்ந்த-** தேய்ந்து இரங்கிச் சோர்ந்தன.*

*யானைகள் நீர்உண்ணவில்லை என்பதை துதிக்கையைப் புனலின் நீட்டில என்றார். புதல்-புல். புல், கொள் நிறைந்த பையினைக் குதிரை வாயில் மாட்டித் தின்னச் செய்வது வழக்கம்.ஆதலின், 'புதல் பூட்டில' என்றார். 'ஏ' காரம் ஈற்றசை.*
***208***

### *1814. மாந்தர்தம் மொய்ம்பினின், மகளிர் கொங்கை ஆம்*
### *ஏந்து இளநீர்களும் வறுமை எய்தின,*
### *சாந்தம்; அம் மகிழ்நர்தம் முடியின், தையலார்*
### *கூந்தலும் வறுமையை மலரின் கூலமே.**

***மாந்தர்தம் மொய்ம்பினின் -** ஆடவர்களது வலிய தோளில்; **சாந்தம் -**பூசப்பெற்ற சந்தனத்தை; **மகளிர் கொங்கை ஆம் ஏந்து இளநீர்களும் -** பெண்களது தனங்களாகிய உயர்ந்துள்ள இளநீர்களும்; **வறுமை எய்தின -** இல்லாமை அடைந்தன; **அம்***

***மகிழ்நர்தம் முடியின்-*** *அவ் ஆடவர்களது முடியில் உள்ள;* ***மலரின்கூலம் -*** *பூக்களின் திரட்சியை;* ***தையலார் கூந்தலும் -*** *மகளிரது கூந்தலும்;* ***வறுமைய -*** *இல்லாமை அடைந்தன.*

*ஆடவர் தோளில் பூசப்பெற்ற சந்தனம் மகளிர் கொங்கையைச் சென்றடையும். இங்கே ஆடவர்சந்தனம் பூசாமையாலும் மகளிரைத் தழுவாமையாலும் மகளிர் கொங்கை சந்தனம் பெறாது வறுமை எய்தினவாம். ஆடவர்தம் தலைமுடியில் உள்ள மலர், கூட்டத்தால் மகளிர் கூந்தலைச் சென்றடையும். இங்கே ஆடவர் மலர் சூடாமையாலும், மகளிரைக் கூடாமையாலும் மகளிர் கூந்தல்மலர் வறுமை அடைந்தனவாம். 'ஏ' ஈற்றசை.* ***209***

கலித்துறை

***1815. ஓடை நல் அணி முனிந்தன.***
***உயர் களிறு; உச்சிக்***
***சூடை நல் அணி முனிந்தன,***
***தொடர் மனை; கொடியின்***
***ஆடை நல் அணி முனிந்தன,***
***அம் பொன் செய் இஞ்சி;***
***பேடை நல் அணி முனிந்தன.***
***மென் நடைப் புறவம்.***

***உயர்களிறு -*** *பெரிய யானைகள்;* ***ஓடை நல் அணி முனிந்தன -*** *முகபடாம்ஆகிய நல் அணியை வெறுத்தன;* ***தொடர்மனை -*** *வரிசையான மாளிகைகள்;* ***உச்சிச் சூடைநல்லணி முனிந்தன -*** *தம் சிகரத்தில் அணிதற்குரிய சூடா என்னும் நல்லணிகளை அணியாமல்வெறுத்தன;* ***அம்பொன் செய் இஞ்சி -*** *அழகிய பொன்னாற் செய்த மதில்கள்;* ***கொடியின் ஆடை நல் அணி முனிந்தன -*** *கொடிச் சீலை ஆகிய நல்ல அழகினை வெறுத்தன;* ***மென் நடைப் புறவம் -*** *மென்மையான நடையினையுடைய புறாக்கள்;* ***பேடை நல்லணி முனிந்தன-*** *பேடையொடு கூடிய நல்ல அணியை வெறுத்தன.'முனிந்தன' என்பது இங்கே புனையாமையைக் குறித்ததாம். யானைகள் முகபடாம் அணிந்துஅலங்கரிக்கப் பெறவில்லை. மாளிகையின் கோபுர உச்சிகள் அழகு செய்யப் பெறவில்லை.மதில்களில் கொடிச் சிலை இல்லை. புறாவும் பெடையும் கூடி அணையும் அழகு இல்லை என்பதாம்.* *210*

***1816. 'திக்கு நோக்கிய தீவினைப்***
***பயன்' எனச் சிந்தை***
***நெக்கு நோக்குவோர், 'நல்வினைப்***
***பயன்' என நேர்வோர்,***
***பக்கம் நோக்கல் என்?***
***பருவரல் இன்பம் என்று இரண்டும்***
***ஒக்க நோக்கிய யோகரும்,***
***அருந் துயர் உழந்தார்.***

***பருவரல் இன்பம் என்று இரண்டும் -*** *துன்பம், இன்பம் என்ற இரண்டையும்;* ***ஒக்க நோக்கிய யோகரும் -*** *சமமாகப் பார்க்கின்ற ஞான யோகிகளும்;* ***அருந்துயர்உழந்தார் -*** *அரிய துன்பத்தில் வருந்தினார் (என்றால்);* ***'திக்கு நோக்கிய தீவினைப்பயன்' எனச் சிந்தை நெக்கு நோக்குவோர் -*** *தம் இடத்தை நோக்கி வந்த தீவினையின்பயன் இது என்று மனம் உடைந்து துன்புற்றுப் பார்ப்பவர்;* ***'நல்வினைப் பயன்' என நேர்வோர் -*** *இது நல்வினையால் விளைந்த பயனாகும் என்று உடன்பட்டு மகிழ்வோராகிய;* ***பக்கம் நோக்கல் என் உலக மக்களிடத்து -*** *ஆராய்ந்து கூற என்ன உள்ளது?*

*தீவினையில் துவண்டு நல்வினையில் மகிழும் உலகினர் பற்றிச் சொல்ல என்ன உள்ளது? என்றார். ஏனெனின் சமநிலை உடைய ஞானிகளே துயர் வடித்தனர் ஆகலின். 1762, 1763 ஆம்பாடல்களில் வசிட்டன் உணர்வு குறித்தமை இங்கு ஒப்பிட்டுணரத் தக்கது.* ***211***

***1817. ஓவு இல் நல் உயிர் உயிர்ப்பினோடு***
***உடல் பதைத்து உலைய,***
***மேவு தொல் அழகு எழில் கெட,***
***விம்மல் நோய் விம்ம,***
***தாவு இல் ஐம்பொறி மறுகுற,***
***தயரதன் என்ன***
***ஆவி நீக்கின்றது ஒத்தது - அவ்***
***அயோத்தி மா நகரம்.***

***அவ் அயோத்தி மா நகரம் -;*** ***ஓவு இல் நல் உயிர் -*** *ஒழிதல் இல்லாத நல்ல உயிர்;* ***உயிர்ப்பினோடு -*** *பெரு மூச்சோடு;* ***உடல் பதைத்து -*** *உடலில் துடித்து;* ***உலைய -*** *அங்கும் இங்குமாய் வருந்த;* ***மேவு -*** *பொருந்திய;* ***தொல் எழில்அழகு கெட -*** *பழைய வளரும் அழகு கெட;* ***விம்மல் நோய் விம்ம -*** *அழுகைநோய் மிக;* ***தாவு இல் ஐம்பொறி மறுகுற -*** *கெடுதல் இல்லாத ஐம்பொறிகள் சுழன்று கலங்க;* ***தயரதன் என்ன -*** *தயரதனைப் போல;* ***ஆவி நீக்கின்றது ஒத்தது -*** *உயிர் விடுவதைத்போல் உள்ளது. மன்னன் எவ்வழி அவ்வழி மன்னுயிர் ஆதலின், அயோத்தி நகரின் ஆவி நீக்குவார் போல்ஆயினர் என்பதை நகரின்மேல் ஏற்றிக் கூறினார். உயிர் உலைகிறது. துன்பம் மிகுகிறது. அழகுகெடுகிறது, ஐம்பொறி கலங்குகிறது இத் தனையும் உயிர் போவதற்கு முன் நிகழ்வனவாம்.* ***212***

இராமன் சீதை இருக்குமிடம் சேறலும் அவள் திடுக்குறலும்

***1818. உயங்கி அந் நகர்***
***உலைவுற, ஒருங்கு, உழைச்சுற்றம்***
***மயங்கி ஏங்கினர்; வயின்வயின்***
***வரம்பு இலர் தொடர,***
***இயங்கு பல் உயிர்க்கு ஓர்***
***உயிர் என நின்ற இராமன்***
***தயங்கு பூண் முலைச் சானகி***
***இருந்துழிச் சார்ந்தான்.***

***அந்நகர் -*** *அந்த அயோத்தி நகரம்;* ***உயங்கி -*** *வாடி;* ***உலைவுற-*** *வருந்த;* ***ஒருங்கு -*** *ஒருசேர;* ***உழைச் சுற்றம் -*** *ஏவல் செய்வோர்;* ***மயங்கிஏங்கினர் -*** *அறிவு கலங்கி அழுது;* ***வயின் வயின்-*** *அங்கங்கே;* ***வரம்பிலர்தொடர -*** *அநேகர் பின்பற்றி வர;* ***இயங்கு பல் உயிர்க்கு ஓர் உயிர் என நின்றஇராமன் -*** *சஞ்சரிக்கின்ற பல உயிர்களையும் உடலாகக் கொண்டு அவற்றுக்கு ஒப்பற்ற உயிராக இருக்கின்ற இராமன்;* ***தயங்கு -*** *விளங்குகின்ற;* ***பூண் முலைச் சானகி -*** *அணிகலன் அணிந்த தனங்களை உடைய சீதை;* ***இருந்துழிச் சார்ந்தான் -*** *இருந்த அரண்மனையை அடைந்தான்.*

*உழைச் சுற்றம் அருகிருந்து வேலை செய்வோர். 'உயிர்க்கு உயில் என நின்ற இராமன்'என்பதனைத் திருமாலாகிய பரம்பொருள் தத்துவத்தில் உயிர்க்குயிராய் உள்நின்று உணர்த்தும்தன்மையை நோக்கித் கூறியதாகவும் கொள்ளலாம்.*
*213*

***1819. அழுது, தாயரோடு அருந் தவர்,***
***அந்தணர், அரசர்,***
***புழுதி ஆடிய மெய்யினர்,***
***புடை வந்து பொரும,***
***பழுது சீரையின்***
***உடையினன் வரும்படி பாரா,***
***எழுது பாவை அன்னாள்,***
***மனத் துணுகமொடு எழுந்தாள்.***

***அந்தணர் -*** *வேதியர்;* ***அருந்தவர் -*** *அரிய முனிவர்;* ***அரசர் -;*** *(ஆகிய அனைவரும்)* ***அழுது -;*** ***புழுதி ஆடிய மெய்யினர் -*** *புழுதி படிந்த உடம்பு உடையவராய்;* ***புடை வந்து பொரும -*** *பக்கத்தில் வந்து விம்மியழ;* ***பழுது சீரையின் உடையினன் -*** *அழகற்ற மரவுரி உடை உடையவனாய்;* ***வரும்படி -*** *(இராமன்) வரும்தன்மையை;* ***பாரா -*** *பார்த்து;* ***எழுது பாவை அன்னாள் -*** *சித்திரத்தில் எழுதப் பெற்ற பாவையை ஒத்த சீதை;* ***துணுக்கமொடு -*** *மனத்தில்வெருவுதலுடனே;* ***எழுந்தாள் -.***

*இதுகாறும் காணாததும் எதிர்பாராததுமான காட்சியைக் கண்டாள் ஆதலின, சீதைக்குத்திடுக்கீடு நிகழ்ந்தது.* *214*

*சீதை இராமனை வினாவுதல்*

***1820. எழுந்த நங்கையை, மாமியர்***
***தழுவினர்; ஏங்கிப்***
***பொழிந்த உண் கண் நீர்ப்***
***புதுப் புனல் ஆட்டினர்; புலம்ப,***
***அழிந்த சிந்தையள் அன்னம்,***
***'ஈது இன்னது' என்று அறியாள்;***
***வழிந்த நீர் நெடுங் கண்ணினள்,***
***வள்ளலை நோக்கி,***

***எழுந்த நங்கையை -*** *(கணவனை நோக்கி) எழுந்த சீதையை;* ***மாமியர் -; தழுவினர் -*** *தழுவிக்கொண்டு;* ***ஏங்கி -*** *அவலித்து;* ***பொழிந்த உண்கண் நீர்ப்புதுப்புனல் ஆட்டி -*** *சிந்திய மையுண்ட கண்களிலிருந்து வரும் நீராகிய புதிய நீரில்நீராட்டி;* ***புலம்ப -*** *வருந்த;* ***அழிந்த சிந்தையள் அன்னம் -*** *அதனால்கெட்டழிந்த மனம் உடையளாய சீதை;* ***ஈது இன்னது என்று அறியாள் -*** *இதற்குக்காரணம் இன்னது என்று அறியாதவளாய்;* ***வழிந்த நீர் நெடுங் கண்ணினள் -*** *வழிகின்ற நீரினை உடைய நீண்ட கண்களோடு;* ***வள்ளலை நோக்கி -*** *இராமனைப் பார்த்து,*

*இதுகாறும் அழுகையை அறியாதவர் அழுத கண்ணீராதலின 'புதுப்புனல்' என்றார். இது குளகச்செய்யுள்.* ***215***

*கலிவிருத்தம்*

***1821. 'பொன்னை உற்ற***
***பொலங் கழலோய்! புகழ் -***
***மன்னை உற்றது உண்டோ,***
***மற்று இவ் வன் துயர்***
***என்னை உற்றது? இயம்பு'***
***என்று இயம்பினாள் -***
***மின்னை உற்ற***
***நடுக்கத்து மேனியாள்.***

***மின்னை உற்ற நடுக்கத்து மேனியாள் -*** *மின்னலை ஒத்த நடுங்குகின்ற உடம்பினைஉடையளாகிய சீதை;* ***'பொன்னை உற்ற பொலங்கழலோய்! -*** *பொன்னால் செய்த பொலிவானவீரக்கழலை அணிந்தவனே;* ***புகழ் மன்னை -*** *கீர்த்தி உடைய சக்கரவர்த்தியை;* ***உற்றது உண்டோ? -*** *நேரிட்ட துன்பம் ஏதேனும் உளதோ;* ***மற்று -*** *அப்படிஇல்லையாயின்;* ***இவ் வன்துயர் உற்றது என்னை -*** *இக் கொடிய துன்பம் வந்தது எதனால்;* ***இயம்பு -*** *சொல்லுக;'* ***என்று இயம்பினாள் -*** *என்று கேட்டாள்.*

*மாமியார் அழுதபடியால் சக்கரவர்த்திக்கு ஏதேனும் தீங்கண்டோ என்று வினாவினாள். மற்று, வினைமாற்று.* ***216***

*இராமன் பதில்*

***1822. 'பொரு இல் எம்பி புவி புரப்பான்; புகழ்***
***இருவர் ஆணையும் ஏந்தினென்; இன்று போய்,***
***கருவி மா மழைக் கல் - கடம் கண்டு, நான்***
***வருவென் ஈண்டு; வருந்தலை நீ என்றான்.***

***'பொரு இல் எம்பி புவி புரப்பான் -*** *ஒப்பற்ற என் தம்பியாகிய பரதன் பூமியைக்காப்பாற்றி அரசாள்வான்;* ***புகழ் -*** *புகழ்தற்குரிய;* ***இருவர் ஆணையும் ஏந்தினென் -*** *தந்தை, தாய் இருவரது கட்டளையையும் தலைமேல் தாங்கினேன்;* ***நான் இன்று போய் -*** *நான் - இன்றே புறப்பட்டுச் சென்று;* ***கருவி மாமழைக் கல்தடம் கண்டு -***

*தொகுதியான சிறந்த மேகம் நிரம்பிய மலை வழிகளை உடைய காட்டைப் பார்த்து;* ***ஈண்டு வருவென் -*** *இங்கே வருவென்;* ***நீ வருந்தலை' -*** *நீ வருத்தமுறாதே;* ***என்றான்-.***

*'கருவி' - இடி, மின்னல் முதலியவற்றை உடைய தொகுதி என்று பொருள். 'கருவி தொகுதி'(தொல். சொல்.354) "கருவி வானம்" (அகநா.4:6) என்பது காண்க. சீதைக்கு வருத்தம்மிகாது இருக்க 'இன்று போய்க் கண்டு வருவென்' என்றான்.*
***217***

*சீதையின் துயர்*

***1823. நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும்,***
***மேய மண் இழந்தான் என்றும், விம்மலள்;***
***'நீ வருந்தலை; நீங்கவென் யான்' என்ற***
***தீய வெஞ் சொல் செவி சுடத் தேம்புவாள்.***

*(அது கேட்ட சீதை)* ***நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும்-*** *தன் கணவன் இராமன்காடு செல்லப்போகிறான் என்றும்;* ***மேய மண் இழந்தான் என்றும் -*** *தனக்குரிமையாகப்பொருந்திய இராச்சியத்தை இழந்துவிட்டான் என்றும் (கருதி);* ***விம்மலள் -*** *வருந்தினாள் அல்லள்;* ***'யான் நீங்குவென், நீ வருந்தலை' என்ற தீய வெஞ்சொல் -*** *யான் காடு செல்வேன் நீ வருத்தமுறாதே என்று சொல்லிய மிகக் கொடிய சொல்;* ***செவி சுடத்தேம்புவாள் -*** *தன் காதுகளைச் சுட்டெரிக்க அதனால் வாடுவாள் ஆனாள்.*

*அவன் இழப்புக்கு வருந்தாமல், அவனைத் தான் பிரியும் பிரிவுக்கும், அதனால் வருந்தாதேஎன்று சொல்லிய சொல்லுக்குமே வருந்தினாள் என்பதாம். எந்நிலையிலும் அவனைப் பிரியாமையேஅவள் கருத்தாம். தன்னைப் பிரிவதில் அவன் கவலை உறவில்லையே என்பதும் அவள் ஏக்கமாகும்.* ***218***

***1824. 'துறந்து போம்' எனச் சொற்ற சொல் தேறுமோ -***
***உறைந்த பாற்கடற் சேக்கை உடன் ஓரீஇ,***
***அறம் திறம்பும் என்று ஐயன் அயோத்தியில்***
***பிறந்த பின்பும், பிரியலள் ஆயினாள்?***

*(நாமும் உடன் அவதரிக்காவிட்டால்)* ***'அறம் திறம்பும்' என்று -*** *தருமம் நிலைகெடுமே என்று கருதி;* ***உறைந்த பாற்கடல் சேக்கை தாம்-*** *வசித்த பாற்கடலில் உள்ளஆதிசேடனாகிய படுக்கையை;* ***உடன் ஓரீஇ -*** *ஒன்றாக விட்டு நீங்கி;* ***ஐயன்-*** *திருமால்;* ***அயோத்தியில் பிறந்தபின்பும் -*** *அயோத்தியில் அவதரித்த பிறகும்;* ***பிரியலள் ஆயினாள் -*** *அவனைப் பிரியாது உடன் உறைய வந்தவள் ஆகிய சீதை;* ***துறந்துபோம் எனச் சொற்ற சொல் -*** *தன்னைப் பிரிந்து விட்டுப் போவேன்' எனப் பொருள்படுமாறுஅவன் சொன்ன சொல் கேட்டு;* ***தேறுமோ? -*** *ஆற்றவளோ?*

*ஐயன் மட்டும் அவதாரம் செய்தால் 'அறம் திறம்பும்' என்று கருதி, அதற்காகவே தானும்உடன் அவதரித்தவள், இப்போது பிரிவதைத் தாங்க இசைவளோ?*
***219***

***1825. அன்ன தன்மையள், 'ஐயனும், அன்னையும்,***
***சொன்ன செய்யத் துணிந்தது தூயதே;***
***என்னை, என்னை, "இருத்தி" என்றான்?' எனா,***
***உன்ன, உன்ன, உயிர் உமிழா நின்றாள்.***

***அன்ன தன்மையள் -*** *அத்தகைய இயல்பினை உடைய சிதை;* ***'ஐயனும் அன்னையும்சொன்ன-*** *தந்தையும் தாயும் இட்ட கட்டளைகளை;* ***செய்யத் துணிந்தது தூயதே -*** *நடந்த முடிவு செய்தது தூய்மை உடையதே (ஆயினும்);* ***என்னை-; என்னை இருத்தி என்றான்?'-*** *எதனால் அரண்மனையிலேயே இரு என்று சொன்னான்;* ***எனா -*** *என்று;* ***உன்னி உன்னி -*** *நினைத்து நினைத்து;* ***உயிர் உமிழா நின்றாள் -*** *உயிர் துடிப்ப இருந்தாள்.*

*குரவர் சொல் கேட்டல் அறமே ஆயினும் கொண்ட மனைவியைப் பிரிதல் எதனால் என்றுஅறியாது வருந்துவன் ஆயினாள். பாற்கடலிலிருந்து பிரியாமல் அயோத்தி வரை உடன்வந்தவள், அயோத்தியிலிருந்து அருகில் உள்ள வனம் போகாமல் தடுக்கப்பெறுவது கண்டுவருந்தினாளாம்.* ***220***

*இராமன் 'இருத்தி' என்றதன் காரணம் கூறல்*

***1826. 'வல் அரக்கரின் மால் வரை போய் விழுந்து,***
***அல் அரக்கின் உருக்கு அழல் காட்டு அதர்க்***
***கல் அரக்கும் கடுமைய அல்லல - நின்***
***சில் அரக்குண்ட சேவடிப் போது' என்றான்.***

*(இராமன்)* ***'நின் -*** *(சீதையே!) உனது;* ***சில் அரக்கு உண்ட -*** *குளிர்ந்தசெம்பஞ்சுக் குழம்பு ஊட்டப்பெற்ற;* ***சேவடிப் போது -*** *சிவந்த அடிமலர்கள்;* ***வல்அரக்கரின் -*** *கொடிய அரக்கர் போலத் (தோன்றும்);* ***மால் வரை -*** *பெரியமலையில்;* ***போய் விழுந்து -*** *சென்று பரவி;* ***அல் -*** *இரவிலும்;* ***அரக்கின் உருக்கு அழல் காட்டு அதர் -*** *அரக்கினை உருக்கினாற்போல வெப்பத்தைச்செய்கின்ற காட்டு வழியில் உள்ள;* ***கல் -*** *கற்கள்;* ***அரக்கும் -*** *உராய்கின்ற;* ***கடுமைய அல்ல' -*** *கடுமையுடையன அல்ல;'* ***என்றான் -.***

*மலைவழி, காட்டுவழி, இரவிலும் வெப்பம் செய்யும் வழி, கூரிய கற்கள் உற்ற வழி எனவேவெப்பமான - கூர்ங்கற்கள் உராய்வதனால் ஏற்படும் வலியைத் தாங்கும் கடுமையுடைய பாதம் அல்ல உன் பாதம்; குளிர்ந்த செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய மெல்லிய மலரனைய பாதம். அதனால்தான். 'இருத்தி' என்றேனே அன்றி உன்னைப் பிரிதல் வல்லமையால் சொன்னேன் என்று கருதாதேஎன்பது போல இராமன் கூறினான்.* ***221***

*சீதை தன் மன ஆற்றலை உரைத்தல்*

***1827. 'பரிவு இகந்த மனத்து ஒரு பற்று இலாது***
***ஒருவுகின்றனை; ஊழி அருக்கனும்***
***எரியும் என்பது யாண்டையது? ஈண்டு, நின்***
***பிரிவினும் சுடுமோ, பெருங் காடு?' என்றாள்.***

***'பரிவு இகந்த மனத்து ஒரு பற்று இலாது -*** *இரக்கம் அற்ற மனத்தில் ஒரு சிறிதும்விருப்பம் இல்லாமல்;* ***ஒருவுகின்றனை -*** *என்னை விட்டு விலகிச் செல்கின்றாய்;* ***ஊழி அருக்கனும் -*** *பிரளய காலத்துச் சூரியனும்;* ***எரியும் என்பது -*** *கடுவானென்பது;* ***யாண்டையது? -*** *எவ்விடத்துள்ளது?* ***ஈண்டு -*** *இவ்விடத்து (என்திறத்தில்);* ***நின் பிரிவினும் -*** *உன் பிரிவு சுடுவதைக் காட்டிலும்;* ***பெருங்காடு -*** *உன்னுடன் நான் வரும் அப்பெரிய காடு;* ***சுடுமோ?' -*** *என்னைச் சுடுமோ;'* ***என்றாள் -.***

*உன்னால் வரும் பிரிவுத் துயராகிய வெப்பத்துக்கு ஊழிக்காலத்துச் சூரிய வெப்பமும்நிகராகாது; எனவே, 'பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்றாள். 'பெருங்காடு இன்னாஎன்றீராயின். இனியவோ பெரும தமியேற்கு மனையே' (குறுந். 124) என்பதும் காண்க.* ***222***

## *1828. அண்ணல், அன்ன சொல் கேட்டனன்; அன்றியும், உள் நிவந்த கருத்தும் உணர்ந்தனன்; கண்ணின் நீர்க் கடல் கைவிட நேர்கிலன், எண்ணுகின்றனன், என் செயற்பாற்று?' எனா,*

***அண்ணல் -*** *இராமன்;* ***அன்ன சொல் கேட்டனன் -*** *அவள் சொன்ன அத்தகையவார்த்தையைக் கேட்டான்;* ***அன்றியும் -*** *அதன் மேலும் ;* ***உள் நிவந்த கருத்தும் உணர்ந்தனன் -*** *அவள் மனத்தில் தலை எடுத்த நினைவையும் உணர்ந்துகொண்டான்;* ***கண்ணின்நீர்க்கடல்-*** *உடன்படாதவனாய்;* ***'என்செயற்பாற்று' எனா -*** *செய்தற்குத்தகுதியானது யாது என்று;* ***எண்ணுகின்றனன் -*** *சிந்திப்பானானான்.*

*'அயோத்தியில் உள்ள கண்ணீர்க் கடலின் இடையே அவளைக் கைவிட உடன்படாது' என்றும்பொருள் கூறலாம். சொல்லும் சிந்தனையும் ஒன்றாக இருப்பது உணர்ந்து சிந்திப்பான் ஆயினன்இராமன்.* ***223***

*சீதை மரவுரி அணிந்து இராமன்பால் வந்து நிற்றல்*

## *1829. அனைய வேலை, அக மனை எய்தினள்; புனையும் சீரம் துணிந்து புனைந்தனள்; நினைவின், வள்ளல் பின் வந்து, அயல் நின்றனள்- பனையின் நீள் கரம் பற்றிய கையினாள்.*

***அனைய வேலை -*** *அப்பொழுது;* ***அகமனை எய்தினள் -*** *மாளிகைக்குள்ளேசென்றாள்;* ***புனையும் சீரம் -*** *உடுத்தற்குரிய மரவுரியை;* ***துணிந்து -*** *(செய்யத்தக்கது இதுதான் என எண்ணி) உறுதிசெய்துகொண்டு;* ***புனைந்தனள் -*** *உடுத்திக் கொண்டு;* ***நினைவின் -*** *உடன் போம் கருத்தோடு;* ***வள்ளல் பின் வந்து -*** *இராமனுக்குப்பின்புறமாக வந்து;* ***அயல் -*** *அருகிலே;* ***பனையின் நீள்கரம் பற்றிய கையினாள் -*** *பனைபோன்று நீண்ட இராமனது கையைப் பற்றிக் கொண்ட செயலினளாய்;* ***நின்றனள்-*** *'நினைவின்' என்பதற்கு நினையும் மாத்திரத்து எனக் கூறி, இராமன் சிந்திக்குமளவிலேயேஅவ்வளவு விரைவாக மரவுரி உடுத்தி அயல் வந்து நின்றாள் எனலும் ஆம். கையினள் - செயலினள்(கை - செய்கை) எண்ணல், துணிதல், செய்தல் மூன்றும் பிராட்டியிடத்து விரைந்து நிகழ்ந்தன.*
***224***

*சீதையைக் கண்டோர் வருத்தம்*

***1830. ஏழைதன் செயல் கண்டவர் யாவரும்***
***வீழும் மண்ணிடை வீழ்ந்தனர்; வீந்திலர்;***
***வாழும் நாள் உள என்றபின் மாள்வரோ? -***
***ஊழி பேரினும் உய்குநர் உய்வரே!***

***ஏழை தன் செயல்*** - *சீதையின் மரவுரி உடுத்த செயலைக்;* ***கண்டவர் யாவரும்*** - *பார்த்த எல்லோரும்;* ***வீழும் மண்ணிடை வீழ்ந்தனர்*** - இறத்தற்கு இடமான *நிலத்தில்விழுந்தார்கள்;* ***வீந்திலர்*** - இறக்கவில்லை; ***வாழும் நாள் உள என்றபின்*** - *ஆயுள் நாள் இன்னும் இருக்குமானால் அவர்கள்;* ***மாள்வரோ?*** - இறப்பார்களோ; ***ஊழி பேர்கினும்*** - *பிரளயமே நேரிட்டாலும்;* ***உய்குநர் உய்வர்*** - *பிழைக்கும் விதி உள்ளவர் பிழைப்பர்.*

*மிக்க சோகமும் உயிர்த்துடிப்பும் நிகழ்ந்தது கண்டவர் வீழ்ந்து இறக்காமைக்குக்காரணம் அவர்களுக்கு ஆயுள் உள்ளமையே அன்றி வேறன்று என்றார். வேற்றுப்பொருள் வைப்பணி. 'ஏ'காரம் ஈற்றசை. 225*

***1831. தாயர், தவ்வையர், தன் துணைச் சேடியர்,***
***ஆயம் மன்னிய அன்பினர் என்று இவர்***
***தீயில் மூழ்கினர் ஒத்தனர்; செங்கணான்***
***தூய தையலை நோக்கினன், சொல்லுவான்;***

***தாயர் -; தவ்வையர்*** - *தமக்கைமார்கள்;* ***தன்துணைச் சேடியர்*** - *சீதைக்குத் துணையாகிய தோழிப் பெண்கள்;* ***ஆயம் மன்னிய அன்பினர்*** - *தோழியர்கூட்டமாக உள்ள அன்பினை உடையவர்கள்;* ***என்று இவர் -; தீயில் மூழ்கினர் ஒத்தனர்*** - *நெருப்பில் விழுந்து முழுகியவர்களைப் போன்று ஆனார்கள்;* ***செங்கணான்*** - *சிவந்தகண்களை உடைய இராமன்;* ***தூய தையலை நோக்கினன் சொல்லுவான்*** - *கற்பிற் சிறந்தசீதையைப் பார்த்துச் சொல்லுகின்றான்;*

*ஆடவர்க்குச் செங்கண் கூறல் வழக்கு. நோக்கினன்-முற்றெச்சம். 226*

*இராமன் சீதை உரையாடல்*

***1832. 'முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும்,***
***வெல்லும் வெண் நகையாய்! விளைவு உன்னுவாய் -***
***அல்லை; போத அமைந்தனை ஆதலின்,***
***எல்லை அற்ற இடர் தருவாய்' என்றான்.***

***'முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும்*** - *முல்லை அரும்பும், கடலில் விளைந்தமுத்தும் போட்டியிட்டாலும்;* ***வெல்லும் வெண்நகையாய்!*** - *அவற்றை வெல்லுகின்ற வெள்ளியபற்களை உடையவளே;* ***விளைவு உன்னுவாய் அல்லை*** - *(உடன் வருதலால்) உண்டாகக் கூடியதீமையைக் கருதுகின்றாயில்லை;* ***போத***

***அமைந்தனை* - உடன் வருதற்குச் சித்தமாய்விட்டாய்; *ஆதலின் -; எல்லை அற்ற* - அளவற்ற; *இடர் தருவாய்'* - துன்பங்களை உண்டாக்குவாய்;' *என்றான் -.***

*எதிரது நோக்கிக் கூறியது. உன் கால்கள் மென்மையானவை என்று கூறிமுன் மறுத்தவன்இப்போது 'நீ காட்டிற்கு வருதலால் கணக்கற்ற தீங்கு விளையும்' என்று கூறி மறுக்கலானான். பெண்டிர் உடன்வரின் அவர்களைக் காத்தல் முதலிய முயற்சிகளில் பல தீமைகளைச் சந்திக்க நேரும் என்பது இராமன் கணிப்பு.*
*227*

***1833. கொற்றவன் அது கூறலும், கோகிலம்***
***செற்றது அன்ன குதலையள் சீறுவாள்,***
***'உற்ற நின்ற துயரம் இது ஒன்றுமே'***
***என்- துறந்தபின், இன்பம் கொலாம்?' என்றாள்.***

***கொற்றவன்* - அரசனாகிய இராமன்; *அது கூறலும்* - அச்சொல் சொல்லுதலும்; *கோகிலம் செற்றது அன்ன குதலையள்* - குயில் கோபம் கொண்டது போன்றகுதலைப் பேச்சினை உடைய சீதை; *சீறுவாள்* - கோபித்து; *'உற்ற நின்ற துயரம் இது ஒன்றுமே?* - உம்மை அடைந்து நின்ற துன்பம் நான் உடன் வருவதாகிய இது ஒன்றுதானோ; *என் துறந்த பின் இன்பம் கொல்'* - என்னை இங்கேயே விட்டு விட்டுப் போனபிறகு காட்டில் உங்களுக்கு இன்பமே உண்டாகும் போலும்;' *என்றாள் -.***

*குதலை - பொருள் தெரிந்து சொல் தெரியாதது. 'ஆம்' உரையசை. 'கொல்' ஐயம்.*
*228*

*இராமன் புறப்பாடு*

***1834. பிறிது ஓர் மாற்றம் பெருந்தகை பேசலன்;***
***மறுகி வீழ்ந்து அழ மைந்தரும் மாதரும்***
***செறுவின் வீழ்ந்த நெடுந் தெருச் சென்றனன் -***
***நெறி பெறாமை அரிதினின் நீங்குவான். [1]***

***பெருந்தகை* - இராமன்; *பிறிது ஓர் மாற்றம் பேசலன்* - வேறு ஒருவார்த்தையும் பேசாதவனாய்; *மைந்தரும் மாதரும் மறுகி வீழ்ந்து அழ* - ஆடவரும் மகளிரும் மனங்கலங்கி விழுந்து அழுதலால்; (அவர் கண்ணீரால் சேறாகி) *செறுவின் வீழ்ந்த-* வயல் போலக் கிடக்கின்ற; *நெடுந் தெரு* - பெரிய தெருவின்கண்; *நெறிபெறாமை* - வழி கிடைக்கப் பெறாமையால்; *அரிதினின்* - சிரமப்பட்டு; *நீங்குவான் சென்றனன்* - நீங்கிச் சென்றான்.***

*அழுதலால் கண்ணீர் வெள்ளம் வீழ்ந்து தெரு சேறு ஆகியது. அதனால், வயல்போல உள்ளது. இனி 'செரு' என எதுகை நோக்கி இடையினம் வல்லினம் ஆனதாகக் கொண்டு' போர்க்களம் போலமைந்தரும் மகளிரும் தாறுமாறாக வீழ்ந்து கிடக்கின்ற தெருவில் சிரமப்பட்டுக் கடந்து சென்றான் - என உரைத்தலும் ஒன்று. செறு - நெருக்கம் என்று பொருள் கூறி நெருக்கமாகவீழ்ந்த என்றும் ஆம். கூட்ட மிகுதியால் தெருவில் நடத்தல் அரிதாயிற்று.* *229*

மூவரும் போதல்

***1835.* சீரை சுற்றித் திருமகள் பின் செல,**
**மூரி விற் கை இளையவன் முன் செல,**
**காரை ஒத்தவன் போம்படி கண்ட, அவ்**
**ஊரை உற்றது உணர்த்தவும் ஒண்ணுமோ?**

**திருமகள் -** சீதை; **சீரை சுற்றி -** மரவுரி அணிந்து; **பின்செல -** பின்னால் வர; **மூரி விற்கை -** வலிய வில் ஏந்திய கையை உடைய; **இளையவன் -** இலக்குவன் முன்னே செல்ல; **காரை ஒத்தவன் -** கார் மேக வண்ணனாய இராமன்; **போம்படி -** போகும் தன்மையை; **கண்ட -** பார்த்த; **அவ் ஊரை -** அந்தநகரத்தவரை; **உற்றதை -** அடைந்த துன்பத்தை; **உணர்த்தவும் ஒன்னுமோ? -** எடுத்துக் கூறவும் இயலுமோ (இயலாது என்றபடி).

சீதை முன்செல, இளையவன் பின்செல என்று ஒரு பாடமும் உண்டு. மனைவி முன்போகப் போதலேபெண்டிரைக் காத்துச் செல்வார்க் குரிய தாகலின் அப்பாடமே கொள்வாரும் உளர். *230*

நகர மக்கள் இராமனைத் தொடர்தல்

***1836.* ஆரும் பின்னர் அமுது அவலித்திலர்;**
**சோரும் சிந்தையர், யாவரும் சூழ்ந்தனர்;**
**'வீரன்முன் வனம் மேவிதும் யாம்' எனா,**
**போரென்று ஒல்லொலி கைம்மிகப் போயினார்.**

**ஆரும் -** எவரும்; **பின்னர் -** பிறகு; **அமுது அவலித்திலர் -** அமுது துன்பம் உறவில்லை; **சோரும் சிந்தையர் -** தளர்ந்த மனத்தோடு; **யாவரும் சூழ்ந்தனர் -** அனைவரும் ஆலோசித்து; **'வீரன்முன் -** இராமனுக்கு முன்னே; **யாம் வனம் மேவுதும்' -** நாம் காட்டிற்குச் செல்வோம்; **எனா -** என்று; **போர் என்று ஒல்லொலி கைம்மிக -** 'போர்' என்று ஒல்லென்ற ஒலி அளவு கடக்க; **போயினார் -** புறப்பட்டுச் சென்றார்கள்.

'போர்' என்பது ஒலிக்குறிப்பு. 'போர்' போல ஒலி மிகுதியாக எனலும் ஆம். இராமனுக்குமுன்பே காடு செல்வதென முடிவு செய்தமையால் அழுதலும் அவலித்தலும் இல்லை. *231*

இராமன் தாயரை வணங்கி மன்னனை ஆற்றக் கூறல்

***1837.* தாதை வாயில் குறுகினன் சார்தலும்,**
**கோதை வில்லவன் தாயரைக் கும்பிடா,**
**'ஆதி மன்னனை ஆற்றுமின் நீர்' என்றான்;**
**மாதராரும் விழுந்து மயங்கினார்.**

**கோதை வில்லவன் -** மாலை அணிந்த வில்லை உடைய இராமன்; **தாதை -** தந்தையது; **வாயில் -** மாளிகை வாயிலை; **குறுகினன் சார்தலும்-**

*அணுகிச்சேர்ந்தவுடன்;* ***தாயரைக் கும்பிடா -*** *உடன்வந்த தாய்மார்களை வணங்கி;* ***'ஆதி மன்னனை -*** *சக்கரவர்த்தியை;* ***நீர் ஆற்றுமின் -*** *நீங்கள் இங்கேயிருந்து தேற்றுங்கள்;'* ***என்றான் -;*** ***மாதராரும் -*** *அம் மகளிரும்;* ***விழுந்து மயங்கினார் -*** *தரையில் விழுந்து மயங்கினார்கள்.*

*'ஆதி மன்னன்' சக்கரவர்த்தி தயரதன் - மூத்த முதல் அரசன் ஆதலின். 'ஆதி அரசன்'(1708) என்பது காண்க. தயரதனைக் காணாமலே கானகம்செல்வதாக வான்மீகம் சொல்லவில்லை; இதுகம்பர் மாற்றம்.* ***232***

*தாய்மார் ஆசிகூறல்*

***1838. ஏத்தினார், தம் மகனை, மருகியை;***
***வாழ்த்தினார், இளையோனை; வழுத்தினார்,***
***'காத்து நல்குமின், தெய்வதங்காள்!' என்றார்-***
***நாத் தழும்ப அரற்றி நடுங்குவார்.***

***நாத் தழும்ப -*** *நா காய்ப்பு ஏறும்படி;* ***அரற்றி -*** *அழுது;* ***நடுங்குவார்*** *- நடுங்கும் அத்தாயர்; தம் மகனை,* ***மருகியை -*** *தம் மகனாகிய இராமனையும் மருகியாகியசீதையையும் ;* ***இளையோனை -*** *இலக்குவனை;* ***வாழ்த்தினார் -*** *வாழ்த்தினார்கள்;* ***ஏத்தினார் -*** *புகழ்ந்தார்கள்;* ***வழுத்தினார் -*** *துதித்தார்கள்;* ***'காத்து நல்குமின் தெய்வதங்காள்!' -*** *காப்பாற்றிக் கொடுங்கள் தெய்வங்களே;'* ***என்றார்-.*** *மூவரையும் வாழ்த்தினர் என இயைக்க - தெய்வங்களை வழுத்தினார் என இயைக்க. தானாக முன்வந்து வனம் செல்லும் இளையோனை வழுத்தினர் அல்லது ஏத்தினர் எனல் சிறப்பு.* ***233***

*மூவரும் தேர் ஏறிச் சேறல்*

***1839. அன்ன தாயர் அரிதின் பிரிந்தபின்,***
***முன்னர் நின்ற முனிவனைக் கைதொழா,***
***தன்னது ஆர் உயிர்த் தம்பியும், தாமரைப்***
***பொன்னும், தானும், ஓர் தேர்மிசைப் போயினான்.***

***அன்ன தாயர் -*** *அத்தகைய தாய்மார்கள்;* ***அரிதின் -*** *சிரமப்பட்டு;* ***பிரிந்த பின் -*** *பிரிந்து சென்ற பிறகு;* ***முன்னர் நின்ற முனிவனைக் கைதொழா -*** *முன்னே நின்ற வசிட்ட முனிவனைக் கைகூட்பி வணங்கி;* ***தன்னது ஆர் உயிர்த் தம்பியும்-*** *தன்னுடைய அரிய உயிர் போலச் சிறந்த தம்பியாகிய இலக்குவனும்;* ***தாமரைப்பொன்னும் -*** *தாமரையில் வீற்றிருக்கும் திருமகளாய சீதையும்;* ***தானும் - ஓர்தேர்மிசைப் போயினான்*** *- ஒரு தேர்மேல் ஏறிச்சென்றான்.*

*தனது - தன்னது விரித்தல் விகாரம் எதுகை நோக்கியது. பொன் - திருமகள், இங்கேசீதை.* ***234***

## தைலம் ஆட்டு படலம்

*தயரதன் உடலைத் தைலத்தில் மூழ்குவித்து வைத்திருந்தமையைக் கூறும் படலம் என்பது பொருள். இராமன் வனம் புகும் செய்தி கேட்டு இறந்துபோன தசரதனது உடம்பை, கேகய நாட்டுக்குச்சென்றுள்ள பரத சத்துருக்கனர் வந்து ஈமக்கடன் செய்யும் அளவும் கெடாமல் இருத்தற்பொருட்டுத்தைலத்தில் இட்டு வைத்தகைக் கூறுவதனால் தைலம் ஆட்டு படலம் எனப்பட்டது. ஆட்டுதல் 'நீர்ஆட்டுதல்' என்பது போல அல்லாமல், தைலத்தில் இடுதல் ஆட்டுதல் எனப் பெற்றது.*

*நகர மாந்தர் தொடர இராமன் தேரில் வனம் சேறலும், இரவில் அனைவரும் வனத்தில்துயில் கொள்ளும்பொழுது இராமன் சுமந்திரனைத் தேருடன் நகர் திரும்பச் சொல்லுதலும்,சுமந்திரன் மறுத்து வருந்த, இராமன் தேற்ற, மூவரும் கூறிய செய்திகளுடன் சுமந்திரன் தேரைஅயோத்திக்குத் திருப்பிக்கொண்டு சேறலும், இரவில் மூவரும் வழிநடந்து இரண்டு யோசனை தூரம்காட்டிற்குள் சென்றுவிடலும், நகர் திரும்பிய சுமந்திரன் வசிட்டனிடம் செய்தி சொல்ல,வசிட்டன் சுமந்திரனோடு தசரதனை அணுக, தசரதன் மூர்ச்சை தெளிந்து முனிவனை வினவ, முனிவன்பேசாது அகல, சுமந்திரன் இராமன் வனம் புகுந்த செய்தி சொல்ல, தசரதன் உயிர் துறத்தலும், கோசலை, சமித்திரை, தேவிமார் புலம்பலும், சுமந்திரனால் செய்தி அறிந்த வசிட்டன்வருந்திக் கேகய நாடு சென்ற பரத சத்துருக்கனர் திரும்ப வந்து ஈமக்கடன் செய்யும் அளவும்கெடாமல் இருக்கத் தசரதனது உடலைத் தைலத்தில் இடுதலும், பரதனுக்கு ஓலை அனுப்புதலும், இராமனுடன் காடு சென்ற நகர மக்கள் காலையில் விழித்து இராமனைக் காணாது தேர்ச் சுவடு அயோத்தி செல்வது நோக்கி இராமன் அயோத்தி செல்வது நோக்கி இராமன் அயோத்திதிரும்பியதாக மகிழ்ந்து நகர் புகுதலும், இராமன் திரும்பாமையும், தசரதன் இறப்பும் அறிந்து வருந்திய நகர மாந்தரை வசிட்டன் தேற்றுதலும் ஆகிய செய்திகள் இதனுள் கூறப் பெற்றுள்ளன.*

*நகர மாந்தர் தொடர இராமன் தேரில் சேறல்*

*கலிவிருத்தம்*

***1840. ஏவிய குரிசில்பின் யாவர் ஏகிலார்?***
***மா இயல் தானை அம் மன்னனை நீங்கலாத்***
***தேவியர் ஒழிந்தனர்; தெய்வ மா நகர்***
***ஓவியம் ஒழிந்தன, உயிர் இலாமையால்.***

***ஏவிய குரிசில்பின் -*** *(தந்தையால்) ஏவப்பெற்றுக் காடு செல்லும் இராமனைத்தொடர்ந்து;* ***ஏகிலார் -*** *உடன் செல்லாதவர்கள்;* ***யாவர்? -*** *எவர் (ஒருவரும் இல்லை);* ***மா இயல் தானையின் -*** *பெருமை பெற்ற சேனையை உடைய;* ***மன்னை -*** *தசரதனை;* ***நீங்கலா -*** *விட்டுப் பிரியாத;* ***தேவியர் -*** *தேவிமார்கள்;* ***ஒழிந்தனர் -*** *செல்லாது நீங்கினர்;* ***தெய்வ மாநகர் ஓவியம் -*** *அயோத்திநகரச் சித்திரங்கள்;* ***உயிர் இலாமையால் -*** *உயிர் இல்லாத காரணத்தால்;* ***ஒழிந்தன -*** *இராமனுடன் செல்லாமல் நகரத்தில் தங்கிவிட்டன; (மற்ற அனைவரும்சென்றனர்.)*

*தேவிமாரும், ஓவியமும் தவிர மற்ற அனைவரும் இராமன் பின் சென்றனர் எனச் சுருங்கச்சொல்லி இராமன் உடன் சென்ற நகரமாந்தரை விளங்க வைத்தார்.*
***1***

## *1841. கைகள் நீர் பரந்து, கால் தொடர, கண் உகும்*
## *வெய்ய நீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால்,*
## *உய்ய, ஏழ் உலகும் ஒன்று ஆன நீர் உழல்*
## *தெய்வ மீன் ஒத்தது - அச் செம் பொன் தேர்அரோ!*

***அச்செம்பொன் தேர் -*** *அந்தச் செம்பொன்னால் செய்த (இராமன் ஏறிச்சென்ற) தேர்;* ***கைகள் நீர் பரந்து -*** *பக்கம் எல்லாம் நீர் பரவி;* ***கால் தொடர -*** *வாய்க்கால் போலப் பின்பற்றி வர;* ***கண் உகும் -*** *மக்கள் கண்களில் இருந்து பெருகுகின்ற;* ***வெய்ய நீர் வெள்ளத்து -*** *கொடிய நீர்ப் பெருக்கினிடையே;* ***மெள்ளச்சேறலால் -*** *மெதுவாகச் செல்லுதலால்;* ***ஏழ் உலகும் ஒன்றான நீர் -*** *ஏழுலகங்களும்ஒன்றாகிப் போன உகாந்த காலத்துப் பிரளய நீர்ப்பெருக்கில்;* ***உய்ய -*** *உலகம்பிழைக்க வேண்டி;* ***உழல் -*** *மெல்லச் சுற்றித் திரிகிற;* ***தெய்வ மீன் -*** *திருமாலின் அவதாரமாகிய மீனை;* ***ஒத்தது -*** *ஒத்திருந்தது.*

*மக்கள் வெள்ளம், கண்ணீர் வெள்ளம் ஆகியவற்றிடையே தேர் மெதுவாக மீன்போலச்செல்லுகிறது. திருமாலின் முதல் அவதாரம் மீன்; உகாந்த காலத்து வெள்ளத்தில் உலகைக்காக்க மெல்ல மெல்லச் சுற்றிய அம்மீனை இங்கே மெல்லச் செல்லும் தேர்க்கு உவமையாக்கினார். பிரமனிடத்திருந்த சோமுகன் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்கத் திருமால் மீனாகத் தோன்றி, பிரளய வெள்ளத்தில் சுழன்று திரிந்து சோமுக அசுரனைத்தேடிப் பிடித்துஅழித்து, அவன் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டுக் கொணர்ந்த கதையைப் பாகவதத்தில்காண்க. கை - பக்கம் 'அரோ' அசை.* ***2***

சூரியன் மறைதல்

## *1842. மீன் பொலிதர, வெயில் ஒதுங்க, மேதியோடு*
## *ஆன் புக, கதிரவன் அத்தம் புக்கனன் -*
## *'கான் புகக் காண்கிலேன்' என்று, கலலதர்*
## *தான் புக முடுகினன் என்னும் தன்மையான்,*

***கதிரவன் -*** *சூரியன்;* ***'கான்புகக காண்கிலேன்' என்று -*** *(இராமன்) காடுசெல்வதைக் காணச் சகியேன் என்கின்ற காரணத்தால்;* ***கல்லதர் -*** *கல்பொருந்தியகாட்டு வழியில்;* ***தான்புக முடுகினன் -*** *தானும் செல்லுதற்கு விரைந்தான்;* ***என்னும்தன்மையான் -*** *என்று சொலல்லும்படியானவனாக;* ***மீன் பொலிதர -*** *நட்சத்திரங்கள்விளங்க;* ***வெயில் ஒதுங்க -*** *வெயில் ஒளி விலக;* ***மேதியோடு ஆன்புக -*** *மேயச்சென்ற எருமையோடு பசுக்கள் இல்லம் சேர;* ***அத்தம் புக்கனன் -*** *மாலை மறை மலையைச்(அத்தமன கிரி) சேர்ந்தான்.*

*சூரியன் மறைதலை இராமன் கான்புகச் சகியாமல் தானும் கல்லதர் புகவிரைந்தான் என்றதுதற்குறிப்பேற்ற அணி, மாலைக் காலத்தே விண்மீன்கள் தோன்றல்; வெயில் மறைதல்;மந்தையிலிருந்து ஆவினங்கள் வீடு புகுதல் முதலிய இயற்கை*

*நிகழ்ச்சிகளுக்குக் கவிஞர் தாம் ஒரு குறிப்பேற்றிக் கூறியதால் தற்குறிப்பேற்றமாகிறது.* ***3***

*தாமரை குவிதல்*

***1843. பகுத்த வான் மதி கொடு பதுமத்து அண்ணலே***
***வகுத்த வாள் நுதலியர் வதன ராசிபோல்,***
***உகுத்த கண்ணீரினின் ஒளியும் நீங்கின,***
***முகிழ்த்து, அழகு இழந்தன, முளரி ஈட்டமே.***

***பகுத்த வான் மதிகொடு -*** *பிளந்த வானத்துச் சந்திரனைக் கொண்டு;* ***பதுமத்துஅண்ணல் -*** *பிரமதேவன்;* ***வகுத்த -*** *செய்தமைத்த;* ***வாள் நுதலியர் -*** *ஒளிபடைத்த, நெற்றியை உடைய அயோத்தி மகளிரது;* ***வதன ராசி போல் -*** *முகங்களின்தொகுதி போல;* ***முளரி ஈட்டம் -*** *தாமரை மலர்க் கூட்டம்;* ***உகுத்த -*** *சிந்திய;* ***கள் நீரினில் -*** *கள்ளாகிய நீரோடு;* ***ஒளியும் நீங்கின -*** *நிறத்தையும் இழந்து;* ***முகிழ்த்து -*** *குவித்து;* ***அழகு இழந்தன -.***

*பிரமன் படைக்கும்போது சந்திரனை இரண்டாகப் பிளந்து அமைத்தது போல உள்ளது பெண்கள்நெற்றி என்றார். சில மகளிரது நெற்றியைப் பிறை 'எனச் சொல்வர். சிலரது நுதலைப்'பாதிமதி' எனக் கூறுவது புலவர் கற்பனை மரபு. ''மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப் பசுவெண்திங்கள் தோன்றியாங்குக், கதுப்பு அயல் விளங்கும் சிறுநுதல்'' (குறுந். 129.) என்பது காண்க.அட்டமிச் சந்திரன் என்பது 'அரை நிலவு' அன்றோ. அயோத்திநகர மகளிர் முகம் இராமன்வனம் புகுந்தபடியால் அழுது அழுது கண்ணீரோடு ஒளியிழந்து சாம்பி அழகு கெட்டுள்ளது போல, தாமரையும் உள்ளது. கண்ணீர் என்பதனை மகளிர்க்குக் கொள்ளுங்கால் ஒன்றாகவும், தாமரைக்குக்கொள்ளுங்கால் 'கள்+ நீர் எனப் பிரித்தும் கொள்க. இது பிரிமொழிச் சிலேடை. ஒளிநீங்கல், முகிழ்த்தல், அழகு இழத்தல் ஆகியவை செம்மொழிச் சிலேடை. இது சிலேடை உவமையணி யாதலும் உணர்க. 'அண்ணலே' 'ஏ' தேற்றம்; 'ஏ' ஈற்றசை.* ***4***

***1844. அந்தியில் வெயில் ஒளி அழிய, வானகம்,***
***நந்தல் இல் கேகயன் பயந்த நங்கைதன்,***
***மந்தரை உரை எனும் கடுவின் மட்சிய***
***சிந்தையின் இருண்டது, செம்மை நீங்கியே.***

***வானகம் -*** *ஆகாயம்;* ***அந்தியில் -*** *மாலைக் காலத்தில்;* ***வெயில் ஒளி அழிய -*** *சூரியனது ஒளி இல்லாமற் போக;* ***நந்தல் இல் -*** *கெடுதல் இல்லாத;* ***கேகயன் பயந்த நங்கைதன் -*** *கேகய நாட்டரசன் புதல்வியாகிய கைகேயியினுடைய;* ***மந்தரை உரை எனும் கடுவின்-*** *மந்தரைக் கூனியின் வார்த்தை என்னும் நஞ்சால்;* ***மட்கிய -*** *மங்கிப் போன (நிலை கெட்ட);* ***சிந்தையின் -*** *மனம் போல;* ***செம்மை நீங்கி -*** *செம்மைத் தன்மை போய்;* ***இருண்டது -*** *இருளடைந்தது.*

*கூனி வார்த்தையால் நெறிகெட்ட கைகேயியின் இருளடைந்த மனம் போல வானம் செம்மைநீங்கி, ஒளி குன்றி இருளடைந்தது என்றார். அங்கே இருள் - வஞ்சனை, செம்மை - நேர்மை. வானத்தின் செம்மை செவ்வானத்தின் செம்மை - எனக் கொள்க. 'ஏ' காரம் ஈற்றசை.* ***5***

***1845. பரந்து மீண் அரும்பிய பசலை வானகம்,***
***அரந்தை இல் முனிவரன் அறைந்த சாபத்தால்,***
***நிரந்தரம் இமைப்பு இலா நெடுங் கண் ஈண்டிய***
***புரந்தரன் உரு எனப் பொலிந்தது எங்குமே.***

***மீன் -*** *நட்சத்திரங்கள்;* ***பரந்து அரும்பிய -*** *தோன்றி எங்கும் பரவியுள்ள;* ***பசலை வானகம் -*** *விளர்த்த ஆகாயம்;* ***எங்கும் -*** *எல்லாவிடத்தும்;* ***அரந்தை இல் -*** *துன்பம் இல்லாத;* ***முனிவரன் அறைந்த சாபத்தால்-*** *கோதமன் என்னும் முனிவன் கூறிய சாப மொழியால்;* ***நிரந்தரம் -*** *எப்பொழுதும்;* ***இமைப்பு இலா நெடுங்கண் -*** *இமைத்தல் இல்லாத பெரிய கண்கள்;* ***ஈண்டிய -*** *நெருங்கி அமைந்த;* ***புரந்தரன் உரு என -*** *இந்திரனது உடம்பைப் போல;* ***பொலிந்தது-*** *விளங்கியது.*

*இந்திரன் சாபம் பெற்ற வரலாறு அகலிகைப் படலத்துக் கூறப் பெற்றது. வானம் இந்திரன்உடம்பு; விண்மீன்கள் இந்திரன் உடம்பில் உள்ள கண்கள் என உவமை காண்க. 'ஏ'ஈற்றசை.* ***6***

*முனிவர்களோடு இராமன் தங்கல்*

***1846. திரு நகர்க்கு ஓசனை இரண்டு சென்று, ஒரு***
***விரை செறி சோலையை விரைவின் எய்தினான்;***
***இரதம் நின்று இழிந்து, பின், இராமன், இன்புறும்***
***உரை செறி முனிவரோடு உறையும் காலையே.***

***இராமன் -; திருநகர்க்கு -*** *அயோத்திக்கு;* ***ஓசனை இரண்டு விரைவின் சென்று -*** *இரண்டு யோசனை தூரம் வேகமாகச் சென்று;* ***ஒரு விரைசெறி சோலையை -*** *மணம்பொருந்திய ஒரு சோலையை;* ***எய்தினான் -*** *அடைந்து;* ***இரதன் நின்று இழிந்து -*** *தேரிலிருந்து இறங்கி;* ***பின் -*** *பிறகு;* ***இன்புறும் -*** *தன் வரவால் மகிழ்ச்சிஅடைகின்ற;* ***உரை செறி முனிவரோடு -*** *மந்திரவுரையால் நிறைந்த முனிவர்களோடு;* ***உறையும் காலை -*** *தங்கியிருக்கும் நேரத்தில்.*

*உரை செறி-புகழ் மிகுந்த என்றும் ஆம். அடுத்த பாட்டில்முடியும். 7*

*நகர மாந்தர் அங்கங்கே சோலையில் தங்கல்*

***1847. வட்டம் ஓர் ஓசனை வளைவிற்றாய், நடு***
***எள்தனை இடவும் ஓர் இடம் இலாவகை,***
***புள் தகு சோலையின் புறத்துப் போர்த்தென***
***விட்டது - குரிசிலை விடாத சேனையே.***

***குரிசிலை விடாத சேனை -*** *இராமனை விடாது அவனைப் பின் பற்றிச் சென்றசேனையானது;* ***ஓர் ஓசனை வட்டம் வளைவிற்றாய் -*** *ஓர் ஓசனை தூரம் உள்ள வட்ட வடிவாகக்சூழ்ந்து;* ***நடு -*** *இடையில்;* ***எள்தனை இடவும் -*** *எள்ளை இட வேண்டும் என்றாலும்;* ***ஓர் இடம் இலாவகை -*** *ஒரு சிறிதும் இடம் இல்லாதபடி;*

***புள்தகுசோலையின் புறத்து*** - *பறவைகள் தங்குதற்குத் தக்க சோலையின் புறத்து;* ***போர்த்து என-*** *மூடிக் கொண்டது போல;* ***விட்டது -*** *தங்கி அமைந்தது.*

*இராமனைச் சூழ்ந்து வட்டமாக உடன் சென்றோர் இடைவெளி இன்றித் தங்கினர் என்பதாம். எள்ளைக் கூறினார் துன்பத்தின்கண் நிகழ்வதாகலின். இராமன் பிரிவு, தசரதன் இறப்பு ஆகியனமுன்னும் பின்னும் உள்ள துக்க நிகழ்ச்சி ஆதலின் அவற்றின் தாக்கம் கவிஞனுக்கு எள்ளைக்கொண்டு வந்தது என்க. 'புள் தகு - புள் தங்கு' 'தங்கு' என்பது இடைக்குறை 'தகு' என்று நின்றது எனலும் ஆம். 'எண் என்னும் சொல் 'எள்' என நின்றது. "வேற்றுமை அல்வழி எண் என் உணவுப்பெயர்" (தொல். எழுத்து. புள்ளி) 'ஏ' ஈற்றசை.* ***8***

## *1848.* **குயின்றன குலமணி நதியின் கூலத்தில்,**
**பயின்று உயர் வாலுகப் பரப்பில், பைம் புலில்,**
**வயின்தொறும் வயின்தொறும் வைகினர்; ஒன்றும்**
**அயின்றிலர்; துயின்றிலர்; அழுது விம்மினார்.**

*(இராமனுடன் சென்ற அவர்கள்)* ***ஒன்றும்*** *- ஒரு பொருளையும்;* ***வாய்மடுத்து*** *- வாயில் இட்டு;* ***அயின்றிலர்*** *- உண்ணவில்லை;* ***துயின்றிலர் -*** *தூங்கவில்லை;* ***அழுது விம்மினார் -*** *அழுது அழுது பொருமுகிறவர்களாய்;* ***குலமணி குயின்றன நதியின் கூலத்தில் -*** *கூட்டமான மணிகள்பதித்துள்ளன போல உள்ள ஆற்றுக் கரைகளில்;* ***பயின்று உயர் வாலுகப் பரப்பில் -*** *திரண்டு உயர்ந்த வெண்மணற் பரப்பில்;* ***பைம்புலில் -*** *பசிய புல்தரையில்;* ***வயின்தொறும் வயின் தொறும் -*** *தங்குதற்குரிய இடங்கள் தோறும்;* ***வைகினர் -*** *தங்கினர்.*

*'குயின்று + அன' செய்தால் ஒத்த என்று பொருள் காண்க. காட்டில் உள்ள ஆற்றில்மணிகள் பதித்துக் கரை ஒழுங்கு செய்வார் இலராகலின். ஆற்றில் அடித்துவரும் மணிக்கற்கள்கரையோரம் அங்கங்கே திரண்டு பதிந்த காட்சியைப் பதித்துச் செய்தது போல என்றார். கூலம் - கரை. ஒன்றும் - இழிவு சிறப்பும்மை. 'புல்லில்' புலில் - குறை.* ***9***

*பலரும் உறங்குதல்*

## *1849.* **வாவி விரி தாமரையின் மா மலரின் வாசக்**
**காவி விரி நாள் மலர் முகிழ்த்தனைய கண்ணார்,**
**ஆவி விரி பால் நுரையின் ஆடை அணை ஆக,**
**நாவி விரி கூழை இள நவ்வியர் துயின்றார்.**

***வாவி விரி தாமரையின் -*** *குளத்தின்கண் மலர்ந்த தாமரையாகிய;* ***மா மலரின்-*** *சிறந்த மலரினுள்;* ***வாசம் -*** *வாசனை உள்ள;* ***வீரி காவி நாள்மலர் -*** *விரிந்த நீலோற்பல மலர்;* ***முகிழ்த்து அனைய -*** *குவிந்து கிடந்தாற் போன்ற;* ***கண்ணார் -*** *கண்ணை உடைய மாதரது;* ***ஆவி விரி பால் நுரையின் ஆடை -*** *வெப்ப ஆவிவெளிப்படும் பால் நுரைபோன்ற மென்மையான ஆடையை அணையாகக் கொண்டு;* ***நாவி விரி -*** *கஸ்தூரி மணம் வீசப்பெற்ற;* ***கூழை -*** *முடிகூடாத கூந்தலை உடைய;* ***இள நல்வியர்-*** *இளமையான பெண்மானைப் போலும் சிறுமிகள்;* ***துயின்றார் -*** *உறங்கினார்கள்.*

*இள நவ்வியர் என்பதால் இவர்கள் சிறுமிகள் என்பதும், 'கண்ணார்' என்பவர்அச்சிறுமியரது தாய்மாரும். அவரனைய பெண்டிரும் என்பதும் போதரும். சிறுமியர் ஆதலின் தாயரதுஆடை அணையாகக் கொண்டு அவர்களிடமே. போல என்று என்க. தாமரைப் பூவிற்குள் நீலோற்பலம் (கருங்குவளை) போல என்று முகத்தில் கிடந்த கண்களைக் கூறினார். இவர்களும் உறக்க அவசத்தில்கண்களை மூடினர் ஆதலின் 'கருங்குவளை முகிழ்த்து' என்றார். முகிழ்த்து' என்பது மலரும் பருவத்து அரும்பாதுல் அறிக. இங்ஙனமே அடுத்த பாடலிலும் பொருள் வருதல் அறியலாம்.* ***10***

***1850.*** ***பெரும் பகல் வருந்தினர்***
***பிறங்கு முலை தெங்கின்***
***குரும்பைகள் பொரும் செவிலி***
***மங்கையர் குறங்கில்.***
***அரும்பு அனைய கொங்கை, அயில்***
***அம்பு அனைய உண் கண்,***
***கரும்பு அனைய செங்சொல் நவில்,***
***கண்ணியர் துயின்றார்.***

***பெரும் பகல் வருந்தினர் -*** *பெரிய பகற் பொழுதில் வழிநடந்து மிகவும் வருந்திய;* ***தெங்கின் குரும்பைகள் பொரும் -*** *தென்னங் குரும்பைகளைத் தோல்வியுறச் செய்யும்;* ***பிறங்கு முலை -*** *விளங்கிய முலைகளை உடைய;* ***செவிலி மங்கையர் குறங்கில் -*** *தம்மைவளர்க்கும் தாயரது துடையில்;* ***அரும்பு அனைய கொங்கை -*** *தாமரைமலர் அரும்பை ஒத்தமுலையையும்;* ***அயில் அம்பு அனைய உண்கள் -*** *கூரிய அம்பை ஒத்த மை உண்ட கண்ணையும் உடைய;* ***கரும்பு அனைய செஞ்சொல் நவில் -*** *கரும்பைப் போலும் இன்ப செவ்வியசொற்களைப் பேசுகின்ற;* ***கன்னியர் -*** *இள மகளிர்;* ***துயின்றார் -*** *தூங்கினர்.*

*செவில் மங்கையர் வயதின் மிக்கோர் என்பதைத் தென்னங் குரும்பை போலும் முலை என்பதனால் அறிவுறுத்தி; அவர் துடையில் துயிலும் கன்னியர் இளவயதினர் என்பதனை அரும்பைஒத்த முலை என்பதனாற் கூறிய திறம் அறிந்து மகிழத் தக்கது. அரும்பு - தாமரை அரும்பு ஆம் 'பூவெனப்படுவது பொறி வாழ் பூவே' (நால்வர் நான்மணி. 40) என்பவாதலின் யாண்டும் இன்னமலர் என்னாது மலர் என்றவழி இடம்நோக்கித் தாமரையேசொல்லப்படும்.* ***11***

***1851.*** ***பூ அகம் நிறைந்த புளினத் திரள்கள்தோறும்,***
***மா வகிரின் உண்கணர் மடப் பிடியின் வைக,***
***சேவகம் அமைந்த சிறு கண் கரிகள் என்ன,***
***தூ அகல் இல் குந்த மற மைந்தர்கள் துயின்றார்.***

***அகம் பூ நிறைந்த புளினத் திரள்கள் தோறும் -*** *தம்மிடத்தில் மலர்கள்நிறைந்துள்ள மணல் மலைகளிடமெல்லாம்;* ***மா வகிரின் உண்கணர் மடப்பிடியின் வைக -*** *பிளந்த மாவடுப் போன்ற மை உண்ட கண்களை உடைய மகளிர் இளைய பெண் யானையைப் போலத்தூங்கித் தங்க;* ***தூ அகல் இல் குந்த மறமைந்தர்கள் -*** *தசை எப்போதும் அகலாமல்இருக்கப்பெற்ற குந்தப் படையை உடைய வீரமறவ இளைஞர்கள்;* ***சேவகம்***

***அமைந்த சிறுகண் கரிகள்என்ன -*** *பிடியைப் பாதுகாப்புச் செய்யும் தொழில் புரிகின்ற சிறிய கண்ணை உடைய களிற்றியானைகள் போல;* ***துயின்றார் -*** *துங்கினார்கள்.*

*தூ - என்பது தசை. ஊன்தங்கிய குந்தம். சேவகம் - வீரச் செயல். 'யானைகட்கும் கூடம்' என்றும் ஆம். சேவகம் - உறக்கம் என்பதும் ஒர் உரை "யானை சேவகம் அமைந்தது (7280) "தறிபொரு களிநல்யாதனை சேவகம் கள்ளி" (8837) என்பன காண்க. இனிச் சேவகம் என்பது பாதுகாவல்; வீர மறத்தொழில் குறித்து வருதலை; 'வீரச் சேவகச் செய்கை' (7281) என்ற பாடற்பகுதியால் அறிக. குந்தம் - ஒரு படைக்கலத்தின் பெயர். கணர் - கண்ணர் - தொகுத்தல்விகாரம்.* ***12***

## *1852.* மாக மணி வேதிகையில், மாதவி செய் பந்தர். கேகய நெடுங் குலம் எனச் சிலர் கிடந்தார்; பூக வனம் ஊடு, படுகர்ப் புளின முன்றில், தோகை இள அன்ன நிரையின் சிலர் துயின்றார்.

***சிலர் -*** *சில மகளிர்;* ***மாதவி செய்பந்தர் -*** *குருக்கத்திக் கொடியால் அமைக்கப் பெற்ற பந்தரில்;* ***மாக மணி வேதிகையில் -*** *ஆகாயத்தைப் போன்ற நீலமணிகளால் அமைந்த திண்ணையில்;* ***கேகய நெடுங்குலம் என*** *- மயிலின் பெருங்கூட்டம்போல;* ***கிடந்தார் -*** *உறங்கினார்;* ***சிலர் -*** *சில மகளிர்;* ***பூக வனம் ஊடு-*** *கமுகங்காட்டின் இடையே;* ***படுகர் -*** *மடுவிடத்தில்;* ***புளின முன்றில் -*** *மணல்மேடுகளில்;* ***தோகை இள அன்ன நிரையின் -*** *தோகையுடைய இளைய அன்ன வரிசைகளைப் போல;* ***துயின்றார் -*** *தூங்கினார்.*

*சிலர் மயில்போல, சிலர் அன்னம் போல உறங்கினர். நீலமணித் திண்ணையில்உறங்கியவர் நீல நிற மயில் போன்றார் என்றும், வெண்மையான மணல் மேடுகளில்உறங்கியவர்கள் வெள்ளையான அன்னம் போன்றார் என்றும் கூறியது. ஒரு நயம். வேதிகை -திண்ணை. பூகம் - கமுகு. புளினம் - மணல்மேடு.*
***13***

## *1853.* சம்பக நறும் பொழில்களில், தருண வஞ்சிக் கொம்பு அழுது ஒசிந்தன எனச் சிலர் குழைந்தார்; வம்பு அளவு கொங்கையொடு வாலுகம் வளர்க்கும் அம் பவள வல்லிகள் எனச் சிலர் அசைந்தார்.

***சிலர்-; சம்பக நறும் பொழில்களில் -*** *நறுமணம் உள்ள சண்பகச் சோலைகளில்;* ***தருண வஞ்சிக் கொம்பு அழுது ஒசிந்தன என -*** *இளைய வஞ்சிக் கொடிகள் அழுது முறிந்தனபோல;* ***குழைந்தார் -*** *சோர்ந்து தங்கினார்கள்;* ***சிலர்-; வம்பு அளவுகொங்கையொடு -*** *கச்சு அணிந்த தனங்களுடன்;* ***வாலுகம் வளர்க்கும் அம் பவள வல்லிகள்என -*** *மணற்குன்றுகளில் வளர்கின்ற அழகியபவளக் கொடிகள்போல;* ***அசைந்தார்*** *- களைத்து உறங்கினார்கள்.*

*வாலுகம் - மணல்மேடு, முலை. பவளவல்லி - மகளிர் என உவமை காண்க.*
***14***

*1854.* ***தகவும் மிகு தவமும் இவை***
***தழுவ, உயர் கொழுநர்***
***முகமும் அவர் அருளும்***
***நுகர்கிலர்கள், துயர் முடுக,***
***அகவும் இள மயில்கள்,***
***உயிர் அலசியன அனையார்,***
***மகவு முலை வருட,***
***இள மகளிர்கள் துயின்றார்.***

***இள மகளிர்கள் -*** *இளைய பெண்கள்;* ***தகவும் -*** *நற்குணமும்;* ***மிகு தவமும்-*** *சிறந்த தவமும் (கொண்டானைத் தெய்வம் எனக் கொள்ளுதலும் அவன் குறிப்பின் வழிஒழுகலும்);* ***இவை தழுவ -*** *இவை பொருந்தி இருப்ப;* ***உயர் கொழுநர் முகமும் அவர்அருளும் -*** *உயர்ந்த கணவரது முகத்தையும் அவர் கருணையையும்;* ***நுகர்கிலர்கள்-*** *அனுபவியாதவர்களாய்;* ***துயர் முடுக -*** *துன்பம் விரைந்து செலுத்த;* ***அகவும் இளமயில்கள் -*** *ஆடுகின்ற இள மயில்கள்;* ***உயிர் அலசியன அனையார் -*** *உயிர் ஒடுங்கிப் போன தன்மையை ஒத்து;* ***மகவு முலை வருட -*** *குழந்தை முலையை நெருடிக்கொண்டிருக்க;* ***துயின்றார் -*** *தூங்கினார்கள்.*

*பால் உண்ண முலையில் பால் இல்லாமையால் குழந்தை முலை வருடுகிறது எனினும் அமையும். உண்டபின்னும், உண்ணும் போதும் குழந்தை முலை வருடல் இயல்பு.* ***15***

*1855.* ***குங்கும மலைக் குளிர் பனிக்***
***குழுமி என்னத்***
***துங்க முலையில் துகள்***
***உறச் சிலர் துயின்றார்;***
***அங்கை அணையில், பொலிவு***
***அழுங்க, முகம் எல்லாம்***
***பங்கயம் முகிழ்த்தன எனச்***
***சிலர் படிந்தார்.***

*சிலர் -;* ***குங்கும மலைக் குளிர் பனிக் குழுமி என்ன -*** *குங்கும மலையிலேகுளிர்ந்த பனி திரண்டது போல;* ***துங்க முலையில் -*** *தூய தனங்களில்;* ***துகள் உற -*** *மணற்பொடி பரவ;* ***துயின்றார் -*** *தூங்கினர் ;* ***சிலர்-; அங்கை அணையில் -*** *தமது அழகிய கையாகிற அணையிலே;* ***முகம் எல்லாம் -*** *தங்கள் முகம் எல்லாம்;* ***பொலிவுஅழுங்க -*** *ஒளி மலர்ச்சி வாட;* ***பங்கயம் முகிழ்த்தன என -*** *தாமரை மலர்கள் குவிந்துள்ளன என்று கருதும்படி ;* ***படிந்தார் -*** *கிடந்து தூங்கினார்கள். சிவந்த நகில்கள் வெண்மணல் துகள் பரவியிருப்பது குங்கும மலையில் பனி குழுமியது போலும்என்றார். பெரும்பாலும் ஆடவரினும் மகளிரே. அதிகம் துன்பத்தில் துவளுவர் ஆதலின் அவர்களது துயரத்தையே மிகுதியாக இங்குக் காட்டினார்.* ***16***

*இராமன் சுமந்திரனைத் தேருடன் ஊர் திரும்பக் கூறல்*

***1856. ஏனையரும் இன்னணம்***
***உறங்கினர்; உறங்கா***
***மானவனும், மந்திரி***
***சுமந்திரனை, 'வா' என்று,***
***'ஊனம் இல் பெருங் குணம்***
***ஒருங்கு உடைய உன்னால்***
***மேல் நிகழ்வது உண்டு; அவ் உரை***
***கேள்' என விளம்பும்;***

***ஏனையரும் -*** *மற்றவர்களும்;* ***இன்னணம் -*** *இவ்வாறு;* ***உறங்கினர்-*** *துயின்றார்கள்;* ***உறங்கா மானவனும் -*** *தூங்காத பெருமை உடைய இராமனும்;* ***மந்திரிசுமந்திரனை -*** *அமைச்சனாகிய சுமந்திரனை;* ***'வா' என்று -*** *வருக என அழைத்து;* ***'ஊனம் இல் பெருங்குணம் ஒருங்கு உடைய உன்னால் -*** *குற்றம் அற்ற பெரிய நற்பண்புகள் ஒருசேரப் பெற்றுள்ள உன்னால்;* ***மேல் நிகழ்வது உண்டு -*** *இனிச் செய்ய இருப்பதாகிய செயல்உள்ளது;* ***அவ் உரை கேள்' -*** *அந்தச் சொற்களைக் கேட்பாயாக;* ***என விளம்பும் -*** *என்று சொல்லுவான்.*

*தேர் ஓட்டுபவனாகவும் தசரதனுக்கு முதல் அமைச்சனாகவும் உள்ளவன் இச் சுமந்திரன்.சுமந்திரன் என்பது மந்திரத் தலைமையில் உள்ளார் அனைவரையும் பொதுவாகக் குறிக்கவும்வரும்.* *17*

*அறுசீர் விருத்தம்*

***1857. 'பூண்ட பேர் அன்பினாரைப்***
***போக்குவது அரிது; போக்காது,***
***ஈண்டுநின்று ஏகல் பொல்லாது;***
***எந்தை! நீ இரதம் இன்னே***
***தூண்டினை மீள்வது ஆக்கின், சுவட்டை***
***ஓர்ந்து, என்னை, " அங்கே***
***மீண்டனன்' என்ன மீள்வர்; இது***
***நின்னை வேண்டிற்று' என்றான்.***

***பூண்ட பேர் அன்பினாரை -*** *(நம்மிடத்தில்) பேரன்புடைய இவர்களை;* ***போக்குவது அரிது -*** *நம்மை விட்டுப்பிரித்துப் போகச் செய்வது இயலாது;* ***போக்காது -*** *இவர்களை அனுப்பாமல்;* ***ஈண்டுநின்றுஏகல் -*** *இங்கிருந்து மேலும் வனத்திற்குள் செல்வது;* ***பொல்லாது -*** *நல்லதன்று (தீங்கு தரும்ஆகையால்);* ***'எந்தை! -*** *என் தந்தை போன்ற சுமந்திரனே நீ -;* ***இன்னே -*** *இப்பொழுதே;* ***இரதம் தூண்டினை-*** *தேரைச் செலுத்தினையாகி* ***மீள்வது ஆக்கின் -*** *திரும்பிப்போவதைச் செய்தால்;* ***சுவட்டை ஓர்ந்து -*** *தேர்ச்சுவட்டை ஆராய்ந்து;* ***என்னை 'அங்கே மீண்டனன்' என்ன -*** *என்னை அங்கே அயோத்திக்குத் திரும்பியவனாகக்கருதி;* ***மீள்வர் -*** *திரும்பிச் செல்வர்;* ***இது-; நின்னை -*** *உன்னை;* ***வேண்டிற்று'-*** *வேண்டிக் கேட்டுக்கொள்கிற செயலாகும்;* ***என்றான் -,***

*நகர மாந்தர் அனைவரும் வனவாசம் செய்தல் ஆனது, ஆதலின் சுமந்திரன் தேரைத் திருப்பிஊர் சென்றால், தேர்ச்சுவடு அயோத்தி போவது கண்டு இராமன் திரும்பி ஊர் சென்றுவிட்டான்எனக் கருதி நகர மாந்தரும் அயோத்திக்கு திரும்புவராதலின் அதனைச் செய்க என்று வேண்டினன்.* ***18***

சுமந்திரன் வருந்தல்

***1858. செவ்விய குரிசில் கூற,***
***தேல் வலான் செப்புவான், 'அவ்***
***வெவ்விய தாயின், தீய***
***விதியினின் மேலன் போலாம்;***
***இவ் வயின் நின்னை நீக்கி,***
***இன் உயிர் தீர்ந்து இன்று ஏகி,***
***அவ் வயின் அனைய காண்டற்கு***
***அமைதலால் அளியன்' என்றான்.***

***செவ்விய குரிசில் கூற -*** *செம்மை வாய்ந்த இராமன் இவ்வாறு சொல்ல;* ***தேர்வலான் -*** *தேர் செலுத்துதலில் வல்லவனாகிய சுமந்திரன்;* ***செப்புவான் -*** *சொல்வான்;* ***'இவ்வயின் நின்னை நீக்கி -*** *இந்த இடத்தில் உன்னைக் கைவிட்டு;* ***இன் உயிர் தீர்ந்து இன்று -*** *இனிய உயிர் நீங்க இன்றைக்கே;* ***ஏகி -*** *புறப்பட்டுச்சென்று;* ***அவ்வயின் -*** *அந்த அயேத்தியிலும்;* ***அனைய -*** *அதுபோலவே உள்ளகாட்சிகளை (உயிற்ற உடல்களை);* ***காண்டற்கு -*** *பார்ப்பதற்கு;* ***அமைதலால்*** *-மனம் பொருந்திச் சேறலால்;* ***அளியன் -*** *இரங்கத் தக்கவனாகிய யான்;* ***அவ்வெவ்விய தாயின் -*** *அந்தக் கொடிய தாயாகிய கைகேயியைக் காட்டிலும்;* ***தீய விதியினின்-*** *கொடிய விதியைக் காட்டிலும்;* ***மேலன் போல் ஆம் -*** *மேம்பட்டவன்ஆவேன்போலும்;'* ***என்றான் -,*** *'இன் உயிர் தீர்ந்து' உயிர் போகப் பெற்று வெற்றுடலோடு அயோத்திக்கு இன்றே சென்று,இதுபோலவே வெற்றுடலோடு அயோத்திக்கு இன்றே சென்று, இதுபோலவே வெற்றுடல் காட்சிகளையேஅங்கும் காண என்று பொருள் செய்தலே பொருந்தும். இனி, 'தீர்ந்தின்று' என்பதை ஒன்றாக்கி, உயிர் நீங்கப்பெறாமல் எனப் பொருள் கூறின், 'அனைய' என்கின்ற உவமை மாட்டேறு அதே போன்ற 'உயிரோடு உள்ளவர்களை' எனவே பொருள்பட்டுச் சிறப்பின்றாகும் என்க.* ***19***

கலிவிருத்தம்

***1859. 'தேவியும் இளவலும் தொடர, செல்வனைப்***
***பூ இயல் கானகம் புக உய்த்தேன் என்கோ?***
***கோவினை உடன் கொடு குறுகினேன் என்கோ?***
***யாவது கூறுகேன், இரும்பின் நெஞ்சினேன்?***

***'தேவியும் இளவலும் தொடர -*** *மனைவியாகிய சீதையும் தம்பியாகிய இலக்குவனும்தொடர்ந்து வர;* ***செல்வனை -*** *செல்வமகனாகிய இராமனை;* ***பூ இயல் கானகம் -*** *மலர்கள் பொருந்திய காட்டிடத்தில்;* ***புக உய்த்தேன் என்கோ? -*** *செல்லும்படிவிட்டுவந்தேன் என்று சொல்வேனோ;* ***கோவினை*** *- இராமனை;* ***உடன்கொடு -*** *கூடஅழைத்துக்கொண்டு;* ***குறுகினேன் என்கோ? -*** *நகரத்தை*

*அணுகினேன் என்று சொல்வேனோ;* ***இரும்பின் நெஞ்சினேன் -*** *இரும்பின் ஒத்து வலிய நெஞ்சுடைய யான்;* ***யாவது கூறுகேன் -*** *யாது சொல்வேன்?'*

*'பூவியல் கானகம்' என்றது அதனையும் கடுமையாகக் கூறாமல் மென்மையாகக் கூறல் வேண்டும்என்பதால்.* ***20***

***1850. ' "தாருடை மலரினும் ஒதுங்கத் தக்கிலா***
***வாருடை முலையொடும், மதுகை மைந்தரைப்***
***பாரிடைச் செலுத்தினேன், பழைய நண்பினேன்,***
***தேரிடை வந்தனென், தீது இலேன்" என்கோ?***

***'பழைய நண்பினேன் -*** *நெடுங்கால நண்பனாகிய யான்;* ***தார் உடை மலரினம்ஒதுங்கத் தக்கிலா -*** *மாலையாகத் தொடுக்கும் மலரினும் நடப்பதற்குத் தகுதியில்லாத;* ***வாருடை முலையொடு -*** *கச்சணிந்த நகிலாளாகிய சீதையோடு;* ***மதுகை மைந்தரை -*** *வலிமையுடைய குமாரர்களை;* ***பாரிடை -*** *காட்டு நிலத்தில்;* ***செலுத்தினேன் -*** *(நடந்து செல்லுமாறு) அனுப்பிவிட்டேன்;* ***தீதிலேன் -*** *ஒரு தீமையும் இல்லாதவனாய்;* ***தேரிடை வந்தனன் என்கோ?'-*** *தேர் மேலே ஏறி ஊர் வந்து சேர்ந்தேன் என்றுசொல்வேனோ?*

***சீதையின் மென்மைத்தன்மையை 'மலரினும் நடத்தற்கு வருந்தும்' என்பதால் கூறினார். 'தேரிடை வந்தனன்' என்பது அவர்களை நடக்க வைத்து' என்னும் குறிப்பு உணர்த்திற்று.*** ***21***

***1861. 'வன் புலக் கல் மன***
***மதி இல் வஞ்சனேன்,***
***என்பு உலப்புற உடைந்து***
***இரங்கும் மன்னன்பால்,***
***உன் புலக்கு உரிய சொல்***
***உணர்த்தச் செல்கெனோ?***
***தென்புலக் கோமகன்***
***தூதின் செல்கெனோ?***

***'வன் புலக் கல் மன மதி இல் வஞ்சனேன்-*** *வலிய புலன்களையும் கல்போன்றமனத்தையும் உடைய அறிவற்ற வஞ்சகனாகிய யான்;* ***என்பு உலப்புற உடைந்து இரங்கும்மன்னன்பால் -*** *உடம்பு அழியும் படி மனம் முறிந்து வருந்தும் தசரதனிடத்து;* ***உன் புலக்குஉரிய சொல்களை உணர்த்தச் செல்கெனோ? -*** *உனது அறிவு வாய்ந்த சீரிய வார்த்தைகளைஉணர்த்தப் போகின்றேனோ (அல்லது) ;* ***தென்புலக் கோமகன் தூதின் செல்கெனோ? - !*** *இயமனது தூதுவன்போலச் செல்லக் கடவேனோ'*

*செய்தி சொல்லு முன்னரே தசரதன் இறந்துபடுவான் ஆதலின், 'இயம தூதன்போலச் செல்வேனோ'என்றான்.* ***22***

***1862. ' "நால் திசை மாந்தரும்,***
***நகர மாக்களும்,***

***தேற்றினர் கொணர்வர் என்***
***சிறுவன் தன்னை" என்று***
***ஆற்றின அரசனை,***
***ஐய! வெய்ய என்***
***கூற்று உறழ் சொல்லினால்,***
***கொலை செய்வேன்கொலோ?***

***'ஐய!* -** *இராமனே;* ***'நால்திசை மாந்தரும் -*** *நான்கு திசைகளிலும் உள்ளமனிதர்களும்;* ***நகர மாக்களும் -*** *நகர மக்களும்;* ***'உன் சிறுவன் தன்னை -*** *(தசரதனே!) உன் மகனை;* **தேற்றினர் கொணர்வர்'-** *அழைத்து வருவர்'* **என்று -; ஆற்றின அரசனை -** *(உயிர் நீங்காதபடி) ஆறுதல் கூறிக் காத்த அரசனை;* **என் -** *என்னுடைய;* **கூற்று உறழ் சொல்லினால்-** *இயமனை ஒத்த கொடிய வார்த்தையால்;* **கொலை செய்வேன்கொலோ?!** *- உயிர் நீங்குமாறு செய்து விடுவேனோ.'  அனைவரும் அரசனைத் தேற்றியிருப்ப நான் நீ காடு சென்ற செய்தி கூறி அவனுயிரைஅழிக்கின்றவ னாய்விடுவேனோ என அஞ்சுகிறான். 23*

***1863. ' "அங்கிமேல் வேள்வி செய்து***
***அரிதின் பெற்ற நின்***
***சிங்க ஏறு அகன்றது" என்று***
***உணர்த்தச் செல்கெனோ?***
***எங்கள் கோமகற்கு, இனி,***
***என்னின், கேகயன்***
***நங்கையே கடைமுறை***
***நல்லள் போலுமால்!'***

**'அங்கிமேல் வேள்வி செய்து -** *நெருப்பின்கண் அசுவமேதம், புத்திர காமேட்டிமுதலிய யாகங்களைச் செய்து;* **அரிதின் பெற்ற -** *அருமையாகப் பெற்றெடுத்த;* **உன்சிங்க ஏறு அகன்றது' -** *உன்னுடைய ஆண்சிங்கம் காடு சென்றுவிட்டது;* **என்று -; உணர்த்த-** *சொல்ல;* **செல்கெனோ? -** *செல்லக் கடவேனோ;* **இனி-; எங்கள் கோமகற்கு-** *தசரதனுக்கு;* **என்னின் -** *என்னைக்காட்டிலும்;* **கடைமுறை -** *இறுதியாகப் பார்க்குமிடத்து;* **கேகயன் நங்கையே** *- கைகேயியே;* **நல்லள். போலும் -** *நல்லவளாவாள் போலும்.*

*என்னைவிடக் கைகேயி நல்லவள் என்றான்! கைகேயி வார்த்தை கேட்டும் உயிரோடு இருந்ததசரதன் என்வார்த்தை கேட்டவுடனேயே உயிரை விடுவான் என்று சுமந்திரன் வருந்தினன். 'ஆல்'ஈற்றசை. 24*

***1864. முடிவுற, இன்னன மொழிந்த பின்னரும்,***
***அடி உறத் தழுவினன், அழுங்கு பேர் அரா***
***இடி உறத் துவளுவது என்னும் இன்னலன்;***
***படி உறப் புரண்டனன்; பலவும் பன்னினான்.***

***முடிவு உற*** - தன் கருத்து (இராமனை மீள அழைத்துச் சேறலே என்பது) முடிவாகத்தெரியும்படி; **இன்னன** - இந்த வார்த்தைகளை; **மொழிந்த பின்னரும்** - சொல்லியபிறகும்; ***இடி உற*** - இடி ஒலி கேட்டு; ***அழுங்கு பேர் அரா*** - மனம் வருந்தும்பெரும்பாம்பு; **துவளுவது** - துடித்துச் சோர்கின்றது; **என்னும்** - என்றுசொல்லத்தக்க; **இன்னலன்** - துன்பம் உடையவனாய்; ***அடி உறத் தழுவினன்*** - இராமனது கால்களை நன்கு பற்றிக்கொண்டு; **பலவும் பன்னினான்** - பலவார்த்தைகளையும் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு; **படிமிசைப் புரண்டனன்** - பூமியில் விழுந்து புரண்டான். இராமன் திரும்பி வருபவனாகத் தோன்ற வில்லை யாதலின் சுமந்திரன் வருத்தம்பெரிதாயிற்று. பன்னுதல் - ஒன்றையே திரும்பத் திரும்பச் சொல்லுதல். *25*

*துயர் மிகுதியுற்ற சுமந்திரனை இராமன் எடுத்து அணைத்துப் பேசுதல்*

***1865. தடக் கையால் எடுத்து,***
***அவன் - தழுவி, கண்ண நீர்***
***துடைத்து, வேறு இருத்தி,***
***மற்று இனைய சொல்லினான் -***
***அடக்கும் ஐம் பொறியொடு***
***கரணத்து அப்புறம்***
***கடக்கும் வால் உணர்வினுக்கு***
***அணுகும் காட்சியான்.***

***அடக்கும் ஐம்பொறியோடு*** - (புலன்வழிச் செல்லாது) அடக்கிய ஐம்பொறிகளோடு; ***கரணத்து அப்புறம்*** - அந்தக்கரணமாகிய மன முதலியவற்றுக்கு அப்பால்; ***கடக்கும்*** - கடந்து செல்கின்ற; **வால் உணர்வினுக்கு** - தூய மெய்ஞ்ஞானத்துக்கு; **அணுகும் காட்சியான்** - நெருங்கிப் புலனாகின்ற தோற்றம் உடைய பரம்பொருளாகிய இராமன்; **அவன்** - அந்தச் சுமந்திரனை; **தடக்கையால் எடுத்து** - (தனது) பெரிய கைகளினால்தூக்கி; ***தழுவி*** -; ***கண்ணநீர்*** - கண்ணிலிருந்து வரும் நீரை; **துடைத்து** -; **வேறுஇருத்தி** - தனியாக இருக்கவைத்து; **இனைய** - இத்தகைய (பின்வரும்) சொற்களை; **சொல்லினான்** - சொன்னான்.

பொறிபுலன்களுக்கு அப்பாற்பட்டு அந்தக்கரணங்களையும் கடந்து நிற்பவனாய் யோகிகளின் மெய்யுணர்வுக்கே புலப்படுபவனாய் உள்ளவன் பரம்பொருள் என்பது கூறப்பட்டது. வனவாசத்தை ஒப்புக்கொள்ளாத கருத்தினன் சுமந்திரன் ஆதலால், அவனை இசைவித்துத் திருப்பி அனுப்பவேண்டித் தனியே அழைத்துச் சென்று பேசினான் இராமன் என்க. *26*

***1866. 'பிறத்தல் ஒன்று உற்றபின் பெறுவ யாவையும்***
***திறத்துளி உணர்வது ஓர் செம்மை உள்ளத்தாய்!***
***புறத்துறு பெறும் பழி பொது இன்று எய்தலும்,***
***அறத்தினை மறத்தியோ, அவலம் உண்டு எனா?***

**'பிறத்தல் என்று உற்ற பின்** - இவ்வுலகில் பிறந்தாயிற்று என்ற பிறகு; **பெறுவ யாவையும்**- நேரக்கடவ இன்ப துன்பங்கள் எல்லாவற்றையும்; **திறத்துளி** -

*அவ்வவற்றின் கூறுபாட்டோடே;* ***உணர்வது ஓர் -*** *அறிகின்றதாகிய ஒப்பற்ற;* ***செம்மைஉள்ளத்தாய்! -*** *நேர்மையான மனம் உடைய சுமந்திரனே;* ***அவலம் உண்டெனா -*** *துன்பம் உண்டாகின்றதே என்று கருதி;* ***புறத்து உறு பெரும்பழி -*** *உலகரால் சொல்லப்படும் பெரியபழியை;* ***பொது இன்று எய்தலும் -*** *சிறப்பாக அடைதலையும் (உணராது);* ***அறத்தினைமறத்தியோ?' -*** *தருமத்தினை மறந்தாயோ?'*

*துன்பத்திற்குப் பயந்து தருமத்தை மறக்கலாமோ? தருமத்தை மறந்தால் பழி வந்து சேரும் அல்லவா? உலகத்தில் பிறந்த பிறகு இன்ப துன்பங்களை ஏற்றுக்கொள்ளும் பக்குவம் பெற வேண்டுமே அன்றித் துன்பத்திற்குப் பயந்து அறத்தை மறத்தல் கூடாது என்றான். உள்ளி - உளி - தொகுத்தல் விகாரம்.* *27*

***1867. 'முன்பு நின்று இசை நிறீஇ, முடிவு முற்றிய***
***பின்பும் நின்று, உறுதியைப் பயக்கும் பேரறம்,***
***இன்பம் வந்து உறும்எனின் இனிது; ஆயிடைத்***
***துன்பம் வந்து உறும்எனின், துறக்கல் ஆகுமோ?***

***'பேர் அறம் -*** *பெருமை பொருந்திய தருமம்;* ***முன்பு நின்று இசை நிறீஇ -*** *(தன்னை மேற்கொள்பவனுக்கு இவ்வுலகில்) முன்னதாகப் புகழை நிலை நிறுத்தி;* ***முடிவு முற்றியபின்பும் நின்று -*** *இந்த வாழ்வு முடிவுக்கு வந்தபிறகும் இருந்து (மறுமையில்);* ***உறுதியைப்பயக்கும் -*** *நன்மைப் பயனாகிய மேல் உலகத்தைத் தரும்;* ***இன்பம் வந்து உறும் எனின்இனிது -*** *(வாழ்வில்) இன்பம் வந்து நேருமாயின் இனிமையானது;* ***ஆயிடை -*** *அவ்விடத்து;* ***துன்பம் வந்து உறும் எனின் -*** *துன்பம் வந்து நேருமாயின்;* ***துறக்கல்ஆகுமோ?' -*** *அவ்வறத்தைக் கைவிட ஆகுமோ?*

*இன்ப துன்பங்கள் கலந்ததே வாழ்வு. அறவழி நடப்பார்க்கு இன்பமே வரும். ஆயினும்,ஒருவேளை துன்பம் வருமாயினும் அதுபற்றி அறத்தைக் கைவிடல் ஆகாது என்பதாம். அறம் என்றசொல்லின் முழுப் பொருளும் தருமம் என்பதன்கண் அடங்காது. பொருள் விளங்க வேண்டிய அளவுக்கே அறம் என்பதற்குத் தருமம் என்று உரை காண்கிறோம். 'நன்றாங்கால் நல்லவாக் காண்பவர்அன்றாங்கால், அல்லல் படுவது எவன்' என்னும் குறளை (குறள். 379) இங்கு நோக்குக.* *28*

***1868. 'நிறப் பெரும் படைக்கலம் நிறத்தின் நேர் உற,***
***மறப் பயன் விளைக்குறும் வன்மை அன்று அரோ;***
***இறப்பினும், திரு எலாம் இழப்ப எய்தினும்,***
***துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே.***

***'சூரர் ஆவது -*** *வீரத்திற் சிறந்த சூரர் என்று ஒருவர் சொல்லப் பெறுவது;* ***நிறப் பெரும் படைக்கலம் -*** *ஒளி படைத்த பெரிய ஆயுதம்;* ***நிறத்தின் நேர் உற -*** *மார்பிடத்து நேரே வந்து பொருந்த;* ***மறப்பயன் வினைக்குறும் வன்மை அன்று -*** *வீரப்பயனை விளைத்துக் காட்டும் வல்லமை அன்று;* ***இறப்பினும் -*** *இறந்தாலும்;* ***திருஎலாம் இழப்ப எய்தினும் -*** *செல்வம் எல்லாம் இழக்கும்படி நேர்ந்தாலும்;* ***அறம் துறப்பிலர்-*** *அறத்தைக்கைவிடாதவர்;* ***எனல்-*** *எனச் சொல்லப் பெறுவதே ஆகும்.'*

*போரில் படை ஏற்பது சூரத்தனம் அன்று. வாழ்வில் அறத்தின் வழி மனம் தளராது நிற்றலே யாரும் என்றார்., 'சிதைவிடத்து ஒல்கால் உரவோர்' (குறள். 597.) காண்க. 'அரோ', 'ஏ' அசைகள்.* ***29***

***1869. 'கான்புறம் சேறலில்***
***அருமை காண்டலால்,***
***வான் பிறங்கிய புகழ்***
***மன்னர் தொல் குலம்,***
***யான் பிறந்து, அறத்தினின்று***
***இழுக்கிற்று என்னவோ?-***
***ஊன் திறந்து உயிர் குடித்து***
***உழலும் வேலினாய்!***

***'ஊன் திறந்து உயிர் குடித்து உழலும் வேலினாய்! -*** *(பகைவரது) உடலைத் திறந்துஉயிரைக் குடித்துத் திரியும் வேலை உடையவனே!;* ***கான் புறம் சேறலில் அருமை காண்டலால் -*** *காட்டின் புறத்தே செல்லுதலால் உண்டாகும் அருமையை (துன்பத்தை) நினைத்து (நான்)திரும்புதலால்;* ***வான் பிறங்கிய புகழ் மன்னர் தொல் குலம் -*** *வானளாவிய புகழ் பெற்ற மன்னர்களாற் சிறந்த பழைமையான நம் குலம்;* ***யான் பிறந்து அறத்தினின்று இழக்கிற்று -*** *யான் பிறந்த படியால் அறத்திலிருந்து தவறியது;* ***என்னவோ?' -*** *என்று எல்லாராலும்சொல்லப்படவோ.'*

*வனவாசத்தின் அருமை கருதித் திரும்பினால் பழி வரும், புகழ் கெடும் என்றானாம்.* ***30***

***1870. ' "வினைக்கு அரு மெய்ம்மையின்***
***வனத்து விட்டனன்,***
***மனக்கு அரும் புதல்வனை"***
***என்றல் மன்னவன் -***
***தனக்கு 'அருந்தவம்; அது***
***தலைக்கொண்டு ஏகுதல்***
***எனக்கு அருந் தவம்; இதற்கு***
***இரங்கள். எந்தை! நீ.***

***'எந்தை -; வினைக்கு அரு மெய்ம்மையன் -*** *செய்தற்கு அரிய சத்தியத்தை உடையதயரதன்;* ***"மனைக்கு அரும் புதல்வனை -*** *தன் குடிக்கு அரிய மகனை;* ***வனத்து விட்டனன்" -*** *காட்டிற்குச் செல்லுமாறு அனுப்பினான்; என்றல் - என்று உலகோரால் சொல்லப்படுதல்;* ***மன்னவன் தனக்கு -*** *அரசனுக்கு;* ***அருந்தவம் -*** *அருமையான தவமாகும்;* ***அது -*** *அம்மன்னவன் ஆணையை;* ***தலைக்கொண்டு -*** *சிரமேல் தாங்கி;* ***ஏகுதல்-*** *வனம் செல்லுதல்;* ***எனக்கு அருந்தவம் -*** *எனக்குஅரிய தவமாகும்;* ***இதற்கு நீ இரங்கல் -*** *இதற்கு நீ இரங்காதே.*

*அரிய மகனைக் காட்டிற்கு அனுப்புதல், அதுவும் அறத்தைக் காப்பாற்ற வேண்டிய அனுப்புதல் என்பது செயற்கரும் தவம் ஆதலின், அது 'மன்னவனுக்கு அருந்தவம்'*

*என்றான். அதனை மகன் நிறைவேற்றினால் அன்றி அத் தவம் நிலை பெறாதாம். ஆகவே, அதன்படி நடந்து வனம் செல்லுதல் எனக்குத் தவம் என்றான் இராமன். இருவர் தவத்தையும் கெடுக்க எண்ணுதியோ என்பது குறிப்பு.* ***31***

***1871. 'முந்தினை முனிவனைக் குறுகி , முற்றும் என்***
***வந்தனை முதலிய மாற்றம் கூறினை,***
***எந்தையை அவனொடும் எய்தி," ஈண்டு, என***
***சிந்தனை உணர்த்துதி" என்று, செப்புவான்.***

***'முனிவனை -*** *வசிட்டனை;* ***முந்தினை குறுகி -*** *முற்பட்டுச் சென்று அணுகி;* ***முற்றும் -*** *நிரம்பிய;* ***என் வந்தனை முதலிய மாற்றம் கூறினை-*** *என் வணக்கம்முதலிய வார்த்தைகளைச் சொல்லி;* ***அவனொடும் எந்தையை எய்தி -*** *அவ் வசிட்டமுனிவனொடும் என் தந்தையை அடைந்து;* ***'ஈண்டு -*** *இங்கே;* ***என் சிந்தனை -*** *என்மனக் கருத்தை;* ***உணர்த்துதி' -*** *தெரிவிப்பாய்;* ***என்று -; செப்புவான் -*** *சொல்கின்றான்.*

*முனிவனோடுதான் தயரதனிடம் போகவேண்டும் என்ற குறிப்பின் திறம் உணர்க.* ***32***

***1872. 'முனிவனை, எம்பியை, "முறையில் நின்று, அரும்***
***புனித வேதியர்க்கும், மேல் உறை புத்தேளிர்க்கும்,***
***இனியன இழைத்தி" என்று இயம்பி, "எற் பிரி***
***தனிமையும் தீர்த்தி" என்று உரைத்தி, தன்மையால்.***

***முனிவனை -*** *வசிட்ட முனிவகைக் கொண்டு;* ***'முறையில் நின்று -*** *நெறியில்நின்று;* ***அரும் புனித வேதியர்க்கும் -*** *அருமையான தூய அந்தணர்களுக்கும்;* ***மேல் உறைபுத்தேளிர்க்கும்-*** *மேல உலகில் வசிக்கும் தேவர்களுக்கும்;* ***இனியன -*** *நன்மையானசெயல்களை;* ***இழைத்தி' -*** *செய்வாயாக;* ***என்று எம்பியை இயம்பி -*** *என்று என்தம்பி பரதனுக்குச் சொல்லி;* ***'என் பிரி -*** *என்னைப் பிரிதலால் உளதாகும்;* ***தனிமையும் தீர்த்தி' -*** *தனிமைத் துன்பத்தையும் நீக்குக;* ***என்று -; தன்மையால் உரைத்தி -*** *இதமாகச் சொல்வாய்.*

*பரதனுக்கு இராமன் சுமந்திரன்பால் சொல்லி அனுப்பிய செய்திகள் இதனுட் கூறப்பெற்றன.* ***33***

***1873. ' "வெவ்வியது, அன்னையால்***
***விளைந்தது, ஈண்டு ஒரு***
***கவ்வை என்று இறையும் தன்***
***கருத்தின் நோக்கலன்,***
***எவ் அருள் என்வயின்***
***வைத்தது, இன் சொலால்,***
***அவ் அருள் அவன்வயின்***
***அருளுக!" என்றியால்.***

*'**ஈண்டு** - இவ்விடத்து; **அன்னையால் விளைந்தது** - கைகேயியால் உண்டாக்கியது; **வெவ்வியது ஒரு கவ்வை** - கொடியதாகிய ஒரு துன்பம்; **என்று-; இறையும்** - சிறிதளவும்; **தன் கருத்தின்** - (பரதன்) தன்னுடைய மனத்தின்கண்; **நோக்கலன்** - கருதாதவனாய்; **எவ் அருள் என் வயின் வைத்தது**- எத்தகையதொரு அருளைஎன்னிடம் (பரதன்) வைத்துள்ளானோ; **அவ் அருள்** - அத்தகைய அருளை; **அவன் வயின்** - அந்தத் தயரத மன்னனிடத்தும்; **அருளுக'** - காட்டுவானாக; **என்றி** - என்று சொல்லுவாய்.'*

*கைகேயிமாட்டும், தயரதன்மாட்டும் என்னிடம் உள்ள அன்பிற்சிறிதும் குறையாது அன்போடு நடந்துகொள்ளுமாறு பரதன்பால் கூறவும் என்றான். "ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால், தாய் எனும் பெயர் எனைத் தடுக்கற்பாலதோ" என்று பரதன் கூறுவதைஇங்கே கருதுக. (2173.)* ***34***

***1874. 'வேண்டினென் இவ் வரம் என்று, மேலவன்***
***ஈண்டு அருள் எம்பிபால் நிறுவி, ஏகினை,***
***பூண்ட மா தவனொடும் கோயில் புக்கு, இனிது***
***ஆண் தகை வேந்தனை அவலம் ஆற்றி, பின்,***

*__ஏகினை__ - (நீ) இங்கிருந்து புறப்பட்டுச் சென்று; **பூண்ட மாதவனொடும்** - மேற்கொண்ட பெருந்தவத்தை உடைய வசிட்ட முனிவனோடும்; **கோயில் புக்கு** - அரண்மனைஅடைந்து; **ஆண்தகை வேந்தனை** - ஆடவருள் சிறந்த தயரதனை; **இனிது அவலம் ஆற்றி** - இனிமையாக மனத்துயரத்தைத் தேற்றி; **இவ்வரம் வேண்டினென் என்று** - இந்த வரத்தைத்தரவேண்டும் என்று வேண்டிக் கொண்டு; **ஈண்டு அருள் எம்பிபால் நிறுவி** - என்னிடத்து வைத்துள்ள அருளை என் தம்பியாகிய பரதன்பாலும் வைக்க வேண்டும் என்று நிற்குமாறு செய்து; **பின்** - பிறகு....*

*அடுத்த செய்யுளில் முடியும் முதலில் வரத்தை வாங்கிக்கொண்டு பின்னர் அவ்வரம் இன்னதுஎன்று கூறித் தம்பிபால் அருளை நிறுவுக என்றது ஒரு நயம்.*
***35***

***1875. ' "ஏழ் - இரண்டு ஆண்டும் நீத்து,***
***ஈண்ட வந்து உனைத்***
***தாழ்குவென் திருவடி;***
***தப்பிலேன்" எனச்***
***சூழி வெங் களிற்று இறை***
***தனக்குச் சோர்வு இலா***
***வாழி மா தவன் சொலால்***
***மனம் தெருட்டுவாய்.***

*'**ஏழ் இரண்டு ஆண்டும் நீத்து** - பதினான்கு ஆண்டுகளும் கழித்து; **ஈண்ட வந்து** - விரைவாக வந்து; **உனைத் திருவடி தாழ்குவென்** - உனது திருவடிகளை வணங்குவேன்; **தப்பிலேன்** - தவற மாட்டேன்'; **என** - என்று; **சூழி** - முகபடாம் அணிந்த; **வெங்களிற்று இறை தனக்குக்** - கொடிய யானையை உடைய தயரத மன்னனுக்குச் சொல்லி; **சோர்வு இலா** - தளர்ச்சி இல்லாத; **மாதவன் சொலால்** - வசிட்ட முனிவன்சொல்லால்; **மனம் தெருட்டுவாய்** - மனத்தைத் தெளிவிப்பாய்.'*

*'வாழி' அசை.* *36*

***1876.*** ***'முறைமையால் எற் பயந்***
***தெடுத்த மூவர்க்கும்***
***குறைவு இலா என் நெடு***
***வணக்கம் கூறி, பின்***
***இறைமகன் துயர் துடைத்து***
***இருத்தி, மாடு' என்றான் -***
***மறைகளை மறைந்து போய்***
***வனத்துள் வைகுவான்.***

***மறைகளை மறைந்து போய் -*** *வேதங்களுக்கு எட்டாமல் மறைந்து நின்று;* ***வனத்துள் வைகுவான் -*** *எடுத்த அவதாரத்திற்கேற்ப வனத்தின்கண் வசிப்பவனாகிய இராமன்;* ***என் பயந்து எடுத்த மூவர்க்கும் -*** *என்னைப் பெற்றெடுத்த தாயர்;* ***மூவர்க்கும் -*** *மூன்று பேர்க்கும்;* ***முறைமையால் -*** *முறைமைப்படி;* ***குறைவு இலா -*** *சிறிதும் குறைவுபடாத;* ***என் நெடு வணக்கம் கூறி -*** *என்னுடைய பெரிய வணக்கத்தைச் சொல்லி;* ***பின் -*** *பிறகு;* ***இறை மகன் துயர் துடைத்து -*** *தயரதனது துன்பத்தை நீக்கி;* ***மாடு-*** *அவன் பக்கல்;* ***இருத்தி' -*** *நீங்காது இருப்பாயாக;* ***என்றான் -.***

*அன்னையர்க்குச் சொல்ல வேண்டியதைச் சுமந்திரன்பால் கூறினன். 'வேதம்.......தெரிகிலாஆதி தேவர்' (2516). இப்படலத்து 26 ஆம் பாடலால் 'தூய மெய்யுணர்வால் அணுகும் காட்சியான்'என்று சொல்லி, இங்கே 'மறைகளை மறைந்து போய் வனத்துள் வைகுவான்' என்று முடித்துள்ள அருமைப்பாட்டை அறிந்து நுகர்க.* *37*

*சுமந்திரனிடம் சீதை, செய்தி கூறல்*

***1877.*** ***' ஆள்வினை, ஆணையின் திறம்பல் அன்று' எனா,***
***தாள்முதல் வணங்கிய தனித் திண் தேர் வலான்,***
***'ஊழ்வினை வரும் துயர் நிலை' என்று உன்னுவான்.***
***வாழ்வினை நோக்கியை வணங்கி நோக்கினான்.***

***'ஆள் வினை -*** *பணியாளன் செய்ய வேண்டிய செயல்;* ***ஆணையின் திறம்பல் அன்று'-*** *தலைவனது கட்டளைக்கு மாறுபட்டு நடத்தல் அன்று;* ***எனா -*** *என்று கருதி (இராமன்கட்டளைப்படி திரும்பிச் செல்வதே முறை என்று);* ***தாள்முதல் வணங்கிய -*** *இராமனதுபாதங்களில் வணங்கி எழுந்த;* ***தனித் திண் தேர் வலான் ? -*** *ஒப்பற்ற வலிய தேரைஓட்டுதலில் வல்லவனாய சுமந்திரன்;* ***'ஊழ் வினை வரும் துயர் நிலை' -*** *ஊழ் வினையால் வருகின்ற துன்பத்தின் நிலை இது;* ***என்று உன்னுவான் -*** *என்று கருதி;* ***வாழ்வினைநோக்கியை -*** *உலக இன்ப வாழ்வுக்குச் காரணமானவளை;* ***வணங்கி -*** *பணிந்து;* ***நோக்கினான் -*** *(செய்தி உளதோ என்ற குறிப்பில்) பார்த்தான்.*

*தலைவனது கட்டளைக்குச் கீழ்ப்படிதலே ஆளின் வினை ஆதலின் இராமன் விருப்பப்படி நாடுதிரும்பிச் செல்ல முற்பட்ட சுமந்திரன், அரண்மனையில் உள்ளார்க்குச் செய்தி ஏதேனும்உள்ளதோ என்று அறிவான் போலச் சீதையைப்*

*பார்த்தான். சுமந்திரன் - அமைச்சன், தேர் வலான். பண்டு அரசர்களுக்கு அமைச்சர்களே தேர் ஓட்டும் சாரதியாகவும் இருப்பர். அரசர்களது மந்தணங்களைப் பாதுகாத்தல் அமைச்சர் கடமை ஆதலின், தேர் வலான் - என்பது தேர்ஓட்டுதலில் வல்லவன் என்றும், தேர்தலில் - ஆராய்வதில் வல்ல அமைச்சன் என்றும் இருபொருளுக்கு ஏற்ப அமைந்து நலம் செய்தல் அறிந்து இன்புறுக. தயரதனுக்கும் அமைச்சனாகியசுமந்திரன் தன்மை ஆளும் அரச குடும்பத்தைச் சார்ந்த இராமனையும், சீதையையும் பணிதல் முறை என்பதும் அறிக. 'வாழ்வினை நோக்கி' என்பது அரிய சொல்லாட்சி. எல்லாருடைய வாழ்வையும் கருதுபவன் திருமகள், 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி, யாங்கு (குறள். 247.) ஆதலின் உலக வாழ்வுக்கு இன்றியமையாத செல்வத்துக்குரிய திருமகளின் அவதாரம் ஆகிய சீதை 'வாழ்வினை நோக்கி' எனப்பட்டாள். இனி அவதாரத்திலும், முனிவர் வாழ்வையும், தேவர்வாழ்வையும் கருதி அரக்கர்களை வதம் செய்யும் பெருமானது நோக்கம் நிறை வேற வேண்டித் தான் சிறை புகுந்து மற்றவர்களை வாழ்விக்க வனம் செல்லத் துணிந்தனள் ஆதலின் 'வாழ்வினை நோக்கி' என்பதுசீதைக்குப் பொருந்துமாறு அறிந்து இன்புறலாம்.* ***38***

***1878. அன்னவள் கூறுவாள்,***
***'அரசர்க்கு, அத்தையர்க்கு,***
***என்னுடைய வணக்கம் முன்***
***இயம்பி, யானுடைப்***
***பொன் நிறப் பூவையும்,***
***கிளியும், போற்றுக என்று***
***உன்னும் என் தங்கையர்க்கு***
***உணர்த்துவாய்' என்றாள்.***

***அன்னவள் -*** *சிதை;* ***கூறுவாள் -*** *(சுமந்திரனிடம் செய்தி) சொல்லுவாளாகி;* ***'அரசர்க்கு, அத்தையர்க்கு -*** *தசரதரிடத்தும் மாமியாரிடத்தும்;* ***என்னுடை வணக்கம்முன் இயம்பி -*** *எனது வணக்கத்தை முதலிற் சொல்லி (பிறகு);* ***யான் உடை -*** *என்னுடைய;* ***பொன் நிறப் பூவையும் -*** *பொன்னிறமான நாகணவாய்ப் புள்ளையும்;* ***கிளியும் -*** *கிளியையும்;* ***போற்றுக -*** *பாதுகாக்க;* ***என்று -;*** ***உன்னும் -*** *என்னை நினைக்கின்ற;* ***என் தங்கையர்க்கு -*** *என் சகோதரிகளிடம்;* ***உணர்த்துவாய்' -*** *சொல்லுவாய்;'* ***என்றாள் -.***

*சீதையின் பேதைமைத் தன்மையை இவ் வார்த்தைகள் விளக்கி நின்று இத்தகைய குழந்தைத்தன்மையுடையாள் பின் வனம் புகுந்து எவ்வளவு உயர்ந்த மனவளர்ச்சியும் குண வளர்ச்சியும்பெற்றுத் திகழ்கிறாள் என்பதை அறிந்துகொள்ள உதவுகிறது. தங்கையர் - ஊர்மிளை, மாண்டவி, சுருத கீர்த்தி ஆகியோர் - இவர் ஜனகன் புதல்வியர். இலக்குவன், பரதன், சத்துருக்கனன் மனைவியளர் ஆவர்.* ***39***

இராமன் தேற்றவும் சுமந்திரன் விம்முதல்

***1879. தேர் வலான், அவ் உரை***
***கேட்டு, 'தீங்கு உறின்***
***யார் வலார்? உயிர் துறப்பு***

*எளிது அன்றே?' எனாப்*
*போர் வலான் தடுக்கவும்,*
*பொருமி விம்மினான் -*
*சோர்வு இலாள் அறிகிலாத்*
*துயர்க்குச் சோர்கின்றான்.*

**தேர் வலான் -** சுமந்திரன்; **அவ் உரை கேட்டு -** சீதை சொன்ன அச் சொற்களைக் கேட்டு; **சோர்வு இலாள் -** சிறிதும் தளர்ச்சி இல்லாதவளாய சீதை; **அறிகிலாத் துயர்க்கு -** (வனவாசத்தால் படக் கூடியதாக இப்போது அவள் அறியாம்இருக்கின்ற) துன்பத்தைக் குறித்து; **சோர்கின்றான் -** மனம் வருந்துகின்றவனாய்; **'தீங்கு உறின் -** (ஊழ்வினையால்) தீமை உண்டானால்; **யார் வலார்? -** தடுக்கவல்லவர்கள் யார்; **உயிர் துறப்பு -** உயிரை விடுதல் என்பது; **எளிது அன்றே' -** (அவ்வளவு ) சுலபமானது அல்லவே;' **எனா -** என்று; **போர் வலான் -** போரில் வல்ல இராமன் தடுக்கவும்; **பொருமி விம்மினான் -** மனத்தில் குமைந்துவாய்விட்டுப் பொருமினான்.

சீதை வனம் புகுந்தால் நேரக் கூடிய துன்பத்துக்குச் சிறிதும் கவலையுறாது தான் வளர்த்தகிளியும், பூவையும் பற்றிக் கவலைப்படுகிறாளே என்று அவள் குழந்தைத் தன்மைக்கு மனம் இரங்கிப்பொருமுவான் ஆயினன் சுமந்திரன். இராமனுடன் செல்வதனாலேயே சிறிதும் சோர்வு இல்லாதவனாகச்சீதை இருக்கிறாள் ஆதலின் 'சோர்விலாள்' என்றார். உயிர் துறத்தல் என்பதும் எளிய செயல்அன்று; நான் விரும்பிய போது உயிர் போகாது, அது போக வேண்டிய நேரத்தில்தான் போகும்.ஆகவே, துன்பம் வரின் அனுபவிக்க வேண்டியிருக்குமே அன்றி அதிலிருந்து தப்ப உயிர்துறப்பதும் நம்விருப்பப்படி நடக்கக் கூடிய தல்லவே என்று கருதி வருந்துகிறான் சுமந்திரன். *40*

சுமந்திரன் இராமனிடம் விடைபெற்று இலக்குவனை வினாவல்

*1880.* ***ஆறினன்போல் சிறிது***
***அவலம், அவ் வழி,***
***வேறு இலா அன்பினான்,***
***'விடை தந்தீக' எனா***
***ஏறு சேவகன் - தொழுது,***
***இளைய மைந்தனை,***
***'கூறுவது யாது?' என,***
***இனைய கூறினான்;***

**வேறு இலா அன்பினான்-** (சிறிதும்) வேறுபடாத அன்புடையவனாகிய சுமந்திரன்; **அவ் வழி-** அவ்விடத்து; **அவலம் சிறிது ஆறினன் போல்-** துயரம் சிறிது தெளிந்தவன் ஆகி; (இராமனிடம்), **'விடை தந்தீக' -** விடை கொடுத்தருளுக; **எனா -** என்று சொல்லி (விடை பெற்று); **ஏறு சேவகன் தொழுது -** வீரனாகிய இராமனை வணங்கி; **இளைய மைந்தனை -** இலக்குவனை; **'கூறுவது யாது -** (அரண்மனை சென்று) சொல்ல வேண்டுவது என்ன;' **என -** என்று கேட்க; **இனைய -** (பின் வருவனவற்றை) இத்தகையசொற்களை; **கூறினான் -** அவன் சொன்னான்.

*இராமன், சீதை இருவர்பாலும் செய்தி அறிந்த சுமந்திரன் இலக்குவனையும் அதுபோல்வினாவினான்.* *41 இலக்குவன் சொன்ன செய்தி*

***1881. 'உரைசெய்து எம் கோமகற்கு***
***உறுதி ஆக்கிய***
***தரைகெழு செல்வத்தைத்***
***தவிர, மற்று ஒரு***
***விரை செறி குழலிமாட்டு***
***அளித்த மெய்யனை***
***அரைசன் என்று இன்னம் ஒன்று***
***அறையற் பாலதோ?***

***'எம் கோமற்கு -*** *எம் தலைவனாகிய இராமனுக்கு;* ***உரை செய்து -*** *இவ்வரசுஉனக்கு உரியது என்று சொல்லி;* ***உறுதி ஆக்கிய -*** *அரசவையில் பலர் முன்னிலையில் உறுதிப்படுத்திய;* ***தரை கெழு செல்வத்தை -*** *கோசல நாட்டொடு பொருந்திய அரசாட்சிச்செல்வத்தை;* ***தவிர -*** *இராமன் ஆளாமல் தவிரும்படி;* ***மற்று ஒரு -*** *வேறாகிய ஒரு;* ***விரை செறி குழலி மாட்டு -*** *மணம் பொருந்திய கூந்தலை உடைய கைகேயியிடம்;* ***அளித்த -*** *கொடுத்துவிட்ட;* ***மெய்யனை -*** *சத்திய வாக்கினனாய தயரதனை;* ***அரைசன் என்று -*** *அரசன் என்று;* ***இன்னமும் அறையற்பாலதோ?' -*** *இனியும் சொல்லுதல் தகுதியுடையது ஆகுமோ.'*

*அரசவையில் உறுதிசெய்ததை அந்தப்புரத்தில் மாற்றியவன் சத்திய சந்தனா, அரசனாஎன்று வெகுட்சியாகக் கேட்கிறான் இலக்குவன், 'மெய்யனை' என்பது இகழ்ந்துரைத்த வார்த்தை.'அவன் அரசனாதற்குத் தகுதியுடையவன் அல்லன்; அவனுக்கென்ன நான் செய்தி சொல்லியனுப்புவது' என்கின்ற சினவெறுப்புப் புலனாதல் காண்க.* *42*

***1882. 'கானகம் பற்றி நல் புதல்வனை காய் உண,***
***போனகம் பற்றிய பொய் இல் மன்னற்கு, இங்கு***
***ஊனகம் பற்றிய உயிர்கொடு, இன்னும் போய்***
***வானகம் பற்றிலா வலிமை கூறு' என்றான்.***

***'நல் புதல்வன் -*** *(தன்னுடைய) நல்ல மகன்;* ***கானகம் பற்றி -*** *காட்டை அடைந்து;* ***காய் உண -*** *(காட்டில் கிடைக்கும்) காய் முதலியவற்றை உண்ண;* ***போனகம்பற்றிய -*** *(அரண்மனையில் இருந்து) அறுசுவை உண்டி அருந்துகின்ற;* ***பொய் இல்மன்னர்க்கு -*** *சத்திய வேந்தனுக்கு;* ***இங்கு -*** *இவ்வுலகில்;* ***ஊன் அகம் பற்றிய உயிர்கொடு -*** *உடம்பிடத்தைப் பற்றியுள்ள உயிரைப் பிடித்துக்கொண்டு (வாழ்ந்து கொண்டிருந்து);* ***இன்னும் போய் வானகம் பற்றிலா வலிமை -*** *இன்னமும் இறந்து போய் மேல் உலகத்தை அடையாத வலிமையை;* ***கூறு' -*** *ஆற்றலைநினைவூட்டிச் சொல்;'* ***என்றான் -.***

*போனகம் - அறுசுவை உணவு. 'பொய்யில் மன்னன்' என்றது மேலது போல் இகழ்வுரை.'அன்பற்ற மன்னனுக்குச் சத்தியம் ஒரு கேடா' என்று ஆத்திரம் அடைகிற இலக்குவனின்மனப்பாங்கு வெளிப்படுகிறது. இராமன்பால் கொண்ட*

*பேரன்பினால் பேசுகிறான் ஆதலின்,தசரதனை முழுமையாக அறிந்திலன் என்க. 'ஏன் தசரதனும் இராமனுடன் கானகம் வந்திருக்கக் கூடாது'என்பது இலக்குவனின் குறிப்பாக இப்பாடலில் தோன்றும். 43*

***1883.* 'மின்னுடன் பிறந்த வாள்**
**பரத வேந்தற்கு, "என்**
**மன்னுடன் பிறந்திலென்;**
**மண்கொண்டு ஆள்கின்றான் -**
**தன்னுடன் பிறந்திலென்;**
**தம்பி முன் அலென்;**
**என்னுடன் பிறந்த யான்**
**வலியென்" என்றியால்.**

***'மின் உடன் பிறந்த வாள் பரத வேந்தற்கு -*** *ஒளியுடன் கூடிய வாளை ஏந்திய பரதசக்கரவர்த்திக்கு;* ***'என் மன்னுடன் பிறந்திலென் கொண்டு ஆள்கின்றான் தன்னுடன்பிறந்திலென் -*** *இராச்சியத்தைக் கொண்டு ஆளுகின்ற அரசனாகிய பரதனுடன் பிறந்தேனும்அல்லேன்;* ***தம்பி முன் அலேன் -*** *தம்பியாகிய சத்துருக்கனனுக்கு அண்ணனாகவும் இல்லேன்;என்னுடன் பிறந்த நான்;* ***வலியன்' -*** *இன்னமும் வலிமையோடுதான் இருக்கின்றேன்;* ***என்றி -*** *என்று சொல்லுக.'*

*பரதனுக்குச் சொல்லியனுப்பிய செய்தி. இலக்குவன் விரக்தி, கோபம், இகழ்ச்சி, அவலம் ஆகியவற்றின் உச்ச நிலையில் இருந்து பேசுகிற பேச்சாக இது உள்ளது. தம்பியாகியசத்துருக்கனன் பரதனுடன் சேர்ந்திருத்தல்பற்றி அவனையும் வெறுத்தான் ஆதல் அறிக. 'ஆல்'ஈற்றசை. 44*

*இராமன் இளவலை அடக்க, சுமந்திரன் புறப்படுதல்*

***1884.* ஆரியன் இளவலை நோக்கி, 'ஐய! நீ**
**சீரிய அல்லன செப்பல்' என்றபின்,**
**பாரிடை வணங்கினன், பதைக்கு நெஞ்சினன்;**
**தேரிடை வித்தகன் சேறல் மேயினான்.**

***ஆரியன் இளவலை நோக்கி -*** *இராமன் இலக்குவனைப் பார்த்து;* ***'ஐய! -*** *ஐயனே;* ***நீ -; சீரிய அல்லன செப்பல்' -*** *சிறந்தன அல்லாத சொற்களைச் சொல்லாதே;'* ***என்றபின் -*** *என்ற பிறகு;* ***தேரிடைவித்தகன் -*** *தேர்செலுத்தலில் திறமையாளனாகிய சுமந்திரன்;* ***பதைக்கும் நெஞ்சினன் -*** *துடிக்கும்மனம் உடையனாய்;* ***பாரிடை வணங்கினன் -*** *நிலத்தில் விழுந்து வணங்கி;* ***சேறல் மேயினான் -*** *செல்லத்தொடங்கினான்.*

*வித்தகன் - திறமை உடையவன். இங்குத் தேரோட்டும் திறமையும், மந்திரித் தன்மையும்ஆம். 45*

***1885.* கூட்டினன் தேர்ப் பொறி; கூட்டி, கோள்முறை**
**பூட்டினன் புரவி; அப் புரவி போம் நெறி**

***காட்டினன்; காட்டி, தன் கல்வி மாட்சியால்***
***ஒட்டினன், ஒருவரும் உணர்வுறாமலே.***

*(சுமந்திரன்)* **தேர்ப் பொறி -** *தேராகிய பொறியை;* **கூட்டினன் -** *தயார்செய்தான்;* **கூட்டி -** *அவ்வாறு ஆயத்தம் செய்து;* **புரவி -** *குதிரைகளை;* **கோள் முறை -** *கொள்ளுகின்ற முறையிலே;* **பூட்டினன் -** *தேரில் பூட்டினான்;* **அப்பரவி போம் நெறிகாட்டினன் -** *அந்தக் குதிரைகளுக்குப் போகும் வழியைக்காண்பித்தான்;* **ஒருவரும் உணர்வு உறாமல் -** *(உறங்குகின்ற உடன் வந்த நகர மாந்தர்)ஒருவரும் சிறிதும் உணராதபடி;* **தன் கல்வி மாட்சியால் -** *தன் தேரொட்டும் கல்விச் சிறப்பால்;* **ஓட்டினன் -** *(ஒலியில்லாமல்) ஓட்டினான்.*

*குதிரைகளைத் தேரிற் பூட்டுங்கால் சேணம் இட்டுக் கண்ணை மறைப்பர் ஆதலின், 'போம்நெறி காட்டினன்' என்றார். இனி, தேர் சென்ற கவடுகறைக் காட்டிச் சென்றான் என்றல் இங்குச்சிறப்பின்மை அறிக. கூட்டினன் - கூட்டி, காட்டினன் - காட்டி, என்று ஒன்றை ஒன்று சொற்கள் தொடர்தலின் 'ஏகாவளி' என்னும் அலங்காரமாம். 'கோள் முறை' என்பது குதிரைகள் வலம், இடம்பூட்டும் முறையாகும். 'ஏ' காரம் ஈற்றசை.*
***46***

*இராமன் முதலிய மூவரும் இரவில் செல்லுதல்*

***1886. தையல்தன் கற்பும், தன் தகவும், தம்பியும்,***
***மை அறு கருணையும் , உணர்வும், வாய்மையும்,***
***செய்ய தன் வில்லுமே, சேமமாகக் கொண்டு,***
***ஐயனும் போயினான், அல்லின் நாப்பணே.***

**'ஐயனும் -** *இராமனும்;* **அல்லின் நாப்பண் -** *நள்ளிரவில்;* **தையல்தன்கற்பும் -** *சீதையின் கற்பும்;* **தன் தகவும் -** *தன் மேன்மைப் பண்பும்;* **நம்பியும் -** *இலக்குவனும்;* **மை அறு கருணையும் -** *குற்றமற்ற அருளும்;* **உணர்வும் -** *ஞானமும்;* **வாய்மையும் -** *சக்தியமும்;* **செய்ய தன் வில்லும் -** *நேரிய தனது வில்லும் (ஆகிய இவற்றையே);* **சேமம் ஆகக் கொண்டு -** *தனக்குப் பாதுகாவலாகக் கொண்டு;* **போயினான் -** *சென்றான். தகவும், கற்பும், கருணையும், வாய்மையும் அருவப் பொருள்கள். தம்பியும், வில்லும்உருவப்பொருள்கள். இரண்டையும் உள்ளும் வெளியும் பாதுகாக்கும் உதவிகளாகக் கூறியது ஒரு நயம்.'வில்லுமே' 'ஏ' காரம் சிறப்பு. 'நாப்பணே' 'ஏ' காரம் ஈற்றசை.* ***47***

*நிலவொளி தோன்றல்*

*அறுசீர் விருத்தம்*

***1887. பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை***
***அரக்கரைப் பொருந்தி, அன்னார்***
***செய் வினைக்கு உதவும் நட்பால்***
***செல்பவர்த் தடுப்பது ஏய்க்கும்,***
***மை விளங்கியதே அன்ன***

**வயங்கு, இருள் துரக்க, வானம்**
**கைவிளக்கு எடுத்தது என்ன,**
**வந்தது - கடவுள் திங்கள்.**

***பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரை*** *- வஞ்சகத் தொழிலைச் செய்வதற்குஉதவியாயிருக்கும் வாழ்க்கை உடைய இராக்கதரை;* ***பொருந்தி*** *- நட்பாகச்சேர்ந்திருந்து;* ***அன்னார்*** *- அந்த அரக்கரின்;* ***செய்வினைக்கு*** *- செய்கின்ற(கொலை, களவு, கள், காமம், பொய் என்கின்ற) தீத் தொழிலுக்கு;* ***உதவும் நட்பால்*** *- உதவுகின்ற சிநேகத் தன்மையால்;* ***செல்பவர்*** *- அந்த அரக்கரை அழிக்கச் செல்லுகின்ற இராமலக்குவரை;* ***தடுப்பது ஏய்க்கும்*** *- செல்லாத படி தடுப்பதை ஒத்திருக்கின்ற;* ***மைவிளக்கியதே அன்ன*** *- அஞ்சனத்தை மேலும் விளக்கிக் கருமை ஆக்கியது போல் உள்ள;* ***வயங்கு இருள்*** *- விளக்கிய இருட்டை;* ***துரக்க*** *- ஓட்டிவிடுமாறு;* ***வானம்*** *- ஆகாயம்;* ***கைவிளக்கு*** *- சிறு விளக்கை;* ***எடுத்தது என்ன*** *- எடுத்து நிற்கிறது என்று சொல்லும்படி;* ***கடவுள் திங்கள்*** *- தெய்வத்தன்மை வாய்ந்த சந்திரன்;* ***வந்தது*** *- தோன்றியது*

*அரக்கர் கருநிறம் உடையவர்; இருள் கருமையானது. அரக்கர் தீய தொழில் செய்பவர்; இருள் தீய தொழில்கள் நிகழ்வதற்குப் பொருந்தி உதவி செய்வது; இதனால் அரக்கர்க்கு நட்பாக இருக்கிற இருள் என்றார். அரக்கரை அழிக்கச் செல்கிற இராமலக்குவர்கள் வனத்தில் மேற்செல்லாதபடி அவ்விருள் தடுக்கிறது. அப்போது வானம் அவர்கள் செல்வதற்குதவியாகக் கைவிளக்கை எடுத்துக் காட்டுவது போல் நிலவொளி தோன்றியது என்று சந்திரோதயத்தைத் தற்குறிப்பேற்றம் செய்தார். 'ஏறனாற் கிருளை நீங்கக் கைவிளக் கேந்தி யாங்கு, வீறுயர் மதியம் தோன்ற' (சீவக. 1542) என்ற திருத்தக்க தேவர் வாக்கை இங்கு ஒப்பிடுக.* ***48***

***1888.*** **மருமத்துத் தன்னை ஊன்றும்**
**மறக் கொடும் பாவம் தீர்க்கும்**
**உரும் ஒத்த சிலையினோரை**
**ஒருப்படுத்து உதவி நின்ற**
**கருமத்தின் விளைவை எண்ணிக்**
**களிப்பொடு காண வந்த**
**தருமத்தின் வதனம் என்னப்**
**பொலிந்தது - தனி வெண் திங்கள்.**

***தன்னை*** *- (தருமமானது) தன்னை;* ***மருமத்து*** *- உயிர் நிலையில்;* ***ஊன்றும்*** *- தாக்குகின்ற;* ***மறக் கொடும் பாவம்*** *- கொலைத் தன்மை உடைய கொடிய பாவத்தை;* ***தீர்க்கும்*** *- அழிக்கின்ற;* ***உரும் ஒத்த சிலையினோரை*** *- இடியைஒத்த வில்லை உடையவர்களாய இராம இலக்குவர்களை;* ***ஒருப்படுத்து*** *- (காட்டிற்கு வருமாறு)உடன்படுத்தி;* ***உதவி நின்ற*** *- தனக்கு உதவிசெய்து நின்ற;* ***கருமத்தின் விளைவை எண்ணி*** *- நல்வினைப் பயனை மனத்தின்கண் கருதி;* ***களிப்பொடு*** *- மகிழ்ச்சியோடு;* ***காண வந்த*** *- அவர்களைப் பார்ப்பதற்கு வந்த;* ***தருமத்தின் வதனம் என்ன*** *- தருமதேவதையின் முகம் போல;* ***தனி வெண் திங்கள்*** *- ஒப்பற்ற வெண்மையான சந்திரன்;* ***பொலிந்தது*** *- விளக்கியது.*

*அரக்கரை அழித்துத் தன்னைக் காக்க வந்த இராம இலக்குவர்களைக் காண வந்த தருமதேவதையின் முகம் போலச் சந்திரன் பிரகாசித்தான் என்றது தற்குறிப்பேற்றவணி.அரக்கர்க்குப் பயந்து இதுகாறும் ஒளிந்திருந்த தரும தேவதை தனக்கு உதவி செய்வார் வந்தபடியால்அவர்களைக் காண முகம் காட்டியது என்றார். மருமம் - உயிர்நிலை - தருமத்தின் ஆணிவேரையேஅழிக்கிறவர் அரக்கர் என்பதாம்.* ***49***

*நிலவில் மலர்கள்*

***1889. காம்பு உயர் கானம் செல்லும்***
***கரியவன் வறுமை நோக்கித்***
***தேம்பின குவிந்த போலும்***
***செங்கழு நீரும்; சேரைப்***
***பாம்பின தலைய ஆகிப்***
***பரிந்தன, குவிந்து சாய்ந்த,***
***ஆம்பலும்; என்றபோது,***
***நின்ற போது அலர்வது உண்டோ?***

***காம்பு உணர் கானம் செல்லும் கரியவன் -*** *மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்துள்ளகாட்டில் செல்லுகின்ற இராமனது;* ***வறுமை நோக்கி -*** *(அரச அணிகள் எதுவும் இல்லாத)எளிய வறிய நிலையைப் பார்த்து;* ***தேம்பின*** *- மனம் வருந்தி;* ***செங்கழு நீரும் -*** *செங்கழுநீர்ப் பூக்களும்;* ***குவிந்த போலும் -*** *குவிந்தவற்றை ஒத்துள்ளன;* ***ஆம்பலும் -*** *(இரவில் மலர்ந்திருக்க வேண்டிய) ஆம்பற்பூக்களும்;* ***சேரைப் பாம்பின தலைய ஆகி*** *- சாரைப் பாம்பின் தலையைப்போன்றவையாய்;* ***பரிந்தன -*** *மனம் வருந்தி;* ***குவிந்து சாய்ந்து -*** *வாய்குவிந்து சாய்ந்து கிடந்தன;* ***என்ற போது -*** *என்றால்;* ***நின்ற -*** *மிகுந்துள்ளமற்றைய;* ***போது*** *- மலர்கள்;* ***அலர்வது உண்டோ? -*** *மலர்தல் உளதாகுமோ.*

*செங்கழுநீர் இரவில் குவிதல் இயல்பு. அதனை இராமன் வறுமை நிலை நோக்கி மனம்வருந்திக் குவிந்ததாகக் கூறியது கவிஞரின் தற்குறிப்பேற்றம். இனி இரவில் மலர்ந்திருக்கவேண்டிய ஆம்பல் (குமுதம்) மலரே குவிந்து சாய்ந்தன என்றால் மற்றை மலர்களைச் சொல்லவே வேண்டாம் என்றார். ஓரறிவுயிர்கள் இராமன்பால் காட்டும் அன்பின் செறிவைப்புலப்படுத்தினார். மாலை நேரத்தில் அதாவது முன்னிரவில் குமுதம் மலராதிருத்தலை, 'குண்டு நிர்ஆம்பலும் குவிந்தன் இனியே, வந்தன்று வாழியோ மாலை' (குறுந். 122.). என்பது கொண்டுஅறிக. குவிந்த ஆம்பலுக்குச் சாரைப் பாம்பின் தலை உவமை. படம் எடுக்காத பாம்பு சாரைஆதலின் அது உவமையாயிற்று. சாரை - சேரை ஒன்றே. என்ற போது - போது - காலப் பெயர் -நின்ற போது - மலர். பொழுது என்னும் காலப் பெயர். அக்காலத்தே மலரும் மலருக்குப்பெயராய்ப் போது எனவந்தது. மலர் மலர்வதை வைத்துக் காலை - உச்சி மாலை முன்னிரவு, நள்ளிரவு, பின்னிரவு எனக்காலங்களை அறிதல் பழக்கம்.* ***50***

*மூவரும் நிலவொளியில் செல்லுதல்*

***1890. அஞ்சனக் குன்றம் அன்ன***
***அழகனும், அழகன்தன்னை***

***எஞ்சல் இல் பொன் போர்த்தன்ன***
***இளவலும், இந்து என்பான்***
***வெஞ்சிலைப் புருவத்தாள்தன்***
***மெல் அடிக்கு ஏற்ப, வெண் நூல்***
***பஞ்சு இடைப் படுத்தாலன்ன***
***வெண் நிலாப் பரப்ப, போனார்.***

***அஞ்சனக் குன்றம் அன்ன அழகனும்-*** *மை மலை ஒத்த இராமனும்;* ***அழகன்தன்னை -*** *அவ்விராமனை;* ***எஞ்சல் இல் -*** *குறைதலில்லாத;* ***பொன் போர்த்து அன்ன -*** *பொன்னால் மூடினாற் போன்ற;* ***இளவலும் -*** *இலக்குவனும்;* ***வெஞ்சிலைப் புருவத்தாள் தன்மெல்லடிக்கு ஏற்ப -*** *கொடிய வில்லை ஒத்த புருவத்தை உடைய சீதையின் மென்மையான பாதத்திற்குப் பொருந்தும்படி;* ***வெண் நூல் பஞ்சு இடைப்படுத்தால் அன்ன -*** *வெண்மையானநூலை உண்டாக்கும் பஞ்சை வழியெல்லாம் பரப்பி வைத்தாற் போல;* ***இளநிலா -*** *இளையநிலவொளியை;* ***இந்து என்பான் -*** *சந்திரன் என்கிறவன்;* ***பரப்ப -*** *எங்கும்பரவச் செய்ய;* ***போனார் -*** *காட்டில் பரவிய நிலவொளி வெண்பஞ்சைப் பரப்பியது போன்றுள்ளது. சீதையின் மெல்லியகால்களுக்குக் காட்டுவழி கூர்ங்கற்களால் உறுத்துமே என்று கருதிச் சந்திரன் வெண்பஞ்சைப்பரப்பியது போல நிலவொளி பரந்தது என்பது தற்குறிப்பேற்றம். இராம இலக்குவர்கள்நிறத்தால் கருமையும். பொன்மையும் உடையவர்களே அன்றி உருவத்தால் ஒரே வடிவம் உடையவர்கள்என்பதால் 'அழகன் தன்னைப் பொன் போர்த்தன்ன இளவல்' என்றார். பின் சடாயு இவர்களைக்கானகத்தில்முதலில் கண்டபோது 'என் துணைவன் ஆழியான், ஒருவனை, இருவரும் ஒத்துள்ளார்'(2704.) என்று பேசுவதாகக் கம்பர் கூறுவதை இங்குக் கருதுக.* ***51***

*சீதை செல்லுதல்*

***1891. சிறு நிலை மருங்குல் கொங்கை***
***ஏந்திய செல்வம் என்னும்***
***நெறி இருங் கூந்தல் நங்கை***
***சீறடி, நீர்க் கொப்பூழின்***
***நறியன, தொடர்ந்து சென்று***
***நடத்தலின், 'நவையின் நீங்கும்***
***உறு வலி, அன்பின் ஊங்கு***
***ஒன்று உண்டு' என உணர்வது உண்டோ?*** [1]

***சிறுநிலை மருங்குல் -*** *மிகவும் இளைத்த (சிறிய நிலைமை உடைய) இடையுடன்;* ***கொங்கை -*** *(பருத்த) முலைகளை;* ***ஏந்திய -*** *தாங்கிய;* ***செல்வம் என்னும் -*** *திரு என்று சொல்லப்பெறும்;* ***நெறி இருங்கூந்தல் நங்கை -*** *நெறிப்புடைய கரிய கூந்தலைஉடைய சீதையின்;* ***சீறடி -*** *சிறிய பாதம்;* ***நீர்க் கொப்பூழின் நறியன -*** *நீரின்கண் தோன்றும் குமிழியைக் காட்டிலும் மென்மையானவை (ஆயினும்);* ***தொடர்ந்து சென்று நடத்தலின் -*** *இராமனைப் பின்பற்றிச் சென்று நடக்கின்றபடியால்;* ***'நவையின்நீங்கும் -*** *துன்பத்தில் நீங்கிய;* ***உறுவலி அன்பின் -*** *மிக்க வலிமை உடையஅன்பைக் காட்டிலும்;* ***ஒன்று -*** *வலியுடைய ஒரு பொருள்;* ***ஊங்கு உண்டு' -*** *இங்கேஉள்ளது;* ***என உணர்வது உண்டோ -*** *என்று அறிய முடியுமா (முடியாது என்றபடி).*

*அன்பு எதையும் சாதிக்கும். சீதையின் மெல்லிய அடி இராமனுடைய வேகத்துக்கும், காட்டின்கடுமைக்கும் ஈடு கொடுத்து நடக்கிறதென்றால் இராமன்பால் அவள் கொண்ட அளப்பருங் காதலேஅதற்குக் காரணம் என்பதாம். அடியை நீர்க்குமிழி போன்ற மென்மை உடையது என்பது அரிய உவமை.* ***52***

*மூவரும் தென்திசை நோக்கி இரண்டு யோசனை தூரம் செல்லுதல்*

***1892. பரிதி வானவனும், கீழ்பால்***
***பரு வரை பற்றாமுன்னம்.,***
***திருவின் நாயகனும், தென்பால்***
***யோசனை இரண்டு போனான்;***
***அருவி பாய் கண்ணும், புண்ணாய்***
***அழிகின்ற மனமும், தானும்,***
***துரித மான் தேரில் போனான்***
***செய்தது சொல்லலுற்றாம்.***

***பரிதி வானவனும் -*** *சூரிய தேவனும்;* ***கீழ்பால் பருவரை -*** *கிழக்கே உள்ளஉதயமலையில்;* ***பற்ற முன்னம் -*** *பற்றித் தோன்றும் முன்னர்;* ***திருவின் நாயகனும் -*** *திருமகள் கேள்வானாகிய இராமனும்;* ***தென்பால் -*** *தெற்கே;* ***இரண்டு யோசனை போனான்-*** *இரண்டு யோசனை அளவுள்ள தூரம் சென்றான்;* ***அருவி பாய் கண்ணும் -*** *அருவி போலக்கண்ணீர் வழிகின்ற கண்ணும்;* ***புண்ணாய் அழிகின்ற மனமும் -*** *புண்பட்டு வருந்துகின்ற மனமும்;* ***தானும் -*** *தானுமாகி;* ***துரித மான் தேரில் -*** *வேகமான குதிரைகள் பூட்டியதேரில்;* ***போனான் -*** *சென்ற சுமந்திரன்;* ***செய்தது -*** *செய்த செயல்களை;* ***செப்பலுற்றாம் -*** *(இனிச்) சொல்லத் தொடங்கினோம்.*

*யோசனை என்பது நீட்டல் அளவைப் பெயர். துரிதம் - வேகம்.* ***53***

*சுமந்திரன் வசிட்டனை காணுதல்*

***1893. கடிகை ஓர் இரண்டு மூன்றில்,***
***கடி மதில் அயோத்தி கண்டான்;***
***அடி இணை தொழுதான், ஆதி***
***முனிவனை; அவனும், உற்ற***
***படி எல்லாம் கேட்டு, நெஞ்சில்***
***பருவரல் உழந்தான்; முன்னே***
***முடிவு எலாம் உணர்ந்தான், 'அந்தோ!***
***முடிந்தனன், மன்னன்' என்றான்.***

***கடிகை ஓர் இரண்டு மூன்றில் -*** *ஐந்து நாழிகைப் போதில்;* ***கடிமதில்அயோத்தி கண்டான் -*** *காப்பமைந்த மதிலையுடைய அயோத்தி நகரத்தை அடைந்து;* ***ஆதிமுனிவனை -*** *வசிட்டனை;* ***அடி இணை தொழுதான் -*** *பாதத்தில் வணங்கினான்;* ***அவனும்-*** *வசிட்ட முனிவனும்;* ***உற்றபடி எலாம் கேட்டு -*** *வனத்தில் நடந்தவையெல்லாம்கேட்டறிந்து;* ***நெஞ்சில் பருவரல் உழந்தான் -*** *மனத்தில் துக்கம்*

*கொண்டு வருந்தி;* ***முன்னே முடிவு எலாம் உணர்ந்தான் -*** *இனி வரப் போவதை எல்லாம் உணர்ந்தவனாய்;* ***'அந்தோ முடிந்தனன் மன்னன்' என்றான் -*** *ஐயோ! அரசன் இறந்து போனான் என்றான்.   இராமன் திரும்பாமல் வனம் சென்றுவிட்டான் என்ற செய்தியைச் சுமந்திரன் மூலம் அறிந்த வசிட்டன் 'இனி அரசன் இறந்து போவது உறுதி' என்கின்ற கருத்தில்'முடிந்தனன் மன்னன்' என்றான். 'தெளிவின்கண் எதிர்காலம் இறந்தகாலம் ஆயிற்று; காலவழுவமைதி. ஐந்து நாழிகை இரண்டு மணி. கடிகை - நாழிகை.* ***54***

வசிட்டன் சுமந்திரனோடு தயரதனை அடைதல்

***1894. 'நின்று உயர் பழியை அஞ்சி***
***நேர்ந்திலன் தடுக்க, வள்ளல்;***
***ஒன்றும் நான் உரைத்தல் நோக்கான்,***
***தருமத்திற்கு உறுதி பார்ப்பான்;***
***வென்றவர் உளரோ மேலை***
***விதியினை?' என்று விம்மிப்***
***பொன் திணி மன்னன் கோயில்***
***சுமந்திரனோடும் போனான்.***

**'வள்ளல் -** *தசரதன;* ***நின்று உயர் பழியை அஞ்சி -*** *உலகத்தில் நிலைத்துநின்று மேன்மேல் வரும் பழிக்குப் பயந்து;* ***தடுக்க நேர்ந்திலன்*** *- இராமன் காடுசெல்வதைத் தடுக்க உடன்பட்டானில்லை;* ***தருமத்திற்கு உறுதி பார்ப்பான் -*** *தருமம்நிலைபெறும் தன்மையை எப்பொழுதும் நாடுபவனாகிய இராமன்;* ***நான் உரைத்தல் ஒன்றும்நோக்கான் -*** *(வனம் போக வேண்டாம் என்று) நான் சொல்லியது ஒரு வார்த்தையும் கருதான் ஆயினன்;* ***மேலை விதியினை வென்றவர் உளரோ?' -*** *பழைய வினையை வெற்றி கொண்டவர் யாராவது இருக்கிறார்களா?;'* ***என்று விம்மி -*** *என்று புலம்பிக்கொண்டு;* ***சுமந்திரனோடும்-; மன்னன் பொன் திணி கோயில் -*** *தசரதனது பொன்னாற் செய்தஅரண்மனைக்குள்;* ***போனான் -.***

*வசிட்டன் உரைத்தது 'ஐய! நீ ஒரு ஓங்கிய, கல்தடம் காணுதி என்னின், கண் அகல் மல் தடந்தானையான் வாழ்கிலான்' என்பது (1766). நகர் நீங்குபடலம்160 ஆம் பாடலும் (1764.) இதனுடன் கருதத்தக்கதாகும்.* ***55***

***1895. 'தேர் கொண்டு வள்ளல் வந்தான்'***
***என்று தம் சிந்தை உந்த,***
***ஊர் கொண்ட திங்கள் என்ன***
***மன்னனை உழையர் சுற்றிக்***
***கார்கொண்ட மேனியானைக்***
***கண்டிலர்; கண்ணில், வற்றா***
***நீர்கொண்ட நெடுந் தேர்ப் பாகன்***
***நிலை கண்டே, நிலையின் தீர்ந்தார்.***

***உழையர்*** - *மந்திரிமார்;* ***வள்ளல் தேர்கொண்டு வந்தான் என்று தம் சிந்தைஉந்த*** - *இராமன் தேர்மீது ஏறித் திரும்பி வந்துவிட்டான் என்று தம் மனம் தூண்ட;* ***மன்னனை*** - *தசரதனை;* ***ஊர்கொண்ட திங்கள் என்ன*** - *பரிவேடத்தாற் சூழப்பெற்றசந்திரன் போல;* ***சுற்றி -; கார் கொண்ட மேனியானைக் கண்டிலர்*** - *மேகம் போன்றமேனியுடைய இராமனைக் காணாதவராய்;* ***கண்ணில்-; வற்றா நீர் கொண்ட*** - *வறளாத பெருக்கெடுக்கும் நீரைக் கொண்ட;* ***நெடும் தேர்ப்பாகன் நிலை கண்டு*** - *நெடிய தேரைச்செலுத்தும் சுமந்திரனது நிலைமையைப் பார்த்து;* ***நிலையின் தீர்ந்தார்*** - *தமது நிலைகெட்டழிந்தார்கள்.*

*ஊர் - ஊர்கோள். சந்திரனைச் சுற்றிய ஒளி வட்டம். பரிவேடம் எனவும் பெறும். உழையர்- அமைச்சர் - ''அறிகொன் றறியான் எனினும், உறுதி, உழை இருந்தான் கூறுல் கடன்' (குறள்.638)என்பதனுள் அமைச்சனை 'உழை இருந்தான்' எனல் காண்க.*
***56***

*தயரதன் வினாதல்*

***1896. 'இரதம் வந்து உற்றது' என்று,***
***ஆங்க யாவரும் இயம்பலோடும்,***
***வரதன் வந்துற்றான் என்ன,***
***மன்னனும் மயக்கம் தீர்ந்தான்***
***புரை தபு கமல நாட்டம்***
***பொருக்கென விழித்து நோக்கி,***
***விரம மா தவனைக் கண்டான்.***
***'வீரன் வந்தனனோ? என்றான்.***

***'இரதம் வந்து உற்றது' என்று***- *(காடு சென்ற) தேர் வந்து சேர்ந்தது என்று;* ***ஆங்கு யாவரும் இயம்பலோடும்*** - *அங்குள்ள அனைவரும் சொல்லியவுடன்;* ***மன்னனும்*** - *தசரதனும்;* ***'வரதன் வந்துற்றான்' என்ன*** - *இராமன் வந்து சேர்ந்தான் என்று கருதி;* ***மயக்கம் தீர்ந்தான்*** - *மன மயக்கம் நீங்கினவனாய்;* ***புரைதபு கமல நாட்டம்*** - *குற்றம் அற்ற தாமரை மலர்போலும் கண்கள்;* ***'பொருக்' என*** - *சடக்கென;* ***விழித்துநோக்கி*** - *திறந்து பார்த்து;* ***விரத மாதவனைக் கண்டான்*** - *நோன்பு மேற்கொண்ட சிறந்த வசிட்ட முனிவனைக் கண்டு;* ***'வீரன் வந்தனனோ'? -*** *இராமன் திரும்பி வந்தானோ;* ***என்றான் -***

*'பொருக்' விரைவுக் குறிப்பு மொழி. வரதன் - இராமன்; வேண்டுவார் வேண்டுவன தருபவன்என்னும் பொருளது.* *57 வசிட்டன் உரையாது அகலுதல்*

***1867. 'இல்லை' என்று உரைக்லாற்றான்***
***ஏங்கினன், முனிவன் நின்றான்;***
***வல்லவன் முகமே, 'நம்பி***
***வந்திலன்' என்னும் மாற்றம்***
***சொல்லலும், அரசன் சோர்ந்தான்;***
***துயர் உறு முனிவன், 'நான் இவ்***

***அல்லல் காண்கில்லேன்' என்னா,***
***ஆங்கு நின்று அகலப் போனான்.***

***முனிவன் -*** *வசிட்ட முனிவன்;* ***'இல்லை' என்று உரைக்கலாற்றான் -*** *(இராமன்) வரவில்லை என்று சொல்ல முடியாதவனாய்;* ***ஏங்கினன் நின்றான் -*** *மனம்வருந்திச் சும்மா இருந்தான்;* ***வல்லவன் முகமே -*** *தவத்தால் வலிய வசிட்டனது முகந்தானே;* ***'நம்பி வந்திலன்' -*** *இராமன் மீள வரவில்லை;* ***என்னும் மாற்றம்சொல்லலும் -*** *என்கின்ற வார்த்தையைத் தசரதனுக்குக் கூறுதலும்;* ***அரசன் சோர்ந்தான் -*** *தசரதன் தளர்ந்தான்;* ***துயர் உறு முனிவன் -*** *துன்பமுற்ற முனிவன்;* ***'நான் இவ் அல்லல்காண்கில்லேன்' என்னா -*** *நான் இந்தத் துன்பத்தைக் காணும் ஆற்றல் இல்லேன் என்றுசொல்லி;* ***ஆங்கு நின்று -*** *அவ்விடத்திலிருந்து;* ***அகலப் போனான் -*** *அகன்றுஅப்பால் சென்றான்.*

*உள்ளக் கருத்தை முகம் தெரிவிக்குமாதலின், முனிவன் முகத்தைக் கண்டு அவன் அகக்கருத்தைத்தயரதன் அறிந்து சோர்ந்தானாம். 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்' என்பது (குறள். 706.) இங்கே நோக்கத் தக்கது. ஆற்றல் சான்ற சிறந்ததவமுனிவனாகிய வசிட்டன் பற்றும் பாசமும் அற்ற துறவி. அவனாலேயே தசரதனின் துன்பம் காணஇயலவில்லை என்றால், தசரதனது துன்பத்தின் அளவு மிகுதியும், அவன் இராமன்பால்கொண்டிருந்த அன்பின் மிகுதியும் புலப்படும். யாரை நோக்கி வினாவினானோ அவன் முகத்தையேகண்டான் என்றலே பொருந்தும். ஆதலின் வல்லவன் என்பது சுமந்திரனை அன்று.* ***58***

*தசரதன் சுமந்திரன் மூலம் செய்தி அறிந்து உயிர் நீத்தல்*

***1898. நாயகன், பின்னும், தன் தேர்ப்***
***பாகனை நோக்கி, 'நம்பி***
***சேயனோ? அணியனோ?' என்று***
***உரைத்தலும், தேர் வலானும்,***
***'வேய் உயர் கானம், தானும்,***
***தம்பியும், மிதிலைப் பொன்னும்,***
***போயினன்' என்றான்; என்ற***
***போழ்தத்தே ஆவி போனான்.***

***நாயகன் -*** *தசரதன்;* ***பின்னும் -*** *திரும்ப;* ***தன் தேர்ப்பாகனை நோக்கி -*** *தன்னுடைய சாரதியாகிய சுமந்திரனைப் பார்த்து;* ***'நம்பி சேயனோ அணியனோ?'என்று உரைத்தலும் -*** *இராமன் தொலைவில் உள்ளானோ அண்மையில் உள்ளானோ என்று கேட்க;* ***தேர் வலானும் -*** *சுமந்திரனும்;* ***தானும் -*** *இராமனும்;* ***தம்பியும் -*** *இலக்குவனும்;* ***மிதிலைப் பொன்னும் -*** *மைதிலியுமாக;* ***வேய் உயர் கானம் -*** *மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்துள்ள காட்டுக்கு;* ***போயினன் -*** *சென்றான்:'* ***என்றான்-; என்ற போழ்தத்தே -*** *என்று அவன் கூறிய அப்பொழுதே;* ***ஆவி போனான் -*** *(தசரதன்) உயிர் நீத்தான்.*

*தயரதன் தன்வாயால் காடு என்ற வார்த்தையைக் கூறுதற்கும் ஒவ்வாது அஞ்சி, முன்பும் 'வீரன்வந்தனனோ' என்றதும், இங்கும் 'சேயனோ அணியனோ' என்றதும் அறிந்து உணரத் தக்கன. முன்பும்'மண்ணே கொள்நீ மற்றையது ஒன்றும் மற' என்று*

*இரண்டாவது வரத்தை மற்றையது என்று தசரதன்குறித்ததை இங்கே நினைவுகூரலாம்.*
***59***

***1899. இந்திரன் முதல்வ ராய***
***கடவுளர் யாரும் ஈண்டி,***
***சந்திரன் அனையது ஆங்கு ஓர்***
***மானத்தின் தலையில் தாங்கி,***
***'வந்தனன், எந்தை தந்தை!'***
***என மனம் களித்து, வள்ளல்***
***உந்தியான் உலகின் உம்பர்***
***மீள்கிலா உலகத்து உய்த்தார்..***

***இந்திரன் முதல்வராய கடவுளர் யாரும் ஈண்டி -*** *இந்திரன் முதலாகிய தேவர்கள்எல்லாரும் வந்து;* ***சந்திரன் அனையது -*** *சந்திரனை ஒத்ததாகிய;* ***ஓர் மானத்தின்தலையில் தாங்கி -*** *ஒரு விமானத்திடத்தில் சுமந்து;* ***'எந்தை தந்தை வந்தனன்' எனமனம் களித்து -*** *எம்முடைய தலைவனாகிய இராமனின் தந்தையாய தசரதன் வந்துவிட்டான்' என்று மனமகிழ்ச்சி அடைந்து;* ***வள்ளல் -*** *தசரதனை;* ***உந்தியான் உலகின் -*** *திருவுந்தித் தாமரையனாகிய பிரமதேவனது சத்திய லோகத்தின்; உம்பர் - மேலே உள்ள;* ***மீள்கிலா உலகத்து-*** *தன்னை அடைந்தவர் திரும்ப வாராத உலகத்தில்;* ***உய்த்தார் -*** *கொண்டு சேர்த்தார்கள்.*

*இராமபிரான் திருமாலின் அவதாரம் ஆதலின், அவனுடைய தந்தைக்குப் பரமபதம் கிடைத்தல் உறுதி என்பதனால் சத்தி லோகத்துக்கு மேற்பட்ட விஷ்ணுலோகத்தில் சேர்ந்தார்கள் என்று கம்பர் கூறினார். 'மீள்கிலா உலகம்' என்பது வினைவழிப்பிறந்திறந்து நலிவெய்தித் திரும்பி வராத உலகம் என்பதே பொருள். பரமபதத்தில் நித்தியசூரிகளாய் உள்ளாரும் இறைவனது சங்கற்பத்தால் பிறவாது வந்து போதல் உளதாகலின் அதுபற்றிமீண்டும் மீட்சிப் படலத்து இராமனைக் காண தசரதன் வந்து போதற்குத் தடையில்லை என அறிக. அவ்வாறில்லாக்கால்ஆழ்வார்கள், ஆசார்கள் திரு அவதாரத்துக்குப் பொருளின்றாய முடியும். ஆதலின், ஆங்கு -அசை.*
***60***

*தயரதன் பிரிவால் கோசலை புலம்பல்*

***1900. 'உயிர்ப்புஇலன், துடிப்பும் இல்லன்'***
***என்று உணர்ந்து, உருவம் தீண்டி,***
***அயிர்த்தனள் நோக்கி, மன்னற்கு***
***ஆர் உயிர் இன்மை தேறி,***
***மயில் குலம் அனைய நங்கை***
***கோசலை மறுகி வீழ்ந்தாள் -***
***வெயில் சுடு கோடைதன்னில்***
***என்பு இலா உயிரின் வேவாள்.***

***குலம் மயில் அனைய நங்கை கோசலை*** - *சிறந்த மயிலை ஒத்த பெண்ணாகியகோசலையானவள் 'உயிர்ப்பு இலன்;* ***துடிப்பும் இல்லன்' என்று உணர்ந்து*** - *தசரதனுக்குமூச்சு இல்லை துடிப்பும் தொட்டு;* ***அயிர்த்தனள் நோக்கி*** - *ஐயுற்றுப் பார்த்து;* ***மன்னற்கு*** - *தசரதனக்கு;* ***ஆர் உயிர் இன்மை தேறி*** - *அரிய உயிர் இல்லை என்பதுதெளிந்து;* ***வெயில் சுடு கோடைதன்னில்***- *வெள்ளில் சுடுகின்ற கோடைக் காலத்தில்;* ***என்பு இலா உயிரின்*** - *எலும்பு இல்லாத (புழு முதலிய) பிராணிகள் போல;* ***வேவாள்*** - *வெந்து;* ***மறுகி*** - *மனம் சுழன்று;* ***வீழ்ந்தாள்*** - *விழுந்தாள்.*

*இறுதியடியின் சொல்லாட்சியை 'என்பிலதனை வெயில் போலக் காயுமே என்பதனோடு(குறள்.77.) ஒப்பிடலாம்.* ***61***

***1901. இருந்த அந்தணனோடு எல்லாம்***
***ஈண்றவன் தன்னை ஈனப்***
***பெருந்த தவம் செய்த நங்கை,***
***கணவனில் பிரிந்து, தெய்வ***
***மருந்து இழந்தவரின் விம்மி,***
***மணி பிரி அரவின் மாழ்கி,***
***அருந் துணை இழந்த அன்றிற்***
***பெடை என, அரற்றலுற்றாள்;***

***இருந்த அந்தணனோடு*** - *உந்தித் தாமரையில் இருந்த பிரமனோடு;* ***எல்லாம்ஈன்றவன் தன்னை ஈன*** - *சர்வலோகங்களையும் தந்தருளிய பரமாத்மாவைப் பெற்றெடுக்க;* ***பெருந்தவம் செய்த நங்கை*** - *பெரிய தவத்தைச்செய்த பெருமாட்டியாகிய கோசலை;* ***கணவனில் பிரிந்து*** - *தயரதனாகிய நாயகனைப் பிரிந்து;* ***தெய்வ மருந்து இழந்தவரின்*** - *தேவாமிர்தத்தை இழந்தவர்களைப் போல;* ***விம்மி*** - *துடித்து;* ***மணி பிரி அரவின் மாழ்கி***- *(தனக்குக் கண்ணாகிய) மாணிக்கத்தை இழந்தபாம்பைப் போல மயங்கி;* ***அருந்துணை இழந்த*** - *அரிய ஆண்பறவையாகிய துணையை இழந்த;* ***அன்றில் பெடை என*** - *அன்றிற் பெண்பறவை போல;* ***அரற்றலுற்றாள்*** - *புலம்பத்தொடங்கினாள்.*

*பரமனுக்கே தாய்தான்; என்றாலும், 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்'என்றவகையில் கோசலை அவலம் கொடியது. கோசலையின் துயரத்தைப் பல உவமைகளால் விளக்கினார்.தேவர்க்கு நிலைபேறு தருவது அமுதம்; பேரரசி என்ற தகுதிப்பாடு தயரதனால் பெற்றவள் கோசலை.பாம்பு முதிர்ச்சிக் காலத்தில் மணியை உமிழ்ந்து வெளியே வைத்து இரைதேடும் - மணி இழந்தால் துடித்து உயிர் நீக்கும் என்பது இலக்கியங்களில் வரும் செய்தி ஆகும். அன்றில் இனைபிரியாதுவாழும் பறவை. இதனால் இவை கணவனை இழந்து துயர் அடையும் கோசலைக்கு உவமை ஆயின.* ***62***

*கலிநிலைத்துறை*

***1902. 'தானே! தானே! தஞ்சம்***
***இலாதான், தகைவு இல்லான்,***
***போனான்! போனான்! எங்களை***
***நீத்து, இப்பொழுது' என்னா,***

***வான் நிர் கண்டி மண் அற***
***வற்றி, மறுகுற்ற***
***மீனே என்ன, மெய்***
***தடுமாறி விழுகின்றாள்.***

***'தஞ்சம் இலாதான் -*** *எளிமை இல்லாதவனும்;* ***தகைவு இல்லான் -*** *எவற்றாலும்தடுக்க முடியாத பெரு வலிமை படைத்தவனும் ஆகிய தயரதன்;* ***தானே! தானே -*** *தனியாக;* ***எங்களை நீத்து -*** *எங்களை யெல்லாமல் கைவிட்டு;* ***இப்பொழுது போனான்! போனான்!' -;என்னா -*** *என்று சொல்லி;* ***வான் நீர் சுண்டி -*** *மழை நீர் இல்லாமல்போய்;* ***மண் அற வற்றி -*** *மண்ணிலும் நீர் இல்லாமல் வறவி;* ***மறுகுற்ற -*** *கலங்குதல் அடைந்த;* ***மீனே என்ன -*** *மீனைப் போல (உயிர் ஊசலாட);* ***மெய் தடுமாறிவிழுகின்றாள் -*** *உடம்பு நடுங்கி விழுகின்றாள்.*

*மேல் நீரும் கீழ் நீரும் இல்லாத பொழுது மீன் உயிர்வாழ இயலாமல் தடுமாறுதல் போல,தசரதனை இழந்தும், இராமனைப் பிரிந்தும் கோசலை தடுமாறினாள் என்றார். அடுக்குகள்அவலத்தின்கண் வந்தன. தஞ்சம். - பற்றுக் கோடு எனப் பொருள் கொண்டு, பற்றுக்கோடுஅற்றவனாய்ப் போனான் எனக் கூறி, இராமனாகிய பற்றுக்கோட்டை இழந்தபடியால் என்பதும்ஒன்று. தஞ்சம் எண்மைப் பொருட்டாதலை. "தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே" என்பதனால் (தொல். சொல். 268) அறிக. இஃது இடைச்சொல்.* ***63***

***1903. 'ஒன்றோ, நல் நாட்டு உய்க்குவர்;***
***இந் நாட்டு உயிர் காப்பார்***
***அன்றே? மக்கள் பெற்று உயிர்***
***வாழ்வார்க்கு அவம் உண்டே?***
***இன்றே வந்து, ஈண்டு, "அஞ்சல்"***
***எனாது, எம்மகன் என்பான்***
***கொன்றான் அன்றோ தந்தையே?"***
***என்றாள் குலைகின்றாள்.***

*(மக்கள் தம்மைப் பெற்றோரை)* ***'நல் நாட்டு உய்க்குவர் -*** *மறுமையில்நரகத்தினின்று நீக்கி நற்கதியில் செலுத்துவர்;* ***ஒன்றோ? -*** *அம்மட்டோ;* ***இந்நாட்டு உயிர் காப்பார் அன்றே -*** *இந்த நாட்டிலே வாழும் பொழுதும் பெற்றோர்உயிரைப் பாதுகாப்பார்கள் அல்லவா (ஆகவே);* ***மக்கள் பெற்று உயிர் வாழ்வார்க்கு அவம்உண்டே? -*** *பிள்ளைகளைப் பெற்று உயிர் வாழ்கின்றவர்களுக்குத் தீங்கு உண்டாகுமா (அப்படிஇருக்க);* ***எம் மகன் என்பான் -*** *எங்களுடைய மகனாகிய இராமன் என்பவன்;* ***ஈண்டு -*** *இவ்விடத்தில்;* ***இன்றே வந்து -*** *இன்றைக்கே வந்து;* ***'அஞ்சல்' எனாது -*** *பயப்படாதே என்று சொல்லி (உயிர் காத்து) ஆறுதல் அளிக்காமல்;* ***தந்தையை -*** *தன்தகப்பனை;* ***கொன்றான் அன்றே?' -*** *கொன்றுவிட்டான் அல்லவா;* ***என்றாள் -*** *என்று;* ***குலைகின்றாள் -*** *நடுங்குகிறாள்.*

*"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி, மறுமை உலகமும் மறுவின்று எய்துப, செறுநரும்விழையும் செயிர்தீர் காட்சிச் சிறுவர்ப் பயந்த செம்மலோர்" என்பதால் (அகதா. 66)புதல்வரைப் பெற்றோர்க்குப் புகழ், பாதுகாப்பு, மறுமையில்*

*நற்கதி ஆகியவை உண்டு என்பதுநூலோரும், உலகமும் துணிந்த துணிவு ஆதல் அறிக. 'மகள் என்பான்' என்ற தொடர் நயம்சிந்திக்கத் தக்கது.* ***64***

***1904. 'நோயும் இன்றி, நோன் கதிர்***
***வாள், வேல், இவை இன்றி,***
***மாயும் செல்வ மக்களின்***
***ஆக; மற மன்னன்***
***காயும் புள்ளிக் கர்க்கடம்,***
***நாகம், கனி வாழை,***
***வேயும், போன்றான்' என்று***
***மயங்கா விழுகின்றாள்.*** [1]

***'மறமன்னன் -*** *வலிமை மிக்க தயரதன்;* ***நோயும் இன்றி -*** *இறப்பிற்குக்காரணமான பிணி இல்லாமல்;* ***நோன் -*** *வலிய; கதிர், வாள், வேல்;* ***இவை இன்றி-*** *ஒளியுடைய வாள், வேல் முதலிய ஆயுதங்களும் இல்லாமல்;* ***செல்வ மக்களின் ஆக -*** *அன்புக்குரிய மக்களினால் ஆக;* ***மாயும்-*** *இறந்துபட்டான்;* ***காயும் புள்ளி -*** *வெறுக்கின்ற புள்ளிகளையுடைய;* ***கர்க்கடம் -*** *நண்டு;* ***நாகம் -*** *பாம்பு;* ***கனிவாழை -*** *பழம் தரும் வாழை மரம்;* ***வேய் உம் -*** *மூங்கில் ஆகிய இவற்றை;* ***போன்றான்' -*** *ஒத்தான்;* ***என்று மயங்கா விழுகின்றாள் -*** *என்று சொல்லிமயங்கி விழுந்தாள்.*

*தன் மகனாலேயே மன்னன் இறந்துபட்டான். நண்டு கருவுயிர்க்கும் போது இறந்து படும், நாகம் தன் முட்டையாலே இறந்து படும், வாழை குலை ஈனும் போது இறந்து படும், மூங்கில்தன்பக்கக் கிளைகள் தோன்றும் போது உராய்வினால் பற்றி அழியும், இவ்வாறு இவை தன்வம்சத்தாலேயே என்று அழுகிறாள் கோசலை. ''நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறும் காலத்து, கொண்ட கருவழிக்கும் கொள்கை போல்'' 'மெல்லிய வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம்' (நான்மணிக். 84.), ''புத்தன்றாய் நண்டு இப்பி வாழை புன் மூங்கில், கத்தும் விரியன் கடுஞ்சிலத்தி- இத்தனையும், வேலாலும் வாளாலும் அன்றியே தாம் கொண்ட, சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு''நீலகேசி உரை (மேற்கோள் உலோகவசனச் செய்யுள்) ஆகியவற்றை இங்கே ஒப்பு நோக்கி உணரலாம். நண்டும், பாம்பும் தன் கருவால் அழியும் என்பதை உயிர்நூலார் உடன்படுவதில்லை.* ***65***

***1905. 'வடித் தாழ் கூந்தற் கேகயன்***
***மாதே! மதியாலே***
***பிடித்தாய் வையம்; பெற்றனை***
***பேரா வரம்; இன்னே***
***முடித்தாய் அன்றே மந்திரம்?'***
***என்றாள் - முகில்வாய் மின்***
***துடித்தாலென்ன, மன்னவன்***
***மார்பில் துவள்கின்றாள்.***

***முகில் வாய் -*** *மேகத்திடத்து;* ***மின் துடித்தால் என்ன -*** *மின்னல் துடித்தது போல;* ***மன்னவன் மார்பில்-*** *தசரதன் மார்பில்;* ***துவள்கின்றாள்-*** *துயரதத்தால் துவளும்*

*கோசலை; **‘வடித்தாழ் கூந்தல் கேகயன் மாதே!** - கை செய்துஅழகுற்றுத் தொங்கி நீண்ட கூந்தலையுடைய கைகேயியே! - **மதியாலே** - உன்புத்திவல்லமையால்; **வையம் பிடித்தாய்**- அரசாட்சியைப் பிடித்துக் கொண்டாய்; **பேராவரம் பெற்றனை** - மாறுபட முடியாத வரத்தைப் பெற்றாய்; **இன்னே** - இப்போதே; **மந்திரம் முடித்தாய் அன்றே’** - உன் ஆலோசனையை நிறைவேற்றிக் கொண்டாய் அல்லவா; **என்றாள்**- வடித்தல் - வாரிச் சீவி ஒழுங்குறுத்தல். நினைத்த காரியத்தை அவ்வண்ணமே. அப்பொழுதேநிறைவேற்றிக்கொண்ட கைகேயியின் புத்தி வன்மையைக் கூறி அவலிக்கிறாள் கோசலை. முகில்வாய் மின் - தசரதன் மார்பில் விழுந்து புரளும் கோசலை. தசரதனை இங்கே முகில் என்றபடியால் அவனும் இராமன் போன்று கார் மேனியன் ஆதல் வேண்டும் என அறியலாம். **66***

***1906. ‘அருந் தேரான் அச் சம்பரனைப்***
***பண்டு அமர் வென்றாய்;***
***இருந்தார், வானோர், நின்***
***அருளாலே இனிது; அன்னார்***
***விருந்து ஆகின்றாய்’ என்றனள் -***
***வேழத்து அரசு ஒன்றைப்***
***பெருந் தாள் அன்பின் சூழ் பிடி***
***என்னப் பிணியுற்றாள்.***

*__வேழத்து அரசு ஒன்றை__ - ஓர் அரச யானையை; __பெருந்தாள் - அன்பின்சூழ்பிடி என்ன__ - பெரிய காலில் அன்பினால் சுற்றிக் கிடக்கும் பெண் யானை போல; __பிணி உற்றாள்__ - நோய் உற்றவளாகிய கோசலை (தயரதனை நோக்கி); __‘அருந் தேரான் அச்சம்பரனை__ - வெல்லுதற்கரிய தேரில் வந்த சம்பரனை; __பண்டு__ - முற்காலத்து; __அமர்வென்றாய்__ - போரில் வெற்றி கொண்டாய்; __வானோர்__ - தேவர்கள்; __நின் அருளாலே இனிது இருந்தார்__ - உன் கருணையால் இனிமையாக இருந்தார்கள்; __அன்னார்__ - அவர்களது; __விருந்து ஆகின்றாய்’__ - விருந்தினனாகத் தற்போது ஆகின்றாய்; __என்றனள்-__*

*போர் செய்யச் சென்ற சம்பரனைப் போரில் வெல்லமாட்டத இந்திரன் தசரதன் துணையைவேண்ட, அதன் பொருட்டுத் தசரதன் சென்று வென்று இந்திரனுக்கு அமராவதி அரசைக் காத்தளித்தசெய்தி, பாலகாண்டம் கையடைப் படலத்து விசுவாமித்திர முனிவன் தசரதனை நோக்கிக் கூறும் ஒன்பதாம் பாடலால் அறியலாம். (322.) யானையைக் கால் தழுவி வருந்தும் பிடி தயரதன் காலைச்சூழ்ந்து வருந்தும் கோசலைக்கு உவமை. **67***

***1907. ‘வேள்விச் செல்வம் துய்த்திகொல்?***
***மெய்ம்மைத்துணை இன்மை***
***சூழ்வின் செல்வம் துய்த்திகொல்?***
***தோலா மனு நூலின்***
***வாழ்வின் செல்வம் துய்த்திகொல்***
***மன்?’ என்றனள் - வானோர்***
***கேள்விச் செல்வம் துய்க்க***
***வயிற்று ஓர் கிளை தந்தாள்.***

**வானோர் -** தேவர்கள்; **கேள்விச் செல்வம் -** இராமன் புகழ் கேட்டல்ஆகிய செல்வத்தை; **துய்க்க -** அனுபவிக்க; **வயிற்று ஓர்கிளை தந்தாள் -** தன்வயிற்றிலிருந்து ஒப்பற்ற புதல்வனைத் தந்தவளாகிய கோசலை (தயரதனை நோக்கி); **'வேள்விச் செல்வம் துய்த்தி கொல்? -** முன் செய்த வேள்களின் பயனை துய்த்திகொல் - அனுபவிக்சச் சென்றாயோ; **மெய்ம்மை -** சத்தியம் என்கிற; **துணை இன்மை -** தனக்குச் சமானம் இல்லாத; **சூழ்வின் செல்வம் -** ஒன்றை உறுதி யாகப் பற்றிய உன் ஆலோசனையின் பயனை; **துய்த்திகொல் -** அனுபவிக்கச் சென்றாயோ; **தோலா -** தோல்வி அடையாத; **மனு நூலின் வாழ்வின் செல்வம் -** மனு முறைப்படி அரச வாழ்வுநடத்தியதால் ஆகிய பயனை; **துய்த்திகொல்'-** அனுபவிக்கச் சென்றாயோ; **என்றனள் -**

கேள்வி - கேட்டற்குரிய புகழ். 'தீங்கவி செவிகள்ஆரத் தேவரும் பருகச் செய்தான்' (32)என்ற கருத்து இங்கு நினையத் தக்கது. கிளை - உறவு கோசலைக்கு உறவாவது புதல்வன் என்பதே. வேள்வி, சத்தியம், செங்கோன்மை இவற்றைக் காத்தொழுகிய தசரதன் இவற்றின் பயனை அனுபவிக்கச் சென்றானோ என்றாள். 'கொல்' ஐயவினா. 'மன்' கழிவுப்பொருள்; அவன் இப்போது இல்லாமையின் கழிந்தது கழிந்தது என்னும் பொருளில் வந்தது.இடைச்சொல். **68**

தேவிமார் அனைவரும் வந்து புலம்புதல்

அறுசீர் விருத்தம்

**1908. ஆழி வேந்தன் பெருந்தேவி**
**அன்ன பன்னி அழுது அரற்ற,**
**தோழி அன்ன சுமித்திரையும்**
**துளங்கி ஏங்கி உயிர் சோர,**
**ஊழி திரிவது எனக் கோயில்**
**உலையும் வேலை, மற்று ஒழிந்த**
**மாழை உண்கன் தேவியரும்,**
**மயிலின் குழாத்தின் வந்து இரைத்தார்.**

**ஆழிவேந்தன் பெருந்தேவி அன்ன பன்னி அழுது அரற்ற -** சக்கரவர்த்தியின் மூத்தபட்டத்தரசியாகிய கோசலை அப்படிப்பட்ட வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லி அழுதுபுலம்ப; **தோழி அன்ன சுமித்திரையும் துளங்கி ஏங்கி உயிர்சோர -** அவளுடைய உயிர்த்தோழியாகிய சுமித்ரையாகிய இளைய பட்டத்தரசியும் நிலைகுலைந்து புலம்பி உயிர் தளர; **ஊழி திரிவது என -** பிரளய காலத்தில் உலகம் கழல்வது போல; **கோயில் உலையும்வேலை -** அரண்மனை நிலைதடுமாறுடம் போது ; **மற்று -; ஒழிந்த மாழை உண்கண் தேவியரும்-** மிகுந்துள்ள அறியாமை கொண்ட மை உண்ட கண்ணையுடைய அறுபதினாயிரம் தேவிமார்களும்; **மயிலின் குழாத்தின்-** மயிற் கூட்டம் போல; **வந்து -; இரைத்தார் -** கூச்சலிட்டுப் புலம்பினர்.

மற்று - பிறிது என்னும் பொருளில் வந்த இடைச்சொல். **69**

***1909. துஞ்சினானை, தம் உயிரின் துணையைக்***
***கண்டார்; துணுக்கத்தால்***
***நஞ்சு நுகர்ந்தார் என உடலம்***
***நடுங்காநின்றார்; என்றாலும்,***
***அஞ்சி அழுங்கி விழுந்திலரால்;-***
***அன்பின் தறுகண் பிறிது உண்டோ? -***
***வஞ்சம் இல்லா மனத்தானை***
***வானில் தொடர்வான் மனம் வலித்தார்.***

*(அத்தேவியர்)* ***துஞ்சினானை -*** *இறந்தவனை;* ***தம் உயிரின் துணையை*** *- தம்உயிர்க்குத் துணையாக இருந்த நாயகனை;* ***கண்டார் -*** *பார்த்தார்கள்;* ***துணுக்கத்தால்-*** *வெருவுதலால்;* ***நஞ்சு நுகர்ந்தார் என -*** *விடம் உண்டவர் போல;* ***உடலம்நடுங்காநின்றார் -*** *உடல் நடுக்க மெடுக்க இருந்தார்கள்;* ***என்றாலும் -*** *இப்படிப்பட்ட துக்கம் வந்த போதிலும்;* ***அஞ்சி அழுங்கி விழுந்திலர் -*** *பயந்து மனம் துயரம் மிக்கு விழவில்லை;* ***வஞ்சம் இல்லா மனத்தானை-*** *வஞ்சனையற்ற மனம் உடைய தசரதனை;* ***வானில் தொடர்வான் மனம் வலித்தார் -*** *இறந்து பின்பற்றிச் சென்றுவானுலகில் அடைய மனத்தின்கண் உறுதி மேற்கொண்டார்;* ***அன்பின் தறுகண் பிறிது உண்டோ? -*** *அன்பைக் காட்டிலும் வலியது வேறு உண்டோ? (இல்லை என்றபடி).*

*வானுலகில் தயரனை அடைய உறுதி பூண்டபடியால் இங்கே மனம் சோர்ந்து போகவில்லையேதவிரத் துக்கம் இல்லை என்பது பொருள் இல்லை - இறக்கத் துணிந்தனர் என்பதாம். 'ஆல்'அசை.* ***70***

***1910. அளம் கொள் அளக்கர் இரும் பரப்பில்,***
***அண்டர் உலகில், அப்புறத்தில்***
***விளங்கும் மாதர், 'கற்பினார்,***
***இவரின் யாரோ!' என, நின்றார்;***
***களங்கம் நீத்த மதி முகத்தார்;***
***கான வெள்ளம் கால் கோப்ப,***
***துளங்கல் இல்லாத் தனிக்குன்றில்***
***தொக்க மயிலின் சூழ்ந்து இருந்தார்.***

***அளம் கொள் அளக்கர் இரும்பரப்பில் -*** *உப்பளத்தைக் கொண்ட கடலாற்சூழப்பெற்ற நிலவுலகில்;* ***அண்டர் உலகில் -*** *தேவர் உலகில்;* ***அப்புறத்தில் -*** *வேறு இடங்களில்;* ***விளங்கும் மாதர் -*** *கற்புடன் விளங்குகின்ற மாதர்கள்;* ***'இவரின் கற்பினார் யாரோ! என -*** *இவர்களைக்காட்டிலும் கற்பிற் சிறந்தவர் யார் உளரோ என்னும்படி;* ***நின்றார் -*** *(அத்தேவிமார்)நின்றார்கள்;* ***களங்கம் நீத்த மதிமுகத்தார் -*** *களங்கம் இல்லாத மதிபோன்ற முகத்தைஉடையவர்களாய அத்தேவிமார்;* ***கான வெள்ளம் கால் கோப்ப-*** *காட்டு நீர்ப் பெருக்கு தன் அடியைச் சூழ உள்ள;* ***துளங்கல் இல்லாத் தனிக் குன்றில் -*** *சிறிதும் அசைந்து கொடுக்காத பெரிய மலையில்;* ***தொக்க மயிலின்*** *- சேர்ந்து இருந்த மயில் கூட்டத்தைப்போல;* ***சூழ்ந்திருந்தார் -*** *அவ் அரண்மனையில் திரண்டிருந்தனர்.*

*அடியில் நீர் சூழ மலையில் மயில் திரண்டது போல் என உவமைக்காண்க. கண்ணீர் வெள்ளம்சூழ அரண்மனையில் தேவிமார் எனஉவமைக் கேற்பக் கொள்ளலாம். இனி கான வெள்ளம் என்பதற்கு அவரது அழகுரவோசையாகிய வெள்ளம் என்பாரும் உளர்; பொருந்துமேற் கொள்க.* *71*

***1911. கைத்த சொல்லால் உயிர் இழந்தும்,***
***புதல்வற் பிரிந்தும், கடை ஓட***
***மெய்த்த வேந்தன் திரு உடம்பைப்***
***பிரியார் பற்றி விட்டிலரால்;***
***பித்த மயக்கு ஆம் சுறவு எறியும்***
***பிறவிப் பெரிய கடல் கடக்க.***
***உய்த்து மீண்ட நாவாயில்,***
***தாமும் போவார் ஒக்கின்றார்.***

***புதல்வன் பிரிந்தும் -*** *மகனைப் பிரிந்தும்;* ***கைத்த சொல்லால் உயிர்இழந்தும் -*** *மனம் வெறுக்கத் தக்க (கைகேயி கூறிய) கொடிய சொல்லால் தன் உயிரே நீங்கப்பெற்றும்;* ***கடை ஓட -*** *இறுதிவரையிலும்;* ***மெய்த்த வேந்தன் -*** *மெய்யையே பற்றிநின்ற தசரத மன்னனுடைய;* ***திருவுடம்பை -*** *திருமேனியை;* ***பற்றிப் பிரியார் விட்டிலர்-*** *பிடித்துக் கொண்டு பிரியாதவர்களாய் விடாதவர்களாய் உள்ள தேவிமார்;* ***பித்த மயக்கு ஆம் சுறவு எறியும் -*** *பித்துக் கொள்வதற்குத் காரணமாய அவிச்சை என்னும் சுறா மீன்துள்ளிச் சஞ்சரிக்கும்;* ***பிறவிப் பெரிய கடல் கடக்க -*** *பிறவி என்னும் பெரியகடலைத் தாண்டுதற்கு;* ***உய்த்து மீண்ட நாவாயில் -*** *(முன்பு ஒருவரை) அக்கரை செலுத்தித்திரும்பி வந்த மரக்கலத்திலே;* ***தாமும் போவார் ஒக்கின்றார் -*** *தாமும் போக இருக்கின்றவர்களை ஒத்திருந்தார்கள்.*

*பிரிதற்கரிய மகன் பிரிந்தாலும், உயிரே, பிரிந்தாலும் இறுதிவரை சத்தியத்தைவிடாமல் நின்றவன் தயரதன் என்றார். பித்த மயக்கு - மண், பெண், பொன் என்னும்மூவாசைகளை உண்டாக்குகின்ற அவிச்சை, அவிச்சை என ஒன்றைமட்டும் குறித்தாலும் அவிச்சை,அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்னும் ஐந்தினையும் கொள்க. இவற்றைப் 'பஞ்சக் கிலேசம்' என்பர். இந்தச் சுறா மீன்கள் இயங்கும் கடல் என்று பிறவியை உருவகம் செய்தார். தசரதன் உடல் மரக்கலம். முதலில் தசரதன் உயிரை அம்மரக்கலம் மேல் உலகு ஆய அக்கரைக்குச் செலுத்தியது. இப்போது அவ்வுடலாகிய மரக்கலத்தை இத்தேவிமார் பற்றியிருப்பது. தாமும் தசரதனின் உயிர் சென்ற இடத்துக்குச் செல்வதற்குப் புணையாகப் பற்றியது போல் உள்ளது என்றார். 'ஆல்' அசை.* *72*

சுமந்திரனால் செய்தி அறிந்து வசிட்டன் வந்து வருந்தல்

***1912. மாதரார்கள் அறுபதினாயிரரும்***
***உள்ளம் வலித்து இருப்ப,***
***கோது இல் குணத்துக் கோசலையும்***
***இளைய மாதும் குழைந்து ஏங்க,***
***சோதி மணித் தேர்ச் சுமந்திரன்***
***சென்று, அரசன் தன்மை சொல, வந்த***

***வேத முனிவன், விதி செய்த***
***வினையை நோக்கி விம்முவான்.***

***மாதரார்கள் அறுபதினாயிரரும் -*** *(தசரதன்) மனைவியராய அறுபதினாயிரம்தேவிமார்களும்;* **உள்ளம் வலித்து இருப்ப -** *உடன் கட்டை ஏறுவது என்று மனத்தில் உறுதி செய்துகொண்டு இருக்க;* **கோது இல் குணத்துக் கோசலையும் இளையமாதும் குழைந்து ஏங்க-** *குற்றமற்ற குணத்தை உடைய கோசலாதேவியும், சுமித்திராதேவியும் மனம் இளகி வாட;(இந்நிலையில்)* **சோதி மணித்தேர்ச் சுமந்திரன்சென்று -** *ஒளியை உடைய மணிகள்கட்டப்பட்ட தேரை உடைய சுமந்திரன் போய்;* **அரசன் தன்மை சொல -** *தயரதன் இறப்பைத்தெரிவிக்க;* **வந்த வேத முனிவன் -** *அங்கே வந்த வசிட்ட முனிவன்;* **விதி செய்தவினையை நோக்கி -** *ஊழ்வினை செய்த செயலை உள்ளத்தாலும் கண்ணாலும் நோக்கி;* **விம்முவான் -** *வருந்துவான் ஆனான்.*

*அரசன் துடிக்கும் காட்சியைக் காணச் சகியாமல் அப்பால் சென்ற வசிட்டன் சுமந்திரனால்செய்தி அறிந்து வந்து வருந்தினன். 73*

***1913. வந்த முனிவன், 'வரம் கொடுத்து***
***மகனை நீத்த வன்கண்மை***
***எந்தை தீர்ந்தான்' என உள்ளத்து***
***எண்ணி எண்ணி இரங்குவான்,***
***உந்து கடலில் பெருங் கலம் ஒன்று***
***உடைய நிற்கத் தனி நாய்கன்***
***நைந்து நீங்கச் செயல் ஓரா***
***மீகாமனைப்போல், நலிவுற்றான்.***

**வந்த முனிவன் -** *அங்கே வந்த வசிட்டன்;* **வரம் கொடுத்து மகனை நீத்தவன்கண்மை -** *வரத்தைக் கொடுத்து மகனைப் பிரிந்த கொடுமையை;* **எந்தை -** *தயரதன்;* **தீர்ந்தான் -** *நீங்கினான்;* **என -** *என்று;* **உள்ளத்து -** *மனத்தில் ;* **எண்ணி எண்ணி இரங்குவான் -** *நினைத்து நினைத்து மனம்தளர்பவனாய்;* **உந்து கடலில் -** *அலை மோதும் கடலில்;* **பெருங்கலம் ஒன்று உடையாநிற்க -** *பெரிய கப்பல் ஒன்று உடைந்துவிட;* **தனி நாய்கன் -** *தனிப்பட்ட கப்பல்தலைவன் இறந்துபட;* **செயல் ஓரா மீகாமனைப் போல் -** *தான் செய்வது இன்னது எனத்தெரியாமல் திகைத்துத் தடுமாறுகின்ற மாலுமியைப்போல;* **நைவுற்றான் -** *வருந்தினான்.*

*மன்னவன் உடல் மரக்கலம் - மன்னவன் மரக்கலத் தலைவன் - வசிட்டன் மாலுமி என உவமைகொள்க. 74*

*தசரதன் உடலைத் தைலத்தில் இடுதல்*

***1914. 'செய்யக் கடவ செயற்கு உரிய***
***சிறுவர், ஈண்டையார் அல்லர்;***
***எய்தக் கடவ பொருள் எய்தாது***
***இகவா' என்ன, இயல்பு எண்ணா,***

***'மையற் கொடியாள் மகன் ஈண்டு***
***வந்தால் முடித்தும் மற்று, என்னத்***
***தையற் கடல்நின்று எடுத்து, அவனைத்***
***தயிலக் கடலின்தலை உய்த்தான்.***

*'**செய்யக் கடவ-** (தசரதன் இறந்த பின்னர் அவனுக்குச்) செய்தற்குரிய கடமைகளை; **செயற்கு உரிய -** செய்தற்கு உரிமை உடைய; **சிறுவர் -** குமாரர்கள்; **ஈண்டையார் அல்லர் -** இங்கே இல்லை; **எய்தக் கடவ பொருள் எய்தாது இகவா' -** வரவேண்டியவைகள் வராது போகா; **என்ன -** என்று; **இயல்பு எண்ணா -** உலக இயல்பும் ஊழின் இயல்பும் கருதி; **'மையல் கொடியாள் மகன்-** மன மயக்கம் கொண்ட கொடியவளான கைகேயியின் மகனாகிய பரதன்; **ஈண்டு வந்தால் -** அயோத்திக்கு வந்து சேர்ந்தபிறகு; **முடித்தும் -** (அரசனது உத்திரிகிரியைகளைச்) செய்து முடிப்போம்; **என்ன -** என்று கருதி; **தையல் கடல் நின்று எடுத்து -** கோசலை சுமித்திரை கைகேயி மற்றும்அறுபதினாயிரம் மகளிர்களாய பெருங்கடலில் இருந்து தசரதனை எடுத்து; **அவனை-; தயிலக்கடலின் தலை உய்த்தான் -** கடல்போல் மிகுந்த தயிலத்தினிடத்தில் கொண்டு சேர்த்தான். 'மற்று' அசைநிலை. பரதன் உரிமைக்கு ஆகான் என்று வசிட்டனிடமே தசரதன் மறுத்திருப்பதும், அது வசிட்டனுக்குத் தெரிந்துண்மையும், பின்னரப் பரதன் வந்து கடன் செய்ய முனைந்தபோது 'அரசன் நின்னையும் துறந்து போயினான்' என்று பரதனை (2231) வசிட்டனே தடுப்பதுண்மையும் இருக்க, இங்கே வசிட்டனே 'மையல் கொடியாள் மகன் ஈண்டு வந்தால் முடிந்தும்' என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும் என்ற ஒரு சிலர்க்கு ஐயம் எழுவது உண்மையே. தற்போது பரதனே கோசல நாட்டுக்கு அதிபதி ஆதலின், சக்கரவர்த்தி வராமல் அரசாங்க சம்பந்தமான எதுவும் வேறு யாரும் செய்ய இயலாது என்பதும். அடுத்துச் செயற்குரிமை படைத்தவன் சத்ருக்கனன் ஆயினும் பரதன் வராமல் சத்துருக்கனன் வரமாட்டான் என்பதும் கருதியே வசிட்டன் அவ்வாறு கூறினான் என்பது உய்த்துணரப்படுதலின் ஐயத்துக்கு இடமில்லை என அறிக. 'தையற் கடல் நின்று எடுத்து அவனைத் தயிலக் கடலின் தலை உய்த்தான்' என்ற சொல்லழகு அறிந்து இன்புறத் தக்கது. 'உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா' 'உறற்பால தீண்டா விடுதல் அரிது' (நாலடி. 4,9.) என்பவற்றை இங்கு 'எய்தக் கடவ பொருள் எய்தாது இகவா' என்பதுடன் இணைத்துக் கருதுக. 75*

*தேவிமாரை அகற்றி அனுப்பி, பரதனுக்கு ஓலை அனுப்புதல்*

***1915. தேவிமாரை, 'இவற்கு உரிமை***
***செய்யும் நாளில், செந் தீயின்***
***ஆவி நீத்திர்' என நீக்கி,***
***அரிவைமார்கள் இருவரையும்***
***தா இல் கோயில்தலை இருத்தி,***
***'தண் தார்ப் பரதற் கொண்டு அணைக' என்று***
***ஏவினான், மன்னவன் ஆணை***
***எழுது முடங்கல் கொடுத்து, அவரை,***

*'**தேவிமாரை -** அறுதிபதினாயிரம் தேவியரையும்; **'இவற்கு உரிமை செய்யும் நாளில் -** இவனுக்குஇறுதிக்கடன் செய்யும் நாளில்; **செந்தீயின் ஆவி நீத்திர் -** நெருப்பில்*

*உடன்கட்டை ஏறி உயிர்விடுவீராக;'* **என நீக்கி** *- என்று போகச்செய்து;* **அரிவைமார்கள்இருவரையும் -** *பட்டத்தரசியர் இருவரையும்;* **தாவில் கோயில் தலை இருத்தி -** *குற்றமற்ற அரண்மனையில் இருக்குமாறு செய்து;* **மன்னவன் ஆணை எழுதும் முடங்கல் கொடுத்து அவரை-** *அரசன் ஆணையை எழுதும் ஓலையைக் கொடுத்துத் தூதுவரை;* **'தண்தார்ப் பரதன் கொண்டுஅணைக' என்று ஏவினான் -** *குளிர்ந்த மாலை அணிந்த பரதனை அழைத்துக்கொண்டு வருக என்றுசொல்லி அனுப்பினான்.*

*அவரை என்பது பண்டறி சுட்டு. ஓலை எடுத்துச் செல்லற்குரிய தூதுவர் என்பதுஉணரப்பட்டது. 76*

***1916. போனார் அவரும், கேகயர்கோன்***
***பொன் மா நகரம் புகஎய்த;***
***ஆனா அறிவின் அருந் தவனும்,***
***அறம் ஆர் பள்ளி அது சேர்ந்தான்;***
***சேனாபதியின் சுமந்திரனை,***
***'செயற்பாற்கு உரிய செய்க' என்றான்;***
***மேல் நாம் சொன்ன மாந்தர்க்கு***
***விளைந்தது இனி நாம் விளம்புவாம்;***

**அவரும் -** *வசிட்டம் அனுப்பிய தூதுவரும்;* **கேகயர் கோன் -** *கேகயநாட்டரசனது;* **பொன்மா நகரம் புக எய்த -** *பொலிவுற்ற பெரிய நகரத்தைப் போய் அடைய;* **போனார் -** *போனார்கள்;* **ஆனா அறிவின் அருந்தவனும் -** *பேரறிவினனாகியவசிட்டனும்;* **சேனா பதியின் சுமந்திரனை -** *சேனாபதியருள் ஒருவனாகிய சுமந்திரனை;* **'செயற்பாற்கு உரிய செய்த' என்றான் -** *இப்போது செய்தற்குத் தகுந்த செயல்களைச் செய்து (நாட்டை உன்னிப்பாகக்) கவனித்துக் கொள்க என்று சொல்லி;* **அறம் ஆர் பள்ளிஅது சேர்ந்தான் -** *தனது தர்மத்தை நடத்துதற்குப் பொருந்திய தவச்சாலையை அடைந்தான்;* **மேல் நாம் சொன்ன மாந்தர்க்கு விளைந்தது இனி நாம் விளம்புவாம்-** *முன்பு இராமனோடு சென்ற நகரமாந்தர்களுக்கு நடந்ததை இனி நாம் சொல்லத் தொடங்குகிறோம்.*

*அரசன் இல்லாக் காலத்து நாட்டில் கலவரமும், குழப்பமும் விளையக் கூடும் ஆதலின், அத்தகையநேரங்களில் நாட்டைக் கவனிக்கும் பொறுப்பு சேனாதிபதிகளுக்குரியது. ஆகவே, வசிட்டனும்சேனாபதியாகிய சமந்திரனை அழைத்துச் 'செய்ய வேண்டியவற்றைச் செய்க' என்றான். அரசியல் நடந்தவாற்றை இதன்மூலம் அறிந்து மகிழ்கிறோம். மந்திரிமார்கள் பலர் பல துறையிலும்இருப்பர், அவருள் சேனாபதியரும் அமைச்சரே யாவர். சுமந்திரன் என்பது நல்லமந்திராலோசனையில் உள்ளவன் என்ற பொதுப் பொருளில் மந்திரியர்க்குள்ள சொல்லாகும்.சென்ற அரசனுக்கும், வந்து சேர வேண்டிய அரசனுக்கும் இடையில் உள்ள காலத்தில் நாட்டைக் குழப்பத்திலிருந்து மீட்கும் பொறுப்பு சேனாபதியர்க்கு உள்ளது. 77*

சூரியன் உதயமாதல்

***1917.* மீன் நீர் வேலை முரசு இயம்ப,**
**விண்ணோர் ஏத்த, மண் இறைஞ்ச,**
**தூ நீர் ஒளி வாள் புடை இலங்க,**
**சுடர்த் தேர் ஏறித் தோன்றினான் -**
**'வானே புக்கான் அரும் புதல்வன்'**
**மக்கள் அகன்றார்; வரும் அளவும்**
**யானே காப்பென், இவ் உலகை'**
**என்பான் போல, எறி கதிரோன்.**

**எறி கதிரோன் -** வெயிலொளியை வீசுகின்ற சூரியன்; **'அரும் புதல்வன் -** நம் குலத்து அரிய மகனாகிய தசரதன்; **வானே புக்கான் -** கவர்க்க லோகம் புகுந்தான்; **மக்கள் அகன்றார் -** அவனுடைய மக்கள் காட்டிலும், கேகய நாட்டிலும் ஆக அகன்று சேய்மையில் உள்ளார்கள்; **வரும் அளவும் -** ஆட்சிக்குரிய அவர்கள் வருகின்றவரையிலும்; **இவ் உலகை யானே காப்பென் -** இந்த உலகத்தை நானே ஆட்சி செய்து காப்பாற்றுவேன்;' **என்பான்போல் -** என்று சொல்லுபவனைப் போல; **மீன் நீர் வேலைமுரசு இயம்ப -** மீன்களையுடைய நிர் பொருந்திய கடலாகிய முரசம் ஒலிக்க; **விண்ணோர்ஏத்த -** தேவர்கள் துதிக்க; **மண் இறைஞ்ச-** மண்ணுலகில் உள்ளார் காலை வழிபாடுசெய்து வணங்க; **தூநீர் ஒளிவாள் புடை இலங்க -** தூய நீர்மையுடைய ஒளியாகிய வாள்பக்கத்தில் விளங்க; **சுடர்த் தேர் ஏறித் தோன்றினான்-** சுடராகிய தேரில் ஏறித் தோன்றினான்.

தசரதன் சூரியகுலத்தவன் ஆதலின், சூரியனுக்கு அவன் 'அரும் புதல்வன்' ஆயினன், தன்குலஆட்சியாளர் இறந்தும், அகன்றும் தடுமாறியபடியால் சந்ததிகள் வந்து ஆட்சிப் பொறுப்பு ஏற்கும் வரையிலும்தான் உலகை ஆளத் தோன்றியதாகத் தற்குறிப்பேற்றம் செய்தார். அரசன் வருங்கால்முரசு இயம்பல், தேவர் வாழ்த்தல், உலகர் வணங்கல், வாள் புடை இருத்தல், தேர் ஏறுதல்முதலிய உளவாதலின் அவற்றையும் சூரியன் வருகைக்கு ஏற்பப் பொருத்தினார். 'ஒளி வாள்' ஒளியுடையவாள் என்று அரசனுக்கும், மிக்க ஒளி என்று சூரியனுக்கும் வரும், 'வாள்' என்றாலும் 'ஒளி'என்பதே பொருள் ஆதலின், 'ஒளிவாள்' ஒருபொருட் பன்மொழியாம். 'மிக்க ஒளி' என்றாகும்.'சுடர்த்தேர்' என்பது சுடருடைய தேர் என்று அரசனுக்கும், சுடர்களாகிய தேர் என்று சூரியனுக்கும்வரும். மற்றவை வெளிப்படை. *78*

காட்டில் விழித்த மக்கள் இராமனைக் காணாது சோர்தல்

***1918.* வருந்தா வண்ணம் வருந்தினார் -**
**மறந்தார் தம்மை - 'வள்ளலும் ஆங்கு**
**இருந்தான் என்றே இருந்தார்கள்**
**எல்லாம் எழுந்தார்; அருள் இருக்கும்**
**பெருந் தாமரைக் கண் கரு முகிலைப்**
**பெயர்ந்தார், காணார்; பேதுற்றார்;**
**'பொருந்தா நயனம் பொருந்தி, நமைப்**
**பொன்றச் சூழ்ந்த' எனப் புரண்டார்.**

*__வருந்தாவண்ணம் வருந்தினார்__ - இதுவரை யாரும் வருந்தாத முறையில்வருந்தினவர்களும்; __தம்மை மறந்தார்__ - தம்மையே மறந்தவர்களும் ஆகிய (இராமனுடன் காடுசென்ற) நகரமாந்தர்கள்; __'வள்ளலும் ஆங்கு இருந்தான் என்றே இருந்தார்கள் எல்லாம்__ - இராமனும் அங்கே தான் இருக்கின்றான் என்று கருதி இருந்த எல்லோரும்; __எழுந்தார்__ - புறப்பட்டு; __பெயர்ந்தார்__ - இராமன் தங்கியிருந்த இடத்துக்குச் சென்று; __அருள்இருக்கும் பெருந்தாமரைக்கண் ஒரு முகிலை__ - அருள் வீற்றிருக்கும் பெரிய தாமரை மலர்போன்ற கண்களை உடைய கரு முகில் வண்ணனாகிய இராமனை; __காணார்__ - காணாது; __பேதுற்றார்__ - மயக்கம் அடைந்து; __'பொருந்தா நயனம் பொருந்தி__ - மூடாத கண்கள்மூடி; __நமைப் பொன்றச் சூழ்ந்த__ - நம்மை அழியும் படி ஆலோசித்துச் செய்தன;' __என__ - என்று சொல்லி; __புரண்டார்__ - தரையில் வீழ்ந்து புரளத் தொடங்கினார்கள்.*

*துக்கத்தால் இதுவரை மூடாத கண்கள் 'இராமனுடன் இருக்கிறோம். இராமனுடனேயே காட்டிலும்இருக்கப் போகிறோம்' என்னும் களிப்பினால் உறங்கிவிட்டுனர். அதுவே நமக்கு விபத்தாயிற்றுஎன்று வருந்தினர் நகரமாந்தர். அருள் குடியிருக்கும் கண்களை உடையான் அவன் என்று இவ்விடத்தில்கூறியது நகரமாந்தரை உறங்கச் செய்ததும் அவன் செய்த அருளே என்பதை உணர்த்தி நயம் செய்கிறது.அவதார நோக்கத்துக்கு இடையூறு ஆக நகரமாந்தர் தன்னுடன் வராமைப்பொருட்டும், பின்னர்த் தன்னைய பரத குணாநுபவங்களை நகர மாந்தர் அனுபவித்தற்கும் ஆக அவர்களை உறங்கச் செய்ததுஅருளாலே என அறிக.* ***79***

***1919. எட்டுத் திசையும் ஓடுவான்***
***எழுவார் விழுவார் இடர்க் கடலுள்;***
***'விட்டு நீத்தான் நமை ' என்பார்;***
***'வெய்ய, ஐயன் வினை' என்பார்;***
***'ஒட்டிப் படர்ந்த தண்டகம், இவ்***
***உலகத்து உளது அன்றோ? உணர்வைச்***
***சுட்டுச் சோர்தல் பழுது அன்றோ?***
***தொடர்ந்தும் தேரின் சுவடு' என்பார்.***

*__எட்டுத்திசையும் ஓடுவான் எழுவார்__ - எண்திசைகளிலும் ஓடுவதற்காக எழுந்திருப்பார்; __விழுவார் இடர்க்கடலுள்__ - ஆற்றாமையால் அது செய்யமாட்டாது துன்பக்கடலுள் விழுவார்; __'நமை விட்டு நீத்தான்' என்பார்__ - நம்மை விட்டுவிட்டுப் பிரிந்துபோய்விட்டான் என்று கதறுவார்; __'ஐயன் வினை வெய்ய' என்பார்__ - இராமன் செய்தசெயல் கொடியது என்பார்; __ஒட்டிப் படர்ந்த தண்டகம்__ - பொருந்திப் பரவியுள்ள தண்டகவனம்; __இவ் உலகத்து உளது அன்றோ?__ - இந்த உலகத்தில்தான் உள்ளது அல்லவா, __உணர்வைச் சுட்டுச் சேர்தல் பழுது அன்றோ?__ - அறிவைப் பொசுக்கித் தளர்வது குற்றம்அல்லவா; __தேரின் சுவடு தொடர்தும்'__ - அவன் சென்ற தேரின் சக்கரம் அழுந்திய வடுவைத் தொடர்ந்து சென்று அடைவோம்;' __என்பார் -.__*

*துக்கத்தால் நகரமாந்தர் துடித்தபடி இதனால் விளங்கும்.* ***80*** *தேர்ச்சுவடு நகரம் நோக்கிச் செல்வது கண்டு மக்கள் மகிழ்தல்*

***1920. தேரின் சுவடு நோக்குவார்;***
***திரு மா நகரின் மிசைத் திரிய***
***ஊரும் திகிரிக் குறி ஒற்றி***
***உணர்ந்தார்; எல்லாம் உயிர் வந்தார்;***
***'ஆரும் அஞ்சல்; ஐயன் போய்***
***அயோத்தி அடைந்தான்' என, அசனிக்***
***காரும், கடலும், ஒருவழிக் கொண்டு***
***ஆர்த்த என்னக் கடிது ஆர்த்தார்.***

***எல்லாம் -*** *எல்லாரும்;* ***தேரின் சுவடு நோக்குவார் -*** *தேரின் சக்கரத்தழும்பைப் பூமியில் பார்த்து;* ***திருமாநகரின் மிசைத் திரிய ஊரும் திகிரிக் குறி ஒற்றி உணர்ந்தார் -*** *அழகிய பெரிய அயோத்தி நகரின் மேல் திரும்பச் சுழன்று செல்லும் சக்கரஅடையாளத்தைப் பொருத்திச் சார்ந்து அறிந்து;* ***உயிர் வந்தார் -*** *உயிர் வரப்பெற்று;* ***'ஆரும் அஞ்சல்-*** *யாரும் பயப்படாதீர்கள்;* ***ஐயன் அயோத்தி போய்அடைந்தான்' -*** *இராமன் அயோத்திக்குப் போய்ச் சேர்ந்துவிட்டான்;'* ***என -*** *என்று;* ***அசனிக் காரும் -*** *இடி உடைய மேகமும்;* ***கடலும் -; ஒரு வழிக் கொண்டு -*** *ஓரிடத்தில் சேர்ந்து;* ***ஆர்த்த என்ன -*** *ஒலித்தன என்னும்படி;* ***கடிது -*** *விரைவாக;* ***ஆர்த்தார் -*** *மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தார்கள்.*

*ஆர்ப்புக்கு மேகமும் கடலும் சேர்ந்த ஒலி உவமை. சுமந்திரன்சென்ற தேர்ச் சுவட்டை இராமன் திரும்பச் சென்றதாகக் கருதி மயங்கினர்.* ***81***

***1921. மான அரவின் வாய்த் தீய***
***வளை வான் தொளை வாள் எயிற்றின்வழி***
***ஆன கடுவுக்கு, அரு மருந்தா***
***அருந்தும் அமுதம் பெற்று உய்ந்து,***
***போன பொழுதில் புகுந்த உயிர்***
***பொருந்தார் ஒத்தார் - பொரு அரிய***
***வேனில் மதனை மதன் அழித்தான்***
***மீண்டான் என்ன ஆண்டையோர்.***

***ஆண்டையோர் -*** *அங்கேயிருந்த அந்நகரத்தவர்;* ***பொரு அரிய வேனில் மதனை மதன்அழித்தான் -*** *ஒப்பற்ற வசந்தகாலத்துகுரிய மன்மதனை அழகால் செருக்கழித்த இராமன்;* ***மீண்டான் என்ன -*** *அயோத்திக்குத் திரும்பிவிட்டான் என்று கருதி;* ***மான அரவின் -*** *சீற்றம் பொருந்திய பாம்பின்;* ***வாய்த் தீய வளை வான்தொளை வாள் எயிற்றின்வழி ஆன கடுவுக்கு-*** *வாயில் உள்ள தீய வளைந்த சிறந்த விடப்பல்லின் ஆக வரும் விடத்துக்கு;* ***அரு மருந்தா -*** *அரிய மருந்தாக;* ***அருந்தும் அமுதம் பெற்று உய்ந்து -*** *உண்ணக்கூடிய சாவா மருந்தைப் பெற்று உயிர் பிழைத்து;* ***போன பொழுதில்-*** *வெளியே போன உடனேயே;* ***புகுந்த உயிர்-*** *திரும்ப உள்ளே வந்து புகுந்த உயிரை;* ***பொருத்தார் ஒத்தார் -*** *தாங்கியவர்களைப் போன்றார்கள்.*

*பாம்பினாற் கடியுண்ட உடனே வெளியேறிய உயிர் அமுதம் பெற்று உய்ந்து மீண்டும் உள்ளேபுகுந்தாற் போல முதல்நாள் இரவில் சோர்ந்திருந்த நகரினர்*

*காலையே தேரின் சுவடு கண்டுஅயோத்தி நகர் நோக்கி மகிழ்ந்தபடி. உள்ளது என்றார். அமுதம் - சாவாமருந்து.* ***82***

***1922.* ஆறு செல்லச் செல்ல, தேர் ஆழி**
**கண்டார், அயற்பால**
**வேறு சென்ற நெறி காணார்;**
**விம்மாநின்ற உவகையராய்,**
**மாறி உலகம் வகுத்த நாள்**
**வரம்பு கடந்து மண் முழுதும்**
**ஏறி ஒடுங்கும் எறிகடல்போல்,**
**எயில் மா நகரம் எய்தினார்.**

**ஆறு செல்லச் செல்ல -** *வழி நடந்து போகப் போக;* **தேர் ஆழி கண்டார் -** *தேர்ச் சக்கரத்தை (சுவட்டை)ப் பார்த்து;* **அயற்பால வேறு சென்ற நெறி காணார் -** *பக்கத்தில் வேறாகச் சென்ற வழிகள் (சுவடுகள்) எதுவும் காணாது;* **விம்மாநின்ற -** *மேலும்மேலும் தளும்புகின்ற;* **உவகையராய் -** *மகிழ்ச்சியோடு;* **மாறி உலகம் வகுத்த நாள் -** *பிரளயம் நீங்கி மீண்டும் படைப்பு நிகழ்ந்த காலத்தில்;* **வரம்பு கடந்து மண்முழுதும் ஏறி-** *எல்லை கடந்து பூமி முழுவதும் மூடி மேல் சென்று (பிறகு);* **ஒடுங்கும் எறிகடல் போல் -** *தன் எல்லைக்குள் ஒடுங்கி அடங்குகின்ற அலைவீசும் கடலைப் போல;* **எயில் மாநகரம்எய்தினார் -** *மதிலாற் சூழப் பெற்ற அயோத்தி என்னும் பெரிய நகரத்தை அடைந்தார்கள்.*

*பெருந்திரளாகக் காடு சென்று மீண்டும் நகர் திரும்பிய மக்கள் வெள்ளத்துக்கு 'ஏறிஒடுங்கி அடங்கும் கடல்' உவமையாம். உவமையணி.* ***83***

*உண்மை உணர்ந்த நகரினர் வருத்தத்தை வசிட்டன் ஆற்றுதல்*

***1923.* புக்கார், 'அரசன் பொன்னுலகம்**
**போனான்' என்னும் பொருள் கேட்டார்;**
**உக்கார், நெஞ்சம்; உயிர் உகுத்தார்;**
**உற்றது எம்மால் உரைப்ப அரிதால்;**
**'தக்கான் போனான் வனம்' என்னும்**
**தகையும் உணர்ந்தார்; - மிகை ஆவி**
**அக் காலத்தே அகலுமோ,**
**அவதி என்று ஒன்று உளதானால்?**

**புக்கார் -.** *நகரிற் புகுந்த மக்கள்;* **'அரசன் பொன்னுலகம் போனான்' என்னும் பொருள் கேட்டார் -** *தசரதன் தேவர் உலகம் சென்றான் என்கிற செய்தியைக்கேட்டு;* **நெஞ்சம் உக்கார் -** *மனம் உடைந்து;* **உயிர் உகுந்தார் -** *உயிர்சிந்தினார்கள்;* **உற்றது எம்மால் உரைப்ப அரிது -** *அவர்கள் அடைந்த துன்பம் எம்மால்சொல்லுதற்கு இயலாது;* **'தக்கான் வனம் போனான்' -** *இராமன் வனம் சென்றான்;* **என்னும் தகையும் உணர்ந்தார் -** *என்கின்ற தன்மையும் அறிந்தார்கள்;* **மிகை ஆவி -** *எஞ்சி நின்ற உயிர்;* **அவதி என்று**

**ஒன்று உளதானால் -** உயிர் போகும் கால எல்லைஎன்று ஒன்று இருக்குமானால்; **அக் காலத்தே அகலுமோ?** - செய்தி கேட்ட அக்காலத்தேயேபோகுமா? (போகாது).

உயிர் போவதற்கு வகுத்த கால எல்லையால் உயிர் தங்கியுள்ளதே அன்றி வேறன்று எனநகரமாந்தர் துயரம் கூறியபடியாம். 'ஆல் 'அசை. அரசன் இறந்து போன செய்தி கேட்டு உகுந்தஉயிர் போக மிகுதி உயிர் இராமன் வனம் போனதறிந்தும் போகாமைக்குக் காரணம் அது நீங்கும்கால எல்லை என்ற ஒன்று விதியால் வகுக்கப்பட்டிருப்பதனால் தான் என்று கூறினார். *84*

*1924.* ***மன்னற்கு அல்லார்; வனம் போன***
***மைந்தற்கு அல்லார், வாங்க அரிய***
***இன்னற் சிறையின் இடைப்பட்டார்,***
***இருந்தார்; நின்ற அருந் தவனும்***
***'உன்னற்கு அரிய பழிக்கு அஞ்சி***
***அன்றோ ஒழிந்தது யான்?' என்று,***
***பன்னற்கு அரிய பல நெறியும் பகர்ந்து,***
***பதைப்பை நீக்கினான்.***

(மீண்ட நகரினர்), **மன்னற்கு அல்லார் -** (நகரில் இருந்து) இறந்துபோனதயரதனுக்கும் உதவாமல்; **வனம் போன மைந்தற்கு அல்லார்** - காடு சென்ற இராமனுடன் கூடச்சென்று அவனுக்கும் உதவாமல்; **வாங்க அரிய -** நீக்க முடியாத; **இன்னல் சிறையின் இடைப்பட்டார் -** துன்பமாகிய சிறையிலே அகப்பட்டுத் தவிப்பாராய்; **இருந்தார் -; நின்ற அருந்தவனும் -** அவர்களிடையே இருந்த வசிட்டனும்; **'யான் -; உன்னற்கு அரியபழிக்கு அஞ்சி அன்றோ ஒழிந்தது என்று -** நினைத்தற்கும் அரிய பழி வந்து சேரும் என்றுகருதி அல்லவா நகரில் தங்கியது என்று கூறி; **பன்னற்கு அரிய பல நெறியும் பகர்ந்து** - சொல்லுதற்கு முடியாத பல சமாதானங்களையும் சொல்லி; **பதைப்பை நீக்கினான்** -அவர்கள் துடிப்பைப் போக்கினான்.

'நகரில் தங்கியது' என்றும், 'வனம் போகாது ஒழிந்தது'என்றும், 'இராமன் காடு செல்வதைத் தடுக்காமல் ஒழிந்தது' என்றும் பலவாறு பொருள் கொள்ளக்கிடக்கும் எதைச் செய்தாலும் பழியாகும் ஆதலின் அவை அனைத்தும் பொருந்திய உரைகளே. *85*

*1925.* ***வெள்ளத்திடை வாழ் வட அனலை***
***அஞ்சி வேலை கடவாத***
***பள்ளக் கடலின், முனி பணியால்,***
***பையுள் நகரம் வைகிட, மேல்***
***வள்ளல் தாதை பணி என்னும்***
***வானோர் தவத்தால், வயங்கு இருளின்***
***நள்ளில் போன வரி சிலைக் கை***
***நம்பி செய்கை நடத்துவாம்.***

*முனி பணியால்* **-** *வசிட்டன் கட்டளையால்;* ***வெள்ளத்து இடைவாழ் வட அனலைஅஞ்சி*** **-** *கடல்நீர்ப் பெருக்கின் இடையே தங்கியுள்ள வடவாக்கினிக்குப் பயந்து;* **வேலைகடவாத -** *தன் கரையைக் கடந்து செல்லாத;* ***பள்ளக் கடலின்*** **-** *ஆழமான கடல் போல;* **பையுள் நகரம் வைகிட -** *துன்பமுடைய நகரமாந்தர் ஆற்றித் தங்கியிருக்க;* **மேல் -** *அடுத்து;* **வள்ளல் தாதை பணி என்னும் வானோர் தவத்தால் -** *வள்ளன்மை உடைய தயரதன்ஆணை என்கின்ற தேவர்கள் செய்த தவப்பயனால்;* **வயங்கு இருளின் நள்ளில் -** *விளங்கும்நடு இரவில்;* **போன -** *காடு சென்ற;* **வரி சிலைக்கை நம்பி -** *கட்டமைந்தவில்லை உடைய இராமனது;* ***செய்கை*** **-** *செயலை;* ***நடத்துவாம்*** **-** *சொல்லுவோம்.*

*தசரதன் பணியாயினும் அது வானோர் தவமே ஆகும். 'கூனும் சிறிய கோத்தாயும் கொடுமைஇழைப்பக் கோல் துறந்து, இமையோர் இடுக்கண் தீர்த்த கழல் வேந்து' என்பதும் (1313)காண்க. வடவை - பெண்குதிரை முகம் உடையதாய்க் கடல் நடுவில் இருந்து கடல் நீரைக்கட்டுப்படுத்தும் நெருப்பு. வசிட்டன் வடிவைக்கனல்- கடல் நகரமாந்தர். அடங்கல் - அமைதி அடைதல் என உவமை காண்க. வேலை - கரை.*

## கங்கைப் படலம்

*கங்கையைப் பற்றிய படலம் எனப்பெறும். காடு செல்லப் புறப்பட்ட இராமன் சீதையோடும்இலக்குவனோடும் வழிநடந்து, வழியில் உள்ள காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து, கங்கைக்கரை சேர்ந்து, அங்குள்ள முனிவர்கள் வர வேற்று உபசரிக்க, அதனை ஏற்று, நீராடி, எரி ஓம்பி, அமுதுசெய்து தங்களை மகிழ்விக்குமாறு முனிவர் வேண்ட, சீதையோடு கங்கையில் நீராடி, முனிவர்அளித்த விருந்தை ஏற்று அங்கே இருத்தலாகிய செய்திகள் இப்படலத்தில் கூறப்படுகின்றன. இவைஅனைத்தும் கங்கையைச் சார்ந்து நிகழ்வன ஆதலின் இது கங்கைப் படலம். எனப்பெற்றது.*

*இராமன் சீதையோடும் இலக்குவனோடும் கானகத்தில் செல்லுதல்*

*சந்தக் கலிவிருத்தம்*

***1926. வெய்யோன் ஒளி தன் மேனியின்***
***விரி சோதியின் மறைய,***
***பொய்யே எனும் இடையாளொடும்,***
***இளையானொடும் போனான் -***
***'மையோ, மரகதமோ, மறி***
***கடலோ, மழை முகிலோ,***
***ஐயோ, இவன் வடிவு!' என்பது ஓர்***
***அழியா அழகு உடையான்.***

***மையோ -** (கண்ணுக்கு இடக்கூட்டிய) மையோ; **மரகதமோ -** பச்சைநிறஒளிக்கல்லாகிய மரகதமோ; **மறிகடலோ -** (கரையின்கண் அலைகளால்) மறிக்கின்றகடலோ; **மழை முகிலோ -** பெய்யும் கார் மேசுமோ; **ஐயோ -** (உவமை சொல்லமாட்டாத நிலையாகிய) ஐயோ!; **வடிவு என்பது ஓர் அழியா அழகு உடையான் இவன்? -** தன்உருவம் என்று சொல்லப்படுவதாகிய ஒப்பற்ற அழியாத அழகினை உடையன் இந்த இராமன்; **வெய்யோன் ஒளி தன் மேனியின் விரிசோதியின் மறை -** சூரியனது ஒளியானது தன்திருமேனியிலிருந்து வெளிப்படும் நீல ஒளியில் இல்லையாய் மறைந்துவிடும்படி; **பொய்யோஎனும் இடையாளொடும் -** இல்லையோ என்று சொல்லத்தக்க நுண்ணிய இடையினை உடைய சீதையோடும்; **இளையானொடும் -** தம்பியாகிய இலக்குவனோடும்; **போனான் -** (காட்டு வழியே) நடந்து செல்லலானான்.*

*மை, அடர்ந்து கருநிறம் உடையது; செறிவான கருமைக்கு உவமையாயிற்று, மரகதம் பசுமைநிறம்படைத்ததாய்க் குளிர்ச்சி தருவதாதலின் நிறத்தோடு தண்மைக்கும் ஒப்பாயிற்று. மறிகடல்நீலநிறம் படைத்ததாய் இடையறாது இயங்கிக்கொண்டுள்ளது; ஆதலின், இயங்குகின்ற இவனது சோபைக்கு உவமையாயிற்று, மழை முகில் - கருநிறம் படைத்து நீர் என்னும் பயனும் உடையகாரணத்தால் உயிர்களுக்கு நலம் செய்வது ஆதலின் உவமையாயிற்று. கருமையும், தண்மையும், இடையறாஇயக்கமும், தண்ணளியாகிய கருணையும் இவற்றுள் தனித்தனி காணல் அன்றி இவை நான்கும் ஒருங்கேயுடைய இராமபிரானுக்கு ஒருங்கே உடையதொரு உவமை காண்டல் அரிதாயினமை பற்றி*

*அதிசயித்து இனிஉவமை சொல்ல மாட்டாமையாகிய இரக்கமும் தோன்றி 'ஐயோ' என முடித்தார். ஆயினும், அதுவே இராமபிரானது பேரழகை அவர் சொல்லி முடித்ததாக ஆயிற்று - ''அச்சோ ஐயோ என்னே எற்று எவன்எனுஞ்சொல் அதிசயம் உற இரங்கல்'' என்பது சூடாமணி நிகண்டு. திருக்கோவையாரில் (384.) பேராசிரியர், ஐயோ என்னும் சொல்லைக் குறித்து இஃது உவமைக்கண் வந்தது' என்று கூறியுள்ளமைகொண்டு ஈண்டும் உவமைக்கண் வந்ததாகக் கொள்ளலாம். நீலநிறம் தன்னுள் கொண்ட எதனையும்வெளிவிடாது தன்னையே காட்டி நிற்கும் ஆதலின், நீலமேனியனாகிய இராமனிடத்திலிருந்து வெளிப்படும் ஒளியில் சூரியனது ஒளி மறைந்துவிட்டது என்றார். 'அழியா அழகு' என்பது என்றும்மாயாத தூய அழகு எனப்பெறும். அழித்தல் - பிறிதொன்றால் இல்லை என்றாக்கப்படும்.இவ்வழகினும் சிறந்ததோர் அழகு வந்தால் இது அழகில்லை யென்று அழிக்கப்பெறும். அவ்வாறு ஒன்றுஇல்லவே இல்லை ஆதலின், இவன் அழகு 'அழியா அழகு' ஆயிற்று. 'ஓ' காரம் நான்கும்ஐயப்பொருளின்கண் வந்தன.* ***1***

வழியிடையே காட்சிகள் கண்டு மூவரும் மகிழ்ந்து செல்லுதல்

***1927. அளி அன்னது ஓர் அறல் துன்னிய***
***குழலாள், கடல் அமுதின்***
***தெளிவு அன்னது ஓர் மொழியாள்,***
***நிறை தவம் அன்னது ஓர் செயலாள்***
***வெளி அன்னது ஓர் இடையாளொடும் -***
***விடை அன்னது ஓர் நடையான் -***
***களி அன்னமும் மட அன்னமும்***
***நடம் ஆடுவ கண்டான்.***

***அளி அன்னது ஓர் அறல் துன்னிய குழலாள் -*** *வண்டைப் போன்ற (கரிய) ஒப்பற்றகருமணல் நெருங்கி இருப்பது போன்ற கூந்தலை உடையவறும்;* ***கடல் அமுதின் தெளிவு அன்னது ஓர்மொழியாள் -*** *கடலின்கண் கடைந்து எடுத்த தேவர் அமிழ்தத்தின் தெளிவு போன்றது எனும்படியாகிய ஒப்பற்ற பேச்சினை உடையவளும்;* ***நிறை தவம் அன்னது ஓர் செயலாள் -*** *நிறைந்த தவத்தைப் போன்ற ஒப்பற்ற தூய செயலை உடையவளும்;* ***வெளி அன்னது ஓர்இடையாளொடும் -*** *ஆகாயம் போன்றதாகிய இல்லையான ஒப்பற்ற இடையினை உடையவளுமாகியசீதையோடும்;* ***விடை அன்னது ஓர் நடையான் -*** *இடபத்தை ஒத்த ஒப்பற்ற நடையினை உடையஇராமன்;* ***களி அன்னமும் -*** *செருக்கினை உடைய ஆண் அன்னமும்;* ***மட அன்னமும் -*** *மடப்பத்தை உடைய பெண் அன்னமும்;* ***நடம் ஆடுவ -*** *சேர்ந்து உலாவிடுவதை;* ***கண்டான்-.***

*வண்டு கூந்தலின் கருமைக்கும், கருமணல் கருமையோடு நெறிப்புக்கும் உவமையாம். முனிவர் தவம்போன்றது பெண்டிர் கற்பொழுக்கம். இங்குச் செயல் என்பது கற்பினை. களி, மடம் என்பன ஆண்,பெண் என்பனவற்றைக் காட்டும் அடையாளம், தானும் சீதையும் நடப்பது போன்ற குறிப்பினை அவற்றின்பால் கண்டான் இராமன் என்க. 'நடமாடுதல்' என்பது வழக்கின்கண் 'உலாவிடுதல்'என்னும் பொருளில் வருதல் கண்கூடு. இனி அன்னங்கள் நடப்பது நடனம் ஆடுதல் போல உள்ளது என்றலும் ஒன்று.* ***2***

***1928. அஞ்சு அம்பையும் ஐயன்தனது***
***அலகு அம்பையும் அளவா,***
***நஞ்சங்களை வெல ஆகிய***
***நயனங்களை உடையாள்,***
***துஞ்சும் களி வரி வண்டுகள்***
***குழலின்படி சுழலும்***
***கஞ்சங்களை மஞ்சன் கழல்***
***நகுகின்றது கண்டாள்.***

***அஞ்சு அம்பையும் -*** *மன்மதனது மலர் அம்புகள் ஐந்தனையும்;* ***ஐயன்தனது -*** *இராமனது;* ***அலகு -*** *கூர்மையான;* ***அம்பையும் -*** *கணையையும்;* ***அளவா -*** *அளந்து(தனக்குவமை யாகானென்று தள்ளி);* ***நஞ்சங்களை -*** *கொடிய விடங்களை;* ***வெல ஆகிய -*** *வெல்லும் தன்மை படைத்தனவாகிய;* ***நயனங்களை உடையாள் -*** *அழகிய கண்களை உடைய சீதை;* ***துங்சும் களி வரி வண்டுகள் -*** *உறங்கும் செருக்குடைய அழகிய வண்டுகள்;* ***குழலின்படி -*** *கூந்தலிற் படியும் தன்மையில்;* ***சுழலும் -*** *சுற்றியிருக்கப்பெற்ற;* ***கஞ்சங்களை -*** *தாமரை மலர்களை;* ***மஞ்சன் கழல் -*** *மைந்தனாகிய இராமனது திருவடிகள்;* ***நகுகின்றது -*** *உவமையாகாதென்று இகழ்ந்து சிரிப்பதனை;* ***கண்டாள்-.***

*தாமரை, முல்லை, அசோகு, மா, நீலம், என்பன மன்மதனது மலர் அம்புகளாம். இங்கு மலர்கருதாது அம்பு என்பதுபற்றிக் கூறப்பெற்றது. தேனுண்டு உறங்கும் செருக்குடைய வண்டுகள். குழலின்படி- வேய்ங்குழல் போல ரீங்காரித்து என்றும் நெய்குழல்போல போவது வருவது ஆகி என்றும் ஆம்.இராமனது திருவடி அழகிற்குத் தாமரை ஒப்பாகாமை கருதி மகிழ்ந்தாள் சீதைஎன்றவாறாம். 3*

***1929. மா கந்தமும், மகரந்தமும், அளகம் தரும் மதியின்***
***பாகம் தரும் நுதலாளொடு, பவளம் தரும் இதழான்,***
***மேகம் தனி வருகின்றது மின்னொடு என, மிளிர் பூண்***
***நாகம் தனி வருகின்றது பிடியோடு என, நடவா.***

***மா கந்தமும் -*** *மிக்க நறுமணத்தையும்;* ***மகரந்தமும் -*** *வாசனைப் பொடியும் கலந்து பொருந்திய;* ***அளகம் -*** *கூந்தல்;* ***தரும் -*** *பெற்ற;* ***மதியின் பாகம்தரும் நுதலாளொடு -*** *அரைச்சந்திரன் வடிவாயமைந்து நெற்றியை உடைய சீதையோடு;* ***பவளம்தரும் இதழான் -*** *பவளத்துக்குச் செம்மை தரும் திரு அதரத்தை உடைய இராமன்;* ***மேகம்மின்னொடு தனி வருகின்றது என்ன -*** *மேகம் மின்னலோடு சேர்ந்து தனித்து வருகின்றது போலவும்;* ***மிளிர் பூண் -*** *அழகிய அணி அணிந்த;* ***நாகம் -*** *ஆண்யானை; பிடியோடு தனி வருகின்றது* ***என்ன -*** *பெண் யானையோடு தனித்து வருகின்றது போலவும்;* ***நடவா -*** *நடந்து சென்று.*

*நறுமணப் பொடிகளையும் மலர்களில் உள்ள மகரந்தங்களையும் கூந்தலுக்கு இட்டு மணம் ஊட்டல்வழக்கு. கூந்தலின் கீழ் உள்ள நெற்றியை 'அளகம் தரும் மதியின் பாகம்' என்றார். குளகச்செய்யுள். 4*

***1930. தொளை கட்டிய கிளை முட்டிய***
***சுருதிச் சுவை அமுதின்,***
***கிளை கட்டிய கருவிக் கிளர்***
***இசையின், பசை நறவின்,***
***விளை கட்டியின், மதுரித்து எழு***
***கிளவிக் கிளி விழிபோல்,***
***களை கட்டவர் தளை விட்டு எறி***
***குவளைத் தொகை கண்டான்.***

***தொளை கட்டிய கிளை-*** *தொளை பொருந்திய புல்லாங்குழலிலிருந்து;* ***முட்டிய -*** *தாக்கி எழுப்பிய;* ***சுருதி -*** *காதால் கேட்டு அனுபவிக்கும் தன்மையதான;* ***சுவை அமுதின்-*** *சுவையுடைய இசை அமுதம் போலவும்;* ***கிளை கட்டிய கருவி -*** *நரம்புகள் இணைத்துக்கட்டப்பெற்ற யாழிலிருந்து;* ***கிளர் இசையின் -*** *உண்டாகின்ற இசையைப் போலவும்;* ***பசை நறவின் -*** *சாரமுள்ள தேனைப் போலவும்;* ***விளை கட்டியின் -*** *நன்றாக விளைந்த பாகுக் கட்டி போலவும்;* ***மதுரித்து எழு -*** *இனிமை உடையதாகி எழுகின்ற;* ***கிளவி -*** *பேச்சினை உடைய;* ***கிளி -*** *கிளி போல்பவளாகிய சீதையினது;* ***விழி போல் -*** *கண்களைப் போல;* ***களை கட்டவர் -*** *களை பறிப்பவர்;* ***தளைவிட்டு எறி -*** *வயலிலிருந்து வீசி எறிகின்ற;* ***குவளைத் தொகை கண்டான் -*** *குவளை மலர்களின்கூட்டத்தைப் பார்த்தான்.* *சீதையின் சொல்லினிமைக்குக் குழலிசை, யாழிசை, தேன், கட்டி என இவை உவமையாம்.களை பிடுங்குவார் எறிந்த கருங்குவளை மலர்கள் சீதையின் கண்போலத் தோன்றிய இராமனுக்குஎன்பதாகும்.*
***5***

***1931. 'அருப்பு ஏந்திய கலசத் துணை,***
***அமுது ஏந்திய மத மா***
***மருப்பு ஏந்திய' எனல் ஆம் முலை,***
***மழை ஏந்திய குழலாள்,***
***கருப்பு ஏந்திரம் முதலாயின***
***கண்டாள்; இடர் காணாள்;***
***பொருப்பு ஏந்திய தோளானொடு***
***விளையாடினள், போனாள்.***

***'அருப்பு ஏந்திய கலசத்துணை -*** *அரும்பைத் தன் உச்சியில கொண்டுள்ள இரண்டுபொற்கலசங்கள்;* ***அமுது ஏந்திய மதமா ஏந்திய மருப்பு' -*** *அமுதைத் தன்னிடத்தே வைத்துக்கொண்டுள்ள மதச் செருக்குடைய ஆண் யானையின் உயர்ந்த தந்தங்கள்;* ***எனல் ஆம் முலை*** *- என்று சொல்லத்தக்கதாகிய முலைகளையும்;* ***மழை ஏந்திய குழலாள் -*** *மேகத்தை ஒத்தகூந்தலையும் உடைய சீதை;* ***கருப்பு ஏந்திரம் -*** *கரும்பாலை;* ***முதலாயின கண்டாள் -*** *முதலியவற்றை (அங்கங்கே) கண்டவளாய்;* ***பொருப்பு ஏந்திய தோளானொடு -*** *மலையை ஒத்த திண்ணிய தோளை உடைய இராமனோடு;* ***விளையாடினாள் போனாள் -*** *விளையாடிக்கொண்டுசென்றாள்.*

*அரும்பு என்றது முலைக்காம்புகளை. அருப்பு - வலித்தல் விகாரம். எந்திரம் எனும் சொல்செய்யுளிசை நோக்கி ஏந்திரம் என நீண்டது. வழியிடைக் காட்சிகள் கண்டு சீதை*

*வேதனைதெரியாமல் மகிழ்ந்து சென்றாள் என்பதாம். ஏந்திய.....சொற்பொருட் பின்வரு நிலையணி.* ***6***

***1932. பல் நந்து உகு தரளம் தொகு***
***படர் பந்திகள் படு நீர்***
***அன்னம் துயில் வதி தண்டலை,***
***அயல் நந்து உறை புளினம்,***
***சின்னம் தரும் மலர் சிந்திய***
***செறி நந்தனவனம், நன்***
***பொன் உந்திய நதி, கண்டு உளம்***
***மகிழ்தந்தனர், போனார்.***

***பல் நந்து உகு -*** *பல சங்குகள் சுக்கிய;* ***தொகு தரளம் படர் பந்திகள் படுநீர் -*** *திரண்ட முத்துகளின் தொடர்ந்த வரிசைகள் பொருந்திய நீர்த்துறைகளையும்;* ***அன்னம் துயில் வதி தண்டலை -*** *அன்னப் பறவைகள் தூங்குகின்ற சோலைகளையும்;* ***அயல் நந்து உறை புளினம் -*** *அருகேசங்குகள் தங்கியுள்ள மணல் மேடுகளையும்;* ***சின்னம் தரும் மலர் சிந்திய செறி நந்தனவனம் -*** *விடுபூவாக விழும் மலர்களைச் சிதறிய நெருங்கிய பூந்தோட்டங்களையும்;* ***நன் பொன் உந்தியநதி -*** *நல்ல பொற்பொடிகளைத் தள்ளுகின்ற ஆறுகளையும்;* ***கண்டு -*** *பார்த்து;* ***உளம் மகிழ்ந்தனர் போனார் -*** *மனம் மகிழ்ச்சி அடைந்தவர்களாய்ச் சென்றார்கள்.*

*இராமன் கங்கை சேரும் முன் தமசா நதிக் கரையில் தங்கி, தேவ சுருதி, கோமதி என்னும்ஆறுகளைக் கடந்தான் என்று வால்மீகி கூறியது கருதி இங்கே 'படு நீர்' 'பொன் உந்திய நதி'என்றார் என்க.* *7*

***1933. கால் பாய்வன முது மேதிகள்,***
***கதில் மேய்வன, கடைவாய்***
***பால் பாய்வன; நறை பாய்வன***
***மலர்வாய் அளி படரச்***
***சேல் பாய்வன; கயல் பாய்வன;***
***செங் கால் மட அன்னம்***
***போல், பாய் புனல், மடவார் படி***
***நெடு நாடு அவை போனார்.***

***முது மேதிகள் -*** *கிழட்டு எருமைகள்;* ***கதிர் மேய்வன -*** *நெற்கதிர்களைமேய்ந்து;* ***கடைவாய் பால் பாய்வன -*** *தமது கடை வாயிலிருந்து (மணி பிடியாத அந்நெற்கதிர்களின் அரிசிப்) பால் ஒழுகப் பெற்றவையாய்;* ***கால் பாய்வன -*** *தமது கால்களால்(நீர்நிலைகளிற்) பாய்வனவாம்;* ***நறைபாய்வன மலர்வாய் அளிபடர -*** *தேன் ஒழுகப் பெற்றனவாய மலர்களிடத்து வண்டுகள் மேல் செல்லும்படி;* ***சேல்பாய்வன கயல் பாய்வன -*** *சேலும் கயலும் துள்ளிப் பாய்வனவாம்;* ***பாய் புனல் -*** *பாய்ந்து செல்லும் ஆற்றுநீரிலே;* ***செங்கால் மட அன்னம் போல் -*** *சிவந்த காலை உடைய பெண் அன்னப் பறவைகள்போல;* ***மடவார் -*** *பெண்கள்;* ***படி -*** *முழுகுகின்ற;* ***நெடு நாடு அவை போனார் -*** *நீண்ட கோசல தேசத்தைக் கடந்து சென்றார்கள்.*

கோசல நாட்டின் நீர்வளம் குறித்ததாம். நெற்கதிர் முற்றாப் பசுங்கதிர் ஆதலின், அதனை உண்ட மேதிகளின் வாயில் பால் சோர்ந்தது. அத்துடன் அம்மேதிகள் நீர்நிலைகளிற்பாய்கின்றன. வண்டுகள் மேல் எழுந்து செல்லும்படி மலர்களின் மேல் கயலும் மீனும் துள்ளுவன.அன்னப் பறவைகள் போல் பெண்கள் நீரில் மூழ்குகிறார்கள் என்று கோசல நாடு நீர்வளத்தால்மிக்குள்ளமையைப் புலப்படுத்தினார் என்க. **8** மூவரும் கங்கைக் கரை அடைய முனிவர்கள் காண வருதல்

கலிவிருத்தம்

**1934. பருதி பற்றிய பல் கலன் முற்றினர்,**
**மருத வைப்பின் வளம் கெழு நாடு ஒரீஇ.**
**சுருதி கற்று உயர் தோமிலர் சுற்றுறும்**
**விரி திரைப் புனல் கங்கையை மேவினார்.**

**பருதி பற்றிய -** சூரியனைப் போன்ற ஒளிபடைத்த; **பல்கலன் -** பல அணிகலன்களை; **முற்றினர் -** நிறைய அணிந்துள்ள மூவரும்; **மருத வைப்பின் -** வயல்நிலங்களாகிய செல்வமுடைய; **வளம் கெழு நாடு ஒரீஇ -** வளம் பொருந்திய நாடு கடந்து சென்று; **சுருதி கற்று உயர் -** வேதங்களை (இடையறாது) கற்று உயர்ந்த; **தோம் இலர்-** குற்றம் இல்லாத முனிவரர்; **சுற்றுறும் -** எப்பொழுதும் சுற்றி இருக்கப் பெற்ற; **விரி திரைப்புனல் கங்கையை -** விரிந்த அலைகளையுடைய நீர் நிரம்பிய கங்கையாற்றை; **மேவினார் -** அடைந்தார்.

தாம் செய்ய வேண்டிய விரத நியமங்களைச் செய்துகொண்டு, இணையாகத் தங்குதற்கு ஏற்றஇடம் ஆதலாலும், தன்னை அடைந்தாரது பாவத்தைப் போக்குதலானும் முனிவரர் கங்கையைச் சுற்றித்தங்கித் தவம் செய்வாராயினர். **9**

**1935. கங்கை என்னும் கடவுள் திரு நதி**
**தங்கி வைகும் தபோதனர் யாவரும்,**
**'எங்கள் செல் கதி வந்தது' என்று ஏமுறா,**
**அம் கண் நாயகற் காண, வந்து அண்மினார்.**

**கங்கை என்னும் கடவுள் திருநதி -** கங்கை என்று சொல்லப்படும் தெய்வத்தன்மைஉடைய அழகிய ஆற்றின் கரையில்; **தங்கி வைகும் தபோதனர் யாவரும் -** தங்கிஇருக்கின்ற முனிவர்கள் எல்லாரும்; **'எங்கள் செல் கதி வந்தது' என்று ஏமுறா -** எங்கள்மோட்ச மாகிய செல்லும் பேறு எதிர்ப்பட்டது என்று மனத்தின்கண் இன்பம் அடைந்து; **அம்கண் நாயகன் காண-** அருளுடைய கண்களை உடைய இராமனைக் காண்பதற்கு; **வந்து அண்மினார் -** வந்து அணுகினார்கள்.

பரம்பொருளே இராமனாக அவதரித்துள்ளமை உணர்ந்தவர் ஆதலின், 'எங்கள் செல்கதி வந்தது'என்று முனிவரர் இன்புற்றனர் என்க. கண்ணுக்கு அழகு, அருளாதலின் 'அம்'- அழகு எனப்பொருள்கொண்டது. **10**

***1936.  பெண்ணின் நோக்கும் சுவையை, பிறர் பிறர்க்கு***
***எண்ணி நோக்கி இயம்ப அரும் இன்பத்தை,***
***பண்ணின் நோக்கும் பரா அமுதை, பசுங்***
***கண்ணின் நோக்கினர், உள்ளம் களிக்கின்றார்.***

***பெண்ணின் நோக்கும் சுவையை -*** *பெண்ணிடத்துக் கருதப்படும் ஐம்புல இன்பத்தை;* ***பிறர் பிறர்க்கு -*** *ஒருவர் மற்றொருவர்க்கு;* ***எண்ணி -*** *நினைத்து;* ***நோக்கி -*** *பார்த்து;* ***இயம்ப அரும்*** *எடுத்துச் சொல்லமுடியாத;* ***இன்பத்தை -*** *இன்பச்சுவையை;* ***பண்ணில் நோக்கும் பராவமுதை -*** *இசைவடிவான வேதத்தினால் அறியப்படும் மேலானஅமுத வடிவான பரம்பொருளை;* ***பசுங்கண்ணின் -*** *குளிர்ந்த கண்களால்;* ***நோக்கினார் -*** *பார்த்து;* ***உள்ளம் களிக்கின்றார் -*** *மனம் மகிழ்ச்சியடைவாராயினர்.*

*"கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள" என்னும்குறளை (குறள். 1101.) நோக்கியது பெண்ணின் நோக்கும் சுவை என்பது. " கண்டு கேட்டு உற்றுமோந்து உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவு அரிய அளவு இல்லாச் சிற்றின்பம்...... கண்ட சதிர் கண்டொழிந்தேன், அடைந்தேன் உண் திருவடியே" (திவ்ய. 3328) என்னும்நம்மாழ்வார், பாசுரமும் காண்க. "ஐம்புலன்கள் ஆர வந்து என்னுள்ளே புகுந்த விசைமாலமுதப்பெருங்கடல்" என்றார் இறைவனை மணிவாசகரும் (திருவா. திருச்சதகம் - 26) "எவ்வாறொருவர்க்கு இசைவிப்பது (கந்தர் அநுபூதி 30) என்று அருணகிரியாரும், "இயம்பு அரும் இன்பத்தை"என்பதனோடு ஒப்பு நோக்கத்தக்கன. பண் என்பது இசையாம், இங்கு இசை வடிவானவேதம்.*
***11***

***1937.  எதிர்கொடு ஏத்தினர்; இன் இசை பாடினர்;***
***வெதிர் கொள் கோலினர், ஆடினர்; வீரனை,***
***கதிர் கொள் தாமரைக் கண்ணனை, கண்ணினால்,***
***மதுர வாரி அமுது என, மாந்துவார்.***

***வெதிர் கொள் கோலினர்-*** *மூங்கிலால் ஆகிய தண்டத்தை உடைய முனிவர்கள்;* ***வீரனை -*** *இராமனை;* ***கதிர் கொள் தாமரைக் கண்ணனை-*** *ஒளி படைத்த தாமரைக்கண்களை உடையவனை;* ***கண்ணினால் -*** *தங்கள் கண்களால்;* ***மதுர வாரி அமுது என -*** *இனிய பாற்கடல் தந்த அமுதம் போல;* ***மாந்துவார் -*** *உண்டு;* ***எதிர் கொடு -*** *வரவேற்று;* ***ஏத்தினர் -*** *துதித்து;* ***இன் இசை பாடினர் -*** *இனிய இசை பாடி;* ***ஆடினர் -*** *(ஆனந்தக் களிப்பால்) ஆடினர்.*

*மது ரவாரி - பாற்கடல். வெதிர் - மூங்கில் - ஏக தண்டம், திரி தண்டம் ஏந்துதல்முனிவர் இயல்பு. "முக்கோல் கொள் அந்தணர்" (கலித். 126:4) என்பது காண்க.*
***12***

*முனிவர் தவச் சாலைக்கு அழைத்துச் சென்று உபசரித்தல்*

***1938.  மனையின் நீங்கிய மக்களை வைகலும்***
***நினையும் நெஞ்சினர் கண்டிலர் நேடுவார்,***

***அனையர் வந்துற, ஆண்ட எதிர்ந்தார்கள்போல்,***
***இனிய மா தவப் பள்ளிகொண்டு எய்தினார்.***

***மனையின் நீங்கிய மக்களை** - வீட்டை விட்டுப் பிரிந்து சென்ற பிள்ளைகளை; **வைகலும்** - நாள்தோறும்; **நினையும் நெஞ்சினர்** - நினைகின்ற நெஞ்சத்தோடு; **கண்டிலர் நேடுவார்** - காணாது தேடுகின்றவர்கள்; **அனையர் வந்துற** - அப்பிள்ளைகள் திரும்பத் தாமே வந்து சேர; **ஆண்டு எதிர்ந்தார்கள் போல்** - அங்கே(அப்பிள்ளைகளை) எதிர்ப்பட்ட பெற்றோர்களைப் போல் (மகிழ்ச்சி கொண்டு); **இனியமாதவப் பள்ளி கொண்டு எய்தினார்** - இனிமையான தம்முடைய தவச் சாலைக்கு (மூவரையும்)அழைத்துக்கொண்டு சென்றார்கள்.*

*வீட்டை விட்டுப் பிரிந்து சென்ற மக்கள் திரும்பவந்துழிப் பெற்றோர் அடையும்மகிழ்ச்சி. இங்கே இராமபிரானைக் கண்ட முனிவரர் மகிழ்ச்சிக்கு உவமையாயிற்று. 13*

***1939. பொழியும் கண்ணின் புதுப் புனல் ஆட்டினர்;***
***மொழியும் இன் சொலின் மொய்ம் மலர் சூட்டினர்;***
***அழிவு இல் அன்பு எனும் ஆர் அமிர்து ஊட்டினர்;***
***வழியில் வந்த வருத்தத்தை வீட்டினர்.***

***கண்ணின் பொழியும் புதுப்புனல் ஆட்டினர்** - முனிவர் கண்களில் பொழிகின்ற கண்ணீராகிய புதிய நீரால் ஆட்டி; **மொழியும் இன்சொலின் மொய்ம்மலர் சூட்டினர்** - பேசுகின்ற இன்சொல்லாகிய நெருங்கிய மலர்களைச் சூட்டி; **அழிவு இல்** - கெடுதல்இல்லாத; **அன்பு எனும் ஆர் அமிர்து ஊட்டினர்** - அன்பு எனும் அரிய அமுதத்தைக் உண்ணக் கொடுத்து; (அம் முனிவர்), **வழியில் வந்த வருத்தத்தை** - (அம் மூவரும்) வழிநடையால் உடையராய வருத்தத்தை; **வீட்டினர்** - இல்லாதபடி போக்கினர்.*

*முனிவர்கள் இராமன் முதலிய மூவர்க்கும் உண்டாகிய வழிநடை வருத்தம் போக்கியவாறு.கண்ணில் வழியும் நீரால் அவர்களைக் குளிப்பாட்டி, இன் சொற்களாகிய மலர்களைச் சூட்டி,அன்பாகிய அமுதூட்டிப் போக்கினர். மூன்றும் முறையே செயல், சொல், மனம் மூன்றாலும் அவர்கள்இராமன்பால் கொண்ட அன்பின் வெளிப்பாடாயின. ''புனையும் கண்ணி எனதுடைய வாசகம் சொல்மாலையே'' என்ற ஆழ்வார் பாசுரம் 'இன்சொலின் மொய்ம்மலர்' என்பதனோடு ஒத்தது. ''பொழிந்த உண்கண் நீர்ப் புதுப் புனல் சூட்டினார்'' என்ற நகர்நீங்கு படல அடிகளை (1820.) இங்குமுதலடியோடு ஒப்பு நோக்குக. 14*

*நாட் கடன் செய்து அமுதுண்ண முனிவர் இராமனை வேண்டுதல்*

***1940. காயும், கானில் கிழங்கும், கனிகளும்,***
***தூய தேடிக் கொணர்ந்தனர்; 'தோன்றல்! நீ***
***ஆய கங்கை அரும் புனல் ஆடினை,***
***தீயை ஓம்பினை, செய் அமுது' என்றனர்.***

*(அம் முனிவர்கள்),* ***கானில் -*** *காட்டிலிருந்து;* ***காயும் கிழங்கும் கனிகளும் தூயதேடிக் கொணர்ந்தனர் -*** *காய், கிழங்கு, பழம் ஆகியவற்றைத் தூயவையாய்த் தேடிக் கொண்டுவந்தவர்களாய்; (இராமனை நோக்கி)* ***'தோன்றல்! -*** *யாவரினும் சிறந்து விளங்குபவனே!;* ***நீ-; ஆய கங்கை அரும் புனல் ஆடினை -*** *அப்படிப்பட்டகங்கையின் அரிய நீரில் முழுகியவனாய்;* ***தீயை ஓம்பினை -*** *எரியை வளர்த்து (வழிபாடு)முடித்து;* ***அமுது செய் -*** *உண்பாயாக;'* ***என்றனர் -*** *என்று சொன்னார்கள்.*

*தோன்றல் - பிறர் அறியுமாறு புகழுடன் விளங்கலாம். ஆய கங்கை - தூயதாகிய கங்கைஎன்றவாறு. நீராடி, எரியோம்பி, அமுது செய்தல் நித்திய கரும நெறியாம்.*
***15***

*இராமன் சீதையோடு கங்கையில் நீராடுதல்*

***1941. மங்கையர்க்கு விளக்கு அன்ன மானையும்,***
***செங் கை பற்றினன், தேவரும் துன்பு அற,***
***பங்கயத்து அயன், பண்டு, தன் பாதத்தின்,***
***அம் கையின் தரும் கங்கையின் ஆடினான்.***

***மங்கையர்க்கு விளக்கு அன்ன மானையும் -*** *(இராமன்) பெண்களுக்குத் தீபம்போன்றவளாகிய சீதையையும்;* ***தேவரும் துன்பு அற-*** *தேவர்களும் துன்பம் நீங்கும்படியாக;* ***செங்கை பற்றினன் -*** *தன் சிவந்த கைகளாற் பிடித்துக் கொண்டு;* ***பங்கயத்து அயன் -*** *தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம தேவன்;* ***பண்டு -*** *முன்னொருகால்;* ***தன்பாதத்தின் -*** *திருமாலாகிய தன் திருவடிகளில்;* ***அம் கையின் -*** *பிரமனாகிய தன்கையில் உண்டாகிய கமண்டல நீரால்;* ***தரும் -*** *உண்டாக்கிய;* ***கங்கையின் -*** *கங்கை யாற்றில்;* ***ஆடினான் -*** *முழுகினான்.*

*திருமால் திருவிக்கிரமனாக அவதாரம் எடுத்த பொழுது அப் பெருமானது திருவடி சத்தியலோகம் செல்ல, அங்கிருந்த அவர்தம் மகனாகிய பிரம தேவன் தன் தந்தையாரது திருவடி யென்றுகருதித் தன் கையில் உள்ள கமண்டல நீரால் பாதங்களை விளக்கி வழிபாடு செய்ய, அத்திருவடிநீரே கங்கையாறாகப் பெருகியது என்பது விஷ்ணு புராணம். தன்னிடத்துண்டாகிய கங்கையில் தானேமூழ்கினான் என்பதாம்.*
***16***

***1942. கன்னி நீக்க அருங் கங்கையும் கைதொழா,***
***'பன்னி நீக்க அரும் பாதகம், பாருளோர்,***
***என்னின் நீக்குவர்; யானும், இன்று என் - தந்த***
***உன்னின் நீக்கினென்; உய்ந்தனென் யான்' என்றாள்.***

***கன்னி நீக்க அருங் கங்கையும் -*** *அழியாத் தன்மை என்றும் நீங்குதல் இல்லாதகங்கையும்;* ***கைதொழா -*** *கைகளால் (இராமன்) வணங்கி;* ***'பாருளோர் -*** *இப் பூமியில் உள்ளோர்;* ***பன்னி நீக்க அரும் பாதகம் -*** *சொல்லிப் போக்க முடியாத பாவங்களை;* ***என்னின் -*** *என் மூலமாக; (முழுகி)* ***நீக்குவர்-*** *போக்கிக் கொள்வார்கள்;* ***யானும் -*** *நானும்; இன்று - இன்றைக்கு;* ***என்தந்த உன்னின்-*** *என்னைத் தந்த திருமாலாகிய உன்னால்;* ***நீக்கினென் -*** *(என்பாவங்களைப்) போக்கிக் கொண்டேன்;* ***யான் உய்ந்தனென்' -*** *நானும் பிழைத்தேன்;'* ***என்றாள் -*** *என்று சொன்னாள்.*

*பிறர் செய்த பாவங்களைப் போக்கும் கங்கை இன்று தன்னைத் தந்த இறைவனாகிய இராமனேமுழுகியதால் தன் பாவங்களைப் போக்கிக் கொண்டு மகிழ்ந்தாளாகக்கூறினாள்.* ***17***

***1943. வெங் கண் நாகத் கரத்தினன், வெண் நிறக்***
***கங்கை வார் சடைக் கற்றையன், கற்புடை***
***மங்கை காண நின்று ஆடுகின்றான், வகிர்த்***
***திங்கள் சூடிய செல்வனின் தோன்றினான்.***

***வெங் கண் நாகத் கரத்தினன் -*** *கொடிய கண்ணை உடைய யானையின் துதிக்கை போன்றநீண்ட கைகளை உடையவனான இராமன்;* ***வெண் நிறக் கங்கை வார் சடைக் கற்றையன் -*** *வெண்மையான நிறமுடைய கங்கை ஒழுகப் பெறுகின்ற சடைத் தொகுதிகளை உடையவனாய்;* ***கற்புடைமங்கை காண -*** *கற்பிற் சிறந்த சீதை காணும்படியாக;* ***நின் ஆடுகின்றான் -*** *(நீரில்) நின்று நீராடுகின்றான்;* ***வகிர்த்திங்கள் -*** *பிளந்த சந்திரனை; (பிறையை)* ***சூடிய -*** *தலை மேல் சூடிய;* ***செல்வனின் -*** *சிவ பெருமானைப் போல;* ***தோன்றினான் -*** *தோற்றமளித்தான்.*

*கங்கை யொழுகும் சடையோடு பார்வதி காண ஆடுகின்ற பரம சிவனைப் போல, இராமனும் சீதைகாணக் கங்கை நீர் ஒழுகுகின்ற சடையோடு ஆடுகின்றானாம். இங்கே ஆடுதல் என்பது சொல் அளவுக்கு சிவபெருமானோடு இராமனை ஒப்புறுத்தி இன்புறுத்துவதாம். அங்கே ஆடுதல் நடனம், இங்கே நீராடுதல்என்று பொருளால் வேறுபடும். மங்கை காணல், கங்கை நீர் ஒழுகும் சடை உடைமை இருவர்க்கும் பொது.* ***18***

***1944. தள்ளும் நீர்ப் பெருங் கங்கைத் தரங்கத்தால்,***
***வள்ளி நுண் இடை மா மலராளொடும்,***
***வெள்ளி வெண் நிறப் பாற் கடல், மேலைநாள்,***
***பள்ளி நீங்கிய பான்மையின், தோன்றினான்.***

***தள்ளும் நீர்ப் பெருங் கங்கைத் தரங்கத்தால் -*** *மோதுகின்ற நீரை உடைய பெரியகங்கையின் அலைகளால்; (அங்கே சீதையோடு முழுகி எழுகின்ற இராமன்)* ***வள்ளி நுண் இடை மாமலராளொடும் -*** *கொடி போன்ற நுண்ணிய இடையை உடைய தாமரையில் வீற்றிருக்கும் திருமகளுடன்;* ***வெள்ளி வெண்நிறப் பாற்கடல் -*** *வெள்ளி போன்ற வெண்மையான நிறத்தை உடைய பாற்கடலில் மேல்;* ***மேலைநாள் -*** *முன்னொரு காலத்தில்;* ***பள்ளி நீங்கிய பான்மையில் -*** *அனந்தசயனத்தில் அறிதுயில் ஒழிந்து எழுந்து நின்ற தன்மை போல;* ***தோன்றினான் -*** *தோற்றமளித்தான்.*

*கங்கை அலைகள் வெண்மையாய் உள்ளன. அதன்மேல் இராமனும் சீதையும் தோன்றுதல் திருப்பாற்கடலில் துயிலும் திருமால் திருமகளோடு எழுந்து நின்றாற் போலும்என்றார்.* ***19***

***1945. வஞ்சி நாண இடைக்கு, மட நடைக்கு***
***அஞ்சி அன்னம் ஒதுங்க, அடி அன்ன***

***கஞ்சம் நீரில் ஒளிப்ப, கயல் உக,***
***பஞ்சி மெல் அடிப் பாவையும் ஆடினாள்.***

***பஞ்சின் மெல்லடிப் பாவையும்*** *- செம் பஞ்சு போன்ற மென்மையான பாதங்களை உடையசீதையும்;* ***இடைக்கு வஞ்சி நாண*** *- தன்இடைக்கு வஞ்சிக் கொடி நாணப்பட்டுத்தோற்றொதுங்க;* ***மடநடைக்கு அன்னம் அஞ்சி ஒதுங்க*** *- அழகிய தன் நடைக்கு அன்னப் பறவைதோற்றுப் பயந்து பின்னிட;* ***அடி அன்ன கஞ்சம் நீரில் ஒளிப்ப*** *- தன் பாதம் போன்ற தாமரை தோற்றுத் தண்ணீரில் மறைந்துகொள்ள;* ***கயல் உக*** *- கயல் மீன்கள் (கண்ணுக்குத்தோற்றுக்) கெட;* ***ஆடினாள்*** *- நீராடினாள்.*

*வஞ்சி, அன்னம், தாமரை, கயல் ஆகியவை நீரில் உள்ளவை. நீராடும் சீதையின்உறுப்புநலன் கண்டு அவை தோற்றதாகக் கற்பனை செய்தார். கயல் என்பதனால் கண்ணுக்குத் தோற்றுஎன்பது வருவிக்கப் பெற்றது.* ***20***

***1946. தேவதேவன் செறி சடைக் கற்றையுள்***
***கோசை மாலை எருக்கொடு கொன்றையின்***
***பூவும் நாறவள்; பூங்குழல் கற்றையின்***
***நாவி நாள்மலர் கங்கையும் நாளினாள்.***

***கங்கையும்*** *- கங்கா தேவியாகிய நதியும்;* ***தேவ தேவன்*** *- சிவ பிரானது;* ***செறி சடைக் கற்றையுள்*** *- செறிந்த சடைக் கற்றைக்குள்; (நெடுநாள் இருந்ததனால் உளதான)* ***கோவை மாலை எருக்கொடு*** *- எருக்கம் பூமாலைச் சரத்தோடு;* ***கொன்றையின்பூவும்*** *- கொன்றை மலர் மணமும்;* ***நாறலள்*** *- இப்பொழுது வீசப் பெறாதவளாய்* ***; பூங்குழல் கற்றையின்*** *- (சீதையின்) அழகமைந்த கூந்தல் தொகுதியில் உள்ள;* ***நாவி*** *- கத்தூரிப் புனுகு எண்ணெய் மணமும்;* ***நாள்மலர்*** *- அன்றலர்ந்த மலர்களின் மணமும்;* ***நாளினள்*** *- வீசப் பெற்றாள். சிவபிரான் சடையில் நெடுநாளாக உள்ள கங்கை அங்கே உள்ள கொன்றை, எருக்கு முதலிய மலர்மணம் வீசவேண்டியிருக்க, சீதை ஆடுதலால் அது நீங்கி சீதையின் கூந்தல் நாவி, மலர் மணம்வீசப் பெற்றவளாக ஆனாள் என்பது உயர்வு நவிற்சியணி. இக் கற்பனை முன்னும் வந்தது (42).* ***21***

***1947. நுரைக் கொழுந்து எழுந்து ஒங்கி நுடங்கலால்***
***நரைத்த கூந்தலின் நங்கை மந்தாகினி,***
***உரைத்த சீதை தனிமையை உன்னுவாள்,***
***திரைக்கை நீட்டி, செவிலியின் ஆட்டினாள்.***

***நுரைக் கொழுந்து எழுந்து ஒங்கி நுடங்கலால்*** *- நுரைகளாகிய வெண்மையானகொழுந்துகள் நீரின்மேல் ஓங்கி எழுந்து வளைந்து சூழ்வதால்;* ***நரைத்த கூந்தலின்*** *- நரை பாய்ந்த கூந்தலை உடையாள் போல உள்ள;* ***நங்கை மந்தாகினி*** *- பெண்ணாகிய கங்கை;* ***உரைத்த*** *- பாராட்டப் பெறுகின்ற;* ***சீதை*** *- சீதையினது;* ***தனிமையை*** *- பெண்டிர் துணை இல்லாத தனிமையை;* ***உன்னுவாள்*** *- கருதுபவளாய்;* ***செவிலியின்*** *- செவிலித் தாய் போல;* ***திரைக் கை நீட்டி*** *- அலைகளாகிய கைகளை நீட்டி;* ***ஆட்டினாள்*** *- நீராட்டினாள்.*

*கங்கை செவிலித்தாயாக இருந்து சீதையை நீராட்டுவதாகக் கற்பனை செய்தார். செவிலித்தாய் என்பதற்கு ஏற்பக் கங்கைக்கு நரைத்த கூந்தலாக நுரைக்கொழுத்தைக் கூறினார். ''நரை விராவுற்ற நறுமென் கூந்தல் செம்முது செவிலியர்'' (அகநா. 254) என்பதும்காண்க.* ***22***

***1948. மங்கை வார் குழல் கற்றை மழைக் குலம்***
***தங்கு நீரிடைத் தாழ்ந்து குழைப்பன,***
***கங்கை யாற்றுடன் ஆடும் கரியவள்***
***பொங்கு நீர்ச் சுழி போவன போன்றவே.***

***மங்கை வார் குழல் கற்றை மழைக்குலம் -*** *சீதையின் நீண்ட கூந்தல் தொகுதியாகியமேகக் கூட்டம்;* ***தங்கும் நீரிடைத் தாழ்ந்து குழைப்பன -*** *அவள் குளிக்கின்றநீரிடத்து உள் தாழ்ந்து சுழலுவன (எது போலும் எனில்);* ***கங்கையாற்றுடன் ஆடும் கரியவள் -*** *கங்கை யாற்றுடனே வந்து கலக்கின்ற யமுனா நதியின்;* ***பொங்கு நீர்ச்சுழி -*** *மேல்எழும்பிய கரிய நீர்ச்சுழிகள்;* ***போவன போன்ற -*** *போகின்ற தன்மை போலும்.*

*கங்கை வெண்ணிறமுடையது. யமுனை கருநிறம் உடையது. சீதையின் கூந்தல் முழுகுங்கால் நீரில்சுழலுதல் யமுனையின் சுழி போல் தோன்றுவதாகக் கற்பனை. கங்கையும் யமுனையும் கலக்கின்ற இடம் பிரயாகையாம்.* ***23***

***1949. சுழிபட்டு ஓங்கிய தூங்கு ஒலி ஆற்று, தன்***
***விழியின் சேல் உகள் வால் நிற வெள்ளத்து,***
***முழுகித் தோன்றுகின்றாள், முதல் பாற்கடல் -***
***அழுவத்து அன்று எழுவாள் எனல் ஆயினாள்.***

***சுழிபட்டு ஓங்கிய தூங்கு ஒலி ஆற்று -*** *சுழிகள் உண்டாகப் பெற்று மேல் எழும்பிஅசைகின்ற பேரொலி உடைய கங்கை ஆற்றில்;* ***தன் விழியின்சேல் உகள் -*** *தன்கண்களைப் போல் மீன்கள் துள்ளுகின்ற;* ***வால் நிற வெள்ளத்து -*** *வெண்மையான நிறமுடையநீர்ப்பெருக்கில்;* ***முழுகித் தோன்றுகின்றாள் -*** *முழுகி எழும்புகின்ற சீதை;* ***முதல்-*** *ஆதி நாள்;* ***பாற்கடல் அழுவத்து -*** *பாற்கடற் பெருக்கிலே;* ***அன்று எழுவாள் -*** *அன்று தோன்றியவளாகிய திருமகள்;* ***எனல் ஆயினாள் -*** *என்று சொல்லும்படிதோன்றினாள்.*

*கங்கையின் வெண்ணீர்ப் பெருக்கில் முழுகி மேல் எழும் சீதை திருப்பாற்கடல் கடைந்தபோதுஅதன் பரப்பின் மேல் எழுந்த திருமகள் போல் வாள் ஆயினள் என்க.*
***24***

***1950. செய்ய தாமரைத் தாள் பண்டு தீண்டலால்***
***வெய்ய பாதகம் தீர்த்து விளங்குவாள்***
***ஐயன் மேனி எலாம் அளைந்தாள், இனி,***
***வையம் மா நரகத்திடை வைகுமே?***

***செய்ய தாமரைத் தாள் பண்டு தீண்டலால்*** *- சிவந்த செந்தாமரை போலும்திருமாலின் (இராமனின்) திருவடிகள் பண்டு தொடப்பெறுதலால்;* ***வெய்ய பாதகம் தீர்த்து விளங்குவாள்*** *- உலகோரது கொடிய பாவங்களை எல்லாம் போக்கி விளங்குபவனாகிய கங்கை; (இப்போது இராமனாகிய திருமால் நீராடலால்)* ***ஐயன் மேனி எல்லாம் அளைந்தாள்*** *- இராமனது திருமேனி முழுதும் தீண்டப் பெற்றவளாக ஆனாள்;* ***இனி*** *- இனிமேல்;* ***வையம்-*** *கங்கையில் முழுகும் இவ் உலகம்;* ***மா நரகத்திடை வைகுமே*** *- கொடிய நரகத்திடத்துத் தங்கமோ (தங்காது).*

*திருவடி பட்டது திருவிக்கிரமன் ஆனபோது. திருவடி அளவிலேயே கொடிய பாவங்களைப்போக்குபவன் இப்போது திருமேனி முழுதும் பட்டபடியால் வையத்தை நரகத்திலிருந்து நீக்குவாள்என்பது சொல்லவும் வேண்டுமோ என்றவாறாம்.* ***25***

*இராமன் எரி வளர்த்து வழிபட்டு முனிவர் விருந்து ஏற்றல்*

***1951. துறை நறும் புனல் ஆடி, கருதியோர்***
***உறையுள் எய்தி, உணர்வுடையோர் உணர்***
***இறைவற் கைதொழுது, ஏந்து எரி ஓம்பி, பின்***
***அறிஞர் காதற்கு அமை விருந்து ஆயினான்.***

*(இராமன்)* ***துறை நறும் புனல் ஆடி*** *- கங்கைத் துறையில் மணம் வீசும் நீரில்குளித்து;* ***கருதியோர் உறையுள் எய்தி*** *- வேத முனிவரர் தவச்சாலையை அடைந்து;* ***உணர்வுடையோர் உணர்*** *- ஞானிகளால் உணரப்படுகின்ற;* ***இறைவனைக் கை தொழுது*** *- பரம்பொருளைக் கை கூப்பி வணங்கி;* ***ஏந்து எரி ஓம்பி*** *- உயர்ந்துள்ள யாகாக்கினியைவழிபட்டு;* ***பின்*** *- பிறகு;* ***அறிஞர்*** *- ஞானியராய முனிவரது;* ***காதற்கு*** *- அன்பினுக்கு;* ***அமை விருந்து ஆயினான்*** *- பொருந்திய விருந்தினனாக ஆனான்-.*

*இராமனும் பரம்பொருளை வழிபட்டான் என்பது நான் எடுத்துக்கொண்ட அவதாரத்துக்கு ஏற்ப, தன்னை மனிதனாகவே கருதிப் பரம்பொருளை வழிபட்டான் என்க.* ***26***

***1952. வருந்தித் தான் தர வந்த அமுதையும்,***
***'அருந்தும் நீர்' என்று, அமரரை ஊட்டினான்,***
***விருந்து மெல் அடகு உண்டு விளங்கினான் -***
***திருந்தினார் வயின் செய்தன தேயுமோ?***

***வருந்தி*** *- பாற்கடல் கடைந்து வருத்தமுற்று முயன்று;* ***தான் தர வந்தஅமுதத்தையும்*** *- தான் கொடுக்க வந்த அமுதத்தையும்;* ***அமரரை-*** *தேவர்களை;* ***'நீர் அருந்தும்*** *- நீங்கள் உண்ணுங்கள்' என்று;* ***ஊட்டினான்*** *- (தான் உண்ணாதுஅவர்களை) உண்பித்தவனாகிய இராமன்;* ***விருந்து*** *- முனிவர் இட்ட விருந்தாக;* ***மெல்அடகு*** *- மென்மையான கீரையை;* ***உண்டு விளங்கினான்*** *- உண்டான்;* ***திருந்தினார்வயின் செய்தன தேயுமோ*** *- மனம் செம்மைப்பட்டவர்களிடத்துச் செய்த செயல்கள் உயர்வு தாழ்வுபற்றிக் குறைபடுமோ? (படாது என்றபடி).*

*தேவர் அமுதத்தையும் உண்ணாது தேவர்களை உண்பித்த இராமன், முனிவர்கள் இட்ட கீரைஉணவை விரும்பு உண்டது எவ்வாறு என்பதை இறுதி அடி விளக்குகிறது. மனம் செம்மைப்பட்டவர்கள்பொருளின் உயர்வு தாழ்வு கருத மாட்டார்கள். பொருளைக் கொடுத்தவர்களின் அன்பையே கருதி உயர்வாக ஏற்றுக்கொள்வார்கள். இராமன் முனிவர்களின் அன்பைக் கருதி அவர்கள் கொடுத்தசீரை உணவை அமுதிலும் சிறந்ததாக ஏற்றுக்கொண்டார். வேற்றுப் பொருள்வைப்பணி.* ***27***

## குகப் படலம்

வனம் புகுந்த இராமன் குகனைத் தோழமை கொண்ட செய்தியை உணர்த்தும் பகுதியாதலின் குகப்படலம் எனப் பெயர் பெற்றது.

குகன் கையுறை ஏந்தி இராமனைக் காண வருதலும், இலக்குவன் மூலம் இராமனது அழைப்புப் பெற்று அவனைக் காணுதலும், கையுறைப் பொருளைத் தருதலும், தேனும் மீனுமாகிய அவற்றை அன்பினால் இராமன் ஏற்றுக்கோடலும், மறுநாள் நாவாயுடன் வருக என்ற இராமன் வார்த்தையை அவனது தனிமைத் துன்பம் நோக்கிக் கசிந்த மனத்தனாய் மறுத்துக் குகன் அங்கேயே இருத்தலும், அன்றிரவெல்லாம் கண்விழித்து நின்ற குகன் காலைக் கடன் முடித்த இராமன் ஆனையின் வண்ணம் நாவாய் கொண்டு வராது இராமனைத் தன் சிருங்கிபேர நகரிலேயே தங்க வேண்டுதலும், இராமன் மீண்டும் வரும்போது குகனிடத்திற்கு வருவதாகக் கூற, அதனை ஏற்று, குகன் நாவாய கொணர, மூவரும் ஏறிக்கங்கைக் கரையைக் கடத்தலும், சித்திரகூடத்திற்கு வழி வினாவிய இராமனுக்குத் தன்னையும் உடன் கொண்டு செல்லக் குகன் வேண்ட, இராமன் குகனை அவன் குடிகளுடன் இருக்கப் பணிக்க, குகன் விடைபெற, மூவரும் வனத்துள் செல்லுதலும் ஆகிய செய்திகள் இதனுள் கூறப் பெறுகின்றன.

குகனது அறிமுகம்

கலிவிருத்தம்

***1953. ஆய காலையின், ஆயிரம் அம்பிக்கு
நாயகன், போர்க் குகன் எனும் நாமத்தான்,
தூய கங்கைத் துறை விடும் தொன்மையான்,
காயும் வில்லினன், கல் திரள் தோளினான்.***

**ஆய காலையின் -** அந் நேரத்தில்; **ஆயிரம் அம்பிக்கு நாயகன்-** ஆயிரம்நாவாய்களுக்குத் தலைவனும்; **தூய கங்கைத் துறை விடும் தொன்மையான் -** தூய்மையானகங்கைத் கரையில் நெடுங்காலமாகப் படகு விடும் தன்மை உடையவனும்; **காயும் வில்லினன் -** பகைவரைச் சீறி அழிக்கும் வில்லுடையவனும்; **கல் திரள் தோளினாள் -** மலை போல் திரண்ட தோளை உடையவனும் ஆகிய; **போர் -** போர்த் தொழிலில் வல்ல; **குகன் எனும்நாமத்தான் -** குகன் என்ற பெயரை உடையவன். குளகச் செய்யுள். 'இருந்த வள்ளலைக் காண வந்து எய்தினான்' (1961) என்னும் செய்யுள்அடியிற் சென்று முடியும். இனி வரும் செய்யுள்களில் குகனைப் பற்றிய அறிமுகத்தைத் தொடர்கிறார்கவிஞர். ***1***

***1954. துடியன், நாயினன், தோற் செருப்பு ஆர்த்த பேர் -
அடியன், அல செறிந்தன்ன நிறத்தினான்,
நெடிய தானை நெருங்கலின், நீர் முகில்
இடியினோடு எழுந்தாலன்ன ஈட்டினான்.***

(குகன்) **துடியன் -** துடி என்னும் பறை உடையவன்; **நாயினன் -** வேட்டைநாய்களை உடையவன்; **தோற் செருப்பு ஆர்த்த பேர் அடியன் -** தோலாற் செய்த மிதியடிஇறுக்கிய

*பெரிய பாதங்களை உடையவன்;* ***அல் செற்நிதன்ன நிறத்தினான் -*** *இருள்நெருங்கித் திரண்டால் ஒத்த கருநிறம் உடையவன்;* ***நெடிய தானை நெருங்கலின் -*** *தன்னுடையமிகப்பெரிய சேனை நெருங்கி வருதலின்;* ***நீர் முகில் -*** *பெய்யும் மேகம்;* ***இடியினோடு எழுந்தால் அன்ன ஈட்டினான் -*** *இடியோடு கூடி மேற் கிளம்பினாற் போன்ற தன்மைகொண்டவன்.*

*மேகம் குகனுக்கும், இடி ஆர்ப்பரிப்பு அவன் சேனைக்கும் உவமையாம். வேட்டுவராதலின் துடி, நாய் முதலியன கூறப்பெற்றன.* ***2***

***1955. கொம்பு துத்தரி கோடு அதிர் பேரிகை***
***பம்பை பம்பு படையினன், பல்லவத்து***
***அம்பன், அம்பிக்கு நாதன், அழி கவுள்***
***தும்பி ஈட்டம் புரை கிளை சுற்றத்தான்.***

***கொம்பு -*** *ஊது கொம்பு;* ***துத்தரி -*** *துத்தரி என்னும் பறை;* ***கோடு-*** *சங்கு;* ***அதிர்பேரிகை -*** *ஒலிக்கின்ற பெருமுரசு;* ***பம்பை -*** *இருதலைப் பறை முதலிய;* ***பம்பு படையினன் -*** *வாத்தியங்கள் நிரம்பிய சேனையை உடையவன்;* ***பல்லவத்து அம்பன்-*** *தளிர் போலச் சிவந்த நிறம் படைத்த அம்பினை உடையவன்;* ***அம்பிக்கு நாதன் -*** *நாவாய்களுக்குத் தலைவன்;* ***அழிகவுள் தும்பி ஈட்டம் புரை கிளை சற்றத்தான் -*** *மதநீர் பெருகுகின்ற யானைத் தொகுதியை ஒத்த உறவினர்களால் சுற்றப்பட்டவன்.*

*கொம்பு முதலியன வேடரின் வாத்திய விசேடம், பல்லவம் என்பதே அம்பு என்னும் பொருள்உடையது ஆதலின் பல்லவமாகிய அம்பு எனலும் ஆம். 'கூர்ப்புறு பல்லவம் கொண்ட தூணி' என்பது கந்தபுரானம். 'ஆயிரம் அம்பிக்கு நாயகன்' (1953.) என்றவர் மீண்டும் அம்பிக்கு நாதன் என்றது இராமபிரானுக்குக் குகன் உதவும் தன்மையில் அம்பி சிறப்பிடம் பெறுதலின் பலவிடங்களிலும்கூறுவர்.*
***3***

***1956. காழம் இட்ட குறங்கினன், கங்கையின்***
***ஆழம் இட்ட நெடுமையினான், அரை***
***தாழ விட்ட செந் தோலன், தயங்குறச்***
***சூழ விட்ட தொடு புலி வாலினான்.***

***காழம் இட்ட குறங்கினன் -*** *காழம் என்னும் ஒருவகை உடையை இறுக அணிந்த துடையைஉடையவன்;* ***கங்கையின் ஆழம் இட்ட நெடுமையினான் -*** *கங்கையின் ஆழத்தைக் கண்டறிந்தபெருமை படைத்தவன்;* ***அரை தாழ விட்ட செந்தோலன் -*** *இடுப்பிலிருந்து கீழே தொங்கவிடப்பட்ட சிவந்த வார்ப்பட்டை உடையவன்;* ***தயங்குற -*** *விளங்கும்படி;* ***சூழவிட்ட -*** *இடுப்பைச் சுற்றிக் கட்டிய;* ***தொடு புலி வாலினான் -*** *ஒன்றோடொன்றசேர்த்துக் கட்டப் பெற்ற புவி வாலை உடையவன்.*

*காழம் எனப்து இடுப்பிலிருந்து தொடைவரை அணியும் சிறிய காற்சட்டை. காழகம் எனவும்வரும. அரையிலிருந்து தொங்கவிடப்பெற்ற செந்திறத் தோலாகிய வார்ப் பட்டை அம்பு முதலியனதீட்டுதற்காம் என்க. புலிவால்களை ஒன்றோடொன்று பிணைத்து இடுப்பைச் சுற்றிக் கட்டியுள்ளான்.* ***4***

***1957. பல் தொடுத்தன்ன பல் சூல் கவடியன்,***
***கல் தொடுத்தன்ன போலும் கழலினான்,***
***அல் தொடுத்தன்ன குஞ்சியன், ஆளியின்***
***நெற்றொடு ஒத்து நெரிந்த புருவத்தான்.***

***பல் தொடுத்து அன்ன சூல் பல் கவடியன் -*** *பற்களைத் தொடுத்தாற் போன்றஉட்குடைவான பல பலகறைகளை அணிந்தவன்;* ***கல் தொடுத்து அன்ன போலும் கழலினான் -*** *கற்களை ஒன்று சேர வைத்தாற் போன்ற திண்ணிய வீரக்கழலை உடையவன்;* ***அல் தொடுத்தன்ன குஞ்சியன் -*** *இருளைப் பின்னினாற் போன்ற கரிய தலை மயிரை உடையவன்;* ***ஆளியின்நெற்றொடு ஒத்து தெரிந்த புருவத்தான் -*** *ஆளிச் செடியின் வற்றி உலர்ந்த காயைப் போன்றுநெறிப் புடைய புருவத்தை உடையவன்.*

*கவடி - பலகறை. சோழி எனவும் வழங்கும். தற்காலத்துக் குறவர்கள் இவ்வகை மணிகளைச்கோத்தணிதல் கண்கூடு. ஆடவர் தலைமயிரைக் குஞ்சி என்றல் வழக்கு. ஆளி நெற்று புருவ நெரிப்புக்குஉவமையாம்.* ***5***

***1958. பெண்ணை வன் செறும்பின் பிறங்கிச் செறி***
***வண்ண வன் மயிர் வார்ந்து உயர் முன் கையன்,***
***கண் அகன் தட மார்பு எனும் கல்லினன்,***
***எண்ணெய் உண்ட இருள் புரை மேனியான்.***

***பெண்ணை வன் செறும்பின் பிறங்கிச் செறி -*** *பனைமரத்தினது வலிய சிறாம்பு போலவிளங்கி நெருங்கியுள்ள;* ***வண்ண வன் மயிர் -*** *கருநிறம் படைத்த வலிய மயிர்கள்;* ***வார்ந்து உயர் முன் கையன் -*** *நீண்டு ஒழுகப்பெற்றுள்ள முன்கையை உடையவன்;* ***கண் அகன்தடமார்பு எனும் கல்லினன் -*** *இடமகன்ற விசாலமான மார்பு என்கின்ற கல்லினை உடையவன்;* ***என்ணெய் உண்ட இருள்புரை மேனியன் -*** *எண்ணெய் பூசப் பெற்ற இருளை ஒத்த கரிய பளபளப்பானஉடம்பை உடையவன்.*

*பனஞ்செறும்பு கருமைக்கும், மேல் குத்தி நிற்கும் தன்மைக்கும், முன்கை மயிர்க்கும்உவமையாம். ''இரும்பனஞ் செறும்பின் அன்ன பரூஉ மயிர்'' ''பனஞ் செறும்பு அன்ன பன் மயிர்முன்கை'' என்பனவற்றை நோக்குக.*
***6***

***1959. கச்சொடு ஆர்த்த கறைக் கதிர் வாளினன்,***
***நச்சு அராவின் நடுக்குறு நோக்கினன்,***
***பிச்சராம் அன்ன பேச்சினன், இந்திரன்***
***வச்சிராயுதம் போலும் மருங்கினான்.***

***கச்சொடு ஆர்த்த -*** *அரைக்கச்சிலே கட்டிய;* ***கறை கதிர் வாளினான் -*** *இரத்தக் கறை படிந்துள்ள ஒளிபடைத்த வாளை உடையவன்;* ***நச்சு அராவின் -*** *விடம்பொருந்திய பாம்பைப் போல;* ***நடுக்குறு நோக்கினன் -*** *பிறர் நடுக்கம் அடைகின்றகொடிய கண் பார்வை உடையவன்;* ***பிச்சாரம் அன்ன பேச்சினன் -*** *பித்தர்களைப் போலஒன்றுக் கொன்ற தொடர்பில்லாமல் பேசக்கூடிய பேச்சினை உடையவன்;* ***இந்திரன்***

***வச்சிராயுதம் போலும் மருங்கினான்*** - தேவேந்தி ரனது வச்சிராயுதம் போல மிகவும் உறுதியான இடுப்பை உடையவன்,

*வேடர்கள் என்பதால் தெளிவற்ற பேச்சை உடையவன் என்றார். நடுப்பகுதி சிறந்து இரண்டுபக்கமும் பெருத்து இருப்பதனால் வச்சிரப்படை போலும் இடுப்பு என்றார்.*
*7*

***1960. ஊற்றமே மிக ஊனொடு மீன் நுகர்***
***நாற்றம் மேய நகை இல் முகத்தினான்,***
***சீற்றம் இன்றியும் தீ எழ நோக்குவான்,***
***கூற்றம் அஞ்சக் குமுறும் குரலினான்.*** [1]

***ஊற்றமே மிக*** - *வலிமை மிகும்படி;* ***ஊனொடு மீன் நுகர்*** - *விலங்குகளின்இறைச்சியோடு மீனையும் தின்று;* ***நாற்றம் மேய*** - *புலால் நாற்றம் பொருந்திய;* ***நகை இல் முகத்தினான்*** - *சிரிப்பு என்பது சிறிதும் இல்லாத (கடு கடுப்பான) முகத்தினைஉடையவன்;* ***சீற்றம் இன்றியும்*** - *கோபம் இல்லாத போதும்;* ***தீ எழ நோக்குவான்*** - *கனல் கக்குமாறு பார்ப்பவன்;* ***கூற்றம் அஞ்சக் குமுறும் குரலினான்*** - *இயமனும் பயப்படும்படிஅதிர்ந்து ஒலிக்கின்ற குரலை உடையவன். புலால் நாறும் வாய், சிரிப்பற்ற முகம், கனல் பார்வை, இடிக்குரல் என்று வேட்டுவச்சாதி இயல்புக் கேற்பக் குகன் தன்மைகளைக் கூறினார். கூற்றம் - உம்மைதொக்கது.*
***8***

***1961. சிறுங்கிபேரம் எனத் திரைக் கங்கையின்***
***மருங்கு தோன்றும் நகர் உறை வாழ்க்கையன்,***
***ஒருங்கு தேனொடு மீன் உபகாரத்தன்,-***
***இருந்த வள்ளலைக் காண வந்து எய்தினான்.***

***சிருங்கி பேரம் என*** - *சிருங்கி பேரம் எனப் பெயர் பெற்று;* ***திரைக் கங்கையின்*** - *அலை வீசும் கங்கை யாற்றின்;* ***மருங்கு தோன்றும் நகர்*** - *பக்கத்தில் தோன்றுகின்ற நகரிலே;* ***உறை வாழ்க்கையன்*** - *தங்கி வாழ்கின்ற வாழ்க்கையை உடையவன் ஆகிய அவன்;* ***இருந்த வள்ளலை*** - *(முனிவர் தவச்சாலையில்)தங்கியிருந்த இராமபிரானை;* ***காண*** - *காண்பதற்கு;* ***ஒருங்கு தேனொடு மீன்உபகாரத்தன்*** - *ஒரு சேரத் தேனும் மீனும் என்ற கையுறைப் பொருளை ஏந்தியவனாய்;* ***வந்துஎய்தினான்*** - *வந்து சேர்ந்தான்.*

*சிருங்கி பேர நகர் அரசன் குகன், அயோத்தி அரசனாகிய இராமனைக் கையுறைப் பொருளாகத்தேனும் மீனும் கொண்டு காண வந்தான். "குகன் எனும் நாமத்தன்' (1053.) என்பது முதல் இதுவரைகுகனது தன்மையும் வடிவும் கூறி, அவன் இராமனைக் காண வந்தான் எனமுடித்தார்.* ***9***

*இராமன் இருந்த தவச்சாலையைக் குகன் அடைதல்*

***1962. சுற்றம் அப் புறம் நிற்க, சுடு கணை***
***வில் துறந்து, அரை வீக்கிய வாள் ஒழித்து,***

***அற்றம் நீத்த மனத்தினன், அன்பினன்,***
***நல் தவப் பள்ளி வாயிலை நண்ணினான்.***

***சுற்றம் அப்புறம் நிற்க*** - உடன் வந்த வேட்டுவச் சுற்றம் வேறொரு பக்கத்தில்ஒதுங்கிநிற்க; ***சுடு கணை வில் துறந்து*** - பகைவரை அழிக்கும் அம்பையும் வில்லையும்விலக்கி வைத்து; ***அரை வீக்கிய வாள் ஒழித்து-*** இடைக்கச்சில் கட்டப்பெற்றவாளையும் நீக்கி; ***அற்றம் நீத்த மனத்தினன்-*** பொய்யற்ற தூய மனம் உடையவனாய்; ***அன்பினன்-*** இராமன்பால் கொண்ட சிறந்த பக்தி உடையவனாய்; ***நல் தவப் பள்ளிவாயிலை நண்ணினான்*** - நல்ல தவச்சாலையின் வாயிலை அடைந்தான்.

*முனிவர் வாழும் இடத்துக்கு அருகில் உள்ளவன் ஆதலின், குகன் முனிவரது தவச்சாலையைஅனுகும்போது எவ்வாறு அணுகல் வேண்டும் என்பது அறிந்தவன். அன்றியும் இராமபக்தியுடன்செல்கின்றவன் வேட்டைக்குச் செல்வான் போல வில், அம்பு, வாள் ஆகியவற்றுடனும், சேனையுடனும் செல்லல் ஆகாதன்றோ? ஆதலின், அவற்றையெல்லாம் ஒழித்து அடக்க ஒடுக்கத்துடன்சென்றான் என்றார்.* ***10***

குகன் இலக்குவனுக்குத் தன்னை அறிவித்தல்

***1963. கூவாமுன்னம், இளையோன் குறுகி, 'நீ***
***ஆவான் யார்?' என, அன்பின் இறைஞ்சினான்;***
***'தேவா! நின் கழல் சேவிக்க வந்தனென்;***
***நாவாய் வேட்டுவன், நாய் அடியேன்' என்றான்.***

***கூவா முன்னம்*** - குகன் அழைப்பதற்கு முன்னமே; ***இளையோன் குறுகி*** - இலக்குவன் அவனைச் சென்றடைந்து; ***'நீ ஆவான் யார்' என*** - நீ யார்? என்று வினாவ; ***அன்பின் இறைஞ்சினான்*** - அன்போடு குகன் அந்த இலக்குவனை வணங்கினான்; (முன் அறியாதவன் ஆதலின் அவனையே இராமனாகக் கருதி) ***'தேவா!*** - அரசனாகிய தெய்வமே!; ***நாய் அடியேன்*** - நாய் போலக் கீழான அடிமையாகிய; ***நாவாய் வேட்டுவன்*** - கங்கையைக்கடக்க ஓடங்களை உடைய வேட்டுவச் சாதியினனாகிய குகனாவேன்; ***நின் கழல்சேவிக்க வந்தனன்-*** உனது திருவடிகளை வணங்கும் பொருட்டு வந்தேன்;' ***என்றான்-.***

*குகன் அழைப்பதற்கும் இலக்குவன் அங்கே வருதற்கும் இடையே கால இடைவெறியின்மையைஅறிவிக்கக் 'கூவா முன்னம்' என்றார். இராமனைச் சேவிக்க வந்த குகன் இலக்குவனையே இராமனாகநினைத்துத் 'தேவா! நின் கழல் சேவிக்க வந்தனன்' என்பது குழந்தைத் தன்மையான மாசற்றகுகனது அன்பின் பொலிவை எடுத்துக் காட்டும்.* ***11***

இலக்குவன் குகன் வரவை இராமனுக்கு அறிவித்தல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

***1964. 'நிற்றி ஈண்டு' என்று, புக்கு***
***நெடியவன் - தொழுது, தம்பி,***
***'கொற்றவ! நின்னைக் காணக் குறுகினன்,***

நிமிர்ந்த கூட்டச்
சுற்றமும், தானும்; உள்ளம் தூயவன்;
தாயின் நல்லான்;
எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை; குகன்
ஒருவன்' என்றான்.

**தம்பி** - இராமனது தம்பியாகிய இலக்குவன்; **'நிற்றி ஈண்டு' என்று** -குகனைப் பார்த்து இங்கேயே நில் என்று சொல்லி; **புக்கு** - (இராமன் இருந்ததவச்சாலையில் உள்ளே) புகுந்து; **நெடியவன் தொழுது** - பெருமையிற் சிறந்துயர்ந்த இராமனைவணங்கி; **'கொற்றவ** - அரசனே!; **உள்ளம் தூயவன்** - மனத்தால்பரிசுத்தமானவன்; **தாயின் நல்லான்** - தாயைக் காட்டிலும் மிக்க அன்பையுடைய நல்லவன்; **எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை** - மோதுகின்ற நீரை உடைய கங்கையாற்றில் செல்லும் மரக்கலங்களுக்குத் தலைவன்; **குகன் ஒருவன்**- குகன் என்ற பெயரை உடைய ஒருவன்; **நிமிர்ந்த கூட்டச் சுற்றமும் தானும்** - பெருந்திரளாக உள்ள உறவினரும் தானுமாக; **நின்னைக் காணக் குறுகினன்!** - உன்னைக் காணும் பொருட்டு வந்துள்ளான்; **என்றான்-.**

அரசரைக் காணச் செவ்வியறிந்து செல்லல் முறை ஆதலின், குகனை வெளியே நிறக்ச்செய்து, இராமன்பால் தெரிவிக்கச் சென்றான் இலக்குவன். பார்த்த அளவில் தன்னையேஇராமனாக எண்ணும் குகனது வெள்ளை உள்ளத்தை அறிந்தபடியால் 'உள்ளம் தூயவன்' என்று முதலிற்கூறினான். உண்ணுதற்குரிய பொருள்களை என்றும் எடுத்துவருதல் தாயின் தன்மையாதலின் 'தேனும்மீனும் கொண்டணுகிய குகனது தாயன்பைக் கருதித் 'தாயின் நல்லான்' என்றான். நாம்கங்கையைக் கடத்தல் வேண்டும் ஆதலின், இவனது தோழமை நமக்கு மிகவும் இன்றியமையாதது என்பதைப் புலப்படுத்த 'நாவாய்க்கு இறை' என்றான். இங்ஙனம் இராமன் ஏற்றுக்கொள்ளும் முன்னரேஇலக்குவன் குகனது தோழமையை ஏற்று அங்கீகரித்தான் என்னும்படி இவ்வறிமுகம் அமைந்துள்ளதுஅறிந்து இன்புறத்தக்கது. *12*

குகன் இராமனைக் கண்டு பணிந்து கையுறைப் பொருளை ஏற்க வேண்டுதல்

*1965.* அண்ணலும் விரும்பி, 'என்பால்
அழைத்தி நீ அவனை' என்ன,
பண்ணவன், 'வருக' என்ன,
பரிவினன் விரைவில் புக்கான்;
கண்ணனைக் கண்ணின் நோக்கிக்
கனிந்தனன்; இருண்ட குஞ்சி
மண் உறப் பணிந்து, மேனி
வளைத்து, வாய் புதைத்து வின்றான்.

**அண்ணலும்** - இராமனும்; **விரும்பி** - குகனை மனத்தால் விரும்பி; **'நீஅவனை என்பால் அழைத்தி' என்ன** - இலக்குவா? நீ அக்குகனை என்னிடம் அழைத்து வருக என்றுசொல்ல; **பண்ணவன்** - பண்பிற் சிறந்த இலக்குவன்; **'வருக' என்ன**- (குகனே) வருக என்று அழைக்க; **பரிவினன்** - (அக்குகனும்) மனத்தில் அன்பு மிக்கவனாய்; **விரைவில் புக்கான்** - வேகமாக உள்ளே புகுந்து; **கண்ணனை** - கண்ணழகுடைய

*இராமனை;* ***கண்ணின் நோக்கிக் களித்தனன் -*** *தன் கண்களால் பார்த்து மகிழ்ச்சி அடைந்து;* ***இருண்ட குஞ்சி -*** *இருள் நிறமான தலைமுடி;* ***மண் உறப் பணிந்து*** *- பூமியில் விழுமாறுவிழுந்து வணங்கி;* ***மேனி வளைத்து -*** *உடம்பைக் குறுக்கிக் கொண்டு;* ***வாய் புதைத்து -*** *வாயினைக் கைகளால் மூடிக் கொண்டு;* ***நின்றான்-.*** *பெரியோரைத் தரிசிப்பார் அடக்க ஒடுக்கமாக நிற்கும்முறையில் இராமனாகிய தெய்வத்தின் முன்னிலையில் குகன் நின்றமை அறியத் தக்கது. ''அடக்கம்என்பது அடங்கி ஒழுகும் ஒழுக்கம். அது பணிந்த மொழியும் தணிந்த நடையும் தனை மடக்கலும் வாய்புதைத்தலும் முதலாயின'' என்னும் பேராசிரியர் உரை இங்கு அறியத் தக்கது (தொல். பொருள்.மெய்ப். 12) பண்ணவன் - வலிமை உடையவன் எனலும் ஆம்.*
***13***

*இராமன் குகனை, 'இரு' என, அவன் தான் கொணர்ந்தகையுறைப் பொருளை அறிவித்தல்*

***1966. 'இருத்தி ஈண்டு' என்னலோடும்***
***இருந்திலன்; எல்லை நீத்த***
***அருந்தியன், 'தேனும் மீனும்***
***அமுதினுக்கு அமைவது ஆகத்***
***திருத்தினென் கொணர்ந்தேன்; என்கொல்***
***திருஉளம்?' என்ன, வீரன்***
***விருத்த மாதவரை நோக்கி முறுவலன்,***
***விளம்பலுற்றான்;***

***'ஈண்டு இருத்தி' என்னலோடும் -*** *இங்கே அமர்வாயாக என்று இராமன் கூறியஅளவிலும்;* ***இருந்திலன்-*** *தன்னடக்கத்தால் இருந்தானில்லை;* ***எல்லை நீத்தஅருத்திலன் -*** *அளவு கடந்த அன்புடையனாய்;* ***'அழுதினுக்கு அமைவதாகத் தேனும் மீனும்திருத்தினென் கொணர்ந்தேன் -*** *தேவரீருக்கு உணவாகப் பொருந்தும்படி தேனையும், மீனையும்தூய்மை செய்து ஆராய்ந்து கொண்டு வந்துள்ளேன்* ***; திரு உளம் என்கொல்? என்ன -*** *தங்கள்மனக்கருத்து யாதோ?' எனக் கூறி நிற்க;* ***வீரன் -*** *இராமன்;* ***விருத்த மாதவரைநோக்கி -*** *வயது முதிர்ந்த முனிவர்களைப் பார்த்து;* ***முறுவலன் -*** *இளஞ்சிரிப்புச் செய்தவனாய்;* ***விளம்பல் உற்றான் -*** *சொல்லத் தொடங்கினான்.*

*தவத்தோர் உண்ணத்தகாத தேனையும் மீனையும் அன்போடு குகன் கொடுக்கின்றான். அருகேமுனிவர்கள் இராமன் என்செய்வானோ என்று கருதும் அகக்குறிப்பு உடையவராக ஆயினமை கண்டு,அவர்களுக்கும் குகனது அன்பின் பெருக்கை உணர்த்துமுகத்தான் இளநகை செய்து கூறுவானாயினன்என்க.*
***14***

*இராமன் குகனது அன்பைப் பாராட்டுதல்*

***1967. 'அரிய, தாம் உவப்ப, உள்ளத்து***
***அன்பினால் அமைந்த காதல்***
***தெரிதரக் கொணர்ந்த என்றால்,***
***அமிழ்தினும் சீர்த்த அன்றே?***

***பரிவினின் தழீஇய என்னின்***
***பவித்திரம்; எம்மனோர்க்கும்***
***உரியன; இனிதின் நாமும்***
***உண்டனெம் அன்றோ?' என்றான்.***

***'அரிய** - அருமையான பொருள்கள்; **தாம் உவப்ப** - தாம் மகிழ்ச்சியடைதற்குத் காரணமானவை; **உள்ளத்து அன்பினால் அமைந்த காதல் தெரிதரச்கொணர்ந்த** - மனத்துள்ளே இருக்கின்ற அன்பின் முதிர்ச்சியாகிய பக்தி அனைவர்க்கும்புவப்படுமாறு கொண்டு வரப்பட்டவை; **என்றால்** - என்று ஆகுமானால்; **அமிழ்தினும்சீர்த்த அன்றே?** - தேவர் அமுதத்தைக் காட்டிலும் சிறப்புடையவை அல்லவா; **பரிவினில் தழீஇய என்னின் பவித்திரம்** - எப்பொருளும் அன்பினால் கொண்டு வரப்பட்டவை என்றால்அவை தூய பொருள்களே; **எம்மனோர்க்கும்** - எம்போன்ற தவம் மேற்கொண்டவர்களுக்கும்; **உரியன** - ஏற்றுக் கோடற்குரியனவே; **இனிதின் நாமும் உண்டனெம் அன்றோ?'** - இனிமையாக நாமும் உண்டதற்குச் சமானம் ஆகும் அன்றோ;' **என்றான்-.***

*கையுறைப் பொருள்கள் யாதாயினும் கிடைத்தற்கரியதாக, கொணர்வார் தம் மகிழ்ச்சிக்குரியதாக இருப்பினும் அன்பின் முதிர்வால் பக்தி புலப்பட அளிக்கப் பெறுமானால் அவை அமுதினும்மேலானவை. தூய்மையும் தூய்மையின்மையும் அன்பினைப் பொறுத்ததே ஆகும். அன்பினால் குகன் கொடுத்த பொருள்கள் தவத்தோர்க்காகாத தேனும் மீனும் ஆயினும் அன்பு கலத்தலால்தூய்மையுடையதாய் ஏற்றுக்கொளற்பாலவே யாகும் - என்றான் இராமன். முனிவர்களையும் நிறைவு செய்துகுகனையும் முழுமையான மனநிறைவுக்கு உரியவனாக ஆகும் வகையில் இராமனது உரை அமைந்தது அறிந்துஇன்புறுதறகுரியது. வாயால் உண்பதைவிட மனத்தால் ஏற்றுக்கோடல் அன்புடையாரிடத்துஉயர்ந்துவிடுகிறது.* ***15***

*இராமன் குகனை நோக்கி 'நாளை விடியலில்நாவாய் கொண்டு வருக' எனல்*

***1968. சிங்க ஏறு அனைய வீரன்,***
***பின்னரும் செப்புவான், 'யாம்***
***இங்கு உறைந்து, எறி நீர்க் கங்கை***
***ஏறுதும் நாளை; யாணர்ப்***
***பொங்கும் நின் சுற்றத்தோடும்***
***போய் உவந்து, இனிது உன் ஊரில்***
***தங்கி, நீ நாவாயோடும்***
***சாருதி விடியல்' என்றான்.***

***சிங்க ஏறு அனைய வீரன் பின்னரும் செப்புவான்** - ஆண்சிங்கத்தை ஒத்த இராமன்மேலும் கூறுவான்; **'யாம் இங்கு உறைந்து நாளை எறி நீர்க் கங்கை ஏறுதும்** - நாங்கள்இத்தவச்சாலையில் தங்கியிருந்து நாளைக்கு அலைவீசும் கங்கையாற்றைக் கடந்து செல்ல எண்ணியுள்ளோம் (ஆதலின்); **நீ-; யாணர்ப் பொங்கும் நின் சுற்றத்தோடும் போய்**- புதுமை நிரம்பிய உன் உறவினர்களோடும் சென்று; **உன் ஊரில் உவந்து இனிது தங்கி** - உன்னடைய நகரத்திலே மன மகிழ்ச்சியோடு இனிமையாகத்*

*தங்கியிருந்து;* ***விடியல் -*** *நாளைவிடியலில்;* ***நாவாயோடும் சாருதி -*** *மரக்கலங்களோடும் வருவாயாக;'* ***என்றான்-.***

*குகனைத் தொடர்ந்து புதிய புதிய உறவினர்கள் மேலும் மேலும் வந்த வண்ணம் இருத்தலின்,'யாணர்ப் பொங்கும் நின் சுற்றம்' என்றான். புதியராய் வந்தாரைக் காணப் பலரும் வருதல்உலகியல்பு.* ***16***

குகனது விண்ணப்பம்

***1969. கார் குலாம் நிறத்தான் கூற,***
***காதலன் உணர்த்துவான், 'இப்***
***பார் குலாம் செல்வ! நின்னை,***
***இங்ஙனம் பார்த்த கண்ணை***
***ஈர்கிலாக் கள்வனேன் யான்,***
***இன்னலின் இருக்கை நோக்கித்***
***தீர்கிலேன்; ஆனது, ஐய!***
***செய்குவென் அடிமை' என்றான்.***

***கார் குலாம் நிறத்தான் கூற -*** *மேகம் போல் உள்ள கரு நிறம் உடையதிருமேனியனாகிய இராமன் இவ்வாறு கூற;* ***காதலன் உணர்த்துவான் -*** *அவனிடத்தில் பேரன்புகொண்ட குகன் சொல்வான்;* ***'இப் பார் குலாம் செல்வ! -*** *இந்தப் பூமி முழுவதும் ஆளும்செல்வத்துக் குரியவனே!'* ***நின்னை -*** *உன்னை;* ***இங்ஙனம் பார்த்த கண்ணை -*** *இவ்வாறு சடைமுடிக் கோலத்தோடு பார்த்த கண்களை;* ***ஈர்கிலாக் கள்வனேன் யான் -*** *இதுகாறும் பிடுங்கி எறியாமல் உன்பால் அன்புடையவன் போல நடிக்கின்ற திருடன் யான்;* ***இன்னலின் இருக்கை நோக்கி -*** *இத்தகைய துன்பத்தில் இருந்தபடியைப் பார்த்து;* ***தீர்க்கிலேன்-*** *உன்னைப் பிரிய மாட்டாதவனாக இருக்கிறேன்;* ***ஆனது -*** *என்நிலைமை அவ்வாறாகியது;* ***ஐய! -*** *ஐயனே;* ***அடிமை செய்குவென்' -*** *(உன் அருகேயேஇருந்து உனக்குரிய) தொண்டுகளைச் செய்வேன்;* ***என்றான்-.***

*அரச குமாரனாகிய இராமன் முடிபுனையாது சடைமுடி தரித்த கோலத்தோடு வந்தது கண்டு மனம் இரங்கித் தழுதழுத்த குகன் தன்னைத் தாழ்மைப் படுத்திக்கொண்டு 'இவ்வாறு பார்த்த கண்ணைப் பிடுங்கி எறியாமல் இன்னும் உயிரோடு வாழ்ந்து கொண்டிருக்கிறேனே, நான் ஒரு வஞ்சகன்' என்ற அவலித்த தாகக் கொள்க. இராமனுடனேயே இருந்து தொண்டு செய்ய வேண்டினான் குகன்.*
***17***

குகன் வேண்டுகோளை இராமன் ஏற்றல்

***1970. கோதை வில் குரிசில், அன்னான்***
***கூறிய கொள்கை கேட்டான்;***
***சீதையை நோக்கி, தம்பி***
***திருமுகம் நோக்கி, 'தீராக்***
***காதலன் ஆகும்' என்ற,***

**கருணையின் மலர்ந்த கண்ணன்.**
**'யாதினும் இனிய நண்ப!**
**இருத்தி ஈண்டு, எம்மொடு' என்றான்.**

**கோதை வில் குரிசில்** - *வெற்றிமாலை அணிந்த வில்லையுடைய இராமன்;* **அன்னான் கூறிய கொள்கை கேட்டான்** - *அக் குகனது பேச்சில் வெளிப்பட்ட அவன் மனக்கருத்தைக் கேள்வி மூலம் அறிந்தான்;* **சீதையை நோக்கி** - *சீதையைப் பார்த்து; தம்பி திருமுகம் நோக்கி - தம்பியாகிய இலக்குவனது அழகிய முகத்தைப் பார்த்து (இருவருக்கும் குகனது தோழமையில் உடன்பாடு என்பதைக் குறிப்பால் அறிந்து);* **'தீராக் காதலன் ஆகும்'என்று** - *நம்பால் என்றும் நீங்காத பேரன்புடையவனாவான் என்று சொல்லி;* **கருணையின்மலர்ந்த கண்ணன்** - *கருணையால் மலர்ச்சியடைந்த கண்களை உடையவனாய்;* **'யாதினும் இனியநண்ப!** - *எல்லாப் பொருள்களினும் இனிமையான நண்பனே;* **ஈண்டு எம்மொடு இருத்தி'** - *இங்கே எங்களோடு (இன்று) தங்கி இருப்பாயாக;'* **என்றான்-.**

*தம்பி முன்னரே குகனை அறிமுகப்படுத்தும்போதே இராமன்பால் தன் உள்ளக்கிடக்கையைப்புலப்படுத்தினன் ஆதலின், இங்கே வேண்டப்படுவது சீதையின் உடன்பாடே ஆதலின், அதனைமுதற்கண் கூறினார் - 'யாரினும் இனிய நண்ப' என்னாது, 'யாதினும்' என அஃறிணை வாசகத்தாற் 'சொல்லி மக்களே அன்றி அன்பு செய்தற்குரிய மற்றப் பொருள்களும் அடங்கக் கூறிய நயம்அறிந்து இன்புறத்தக்கது.* ***18***

***1971.*** **அடி தொழுது உவகை தூண்ட**
**அழைத்தனன், ஆழி அன்ன**
**துடியுடைச் சேனை வெள்ளம்,**
**பள்ளியைச் சுற்ற ஏவி,**
**வடி சிலை பிடித்து, வாளும்**
**வீக்கி, வாய் அம்பு பற்றி**
**இடியுடை மேகம் என்ன**
**இரைத்து அவண் காத்து நின்றான்.**

**அடி தொழுது** - *(இராமன் இன்று எம்மொடு தங்குக என்று சொல்லக் கேட்ட குகன்)இராமன் திருவடிகளை வணங்கி;* **உவகை தூண்ட** - *மகிழ்ச்சி மேல் மேல் மிக;* **ஆழிஅன்ன துடியுடைச் சேனை வெள்ளம் அழைத்தனன்** - *கடலை ஒத்த துடிப்பறையோடு கூடிய தனது சேனைப் பெருக்கை அழைத்து;* **பள்ளியைச் சுற்ற ஏவி** - *(விலங்கு முதலியவற்றால் துன்பம்நேராவாறு) அவர்கள் தங்கியுள்ள தவச்சாலையைச் சுற்றிப் பாதுகாக்கக் கட்டளையிட்டு;* **வரிசிலை பிடித்து** - *(தானும்) கட்டமைந்த வில்லைப் பிடித்து;* **வாளும் வீக்கி** - *(முன்பு கழித்த) வாளையும் அரைக்கச்சிலே கட்டி;* **வாய் அம்பு பற்றி** - *கூரிய அம்மைப்பிடித்து;* **இடியுடை மேகம் என்ன இரைத்து** - *இடியோடு கூடிய மழை மேகம் போல உரத்த சத்தம்இட்டு;* **அவண்** - *அத்தவச்சாலையில்;* **காத்து நின்றான்** - *அம்மூவரையும் காவல்செய்து நின்றான்.*

*இராமன் அனுமதி தந்த மகிழ்ச்சியால் அவனைக் காக்கும் பொறுப்பை மிகச் சிறப்பாகச்செய்கிறான் குகன்.* ***19***

*இராமன் நகர் நீங்கிய காரணத்தை உசாவி அறிந்து குகன் வருந்துதல்*

***1972.*** ***'திரு நகர் தீர்ந்த வண்ணம்,***
***மானவ! தெரித்தி' என்ன,***
***பருவரல் தம்பி கூற,***
***பரிந்தவன் பையுள் எய்தி,***
***இரு கண் நீர் அருவி சோர,***
***குகனும் ஆண்டு இருந்தான், 'என்னே!***
***பெரு நிலக் கிழத்தி நோற்றும்,***
***பெற்றிலள் போலும்' என்னா,***

**'மானவ -** *பெருமை படைத்தவனே!;* **திரு நகர் தீர்த்த வண்ணம் தெரித்தி' என்ன-** *அயோத்தி நகரை விட்டு நீங்கி வனம் புகுந்த காரணத்தை விளக்கக் கூறுக என்று குகன்கேட்க;* **பருவரல் தம்பி கூற -** *துன்பத்தை உடைய இலக்குவன் எடுத்துச் சொல்ல;* **குகனும்பரிந்த வன் பையுள் எய்தி -** *குகனும் இரங்கியவனாய்த் துன்பமுற்று;* **இரு கண் நீர் அருவிசோர -** *இரண்டு கண்களிலிருந்து நீர் அருவிபோலக் கீழே விழ;* **'என்னே! பெருநிலக்கிழத்தி நோற்றும் -** *ஐயகோ! பெருநிலமகள் இராமனால் ஆளப்படுதற்கும் தவம்செய்திருத்தும்;* **பெற்றிலள் போலும்-** *அந்தப் பாக்கியத்தைப் பெற்றாளில்லையே;* **என்ன -** *என்று சொல்லி;* **ஆண்டு இருந்தான் -** *அத்தவச் சாலைக்குப் புறம்பேதங்கியிருந்தான். என்னே! என்பது இரக்கக் குறிப்பு; பூமிதேவிக்கு நேர்ந்த பாக்கியம் இழப்பு என்றஇரண்டையும் ஒருசேர எண்ணியதனால் ஏற்பட்டது. தசரத குமாரனாகியதால் இராமனால் ஆளும் பாக்கியம்பெற்ற பூதேவி, அதனை வரத்தால் இழந்தபடியை நினைத்து இரங்கினான் குகன். இராமனைக் கேட்கும்இடங்களில் எல்லாம் இலக்குவன் பதில் உரைப்பது அறியத் தக்கது. இராமனே அதனை விரிவாகக்கூறல் நாகரிகம் ஆகாமை அறிக.* ***20***

*சூரியன் மறைதல்*

***1973.*** ***விரி இருட் பகையை ஓட்டி,***
***திசைகளை வென்று, மேல் நின்று,***
***ஒரு தனித் திகிரி உந்தி,***
***உயர் புகழ் நிறுவி, நாளும்***
***இரு நிலத்து எவர்க்கும் உள்ளத்து***
***இருந்து, அருள்புரிந்து வீந்த***
***செரு வலி வீரன் என்னச்***
***செங் கதிர்ச் செல்வன் சென்றான்.***

**விரி இருள் பகையை ஓட்டி -** *பரந்துள்ள இருள் கூட்டம் போன்ற பகையை ஓடச்செய்து;* **திசைகளை வென்று -** *திக்குகளை யெல்லாம் தன்னுடையதாக வெற்றி கொண்டு;* **மேல் நின்று -** *மேலான இடத்தில் இருந்து;* **ஒரு தனித் திகிரி உந்தி -** *ஒப்பற்றஆணைச் சக்கரத்தைச் செலுத்தி;* **உயர் புகழ் நிறுவி -** *தன்னுடைய சிறந்த புகழைநிலைநாட்டி;* **நாளும் -** *நாள்தோறும்;* **இருநிலத்து எவர்க்கும் -** *இவ்உலகில்உள்ள எல்லார்க்கும்;* **உள்ளத்து இருந்து -** *மனத்தின்கண் இருந்து;* **அருள்**

***புரிந்து -*** *அருளைச் செய்து;* ***வீந்த -*** *இறந்து போன;* ***செருவலி வீரன் என்ன -*** *போர்வலிமைஉடைய வீரனாகிய தசரத சக்கரவர்த்தி போல;* ***செங்கதிர்ச் செல்வன் -*** *சூரியன்;* ***சென்றான் -*** *மறைந்தான்.*

*இருளை ஓட்டி, திசையெல்லாம் ஒளிபரவ, ஆகாயத்தில் இருந்து; ஒற்றைச் சக்கரத் தேரைச்செலுத்தி, புகழை நிறுத்தி, மக்கள் எல்லார் உள்ளத்தேயும் இருந்து நலம் செய்து மறைதல்சூரியனுக்கும் உரியதாதலைப் பொருத்திக் காண்க. சூரிய குலத்தரசனாகிய தசரதனைச் சூரியனோடு உவமித்ததாகும்.* ***21***

*இராமனும் சீதையும் உறங்க இலக்குவன் காத்து நிற்றல்*

***1974. மாலைவாய் நியமம் செய்து***
***மரபுளி இயற்றி, வைகல்,***
***வேலைவாய் அமுது அன்னாளும்***
***வீரனும் விரித்த நாணல்***
***மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினர்;***
***வரி வில் ஏந்திக்***
***காலைவாய் அளவும், தம்பி***
***இமைப்பிலன், காத்து நின்றான்.***

***வைகல் மாலை வாய் -*** *நாளின் மாலைக் காலத்தே;* ***நியமம் செய்து -*** *செய்ய வேண்டிய கடமைகளைச் செய்து;* ***மரபுளி இயற்றி -*** *செய்ய வேண்டிய கடமைகளைச்செய்து;* ***மரபுளி இயற்றி -*** *செய்ய வேண்டிய முறைப்படியே செய்து;* ***வேலைவாய் அமுதுஅன்னாளும் -*** *பாற்கடலிலிருந்து தோன்றிய அமுதத்தை ஒத்தவளும்;* ***வீரனும் -*** *இராமபிரானும்;* ***பாரின் -*** *பூமியில்;* ***மாலை விரிந்த நாணல் பாயல்வாய்-*** *வரிசையாக விரிக்கப் பெற்ற நாணற்புல்லாகிய படுக்கையிலே;* ***வைகினர் -*** *உறங்கினராக;* ***தம்பி -*** *இலக்குவன்;* ***காலைவாய் அளவும் -*** *காலைப் பொழுது வரும் வரை;* ***வரி வில் ஏந்தி -*** *கட்டமைந்த வில்லை ஏந்தி;* ***இமைப்பிலன் -*** *கண்இமையாது;* ***காத்து நின்றான் -*** *அவ்விருவரையும் காவல் செய்து நின்றுகொண்டேயிருந்தான்.*

*இராமனும் சீதையும் உறங்க இலக்குவன் கண் உறங்காமல் நின்று கொண்டே காவல் செய்து கொண்டிருந்தான் என்பதாம். 'மாலை விரிந்த நாணல் பாயல்' - மாலையாகவிரிந்த நாணற்புல் படுக்கை என்றவாறாம்.* ***22***

*குகன் இராம இலக்குவரை நோக்கி இரவு முழுதும் கண்ணீர் சோர நிற்றல்*

***1975. தும்பியின் குழாத்தின் சுற்றும்***
***சுற்றத்தன், தொடுத்த வில்லன்,***
***வெம்பி வெந்து அழியாநின்ற***
***நெஞ்சினன், விழித்த கண்ணன்***
***தம்பி நின்றானை நோக்கி,***
***தலைமகன் தன்மை நோக்கி,***

***அம்பியின் தலைவன் கண்ணீர்***
***அருவி சோர் குன்றின் நின்றான்.***

***அம்பியின் தலைவன் -*** *நாவாய்களுக்குத் தலைவனான குகன்;* ***தும்பியின்சூழாத்தில் சுற்றும் சுற்றத்தன் -*** *யானைக் கூட்டத்தைப் போலச் சுற்றியிருக்கும் வேட்டுவக்கூட்டத்தை உடையனாய்;* ***தொடுத்த வில்லன் -*** *நாண் ஏற்றி அம்பு பொருத்திய தயார்நிலையில் உள்ள வில்லை உடையனாய்;* ***வெம்பி வெந்து அழியா நின்ற நெஞ்சினன் -*** *(இராமன் வனம் புகுந்த நிலை கருதி) புழுங்கி நொந்து நைந்த மனத்தனாகி;* ***விழித்த கண்ணன்-*** *இரவு முழுதும் விழித்த கண்ணனாய்;* ***தம்பி நின்றானை நோக்கி -*** *நின்றுகொண்டே உறங்காது காவல் செய்யும்இலக்குவனைப் பார்த்து;* ***தலைமகன் தன்மை நோக்கி -*** *அரச குமாரனாகிய இராமன் தரையில்உறங்கும் தன்மையைப் பார்த்து;* ***கண்ணீர் அருவி சோர் குன்றின் -*** *கண்ணீராகிய அருவிவிழும் மலைபோல;* ***நின்றான் -.***

*இதற்கு இலக்குவனைச் சந்தேகித்துக் குகனும் குகனை ஐயுற்று அவனது சுற்றமும் கண்ணுறங்காது காவல் செய்ததாகப் பொருள் உரைத்து நயர் காண்பாருளர் ஆயினும், குகனாகிய தலைவனையே ஐயுற்று அவனையும் சேர அழிக்கத் தயாராக அவனது சுற்றமாகிய சேனை இருந்ததாகக் கூறல் குகனது நாயகத் தன்மைக்குப் பேரிழப்பாக முடியும். அன்றியும் குகனையே இராமன்பால் அறிமுகப்படுத்தியவன் இலக்குவன் என்பது குகனும் அறிந்ததே. குகனது வேண்டுகோளை ஏற்கும் இராமன் சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கியதை' ஆண்டிருந்த குகனும் அறியாதிரானன்றே? திருநகர் தீர்ந்த வண்ணத்தைப் பருவரல் தம்பி கூறக் கேட்டான் அன்றே? அவ்வாறு பல்வேறமயங்களில் இலக்குவனது தொண்டுள்ளமும், அன்பும் நன்கு காணக்கிடைத்த குகன் இலக்குவனை ஐயுற்றான் எனல் சற்றும் பொருந்தாது என்க. கங்கை காண் படலத்தே பரதன்பால் இலக்குவனைப் பற்றிச் சொல்ல நேரும்பொழுது அழகனும் அவளும் துஞ்ச, வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப் போடும்... கண்கள் நீர்பொழிய... நின்றான்.... இமைப்பிலன் நயனம்' (2344) என்று சொல்வான் எனில், முன்னர் அவ்வாறு அவனை உணர்ந்ததனால் அன்றோ பின்னர் அவ்வாறு கூறமுடிந்தது! எனவே, இலக்குவன் இராமன் பாற்கொண்ட அன்பின் செறிவையும், இலக்குவனது தொண்டுள்ளத்தையும் அறிந்த குகன் இலக்குவனை ஐயுற்று வில்லும் அம்புமாய்த் தான் காவல் செய்தான் எனல் சிறிதும் பொருந்தாமையும், குகனுக்குப் பெருமையாகாமையும் அறிக. அன்றியும் 'தம்பி நின்றானை நோக்கி....கண்ணீர் அருவி சோர்குன்றின் நின்றான்' எனச் சொல்லப்படுவதிலிருந்தே அரசகுமாரர்கள் இவ்வாறு இருக்கலாம்படி ஆயிற்றே என்கிற அவலமே குகன்பால் மேலோங்கி நின்றமையைச் கம்பர் புலப்படுத்தினார் ஆதல் காண்க.* ***23***

சூரியன் தோன்றலும் தாமரை மலர்தலும்

***1976. துறக்கமே முதல ஆய***
***தூயன யாவை யேனும்***
***மறக்குமா நினையல் அம்மா! -***
***வரம்பு இல தோற்றும் மாக்கள்***
***இறக்குமாறு இது என்பான்போல்***
***முன்னை நாள் இறந்தான், பின் நாள்,***

***பிறக்குமாறு இது என்பான்போல்***
***பிறந்தனன் - பிறவா வெய்யோன்.***

***பிறவா வெய்யோன் -*** *என்றும் பிறவாது ஒருபடித்தாகவே உள்ள சூரியன்;* ***வரம்புஇல தோற்றும் மாக்கள் -*** *எண்ணிலவாய் உலகில் தோன்றும் மக்கள்;* ***இறக்குமாறு இது என்பான்போல் முன்னை நாள் இறந்தான் -*** *இறப்பது இவ்வாறு என்று அவர்களுக்கு எடுத்துக் கூறுவானைப் போல முதல் நாள் மாலை அத்தமித்தான்;* ***பின் நாள் -*** *மறுநாள் (காலையில்);* ***பிறக்குமாறு இது என்பான் போல் பிறந்தனன்-*** *பிறப்பது இவ்வாறு என்று எடுத்துக் கூறுவான் போலத் தோன்றினான் (இறப்பும் பிறப்பும் மாறிமாறி வருதலை உணர்வார்);* ***துறக்கமே முதல ஆய தூயன யாவையேனும் -*** *சுவர்க்காதிபோகங்களாகச் சொல்லப்படுகின்ற தூயனவாகிய மேலான எவையும்;* ***(நிலையற்றவை என்பதுஉணரப்படுதலின்) மறக்குமா நினையல் அம்மா! -*** *மறக்கும்படி நினையல் வேண்டும்படியாயின வாறுஎன்னே!*

*இறப்பும் பிறப்பும் மாறி மாறி வருதலைச் சூரியனால் உணர்ந்த மாக்கள் எவ்வளவு உயர்ந்தசுவர்க்கம் முதலியனவும் நிலையிலாதவை என உணர்த்தலின் மறப்பாராவர் என்பதாம். அம்மா! வியப்பிடைச் சொல். இதனால் மக்கள் உண்மை உணர்ந்து இறப்பு பிறப்பு அற்று என்றும் மீளா உலகம் ஆகிய முத்தியையே வேண்டுதற்குச் சூரியன் உதவலை உணர்த்தினார். நினையால் -உடன்பாட்டில் வந்த வியங்கோள் வினைமுற்று.* *24*

***1977. செஞ்செவே சேற்றில் தோன்றும்***
***தாமரை, தேரில் தோன்றும்***
***வெஞ் சுடர்ச் செல்வன் மேனி***
***நோக்கின விரிந்த; வேறு ஓர்***
***அஞ்சன நாயிறு அன்ன***
***ஐயனை நோக்கி, செய்ய***
***வஞ்சி வாழ் வதனம் என்னும்***
***தாமரை மலர்ந்தது அன்றே.***

***செஞ்செவே சேற்றில் தோன்றும் தாமரை -*** *செக்கச் செவேல் என்று சேற்றில்தோன்றிய செந்தாமரை மலர்;* ***தேரில் தோன்றும் -*** *ஒற்றைச் சக்கரத் தேரில்உதயமான;* ***வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கின விரிந்த*** *- வெம்மையான கதிர்களைஉடைய சூரியனது வடிவத்தைப் பார்த்து மலர்ந்தன;* ***செய்ய -*** *சிவந்ததாகிய;* ***வஞ்சி -*** *வஞ்சிக் கொடிபோல்பவளாகிய சீதையினிடத்தில்;* ***வாழ் வதனம் என்னும் தாமரை*** *- உள்ளமுகம் என்னும் தாமரை;* ***வேறு ஓர் அஞ்சன நாயிறு அன்ன ஐயனை நோக்கி -*** *செஞ்சூரியனில் மாறுபட்டு வேறொன்றான கருஞாயிற்றை ஒத்த இராமனைப் பார்த்து;* ***மலர்ந்தது -*** *மலர்ந்து விளங்கியது.*

*கருமை நிறம் உடைய இராமனை அஞ்சன ஞாயிறு என்றார். தடாகத் தாமரை செஞ்ஞாயிறு கண்டுமலர்ந்தது; முகத் தாமரை கருஞாயிறு கண்டு மலர்ந்தது.*
*25 இராமன் குகனை நாவாய் கொணரக் கட்டளை இடல்*

*1978.* ***நாள் முதற்கு அமைந்த யாவும்***
***நயந்தனன் இயற்றி, நாமத்***
***தோள் முதற்கு அமைந்த வில்லான்,***
***மறையவர் தொடரப் போனான்,***
***ஆள் முதற்கு அமைந்த கேண்மை***
***அன்பனை நோக்கி, 'ஐய!***
***கோள் முதற்கு அமைந்த நாவாய்***
***கொணருதி விரைவின்' என்றான்.***

***நாமத் தோள் முதற்கு அமைந்த வில்லான் -*** *அச்சந்தரும் தோளிடத்திற்குப்பொருந்திய வில்லை உடைய இராமன்;* ***நாள் முதற்கு அமைந்த யாவும் நயந்தனன் இயற்றி -*** *வைகறைக் காலத்தில் செய்ய வேண்டிய கடமைகள் எல்லாவற்றையும் விரும்பிச் செய்து;* ***மறையவர் தொடரப் போனான் -*** *வேதியர்கள் தன்னைத் தொடர்ந்து வரச் செல்கின்றவன்;* ***ஆள் முதற்கு அமைந்த கேண்மை அன்பினை நோக்கி-*** *அடிமைத்தன்மைக்குப் பொருந்தியநட்புரிமை உடைய அன்புள்ளம் கொண்ட குகனைப் பார்த்து;* ***'ஐய! -*** *ஐயனே;* ***கோள்முதற்கு அமைந்த நாவாய் -*** *கொண்டு செல்லுதற்குரிய தரம் வாய்ந்த மரக்கலங்களை;* ***விரைவின் கொண்ருதி' -*** *விரைவாகக் கொண்டு வருவாயாக;'* ***என்றான் -.***

*தோள் முதல் - முதல் - இடம் என்னும் பொதுப் பொருள். நாள் முதல் வைகறையில்தொடங்குமாதலின் வைகறை யென்றாம் - அது காலைச்சந்தி நிகழ்த்துதற்கு உரிய பொழுதுஆகலின்.* ***26***

*குகன் இராமனைத் தன் இருப்பிடத்திலே தங்க வேண்டுதல்*

*சந்தக் கலிவிருத்தம்*

*1979.* ***ஏவிய மொழிகேளா,***
***இழி புனல் பொழி கண்ணான்,***
***ஆவியும் உலைகின்றான்,***
***அடி இணை பிரிகல்லான்,***
***காவியின் மலர், காயா,***
***கடல், மழை, அனையானைத்***
***தேவியொடு அடி தாழா,***
***சிந்தனை உரை செய்வான்:***

***ஏவிய மொழி கேளா -*** *இராமன் நாவாய் கொணரும்படி கட்டளையிட்ட வார்த்தையைக்கேட்டு (எங்கே இராமன் தன்னைப் பிரிந்து சென்றுவிடுவானோ என்னும் ஏக்கறவால்);* ***இழிபுனல்பொழி கண்ணான் -*** *இறங்குகின்ற நீர் இடையறாது சொரிகின்ற கண்ணனாய்;* ***ஆவியும் உலைகின்றான் -*** *உயிர் துடிக்கப் பெறுபவனாய்;* ***அடி இணை பிரிகல்லான் -*** *இராமனதுதிருவடிகளை விட்டுப் பிரிய மாட்டாதவனாய்;* *கா* ***வியின் மலர், காயா, கடல், மழைஅனையானை -*** *நீலோற்பல மலர், பூவைப் பூ, கடல், மேகம் இவற்றை ஒத்த கருநீல நிறம்படைத்த இராமனை;* ***தேவியொடு அடி***

***தாழா -*** *சீதையோடு சேர்த்து அடியில் வீழ்ந்து வணங்கி;* ***சிந்தனை -*** *தன் எண்ணத்தை;* ***உரை செய்வான் -*** *கூறத் தொடங்கினான்.*

*அன்பு மீக்கூர்ந்த அவலத்தின் மெய்ப்பாடுகள் புனல்பொழிகண், உலையும் ஆவி என்பன.இராமனுடைய நிறத்துக்கு நான்கும் உவமை. இங்ஙனம் பல உவமைகளை ஒருசேரக் கூறி இராமனது பேரழகினை அனுபவித்தல் கம்பர் இயல்பு; எடுத்துக்காட்டு: 1926.* ***27***

***1980. ‘பொய்ம் முறை இலரால்; எம்***
***புகல் இடம் வனமேயால்;***
***கொய்ம் முறை உறு தாராய்!***
***குறைவிலெம்; வலியேமால்;***
***செய்ம்முறை குற்றேவல்***
***செய்குதும்; அடியோமை***
***இம் முறை உறவு என்னா***
***இனிது இரு நெடிது, எம் ஊர்:***

***‘கொய்ம் முறை உறு தாராய்! -*** *கத்திரிகையால் ஒழுங்குசெய்யப் பெற்றுப்பொருந்திய மாலையை அணிந்தவனே!;* **பொய்ம் முறை இலரால்** - *எம் மக்கள் வஞ்சகம்அறியாதவர்கள்;* **எம் புகலிடம் வனமேயால்-** *எங்களுடைய இருப்பிடம் இக்காடே ஆகும்;* **குறைவிலெம் -** *எவற்றாலும் குறையுடையோ மில்லை;* **வலியேமால் -** *(பகைவரைஅழிக்கும்) வலிமையும் உடையேம்;* **செய்ம் முறை குற்றேவல் செய்குதும் -** *செய்ய வேண்டிய முறைப்படி உனக்கு வேண்டிய சிறு தொண்டுகளைச் செய்வோம்;* **அடியோமை -** *உன்தொண்டர்களாகிய எங்களை;* **இம் முறை உறவு என்னா** - *இந்த முறையான உறவினர்கள் என்றுகருதி;* **எம் ஊர் -** *எங்களுடைய ஊரிலே;* **நெடிது -** *நீண்ட காலம்;* **இனிது இரு’ -** *இனிமையாக இருப்பாயாக.’*

*உள்ளொன்று புறம் ஒன்று அற்றவர் வேடுவர் என்பதனைப் ‘பொய்ம் முறை இலர்’ என்றுகூறினான். காட்டில் உள்ளவர்கள் ஆதலின் உணவு கிடைக்கும் இடம், பாதுகாப்பான இடம், நீர்நிலைகளுக்குரிய வழிகள் அனைத்தும் எங்களுக்குப் பழக்கம் ஆதலின் உனக்கு அடிமை செய்ய வசதியாகும் என்று நினைப்பித்தான். எங்களையும் உனது உறவு முறையாகக் கருதி எம் ஊரில் தங்க வேண்டும் எனவேண்டினான் குகன். ‘ஆல்’ உரையசை.* ***28***

***1981. ‘தேன் உள; தினை உண்டால்;***
***தேவரும் நுகர்தற்கு ஆம்***
***ஊன் உள; துணை நாயேம்***
***உயிர் உள; விளையாடக்***
***கான் உள; புனல் ஆடக்***
***கங்கையும் உளது அன்றோ?***
***நான் உளதனையும் நீ***
***இனிது இரு; நட, எம்பால்;***

***தேன் உள; தினை உண்டு*** - *தேவர்களும் தூயது எனக் கருதி உண்ணுதற்குப் பொருத்தமானதேனும், தினையும் எம்மிடம் உண்டு;* ***தேவரும் நுகர்தற்கு ஆம் ஊன் உள*** - *தேவர்களும்அவியிற் கொள்ளும் புலால் உண்டு;* ***துணை நாயேம் உயிர் உள*** - *அடியேங்களுடைய உயிர்உங்களுக்குத் தொண்டு செய்ய உள்ளவையே;* ***விளையாடக் கான் உள*** - *தேவியோடு விளையாடிப்பொழுது போக்க இனிய காடுகள் உள்ளன;* ***புனல் ஆடக் கங்கையும் உளது*** - *நீரிலே முழுகிவிளையாடக் கங்கையாறும் இருக்கிறது;* ***நான் உளதனையும்*** - *நான் உடன் உள்ளவரையும்;* ***நீ எம்பால் நட இனிது இரு*** - *நீ எம்மிடத்துக்கு நடப்பாயாக, இனிது இருப்பாயாக.'*

*தேன் உள தினை உண்டால் என்பதனைத் தனியே பிரித்து, தேவரும் நுகர்தற்கு ஆம் ஊன் உள என்று உரைப்பதும் உண்டு. வேள்வியில் அவியாகச்சொரியப்படுதலின் தேவரும் உண்ணுதற்குரிய ஊன் எனக் கூறியதாகக் கொள்ளலாம். முன்பு 'தேனும்மீனும் அமுதினுக் கமைவதாகத் திருத்தினன்; திருவுளம் என்கொல்' (1966.) என்று குகன்வினாவிய பொழுது. இராமன் விருத்த மாதவரை நோக்கி, முறுவலனாய் 'பரிவினில் தழீஇய என்னில்பவித்திரம்' என்று தர்மசங்கடத்தைத் தவிர்க்கும் நிலையில் கூறியமைந்ததையும் அதனை உண்ணாதுஉளத்தால் ஏற்றுக்கொண்டதையும் அறிந்த குகன் மீண்டும் அதே பொருள்களைக் கூறுவதாக அமையாமல் மீனைத் தள்ளி, இராமன் முதலியவர்கள் உண்ணுதற்கேற்ற தேனும், தினையும் மட்டுமே கூறினான்என்க. குகனது பண்பு முதிர்ச்சியைக் காட்டிக் கம்பருக்கும் ஏற்றம் தருவது உணரத் தக்கது. பின்னரும் ''கனி காயும் நறவு இவை தரவல்லேன்'' என்று குகன் கூறுதல் (1990.) காண்க. உயிர்இராமனது உடைமையாயினும் உடம்பு உள்ளவரைதான் பணி செய்ய இயலுமாதலின் 'ஊன் உள துணை நாயேன்உயிர் உள' எனக் குகன் கூறியதாகக் கொள்வதும் பொருந்துவதே.*

***1982. 'தோல் உள, துகில்போலும்;***
***சுவை உள; தொடர் மஞ்சம்***
***போல் உள பரண்; வைகும்***
***புரை உள; கடிது ஓடும்***
***கால் உள; சிலை பூணும்***
***கை உள; கலி வானின் -***
***மேல் உள பொருளேனும்,***
***விரைவொடு கொணர்வேமால்;***

***'துகில் போலும் தோல் உள*** - *நூல் ஆடை போல உள்ள மென்மையான தோல்கள் உள்ளன;* ***சுவை உள*** - *சுவையுடைய இனிய பொருள்கள் பல உள்ளன;* ***தொடர் மஞ்சம் போல்*** - *தூங்குதற்குக் கயிற்றால் பிணித்த தொட்டிற் கட்டில் போல்;* ***பரண் உள*** - *பரண்கள் உள்ளன;* ***வைகும் புரை உள*** - *தங்குதற்குக் குடில்கள் உள்ளன;* ***கடிது ஓடும் கால் உள*** - *விரைந்து சென்று எதையும் கொணர்ந்து தரவல்ல வலிய கால்கள் எமக்கு உள்ளன;* ***சிலை பூணும்கை உள*** - *தடுப்பாரை அழிக்க வல்ல வில்லை ஏந்திய கைகள் எம்மிடம் உள்ளன;* ***கலிவானின் மேல் உள பொருளேனும் விரைவொடு கொணர்வேம்'*** - *செருக்கிய ஆகாயத்தின் மேலேஉள்ள பொருளாக இருந்தாலும் விரைந்து சென்று கொண்டு வருவோம்.'*

*'பட்டு நீக்கித் துகில் உடுத்தும்' என்னும் பட்டினப்பாலையுள்(107) மெல்லிய நூலாடையைத் துகில் எனலின் இங்கும் அவ்வாறே கொள்க. விரைந்து பணி செய்யவும்துன்புறுத்துவாரை அழிக்கவும் வலிய காலும், கையும் இருத்தலின் நீங்கள் நிம்மதியாக இங்கேதங்கலாம் என்றான் குகன். அகண்டாகாரமாக விரிந்து ஏனைய நிலம், நீர், தீ, காற்று என்னும் நான்கினையும் தன்னுள்ளே அடக்கிக்கோடலின் 'செருக்கிய ஆகாயம்' எனப் பொருள் உரைத்தாம். 'கலி' என்பது 'ஓசை' என்று பொருள் கூறி, ஓசையைத் தன் குணமாக உடைய ஆகாயம் எனலும் ஒன்று. 'ஆல்' அசை.* ***30***

***1983.*** **'ஐ - இருபத்தோடு ஐந்து**
**ஆயிரர் உளர், ஆணை**
**செய்குநர், சிலை வேடர் -**
**தேவரின் வலியாரால்;**
**உய்கதம் அடியேம் - எம்**
**குடிலிடை, ஒரு நாள், நீ**
**வைகுதிஎனின் - மேல் ஓர்**
**வாழ்வு இலை பிறிது' என்றான்.**

**'ஆணை செய்குநர்-** நான் இட்ட கட்டளையை நிறைவேற்றுபவராகிய; **தேவரின்வலியார்-** தேவர்களைக் காட்டிலும் வலிமை படைத்தவர்களாகிய; **சிலைவேடர் -** வில் ஏந்திய வேடர்கள்; **ஐ இருபத்தோடு ஐந்து ஆயிரர் உளர் -** ஐந்து இலக்கம் பேர்இருக்கின்றார்கள்; **நீ எம் குடிலிடை ஒருநாள் வைகுதி எனின் -** இராமா! நீ எம் குடிசையிடத்துஒருநாள் தங்குவாயானால்; **மேல் ஓர் வாழ்வு பிறிது இலை -** எங்களுக்கு அதைக்காட்டிலும்மேலான வேறொரு வாழ்க்கை இல்லை; **உய்குதும் -** நாங்கள் ஈடேறிவிடுவோம்; **என்றான்-.**

*ஐ இருபது - நூறு. அதனோடு ஐந்தைப் பெருக்க ஐந்நூறு ஆயிரவர் என்று முடியும் 'நீஎம்......வைகுதி எனின்' - இரண்டிடத்தும் கூட்டப்பட்டது. 'ஆல்' அசை.*
***31***

இராமன் மீண்டும் வரும்போது குகனிடம் வருவதாகக் கூறல்

***1984.*** **அண்ணலும் அது கேளா,**
**அகம் நிறை அருள் மிக்கான்,**
**வெண் நிற நகைசெய்தான்;**
**'வீர! நின்னுழை யாம் அப்**
**புண்ணிய நதி ஆடிப்**
**புனிதரை வழிபாடு உற்று**
**எண்ணிய சில நாளில்**
**குறுகுதும் இனிது' என்றான்.**

**அண்ணலும் -** இராமனும்; **அது கேளா -** அதனைக் கேட்டு; **அகம் நிறை -** மனம் நிறைந்த; **அருள் மிக்கான் -** கருணை மிகுந்தவனாய்; **வெண் நிற நகைசெய்தான் -** (மகிழ்ச்சியை வெளிக்காட்டி) வெண்மையான ஒளிபடைத்த முறுவல் செய்தானாய்;

***'வீர்! யாம் -*** *குகனே! நாங்கள்;* ***அப் புண்ணிய நதி ஆடி -*** *அந்தப் புண்ணியநதிகளில் நீராடி;* ***புனிதரை வழிபாடு உற்று -*** *(அங்கங்கே உள்ள) முனிவர்களை வழிபாடுசெய்து;* ***எண்ணிய சில நாளில் -*** *வனவாசத்துக்குக் குறித்த சில நாள்களில்;* ***நின்னுடை -*** *உன்னிடத்துக்கு;* ***இனிது குறுகுதும் -*** *இனிமையாக வந்து சேர்வோம்;'* ***என்றான் -.***

*வனவாசம் பதினான்கு ஆண்டுகள் ஆயினும், அன்பால் அழைக்கும் குகனுக்கு ஆறுதலாகக் கூறவேண்டி, 'எண்ணிய சில நாள்' என்றான் இராமன் என்க. முன்னர் கோசலையைத் தேற்ற வேண்டி இராமன், 'எத்தனைக்கு உள ஆண்டுகள் ஈண்டு, அவை பத்தும் நாலும் பகல் அலவோ' (1626) என்றுகூறியுள்ளதையும் இங்குக் கருதுக. பதினான்கு ஆண்டுகளைப் பதினான்கு நாள்கள் என்று அங்கே கூறியது போலக் குகனிடம் 'எண்ணிய சில நாள்' என்றான் என்க.* ***32***

*குகன் நாவாய் கொணர, மூவரும் கங்கையைக் கடத்தல்*

***1985. சிந்தனை உணர்கிற்பான்***
***சென்றனன், விரைவோடும்;***
***தந்தனன் நெடு நாவாய்;***
***தாமரை நயனத்தான்***
***அந்தணர்தமை எல்லாம்,***
***'அருளுதிர் விடை' என்னா,***
***இந்துவின் நுதலாளோடு***
***இளவலொடு இனிது ஏறா.***

*(குகன்)* ***சிந்தனை உணர்கிற்பான் விரைவோடும் சென்றான் -*** *(இராமனது) மனக்கருத்தை உணர்ந்தவனாய் விரைந்து சென்று;* ***நெடுநாவாய் தந்தனன்-*** *பெரியமரக்கலங்களைக் கொணர்ந்தான்;* ***தாமரை நயனத்தான்-*** *தாமரை மலர்போலும் கண்களைஉடைய இராமன்;* ***அந்தணர் தமை எல்லாம் -*** *முனிவர்கள் எல்லாரையும்;* ***'விடைஅருளுதிர்' என்னா -*** *'எனக்குப் புறப்பட விடை கொடுங்கள்' என்று கேட்டுப் பெற்று;* ***இந்துவின் நுதலாளோடு -*** *பிறைமதி போலும் நெற்றியை உடைய சீதையோடும்;* ***இளவலொடு -*** *இலக்குவனோடும்;* ***இனிது ஏறா -*** *இனிமையாக அந்நாவாயில் ஏறி,*

*சென்றனன் முற்றெச்சம். வடிவில் முற்றுவினையாய் எச்சப்பொருள் தரும் இத்தகையன முன்னும்உள; பின்னும் வரும். பொருள் நோக்கி இலக்கணம் உணர்க.* ***33***

***1986. 'விடு, நனி கடிது' என்றான்;***
***மெய் உயிர் அனையானும்,***
***முடுகினன், நெடு நாவாய்;***
***முரி திரை நெடு நீர்வாய்;***
***கடிதினின், மட அன்னக்***
***கதிஅது செல, நின்றார்***

***இடர் உற, மறையோரும்***
***எதி உறு மெழுகு ஆனார்.***

*(இராமனும்)* ***'நனி கடிது விடு' என்றான் -*** *மிக வேகமாக நாவாய்களைச் செலுத்து என்றுகூற;* ***மெய் உயிர் அனையானும் -*** *உடம்பும் உயிரும் ஒத்த நண்பினை இராமன்பால் உடையகுகனும்;* ***முரிதிரை நெடு நீர்வாய் -*** *ஒடிகின்ற அலைகளையுடைய நீண்ட கங்கை நீரிடத்தே;* ***நெடு நாவாய் -*** *பெரிய ஓடத்தை;* ***முடுகினன் -*** *விரைந்து செலுத்த;* ***அதுகடிதினின் மட அன்னக் கதிசெல -*** *அந்நாவாய் விரைவாக இளைய அன்னப்பறவை நீரிற்செல்லுமாறு போலச் செல்ல;* ***நின்றார் மறையோரும் -*** *கரையின்கண் நின்றவர்களாகியவேதியரும்;* ***இடர் உற -*** *துன்பமடைந்து;* ***எரி உறு மெழுகு ஆனார் -*** *நெருப்பில் பட்ட மெழுகைப் போல மனம் உருகி இரங்கினார்கள். நட்புக்கு உடம்பும் உயிரும் சேர்ந்த சேர்க்கையைச் சொல்வது வழக்கு. ஆதலின், 'மெய்உயிர் அனையானும்' என்று குகன் - இராமனுக்குள்ள நட்பைச் சொன்னார். 'உடம்பொடு உயிரிடைஎன்ன மற்றன்ன, மடந்தையொடு எம்மிடை நட்பு' என்ற குறளையும் (குறள் 1122) காண்க. நாவாய்களின் செல்கை அன்னச்செலவு போலும் என்றார்; பின்னும் அன்னப் பேடை சிறை இலதாய்க்கரை, துன்னிற்றென்னவும் வந்தது தோணியே' என்றது (2372.)காண்க.* *34*

***1987. பால் உடை மொழியாளும்,***
***பகலவன் அனையானும்,***
***சேலுடை நெடு நல் நீர்***
***சிந்தினர், விளையாட;***
***தோலுடை நிமிர் கோலின்***
***துழவிட, எழு நாவாய்,***
***காலுடை நெடு ஞெண்டின்,***
***சென்றது கடிது அம்மா!***

***பால் உடை மொழியாளும் -*** *பால்போலும் இன்சொல் உடையவளாகிய சீதையும்;* ***பகலவன் அனையானும் -*** *சூரியனை ஒத்த இராமனும்;* ***சேல் உடை நெடு நல் நீர் சிந்தினர்விளையாட -*** *கயல் மீன்களை உடைய நீண்ட புண்ணியக் கங்கை நீரைச் சிதறி எறிந்து விளையாடிக் கொண்டே செல்ல;* ***தோல் உடை நிமிர் கோலின் துளவிட-*** *முன்னர்த் தோல்பட்டையை உடைய நீரைத் தள்ளி மேல் உயரும் துடுப்புகளால் நீரைத் தள்ள;* ***எழு நாவாய் -*** *செல்லுகின்ற தோணி;* ***காலுடை நெடு ஞெண்டின் -*** *கால்களை உடைய பெரிய நண்டைப் போல;* ***கடிது சென்றது -*** *விரைந்து சென்றது.*

*படகிற் செல்வார் நீர் சிதறி விளையாடல் இயல்பு. துடுப்புகளின் முனையில் இறக்கைகள்போல் தோலைத் தைத்திருப்பர், நீரைத் தள்ளுவதற்கு வசதியாக. துடுப்புகள் கால்களாகவும்நாவாய் நண்டாகவும் காண்க. நண்டு செல்லுங்கால் பக்கங்களில் ஒதுங்கி ஒதுங்கிச் செல்லும். அத்தன்மை நாவாயின் செலவுக்கு ஒப்பாகும் என்க. 'அம்மா' வியப்பிடைச்சொல்.* *35*

***1988. சாந்து அணி புளினத்தின்***
***தட முலை உயர் கங்கை,***
***காந்து இன மணி மின்ன,***

***கடி கமழ் கமலத்தின்***
***சேந்து ஒளி விரியும் தெண்***
***திரை எனும் நிமிர் கையால்,***
***ஏந்தினள்; ஒரு தானே***
***ஏற்றினள்; இனிது அப்பால்.***

***சாந்து அணி*** - *சந்தனம் அணிந்த;* ***புளினத்தின் தடமுலை-*** *மணல் மேடுகளாகிய பெரிய முலைகளை உடைய;* ***உயர் கங்கை*** - *உயர்ந்த கங்கையானவள்;* ***காந்துஇன மணி மின்ன*** - *எரிகின்ற கூட்டமான இரத்தினங்கள் விட்டு விளங்க;* ***கடி கமழ்கமலத்தின்*** - *மணம் வீசுகின்ற தாமரை மலரினால்;* ***சேந்து ஒளி விரியும்*** - *சிவந்து ஒளி பரவுகின்ற;* ***தெண் திரை எனும் நிமிர் கையால்*** - *தெளிந்த அலைகள் என்று கூறப்படும் நீண்ட கைகளால்;* ***ஒரு தானே ஏந்தினள்*** - *தான் ஒருத்தியே அந்த ஓடத்தைச்சுமந்தவளாய்;* ***இனிது அப்பால் ஏற்றினள்*** - *இனிமையாக அக்கரையில் கொண்டுசேர்த்தாள்.*

*புளினம் - மணல் திட்டு. நதிகளுக்கு இடையில் உள்ளவை. மணற்குன்று எனலும் ஆம். அவற்றைநகில்களாக்கிக் கங்கையைப் பெண் ஆக்கினார். நீரலைகளின் மேல் நாவாய் செல்வது கங்கைதான் சுமந்து அக்கரை கொண்டு சேர்ப்பதுபோல் உள்ளது என்றது தற்குறிப்பேற்றம். அலையைக்கையாக்கியதற்கு ஏற்பக் 'கடிகமழ் கலத்தின் சேந்து ஒளிவிரியும்' என்றார்.* ***36***

*சித்திர கூடத்திற்குச் செல்லும் வழியைக் குகனிடம் இராமன் வினாவல்*

***1989. அத் திசை உற்று, ஐயன்,***
***அன்பனை முகம் நோக்கி,***
***'சித்திர கூடத்தின்***
***செல் நெறி பகர் என்ன,***
***பத்தியின் உயிர் ஈயும்***
***பரிவினன் அடி தாழா,***
***'உத்தம! அடி நாயேன்,***
***ஓதுவது உளது' என்றான்.***

***ஐயன்*** - *இராமன்;* ***அத்திசை உற்று*** - *கங்கையின் அக்கரையை அடைந்து;* ***அன்பனை முகம் நோக்கி*** - *குகனைப் பார்த்து;* ***'சித்திர கூடத்தின் செல் நெறி பகர்'என்ன*** - *சித்திரகூடத்திற்குச் செல்லும் வழியைக் கூறுக என்று கேட்க; (குகனும்)* ***பத்தியின் உயிர் ஈயும் பரிவினன்*** - *இராம பக்தியால் தன்னுயிரையும் இராமனுக்கு ஈநதுவிடும் அன்புடையனாகி;* ***அடி தாழா*** - *இராமன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி;* ***'உத்தம! அடிநாயேன் ஓதுவது உளது' என்றான்*** - *எல்லோரிலும் மேம்பட்டவனே! நாய்போல் கடைப்பட்டஅடிமையாகிய யான் சொல்லுவது உளது' என்று சொன்னான்.*

*''ஆணல்லன் பெண்ணல்லன்'' என்னும் திருவாய்மொழியில் 'இவன் உலகத்துக் காணும் ஆண்களுள்ஒருவன் அல்லன்; புருஷோத்தமன் என்பதாயிற்று' என்னும் ஈட்டுரையை இங்குக் கருதுக. (திவ்ய.3062) தன்னைத் தாழ நினைத்துக் கூறுவார் நாயை*

*உவமையாக் கோடல் வழக்கு. குகன் பலஇடங்களிலும் தன்னை 'நாய்' எனக் கூறல் காண்க.* *37 தானும் உடன்வர அனுமதிக்க இராமனைக் குகன் வேண்டுதல்*

***1990. 'நெறி, இடு நெறி வல்லேன்;***
***நேடினேன், வழுவாமல்,***
***நறியன கனி காயும்,***
***நறவு, இவை தர வல்லேன்;***
***உறைவிடம் அமைவிப்பேன்;***
***ஒரு நொடி வரை உம்மைப்***
***பிறிகிலேன், உடன் ஏகப்***
***பெறுகுவென் எனில் நாயேன்;***

*'**நாயேன் -** நாய்போற் கடைப்பட்டவனாகிய அடியேன்; **உடன் ஏகப் பெறுகுவென்எனின்-** உங்களுடனே வருகின்ற பேற்றைப் பெறுவேனானால்; **நெறி -** நீங்கள்செல்லும் வழியை; **இடு நெறி வல்லேன்-** அமைத்துத்தரும் வல்லமை உடையேன்; **நறியனகனி காயும் நறவு இவை வழுவாமல் நேடினென் தர வல்லேன் -** மிகவும் நல்லனவாகிய பழம், காய்தேன் முதலியவற்றைச் சிறிதும் குறைவுபடாமல் தேடிக் கொண்டுவந்து தருதற்கு வலிமை உடையேன்; **உறைவிடம் அமைவிப்பேன் -** செல்லும் வழியிடங்களில் தங்குதற்குரிய இடங்களைஅமைத்துத்தருவேன்; **ஒரு நொடி வரை உம்மைப் பிறிகிலென் -** ஒரு நொடிக்கால அளவும் உங்களைப் பிரியாமல் பாதுகாப்பேன்.'*

*தான் உடன் வருவதால் அவர்களுக்குக் கிடைக்கக் கூடிய நன்மைகளைச் சொல்லி, தன்னை உடன்கொண்டு செல்ல வேண்டினான் குகன் என்க. குகனது பண்பு முதிர்ச்சியை இங்கே கூனி, காய், நறவு, என்றுமட்டுமே கூறி, மீனைக் கூறாது விட்டதிலும் காண்க. 'நொடி' என்பது ஒரு கால அளவு கண்ணிமைப் பொழுது அதற்குச் சமம். ''கண்ணிமை நொடி என அவ்வே மாத்திரை, நுண்ணிதின்உணர்ந்தோர் கண்ட வாறே'' என்பது (தொல். எழுத். நூன்.) காண்க. நெறி - பெருவழி, இடுநெறி - ஒற்றையடிப்பாதை, குறுக்குப்பாதை எனவும் கொள்ளலாம்.* *38*

***1991. 'தீயன வகை யாவும்***
***திசை திசை செல நூறி***
***தூயன உறை கானம்***
***துருவினென் வர வல்லேன்;***
***மேயின பொருள் நாடித்***
***தருகுவென்; வினை முற்றும்***
***எயின செய வல்லேன்;***
***இருளினும் நெறி செல்வேன்;***

*'**தீயன வகை யாவும் -** கொடிய தன்மை படைத்த எப்பொருளும்; **திசை திசை செலநூறி -** நாலாதிசைகளிலும் ஓடி ஒளியும்படி அழித்து; **தூயன உறைம கானம் -** தூய விலங்குமுதலியன வசிக்கும் காடுகளை; **துருவினென் வரவல்லேன் -** தேடித் தருவதற்கு வல்லமைஉடையேன்; **மேயின பொருள் நாடித் தருகுவென் -** நீங்கள்*

*விரும்பி பொருளை எங்கிருப்பினும் தேடிக் கொண்டுவந்து தருவேன்;* **ஏவின வினைமுற்றும் செயவல்லேன் -** *நீங்கள் ஏவிய எல்லா வேலைகளையும் செய்ய வல்லமை உடையேன்;* **இருளினும் நெறி செல்வேன் -** *நள்ளிருள் பொழுதும் காட்டு வழியில் செல்லும் தீரம் உடையேன்.*

*விலங்கு, பறவை, மரம், செடி, கொடி முதலியவற்றுள் ஊறிழைக்கும் எப்பொருளும் அடங்கத் 'தீயன வகையாவும்' என்றும். தூயன அனைத்தும் அடங்க, 'தூயன உறைகானம்' என்றும் கூறினான். காட்டில் பழகியவன் ஆகலின் இருளிடையிலும் செல்லுதல் தனக்கு எளிது என்றானாம். 39*

***1992. 'கல்லுவென் மலை; மேலும்***
***கறவலையின் முதல் யாவும்;***
***செல்லுவென் நெறி தூரம்;***
***செறி புனல் தர வல்லேன்;***
***வில்இனம் உளென்; ஒன்றும்***
***வெருவலென்; இருபோதும் -***
***மல்லினும் உயர் தோளாய்! -***
***மலர் அடி பிரியேனால்;***

**'மல்லினும் உயர் தோளாய்! -** *மற்போர்த் திறமையிலும் மேன்மைபொருந்தியதோள்களை உடைய இராமனே!;* **மலை கல்லுவென் -** *(செல்லும் வழி) மலையாயினும் தோண்டிவழிசெய்வேன்;* **மேலும் கவலையின் முதல் யாவும்** *(கல்லுவென்) - அதன்மேலும் கவலைக்கிழங்கு முதலிய (உணவு வகைகளையும்) தோண்டி எடுப்பேன்;* **நெறி தூரம் செல்லுவென் -** *சேய்மையான வழிகளிலும் செல்வேன்;* **செறி புனல் தர வல்லேன் -** *உயிர் செறிதற்குக்காரணமான நீரை எங்கிருந்தும் கொண்டு தருதற்கு உரிய வல்லமை உடையேன்;* **வில் இனம் உளென்-** *துணைக்கு வில் ஏந்திய சேனையை உடையேன்;* **ஒன்றும் வெருவலென் -** *எதற்கும் அஞ்சமாட்டேன்;* **இருபோதும் மலர் அடி பிரியேன்-** *பகல், இரவு ஆகிய இருபொழுதுளகளிலும் உன்னுடைய மலர்போன்ற அடிகளைப் பிரியாமல் உடனாகத் தங்கியிருப்பேன்.*

*'கல்லுவென்' என்பதை மலைக்கும், கவலைக் கிழங்குக்கும் கூட்டிம உரைக்க. குறிஞ்சியும் முல்லையும்திரிந்து பாலையாம் ஆதலின் காட்டில் நீரில்லாத இடங்களில்'நீர் கொண்டுவந்து தருதற்கும்திறமை உடையவர்கள் இருத்தல் தேவை ஆதலின் அதுவும் என்னால் இயலும் என்றான் குகன். 'ஆல்'ஈற்றசை.*
*40*

***1993. திருஉளம்எனின், மற்று என்***
***சேனையும் உடனே கொண்டு,***
***ஒருவலென் ஒருபோதும்***
***உறைகுவென்; உளர் ஆனார்***
***மருவலர்எனின், முன்னே***
***மாள்குவென்; வசை இல்லேன்;***

*பொரு அரு மணி மார்பா!*
*போதுவென், உடன்' என்றான்.*

***'பொரு அரு மணி மார்பா!** - ஒப்பற்ற அழகிய மார்பினை உடையவனே!;* ***திரு உளம்எனின் -*** *உன் மனத்திற்கு உடன்பாடாக இருக்குமானால்;* ***மற்று என் சேனையும் உடனே கொண்டு-*** *நான் வருவதோடு அல்லாமல் என்னுடைய சேனைகளையும் கூட அழைத்துக் கொண்டு;* ***ஒருபோதும்-*** *எல்லாக் காலத்தும்;* ***ஒருவலென்-*** *நீங்காதவனாய்;* ***உறைகுவென் -*** *உன்னுடனேதங்குவேன்;* ***மருவலர் உளர் ஆனார் எனின் -*** *தீங்கு செய்யும் பகைவர்கள் யாரேனும்வருவார்கள் ஆயின்;* ***முன்னே மாள்குவென் -*** *உனக்கு முன்னே அவர்களுடன் போர்செய்து (அவர்களை அழித்து) நானும் இறந்துபடுவேன்;* ***வசை இல்லேன் -*** *(அடைக்கலம் புகுந்தவரைமாற்றானிடம் காட்டிக் கொடுத்தான் என்ற) பழிச் சொல்லுக்கு ஆளாகமாட்டேன்;* ***உடன்போதுவென் என்றான் -*** *உன்னுடனேயே வருவேன் என்று கூறினான்.*

*'மற்று' வினைமாற்று. நான் வருதல் அன்றிச் சேனையும் உடன் கொண்டு வருவேன் எனப் பொருள் படுதலின். மருவலரை அழித்து மாள்தலும் அழியாது முன்னே மாளுதலும்வகைக்கு இடனாகாமை உணர்க.* *41*

இராமன் குகனை அவன் இனத்தாருடன் இருக்கக் கட்டளையிடல்

***1994.*** ***அன்னவன் உரை கேளா,***
***அமலனும் உரைநேர்வான்;***
***'என் உயிர் அனையாய் நீ'***
***இளவல் உன் இளையான்; இந்***
***நன்னுதலவள் நின் கேள்;***
***நளிர் கடல் நிலம் எல்லாம்***
***உன்னுடையது; நான் உன் தொழில்***
***உரிமையின் உள்ளேன்.'***

***அமலனும்-*** *குற்றமற்றவனாகிய இராமனும்;* ***அன்னவன் உரைகேளா*** *- அந்தக்குகனது வார்த்தையைக் கேட்டு;* ***உரை நேர்வான் -*** *பதில் கூறுவானாகி;* ***'நீ என் உயிர்அனையாய் -*** *(குகனே!) நீ என் உயிரைப் போலச் சிறந்தவன்;* ***இளவல் உன் இளையான் -*** *தம்பி இலக்குவன் உன்தம்பியாவான்;* ***இந் நன்னுதலவள் நின் கேள் -*** *இவ் அழகிய நெற்றியை உடையாளாகிய சீதைஉன் கொழுந்தியாவாள்;* ***நளிர் கடல் நிலம் எல்லாம் -*** *குளிர்ந்த கடலாற் சூழப்பெற்ற இவ் உலகம் எல்லாம்;* ***உன்னுடையது -*** *உனதே யாகும்;* ***நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன் -*** *நான் உன்னுடைய ஏவல் தொழிலுக்குக் கட்டுப்படும் உரிமையில்இருக்கின்றவனாவேன்.*

*குகனைத் தனது சகோதரன் என்ற இராமன் அவ் உறவை மேலும் இக் கூற்றால் பலப்படுத்தினான் எனலாம். "ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது இரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து, மாழைமான் மடநோக்கு இன்தோழி உம்பி எம்பி என்று ஒழிந்திலை உகந்து, தோழன் நீ எனக்கு இங்கொழி என்ற சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்தி "என்று இந்நிகழ்ச்சியைத் திருமங்கையாழ்வார் கூறிய பாசுரம் கொண்டு (திவ்ய. 1418) அறிக. இதனையே பின்னர்ச் சீதை அசோகவனத்தில் 'ஏழை வேடனுக்கு'*

*எம்பி நின் தம்பி, நீ, தோழன்; மங்கை கொழுந்தி, எனச் சொன்ன வாழி நண்பினை உன்னி மயங்குவாள் ஆயினன் (5091.) என்று கம்பர் கூறியதும் காண்க. தானாளும் உலகம் எல்லாம் தன் சகோதரனுக்கும் அப்படியே உரியது என்று கருதுபவன் அண்ணல் இராமன் ஆதலின் இப்போது நான் வனவாசம் செய்யவேண்டியிருத்தலின் நீயே உலகம் ஆள்பவனாகவும் நின் ஏவல் தொழில் உரிமையில் நான் உள்ளேனாகவும் ஆயிற்று என்றானாம். பகவான் - பாகவதரிடையே சாதி ஏற்றத் தாழ்வுகள் பாராட்டப்படுவன அல்ல. குகனைக் குகப்பெருமாள் எனப்போற்றும் வைணவ மரபு நினைக. 42*

***1995.** ‘துன்பு உளதுஎனின் அன்றோ*
*சுகம் உளது? அது அன்றிப்*
*பின்பு உளது; “இடை, மன்னும்*
*பிரிவு உளது” என, உன்னேல்;*
*முன்பு உளெம், ஒரு நால்வேம்;*
*முடிவு உளது என உன்னா*
*அன்பு உள, இனி, நாம் ஓர்*
*ஐவர்கள் உளர் ஆனோம்;***

***‘துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது? -*** *துன்பம் உளதானால் அல்லவா சுகம்உண்டாகும்;* ***அது அன்றிப் பின்பு உளது -*** *அச்சுகம் இப்பிரிவாகிய துன்பத்துக்குப் பின்புஉறுதியாக உளது;* ***‘இடை மன்னும் பிரிவு உளது’ என உன்னேல் -*** *இடையே இப்படி நிலையான ஒருபிரிவு உண்டாகியுள்ளது என்று மனத்தில் கருதாதே;* ***ஒரு நால்வேம் முன்பு உளெம் -*** *இராமஇலக்குவ பரத சத்துருக்கனன் என்று ஒரு நான்கு சகோதரர்கள் முன்பிருந்தோம்;* ***முடிவு உளது எனஉன்னா அன்பு உள நாம் -*** *கடைபோயிற்று என்று கருதமுடியாது வளர்ந்து கொண்டே செல்லும் அன்பினை மிகவும் உடைய நாம்;* ***இனி ஓர் ஐவர்கள் உளரானோம் -*** *இனிமேல் (உன்னோடு) ஐந்து சகோதரர்கள் ஆக;* ***ஆனோம்-.*** *தன்னோடும் தம்பியோடும் சீதையோடும் குகனைப் பணித்ததோடன்றிப் பரதசத்துருக்கனர்களோடும் குகனைப் பணித்த தோழமை அறிந்து இன்புறத்தக்கது. துன்பத்திற்குப்பின்னர் இன்பம்; இப்பிரிவின் பின் ஓர் இன்பம் உண்டு ஆதலின் அவ் இன்பத்தைத் தருவதாகஇதனை நினைய வேண்டுமே அன்றித் துன்பமாக நினைத்தல் ஆகாது என்றானாம் - அன்பிற்கு முடிவுஇல்லை. அது மேலும் வளர்ந்து கொண்டே போகும்; எனவே, இச் சகோதரத்துவத்துக்கும் முடிவில்லைஎன்றானாம். ‘ஓர்’ உரை அசை. 43*

***1996.** ‘படர் உற உளன், உம்பி*
*கான் உறை பகல் எல்லாம்;*
*இடர் உறு பகை யா? போய்,*
*யான் என உரியாய் நீ;*
*சுடர் உ று வடி வேலாய்!*
*சொல் முறை கடவேன் யான்;*
*வடி திசை வரும் அந் நாள்,*
*நின்னுழை வருகின்றேன்.***

***'சுடர் உறு வடிவேலாய்!*** - ஒளி படைத்த கூரிய தீட்டப்பெற்ற வேலை உடைய குகனே; ***உம்பி கான் உறை பகல் எல்லாம்*** - உன் தம்பியாகிய இலக்குவன் வனத்தின்கண் நான்வசிக்கும் நாள்கள் எல்லாம்; ***படர் உற உளன்*** - (எனக்கு வருத்தம் நேராமல்) தான்அந்த வருத்தத்தைத் தாங்க என்னுடனே இருக்கின்றான்; ***நீ போய் யான் என உரியாய்*** - நீ உன் நாட்டிற்குச் சென்று நான் இருக்கும் ஆட்சி உரிமையில் இருந்து ஆட்சி புரிவாயாக; ***யான் வடதிசை வரும் அந்நாள்*** - நான் மீண்டு வடதிசை நோக்கி அயோத்திக்கு வரும்அக்காலத்தில்; ***நின்னுழை வருகின்றேன்*** - உன் இருப்பிடத்திற்கு வருகின்றேன்; ***சொல் முறை கடவென்*** - சொல்லிய பேச்சிலிருந்து மாற மாட்டேன்.'*

*'யான் என உரியாய்' நானிருக்குமிடத்தில் நீ இருக்க வேண்டும் என்பதற்காக நானே நீ,நீயே நான் என்றான் குகனிடம் இராமன். 'பகல்' என்றதாயினும் ஆண்டு என்பதாகக் கொள்க.'எண்ணிய சில நாளில்' (1984) என்பது போல.* ***44***

***1997. 'அங்கு உள கிளை காவற்கு***
***அமைதியின் உளன். உம்பி;***
***இங்கு உள கிளை காவற்கு***
***யார் உளர்? உரை செய்யாய்;***
***உன் கிளை எனது அன்றோ?***
***உறு துயர் உறல் ஆமோ?***
***என் கிளை இது கா, என்***
***ஏவலின் இனிது' என்றான்.***

***'உம்பி*** - உன் தம்பியாகிய பரதன்; ***அங்கு உள கிளை காவற்கு அமைதியின் உளன்***- அயோத்தியில் உள்ள குடிமக்களையும் சுற்றத்தையும் காப்பாற்ற வேண்டி அதற்குரியஆட்சிக் குணங்களோடு இருக்கின்றான்; (நீ என்னுடன் வந்துவிட்டால்) ***இங்கு உள கிளை காவற்குயார் உளர்? உரை செய்யாய்*** - சிருங்கிபேரத்தில் உள்ள சுற்றத்தையும் குடிகளையும் காப்பாற்ற யார் இருக்கின்றார்கள், சொல்வாயாக; (நீயும் நானும் ஒன்றான பிறகு) ***உன்கிளை எனது அன்றோ*** - உன்னுடைய சுற்றம் என் சுற்றம் அல்லவா?; ***உறு துயர் உறர் ஆமோ?***- மிக்க துன்பத்தை என் பிரிவால் எய்தலாமோ; ***என் கிளை இது என் ஏவலின் இனிது கா'***- என்னுடைய சுற்றமாகிய இவ்வேடுவர்களை என் கட்டளையால் இனிது காப்பாயாக;' ***என்றான் -.***

*உன் ஏவலின் நான் இருக்கின்றேன் என்று கூறிய இராமன் அதனையும் மனம் கொள்ளாது குகன்படும் அவதி கண்டு, 'நானே தலைவன் நீ என் ஏவல் வழி என் சுற்றமாகிய இவ்வேடுவர்களைக் காப்பாற்றி ஆட்சி செய்து இங்கே தங்குவாயாக' என்றான்; அவன் மறுக்கமாட்டாமைக்கு எடுத்துக்காட்டாகப் பரதனைக் கூறினான்.*
***45***

*குகன் விடைபெற்றுச் செல்ல மூவரும் வனத்துள் மேலும் செல்லல்*

***1998. பணி மொழி கடவாதான்,***
***பருவரல் இகவாதான்,***
***பிணி உடையவன் என்னும்***
***பிரிவினன், விடைகொண்டான்;***

**அணி இழை மயிலோடும்**
**ஐயனும் இளையோனும்**
**திணி மரம், நிறை கானில்**
**சேணுறு நெறி சென்றார்.**

***பணி மொழி கடவாதான்*** *- இராமன் இட்ட கட்டளை வார்த்தையை மீறாது;* ***பருவரல்இகவாதான்*** *- இராமனது பிரிவினால் ஏற்பட்ட துன்பமும் நீங்காது;* ***பிணி உடையவன்என்னும் பிரிவினன்*** *- நோயுற்றான் என்று சொல்லும்படியான பிரிவுத் துன்பத்தை உடையனாய்;* ***விடை கொண்டான்-*** *(குகன்) உத்தரவு பெற்றுச் சென்றான்;* ***அணி இழை மயிலோடும்ஐயனும் இளையோனும்-*** *அழகிய ஆபரணங்களை அணிந்த மயில் போல்பவளாகிய சீதையோடும்இராமனும் தம்பி இலக்குவனும்;* ***திணி மரம் நிறை கானில்-*** *வலிய பெரு மரங்கள்நிறைந்துள்ள காட்டில்;* ***சேண் உறு நெறி*** *- நெடுந் தொலையான வழியில்;* ***சென்றார்-*** *சென்றார்கள். இராமன் ஆணையை மீறாமல் துன்பத்தைத் தாங்கிக் குகன்செல்ல, மூவரும் காட்டில் நெடுந்தொலை சென்றனர். காட்டின் உள்ளே செல்லச் செல்லப்பெருமரங்கள் செறிந்திருக்கும் ஆதலின் 'திணி மரம் நிறை கானில்' எனவே, காட்டின் உள்பகுதியில் செல்வாராயினர் என்பது அறியப்படும். 46* வனம் புகு படலம்

*குகன் துணையால் கங்கையைக் கடந்து அதன் தென் கரை அடைந்த இராமன், சீதை இலக்குவன்ஆகியோருடன் வனத்திற் புகுந்த செய்தியைத் தெரிவிக்கும் பகுதி என்பது பொருள்.*

*கங்கையைக் கடந்தபின் இராமன் முதலியோர் காட்டு வழியில் செல்லுதலும், இனிய காட்டுவழியில் இராமன் சீதைக்குப் பல வகைக் காட்சிகளைக் காட்டிக்கொண்டு செல்லுதலும், மாலைநேரத்தில் சித்திரகூட மலை கண்ணுக்குத் தோன்றலும், அவ் வனத்தின்கண் தவம் செய்கின்ற பரத்துவாச முனிவன் இராமனை எதிர்கொள்ளுதலும், முனிவன் இராமனை வந்த காரணம் வினாவ - இராமன்கூறிய பதிலைக் கேட்டு மனம் வருந்திக் கூறுதலும், பரத்துவாச முனிவனது விருந்தோம்பலை இராமன் ஏற்றுக்கொள்ளுதலும், முனிவன் தன்னுடன் தங்கியிருக்குமாறு இராமனை வேண்ட - இராமன் தன்இயலாமையைத் தெரிவித்தலும், முனிவன் சித்திரகூட மலைக்குச் செல்லப் பணித்தலும், முனிவனிடம்விடைபெற்று யமுனைக்கரை அடைதலும், ஆற்றில் நீராடிக் கனி கிழங்கு உண்டு நீர் அருந்தி இளைப்பாறலும், இலக்குவன் தெப்பம் அமைத்து இருவரையும் அக்கரை சேர்த்தலும், மூவரும் பாலைநிலம் புகுதலும், இராமன் நினைவால் பாலை வெப்பம் தணிந்து மாறுதலும், பின்னர் மூவரும்சித்திரகூட மலையைக் காணுதலும் ஆகிய செய்திகள் இப் படலத்தின்கண் கூறப்பெறுகின்றன.*

*காட்டு வழியில் இராமன் சீதை இலக்குவனோடு செல்லுதல்*

*சந்தக் கலிவிருத்தம்*

***1999.*** **பூரியர் புணர் மாதர்**
**பொது மனம் என, மன்னும்**
**ஈரமும், 'உளது, இல்' என்று**

*அறிவு அரும் இளவேனில்,*
*ஆரியன் வரலோடும்,*
*அமுது அளவிய சீதக்*
*கார் உறு குறி மானக்*
*காட்டியது, அவன் எங்கும்.*

***பூரியர்*** *- அறிவிலராய கீழோர்;* ***புணர்*** *- சேர்கின்ற;* ***மாதர்*** *- விலைமகளிரின்;* ***பொதுமனம் என*** *- எல்லோர்க்கும் பொதுவாகிய மனம்போல;* ***மன்னும் ஈரமும், 'உளது இல்' என்று அறிவு அரும் இளவேனில்*** *- பொருந்தியஈரப்பசையும் உள்ளதோ இல்லதோ என்று அறியமுடியாத (கோடையாகிய) இளவேனிற் காலத்தே;* ***ஆரியன்*** *- இராமன்;* ***வரலோடும்*** *- வன நெறியில் வந்து சேர்ந்த அளவில்;* ***அவண் எங்கும்*** *- அவ்விடம் எல்லாவற்றிலும்;* ***அமுது அளவிய*** *- அமுதம் கலந்த;* ***சீதம்*** *- குளிர்ச்சியான;* ***கார் உறு குறி*** *- மேகம் வருகின்ற அடையாளத்தை; மான- பெருமை உற;* ***காட்டியது*** *- காண்பித்தது.*

*இராமன் காட்டுக்கு வந்ததனால் காட்டின் வெப்பம் தணிந்து மழை வருவதற்கானஅடையாளங்கள்தோன்றத் தொடங்கின என்றவாறாம். பொருட் பெண்டிர் மனம் வெளிக்கு அன்புள்ளது போல - அதாவது ஈரம் உள்ளது போலக் காட்டி, உள்ளே பொருளின்மேல் ஆசை தங்கி இருக்கும். அதுபோலவே இக் காடும் முதுவேனில்போல் வறட்சி உடையதாகவும் இல்லாமல், துளிர்விட்டு ஈரம் உள்ளது போலவும் உண்மையில் ஈரம் அற்றதாகவும் இளவேனிற் காலத்தில் உள்ளது என்றவாறாகும். "பொன் விலைப் பாவையர் மனமும்போல் பசையும் அற்றதே" (353) தாடகை வதைப் படலத்துப்பாவையின் தன்மையை முன்னரும் இவ் உவமையால் கூறினார்.* ***1***

***2000. வெயில், இள நிலவேபோல்,***
***விரி கதிர் இடை வீச,***
***பயில் மரம் நிழல் ஈன,***
***பனி புரை துளி மேகப்***
***புயல் தர, இள மென் கால்***
***பூ அளவியது எய்த,***
***மயிலினம் நடம் ஆடும்***
***வழி இனியன போனார்.***

***வெயில்*** *- சூரியன்;* ***விரி கதிர்*** *- பிரிந்த தன் கிரணங்களை;* ***இள நிலவே போல் இடைவீச*** *- இளமையான நிலவொளி போலத் தண்மையாக இடையிடையே வீசவும்;* ***பயில் மரம்*** *- (வனத்தில்) நெருங்கியுள்ள மரங்கள்;* ***நிழல் ஈன*** *- நிழலைத்தரவும்;* ***மேகப் புயல்*** *- மேக மழை;* ***பனி புரை துளிதர*** *- பனியை யொத்தகுளிர்ந்த சிறிய துளிகளைத் தரவும்;* ***இளமென் கால்*** *- இளைய மெல்லிய தென்றற்காற்று;* ***பூ அளவியது எய்த*** *- பூக்களின் நறுமணங்களோடு கலந்து வந்து அடையவும்;* ***மயில் இனம்நடம் ஆடும்*** *- மயிற்கூட்டங்கள் நடனம் ஆடுகின்ற;* ***இனியன வழி*** *- இனிமையாகிய வழிகளில்;* ***போனார்*** *- மூவரும் சென்றார்கள்.*

*வெயிலொளி நிலவொளிபோல வீசுதல், மரம் நிழல் தருதல், மேகம் சிறுநீர்த் திவலை சிந்தல், தென்றல் பூமணத்தோடு வீசுதல், மயில்கள் நடனம் ஆடுதல்ஆகியவற்றால் இவர்கள் செல்லும் வழிகள் களைப்புத் தராது இனியனவாயின.* *2 இராமன் சீதைக்கு வழியில் இனிய காட்சிகளைக் காட்டுதல்*

***2001.*** ***'மன்றலின் மலி கோதாய்!***
***மயில் இயல் மட மானே! -***
***இன் துயில் வதி கோபத்து***
***இனம் விரிவன எங்கும்,***
***கொன்றைகள் சொரி போதின்***
***குப்பைகள், குல மாலைப்***
***பொன் திணி மணி மானப்***
***பொலிவன - பல - காணாய்!***

***மன்றலின் மலி கோதாய்!*** *- மனத்தால் நிரம்பிய மாலை அணிந்தவளே!;* ***மயில்இயல் மட மானே!*** *- மயில் போன்ற சாயலை உடைய இளைய மான் அனையாளே!;* ***இன் துயில்வதி கோபத்து இனம் விரிவன எங்கும்*** *- இனிய தூக்கத்தில் உள்ள இந்திரகோபப்பூச்சிகளின் கூட்டங்கள் பரந்து கிடக்கும் எல்லா இடத்தும்;* ***கொன்றைகள் சொரி போதின்குப்பைகள்*** *- கொன்றை மரங்கள் சொரிந்த மலர்த் தொகுதிகள்;* ***குல மாலைப் பொன்திணிமணி மானப் பொலிவன பல*** *- சிறந்த மாலைகளின் பொன்னில் பதிக்கப்பட்ட மணிகளைப்போல் அழகுடையனவாகிய; காட்சிகள் பலவற்றையும்;* ***காணாய்*** *- பார்ப்பாயாக.*

*இந்திரகோபப் பூச்சி செந்நிறம் உடையது. இரத்தின மணிபோலும்; அடுத்துக் கொன்றைமலர் மஞ்சள் நிறம் உடையது ஆதலின் பொன்பெறும். இரண்டும் விரவி இருக்கின்ற வழிகள்இரத்தினக் கற்கள் அழுத்திய பொன் மாலை கிடப்பதுபோல உள்ளன என்றார். குப்பை என்பதுகுவியல்; இங்கு மலர்க் குவியல்.*
*3*

***2002.*** ***'பாண், இள மிஞிறு ஆக,***
***படு மழை பணை ஆக,***
***நாணின தொகு பீலி***
***கோலின நடம் ஆடல்,***
***"பூணியல்! நின சாயல்***
***பொலிவது பல கண்ணின்***
***காணிய" எனல் ஆகும்,***
***களி மயில் - இவை காணாய்!***

***பூண் இயல்*** *- அணிகளை இயல்பாக உடையவளே!;* ***களி மயில்*** *- களிப்புநிறைந்த மயில்கள்;* ***இள மிஞிறு பாண் ஆக*** *- இளைய வண்டு பாட்டுப் பாடும் பாணன்ஆகவும்;* ***படு மழை*** *- பொழிகின்ற மழையின் ஒலி;* ***பணை ஆக*** *- பறை ஒலியாகவும்கொண்டு;* ***நாணின*** *- வெட்கமுற்றனவாய்;* ***தொகுபீலி*** *- சுருக்கிக் கொண்ட தம் தோகை களை;*

**கோலின -** *விரித்து வளைத்தனவாய்;* **நடம் ஆடல் -** *நடனம் ஆடுதல்;* **நின சாயல் பொலிவது -** *உன்னுடைய சாயல் தம்மிடத்தே விளங்குவதை;* **பல கண்ணில் -** *தம்முடைய தோகையில் உள்ளபல கண்களால்;* **காணிய-** *காண்பதற்கு;* **எனல் ஆகும் -** *என்று சொல்லாம்படியுள்ள;* **இவை -** *இக் காட்சிகளை;* **காணாய் -.**

*தோகை சுருங்கி இருக்குங்கால் அதில் உள்ள கண்கள் வெளித் தோன்றா; விரித்தவழிகண்கள் தோன்றும் ஆதலின், ஆடும் மயில் தம் தோகைக் கண்களால் பிராட்டியின் சாயல்தம்மிடத்தே பொருந்தியுள்ளமையைப் பார்ப்பது போலும் என்று கூறினார்.* ***4***

***2003. 'சேந்து ஒளி விரி செவ் வாய்ப்***
***பைங் கிளி, செறி கோலக்***
***காந்தளின் மலர் ஏறிக்***
***கோதுவ, - கவின் ஆரும்***
***மாந் தளிர் நறு மேனி***
***மங்கை! - நின் மணி முன்கை***
***ஏந்தின எனல் ஆகும்***
***இயல்பின; இவை காணாய்!***

**கவின் ஆரும்-** *அழகு பொருந்திய;* **மாந்தளிர் நறுமேனி மங்கை-** *மாந்தளிர் போன்ற மணமும் நிறமும் கூடிய மேனியை உடைய சீதையே!;* **சேந்து ஒளி விரி -** *சிவந்து ஒளி விரிக்கின்ற;* **செவ்வாய் -** *சிவந்த வாயினை உடைய;* **பைங்கிளி -** *பசிய கிளி;* **கோலம் செறி -** *அழகு பொருந்திய;* **காந்தளின் மலர் ஏறிக் கோதுவ -** *காந்தள் மலரின்மேல் ஏறி அம் மலரைக் கோதுகின்றவை* **; நின் மணி முன்கை ஏந்தின எனல் ஆகும் இயல்பின -** *நின்னுடைய அழகிய முன்கையில் ஏந்திக் கொண்டிருக்கின்றதாகச்சொல்லப்பெறும் இயல்பினை உடைய;* **இவை -** *இக் காட்சிகளை;* **காணாய் -.**

*காந்தள் மலர் மகளிர் கைபோலும் ஆதலின் அம்மலர்மேல் ஏறி அம் மலரைக் கோதுகின்றகிளி, பிராட்டியின் முன் கைமேல் ஏறி அமர்ந்துள்ளது போல் காட்சி அளிப்பதாயிற்று.* ***5***

***2004. 'நெய்ஞ் ஞிறை நெடு வேலின்***
***நிறம் உறு திறம் முற்றிக்***
***கைஞ் ஞிறை நிமிர், கண்ணாய்! -***
***கருதின இனம் என்றே***
***மெய்ஞ் ஞிறை விரி சாயல்***
***கண்டு, நின் விழி கண்டு,***
***மஞ்ஞையும் மட மானும்***
***வருவன பல - காணாய்!***

**நெய்ஞ்ஞிறை நெடு வேலின் நிறம் உறுதிறம் முற்றி -** *நெய் பூசப்பெற்று நிரம்பியநீண்ட வேற்படையின் தன்மை நிரம்பிய ஆற்றல் பொருந்தி;* **கைஞ் ஞிறை நிமிர் கண்ணாய்!-** *கை அளவில் அடங்காது மேற்பட்டுச் செல்கின்ற கண்ணை*

*உடையவளே!;* ***மஞ்ஞையும் மடமானும்*** *- மயிலும் இளைய மானும்;* ***மெய்ஞ் ஞிறை விரிசாயல் கண்டும் -*** *உன் மேனியில் நிரம்பியுள்ள விரிந்த மென்மைத் தன்மையைப் பார்த்தும்;* ***நின் விழி கண்டும்-*** *உன் கண்களைப் பார்த்தும்;* ***இனம் என்று கருதின -*** *உன்னைத் தம் இனம் என்றுகருதினவாய்;* ***வருவன பல -*** *வருகின்றன வாகிய பலவற்றை;* ***காணாய் -.***

*நிறை - ஞிறை. போலி; தம் சாயல் சீதையிடம் இருத்தலால் மயில்கள் இனம் என்றுவந்தன. விழியைக் கண்டு தன் இனமான மான் என்று கருதி மான்கள் வந்தன. நிறம் உறு திறம் -மார்பை ஊடுருவிச் செல்லும் பேராற்றல் எனலும் ஆம். இங்கு ஆடவர்தம் நெஞ்சத்தை ஊடுருவிச் செல்லும் ஆற்றலாம். என்றே -ஏகாரம் தேற்றம்.*
***6***

***2005. 'பூ அலர் குரவோடும்***
***புடை தவழ் பிடவு ஈனும்***
***மா அலர் சொரி சூழல்,***
***துயில் எழு மயில் ஒன்றின்***
***தூவியின்' மணம் நாற,***
***துணை பிரி பெடை, தான் அச்***
***சேவலொடு உற ஊடித்***
***திரிவதன் இயல் காணாய்!***

***பூ அலர் குரவோடும் -*** *பூக்கல் மலர்ந்த குரா மரத்தினோடும்;* ***புடை தவழ் -*** *பக்கங்களில் பரவி வளர்கின்ற;* ***பிடவு ஈனும் -*** *பிடவ மரங்கள் உண்டாக்கிய;* ***மாஅலர் சொரி சூழல் -*** *பெரிய மலர்கள் விழுந்து கிடக்கின்ற சுற்றுப் புறங்களில்;* ***துயில் எழும் -*** *தூங்கி எழுந்த;* ***மயில் ஒன்றின் -*** *ஓர் ஆண் மயிலின்;* ***தூவி -*** *தோகை யானது;* ***இன் மணம் நாற*** *- இனிய மணம் வீச;* ***துணை பிரி பெடை தான் -*** *சேவலைப் பிரிந்த பெண்மயிலானது;* ***அச்சேவலொடு உற ஊடித் திரிவதன் இயல் -*** *அந்த ஆண்மயிலோடு (வேறு பெண் மயில் உறவு கொண்டதாகக் கருதி) மிகவும் ஊடல்கொண்டு மனம்மாறுபடும் தன்மையை;* ***காணாய்-.***

*குரா, பிடவ மலர்கள் விழுந்த இடத்தில் உறங்கி எழுந்த ஆண்மயிலின் உடல் மணத்தைவேறாகக் கருதிப் பெண்மயில் ஊடியது.* *7* ***2006. 'அருந்ததி அனையாளே!***
***அமுதினும் இனியாளே! -***
***செருந்தியின் மலர் தாங்கும்***
***செறி இதழ் வன சோகம்***
***பொருந்தின களி வண்டின்***
***பொலிவன, பொன் ஊதும்***
***இருந்தையின் எழு தீ ஒத்து***
***எழுவன; - இயல் காணாய்!***

***அருந்ததி அனையாளே! -*** *அருந்ததியை ஒத்தவளே!;* ***அமுதினும் இனியாளே! -*** *அமிழ்தத்தைக் காட்டிலும் இனியவளே!;* ***செருந்தியின் மலர் தாங்கும் -***

*செருந்திமலரைத் தாங்கிக்கொண்டுள்ள;* ***செறி இதழ் -*** *நெருங்கிய இதழ்களை உடைய;* ***வனசோகம் -*** *காட்டின் கண் உள்ள அசோகம் ஆனது;* ***பொருந்தின களி வண்டின் பொலிவன -*** *தம்மிடத்தே பொருந்தினவாய களிப்பு நிறைந்த வண்டுகளாற் பொலிவனவாகிய அவை;* ***பொன்னூதும் இருந்தையின் -*** *பொன்னை வைத்து ஊதுகின்ற பொற்கொல்லனது கரியில்;* ***எழுதீ ஒத்து எழுவது ஓர் இயல் -*** *மேல் எழுந்து எரிகின்ற நெருப்பை ஒத்துத் தோன்றுகின்ற ஓர் தன்மையை;* ***காணாய் -.***

*செருந்திப் பூ பொன்னாகவும் அதைத் தாங்கிய அசோக மலர் நெருப்பாகவும், அதனைச்சுற்றியுள்ள வண்டுகள் கரியாகவும் உவமை கொள்க. இருந்தை - கரி.*
***8***

***2007. 'ஏந்து இள முலையாளே!***
***எழுத அரு எழிலாளே!***
***காந்தளின் முகை கண்ணின்***
***கண்டு, ஒரு களி மஞ்ஞை,***
***'பாந்தள் இது' என உன்னிக்***
***கவ்விய படி பாரா,***
***தேம் தளவுகள் செய்யும்***
***சிறு குறுநகை - காணாய்!***

***ஏந்து இளமுலையாளே! -*** *(சாயாது) மேல் நிமிர்ந்துள்ள இளமையான அழகிய முலையினைஉடையாளே!;* ***எழுத அரு எழிலாளே -*** *ஓவியத்தில் எழுதுதற்கரிய அழகு படைத்தவளே!;* ***ஒருகளி மஞ்ஞை -*** *மயங்கிய ஒரு மயில்;* ***காந்தளின் முகை கண்ணில் கண்டு -*** *காந்தள்அரும்பைத் தன் கண்ணால் பார்த்து;* ***இது பாந்தள் என உன்னி -*** *இது பாம்பு என்று கருதி;* ***கவ்வியபடி பாரா -*** *கல்விக் கொண்ட தன்மையைப் பார்த்து;* ***தேன் தளவுகள்-*** *தேன் பொருந்திய முல்லை அரும்புகள்;* ***செய்யும் சிறு குறு நகை -*** *செய்கின்றஎள்ளும் புண்சிரிப்பினை;* ***காணாய் -.*** *காந்தள் முகையைப் பாம்பு என்று மயில் கவர, அது கண்டு முல்லை சிரிப்பதாகக் கூறியது. முல்லைஅரும்புகள் பற்களைப் போலும் ஆதலின் அம்முல்லை அரும்புகள் தோன்றிய காட்சியைப்சிரிப்பதாகத் தற்குறிப்பேற்றம் செய்தார். சிறு குறு நகை - சிறு என்பது இகழ்ச்சியையும், குறு என்பது புன் சிரிப்பு என்பதனையும் அறிவிக்க வந்தன. களி மஞ்ஞை என்றது போதை மிகுதியால்காந்தள் முகையைப் பாம்பெனமயங்கியது எனக் காரணம் கூறியவாறாம்.* ***9***

***2008. 'குன்று உறை வய மாவின்***
***குருளையும், இருள் சிந்திப்***
***பின்றினது எனல் ஆகும்***
***பிடி தரு சிறு மாவும்,***
***அன்றில பிரிவு ஒல்லா;***
***அண்டர்தம் மனை ஆவின்***
***கன்றொடு விளையாடும்***
***களியன பல -. காணாய்!***

***குன்று உறை வயமாவின் குருளையும் -*** *மலையில் வாழும் வலிமை உள்ள புலியின்குட்டியும்;* ***இருள் சிந்திப் பின்றினது எனல் ஆகும் பிடி தரு சிறு மாவும் -*** *இருள் கீழேசிதறிப் பின்னிக் கொண்டது என்னும்படியுள்ள கரிய பெண் யானை ஈன்ற சிறிய யானைக் குட்டியும்;* ***அண்டர்தம் -*** *இடையர்களது;* ***மனை -*** *வீட்டில் உள்ள;* ***ஆவின் கன்றொடு -*** *பசுக் கன்றோடு;* ***அன்றில -*** *மாறுபடாதனவாய்;* ***களியன -*** *களிப்புடையனவாய்;* ***விளையாடும் பல -*** *விளையாடுகின்ற பல உயிரினங்களையும்;* ***காணாய் -.***

*கரிய பிடி இருள் பின்னிப் பிணைந்திருத்தல் போலும். பிடி மண்ணில் உள்ளதாதலின்வானத்தில் பரவிய இருள் பூமியில் சிந்திப் பின்னியது போல என்றார். முனிவர் உறைவிடம்ஆதலின் இவை தம்முள் பகை இலவாய் வினையாடின என்க.*
***10***

***2009. 'அகில் புனை குழல் மாதே!***
***அணி இழை எனல் ஆகும்***
***நகு மலர் நிறை மாலைக்***
***கொம்புகள், நதிதோறும்***
***துகில் புரை திரை நீரில்***
***தோய்வன, துறை ஆடும்***
***முகில் இள முலையாரின்***
***மூழ்குவ பல - காணாய்!***

***அகில் புனை குழல் மாதே! -*** *அகிற் புகையால் மணம் ஊட்டிப் புலர்த்தப்பெற்றகூந்தலையுடைய பெண்ணே!;* ***அணி இழை எனல் ஆகும் -*** *அலங்காரமாகிய அணிகலன் என்று சொல்லும்படி பொருந்திய;* ***நகு மலர் -*** *பூத்த மலர்கள்;* ***நிறை-*** *நிறைந்த;* ***மாலை-*** *மலர்த் தொகுதியை உடைய;* ***கொம்புகள் பல -*** *பூங்கொம்புகள் பல;* ***துறை ஆடும் முகிழ் இள முலையாரின் -*** *நீர்த்துறையில் நீராடுகின்றஅரும்பிய இளமுலை உடைய மகளிர் போல;* ***நதிதோறும் -*** *ஆற்றிடங்களில் எல்லாம்;* ***துகில் புரை திரை நீரில் தோய்வன -*** *(வெண்) பட்டாடையை ஒத்த அலைகளை உடைய நீரில்படிந்து மூழ்குவனவற்றை;* ***காணாய் -***

*பூத்த மலர்த் தொகுதியுடைய கொம்புகள் அணி அணிந்த மகளிர் போல உள்ளன. இவற்றைமாலைகள் என்றும் பொன் அணிகலன் என்றும் கூறல் கவிமரபு. "கோங்கு அலரும் பொழில் மாலிருஞ்சோலையின் கொன்றைகள் மேல், தூங்கு பொன் மாலைகளோடு உடனாய் நின்று தூங்குகின்றேன்"(திவ்ய. 594.) என்பது காண்க.*
***11***

***2010. 'முற்றுறு முகை கிண்டி,***
***முரல்கில சில தும்பி,***
***வில் திரு நுதல் மாதே!***
***அம் மலர் விரி கோங்கின்***
***சுற்று உறு மலர் ஏறித்***
***துயில்வன, சுடர் மின்னும்***

**பொன் தகடு உறு நீலம்**
**புரைவன பல - காணாய்!**

**வில் திரு நுதல் மாதே!** - வில்லைப் போன்ற அழகிய நெற்றியை உடைய பெண்ணே!; **சில தும்பி** - சில வண்டுகள்; **அம் மலர் விரி கோங்கின்** - அழகிய மலர்கள்விரிந்துள்ள கோங்க மரத்தினது; **முற்றுறு முகை கிண்டி** - முற்றிய அரும்புகளைக் குடைந்து(தேன் உண்டு); **முரல்கில** - பாடாதனவாய்; **சுற்று உறு மலர் ஏறி** - வட்டமாகப் பொருந்திய மலரில் ஏறி; **துயில்வன பல** - உறங்குகின்றன பலவும்; **சுடர் மின்னும்** - ஒளிவிட்டு விளங்குகின்ற; **பொன் தகடு உறு**- பொன் தகட்டில் பொருந்திய; **நீலம் புரைவன**- நீல மணியை ஒத்துள்ளனவற்றை; **காணாய்-.**

முற்றுறு முகை - மலரும் பருவத்தரும்பு. அதனையே தேனீக்கள் குடைதல் இயல்பு. கோங்கமலர்பொன்னிறம் படைத்தது. கோங்க மலரில் உறங்கும் வண்டு பொன்னில் பதித்த நீலமணிபோல் உள்ளது. 12

2011. **'கூடிய நறை வாயில்**
**கொண்டன, விழி கொள்ளா**
**மூடிய களி மன்ன,**
**முடுகின நெறி காணா,**
**ஆடிய, சிறை மா வண்டு,**
**அந்தரின், இசை முன்னம்**
**பாடிய பெடை கண்ணா**
**வருவன பல - காணாய்!**

**சிறை மா வண்டு**- சிறகுகளை உடைய கரிய (ஆண்) வண்டு; **கூடிய நறை வாயில்கொண்ட** - மிக்க தேனை வாயிற் கொண்டன வாய்; **விழி கொள்ளா** - (அம்மயக்கத்தால்) விழி திறந்து பார்க்க மாட்டாதவையாய்; **மூடிய களி மன்ன** - கண்ணை மூடிக்கொள்ளுமாறு போதை பொருந்த; **முடுகின நெறி காணா** - விரைந்து (பறந்து)செல்லுதற்குரிய வழியைக் காணமாட்டாதனவாய்; **அந்தரின்** - குருடரைப்போல; **முன்னம்இசை பாடிய பெடை கண்ணா வருவன பல**- முன்னால் இசைபாடிச் செல்கின்ற பெண் வண்டைக்கண்ணாகக் கொண்டு வருவன பலவற்றை; **காணாய்-.**

குருடர் ஒலியின் மூலம் வழி அறிந்து சேறல் போல, முன்னால் பெண் வண்டுகள் பாடும் ஒலிகேட்டுத் தேன் குடித்து மயங்கிக் கண்திறவா ஆண் வண்டுகள் வழி அறிந்து சென்றன வாதலின்'பெடை கண்ணா' என்றார். 13

2012. **'கன்னியர் அணி கோலம்**
**கற்று அறிகுநர் என்ன,**
**பொன் அணி நிற வேங்கை**
**கோங்குகள், புகு மென் பூ,**
**அன்ன மென் நடையாய்! நின்**
**அளக நல் நுதல் அப்பும்**

*சின்ன மென் மலர் மானச்*
*சிந்துவ பல - காணாய்!*

***அன்னம் மென் நடையாய்! -*** *அன்னப் பறவை போன்ற மெல்லிய நடையை உடையவளே!;* ***பொன் அணி நிற வேங்கை, கோங்குகள் -*** *பொன் போன்ற அழகிய நிறம்படைத்த வேங்கைமரமும் கோங்க மரமும்;* ***கன்னியர் அணிகோலம் கற்று அறிகுநர் என்ன -*** *கன்னிப்பெண்கள் அணிகின்ற அழகுக் கலையைக் கற்றுப் பழகுபவர்களைப் போல;* ***புது மென் பூ -*** *புதிய மென்மையான பூக்களை;* ***நின் அளக நல் நுதல் அப்பும் -*** *உன்னுடைய கூந்தலோடு கூடிய நல்ல நெற்றியிலே அப்புகின்ற;* ***சின்னம் மென் மலர்மான-*** *விடு பூக்களாகிய மெல்லியமலரை ஒப்ப;* ***சிந்துவ பல-*** *சிதறுகின்ற பலவற்றையும்;* ***காணாய் -.***

*கோலம் செய்வாற் நெற்றியில் மலர் அப்புதல் வழக்கு.சின்னம் - விடு பூ. (உதிரிப் பூக்கள்.) கோங்கு, வேங்கை இரண்டும் பொன்னிறம் வாய்ந்த மலர்களை உடையவை. குழலில் வேங்கையும் கோங்கும் அணிவர் என்பதை, ''நின் குழல் வேங்கையம்போதொடு கோங்கம் விராய்'' என்பதனுள் (திருக்கோவையார். 205)காண்க.* ***14***

***2013.*** *'மணம் கிளர் மலர், வாச*
*மாருதம் வர வீச,*
*கணம் கிளர்தரு கண்ணம்,*
*கல்லிடையன, கானத்து'*
*அணங்கினும் இனியாய்! உன்*
*அணி வட முலை முன்றில்*
*சுணங்கினம் அவை மானத்*
*துறுவன - அவை காணாய்!*

***அணங்கினும் இனியாய்! -*** *தெய்வப் பெண்களைக் காட்டிலும் இனியவளே;* ***உன் அணிவடமுலை முன்றில் கணங்கினம் அவை மான -*** *உன்னுடைய முத்துவடம் அணிந்த முலைப் பரப்பில்உள்ள தேமல் திரளைப்போல;* ***வாச மாருதம் வர வீச -*** *வாசனைபொருந்திய தென்றற்காற்றுமிக வீச;* ***மணம் கிளர் மலர் -*** *மனம் மிக்கு விளங்கும் மலர்களின்;* ***கணம்கிளர்தரு கண்ணம் -*** *கூட்டமாக எழும்பிய மகரந்தப் பொடிகள்;* ***கானத்து -*** *காட்டில்;* ***கல் இடையன -*** *பாறைகளின் இடையில் உள்ளனவாய்;* ***துறுவன அவை -*** *நெருக்கமாகச் சிந்திக் கிடப்பனவற்றை;* ***காணாய் -.***

*மகரந்தப் பொடிக்குத் தேமலை உவமை யாக்கினார். முலைப்பரப்பில் தேமல் போலப் பாறைப்பரப்பில் கண்ணம் நெருங்கிக் கிடப்பன என்று கொள்க.*
***15***

***2014.*** *' "அடி இணை பொறைகல்லா"*
*என்றுகொல், அதர் எங்கும்,*
*இடை இடை மலர் சிந்தும்*
*இன மரம்? - இவை காணாய்!*
*கொடியினொடு இள வாசக்*

*கொம்புகள், குயிலே! உன்*
*துடி புரை இடை நாணித்*
*துவள்வன - அவை காணாய்!*

***குயிலே!*** - குறில் போன்ற குரல் உடையாளே!; **இனமரம்** - கூட்டமானமரங்கள்; **'அடி இணை பொறைகல்லா' என்று கொல்** - (உன்) கால்கள் காட்டு வழியில்நடத்தலைப் பொறுக்கமாட்டா என்று கருதிப் போலும்; **அதர் எங்கும் இடை இடை** - வழியிடைகளில் எல்லாம்; மலர்களைச் சிதறும்; **இவை காணாய் -; கொடியினொடு இள வாசக் கொம்புகள்-** கொடிகளோடு இளைய மலர் மணம் வீசும் பூங்கொம்புகள்; **உன் துடி புரை இடை நாணி** - உன்னுடைய துடிநடுவை ஒத்தஇடையைக் கண்டு வெட்கம் உற்று; **துவள்வன** - ஒசிந்து அசைவன; **அவை காணாய் -.**

*சீதையின் பாதங்கள் கல்லுறுத்தலினால் தாங்கமாட்டா என்று மரங்கள் வழியிடை மலர்சிந்துவதாகவும் - சீதையின் இடை கண்டு நாணிக் கொடிக் கொம்பு துவள்வதாகவும் கூறியதுதற்குறிப்பேற்றம். இவையிரண்டும் இயல்பாகக் காட்டில் நிகழும் நிகழ்ச்சிகளாம். கொடி,பூங்கொம்பு தனித்தனி இடைக்கு உவமையாம். துடி - உடுக்கை.* ***16***

***2015. 'வாள் புரை விழியாய்! உன்***
***மலர் அடி அணி மானத்***
***தாள் புரை தளிர் வைகும்***
***தகை ஞிமிறு - இவை காணாய் -!***
***கோள் புரை இருள் வாசக்***
***குழல் புரை மழை - காணாய்!***
***தோள் புரை இள வேயின்***
***தொகுதிகள் -அவை காணாய்!***

***வாள் புரை விழியாய்!*** - வாளை ஒத்த கண்களை உடையவளே!; **உம் மலர் அடி அணிமான** - உன்னுடைய மர் போன்ற பாதங்களில் அணிந்துள்ள அணிகலனை ஒப்ப; **தாள் புரைதளிர் வைகும்** - உன் அடியை ஒத்த தளிரிலே தங்கியுள்ள; **தகை ஞிமிறு** - அழகுடைய வண்டுகளாகிய; **இவை காணாய் - ; கோள் புரை இருள் வாசக் குழல் புரை மழை** - கொள்ளும்குற்றம் உடைய இருள் கொண்டதும்வாசனை பொருந்தியதுமான கூந்தலைப் போல உள்ள மழை மேகத்தை; **காணாய்-; தோள் புரை இள வேயின் தொகுதிகள் அவை** - (உன்) தோளை ஒத்த இளமையானமூங்கிலின் தொகுதிகளாகிய அவற்றை; **காணாய் -,**

*அடிபோன்ற தளிரில் அமர்ந்துள்ள வண்டுகள், மலர் போன்ற அடியில் அணிந்த அணிகலன்போன்றனவாம். எல்லாவற்றையும் தன்னுள்ளே கொண்டு மறைக்கும் தன்மை உடையது. ஆதலின், 'கோள்புரை இருள்' என்றார். புரை - குற்றம். வாள் புரை விழி, மலர் அடி - உவமையணி. தாள் புரை தளிர், குழல் புரை மழை, தோள் புரை வேய் - எதிர்நிலை யுவமையணி. 17*

***2016. 'பூ நனை சினை துன்றி,***
***புள் இடை இடை பம்பி,***

*நால் நிற நளிர் வல்லிக்*
*கொடி நவை இல பல்கி,*
*மான் இனம், மயில் மாலை,*
*குயில் இனம், வதி கானம் -*
*தீ நிகர் தொழில் ஆடைத்*
*திரை பொருவன - பாராய்!'*

***மான் இனம் -** மான் கூட்டங்கள்; **மயில் மாலை-** மயில் வரிசைகள்; **குயில் இனம் -** குயில் தொகுதிகள்; **வதி -** சஞ்சரிக்கின்ற; **கானம் -** இந்தக் காடானது; **பூ நனை சினை துன்றி -** பூவும் அரும்பும் உடைய கிளைகள்நெருங்கப்பெற்று; **நால் நிற நளிர் வல்லிக் கொடி -** பலவகை நிறமுள்ள குளிர்ந்தவல்லியென்னும் கொடிகள்; **நவை இல பல்கி -** குற்றம் இல்லாதன நிரம்பப் பெற்று; **தீ நிகர் -** நெருப்பை ஒத்த; **தொழில் -** சித்திரத் தொழில் செய்யப் பெற்ற; **ஆடைத் திரை -** திரைச் சீலையை; **பொருவன -** ஒத்திருப்பனவற்றை; **பாராய் -***

*பூங்கொடி, பறவை, பன்னிறக் கொடிகள் நிரம்பியிருத்தலின் காடு வண்ண வேலைப்பாடமைந்ததிரைச் சீலையை ஒத்தது என்க. "வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச், சித்திரச்செய்கைப் படா அம் போர்த்ததுவே, ஒப்பத்தோன்றிய உவ வனம்" (மணி. 3:167 -169) என்ற வரிகளை இதனோடு ஒப்புநோக்குக; 'தீ' என்பது புத்தி என்னும் பொருள்படும் வடசொல்லாகக்கொண்டு கூறுவார் உளர். அது 'நிகர்' என்னும் உவமைச் சொல்லோடு ஏலாமை அறிக. பெரிதும்செந்நிறம் படைத்த கானம் 'தீ' நிகர்ந்தது எனலே பொருந்துவதாம்.* ***18***

*இராமன் சித்திரகூட மலையைச் சீதைக்குக் காட்டுதல்*

***2017.** என்று, நல் மடவாளோடு*
*இனிதினின் விளையாடி,*
*பொன் திணி திரள் தோளான்;*
*போயினன் நெறி; போதும்*
*சென்றது குடபால்; 'அத்*
*திரு மலை இது அன்றோ?'*
*என்றனன்; 'வினை வென்றோர்*
*மேவு இடம்' எனலோடும்,*

***பொன் திணி திரள் தோளான் -** பொன் அணிகள் நெருங்கியுள்ள திரண்ட தோளினைஉடையவனாகிய இராமன்; **என்று -** இவ்வாறு கூறி; **நல் மடவாளோடு -** நல்லசீதையோடு; **இனிதினின் விளையாடி -** இனிமையாக விளையாடி; **நெறி போயினன் -** காட்டு வழியில் சென்றான்; (அந் நிலையில்) **போதும் -** சூரியனம்; **குடபால்சென்றது -** மேற்குத் திசையை அடைந்தது (மாலை நேரம் வந்தது); **'வினை வென்றோர் மேவு இடம்' -** வினைகளை வென்ற முனிவர்கள் தங்கியுள்ள இடமாகிய; **'அத் திருமலை இதுஅன்றோ' -** அந்தச் சித்திரகூட மலை இதுவல்லவா; **என்றனன் -** என்று (சீதையைப் பார்த்துக்) கூறினான்; **எனலோடும் -** அப்படிக் கூறிக்கொண்டிருந்த அளவில்....*

*'போது' என்பது காலம் என்னும் பொருள் உடையது ஆயினும் இங்கே 'குடபால் சென்றது' எனவருவதனை நோக்கிக் காலக் கடவுளாகிய சூரியனைக் குறித்தாகக் கொள்க. மாலை நேரம் வரவும்சித்திரகூடமாலை கண்ணுக்குத் தோன்றியது. அதைக் கண்டு காட்டிக் கூறிக்கொண்டிருந்தபோது பரத்துவாச முனி எதிர்ப்பட்டான் என மேல் முடியும்.* ***19***

பரத்துவாச முனிவன் இராமனை எதிர்கொள்ள வருதல்

***2018. அருத்தியின் அகம் விம்மும்***
***அன்பினன், 'நெடு நாளில்***
***திருத்திய வினை முற்றிற்று***
***இன்று' எனல் தெரிகின்றான்,***
***பரத்துவன் எனும் நாமப்***
***பர முனி, பல நோயின்***
***மருத்துவன் அனையானை,***
***வரவு எதிர்கொள வந்தான்.***

***பரத்துவன் எனும் நாமப் பரமுனி** - பரத்துவாசன் என்னும் பெயரை உடைய மேலானமுனிவன்; **அருத்தியின் அகம் விம்மும் அன்பினன்** - மகிழ்ச்சியினால் மனம்பூரிக்கின்ற அன்புடையவனாய்; **'நெடு நாளில் திருத்திய வினை இன்று முற்றிற்று' எனல்தெரிகின்றான்** - நீண்டநாளாக ஒழுங்குறச் செய்த தவம் இப்பொழுது பயனைத் தரும் நிலை அடைந்தது என்று நன்றாக ஆராய்ந்தறிகின்றவனாய்; **பல நோயின் மருத்துவன் அனையானை** - பிறவிப் பிணிக்கு மருத்துவனாக உள்ளவன்போல உள்ள இராமனை; **வரவு எதிர் கொள வந்தான்** - வருகையை வரவேற்க வந்தான்.*

*பரம் - மேல்; பரமுனி - மேலான முனி; யாவரினம் மேம்பட்ட முனிவன். 'பவ நோயின்மருத்துவன்' என்பதனை, 'எருத்துக் கொடி உடையானும் பிரமனும் இந்திரனும் மற்றும், ஒருத்தரும்இப்பிறவி யென்னும் நோய்க்கு மருந்து அறிவாரும் இல்லை, மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணாமறுபிறவி தவிரத், திருத்தி உன் கோயில் கடைபுகப் பெய்' (திவ்ய. 457.) என்பதை ஒப்புநோக்கி அறிக. இராமன் தன்னை அவதாரத்தால் மனிதனாக அறியினும் முனிவர்கள் அவனைப்பரம்பொருளாக உணர்தலின், 'நெடுநாளில் திருத்திய வினை இன்று முற்றிற்று' என்று பரத்துவாசன்கூறி மகிழ்ந்தானாம்.* ***20***

பரத்துவாச முனிவன் பண்பு நலன்

***2019. குடையினன்; நிமிர் கோலன்;***
***குண்டிகையினன்; மூரிச்***

***சடையினன்; உரி மானின்***
***சருமன்; நல் மர நாரின்***
***உடையினன்; மயிர் நாலும்***
***உருவினன்; நெறி பேணும்***

***நடையினன்; மறை நாலும்***
***நடம் நவில்தரு நாவான்;***

***குடையினன் -*** *குடை உடையவன்;* ***நிமிர் கோலன் -*** *உயர்ந்த தண்டத்தைஏந்தி இருப்பவன்;* ***குண்டிகையினன் -*** *கமண்டலம் உடையவன்;* ***மூரிச் சடையினன் -*** *மிகுந்த சடைமுடியை உடையவன்;* ***உரிமானின் சருமன் -*** *உரிக்கப்பெற்ற மான்தோலைப்போர்த்திருப்பவன் ;* ***நல் மர நாரின் உடையினன் -*** *அழகிய மரவுரி ஆடையை உடைவன் ;* ***மயிர் நாலும் உருவினன் -*** *மயிர் தொங்குகின்ற வடிவத்தை உடையவன்;* ***நெறி பேணும்நடையினன் -*** *நன்னெறியைப் பாதுகாக்கும் ஒழுக்கத்தை உடையவன்;* ***மறை நாலும் உருவினன் -*** *மயிர் தொங்குகின்ற வடிவத்தை உடையவன்;* ***நெறி பேணும் நடையினன் -*** *நன்னெறியைப்பாதுகாக்கும் ஒழுக்கத்தை உடையவன்;* ***மறை நாலும் நடம் நவில்தரு நாவான் -*** *நான்குவேதங்களும் எப்போதும் நடனம் இடுகின்ற நாக்கினை உடையவன்.*

*பரத்துவாச முனிவன் முந்நூறு வருஷ காலம் பிரமசரிய விரதம் பூண்டு வசித்தான் என்று வேதங்கூறுதற்கேற்ப இங்ஙனம் கூறினார். 'நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்குரிய'என்னும் தொல்காப்பியத்தின் படி (தொல். பொருள், மரபு. 71) அந்தண முனிவனாகிய பரத்துவாசனை வருணித்தாராம். உடம்பெல்லாம் மயிர் நிறைந்திருத்தலை 'மயிர் நாலும் உருவினன்'என்றார். வேதத்தில் நிறைந்த பாண்டித்யமும், எப்போது எங்கே எதைக் கேட்டாலும்சொல்லத்தகும் ஆற்றலும் உடையான் என்பது தோன்ற, 'மறைநாலும் நடம் நவில்தரு நாவான்'என்றார்.* ***21***

***2020. செந் தழல் புரி செல்வன்;***
***திசைமுக முனி செவ்வே***
***தந்தன உயில் எல்லாம்***
***தன் உயிர் என நல்கும்***
***அந்தணன்; 'உலகு ஏழும்***
***அமை' எனின், அமரேசன்***
***உந்தியின் உதவாமே,***
***உதவிடு தொழில் வல்லான்.***

***செந்தழல் புரி செல்வன்-*** *செந்நிறமுள்ள முத்தீயை வளர்த்தலையே செல்வமாகஉடையவன்;* ***திசை முக முனி -*** *பிரமதேவன்;* ***செவ்வே தந்தன உயிர் எல்லாம் -*** *நேர்மையுறப் படைத்த உயிர்களை எல்லாம்;* ***தன் உயிர் என நல்கும் அந்தணன் -*** *தன்உயிரைப் போலப் பாதுகாக்கின்ற அந்தணன்;* ***'உலகு ஏழும் அமை' எனின் -*** *ஏழுலகங்களையும் படைக்க என்றாலும் ;* ***அமரேசன் -*** *தேவ தேவனாகிய திருமால்;* ***உந்தியின் உதவாமே -*** *தனது திருநாபிக்கமலத்தின் மூலமாகப் படைக்க வேண்டாதபடி;* ***உதவிடு -*** *தனது சங்கற்பத்தாலேயேபடைக்கும்;* ***தொழில் வல்லான் -*** *தொழிலில் வல்லவன்.*

*பரத்துவாச முனிவனது அருளாற்றலும் தவ ஆற்றலும் கூறியவாறு. எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூணுதலே அந்தணர் இயல் என்ற குறளினைக் கம்பர் நினைவுக்கூர்கிறார்.* ***22***

*முனிவன், இராமன் வனம் வந்த காரணம் வினாவல்*

***2021. அம் முனி வரலோடும்,***
***அழகனும், அலர் தூவி***
***மும் முறை தொழுதான்; அம்***
***முதல்வனும், எதிர்புல்லி,***
***'இம் முறை உருவோ நான்***
***காண்குவது?" என உள்ளம்***
***விம்மினன்; இழி கண்ணீர்***
***விழி வழி உக நின்றான்***

***அம் முனி வரலோடும் -*** *அத்தகைய பரத்துவாச முனிவன் வந்த அளவில்;* ***அழகனும் -*** *இராமனும்;* ***அலர் தூவி -*** *மலர்களைத் தூவி;* ***மும்முறை தொழுதான் -*** *மூன்று முறைவணங்கினான்;* ***அம் முதல்வனும்-*** *அந்தப் பெரியோனாகிய பரத்துவாசனும்;* ***எதிர்புல்லி -*** *எதிரே தழுவி;* ***இம்முறை உருவோ நான் காண்குவது என-*** *இப்படிப்பட்டவேடத்தொடு கூடிய வடிவத்தையோ என் கண்ணால் காணும்படியானது என்று;* ***உள்ளம் விம்மினன் -*** *மனம் பொருமினனாய்;* ***இழி கண்ணீர் விழி வழி உக நின்றான் -*** *கீழ்நோக்கிஇறங்கும் கண்ணீர் கண்களின் வழிவந்து கீழே சிந்தும்படி நின்றான்.*

*அரச குமாரனின் தவக் கோலத்தைக் கண்டானாதலின் 'இம்முறை உருவோ நான் காண்பது' என்றுஇரங்கினான்.* *23*

***2022. 'அகல் இடம் நெடிது ஆளும்***
***அமைதியை; அது தீர,***
***புகல் இடம் எமது ஆகும்***
***புரையிடை, இது நாளில்,***
***தகவு இல தவ வேடம்***
***தழுவினை வருவான் என் -***
***இகல் அடு சிலை வீர! -***
***இளையவனொடும்?' என்றான்.***

***'இகல் அடு சிலை வீர! -*** *பகையை அழிக்கின்ற வில்லை ஏந்திய வீரனாகியஇராமனே!;* ***அகல் இடம் நெடிது ஆளும் அமைதியை-*** *பரந்த இவ்வுலகம் முழுமையும் நீண்ட காலம்ஆளக்கூடிய தகுதியை உடையாய்;* ***அது தீர -*** *அத்தன்மை நீங்க;* ***இது நாளில் -*** *இப்போது;* ***புகல் இடம் எமது ஆகும் புரை இடை -*** *எம்போன்ற தவமுனிவர்கள் தங்கிவாழும் இடமாகிய குகைகள் உள்ள வனத்திடத்து;* ***தகவு இல தவ வேடம் -*** *உன் தன்மைக்குப்பொருந்தாத தவத்தோர் வேடத்தை;* ***இளையவனொடும் -*** *இலக்குவனோடும்;* ***தழுவினை -*** *மேற்கொண்டவனாய்;* ***வருவான் என்? 'என்றான் -*** *வருவதற்கு என்ன காரணம்' என்றுவினவினான்.*

*அரச குமாரனாகிய இராமனுக்கு மரவுரியும் சடைமுடியும் ஆகிய தவக்கோலம் பொருந்தாது என்றுகருதி. 'தகவு இல தவ வேடம்' என்றார் என்பதாம். புரை - குகை.*

*முனிவர்கள் குகைகளில் தங்கிவாழ்தல் பழக்கம். அவை உள்ள இடம் காடு ஆகும்.*
***24***

இராமன் பதில் உரைத்தலும் முனிவன் அது கேட்டு வருந்தலும்

***2023. உற்று உள பொருள் எல்லாம்***
***உணர்வுற உரைசெய்தான்;***
***நல் தவ முனி, 'அந்தோ!***
***விதி தரு நவை!' என்பான்,***
***'இற்றது செயல் உண்டோ***
***இனி?' என, இடர் கொண்டான்,***
***'பெற்றிலள் தவம், அந்தோ!***
***பெரு நிலமகள்' என்றான்.***

***உற்று உள பொருள் எல்லாம் உணர்வுற உரை செய்தான் -*** *நடந்து முடிந்த செய்திகள்எல்லாவற்றையும் நன்கு புரிந்துகொள்ளும்படி முனிவனுக்கு இராமன் பதில் கூறினான் (அதுகேட்ட);* ***நல் தவ முனி-*** *நல்ல தவசியாகிய பரத்துவாசனும்;* ***'அந்தோ! விதிதரும் நவை என்பான் -*** *ஐயகோ! விதி தந்த துன்பம்' என்பானாய்;* ***'இனி -*** *இக்காலத்திலும்;* ***இற்றது செயல் உண்டோ -*** *இப்படிப்பட்ட செயல் நிகழுமா;* ***'என -*** *என்று;* ***இடர்கொண்டான் -*** *மிக்க துன்பம் கொண்டு;* ***'பெரு நிலமகள் -*** *பெரிய பூதேவியானவள்;* ***தவம் பெற்று இலள் அந்தோ! 'என்றான் -*** *உன்னைப் பெறுதற்குத் தவம் செய்து இருந்தும்உன்னால் ஆளப்படுதற்கு அத்தவம் இல்லாதவள் ஆனாள் ஐயோ!' என்றான்.*

*'விதி தரும் நவை' என்றது நடந்த நிகழ்ச்சிகளின் தவறு தசரதன். கைகேயி மாட்டுஅன்று. விதியால் விளைந்தது என்றவாறாம். முன்னர் 'மைந்த! விதியின் பிழை' என்றுஇலக்குவனுக்கு இராமன் கூறியதனை (1734) இங்குக் கருதுக. அரசுக் செல்வத்தை நீத்துத் தவக்கோலம் கொண்டு வனம் புகுந்த இராமன் செயலில் வியப்பினைத்தெரிவித்தது 'இற்றது செயல் உண்டோ' என்பது. இராமன் வனம் புகுந்ததால் உலகுக்கு ஏற்பட்டஇழப்பைக் குறித்தது. 'பெற்றிலள் தவம் பெருநிலமகள்' என்பது, 'பெற்றிலள்' என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு 'தவம் செய்தாள் இல்லை' என்று உரைப்பினும் அமையும்.* ***25***

***2024. ' " துப்பு உறழ் துவர் வாயின்***
***தூய் மொழி மயிலோடும்***
***அப்பு உறு கடல் ஞாலம்***
***ஆளுதி கடிது" என்னா,***
***ஒப்பு அறும் மகன் உன்னை,***
***"உயர் வனம் உற ஏகு" என்று,***
***எப் பரிசு உயிர் உய்ந்தான்***
***என் துணையவன்? என்றான்.***

***'என் துணையவன் -*** *என் நண்பனாகிய தயரதன்;* ***ஒப்பு அறும் மகன் உன்னை-*** *உவமை சொல்ல முடியாத மகனாகிய உன்னை;* ***துப்பு உறழ் துவர் வாயின் தூய்மொழிமயிலோடும் -*** *பவளத்தை ஒத்த செந்நிறமான வாயினை உடைய தூய மொழிகளைப் பேசும் மயிலனைய சாயலை உடைய சீதையோடும்;* ***அப்பு உறு கடல் ஞாலம் -*** *நீர் பொருந்திய கடலாற் சூழப்பெற்ற உலகத்தை;* ***கடிது ஆளுதி -*** *விரைவாக ஆள்வாயாக;* ***என்னா -*** *என்று கூறி;* ***'உயர் வனம் உற ஏகு' என்று -*** *(உடனே) மரங்கள் உயர்ந்துள்ள காட்டுக்குச் சேரச்செல்என்று கூறி;* ***எப் பரிசு -*** *எவ்வாறு;* ***உயிர் உய்ந்தான் -*** *உயிருடன் வாழ்பவன்ஆனான்;'* ***என்றான்-.***

*நாளையே பட்டாபிஷேகம் என்று கூறி, உடனே 'கான் ஏகு' என்றதை நினைத்து இவ்வாறுகூறப்பட்டது. இவ்வாறு உன்னை வனம் அனுப்பிய பிறகும் தயரதனால் எவ்வாறு உயிர் வாழமுடிந்தது? என்றானாம் - தயரதன் இறந்த செய்தி இராமன் அறியாததாதலின் பரத்துவாசன் அதனை அறிந்திலன் ஆயினும் தன்துணையவனைப் பற்றிய பரத்துவாசனது அனுமானம் பொய்யாகாமை 'எப் பரிசுஉயிர் உய்ந்தான்' என்னும் கூற்றில் புலனாதல்காண்க.* ***26***

*முனிவனது ஆசிரமத்திற்கு இராமன் முதலியோர் செல்லுதல்*

***2025. 'அல்லலும் உள' இன்பம்***
***அணுகலும் உள அன்றோ?***
***நல்லவும் உள; செய்யும்***
***நவைகளும் உள; அந்தோ!***
***இல்லை ஓர் பயன் நான்***
***இன்று இடர் உறும் இதின்' என்னா,***
***புல்லினன், உடனே கொண்டு***
***இனிது உறை புரை புக்கான்.***

***'அல்லலும் உள இன்பம் அணுகலும் உள அன்றோ? -*** *துன்பமும் இன்பமும் வாழ்க்கையில் மாறி மாறி வந்து சேருதல் உண்டு அல்லவா?;* ***நல்லவும் உள செய்யும் நவைகளும்உள; அந்தோ! -*** *நாம்செய்யும் நல்வினைகளும் உள்ளன; தீவினைகளும் உள்ளன. ஐயோ!(அவற்றின் பயனே இன்ப துன்பங்கள்) ஆகவே;* ***நான் இன்று இடர் உறும் இதின் ஓர் பயன்இல்லை -*** *நான் இன்று துன்பப்படுகின்ற இதனால் ஒரு பயனும் இல்லை;'* ***என்னா -*** *என்றுமுனிவன் கூறி;* ***புல்லினன் -*** *இராமனைத் தழுவியவனாய்;* ***உடனே கொண்டு -*** *சேரஅழைத்துக் கொண்டு;* ***இனிது உறை புரை புக்கான் -*** *தான் இனிதாகத் தங்கி யுள்ளதாகிய தவச்சாலையிற் புகுந்தான்.*

*அவரவர் செய்யும் நல்வினை தீவினைகளுக்கேற்ப விதிவழி இன்ப துன்பங்கள் விளையும். ஆதலின், இராமா! நீ வனம் புகுந்தது கருதி நான் வருந்துவதில் பயன் ஏதும் இல்லை என்றுபரத்துவாசன் கூறினான்.* ***27***

*முனிவன் விருந்தோம்புதல்*

***2026. புக்கு, உறைவிடம் நல்கி,***
***பூசனை முறை பேணி,***

***தக்கன கனி காயும்***
***தந்து, உரைதரும் அன்பால்***
***தொக்க நல்முறை கூறி,***
***தூயவன் உயிர்போலும்***
***மக்களின் அருள் உற்றான்;***
***மைந்தரும் மகிழ்வு உற்றார்.***

***புக்கு -*** *தவச்சாலையில் புகுந்து;* ***உறைவிடம் நல்கி -*** *அவர்கள் தங்குதற்குரிய இடத்தைத் தந்து உபசரித்து;* ***தக்கன கனி காயும் தந்து -*** *உண்ணத்தக்கனவாகிய காய் கனிகளையும் கொடுத்து;* ***உரைதரும் அன்பால்*** *-பாராட்டத்தகுந்த அன்போடு;* ***தொக்க நல் முறை கூறி -*** *கூடிய நல்ல உபசாரவார்த்தைகளைச் சொல்லி;* ***தூயவன் -*** *தயரதனது;* ***உயிர் போலும்*** *- உயிர்போலச் சிறந்த;* ***மக்களின் -*** *பிள்ளைகளினிடத்து;* ***அருள் உற்றான்*** *- அருளைச்செய்தான்;* ***மைந்தரும் மகிழ்வு உற்றார் -*** *முனிவனது உபசரிப்பில் இராமலக்குவர்களும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.*

*சீதை இராமனுள் அடங்கியவள் ஆதலின் மைந்தர் என்றார். தூயவன் பரத்துவாசனும்ஆம்.*

***28*** *முனிவன் தன்னுடன் தங்கியிருக்குமாறு இராமனை வேண்டுதல்*

***2027. வைகினர் கதிர் நாறும்***
***அளவையின் மறையோனும்,***
***'உய்குவெம் இவனோடு யாம்***
***உடன் உறைதலின்' என்பான்,***
***செய்தனன் இனிது எல்லாம்;***
***செல்வனை முகம் முன்னா,***
***'கொய் குல மலர் மார்ப!***
***கூறுவது உளது' என்றான்;***

***வைகினர் -*** *(மூவரும்) தங்கினர்;* ***கதிர் நாறும் அளவையின் -*** *சூரியன்தோன்றும் வைகறைப் போதின்கண்;* ***மறையோனும் -*** *பரத்துவாச முனிவனும்;* ***'இவனோடுயாம் உடன் உறைதலின் உய்குவெம்' என்பான் -*** *'இவ் இராமனோடு யாம் சேரத் தங்கப்பெறுதலின் நற்கதி பெறுவோம்' என்று கருதுபவனாய்;* ***எல்லாம் இனிது செய்தனன் -*** *இராமனுக்கு வேண்டுவ எல்லாம் இனிமையாகச் செய்து;* ***செல்வனை முகம் முன்னா -*** *இராமனைமுகம் நோக்கி;* ***'கொய் குல மலர் மார்ப! -*** *கொய்த கூட்டமான மலர்களை அணிந்தமார்பினை உடையாய்!;* ***கூறுவது உளது' -*** *(உன்னிடத்தில்) யான் கூற வேண்டுவது உளது;* ***என்றான் -.***

*முன்னுதல் - கருதுதல் என்னும் பொருள் பெறும். இங்க 'நோக்கி' என்றதாம்.*

***29***

*கலிநிலைத்துறை*

***2028. ‘நிறையும், நீர், மலர், நெடுங் கனி,***
***கிழங்கு, காய் கிடந்த’***
***குறையும் தீயவை; தூயவை***
***குறைவு இல; எம்மோடு***
***உறையும் இவ் வழி, ஒருங்கினில்***
***உயர் தவம் முயல்வார்க்கு***
***இறையும், ஈது அலாது இனியது ஓர்***
***இடம் அரிது; இன்னும்,***

*‘**நிறையும் நீர் -** நீர் நிரம்பியுள்ளது; **மலர், நெடுங்களி, கிழங்கு, காய் கிடந்த -** பூக்களும், பெரும்பழங்களும், கிழங்குகளும், காய்களும் உள்ளன; **தீயவை குறையும் -** தீவினைகளும் போய்விடும்; **தூயவை குறைவு இல -** நற் செயல்களுக்குயாதொரு குறைவும் இல்லை; **இவ் வழி** - இவ்விடத்தில்; **எம்மொடு உறையும் -** எம்மோடு நீங்களும் வசியுங்கள்; **ஒருங்கினில் உயர்தவம் முயல்வார்க்கு -** மன ஒருமையால் மிக உயர்ந்த தவத்தைச் செய்கிறவர்களுக்கு; **இறையும்** - தங்குதற்கு இடம்; ஈது அலாது இனியது ஓர் இடம் அரிது’ - இது வல்லாமல் இனிமையான வேறு ஓர் இடம் கிடைத்தல்அரிதாகும்; **இன்னும் -** மேலும்....*

*தவம் செய்வார்க்கு உணவு வகைகள், மலர், நீர் முதலியன நிரம்பியிருத்தல்,தீச்செயல்களுக்கு இடமின்மை, நற்செயல் விளைதல், மன ஒருமைக்கு வேண்டிய அமைதிச் சூழல்இத்தனையும் கூடியிருத்தலின் இது மிகச் சிறந்த இடம் என்றான் முனிவன். இறுத்தல் - தங்குதல்; இணை - தங்கும் இடம்.*
***30***

***2029. ‘கங்கையாளொடு கரியவள்,***
***நாமகள், கலந்த***
***சங்கம் ஆதலின், பிரியலென்;***
***தாமரைச் செங்கண்***
***அம் கண் நாயக! அயனுக்கும்,***
***அரும் பெறல் தீர்த்தம்;***
***எங்கள் போலியர் தரத்தது அன்று;***
***இருத்திர் ஈண்டு’ என்றான்.***

*‘**கங்கையாளொடு -** கங்கா நதியுடனே; **கரியவள் -** யமுனையும்; **நாமகள்-** சரஸ்வதி நதியும்; **கலந்த -** கூடிய; **சங்கம் -** கூடல் (பிரயாகை); **ஆதலின் -** ஆகையால்; **பிரியலென் -** இதை விட்டு நீங்காமல் இருக்கின்றேன்; **தாமரைச் செங்கண் அம் கண் நாயக! -** தாமரை போலும் சிவந்த கண்களைப் பெற்றுள்ள அருளுடையஇராமனே; **அயனுக்கும் -** பிரம தேவனுக்கும்; **அரும் பெறல் தீர்த்தம் -** கிடைத்தற்கரிய (புண்ணிய) தீர்த்தமாகும்; **எங்கள் போலியர் தரத்தது அன்று -** எம்போன்ற முனிவர்களது தன்மையில் அடங்குவது அன்று இதன் பெருமை; **ஈண்டு இருத்திர்’ -** இங்கேயே நீங்களும் இருப்பீர்களாக;’ **என்றான் -.***

*கங்கையும் யமுனையும் கட்புலனுக்கு எட்டாமல் சரசுவதி நதியும் கூடிய திரிவேணி சங்கமம் என்னும் பிரயாகை விசேட தீர்த்தமாகும். தீர்த்த மகிமை கூறிஇராமனைத் தங்க வேண்டினான்.*

*இராமன் அங்குத் தங்க இயலாமை கூறுதல்*

***2030. பூண்ட மா தவன், அம் மொழி***
***விரும்பினன் புகல,***
***'நீண்டது அன்று இது நிறை புனல்***
***நாட்டுக்கு' நெடு நாள்,***
***மாண்ட சிந்தைய! இவ் வழி***
***வைகுவென் என்றால்,***
***ஈண்ட யாவரும் நெருங்குவர்'***
***என்றனன் இராமன்.***

***பூண்ட மாதவன் -** மேற்கொண்ட தவத்தை உடைய பரத்து வாசன்; **அம்மொழி -** மேற் சொல்லிய வார்த்தைகளை; **விரும்பினன் புகல -** அன்பொடு கூற; **இராமன்-; நெடுநாள் மாண்ட சிந்தைய! -** நீண்ட நாளாகத் தவத்தின் மேற்சென்ற' பெருமை பெற்றமனத்தினை உடைய முனிவ!; **இது -** இந்த இடம்; **நிறை புனல் நாட்டுக்கு -** நிறைந்த நீர்வளம் உடைய எனது கோசல நாட்டுக்கு; **நீண்டது அன்று -** நெடுந்தொலைவில் உள்ளது அன்று; **இவ் வழி -** இவ் விடத்தில்; **வைகுவென் என்றால் -** தங்கியிருப்பேனாயின்; **யாவரும் -** கோசல நாட்டு மக்கள் யாவரும்; **ஈண்ட -** விரைவாக; **நெருங்குவர் -** என்னை வந்து அடைந்துவிடுவார்கள்;' **என்றனன் -.***

*நாட்டுக்கு மிக அருகில் தங்கினால் நாட்டு மக்கள் அடிக்கடி வருவர்; ஆதலின் அது தன்தவத்திற்கும் இடையூறாகும்; முனிவர்களின் கடமைகளுக்கும் இடையூறாகும் என்று புலப்படுத்திமறுத்தான் இராமன். 32*

*முனிவன் கூறிய அறிவுரை*

***2031. 'ஆவது உள்ளதே; ஐய! கேள்;***
***ஐ - இரண்டு அமைந்த***
***காவதப் பொழிற்கு அப் புறம்***
***கழிந்தபின், காண்டி;***
***மேவு காதலின் வைகுதிர் -***
***விண்ணினும் இனிதால்;***
***தேவர் கைதொழும் சித்திர***
***கூடம் என்று உளதே.'***

***'ஐய! -** இராமனே!; **கேள் -** கேட்பாயாக; **ஆவது உள்ளதே -** நீ சொல்லியது உண்மையே ஆகும்; **ஐ இரண்டு அமைந்த காவதப் பொழிற்கு? -** பத்துக் காததூரம் உள்ள இச் சோலைக்கு; **அப்புறம் கழிந்தபின் -** அப்பால் சென்ற பிறகு; **தேவர் கைதொழும் சித்திர கூடம் என்று உளது -** தேவர்களும் வணங்கக்கூடிய சித்திர*

*கூடம்என்று பெயர் பெற்ற மலை உள்ளது;* ***விண்ணினும் இனிது -*** *தேவர் உலகத்தினும் இனிமையானது;* ***மேவு காதலின் வைகுதிர் -*** *பொருந்திய அன்போடு அவ்விடத்தில் தங்கியிருப்பீர்.'*

*இராமன் கூறியது உண்மையே என்பதை 'ஆவது உள்ளதே' என்று கூறி முனிவன் ஏற்றுக் கொண்டான்.அதனால், மேலும் வற்புறுத்தவில்லை. 'ஏ' இரண்டும் தேற்றம். 33 முனிவன் பால் விடைபெற்று மூவரும் யமுனைக்கரை சேர்தல்*

***2032. என்று காதலின் ஏயினன்***
***அடி தொழுது ஏத்தி,***
***கொன்றை வேய்ங் குழல்***
***கோவலர் முல்லை, அம் குடுமி***
***சென்று செங் கதிர்ச்***
***செல்வனும் நடு உற, சிறு மான்***
***கன்று நீர் நுகர்***
***காளிந்தீ எனும் நதி கண்டார்.***

***என்று காதலின் ஏயினன் -*** *என்று கூறி அன்போடு (அவர்களை வழியனுப்பின முனிவனடைய;* ***அடி தொழுது ஏத்தி -*** *திருவடிகளை வணங்கித் துதித்து; (மூவரும் வழிக் கொண்டு);* ***கொன்றை வேய்ங் குழல் கோவலர் முல்லை -*** *கொன்றை; மூங்கில் ஆகியவற்றால் ஆகிய குழலை உடைய இடையர்களது முல்லை நிலத்தையும்;* ***அம் குடுமி -*** *அழகிய மலைச் சிகரத்தையும்;* ***சென்று -*** *கடந்து போய்;* ***செங்கதிர்ச் செல்வனும் நடு உற -*** *செந்நிறமானகதிர்களை உடைய சூரியனும் உச்சியை அடைய (நண்பகற் போதில்);* ***சிறுமான் கன்று -*** *சிறிய மான்குட்டி;* ***நீர் நுகர் -*** *தண்ணீர் அருந்துகின்ற;* ***காளிந்தி எனும் நதிகண்டார் -*** *யமுனை என்னும் நதியினைக் கண்டார்கள்.*

*'அம் குடுமி சென்று செங்கதிர்ச் செல்வனும் நடுஉற' என்பதனை, சூரியனும் அழகிய உச்சிநடுவைச் சென்று அடைய எனப்பொருள் உரைத்தலும் ஒன்று. கோவலர் கொன்றை, மூங்கில்முதலியவற்றால் குழல் செய்து ஊதுவர். நீண்ட கொன்றைப் பழத்தைத் துருவித் துளையிட்டுக் குழல்செய்தல் வழக்கமாம். காளிந்தி - யமுனையின் மறுபெயர், கருமை நிறம் உடையது என்பதாம். 34*

*யமுனையில் மூவரும் நீராடி உணவு அருந்தல்*

***2033. ஆறு கண்டனர்; அகம் மகிழ்ந்து***
***இறைஞ்சினர்; அறிந்து,***
***நீறு தோய் மணி மேனியர்***
***நெடும் புனல் படிந்தார்;***
***ஊறும் மென் கனி கிழங்கினோடு***
***உண்டு, நீர் உண்டார்;***
***'ஏறி ஏகுவது எங்ஙனம்?'***
***என்றலும், இளையோன்,***

***நீறு தோய் மணிமேனியர்*** *- வழி நடந்ததால் புழுதி படிந்த அழகிய உடம்பினைஉடையவர்;* ***ஆறு கண்டனர் -*** *யமுனை யாற்றைக் கண்டு;* ***அகம் மகிழ்ந்து -*** *மன மகிழ்ச்சி அடைந்து;* ***இறைஞ்சினர் -*** *வணங்கி;* ***அறிந்து -*** *செய்ய வேண்டிய கடன் முறைகளை உணர்ந்து;* ***நெடும்புனல் படிந்தார்-*** *மிக்க நீரிலே மூழ்கி எழுந்து;* ***கிழங்கினோடு ஊறு மென்கனி உண்டு -*** *கிழங்குடனேசுவை மிகுதியுள்ள மெல்லிய பழங்களையும் உண்டு;* ***நீர் உண்டார் -*** *தண்ணீர் பருகினர்;* ***'ஏறி ஏகுவது எங்ஙனம்' என்றலும் -*** *'யாற்றைக் கடந்து அக்கரை செல்வது எவ்வாறு?' என்று இராமன் கூறுதலும்;* ***இளையோன் -*** *இலக்குவன்*

*யமுனை யாற்றில் நண்பகல் நீர்மூழ்கி வழிபாடு செய்து உணவு கொண்டு நீர் உண்டவர்யாற்றைக் கடந்து அக்கரை செல்வது எவ்வாறு என்று சிந்தித்த அளவில் இலக்குவன் பின்வருமாறுசெய்தான் என அடுத்த பாட்டில் முடியும்.*
***35***

*இலக்குவன் தெப்பம் அமைத்து இருவரையும் அக்கரை சேர்த்தல்*

***2034. வாங்கு வேய்ங் கழை துணித்தனன்;***
***மாணையின் கொடியால்,***
***ஓங்கு தெப்பம் ஒன்று அமைத்து,***
***அதன் உம்பரின், உலம்போல்***
***வீங்கு தோள் அண்ணல்***
***தேவியோடு இனிது வீற்றிருப்ப,***
***நீங்கினான், அந்த நெடு நதி,***
***இரு கையால் நீந்தி,.***

*(இளையோன்)* ***வாங்கு வேய்ங்கழை துணித்தனன் -*** *வளையும் தன்மையுள்ள மூங்கிற்கழிகளை வெட்டி;* ***மாணையின் கொடியால் -*** *மானைக் கொடிகளைக் கொண்டு;* ***ஓங்குதெப்பம் ஒன்று அமைத்து -*** *உயர்ந்த தெப்பம் ஒன்றைக் கட்டி;* ***அதன் உம்பரில் -*** *அதன்மேல்;* ***உலம் போல் வீங்க தோள் அண்ணல் -*** *திரண்டு உருண்ட கல்லைப் போலப் பருத்த தோள்களை உடைய இராமன்;* ***தேவியொடு இனிது வீற்றிருப்ப -*** *சீதாபிராட்டியுடனேஇனிமையாகத் தங்கியிருப்ப;* ***அந்த நெடு நதி -*** *அந்தப் பெரிய யமுனை நதியை;* ***இருகையால் நீந்தி -*** *தன் இரு கையாலும் நீந்தி;* ***நீங்கினான் -*** *கடந்தான்.*

*தெப்பத்தைத் தள்ள வேண்டும் ஆதலின் இலக்குவன் அது செய்தான் என்பார் நீந்திக்கடந்தான் என்றார்.* ***36***

***2035. ஆலை பாய் வயல் அயோத்தியர்***
***ஆண்தகைக்கு இளையான்***
***மாலை மால் வரைத் தோள்***
***எனும் மந்தரம் திரிய,***
***காலை வேலையைக் கடந்தது,***
***கழிந்த நீர் கடிதின்;***

**மேலை வேலையில் பாய்ந்தது,**
**மீண்ட நீர் வெள்ளம்.**

***ஆலை பாய் வயல்*** *- கரும்பாலையிலிருந்து கருப்பஞ்சாறு பாய்கின்ற வயல்களை உடைய;* ***அயோத்தியர் ஆண்தகைக்கு இளையான்*** *- அயோத்திநகரத்தில் உள்ளார்க்கு ஆண்களிற்சிறந்தவனாகிய இராமனுக்குத் தம்பியாய இலக்குவன்;* ***மாலை மால்வரைத் தோள் எனும் மந்தரம் திரிய*** *- மாலை அணிந்த பெரிய மலை போன்ற தோளாகிய மந்தரமலையானது மாறி மாறிநீரைத்தள்ள;* ***கழிந்த நீர்*** *- கையால் தள்ளப்பட்ட நீரானது;* ***காலை வேலையைக்கடிதின் கடந்தது*** *- சூரியன் உதிக்கும் காலைக் கடலாகிய கீழ்க்கடலை விரைவாகக் கடந்து அப்பால் சென்றது;* ***மீண்ட நீர் வெள்ளம்*** *- தெப்பத்தால் மீண்டுசென்ற நீர்ப்பெருக்கு;* ***கடிதின் மேலை வேலையின் பாய்ந்தது*** *- விரைவாக மேற்குத் திசையில் உள்ள கடலிற்பாய்ந்து சென்றது.*

*கையால் தள்ளிய நீர் கீழ்க்கடலைக் கடக்க, தெப்பத்தால் விடுபட்ட நீர் மேற் கடலைஅடைந்தது என்றவாறாம். 'கடிதின்' என்பதனை இரண்டுக்கும் கூட்டுக.*
*37*

*பின்னர் ஒரு பாலை நிலத்தை அடைதல்*

***2036. அனையர், அப் புனல் ஏறினர்;***
***அக்கரை அணைந்தார்;***
***புனையும் வற்கலைப் பொற்பினர்***
***நெடு நெறி போனார்;***
***சினையும் மூலமும் முகடும்***
***வெந்து, இரு நிலம் தீய்ந்து,***
***நினையும் நெஞ்சமும் சுடுவது ஓர்***
***நெடுஞ் சுரம் நேர்ந்தார்.***

***புனையும் வற்கலைப் பொற்பினர்*** *- அணிந்து. கொண்டுள்ள மரவுரியாலாகிய அழகியஆடையுடைய அவர்கள்;* ***அனையர்*** *- அப்படிப்பட்டவர்களாய்;* ***ஆப்புனல் ஏறினர்*** *- அந்த யமுனை நீரைக் கடந்தார்;* ***அக்கரை அணைந்தார்*** *- எதிர்க்கரையைச்சென்றடைந்தார்கள்;* ***நெடு நெறி போனார்*** *- நீண்ட வழியைக் கடந்து சென்று;* ***சினையும் மூலமும் முகடும் வெந்து*** *- கிளைகளும் வேறும், உச்சியும் தீய்ந்து;* ***இரு நிலம்தீய்ந்து*** *- பெரிய நிலம் கருகி;* ***நினையும் நெஞ்சமும் சுடுவது ஓர் நெடுஞ் சுரம்*** *- நினைக்கின்ற மனமும் சுடுவதாகிய ஒரு பெரிய பாலை நிலத்தை;* ***தேர்ந்தார்*** *- அடைந்தார்கள். 'வற்கலைப் பொற்பினர் அனையர்' - எனக் கூட்டினும் அமையும். மூலம் என்பது கிழங்கு, அது வேரின்கண் உள்ளது; ஆதலின் வேர் என உரைக்கப்பட்டது. முகடு - மரத்தினது உச்சி, பூ, தளிர், காய், கனி இவை உள்ள பகுதி யாம்.* *38*

*இராமன் நினைவால் பாலை மாறிக் குளிர்தல்*

***2037. 'நீங்கல் ஆற்றலள் சனகி' என்று,***
***அண்ணலும் நினைந்தான்;***

***ஓங்க வெய்யவன், உடுபதி***
***எனக் கதிர் உகுத்தான்;***
***தாங்கு வெங் கடத்து உலவைகள்***
***தழை கொண்டு தழைத்த***
***பாங்கு வெங் கனல்; பங்கய***
***வனங்களாய்ப் பரந்த;***

***அண்ணலும் -*** *இராமனும்;* ***'சனகி -*** *சீதை;* ***நீங்கல் -*** *இந்தக் காட்டைக் கடத்தற்கு;* ***ஆற்றலள்' -*** *வல்லமை உடையவளல்லள்;* ***என்று-; நினைந்தான் -*** *(நினைந்த அளவிலேயே);* ***ஓங்கு வெய்யவன் -*** *வெப்பத்தால் உயர்ந்தசூரியன்;* ***உடுபதி என -*** *விண்மீன்களுக்குத் தலைவனான சந்திரனே என்னும்படி;* ***கதிர்உகுத்தான் -*** *தன் ஒளியைத் தண்மையாகச் சிந்தினான்;* ***வெம் தாங்கு கடந்து -*** *வெம்மையைத் தாங்கியுள்ள காட்டில்;* ***உலவைகள் -*** *காய்ந்து போன மரங்கள்;* ***தழை கொண்டு தழைத்து -*** *தழை உடையவாய்த் தழைத்தன;* ***வெங்கனல் பாங்கு*** *- கொடியநெருப்புப் போன்ற பக்கங்கள் எல்லாம்;* ***பங்கய வனங்களாய்ப் பரந்த -*** *தாமரைக்காடாகப் பரவின.*

*பிராட்டியின் மென்மை கருதியும் பாலையின் வெம்மை கருதியும் இராமன் நினைத்தானாக, பாலை சோலையாக மாறியது என்றார். இது முன்னர்த் தாடகை வதைப்படலத்துக் கோசிக முனிவன்இராமலக்குவர்கள் பாலை வெம்மையைத் தாங்கும் பொருட்டு இரு மந்திரங்களை அவர்களுக்கு உபதேசித்தான் என்று கூறவாலும், நினைத்த அளவில் அங்கும் 'கொழுங்கனல் எரியும் வெஞ்சுரம்,தெள்ளு தண் புனலிடைச் சேறல் ஒத்தது' (357.) என்று கூறலானும்அறிக.* ***39***

***2038. வறுத்து வித்திய அனையன***
***வல் அயில் பரல்கள்,***
***பறித்து வித்திய மலர் எனக்***
***குளிர்ந்தன; பசைந்த;***
***இறுத்து எறிந்தன வல்லிகள்***
***இளந் தளிர் ஈன்ற;***
***கறுத்த வாள் அரவு எயிற்றினூடு***
***அமுது உகக் களித்த;***

***வறுத்த வித்திய அனையன வல் அயில் பரல்கள் -*** *நெருப்பில் வறுத்து விதைக்கப்பட்டன போன்ற கொடிய கூர்மையான பரற்கற்கள்;* ***பறித்து வித்திய மலர் எனக்குளிர்ந்தன -*** *பிடுங்கி விதைத்த மலர்களைப் போலக் குளிர்ச்சி அடைந்தன;* ***பசைந்த-*** *ஈரம் உடையவாயின;* ***இறுத்து எறிந்தன வல்லிகள் -*** *ஒடிக்கப்பட்டு எறியப்பட்ட கொடிகள்;* ***இளந் தளிர் ஈன்ற -*** *இளமையான தளிரைத் தந்தன;* ***கறுத்த வாள் அரவு -*** *சீறிய கொடிய பாம்பு;* ***எயிற்றினூடு அமுது உகக் களித்த -*** *பற்களின் இடையே இருந்துஅமுதம் சிந்தச் சீற்றம் நீங்கி மகிழ்ச்சி அடைந்தன.*

*பரற்கற்கள் மலராக, காய்ந்த கொடிகள் தளிர் ஈன, பாம்பு நஞ்சு தராமல் அமுதம் சித்தஇவ்வாறு பாலை மாறியது என்பதாம்.* ***40***

***2039. குழுமி மேகங்கள் குமுறின,***
***குளிர் துளி கொணர்ந்த;***
***முழு வில் வேடரும், முனிவரின்***
***முனிகிலர், உயிரை;***
***தழுவி நின்றன, பசி இல,***
***பகை இல், தணிந்த,***
***உழுவையின் முலை மான் இளங்***
***கன்றுகள் உண்ட;***

**மேகங்கள் குழுமிக் குமுறின -** *மேகங்கள் கூட்டமாய் வந்து சப்தமிட்டு;* **குளிர்துளி கொணர்ந்த -** *குளிர்ந்த மழைத்துளியை மண்ணுக்குக் கொண்டு தந்தன;* **முழுவில்வேடரும் -** *இலக்கணத்தால் நிரம்பிய வில்லை உடைய வேடர்களும்;* **முனிவரின் உயிரைமுனிகிலர் -** *தவத்தோர்களின் உயிரைக் கோபித்துத் தீங்கு செய்தாரில்லை;* **மான்இளங் கன்றுகள் -** *மானின் இளைய குட்டிகள்;* **தழுவி நின்றன. பசி இல, பகை இல தணிந்தஉழுவையின் முலை-** *தம்மைத் தழுவி நின்றவனாகிய பசியும் பகையும் இல்லாது தணிந்த புலிகளின்முலையை;* **உண்ட -** *உண்டன.*

*பகை நீங்கி உயிரினங்கள் நட்பாயின என்பதாம்.* ***41***

***2040. கல் அளைக் கிடந்து அகடு வெந்து***
***அயர்கின்ற கதழ் பாம்பு,***
***அல்லல் உற்றில, அலை புனல்***
***கிடந்தன அனைய;***
***வல்லை உற்ற வேய், புற்றொடும்***
***எரிவன, மணி வாழ்***
***புல் எயிற்று இளங் கன்னியர்***
***தோள் எனப் பொலிந்த;***

**கல் அளைக்கிடந்து -** *மலைக்குகையிலே தங்கி;* **அகடு வெந்து -** *வயிறுதீய்ந்து;* **அயர்கின்ற -** *சோர்கின்ற;* **கதழ் பாம்பு -** *சீற்றம் உடைய பாம்பு;* **அல்லல் உற்றில -** *(இப்பொழுது) துன்பம் அடைய வில்லை;* **அலை புனல் கிடந்தன அனைய-** *அலை வீசும் தண்ணீரில் கிடப்பதைப் போல உள்ளன வாயின;* **வல்லை உற்ற வேய் -** *பெருங்காட்டில் முளைத்த மூங்கில்;* **புற்றொடும் எரிவன -** *தாம் இருந்த புற்றோடும்எரிந்து போயின (இப்போது);* **மணி வாழ் புல் எயிற்று இளம் கன்னியர் -** *முத்துமணி வாழ்கின்ற சிறிய பற்களை உடைய வேட்டுவப் பெண்களின்;* **தோள் எனப் பொலிந்த -** *தோள்களைப் போலச் செழிப்புடைய வாயின.*

*வல்லை - காடு . மணி என்பது இங்கு முத்து. முத்துப் போல் தங்கியுள்ள பற்களை உடைய எனஉரைக்க.* ***42***

***2041. படர்ந்து எழுந்த புல்,***
***பசு நிறக் கம்பளம் பரப்பிக்***
***கிடந்த போன்றன; கேகயம்***

***தோகைகள் கிளர,***
***மடந்தைமார் என, நாடகம்***
***வயின்தோறும் நவின்ற;***
***தொடர்ந்து பாணரின் பாங்கு இசை***
***முரன்றன தும்பி;***

**படர்ந்து எழுந்த புல்** - *தரைமீது பரவித் தோன்றிய புற்கள்,* **பசுநிறக்கம்பளம் பரப்பிக் கிடந்த போன்றன** - *பச்சை நிறக் கம்பளம் ஒன்றை விரித்துப்போட்டாற் போல இருந்தன;* **கேகயம்** - *மயில்கள்;* **தோகைகள் கிளர** - *பீலிகல்அசைய;* **மடந்தைமார் என** - *பெண்களைப் போல;* **வயின் தொறும்** - *பக்கங்களில்எல்லாம்;* **நாடகம் நவின்ற** - *நடனம் பழகின;* **தும்பி** - *வண்டுகள்;* **தொடர்ந்து** - *(மயிலின் நடனத்தைத்) தொடர்ந்து;* **பாணரின்** - *இசைப் பாணர்களைப் போல;* **பாங்கு இசை முரன்றன** - *இதமான இசையை ஒலித்தன.*

*பச்சைக் கம்பளம் பரப்பினதுபோல் புற்கள் படந்துள்ளன. மயில் நடனம் ஆட, வண்டுஇசைபாட வழி இனிதாயிற்று என்பதாம். 43* ***2042. காலம் இன்றியும் கனிந்தன***
***கனி; நெடுங் கந்தம்,***
***மூலம் இன்றியும் முகிழ்த்தன,***
***நிலன் உற முழுதும்;***
***கோல மங்கையர் ஒத்தன,***
***கொம்பர்கள்; - இன்பச்***
***சீலம் அன்றியும், செய் தவம்***
***வேறும் ஒன்று உளதோ?***

**கனி** - *பழங்கள்;* **காலம் இன்றியும்** - *தாம் பழுக்க வேண்டிய காலம் இல்லாத போதும்;* **கனிந்தன** - *பழுத்தன;* **நெடுங் கந்தம்** - *பெரிய கிழங்குகள்;* **மூலம் இன்றியும்** - *தாம் தோன்றுதற்குரிய வேர் இல்லாமலும்;* **நிலன் உற முழுதும்முகிழ்த்தன** - *மண்ணில் பொருந்த முழுதும் தோன்றின;* **கொம்பர்கள்** - *பூங்கொம்புகள்;* **கோல மங்கையர் ஒத்தன** - *அழகுடைய பெண்களை ஒத்தவையாய்ப் பூத்துவிளங்கின;* **இன்பச் சீலம் அன்றியும் செய்தவம் வேறும் ஒன்று உளதோ?** - *இன்பத்தைத் தருதற்குரிய நல்ஒழுக்கமே அல்லாமல் செய்யக் கூடிய தவம் வேறு ஒன்றும் இருக்கின்றதா?*

*மாலை வெம்மை மாறியதற்குக் காரணம் இராமலக்குவர்களது சீலமே அன்றி வேறில்லை.நல்லொழுக்கம் உடையார்க்கு எல்லாம் வாய்க்கும் என்பது கருத்து. 44*

***2043. எயினர் தங்கு இடம் இருடிகள்***
***இருப்பிடம் ஏய்ந்த;***
***வயின் வயின்தொறும், மணி நிறக்***
***கோபங்கள் மலர்ந்த;***
***பயில் மரம்தொறும், பரிந்தன***
***பேடையைப் பயிலும்***

**குயில் இரங்கின; குருந்தம் நின்று**
**அரும்பின முருந்தம்.**

**எயினர் தங்கு இடம் -** வேடர்கள் தங்கும் குறிச்சிகள்; **இருடிகள் இருப்பிடம்ஏய்ந்த -** தவமுனிவர்களது தவச்சாலையைப் போல ஆயின; **வயின் வயின்தொறும் -** பக்க இடங்களில் எல்லாம்; **மணி நிறக் கோபங்கள் மலர்ந்த -** செம்மணி போன்றநிறமுடைய இந்திர கோபப் பூச்சிகள் தோன்றின; **பயில் மரம் தொறும் -** நெருங்கியுள்ளமரங்களில் எல்லாம்; **பரிந்தன பேடையைப் பயிலும் -** தம்மைப் பிரிந்து இரங்கினவாயபெண்குயில்களை அழைக்கின்ற; **குயில் -** ஆண்குயில்கள்; **இரங்கின -** இரங்கிக்கூவின; **குருந்தம் -** குருந்த மரங்கள்; **முருந்தம் -** மயிலிறகின் அடிபோல; **நின்று அரும்பின -** அரும்புகளைத்தந்தன.

முருந்து - மயிலிறகின் அடி. அது குருந்த மரத்து அரும்புக்கு உவமை. பயிரும் என்றிருத்தல் சிறப்பு; சங்க நூல்களில் இதுவே சொல். *45*

*2044.* **பந்த ஞாட்புறு பாசறை,**
**பொருள்வயின், பருவம்**
**தந்த கேள்வரை உயிர் உறத்**
**தழுவினர், பிரிந்த**
**கந்த ஓதியர் சிந்தையின்**
**கொதிப்பது -அக் கழலோர்**
**வந்த போது, அவர் மனம் எனக்**
**குளிர்ந்தது - அவ் வனமே!**

**அவ்வனம்** - அந்தக் காடு; **பந்த ஞாட்பு உறு -** பிணிப்புடைய போர்க்களத்தில் பொருந்திய; **பாசறை -** பாசறைக் கண்ணும்; **பொருள் வயின் -** பொருளைத் தேடும் இடத்தும்; **பருவம் தந்த -** பிரிந்து சென்று 'இன்ன காலத்தில்வருவேன்' என்று காலம் குறித்துச் சென்ற; **கேள்வரை -** தம் கணவரை; **உயிர் உறத்தழுவினர் பிரிந்த -** முன்பு உயிர் பொருந்தத் தழுவியவராய்ப் பிரிந்து இருக்கின்ற; **கந்த ஓதியர் -** மணம் வீசும் கூந்தலை உடைய மகளிர்; **சிந்தையின் -** மனம்போலக்; **கொதிப்பது -** கொதிக்கும் தன்மை வாய்ந்தது; (இப்போது) **அக் கழலோர் வந்த போது-** அந்த வீரக் கழலை அணிந்த (பிரிந்து சென்ற) காதலர் மீண்டு வந்த போது; **அவர் மனம் எனக் குளிர்ந்தது -** அந்த மகளிர் மனம் போலக் குளிர்ச்சி அடைந்தது.

பாலையின் வெம்மைக்குப் பரிந்த மகளிரின் உள்ளக் கொதிப்பையும், குளிர்ச்சிக்குச் கூடிய மகளிரின் உள்ளத் தண்மையையும் உவமைப்படுத்தினார். வெப்பக் கொடுமையால் முல்லைதிரிந்து பாலையாகும் என்ற புலனெறி, இங்கே பாலை திரிந்து முல்லையானதாக வடிவுகொண்டது. *46*

மூவரும் சித்திரகூட மலையைக் காணுதல்

*2045.* **வெளிறு நீங்கிய பாலையை**
**மெல்லெனப் போனார்,**
**குளிரும் வான் மதிக் குழவி, தன்**

***சூல் வயிற்று ஒளிப்ப,***
***பிளிறு மேகத்தைப் பிடி எனப்***
***பெரும் பளைத் தடக் கை***
***களிறு நீட்டும் அச் சித்திர***
***கூடத்தைக் கண்டார்.***

***வெளிறு நீங்கிய பாலையை -*** *(அம் மூவரும்) குற்றம் நீங்கிய அப்பாலை நிலத்தை;* ***மெல்லெனப் போனார் -*** *மெல்லக் கடந்து சென்றார்கள்;* ***குளிறும் வான் -*** *ஒலிக்கின்ற விண்ணிலே உள்ள;* ***மதிக் குழவி -*** *சந்திரனாகிய குழந்தை(இளஞ்சந்திரன்);* ***தன் சூல் வயிற்று ஒளிப்ப -*** *தன்னுடைய நீர்க்கருப்பம் உற்றவயிற்றிலே மறைந்து கொள்ள;* ***பிளிறு மேகத்தை -*** *இடிக்கின்ற மேகத்தை;* ***பிடி என-*** *பெண் யானை எனக் கருதி;* ***களிறு -*** *ஆண் யானையானது;* ***பெறும் பனைத் தடக்கை -*** *தன்னுடைய பெரிய பனைமரம் போன்ற நீண்ட கையை;* ***நீட்டும் -*** *(வானத்தை நோக்கி)நீட்டுகின்றதாகிய;* ***சித்திர கூடத்தைக் கண்டார் -*** *சித்திரகூட மலையைக்கண்டார்கள்.*

*பாலையின் குற்றம் வெம்மையாம். அஃது இப்போது இல்லை ஆதலின் 'வெளிறுநீங்கியபாலை' ஆயிற்று. பிறைமதி மறைந்த கார் மேகத்தைத் தன் சூலுற்ற பிடி என்று கருதி ஆண் யானை கைநீட்டும் என்று சித்திரகூட மலையின் வளமும் உயர்ச்சியும் கூறினார். 47*

## சித்திரகூடப் படலம்

*சித்திரகூட மலையில் இராமபிரான் தங்கியிருந்து நோன்பு செய்தலைத் தெரிவிக்கும் பகுதிஎன்பது பொருள்.*

*இராமன் இலக்குவனோடும் சீதையோடும் சித்திரகூடத்துக்கு வந்து சேர்கிறான்.சித்திரகூடத்தின் இயற்கை வளங்களைச் சீதைக்குக் கண்டு காட்டி மகிழ்கின்றான். அம்மலையில்உள்ள அருந்தவ வேதியர் இராமனைக் காண வருகிறார்கள். அவர்களை வணங்கி அவர்தம் விருந்தினன்ஆகிறான். கதிரவன் மறைய, மாலை நேரம் வருகிறது, மாலை வழிபாடுகளைச் சீதையோடு இராமன்குடிபுகுகின்றான். சாலை அமைத்த இலக்குவனது பேரன்பும் திறமையும் கண்டு இராமன் மனம்நெகிழ்ந்து வருந்திப் பாராட்டுகிறான். அதற்குப் பதில் கூறுகின்ற இலக்கு வனை இராமன்தேற்றுகிறான். சித்திரகூடத்தில் விரதம் ஏற்று இனிது இருக்கின்றான் என்கின்ற செய்திகள்இப்படலத்துள் கூறப்பெறுகின்றன.*

*இராமன் சீதைக்குச் சித்திரகூட மலையின் இயற்கை அழகுகளைக் காட்டி மகிழ்தல்*

*கலிநிலைத்துறை*

***2046. நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்து,***
***ஒரு நெறி நின்ற***
***அனகன், அம் கணன், ஆயிரம்***
***பெயருடை அமலன்,***
***சனகன் மா மடமயிற்கு அந்தச்***
***சந்தனம் செறிந்த***
***கனக மால் வரை இயல்பு எலாம்***
***தெரிவுறக் காட்டும்.***

***நினையும் -*** *(எல்லாராலும்) நன்கு மதிக்கப்படுகின்ற;* ***தேவர்க்கும் -*** *தேவர்களுக்கும்;* ***நமக்கும் -*** *சாமானியர்களாகிய நமக்கும்;* ***ஒத்து -*** *ஒரு தன்மைப்பட்டு;* ***ஒரு நெறி நின்ற -*** *சம நிலையில் நிற்கின்ற;* ***அனகன் -*** *குற்றம் இல்லாதவனும்;* ***அம்கணன் -*** *அழகிய (அருளால் நிறைந்த) கண்களை உடையவனும்;* ***ஆயிரம் பெயர் உடை அமலன் -*** *ஆயிரம் திருநாமங்களைப் பெற்றுள்ள இயல்பாகவே பாசங்களில்நீங்கியவனும் ஆகிய இராமன்;* ***சனகன் மா மடமயிற்கு -*** *சனகன் மகளாகிய பெருமையுடைய இளமை வாய்ந்த மயில் போலும் சாயலள் ஆகிய சீதைக்கு;* ***சந்தனம் செறிந்த -*** *சந்தன மரங்கள் நெருங்கியுள்ள;* ***அந்தக் கனக மால் வரை -*** *அந்தப் பொன் மயமான பெரிய சித்திரகூட மலையினது;* ***இயல்பு எலாம் -*** *தன்மை நலங்கள் எல்லாவற்றையும்;* ***தெரிவு உற -*** *விளங்கும்படி;* ***காட்டும் -*** *காண்பிப்பான் ஆயினன்.*

*'நினையும்' என்பதற்கு எப்பொழுதும் தன்னையே நினைந்து கொண்டுள்ள என்று பொருள் கோடல் சிறப்பு. தன்னை இடையறாது நினையும் நித்யசூரிகளாய தேவர்களுக்கும், எப்பொழுதும் நினையாது ஒரோவழி நினையும் மக்களாகிய நமக்கும்*

*தனது சில குணத்தாலே ஒரு நீர்மையுடையவனாய் நித்ய விபூதியிலும் லீலா விபூதியிலும் இன்பம் ஆர்ந்து இருக்கச் செய்கின்ற பெருநிலை நோக்கி, 'நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்து' என்றார். 'நினையும் தேவர்' என்றது நித்ய சூரிகளை ஆம், எப்பொழுதும் இறைவனை நினைதலே தமது வாழ்வாக உடையர் அவராதலின், ''என்னும் நம்மாழ்வார் திருவிருத்தத்துள் (21) விண்ணோர்கள் என்றவிடத்து 'நித்ய சூரிகள்' என்று பொருள் உரைத்தவாறும் காண்க. இவ்வுலகத்துத் திருவவதாரத்தில் மனிதர்களைப் போல இன்ப துன்பம் உடையவனாய் இயங்கினும் என்றும் எங்கும் எவற்றாலும் பற்றப்படாத அவனது பரத்துவத்தை விளக்கவே 'அனகன்', 'அமலன்' என்று கூறினார். அம்கண் - அழகிய கண். அருளுடைய கண் என்றவாறாம். 'கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்' என்றார் வள்ளுவரும். (குறள். 575.)* ***1***

***2047. 'வாளும் வேலும் விட்டு அளாயின***
***அனைய கண் மயிலே!***
***தாளின் ஏலமும் தமாலமும்***
***தொடர்தரு சாரல்,***
***நீள மாலைய துயில்வன***
***நீர் உண்ட கமஞ் சூல்***
***காளமேகமும் நாகமும்***
***தெரிகில - காணாய்!***

***வாளும் வேலும் விட்டு அளாயின அனைய கண் மயிலே! -*** *வாளையும் வேலையும் ஒன்றுசேர்த்து ஒன்றனுள் ஒன்றைக் கலந்து வைத்தாற் போன்ற கண்களை உடைய மயில் போன்ற சாயலை உடையவளே!'* ***தாளின் -*** *அடிப் பகுதியில்;* ***ஏலமும் தமாலமும் தொடர்தரு சாரல் -*** *ஏலக் கொடியும் மனம் உள்ள பச்சிலைக் கொடியும் பற்றிக் கிடக்கின்ற மலைப் பக்கத்தே;* ***நீள மாலைய -*** *நீண்ட இயல்பினை உடையவாய்;* ***துயில்வன -*** *உறங்குகின்றனவாகிய;* ***நீர் உண்ட கமம் சூல் -*** *நீரை உண்ட நிறைந்த கருப்பத்தை உடைய;* ***காள மேகமும் -*** *கரிய மேகமும்;* ***நாகமும் -*** *யானைகளும்;* ***தெரிகில -*** *வேற்றுமை உணரமுடியாது ஒன்றுபோலவே உள்ளன;* ***காணாய் -*** *இவற்றைப் பார்ப்பாயாக. மலைச்சாரலில் படிந்துள்ள நீருண்ட கரிய மேகங்களும், அங்கே உறங்கும் யானைகளும் வேற்றுமை தெரியா வண்ணம் கிடக்கின்ற வியப்பினைச் சீதைக்குக் காட்டிக்கூறினான் இராமன். அளாயின - கலந்த. 'அளவளாவுதல்' என்னும் வழக்கும் இப்பொருளினதே. ஏலம்,தமாலம் கொடி வகைகள்.* ***2***

***2048. 'குருதி வாள் எனச் செவ் அரி***
***பரந்த கண் குயிலே!***
***மருவி மால் வரை உம்பரில்***
***குதிக்கின்ற வருடை,***
***சுருதிபோல் தெளி மரகதக்***
***கொழுஞ் சுடர் சுற்ற,***
***பருதி வானவன் பசும் பரி***
***புரைவன - பாராய்!***

***குருதி வாள் எனச் செவ் அரி பரந்த கண் குயிலே!*** *- இரத்தம் தோய்ந்த வாள்போலச் சிவந்த இரேகைகள் படரப் பெற்ற கண்களையுடைய குயில் போலும் குரலுடையாளே!;* ***மால்வரை உம்பரில் மருவி*** *- பெரிய மலையின் உச்சியில் பொருந்தி;* ***குதிக்கின்ற வருடை*** *- குதிக்கின்ற மலை ஆடு;* ***சுருதி போல் தெளி மரகதக் கொழும் சுடர் சுற்ற*** *- வேதம் போலத் தெளிந்து விளங்குகின்ற மரகதக் கல்லின் கொழுவிய பேரொளி கலக்கப் பெறுதலால்;* ***பருதி வானவன்*** *- சூரிய தேவனது;* ***பசும்பரி புரைவன*** *- பச்சை நிறக் குதிரைகளைஒப்பன;* ***பாராய்!*** *- காண்பாயாக.*

*மலை மேல் உள்ள மரகத மணிகளின் ஒளி சுற்றப்பெற்ற மலை ஆடுகள் சூரியனின் பச்சை நிறக்குதிரைகளைப் போலத் தோற்றம் அளிக்கின்றன. சுருதி போல் தெளி மரகதம் என்றது வேதம்தெளிந்த ஒளி உடைய மரகதக்கல் என்றவாறாம். இனி, மரகத நிறம் உடைய திருமாலை வேதம்உணர்த்துதல் போல மரகதக் கல்லும் அத்திருமாலை நினைப்பூட்டுகிறது என்பாரும்உளர்.* *3*

***2049. 'வடம் கொள் பூண் முலை மட மயிலே!***
***மதக் கதமா***
***அடங்கு பேழ் வயிற்று அரவு உரி***
***அமைதொறும் தொடக்கி,***
***தடங்கள்தோறும் நின்று ஆடுவ,***
***தண்டலை அயோத்தி***
***நுடங்கு மாளிகைத் துகிற்கொடி***
***நிகர்ப்பன - நோக்காய்!***

***வடம் கொண் பூண் முலை மயிலே!*** *- முத்துவடமாகக் கொள்ளப் பெற்ற அணியை அணிந்ததனங்களையுடைய இளைய மயில் போன்றவளே!;* ***மதம் கத மா*** *- மதம் பிடித்த சீற்றமுள்ள யானைகள்;* ***அடங்கு பேழ் வயிற்றுஅரவு உரி*** *- உள்ளே அடங்கிய பெரிய வயிற்றை உடைய மலைப்பாம்புகள் உரித்த தோல்கள்;* ***தடங்கள் தோறும்*** *- மலையின் தாழ் வரைகளில் எல்லாம் உள்ள;* ***அமைதொறும்*** *- மூங்கில்கள் தோறும்;* ***தொடக்கி*** *- பிணித்து;* ***நின்று ஆடுவ*** *- அங்கேயேஇருந்து ஆடுகின்றன;* ***தண்டலை அயோத்தி*** *- சோலை சூழ்ந்த அயோத்தி மாநகரத்தில்;* ***நுடங்கு*** *- ஆடுகின்ற;* ***மாளிகைத் துகில் கொடி நிகர்ப்பன*** *- மாளிகைகள் மேல்கட்டப்பெற்ற வெண்மையான நிறமுள்ள துணிக் கொடிகளை ஒத்துள்ளன;* ***நோக்காய்*** *- காண்பாயாக.*

*யானைகளையும் விழுங்கும் வயிற்றை உடைய மலைப்பாம்புகள் உரித்த தோல்கள் மிகப்பெரிதாக இருக்கும் ஆதலால், அவை துகில் கொடிகளை ஒத்துள்ளன என்றாராம்- 'குஞ்சரம் கோள்இழைக்கும் பாம்பு' (திருக்கோவை யார். 21.)*
*4*

***2050. 'உவரிவாய் அன்றிப் பாற்கடல்***
***உதவிய அமுதே!***
***துவரின் நீள் மணித் தடம்தொறும்***
***இடம்தொறும் துவன்றி,***
***கவரி மால் நிற வால் புடை***
***பெயர்வன, கடிதின்***

***பவள மால் வரை அருவியைப்***
***பொருவிய - பாராய்!***

***உவரி வாய் அன்றிப் பாற்கடல் உதவிய அமுதே!***- உப்புக் கடல் அல்லாமல் சுவைஇனிதாகிய திருப்பாற்கடல் தந்த அமுதம் போன்றவளே!; ***துவரின் நீள் மணித் தடந் தொறும்இடம் தொறும் துவன்றி*** - பவள மணியால் ஆகிய மலைத் தாழ்வரைகளிலும் மற்றும் உள்ளஇடங்களிலும் நெருங்கி; ***கவரி மான்*** - கவரிமான்களின்; ***நிறவால்*** - வெண்ணிறம் உடைய வால்கள்; ***புடை பெயர்வன*** - அசைகின்றனவாகிய அவை; ***கடிதில்*** - வேகமாக ஓடுகின்ற; ***பவள மால் வரை அருவியைப் பொருவிய*** - பவள மாலையின் மேலிருந்துவீழ்கின்ற வெண்ணிற அருவிகளைப் போன்றுள்ளன; ***பாராய்*** - காண்பாயாக.

*கவிஞர்கள் பாற்கடலையும் உவர்க்கடலையும் கடல் என்னும் சாதி பற்றி ஒன்றாகவே கொண்டு'கடலில் தோன்றியவள்' என்று பொதுவாகத் திருமகனைக் கூறுவராதலின், இங்கு 'உவரி வாயன்றிப்பாற்கடல் உதவிய அமுதே' என்றாராம். 'துவரின் நீள்மணி' என்பதற்குத் துவர் போல நீண்ட மணிஎன்றும், துவரினும் ஒளியுடைய மணி என்றும் பொருள் உரைக்கலாம். துவர் -பவளம்.*
*5*

***2051. 'சலம் தலைக்கொண்ட சீயத்தால்,***
***தனி மதக் கத மா***
***உலந்து வீழ்தலின் சிந்தின***
***உதிரத்தில், மடவார்***
***புலந்த காலை அற்று உக்கன***
***குங்குமப் பொதியில்***
***கலந்த முத்து என, வேழ முது***
***இமைப்பன - காணாய்! [1]***

***சலம் தலைக் கொண்ட சீயத்தால்*** - கோபத்தைத் தன்னிடத்தே கொண்ட சிங்கத்தால் (தாக்குண்டு); ***தனி மதக் கத மா*** - ஒப்பற்ற மதநீர்ப்பெருக்கையும்கோபத்தையும் உடைய யானை; ***உலந்து வீழ்தலின்*** - உயிரற்றுக் கீழே விழுகின்ற போது; ***உதிரத்தில் சிந்தின***- அவ் யானையின் இரத்தத்தில் சிந்தினவாகிய; ***வேழ முத்து***- யானையின் முத்துக்கள்; ***மடவார் புலந்த காலை*** - மகளிர் தம் காதலரோடு ஊடல்கொண்ட காலத்து; ***அற்று*** - அறுபட்டு; ***உக்கன*** - கீழே சிதறியனவாய்; ***குங்குமப் பொதியில்*** - (அம் மகளிர்) குங்குமக் குழம்பில்; ***கலந்த***- தோய்ந்த; ***முத்து என*** - முத்துப் போல; ***இமைப்பன*** - ஒளிவிடுவனவற்றை; ***காணாய்*** - பார்ப்பாயாக.

*வேழம் என்பதனை மலைக்கண் உள்ள மூங்கில் என்று கொண்டு மூங்கிலிற் பிறந்த முத்துகள்எனவும், கரும்பு என்று கொண்டு கரும்பிற் பிறந்த முத்துக்கள் எனவும் கூறுதல் ஆமாயினும், சிங்கத்தால் தாக்குண்ட யானை விழும் போது உதிரத்தில் சிந்திய அவ்யானை முத்துகளே எனல் இவ்விடத்துக்குப் பெரிதும் பொருந்துமாறு அறிக - அல்லாக்கால், சிங்கத்தால் இறந்த யானைஎன்று கூறுதலால் பெரும்பயன் இன்று*

*ஆதலின், முத்துப் பிறக்கும் இடங்கள், மூங்கில், கரும்பு, யானை முதலியன வருமாறு திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமிழிற் கூறுமாற்றான் உணர்க.* ***6***

***2025. 'நீண்ட மால் வரை மதி உற,***
***நெடு முடி நிவந்த***
***தூண்டு மா மணிச் சுடர் சடைக்***
***கற்றையின் தோன்ற,***
***மாண்ட வால் நிற அருவி அம்***
***மழ விடைப் பாகன்***
***காண் தகும் சடைக் கங்கையை***
***நிகர்ப்பன - காணாய்! [1]***

***நீண்ட மால் வரை -*** *மிக உயர்ந்த பெரிய மலையிலே;* ***மதி உற -*** *சந்திரன் வந்து பொருந்த;* ***நிவந்த நெடுமுடி -*** *மிக உயர்ந்த அம் மலை உச்சியிலே;* ***தூண்டும் மாமணிச் சுடர் -*** *தூண்டி எரியவிடப்பட்டது போலப் பிரகாசிக்கின்ற பெரிய மணிக் கற்களின் ஒளியானது;* ***சடைக் கற்றையின்தோன்ற -*** *சிவபிரானது சடைத் தொகுதியைப் போல விளங்க;* ***மாண்ட வால் நிற அருவி -*** *(அம் மலை உச்சியிலிருந்து விழும்) மாட்சிமை பொருந்திய வெண்ணிறம் படைத்த அருவியானது;* ***அம் மழவிடைப் பாகன் -*** *அந்த இளமையான இடபத்தை ஏறிச் செலுத்துபவன் ஆகிய சிவபிரானது;* ***காண்தகும்-*** *அழகு பொருந்திய;* ***சடைக் கங்கையை-*** *சடை முடியில் உள்ளகங்கையை;* ***நிகர்ப்பன -*** *ஒத்திருப்பனவற்றை;* ***காணாய் -*** *பார்ப்பாயாக.*

*மலை சிவபிரான். மதி பொருந்தல் சிவபிரான் பிறை சூடியது போலத் தோன்றல். செம்மணிச்சுடர் - செஞ்சடைக்கற்றை. வால்நிற அருவி - சடையில் உள்ள கங்கை என உவமைகாண்க.* *7*

***2053. 'தொட்ட வார் சுனை, சுடர் ஒளி***
***மணியொடும் தூவி***
***விட்ட சென்றன, விடா மத***
***மழை அன வேழம்***
***வட்ட வேங்கையின் மலரொடும்***
***ததைந்தன, வயங்கும்***
***பட்டம் நெற்றியில் சுற்றிய***
***போல்வன - பாராய்!***

***தொட்ட -*** *(யானை) கைக்கொண்ட;* ***வார்சுனை -*** *நீண்ட சுனை நீர்;* ***சுடர் ஒளி மணியொடும் தூவி விட்ட சென்றன-*** *(தம்மேல்) தூவிவிட்ட ஒளி மிக்கமணிகளொடும் சென்றனவாகிய;* ***விடா மத மழை அன வேழம்*** *- விடாத மதநீர்ப் பெருக்கால்மழையோ எனக் கருதத் தக்க யானைகள்;* ***வட்ட -*** *பாறை வட்டத்தில் உள்ள;* ***வேங்கையின் மலரொடும் ததைந்தன*** *- வேங்கைப் பூவின் பொன்னிற மலர்களொடும் கூடி நெருங்கியமையால்;* ***வயங்கும் -*** *விளங்கும்;* ***பட்டம் -*** *பொன்னாலும் மணியாலும்இயன்ற பட்டம்;* ***நெற்றியில் சுற்றிய போல்வன -*** *நெற்றியில் சுற்றப்பட்டனபோல்வனவாய் உள்ளன;* ***பாராய் -*** *பார்ப்பாயாக.*

*கனையின்கண் ஆடிய யானைகள் சுனை நீர் தூவிய மணிகளைத் தம் நெற்றியில் கொண்டன; பின்னர்ப் பாறை வட்டத்தில் உள்ள பொன்னிறமான வேங்கை மலர்கள் அந்நெற்றியில்நெருங்கிச் சேர்ந்தன. அதனால் நெற்றிப் பட்டம் அணிந்தவை போலத் தோன்றின என்றது தற்குறிப்பேற்றவணியாம். **8***

***2054. 'இழைந்த நூல் இணை மணிக் குடம்***
***சுமக்கின்றது என்னக்***

***குழைந்த நுண் இடைக் குவி இள***
***வன முலைக் கொம்பே!***
***தழைந்த சந்தனச் சோலை தன்***
***செலவினைத் தடுப்ப,***
***நுழைந்து போகின்றது ஒக்கின்ற***
***மதியினை நோக்காய்!***

***இழைந்த நூல் -** ஓர் இழையாக அமைந்த நூலானது; **இணைமணிக் குடம் சுமக்கின்றதுஎன்ன -** இரண்டு மணிக்கற்கள் அழுத்திய குடத்தைச் சுமக்கின்றது என்று சொல்லுமாறு; **குழைந்த -** ஒல்கித் தளருகின்ற; **நுண் இடை -** நுண்ணிய இடையையும்; **குவி இள வனமுலைக் கொம்பே! -** திரண்ட இளமையான அழகிய தனங்களையும் உடைய பூங்கொம்பு போன்றவளே!; **தழைந்த சந்தனச் சோலை -** தழைத்து மிகுந்துள்ள சந்தனமரச் சோலையானது; **தன்செலவினைத் தடுப்ப -** (மதியாகிய) தன்னுடைய வானத்திற் செல்லும் செலவினைத் தடுத்தலான்; **நுழைந்து போகின்றது ஒக்கின்ற -** அந்தச் சோலைக்குள் புகுந்து போவதை ஒத்திருக்கின்ற; **மதியினை -** சந்திரனை; **நோக்காய் -** பார்ப்பாயாக.*

*காம்புடைய நகில்கள் உச்சியில் நீலமணி அழுத்திய குடம் போன்றனவாதலின் 'மணிக்குடம்'என்றார். வானத்திற் செல்லும் சந்திரன் அடர்த்தியாகவுள்ள சந்தனச் சோலையில் உள்புகுந்துசெல்வதைப் போன்றுள்ளது என்றது தற்குறிப்பேற்றவணியாம். தழைத்த என்பது தழைந்த எனமெலிந்தது.*
***9***

***2055. 'உருகு காதலின் தழைகொண்டு***
***மழலை வண்டு ஓச்சி,***
***முருகு நாறு செந் தேனினை***
***முழைநின்றும் வாங்கி,***
***பெருகு சூல் இளம் பிடிக்கு ஒரு***
***பிறை மருப்பு யானை,***
***பருக, வாயினில், கையின்நின்று***
***அளிப்பது - பாராய்!***

***பிறை மருப்பு ஒரு யானை -** பிறைமதி போன்ற தந்தத்தை உடைய ஒரு களிற்றியானை; **பெருகு சூல் இளம் பிடிக்கு -** முதிர்ந்த கருப்பத்தையுடைய இளைய (தன் பெண் யானைக்கு; **உருகு காதலின் -** மனம் உருகுதற்குக் காரணமான அன்பினால்; **தழை கொண்டு மழலை வண்டுஓச்சி -** தழைகளைக் கொண்டு இனிய குரல் உடைய*

*வண்டுகளை ஒட்டி;* ***முருகு நாறு -*** *மணம்வீசுகின்ற;* ***செந்தேனினை - ; முழை நின்றும் வாங்கி -*** *மலைக் குகையிலிருந்தும்எடுத்து;* ***வாயினில் பருக -*** *வாயால் பருகும்படி;* ***கையின் நின்று -*** *தனது கையிலிருந்து;* ***அளிப்பது -*** *கொடுப்பதனை;* ***பாராய் -*** *காண்பாயாக.*

*சிறிதே வளைந்த தந்தம் பிறை மதி போலும், யானை இனங்களின் அன்புச்செறிவைஇப்பாடல் மூலம் அறியலாம். ''பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன் நின்று, இரு கண் இளமூங்கில்வாங்கி - அருகிருந்த, தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம்'', ''வரை செய் மாக்களிறு இள வெதிர வளர்முளை அளைமிகுதேன் தோய்த்துப், பிரசவாரி தன்னிளம் பிடிக்கு அருள் செய்யும் பிரிதி(திவ்ய. 2256, 962.) என்னும் ஆழ்வார் திருமொழிகள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.* ***10***

***2056. 'அளிக்கும் நாயகன் மாயை புக்கு***
***அடங்கினன் எனினும்,***
***களிப்பு இல் இந்தியத்து யோகியைக்***
***கரக்கிலன்; அதுபோல்,***
***ஒளித்து நின்றுளர் ஆயினும்***
***உருத் தெரிகின்ற***
***பளிக்கு அறைச் சில பரிமுக***
***மாக்களைப் - பாராய்!***

***அளிக்கும் நாயகன் -*** *(உலகினைக்) காக்கும் தெய்வமாகிய திருமால்;* ***மாயைபுக்கு அடங்கினன் எனினும் -*** *மாயையில் புகுந்து (தன் தன்மை பிறர்க்கு அறிய முடியாதபடி)மறைந்து அடங்கி நின்றான் என்றாலும்;* ***களிப்பு இல் இந்தியத்து -*** *புலன் வழி சென்றுகளித்தல் இல்லாத பொறிகளை உடைய;* ***யோகியை -*** *யோக சித்தியால் சிறந்ததவத்தரை;* ***சுரக்கிலன் -*** *ஒளிக்க மாட்டான்;* ***அதுபோல் -*** *அதுபோலவே;* ***ஒளித்து நின்றுளர் ஆயினும் -*** *உலகத்தார்க்குத் தம்மைக் காட்டாது ஒளித்து நின்றிருக்கின்றார்கள் ஆனாலும்;* ***உருத்தெரிகின்ற பளிக்கு அறை -*** *தம்மிடத்தேஉள்ளவற்றின் உருவத்தைத் தெளிவாகக் காட்டுகின்ற பளிங்குப்பாறையிலே (காணத் தோன்றும்);* ***சில பரிமுக மாக்களை -*** *சில குதிரை முகம் உடைய கின்னரர்களை;* ***பாராய் -*** *பார்ப்பாயாக.*

*திருமால் மாயையால் மறைந்து நின்று பிறரால் அறிய வொண்ணா விடினும், யோகியர்க்குஅவன் தன்னை மறையான். பரமன் மாயையால் ஒளித்தவன் என்பதைக் கருடன் துதியால் (8252 - 62)உணர்க. பரிமுக மாக்கள் - குதிரை முகம் உடையவர் கின்னரர் ஆவர். உலகோர்க்குத் தம்மைக்காட்டாது மறைப்பர். ஆயினும், பளிங்குப் பாறையில் அவர் உரு வெளித்தோன்றும் என்க.பளிங்கில் மறைந்த உருத் தோன்றுதலை மணிமேகலை பளிக்கறை புக்க காதை யான்உணர்க.* ***11***

***2057. 'ஆடுகின்ற மா மயிலினும்***
***அழகிய குயிலே!***

***கூடுகின்றிலர், கொடிச்சியர்***
***தம் மனம் கொதிப்ப***
***ஊடுகின்றனர், கொழுநரை***

***உருகினர் நோக்கப்***
***பாடுகின்றன, கின்னர***
***மிதுனங்கள் - பாராய்!***

***ஆடுகின்ற மா மயிலினம் அழகிய குயிலே!*** - *(கார் கண்டு களிப்புற்றுத் தோகைவிரித்து) ஆடுகின்ற சிறந்த மயிலைக்காட்டிலும் (சாயலால்) அழகுடைய குயில்போலும் குரல்உடையவளே!;* ***கொடிச் சியர்-*** *குற மகளிர்;* ***தம்மனம் கொதிப்ப ஊடுகின்றனர் -*** *தம் மனம் கொதிக்கின்றபடியால் (கணவர் மேல்) ஊடல் கொண்டவராய்;* ***கூடுகின்றிலர்*** *-(கணவரைக்) கூடாமல் இருக்கின்ற அவர்;* ***கொழுநரை -*** *தம் கணவரை;* ***உருகினர் -*** *(தாமே) அன்பினால் உருகியவர்களாய்க் (கூடுதற்குறிப்பினால்);* ***நோக்க -*** *பார்க்கும்படி;* ***கின்னர மிதுனங்கள் -*** *ஆணும் பெண்ணுமாய் இணைந்திருக்கும் கின்னரமிதுனங்கள்;* ***பாடுகின்றன-; பாராய்-.***

*ஊடலாற் பிரிந்த குறத்தியரைக் கணவர்பால் தம் பாடலாற் கின்னர மிதுனங்கள் சேர்த்துவைப்பனவாயின என்பது கருத்து. கின்னர மிதுனம் - மனித முகமும் குதிரை உடலும் புடைத்து ஆனும்பெண்ணுமாய் இணைந்தே இருந்து கின்னரம் என்னும் இசைக்கருவி கொண்டு பாடும் தன்மை உள்ள தேவசாதியினர்.*
***12***

***2058. 'வில்லி' வாங்கிய சிலை எனப்***
***பொலி நுதல் விளக்கே!***
***வல்லிதாம் கழை தாக்கலின்***
***வழிந்து இழி பிரசம்,***
***கொல்லி வாங்கிய குன்றவர்***
***கொடி நெடுங் கவலை***
***கல்லி வாங்கிய குழிகளை***
***நிறைப்பன - காணாய்.***

***வில்லி வாங்கிய சிலை எனப் பொலிநுதல் விளக்கே! -*** *வில்லுடைய வீரன் வளைத்தவில்போன்ற புருவத்தால் விளங்குகின்ற நெற்றியை உடைய விளக்குப் போன்றவளே!;* ***வல்லிதாம் -*** *கொடிகள்;* ***கழை கழை தாக்கலின் -*** *மூங்கில் மோதுவதால்;* ***வழிந்து இழி பிரசம் -*** *தம்மிடத்துள்ள தேனடை கெட்டு இழிகின்ற தேனானது;* ***கொல்லிவாங்கிய குன்றவர் -*** *கொல்லிப் பண்ணைக் கேட்கின்ற குறவர்கள்;* ***நெடுங் கொடிக் கவலை -*** *நீண்ட கொடிகளை உடைய கவலைக் கிழங்கை;* ***கல்லி -*** *தோண்டி;* ***வாங்கிய -*** *எடுத்த;* ***குழிகளை -*** *பள்ளங்களை;* ***நிறைப்பன -*** *நிறைக்கும் தன்மையை;* ***காணாய் -*** *பார்ப்பாயாக.*

*வில்லி - வேட்டுவருள் ஒரு சாதியினர் எனலும் ஆம். கொடிகளில் கட்டப்பெற்ற தேனடையை மூங்கில்கள் மோதித் தாக்க அத்தேனடை கெட்டுத் தேன்வழிந்து கவலைக் கிழங்கு அகழ்ந்த குழியைத் தூர்த்து நிரப்பும் என்க. கொல்லிப்பண்மருதயாழ்த் திறமாதலின் மலை நிலத்தவர்க்கு ஏலாதாயினும் இங்கே அப்பண் கேட்ட எனப்பொருள்படுத லன்றி 'எழுப்பிய' எனப் பொருள் படுதல் இன்று ஆதலின் அமையும் என்க. கொடி நெடுங்கவலை - நெடுங் கொடிக் கவலை எனக் கொள்ளப்பட்டது.* ***13***

***2059.*** ***'ஒருவு இல் பெண்மை என்று உரைக்கின்ற***
***உடலினுக்கு உயிரே!***
***மருவு காதலின் இனிது உடன்***
***ஆடிய மந்தி***
***அருவி நீர்கொடு வீச, தான்***
***அப் புறத்து ஏறி,***
***கருவி மா மழை உதிர்ப்பது ஓர்***
***கடுவனைக் - காணாய்!***

***ஒருவு இல் பெண்மை என்று உரைக்கின்ற உடலினுக்கு உயிரே-*** *நீங்காத பெண்மை என்று சொல்லப்படும் ஓர் உடலுக்கு உயிர் போலச் சிறந்தவளே!* ***மருவு காதலின் -*** *மிகுந்தஅன்புடன்;* ***இனிது -*** *இன்பமாக;* ***உடன் ஆடிய மந்தி-*** *ஆண் குரங்காகிய தன்னோடுநீராடிய பெண்குரங்கு;* ***அருவி நீர் கொடு வீச -*** *அருவி நீரைக் கொண்டு (தன்மேல்) தூவ;* ***தான்-*** *(ஆண் குரங்கு);* ***அப்புறத்து ஏறி -*** *மலையின் மற்றொரு பக்கத்தில் மேல் ஏறி;* ***கருவி மாமழை -*** *தொகுதி கொண்ட பெரிய மேகத்தை;* ***உதிர்ப்பது -*** *நீரைச் சிந்தச் செய்வதாகிய;* ***ஓர் கடுவனை -*** *ஓர் ஆண்குரங்கை;* ***காணாய் -.***

*நீராடுகிற போது மந்தி அருவி நீரைத் தூவ, கடுவன் மலைமேல் ஏறி மேக நீரை அம்மந்திமேல் வீசி ஆண்மை காட்டியதென்க. கருவி - தொகுதி எனப் பொருள்படும் உரிச்சொல் 'கருவிதொகுதி' (தொல். சொல். உரி. 56.) இங்குத் தொகுதியாவது இடி மின்னல் முதலியவற்றின்கூட்டம், பெய்யும் மேகம் என்றவாறாம். கடுவன் - ஆண் குரங்கு. மந்தி - பெண் குரங்கு.இக்காலத்துப் பேர் உருவுடைய ஆண் குரங்கை 'மந்தி' - என வழங்கல் உலகவழக்கு,* ***14***

***2060.*** ***'வீறு பஞ்சினில் அமிழ்த நெய்***
***மாட்டிய விளக்கே!***
***சீறு வெங் கதிர் செறிந்தன***
***போர்கல, திரியா***
***மாறு இல் மண்டிலம் நிரம்பிய***
***மாணிக்க மணிக்கல் -***
***பாறை மற்று ஒரு பரிதியின்***
***பொலிவது - பாராய்!***

***வீறு பஞ்சினில் அமிழ்த நெய் மாட்டிய விளக்கே! -*** *மிகச் சிறந்த பஞ்சினால்ஆகிய திரியில் தேவர் அமிழ்தமாகிய நெய்யை ஊற்றி ஏற்றப்பட்ட விளக்குப் போன்றவளே;* ***சீறு வெம் கதிர் செறிந்தன -*** *இருளைச் சீறி அழிக்கின்ற வெம்மையான ஒளி செறிந்தனவும்;* ***போகல -*** *(தம் இடத்தை விட்டு எப்பொழுதும்) நீங்காதனவும்;* ***திரியா -*** *சுற்றி இயங்காதனவும் ஆகிய;* ***மாறு இல் மண்டிலம் நிரம்பிய -*** *வேறுபடுதல் இல்லாத வட்டமாக நிரம்பிய;* ***மாணிக்க மணிக்கல் பாறை -*** *மாணிக்க மணியால் ஆகிய கற்பாறைகள்;* ***மற்று ஒரு பரிதியின் பொலிவது -*** *வேறு ஒரு சூரியன் போல விளங்குவதை;* ***பாராய்-.***

*'அமுத நெய்' என்றது பிராட்டியின் சிறப்புக் கருதி. பிராட்டியைச் சிறப்பித்துக் கூறும்இடங்களில் அமுதத்தை எடுத்துக் காட்டல் கம்பர் வழக்கு. "ஆதரித்து அமுதில் கோல் தோய்த்து""தேவு தெண்கடல் அமிழ்து கொண்டு" (483, 5079.) என்பன ஒப்பு நோக்கத் தக்கன. சூரியனுக்கும், மாணிக்க மணிக் கற்பாறைக்கம் ஒற்றுமை கூறியவர், பெயர்ந்து திரியும் சூரியன் போல்அன்றி, பெயர்ந்து திரியாது மாணிக்க மணிக்கல் பாறை என்று வேறுபாடும் கூறினார்.வேற்றுமையணி.* ***15***

***2061. 'சீலம் இன்னது என்று அருந்ததிக்கு***
***அருளிய திருவே!***
***நீல வண்டினம் படிந்து எழ,***
***வளைந்து உடன் நிமிர்வ***
***கோல வேங்கையின் கொம்பர்கள்.***
***பொன் மலர் தூவிக்***
***காலினில் தொழுது எழுவன***
***நிகர்ப்பன - காணாய்!***

***சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவே! -*** *(கற்புடைய மடந்தையரின்)நல்லொழுக்கம் இவ்வாறானது என்று அருந்ததிக்குக் காட்டிய திருமகளே!;* ***கோல வேங்கையின்கொம்பர்கள்-*** *அழகிய வேங்கை மரத்தின் பூங்கிளைகள்;* ***நீல வண்டினம் படிந்து எழ-*** *நீல நிறமான வண்டுக் கூட்டங்கள் தம்மேல் உட்கார்ந்து எழுதலினால்;* ***வளைந்து உடன்நிமிர்வ -*** *கீழே வளைந்து பிறகு மேலே நிமிர்வன;* ***பொன்மலர் தூவி -*** *பொன்னிறமலர்களைத் தூவி;* ***காலினில் -*** *பாதங்களில்;* ***தொழுது எழுவன -*** *வணங்கிஎழுகின்றவற்றை;* ***நிகர்ப்பன-*** *ஒத்திருக்கும் அவற்றை;* ***காணாய்-.*** *பிராட்டியின் திருவடிகளில் பொன்னிறமான வேங்கை மலர்களைத் தூவி வழிபட்டு எழுவனஎன்றதனால் இது தற்குறிப்பேற்றவணியாம்.* ***16***

***2062. 'வில் கொள் வாள் நுதல், விளங்கு இழை,***
***இளந் தளிர்க் கொழுந்தே!***
***எல் கொள் மால் வரை உம்பரின்,***
***இரும் புனம் காக்கும்***
***கொல் கொள் வேல் கணார் குரீஇ இனத்து***
***எறி குருவிந்தக்***
***கற்கள், வானிடை மீன் என***
***வீழ்வன - காணாய்.!***

***வில் கொள் வாள் நுதல் விளங்கு இழை, இளம் தளிர்க் கொழுந்தே! -*** *வில்லாகியபுருவத்தைக் கொண்ட ஒளிபடைத்த நெற்றியையும், விளங்கிய அணிகலன்களையும் உடைய, இளையதளிரின் கொழுந்து போன்றவளே!;* ***எல் கொள் மால் வரை உம்பரின் -*** *சூரியனைக்கொண்ட பெரிய மலையின் உச்சியில்;* ***இரும் புனம் காக்கும்-*** *பெரிய தினைப்புனத்தைக் காக்கின்ற;* ***கொல்கொள் வேல் கணார் -*** *கொலைத்தெரிழில் கொண்ட வேல்போன்ற கண்களை உடையவர்களாய குறமகளிர்;* ***குரீஇ இனத்து எறி -*** *(தினையைக் கவரவருகின்ற) குருவிக் கூட்டத்தின்மேல் வீசி எறிகின்ற;* ***குருவிந்தக் கற்கள் -*** *(செந்நிறம் உடைய) குருவிந்த*

*மணிக் கற்கள்;* ***வானிடை -*** *ஆகாயத்தில்;* ***மீன் என -*** *நட்சத்திரம் போல;* ***வீழ்வன -*** *விழுவனவற்றை;* ***காணாய் -.***

*குருவிந்தம் - ஒருவகை மாணிக்கக் கல்; செந்நிறம் உடையது. "பதுமமும் நீலமும் விந்தமும்படிதமும்" என்ற சிலப்பதிகார (மதுரைக். ஊர்காண். 186 -7.) அடிகளுக்கு, 'விந்தம் -குருவிந்தம்' இரத்தவிந்து என்பதும் அது;...... 'திலகமுலோத்திரம் செம்பருத்திப்பூக்களின்மலர் குன்றி முயலுதிரமமே, சிந்துரம் குக்கில் கண் என எட்டும், எண்ணிய குருவிந்தம் கண்ணியநிறமே' என்ற அடியார்க்கு நல்லார் உரையானும் உணரலாம். 17*

***2063. 'வரி கொள் ஒண் சிலை வயவர்தம்***
***கணிச்சியின் மறித்த***
***பரிய கால் அகில் சுட, நிமிர்***
***பசும் புகைப் படலம்,***
***அரிய வேதியர், ஆகுதிப்***
***புகையொடும் அளவி,***
***கரிய மால் வரைக் கொழுந்து எனப்***
***படர்வன - காணாய்!***

***வரிகொள் ஒண்சிலை வயவர் -*** *கட்டமைந்த ஒள்ளிய வில்லை உடைய வீரர்கள்;* ***தம் கணிச்சியின் மறித்த -*** *தம்முடைய கோடாலிப் படையால் வெட்டி வீழ்த்திய;* ***பரியகால் அகில் கூட -*** *பருத்த கரிய நிறமுள்ள அகில் கட்டையைச் சுடுதலால்;* ***நிமிர் பசும்புகைப்படலம் -*** *மேல் செல்லுகின்ற அடர்ந்த புகைத் தொகுதி;* ***அரிய வேதியர் ஆகுதிப் புகையொடும் அளவி -*** *சொல்லுதற்கரிய புகழ் படைத்த அந்தணர்களது ஓம குண்டத்திலிருந்து எழுகின்ற புகையோடும் கலந்து;* ***கரிய மால்வரைக் கொழுந்து எனப் படர்வன -*** *கரியநிறமுள்ள பெரிய மலைச்சிகரங்களைப் போல வானத்தில் படர்ந்து செல்லுகின்றவற்றை;* ***காணாய் -.***

*வேடுவர் அகில் சுட்ட புகைம், வேதியர் வேள்விப் புகையும், ஒன்று கலந்து மலைச்சிகரம் போல் உள்ளது என்பதால் மறமும் அறமும் கலந்து விளங்குவதைக்குறிப்பிட்டார். 18*

***2064. 'நானம், நாள்மலர், நறை, அகில்,***
***நாவி, தேன், நாறும்***
***சோனை வார் குழற் சுமை பொறாது***
***இறும் இடைத் தோகாய்!***
***வான யாறு மீன் மலர்ந்தன***
***எனப் புனல் வறந்த***
***கான யாறுகள் கதிர் மணி***
***இமைப்பன - காணாய்!***

***நானம், நாள்மலர், நறை, அகில், நாவி, தேன், நாறும் சோனை வார் குழல்சுமை பொறாது -*** *புழுகு, அன்றலர்ந்த மலர், மணப் பொருள், அகிற்புகை, கத்தூரி, தேன்இவற்றைப்*

*பெற்று மணம் வீசும் திரண்ட நீண்ட கூந்தல் பாரத்தைத் தாங்க மாட்டாமல்;* ***இறும் இடைத்தோகாய் -*** *ஒடிகின்ற இடையினை உடைய மயில் போன்றவளே!;* ***வான யாறு -*** *வான வழியில்;* ***மின் மலர்ந்து என -*** *நட்சத்திரங்கள் தோன்றின என்னும்படி;* ***புனல் வறந்த கான யாறுகள் -*** *நீர் வற்றிப் போன காட்டாறுகளில்;* ***கதிர் மணி இமைப்பன-*** *ஒளியுடைய மணிகள் விட்டு விளங்குகின்றவற்றை;* ***காணாய் -.***

*நானம் முதலியன கூந்தலுக்கு ஊட்டும் மண விசேடமாம். வான யாறு- தேவகங்கை என உரைத்து அதில் வண்ண மீன்கள் போல எனலும் ஆம்.* ***19***

***2065. 'மஞ்சு அளாவிய மாணிக்கப்***
***பாறையில் மறைவ,***
***செஞ்செவே நெடு மரகதப்***
***பாறையில் தெரிவ.***
***விஞ்சை நாடியர் கொழுநரோடு***
***ஊடிய விமலப்***
***பஞ்றசு அளாவிய சீறடிச்***
***சுவடுகள் - பாராய்!***

***விஞ்சை நாடியர் கொழுநரோடு ஊடிய -*** *வித்தியாதர உலகத்தில் உள்ள மகளிர் தம்கணவரோடு ஊடல் கொண்டதனால்;* ***விமலப் பஞ்சு அளாவிய சீறடிச் சுவடுகள் -*** *(கோபத்தில்நடந்த) அவர்களது குற்றமற்ற செம்பஞ்சுக் குழம்பு தீட்டப் பெற்ற சிறிய பாதங்களின் சுவடுகள்;* ***மஞ்சு அளாவிய மாணிக்கப் பாறையில் மறைவ -*** *மேகங்கள் நெருங்கியுள்ள மலைமேல் உள்ளமாணிக்கப் பாறைகளில் மறைகின்றன;* ***செஞ்செவே நெடு மரகதப் பாறையில் தெரிவ -*** *செம்மை யாக நீண்ட பச்சை நிறமுள்ள மரகதப் பாறைகளில் நன்கு தோன்றுகின்றன;* ***காணாய் -.***

*செம்பஞ்சுக் குழம்பு பூசிய அடிச்சுவடுகள் நடந்து சென்று வழியில் செந்நிறமுள்ள மாணிக்கப்பாறையில் நிறவேற்றுமை இன்மையால் மறைந்து விடுகின்றன; அதே சுவடுகள் பச்சைநிறவேற்றமையால் மரகதப் பாறையில் நன்றாகத் தெரிகின்றன என்றவாறாகும். ஊடல் கொண்ட மகளிர்கணவரை வெறுத்தாற் போன்ற குறிப்புடன் பாறைமேல் நடந்து சென்றனர். ஆதலின் செம்பஞ்சுதீட்டிய அவர்களது பாதச் சுவடுகள் பாறையில் தெரிவனவும் மறைவனவும் ஆயின. செஞ்செவே - நேராக.*
***20***

***2066. 'கழித்த செம்பொனின் தொளைபுரை***
***உந்தியின் துணையே!***
***கொழித்த மா மணி அருவியொடு***
***இழிவன, கோலம்***
***அழித்து மேவிய அரம்பையர்***
***அறல் புரை கூந்தல்***
***கழித்து நீக்கிய கற்பக***
***நறு மலர் - காணாய்!***

***அழித்த செம்பொனின் தொளைபுரை உந்தியின் துணையே!* -** *கழியாகச் செய்யப்பெற்றசெம்பொன்னால் ஆகிய தொளையை ஒத்திருக்கின்ற தொப்புளை உடைய இனிய வாழ்க்கைத்துணைவியே!;* ***கோலம் அழித்து மேவிய அரம்பையர் -*** *(அருவியில் நீராட வந்து)தம்முடைய பழைய கோலத்தைக் களைத்து நீராடிய அரம்பை மாதர்கள்;* ***அறல்புரை கூந்தல் கழித்து நீக்கிய -*** *தமதுத கருமணலை ஒத்த கூந்தலிலிருந்து எடுத்து எறிந்த;* ***கற்பகநறுமலர் -*** *கற்பக மரத்தின் மணமுள்ள மலர்கள்;* ***மாமணி கொழித்த அருவியொடு இழிவன -*** *சிறந்த இரத்தினங்களைக் கொழித்துக்கொண்டு வருகின்ற மலை அருவியோடு இறங்கிவருவனவற்றை;* ***காணாய் -.*** *கழியும் தொளையுமாகச் செம்பொன்னால் செய்தவை கொப்பூழுக்கு உவமையாம். தேவஉலகத்தில் உள்ள மாதர் கழற்றி எறிந்த மாலைகளை வானுற ஓங்கி வளர்ந்திருக்கின்ற மலைஅருவிகள் அடித்துக்கொண்டு வருகின்றன என்பது கருத்து.*
*21*

***2067. ‘அறை கழல் சிலைக் குன்றவர்***
***அகன் புனம் காவல்***
***பறை எடுத்து, ஒரு கடுவன் நின்று***
***அடிப்பது - பாராய்!***
***பிறையை எட்டினள் பிடித்து, “இதற்கு***
***இது பிழை” என்னா,***
***கறை துடைக்குறும் பேதை ஓர்***
***கொடிச்சியைக் - காணாய்!***

**ஒரு கடுவன் -** *ஓர் ஆண் குரங்கு;* ***அறை கழல் சிலைக் குன்றவர் அகன் புனம்காவல் பறை எடுத்து நின்று அடிப்பது*** *- ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த வில்லை உடையமலைவாழ்நர்களது அகன்ற புனத்தைக் காவல் செய்ய வைத்திருக்கின்ற பறையை எடுத்துக் கொண்டு அடிப்பதனை;* ***பாராய் -; பிறையை -*** *இளம்பிறையை;* ***எட்டினள் பிடித்து*** *-கிட்டிப் பிடித்து;* ***‘இதற்கு இது பிழை’ என்னா -*** *இப்பிறை மதிக்கு இக்களங்கம்இருப்பது தவறு என்று கருதி;* ***கறை -*** *களங்கத்தை;* ***துடைக்குறும் -*** *துடைத்துவிடுகின்ற;* ***பேதை -*** *சிறுமியாகிய;* ***ஓர் கொடிச்சியை -*** *ஒரு குறமகளை;* ***காணாய் -.***

*தினைப்புனத்துத் தினை கவர வரும் பறவைகளை ஓட்டக் குன்றவர் பறை வைத்திருப்பர். அப்பறையை ஓர் ஆண்குரங்கு எடுத்து அடிக்கிறது. அடுத்து ஒரு சிறிய குறமகள் பிறையைப் பிடித்துஅதன் களங்கத்தைத் துடைக்கின்றாளாம். இதனால் பிறைமதியை ஒட்டி மலை உயர்ந்துள்ளது என்றுசிறப்பித்தவாறு.*
*22*

***2068. ‘அடுத்த பல் பகல் அன்பரின்***
***பிரிந்தவர் என்பது***
***எடுத்து நம்தமக்கு இயம்புவ எனக்.***
***கரிந்து இருண்ட***
***தொடுத்த மாதவிச் சூழலில்,***
***சூர் அரமகளிர்***

*படுத்து வைகிய பல்லவ*
*சயனங்கள் - பாராய்!*

***தொடுத்த மாதவிச் சூழலில் -*** *அடர்த்தியாக உள்ள குருக்கத்திக் கொடியால் ஆகியபந்தரில்;* ***சூர் அரமகளிர் படுத்து வைகிய*** *- (தலைவரைப் பிரிந்த) தெய்வத்தன்மை உடையஅரமகளிர் உறங்கியனவும்;* ***அன்பரை அடுத்த பல்பகல் பிரிந்தவர் என்பது நம்தமக்கு எடுத்து இயம்புவது என*** *- தம் இனிய காதலரைத் தொடர்ந்து பற்பல நாள்கள் பிரிந்தவர்கள் என்பதனை நமக்கு எடுத்துச்சொல்லுவது போல;* ***கரிந்து இருண்ட -*** *(பிரிவினால் ஆகிய விரகத் தீயால்) தீய்ந்துஇருள் நிறமாகிய;* ***பல்லவச் சயனங்கள் -*** *தளிர்ப் படுக்கைகளை;* ***பாராய் -.***

*மாதவி - குருக்கத்தி (ஒருவகைக் கொடி); தலைவரைப் பிரிந்த மகளிர் உடல் வெப்பத்தைஆற்ற மென்மையான தளிர்ப் படுக்கையில் படுத்தனர். பிரிவு நீண்ட நாள் ஆதலின்அப்படுக்கைகளும் கரிந்து தீய்ந்துள்ளன என்றதாம்.*
*23*

***2069. 'நினைந்த போதினும் அமிழ்து ஒக்கும்***
***நேரிழை! நிறை தேன்***
***வனைந்த வேங்கையில், கோங்கினில்,***
***வயின்தொறும் தொடுத்துக்***
***குனிந்த ஊசலில், கொடிச்சியர்***
***எடுத்த இன் குறிஞ்சி***
***கனிந்த பாடல் கேட்டு***
***அகணமா வருவன - காணாய்!***

***நினைந்த போதினும் அமிழ்து ஒக்கும் நேர் இழை! -*** *(மனத்தால்) நினைக்கும்போதும் அமுதத்தை உண்டாற்போல மகிழ்ச்சி யூட்டுகின்ற நேரிய அணிகளை அணிந்தவளே!;* ***நிறைதேன் வனைந்த வேங்கையில் -*** *மிகுந்த தேனால் நிறைந்த வேங்கை மரத்தினிலும்;* ***கோங்கினில் -*** *கோங்க மரத்தினிலும்;* ***வயின் தொறும் தொடுத்துக் குனிந்த ஊசலில்-*** *பக்கங்கள் தோறும் கட்டி வளைத்து ஆடுகின்ற ஊஞ்சலில்;* ***கொடிச்சியர் எடுத்த இன்குறிஞ்சி கனிந்த பாடல் கேட்டு -*** *குறமகளிர் பாடிய இனிய குறிஞ்சிப் புண்ணால் பதம்நிறைந்த பாடல் ஓசை கேட்டு;* ***அகண மா -*** *(இசை விரும்பும்) அகண மாக்கள்;* ***வருவன -*** *ஓடி வருவனவற்றை;* ***காணாய் -.***

*'நினைந்த போதினும் அமிழ்து ஒக்கும்' - 'உள்ளக் களித்தலும்' என்ற குறள் (1281) ஒப்புநோக்குக. அகணம் - இனிய இசையை நுகர வரும் விலங்கு. ஒருவகைப் பறவை என்பாரும் உளர்(பிங்கலந்தை); இன்னோசையை முதற்கண் எழுப்பி இவ்விலங்கினை வரவழைத்து. அது இனிய இசையில்சொக்கித் தன்னை மறந்து நின்றவழி வலிய ஓசையை எழுப்பி அதனை இறந்துபடச் செய்து பிடிப்பது குன்றவர் வழக்கம். பறை பட வாழா அகணமா (நான்மணி. 2.) என்பது காண்க.*

***அகணம் ஒருவகைத மான் என்பர். அது இவ்வியல்பினது என்பதனை 'மறையின் தன் யாழ்கேட்டமானை அருளாது அறைகொன்று மற்றதன் ஆர் உயிர் எஞ்ச. பறை அறைந்தாங்கு (கலித்.143: 10-12) என்ற பாடற் பகுதியால் அறிக.***

*24*

***2070.*** ***'இலவும் இந்திரகோபமும்***
***புரை இதழ் இனியோய்!***
***அலவும் நுண் துளி அருவி நீர்,***
***அரம்பையர் ஆட,***
***கலவை, சாந்து, செங் குங்குமம்,***
***கற்பகம் கொடுத்த***
***பலவும் தோய்தலின் பரிமளம்***
***கமழ்வன - பாராய்!***

**இலவும்** - முருக்க மலரும்; **இந்திரகோபமும்** - இந்திர கோபப் பூச்சியும்; **புரை இதழ்** - ஒத்திருக்கின்ற (செந்நிறமான) உதட்டை உடைய; **இனியோய்!** - இனியவளே!; **அலவும் நுண் துளி அருவி நீர்** - அலை வீசி வருகின்ற நுண்ணிய துளி சிதறும்அருவியின் நீரானது; **அரம்பையர் ஆட** - வானுலக மகளிர் ஆடுகின்ற காரணத்தால்; **கலவை, சாந்து, செங் குங்குமம், கற்பகம், கொடுத்த பலவும்** - வாசனைப் பொருள்கள், சந்தனம், சிவந்த குங்குமம், இன்னும் கற்பகமரம் கொடுத்த மணப்பொருள்கள் பலவும்; **தோய்தலின்** - (அருவிநீரில்) தோயப் பெறுதலால்; **பரிமளம் கமழ்வன** - நறுமணம்வீசப்பெறுகின்றன; **பாராய் -.**

அருவிநீர் தன் தன்மை இழந்து அரம்பையர் ஆடிய காரணத்தால் அவருடம்பில் பூசியிருந்த மணப்பொருள்கள் தம்மிடத்தே கலக்கப்பெற அதனால் பரிமளம் வீசுகிறது என்பதனால் தேவருலகத்தைத்தொடும் மலை உச்சி அருவிகளின் சிறப்பு உரைத்தவாறாம். இந்திர கோபம் - செந்நிறமுள்ள ஒரு வகைப் பூச்சி, மழைக்காலத்து வரும் - 'செம்மூதாய்' எனவும் பெயர் கூறுவர். *25*

***2071.*** ***'செம் பொனால் செய்து, குலிகம் இட்டு***
***எழுதிய செப்பு ஓர்***
***கொம்பு தாங்கியது எனப் பொலி***
***வன முலைக் கொடியே!***
***அம் பொன் மால் வரை, அலர் கதிர்***
***உச்சி சென்று அணுகப்***
***பைம் பொன் மா முடி மிலைச்சியது***
***ஒப்பது - பாராய்!***

**செம் பொனால் செய்து** - சிவந்த பொன்னால் செய்து; **குலிகம் இட்டு எழுதிய** - சாதிலிங்கக் குழம்பினால் தொய்யிலாகப் படம் வரைந்து எழுதிய; **செப்பு** - சிமிழை; **ஓர் கொம்பு தாங்கியது** - ஒரு கொம்பு தாங்குகின்றது; **எனப் பொலி** - என்றுசொல்லுமாறு விளங்குகின்ற; **வனமுலைக் கொடியே** - அழகிய முலைகளை உடைய கொடி போல்பவளே!; **அலர்கதிர்** - ஒளி விளங்குகின்ற சூரியன்; **அம் பொன்மால்வரை உச்சி சென்று அணுக** - அழகிய பொன் மயமான பெரிய மலையின் உச்சியில் சென்றுசேர; **பைம்பொன் மாமுடி மிலைச்சியது ஒப்பது** - அம்மலைக்குப் பசிய பொன்னால் பெரியமகுடம் சூட்டியது போல் உள்ளதனை; **பாராய் -.**

சூரியன் உச்சிப் போதில் மலை உச்சியை வந்து அடைகிறபோது மலைக்குப் பொன் மகுடம்சூட்டியதுபோல் தோற்றம் அளிக்கிறது. செப்பின் மேல் வண்ணக்கோலம் எழுதுதல் உண்டாதலின் அதுதொய்யில் எழுதிய முலைக்கு ஒப்பாயிற்று. வனம் - அழகு. *26*

*2072.* **'மடந்தைமார்களில் திலதமே!**
**மணி நிறத் திணி கல்**
**தொடர்ந்த பாறையில், வேயினம்**
**சொரி கதிர் முத்தம்**
**இடம்தொறும் கிடந்து இமைப்பன,**
**எக்கு இளஞ் செக்கர்**
**படர்ந்த வானிடை, தாரகை**
**நிகர்ப்பன - பாராய்!** [1]

**மடந்தைமார்களில் திலதமே!** - பெண்களில் திலகம் போலச் சிறந்தவளே!; **மணி நிறத்திணி கல் தொடர்ந்த பாறையில் -** செம்மணியால் ஆகிய (சிவந்த) நிறத்தைஉடைய திணிந்த கல் பரவியிருக்கின்ற மலைப் பாறையில்; **வேய் இனம் சொரிகதிர் முத்தம்-** மூங்கில் கூட்டம் சொரிந்த ஒளிபடைத்த முத்துகள்; **இடம் தொறும் கிடந்து இழைப்பன-** அங்கங்கே (பாறைகளின் இடை இடையே) கிடந்து ஒளி வீசி விளங்குகின்றன; **எக்குஇளஞ்செக்கர் வானிடை -** மேலேறிப் படர்ந்த இளைய செவ்வானத்திடத்து; **தாரகைநிகர்ப்பன -** நட்சத்திரங்களை ஒத்து விளங்குகின்றன; **பாராய்-.**

செம்மணிக் கற்பாறையில் இடையிடை பரவிச் சிதறிக் கிடக்கும் மூங்கில் முத்துக்கள்செவ்வானத்து விண்மீண்களைப் போல் உள்ளன. எக்குதல் - மேல் ஏறுதல் - இனி மிகுதல் என்னும்பொருள் உடைய தெலுங்குச் சொல் என்பது ஒன்று.
*27*

*2073.* **'குழவு நுண் தொளை வேயினும்,**
**குறி நரம்பு எறிவுற்று**
**எழுவு தண் தமிழ் யாழினும்**
**இனிய சொல் கிளியே!**
**முழுவதும் மலர் விரிந்த தாள்**
**முருக்கு இடை மிடைந்த**
**பழுவம், வெங் கனல் கதுவியது**
**ஒப்பன - பாராய்!**

**நுண் தொளை குழுவும் வேயினும் -** நுண்ணிய தொளை நிரம்பப் பெற்ற புல்லாங்குழல்ஓசையினும்; **குறி நரம்பு எறிவு உற்று எழுவு தண்தமிழ் யாழினும் -** ஓசையைக் குறித்து(எழுப்பவல்ல) நரம்புகளை (கை விரல்களால்) தடவி எழுப்பப்படுகின்ற குளிர்ந்த இனிய யாழ்ஓசையினும்; **இனிய -** இனிமையான; **சொல் கிளியே -** சொற்களைப் பேசுகின்ற கிளிபோல்பவளே!; **முழுவதும் மலர் விரிந்த தாள் முருக்கு** - முற்றிலும் பூக்கள் பூத்துள்ளஅடிமரத்தை உடைய முருக்க மரம்; **இடை**

***மிடைந்த பழுவம்*** - இடையே நெருங்கி உள்ள காடு; ***வெங் கனல் கதுவியது ஒப்பன*** - கொடிய நெருப்பினால் பற்றப்படுள்ளது போன்றவற்றை; ***பாராய்-.***

*முருக்கமலர் செந்நிறம் உடையது ஆதலின், முழுதும் மலர் பூத்த முருக்க மரம் நிரம்பியுள்ளகாடு தீப்பிடித்தது போலத் தோன்றுவது இயற்கையாகும்.*
*28*

***2074. ‘வளைகள் காந்தளில் பெய்தன***
***அனைய கைம் மயிலே!***
***தொளை கொள் தாழ் தடக்***
***கைந் நெடுந் துருத்தியில் தூக்கி,***
***அளவு இல் மூப்பினர் அருந்தவர்க்கு,***
***அருவி நீர் கொணர்ந்து,***
***களப மால் கரி குண்டிகைச்***
***சொரிவன - காணாய்***

***வளைகள் காந்தளில் பெய்தன அனைய கை மயிலே! -*** வளையல்களைக் காந்தள் மலரில்இட்டு வைத்தாற் போன்ற கைகளை உடைய மயில் போல்பவளே!; ***மால் கரிக் களபம் -*** பெரிய யானைக் குட்டிகள்; ***அளவு இல் மூப்பினர் அருந்தவர்க்கு -*** அளவுபடாத முதுமை உடையவர்களாய அரிய தவ முனிவர்களுக்கு; ***அருவி நீர் -*** அருவியில் உள்ள நீரை; ***தொளை கொள் தாழ் தடக்கை நெடுந்துருத்தியில் -*** துவாரத்தைக் கொண்ட தொங்குகிற பெரியதமது கையாகிய நீண்ட தோல்பையிலே; ***தூக்கிக் கொணர்ந்து -*** முகந்து கொண்டு வந்து; ***குண்டிகை*** - (அம்முனிவர்களது ) கமண்டலத்தில்; ***சொரிவன -*** ஊற்றுவனவற்றை; ***காணாய் -.***

*காந்தள்- கைபோலும் அஃறினைப் பொருளாகிய யானைக் குட்டிகளும் முனிவர்களது முதுமை கருதிஅவர்களுக்கு அருவி நீர் கொணர்ந்து கமண்டலத்தில் ஊற்றுகின்றன என்று சித்திரகூட மலையின்பண்பு நலம் கூறியதாம். களபம் - யானைக்கன்று. முப்பது வயதுடைய யானையைக் குறிக்கும் என்பர். துருத்தி - தோல்பை. (தண்ணீர் முகக்க உதவும்.)* *29* ***2075. ‘வடுவின் மா வகிர் இவை எனப்***
***பொலிந்த கண் மயிலே!***
***இடுகு கண்ணினர், இடர் உறு***
***மூப்பினர் ஏக,***
***நெடுகு கூனல் வால் நீட்டின,***
***உருகுறு நெஞ்சக்***
***கடுவன், மா தவர்க்கு அரு நெறி***
***காட்டுவ - காணாய்!*** [1]

***இவை மா வடுவின் வகிர் எனப் பொலிந்த கண் மயிலே! -*** இவை மாம் பிஞ்சுகளின்பிளப்பு என்று சொல்லும்படியாகப் பொலிந்த கண்களை உடைய மயில் போல்பவளே!; ***இடுகுகண்ணினர் -*** இடுங்கிப் போன கண்களை உடையவரும்; ***இடர் உறுநெஞ்சினர் -*** துன்பம்உறுகின்ற நெஞ்சத்தை உடையவரும் ஆகிய முனிவர்கள்;

***ஏக-*** *செல்ல;* ***மாதவர்க்கு*** *- அம்முனிவர்களுக்கு;* ***நெடுகு கூனல் வால் நீட்டின -*** *நீண்டு வளைந்த வாலை நீட்டியவையாய்;* ***உருகு உறு நெஞ்சக் கடுவன்*** *- உருகுகின்ற மனம் உடைய ஆண்குரங்கு;* ***அரு நெறிகாட்டுவ -*** *மலையிடத்து அரிய வழியினைக் காட்டுகின்றவற்றை;* ***காணாய். -.***

*மூப்படைந்து, கண் இடுகி, வழியறிந்து செல்ல இயலாது வருந்துகிற மாதவர்களுக்கு மலையில்உள்ள ஆண் குரங்குகள் இரங்கி அன்பு கொண்டு வழிகாட்டிச் செல்கின்றன என்பது சித்திரகூடமலையில் உள்ள உயிரினங்களின் கருணை இயல்பினைக் கூறிய வாறாகும்.* ***30***

***2076. 'பாந்தள், தேர் இவை பழிபடப்***
***பரந்த பேர் அல்குல்!***
***ஏந்து நூல் அணி மார்பினர்***
***ஆகுதிக்கு இயையக்***
***கூந்தல் மென் மயில் குறுகின***
***நெடுஞ் சிறை கோலி,***
***காந்து குண்டத்தில் அடங்கு எரி***
***எழுப்புவ - காணாய்!*** [1]

***பாந்தன் தேர் இவை பழிபடப் பரந்த பேர் அல்குல் -*** *பாம்பின் படமும், தேர்த்தட்டும் என்ற இவை உவமை ஆகாமல் பழிப்பை அடையும்படி அகன்ற பெரிய அல்குலை உடையவளே!;* ***கூந்தல் மென்மயில் -*** *தோகையை உடைய மெல்லிய மயிற்பறவைகள்;* ***குறுகின -*** *அணுகினவாய்;* ***நூல் ஏந்து அணி மார்பினர் ஆகுதிக்கு இயைய -*** *பூணூலைத் தாங்கிய அழகியமார்பினை உடைய அந்தணர்களது வேள்விக்குப் பொருந்த;* ***நெடுஞ்சிறை கோலி -*** *நீண்டதம் சிறகுகளை வளைத்து;* ***காந்து குண்டத்தில் -*** *வெம்மையுள்ள ஓமகுண்டத்தில்;* ***அடங்கு எரி -*** *அடங்கிய நெருப்பை;* ***எழுப்புவ -*** *எரியச் செய்கின்றன;* ***காணாய் -***

*இச்சித்திரகூட மலையில் உள்ள மயில்கள் அந்தணர் ஓமகுண்டத்தில் நெருப்பைத் தம் சிறகால் விசிறி எரியச் செய்து உதவுகின்றன.* ***31***

***2077. 'அலம்பு வார் குழர் ஆய் மயில்***
***பெண் அருங்கலமே!***
***நலம் பெய் வேதியர் மார்பினுக்கு***
***இயைவுற நாடி,***
***சிலம்பி, பஞ்சினில், சிக்கு அறத்***
***தெரிந்த நூல், தே மாம் -***
***பலம் பெய் மந்திகள் உடன் வந்து***
***கொடுப்பன - பாராய்!***

***அலம்பு வார் குழல் ஆய் மயில் பெண் அருங்கலமே! -*** *அசைகின்ற நீண்ட கூந்தலைஉடைய அழகிய மயில் போன்ற பெண்களுக்கு அணிகலமாய் விளங்குகின்றவளே!;* ***நலம் பெய்வேதியர் -*** *நன்மையைச் செய்கின்ற அந்தணர்கள்;*

***மார்பினுக்கு -*** *மார்பில்அணிவதற்கு;* ***இயைவு உற -*** *பொருந்த;* ***நாடி -*** *ஆராய்ந்து;* ***தேமாம் பலம்பெய்மந்திகள் -*** *தேமா மரத்திலிருந்து பழங்களைக் கீழே சிதறுகின்ற இயல்பை உடைய குரங்குகள்;* ***சிலம்பி பஞ்சினில் -*** *பட்டுப் பூச்சி, பஞ்சு இவற்றால் ஆகிய;* ***சிக்கு அறத் தெரிந்த நூல் -*** *சிக்கில்லாதபடி ஆராய்ந்து கொண்டுவந்த நூலை;* ***உடன் வந்து-*** *விரைந்து வந்து;* ***கொடுப்பன -*** *கொடுக்கின்றவற்றை;* ***பாராய் -.***

*அந்தணர் முப்புரிநூல் அணிதற்கு மந்திகள் பட்டுப்பூச்சி பஞ்சு ஆகியவற்றில் இருந்துசிக்கில்லாத நூலைத் தேர்ந்து கொடுத்து உதவி செய்கின்றன என்பதும் மேலது போன்றதே.* *32*

***2078. 'தெரிவைமார்க்கு ஒரு கட்டளை***
***எனச் செய்த திருவே!***
***பெரிய மாக் கனி, பலாக் கனி,***
***பிறங்கிய வாழை***
***அரிய மாக் களி, கடுவன்கள்***
***அன்பு கொண்டு அளிப்பன,***
***கரிய மா கிழங்குஅகழ்ந்தன***
***கொணர்வன - காணாய்!***

***தெரிவைமார்க்கு -*** *மகளிர்க்கு;* ***ஒரு கட்டளை எனச் செய்த திருவே*** *- ஓர்உரைகல் போலச் செய்த திருவே!;* ***கடுவன்கள் -*** *ஆண் குரங்குகள்; அன்பு கொண்டு(முனிவர்பால்) அன்பு கொண்டு;* ***பெரிய மாக் கனி -*** *பெரிய மாம் பழம்;* ***பலாக்கனி -*** *பலாப் பழம்;* ***பிறங்கிய வாழை அரிய மாக் கனி*** *- விளங்கிய வாழையினது அரிய பெரும் பழம் ஆகியவற்றை;* ***அளிப்ப -*** *கொடுக்க;* ***கரி மா -*** *கரியவிலங்காகிய பன்றிகள்;* ***அகழ்ந்தன -*** *(தாம்) தோண்டி எடுத்தனவாகிய;* ***கிழங்கு*** *- கிழங்குகளை;* ***கொணர்வன -*** *கொண்டுவந்து தருவனவற்றைக்;* ***காணாய் -.***

*ஆண் குரங்குகள் மா, பலா, வாழை என்னும் பழங்களைத் தருகின்றன. பன்றிகள் கிழங்குகளத்தருகின்றன என்பதாம் மகளிரைப் படைத்தற்கு முன்மாதிரியாகச் செய்தமைத்துக் கொள்ளும் வடிவம்கட்டளை எனப்படும். அத்தகைய அழகு வடிவமே பிராட்டி என்றானாம். 'கமலத்துக் கடவுள் தானே, .....உருவினுக்கு உலகம் மூன்றின் இருதிறத்தார்க்கும் செய்தவரம்பு இவர் இருவர்' (2792) என்கிற சூர்ப்பணகை இங்கு ஒத்துக் கருதுக.* *33*

***2079. 'ஐவனக் குரல், ஏனலின்***
***கதிர், இறுங்கு, அவரை***
***மெய் வணக்குறு வேய் இனம்***
***ஈன்ற மெல் அரிசி,***
***பொய் வணங்கிய மா தவர்***
***புரைதொறும் புகுந்து, உன்***
***கை வணத்த வாய்க் கிள்ளை தந்து***
***அளிப்பன - காணாய்!***

***உன் கை வணத்த வாய்க் கிள்ளை -*** *(சீதையே!) உன் கை போன்ற செந்நிறவாயினையுடைய கிளிகள்;* ***ஐவனக் குரல் -*** *மல நெல் கதிர்;* ***ஏனலின் கதிர் -*** *தினைக் கதிர்;* ***இறுங்கு -*** *சோளக் கதிர்;* ***அவரை -*** *அவரைகள்;* ***மெய்வணக்குறு வேய் இனம் ஈன்ற மெல் அரிசி -*** *உடலால் வளைவு பொருந்திய மூங்கிலிற் பிறந்தமென்மையான அரிசி ஆகியவற்றை;* ***பொய் வணங்கிய மாதவர் -*** *பொய்யை ஓட்டிய முனிவர்களது;* ***புரைதொறும் -*** *ஆசிரமக் குடில்கள் தோறும்;* ***புகுந்து -*** *நுழைந்து;* ***தந்து அளிப்பன-*** *கொடுத்து அன்பு செய்வனவற்றை;* ***காணாய்-.***

*வணங்கி - வணங்கச் செய்த - இங்குத் தோல்வியைக் குறித்தது; பொய்யைத் தோற்கடித்தமுனிவர்கள். கிளிகள் முனிவர்களுக்கு உணவு கொண்டுவந்து அன்புடன் கொடுத்து உதவுகின்றனஎன்றாராம். 34*

***2080. ‘இடி கொள் வேழத்தை எயிற்றொடும்***
***எடுத்து உடன் விழுங்கும்.***
***கடிய மாசுணம், கற்று***
***அறிந்தவர் என அடங்கிச்***
***சடை கொள் சென்னியர், தாழ்வு***
***இலர் தாம் மிதித்து ஏறப்***
***படிகளாம் எனத் தாழ்வரை***
***கிடப்பன - பாராய்!***

***இடி கொள் வேழத்தை -*** *இடி போலப் பிளிறுதல் கொண்ட யானையை;* ***எறிற்றொடும் எடுத்து உடன் விழுங்கும் கடிய மாசுணம் -*** *தந்தத்தோடு ஒருசேரத் தூக்கிவிழுங்கி விடக்கூடிய கொடிய மலைப் பாம்பு;* ***கற்று அறிந்தவர் -*** *நூற்பொருளைக் கற்றுத்தெளிந்தவர்;* ***என -*** *போல;* ***அடங்கி -*** *அடக்கம் உடையதாய் (தம் ஆற்றலைஒடுக்கிக் கொண்டு);* ***சடை கொள் சென்னியர் -*** *சடா முடியை உடைய முனிவர்கள்;* ***தாழ்வு இலர் -*** *சரிதல் இல்லாதவராய்;* ***தாம் மிதித்து ஏற -*** *தாமே மலையின் மேல் மிதித்து ஏறிச் செல்லும்படி;* ***படிகளாம் என -*** *படிக்கற்களைப் போல;* ***தாழ்வரை-*** *மலை அடிவாரங்களில்;* ***கிடப்பன -*** *கிடக்கின்றவற்றைப்;* ***பாராய் -.***

*ஆற்றல் சான்ற மலைப்பாம்புகள் அடங்கி இருத்தலுக்குக் கற்றுணர்ந்தவர் அடக்கம்உவமையாகும். ‘தேர்ந்த நூல் கல்விசேர் மாந்தரின் இறைஞ்சி’ என்ற சிந்தாமணியை இங்குக்(நாமகள் - 53) கருதுக. மலைப் பாம்புகளும் படிகளாகக் கிடந்து முனிவர்கள் தாழாது மலையேற உதவுகின்றன என்றவாறாம். 35*

***2018. ‘அசும்பு பாய் வரை அருந் தவம்***
***முடித்தவர், துணைக் கண்***
***தசும்பு வேய்ந்தவர் ஒத்தவர்***
***தமக்கு, விண் தருவான்***
***விசும்பு தூர்ப்பன ஆம் என,***
***வெயில் உக விளங்கும்***

***பசும் பொன் மானங்கள் போவன***
***வருவன - பாராய்!'***

***அசும்பு பாய் வரை*** *- ஊற்றெடுத்து நீர்பாயும் மலையிலே;* ***அரும் தவம்முடித்தவர்*** *- செய்தற்கு அரிய தவத்தைச் செய்து முடித்தவர்கள் ஆகிய;* ***துணைக்கண்தசும்பு வேயந்தவர் ஒத்தவர் தமக்கு*** *- தம் இரண்டு கண்களிலும் நீர்க்குடம் கவிழ்த்தாற்போல அன்பினால் நீர் பெருக விடுகின்றவர்களை ஒத்தவர்களாய நல்லோர்களுக்கு;* ***விண்தருவான்*** *- வீடு பேறாகிய விண்ணுலக வாழ்வினைத் தர வேண்டி;* ***விசும்பு தூர்ப்பன ஆம் என*** *- ஆகாயத்தை மூடிக் கொள்வனவாகும் என்று சொல்லும்படி;* ***வெயில் உக விளங்கும்-*** *ஒளி சிந்தும்படி விளங்குகின்ற;* ***பசும்பொன் மானங்கள்-*** *பசிய பொன்னால் ஆகிய விமானங்கள்;* ***போவன வருவன*** *- போகின்றவற்றையும், மீள வருகின்றவற்றையும்;* ***பாராய் -.***

*சித்திரகூட மலை தேவர்கள் சஞ்சரிக்கும் இடம், ஆதலின், அவர்கள் விமானத்தில் ஏறிப்போவதும் வருவதுமாயிருத்தலின் வானமெங்கும் விமானத்தால் போர்த்தப்பட்டது போல் உள்ளது.அதுவே அருந்தவம் முடித்தவர்களுக்கு வீடுபேறு தருதற்கு விண்ணுலகு கொண்டு செல்ல வந்த விமானங்கள்போலவும் தோற்றம் அளித்தன. தசும்பு - குடம்; புறம் பொசிகின்ற மண்குடத்தைக்குறிக்கும்.*
***36***

*இராமன் அந்தணரின் விருந்தினன் ஆதல்*

***2082. இனைய யாவையும் ஏந்திழைக்கு***
***இயம்பினன் காட்டி,***
***அனைய மால் வரை அருந் தவர்***
***எதிர்வர, வணங்கி,***
***வினையின் நீங்கிய வேதியர்***
***விருந்தினன் ஆனான் -***
***மனையில் மெய் எனும் மா தவம்***
***புரிந்தவன் மைந்தன்.***

***மனையில்*** *- அரண்மனையில்;* ***மெய் எனும் மாதவம் புரிந்தவன் மைந்தன்*** *- சத்தியம் என்னும் பெரிய தவத்தைச் செய்தவனாகிய தயரதனுடைய மகனாகிய இராமன்;* ***இனையயாவையும்*** *- இப்படிப்பட்ட சித்திரகூட மலையின் பண்பு நலங்களை யெல்லாம்;* ***ஏந்து இழைக்கு*** *- உயர்ந்த அணிகலக்களை உடையாளாய சீதைக்கு;* ***இயம்பினன் காட்டி*** *- சொல்லிக் காண்பித்து;* ***அனைய மால் வரை*** *- அந்தப் பெரிய சித்திரகூட மலையின்;* ***அருந்தவர்*** *- அரிய முனிவர்கள்;* ***எதிர்வர*** *- (தன்னை) எதிர்வந்து வரவேற்க;* ***வணங்கி*** *- (அவர்களை) வழிபட்டு;* ***வினையின் நீங்கிய*** *- தவத்தால் இரு வினையில்இருந்து நீங்கியவர்களாகிய;* ***வேதியர்*** *- அந்த வேதியர்களுக்கு;* ***விருந்தினன்ஆனான் -.***

*வனம் சென்று தவம் செய்வாரினும் தயரதன் மேம்பட்டவன் என்பது காட்ட 'மனையின் மெய்எனும் மாதவம் புரிந்தவன்' என்றார்.* ***37***

*சூரியன் மறைய, அந்தி நேரம் வருதல்*

*கலிவிருத்தம்*

***2083. மா இயல் உதயம் ஆம் துளப வானவள்,***
***மேவிய பகை இருள் அவுணர் வீந்து உக,***
***கா இயல் குட வரை, கால நேமிமேல்,***
***ஏவிய திகிரிபோல், இரவி ஏகினான்.***

***மா இயல் உதயம் ஆம் துளப வானவன் -*** *பெருமை பொருந்திய இயல்பினை உடைய உதயகிரிஆகிய துளசி மாலை அணிந்த திருமால்;* ***மேவிய பகை இருள் அவுணர் வீந்து உக -*** *(தேவர்க்குப் பகையாகப்) பொருந்திய பகைமை கொண்ட இருள் நிறம் உடைய அசுரர்கள் கெட்டு அழிய;* ***கா இயல் குடவரை கால நேமி மேல் -*** *சோலை சூழ்ந்த அத்தமனகிரி ஆகிய (அசுரருள்மிகக் கொடியன் ஆகிய) கால நேமி என்பவன் மீது;* ***ஏவிய திகிரி போல் -*** *செலுத்தியசக்கரப் படையைப் போல;* ***இரவி ஏகினான் -*** *சூரியன் சேர்ந்தான்.*

*உதய மலையாகிய திருமால் அங்கிருந்து அத்தமன மலை ஆகிய கால நேமிமேல் அனுப்பியசக்கரம் போல மேற்குத் திசையில் சூரியன் சேர்ந்தான். குட வரையைக் கால நேமியாகவும்அங்கே சென்று சேர்ந்த சூரியனைச் சக்கரப் படையாகவும் கொண்டமையால் எதிர்த் திசையாக உதய மலையைச் சக்கரம் அனுப்பிய திருமாலாகச் சொன்னார்.*

*நரசிங்க அவதாரம் செய்து திருமாலாற் கொல்லப்பட்டஇரணியன் புத்திரன் காலநேமி. நூறு தலைகளையும் நூறு கைகளையும் உடையவன். அசுரர்களைச் சார்ந்து தேவர்கள் அனைவரையும் வெற்றி கொண்டு சத்தியலோகம் சென்றான். தன்னை அனைவரும் வணங்கித்துதிக்க வீற்றிருந்தான். மேலும் செருக்குற்றுத் தன் தந்தையைக் கொன்ற திருமாலைப், போருக்கழைத்தான். திருமாலின் சக்கரத்தால் அழிந்தான்.*
***38***

***2084. சக்கரம் தானவன் உடலில் தாக்குற,***
***எக்கிய சோரியின் பரந்தது, எங்கணும்***
***செக்கர்; அத் தீயவன் வாயின் தீர்ந்து, வேறு***
***உக்க வான் தனி எயிறு ஒத்தது. இந்துவே!***

***சக்கரம் தானவன் உடலில் தாக்குற -*** *(திருமாலின்) சக்கரப் படை கால நேமியாகியஅசுரன் உடலில் சென்று தாக்கிய அளவில்;* ***எக்கிய கோரியின் -*** *மேல் எழுந்த அவனது இரத்தம் போல;* ***எங்கணும் செக்கர் பரந்தது -*** *எல்லா இடங்களிலும் செவ்வானம்பரவியது;* ***அத் தீயவன் வாயின் தீர்ந்து -*** *அக் கொடிய காலநேமியின் வாயிலிருந்துகழன்று;* ***வேறு உக்க வான் தனி எயிறு -*** *தனியாகச் சிந்திய வெண்மையான ஒற்றைக்கோரைப் பல்லை;* ***இந்து ஒத்தது -*** *சந்திரன் ஒத்திருந்தது.*

*செவ்வானம் இரத்தமாகவும், சந்திரன் அசுரனது சிந்திய கோரைப் பல்லாகவும்உவமிக்கப்பெற்றன.* ***39***

***2085. ஆனனம் மகளிருக்கு அளித்த தாமரைப்
பூ நனி முகிழ்த்தன, புலரி போன பின்.
மீன் என விளங்கிய வெள்ளி ஆம்பல் வீ,
வான் எனும் மணித் தடம், மலர்ந்த எங்குமே!***

*__புலரி போனபின் -__ சூரியன் மறைந்த பிறகு; __மகளிருக்கு ஆனனம் அளித்ததாமரைப் பூ -__ இதுகாறும் பெண்களுக்கு முகத்தைச் செய்தனவாகிய மலர்ந்த தாமரைப் பூக்கள்;(இப்போது) __நனி முகிழ்த்தன -__ மிகவும் குவிந்தன; __வான் எனும் மணித்தடம் -__ வானம் போல உள்ள அழகிய நீர்நிலையில்; __மீன் என விளங்கிய -__ நட்சத்திரம் போல விளங்கிய; __வெள்ளி ஆம்பல் வீ -__ வெண்ணிறம் உள்ள ஆம்பல் மலர்கள்; __எங்கும் மலர்ந்த -__ எவ்விடத்தும் மலர்ந்தன.*

*மலர்ந்த தாமரை பெண்கள் முகம் போலும் ஆதலின், மலர்ந்த தாமரை என்று சொல்வார்'மகளிருக்கு ஆனனம் அளித்த தாமரை' என்றார். இரவில் தாமரை குவிதலும் ஆம்பல் மலர்தலும்இயல்பு.* ***40***

***2086. மந்தியும் கடுவனும் மரங்கள் நோக்கின;
தந்தியும் பிடிகளும் தடங்கள் நோக்கின;
நிந்தை இல் சகுந்தங்கள் நீளம் நோக்கின;
அந்தியை நோக்கினான், அறிவை நோக்கினான்.***

*__மந்தியும் கடுவனும் மரங்கள் நோக்கின -__ (இரவு நேரம் வருதலின் ஏறி உறங்க) பெண் குரங்கும் ஆண் குரங்கும் மரங்களைப் பார்த்தன; __தந்தியும் பிடிகளும் தடங்கள்நோக்கின -__ ஆண் யானையும் பெண் யானையும் தம் இருப்பிடத்துக்குச் சென்று சேரும்வழிகளைப் பார்த்தன; __நிந்தை இல் சகுந்தங்கள் நீளம் நோக்கின-__ பழிப்பு இல்லாதபறவைகள் தம் கூடுகள் உள்ள நீண்ட வழியைப் பார்த்தன; __அறிவை நோக்கினான் -__ மெய்ப்பொருளை நோக்கி அறிதற்கு உரிய இராமன்; __அந்தியை நோக்கினான்__ - மாலைக்காலத்தில் செய்தற்கு உரிய கடமைகளைச் செய்யத் தொடங்கினன்.*

*குரங்குகள் இரவில் மரத்தின்கண் உறங்கல் இயல்பு; பறவைகள் தம் கூட்டை அடைதலும், யானைமுதலியன தம் இருப்பிடத்தை நாடிச் சேறலும் மாலை நேரத்தில் நிகழ்வன. தடம் -வழி.* ***41***

*இராமன் முதலிய மூவரும் மாலை வழிபாடு செய்தல்*

***2087. மொய் உறு நறு மலர் முகிழ்த்தவாம் சில;
மை அரு நறு மலர் மலர்ந்தவாம் சில;
ஐயனோடு, இளவற்கும் அமுதனாளுக்கும்
கைகளும், கண்களும், கமலம் போன்றவே.***

*__மொய் உறு நறு மலர் சில முகிழ்த்தவாம்-__ (மாலையில்) நெருங்கிப் பொருந்தியமணமுள்ள மலர்கள் சில குவிந்தன; __மை அறு நறு மலர் சில மலர்ந்தவாம்-__ குற்றமற்றமணமுள்ள மலர்கள் சில மலர்ந்தன; __ஐயனோடு__ - இராமனோடு;*

***இளவற்கும் -*** *இலக்குவனுக்கும்;* ***அமுதனாளுக்கும் -*** *அமுதத்தை ஒத்த சீதைக்கும்;* ***கைகளும் கண்களும் கமலம்போன்ற -*** *கைகளும், கண்களும் மாலைக் காலத்துத் தாமரைகள் குவிந்திருப்பது போல்குவிந்து மூடிக்கொண்டன.*

*மாலையிற் சில மலர் குவிதலும், வேறுசில மலர்தலும் இயல்பு - வழிபாடு செய்வார் கண்களைமூடிக் கைகளைக் குவிப்பர் ஆதலின், இங்கு மாலைக்காலத்துத் தாமரை குவிந்திரப்பது போலக்கைகளும், கண்களும் ஆயின என்று குறிப்பால் அதனைப் புலப்படுத்தினர். ஏகாரம் ஈற்றசை. 42*

*இலக்குவன் அமைந்த குடிலில் இராமன் சீதையோடு குடிபுகுதல்*

***2088. மாலை வந்து அகன்றபின், மருங்கு இலாளொடும்,***
***வேலை வந்து உறைவிடம் மேயது ஆம் என,***
***கோலை வந்து உமிழ் சிலைத் தம்பி கோலிய***
***சாலை வந்து எய்தினான், தவத்தின் எய்தினான்.***

***தவத்தின் எய்தினான் -*** *தவம் காரணமாகக் காடு நோக்கி வந்த இராமன்;* ***மாலைவந்து அகன்றபின் -*** *மாலைப் பொழுது வந்து சென்ற பிறகு (இரவில்);* ***வேலை உறைவிடம்வந்து மேயது ஆம் என -*** *கடலானது தான் தங்கும் இடத்தை வந்து சேர்ந்தது என்று சொல்லும்படியாக;* ***மருங்கிலாளொடும் -*** *இடையில்லாத சீதையோடும்;* ***கோலை வந்து உமிழ் சிலைத் தம்பி -*** *அம்பை உமிழுகின்ற வில்லை உடைய தம்பியாகிய இலக்குவன்;* ***கோலிய -*** *செய்தமைத்த;* ***சாலை வந்து எய்தினான் -*** *சாலை இருக்கும் இடத்தைவந்தடைந்தான்.*

*நீலக்கடல் போன்ற நிறம் உடையவன் இராமன் ஆதலின், கடல் தன் உறைவிடம் போனதுபோல என்று உவமைப்படுத்தினார். 43*

*இலக்குவன் அமைத்த சாலை*

***2089. நெடுங் கழைக் குறுந் துணி நிறுவி, மேல் நிரைத்து,***
***ஒடுங்கல் இல்நெடு முகடு ஒழுக்கி, ஊழுற***
***இடுங்கல் இல் கை விசித்து ஏற்றி, எங்கணும்***
***முடங்கல் இல் வரிச்சு மேல் விரிச்சு மூட்டியே.***

***நெடுங் கழைக் குறுந்துணி நிறுவி மேல் நிரைத்து -*** *நீண்ட மூங்கில்களின் சிறியதுண்டுகளை நிறுத்தி மேலே வரிசையாக அமைத்து;* ***ஒடுங்கல் இல் நெடு முகடு ஒழுக்கி-*** *வளைதல் இல்லாத நீண்ட தூலத்தை நேராக நிறுத்தி;* ***ஊழ் உற இடுங்கல் இல் கை ஏற்றிவிசித்து -*** *முறையாகப் பொருந்தக் கீழே தாழ்தல் இல்லாத பக்கக் கழிகளை மேல் ஏற்றி நன்கு இறுக்கிக் கட்டி;* ***முடங்கல் இல் வரிச்சுமேல் -*** *வளைதல் இல்லாத அந்தக் கட்டியவரிச்சுக்களின் மேலே;* ***எங்கணும் -*** *எவ்விடத்தும்;* ***விரிச்சு மூட்டி -*** *விரித்து மூடு செய்து. நீளக்கழி, குறுக்குக் கழிகள், தூலம் முதலியன கூரை வேய்வதற்கு முன் கட்டப் பெறுவன. விரிச்சு - விரித்து. ஏகாரம் ஈற்றசை. 44*

***2090. தேக்கு அடைப் படலையின் செறிவு செய்து, பின்,***
***பூக் கிளர் நாணலின் புல்லு வேய்ந்து, கீழ்த்***
***தூக்கிய வேய்களின் கவரும் சுற்றுறப்***
***போக்கி, மண் எறிந்து, அவை புனலின் தீற்றியே.***

**தேக்கு அடைப் படலையின் செயிவு செய்து** - தேக்க இலை கொண்டு மேல் கூரையைச்செறிய மூடி; **பின் -** பிறகு; **பூக் கிளர் நாணலின் புல் வேய்ந்து-** பூத்துவிளங்கும் நாணற் புல்லை மேலே பரப்பி; **கீழ்த் தூக்கிய வேய்களின் -** கீழேநிறுத்தப் பெற்ற மூங்கில் கழிகளால்; **சுற்றுறச் சுவரும் போக்கி -** சுற்றுப்பக்கமெல்லாம் சுவரைச் செய்து; **மண் எறிந்து -** அதன்மேல் மண்ணை அடித்து; **அவை -** அச்சுவரை; **புனலின் தீற்றி -** தண்ணீரால் மெழுகிப் பூசி.

*முதலில் இலைகளை வேய்ந்து அதன் மேல் நாணற் புல்லைப் பரப்பினான் என்க. இலைகள்நாணற்புல் விழாமல் தாங்குவன. மூங்கிற் பிளாச்சுகளின் மேல் மண்பூசித் தண்ணீரால் மெழுகிச்சுற்றுச் சுவர் அமைத்தானாம். ஏகாரம் ஈற்றசை.* ***45***

***2091. வேறு இடம், இயற்றினன் மிதிலை நாடிக்கும்,***
***கூறின நெறி முறை குயிற்றி, குங்குமச்***
***சேறு கொண்டு அழகுறத் திருத்தி, திண் சுவர்***
***ஆறு இடு மணியொடு தரளம் அப்பியே.***

**மிதிலை நாடிக்கும்** - சீதைக்கும்; **வேறும் இடம் இயற்றினன்** - தனி இடத்தைச் செய்து அமைத்தான் (எவ்வாறு எனில்); **கூறின நெறி முறை குயிற்றி** - மேலே சொன்ன முறைப்படி செய்து அதன்மேல்; **குங்குமச் சேறு கொண்டு அழகுறத் திருத்தி** - குங்குமக் குழம்பைக் கொண்டு அழகாகச் சுவர்களை ஒழுங்கு செய்து; **திண்சுவர்** - வலிய சுவரிலே; **ஆறு இடு மணியொடு தரளம அப்பி** - ஆற்றிலிருந்து கிடைத்த மணிக்கற்களோடு முத்துகளையும் பொருத்தி.

*பிராட்டியின் தனி இடத்தைக் குங்குமக் குழம்பால் பூசி, மணியும் முத்தும் சுவர்களிலே அப்பி அழகு செய்தமை கூறினார், ஏகாரம் ஈற்றசை.*
***46***

***2092. மயிலுடைப் பீலியின் விதானம் மேல் வகுத்து,***
***அயிலுடைச் சுரிகையால் அருகு தூக்கு அறுத்து,***
***எயில் இளங் கழைகளால் இயற்றி, ஆறு இடு***
***செயலுடைப் புது மலர் பொற்பச் சிந்தியே.***

**மயிலுடைப் பீலியின் மேல் விதானம் வகுத்து -** மயிலின் தோகை கொண்டு மேல்கட்டியைச் செய்தமைத்து; **அயில் உடைச் கரிகையால் -** கூர்மை உடைய வாளால்; **அருகுதூக்கு அறுத்து -** பக்கங்களிலே தொங்கல் தொங்கவிட்டு; **எயில் -** மதிலை; **இளங்கழைகளால் இயற்றி -** இளைய மூங்கில்களால் செய்தமைத்து; **ஆறு இடு செயல் உடைப்புதுமலர் பொற்பச் சிந்தி -** ஆற்றின் அருகே இருந்து கொணர்ந்த நல்ல புதிய மலர்களை அழகுறஅங்கங்கே சிதறி.

*மகளிர் இருக்கும் இடம் ஆதலின் மயில் தோகையால் விதானம் அமைத்தான். பக்கங்களில்மாலைகளைத் தொங்க விடுதல் அழகு நோக்கி. ஏகாரம் ஈற்றசை.*
***47***

*இராமன் சாலையில் சீதையோடு குடி புகுதல்*

***2093. இன்னணம் இளையவன் இழைத்த சாலையில்,***
***பொன் நிறத் திருவொடும் குடி புக்கான் அரோ! -***
***நல் நெடுந் திசைமுகன் அகத்தும், நம்மனோர்க்கு***
***உன்ன அரும் உயிருளும், ஒக்க வைகுவான்.***

***இன்னணம் -*** *இவ்வாறு;* ***இளையவன் இழைத்த சாலையில் -*** *இலக்குவன் செய்துஅமைத்த சாலையில்;* ***நல் நெடும் திசை முகன் அகத்தும் -*** *நல்ல பெரிய பிரமதேவனதுநெஞ்சத்திடத்தும்;* ***நம்மனோர்க்கு*** *- நம்மை ஒத்தவர்களுக்கு;* ***உன்ன அரும்உயிருளும் -*** *நினைத்தற்கரிய உயிரினுக்குள்ளும்;* ***ஒப்ப -*** *ஒரு தன்மையாக;* ***வைகுவான்-*** *என்றும் நீங்காது உடன் உறைகின்ற பரம்பொருளாகிய இராமன்;* ***பொன்நிறத்திருவொடும் குடி புக்கான் -*** *பொன்னிறம் படைத்த இலக்குமியின் அவதாரம் ஆகியசீதையோடும் குடி புகுந்தான்.*

*பிரமன் நெஞ்சிலும், உயிரிலும் உறைபவன் இச் சிறிய சாலையில் அவதார நிமித்தம் குடிபுகுந்தான் என்றது அரியனாய் எளியனாம் அவனது சௌலப்பயத்தைக் காட்டியது. 'அரோ'அசை.* ***48***

*இராமன் சாலையில் உவந்திருத்தல்*

***2094. மாயம் நீங்கிய, சிந்தனை, மா மறை,***
***தூய பாற்கடல், வைகுந்தம், சொல்லல் ஆம்***
***ஆய சாலை, அரும் பெறல் அன்பினன்,***
***நேய நெஞ்சின் விரும்பி, நிரம்பினான்.***

***மாயம் நீங்கிய சிந்தனை -*** *உலக மாயையிலிருந்து விடுபட்ட ஞானிகளது தெளிந்தமனம்;* ***மா மறை -*** *பெரிய வேதம்;* ***தூய பாற்கடல்-*** *(வியூகத்தில் தான்எழுந்தருளி இருப்பதாகிய) தூய்மையான திருப்பாற்கடல்;* ***வைகுந்தம் -*** *(நித்ய சூரிகள் என்றும் வாழ்வுக்கும் இருப்பாகிய)வைகுந்தம்;* ***என்று சொல்லல் ஆம் ஆய -*** *என்று சொல்லுதற்குப் பொருந்தியதாகிய;* ***சாலை -*** *சாலைக்கண்;* ***அரும் பெறல் அன்பினன் -*** *பெறலரும் அன்புடையனாகியஇராமபிரான்;* ***நேய நெஞ்சின்*** *- தனது அன்புள்ளத்தால்;* ***விரும்பி -*** *மகிழ்ச்சி அடைந்து;* ***நிரம்பினான் -*** *நிறைவடைந்தான்.*

*இராமன் குடிபுகுந்த காரணத்தால் திருமாலாகிய பரம் பொருள் வீற்றிருக்கும் இடங்களாக அச்சாலை ஆகியது.* ***49***

*சாலை அமைத்த இலக்குவனை நினைந்து இராமன் நெகிழ்ந்து கூறுதல்*

***2095. மேவு கானம், மதிலையர்கோன் மகள்***
***பூவின் மெல்லிய பாதமும் போந்தன;***
***தா இல் எம்பி கை சாலை சமைத்தன-***
***யாவை, யாதும் இலார்க்கு இயையாதவே?***

***மிதிலையர் கோன் மகள் -*** *மிதிலா நகரத்து அரசனாகிய சனகன் மகளாகியசீதையின்;* ***பூவின் மெல்லிய பாதமும் -*** *பூவைக் காட்டிலும் மிக மெல்லியவாகியபாதங்களும்;* ***மேவு கானம் போந்தன -*** *கொடிய காட்டில் நடந்து வந்தன;* ***தா இல்எம்பி கை -*** *குற்றம் அற்ற என் தம்பியின் கைகள்;* ***சாலை சமைத்தன -*** *குடிலைஅமைத்துத் தந்தன;* ***யாதும் இல்லார்க்கு -*** *எந்தத் துணையும் இல்லாதவர்களுக்கு;* ***இயையாத -*** *வந்து சேராதன;* ***யாவை -*** *எவை (ஒன்றும் இல்லை.)*

*'பாதமும்' என்ற உம்மை சிறப்பும்மை; மென்மைத் தன்மையை நோக்கியது. பொதுப்பொருள்குறித்த இறுதி அடியமடால் இது வேற்றுப்பொருள் வைப்பணியாம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***50***

***2096. என்று சிந்தித்து, இளையவற் பார்த்து, 'இரு***
***குன்று போலக் குவவிய தோளினாய்!***
***என்று கற்றனை நீ இதுபோல்?' என்றான் -***
***துன்று தாமரைக் கண் பனி சோர்கின்றான்.***

***என்று சிந்தித்து-*** *என்று இவ்வாறு நினைத்து;* ***இளையவற் பார்த்து -*** *இலக்குவனைப் பார்த்து;* ***'இரு குன்று போலக் குவவிய தோளினாய்! -*** *இரு மலைகளைப்போலப் பொருந்திய தோள்களை உடையவனே!;* ***நீ இது போல் என்று கற்றனை? -*** *நீஇவ்வாறு குடில் அமைப்பதற்கு எப்பொழுது கற்றுக் கொண்டாய்?;'* ***என்றான் -*** *என்றுகேட்டவனாய்;* ***துன்று தாமரைக் கண் பனி சோர்கின்றான் -*** *நெருங்கிய தாமரை போலும்கண்கள் நீர் சிந்தப் பெறுகின்றவனாக ஆனான். இருவரும் ஒன்றாக வசிட்டர் பால் பயிலுதலின் இக்குடிசை அமைக்கும் கலையை என்று கற்றாய்? என்று இலக்குவனைப் பார்த்து மனம் நெகிழ்ந்து கூறினான் என்க.* ***51***

***2097. 'அடரும் செல்வம் அளித்தவன் ஆணையால்,***
***படரும் நல் அறம் பாலித்து, இரவியின்***
***சுடரும் மெய்ப் புகழ் சூடினென் என்பது என்?***
***இடர் உனக்கு இழைத்தேன் நெடு நாள்' என்றான்.***

***'அடரும் செல்வம் அளித்தவன் -*** *நெருங்கிய அரசச் செல்வத்தை எனக்குஅளித்தவனாகிய தயரதனது;* ***ஆணையால்-*** *கட்டளையால்;* ***படரும் நல் அறம் பாலித்து -*** *மேலும் மேலும் பரவிச் சென்று பிறவிதோறும் விளைவதாகிய நல்ல தருமத்தைப் பாதுகாத்து (வனம்புகுத்து);* ***இரவியின் சுடரும் -*** *சூரியனைப் போல ஒளிவீசி விளங்கும்;* ***மெய்ப் புகழ்-*** *உண்மையான புகழை;* ***சூடினென் என்பது என்?-*** *நான் மேற்கொண்டேன் என்பதனால் யாது பயன்?;* ***உனக்கு-; நெடுநாள் இடர் இழைத்தேன் -*** *பல நாள் துன்பத்தைச் செய்தேன்;* ***என்றான் -*** *என்று மனம் வருந்திக் கூறினான்.*

*'தயரனது சத்தியவாக்கைக் காப்பாற்ற வனம் புகுந்து புகழ் சூடினேன் ஆயினும், ஒரு பாவமும்அறியாத தம்பியான உனக்கு வனத்தில் என்னோடு அலைவதாகிய துன்பத்தை நெடுநாளாக இழைத்துள்ளேனே' என்று இராமன் இரங்கியதாகக் கொள்க. பிறருக்குத் துன்பம் செய்து தனக்குப் புகழ் உண்டாக நடப்பது அறநெறி ஆகுமா என்றான் இராமன்.* ***52***

*இலக்குவன் மறுமொழி*

***2098. அந்த வாய்மொழி ஐயன் இயம்பலும்***
***நொந்த சிந்தை இளையவன் நோக்கினான்.***
***'எந்தை! காண்டி, இடரினுக்கு அங்குரம்***
***முந்து வந்து முளைத்தது அன்றோ' என்றான்***

***ஐயன் -*** *இராமன்;* ***அந்த வாய்மொழி இயம்பலும் -*** *அந்த உள்ளம் கலந்தசொற்களைக் கூறிய அளவில்;* ***நொந்த சிந்தை இளையவன் நோக்கினான் -*** *வருந்தியமனத்தை உடைய இலக்குவன் (அச்சொறக்ளின் பொருளை) மனத்தின் கருதி;* ***'எந்தை! -*** *என் தந்தை போல்பவனே?;* ***காண்டி -*** *நான் சொல்வதை ஆராய்ந்து பார்ப்பாயாக;* ***இடரினுக்கு -*** *உன் துன்பத்துக்கு;* ***அங்குரம் -*** *முளையானது;* ***முந்தி வந்து முளைத்தது அன்றோ'*** *- நீ மூத்தவனாகப் பிறந்து தோன்றியதனால் உண்டாகியதல்லவா?* ***என்றான்*** *- என்று வருந்திக் கூறினான். இராமன் வருந்திக் கூறியது கேட்ட இலக்குவன் 'நீ மூத்தவனாகப் பிறந்ததனாலேயே வனவாசமாகிய துன்பத்தை அனுபவிக்க வேண்டியவனாக ஆகிவிட, உனக்குப் பணிவிடை செய்வதில் உவப்பாய் இருக்கும் எனக்குத் துன்பம் இழைத்ததாக நீ சொல்வது சரியாகுமா?' என்று கேட்பது போல இலக்குவன் மறுமொழி கூறினான். 'எனக்கு இது மகிழ்ச்சி தருவது' உன் துன்பமே பெரிது' என்றானாம். இனி, இவ்வாறன்றி 'உன்னால் எனக்குத் துன்பம் பெரிது உண்டாகவில்லை; துன்பத்துக்கு முளை முன்னாலேயே கைகேயியாகிய என் தாய் பெற்ற வரத்தால் வந்து தோன்றிவிட்டது அல்லவா? இதனால் நீ நெடுநாள் எனக்குத் துன்பம் இழைத்ததாகக் கருதி வருந்துதல் சரியன்று' என்றானாகக் கூறுதல் பொருந்தும். ஆயினும், அது இலக்குவன் தான் துன்பம் உறுவதாகக் கூறுவதாகப் பொருள் படும். ஆதலின், பொருந்துமாறு அறிக. பொதுவாக இத்துன்பத்துக்கெல்லாம் காரணம் நின்னால் ஆகியதன்று; முன்னரே தயரதன் கைகேயிக்கு வரம் தந்ததனால் உண்டாகியதே. இதற்கு நீ வருந்துதல் தகாது' என்றானாகவும் கூறலாம்.*
***53***

*இலக்குவனுக்கு இராமன் ஆறுதல் கூறல்*

***2099. 'ஆக, செய்தக்கது இல்லை' அறத்தினின்று***
***ஏகல் என்பது அரிது' என்றும் எண்ணினான்***
***ஓகை கொண்டவன் உள் இடர் நோக்கினான்***
***'சோக பங்கம் துடைப்பு அரிதால்' எனா,***

***ஆக -*** *அப்படியே இருக்கட்டும்;* ***செய்தக்கது இல்லை -*** *(துன்பத்துக்குப்பரிகாரமாகச்) செய்யக்கூடியது எதுவும் இல்லை;* ***அறத்தினின்று ஏகல் என்பது அரிது -*** *தருமத்திலிருந்து விலகிச் செல்வது என்பது நம் போன்றார்க்கு இயலாது;* ***என்று எண்ணினான்-*** *என்று தன் மனத்தில் (இராமன்) கருதினான்;* ***ஓகை கொண்டவன் -***

*(தனக்குத்தொண்டு செய்தலில்) மகிழ்ச்சி கொண்ட இலக்குவனின்;* ***உள் இடர் -*** *மனத்துன்பத்தை;* ***நோக்கினான் -*** *பார்த்து;* ***சோக பங்கம் -*** *இவ் இளையவனது துன்பத்தால்ஏற்பட்ட மனச் சோர்வு;* ***துடைப்பு அரிதால்' -*** *போக்குவது இயலாது;* ***எனா -*** *என்று கருதி.*

*'ஆக' என்பது உரையசை. 'ஆல்' அசை.* ***54***

## *2100.* பின்னும், தம்பியை நோக்கி, பெரியவன், 'மன்னும் செல்வத்திற்கு உண்டு வரம்பு' இதற்கு என்ன கேடு உண்டு? இவ் எல்லை இல் இன்பத்தை உன்னு, மேல் வரும் ஊதியத்தோடு' என்றான்.

***பெரியவன் -*** *இராமன்;* ***பின்னும் -*** *மறுபடியும்;* ***தம்பியை நோக்கி-*** *இலக்குவனைப் பார்த்து;* ***'மன்னும் செல்வத்திற்கு -*** *(உலகில்) பெறும் பொருட்செல்வத்திற்கு;* ***வரம்பு உண்டு -*** *இவ் வளவு என்று ஒரு எல்லை உண்டு;* ***இதற்கு -*** *இந்த வனவாசத் தவம் ஆகிய செல்வத்துக்கு;* ***என்ன கேடு உண்டு?-*** *என்ன அழிவு உண்டு;* ***இவ் எல்லை இல்இன்பத்தை மேல் வரும் ஊதியத்தோடு உன்னு' -*** *இந்த அளவுபடாத அழிவுபடாத இன்பவாழ்க்கையைமறுமையில் இத்தவத்தால் பெறும் நற்கதியாகிய இலாபத்தோடு சேர்த்து நினைப்பாயாக;'* ***என்றான்-.***

*அரசச் செல்வம் அழிவுடையது; அளவு உடையது. ஆனால், தவச் செல்வமோ அழிவற்றது;அளவற்றது; மறுமைக்கும் பயன் தரவல்லது. ஆகவே அரச போகத்தைவிட, வனவாசமே எனக்கு மகிழ்ச்சி தருவது ஆதலின், எனக்குத் துன்பம் விளைந்ததாகவே நான் கருதவில்லை; அதனை நினைத்து நீதுன்புறுவானேன்' என்றானாம் - இது 'இடரினுக்கு அங்குரம் முந்தி வந்து முளைத்தது அன்றோ' என்றுஇலக்குவன் கூறிய சொற்களுக்குப் பதில் போல் அமைந்து ஆறுதல் தருவதாயிற்று.* ***55***

இராமன் நோன்பு செய்து இனிமையாக இருத்தல்

## *2101.* தேற்றித் தம்பியை, தேவரும் கைதொழ, நோற்று இருந்தனன், நோன் சிலையோன்; இப்பால், ஆற்றல் மா தவன் ஆணையின் போனவர் கூற்றின் உற்றது கூறலுற்றாம் அரோ.

***நோன் சிலையோன் -*** *வலிய வில்லை உடைய இராமபிரான் (இவ்வாறு கூறி);* ***தம்பியைத் தேற்றி-; தேவரும் கைதொழ -*** *தேவர்ளும் வணங்கும்படியாக;* ***நோற்று இருந்தனன் -*** *தவம் செய்து இருந்தான்;* ***இப்பால் -*** *இனி;* ***ஆற்றல் மாதவன்ஆணையின் போனவர் கூற்றின் -*** *வலிமைமிக்க முனிவராய வசிட்டருடைய கட்டளையை மேற்கொண்டுசென்ற தூதுவர் செய்தியில்;* ***உற்றது -*** *நடந்த செய்தியை;* ***கூறல் உற்றாம்*** *- சொல்லத் தொடங்கினோம்.*

*வசிட்டன் அனுப்பப் பரதன்பால் கேகய நாட்டுக்குச் சென்ற தூதுவர் செய்தி இனி வருவதாம் -'அரோ' அசை.* ***56***

## *பள்ளிபடைப் படலம்*

*தயரத மன்னனை ஈமப் பள்ளியில் சேர்த்த செய்தியைக் கூறுவது ஆதலின் பள்ளிபடைப்படலம் எனப்பெற்றது. பள்ளி என்பது ஈமப்பள்ளி ஆகும். கல்வெட்டுகளில் இது 'பள்ளிபடை'என வருகின்றது.*

*வசிட்ட முனிவனால் அனுப்பப் பெற்ற, இராமன் முடிசூட்டு விழாச் செய்தியைத் தாங்கியதூதர் பரதன் தங்கியுள்ள கேகய நாட்டை அடைந்தனர். ஓலையைக் கொடுத்தனர். அது கண்ட பரதன்மகிழ்ந்து கோசல நாடு அடைகின்றான். அவலத்தில் ஆட்பட்டுப் பொலிவழிந்த கோசல நாட்டையும்அயோத்தியையும் கண்டு திகைக்கின்றான்.*

*கைகேயி மூலமாக நடந்த நிகழ்ச்சிகளை அறிந்து மனங் கலங்குகிறான்; தாயைவெறுக்கின்றான்; தன்னையே நொந்துகொள்கிறான்; கோசலை திருவடியில் பணிகிறான். வசிட்ட முனிவனால் தன்னைத் தந்தை 'மகனல்லன்' என நீக்கியது அறிந்து மனம் மாழ்கிறான். முனிவன்கருத்துப்படி சத்ருக்கனனால் தந்தைக்குரிய ஈமக்கடன்களை நிறைவேற்றுகிறான்.*

*பத்து நாள் கிரியைகள் முற்றிய பின்னர் முனிவனும் பிறரும் மந்திரக் கிழவரும் மன்னரின்றி நாடு இருத்தல் தகாது என்று கருதிப் பரதனிடம் வந்து கூடுகின்றார்கள் என்பதுவரைஉள்ள செய்திகள் இப்படலத்திற் கூறப்பெறுகின்றன.*

*தூதுவர் பரதனிடம் தம் வருகையை அறிவித்தல்*

*கலிவிருத்தம்*

***2102. பொரு இல் தூதுவர் போயினர், பொய் இலார்;***
***இரவும் நன் பகலும் கடிது ஏகினார்;***
***பரதன் கோயில் உற்றார், 'படிகாரிர்! எம்***
***வரவு சொல்லுதிர் மன்னவற்கே!' என்றார்.***

***பொற் இலார், பொரு இல் தூதுவர் -*** *உண்மை உள்ளவர்களும் தமக்கு வேறு ஒப்புஇல்லாதவர்களும் ஆகிய தூதர்;* ***போயினர் -*** *(அயோத்தியிலிருந்து) சென்றார்கள்;* ***இரவும் நன்பகலும் -*** *இரவிலும் நல்ல பகலிலும்;* ***கடிது -*** *(ஓய்வில்லாமல்) விரைந்து;* ***ஏகினார் -*** *சென்றார்கள்;* ***பரதன் கோயில் உற்றார் -*** *பரதன் தங்கியுள்ள (கேகய நாட்டு)அரண்மனையை அடைந்தார்கள்;* ***'படிகாரிர்! -*** *வாயில் காவலர்களே!;* ***மன்னவற்கு -*** *பரதனுக்கு;* ***எம் வரவு சொல்லுதிர் -*** *(அயோத்தியிலிருந்து வந்திருக்கின்ற) எம்வருகையைத் தெரிவியுங்கள்;'* ***என்றார் -*** *என்று சொன்னார்கள்.*

*உள்ளதை உள்ளவாறே சொல்லுதல், ஏவியவர் கூறியதை, அனுப்பிய செய்தியை மாற்றாது உரைத்தல் என்பன தூதர் இயல்பு, ஆதலின், 'பொய் இலார்' என்றார். 'படிகாரிர்' என்பது 'பரதீஹாரர்' என்னும் வடசொல் திரிந்து ஆகிய சொல். 'காரர்' என்பது 'காரிர்' எனவிளியேற்றது. 'ஏ' பிரிநிலை; பரதனுக்கே தெரிவிக்க வேண்டும் ஏனையோர்க்கன்று எனலின்,. 1*

தூதுவரிடம் பரதன் நலம் விசாரித்தல்

***2103. 'தூதர் வந்தனர், உந்தை சொல்லோடு' என,***
***காதல் முந்திக் களிக்கின்ற சிந்தையான்,***
***'போதுக ஈங்கு' என, புக்கு, அவர் கைதொழ,***
***'தீது இலன்கொல் திரு முடியோன்' என்றான்.***

***'உந்தை சொல்லோடு தூதர் வந்தனர்' என்*** - *உன் தந்தையாகிய தயரதன் சொல்லி அ.னுப்பியசெய்தியோடு தூதுவர் வந்துள்ளார் என்று (வாயில்காவலர்) கூற;* ***களிக்கின்ற சிந்தையான்*** - *மகிழ்ச்சி அடைகின்ற மனம் உடைய பரதன்;* ***காதல் முந்தி*** - *தந்தையின் சொற்களை அறியும் ஆசை முற்பட்டு;* ***ஈங்குப் போதுக' என*** - *(அவர்கள்) உள்ளே வருக என்று கூற;* ***அவர்*** - *அத்தூதுவர்;* ***புக்கு*** - *உள்நுழைந்து;* ***கைதொழ*** - *கைகளைக் குவித்து வணங்கி நிற்க;* ***'திரு முடியோன்*** - *மாமுடி கவித்த மன்னர் மன்னனாகிய தயரதன்;* ***தீது இலன் கொல்'*** - *யாதொரு தீமையும் இல்லாமல் நலமாக இருக்கின்றானா?;* ***என்றான்*** - *என்று (தன் தந்தையாருடைய நலத்தை)விசாரித்தான்,.*

*தந்தையின் உடல் நலனும் அவனால் ஆளப்பெறும் நாட்டின் நலனும் அடங்கத் 'தீது இலன்கொல்' என்று விசாரித்தான். பரதனைத் தூதுவர் காணும் போது அயோத்தியில் தயரதன்இறந்துபட்டுள்ளான் ஆதலின், அது அவனை அறியாமல் அவன் வாக்கில் 'நலமாய் உளனோ' என்றுவராமல் 'தீது இலன் கெரல்' என்று வந்ததாகக் கவிஞன் காட்டுவது குறிப்புமொழி எனப்பெறும்.* ***2***

தூதுவர் பதிலும் பரதன் விசாரிப்பும்

***2104. 'வலியன்' என்று அவர் கூற மகிழ்ந்தனன்;***
***'இலை கொள் பூண் இளங்கோன் எம்பிரானொடும்***
***உலைவு இல் செல்வத்தனோ?' என, 'உண்டு' என,***
***தலையின் ஏந்தினன், தாழ் தடக் கைகளே.***

***அவர்*** - *அத் தூதுவா;* ***'வலியன்' என்று கூற*** - *(தயரதன்) நலமாக உள்ளான் என்று கூற;* ***மகிழ்ந்தனன்*** - *(அது கேட்டுப் பரதன்) மகிழ்ச்சி அடைந்தான்; (பின்னர்ப் பரதன்)* ***'எம்பிரானொடும்*** - *எம் தலைவனாகிய இராமபிரானொடும்' இலைகொள் பூண் இளங்கோன் -இலைத்தொழிலாற் சிறப்புற்ற அணிகளை அணிந்த இளைய பெருமாளாகிய இலக்குவன்;* ***உலைவு இல்செல்வத்தனோ'*** - *தளர்ச்சியும் தடுமாற்றமும் இல்லாத செல்வம் உடையவனாய் இருக்கின்றானோஎன்று கேட்க;* ***'உண்டு' என*** - *(அத் தூதுவர் அங்ஙனமே அவர்களும் குறையின்றி) நலமாய்இருக்கின்றார்கள் என்று கூறு;* ***தாழ்தடக் கைகள்*** - *தாள் அளவாக நீண்ட கைகளை;* ***தலையில்ஏந்தினன்*** - *(இராம லக்குவர்கள் உள்ள திசை நோக்கிப் பரதன்) தலைமேல் வைத்து வணங்கினான்.*

*'வலியன்' என்றது நிகழ்வை நோக்கப் பொய்தான்; எனினும் யாதொன்றும் தீமை இலாதசொல்லும் வாய்மை என உணர்க. இராமனை உடன் காத்து இணைபிரியாது இருத்தலின் 'இளங்கோனை'முதலிற் கூறினார். 'ஒடு' உருபு இங்கே உயர்ந்த இராமன் மேல் வந்தது; "ஒருவினை ஒடுச்சொல்உயர்பின் வழித்தே" என்பவாகலின். (தொல். சொல். வேற். மயங். 8) மனக்குறைவும், உடல்தளர்வும் இல்லாமல் இருப்பதே*

*செல்வம் ஆகும். ''செல்வம் என்பது சிந்தையின் நிறைவே'' (குமர -திரட்டு - 475) 'நோய் அற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பவாதலின், 'உலையில் செல்வத்தனோ' என்பதனுள் எல்லாம் விசாரித்தானாக ஆயிற்று. முன் பாட்டிற்போல் 'இராமன்அரகச் செல்வத்தைப் பெற்றுத் தற்போது இழந்துள்ளான்' என்பது பரதன் சொல்வழிஅவனையறியாமலே வந்ததை 'உலைவு இல் செல்வத்தனோ' என்பது குறிப்பிடும். இது குறிப்புமொழி.*

*தூதுவர் திருமுகம் கொடுத்தல்*

***2105. மற்றும் சுற்றத் துளார்க்கும் வரன்முறை***
***உற்ற தன்மை வினாவி உவந்தபின்,***
***'இற்றது ஆகும், எழுது அரு மேனியாய்!***
***கொற்றவன்தன் திருமுகம் கொள்க' என்றார்.***

***மற்றும்** - அதன்மேலும்; **சுற்றத்து உள்ளார்க்கும்** - உறவின் முறையின் உள்ளவர்களுக்கும்; **வரல் முறை** - (கேட்க வேண்டிய) மரபு முறைப்படி; **உற்ற தன்மை** - நிகழ்ந்துள்ள நன்மைகளை; வினாவி விசாரித்து (அறிந்து); **உவந்த பின்** - (பரதன்) மகிழ்ச்சி அடைந்த பிறகு; **'எழுதுஅரு மேனியாய்** - (அத் தூதுவர்) ஓவியத்தில் எழுதுதற்கு இயலாத அழகிய திருமேனியை உடைய பரதனே!; **கொற்றவன் தன்** - மன்னனுடைய; **திருமுகம்-; இற்றது ஆகும்** - இத் தன்மையுடையது ஆகும்; **கொள்க'** - இதனைப் பெற்றுக்கொள்க; என்றார் -*

*முன்னர் விசாரிக்கப்படுபவர், பின்னர் விசாரிக்கப்படுபவர் என்றும், இன்னாரைஇவ்வாறு விசாரித்தல் வேண்டும். என்றும் உலக வழக்கில் உள்ள முறைப்படி விசாரித்தலை 'வரல் முறை' என்றார். இத் தூதுவர் ஓலை கொடுத்து நிற்பார் என்னும் வகையைச் சார்ந்த தூதுவர். தான் வகுத்துக் கூறுவான். கூறியது கூறுவான், ஓலை கொடுத்து நிற்பான் என்னும் மூவகையினர் தூதுவர் இவரை முறையே தலை, இடை, கடை என வழங்கல் நூல் வழக்கு. (குறள். பரி. உரை. 687) 4*

*பரதன் திருமுகம் பெற்று மகிழ்தல்*

***2106. என்று கூறலும், ஏத்தி இறைஞ்சினான்,***
***பொன் திணிந்த பொரு இல் தடக் கையால்,***
***நின்று வாங்கி, உருகிய நெஞ்சினான்***
***துன்று நாள்மலர்ச் சென்னியில் சூடினான்.***

***என்று கூறலும்** - என்று தூதுவர் கூறிய உடனே; **ஏத்தி** - (பரதன் அத் திருமுகத்தக்)கொண்டாடி வணங்கி; **பொன் திணிந்த பொரு இல் தடக்கையால்** - பொன்னாற் செய்த அணிகளைஅணிந்த ஒப்பற்ற நீண்ட கைகளால்; **நின்று** - எழுந்து நின்று; **வாங்கி** - வாங்கிக்கொண்டு; **உருகிய நெஞ்சினான்** - (அன்பினால்) கரைந்த மனம் உடையனாய்; **நாள் மலர் துன்று சென்னியில்** - அன்றவர்ந்த மலர்கள் நெருங்கச் சூடப்பெற்ற தன்தலை மீது; **சூடினான்** - (அத்திருமுகத்தை)அணிந்துகொண்டான்.*

*பொன்னாற் செய்த அணி நெருக்கமாகச் கைகளில் இருத்தலின் கையைப் 'பொன் திணிந்த'என்றார், ஏத்துதல், நின்று வாங்குதல், தலைமேற் கொள்ளுதல் பரதன் அன்பையும், மன்னன்சார்பில் வந்த திருமுகத்தின் பால் காட்டும் மதிப்பையும் காட்டும்.* ***5***

*திருமுகம் கொணர்ந்த தூதர்க்குப் பரதன் பரிசு அளித்தல்*

***217. சூடி, சந்தனம் தோய்த்துடைச் சுற்று மண்***
***மூடு தோட்டின் முடங்கல் நிமிர்த்தனன்;***
***ஈடு நோக்கி வந்து எய்திய தூதர்க்குக்***
***கோடி மேலும் நிதியம் கொடுத்தனன்.*** [1]

**சூடி** - *(திருமுகத்தைத்) தலையிற் சூடிய பின்னர்;* **சந்தனம் தோய்த்து** - *(மேலே) சந்தனம்பூசி;* **சுற்று மண் மூடு உடை** - *சுருட்டப்பெற்று அரக்குமண் வைத்து (முத்திரை இட்டு) மூடுதல் உடைய;* **தோட்டின் முடங்கல்** - *பனை ஓலையால் ஆகிய கடிதத்தை;* **நிமிர்த்தனன்** - *நீட்டிப் (பிரித்து)பார்த்தான்;* **ஈடு** - *(அத் திரு முகத்தில்) இடப்பெற்ற செய்தியை;* **நோக்கி** - *பார்த்து(வாசித்து);* **வந்து எய்திய தூதர்க்கு** - *(அத் திருமுகத்தை) கொண்டு வந்து தன்னைச் சந்தித்து தூதுவர்க்கு;* **கோடி மேலும் நிதியம்** - *கோடி அளவிற்கு மேற்பட்ட செல்வங்களை;* **கொடுத்தனன்** - *(பரதன்) பரிசாக அளித்தான்.*

*நல்ல செய்தியைத் தாங்கிய தோற்றம் காட்டுதற்குச் சந்தனம் பூசப்பெற்றது. பனைஓலையைச் சுருட்டி முத்திரை இட்டு அனுப்புதல் வழக்கம். சுருட்டுதலின் 'முடங்கல்' என்றுதிருமுகத்துக்கு ஒரு பெயர், வாசிப்பார் முதலில் சுருளைப் பிரித்து நீட்ட வேண்டுதலின்'நிமிர்த்தனன்' என்றார். இடப்பெற்றது 'ஈடு'. ஓலையில் இடப்பெற்ற செய்தி என்பது பொருள்.*

*கோசல நாட்டில் நிகழ்ந்த அவலச்செய்தி எதுவும் இல்லாத திருமுகவே அனுப்பப்பட்டது.முடிசூட்டு விழாவாகிய நற்செய்தியும் அதில் இல்லை. வசிட்டரின் ராஜதந்திரம் எவ்வாறு சொல்அமைத்தது என்ற குறிப்பினைக் கவிஞர் தரவில்லை. துயர் ஊட்டாமல் பரதனை வரவழைக்கவேண்டும் என்பதொன்றே மன்னன் சார்பில் செயல்பட்ட முனிவரின் நோக்கம்.* ***6***

*பரதன் சத்துருக்கனனோடு அயோத்திக்குச் செல்லுதல்*

***2108. வாள் நிலா நகை தோன்ற, மயிர் புறம்***
***பூண, வான் உயர் காதலின் பொங்கினான்,***
***தாள் நிலாம் மலர் தூவினன் - தம்முனைக்***
***காணலாம் எனும் ஆசை கடாவவே.***

**தம் முனைக் காணலாம் எனும் ஆசை** - *(பரதன்) தன் முன்னவனாகிய இராமனைக் காணப்போகிறோம் என்னும் ஆர்வம்;* **கடாவ** - *(மேன்மேலும் மிகுந்து) உள்ளத்தைத் தூண்டுதலினால்;* **வாள்நிலா நகை தோன்ற** - *ஒளி நிலாப்போன்ற மகிழ்ச்சிச் சிரிப்புத் தோன்றவும்;* **புறம் மயிர்பூண** - *உடம்பின் வெளிப்பகுதியெல்லாம் மயிர்க்கூச் செறிந்து அழகுறத் தோன்றவும்;* **வான் உயர் காதலின்** - *மிக உயர்ந்த அன்பினால்;* **பொங்கினான்** -

*நிரம்பி வழியப்பெற்றவனாய்;* ***தாள்*** *- (மனத்தால்) இராமபிரான் திருவடிகளில்;* ***நிலாம் மலர்*** *- பொருந்திய மலர்களை;* ***தூவினன்*** *- பாவனையால் தூவி வழிபட்டான்.*

*மகிழ்ச்சி மிகப் பெற்றவர்க்குச் சிரிப்புத் தோன்றல் மயிர்க்கூச் செறிதல் இயல்பு. ''ஒன்றன் மதுரச் சுவைக்கு அதிசயங் கூறுவார் 'மயிரினைச் செவ்வன் நின்றன' என்பது போலக்கொள்க.'' (தொல். பொருள். மெய்ப். பேரா. உரை 14) என்பதும் காண்க.*

*தம் முன்னைக் காணும் பெருவிருப்புத் தலைதூக்குதலின் இராமன் திருவடிகளைப் பாவனையால்கண்டு மலர் தூவித் தொழுதான் என்க. இராமபிரான் மாட்டுப் பரதனுக்குள்ள பெருங் காதலும், பக்தியும் இங்கே சொல்லப்பெறுவது கதையின் பின்னோட்டத்தில் பரதன் உளப்பாங்கைப் பெரிதும் சித்திரிக்கப்பயன்படும். நிலாம்மலர் - விளக்கம் சிறந்த மலர் எனப் பொருள்கூறுலும் ஒன்று. முடங்கலின்மீது மலர் தூவினான எனல் ஏற்புடைத்தாயின் கொள்க. 'ஏ' ஈற்றசை.* *7*

பரதன் சத்ருக்கனனோடு போதல்

***2109.*** **'எழுக சேனை' என்று ஏவினன்; எய்தினன்**
**தொழுது, கேகயர் கோமகன் சொல்லொடும்,**
**தழுவு தேரிடைத் தம்பியொடு ஏறினான்;**
**பொழுதும் நாளும் குறித்திலன் போயினான்.**

***(உடனே பரதன்) எய்தினன்*** *- அரண்மனையை அடைந்து;* ***'எழுக' என்று ஏவினன்*** *- (தன்னுடன்வந்த) சேனைகள் அயோத்திக்குப் புறப்படுக என்று கட்டளை இட்டு;* ***கேகயர் கோமகன் தொழுது*** *-கேகய தேசத்தரசனும் தன் பாட்டனும் ஆகிய யுதாசித்தை வணங்கி;* ***சொல்லொடும்*** *- அவன்சொல்லிய செய்தியுடனே;* ***தம்பியொடு*** *- தம்பியாகிய சத்ருக்கனனோடு; தழுவு தேரிடை -குதிரைகள் பூட்டப் பெற்ற தேரிடத்தில்;* ***நாளும் பொழுதும் குறித்திலன்*** *- புறப்பட வேண்டியநல்ல நாளையும், நல்ல நேரத்தையும் பற்றிச் சித்தியாது;* ***ஏறினான் போயினான்*** *- ஏறிச் சென்றான்.*

*இராமனைக் காண்பதில் உள்ள பேரார்வம் உள்ளே உந்துகின்ற படியால் உடனே புறப்பட்டான் என்க. கைகேயியின் தந்தை கேகயர் கோமகனாகிய 'யுதாசித்து' என்பான். அவன் அயோத்தியில் உள்ள மருமகன் மகள் முதலியோரை விசாரித்து அனுப்பிய செய்தி 'சொல்' எனப்பெற்றது. 'தம்பியொடு' என்பது 'கைப்பொருளொடு' சென்றான் என்புழிப் போலத் தனக்கோர் முதன்மையில் வழி வந்தது 'ஓடு ' உருபு எனக் கொள்க. 'நாளும் பொழுதும்' என்பது மாறிநின்றது. நாள் என்பது விண்மீன் வழியும், பொழுது என்பது ஒரு நாளின் அறுபது நாழிகையும் ஓரை வழியும் நிகழும் காலம் என்க. தெய்வத்தைக் காணலுறுவார் நாள் பொழுது குறியார்; இராமன் பரதனுக்குத் தெய்வமாதலின் இவனும் அவ்வாறு புறப்பட்டான். பின்னர்ப் பொழுதும் நாளும் இவனுக்கு அயோதியில் தீய செய்தியை அறிவிக்கும் நிமித்தம் ஆயின என்பது குறிப்பாதலின் இங்கே குறித்திலன் என்பது தீய நாளிலும் தீய பொழுதிலும் அவன் எண்ணாமலே புறப்பட்டான் என்பது பொருள்.* ***8***

பரதனோடு சென்ற சேனையின் எழுச்சி

***2110. யானை சுற்றின; தேர் இரைத்து ஈண்டின;***
***மான வேந்தர் குழுவினர்; வாளுடைத்***
***தானை சூழ்ந்தன; சங்கம் முரன்றன;***
***மீன வேலையின் விம்மின, பேரியே.***

***(பரதன் சென்ற போது) யானை சுற்றின*** *- யானைகள் சூழ்ந்து சென்றன;* ***தேர் இரைத்துஈண்டின*** *- தேர்கள் மணி ஒலித்து நெருங்கிச் சென்றன;* ***மான வேந்தர் குழுமினர்*** *- பெருமையுடைய அரசர்கள் திரண்டு சென்றனர்;* ***வாள் உடைத் தானை சூழ்ந்தன*** *- வாள் முதலிய கருவிகளை ஏந்தியசேனா வீரர்கள் சுற்றிச் சென்றனர்;* ***சங்கம் முரன்றன*** *- சங்குகள் ஒலித்தன;* ***பேரி மீன வேலையின் விம்மின*** *- பெருமுரசுகள் மீனுடைய கடல் ஒலிபோல முழங்கின.*

*சக்கரவர்த்தியின் குமாரர்கள் ஆதலின் எங்குச் செல்லினும் சேனையோடு செல்லுதல்அவர்க்கு இயல்பு ஆதலின் படை எழுச்சியும் கூறற்பாலதாம். சுற்றின, ஈண்டின, சூழ்ந்தனஎனவும், முரன்றன, விம்மின எனவும் சொற்களை மாற்றியமைத்த அழகு இன்பம் பயப்பது.* ***9***

***2111. கொடி நெருங்கின; தொங்கல் குழீஇயின;***
***வடி நெடுங் கண் மடந்தையர் ஊர் மடப்***
***பிடி துவன்றின; பூண் ஒளி பேர்ந்தன,***
***இடி துவன்றின மின் என, எங்குமே.***

***(அச்சேனை எழுச்சி எங்கும்) கொடி நெருங்கின*** *- கொடிகள் நெருங்கி வந்தன;* ***தொங்கல்குழீஇயின*** *- பீலிக்குஞ்சம் எனப்படும் தொங்கல் திரண்டு வந்தன;* ***வடி நெடுங்கண் மடந்தையர்*** *-மாவடுப் போன்ற நீண்ட கண்களையுடைய மகளிர்;* ***ஊர் மடப்பிடி*** *- ஏறிச் செலுத்துகின்ற இளையபெண் யானைகள்;* ***துவன்றின*** *- நெருங்கிச் சென்றன;* ***பூண் ஒளி*** *- (அம்மகளிர் அணிந்த)கலன்களின் ஒளி;* ***இடி துவன்றின மின் என*** *- இடியொடு நெருங்கிய மின்னலைப்போல;* ***எங்கும்பேர்ந்தன*** *- எல்லா இடங்களிலும் விட்டு விளங்கின.*

*இம் மகளிர் அரச மகளிர்; போர்க்குச் செல்லாத சேனைகள் ஆதலின், வடி - மாவடு; கூர்மை எனப் பொருள்கூறலும் ஒன்று. அணிகள் ஒளியும், ஒலியும் விட்டு விட்டு நிகழ்தலின் 'இடிதுவன்றின மின' என உவமை கூறப் பெற்றது எனலாம். தொங்கல் - பிச்சம் எனப்பெறும், 'ஏ'ஈற்றசை.* ***10***

***2112. பண்டி எங்கும் பரந்தன; பல் இயம்***
***கொண்டு இயம்பின கொண்டலின்; கோதையில்***
***வண்டு இயம்பின; வாளியின் வாவுறும்,***
***செண்டு இயங்கு பரியும் செறிந்தவே.***

***பண்டி*** *- வண்டிகள்;* ***எங்கும் பரந்தன*** *- எல்லாவிடங்களிலும் பரவிச் சென்றன;* ***பல்இயம்*** *- பலவகையான வாத்தியங்கள்;* ***கொண்டலின் கொண்டு இயம்பின*** *- மேக முழக்கத்தைப்போல ஒலிகொன்டு ஒலித்தன;* ***கோதையில்*** *- மைந்தரும் மகளிரும் சூடிய மாலையில்;* ***வண்டு இயம்பின*** *- வண்டுகள் ஒலித்தன;* ***செண்டு இயங்கு*** *-*

*வையாளி வீதியில் உலாவுகின்;* ***வாளியின் வாவுறும் பரியும்*** *- அம்பைப்போல விரைந்து செல்கின்ற குதிரையும்; செறிந்த - நெருங்கிச் சென்றன.*

*சேனைகள் செல்லுதலின் உணவு முதலிய உடன் கொண்டு செல்லும் வண்டிகள் எங்கும்பரந்தனவாம். செண்டு வட்ட வடிவமாக அமைத்த மைதானம். இதனைச் செண்டு வெளி என்பது அக்காலவழக்கு. 11*

***2113. துளைமுகத்தின் சுருதி விளம்பின;***
***உளை முகத்தின உம்பரின் ஏகிட,***
***விளை முகத்தன வேலையின் மீது செல்***
***வளை முகத்தன வாசியும் வந்தவே.***

***சுருதி*** *- வேத ஒலி;* ***துளை முகத்தின்*** *- உள் துளையுடைய குழலின் மூலமாக;* ***விளம்பின*** *- ஒலிக்கப்பெற்றன;* ***உளை முகத்தின*** *- தலையாட்டம் பொருந்தியனவும்;* ***உம்பரின் ஏகிட*** *-ஆகாயத்தில் செல்வதற்கு;* ***விளைமுகத்தன*** *- வல்ல செலவினையுடையவும்;* ***வேலையின் மீது செல்*** *- கடலின் மீது, செல்லும் ஆற்றல் உடையனவும் (ஆகிய);* ***வளை முகத்தன*** *- வளைந்த முகத்தினைஉடைய;* ***வாசியும்*** *- குதிரைகளும்;* ***வந்த*** *- இப்படைக்குழுவில் வந்தன.*

*"குழுவு நுண் தொளை வேய்" என்றார் முன்னும். (2073.) குதிரைப் படை வருணனையில் குழலிசைபற்றிய குறிப்பு ஏன் - விளங்கவில்லை. 12*

***2114. வில்லின் வேதியர், வாள் செறி வித்தகர்,***
***மல்லின் வல்லர், கரிகையின் வல்லவர்,***
***கொல்லும் வேல் குந்தம் கற்று உயர் கொற்றவர்,***
***தொல்லை வாரணப் பாகரும், சுற்றினார்.***

***வில்லின் வேதியர்*** *- வில் வித்தைக்குரிய நூலில் தேர்ச்சியடைந்தவர்களும்;* ***வாள்செறி வித்தகர்*** *- வாட்போர் புரிவதில் திறமை உடையவரும்;* ***மல்லின் வல்லார்*** *- மல்சண்டையில் வலிமை படைத்தவரும்;* ***கரிகையின் வல்லவர்*** *- குற்றுடைவாளை வீசுதலில் வல்லவர்களும்;* ***கொல்லும்*** *- (பிறரை) அழிக்கின்ற;* ***வேல் குந்தம் சுற்று உயர் கொற்றவர்*** *-வேல் ஈட்டி ஆகிய படைகளை வீசக் கற்று உயர்ந்த வெற்றியாளர்களும்;* ***தொல்லை*** *- பழமையான(அனுபவம் மிக்க);* ***வாரணப் பாகரும்*** *- யானை ஓட்டுநரும்;* ***சுற்றினார்*** *- சூழ்ந்து வந்தார்கள்.*

*வேதம் வல்லவர் வேதியர். இங்கு வில் வேதம்; தனுர் வேதம் என்று வடிமொழியிற்குறிப்பிடுவர். கொல்லும் வேல் உபசார வழக்கு. 13*

***2115. எறிபகட்டினம், ஆடுகள், ஏற்றை மா,***
***குறி கொள் கோழி, சிவல், குறும்பூழ், நெடும்***
***பொறி மயிர்க் கவுதாரிகள், போற்றுறு***
***நெறியின் மாக்களும் முந்தி நெருங்கினார்.***

***எறி*** - ஒன்றை ஒன்று எறிகின்ற; ***பகட்டினம்*** - எருதுகளின் கூட்டம்; ***ஆடுகள்-; ஏற்றை மா*** - ஆண் விலங்குகள்; ***குறிகொள் கோழி*** - (தம்மை ஏவுவாரது) குறிப்பினைக் கொண்டு பொருதல் செய்யும் கோழிகள்; ***சிவல் -; குறும்பூழ் -; பொறி நெடுமயிர்க் கவுதாரிகள்*** -(உடலிற்) புள்ளியுடைய நீண்ட மயிர் உடையதாகிய கவுதாரிப் பறவையும் (என இவற்றைப்); ***போற்றுறு*** - பாதுகாத்து வைத்துப் போரிடச் செய்யும்; ***நெறியின்*** - துறையில் சிறந்த; ***மாக்களும்*** - மக்களும் ; ***முந்தி நெருங்கினர் -.***

*47,48 இப்பாடல்களை இங்கு ஒப்பு நோக்குக. பறவையும், விலங்கும் ஆகியவற்றைப்போரிடவிட்டுக் காண்டல் அக்கால அரசர்க்குரிய பொழுது போக்குகளுள் ஒன்றாதலின் அத்துறைவல்லவர் உடன் சென்றனர். 'நெறி இல் மாக்கள்' விலங்கையும் பறவையையும் தம்முன்மோதவிடுவார் நன்னெறியில்லாத அறிவற்றவர் ஆதலின் மாக்கள் எனப்பெற்றார் என்பதும் பொருள். ஈண்டு மக்களை 'மாக்கள்' என்று கூறியது செய்யுள் ஓசை நிறைத்தற் பொருட்டு,* ***14***

***2116. நிறைந்த மாந்தர் நெருங்கினர் நெஞ்சினில்,***
***'பறந்து போதும்கொல்' என்று, பதைக்கின்றார்,***
***பிறந்த, தேவர், உணர்ந்து, பெயர்ந்து முன்***
***உறைந்த வான் உறுவார்களை ஒக்கின்றார்.***

***நெருங்கினர் நிறைந்த மாந்தர்*** - ஒருவரோடு ஒருவர் நெருங்கிய அறிவால் நிறைந்த மக்கள்; ***நெஞ்சினில்*** - தம் மனத்தில்; ***'பறந்து போதும் கொல்' என்று*** - பறந்து சென்று விடுவோமா (அயோத்திக்கு) என்று கருதி; ***பதைக்கின்றார்*** - துடிக்கின்றார்; ***(இவர்கள்) தேவர்*** - தேவர்கள்; ***பிறந்து*** - சாபத்தால் மண்ணிற் பிறந்து; ***உணர்ந்து*** - பாச நீக்கத்தால் (அறிவுணர்ந்து) தாம் தேவர் என அறிந்து; ***பெயர்ந்து*** - இம்மண்ணுலகை விட்டு நீங்கி; ***முன் உறைந்த வான்*** - தாம் முன்பு வாழ்ந்த தேவருலகை; ***உறுவார்களை*** - அடைய விரைகின்றவர்களை; ***ஒக்கின்றார்*** - ஒப்பவராய் உள்ளார்கள்.

*சாப நீக்கம் தேவர்கள் தம் வான் உலகு செல்லத் துடித்தலும் விரைதலும் பரதன் உடன் செல்வார் அயோத்திக்கு விரைந்து செல்லத் துடித்தலுக்கு உவமை. இவர்களின் பதைப்பையும் விரைவையும் 'பறந்து போதும்' என்பது விளக்கும். 'கொல்' ஐயம்.*
***15***

***2117. ஊன் அளைந்த உடற்கு உயிர் ஆம் எனத்***
***தான் அளைந்த தழுவின, தண்ணுமை,***
***தேன் அளைந்து செவி உற வார்த்தென,***
***வான் அளைந்தது, மாகதர் பாடலே.***

***மாகதர்*** - மாகதர்களின் பாடல்; ***தேன் அளைந்து*** - தேனோடு கலந்து; ***செவி உற வார்த்னெ*** - செவியிற் பொருந்தும்படி (செவித் கினிமையாக) சொரிந்தாற் போன்றனவாகி; ***வான் அளைந்தது - வானுலகு வரை சென்று பரவியது; தண்ணுமைதான்*** - மத்தள வொலிதான்; ***ஊன் அளைந்த உடற்கு*** - ஊனொடு கலந்த உடலுக்கு; ***உயிர் ஆம் என*** - பொருந்திய உயிர் போல (உடல் முழுவதும் உயிர் பரவியிருப்பது போல); ***அளைந்து*** - அப்பாடல் ஒலியோடு இரண்டறக் கலந்து; ***தழுவின*** - இணைந்து நின்றன.

*மாகதர் - இருந்து ஏத்துவார். அரசரை ஏத்திப்பாடும் இயல்பு உடையாடர் மூவர். சூதர், மாகதர், வேதாளிகர் என்பார். இவரை முறையே நின்றேத்துவார், இருந்து ஏத்துவார், கிடந்து ஏத்துவார் என்பது வழக்கம். அவருள் இவர் மாகதர் ஆதலின் இருந்து ஏத்துவார். தண்ணுமை ஒலியும், பாடல் ஒலியும் ஒன்றையொன்று இணைதலுக்கு உடல் - உயிர் இணைப்பை உவமையாகினார் - தண்ணுமை என்பது இங்கு அதன் ஒலியைக் குறித்து நின்றது. 'ஏ' ஈற்றசை.* ***16***

***2118. ஊறு கொண்ட முரசு உமிழ் ஓதையை***
***வீறு கொண்டன, வேதியர் வாழ்த்து ஒலி;***
***ஏறு கொண்டு எழும் மல்லர் இடிப்பினை***
***மாறு கொண்டன, வந்திகர் வாழ்த்து அரோ!***

***ஊறு கொண்ட*** *- (குறுந்தடியால்) அடிக்கப்படுகின்ற;* ***முரசு உமிழ் ஓதையை*** *- முரசம் வெளிவிடும் பேரொலியை;* ***வேதியர்*** *- வேதம் வல்ல அந்தணர் (கூறும்);* ***வாழ்த்து ஒலி*** *- வாழ்த்தும் ஒலியானது;* ***வீறு கொண்டன*** *- (கீழ்ப்படுத்தி) மேம்பட்டு ஒலித்தன;* ***வந்நிகர் வாழ்த்து*** *- (அரசனைத்) துதிக்கும் பாடல் ஒலி;* ***ஏறு கொண்டு எழு மல்லர்*** *- ஏற்றின் தன்மை படைத்து (வீரத்தோடு) எழுகின்ற வீர மற்றவர்களின்;* ***இடிப்பினை*** *- வீர முழக்கத்தை;* ***மாறு கொண்டன*** *- பகைத்தனவாய்ப் பேரொலியாயின.*

*மென்மையான வேதியர் வாழ்த்தும், வந்நிகர் வாழ்த்தும் வன்மையான முரசொலியையும், மல்லர் முழக்கத்தையும் கீழ்ப்படுத்தின என்பதால் அவற்றின் மிகுதி கூறியவாறு. 'அரோ' அசை.* ***17***

*பரதனும் படைகளும் கோசல நாடு அடைதல்*

***2119. ஆறும் கானும் அகல் மலையும் கடந்து***
***ஏறி, ஏழ் பகல் நீந்தி, பின், எந்திரத்து***
***ஊறு பாகு மடை உடைத்து ஒண் முளை***
***நாறு பாய் வயல் கோசலம் நண்ணினாள்.***

***(பரதன்) ஏழ் பகல்*** *- ஏழு நாள்கள்;* ***நீந்தி*** *- வழி நடந்து சென்று;* ***ஆறும் கானம் அகல் மலையும் ஏறிக் கடந்து*** *- ஆறும், காடும், அகன்ற மலையும் ஏறித் தாண்டிச் சென்று;* ***பின்*** *- பிறகு;* ***எந்திரத்து ஊறுபாகு*** *- கரும்பாலைகளில் ஊறுகின்ற வெல்லப்பாகு;* ***மடை உடைத்து*** *- (வயல்களில் நீர்பாய்ச்சஉள்ள வாய்க்கால் வழிச் சென்று) மடைகளை உடைத்துக்கொண்டு;* ***ஒள் முளை நாறு வயல் பாய்*** *- சிறந்த முளையுடைய நாற்றுகள் பொருந்திய வயலிலே பாய்வதற்கு இடனாக உள்ள;* ***கோசலம்*** *- கோசல நாட்டை; நண்ணினான் - சேர்ந்தான்.*

*அயோத்தியிலிருந்து சென்ற பரதன் கேகய நாட்டை ஏழு நாளில் நண்ணினான் என்று முன்னர்ச் சொன்னதை (1311.) ஈண்டு நினைவு கூர்க. கான் கடந்து, மலைஏறி, ஆறு நீந்தி எனற் கேற்ப, 'ஆறும் கானும் மலையும்' எனவும், 'கடந்து, ஏறி, நீந்தி' எனவும் அழைத்த அழகு அறிந்து இன்புறத்தக்கது.* ***18***

*கோசல நாட்டின் அழகிழந்த காட்சி*

***2120. ஏர் துறந்த வயல்; இள மைந்தர் தோள்***
***தார் துறந்தன; தண் தலை நெல்லினும்,***
***நீர் துறந்தன; தாமரை நீத்தெனப்***
***பார் துறந்தனள், பங்கயச் செல்வியே.***

***வயல்*** *- வயல்கள்;* ***ஏர் துறந்த*** *- கலப்பையைத் துறந்திருந்தன;* ***இள மைந்தர் தோள்*** *- இளைய ஆடவர்களின் தோள்;* ***தார் துறந்தன*** *- (இன்பச்சிறப்பிற்குக் காரணமான) பூமாலைகளை நீங்கியிருந்தன; நீர்-;* ***தண் தலை*** *-குளிர்ந்த இடமாகிய வயல்;* ***நெல்லினும்*** *- நெற்பயிரின்கண்ணும்;* ***துறந்தன*** *-இல்லாமல் இருந்தன;* ***தாமரை நீத்தென*** *- (நீர் இல்லாமையால்) தாமரை (அந்நாட்டில்) இல்லாமல் சென்றுவிட்டதாக;* ***பங்கயச் செல்வி*** *- தாமரையில் வீற்றிருக்கின்ற திருமகள்; பார் துறந்தனள் - (தான் வாழ்கின்ற மனையாகிய தாமரை இல்லாமையால்) கோசலநாட்டை விட்டு நீங்கினாள்.*

*வயலை உழுவார் இன்மையால் ஏர் துறந்தன. ஏர் - அழகு என்றும் கொள்ளலாம். சோகம்நாட்டைக் கவ்வுதலின் ஆடவர் தார் அணியவில்லை. நெற்பயிரும், தாமரையும் இன்றி வயல்கள்பொலிவழிந்தன. மன்னன் இறப்பவும், இராமன் காடு செல்லவும் நாடு பொலிவிழந்ததாம். ''எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே'' (புறநா. 187) என்றது ஒப்புநோக்கத்தக்கது.* ***19***

***2121. பிதிர்ந்து சாறு பெருந் துறை மண்டிடச்***
***சிதர்ந்து சிந்தி அழிந்தன தேம் கனி;***
***முதிர்ந்து, கொய்யுநர் இன்மையின், மூக்கு அவிழ்ந்து***
***உதிர்ந்து உலர்ந்தன, ஒண் மலர் ஈட்டமே.***

***தேம் கனி*** *- இனிய பழங்கள்; (கொய்யுநர் இன்மையின்)* ***சாறு பிதிர்ந்து*** *- பறித்துண்பார் இல்லாமையால் சாறு வெளிப்பட்டு;* ***பெருந்துறை மண்டிட*** *- பெரிய நீர்த்துறைகளில் நெருங்கிப் பாய;* ***சிதர்ந்து சிந்தி அழிந்தன*** *-சிதறிக் கெட்டு வீணாகின;* ***ஒள் மலர் ஈட்டம்*** *- ஒளி படைத்த (அழகிய) மலர்த்தொகுதி;* ***கொய்யுநர் இன்மையின்*** *- பறித்துச் சூடுவார் இல்லாமையால்; மூக்குஅவிழ்ந்து - தம் காம்பு கழலப்பெற்று;* ***உதிர்ந்து உலர்ந்தன*** *- (கீழே) உதிர்ந்து காய்ந்து போயின.*

*நாட்டில் உள்ளார் துயர மிகுதியால் கனி உண்ணுதலையும், மலர் சூடுதலையும் துறந்தனர்.இப்பாடலில் ''கொய்யுநர் இன்மையின்'' என்பதனை இடைநிலைத் தீவகவணி எனக் கொண்டு 'தேம்கனி', 'மலர் ஈட்டம்' என்ற இரண்டனோடும் முன்னும் பின்னும் கூட்டுக. இது ஊசற் பொருள்கோள் எனவும் பெறும். 'ஏ' ஈற்றசை.*
***20***

***2122. 'ஏய்ந்த காலம் இது இதற்கு ஆம்' என***
***ஆய்ந்து, மள்ளர் அரிகுநர் இன்மையால்,***
***பாய்ந்த சூதப் பசு நறுந் தேறலால்***
***சாய்ந்து, ஒசிந்து, முளைத்தன சாலியே.***

*சாலி* - செந்நெற் பயிர்கள்; ***'இதற்கு ஏய்ந்த காலம் இது ஆம்' என ஆய்ந்து*** - இப்பயிரை விளைத்தற்கும், அறுத்தற்கும் பொருத்தமான காலம் இதுவாகும் என்று ஆராய்ந்து; *அரிகுநர்* - அரிகின்றவர்களாகிய; ***மள்ளர் இன்மையால்*** - உழவர்கள் அத்தொழில்புரிபவராய் இல்லாமையால்; ***பாய்ந்த*** - (பறிப்பார் இல்லாமையால்) சிந்தி அழிந்த; ***சூதப் பசு நறுந் தேறலால்*** - மாம்பழத்தின் நல்ல இனிய சாற்றினால்; ***சாய்ந்து*** - தலை சாய்ந்து; ***ஒசிந்து*** - வளைந்து அடி முறிந்து; ***முளைத்தன*** - (தம் தானியங்கள் கீழே விழ மீண்டும்) முளைத்தன.

*தேறல் - மது, இங்கு அது போன்ற மாம்பழச் சாற்றை உணர்த்தியது. காலம் கருதிப் பயிரைஅறுக்காத போது அவை மீண்டும் நிலத்திற் சிந்தி முளைத்ததாகக் கூறினார். மள்ளர்சோதித்தலின் அறுத்திலர் என்க. 'ஏ' ஈற்றசை.* ***21***

***2123. எள் குலா மலர் ஏசிய நாசியர்,***
***புள் குலா வயல் பூசல் கடைசியர்,***
***கட்கிலார் களை; காதல் கொழுநரோடு***
***உள் கலாம் உடையாரின், உயங்கினார்.***

***எள் குலா மலர்*** - என் அழகு விளங்கும் மலரை; ***ஏசிய*** - (தன் அழகால்) பழித்த; ***நாசியர்*** - மூக்கை உடையவராகிய; *புள்குலா வயல்* - பறவைகள்மகிழ்ந்து திரிகின்ற வயலிலே; *பூசல்* - தொழில் செய்கின்ற; ***கடைசியர்*** -உழத்தியர்; ***காதல் கொழுநரோடு*** - தம்மால் அன்பு செய்யப்பெற்ற கணவரோாடு; ***உள்கலாம் உடையாரின்*** - உள்ளே பிணக்கு உடையாரைப்போல்; ***களைகட்கிலார்*** - களை பறிக்காதவர்களாய்; ***உயங்கினார்*** - வாடிக்கிடந்தார்.

*கணவரோடு ஊடிய மகளிர் தொழில் செய்ய விருப்பமின்றி இருத்தல் போலக் களைபறியாமல்இருந்தனர் கடைசியர். எள்மலர் - மூக்கிற்கு உவமை. பூசல் - ஒலி - ஈண்டு ஒலிக்கு இடனாகியதொழிலைக் குறித்தது; இலக்கணை என்பர்.*
***22***

***2124. ஒதுகின்றில கிள்ளையும்; ஓதியர்***
***தூது சென்றில, வந்தில, தோழர்பால்;***
***மோதுகின்றில பேரி, முழா; விழாப்***
***போதுகின்றில, பொன் அணி வீதியே.***

***கிள்ளையும்*** - கிளிகளும்; ***ஓதுகின்றில*** - பேசுதல் ஒழிந்தன; ***ஓதியர்*** - கூந்தலையுடைய மகளிர்; ***தோழர்பால்*** - காதல் தோழர்கள் இடத்தில்; ***தூது சென்றில*** - (அப்பறவைகள்) தூது செல்லவில்லை; ***வந்தில*** - (அவர் சொல்லுடன்) மீண்டு வருதலையும் செய்யவில்லை; ***பேரி*** - பெரு முரசும்; ***முழா*** - முழவும்; ***மோதுகின்றில*** - அடித்து முழக்கப்படாதொழிந்தன; ***பொன் அணி வீதி*** -பொன்னால் அழகு செய்யப்பெற்ற வீதிகளில் ***விழாப் போதுகின்றில*** - விழாஊர்வலங்கள் செல்லவில்லை.

*ஒதுகின்றில - வேதம் சொல்லுதலை ஒழிந்தன என்றும் பொருள். வேதம் ஓதும் சிறார்உரைப்பது கேட்டுக் கிளிகளும் வேதம் ஓதும். " வளைவாய்க் கிள்ளை மறை விளி பயிற்றும்"(பெரும்பாண்......300) என்பது காண்க. இராமன் பிரிவால் "கிள்ளையொடு பூவை அழுத" (1701) என முன்னர்க் கூறினார் ஆதலின் அதற்கேற்ப*

*இங்கே 'கிள்ளையும் ஒதுகின்றில' என்றார். பறவைகள் காதலர் இடையே தூது செல்லும் ஆதலின், அச்செயல் நிகழவில்லை. எனவே இன்பம்இழந்தது நாடு என்றார். 'ஏ' ஈற்றசை. 23*

***2125. பாடல் நீத்தன, பண் தொடர் பாண் குழல்;***
***ஆடல் நீத்த, அரங்கொடு அகன் புனல்;***
***சூடல் நீத்தன, சூடிகை; சூளிகை***
***மாடம் நீத்தன, மங்கல வள்ளையே.***

***பண் தொடர்** - இசையொடு தொடர்ந்த; **பாண் குழல்** - இசைக்கின்ற வேய்ங்குழல்கள்; **பாடல் நீத்தன** - இசை பாடுதலை ஒழிந்தன; **அரங்கொடு அகன் புனல்** - நாட்டிய அரங்குகளோடு அகன்ற நீர்நிலைகள்; **ஆடல் நீத்த** - ஆடுதலை ஒழிந்தன; சூடிகை- தலை உச்சி; சூடல் நீத்தன - மலர் சூடுதலை ஒழிந்தன; **சூளிகை மாடம்** -நிலாமுற்றத்தை உடைய மாளிகைகள்; **மங்கல வள்ளை நீத்தன** - மங்கலப் பாடல்கள் பாடப் பெறுதலை ஒழிந்தன. ஆடல் - சிலேடையால் இருபொருள் தந்தது. நடனமாடல், நீராடல் என்பன முறையேஅரங்கிற்கும் நீர்நிலைக்கும் ஆயின. 'புனல்' என்பது யாற்று நீரைக் குறிக்கும். சூடிகை -உச்சி, 'சூடா' என்னும் வடசொல் 'சூடி' என்றாகி 'க' ப்ரத்யயம் பெற்று 'சூடிகை' என்றாகியது. வள்ளைப்பாட்டு - உரற்பாட்டு. தம்தலைவனைப் புகழ்ந்தும் மற்றவரைக் குறைத்தும் பாடுதலின் ஏற்றிழிவுடைய உரற்பாட்டாகும். 'கொற்ற வள்ளை' என்று புறத்திணையில் வரும் துறையும்இக்கருத்தினதே. குறைத்துப்படாது புகழ்ந்து பாடுதல் மட்டும் வருதலின் 'மங்கள வள்ளை'என்பர். இப்பெயரில் ஒரு சிறு பிரபந்தம் உண்டு. 'ஏ' ஈற்றசை. 24*

***2126. நகை இழந்தன, வாள் முகம்; நாறு அகிற்***
***புகை இழந்தன, மாளிகை; பொங்கு அழல்***
***சிகை இழந்தன, தீவிகை; தே மலர்த்***
***தொகை இழந்தன, தோகையர் ஓதியே***

***வாள்முகம்** - (கோசல நாட்டவரது) ஒளி படைத்த முகங்கள்; **நகை இழந்தன** - மகிழ்ச்சிச் சிரிப்பை இழந்தன; **மாளிகை** - (அந்நாட்டு) மனைகள்; **நாறு அகில்புகை இழந்தன** - மணம் வீசுகின்ற அகிற்புகை இழந்தன; **தீவிகை** - (ஏற்றிய) தீபவிளக்குத் தண்டுகள்; பொங்கு அழல் சிகை இழந்தன - மேல் நோக்கி எரியும் நெருப்புச் சுடரை இழந்தன; **தோகையர் ஓதி** - மகளிரின் கூந்தல்; தே மலர்த் **தொகை இழந்தன** - தேன் பொருந்திய மலர்த் தொகுதிகளை இழந்தன.*

*'இழந்தன' என்பது நான்கு முறை ஒரு பொருளிலேயே வருதலின் 'சொற்பொருட் பின்வருநிலையணி'. தீவிகை என்பது 'தீபிகா' என்னும் வட சொல்லின் தமிழ் வடிவம். பெண்கள்கூந்தலில் மலர் சூடவில்லை என்பதை 'ஓதி மலர்த்தொகை இழந்தன' என்றார். 'ஏ' ஈற்றசை. 25*

***2127. அலர்ந்த பைங் கூழ், அகன் குளக் கீழன,***
***மலர்ந்த வாயில் புனல் வழங்காமையால்,***

***உலர்ந்த - வன்கண் உலோபர் கடைத்தலைப்***
***புலர்ந்து நிற்கம் பரிசிலர் போலவே.***

***அகன் குளக் கீழன்*** *- அகன்ற குளத்தின் தலை மடைக்கீழ் உள்ளன வாகிய;* ***அலர்ந்த பைஞ்கூழ்*** *- வளமான பசிய நெற்பயிர்;* ***மலர்ந்த வாயில்*** *- விரிந்துள்ளமதகு வழியாக;* ***புனல் வழங்காமையால்*** *- ஓடி வந்து விழும் நீர் வராதபடியால்;* ***வன்கண்*** *- (இரப்போர்க்குச் சிறிதும் கொடாத) கொடுமையுடைய;* ***உலோபர்*** *-கருமிகள்;* ***கடைத்தலை*** *- வாயில் முகப்பிலே;* ***புலர்ந்து நிற்கும் பரிசிலர் போல*** *- (ஒன்றும் பெறாமையால்) கருமிபோல - (ஒன்றும் பெறாமையால்) வாடி நிற்கும் இரவலர்களைப் போல;* ***உலர்ந்த*** *- காய்ந்துபோயின.*

*பெரும் பொருள் இருந்தும் கருமிகள் மனம் இன்மையால் பொருள் தராமையால் இரவலர் அவர்வாயில்முன் வாடிக் கிடப்பர். அது குளத்தில் நீர் நிறைய இருந்தும் மதகு வழியே நீர் பாய்ச்சுவார் 'இல்லாமையால் தலைமடைப் பயிர்கள் காய்ந்துகிடத்தலுக்கு உவமையாயிற்று. தலைக்கடை என்பதனைக் கடைத்தலை எனல் இலக்கணப்போலி; அஃதாவது சொற்கள் முன்பின்னாக மாறி நிற்றலாதலின். 'ஏ' ஈற்றசை.* ***26***

***2128. நாவின் நீத்து அரு நல் வளம் துன்னிய,***
***பூவின் நீத்தென, நாடு, பொலிவு ஒரீஇ,***
***தேவி நீத்து அருஞ் சேண் நெறி சென்றிட,***
***ஆவி நீத்த உடல் எனல் ஆயதே.***

***நாவின் நீத்து அரு நல் வளம் துன்னிய*** *- நாவினால் சொல்ல இயலாத நல்ல வளங்கள் நெருங்கியிருக்கப்பெற்ற;* ***நாடு*** *- கோசலநாடு;* ***பூவின் நீத்தென*** *- தாமரைப்பூவை இழந்ததாக;* ***தேவி*** *- அத்தாமரைப் பூவில் உறைபவளாகிய திருமகள்; நீத்து - (அந்நாட்டை விட்டு) நீங்கி;* ***அருஞ்சேண் நெறி*** *- பின்பற்றிச் செல்லுதற்கரிய நெடுந்தொலைவாகிய வழியிலே;* ***சென்றிட*** *-சென்றிடுதலான்;* ***பொலிவு ஒரீஇ*** *- தன் அழகும் கவர்ச்சியும் நீங்கி;* ***ஆவி நீத்த உடல்*** *- உயிர் போன உடல்;* ***எனல்*** *- என்று சொல்லுமாறு;* ***ஆயது*** *-ஆகிவிட்டது.*

*"தாமரை நீத்தெனப் பார் துறந்தனள் பங்கயச் செல்வியே" (2120) என்பதை ஒப்புநோக்குக. 'உயிர் போன உடல்' சுற்றியிருப்பார்க்கு அச்சம் தருதல் போல இந்நாடும்காண்பார் அஞ்சுமாறு பொலிவிழந்ததாம். "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" (புறநா.186) என்பவாதலின் மன்னனை இழந்த நாடு உயிரற்ற உடல் போல ஆயிற்று என்றார். 'ஏ' ஈற்றசை.* ***27***

*பொலிவழிந்த நாட்டைக் கண்ட பரதன் துன்புறுதல்*

***2129. என்ற நாட்டினை நோக்கி, இடர் உழந்து,***
***ஒன்றம் உற்றது உணர்ந்திலன், உன்னுவான்,***
***'சென்று கேட்பது ஓர் தீங்கு உளது ஆம்' எனா,***
***நின்று நின்று, நெடிது உயிர்த்தான்அரோ!***

***என்ற*** - *முன் கூறியவாறு உள்ள;* ***நாட்டினை*** - *கோசல நாட்டை;* ***நோக்கி*** - *(பரதன்) பார்த்து;* ***இடர் உழந்து*** - *பெருந்துன்பத்தாற் கலங்கி;* ***உற்றது ஒன்றும் உணர்ந்திலன்*** - *நிகழ்ந்த செய்திகள் ஒன்றும் உணராதவனாய்;* ***'சென்றுகேட்பது ஓர் தீங்கு'*** - *நாம் போய்க் கேட்கப் போகின்ற தீய செய்தி ஒன்று;* ***உளதுஆம்' எனா*** - *இப்பொழுது நேர்ந்துள்ளதாகும் என்று;* ***உன்னுவான்*** - *கருதியவனாய்;* ***நின்று நின்று*** - *தயங்கிச் சோர்ந்து;* ***நெடிது உயிர்த்தான்*** - *பெருமூச்சுவிட்டான். நாட்டைக் கண்ட அளவிலே தீய செய்தியைக் கேட்கப்போகிறோம் என்னும் நினைவுஉண்டாயிற்று என்பதாகும். துன்ப மிகுதியில் பெரு மூச்சு எறிதல் வழக்கு. 'அரோ' ஈற்றசை.* ***28***

*பரதன் அழகு அழிந்த நகரின் நிலையைப் பார்த்தல்*

***2130. மீண்டும் ஏகி, அம் மெய் எனும் நல் அணி***
***பூண்ட வேந்தன் திரு மகன், புந்திதான்***
***தூண்டு தேரினம் முந்துறத் தூண்டுவான்,***
***நீண்ட வாயில் நெடு நகர் நோக்கினான்.***

***மெய் எனும் நல் அணி பூண்ட அவ் வேந்தன்*** - *வாய்மை என்னப் பெறுகின்ற சிறந்தஅணியை அணிந்துகொண்ட அந்தத் தயரதனுடைய;* ***திருமகன்*** - *சிறந்த மகனாகிய பரதன்;* ***மீண்டும் ஏகி*** - *மேலும் சென்று; புந்திதான் - அறிவானது;* ***தூண்டு தேரினும்*** *-விரைவாகச் செலுத்தப்படுகின்ற தேரைக் காட்டிலும்;* ***முந்துற*** - *முற்படடுச் செல்லும்படி;* ***தூண்டுவான்*** *-அறிவை முற்படச் செலுத்தி ஆராய்பவனாகி;* ***நீண்ட வாயில்*** *-நெடிதுயர்ந்த வாயிலை உடைய; நெடுநகர் - சிறந்த அயோத்தி நகரை;* ***நோக்கினான்*** *-உள்உணர்வோடு பார்த்தான்.*

*நாடு பொலிவிழந்த நிலை கண்ட உண்டாகிய துன்பம் அவன் புத்தியை விரைவாகச்செலுத்தியது. ஆதலின் விரைந்து நகர்வாயிலை அடைந்தான்.*

*அயோத்தியின் 'வைஜெயந்தம்' என்ற பெயருடைய மேற்கு வாயிலைப் பரதன் அடைந்தான் என்றுவான்மிகம் கூறும்.* ***29***

*கொடி இழந்த நகர் காணல்*

***2131. 'அண்டம் முற்றும் திரிந்து அயர்ந்தாய்' அமுது***
***உண்டு போதி' என்று, ஒண் கதிர்ச் செல்வனை.***
***விண் தொடர்ந்து விலக்குவ போல்வன,***
***கண்டிலன், கொடியின் நெடுங் கானமே,***

***ஒண் கதிர்ச் செல்வனை*** - *ஒளி படைத்த ஆயிரம் கதிர்களைத் தன் செல்வமாக உடைய கதிரவனை (நோக்கி);* ***'அண்டம்முற்றும்*** - *எல்லா உலகங்களும் அடங்க;* ***திரிந்து அயர்ந்தாய்*** - *(நீ) சுற்றிஅலைந்து சோர்ந்து போனாய்;* ***அமுது உண்டு போதி*** - *(எங்கள் நகரிலே) தங்கி உணவுஅருந்திச் செல்வாயாக;* ***என்று -; விண்தொடர்ந்து*** - *(அக் கதிரவன்) செல்லும் வான்அளாவித் தொடர்ந்து சென்று;* ***விலக்குவ போல்வன*** - *(அப்பரிதியைத்) தடுப்பனபோல்வவாகிய;* ***கொடியின்*** - *(அயோத்தி நகரக்) கொடிகளின்; நெடுங்கானம் - பெரியகாட்டை;* ***கண்டிலன்*** - *(பரதன்) காணப்பெறாதன் ஆனான். அந்நகரத்துப் பலவிடங்களிலும் முன்பு கொடிகள் இருந்தமையும்*

*இப்போது இல்லாமையும் கூறப்பட்டன. வானளாவக் கொடிகள் உயர்ந்திருப்பதும் தடுத்தாற்போலஅசைவதும், சூரியன் செலவைத் தவிர்த்துச் சோர்வு நீக்கி உண்டு இளைப்பாறிச் செல்ல நகர்க்கு அழைப்பதாகக் கற்பனை செய்யப்பெற்றது. இது தற்குறிப்பேற்றவணி. கானம் - கொடிகளின் மிகுதி- 'காடு' என்னும் பொருள் இங்கே தொகுதி எனப் பொருள்பட்டது, மரங்களில் தொகுதி காடு, ஆதலின் 'ஏ' ஈற்றசை.*
***30***

*கொடைமுரச ஒலி அவிந்த நகர் காணல்*

***2132. 'ஈட்டு நல் புகழ்க்கு ஈட்டிய யாவையும்,***
***வேட்ட, வேட்டவர் கொண்மின், விரைந்து' எனக்,***
***கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன,***
***கேட்டிலன், முரசின் கிளர் ஓதையே.***

***'ஈட்டிய யாவையும்*** *- தேடித் தொகுத்த எல்லாச் செல்வங்களையும்;* ***நல்புகழ் ஈட்டுக்கு*** *- நல்ல புகழைப்பெறுதற்கு; வேட்ட - தாம் விரும்பியவற்றை;* ***வேட்டவர்*** *- விரும்பியவர்கள்;* ***விரைந்து கொண்மின்'*** *- விரைவாக வந்து வாங்கிக்கொள்ளுங்கள்; என - என்று;* ***கோட்டி மாக்களை*** *- கூட்டமாக உள்ள மக்களை;* ***கூவுவபோல்வன*** *- கூவி அழைப்பன போல்வனவாகிய;* ***முரசின் கிளர் ஓதை*** *- கொடை முரசின் செருக்கிய ஒலியை;* ***கேட்டிலன்*** *- (பரதன்) கேட்கப் பெற்றிலன்.*

*கொடை முரசு ஒலித்தலை இரவலர்களைக் கூவி அழைத்தல் போலும் என்றது தன்மைத்தற்குறிப்பேற்ற அணி. கோட்டி - அவை, மக்கள் கூட்டம் உள்ள இடம். இங்கே மக்கள் திரள்என்பதாயிற்று. "என்னும் குறளில் 'கோட்டி' என்பது அவை என்னும் பொருள்படல் அறிக. (குறள் 401).* ***31***

*பரிசிலர் பரிசில் பெறாதுள்ள நகரின் நிலை காணல்*

***2133. கள்ளை, மா, கவர் கண்ணியன் கண்டிலன்-***
***பிள்ளை மாக் களிறும், பிடி ஈட்டமும்,***
***வள்ளைமாக்கள், நிதியும், வயிரியர்,***
***கொள்டிள மாக்களின் கொண்டனர் ஏகவே,***

***மா*** *- வண்டுகள்;* ***கள்ளை கவர் கண்ணியன்*** *- தேனை உண்கின்ற மலர் மாலையைஅணிந்தவனாகிய பரதன்;* ***வள்ளை மாக்கள்*** *- (அரசனை வாழ்த்திப் பாடும்) மங்கலவள்ளைப் பாடகரும்; வயிரியர் - யாழ் முதலிய இயங்களாற் பாடுகின்றவர்களும்;* ***பிடி ஈட்டமும்*** *- பெண்யானைத் திரளையும்; நிதியும் - செல்வத்தையும்;* ***கொள்ளை மாக்களின்*** *- கொள்ளையடித்துக் கொண்டு போகின்ற* ***திருடர்களைப் போல; கொண்டனர் ஏக*** *- பரிசிலாகப் பெற்றுக் கொண்டு செல்ல;* ***கண்டிலன் -.***

*பிள்ளை, மா களிறும், பிடியும் என்று பிரித்துக் கன்றும், யானையும், பிடியும் எனவும்பொருள் உரைக்கலாம். வயிரியர் - பாணர் - வாத்திய இசைஞர் என்பது*

*பொருள். அளவறியாதுவாரிக்கொண்டு செல்வது திருடர் இயல்பு. அதனை ஈண்டுப் பரிசிலர்க்கு உவமை ஆக்கினார்.* *32*

*அந்தணர் தானம் பெறாத நிலை கண்டு இரங்குதல்*

***2134. காவல் மன்னவன் கான்முளை கண்டிலன் -***
***ஆவும், மாவும், அழி கவுள் வேழமும்,***
***மேவு காதல் நிதியின் வெறுக்கையும்,***
***பூவின் வானவர் கொண்டனர் போகவே.***

***காவல் மன்னவன்*** - *(உலகத்தைக் ) காத்தலைச் செய்கிற தயரத மன்னவனது;* ***கான்முளை*** - *வழித் தோன்றலாகிய பரதன்;* ***பூவின் வானவர்*** - *மண்ணுலகத் தேவர்கள்ஆகிய பூசுரர் எனப் பெறும் வேதியர்;* ***ஆவும்*** - *பசுக்களும்;* ***மாவும்*** - *குதிரைகளும்;* ***கவுள் அழிப் வேழமும்*** - *கன்னத்தில் மதம் பெருகுகின்ற யானையும்;* ***காதல் மேவு*** *-ஆசை பெருகுகின்ற;* ***நிதியின் வெறுக்கையும்*** - *செல்வத்தின் மிகுதியும்;* ***கொண்டனர்போக*** - *தானமாகப் பெற்றுக்கொண்டு செல்ல;* ***கண்டிலன் -.***

*கான்முளை - மகனைக் குறிக்கும் சொல்; தந்தையின் காலில் முளைத்தவன் என்பது பொருள்ஆதலின் வழித்தோன்றல் என உரை கூறப்பட்டது. அழிதல் - பெருகுதல் என்னும் பொருட்டு "அழியும்புனல் அஞ்சன மா நதியே" என்னும் சிந்தாமணியில் அப்பொருளாதல் (சீவக. 1193) காண்க. 'ஏ'ஈற்றசை.* *33*

*இசையில்லாத அயோத்தி நகரம்*

***2135. சூழ் அமைந்த சுரும்பும், நரம்பும், தம்***
***ஏழ் அமைந்த இசை இசையாமையால்,***
***மாழை உண் கண் மயில் எனும் சாயலார்***
***கூழை போன்ற, பொருநர் குழாங்களே.***

***பொருநர் குழாங்கள்*** - *பாடி ஆடுகின்ற பொருநர் கூட்டங்களில் உள்ள;* ***சூழ் அமைந்த கரும்பும்*** - *(மணம்உள்ளவிடத்தே) சுற்றுதல் பொருந்திய வண்டுகளும்;* ***நரம்பும்*** - *நரம்பினால் இசைக்கும்யாழ் முதலிய கருவிகளும்;* ***ஏழ் அமைந்த*** - *ஏழாகப் பொருந்திய; தம்* ***இசை இசையாமையால்*** - *தமக்குரிய இசையை ஒலிக்காமல் வெறுமனே கிடக்கிறபடியால்;* ***மாழைஉண்கண் மயில் எனும் சாயலார்*** - *இளமைத் தன்மையாகிய அறியாமையுடைய மையுண்ட பார்வையுடையவரும் மயிலைப் போலும் சாயலுடையவரும் ஆயமகளிர்;* ***கூழை*** - *தலைக் கூந்தலை;* ***போன்ற*** - *போன்றன.*

*கூந்தல் கருநிறம் உடையது. நரம்பு போலும் தோற்றம் உடையது. இசை இசைக்காது - இசைஇசையாத கருநிறம் உடைய வண்டுகளும், நரம்புடைய யாழும் அது போன்றன என்றார். ஏழ் அமைந்தஇசை, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் எழுவகைச் சுரத்தானங்கள், ச ரி க ம ப த நி எனலும் ஆம். மாழை - இளமை என்னும் பொருட்டு. அது இளமைத்தன்மையாகிய அறியாமையைக் குறித்தது. "மாழை மான் மட நோக்கி உன் தோழி" (திவ்வியப்.1418) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. 'ஏ' ஈற்றசை.* *34*

*இயக்கம் இன்மையால் அழகு இழந்த வீதிகள்*

***2136. தேரும், மாவும், களிறும், சிவிகையும்,***
***ஊரும் பண்டியும் ஊருநர் இன்மையால்,***
***யாரும் இன்றி, எழில் இல; வீதிகள்,***
***வாரி இன்றிய வாலுக ஆற்றினே,***

***தேரும்*** *- தேர்களும்;* ***மாவும்*** *- குதிரைகளும்;* ***களிறும்*** *- யானைகளும்; சிவிகையும் - பல்லக்குகளும்;* ***ஊரும் பண்டியும்*** *- (மக்கள்) ஏறிச்செல்லுகின்ற வண்டிகளும்;* ***ஊருநர் இன்மையால்*** *- ஏறிச் செல்பவரும் செலுத்துபவரும் இன்மையால்; வீதிகள் - (அயோத்திநகரின்) தெருக்கள்;* ***வாரி இன்றிய*** *-நீர்வருவாய் இல்லாது போன;* ***வாலுக ஆற்றினே*** *- வெண்மணற் பரப்பையுடைய ஆற்றைப் போல;* ***யாரும் இன்றி*** *- இயங்குபவர் எவரும் இல்லாமல்;* ***எழில் இல*** *- அழகு இழந்தன.*

*நீரற்ற வெறுமணல் பரவிய நதி - இயக்கம் அற்ற வீதிகளுக்கு உவமை ஆயிற்று; உவமையணி.வாலுகம்- வெண்மணல். வாரி - வருவாய். யாற்றுக்கு வருவாய் நீர் ஆதலின் நீர் எனப் பொருள்உரைத்தாம். வீதிக்கு அழகு மக்கள் இயங்குதல் ஆகலின் யாரும் இயங்காத வீதிகள் அழகிழந்தன என்றார். 'ஏ' ஈற்றசை.* ***35***

*நகரை நோக்கிய பரதன் வினா*

***2137. அன்ன தன்மை அக நகர் நோக்கினள்,***
***பின்னை, அப் பெரியோர்தம் பெருந்தகை,***
***'மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?***
***என்ன தன்மை? இளையவனே!' என்றான்.***

***அப் பெரியோர்தம் பெருந்தகை*** *- அறிவு ஒழுக்கங்களாற் சிறந்த பெரியோர்களாற் போற்றப்படும் பெருமையுடைய குணத்தாற் சிறந்த பரதன்;* ***அன்ன தன்மை*** *- மேற்கண்ட தன்மையுடைய; அகநகர் - நிலைகெட்டநகரின் உட்பகுதியே; நோக்கினன் - பார்த்தான் (சிந்தித்தான்);* ***பின்னை*** *- பிறகு;(சத்துருக்கனனை நோக்கி)* ***இளையவனே!*** *- தம்பியே; ஈது - இவ் அயோத்தி;* ***மன்னன்வைகும் வளநகர் போலும்*** *- தயரத மன்னன் வீற்றிருந்த ஆட்சி செய்யும் வளமான நகராகவாஉள்ளது?.* ***என்ன தன்மை*** *- எந்தத் தன்மையை உடையதாய் உள்ளது; என்றான் -.*

*நகர் அகம் என்பது அகநகர் என மாறியது. அரசன் இல்லாத நகரம் போல உள்ளது என்றான்.'போலும்' என்றது ஐய வினா? முன் ஏழு பாடல்களாற் சொல்லிய நகரின் அழகிழந்த தோற்றத்தைஇச்செய்யுளில் 'அன்ன தன்மை' என்பது குறிப்பிடும்.*
***36***

*நகரின் பொலிவு அழிவைக் காட்டுதல்*

***2138. 'வேற்று அடங்கலர் ஊர் என மெல்லிதால்;***
***சூல் தடங் கருங்கார் புரை தோற்றத்தான்***

***சேல் தடங் கண் திருவொடும் நீங்கிய***
***பால்தடங் கடல் ஒத்தது, பார்' என்றான்.***

***'பார்*** - *அயோத்தி;* ***வேற்று அடங்கலர் ஊர் என*** *மெல்லிதால் - மனம்வேறுபட்ட பகைவரது ஊர் போல அற்பமாக அழகிழந்துள்ளது;* ***சூல் தடங் கருங்கார்புரை*** *- சூல்கொண்ட பெரிய கரிய மேகம் போன்ற;* ***தோற்றத்தான்*** *- வடிவம் உடைய திருமால்;* ***சேல் தடங்கண் திருவொடும்*** *- கயல்மீன் போன்ற அகன்ற கண்களை உடைய திருமகளொடும்;* ***நீங்கிய*** *- நீங்கிச் செல்லுதலால்; (வறிதாகிப் போன)* ***பால் தடங்கடல் ஒத்தது'*** *- பெரிய திருப்பாற்கடலை ஒத்ததாக ஆயிற்று;* ***என்றான் -.***

*அடங்கலர் - பகைவர் 'அடங்கார்' என அழைப்பது இலக்கிய வழக்கு. 'மெல்லிது' - அற்பமானதுஎன்பது பொருள். அழகிழந்து அவலம் உறுதலின் அற்பமாயிற்று. திருமால் திருமகளொடும் நீங்கியதிருப்பாற்கடலை அயோத்தி நகர்க்கு உவமையாக்கினான். அவனை அறியாமலே அவன் உள்ளுணர்வு இராமனும் சீதையும் நீங்கிய அயோத்தியை நினைந்து கூறினாற் போலத் 'திருவொடும்' என்றஉடனிகழ்ச்சிக்குப் பிறிதொரு பொருள் (திருமால்) வேண்டுதலின் 'கார்புரை தோற்றத்தான்'திருமால் எனல் பொருந்துவதாயிற்று. பார் என்பது உலகம் என்னும் பொதுப்பொருள் உடையது ஆயினும்இடம் நோக்கி அயோத்தியைக் குறித்ததாம்.*
*37*

*சத்துருக்கனன் மறுமொழி*

***2139. குரு மணிப் பூண் அரசிளங் கோளரி***
***இரு கை கூப்பி இறைஞ்சினன், 'எய்தியது***
***ஒரு வகைத்து அன்று உறு துயர்; ஊழி வாழ்***
***திரு நகர்த் திரு தீர்ந்தனள் ஆம்' என்றான்.***

***குரு மணிப் பூண்*** *- நிறம் அமைந்த மணிக் கற்கள் அழுத்திய அணிகளை (அணிந்த);* ***அரசு இளங் கோளரி*** *- அரசிளஞ் சிங்கம் ஆகிய சத்துருக்கனன்;* ***இரு கை கூப்பிஇறைஞ்சினன்*** *- தன் இரண்டு கைகளையும் குவித்து (ப் பரதனை) வணங்கி; (இப்போது இந்நகரின் நிலையைப் பார்த்தால்)* ***'எய்தியது உறு துயர்*** *- நேர்ந்துள்ள மிக்கதுயரம்;* ***ஒரு வகைத்து அன்று*** *- ஒரு தன்மைப்பட்டது அன்று; (அன்றியும்)* ***ஊழி வாழ்*** *- கற்ப முடிவுக்காலம் வரையும் வாழக்கூடிய;* ***திருநகர் திரு*** *- சிறந்த இந்த நகரத்துச்சீதேவி (திருமகள்);* ***தீர்ந்தனள் ஆம்'*** *- நகரத்தை விட்டு அடியோடு போய்விட்டாள்ஆகும்;* ***என்றான் -.***

*எல்லாரினும் இளையவனும், தயரத மாமன்னனின் மகனும் ஆதலின் சத்துருக்கனன் 'அரசிளங்கோளரி' எனப் பெற்றான். மூத்தோர்பால் ஒன்று சொல்லும் போது வணங்கிக் கூறல் மரபு. உறு -மிகுதி. ''அவைதாம், உறு, தவ, நனி என வரூஉம் மூன்றும், மிகுதி செய்யும் பொருள என்ப'' (தொல்- சொல் உரி. 3) என்பது காண்க. ஊழி வாழ்தலை நகர்க்கும், திருவுக்கும் ஏற்புழிஏற்றிக் கொள்க.* ***38***

*பரதன் தயரதன் வாழுமிடத்தை அடைதல்*

***2140. அனைய வேலையில், அக் கடைத் தோரண***
***மனையின் நீள் நெடு மங்கல வீதிகள்***
***நினையும் மாத்திரத்து ஏகிய நேமியான்***
***தனையனும், தந்தை சார்விடம் மேவினான்.***

***அனைய வேலையில்*** - *இவ்வாறு உரையாட்டு நிகழும் பொழுதில்;* ***அக்கடைத் தோரணமனையின்*** - *அந்த வாயிலிற் கட்டிய தோரணக் கொடிகளையுடைய மாளிகைகளால்;* ***நீள் நெடுமங்கல வீதிகள்*** - *நெடிதுயர்ந்த மங்கலம் பொருந்திய தெருக்களை;* ***நினையும்மாத்திரத்து*** - *நினைக்கும் பொழுதிற்குள் (கணப் பொழுதில்); ஏகிய - கடந்து சென்ற;* ***நேமியான் தனையனும்*** - *சக்கரவர்த்தி தயரதன் குமாரனாகிய பரதனும்;* ***தந்தை*** - *தன்தந்தையாகிய தயரதன்;* ***சார்வு இடம்*** - *வழக்கமாகத் தங்கியுள்ள அரண்மனையை;* ***மேவினான்*** - *சென்று அடைந்தான்.*

*நேமி - சக்கரம். நேமியான் - ஆணைச் சக்கரம் உடைய அரசன்; இங்குத் தயரதன். பரதன் தான் கண்ட காட்சிகளால் முன்பே "மன்னன் வைகும் வளநகர் போலும் ஈது?" என்று (2137)ஐயப்பட்டான் ஆதலின், அரசனை முதலிற் பார்க்க விரும்பினான். நெடுந் தெருக்கள் பல கடந்து அரச மாளிகையை அடைந்தான் என்க.*
***39***

*தந்தையை அவன் மாளிகையிற் காணாது பரதன் ஐயுறுதல்*

***2141. விருப்பின், எய்தினன், வெந் திறல் வேந்தனை,***
***இருப்பு நல் இடம் எங்கணும் கண்டிலன்;***
***'அருப்பம் அன்று இது' என்று, ஐயுறவு எய்தினான் -***
***பொருப்பு நாண உயர்ந்த புயத்தினான்.***

***பொருப்பு*** - *மலைகள்;* ***நாண*** - *வெட்கம் உறும்படி;* ***உயர்ந்த*** - *உயர்ந்திருக்கின்ற;* ***புயத்தினான்*** - *தோள்களையுடைய பரதன்; விருப்பின் எய்தினன் -(தந்தையாகிய தயரத வேந்தனைக் காண வேண்டும் என்னும்) ஆசையால் (விரைந்து) அடைந்து;* ***வெந்திறல்*** - *பெருவலி படைத்த;* ***வேந்தனை*** - *தயரத மன்னனை;* ***இருப்பு நல் இடம்எங்கணும்*** - *அவன் வாழக் கூடிய நல்ல இடங்கள் எல்லாவற்றினும்;* ***கண்டிலன்*** - *தேடிக் காணாது;* ***அருப்பம் அன்று இது*** - *அற்பமான செய்தி அன்று இது;* ***என்று ஐயுறவு எய்தினான்*** - *என்று ஐயமுற்று மனத்துன்பம் அடைந்தான்.*

*அரசனைப் பற்றிய கவலையோடு அரண்மனைக்குள் வந்து எங்கும் தேடிக்காணாமையால் அரசன்பாதுகாப்பற்றவனாகத் துன்புற்றானோ என்ற ஐயம் பரதன் மனத்தில் நிகழ்ந்ததாகவும் கூறலாம்.அருப்பம் - அரண் - அருப்பம் அன்று - அரண் அன்று - பாதுகாப்பு அற்றது எனவும் பொருள்படும்.'அல்பம்' என்னும் வடசொல்லின் திரிபாகக் கொண்டு 'இது அற்பமான காரணம் உடையது அன்று'இவ்வாறு இருப்பதற்கு ஏதோ பெரிய காரணம் இருக்க வேண்டும் என்ற பரதன் நினைத்தான். இப்பொருளில் அருப்பம் என்பது "அருப்பம் என்று பகையையும் ஆர் அழல், நெருப்பையும்இகழ்ந்தால் அது நீதியோ" (7108) என்று பின்னும் வந்துள்ளமைகாண்க.* ***40***

பரதனைக் கைகேயி அழைத்தல்

***2142.* ஆய காலையில், ஐயனை நாடித் தன்**
**தூய கையின் தொழல் உறுவான்தனை,**
**'கூயள் அன்னை; குறுகுதிர் ஈண்டு' என,**
**வேய் கொள் தோளி ஒருத்தி விளம்பினாள்.**

***ஆய காலையில்*** - *அந்தச் சமயத்தில்;* ***ஐயனை நாடி*** - *தந்தையைத் தேடி;* ***தன் தூய கையின்*** - *தன் தூய்மையான கைகளால்;* ***தொழல் உறுவான்தனை*** - *தொழுதற்குவிரைந்துகொண்டிருக்கும் பரதனை நோக்கி;* ***வேய்கொள் தோளி ஒருத்தி*** - *மூங்கில் அனையதோள் உடைய (கைகேயியின்) ஏவல் மகள் ஒருத்தி;* ***'அன்னை கூயள்*** - *'உங்கள் தாய் கைகேயி கூப்பிட்டாள்;* ***ஈண்டுக் குறுகுதிர்'*** - *இங்கு வருக;* ***என விளம்பினாள்*** *-என்று கூறினாள்.*

*இராமபிரானைத் தொழுங் கையாதலின் தூய கை என்றார் எனலாம். குறுகுதிர் - உயர்வொருமை.* *41* *பரதன் கைகேயியை வணங்க அவள் உசாவுதல்*

***2143.* வந்து, தாயை அடியில் வணங்கலும்,**
**சிந்தை ஆரத் தழுவினள், 'தீது இலர்**
**எந்தை, என்னையர், எங்கையர்?' என்றனள்;**
**அந்தம் இல் குணத்தானும், 'அது ஆம்' என்றான்.**

*(பரதன்)* ***வந்து*** - *(தாய் இருக்குமிடம்) வந்து;* ***தாயை*** - *கைகேயியை;* ***அடியில்*** - *திருவடிகளில்;* ***வணங்கலும்*** - *வணங்கிய உடனே; (அவள்)* ***சிந்தை ஆரத்தழுவினள்*** - *மனத்திற் பொருந்த அணைத்து நின்று;* ***'எந்தை என்னையர், எங்கையர் தீதிலர்' என்றனள்*** - *என் தந்தையும், என் தமயன்மாரும், என் தங்கையரும்தீமையின்றி நலமாக உள்ளனரோ என்று விசாரித்தாள்;* ***அந்தம் இல் குணத்தானும்*** *-அளவுபடாத நற்குண நிலையமாகிய பரதனும்;* ***'அது ஆம்' என்றான்*** - *நலமாக உள்ள அத்தன்மைஅவ்வாறே உளதாம் என்று மறுமொழி கூறினான்.*

*அயோத்தியில் நிகழ்ந்த தீய நிகழ்ச்சிகளின் பாதிப்பு கைகேயியின் உள்ளத்திலும்உண்டாதலின் நெஞ்சுமிக்கது வாய் சோர்ந்து 'நலமாக உள்ளனரோ' என்ற விசாரிப்பைத் 'தீதுஇலர்' என்று விசாரிக்கச் செய்தது எனலாம். சூழலைப் பொறுத்துச் சொல்வரவு அமைதல் இதனால்விளங்கும். அந்தம் இல் குணம் - அளவுபடாத குணம். எல்லை இல்லாத (கணக்கிட முடியாத) குணம்''எல்லையில் குணங்களும் பரதற்கு எய்திய'' (1468) என்றார் முன்னும். பரதனைக் குண்ங்களாற்சிறப்பித்தல் யாண்டும் கம்பர்க்கு இயல்பு.* *42*

பரதன் 'தந்தை எங்குளார்' என்று கேட்டல்

***2144.* 'மூண்டு எழு காதலால், முளரித் தாள் தொழ**
**வேண்டினென், எய்தினென், உள்ளம் விம்முமால்'**
**ஆண் தகை நெடு முடி அரசர் கோமகன்**
**யாண்டையான்? பணித்திர்' என்று, இரு கை கூப்பினான்.**

*(பரதன் கைகேயியைப் பார்த்து)* ***'மூண்டு எழு காதலால்*** *- என் உள்ளத்திலிருந்து மேல் எழும்புகின்ற பெரு விருப்பத்தால்;* ***முளரித் தாள் தொழ*** *- (தயரத மன்னனது)தாமரையாகிய திருவடிகளை வழிபட;* ***வேண்டினென்*** *- விரும்பி;* ***எய்தினென்*** *-வந்துள்ளேன்; உள்ளம் விம்மும்- (தந்தையைக் காண) மனம் துடிக்கிறது;* ***ஆண்தகை நெடுமுடிஅரசர் கோமகன்*** *- ஆடவர் திலகமாய அருங்குணம் உடைய நீண்ட மகுடம் அணிந்த மன்னர்மன்னனாகிய தயரதன்;* ***யாண்டையான்?*** *- எவ்விடத்தான்?; பணித்திர்' -சொல்லுங்கள்;'* ***என்று -; இரு கை கூப்பினான்*** *- இரண்டு கைகளையும் குவித்துத் தாயைவணங்கினான். பணித்திர் - உயர்வொருமை. அறுபதினாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அரசு வீற்றிருந்தவன்ஆதலின் 'நெடுமுடி' என்றார். தயரதனைத் தேடிக் கண்டிலன்; நகருட் புகுந்தவுடன் 'அருப்பம்'அன்று இது' என்று ஐயம் உற்றனன். ஆதலான். தந்தையைக் காண மூண்டு எழு காதல் அவன்பால் உண்டாகியது; உள்ளம் விம்மியது என அறிக. 'ஆல்' அசை நிலை.* ***43***

கைகேயியின் மறுமொழி

***2145. ஆனவன் உரைசெய, அழிவு இல் சிந்தையாள்,***
***'தானவர் வலி தவ நிமிர்ந்த தானை அத்***
***தேன் அமர் தெரியலான், தேவர் கைதொழ,***
***வானகம் எய்தினான்; வருந்தல் நீ என்றாள்.***

***ஆனவன்*** *- அப்பரதன்;* ***உரைசெய*** *- வினாவ;* ***அழிவு இல் சிந்தையாள்*** *- எதற்கும் கலங்காத திட சித்தம் உடைய கைகேயி;* ***'தானவர் வலி தவ நிமிர்ந்த தானை*** *- அசுரரது வலிமை கெடும்படி அவர்மேற் சென்ற சேனையை உடைய;* ***அத் தேன் அமர் தெரியலான்*** *- அந்தத் தேன் பொருந்திய மலர்மாலையை அணிந்த தயரதன்;* ***தேவர் கைதொழ*** *- (தமக்குவாழ்வளித்தவன் வருகின்றான் என்று கருதி) தேவர்கள் கைகூப்பி வணங்க;* ***வானகம் எய்தினான்*** *- விண்ணுலகத்தை அடைந்தான்;* ***நீ வருந்தல்'*** *- நீ துன்புறாதே;'* ***என்றான் -.***

*மன்னர் மன்னனாகிய தன் கணவன் இறப்பவும் மனங்கலங்காது அச்செய்தியைத் தானே தன்மகனிடமே சொல்லும் துணிவும் உடையளாய்ப் பின்னும் மகனை நோக்கி 'நீ வருந்தாதே'என்றுரைக்கும் நெஞ்சுரமும் பெற்றவளாதலின் 'அழிவு இல் சிந்தையாள்' என்றார். கணவன் இறந்த செய்தியைச் சொல்லும் போது 'தானவர் வலிதவ நிமிர்ந்த தானைத் தெரியலான்' எனத் தன்கணவனைப் பற்றிய பெருமிதம் கைகேயியின் சொற்களில் இருத்தல் அறிந்து இன்புறுக. இனி தன்மகனுக்கு அரசு பெறுதற்கு உதவிய இருவரங்களைத் தான் பெற ஏதுவாகிய சம்பராசுரப் போரை நினைவுகூர்ந்து 'தானவர் வலிதவ நிமிர்ந்த தாளை' என்றான் என்றுமாம்.*
***44***

தாயுரை கேட்ட பரதன் மூர்ச்சித்தல்

***2146. எறிந்தன கடிய சொல் செவியுற் எய்தலும்,***
***நெறிந்து அலர் குஞ்சியான், நெடிது வீழ்ந்தனன்;***
***அறிந்திலன்; உயிர்த்திலன் ;- அசனி ஏற்றினால்***
***மறிந்து உயர் மராமரம் மண் உற்றென்னவே.***

***எறிந்தன*** *- வேல் எறிந்தாற் போன்ற;* ***கடிய சொல்*** *- (கைகேயியின்) கொடுஞ்சொல்;* ***செவியுள் எய்தலும்*** *- காதிற்குள் நுழைந்தவுடன்;* ***நெறிந்து அலர் குஞ்சியான்*** *- படிப்படியாக நெறிப்புடைத்தாய் விரிந்த தலைமயிரை உடைய பரதன்;* ***அசனிஏற்றினால்*** *- பேரிடியால்; உயர்* ***மராமரம்*** *- ஓங்கி வளர்ந்த மராமரமானது;* ***மறிந்து மண் உற்றென்ன*** *- ஒடிந்து மண்ணிலே விழுந்ததுபோல;* ***நெடிது வீழ்ந்தனன்*** *- நீண்டு விழுந்த;* ***அறிந்திலன்*** *- அறிவு கெட்டு;* ***உயிர்த்திலன்*** *- மூச்சற்றவனாய்க் கிடந்தான்.*

*இடியேறுண்ட மராமரம் கைகேயி சொற்கேட்டு வீழ்ந்த பரதனுக்கு உவமை ஆயிற்று, அசனி -இடி-இடிஏறு என்பது ஆண்மை மிக்க இடி எனப்பெறும்; அஃதாவது பேரிடி. 'ஏ' ஈற்றசை.* ***45***

*பரதன் தாயைக் கடிந்து பேசுதல்*

***2147. வாய் ஒளி மழுங்க, தன் மலர்ந்த தாமரை***
***ஆய் மலர் நயனங்கள் அருவி சோர்தர,***
***'தீ எரி செவியில் வைத்தனைய தீய சொல்,***
***நீ அலது உரைசெய நினைப்பார்களோ?;' என்றான்***

*(பரதன் தேறி)* ***தன் வாய் ஒளி மழுங்க*** *- தன் முகவொளி மங்கிப் போகவும்;* ***மலர்ந்த தாமரை ஆய் மலர் நயனங்கள்*** *- அன்றலர்ந்த தாமரையின் ஆராய்ந்த அழகுமலர் ஆகியகண்கள்;* ***அருவி சோர்தர*** *- நீரை அருவியாகச் சொரியவும்; (தாயை நோக்கி)* ***'செவியில்*** *- காதுகளில்;* ***எரிதீ வைத்த அனைய தீய சொல்*** *- எரிகின்ற நெருப்பைவைத்தது போன்ற கொடுஞ் சொற்களை;* ***உரைசெய*** *- பேசுதற்கு;* ***நீ அலது*** *- நீ அல்லாமல்;* ***நினைப்பரோ?*** *- (பிறர்) நினைப்பார்களோ?;'* ***என்றான்-.***

*கைகேயியின் கல்நெஞ்சு 'வருத்தல் நீ' என்ற (2145) உரையால் வெளிப்படுதலின், நீ அலதுபிறர் உரைசெய்ய நினையவும் மாட்டார்; பேசுவது எங்ஙனம் என்றான். கைகேயிநினைத்ததோடன்றிப் பேசவும் செய்தனள் என்ற அவள் கொடுமையை 'நினைப்பரோ' என்ற பரதன்வினா புலப்படுத்தியது. 'ஓ' வினாப்பொருட்டு; 'நினையார்' என்பது விடை.* ***46***

*துயர் மிகுதியால் பரதன் புலம்புதல்*

***2148. எழுந்தனன், ஏங்கினன்; இரங்கிப் பின்னரும்***
***விழுந்தனன்; விம்மினன்; வெய்து உயிர்த்தனன்;***
***அழிந்தனன்; அரற்றினன்; அரற்றி, இன்னன***
***மொழிந்தனன், பின்னரும் - முருகன் செவ்வியான்;***

***முருகன் செவ்வியான்*** *- முருகனை ஒத்த பேரழகு உடைய பரதன்;* ***ஏங்கினன் எழுந்தனன்*** *- (விழுந்து கிடந்ததரையில் இருந்தும்) ஏக்க முற்று எழுந்து;* ***இரங்கி*** *- மனம் வருந்தி;* ***பின்னரும் விழுந்தனன்*** *- மீண்டும் கீழ்விழுந்து;* ***விம்மினன்*** *- மனம் பொருமித் துடித்து;* ***வெய்து உயிர்த்தனன்*** *வெப்பமாகப் பெருமூச்சு விட்டு;* ***அழிந்தனன்*** *- மனம் கெட்டு;* ***அரற்றினன்*** *- பல படியாகப் பிதற்றலானான்;* ***அரற்றி*** *- புலம்பி;* ***பின்னரும்*** *- பிறகு;* ***இன்னன மொழிந்தனன்*** *- இவ்வாறு பேசலானான்.*

*முருகன் - அழகன். முருகு என்னும் சொற்கு அழகு, மணம், இளமை, கடவுள் தன்மை என்னும்நான்கு பொருள் உண்டு. முருகன் மணம் கமழ் தெய்வத்து இள நலம்" (திருமுருகு 290) உடையன்ஆதலின் பரதனுக்கு உவமையாயினன், 'இன்னன்' என்பதனைப் பின்வரும் ஒன்பது செய்யுள்கள் விரிக்கும் . 47*

*பரதன் தயரதனை நினைத்து முன்னிலைப்படுத்தி அரற்றுதல்*

### *2150.* 

### *2149. 'அறம்தனை வேர் அறுத்து, அருளைக் கொன்றனை,*
### *சிறந்த நின் தண்ணளித் திருவைத் தேசு அழித்து,*
### *இறத்னை ஆம் எனின், இறைவ! நீதியை*
### *மறந்தனை; உனக்கு, இதின் மாசு மேல் உண்டோ?*

*'**இறைவ!** - தயரத மன்னனே!; **அறம்தனை வேர் அறுத்து** - தருமத்தை வேரோடேஅழித்து; **அருளைக் கொன்றனை** - அருளை உயிர் போக்கி; **சிறந்த நின் தண் அளித்திருவைத் தேசு அழித்து** - உயர்ந்து சிறந்த நின் குளிர்ந்த கருணைச் செல்வத்தை ஒளிகெடுத்து; **இறந்தனை ஆம் எனின்** - இறந்து பட்டாய் என்றால்; **நீதியை மறந்தனை** - நீதியை மறந்துவிட்டாய் ஆனாய்; **உனக்கு -; இதின் -** இதனைக் காட்டிலும்; மாசு- குற்றம்; **மேல் உண்டோ** - மேம்பட்ட துண்டோ?'*

*தயரதன் இறந்தபடியால் உலகில் அறம்காப்பார் இல்லாமையால் அறம் கெட்டது. தயரதன்இறப்பே அறம், அருள், ஒளி இவற்றை உலகில் நில்லாதபடி செய்துவிட்டது என்பது இதனாற்கூறியது. எனவே, தயரதன் ஆட்சிச் சிறப்புப் புலப்படுகிறது. "திருவுடை மன்னரைக் காணில்திருமாலைக் கண்டேனே" (திவ்வியப்-3271) என்பராதலின் அரசனை 'இறைவ!' என்றான். வள்ளுவரும் 'இறைமாட்சி' என்றது காண்க. தயரதன் இறவாதிருந்து இவற்றையெல்லாம் பழித்தாற்போலப் புகழையே கூறினானாம். **48***

### *2150. 'சினக் குறும்பு எறிந்து, எழு காமத் தீ அவித்து,*
### *இனக் குறும்பு யாவையும் எற்றி, யாவர்க்கும்*
### *மனக்கு உறு நெறி செலும் வள்ளியோய்! மறந்து*
### *உனக்கு உறு நெறி செலல் ஒழுக்கின்பாலதோ?*

*'**சினக்குறும்பு எறிந்து** - வெகுளியாகிய பகையை வெட்டி அழித்து; **எழு காமத் தீ அவித்து** - மனத்தில்தோன்றகின்ற காமம் ஆகிய நெருப்பை அணைத்து; **இனக் குறும்பு யாவையும் எற்றி -** கூட்டமாக உள்ள குற்றப் பகைகளாகிய உலோபம் முதலிய அனைத்தையும் அடித்துப் போட்டு; **யாவர்க்கும்** - எல்லா மக்களுடைய மனத்துக்கும்; **உறுநெறி** - ஏற்ற வழியிலே; **செலும் வள்ளியோய்!** - நடக்கின்ற வள்ளலே!; மறந்து - (தற்போது அதனை) மறந்து; **உனக்கு உறு நெறி செலல்** -உனக்கு ஏற்ற வழியில் நடப்பது; **ஒழுக்கின்ற பாலதோ?** - நல்லொழுக்கத்திற் சேர்ந்ததாகுமா?*

*திரும்பத் திரும்பத் தொல்லை கொடுக்கும் பகையைக் 'குறும்பு' என்பது வழக்கம். காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்கள் ஆறனுள் காமமும், வெகுளியும், 'சினக்குறும்பு' 'காமத்தீ' என முன்னடியிற் கூறப் பெறுதலின் 'இனக்குறும்பு' என்பது ஏனைய நான்கையும் குறிக்கும். அகத்தே மறைந்திருந்து தொல்லை கொடுப்பன ஆதலின் 'குறும்பு'எனப்பெற்றன. பிறர்க்கு*

*நன்மை செய்துவந்த தயரதன் இறந்து தனக்கு நன்மை தேடியவனாக ஆனான்என்பது பரதன் புலம்பல் - ''மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன், என்னுயிர்க்கு உறுவதும்செய்ய எண்ணினேன்'' (1327) என்ற தயரதன் கூற்றை ஈண்டுக் கருதுக. துறந்து செய்வதாகத் தயரதன்கூறியதை இறந்து செய்தானாகப் பரதன் புலம்பினன் என அறிக. 'ஓ' வினாப்பொருட்டு.* ***49***

## *2151. 'முதலவன் முதலிய முந்தையோர் பழங்<br>கதையையும் புதுக்கிய தலைவன்! கண்ணுடை<br>நுதலவன் சிலை விலின் நோன்மை நூறிய<br>புதல்வனை, எங்ஙனம் பிரிந்து போயினாய்?*

***'முதலவன் முதலிய*** *- சூரிய குலத்து முன்னோனாகிய ஆதித்தன்,* ***மனு,*** *மாந்தாதா, சிபி, முசுகுந்தன்முதலிய;* ***முந்தையோர்*** *- முற்பட்ட அரசர்களது;* ***பழங்கதையையும்*** *- நெடுநாட்பட்டவீர வரலாறுகளையும்;* ***புதுக்கிய*** *- உன் வீரச் செயல்களால் உண்மை என்று உலகறியச்செய்த;* ***தலைவன்!*** *- தலைவனாகிய தயரதனே!;* ***நுதல்கண் உடையவன்*** *- நெற்றியிற்கண் உடையவனாகிய சிவபிரானது; சிலைவிலின் - மேருமலையாகிய வில்லின்;* ***நோன்மை*** *-வலிமையை;* ***நூறிய*** *- பொடியாகும்படி செய்த;* ***புதல்வனை*** *- பெருவீரனாகிய இராமனை;* ***எங்ஙனம் பிரிந்து போயினாய்*** *- எவ்வாறு பிரிந்து சென்றாய்?*

*முன்னோர் கதைகளைத் தம் காலத்தவர் நம்ப வேண்டுதற்குத் தாமும் வீரச்செயல்களைச்செய்து மெய்ப்பித்தல் வேண்டும். அதனால், இவ்வீர வரலாறுகள் இக்குலத்தினர்க்கு இயல்பு,இயலாததன்று என்று உலகம் உணருமாதலின் 'புதுக்கிய' என்றார். சிலை - -மலை; இங்கு மேருமலை; 'இமயம்' எனலும் ஒன்றே. ''இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்'' (கலித்.38) என்றதும்காண்க. இனி, வில் செய்தற்குரிய சிலை என்னும் மரத்தினாற் செய்யப்பட்ட வில் எனப் பொருள்உரைத்தல் சிவன் வில்லுக்கு ஏற்புடைத்தாகாமை அறிக. 'தலைவன்' நெஞ்சிற்கு நெருக்கமாதரிலன் அண்மைவிளி, இயல்பாய் நின்றது. இராமனிடத்திற் பெருங்காதல் உடைய தயரதன், மேலும் அவன்வீரச் செயல்கள் கண்டு அவனிடத்திற் கவரப் பெற்றவன். அவனை எங்ஙனம் பிரிந்து செல்லவன்மை பெற்றான் என்ற பரதன் புலம்பல் 'இராமனைப் பிரிந்ததனால் தயரதன் இறந்தான்' என்னும் கருத்துக்கும் அடி அமைத்து நிற்றல் காண்க. 50*

## *2152. 'செவ் வழி உருட்டிய திகிரி மன்னவ!-<br>எவ் வழி மருங்கினும் இரவலாளர்தாம்,<br>இவ் வழி உலகின் இல்; இன்மை நண்பினோர்<br>அவ் வழி உலகினும் உளர்கொலோ? - ஐயா!*

***'ஐயா!*** *- ஐயனே!;* ***செவ்வழி திகிரி உருட்டிய மன்னவ!*** *- (நீதி தவறாத)நேரிய வழியில் ஆணைச் சக்கரத்தைச் செலுத்திய மன்னவனே;* ***இவ்வழி உலகின் எவ்வழிமருங்கினும்*** *- இவ்விடத்துள்ள உலகத்தின் எந்த இடப்பகுதியிலும்;* ***இரவலாளர் தாம்*** *- இல்லை என்று சொல்லி இரப்பவர்கள்;* ***இல்*** *- இல்லை; (நின் கொடைக்கு இரவலரைத்தேடிச் சென்றாயோ)* ***இன்மை நண்பினோர்*** *- வறுமையைத் தமக்கு நட்பாக்கிக்*

*கொண்டவர்கள்;* ***அவ்வழி உலகினும்*** *- அவ்விடத்ததாகிய விண்ணுலகின்கண்ணும்;* ***உளர்கொலோ?*** *- இருக்கின்றார்களோ? (அவர்கள் வறுமையை நீக்கச் சென்றாயோ)*

*"மொய் ஆர் கலிசூழ் முதுபாரில், முகந்து தானக், கை ஆர் புனலால் நனையாதன கையும்இல்லை", "ஈந்தே கடந்தான் இரப்போர் கடல்", "கொள்வார் இலாமை" என (165, 170, 172) முன்கூறியவற்றால் தயரதனுக்கு அயோத்தியிலும், கோசலத்திலும், மண்ணுலகிலும் இரவலர் இன்மை பெறப்படும். கொடையிற் சிறந்த மன்னன் விண்ணுலகில் இரவலரைத் தேடிப் புறப்பட்டதாக அவன்இறப்பினைத் தற்குறிப்பேற்றம் செய்தான். இனி, 'இவ்வழி உலகினில்' என்பதனை, 'உலகின்இல்' எனப் பிரியாது ஒரு சொல்லாகக் கொண்டு, 'இவ்வுலகத்தின்கண் எவ்விடத்தும்இரவலாளர்தாம் உள்ளனர். உன்னோடு ஒத்த வகையில் பழகுதற்குரிய நண்பினோர் இன்மையால்,அவ்வழி உலகாகிய விண்ணுலகத்தில் உனக்கொத்த நண்பர்களைத் தேடிச் சென்றாயோ! எனப் பரதன்புலம்பியதாகக் கூறுதல் முன்னைய கம்பர் கூற்றுக்கு முரண்படுதலின் சிறப்பின்மைஅறிக.* ***51***

***2153. 'பல் பகல் நிழற்றும் நின் கவிகைப் பாய் நிழல்***
***நிற்பன பல் உயிர் உணங்க, நீ நெடுங்***
***கற்பக நறு நிழல் காதலித்தியோ? -***
***மல் பக மலர்ந்த தோள் மன்னர் மன்னனே!***

***மல் பக மலர்ந்த தோள்*** *- மல் தொழில் தொலையும்படி அகன்று பரந்த தோள்களை உடைய;* ***மன்னர் மன்னனே!*** *-சக்கரவர்த்தியே!;* ***பல்பகல் நிழற்றும்*** *- பல காலமாக (உலகுக்கு) நிழலைத் தரும்;* ***நின் கவிகைப் பாய்நிழல்*** *- நினது வெண்குடையின் பரந்துபட்ட நிழற்கீழ்;* ***நிற்பனபல் உயிர்*** *- வாழ்வனவாகிய அனைத்துயிர்களும்;* ***உணங்க*** *- (நின்குடை நிழல்இன்மையால்) வாடி வற்ற;* ***நீ -; நெடுங் கற்பக நறு நிழல்*** *- (விண்ணுலகின்கண் உள்ள)நெடிய கற்பக மரத்தின் நறுமணம் வீசும் நிழலை;* ***காதலித்தியோ*** *- விரும்பினாயோ? பிறருக்கு நிழல் செய்த நீ இப்போது ஒரு நிழலின்கண் இருக்க விரும்பியது சிறந்ததாகுமாஎன்பது பரதன் வினாவாகும். உணங்கல் - வெயிலிற் காய்தல். குடைநிழல் என்பதால் 'உணங்க' எனஉபசரிக்கப்பெற்றது. அறமும் தண்ணளியும் இன்றிக் குடிமக்கள் அல்லற்படுவதை 'உணங்க' லாகக் கொள்க. 'பல்பகல்' என்றதை முன் கூறிய "அறுபதினாயிரம் ஆண்டு" (182) என்றதனால் அறிக. "காதலித்தியோ" என்றது அக்கற்பக நிழலும் சம்பரனைத் தொலைத்து நீ அளித்த நிழலன்றோஎன்னும் குறிப்பினை உள்ளடக்கியது. 'மன்னனே!'விளி.* ***52***

***2154. 'இம்பர் நின்று ஏகினை; இருக்கும் சார்பு இழந்து,***
***உம்பர் வந்து உன் கழல் ஒதுங்கினார்களோ?***
***சம்பரன் அனைய அத் தானைத் தானவர்,***
***அம்பரத்து இன்னமும் உளர்கொலாம்? - ஐயா!***

***ஐயா!*** *- ஐயனே!;* ***சம்பரன் அனைய*** *- சம்பராசுரனைப் போன்ற அத்தகைய;* ***தானைத் தானவர்*** *- சேனையை உடைய அசுரர்கள்; அம்பரத்து - விண்ணுலகத்து;* ***இன்னமும் உளர் கொலாம்*** *- இப்போதும் இருக்கின்றார்கள் போலும்; (அதனால்)* ***உம்பர்*** *- தேவர்கள்;* ***இருக்கும் சார்பு இழத்து*** *- (அசுரர்கள் தொல்லையால்) தாம் இருக்கும்விண்ணுலக இடத்தை அவர்கள்பால் இழந்து; வந்து - மண்ணுலகத்தில்*

*அயோத்திக்கு வந்து; உன்கழல்- உன்னுடைய கழல் அணிந்த திருவடிக் கீழ்;* ***ஒதுங்கினார்கொல்*** *- சரணடைந்து தங்கினார்களோ?; (அதனால்தான்)* ***இம்பர் நின்று*** *- இவ்வுலகத்திருந்து;* ***ஏகினை*** *- விண்ணுலகம் சென்றனையோ?*

*தேவர்களுக்குப் பகைவர் அசுரர்; அசுரர்கள் வலியுடையராயின் அவர்களை அழிக்கவலியுடையாரைச் சரணடைதல் தேவர் வழக்கம். முன்னம் சம்பராசுரனை ஒழித்துத் தேவருலகைஇந்திரனுக்கு மீட்டுக் கொடுத்தான் தயரதன். இப்போதும் விண்ணுலகம் சென்றது அப்படித் தேவர்களுக்கு உதவி செய்தற்காகப் போலும் என்று சொல்லிப் புலம்பினான் பரதன்.* ***53***

***2155. ‘இயம் கெழு தானையர் இறுத்த மாத் திறை,***
***உயங்கல் இல் மறையவர்க்கு உதவி, உம்பரின்,***
***அயம் கெழு வேள்வியோடு, அமரர்க்கு ஆக்கிய,***
***வயங்கு எரி வளர்க்கலை, வைக வல்லையோ?***

*(ஐயா!)* ***இயம் கெழு தானையர்*** *- வாத்தியங்கள் நெருக்கி இருக்கின்ற சேனையைஉடையவர்;* ***இறுத்த*** *- (உனக்குத் தோற்று) கப்பமாகக் கட்டிய;* ***மா திறை*** *- பெரிய திறைப் பொருளை;* ***உயங்கல் இல்*** *- அ வருந்துதல் இல்லாத;* ***மறையவர்க்கு*** *- வேதம் வல்ல அந்தணார்க்கு;* ***உதவி*** *- கொடுத்து;* ***உம்பரின்*** *- விண்ணுலகில் உள்ள தேவர்கள் நலத்தின் (பொருட்டாகச் செய்யப் பெறும்);* ***அயம் கெழு வேள்வியோடு*** *- குதிரையைக் கொண்டு செயப்பெறும் அசுவமேத யாகத்துடனே;* ***அமரர்க்கு ஆக்கிய*** *- தேவர்களுக்காக விதித்த;* ***வயங்கு எரி*** *- விளங்குகின்ற (காருகபத்தியம் முதலிய) யாகஅக்கினி காரியங்களையும்; வளர்க்கலை - (முன்பு இடையறாது செய்து வந்தாய்; இப்போதுஅவற்றைச்) செய்யாமல்;* ***வைக வல்லையோ*** *- சோம்பித் தங்கியிருக்க மாட்டுவையோ.*

*மறையவர்க்கு உதவலும், யாகங்கள் செய்தலும், பூசுரரையும், சுரரையும் காத்தற் பொருட்டு, இரண்டனையும் இடையறாது செய்த தயரதன் விண்ணுலகில் எதுவும் செய்யாமல் எவ்வாறு இருக்க இயலும்என்று எண்ணிப் புலம்பினான் என்க. அயம் - அஜம் என்னும் வடசொல். குதிரை. ‘வாம்பரிவேள்வி’ (271) என்று முன்னும் கூறியது காண்க.* ***54***

***2156. ‘ஏழ் உயர் மத களிற்று இறைவ! ஏகினை -***
***வாழிய கரியவன், வறியன் கை என,***
***பாழி அம் புயத்து நின் பணியின் நீங்கலா***
***ஆழியை, இனி, அவற்கு அளிக்க எண்ணியோ?***

***ஏழ் உயர்*** *- ஏழ் உறுப்புகள் உயர்ந்து விளங்கும்;* ***மத களிற்று*** *- மதங்கொண்ட யானையை உடைய;* ***இறைவ!*** *- தலைவனே!;* ***பாழி அம் புயத்து நின்*** *- வலிய அழகிய தோள்களை உடையஉனது; பணியின் - கட்டளையின்;* ***நீங்கலா*** *- (சிறிதும்) வழுவாத; ஆழியை - ஆணைச் சக்கரத்தை;* ***கரியவன் கை வறியன் என*** *- இராமபிரான் வெறுங்கையனாய் இருக்கின்றான் என்பது கருதி;* ***இனி அவற்கு அளிக்க எண்ணியோ*** *- இனிமேல் அவனுக்கு (அச்சக்கரத்தைக்)கொடுக்கக் கருதியோ* ***ஏகினை*** *- விண்ணுலகு சென்றாய்?*

*தான் இருக்கும்வரை இராமன் அரசனாதல் இயலாது. ஆதலின், தனது ஆழியை அவனக்கு அளிக்கஎண்ணித் தயரதன் விண்ணுலகு சென்றான் என்று தற்குறிப்பேற்றம் செய்தான் பரதன். கரியவன் -கரியவனாகிய திருமால் எனப் பொருள் உரைத்து அவன் கையில் ஒன்றுமில்லாமல் வறியனாயிருத்தல்கருதித் தன் சக்கரத்தை அவன்பால் கொடுத்து விண்ணுலகு சென்றான் தயரதன் எனினும் அமையும். கால்கள் நான்கும், மருப்பு இரண்டும், துதிக்கையும் ஆக ஏழ் உறுப்புகள் உயர்ந்து இருத்தல் உத்தம அரசுவாவின் இலக்கணம். "தாழிருந்தடக்கையும் மருப்பும் தம்பியர், தோழர் தன்தாள்களாச் சொரியும் மும்மதம், ஆழ்கடற் சுற்றமா அழன்று சீவக, ஏழுயர் போதகம் இனத்தொடேற்றதே" (சீவக. 775) என்பது காண்க. இனி ஏழு முழம் உயர்ந்திருப்பது அரசுவாவின் இலக்கணம்என்பதும் ஒன்று, "ஏழுயர் போதகம்" (சீவக. 775) "ஏழுயர் களிற்று மன்னர்" (பாகவதம்3353) என்பனவற்றைக் காண்க.* ***55***

## *2157. 'பற்று இலை, தவத்தினின் பயந்த மைந்தற்கு*
## *முற்று உலகு அளித்து, அது முறையின் எய்திய*
## *கொற்றவன் முடி மணக் கோலம் காணவும்*
## *பெற்றிலை போலும், நின் பெரிய கண்களால்?'*

***பற்று இலை*** *- ஆசை யற்றவன் (நீ) (பந்த பாசங்களை விலக்கியவன்);* ***தவத்தினின் பயந்த மைந்தற்கு*** *- தவம் முயன்று அரிதின் பெற்ற மைந்தனாகிய இராமனுக்கு;* ***உலகு முற்று அளித்து*** *- உலகம்முழுவதையும் கொடுத்து;* ***அது*** *- அவ்வுலகை;* ***முறையின் எய்திய*** *- அரச பரம்பரை முறைப்படி அடைந்த;* ***கொற்றவன்*** *- இராமனது;* ***முடி மணக் கோலம்*** *- முடிசூட்டுவிழாக் காட்சி அழகை; நின் பெரிய கண்களால் - உனது அகன்ற கண்களால்;* ***காணவும் பெற்றிலைபோலும்*** *- கண்டு மகிலும் பேற்றையும் அடையாமல் விட்டாய் போலும்.*

*பற்றற்றவனாய் விண்ணுலகு சென்றான் தயரதன் என்பதை இதனாற் குறித்தான். இனி, 'பற்றிலைதவத்தினின்' என்று இணைத்து, தயரத மன்னனே! நீ தவத்தினில் பற்றுள்ளவனாயிருந்திருந்தால்இறவாமலே இராமனுக்கு முடி சூட்டு விழாச் செய்து. அக்காட்சி கண்டு மகிழ்ந்து, பின்னர்த் தவம்செய்யச் சென்றிருக்கலாம். அவ்வாறு தவத்திற் பற்றில்லாதவனாயிருந்ததால் இறந்து இராமன்முடிசூட வேண்டியதாக, அம்முடிசூட்டு விழாக் காணும் பேறு பெறாதவனாக ஆய்விட்டாயே என்று புலம்பினன் என்க.* ***56***

*பரதன் தன்னைத் தானே தேற்றிக்கொள்ளுதல்*

## *2158. ஆற்றலன், இன்னன பன்னி ஆவலித்து,*
## *ஊற்று உறு கண்ணினன், உருகுவான்; தனைத்*
## *தேற்றினன் ஒரு வகை; சிறிது தேறிய,*
## *கூற்று உறழ் வரி சிலைக் குரிசில் கூறுவான்.*

***ஆற்றலன்*** *- (தந்தை இறந்த துயரைப்) பொறுக்க மாட்டாதவனாய்;* ***இன்னன*** *- இவ்வாறமைந்த சொற்களை;* ***பன்னி*** *- பலமுறை சொல்லி;* ***ஆவலித்து*** *-அழுதிரங்கி;* ***ஊற்று உறு கண்ணினன்*** *- ஊற்றுப் போல மேலும் மேலும் பெருகுகின்ற கண்ணீரையுடையவனாய்;* ***உருகுவான்*** *- மனம் கரைந்து உருகும் பரதன்;* ***தனை***

***ஒருவகைதேற்றினன்*** - *தன்னைத் (தானே) ஒருவகையாகத் தேற்றிக் கொண்டான்;* ***சிறிது தேறிய*** - *ஓரளவு மனத்தெளிவு அடைந்த;* ***கூற்று உறழ் வரிசிலைக் குரிசில்*** - *யமனை ஒத்தகட்டமைந்த வில்லினை உடைய பரதன்;* ***கூறுவான்*** - *சொல்லுவான் ஆனான்.*

*அவலித்து - அவலப்பட்டு (அழுகை அடைந்து) என்பது ஆவலித்து என முதல் நீண்டதுதுக்கமிகுதியைக் காட்டியது. ஊற்று உறு கண் - ஊற்றில் நீர் பெருகுவது போல கண்ணிலிருந்துதுன்பத்தால் நீர் பெருகுகிறது என்பதாம். 'கூற்று உறழ்' என்பதனைக் குரிசில் என்பதனோடுகூட்டுக. யமனை ஒத்த கட்டமைந்த வில் எனலும் ஆம்.*
*57* இராமனை வணங்கினாலன்றித் துயர் போகாது எனல்

## *2159. 'எந்தையும், யாயும், எம் பிரானும், எம் முனும்,*
## *அந்தம் இல் பெருங் குணத்து இராமன்; ஆதலால்,*
## *வந்தனை அவன் கழல் வைத்தபோது அலால்,*
## *சிந்தை வெங் கொடுந் துயர் தீர்கலாது' என்றான்.*

***எந்தையும்*** - *என் தந்தையும்;* ***யாயும்*** - *என் தாயும்;* ***எம்பிரானும்*** - *என் கடவுளும்;* ***எம்முனும்*** - *என் அண்ணனும்;* ***அந்தம் இல் பெருங்குணத்து இராமன்*** - *எல்லையில்லாத பெருங்குணங்களை யுடைய இராமபிரானே யாவன்;* ***ஆதலால்-; அவன் கழல்*** - *அவனுடைய திருவடிகளை; வந்தனை வைத்த போது அலால் - வணங்குதல் செய்தபோது அல்லாமல்;* ***சிந்தை*** - *என் மனத்து;* ***வெங்கொடுத்துயர்*** - *(தந்தையின் இறப்பினால் உண்டாகிய) மிகக் கொடிய துன்பம்;* ***தீர்கலாது*** - *நீங்காது;* ***என்றான்-.***

*மகன், அடியான், தம்பி என்னும் மூன்று நிலைகளில் தன்னை இராமனுக்கு ஆட்படுத்திக்கொண்டஅன்பு சான்ற பரதனை இங்கே காண்கிறோம். 'அந்தம் இல் பெருங்குணம்' (2143) ஒப்பு நோக்குக. ''தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்றல் அரிது'' என்னும்குறளை (குறள் 7) இச்செய்யுளின் பின்னிரண்டு அடிகளொடும் ஒப்புநோக்குக.* ***58***

கைகேயி இராமன கானகம் சென்றமையைக் கூறுதல்

## *2160. அவ் உரை கேட்டலும், அசனிஏறு என,*
## *வெவ் உரை வல்லவள், மீட்டும் கூறுவாள்;*
## *'தெவ் அடு சிலையினாய்! தேவி, தம்பி, என்று*
## *இவ் இருவோரொடும் கானத்தான்' என்றாள்.*

***அவ் உரை கேட்டலும்*** - *(பரதன் கூறிய) அவ் வார்த்தைகளைக் கேட்டவுடனே;* ***அசனி ஏறு என*** - *பேரிடிபோல;* ***வெவ் உரை வல்லவள்*** - *கொடுஞ்சொற்களைச் சொல்லும் ஆற்றல் படைத்தவளாய கைகேயி;* ***மீட்டும் கூறுவாள்*** - *மறுபடியும் கூறத் தொடங்கி;* ***'தெவ் அடு சிலையினாய்!*** - *பகைவரைக் கொல்லும் வில்லுடைய பரதனே! (இராமன்) தேவி;* ***தம்பி என்று இவ் இருவோரொடும்*** - *தன் மனைவியும், தம்பியும் ஆகிய சீதை, இலக்குவன் ஆகிய இந்த இரண்டு பேரோடும்;* ***கானத்தான்*** - *காட்டின்கண் உள்ளான்;'* ***என்றாள்-.***

*'அசனி ஏறு' போலக் கொடுஞ்சொல் கூற வல்லவள் கைகேயி என்றார். இது இப்படலத்து 45ஆம் பாடலிலும் வந்துள்ளது. இராமன் ஒருவனே காடு செல்ல வேண்டியவன் ஆதலின் 'கானத்தான்' என்றுகூறி, இருவரும் தம் விருப்பத்தால் தாமே உடன் சென்றனர் என்பது தோற்ற, 'இவ் இருவோரொடும்' என்று அவர்கள் இருவரையும் குறித்தாள். **59*** *பரதன் துன்பத்தில் ஆழ்தல்*

***2161. 'வனத்தினன்' என்று, அவள் இசைந்த மாற்றத்தை***
***நினைத்தனன்; இருந்தனன், நெருப்புண்டான் என;***
***'வினைத் திறம் யாது இனி விளைப்பது? இன்னமும்***
***எனைத்து உள கேட்பன துன்பம், யான்?' என்றான்.***

***'வனத்தினன்'*** *- (இராமன்) காட்டில் உள்ளான்; என்று -;* ***அவள் இசைத்தமாற்றத்தை*** *- கைகேயி சொன்ன சொல்லை;* ***நினைத்தனன்*** *- (மனத்தில்) எண்ணிஎண்ணிப் பார்த்து;* ***நெருப்பு உண்டான் என*** *- நெருப்பை விழுங்கியவனைப் போல;* ***இருந்தனன்*** *- (செயலற்று, மயக்குற்று) இருந்து; (தனக்குத் தானே)* ***'வினைத்திறம்*** *-என் தீவினையின் கூறுபாடு;* ***இனி விளைப்பது யாது*** *- இனிமேலும் எனக்கு உண்டாக்க இருப்பது எத்தகைய தீமையோ?;* ***இன்னமும்*** *- மேலும்;* ***யான் கேட்பன துன்பம்*** *- யான் கேட்கவேண்டுவனவாகிய துன்பங்கள்;* ***எனைத்து உள*** *- எத்துணை உள்ளனவோ;'* ***என்றான் -.***

*மிகக் கொடிய செய்திகள் (தந்தை இறந்தமை, இராமன் காடு சென்றமை) இரண்டை முதற்கண்கேட்டதனால் உண்டாகிய அதிர்ச்சியும், துயரமும் பரதனைத் தாக்கின, அதனால், அவன் பயந்து இதனினும் கொடிய துன்பங்கள் எவை கேட்க நேருமோ என்று கூறினான். கேட்ட செய்தியினும் கொடியன வேறில்லையாயினும் ஒவ்வொன்றாக அறிதலின் பரதனின் அச்சம் மிகுவதாயிற்று. 'இசைத்த'என்றது இனிமைபடச் சொன்னாள் என்றாகும்.* ***60***

*இராமன் வனம் போய காரணத்தைப் பரதன் வினாவுதல்*

***2162. ஏங்கினன் விம்மலோடு இருந்த ஏந்தல், 'அப்***
***பூங் கழல் காலவன் வனத்துப் போயது,***
***தீங்க இழைத்த - அதனினோ? தெய்வம் சீறியோ?***
***ஓங்கிய விதியினோ? யாதினோ?' எனா.***

***விம்மலோடு*** *- அழுகையோடு;* ***ஏங்கினன்*** *- ஏக்கம் கொண்டு;* ***இருந்தஏந்தல்*** *- இருந்த பரதன் (கைகேயியை நோக்கி);* ***'அப்பூங்கழல் காலவன்*** *- அந்தப்பொலிவமைந்த வீரக்கழலை அணிந்த கால்களை உடையவனாகிய இராமன்;* ***வனத்துப் போயது*** *- காட்டிற்குச் சென்றது;* ***தீங்கு இழைத்த அதனினோ?*** *- பிறர்க்குத் தீமை செய்தஅதனாலா?;* ***தெய்வம் சீறியோ!*** *- தெய்வங்கள் கோபித்ததனாலேயா?;* ***ஓங்கிய விதியினோ*** *- (இவை எல்லாவற்றினும்) மேம்பட்டதாகிய விதியின் விளைவாலேயா?;* ***யாதினோ*** *- வேறு எந்தக் காரணத்தினாலோ?; எனா - என்று கேட்டு..... (அடுத்த பாட்டில்முடியும்)*

*இராமனது திருமேனி நலங்களுள் வனம் போயது திருவடி ஆதலின், அதன் சிறப்பைப் 'பூங்கழற்காலவன்' என்று பரதன் எண்ணியது அவன் மனநிலையைப்*

*புலப்படுத்தி அழகு செய்கிறது. எல்லாம் விதியின் விளைவாகவும் தனக்குத் தெரிந்தசிலவற்றை எடுத்துச் சொல்லி வினாவி, சொல்லாதவற்றை விதியில் அடக்கினான் எனக் கொள்க. செருக்கினால் தன்னளவறியாது கொடுமை செய்யத் தூண்டுவது 'விதி' என்றார் எனலும் ஆம். தீத்தொழில் செய்யும் அரசகுமாரரைக் காட்டிற்கு ஓட்டுதல் சூரிய குல வழக்கம். அசமஞ்சன் என்ற அரசகுமாரன் தீய செய்தமையாற் காட்டிற்கு விரட்டப்பட்டான். அது கருதியே! 'தீங்கு இழைத்தஅதனினோ' என்றான் பரதன்.* ***61***

## *2163. 'தீயன இராமனே செய்யுமேல், அவை*
## *தாய் செயல் அல்லவோ, தலத்துளோர்க்கு எலாம்?*
## *போயது தாதை விண் புக்க பின்னரோ?*
## *ஆயதன் முன்னரோ? அருளுவீர்' என்றான்.*

***'இராமனே** - இராமபிரானே; **தீயன செய்யுமேல்** - தீய செயல்களைச் செய்வானாயின்; **அவை** - அச் செயல்கள்; **தலத்து உளோர்க்கு எல்லாம்** -இப்பூமியின்கண் உள்ள எல்லார்க்கும்; தாய் செயல் **அல்லவோ** - தாய் (தன்குழந்தையின் உடல்நலம் பேணும்பொருட்டுச் செய்யும்) செயல் போன்றது அல்லவா? (இனி); **போயது** - (இராமன் வனம்) சென்றது; **தாதை விண் புக்க பின்னரோ?** - தந்தையாகியதயரதன் விண்ணுலகு சென்ற பிறகா (இறந்த பிறகா); **ஆயதன் முன்னரோ?** - அவன் விண்ணுலகுசேறற்கு முன்னமேயா (உயிருடன் இருக்கும் போதேயா); **அருளுவீர்** - சொல்லி அருளுக;' **என்றான் -.***

*இராமன் தீமை செய்ததனால் வனம் போயிருக்க மாட்டான். இராமன் செய்கிற தீமைகள்தாய்செய்யும் தீமைகள் போலப் பார்வைக்குத் தீமைபோல் தோன்றி உண்மையில் நலம்செய்வதாகும். தாய் தன் குழந்தையைக் காலில் இட்டு நெருக்கிக், கைகளைப் பிடித்து, வாயைநெருக்கி, அழ அழப் பால் ஊட்டுவாள். காண்பார்க்குக் கொடுமை போல் தோன்றும்; உண்மையில் பாலை உண்பித்தலாகிய நற்செயல் அது ஆகும். அதுபோன்றதே இராமன் செயலும்; ஆதலின் 'தீங்குஇழைத்த அதனினோ' என்று இராமன் திறத்து நினைத்தலும் தகாது என்றானாம். அருளுவீர்' என்றது இகழ்ச்சிக் குறிப்பு. இரு கொடுமைகளைக் கவல்வின்றி இசைத்தது அறிந்தான் ஆதலின்இவ்வாறு கூறினான்.* ***62***

### *கைகேயியின் மறுமொழி*

## *2164. 'குருக்களை இகழ்தலின் அன்று; கூறிய*
## *செருக்கினால் அன்று; ஒரு தெய்வத்தாலும் அன்று;*
## *அருக்கனே அனைய அவ் அரசர் கோமகன்*
## *இருக்கவே, வனத்து அவன் ஏகினான்' என்றான்.*

*'(இராமன் காடு போயது) '**குருக்களை** - பெரியோரை; **இகழ்தலின் அன்று** - பழித்ததனால் அன்று; **கூறிய** - முன்பு நீ கூறிய; **செருக்கினால்** - அளவின்மிக்க கர்வச் செயலாலும் அன்று; ஒரு **தெய்வத்தானும் அன்று** - ஓர் தெய்வக்குற்றத்தால் அத்தெய்வம் சீறியதாலும் அன்று; **அருக்கனே அனைய** -சூரியனையே ஒத்த (நேர்மை தவறாத); **அவ் அரசர் கோமகன்** - அந்தச்சக்கரவர்த்தியாகிய தயரதன்; இருக்கவே -*

*உயிருடன் இருக்கின்ற போதே;* ***அவன் வனத்துஏகினான்'*** *- இராமன் காட்டுக்குச் சென்றான்;'* ***என்றாள் -.***

*முன்பு பரதன் வினாவில் வந்த மூன்று காரணங்களையும் அன்று என மறுத்தாள் கைகேயி. 'குருக்களை இகழ்தல்' -'தீங்கு இழைத்த அதனினோ' என்பதுடுனும், 'ஒருதெய்வத்தால்' என்பது 'தெய்வம் சீறியோ' என்பதுடனும், 'செருக்கினால்' என்பது 'ஓங்கியவிதியினோ' என்பதுடனும் பொருந்துமாறு அறிக.*

*வாய்மை தவறாதவன் தயரதன்; தன் உயிர் போய்விடும் என்பது தெரிந்தும் கைகேயிக்குவாக்குத் தவறாமல் வரம் கொடுத்தவன் ஆதலால், 'அருக்கனே அனைய' என்று தயரதனை இங்குக்கூறினாள். பரதன் கேட்ட வினாக்களின் அளவே கைகேயி பதில் உரைக்கிறாள்; மேற்கொண்டுதானாக எதுவும் சொல்லாதில்லை; ஏன்? பரதன்பால் தான் செய்த செயலை உடன் தெரிவிப்பதில்எழுந்த அச்சமே ஆகும்.*
***63***

*பரதன் மறுபடியும் கைகேயியை வினாவுதல்*

***2165. 'குற்றம் ஒன்று இல்லையேல், கொதித்து வேறு உளோர்***
***செற்றதும் இல்லையேல், தெய்வத்தால் அன்றேல்***
***பெற்றவன் இருக்கவே, பிள்ளை கான்புக***
***உற்றது என்? தெரிதர உரைசெய்வீர்.' என்றான்.***

***'குற்றம் ஒன்று இல்லையேல்*** *- இராமன் பிறருக்குச் செய்த தீங்கு ஒன்றும்இல்லையாக இருக்குமானால்;* ***வேறு உளோர் கொதித்து செற்றதும் இல்லையேல்*** *- இராமனுக்குவேறாக உள்ள பகைவர் மனம் வெம்பி வலியை அழித்ததும் இல்லையானால்;* ***தெய்வத்தான் அன்றேல்*** *- தெய்வக் குற்றத்தினாலும் விளைந்தது இல்லையானால்;* ***பெற்றவன் இருக்கவே*** *- தன்னைப்பெற்ற தந்தை தயரதன் உயிரோடிருக்கும் பொழுதே;* ***பிள்ளை கான் புக உற்றது என்*** *- அவன்மகனாகிய இராமன் காடு செல்லும்படி நேர்ந்ததற்குக் காரணம் யாது?; தெரிதர - நன்கு விளங்கும்படி;* ***உரைசெய்வீர்!*** *- சொல்வீராக;'* ***என்றான் -.***

*வேறு எக்காரணமும் இல்லை என்னும்போது தந்தை இருக்கும்போது மகன் காடுசென்றதனால் பரதன்காரணம் கேட்டு வினாவ வேண்டுவதாயிற்று. 'பின் அவன் உலந்தது என்' என்று ஒரு பாடம் 'தெரிதரஉரை செய்வீர்' என்ற பகுதிக்கு உண்டு. மகன் காடு சென்ற பின் தந்தையாகிய தயரதன் இறந்ததற்குக் காரணம் என்ன? என்று பரதன் வினாவினன் என்பர். மகன் காடு சென்றதேதந்தையின் இறப்புக்குக் காரணமாகிவிடுதலின், வேறு காரணம் வினாவி அறிய வேண்டுவதின்று என்க.*
***64***

*கைகேயி தான் வரம் பெற்றமை கூறல்*

***2166. 'வாக்கினால் வரம் தரக் கொண்டு, மைந்தனைப்***
***போக்கினேன், வனத்திடை; போக்கி, பார் உனக்கு***
***ஆக்கினேன்; அவன் அது பொறுக்கலாமையால்,***
***நீக்கினான் தன் உயிர், நேமி வேந்து' என்றாள்.***

*‘**வாக்கினால்** - (தயரதன் தன்) வாய்மொழியால்; வரம்தர - (இரண்டு) வரங்களை (எனக்குத்) தர; **கொண்டு** - அவற்றைப் பெற்று; **மைந்தனை வனத்திடை போக்கினேன்** - (ஒரு வரத்தால்) மகனாகிய இராமனைக் காட்டிற்குச் செல்லச்செய்தேன்; **போக்கி** - (அவனை) அனுப்பிவிட்டு; **உனக்குப் பார் ஆக்கினேன்** -மற்றொரு வரத்தால் (பரதனாகிய) உனக்கு உலக ஆட்சியைச் செய்துவைத்தேன்; **நேமி வேந்துஅவன்** - ஆணைச் சக்கரம் உடைய வேந்தனாகிய அத்தயரதன்; **அது பொறுக்கலாமையால்** - (மகனைப் பிரிந்த) துயரம் பொறுக்கமாட்டாமையால்; **தன் உயிர் நீக்கினான்** - தன்னுயிரைப் போக்கிக் கொண்டான்;’ **என்றாள் -.***

*தன் செயல் எதுவும் இல்லை. முன்பு வரம் தந்தவன் தயரதன். அவன் இப்போது வரத்தைநிறைவேற்றித் தரப் பெற்றுக் கொண்டேன். தயரதன் தந்த வரத்தால் இவ்விரண்டு செயல்களும்நடந்தன. தானே வரம் தந்து பொறுக்காது தன் உயிரைப் போக்கிக் கொண்டான் என்று தன்மேல்பரதன் கோபப்படாதவாறு செய்தியைக் கூறினாள். ஆயினும், ‘போக்கினேன்’, ‘ஆக்கினேன்’ என்றஇரண்டும் அவள் அகங்காரத்தைக் காட்டி ‘நானே செய்தேன்’ என்று அவனைப்பரதனுக்கு இனம் காட்டின.‘அது’ என்னும் கட்டு இரண்டில் முன்னையதாகிய இராமன் வனம் புகுந்த செய்தியைக் குறித்து நின்றது. **65***

*பரதன் கொண்ட சீற்றம்*

***2167. சூடின மலர்க் கரம், சொல்லின் முன், செவி***
***கூடின; புருவங்கள் குனித்துக் கூத்து நின்று***
***ஆடின; உயிர்ப்பினோடு, அழல் கொழுந்துகள்***
***ஓடின; உமிழ்ந்தன, உதிரம் கண்களே!***

*__சூடின மலர்க்கரம்__ - தாய்முன் தலைமேற் குவித்திருந்த பரதன் கரமலர்கள்; **சொல்லின்முன்** - கைகேயி கூறிய வார்த்தை செவியை அடைதற்கு முன்னால்; **செவி கூடின** - காதுகளைப் பொத்திக் கொண்டன; **புருவங்கள் குறித்து நின்று கூத்து ஆடின** - (பரதன்) புருவங்கள் வளைந்து நின்று மேலே ஏறியும் கீழே இறங்கியும் நடனமிடுவனவாயின; **உயிர்ப்பினோடு** - அவன் மூச்சுக் காற்றுடனே; **அழல் கொழுந்துகள்** - நெருப்புச்சுவாலைகள்; ஓடின - வெளிவந்தன; **கண்கள் உதிரம் உமிழ்ந்தன** - கண்கள் இரத்ததைக்கக்கின. கைகேயியின் கடுஞ்சொல் கேட்கப் பிடிக்காமல் பரதன் செவிகளைப் பொத்தினன். புருவம்வளைதல் மேலும் கீழுமாதல், மூச்சுக்காற்று வெப்பமாய் வெளிப்படுதல், கண் கோவைப்பழம் போல்சிவத்தல் (உதிரம் கான்றல்) இவை சினத்தின் மெய்ப்பாடுகளாம். ‘ஏ’ ஈற்றசை. **65***

***2168. துடித்தன கபோலங்கள்; சுற்றும் தீச் சுடர்***
***பொடித்தன மயிர்த் தொளை; புகையும் போர்த்தது;***
***மடித்தது வாய்; நெடு மழைக் கை, மண் பக***
***அடித்தன, ஒன்றொடு ஒன்ற அசனி அஞ்சவே.***

*__கபோலங்கள்__ - கன்னங்கள்; **துடித்தன** - துடித்துக்கொண்டிருந்தன; **மயிர்த் தொளை** - மயிர்க்கால் கண்களில்; **சுற்றும்** - எப்பக்கமும்; **தீச்சுடர்** - நெருப்புப் பொறிகள்; **பொடித்தன** - அரும்பின; **புகையும் போர்த்தது** - புகை கிளம்பி (நாற்புறமும்) மூடிற்று; **வாய் மடித்தது** - வாய் மடித்துக்கொண்டது; **மழை நெடுங்கை** - மழை போன்ற*

*வள்ளன்மையுடைய நீண்ட கைகள்;* ***அசனி அஞ்ச*** *- இடியும் அஞ்சும்படி (பெரிய ஒலி உண்டாகும்படி); மண்பக* ***ஒன்றொடு ஒன்றுஅடித்தன*** *- பூமி வெடிக்கும்படி ஒரு கையோடு ஒரு கை மோதி அடித்தன.*

*கன்னம் துடித்தல், மயிர்க்கால் மூலம் வெப்பம் பரவல், வாய் மடித்தல், கையை அடித்தல் சினத்தின் அறிகுறிகளாம். 'ஏ' ஈற்றசை.* ***67***

***2169. பாதங்கள் பெயர்தொறும், பாரும் மேருவும்,***
***போதம் கொள் நெடுந் தனிப் பொரு இல் கூம்பொடு,***
***மாதங்கம் வரு கலம் மறுகி, கால் பொர,***
***ஓதம் கொள் கடலினின்று உலைவ போன்றவே.***

***பாதங்கள்*** *- (சினங்கொண்ட பரதனது) கால்கள்;* ***பெயர்தொறும்*** *- தரையில் மாறிமாறி வைக்கப்படுந்தோறும்;* ***பாரும் மேருவும்*** *- மண்ணும் மேரு மலையும்;* ***மாதங்கம் வரு கலம்*** *-யானையை ஏற்றிவருகிற மரக்கலம்;* ***கால் பொர*** *- (கழற்)காற்று மோத;* ***போதம் கொள்*** *- கலத்தைச் செலுத்தும் அறிவைத் தன்பாற் கொண்ட;* ***தனி நெடும் பொரு இல் கூம்பொடு*** *- தனித்த நீண்ட ஒப்பற்ற பாய்மரத்துடனே;* ***மறுகி*** *- சுழன்று;* ***ஓதம் கொள் கடலினின்று*** *- நீர்ப்பெருக்கைக் கொண்ட கடலிலிருந்து;* ***உலைவ போன்ற*** *- தடுமாறி வருந்துவ போன்ற.*

*யானை யேற்றிய கலம் பாய்மரத்தோடு காற்றால் கடலில் நிலைதடுமாறல், மேருமலையோடும கூடியபூமி பரதன் பாதம் பெயர நிலைதடுமாறலுக்கு உவமை ஆயிற்று. யானை - மேரு, மரக்கலம் - பூமி, பரதன் பாதம் - பாய்மரம் என ஒப்புரைக்க. கப்பலைத் திசையறிந்து காற்றின் போக்கறிந்து செலுத்துவது பாய்மரம் ஆதலின் "போதங் கொள் கூம்பு" என்றார்.* *68*

***2170. அஞ்சினர் வானவர்; அவுணர் அச்சத்தால்***
***துஞ்சினர் எனைப் பலர்; சொரி மதத் தொளை***
***எஞ்சின, திசைக் கரி; இரவி மீண்டனன்;***
***வெஞ் சினக் கூற்றும், தன் விழி புதைத்ததே!***

*(பரதன் பெருங் கோபம் கண்டு)* ***வானவர் அஞ்சினர்*** *- தேவர்கள் பயந்தார்கள்;* ***எனைப்பலர் அவுணர் அச்சத்தால் துஞ்சினர்*** *- எத்துணையோ பலராய அசுரர்கள் பயத்தால்இறந்தனர்;* ***திசைக் கரி*** *- திக்கு யானைகள்;* ***மதம் சொரிதொளை*** *- மதம்சொரிகின்ற மிகப் பல தொளைகள்;* ***எஞ்சின*** *- தூர்ந்துபோகப் பெற்றன; இரவி - சூரியன்;* ***மீண்டனன்*** *- மறைந்து போனான்;* ***வெஞ்சினக் கூற்றும்*** *- இயல்பிலேயே கொடுஞ்சினம் உடைய யமனும்;* ***தன் விழி புதைத்தது*** *- தன்னுடைய கண்களை (பரதனைக் காணஅஞ்சி) மூடிக் கொண்டான்.*

*அமுதுண்ட வானவர் அஞ்சினர்; அமுதுண்ணாத அவுணர் பயத்தால் துஞ்சினர்; அமரர் - மரிக்கும்தன்மை அற்றவர். பரதன் சீற்றத்தை உயர்வு நவிற்சியாக வருணித்தார். 'ஏ'ஈற்றசை.* ***69***

பரதன் இராமனுக்கு அஞ்சித் தாயைக் கொல்லாது விடுதல்

***2171. கொடிய வெங் கோபத்தால் கொதித்த கோளரி,***
***கடியவள் தாய் எனக் கருதுகின்றிலன்;***
***'நெடியவன் முனியும்' என்று அஞ்சி நின்றனன்;***
***இடிஉரும் அனைய வெம் மொழி இயம்புவான்;***

***கொடிய வெங் கோபத்தால்*** - *(பொங்கிப் புறப்பட்ட) மிகக் கொடிய வெகுளியால்;* ***கொதித்த*** - *(மனம்) சூடேறிய;* ***கோளரி*** - *சிங்கமாகிய பரதன்;* ***கடியவள்*** - *கடும்செயல் செய்தவளாகியகைகேயியை;* ***'தாய்' எனக் கருதுகின்றிலன்*** - *(தன்னுடைய) தாய் என்றுநினைக்கவில்லை (ஆயினும் இவளைக் கொன்றால்);* ***நெடியவன் முனியும்*** - *மூத்தோனாகியஇராமன் கோபிப்பான்;* ***என்று அஞ்சி நின்றனன்*** - *என்று கருதிப் பயந்து கொல்லாமல்(தடைப்பட்டு) நின்றான்; இடி உரும் அனைய - பேரிடியை ஒத்த;* ***வெம் மொழி*** - *கொடியசொற்களை;* ***இயம்புவான்*** - *சொல்லத் தொடங்கினான்.*

*தன் மகனுக்குப் பழிவரும் செயலைச் செய்தவள் ஆதலின் தாய் அல்லள்; கொடுஞ்செயல்செய்தாள் ஆதலின் கொல்ல வேண்டும். ஆனால், கொன்றாலும் அது இராமனுக்கு உவப்பாகாது என்பதுகருதிக் கொல்லாமல் விட்டான் என்றார். பரதன் தாயாகிய கைகேயியைக் கொல்லநினைத்ததற்கும். கொல்லாமல் விட்டதற்கும் இராமன்மாட்டுக் கொண்ட பக்தியே காரணமாதல் அறிக. இடி உரும்-ஒரு பொருட் பன்மொழி. 2298, 2325-ஒப்பிட்டுணர்க.* ***70*** *பரதன் கைகேயியைக் கடிந்து பழித்துரைத்தல்*

***2172. 'மாண்டனன் எந்தை, என் தம்முன் மா தவம்***
***பூண்டனன், நின் கொடும் புணர்ப்பினால்; என்றால்,***
***கீண்டிலென் வாய்; அது கேட்டும், நின்ற யான்***
***ஆண்டனெனே அன்றோ அரசை ஆசையால்?***

***'நின் கொடும் புணர்ப்பினால்*** - *உன்னுடைய கொடிய சூழ்ச்சியால்;* ***எந்தை மாண்டனன்*** - *என் தந்தை தயரதன் இறந்தான்;* ***என் தம்முன் மாதவம் பூண்டனன்*** - *என் தமையன் பெருந்தவத்தை மேற்கொண்டான் (காட்டுச்குச் சென்றான்);* ***என்றால்*** - *(இத்தகைய கொடிய நிகழ்ச்சிகள் நின் வாயால்விளைந்தன) என்றால்; வாய்* ***கீண்டிலென்*** - *(கொடி வரம் கேட்ட உன்னுடைய) வாயைக்கிழித்தேனில்லை;* ***அது கேட்கும்*** - *(வரம்பெற்றேன் என்ற) உன் சொல் கேட்கும்;* ***நின்ற*** - *இறவாது நின்ற;* ***யான் -; அரசை*** - *(நீ வாங்கிய) இராச்சியத்தை;* ***ஆசையால் ஆண்டனெனே அன்றோ*** - *பேராசையால் ஆட்சிபுரிந்தவன் ஆவனே யல்லவா?'*

*மறுக்காதது உடன்பட்டதாகும் என்னும் வழக்குப்படி வரம் கேட்ட தாயின் வாயைக்கிழிக்காமையால் தானம் அதற்கு உடன்பட்டதாக உலகம் நினைக்க இடம்தரும் என்பதால்,'ஆண்டனெனே அன்றோ அரசை" என்றான். தான் உடன்பட்டதாக உலகம் கருத நின்றதாகத் தன்னைப் பழித்துக் கூறிக்கொண்டு தாயைப் பழித்தான். புணர்ப்பு - சூழ்ச்சி. 'ஆண்டனெனே' என்பதில்உள்ள 'ஏ' தெளிவுப் பொருட்டு.* ***71***

***2173. 'நீ இனம் இருந்தனை; யானும், நின்றனென்;***
***"ஏ" எனும் மாத்திரத்து எற்றுகிற்றிலென்;***

***ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால்,***
***“தாய்” எனும் பெயர் எனைத் தடுக்கற் பாலதோ?***

***நீ*** *- (வரம் கொண்ட) நீயும்;* ***இனம் இருந்தனை*** *- இன்னமும் உயிரோடுஇருந்தாய்;* ***யானும் நின்றனென்*** *- யானும் உன்னெதிரில் சும்மா நின்று கொண்டுள்ளேன்;* ***‘ஏ’ எனும் மாத்திரத்து*** *- ‘ஏ’ என்று சொல்லக்கூடிய கால அளவுக்குள்;* ***எற்றுகிற்றிலென்*** *- (உன்னை) அடித்து வீழ்த்தவில்லை; (இதற்குக் காரணம்)* ***ஆயவன்முனியும் என்று அஞ்சினேன்*** *- (உலகுக்கெல்லாம்) தாய் போன்ற இராமன் கோபிப்பான் என்றுகருதிப் பயந்தேன்;* ***அலால்*** *- அல்லாமல்;* ***‘தாய்’ எனும் பெயர்*** *- உனக்கு என்னுடைய தாய் என்று ஒரு பெயர் உள்ளதே அது;* ***எனைத் தடுக்கற் பாலதோ*** *- என்னை(உன்னை அடித்து வீழ்த்தாமல்) தடுக்க வல்லமை உடையதோ?’*

*நீ பிழை செய்தாய்; உன்னைத் தண்டிக்க வேண்டியவன் யான்; அப்படியிருந்தும் உன்னைத்தண்டியாதது ‘தாய்’ என்பதால் அன்று, இராமனுக்கு அஞ்சியே ஆகும்; ஆகவே, எந்த இராமனைக் காட்டிற்கு அனுப்பினாயோ அவனால் தான் இன்று நீஉயிரோடிருக்கின்றாய் என்றான் பரதன். ‘தாய் எனும் பெயர்’ என்றது தாய் என்பது உனக்குப்பெயரளவில்தான் பொருந்தும்; பொருள் அளவில் அச்சொல்லுக்கு நீ சிறிதும் தகுதியற்றவள்.சொற்கள் பொருள் உணர்த்தும் வழிதான் ஆற்றல் உடையன; பொருள் உணர்த்தாத வழி ஆற்றல்அற்றன. எனவே, உனக்குரிய ‘தாய்’ என்பதும் எனைத் தடுக்கும் ஆற்றல் உடையதன்று என்பதும் ஒருகருத்து. ‘ஓ’ வினாப்பொருட்டு. 72*

***2174. ‘மாளவும் உளன், ஒரு மன்னன் வன் சொலால்;***
***மீளவும் உளன் ஒரு வீரன்; மேய பார்***
***ஆளவும் உளன் ஒரு பரதன்; ஆயினால்,***
***கோள் இல அறநெறி! குறை உண்டாகுமோ?***

***‘ஒரு மன்னன்*** *- ஓர் அரசன் (தயரதன்);* ***வன் சொலால்*** *- (கைகேயியின்வரம் என்ற) கொடுஞ்சொல்லால்;* ***மாளவும் உளன்*** *- தன் உயிரை விடவும் இருக்கிறான்;* ***ஒரு வீரன்*** *- ஓர் ஆண்மகன் (இராமன்);* ***மீளவும் உளன்*** *- தான் ஆள வேண்டிய அரசைவிட்டுக் காடு) செல்லவும் இருக்கிறான்;* ***மேய பார்*** *- (இவ்வாறு வந்து சேர்ந்த)பூமியை; ஆளவும் - ஆட்சிபுரியவும்;* ***ஒரு பரதன்*** *- பரதன் என்ற ஒருவன்; உளன்- இருக்கிறான்;* ***ஆயினால்*** *- இவ்வாறானால்;* ***அறநெறி கோள் இல*** *- தரும வழிகுற்றம் உடையதன்று; சிறந்ததே;* ***குறை உண்டாகுமோ*** *- ஒரு குறையும் உடையதாகுமா?’*

*இகழ்ச்சிக் குறிப்பாளகக் கொள்க. நடந்தவற்றைக் கூறி நன்று! நன்று! என்று தன்னைத்தானே நகையாடிக்கொண்டான் பரதன். ‘‘கைகேயி! தாயே! அம்மா உன் ஏற்பாடு அறநெறிக்குக் கோளேஇல்லாத ஏற்பாடு; இனி அறநெறிக்குக் குறை உண்டாகுமோ’’ என்று கேட்டாளாம். 73*

***2175. ‘ “சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்,***
***வழியுடைத்தாய் வரும் மரபை மாய்த்து, ஒரு***
***பழி உடைத்து ஆக்கினன், பரதன் பண்டு” எனும்,***
***மொழி உடைத்து ஆக்கலின் முறைமை வேறு உண்டோ?***

'**சுழி** உடை- வஞ்சனை உள்ள; **தாயுடை** - தாயாகிய கைகேயினுடைய; **கொடிய சூழ்ச்சியால்** -தீய புணர்ப்பினால்; **வழியுடைத்தாய் வரும் மரபை மாய்த்து** - தொன்றுதொட்டு வரும்சூரிய குலப்பரம்பரை வழக்கை மாறுபடுத்தி; **பரதன்** -; **ஒரு பழி உடைத்து** - ஒருபழியை உடையதாக; **பண்டு** - முன்பு; **ஆக்கினன்'** - செய்திட்டான்; **எனும்மொழி** - என்கின்ற பேச்சை; **உடைத்து ஆக்கலின்** - (பிற்காலத்தில்)பேசும்படியாகச் செய்திடுவதைக் காட்டிலும்; **வேறு முறைமை** - வேறு ஒழுங்கு (ஏதேனும்); **உண்டோ** - (நீ செய்த செயலில்) இருக்கிறதா?' 'மூத்தவற்கு உரித்து அரசு' என்பது சூரிய குல மரபு. மூத்தவன் இருக்க, இளையவனாய பரதன்அரசுபுரிய வரம் வாங்கிய காரணத்தால் அம்மரபைச் சிதைத்தாள் கைகேயி என்றான் பரதன். "மயின்முறைக் குலத் துரிமையை மனுமுதல் மரபைச் செயிர் உற" (1470) என்பதனைம இங்குக் கருதுக. நின்னால் மரபு மாய்ந்தது என்றானாம். 'ஓ'வினாப்பொருட்டு. 74

*2176.* **'கவ்வு அரவு இது என இருந்திர்; கற்பு எனும்**
**அவ் வரம்பு அழித்து, உமை அகத்துளே வைத்த**
**வெவ் அரம் பொருத வேல் அரசை வேர் அறுத்து,**
**இவ் வரம் கொண்ட நீர் இனி என் கோடிரோ?**

'**கற்பு எனும் அவ் வரம்பு அழித்து** - கற்பு என்று சொல்லப்படுகின்ற பெண்களுக்குரிய அறநெறிய்ன் வரம்பை அழித்து' உமை அகத்துஉளே வைத்த - உம்மை (காதலியாகத்) தன் நெஞ்சத்துள்ளே நிலை நிறுத்திக்கொண்ட; **வெவ்அரம் பொருத வேல் அரசை** - கொடிய அரத்தால் அராவப் பெற்ற வேற்படையை உடைய அரசனை; **வேர் அறுத்து** - அடியோடு கெடுத்து; **இவ்வரம் கொண்ட நீர்** - இந்த வரங்களைப்பெற்றுக்கொண்ட நீர்; **கவ்வு அரவு இது என இருத்திர்** - அகப்பட்டவரைக் கவ்விஅடியோடு அழிக்கும் பாம்பு இது எனச் சொல்லும்படியாக இருந்துகொண்டுள்ளீர்!; **இனி என்கோடிரோ** - இனிமேல் எதைக் கொள்ளப் போகிறீரோ?'

கணவன் உரைக்கு மாறுபடலின் கற்பை அழித்தாள் என்றான். அன்புடைய கணவன் உயிர்போதற்குக் காரணம் ஆகி, பின்னர் வரும் பிள்ளைக்கும் பெருந் துன்பம் செய்தாள் ஆதலின்'கல்வு அரவு' என்றான். அகப்பட்டோரை எல்லாம் பற்றிக் கொல்லும் அரவு' என்றான் -தயரதன், இராமன், அயோத்திவாழ்வார், பரதன் என்று அனைவர்க்கும் தீங்கு செய்தலின். 75

கலித்துறை

*2177.* **நோயீர் அல்லீர்; நும் கணவன்தன் உயிர் உண்டீர்;**
**பேயீரே நீர்! இன்னம் இருக்கப் பெறுவீரே?**
**மாயீர்! மாயா வன் பழி தந்தீர்! முலை தந்தீர்!**
**தாயீரே நீர்! இன்னும் எனக்கு என் தருவீரே!**

'**நும் கணவன் தன் உயிர் உண்டீர்** - உம் கணவனது உயிரைக் குடித்தீர்; (ஆயினும்) **நோயீர் அல்லீர்** - நோய் போன்றவர்அல்லீர்; **நீர் பேயீரே** - நீர் பேய் போன்றவரே; (இத்தகைய நீர்) **இன்னம்இருக்கப் பெறுவீரே** - (கணவன் இறந்த பிறகும்) இன்னமும் உயிருடன் வாழ்வதற்குரியவர்ஆவீரே? (உரியரல்லீர்); **மாயீர்** - இறந்து போக மாட்டீர்; **முலை தந்தீர்** -(குழந்தையாய் இருந்தபொழுது) பால் கொடுத்த வளர்த்தீர்; **தாயீரே நீர்** -

*(ஆகையால்) நீர் என் தாயார்தான்;* ***மாயா வன்பழி தந்தீர்*** *- (இளைஞனாய் இருக்கும்பொழுது) அழியாத கொடும்பழி கொடுத்து என்னைக் கெடுத்தீர்;* ***இன்னம்*** *- எதிர்காலத்தில்;* ***எனக்கு -; என் தருவீர்*** *- என்ன தரப்போகின்றீர்?'*

*நோய் சிலநாள், இருந்து உயிர் கொல்லும், கணவன் உயிரை உடனே கொன்றாள் ஆதலின்பேய் போன்றாள் என்றான். பழி தந்தீர்; முலை தந்தீர்; இன்னம் என் தருவீர்! என்பதுஇகழ்ச்சி செய்து வினாயது. 'மாயீர்' என்பதற்குச் சாகமாட்டீர்; மற்றவர்கள் எல்லாம்சாவைத் தழுவ நீர்மட்டும் சாகாமல் இருப்பீர் என்று அவளது கொடுமையின் மிகுதியைக்காட்டினான். 'ஏ' ஈற்றசை.* ***76***

## *2178.* **'ஒன்றும் பொய்யா மன்னனை வாயால், உயிரோடும் தின்றும், தீரா வன் பழி கொண்டீர்; திரு எய்தி என்றும் நீரே வாழ உவந்தீர்; அவன் ஏக, கன்றும் தாயும் போல்வன கண்டும் கழியீரே!**

***'ஒன்றும் பொய்யா மன்னனை*** *- சிறிதளவும் வாய்மையில் தவறாத தயரத மன்னனை;* ***வாயால்*** *- (வரமாய) வாய்ச்சொல்லால்;* ***உயிரோடும் தின்றும்*** *- உயிரோடு தின்றுவைத்தும்;* ***தீரா வன் பழி கொண்டீர்*** *- உலகுள்ளவும் விட்டு நீங்காத கொடும் பழியைத்தேடிக்கொண்டீர்;* ***அவன் ஏக*** *- அந்த மன்னன் இறந்துபட; திரு எய்தி - அவனுக்குரிய அரசுச் செல்வத்தை அடைந்து;* ***நீரே என்றும் வாழ உவந்தீர்*** *- நீரே என்றைக்கும் வாழ வேண்டும்என மகிழ்ந்தீர்!;* ***கன்றும் தாயும் போல்வன கண்டும்*** *- தாயும் கன்றும் போலஒன்றியிருந்து அன்பு செய்யும் பொருள்களைக் கண்டு வைத்தும் (கன்றாகிய இராமனைப் பிரிந்துவாழத் தாயாகிய உம்மால் எவ்வாறு இயன்றது);* ***கழியீரே*** *- உம் மனக்கருத்தைமாற்றிக்கொள்ளீரே!'*

*'யார் எப்படிப் போனால் என்ன; நான் வாழ்ந்தால், போதும்' எனக் கைகேயி நினைத்ததைப் பரதன் சுட்டிப் பழித்தான். 'கழியீரே' என்பது கழிதல் - பழையன நீங்குதல் - கழியீரே - எதிர்மறை. நீங்க மாட்டீரே - பழைய உம் கருத்தை மாற்றிக்கொள்ள மாட்டீரே என்றான். அதற்குக் 'கன்றும் தாயும் போல்வன கண்டும்' என்பது சான்று.உலகில் கன்றும் தாயும் பாசத்தால் நெருங்கி வாழ்வதுபோல் இராமனிடத்தில் உங்கள்தாய்ப்பாசம் சிறந்திருந்தால் அவன் காடு போக நேர்ந்திராது என்றானாம். இனி இவ்வடிகளுக்குஇராமன் வனம் ஏகிய போது, நாட்டில் உள்ள மக்கள் எல்லாம் கன்றைத் தொடரும் தாய் போலஅவன் பிரிவால் துயருற்றுப் பின் தொடர்ந்தும் அவலித்தும் சென்ற நிகழ்ச்சியைக்கண்டுவைத்தும் உமது கருத்தைக் கழியீரே என்று பொருள் உரைப்பதும் உண்டு. நாட்டார் அனைவரும் இராமன்பால் அன்புடையராய் இருப்பதைக் கண்டும் இராமனைக் காட்டிற்குச் செல்லச் செய்து நீர்யாரை ஆளப் போகிறீர் என்று சொன்னான் எனக் கருதலாம். இப்பொருளில் அயோத்தியில் இராமன் காடேகிய போது நாடெல்லாம் உடன் தொடர்ந்து சென்ற செய்தி பரதன் செவிப்பட்டதாகக்கொள்ள வேண்டிவரும். அங்ஙனம் கொண்டால் இதுவரை பரதன் கைகேயியை வினாவிய வினாக்கள்பொருளற்றுப் போகும் என்னும் குறையுண்டு. ஏற்பன அறிக. இனி இப்பாட்டில், அவன் ஏக - அந்தஇராமன் கானகம் செல்ல என்றும் உரைக்கலாம். 'அவன் ஏக' என்பதனை முன்மாற்றாது நேரே கொண்டு'அவன் ஏக, கன்றும் தாயும் போல்வன கண்டும் கழியீரே' எனக் கூட்டி, இராமன் வனம் செல்ல, கன்றும்தாய்ப் பசுவும் போன்ற அஃறிணைப் பொருள்களின்*

*பிரியாது தொடரும் தன்மை கண்டு வைத்தும் உம்கொடுமை நீங்கப் பெறீர்' என்றானாம்.* *77*

***2179.* ‘இறந்தான் தந்தை,**
**“ஈந்த வரத்துக்கு இழிவு” என்னா,**
**“அறந்தான் ஈது” என்று,**
**அன்னவன் மைந்தன், அரசு எல்லாம்**
**துறந்தான்; “தாயின் சூழ்ச்சியின்,**
**ஞாலம், அவனோடும்**
**பிறந்தான், ஆண்டான்” என்னும்**
**இது, என்னால் பெறலாமே?***

*‘**தந்தை** - தயரதன் என்கிற தகப்பன்; **“ஈந்தவரத்துக்கு இழிவு” என்னா** - தான் முன் கொடுத்த வரத்துக்கு இழிவு நேர்ந்து விடுமோ (உயிரோடு இருந்தால்) என்று கருதி; **இறந்தான்** - உயிரொழிந்தான்; அன்னவன் மைந்தன்- அந்தத் தந்தையின் புதல்வன்; **ஈது அறந்தான் என்று** - இதுவே அறநெறியாகும் என்றுகருதி; **அரசு எல்லாம் துறந்தான்** - அரசை முற்றும் வேண்டாம் என்று காடு சென்றான்;(இவ்வாறு இருவரும் உலகம் போற்றும் செயலில் தலைநிற்க); **அவனோடும் பிறந்தான்** -அந்த இராமனோடு உடன் பிறந்தவனாகிய பரதன்; **தாயின் சூழ்ச்சியின்** - தன் தாய்செய்த சூழ்ச்சியால்; **ஞாலம் ஆண்டான் என்னும் இது** - உலகத்தை எல்லாம் ஆண்டான்என்கின்ற இப்பழிச்சொல்; **என்னால் பெறல் ஆமே** - என்னால் பெறுதற்குப்பொருந்துமோ?’*

*கொடுத்த வரத்தை நிலைநிறுத்த இறந்தான் தந்தை; தந்தை சொல்லைக் காப்பாற்ற அரசுதுறந்து வனம் புகுந்தான் மகன். உடன் பிறந்தவன் அரசைக் கைப்பற்றி ஆண்டான் என்னும் பழிநான் பெறுதற்குரியதோ? அதையன்றோ நீ செய்தாய் என்றாளாம்.*
*78*

***2180.* ‘“மாளும்” என்றே தந்தையை உன்னான்;**
**வசை கொண்டாள்**
**கோளும் என்னாலே எனல்**
**கொண்டான்; அது அன்றேல்.**
**மீளும் அன்றே? என்னையும்,**
**“மெய்யே உலகு எல்லாம்**
**ஆளும்” என்றே போயினன் அன்றோ?-**
**அரசு ஆள்வான்.***

*‘**அரசு ஆள்வான்** - அரசாட்சியைச் செய்தற்கு உரிய முறையுடைய இராமன்; **“மாளும்” என்றே தந்தையை உன்னான்** - (தான் காட்டிற்குச் சென்றால்) இறந்துபடுவான் தந்தை என்று கருதவில்லை; **வசைகொண்டாள்** -பழிச்சொல்லைக் கொண்டவளாய கைகேயியின்; கோளும் - மாறுபட்ட எண்ணமும்; **என்னாலே** - பரதனாகிய என் தூண்டுதலினாலேயே விளைந்தது; **எனல்** - என்று கருதுதலை; **கொண்டான்** - உடையன் ஆனான்; **என்னையும் -; “மெய்யே** - உண்மையாக (உறுதியாக) உலகு எல்லாம்ஆளும்’’ - உலகையெல்லாம் (இப்பரதன்) ஆள்வான்; **என்றே போயினன்***

***அன்றோ*** - என்றுகருதியே (தந்தை இறப்பவும் பொருட்படுத்தாது) காட்டிற்குப் போனான் அல்லவா?; **அது அன்றேல்** - அப்படி இராமன் கருதவில்லையேல்; மீளும் அன்றே - அந்தை இறந்தவுடன் திரும்பி வந்திருப்பான்அல்லவா?;'

*தந்தையின் வாக்கைக் காப்பாற்றக் காடு சென்ற இராமனைப் பரதன் சந்தேகிக்கிறான்என்பதன்று; தன்னுடைய துன்ப மிகுதியால் ''இப்படியோ, அப்படியோ'' என்று தன்மேல் பழியைப்போட்டுக்கொண்டு பலவாறு நினைக்கின்றான் என்பதே இத்தகைய இடங்களில் பொருளாகும். அரசுக்கு உரியவனும், இனி எதிர்காலத்தில் ஆள்பவனும், இராமன் என்பதில் பரதனுக்கு மாறாத உறுதிஇருப்பதால் 'அரசு ஆள்வான்'' என்றே இராமனைக் கூறினான்பரதன்.*
*79*

*2181.* ***'ஓதா நின்ற தொல் குல***
***மன்னன் உணர்வு அப்பால்***
***யாதானும் தான் ஆக;***
***"எனக்கே பணி செய்வான்,***
***தீதா நின்ற சிந்தனை செய்தான்***
***அவன்" என்னப்***
***போதாதோ, என் தாய் இவள்***
***கொண்ட பொருள் அம்மா?***

**'ஓதா நின்ற தொல்குல மன்னன்** - *(யாவராலும் பாராட்டிப் பேசப்படாநின்ற பழமையான சூரியகுல மன்னனாகிய தயரதன்;* **உணர்வு** - *எண்ணம்;* **அப்பால்** - *பிறகு;* ***யாதானும் தான் ஆக*** - *எதுவாகவாவது இருக்கட்டும்,(அதுகிடக்க);* **"எனக்கே பணி செய்வான் அவன்** - *எனக்கே தொண்டுகள் செய்துகொண்டிருப்பவனாகிய பரதன்;* **தீதா நின்ற சிந்தனை செய்தான்** - *(என்னை வனம்அனுப்பித் தான் அரசு ஆளும்) கொடியதான எண்ணத்தைக் கொண்டான்;* **என்ன** - *என்று அந்தஇராமன் கருதுதற்கு;* **என் தாய் இவள் கொண்ட பொருள்** - *என் தாயாகிய இக்கைகேயி வரத்தின் மூலம் பெற்ற பொருளாகிய இவ்வரசு;* **போதாதோ -;'**

*கைகேயி பரதனுக்காக அரசு பெற்றபடியால், அதுவே பரதனை இராமன்தவறாகக் கருதுதற்குக் காரணம் ஆகிவிடும். அது ஒன்றே போதும் பரதன் மேல் இராமன் வருத்தம்கொள்ளக் காரணம். 'தந்தை எவ்வாறியிருப்பினும் நம் தொண்டனாக இருந்த இந்தப் பரதன் தீய எண்ணம் கொண்டிருப்பவனாக இருந்திருக்கிறானே' என்று இராமன்நினைத்துவிடப் போதிய காரணம் இந்த அரசே என்றான் பரதன். அம்மா - ஐயோ பாவம்என்றார்போல் இரக்கக் குறிப்பு.* ***80***

*2182.* ***'உய்யா நின்றேன் இன்னமும்;***
***என்முன் உடன் வந்தான்,***
***கை ஆர் கல்லைப் புல் அடகு***
***உண்ண, கலம் ஏந்தி,***
***வெய்யோன் நான் இன் சாலியின்***
***வெண் சோறு, அமுது என்ன,***

**நெய்யோடு உண்ண நின்றது,**
**நின்றார் நினையாரோ?**

'**என்முன் உடன் வந்தான்** - எனக்கு மூத்தவனும் உடன் பிறந்த சகோதரனும் ஆகிய இராமன்; **கை ஆர் கல்லை** -கையில் பொருந்திய இலையாகிய கலத்தில்; **புல் அடகு உண்ண** - அற்பமான இலை உணவை உண்டுகொண்டிருக்க; **இன்னமும்-; வெய்யோன் நான்** - கொடியவனாகிய நான்; **உய்யாநின்றேன்** - உயிர் பிழைத்திருக்கின்றேன்; (அம்மட்டோ) கலம் - நல்ல பாத்திரத்திலே(உண்கலத்திலே) **இன் சாலியின் வெண்சோறு** - இனிய உயர்ந்த நெல்லின் வெள்ளியசோற்றை; நெய்யோடு- நெய்யுடன்; அமுதென்ன - தேவரமுதம் என்னும்படி; **ஏந்தி** - சுமந்து; **உண்ண நின்றது** - உண்ணும்படி இருந்து கொண்டுள்ளதை; **நின்றார்** - அருகில் காண நிற்கும் உலகோர்; **நினையாரோ?** - என்னை இழிவாகக் கருதமாட்டாரோ?'

உயிருடன் இருப்பதே உலகம் தூற்றப் போதும்; அதன்மேல் உண்கலத்தில் சோறும் நெய்யும் அமுதென உண்ண நிற்றல் உலகோர் பழி தூற்ற மேலும்வாய்ப்பன்றோ என்று தன்னைத் தானே நொந்துகொள்கிறான். 'ஓ' வினாப்பொருள். கை ஆர்கல்லை - கையாகிய பாத்திரம் எனவும் ஆம். கல்லை - இலை முதலியவற்றைக் குழித்து உண்னுதற்காகச் செய்த பாத்திரம்; தொன்னை. இராமன் காட்டிலே இலை முதலியவற்றை உண்டுகொண்டு எப்படியிருக்கிறானோ என்று அவன்பால் கொண்ட அன்பிரக்கமும் காண்க. 2391:

*2183.* **' "வில் ஆர் தோளான் மேவினன்,**
**வெங் கானகம்" என்ன,**
**நல்லான் அன்றே துஞ்சினன்;**
**நஞ்சே அனையாளைக்**
**கொல்லேன், மாயேன்; வன்**
**பழியாலே குறைவு அற்றேன் -**
**அல்லேனோ யான்! அன்பு**
**உடையார்போல் அழுகின்றேன்.**

'நல்லான் - நல்லோனாகிய தயரதன்; **"வில் ஆர் தோளான்** - வில் அமைந்ததோளை உடையவனாகிய இராமன்; **வெங்கானகம் மேவினன்" என்ன** - கொடிய காட்டை அடைந்தான், என்று சொல்லிய அளவிலேயே; **அன்றே துஞ்சினன்** - அன்றைக்கே இறந்துபட்டான்; **யான் -; நஞ்சே அனையாளைக் கொல்லேன்** - விடத்தை ஒத்தவளாகியகைகேயியைக் கொல்லவில்லை; **மாயேன்** - (நடந்த நிகழ்ச்சிகளுக்கு நானும் ஒருவகையில் காரணமானதை அறிந்தும்) இறந்து ஒழியேன்; **அன்பு உடையார்போல் அழுகின்றேன்** -தயரதனிடத்தும், இராமனிடத்தும் அன்புடையவர்போலப் பெரிதாகத் துக்கப்படுகின்றேன்; வன்பழியால் குறைவு அற்றேன் அல்லேனோ - கொடும் பழியால் ஒரு சிறிதும் குறைவு இல்லாதவன் அல்லவா? (பெரும்பழி நிரம்பப் பெற்றவன்.)'

தன்னைத் தானே இகழ்ந்துகொள்வது இப்பாடலில் பரதன் கூற்று. 'வன் பழியால் குறைவுஇல்லாதவனவல்லவா' என்று கூறுவதுபோலத் தோன்றி, யான் எல்லாப் பழியும் நிரம்ப உடையன்என்பதைக் குறிப்பாகச் சொல்கிறது. அவலத்தின்

*உயர்நிலையில் இங்ஙனம் கூறுவதுண்டு. 'நல்லான்' என்று தயரதனைக் குறிப்பிட்டபடியால், இவன் 'தீயான்' என்று தன்னைக் கருதியதாகக்கொள்ளலாம்.*
***82***

***2184. 'பாரோர் கொள்ளார்; யான் உயிர்***
***பேணிப் பழி பூணேன்;***
***தீராது ஒன்றால் நின் பழி;***
***ஊரில் திரு நில்லாள்;***
***ஆரோடு எண்ணிற்று? ஆர்***
***உரைதந்தார்? அறம் எல்லாம்***
***வேரொடும் கேடு ஆக முடித்து,***
***என் விளைவித்தாய்?***

*'(யான் அரசு நடத்துவதை)* ***பாரோர் கொள்ளார்*** *- இந்த நாட்டில் உள்ளவர்கள்ஏற்றுக்கொள்ளமாட்டார்'* ***யான் உயிர் பேணிப் பழி பூணேன்*** *- யான் உயிரைப்பாதுகாத்துப் பழியை அணிந்துகொள்ள மாட்டேன்;* ***ஒன்றால் நின் பழி தீராது*** *- இனிஎந்தக் காரியம் செய்தாலும் நீ உண்டாக்கிய பழி விலகாது;* ***திரு ஊரில் நில்லாள்*** *- (முறை திரும்பியதால்) இனித் திருமகள் இவ்வூரில் இருக்கமாட்டாள்;* ***ஆரோடு எண்ணிற்று*** *- (இச்செயலைச் செய்ய) யாரோடு ஆலோசித்தாய்?;* ***உரை தந்தார் ஆர்*** *- (உனக்குஆலோசனை சொல்லியவர் யாவர்?;* ***அறம் எல்லாம் வேரொடும் கேடு ஆக முடித்து என்விளைவித்தாய்*** *- அறம் அனைத்தும் அடியோடு அழியும்படியான செயலைச் செய்து நிறைவேற்றி என்ன கொடுமைகளை யெல்லாம் செய்துவிட்டாய்?'*

*தனக்கு அரசில் சிறிதும் விருப்பம் இல்லை என்பதை முன்னர்க் கூறியுள்ளான் ஆதலின், அப்படிச் கட்டாயப்படுத்தி என்னை அரசேற்க நீ செய்தாலும் உலகோர் ஒப்புக்கொள்ளமாட்டார் என்றான். கைகேயியின் இயல்புக்கு இத்தகைய செயல்செய்யும் துணிவு ஒத்துவராது என்பதை உணர்ந்த மகன் பரதன் "ஆரோடு எண்ணிற்று, உரைத்தார்ஆர்" என்று இங்கே வினாவினான். யாரோ தன் தாயின் மனத்தைக் கெடுத்துள்ளார் என்று இப்போதுபரதன் நினைக்கத் தொடங்கியுள்ளான் என்பது தெரிகிறது. 'யார்' என்பது செய்யுளின்பம்நோக்கி 'ஆர்' என்று நின்றது.*
***83***

***2185. 'கொன்றேன், நான் என் தந்தையை,***
***மற்று உன் கொலை வாயால் -***
***ஒன்றோ? கானத்து அண்ணலை***
***உய்த்தேன்; உலகு ஆள்வான்***
***நின்றேன்; என்றால், நின் பிழை***
***உண்டோ? பழி உண்டோ?***
***என்றேனும் தான் என் பழி***
***மாயும் இடம் உண்டோ?***

***'நான்-; உன் கொலை வாயால்*** *- உன்னுடைய கொலைத் தன்மை படைத்த வாய்ச் சொல்லைக் கொண்டு;* ***என் தந்தையைக்கொன்றேன்*** *- என் தந்தையாகிய தயரதனைக்*

*கொன்றுவிட்டேன்; **ஒன்றோ?** -அம்மட்டோ; **மற்று** - மேலும்; **அண்ணலை** - தலைமையும் பெருமையும் சிறந்த இராமனை; **கானத்து உய்த்தேன்** - காட்டின் கண் அனுப்பிவிட்டேன், (இவ்வளவையும் உன்வாய்ச்சொல் மூலம் செய்துவிட்டு); **உலகு ஆள்வான் நின்றேன்** - இவ்வயோத்திஅரசை ஆள்வதற்குத் தயாராக இருக்கின்றேன்; **என்றால்-; நின் பிழை உண்டோ** - உன்குற்றம் ஏதேனும் உள்ளதோ?; **பழி உண்டோ** - உன்மேல் பழி ஏதேனும் உள்ளதோ? (எல்லாக் குற்றமும், எல்லாப் பிழையும் என்மேல்தான்); **என் பழி மாயும் இடம்** - என்பழி அழிந்து போகுமிடம்; **என்றேனும் தான் உண்டோ?** - என்றைக்காவது உண்டா? (என்றும்இல்லை.)'*

*கைகேயி செய்தன அனைத்தும் தான் செய்தனவாகக் கூறினான்; செய்ததால் விளைந்த பயனாயஅரசை இவன் ஏற்பவனாக இருக்கும் நிலைபற்றி, தன்னை நோக்கித்தான் இவ்வளவும் நடந்ததாகஉலகம் அறிந்து தூற்றும் என்று பரதன் வருந்துவது இப்பாட்டில் கூறியவற்றின் கருத்தாகும். 'என்பழி' என்றது. 'என்பிழை என்பதற்கும் பொருந்தும்.* ***84***

***2186. 'கண்ணாலே, என் செய் வினை,***
***இன்னும் சில காண்பார்'***
***மண்ணோர் பாராது எள்ளுவர்;***
***வாளா பழி பூண்டாய்;***
***"உண்ணா நஞ்சம் கொலிகிலது' என்னும்***
***உரை உண்டு" என்று***

***எண்ணாநின்றேன்; அன்றி***
***இரேன், என் உயிரோடே.***

*'**என் செய் வினை** - 'இனி யான் செய்ய இருக்கும் செயல்திறத்தை; **இன்னும்சிலர் கண்ணாலே காண்பார்** - என்னை அறியாத வேறுசிலரும் தம் கண்ணாலேயேகாணப்போகிறார்கள்; **மண்ணோர்பாராது எள்ளுவர்** - மண்ணிலுள்ளவர் எதிர்காலத்தில்நடப்பதை எண்ணிப் பாராது தற்போது இகழ்வர். (அது இயல்பே); வாளா - ஒரு பயனும் இன்றி; **பழி பூண்டாய்** - பழியைமட்டும் மேலிட்டுக் கொண்டாய்; **"உண்ணா நஞ்சம் கொல்கிலது"** - தான் உண்ணாத விடம் அவனைக் கொல்லாது; **என்னும் உரை உண்டு** - என்கின்ற பழமொழிஉலகில் உள்ளது; **என்று எண்ணா** - எனக் கருதி; **நின்றேன்** - (உயிரோடு)இருக்கின்றேன்; **அன்றி** - (அப்படி நான் செய்யாதவற்றுக்கும் என்மேல் பழிவரும்என்று ஆகுமானால்); **என் உயிரோடே இரேன்** - என் உயிரோடு நான் இதுகாறும் இருந்திருக்க மாட்டேன், இறந்து போயிருப்பேன்.*

*கைகேயி எதிர்பார்த்தவாறு பரதன் அரசு ஏற்கப்போவது இல்லை என்பது திடமாய்விடலின், 'வீணாகப் பழிபூண்டாய்' என்றான். பழிதான் மிச்சம்; பயன்சிறிதும் இல்லை. தற்போது என்னைப்பற்றிய உண்மை அறியாது இகழ்கிற சிலரும்எதிர்காலத்தில் கண்ணால் என் செய்வினை கண்டு புரிந்துகொள்வர் என்றானாகவும் கொள்க.'உண்ணா நஞ்சம் கொல்கிலது' பழமொழி. "உண்ணாதே உயிர் உண்ணாது ஒரு நஞ்சு" (9921.) என்றஇடத்திலும் இப்பழமொழி எடுத்தாளப்பெற்றது காண்க. 'என் பழி எதிர்காலத்தில்நீங்கிவிடும். உன் பழி என்றும் நீங்காது' என்றான் கைகேயியிடம் பரதன். இதுவரை தன்மேல்பழியை ஏறட்டுப் பேசியவன் இப்போது சிறிது தெளிந்து பேசுவதாகக் கொள்ளலாம். 'ஏ'ஈற்றசை.* ***85***

*பரதன் இனிச் செய்யவுள்ள தன் செயல் கூறுதல்*

***2187. 'ஏன்று, உன் பாவிக் கும்பி வயிற்றினிடை வைகித்***
***தோன்றும் தீராப் பாதகம் அற்று, என் துயர் தீர,***
***சான்றும்தானே நல் அறம் ஆக, தகை ஞாலம்***
***மூன்றும் காண, மா தவம் யானே முயல்கின்றேன்.***

***'பாவி உன் கும்பி வயிற்றினிடை*** *- பாவியாகிய உன்னுடைய வயிற்றிடத்தில்;* ***ஏன்று வைகித் தோன்றும்*** *- உடன்பட்டுத்தங்கிப் பிறந்ததனால் உண்டாகிய;* ***தீராப் பாதகம்*** *- நீங்காத அரிய பாவம்;* ***அற்று*** *- அடியோடு இல்லையாகி;* ***என் துயர் தீர*** *- (தந்தை இறந்தது; இராமன் காடு சென்றது ஆகிய நிகழ்ச்சிகளால் ஆய) என் துயரமெல்லாம் தீரும்படி;* ***நல் அறம் தானேசான்றும் ஆக*** *- நன்றாகிய அறக்கடவுளே சாட்சி ஆகப் பொருந்த;* ***தகை ஞாலம் மூன்றும்*** *- மேம்பாடுடைய மேல், கீழ், நடு என்னும் மூவுலகமும்;* ***காண*** *- (என் நிலை) காணும்படி; யானே மாதவம் முயல்கின்றேன் - நானே பெருந்தவம் செய்ய இருக்கின்றேன்.'*

*பரதனுக்கு அரசுரிமை கைகேயி வயிற்றில் இருந்து பிறந்ததனால் உண்டாயது; ஆகவே. அதனைப்பாதகம் என்றான். 'சான்றும்' 'உம்' இசைநிறை. 'பழிதீர்தற்குரிய என் செய்வினை' என்றுமேற்பாட்டிற் கூறினான். அது இன்னது என்பது 'மாதவம்' என இப்பாட்டிற் கூறினாள் ஆயிற்று. கும்பி வயிறு - இரு பெயரொட்டு; கும்பி - சேறு என்றும் பொருள்படும். அப்பொருள் கொண்டால்சேறு போன்ற பாவம் நிறைந்த வயிறு என்றாகும்.* ***86***

*பரதன் கைகேயிக்கு இறுதியாகக் கூறிய அறிவுரை*

***2188. 'சிறந்தார் சொல்லும்நல் உரை***
***சொன்னேன்; செயல் எல்லாம்***
***மறந்தாய் செய்தாய் ஆகுதி;***
***மாயா உயிர் தன்னைத்***
***துறந்தாய் ஆகின் தூயையும்***
***ஆதி; உலகத்தே***
***பிறந்தாய் ஆதி; ஈது அலது இல்லைப்***
***பிறிது' என்றான்.***

***'சிறந்தார்*** *-அறிவாற் சிறந்த சான்றோர்; சொல்லும் நல் உரை* ***சொன்னேன்*** *- சொல்லுகின்றநல்ல மொழிகளை உனக்கு எடுத்துச் சொன்னேன்;* ***செயல் எல்லாம்*** *- (இதுகாறும் நீ செய்த)செயல்கள் எல்லாவற்றையும்;* ***மறந்தாய் செய்தாய் ஆகுதி*** *- (புத்தித் தெளிவோடு அன்றி)நினைவின்றிச் செய்தவளாவாயாக; (இவ்வாறு கருதுவது மன்னிப்புப் பெற வாய்ப்பாகும்);* ***மாயாஉயிர்தன்னை*** *- அழியாதிருக்கின்ற உன்னுடைய உயிரை; துறந்தாய் ஆகில் -விட்டுவிட்டாயானால்;* ***தூயையும் ஆதி*** *- தூய்மை உடையவளாகவும் உலகால் கருதப் படுவாய்;* ***உலகத்தே பிறந்தாய் ஆதி*** *- உலகிற் பிறந்ததனால் வரும் பயனைப் பெற்றவளாகவும்ஆவாய்;* ***ஈது அலது பிறிது இல்லை*** *- இது வல்லது உன் பழி தீர வேறு வழி எதுவும் இல்லை;'* ***என்றான்*** *- என்று கூறி முடித்தான். (பரதன்).*

*'நான் புத்தியில்லாமல் செய்துவிட்டேன்' என்று சொல். எனவே, இனிமேல் உன் எண்ணம்புத்தியோடு மாறவேண்டும் என்றான். இறந்து போனால் பெரிதும் பாராட்டடப்படுவாய்; நீபிறந்ததற்கும் ஒரு பொருள் இருக்கும். இரண்டு வழிகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்துகொண்டு அதன்படி செய்த என்றான் பரதன். ஒருவேளை பரதன் அறிவுரை கைகேயியால் ஏற்றுக்கொள்ளப்பெற்றது எனக் கருதலாம். இதன் பின்னர்க் கைகேயி காவியத்தில் உரை நிகழ்த்தவில்லை என்பது காண்க.* ***87*** *பரதன் கோசலையின் திருவடி வணங்கச் செல்லுதல்*

*கலிவிருத்தம்*

***2189. இன்னணம், இனையன இயம்பி, 'யானும், இப்***
***பன்ன அருங் கொடு மனப் பாவிபாடு இரேன்;***
***துன்ன அருந் துயர் கெட, தூய கோசலை***
***பொன் அடி தொழுவேன்' என்று, எழுந்து போயினான்.***

***இனையன*** *- இத்தகைய சொற்களை (பரதன்);* ***இன்னணம் இயம்பி*** *- இவ்வாறுவிளங்கவுரைத்து;* ***'யானும் -; இப்பன்ன அருங் கொடு மனப் பாவிபாடு இரேன்*** *- இந்தப்பேசுதற்கு முடியாத கொடிய மனம்படைத்த பாவியாகிய கைகேயியின் பக்கலில் இனி இருக்க மாட்டேன்;* ***துன்ன அருந்துயர் கெட*** *- நெருங்குதற்கரிய துன்பம் நீங்க;* ***தூய கோசலை*** *- நன்மனம் படைத்த கோசலைத் தாயின்;* ***பொன் அடி தொழுவேன்*** *- பொலிவு நிறைந்ததிருவடிகளை வணங்குவேன்;'* ***என்று*** *- என்ற சொல்லி;* ***எழுந்து போயினான்*** *-கைகேயியின் இடத்திலிருந்த புறப்பட்டுச் சென்றான்.*

*வான்மீகத்தில் - பரதனது புலம்பல் ஒலியைக் கேட்டுக் கோசலை, சுமித்திரைபால் 'மகா'புத்திமானாகிய பரதன் வந்திருத்தலால் அவனைக் காண விரும்புகிறேன்' என்று சொல்லிச்சுமித்திரையுடன் பரதன் இருக்குமிடத்திற்குப் புறப்பட்டனன். அப்போது பரதன் சத்துருக்கனனுடன் கோசலை இருக்கும் வீட்டிற்கு வந்தான் என்றுள்ளது.*
***88***

*கோசலையின் அடியில் பரதன் வீழ்ந்து வணங்கல்*

***2190. ஆண்தகை, கோசலை அருகர் எய்தினன்;***
***மீண்டும், மண் கிழிதர வீழ்ந்து, கேழ் கிளர்***
***காண் தகு தடக் கையின் கமலச் சீறடி***
***பூண்டனன்; கிடந்தனன்; புலம்பினான் அரோ!***

***ஆண்தகை*** *- ஆடவருள் சிறந்த பரதன்;* ***மீண்டு*** *- கைகேயி இருப்பிடத்திருந்துசென்று;* ***கோசலை அருகர் எய்தினன்*** *- கோசலைத் தாயின் அருகில் சென்று;* ***மண்கிழிதர வீழ்ந்து*** *- தரை பிளவுபடும்படி (தடாலெனக்) கீழே வீழ்ந்து வணங்கி; கேழ்கிளர்- நிறம் மிக்கு விளங்குகின்ற;* ***காண்தகு தடக்கையின்*** *- காண்பதற்குப் பொருந்திய நீண்டகைகளால்; கமலச் சீறடி - (கோசலையின்) தாமரைபோன்ற சிறிய பாதங்களை;*
***பூண்டனன்கிடந்தனன் புலம்பினான்*** *- பிடித்துக் கொண்டு (கீழேவிழுந்து) கிடந்தபடியே அழத்தொடங்கினான். 'அரோ' ஈற்றசை. 'மீண்டு' என்பதை மாறிச் சேர்க்காது. நேரே சேர்த்துத் திரும்பவும்மண்கிழிதர வீழ்ந்தான் என்றும் பொருள் கூறலாம்.*

*இப்பொருளில் வரும்போது பரதன் வந்தவுடன்வீழ்ந்து வணங்கினான், திரும்பவும் கோசலை திருவடியில் வீழ்ந்தான் என்று உரைத்தல்வேண்டும். அருகர் - ஈற்றுப் போலி.*
***89***

*பரதனின் இரங்கல் உரை*

***2191. 'எந்தை எவ் உலகு உளான்? எம் முன் யாண்டையான்?***
***வந்தது, தமியென், இம் மயக்கம் காணவோ?***
***சிந்தையின் உறு துயர் தீர்த்திரால் எனும்,***
***அந்தரத்து அமரரும் அழுது சோரவே.***

***அந்தரத்து அமரரும்*** *- வானுலகில் உள்ள தேவர்களும்;* ***அமுது சோரவே*** *-(இவன் புலம்பைக் கேட்டும் இவனைக் கண்டும் தம்மாலும் ஆற்றமுடியாமல் தாமும்) அழுது சோரும்படி;* ***'எந்தை எவ்*** *உலகு* ***உளான்?*** *- என் தந்தையாகிய தயரதன் இப்போது எந்தஉலகத்தில் இருக்கிறான்?;* ***எம்முன் யாண்டையான்*** *- என் தமையனாகிய இராமன் எவ்விடத்தில் இருக்கிறான்?;* ***தமியென்*** *- ஆதரவற்ற தனியனாகிய யான்; வந்தது - அயோத்திக்கு வந்தது;* ***இம் மறுக்கம் காணவோ?*** *- இந்தத் துன்ப நிலையைக்காண்பதற்காகவோ?;* ***சிந்தையின்*** *- (என்) மனத்தில்;* ***உறு துயர்*** *- பொருந்தியதுன்பத்தைத்;* ***தீர்த்திர்*** *- போக்குங்கள்;'* ***எனும்*** *- என்பான்.*

*இறந்தபின் வேறு உலகம் செல்வர் ஆதலான் 'எந்தை எவ் உலகு உளான்' என்றான். இராமன்காடு சென்றபடியால் 'யாண்டையான்' அதாவது காட்டில் எவ்விடத்தில் உள்ளான் என்றான்.தந்தையோடும் தமையனோடும் இருக்கின்ற பேறு பெறாமையால் தன்னைத் 'தமியென்' என்றுகுறிப்பிட்டான். 'ஆல்', 'ஏ' அசைகள்.*
***90***

***2192. 'அடித்தலம் கண்டிலென் யான், என் ஐயனை;***
***படித்தலம் காவலன், பெயரற்பாலனோ?***
***பிடித்திலிர் போலும் நீர்; பிழைத்திரால்' எனும் -***
***பொடித் தலம் தோற் உறப் புரண்டு சோர்கின்றாள்.***

***தலம் பொடி தோள் உறப் புரண்டு சோர்கின்றான்*** *- மண்ணில் உள்ள புழுதிதன்தோளிற் படும்படி நிலத்திற் புரண்டு மனம் சோர்ந்தவனாகி;* ***'யான் -; என் ஐயனை*** *- என் தலைவனாகிய இராமனது; அடித்தலம் - திருவடியை;* ***கண்டிலென்*** *- காணப்பெறவில்லை;* ***படித்தலம் காவலன்*** *- இப்பூமியாகிய இடத்துக்கு அரசனாகிய இராமன்;* ***பெயரற்பாலனோ?*** *- இக்கோசல நாட்டைவிட்டுப் பெயர்ந்து செல்லும் தன்மை உடையனோ;* ***நீர்*** *- (அன்னையாகிய) நீர் (ஆற்றாமையால்);* ***பிடித்திலிர் போலும்*** *- (அவன் கானகம்செல்லும்போது) தடுத்தல் செய்து பிடித்து வைத்துக் கொள்கிலிர்;* ***பிழைத்திர்*** *- பிழை செய்துவிட்டீர்;' எனும் - என்று சொல்வானாயினன்.*

*இராமனே அரசன் என்பதைக் கோசலைக்கு உறுதிப்படுத்தம் முகமாக, 'படித்தலம் காவலன்' என்றுஇராமனைக் குறிப்பிட்டான். 'பிழைத்திர்' என்பதற்கு 'உம்மால் இனி உயிர் வாழ இயலுமோ'என்று கோசலையைக் கேட்டதாகவும் கொள்ளலாம். 'ஆல்' அசை.* ***91***

***2193. ‘கொடியவர் யாவரும் குலங்கள் வேர்அற
நொடிகுவென் யான்; அது நுவல்வது எங்ஙனம்?
கடியவள் வயிற்றினில் பிறந்த கள்வனேன்,
முடிகுவென், அருந் துயர் முடிய’ என்னுமால்,***

***‘யான்-; கொடியவர் யாவரும்*** - *(இராமனைக் காடு செல்லச் செய்த) கொடியவர்கள்எல்லோரும்;* ***குலங்கள் வேர் அற*** - *தம் குலங்களோடு வேர் அற்றுப் போகும்படி;* ***நொடிகுவென்*** - *அழித்து விடுவேன்;* ***அது நுவல்வது எங்ஙனம்?*** - *அதுபற்றிச் சொல்வது என்னபயன் உடையது; (செயலின்தான் அறிய வேண்டும்);* ***கடியவள் வயிற்றினில் பிறந்த கள்வனேன்*** - *(எல்லோரையும் அழித்துவிட்டு இறுதியில்) கொடிய கைகேயி வயிற்றில் பிறந்தவஞ்சகனாகிய யானும்;* ***அருந்துயர் முடிய முடிகுவென்’*** - *என்னுடைய பொறுத்தற்கரிய துன்பம்இல்லையாம்படி இறந்துபடுவேன்;’* ***என்னும்*** - *என்று சொல்வான்.*

*மிகுதியான துன்பத்தால் பேசுகிறான் ஆதலின், ‘கொடியவர்களையும் அழித்து, நானும்இறந்துபடிவேன்’ என்றான். ‘ஆல்’ ஈற்றசை.* ***92***

***2194. ‘இரதம் ஒன்று ஊர்ந்து, பார் இருளை நீக்கும் அவ்
வரதனில் ஒளி பெற மலர்ந்த தொல் குலம்,
“பரதன்” என்று ஒரு பழி படைத்தது’ என்னுமால் -
மரதக மலை என வளர்ந்த தோளினான்.***

***மரகத மலை என வளர்ந்த தோளினான்*** - *மரகத மலை போல வளர்ந்த பச்சை வண்ணமான தோளை உடைய பரதன்;* ***‘பார் இருளை இரதம்ஒன்று ஊர்ந்து நீக்கும் அவ்வரதனில்*** - *இந்த மண்ணில் உள்ள இருட்டை ஒரு தேரினை ஊர்ந்து சென்று அடியோடு போக்கும் அந்த மேன்மையுடைய சூரியனால்;* ***ஒளிபெற மலர்ந்த தொல்குலம்*** - *ஒளிபெற்றுப் பாரம்பரியமாக மலர்ந்து சிறந்த இப்பழமையான அரசகுலம்;* ***‘பரதன்’ என்று ஒருபழி படைத்தது;*** - *இப்போது பரதன் என்ற பெயரை உடைய ஒரு பழியையும் உண்டாக்கியது;’* ***என்னும்*** - *என்று சொல்வான். சூரியகுலமாதலின் இங்ஙனம் கூறினான். தன்னைத் தானே நொந்து கொள்வது பரதன் இயல்பு.‘புகழ் படைத்த சூரியகுலம் பழியையும் படைத்தது என்னால்’ என்பது பரதன் துயர் மொழி.‘மரகத’ என்பது செய்யும் எதுகை நோக்கி ‘மரதக’ என எழுந்து முன்பின் ஆயது. ‘ஆல்’ அசை.* ***93***

***2195. ‘வாள்தொடு தானையான் வானில் வைகிட,
காடு ஒரு தலைமகன் எய்த, கண் இலா
நாடு ஒரு துயரிடை நைவதே’ எனும் -
தாள் தொடு தடக் கை அத் தருமமே அனான்.***

***தாள்தொடு தடக்கை அத்தருமமே அனான்*** - *முழந்தாளைத் தொடுமாறு நீண்ட கைகளை உடைய முழுமுதலாகிய அறத்தினைப் போன்ற பரதன்;* ***‘வாள் தொடு தானையான்*** - *வாள் ஏந்திய சேனைகளை உடைய தயரதன்;* ***வானில் வைகிட*** - *வானுலகத்தில் தங்கியிருக்க;* ***ஒரு தலைமகன்*** - *அவனது (அரசுக்குரிய);* ***ஒப்பற்றமூத்த மகன்; காடு எய்த*** - *காட்டை அடைய, (அரசு புரிவார் இன்மையால்);* ***கண்இலா நாடு*** -

*துன்பம் நீக்குதற்குரிய களைகண் ஆனவரைப் பெறாத நாடு;* ***துயரிடை*** *- துன்பத்தில்பட்டு;* ***நைவதே*** *- வருந்துவதே;* ***எனும்*** *- என்று சொல்லிப் புலம்பும்.*

*தயரதனும் இராமனும் நாட்டிற்குக் கண் போல்வார் ஆதலின் அவரை இழந்த நாடு 'கண் இலாநாடு' ஆம். முழந்தாள் அளவு நீண்ட கை அரசர்க்குரிய உத்தம இலக்கணம். 'தாழ்தடக் கைகளே'(2104) என்றதை இங்கு ஒப்புநோக்குக.* ***94***

கோசலை, பரதன் தூயன் என அறிந்து உரை தொடங்குதல்

***2196. புலம்புறு குரிசில்தன் புலர்வு நோக்கினாள்,***
***குலம் பொறை கற்பு இவை சுமந்த கோசலை;***
***'நிலம் பொறை ஆற்றலன், நெஞ்சம் தூய்து' எனா,***
***சலம் பிறிது உற, மனம் தளர்ந்து, கூறுவாள்;***

***குலம், பொறை, கற்பு இவை சுமந்த கோசலை*** *- உயர்ந்த குடிப் பிறப்பும்,பொறுமையும், கற்பும் ஆய இவற்றை நல் அணிகலன்களாகச் சுமந்துகொண்டுள்ள கோசலை;* ***புலம்புஉறுகுரிசில்தன்*** *- துயரதம் அடைகின்ற பரதனது;* ***புலர்வு*** *- துயர்ச்சோர்வினை;* ***நோக்கினாள்*** *- மனத்தால் ஆராய்ந்தாள்;* ***'நிலம் பொறை*** *- (இந்தக்), கோசலஅரசைச் சுமக்கின்ற ஆட்சி உரிமையை;* ***ஆற்றலன்*** *- விரும்பியவன் அல்லன்;* ***நெஞ்சம் தூய்து*** *- இவன் மனம் தூய்மையானது; எனா - என்று கருதி;* ***சலம்*** *-(இதுகாறும் அவனைப்பற்றித் தான்கொண்டிருந்த) தவறான கருத்து;* ***பிறிது உற*** *- (இப்போது)வேறுபட்டுப் போக;* ***மனம் தளர்ந்து*** *- (இப்படிப்பட்ட நல்லவனை மாறாகக் கருதினோமே என்பதனால்) மனம் சோர்ந்து;* ***கூறுவாள்*** *- சொல்பவள் ஆனாள்.*

*கைகேயி போலப் பரதனும் அதற்கு உடன்பட்டவன் என்றுமுன்னர்க் கருதியவள் ஆதலின், அக்கருத்தைச் 'சலம்' என்று குறித்தார். 'சலம்' தீது, வஞ்சனை, பொய் என்று பொருள்படும். புலர்வு - வாடிக்காய்தல். கோசலைக்குப் பரதன் நிலை கண்டுமனத்தளர்வு ஏற்பட்டது எனலாம்.* ***95***

கோசலை பரதனை வினாவுதல்

***2197. 'மை அறு மனத்து ஒரு மாசு உளான் அலன்;***
***செய்யனே' என்பது தேறும் சிந்தையாள்,***
***'கைகயர் கோமகள் இழைத்த கைதவம்,***
***ஐய! நீ அறிந்திலை போலுமால்?' என்றாள்.***

*(இவன்)* ***மை அறு*** *- இயல்பாகவே குற்றம் அற்ற மனத்தின்கண்;* ***ஒரு மாசுஉளான் அலன்*** *- (கைகேயியால் ஏற்பட்ட ஒரு குற்றமும் உடையவன் அல்லன்;* ***செய்யன்*** *- வேர்மையானவன்;* ***என்பது தேறும் சிந்தையாள்*** *- என்பது தெளிந்த மனத்தினன்ஆனாள், (பின்னர்ப் பரதனைப் பார்த்து);* ***'ஐய!*** *- ஐயனே;* ***நீ கைகயர் கோமகள்*** *- கேகய நாட்டு அரசமன் மகளாகிய கைகேயி;* ***இழைத்த கைதவம்*** *- செய்த வஞ்சனை;* ***அறிந்திலை போலும்'*** *- (முன்னமே) அறியாய் போலும்; என்றாள். -.*

*முன்பு மாசு உள்ளானோ என்று கோசலை ஐயுற்றாள் என்பதை மேற்பாட்டில் (2196) 'சலம் 'என்று குறித்துள்ளார். இங்கே 'செய்யனே'* **என்பது** *தெளிந்தாளாம். 'ஐய' என்பதுஉள்ளன்பினால் 'தலைவ' என அழைத்தாளாம். கைகேயி அல்லது உன் தாய் என்னாமல் கைகயர்கோமகள் என்றழைத்தது அவள் அரசின்கண் ஆசைப்பட்டதற்குக் காரணம் சொன்னது போலத்தோற்றிநயம் செய்கிறது. 'ஆல்' அசை. 'செய்யனே' 'ஏ' காரம் தேற்றம்.* ***96***

*கோசலை சொல்லால் மனப்புண் உற்ற பரதன் சூள் உரைக்கத் தொடங்குதல்*

***2198. தாள் உறு குரிசில், அத் தாய் சொல் கேட்டலும்,***
***கோள் உறு மடங்களில் குமுறி விம்முவான்,***
***நாள் உறு நல் அறம் நடுங்க, நாவினால்***
***`சூளுறு கட்டுரை சொல்லல் மேயினான்;***

*தாள் உறு குரிசில் - சோசலையின் திருவடிகளில் வீழ்ந்த பரதன்; அத் தாய் சொல்கேட்டலும் - அந்தத் தாயின் (கைகேயி செய்த வஞ்சனை அறியாயோ என்ற) சொல்லைக் கேட்டஅளவில்; கோள்* ***உறு மடங்கலின்*** *- சிறைபிடிக்கப்பட்ட சிங்கம் போல;* ***குமுறி விம்முவான்*** *- மனக்குமுறல் அடைந்துஅழுவான்;* ***நாள்உறு நல் அறம் நடுங்க*** *- காலக் கடவுளொடும் பொருந்தி அவர் அவர்க்குப்பயன் செய்யும் நல்ல அறக்கடவுளும் நடுங்கும்படியாக;* ***நாவினால்*** *- தனது வாயால்;* ***சூளுறு கட்டுரை*** *- சபதமாக ஏற்றுக்கொள்ளப்படும் உறுதி மொழிகளை;* ***சொல்லல் மேயினான்*** *- சொல்லத் தொடங்கினான்.*

*பரதனின் மனவேதனையைத் தட்டி எழுப்பியது கோசலை கேட்ட வார்த்தை. அதனால், புண்பட்டமனம் குமுறிப் பொங்கியது; சபதம் சொல்லத் தொடங்கினான். அது கேட்டு அறமே நடுங்குகிறதுஎன்றார். 'நாவினால்' என்றது சத்திய வாக்கினன் என்ற அவன் சொல் தூய்மையைச் சிறப்பித்து நின்றது. இதனை வடிமொழியில் 'தாற்பரியம்' என்ப. 'ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய,வழுக்கியும் வாயாற் சொலல்'' என்னும் குறளில் (139) 'வாயால்' என்பது போல் வந்தது.'அன்பிலதனை அறம்'' (குறள் 77) காய்தல் வழக்கு, தண்டம் செயும் ஆற்றல் உடைய அறமும்நல்லோர் செய்யும் சூளுரைக்கு நடுங்குகிறது என்றார். அறக்கடவுளின் தண்டம் காலத்தோடு பட்டுநிகழும் ஆதலின் 'நாள் உறு நல்லறம்' எனப்பெற்றது. நாள் என்றது காலத்தைக் குறிக்கும்ஆகுபெயர்.* ***97***

*பரதன் செய்த சூளுரை*

***2199. 'அறம்கெட முயன்றவன், அருள் இல் நெஞ்சினன்,***
***பிறன்கடைநின்றவன், பிறரைச் சீறினோன்,***
***மறம்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்,***
***துறந்த மா தவர்க்கு அருந் துயரம் சூழ்ந்துளோன்,***

***'அறம் கெட முயன்றவன்*** *- (பிறர் செய்த) அறச் செயல் கெடும் படி முயற்சிசெய்தவன்;* ***அருள் இல் நெஞ்சினன்*** *- இரக்கம் அற்ற மனம் உடையவன்;* ***பிறன் கடைநின்றவன்*** *- தொழில் செய்து பொருள்தேடாது அயலார் வீட்டு வாயிற்படியில் எளிவரவாய்நின்றவன்;* ***பிறரைச் சீறினோன்*** *- (ஒரு காரணமும் இல்லாமல்) பிறரைக்*

*கோபித்துக்கெடுதி செய்தவன்;* **மறம் கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்** *- இரக்கமற்ற மறக்கொடுமை கொண்டு நிலைத்த உயிர்களைக் கொன்று அதனால் தன் வாழ்க்கை நடத்தியவன்;* **துறந்த மாதவர்க்கு அருந்துயரம் சூழ்ந்துளோன்** *- துறவிகளாய பெரிய முனிவர்களுக்குப்பொறுத்தற்கரிய துயரத்தை வேண்டுமென்றே செய்தவன்......*

*ஆகிய இவர்கள் 'நண்ணும் அத் தீ எரி நரகத்துக் கடிது செல்கயான்' எனப் பரதன் உரைப்பதாக இது முதல் நான்கு செய்யுள்கள் ஒரு தொடராக இருந்து. இப்படலத்து101 ஆம் பாடலின் இறுதி அடியில் (2202) முடிகின்றன. 'எனக்குத் தெரிந்து கைகேயி செய்தவஞ்சனை நடந்திருக்குமாயின் யான் இத்தகையோர் செல்லும் நரகு செல்வேனாக' என்று மனத்தின்அடித்தளத்தில் இருந்து இச்சபதங்கள் குமுறி எழுகின்றன. பிறன்கடை நின்றவன் - பிறன் மனைவியை நயந்து அந்த வீட்டவாயிலின் அருகே சென்று நின்றவன் எனவும் உரைக்கலாம். 'அறன் கடைநின்றாருள் எல்லாம் பிறள்கடை, நின்றாரிற் பேதையார் இல்' (குறள். 142) என்னும் குறளையும் கருதுக. 'நட்பிடைக் குய்யம் வைத்தான்பிறர்மனை நலத்தைச் சார்ந்தான்,.......அட்டுகுடலம் தின்றான்....குட்டநேராய் நரகம்தன்னுட் குளிப்பவர் இவர்கள் கண்டாய்' என்னும் சிந்தா மணிப்பாடலை இங்கு ஒப்பு நோக்குக.முற்றும் துறந்த முனிவர்க்குச் சீற்றமும் இல்லையாதலின் சாபத்தில் தப்புவர் ஆயினும் நரகத்தில் தப்பார் என்க.*
***98***

***2200. 'குரவரை, மகளிரை, வாளின் கொன்றுளோன்,***
***புரவலன் தன்னொடும் அமரில் புக்கு உடன்***
***விரவலர் வெரிநிடை விழிக்க, மீண்டுளோன்,***
***இரவலர் அரு நிதி எறிந்து வெளவினோன்,***

***குரவரை*** *- ஐம்பெருங் குரவரை;* ***மகளிரை*** *- பெண்களை; வாளின் கொன்றுளோன் - வாளால் கொலைசெய்தவன்;* **புரவலன் தன்னொடும்** *- அரசனோடும்; அமரில் புக்கு- போர்க்களத்துக்குச் சென்று; உடன்- உடனே;* **விரவலர் வெரிநிடை விழிக்க** *- பகைவர்கள் தன்முதுகிடத்தைக் காண;* **மீண்டுளோன்** *- திரும்பி ஓடிவந்தவன்;* **இரவலர்** *-ஏற்றுண்பாரது; அருநிதி - அரிதாகச் சேமித்த செல்வத்தை;* **எறிந்து வெளவினேன்** *- அவர்களை அடித்துக் கைப்பற்றிக் கொண்டவன்...*

*ஐம்பெருங்குரவர் ஆவார் - தந்தை, தாய், தம்முன், அரசன் ஆசிரியன் என்போர்.(ஆசாரக். 16) குரவர் - ஆசிரியர் என்று 'குரு' வை மட்டும் கூறுதலும் உண்டு. போர்க்கு அரசனுடன்சென்று புறமுதுகிட்டு ஓடிவந்து அரசனைக் கைவிட்டவன். இவனை வள்ளுவர் 'அமரகத்து ஆற்றறுக்கும்கல்லாமா அன்னார்' என்று சொல்வர் (குறள். 814.).* ***99***

***2201. "தழைத்த தண் துளவினோன்***
***தலைவன் அல்லன்" என்று***
***அழைத்தவன், அறநெறி***
***அந்தணாளரில்***
***பிழைத்தவன், பிழைப்பு இலா***
***மறையைப் பேணலாது,***

***"இழைத்த வன் பொய்" எனும்***
***இழுதை நெஞ்சினோன்.***

***"தழைத்த*** - *செழித்துள்ள;* ***தண் துளவினோன்*** - *குளிர்ச்சி பொருந்திய திருத்துழாய் மாலையைச்சூடியுள்ள திருமால்;* ***தலைவன் அல்லன்"*** - *பரம்பொருள் அல்லன்;* ***என்று அழைத்தவன்*** - *என்று சொல்லியவன்;* ***அறநெறி*** - *தரும வழியில் நடக்கின்ற;* ***அந்தணாளரில்பிழைத்தவன்*** - *அந்தணாளர் திறத்தில் பிழைசெய்தவன்;* ***பிழைப்பு இலா இறையைப் பேணலாது*** - *ஒரு சிறிதும் குற்றம் இல்லாத இறைவன் அருளிய வேதத்தை நன்கு வழிபட்டுப் பாதுகாவாது;* ***"இழைத்த வன் பொய்"*** - *ஒருவர் செய்துவைத்த பொய்யுரை; எனும் இழுதை* ***நெஞ்சினோன்*** - *என்று சொல்லும்பேய்மனம் படைத்தவன்....*

*'திருமாலே பரம்பொருள்' என்னும் கருத்தை நிலைநிறுத்தப் பரதன் சபதத்தில் அதனையும்ஒன்றாக்கினார் போலும். வேதம் ஒருவனால் உண்டாக்கப்பட்டதன்று; 'அபௌருஷேயம்' என்பர்வடநூலார்; இறைவே அருளியது. அதைப் பொய் என்பவன் பேய் என்றார். ''உலகத்தார் உண்டென்பதில்லென்பான் வையத்தலகையா வைக்கப்படும்'' (குறள் 850) என்பதும் இக்கருத்தினதாதல் அறிக.* ***100***

***2202. 'தாய் பசி உழந்து உயிர் தளரத், தான் தனி,***
***பாய் பெரும் பாழ் வயிறு அளிக்கும் பாவியும்,***
***நாயகன் பட நடந்தவனும், நண்ணும் அத்***
***தீ எரி நரகத்துக் கடிது செல்க, யான்.***

***'தாய் பசி உழந்து உயிர்தளர*** - *தன் தாய் பசியால் வருந்தி உயிர் சோரவும்;* ***தான் -; தனி பாய் பெரும் பாழ் வயிறு*** - *ஒப்பற்ற பரந்த பெரிய பாழ்வயிற்றை;* ***அளிக்கும் பாவியும்*** - *(சோறிட்டுப்) பாதுகாக்கின்ற பாவி;* ***நாயகன் பட நடந்தவன்*** - *தன் தலைவன் போர்க்களத்திலே இறந்துபட அவனைக் கைவிட்டுத் தன்னுயிரைக் காத்துக் கொண்டு சென்றவன்; (ஆகிய இப்பதினான்கு பேரும்);* ***நண்ணும் அத் தீ எரி நரகத்து*** - *எந்தநரகத்துக்குச் செல்வார்களோ அந்த நெருப்பு எரிகின்ற நரகத்துக்கு;* ***யான் கடிது செல்க*** - *யான் (அவரினும்) விரைந்து முற்படச் செல்வேனாக.*

*தாய் பசி நீக்க எதையும் செய்யலாம் என்று சொல்லக்கூடிய அளவுக்கு உடன் களைய வேண்டுவது தாய் பசி ஆகும். 'ஈன்றாள் பசி காண்பான் ஆயினும்'' (குறள். 656.) என்றது காண்க. ''தாயர்பசி கண்டு நனி தன் பசி தணிக்கும், நாயனைய புல்லர் உறு நாகில் உறுவேன்'' (வில்லி. 41.182.) என்றதும் இக் கருத்தினதே.*

*'தீ எரி நரகம்' ஒருவகை நரக விசேடம். நான்கு பாடல்களால் பதினான்கு பேரைச் சுட்டி 'அவர்கள் செல்கின்ற நரகத்துக்கு யானும் செல்க - கைகேயி எனக்குத் தெரிந்து வரம்கேட்டாளாயின்' என்று பரதன் கூறினான். பின்வரும் பாடல்களும் இவ்வாறே ஆகும்.* ***101***

***2203. 'தாளினில் அடைந்தவர்தம்மை, தற்கு ஒரு***
***கோள் உற, அஞ்சினன் கொடுத்த பேதையும்,***

***நாளினும் அறம் மறந்தவனும், நண்ணுறும்.***
***மீள அரு நரகிடைக் கடிது வீழ்க, யான்.***

*'**தாளினில் அடைந்தவர் தம்மை** - (என்னைப் பாதுகாக்க வேண்டும் என்று சொல்லித்) தன்னடியில் அடைக்கலமாக - வந்து சேர்ந்தவர்களை; **தற்கு ஒரு கோள் உற** - (அவர்களக்கு அடைக்கலம் அளித்ததனால்) தனக்கு ஒரு தீங்கு உறலாயிருக்க அதற்கு அஞ்சியவனாய் எதிரி கையில் காட்டிக்கொடுத்துத் தான் உயிர் தப்பிய அறிவிலியும்; நாளினும் **அறம் மறந்தவனும்** -சிறந்த நாளினும் கூடத் தருமவழியில் செல்லாது மறந்தவனும்; நண்ணுறும் - சென்று அடைகின்ற; **மீள அரு நரகிடை** - திரும்ப வரமுடியாத அரிய நரகத்திடத்து; **யான் கடிது வீழ்க** -யான் விரைந்து வீழ்வேனாக.'*

*அடைக்கலம் கொடுத்தோரைக் காத்தல் பேர் அறம் ஆகும். "உய்ய, "நிற்கு அபயம்"என்றான் உயிரைத் தன் உயிரின் ஓம்பாகக் கையன்...... மீள்கிலா நரகின் வீழ்வார்" (6478.) என்பதை ஈண்டு ஒப்பு நோக்குக. "தஞ்சென அடைந்தவர் தமக்கு இடர் நினைக்கும்,நஞ்சனைய பாதகர் நடக்கும் நெறி சேர்வேன்" (வில்லி. 41 - 183.) என்ற பாரதமும் இதனைப்பின்பற்றியதே ஆகும். 'நாளினும்' எந்நாளினும் எனவும் உரைக்கலாம். 102*

***2204. 'பொய்க் கரி கூறினோன்,***
***போருக்கு அஞ்சினோன்.***
***கைக் கொளும் அடைக்கலம்***
***சுரந்து வவ்வினோன்.***
***எய்த்த இடத்து இடர் செய்தோன்,***
***என்று இன்னோர் புகும்***
***மெய்க் கொடு நரகிடை***
***விரைவின் வீழ்க, யான்.***

*'**பொய்க் கரி கூறினோன்** - (நீதி மன்றத்தில்) பொய்ச்சான்று கூறியவன்; போருக்கு அஞ்சினோன் - போருக்கு வீரமாகப்புறப்பட்டுச் சென்று பயந்து திரும்பியவன்; **கைக்கொளும் அடைக்கலம் சுரந்து வவ்வினோன்** - பாதுகாப்பதாகப் பற்றிய அடைக்கலப் பொருளை (உடையவனை ஏமாற்றி) மறைத்துத் (தான்)எடுத்துக்கொண்டவன்; **எய்த்த இடத்து இடர் செய்தோன்** - (ஒருவரை அவர்) இளைத்துஇடத்திலே மேலும் துன்பம் செய்தோன்; **என்று இன்னோர் புகும்** - என்றிவ்வாறு சொல்லப்பெறும் இந்நால்வரும் சென்றுபடும்; மெய்க் கொடு நரகிடை - உண்மையான கொடியநரகத்திடத்து; **யான் விரைவின் வீழ்க** - யான் விரைந்து வீழ்வோனாக.'*

*'போருக்கு அஞ்சினோன்' - முன் பாடல்களில் உள்ள 'புரவலன் தன்னொடும் அமரில் புக்குஉடன் விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன்' என்பதும் (2200) "நாயகன் பட நடந்தவனும்"(2202) என்ற இரண்டும் இதனின் வேறுபட்டவை. அரசனோடு புகுந்து அவனைவிட்டு ஓடிவருதல், அரசன்இறக்கக் கவலை இன்றித் தான் உயிர்பிழைத்துவருதல் என்பன அவை, இது போருக்கு வீரம் பேசிச்சென்று களங்கண்டவழி அஞ்சுகிற பேடித் தன்மையாலும். இந்நால்வரும் செல்லும் நரகத்தில் நான் புகுக என்றான் பரதன். 103*

*2205. ‘அந்தணர் உறையுளை
அனலி ஊட்டினோன்.*

*மைந்தரைக் கொன்றுளோன்,
வழக்கில் பொய்த்துளோன்,
நிந்தனை தேவரை
நிகழ்த்தினோன், புகும்
வெந் துயர் நரகத்து
வீழ்க, யானுமே.*

***‘அந்தணர் உறையுளை அனலி ஊட்டினோன்*** - *வேதம் வல்ல மறையோர் வசிக்கின்ற இடத்தை நெருப்பை உண்ணும்படி செய்தவன் (தீ வைத்தவன்);* ***மைந்தரைக் கொன்றுளோன்*** - *சிறுவரைக் கொன்றவன்; வழக்கில் பொய்த்துளோன் -(இருவர் வழக்குத் தம்மிடம் நியாயத்துக்கு வந்தவழி) வழக்கில் பொய்த்தீர்ப்புச் செய்தவன்;* ***தேவரை நிந்தனை நிகழ்த்தினோன்*** - *தெய்வங்களை வைது உரைத்தவன் (ஆகிய இவர்);* ***புகும் வெந்துயர் நரகத்து யான் வீழ்க*** - *செல்லும் அக் கொடிய துன்பத்தைத் தரும்நரகத்தில் யான் வீழ்வேனாக.’*

*வாழும் இடத்துக்குத் தீவைத்தலே பாதகம். அதன் மேலும்அந்தணர் வசிக்கும் இடத்துக்கும் தீ வைத்தல்மாபாதகம். சிறுவரைக் கொல்லுதல்; பெற்றபிள்ளைகளைக் கொல்லுதலும் ஆம்..பொய்க்கரி கூறினோன் என்று முன்னர் வந்ததுசாட்சியாளர்க்கு; இது நடுவர்க்கு; இனி வாதி, பிரதிவாதி இருவருள் ஒருவர் பொத்தலும் இங்கே கொள்ளலாம். ‘யானும்’ என்ற உம்மை எச்ச உம்மை.* ***104***

*2206. ‘கன்று உயிர் ஓய்ந்து உகக் கறந்து பால் உண்டோன்,
மன்றிடைப் பிறப் பொருள் மறைத்து வவ்வினோன்,
நன்றியை மறந்திடும் நயம் இல் நாவினோன்,
என்று இவர் உறு நரகு என்னது ஆகவே.**

***‘கன்று உயிர் ஓய்ந்து உகப் பால் கறந்து உண்டோன்*** - *(பால் விடாமையால்)கன்றுக்குட்டி உயிர் இல்லையாய்ப் போக (பசுவினிடத்து) எல்லாப் பாலையும் (தானே) கறந்து உண்டவன்;* ***மன்றிடைப் பிறர் பொருள் மறைத்து வவ்வினோன்*** - *மன்றத்தில் பிறரதுபொருளை (அவர் அறியாதபடி) மறைத்துக் கைப்பற்றிக் கொண்டவன்;* ***நன்றியை மறந்திடும் நயம்இல் நாவினோன்*** - *(ஒருவன்) செய்த நன்றியை மறந்து (அவனைப் பழித்துரை செய்யும்)இனிமையற்ற நாக்கை உடையவன்;* ***என்று இவர் உறு நரகு என்னது ஆக*** - *என்று கூறப்பெறுகின்றஇந்த மூவரும் சென்றடையும் நரகம் எனக்கும் சொந்தமாகட்டும்.’*

*தனக்கும் கன்றக்கும் பயன்படும்படி பசுவினிடத்தில் நிறையப்பாலை இறைவன் அளித்திருப்பவும் கன்றுக்குச் சிறிதும் பால் விடாமல் தானே கறந்து அநுபவித்தல்பாதகம் ஆயிற்று. பலர் கூடியுள்ள இடத்தில் பிறர் பொருளை மறைத்துக் கைப்பற்றல் அறமற்றசெயல். நயமில் நாவினோன் தனக்கு நன்மை செய்தவர்களைத் தூற்றுகின்றவன். ‘ஏ’ காரம்ஈற்றசை. 105*

***2207. ‘ஆறு தன்னுடன் வரும்***
***அம் சொல் மாதரை***
***ஊறு கொண்டு அலைக்க, தன்***
***உயிர் கொண்டு ஒடினோன்.***
***சோறு தன் அயலுளோர்***
***பசிக்கத் துய்த்துளோன்,***
***ஏறும் அக் கதியிடை***
***யானும் ஏறவே.***

***‘தன்னுடன் ஆறு வரும் அம் சொல் மாதரை*** - *தன்னுடனே (தன் பாதுகாப்பில்) வழியில் வந்துகொண்டுள்ள அழகிய பேச்சுகளை உடைய பெண்களை;* ***ஊறு கொண்டு அலைப்ப*** - *வழிப்பறிக் கொள்ளையர் புண்படுத்தித் துன்புறுத்த;* ***தன்உயிர் கொண்டு ஓடினோன்*** - *(அவர்களைக் காப்பாற்றாமல் கைவிட்டுத்) தன்னுடைய உயிரைப் பாதுகாத்துக் கொண்டு ஓடிவிட்டவன்;* ***தன் அயலுளோர் பசிக்கச் சோறு துய்த்துளோன்*** *-தன் பக்கத்தில் உள்ளவர்கள் பசியால் வருந்த (அவர்களுக்குச் சோறு கொடாது) சோற்றினைத்தானே உண்டு முடித்தவன்;* ***ஏறும் அக்கதியிடை யானும் ஏற*** - *(இவ் இருவரும்) செல்லுகின்றஅந்த நரகக் கதியிடத்து யானும் செல்வேனாக.’*

*வழியில் உடன்வரும் மகளிரைப் பாதுகாக்க உயிரைக்கூட இழப்பது பெரும் புண்ணியச் செயல்.அவர்களைக் கைவிட்டுத் தன்னுயிரைப் பாதுகாத்துக் கொண்டு ஓடிவிடுகின்றவன் மாபாதகன். கதிகள்தேவகதி, மக்கள் கதி, விலங்கு கதி, நரககதி என்னும் நான்கு. அதனுள் இவர் செல்கிற கதிநரககதி ‘ஏ’ ஈற்றசை.*
***106***

***2208. ‘எஃகு எறி செருமுகத்து ஏற்ற தெவ்வருக்கு***
***ஒஃகினன், உயிர் வளர்த்து உண்ணும் ஆசையான்,***
***அஃகல் இல் அறநெறி ஆக்கியோன் பொருள்***
***வெஃகிய மன்னன், வீழ் நரகின் வீழ்க, யான்.***

***‘எஃகு எறி செருமுகத்து*** - *ஆயுதங்களை வீசிப் போர்செய்யும் போர்க்களத்து’* ***ஏற்ற தெவ்வருக்கு ஒஃகினன்*** - *எதிர்த்துப் போர் புரியும் பகைவர்களுக்கு எதிரே (தானும்போர் செய்யாமல் உயிராசையால்) வணங்கியவன்;* ***உயிர் வளர்த்து உண்ணும் ஆசையால்*** - *உயிரை உடலில் நிலைபெறச்செய்து நெடுநாள் வாழ்ந்து அனுபவிக்க வேண்டும் என்கின்ற ஆசையாலே;* ***அஃகம் இல் அறநெறி ஆக்கியோன் பொருள் வெஃகிய மன்னன்*** - *சுருங்குதல் இல்லாத பெரியஅறவழியில் பொருள் சேர்த்தவனது பொருளைப் (பேராசைப்பட்டு) கைப்பற்றிக் கொண்ட அரசன்;* ***வீழ் நரகின் யான் வீழ்க*** - *விழுகின்ற நரகத்தில் யானும் வீழ்வேனாக.’ ‘உயிர் வளர்த்து உண்ணும் ஆசையால்’ என்பதனை இடைநிலைத் தீவகமாகக் கொண்டு, ‘எஃகு எறி செருமுகத்து’ என்பதன் முன்னும் கூட்டிப் பொருள் செய்யலாம். -இது இடைநிலை விளக்கணி என்றும், தாப்பிசைப் பொருள்கோள் என்றும் கூறப்பெறும்.‘கொள்பொருள் வெஃகிக் குடி அலைக்கும் வேந்தன்’’ (திரிகடுகம் 50) எனக் கூறுவர் இம்மன்னனை.* ***107***

***2209. ‘அழிவு அரும் அரசியல் எய்தி, ஆகும் என்று,***
***இழி வரு சிறு தொழில் இயற்றி, ஆண்டு, தன்***

***வழி வரு தருமத்தை மறந்து, மற்று ஒரு***
***பழி வரு நெறி படர் பதகன் ஆக, யான்.***

***'அழிவு அரும் அரசியல் எய்தி*** *- கெடுதல் இல்லாத அரசாட்சியை அடைந்து'* ***ஆகும் என்று*** *- (எனக்கு) எதுவும் செய்ய இயலும்என்று கருதி;* ***ஆண்டு*** *- அரசாட்சி நடத்தி;* ***தன் வழிவரு தருமத்தை மறந்து*** *- தன்னுடைய பாரம்பரியமான குலதருமத்தை மறந்து (கை விட்டு);* ***மற்று*** *- வேறாகிய;* ***ஒருபழிவரு நெறி*** *- தனக்குப் பழி வந்து சேரக் கூடிய வழியில்;* ***படர்*** *- விரித்துசெல்கின்ற;* ***பதகன்*** *- பாவியாக;* ***யான் ஆக*** *- யான் ஆவேனாக.'*

*அரசேற்றவன் அறவழியில் நடக்க வேண்டும்; வேறு வழியில் சென்றால் பாவியாகிறான்; அவனைப்போல நானும் ஆவேனாக என்று பரதன் சூளுரை செய்தான்.* ***108***

***2210. 'தஞ்சு என ஒதுங்கினர் தனது பார் உளோர்***
***எஞ்சல் இல் மறுக்கினோடு இரியல் போயுற,***
***வஞ்சி சென்று இறுத்தவன் வாகை மீக் கொள***
***அஞ்சின மன்னவன் ஆக யானுமே.***

***யான் -; தஞ்சு என ஒதுங்கினர் தனது பார் உளோர்*** *- (நீயே எமது) அடைக்கலம்எம்மைப் பாதுகாக்க என்ற தன்னிடத்தில் வந்து அடைந்த தன் குடிமக்கள்;* ***எஞ்சல் இல்மறுக்கினோடு*** *- குறைதல் இல்லாத (அதிக) மனக் கலக்கத்தோடு;* ***இரியல் போய் உற*** *- கெட்டு ஓடும்படியாக; வஞ்சி சென்று இறுத்தவன் - வஞ்சி மாலை புனைந்து மண்ணாசை காரணமாகப்படை எடுத்துத் (தன் எல்லையில்) தங்கிய பகை அரசன்;* ***வாகை மீக் கொள*** *- வெற்றிமேற்கொண்டு ஆரவாரம் செய்ய;* ***அஞ்சின மன்னவன்*** *- அப்பகைவனோடு தன் உயிர் உள்ளதுணையும் தன் மக்களைக் காப்பாற்றப் போர் செய்யாமல் பயந்த அரசன்;* ***ஆக*** *- (செல்லுகின்ற தீய கதியில்) செல்வேனாக.*

*வஞ்சி - மண்ணாசை காரணமாகப் படை எடுத்துச் சென்று பகைவர் நாட்டு எல்லையில் தங்கிச் செய்யும் போர்ப் பகுதி. வஞ்சி என்பது மேற்சேறல் எனப்பெறும்.அதற்கு வஞ்சிப்பூச் சூடுதல் உரித்து. வாகை - வெற்றி; வெற்றி பெற்றோர் வாகைப்பூச் சூடுவர் - 'வாகைப்பூவை மேல்சூடிக்கொள்ள' எனலும் ஆம். யானும், 'உம்' எச்சவும்மை. சிறப்பும்மை ஆகலும் ஆம்.* ***109***

***2211. 'கன்னியை அழி செயக் கருதினோன், குரு***
***பன்னியை நோக்கினோன், பருகினோன் நறை,***
***பொன் இகழ் களவினில் பொருந்தினோன் எனும்***
***இன்னவர் உறு கதி என்னது ஆகவே.***

***'கன்னியை*** *- திருமணம் ஆகாத கன்னிப்பெண்ணை; அழிசெயக்* ***கருதினோன்*** *- கற்பழித்துக் கெடுத்தல்செய்ய நினைத்தவன்;* ***குருபன்னியை நோக்கினோன்*** *- ஆசான் மனைவியைத் தீய கருத்துடன் பார்த்தவன்;* ***நறை பருகினோன்*** *- கள் உண்டவன்;* ***இகழ் களவினில்*** *- (எல்லாராலும்) இகழப்படுகின்ற களவினால்;* ***பொன் பொருத்தினோன்*** *-*

*பொன்னைச்சேர்த்தவன்;* ***எனும் இன்னவர்*** *- என்கின்ற (நால்வராய) இவர்கள்;* ***உறு*** *- அடைகின்ற;* ***கதி*** *- (நரக) கதி;* ***என்னது ஆக*** *- எனக்குரியது ஆகுக.'*

*'கன்னி' என்பதற்குப் பூப்பு எய்தாத பெண் எனலும் ஆம். பெண்களைப் பூப்பு எய்தும் முன்னரேதிருமணம் செய்வித்தல் அக்கால வழக்கம். 'ஏ' ஈற்றசை.*
***110***

***2212. 'ஊண் அல உண் வழி நாயின் உண்டவன்,***
***"ஆண் அலன், பெண் அலன், ஆர்கொலாம்?" என***
***நாணலன், நரகம் உண்டு என்னும் நல் உரை***
***பேணலன், பிறர் பழி பிதற்றி, ஆக யான்,***

***'யான்-; உண்வழி ஊண் அல நாயின் உண்டவன்*** *- உண்ணுகின்ற பொழுது உண்ணுதற்குஉரியது அல்லாதனவற்றை நாய்போல உண்டவன்;* ***ஆண் அலன்*** *- ஆண்மைத் தன்மை உடையனல்லன்;* ***பெண் அலன்*** *- (பிறப்பினால் ஆண் உருவத்தில் உள்ளபடியால்) பெண்ணும் அல்லன்;* ***என*** *- என்று (உலகம் கேவலமாகப்) பேசும்படி;* ***நாண் அலன்*** *- அதற்குச் சிறிதும் வெட்கப்படாதவனா யுள்ளவன்;* ***நரகம் உண்டு என்னும் நல் உரை பேணலன்*** *- '(தீயனசெய்தால்) நல்ல அறிவுரைகளைச் சிறிதும் மதியாதவன்;* ***பிறர்பழி பிதற்றி*** *-(எப்பொழுதும்) பிறரது பழிகளையே (பலரும் அறியப்) பிதற்றிக் கொண்டு திரிபவன்;* ***ஆக*** *- (இந் நால்வரும் செல்லும் நரக கதியில் சேர்வேன்) ஆக.'*

*'நாய் போல' என்பது, உண்ணத் தகாதன உண்ணுதல், தானே பிறரை அடித்து விரட்டி உண்ணுதல்ஆகியவற்றுக்கு உவமையாகக் கொள்க. பிறர் நகைப்புக்கிடமாக வீரம், அஞ்சாமை, ஆண்மைசிறிதும் அற்றவன் 'நாணலன்' எனப்பெற்றான். 'அலன்' என 'ன' கர ஈற்றுச் சொல்லின் முடிதலின் ஆணாயிருந்து ஆண்தன்மைஅற்றவன் எனப் பொருள்கொள்க.* ***111***

***2213. 'மறு இல் தொல் குலங்களை மாசு இட்டு ஏற்றினோன்,***
***சிறு விலை எளியவர் உணவு சிந்தினோன்,***
***நறியன அயலவர் நாவில் நீர் வர***
***உறு பதம் நுங்கிய ஒருவன், ஆக யான்.****

*'யான் -; மறு இல் தொல் குலங்களை - குற்றம் சிறிதும் அற்ற பழமையான குலங்களை;* ***மாசு இட்டு ஏற்றினோன்*** *- குற்றம் உள்ளவை என்று குற்றம் கற்பித்து (அதனை உலகம் நம்புமாறுசெய்து குலக்) கேடு சூழ்ந்தவன்;* ***சிறுவிலை*** *- பஞ்ச காலத்தில்;* ***எளியவர்*** *-ஏழை எளிய மக்களது;* ***உணவு*** *- அற்ப உணவை;* ***சிந்தினோன்*** *- சிதறப் பண்ணியவன்;* ***அயலவர் நாவில் நீர்வர*** *- பார்த்துக் கொண்டிருக்கின்ற பக்கல் உள்ளவர் நாக்கில்நீர்ஊறும்படி; (அவர்களுக்குக் கொடாமல்)* ***நறியன உறுபதம்*** *- நறுமணம் உள்ள நல்லசிறந்த உணவை;* ***நுங்கிய*** *- தானே விழுங்கிய;* ***ஒருவன் -; ஆக -*** *(இம் மூவரும்செல்லும் தீய கதியில்) செல்வேனாக.'*

*விலை மிகுந்து பொருள் குறைவது பஞ்சகாலத்தில். அதனால், சிறு விலைக் காலம் என்று பஞ்சகாலத்தைச் சொல்வர். உணவைச் சிந்துவதே பாவம்; அதனினும் எளியவர்உணவைச் சிதறுதல் பெரும்பாவம் ஆகும்.* ***112***

***2214. ‘வில்லினும் வாளினும் விரிந்த ஆண் தொழில்***
***புல்லிடை உகுத்தனென், பொய்ம்மை யாக்கையைச்***
***சில் பகல் ஓம்புவான் செறுநல் சீறிய***
***இல்லிடை இடு பதம் ஏற்க, என் கையால்.***

*‘(யான்)* ***வில்லினும் வாளினும் விரிந்த ஆண்தொழில்*** *- வில்லாலும் வாளாலும்செய்யத் தகும் விரிவான தீரச்செயலை;* ***புல்லிடை உகுத்தனன்*** *- பயனற்ற வழியில்போக்கியவனாய்;* ***பொய்ம்மை யாக்கையை*** *- பொய்த்தன்மை உடைய உடம்பை;* ***சில்பகல் ஓம்பு வான்*** *- சிலநாள் பாதுகாக்க (உயிர்வாழ வேண்டி);* ***சீறிய செறுநர் இல்லிடை*** *- தன்னைக் கேர்பித்துப் பகைத்தவர்கள் வீட்டில்;* ***இடுபதம்*** *- அவர்கள் இடுகின்ற உணவை;* ***என் கையால் ஏற்க*** *- என் மையால் ஏற்று உண்பவனாக (நான் ஆவேனாக.)’*

*இதுவரை தீயவர்கள் செல்லும் கதி என்று சொன்ன பரதன், தன்னையே அக்கேவலமானதீயவர்கள் நிலைக்கு ஆளாக்கிச் சூளுரை இப்பாட்டில் சொல்லியுள்ளான். உயிர்வாழ ஆசைப்பட்டுப்பகைவர் போடும் பிச்சைச் சோற்றைத் தின்று வாழ்தல் மிகக் கேவலமாம். பெருவீரம் உடையவனாய் இருந்தும் அவ்வாறு இருத்தல் அதனினும் மிகக் கேவலம். 113*

***2215. ‘ஏற்றவற்கு, ஒரு பொருள் உள்ளது, இன்று என்று***
***மாற்றலன், உதவலன், வரம்பு இல் பல் பகல்***
***ஆற்றினன் உழற்றும் ஓர் ஆதன் எய்தும் அக்***
***கூற்று உறு நரகின் ஒர்கூறு கொள்க, யான்.***

***‘யான்-; ஏற்றவற்கு*** *- தன்னிடம் வந்து யாசித்தவனுக்கு; ஒரு பொருள்- ஒரு பொருளை;* ***உள்ளது என்று உதவலன்*** *-இருக்கிறது என்று சொல்லிக் கொடுக்காமலும்;* ***இன்று என்று மாற்றலன்*** *- இல்லை என்றுசொல்லி (அவர்களைத் தம்பால் வருதலைப்) போக்காமலும்;* ***வரம்பில் பல்பகல் ஆற்றினன்உழற்றும் ஓர் ஆதன்*** *- கணக்கில்லாத பல நாள்கள் செய்து அவனை அங்கும் இங்குமாக உழல(திரிய)ச் செய்யும் ஒரு கொடிய பாவி;* ***எய்தும் அக்கூற்று உறு நரகின்*** *- அடைகின்றஅந்த யமவாதனை நிரம்பிய நரகத்தில்;* ***ஓர் கூறு கொள்க*** *- ஒரு பங்கினை நானும் பெறுவேனாக.’*

*‘ஒல்லுவது ஒல்லும் என்றலும் யார்க்கும், ஒல்லாது இல்லென மறுத்தலும் இரண்டும் ஆள்வினைமருங்கிற் கேண்மைப் பால; ஒல்லாது ஒல்லும் என்றலும் யார்க்கும், ஒல்லுவது இல்லென மறுத்தலும்வல்லே, இரப்போர் வாட்டல் அன்றியும் புரப்போர் புகழ்குறை படூஉம் வாயில்’’ (புறநா.196.) என்பதும் ‘‘இசையா ஒரு பொருள் இல் என்றல் யார்க்கும் வசை அன்று; வையத் தியற்கை; நசை அழுங்நின்று ஓடிப் பொய்த்தல்.....குற்றம் உடைத்து’’ (நாலடி. 111.) என்பதும் இங்கு ஒப்பு நோக்குக.ஆதன் - மூடன், அறிவீனன், பசுப் போன்றவன் என்றும் பொருள்கூறுலாம்.* ***114***

***2216. ‘பிணிக்கு உறு முடை உடல் பேணி, பேணலார்த்***
***துணிக் குறு வயிர வாள் தடக் கை தூக்கிப் போய்,***
***மணிக் குறு நகை இள மங்கைமார்கள் முன்,***
***தணிக்குறு பகைஞரைத் தாழ்க, என் தலை.***

*‘**பேணலார்த் துணி** - பகைவர்களைத் துண்டு படுத்துகின்ற; குறுவயிரவாள்- சிறிய வலிமையான வாளை; தடக்கை தூக்கிப்போய்- நீண்ட கைகளில் (வீரபராக்கிரமத்தோடு) தூக்கிச்சென்ற; (பின்மாட்டாமையால்) **பிணிக்கு உறு முடை உடல் பேணி** - நோய்களுக்கு இடமாக(நின்று சாவதாக) உள்ள நாற்றம் பிடித்த உடலைப் பாதுகாத்து (உயிர் வாழ விரும்பி); **மணிகுறு இள நகை மங்கைமார்கள் முன்** - முத்துமணி போன்ற இளைய புன் சிரிப்பினையுடைய மகளிர்முன்னால்; **தணிக்குறு பகைஞரை** - நம்மால் தாழச் செய்யப்பட வேண்டிய பகைவர்களை; **என் தலை தாழ்க** - என்தலை வணங்குவதாகுக.*

*போரில் இறவாமல் பாதுகாத்தாலும் இந்த உடல் நிலையற்றது; நோயால் இறந்து படக்கூடியதே, அதனைப் பாதுகாத்து மானம் கெட்டு உயிர்வாழ்வதை விட, உயிரைப்போரில்விட்டு வீரனாக இறப்பதே மேல் என்றான். தாழ்க்க. வேண்டிய பகைவர் முன் தாழ்தலே கேவலம்; அதுவும் மகளிர் முன் ஆடவன் இவ்வாறு மானக்குறைஅடைதல் மிகக் கேவலமாகும் என்பதாம்.* ***115***

***2217. ‘கரும்பு அலர் செந் நெல் அம் கழனிக் கான நாடு***
***அரும் பகை கவர்ந்து உண, ஆவி பேணினென்,***
***இரும்பு அலர் நெடுந் தளை ஈர்த்த காலொடும்,***
***விரும்பலர் முகத்து, எதிர் விழித்து நிற்க, யான்.’***

*‘**யான் -; அலர் கரும்பு செந்நெல் அம்கழனிக் கான நாடு** - விரிந்த கரும்பையும்செந்நெல்லையும் உடைய அழகிய வயல்களாற் சூழ்ந்த காடுகளை உடைய என் நாட்டினை; **அரும்பகைகவர்ந்து உண** - (வெல்லுதற்கு) அரிய பகைவன் கைப்பற்றிக்கொண்டு அநுபவிக்க; **ஆவி பேணினென்** - உயிரைக் காப்பாற்றிக் கொண்டவனாய்; இரும்பு அலர் **நெடுந்தளை** -இரும்பாற் செய்யப்பெற்ற நீண்ட விலங்கு; **ஈர்த்த காலொடும்** - இழுக்கும்கால்களோடும்; **விரும்பலர் முகத்து எதிர்** - என்னை விரும்பாத பகைவர் முன்னால்; **விழித்து நிற்க** - விழித்து நிற்பேனாக.’*

*விலங்கைப் பூட்டிக் கொண்டேனும் உயிரைக் காத்துக் கொள்ள ஆசைப்படுதல் அரசகுலுத்தோர்க்கு மிகவும் இழுக்கு. ஆதலின் இங்ஙனம் கூறினான். இதுவரை உள்ள பாடல்கள் பரதன்சொன்ன சூளுரைகளாகும். ‘‘தீயன கொடியவள் செய்த செய்கையை, நாயினேன் உணர்ந்து’’ அதற்கு உடன்பட்டு வரம்பெறுதலும், இராமன் காடேறச் செய்ததும் நடந்திருக்குமாயின் இத்தகைய தன்மைகளையான் அடைவேனாக என்று பரதன் சபதம் செய்தான் என்க - பரதன் சூளுரையை ஒரு காரணமாக்கி நல்லறங்கள் பலவற்றை ஒரு சேரக் கூறினார் கம்பர். என்று கொள்க. அரசாட்சியும், போரும்பற்றிய பந்துச் செய்திகளைப் பரதன் கூறினான்; அவன் அரசகுமாரண் ஆகலின் அத்தகையசெய்திகள் அவன் சூளுரையில் மிகுதியும் பயிலுதல் இயல்பு.*
***116***

*கோசலை பரதனைத் தழுவி அழுதல்*

***2218. தூய வாசகம் சொன்ன தோன்றலை,***
***தீய கானகம் திருவின் நீங்கி முன்***
***போயினான் வரக் கண்ட பொம்மலாள்***
***ஆய காதலால், அழுது புல்லினாள்.***

*(கோசலை), **தூய வாசகம்** - (தன் மனத்) தூய்மையை அறிவிக்கும் சூளுரைகளை; **சொன்ன தோன்றலை** - சொல்லிய பரதனை; **திருவின் நீங்கி** - அரசுச் செல்வத்தைவிட்டுவிலகி; **தீய கானகம்** - கொடிய காட்டின் கண்; **முன் போயினான்** - முன்புசென்றவனாகிய இராமன்; வரக்கண்ட - திரும்பிவரப் பார்த்தாற்போன்ற; பொம்மலாள் -மகிழ்ச்சியை உடையவளாய்; **ஆய காதலால்** - அந்த இராமனிடத்து வைத்த அத்தகையஅன்போடு; **புல்லி அழுதாள்** - தழுவிக் கொண்டு அழுதாள். குணங்களால் இராமனுக்கும் பரதனுக்கும் வேற்றுமை இல்லை என்பதை உணர்ந்தனள். ஆதலால்,போனவன் வந்ததைப் பார்த்தாற் போன்ற மகிழ்ச்சியடைந்தாழ் எனவும், அவனிடத்து வைத்தஅத்தகைய அன்போடு புல்லினாள் எனவும் கூறினார். அழுதலும் புல்லுதலும் ஒரே சமயத்தில் நிகழ்தலின் 'அழுது புல்லினாள்' என்றாராயினும் 'புல்லுதல்' முதற்கண் வெளிப்பாடாதலின்'புல்லி அழுதாள்' என மாற்றி உரைக்கப்பட்டது.* ***117***

*பரதனைத் தெளிந்து மேலும் கோசலை அழுதல்*

***2219. செம்மை நல் மனத்து அண்ணல் செய்கையும்,***
***அம்மை தீமையும், அறிதல் தேற்றினாள்;***
***கொம்மை வெம் முலை குமுறு பால் உக,***
***விம்மி விம்மி நின்று, இவை விளம்புவாள்:****

***செம்மை** - நேர்மையான; **நல் மனத்து** - நல்ல மனத்தை உடைய; **அண்ணல்** - பரதனது; **செய்கையும்** - செயலையும்; அம்மை - அவன் தாயாகிய கைகேயியின்; **தீமையும்** - தீக்குணத்தையும் (அதனால் விளைந்த தீய செயல்களையும்); **அறிதல்தேற்றினாள்** - (பரதன் சொல்லிய சூளுரையால்) அறிந்து தெளிந்த கோசலை; **கொம்மைவெம்முலை** - பருத்த சூடுடைய தனங்களில் இருந்து; **குமுறு பால்** உக - உள்ளே பொங்கும்பால் சிந்த; **விம்மி விம்மி நின்று** - அழுது அழுது; **இவை விளம்புவாள்** - இவற்றைக் கூறுலானாள்.*

*முன்னரே தேர்ந்தாள் ஆயினும் "கைகயர் கோமகள் இழைத்த கைதவம், ஐய நீ அறிந்திலை போலும்" (2197) என்று கோசலை பரதனைச் கேட்ட போது, அவன்தாய் கோசலையும் சந்தேகித்துத்தான் 'போலும்' என்றாளாகக் கருதிச் சூளுரை செய்தான். அதனால்ஐயம் நீங்கி நன்கு தெளிந்தாள் ஆயிற்று. தாய்ப் பாசம் மிக்க வழி முலைப்பால் பீறிட்டுச் சிந்துவது தாய்மைக்கு இயல்பு. பல்கால் விம்முதல் - நிகழ்ந்தவைக்காக மட்டுமன்றித், தன்வினாவால் அவன் சூளுரைக்க நேர்ந்தது பற்றியும் ஆம். 'அண்ணல் செய்கை' என்பதற்குத் 'தசரதன்செய்கை' என்பார் உளர். 'அண்ணல் செய்கை' என்பதன்பின், 'கைகேயி தீமையும்' என்று வராமல் 'அம்மை' என வருதலின் அவ் அம்மைக்கு மகனாகிய பரத அண்ணலே பொருளாகும் எனஅறிக.* ***118***

*கோசலை பரதனை வாழ்த்துதல்*

***2220. 'முன்னை நும் குல முதலுளோர்கள்தாம்,***
***நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?***

***மன்னர் மன்னவா!' என்று, வாழ்த்தினாள் -***
***உன்ன உன்ன நைந்து உருகி விம்முவாள்.***

***உன்ன உன்ன*** - *நினைக்க நினைக்க;* ***நைந்து*** - *மனம் இற்றுப் போய்;* ***உருகி*** - *கரைந்து;* ***விம்முவாள்*** - *அகின்றவளாகிய கோசலை;* ***'மன்னர் மன்னவா!*** - *இராச ராசனே!;* ***முன்னை*** - *உனக்கு முன்பாக அரசாண்ட;* ***நும் குல முதலுளோர்கள் தாம்*** - *நும்குலத்து முன்னோர்களுள்;* ***யாவர்*** - *எவர்;* ***நின்னை நிகர்க்கும் நீர்மையார்!*** - *உன்னை ஒத்த தன்மை உடையவர்கள்;'* ***என்று வாழ்த்தினாள்*** - *பாராட்டி வாழ்த்துரைத்தாள்.*

*'யாவரே' ஏகாரம் வினாப்பொருட்டு. வரத்தால் அரசு தேடிவரவும் வேண்டாம் என்றுவெறுத்தொதுக்கும் இராமனது குணம் பரதன் மாட்டும் கண்டனள் ஆதலின், பாராட்டி ''மன்னர்மன்னவா'' என்றாள்.* ***119***

*சத்துருக்கனன் கோசலையை வீழ்ந்து வணங்கலும் வசிட்டன் வருதலும்*

***2221. உன்ன நைந்து நைந்து, உருகும் அன்புகூர்***
***அன்னை தாளில் வீழ்ந்து, இளைய அண்ணலும்,***
***சொன்ன நீர்மையால் தொழுது மாழ்கினான்;***
***இன்ன வேலைவாய், முனிவன் எய்தினான்.****

***இளைய அண்ணலும்*** - *(பரதன்) தம்பியாகிய சத்துருக்கனனும்;* ***உன்ன நைந்து நைந்து உருகும் அன்புகூர் அன்னைதாளில்*** - *நினைக்க மனம் கரைந்து கரைந்து, அன்பு மிகுந்த தாயாகிய கோசலையின்திருவடிகளில்;* ***வீழ்ந்து*** - *விழுந்து;* ***சொன்ன நீர்மையால்*** - *பரதன் சொல்லியதன்மை போலவே தொழுது அழுது சொல்லி மயங்கினான்;* ***இன்ன வேலைவாய்*** - *இத்தகையசமயத்தின் கண்;* ***முனிவன்*** - *வசிட்ட முனிவன்;* ***எய்தினான்*** - *அந்த இடத்துக்குவந்து சேர்ந்தான்.*

*'சொன்ன நீர்மையால்' என்பதனால் பரதன் புலம்பிய போதே இளையவனும் புலம்பினான்என்க. இருவர்க்கும் இராமனைப் பிரிந்த துக்கமும், தந்தையை இழந்த துக்கமும்ஒன்றே.* ***120***

*பரதன் வசிட்டனை வணங்கலும் வசிட்டன் தழுவி அழுதலும்*

***2222. வந்த மாதவன் தாளில், வள்ளல் வீழ்ந்து,***
***'எந்தை யாண்டையான்? இயம்புவீர்?' எனா,***
***நொந்து மாழ்கினான்; நுவல்வது ஓர்கிலா***
***அந்த மா தவன் அழுது புல்லினான். ****

***வள்ளல்*** - *பரதன்;* ***வந்த மா தவன் தாளில் வீழ்ந்து*** - *அங்கே வந்தவசிட்ட முனிவன் திருவடிகளில் விழுந்து;* ***'எந்தை யாண்டையான்*** - *என் தந்தையாகியதசரதன், எவ்விடத்தான்?;* ***இயம்புவீர்*** - *சொல்வீராக?;'* ***எனா*** - *என்று;* ***நொந்து மாழ்கினான்*** - *மனம் கெட்டு மயங்கினான்;* ***நுவல்வது ஓர்கிலா அந்த மாதவன்*** - *சொல்வதற்கு வகையறியாத அந்த வசிட்டனும்;* ***அழுது புல்லினான்*** - *பரதனைத் தழுவி அழுதான்.*

*''எந்தை யாண்டையான்'' தசரதனைப் பற்றிய வினாவாதல் அன்றி இராமனைப் பற்றியவினாவாகவும் அமையும். ''எந்தையும்...இராமன்'' (2159) என்று பரதன் முற்கூறினனாதலின் 'இராமன்எவ்விடத்தான்' என வினாவினன் எனலும் ஆகும். அதற்கும் முனிவன் பதில் உரைக்கமாட்டுகின்றிலன்.* ***121***

கோசலை பரதனை நோக்கி இறுதிக்கடன் செய் எனல்

***2223. 'மறு இல் மைந்தனே! வள்ளல், உந்தையார்,***
***இறுதி எய்தி நாள் ஏழ் - இரண்டின;***
***சிறுவர் செய் கடன் செய்து தீர்த்தி' என்று,***
***உறுவல் மேயினாள் உரையின் மேயினாள்.***

***'மறு இல் மைந்தனே!*** *- களங்கம் இல்லாத மகனே! (பரதனே);* ***வள்ளல் உந்தையார்*** *- வண்மையுடையராகிய உன்தந்தையார்; இறுதி எய்தி - மரணம் அடைந்து;* ***நாள் ஏழ் இரண்டின*** *- பதினான்கு நாள்கள் ஆயின;* ***சிறுவர் செய்கடன்*** *- பெற்றோர்களுக்குப் புதல்வர் செய்யவேண்டிய இறுதிக்கடன்களை;* ***செய்து தீர்த்தி'*** *- செய்து முடிப்பாயாக;'* ***என்று உறுவல் மேயினாள்உரையின் மேயினாள்*** *- என்று துன்பத்தில் பொருந்தியவளாய கோசலைத தன் சொல்லால்பரதனுக்கு அனுமதி தந்தாள்*

*'நாள் ஏழ் இறந்தன' என்று பாடம் கூறி, 'ஏழ் நாள்கள் ஆயின; இன்று எட்டாவது நாள்'எனல் உண்டு, தூதுவர் செய்தி தாங்கிச் சென்று பரதனிடம் சொல்ல, அவன் மீண்டும் அயோத்திஎய்த இடைப்பயணம் ஏழு, ஏழு நாள்கள் ஆதலின் பதினான்கு எனலேநேரிதாதல் அறிக. கோசலத்துக்கும்கேகயத்துககும் ஏழு நாள் வழிப்பயனம் என்பது முன்னர்க் கூறினும். ''ஏழு நாளிடை, நளிர்புனல்கேகய நாடு நண்ணினான்'' எனவும், ''ஏழ் பகல் நீந்தி, ''கோசலம் நண்ணினான்'' எனவும் (1311,2118) வருவனவற்றைக் காண்க.* ***122***

பரதன் வசிட்ட முனிவனோடு சென்று தந்தையின் திருவுருவை நோக்கல்

***2224. அன்னை ஏவினாள், அடி இறைஞ்சினான்;***
***பொன்னின் வார் சடைப் புனிதனோடும் போய்,***
***தன்னை நல்கி, அத் தருமம் நல்கினான்***
***பன்னு தொல் அறப் படிவம் நோக்கினான்.***

***ஏவினாள்*** *- (தந்தைக்கு நீர்க்கடன் செய்யச் செல்க) என்று ஏவிய;* ***அன்னை அடி இறைஞ்சினான்*** *-தாயின் திருவடிகளை வணங்கி;* ***பொன்னின் வார்சடைப் புனிதனோடும் போய்*** *- பொன்னொத்த சிவந்த நீண்டசடையினை உடைய தூய மாமுனிவனாகிய வசிட்டனோடும் சென்று;* ***தன்னை நல்கி அத் தருமம்நல்கினான்*** *- தன்னை (தன் உயிரை) அர்ப்பணித்து அந்தத் தருமத்தைக் காப்பாற்றியதயரதனது;* ***பன்னு*** *- (பலராலும்) பல முறை பாராட்டப் பெறுகின்ற;* ***தொல் அறப்படிவம்*** *- பழமையான அறத்தின் திருவுருவத்தை;* ***நோக்கினான்*** *- பார்த்தான்.*

*செம்பொன்போலச் சிவந்திருத்தலின் 'பொன்சடை' என்றார். 'தன் உயிர் தந்து தருமம்காத்தவன்' தயரதன் என்பதனைப் பின்வரும் ''வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்தவள்ளல்'' என வரும் (4018) வாலி கூற்றானும் தெளிக. தைலக்*

*கடாரத்துள் இடப்பட்டிருந்த மேனியையெடுத்துக் கட்டிலிற் கிடந்தப் பரதன் கண்டனன் என்க.* ***123***

*பரதன் தந்தையின் திருமேனி கண்டு புலம்பல்*

***2225. மண்ணின்மேல் விழுந்து அலறி மாழ்குவான்,***
***அண்ணல், ஆழியான், அவனி காவலான்,***
***எண்ணெய் உண்ட பொன் எழில் கொள் மேனியை,***
***கண்ண நீரினால் கழுவி ஆட்டினான்.***

*(பரதன்)* ***மண்ணின் மேல் விழுந்து அலறி மாழ்குவான்*** *- பூமியின் மேலே விழுந்துபுலம்பி மயங்குபவனாகி;* ***அண்ணல்*** *- பெருமை பொருந்திய;* ***ஆழியான்*** *- ஆணைச்சக்கரத்தை உடைய;* ***அவனி காவலன்*** *- உலக வேந்தனாய தயரதனது; எண்ணெய் உண்ட -தைலத்திற் கிடந்த; பொன் எழில் கொள் மேனியை - பொன் மயமான அழகு கொண்ட திருமேனியை;* ***கண்ண நீரினால்*** *- (தன்) கண்களிலிந்து பெருக்கெடுத்து வரும் கண்ணீரினால்;* ***கழுவி*** *- தூய்மை செய்து;* ***ஆட்டினான்*** *- மூழ்கச் செய்தான்.*

*எண்ணெயில் மூழ்கிக் கிடந்த மேனி இப்போது பரதன் கண்ணீரில் மூழ்கியது என நயம்காண்க. எண்ணெயாட்டியதால் மேனி பொன்னிறம் பெற்றது என்பது வான்மீகத்திற் கண்டது.* ***124***

*தயரதன் உடலை விமானத்தில் வைத்து, யானைமேல் கொண்டு செல்லுதல்*

***2226. பற்றி, அவ்வயின் பரிவின் வாங்கினார்,***
***சுற்றும் நான்மறைத் துறை செய் கேள்வியார்;***
***கொள்ள மண்கணை குமுற, மன்னனை,***
***மற்று ஓர் பொன்னின் மா மானம் எற்றினார்.***

***நான் மறைத்துறை செய் கேள்வியார்*** *- நான்கு வேதங்களின் துறைகளிலும் பரந்து சென்ற கேள்வியறிவினை உடையவராய அந்தணர்;* ***பரிவின்*** *- (மனத்தின்கண் நிகழும்) அன்பிரக்கத்தோடு;* ***மன்னனை*** *-தயரத மன்னனது உடலை;* ***அவ்வயின்*** *- அஃதுள்ள இடத்தினின்றும்;* ***சுற்றும் பற்றிவாங்கினார்*** *- நாற்பக்கமும் இருந்து தம் கையாற் பற்றி எடுத்து;* ***கொற்ற மண்கணை குமுற*** *- வெற்றி தரும் வீரமுரசம் பேரொலி செய்ய;* ***மற்று ஓர் பொன்னின் மா மானம் ஏற்றினார்*** *- வேறொரு பொன்னாலியன்ற பெரிய விமானத்தில் எற்றினர்.*

*வேதம் எழுதாக் கிளவியாதலின் கற்றார் என்னாது கேள்வியார் என்றார். உடலை எடுத்தல், ஏற்றுதல் ஆகிய அனைத்திற்கும் மந்திரமும், தந்திரமும் உண்டாதலின் விமானம் ஏற்றுதலைஅந்தணர் மேற்றாக்கினார்.* ***125***

***2227. கரை செய் வேலைபோல், நகரி, கை எடுத்து,***
***உரை செய் பூசலிட்டு, உயிர் துளங்குற,***

**அரச வேலை சூழ்ந்து, அழுது, கைதொழ,**
**புரசை யானையில் கொண்டு போயினார்.**

***நகரி*** - *நகரத்தில் உள்ளார்;* ***கரை செய் வேலை போல்*** - *தனக்குரிய கரையைத் தானே செய்துகொள்ளும் கடலைப் போல்;* ***கையெடுத்து உரை செய் பூசலிட்டு*** - *மிகவும் கூக்குரலெடுத்துஆரவாரித்து; உயிர் - தம்முயிர் நிலைகுலையவும்;* ***அரச வேலை*** - *அரசர்களாகிய கடல்;* ***சூழ்ந்து*** - *சுற்றிவந்து;* ***அழுது கைதொழ-*** *புலம்பி வணங்கவும்;* ***புரசை யானையின்*** - *மணிகட்டப்பட்ட கயிற்றினைப் பிடரியின் கண் உடைய யானை மேல்;* ***கொண்டு போயினார்*** - *கொண்டு சென்றார்கள்.*

*விமானத்தை யானைமேற் கொண்டு சென்றார் என்க. கொண்டு சென்றார் 'கேள்வியர்' எனமேற்வாட்டின்கண் உள்ள எழுவாய் வருவித்து முடிக்க.*
***126***

*சாப்பறை முதலியன ஒலித்தல்*

***2228. சங்கு பேரியும், தழுவி சின்னமும்***
***எங்கும் எங்கும் நின்று இரங்கி ஏங்குவ,***
***மங்குல் தோய் நகர் மகளிர் ஆம் எனப்***
***பொங்கு கண் புடைத்து அழுவ போன்றவே.***

***சங்கு*** - *சங்குகளும்;* ***பேரியும்*** - *சாப்பறையும்;* ***தழுவு சின்னமும்*** - *இறப்பின் கண்ஊதப்படுகின்ற கொம்புகளும்;* ***எங்கும் எங்கும் நின்று இரங்கி ஏங்குவ*** *எல்லாப்பக்கங்களிலும் இருந்து கேட்பவர்க்குத் துன்பமுண்டாம்படி அமுதாற்போல ஒலிக்கின்றவை;* ***மங்குல்நோய் நகர்*** - *மேகங்கள் வந்து படியப் பெறுகின்ற நகரம்;* ***மகளிராம் என*** *-(தானே) பெண்களைப் போலிருந்து;* ***பொங்கு கண் புடைத்து*** - *துன்ப மிகுதியுடைய கண்களைஅடித்துக்கொண்டு;* ***அழுவ போன்*** *அழுகின்றவை போன்றன. பறை முதலியன ஒலித்தல் நகரமே கண்புடைத்து அழுதல் போலும், கண் புடைத்து அழுதல்'மகளிர்போல' என்று கூறினார். பேரி - பெருமுரசு. இங்குச் சாப்பறை ஆம்.*
***127***

*தயரதன் உடலம் சரயு நதி அடைதல்*

***2229. மாவும், யானையும், வயங்கு தேர்களும்,***
***கோவும், நான் மறைக் குழுவும், முன் செல,***
***தேவிமாரொடும் கொண்டு, தெண் திரை***
***தாவு வார் புனல் சரயு எய்தினார்.***

***மாவும்*** - *குதிரைகளும்;* ***யானையும்*** - *யானைகளும்; வயங்கு - விளங்குகின்ற;* ***தேர்களும் -; கோவும்*** - *அரசர்களும்; நான்மறைக்* ***குழுவும்*** *-நான்மறையாளர் கூட்டமும்;* ***முன்செல*** - *முன்னே செல்ல;* ***கொண்டு*** - *(தயரதனதுபிரேதத்தைக்) கொண்டுசென்று;* ***தேவிமாரொடும்*** - *(தயரதன்) மனைவிமாருடனே; தெண்திரைதாவு - தெள்ளிய அலைகள் தாவுகின்ற;* ***வார் புனல்*** - *மிக்க தண்ணீரை உடைய;* ***சரயுஎய்தினார்*** *- சரயு நதியை அடைந்தார்கள்.*

*தேவிமார் அறுபதினாயிரவர். "தேவிமாரை இவற்குரிமை செய்யும் நாளில் செந்தழலில், ஆவிநீத்திர் என இருத்தி" (1915.) என்பது காண்க.* ***128***

*தயரதனை ஈமப்பள்ளி ஏற்றி, பரதனை இறுதிக்கடன் செய்ய அழைத்தல்*

***2230. எய்தி, நூலுளோர் மொழிந்த யாவையும்***
***செய்து, தீக் கலம் திருத்தி, செல்வனை,***
***வெய்தின் ஏற்றினார்; 'வீர! நுந்தைபால்***
***பொய் இல் மாக் கடன் கழித்தி போந்து' என்றார்.***

*(நான்மறைக் கேள்வியார்)* ***எய்தி*** *- (சரயு நதியை) அடைந்து; நூல்* ***உளோர்மொழிந்த யாவையும் செய்து*** *- (ஸ்மிருதி) நூல்களை உடையோர் சொல்லிய விதிகள் எல்லாம்செய்து முடித்து;* ***தீக்கலம் திருத்தி*** *- தீச்சட்டியை ஒழுங்குபடுத்தி;* ***செல்வனை*** *- தயரதனை; வெய்தின் - விரைவாக;* ***ஏற்றினார்*** *- (ஈமப்பள்ளியில்) ஏற்றிவைத்து;(பரதனை நோக்கி)* ***'வீர!*** *- வீரனே!;* ***நுந்தைபால்*** *- உன்தந்தையிடத்து;* ***பொய்இல் மாக்கடன்*** *- (நீ செய்ய வேண்டிய ) வேதவழி பிறழாத பெருங்கடமையை;* ***போந்து கழித்தி*** *- வந்து செய்வாயாக;'* ***என்றார் -.***

*பிறப்பு, இறப்புச் சடங்குகள் பற்றிக் கூறுவன 'ஸ்மிருதி நூல்கள்' எனப்படுதலின், அவற்றைஅறிந்தவரையே இங்கு 'நூலுளோர்' என்றார் என்க.*
***129***

*கடன் செய்ய எழுந்த பரதனை வசிட்டன் தடுத்துக்கூறல்*

***2231. என்னும் வேலையில் எழுந்த வீரனை,***
***'அன்னை தீமையால் அரசன் நின்னையும்,***
***துன்னு துன்பத்தால், துறந்து போயினான்,***
***முன்னரே' என முனிவன் கூறினான்.***

***என்னும் வேலையில்*** *- என்று (அவர்கள்) கேட்டுக்கொண்ட சமயத்தில்;* ***எழுந்த வீரனை*** *- கடன் செய்ய எழுந்தபரதனை; முனிவன் - வசிட்ட முனிவன்; (தடுத்து)* ***'அரசன்*** *- தயரதன்'* ***அன்னைதீமையால்*** *- நின் அன்னை செய்த தீமையால்;* ***துன்னு துன்பத்தால்*** *- நெருங்கியதுன்பத்தால்; நின்னையும் - (மகனாகிய) நின்னையும்;* ***முன்னரே*** *- உயிரோடிருந்த அப்போதே; துறந்து - மகன் அல்லன் எனக் கைவிட்டு;* ***போயினான்*** *- இறந்தான்;'* ***என*** *- என்று (அதனால் நீ உரிமைக்கு ஆகாய் என்று);* ***கூறினான் -.***

*"மன்னே ஆவான் வரும் அப்பரதன் தனையும் மகன் என்று உன்னேன்; முனிவா அவனும் ஆகான்உரிமைக்கு" (1654) எனத் தயரதன் கூறலின் வசிட்டன் இங்குத் தடுத்தான் என்க; அது அவன்மட்டுமேஅறிந்த செய்தி.* ***130***

*பரதனின் துயர் மிகுதி*

***2232. ‘துறந்து போயினான் நந்தை; தோன்றல்! நீ***
***பிறந்து, பேர் அறம் பிழைத்தது’ என்றபோது,***
***இறந்து போயினான்; இருந்தது, ஆண்டு, அது***
***மறந்து வேறு ஒரு மைந்தன் ஆம் கொலாம்.***

*(வசிட்டன்)* ***‘தோன்றல்!*** *- பரதனே!;* ***நீ பிறந்து பேர் அறம்*** *பிழைத்தது- நீ பிறந்ததனால் பெரிதாகிய (அரசகுலத்து) அறம் தவறிவிட்டது (மூத்தவன் இருக்க இளையவனாகியநீ வரத்தால் அரசு பெற்றமையால்);* ***நுந்தை துறந்து போயினான்*** *- (அதனால்)உன்தந்தையாகிய தயரதன் உன்னை (மகனல்லன் என்று) துறந்து இறந்தான்; என்ற போது - என்று சொல்லிய போது;* ***இறந்து போயினான்*** *- (பரதன்) இறந்து போனான்;* ***ஆண்டு இருந்ததுஅது*** *- அவ்விடத்தில் (பரதன்) இருப்பதாகிய அத்தோற்றம் காண்பது;* ***மறந்து*** *- தன்தன்மை கெட்டு;* ***வேறொரு மைந்தன் ஆம் கொலாம்*** *- வேறு ஒரு மகனாக இருக்கும் போலும்.*

*வசிட்டன் சொற்கேட்ட அளவில் பரதன் இறந்து போனான்; இருக்கின்றவன் பரதன் அன்றோஎனின்? அன்று; இவன் வேறு ஒரு மகன்; அவனும் தன் தன்மை திரிந்து பரதனைப்போல உருவம்கொண்டுள்ளான் போலும் என்றவாறாயிற்று. பரதனது துயர் மிகுதி பற்றி இங்ஙனம் கூறினார். ‘கொல்’ ஐயப்பொருளில் வந்தது.*
*131 பரதன் துயரதத்தால் அழுதல்*

***2233. இடிக்கண் வாள் அரா இடைவது ஆம் எனா,***
***படிக்கண் வீழ்ந்து அகம் பதைக்கும் நெஞ்சினான்,***
***தடுக்கல் ஆகலாத் துயரம் தன்னுளே***
***துடிக்க, விம்மி நின்று அழுது சொல்லுவான்;***

*(பரதன்)* ***வாள் அரா*** *- கொடி பாம்பானது;* ***இடிக்கண்*** *- இடி இடிக்கின்றகாலத்திடத்து;* ***இடைவது ஆம் எனா*** *- அஞ்சி நடுங்கிப் பின்னடைவு அடைதல் போல என்றுசொல்லும்படி;* ***படிக்கண் வீழ்ந்து*** *- மண்ணிடத்து விழுந்து;* ***அகம் துடிக்கும்நெஞ்சினான்*** *- உள்ளே துடிக்கின்ற மனம் உடையனாய்;* ***தடுக்கல் ஆகலாத் துயரம்*** *-பிறரால் நிறுத்த வொண்ணாத துன்பம்;* ***தன்னுளே துடிக்க*** *- தன்னுள்ளேயே தன்னைப்பதைபதைக்கச் செய்ய;* ***விம்மி நின்று அழுது சொல்லுவான் -.***

*இடியொலி கேட்டவழி பாம்பு அஞ்சி உயிர்விடும். அதுபோலப் பரதனும் வசிட்டன்சொற்கேட்ட துணையான் அஞ்சி நடுங்கி மூர்ச்சித்தான் என்க. பரதன் துயரதம் பிறரால்ஆற்றுதற்கரியது.* ***132***

*பரதன் புலம்பிக் கூறுதல்*

***2234. ‘உரை செய் மன்னர் மற்று என்னில் யாவரே?***
***இரவிதன் குலத்து, எந்தை முந்தையோர்***
***பிரத பூசனைக்கு உரிய பேறு இலேன்;***
***அரசு செய்யவோ ஆவது ஆயினேன்!***

‘ ‘**இரவி தன் குலத்து** - சூரிய வம்சத்தில்; **எந்தை முந்தையோர்** - என் தந்தை, மற்றும் முன்னோர்களது; பிரத பூசனைக்கு - பிரேத வழிபாடு செய்வதற்கு; **உரிய-; பேறு இலேன்** - பாக்கியம்பெறாதவனாக உள்ளேன்; (ஆனால்) **அரசு செய்யவோ** - (அந்தத் தந்தை முன்னோர்களது) அரசினைப் பெற்று நடத்தவோ; **ஆவது ஆயினேன்** - பொருந்துவதானேன்; **உரைசெய் மன்னர்** - புகழ்பெற்ற அரசர்கள்; **என்னில்** - என்னைக்காட்டிலும்; **மற்று யாவர்** - வேறுயார் உளர்?’

*தனக்குத் தானே நொந்து கூறிக்கொண்டு, தன்னை இகழ்ந்து புலம்புகிறான். ‘இரவி தன்குலத்துஎந்தை, முந்தையோர்களில், உரைசெய் மன்னர் என்னில் மற்று யாவர்’ எனவும் கூட்டிப் பொருள்உரைக்கலாம். பிரேத பூசனை செய்யுங்கால், தந்தையொடு முன்னோர்களையும் இணைத்தே செய்யவேண்டுதலின் ‘எந்தை முந்தையோர் பிரேத பூசனை’ என்று கூட்டுவதில் தவறில்லை. ‘முன்னோர்க்குக்கடன்செய்யும் தகுதியற்ற யான் அவர்களது உரிமையைப் பெறுவது’ எவ்வாறு பொருந்தும்’ என்பது பரதன் அவலவுரையாம். ‘ஏ’ காரம் வினாப் பொருளில் வந்துள்ளது.* **133**

*2235.* ***‘பூவில் நான்முகன் புதல்வன் ஆதி ஆம்***
***தா இல் மன்னர், தம் தரும நீதியால்***
***தேவர் ஆயினார்; சிறுவன் ஆகியே,***
***ஆவ! நான் பிறந்து அவத்தன் ஆனவா?***

**‘பூவில் நான்முகன் புதல்வன்!** - (திருமாலின் திருவுந்தித்) தாமரையில் தோன்றிய பிரமதேவனது புதல்வனாகிய வசிட்டனே!; **ஆதி ஆம் தாஇல் மன்னர்** - சூரிய குலத்து முன்னோர்களாகிய குற்றமற்ற அரசர்கள்; **தம்தரும நீதியால்** - தாம் செய்த அறத்தின் முறைமையால்; தேவர் ஆயினார் - (அனைவராலும்தொழப்படுகின்ற) தேவர்களாக ஆயினார்; **நான் -; பிறந்து சிறுவன் ஆகியே** - பிறந்துசிறுவனாக இருக்கும் பொழுதே; **அவத்தன் ஆனவா!** - வீணாகப் போய்விட்டபடி என்னே!; **ஆவ** - ஐயோ!’

*நான்முகன் புதல்வன் - பிரமபுத்திரனாகிய வசிட்டன் என்று அண்மைவிளியாகக் கொள்க. “வரசரோருகன் மகன்” (184) என்பது ஒப்புநோக்குக. இனி, காசிபன் எனின் காசிபன் முனிவன் ஆதல்அன்றி அரசன் ஆதல் இல்லை; அன்றியும் அவன் பரதன் குலத்து முன்னோன் எனப்படுதற்கும்இயைபின்மை உணர்க. ‘ஆவ’ என்பது இரக்கக் குறிப்புச் சொல். “சாவ முன்னாள் தக்கன்வேள்வித் தகர் தின்று நஞ்சம் அஞ்சி, ‘ஆவ’ என்று அவிதா இடும் நம்மவர் அவரே” என்னும்திருவாசகப் பாடலையும் இங்குக் (திருவா. திருச்.4) கருதுக.* **134**

*2236.* ***‘துன்னு தாள் வளம் சுமந்த தாழையில்***
***பன்னு வான் குலைப் பதடி ஆயினேன்;***
***என்னை! என்னையே ஈன்று காத்த என்***
***அன்னையார் எனக்கு அழகு செய்தவா!’***

**துன்னு தாள் வளம் சுமந்த தாழையில்** - நெருங்கிய வளப்பமான அடிமரத்தை உடைய தென்னையின்; **பன்னு வான்குலை** - பலராலும் பாராட்டப் பெறுகின்ற இறந்த குலையில்; **பதடி ஆயினேன்** - உள்ளொன்றும் இல்லாத வெறுங்காயாக ஆனேன்; **என்னையே ஈன்று காத்த என் அன்னையார்** - என்னைச் சுமந்து பெற்றுவளர்த்த என்

*தாயார்;* ***எனக்கு அழகு செய்தவா*** *- எனக்கு நன்மை செய்தவாறு;* ***என்னையே*** *- என்ன அழகாயிருக்கிறது கண்டீர்களோ?'*

*தாழை என்பதற்குத் தென்னை என்பது நேர்பொருள் 'பதடி' என்பது மக்களுக்குப் பயன்படும்பொருள் அற்ற நெல், தேங்காய் முதலியவற்றைக் குறிக்கும் உள்ளீடு இல்லாத தேங்காயைஊமைக்காய் என்பர்.* ***135*** *வசிட்டன் சத்துருக்கனனைக் கொண்டு இறுதிக்கடன் செய்வித்தல்.*

## *2237.* **என்று கூறி நொந்து இடரின் மூழ்கும் அத்**
**துன்று தாரவற்கு இளைய தோன்றலால்,**
**அன்று நேர் கடன் அமைவது ஆக்கினான் -**
**நின்று நான்மறை நெறி செய் நீர்மையான்.**

***நான்மறை நெறி நின்று*** *- நால் வேத வழியில் தான் நிலை பெற்று நின்று;* ***செய் நீர்மையான்*** *- (அவ்வேதவழியிலே) எல்லாவற்றையும் (குறையறச்) செய்கின்ற தன்மை உடையவனாகிய வசிட்டன்;* ***என்றுகூறி -; நொந்து இடரின் மூழ்குறும்*** *- மனம் வருந்தித் துயரில் மூழ்கியுள்ள;* ***அத்துன்றுதாரவற்கு*** *- அந்த நெருங்கிய மாலை அணிந்துள்ள பரதனுக்கு;* ***இளைய தோன்றலால்*** *-பின்பிறந்த தம்பியாகிய சத்துக்கனனால்;* ***அன்று*** *- அப்பொழுது;* ***நேர்*** *-தயரதனுக்குச் செய்ய வேண்டிய;* ***கடன்*** *- இறுதிச் சடங்குகளை;* ***அமைவது ஆக்கினான்*** *- பொருந்துவதாகச் செய்து முடித்தான்.*

*'தாரவன்' - என்பது அரசகுலத்தான் என்பதால் சொல்லப்பெற்றது. இங்குத் தார்அணிந்திருந்தான் எனல் வேண்டுவதின்று; துக்கச் செயல்கள் நிகழ்கிறதாகலின்; அணிந்திருந்ததாரைக் கழற்றி எறிவதும், எறியாமையும் ஆகிய எவற்றையும் சிந்திக்காத மனநிலை பரதனதுஅப்போதயை நிலை.* ***136***

*தயரதன் தேவிமார் தீக்குளித்து நற்கதி பெறுதல்*

## *2238.* **இழையும் ஆரமும் இடையும் மின்னிட,**
**குழையும் மா மலர்க் கொம்பு அனார்கள்தாம்**
**தழை இல் முண்டகம் தழுவு கானிடை**
**முழையில் மஞ்ஞைபோல், எரியில் மூழ்கினார்.**

***குழையும்*** *- ஒல்கித் தளரும்;* ***மா மலர்க் கொம்பு அனார்கள்தாம்*** *- சிறந்த மலர் பூத்த கொம்பினை ஒத்தவர்களாகிய தேவியர்கள்;* ***இழையும் ஆரமும் இடையும்மின்னிட*** *- பொன் வடமும், முத்துவடமும், இடுப்பும் மாறிமாறி மின்னொளி செய்ய;* ***தழைஇல் முண்டகம் தழுவு காளிடை*** *- தழையற்ற (செந்)தாமரை மலர்களே நிரம்பியுள்ளகாட்டினிடத்து;* ***முழையில் மஞ்ஞை போல்*** *- மலையிடத்து வாழும் மயில் கூட்டம்மூழ்குவதுபோல;* ***எரியில் மூழ்கினார்*** *- நெருப்பில் மூழ்கி விண்ணுலகு சென்றனர்.*

*செந்தாரைக் காட்டினுள் மயில்கல் புகுவதுபோல் நெருப்பிடையே தேவி மார்மூழ்கினர்என்பதாம் தாமரை மலர் நீரிடை ஆகவும் 'கானிடை' என்றது இடம் நோக்கியன்று; தாமரைப் பூவின்நெருக்கமும் மிகுதியும் நோக்கிக் கூறப்பெற்றது. இங்ஙனம் கூறுவது "தாமரைக் காடு அனைய மேனித்தனிச் சுடரே" (திருவா. திருச். 26)*

*என்ற இடத்திலும் காண்க. புதல்வர்ப் பெறாத அறுபதினாயிரம் தேவிமார் இவ்வாறு நெருப்பில் மூழ்கி நற்கதி பெற்றனர் என்க. 'முழையில்மஞ்ஞை' வாழும் இடம் கட்டியது.* ***137***

***2239. அங்கி நீரினும் குளிர, அம்புயத்***
***திங்கள் வாள் முகம் திரு விளங்குற,***
***சங்கை தீர்ந்து, தம் கணவர் பின் செலும்***
***நங்கைமார்புகும் உலகம் நண்ணினார்.***

***அம்புயத் திங்கள் வாள்முகம் திரு விவளங்குற*** *- தாமரையும், சந்திரனும் போலும் ஒளிபடைத்த திருமுகம் மேலும் திருமகளின் மலர்ச்சி பொருந்தியதாக;* ***அங்கி நீரினும் குளிர*** *- (தம் கணவன் மேனியைத் தழுவியதாகியபாவனையால் தாம் தழுவிய) நெருப்பு நீரைக்காட்டிலும் குளிர்ந்து தோன்ற;* ***சங்கை தீர்ந்து*** *- மனத்துயர் நீங்கி;* ***தம் கணவர் பின் செலும் நங்கைமார் புகும் உலகம்*** *- தம்கணவருடன் இறந்து பின் செல்லும் கற்புடை மகளிர் எய்தும் நல்லுலகத்தை;* ***நண்ணினார்*** *-இவர்களும் அடைந்தார்கள்.*

*அங்கி குளிர்தல் கற்புடை இவர்களுக்கே; அன்றி நெருப்பின் சுடுதல் தன்மைமாறியதன்று.* ***138***

*ஈமக்கடன் முடித்த பரதன் மனை சேர்தல்*

***2240. அனைய மா தவன், அரசர் கோமகற்கு***
***இனைய தன்மையால் இயைவ செய்த பின்,***
***மனையின் எய்தினான் - மரபின் வாழ்வினை***
***வினையின் எய்தும் ஓர் பிணியின் வேலையான்.***

***அனைய மா தவன்*** *- அப்பபடிப்பட்ட பெரிய தவத்திற் சிறந்தவனாகிய வசிட்டன்;* ***அரசர் கோமகற்கு*** *-சக்கரவர்த்தியாகிய தயரதனுக்கு;* ***இனைய தன்மையால்*** *- (நான்மறை வழியில்சத்துருக்கனன் மூலமாக) இப்படி;* ***இயைவ செய்தபின்*** *- செய்ய வேண்டிய ஈமச் சடங்குகளைச்செய்து முடித்த பிறகு;* ***மரபின் வாழ்வினை*** *- அரசகுலத்துக் குரிய அரசச் செல்வத்தை;* ***வினையின் எய்தும்*** *- (தாய் செய்த ) தீய செயலால் பெற்ற (தனால் உண்டாகிய);* ***ஓர்பிணியின் வேலையான்*** *- ஒரு நோய்க் கடலில் கிடக்கின்ற பரதன்;* ***மனையின் எய்தினான்*** *- அரண்மனைக்கண் வந்து சேர்ந்தான்.*

*வசிட்டன் செய்து முடித்தபிறகு, பரதன் அரண்மனை அடைந்தான் என முடிக்க. மரபு -பரம்பரை; இங்கே அரச பரம்பரை - அதற்குரிய வாழ்வு அரசுச் செல்வம்- 'வினை' என்பது நன்மை தீமை இரண்டையும் குறிக்கும். ஆயினும், தீமையையேபெரும்பாலும் குறித்துநிற்றல் வழக்கு நோக்கி உணர்க. 'ஈன்ற தாய்வினை செய்ய அன்றோகொன்றனன் தவத்தின் மிக்கான்' என்று (7415) பின்னும் இப்பொருளில் பயின்றுள்ளது காண்க.* ***139***

*பத்து நாள்கள் சடங்குகள் நடைபெறல்*

***2241. ஐந்தும் ஐந்தும் நாள் ஊழி ஆம் என,***
***மைந்தன், வெந் துயர்க் கடலின் வைகினான்;***
***தந்தை தன்வயின் தருமம் யாவையும்,***
***முந்தை நூலுளோர் முறையின் முற்றினான்.***

***மைந்தன்*** *- பரதன்;* ***ஐந்தும் ஐந்தும் நாள்*** *- பத்து நாள்களும்; ஊழி ஆம் என - ஒரு யுகக்காலம் போலத் தோன்ற;* ***வெம் துயர்க் கடலின் வைகினான்*** *- கொடியதுன்பக் கடலில் கிடந்து; தந்தை தன்வயின் - தந்தையிடத்து;* ***தருமம் யாவையும்*** *-செய்யக் வேண்டிய இயல்புகள் (சடங்குகள்) எல்லாவற்றையும்;* ***முந்தை நூலுளோர் முறையின்*** *- முன்னோர் கூறிய ஒழுக்க நூல்களிற் கண்டுள்ள முறைப்படியே;* ***முற்றினான்*** *- செய்து முடித்தான்.*

*சத்துருக்கனனைக் கொண்டு செய்து முடித்தான் என்பது கருத்து. தலைமை பரதன் மேற்றாதலின்மைந்தன் என்றது பரதனையே குறிக்கும்; தந்தைக்குரிய கடன்களைச் சத்துருக்கனன் செய்தான்ஆயினும், பரதன் தானே தன்பொருட்டு ஆற்றவேண்டிய நீர்க்கடன் முதலியவற்றை ஆற்றினான்என்றலும் ஒன்று.* ***140***

*வசிட்டனும் மந்திரக்கிழவரும் பரதனை வந்து அடைதல்*

***2242. முற்றும் முற்றுவித்து உதவி, மும்மை நூல்***
***சுற்றம் யாவையும் தொடரத் தோன்றினான்,***
***வெற்றி மா தவன் - வினை முடித்த அக்***
***கொற்ற வேல் நெடுங் குமரற் கூறுவான்;***

***வெற்றி மா தவன்*** *- எய்தன எய்தற்பாலதாய சிறந்த பெருந்தவத்தைச் செய்து முடித்த வசிட்டன்;* ***முற்றும்*** *- தயரதனுக்குரிய சடங்குகள் முழுதும்;* ***முற்றுவித்து உதவி*** *- நிரம்புமாறு செய்துதவி; (பிறகு)* ***மும்மை நூல் சுற்றம் யாவையும் தொடர*** *- முப்புரிநூல் அணிந்த வேதியர் அனைவரும் தன்னைத் தொடர்ந்து வர;* ***தோன்றினான்*** *- பரதன் அரண்மனையில் தோன்றினான்;* ***வினை முடித்த*** *- தயரதனுக்குச் செய்யவேண்டிய இறுதிச் செயல்களைச் செய்து நிறைவேற்றிய;* ***அக் கொற்ற வேல் நெடுங் குமரன்*** *- அந்த வெற்றி பொருந்திய வேலை ஏந்திய உயர்ந்தகுமரனாகிய பரதனுக்கு;* ***கூறுவான்*** *- எடுத்துச் சொல்லலானான். முன்பாடலிற் போலவே சடங்குகளைப் பரதன் முடித்தாக இப்பாடலிலும் கூறினான். முன் பாடலிற்போலவே தலைமைபற்றிப் பரதனைக் குறித்த தாகக் கொள்க*

*வான்மீகம் பதினான்காம் நாள் வைகறையில் அரசனை நியமிப்பவர்கள் பரதனைச் சேர்ந்துசொல்லத் தொடங்கினர் என்று கூறும். 'வெற்றி மாதவன்' கௌசிக மகாராஜாவை வெற்றிகொண்டுவிசுவாமித்திரனாக்கியது குறித்தது; 'மும்மை நூல் சுற்றம்' என்றது அந்தணரைக் குறித்தது; இவர்வசிட்டனுடன் வந்தோர் என்க.*
***141***

***2243. 'மன்னர் இன்றியே வையம் வைகல்தான்***
***தொன்மை அன்று' எனத் துணியும் நெஞ்சினார்,***

***அன்ன மா நிலத்து அறிஞர் தம்மொடும்,***
***முன்னை மந்திரக் கிழவர் முந்தினார்.***

***முன்னை மந்திரக் கிழவர்*** *- தொன்மையான் ஆலோசனைக்குரிய அமைச்சர்;* ***அன்ன மாநிலத்து*** *- அந்தக் கோசலநாட்டு;* ***அறிஞர் தம்மொடும்*** *- அறிவுடைப் பெருமக்களோடு;* ***'வையம்*** *- இந்த உலகம்;* ***மன்னர் இன்றியே வைகல்தான்*** *- அரசர் இல்லாமல் இருப்பது;* ***தொன்மை அன்று'*** *-பழமையான (மரபு) நிலை அல்ல;* ***எனத் துணியும் நெஞ்சினார்*** *- என்று உறுதி செய்த மனம்உடையராய்;* ***முந்தினார்*** *- முற்பட்டு வந்து (பரதனைக்) கூடினர்.*

*மதி அமைச்சர் அறிஞர்களுடன் பரதனை வந்தடைந்தனர் என்பதும். முன் பாட்டில் வசிட்டன்வருதல் கூறப்பெற்றதாதலின் ஏனையோர் வருகை இப்பாடலில் வந்தது.*

*'அரசனில்லாமல் நாடு இருத்தல் மரபன்று' அது பல தீங்குகள் ஏற்பட வழியாகும் என்றுகருதிக் கூடினர் என்பதாம்.*

*வான்மீகம் இவ்விடத்தில் அரசன் இல்லாமையால் நாட்டுக்கு ஏற்படும் தீங்குகளை ஒருசருக்கத்தால் விரிவாகக் கூறியுள்ளது.* ***142***

## ஆறு செல் படலம்

*இராமன் காட்டிற்குப் பயணப்பட்டுச் சென்ற வழியில் பரதனும் அவனைச் சார்ந்தவர்களும்செல்வதைச் சொல்கிற படலம் என்பது ஆறு செல் படலம் என்பதன் பொருளாகும். ஆறு - வழி.*

*வசிட்டன் பரதன் மருங்குள்ளான் என்றறிந்த மந்திரத் தலைவர்கள் அங்கு வந்துசேர்கிறார்கள். மூத்த அமைச்சனாகிய சுமந்திரன் குறிப்பை உணர்ந்த வசிட்டர் பரதனைநோக்கி 'அரசு ஏற்று உலகைக் காப்பாற்றக்' கோருகிறார். பரதன் அது கேட்டு உளம் நடுங்கிமனம் வெதும்பி 'இந்நாட்டுக்கு இனி இராமனே அரசன்; அவனைக் கொண்டுவந்து முடிசூட்டிக் காண்பதேமுறை; அது இயலாவிடின் அவனோடு காட்டில் தவம் செய்வேன்; வேறு கூறின் உயிரை விடுவேன்'என்கிறான். அது கேட்ட அரசவையோர் மகிழ்ச்சி அடைந்து பரதனைப் பாராட்டுகிறார்கள். இராமனை அழைத்துவரச் சத்துருக்கனன் மூலம் முரசு அறைவிக்கிறான் பரதன், முரசொலி கேட்டு மக்கள்மகிழ்ச்சியுடன் புறப்படுகிறான். இடையில் உடன்வந்த கூனியைச் சத்துருக்கனன் பற்றிக்கொல்ல முயல, பரதன் தடுக்கிறான். பரத சத்துருக்கனர்களும் உடன் வந்தோரும் இராமன் முன்பு தங்கிய சோலையில் (1846) தங்குகிறார்கள். இரவு தங்கிப் பின்னர் ஊர்திகளில் செல்லாமல்இராமன் நடந்து சென்ற வழியில் சேனைகள் தொடரப் பரதன் நடந்து செல்கிறான் என்னும்செய்திகள் இங்குக் கூறப்படுகின்றன.*

*மந்திரக் கிழவர் முதலியோர் அரசவை அடைதல்*

*கலிவிருத்தம்*

***2244. வரன்முறை தெரிந்து உணர் மறையின் மா தவத்து***
***அரு மறை முனிவனும், ஆண்டையான், என,***
***விரைவின் வந்து ஈண்டினர்; விரகின் எய்தினர்;***
***பரதனை வணங்கினர்; பரியும் நெஞ்சினர்.***

***வரன்முறை தெரிந்து உணர்*** *- அரச குலத்தின் மரபு முறைகளை ஆராய்ந்து உணர்ந்த;* ***மறையின் மாதவத்து*** *- வேதவழியில் செய்யப்படும் தவங்களைச் செய்துள்ள;* ***அருமறை முனிவனும்*** *- வேதத்திற்சிறந்தவசிட்ட முனிவனும்;* ***ஆண்டையான் என*** *- (பரதன் உள்ள) அவ்விடத்தில் இருக்கின்றான் என்றறிந்து;* ***விரகின் எய்தினர்*** *- (மந்திரக் கிழவர்கள்) ஆலோசனைக்குரிய சூழ்ச்சியோடு;* ***விரைவின் வந்து*** *- விரைந்துஅரசவைக்கு வந்து;* ***ஈண்டினர்*** *- நெருங்கி;* ***பரியும் நெஞ்சினர் பரதனை வணங்கினர்*** *- அன்பினால் இரங்கும் மனம் உடையவராய்ப் பரதனை வணங்கினார்கள்.*

*மேற் படலத்து இறுதிச் செய்யுளில் (2243.) 'மந்திரக்கிழவர்' என்பதனை இங்குத் தொடர்க. 'விரகு' என்பது இங்கு ஆலோசனை. இனி, நடக்கவேண்டியசெய்திபற்றிய ஆலோசிப்போடு வந்தார்கள் என அறிக. 'பரிதல்' துன்பச் சூழலில் பரதன் அரசுஏற்க நேர்ந்துள்ள இக்கட்டான நிலையால் மனம் கசிந்து இரங்கலாம். மந்திரக் கிழவர்பரதனினும் மூத்தோர் ஆயினும் இப்போது பரதன் சக்கரவர்த்தி ஆதலின் 'வணங்கினர்' என்க. 'அருமறை முனிவன்' என்பதனுள் 'அருமறை' பெயரடை ஆதலின் கூறியது கூறல் ஆகாமை உணர்க.*

***2245. மந்திரக் கிழவரும், நகர மாந்தரும்,***
***தந்திரத் தலைவரும், தரணி பாலரும்,***
***அந்தர முனிவரோடு அறிஞர் யாவரும்,***
***சந்தரக் குரிசிலை மரபின் சுற்றினார்.***

***அந்தர முனிவரோடு*** *- ஆகாய வழியில் இயங்கவல்ல முனிவர்களோடு;* ***மந்திரக் கிழவரும்*** *- மந்திராலோசனைக்குஉரிமை உடைய அமைச்சர்களும்;* ***நகர மாந்தரும்*** *- நகரத்தில் உள்ள மக்களின் பிரதிநிதிகளாய் உள்ளவர்களும்;* ***தந்திரத் தலைவரும்*** *- சேனைத் தலைவர்களும்; தரணிபாலரும் - அரசர்களும்;* ***அறிஞர் யாவரும்*** *- அவ்வத் துறையில் முறைபோகிய வல்லார்களும்ஆகிய அனைவரும்;* ***சுந்தரக் குரிசிலை*** *- அழகிற் சிறந்த பரதனை;* ***மரபின்*** *-அவரவர்க் குள்ள வரிசை முறையின்படி;* ***சுற்றினார்*** *- (நெருங்கிச்) சூழ்ந்து கொண்டார்கள்.*

*'அறிஞர் யாவரும்' என்பதனை "அன்ன மாநிலத் தறிஞர் தம்மொடும்' (2243) என்பதனுடன்ஒப்புநோக்குக. அமைச்சர், புரோகிதர், சேனைத் தலைவர், தூதுவர், சாரணர் என்னும் ஐம்பெருங்குழுவின் உள்ளாரை இங்கு மந்திரக் கிழவர், தந்திரத் தலைவர் என்று குறிப்பிட்டார் என்க. புரோகிதர் - வசிட்டன் முதலிய ஆசாரியர். தூதுவர், சாரணர் என்பார் அமைச்சருள் அடங்குவர்.எண்பேராயத்துள்ளும் ஒருசிலர் மந்திராலோசனைக் குரியர். "கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச்சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், நளிபடைத்தலைவர், யானைவீரர், இவுளி மறவர்இனையர் எண் பேராயம் என்ப' என்னும் அரசச் சுற்றத்தினருள் நகர மாந்தர் என்பார் காண்க. இதனைச் சிலம்பு 'ஐம்பெருங் குழுவும் எண்பேராயமொடு........ அரசுவிளங்கு அவையம் முறையின்புகுதர" (சிலப். வஞ்சிக். 26.38 - 47) எனக் கூறுமாறு காண்க. மந்திராலோசனைச் சபையில் அவரவர் தகுதிக்கும் பதவிக்கும் ஏற்ப அமர்தற்குரிய இடங்கள் முறைப்படி வரையறுக்கப்படும்.ஆதலின், 'மரபின்' என்று ஒரு சொல் அமைத்தார். மன்னராட்சியாயினும் மக்கள் ஆட்சிஎன்னும்படி அக்கால அரசு முறைகள் நடந்தன. ஆதலின், 'நகர மாந்தர்களும்' ஆலோசனைச் சபையில் இடம்பெற்றனர் எனக் கருதலாம். 2 சுமந்திரன் குறிப்பாக முனிவனை நோக்குதல்*

***2246. சுற்றினர் இருந்துழி, சுமந்திரப் பெயர்ப்***
***பொன் தடந் தேர் வலான், புலமை உள்ளத்தான்,***
***கொற்றவர்க்கு உறு பொருள் குறித்த கொள்கையான்,***
***முற்று உணர் முனிவனை முகத்து நோக்கினான்.***

***சுற்றினர் இருந்துழி*** *- (வசிட்ட முனிவனும், மந்திரக் கிழவரும், அறிஞரும்) சூழ இருந்தபோது;* ***கொற்றவர்க்குஉறுபொருள்*** *அரசர்க்குரிய சிறந்த பொருள்களை;* ***குறித்த கொள்கையான்*** *- நன்குஉணர்ந்து நிறைவேற்றம் கொள்கைப் பிடிப்பு உடைய;* ***புலமை உள்ளத்தான்*** *- அறிவால்நிறைந்த மனம் உடைய;* ***சுமந்திரப் பெயர்ப் பொன் தடந் தேர்வலான்*** *- பொன்னால்இயன்ற பெரிய தேரைச் செலுத்துதலின் திறன் வாய்ந்த சுமந்திரன் என்னும் பெயருடைய (அமைச்சர்தலை)வன்;* ***முற்று உணர் முனிவனை*** *- எல்லாம் முழுதுணர்ந்த வசிட்ட முனிவனை;* ***முகத்து நோக்கினான்*** *- (தன் மனக்கருத்தை வாயால் உரைக்க வேண்டாது அது தோன்றும்படி) நேரேபார்த்தான்.*

*பரதனை அரசு ஏற்கச்செய்யும் தன் கருத்தைக் குறிப்பால் பார்வையால் அறிவித்தான்சுமந்திரனாதல் மேல் பெறப்படும். இவன் அமைச்சர்களுள் தலைவன். முன்னர்த் தயரதன் இராமனைஅரசு ஏற்க அழைத்ததும் (1360) இவன் மூலமே. முடிசூட்டு விழாவிற்கு இராமனை அழைத்ததும்,கைகேயியின் அழைப்பை இராமனுக்கு அறிவித்ததும் (1572-1575). இராமன் காடு செல்லுங்கால்தேர் ஓட்டிச் சென்றதும் இவனாதலும் (1856 -1885) நகர் நீங்கு படலத்துள் வருதலின் இவன் தேர்ஓட்டுதலின் வல்லவன் ஆதல் அறிக; 'தேர்வலான்' என்பது (1858) முன்னும் வந்தது. 'மந்திரிசுமந்திரனை' (1856) என்பதனால் இவன் அமைச்சனாதலும் அறியப்படும். இவன் தயரதனுக்குத் தேர்ஓட்டியாக இருந்தான் என்பது (1898). முன் கூறப்பெற்றுள்ளது. பண்டைய அரசர்கள்மதியமைச்சர்களுள் தமக்கு மிகவும் அணுக்கமானவர்களைத் தேர் ஒட்டுநர்களாகக் கொள்வர்.'தேர்வலான்' என்பது தேர்தலில் வல்லான் - ஆராய்ந்து உறுதிகூற வல்லவன் எனவும் பொருள்பெற்று அமைச்சர்க்கும் பெயராதல் அறிக.* ***3***

*சுமந்திரன் குறிப்பை முனிவன் உணர்தல்*

***2247. நோக்கினால் சுமந்திரன் நுவலலுற்றதை,***
***வாக்கினால் அன்றியே உண்ர்ந்த மா தவன்,***
***'காக்குதி உலகம்; நின் கடன் அது ஆம்' எனக்***
***கோக் குமரனுக்கு அது தெரியக் கூறுவான்;***

***சுமந்திரன் -; நோக்கினால்*** *- மனத்தொடு பட்ட பார்வைக் குறிப்பினால்;* **நுவலலுற்றதை** *- சொல்லியதை;* **வாக்கினால் அன்றியே** *- (அவன்) வாயினாற்சொல்லாமலே;* **உணர்ந்த** *- தெரிந்துகொண்ட;* **மா தவன்** *- பெருந்தவம் செய்த வசிட்டமுனிவன்;* **'உலகம் காக்குதி** *- இந்த அரசாட்சியைப்பாதுகாப்பாய்;* **இது** *- இத்தரணி தாங்குதல்;* **நின் கடன் ஆம்** *- நீ (எற்றுச்)செய்யவேண்டிய கடமையாகும்; என -;* **கோக் குமரனுக்கு** *- அரச குமாரனாகிய பரதனுக்கு;* **அது** *- அரசின் சிறப்பும் இன்றியமையாமையும;* **தெரிய** *- விளங்கும்படி;* **கூறுவான்** *- எடுத்துரைக்கலானான்.*

*'நோக்கு' என்பது வெறும் பார்வையன்று; 'மனத்தால் நோக்குத' லாகும். இதனை 'இரண்டன்மருங்கின் நோக்கல் நோக்கம்' என்னும் தொல்காப்பியச் சூத்திரத்துக்குச் சேனாவரையர்எழுதிய உரையான் உணர்க். (தொல். சொல். வேற். மயங்.) மந்திராலோசனையில் முதற்கண்அமைச்சர் தொடங்கலே முறை என்பது இதனால் அறியப்பெறும்.* ***4***

*வசிட்ட முனிவன் பரதனுக்கு அரசின் சிறப்பை உரைத்தல்*

***2248. 'வேதியர், அருந் தவர், விருத்தர், வேந்தர்கள்***
***ஆதியர் நின்வயின் அடைந்த காரியம்,***
***நீதியும் தருமமும் நிறுவ; நீ இது,***
***கோது அறு குணத்தினாய்! மனத்துக் கோடியால்***

**'கோதறு குணத்தினாய்!** *- குற்றமற்ற குணத்தை உடைய (பரதனே) வனே!;* **வேதியர்** *- அந்தனர்;* **அருந்தவர்** *- அரியதவம் செய்த முனிவர்;* **விருத்தர்** *- (அநுபவத்தால்) முதிர்ந்த*

*பெரியோர்;* ***வேந்தர்கள்*** *- அரசர்கள்;* ***ஆதியர்*** *- முதலானோர்;* ***நின்வயின்*** *-உன்னிடத்து;* ***அடைந்த காரியம்*** *- வந்து சேர்ந்த செயல்;* ***நீதியும்*** *-(மக்களுக்கு நன்மை செய்ய உள்ள) அரச நீதியையும்;* ***தருமமும்*** *- (அவரவர் செயலை அவரவர்செய்தற்குத் தடையிலாத) அரச தர்மத்தையும்; நிறுவ - (அரசன் இல்லாமையால் சிதையாவண்ணம்) நிலை நிறுத்தவே;* ***நீ-;*** ***இது*** *- இச்செயலை;* ***மனத்துக் கோடி*** *- மனத்தின் கண்நினைத்துக் கொள்வாயாக.'*

*அரச நீதியாவது எளியரை வலியர் வாட்டாது பாதுகாத்தலாகும். ''மாநிலங்காவலனாவான்மன்னுயிர் காக்கும் காலைத்; தான் அதனுக்கு இடையூறு தன்னால் தன் பரிசனத்தால்; ஊனமிகுபகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால், ஆனபயம் ஐந்தும் தீர்த்து அறங்காப்பான்அல்லனோ?'' என்னும் (பெரிய. திருந. 36) பெரிய புராணச் செய்யுளான் அறிக. அரச தருமம் -குறைவேண்டுவார்க்கு அது நிரப்புதலாம். முறை வேண்டுநர்க்கும், குறை வேண்டுநர்க்கும் அரசன்காட்சிக்கெளியனாய் அது தீர்த்தலையே (குறள் 386. பரி. உரை) நீதியும் தருமமும் எனஇரண்டாகக் கம்பர் வசிட்டன் வாக்கால் கூறினார்.* ***5***

## *2249. 'தருமம் என்று ஒரு பொருள் தந்து நாட்டுதல்*
## *அருமை என்பது பெரிது அறிதி ஐய! நீ*
## *இருமையும் தருவதற்கு இயைவது; ஈண்டு, இது,*
## *தெருள் மனத்தார் செய்யும் செயல் இது ஆகுமால்.*

***'ஐய! நீ-; தருமம் என்று ஒரு பொருள்*** *- அறம் என்று சொல்லப் படுகின்ற ஒப்பற்ற ஒரு பொருளை;* ***தந்து*** *- உலகிற்குத் தந்து (மக்கள் அனைவரையும் மேற்கொள்ளுமாறு செய்து); நாட்டுதல்-நிலைநிறுத்துதல்;* ***அருமை என்பது*** *- மிகவும் அருமையான செயல் என்பதனை;* ***பெரிது அறிதி*** *- நன்கு அறிவாய்; ஈண்டு - இவ்விடத்தில்; இது - இவ்வறம்;* ***இருமையும்*** *-இம்மை, மறுமை ஆகிய இரண்டையும்;* ***தருவதற்கு -;*** ***இயைவது -*** *பொருந்தியதாகும்; இது -இவ்வறம்;* ***தெருள்மனத்தார்*** *- தெளிவுபெற்ற மனம் உடைய மேலோர்;* ***செயும் செயல்ஆகும்*** *- செய்யும் செயலாகும்.*

*அறத்தின் சிறப்பும்; அது மேலோர்களால் மேற்கொள்ளப்பெற்றது என்பதும் கூறியதாகும்.''இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார், பெருமை பிறங்கிற்று உலகு'' (குறள். 23) என்பதனைஒப்பு நோக்குக. 'ஆல்' அசை.*
***6***

## *2250. 'வள் உறு வயிர வாள் அரசு இல் வையகம்,*
## *நள் உறு கதிர் இலாப் பகலும், நாளொடும்*
## *தெள்ளுறு மதி இலா இரவும், தேர்தரின்,*
## *உள் உறை உயிர் இலா உடலும், ஒக்குமே.*

***'தேர்தரின்*** *- ஆராயும்பொழுது;* ***வள்உறு வயிரவாள் அரசு*** *- வளமை பொருந்திய வன்மையான வாளையுடையஅரசனை; இல்வையகம் - பெறாத உலகம்;* ***நள் உறு கதிர் இலாப் பகலும்*** *- (எல்லோராலும்) விரும்பப்படுகின்ற சூரியன் இல்லாத பகலையும்;* ***நாளொடும்*** *- விண்மீன்களோடும்;* ***தெள்ளுறு மதி இலா இரவும்*** *- தெளிந்த*

*வெண்மையான சந்திரன் இல்லாத இரவையும்;* ***உள்உறைஉயிர் இலா உடலும்*** *- உள்ளே பொருந்திய உயிர் இல்லாத உடலையும்;* ***ஒக்கும்*** *- போலும்.'*

*வன் - கூர்மை என்றுமாம். சூரியன் அழிக்கும் ஆற்றல், சந்திரன் தண்மையால் காக்கும்ஆற்றல், உயிர் உடலை இயக்கும் ஆற்றல், உயிர் உடலை இயக்கும் ஆற்றல் இம்மூன்றையும் அரசன்உடையனாதலின் அவற்றை இவ்வுவமைகளால் விளக்கினார். பகைவரை அழித்து, நல்லோரைக் காத்து,மக்களை இயங்கச்செய்ய மன்னவன் தேவை. தெறலும், தண்ணளியும் உடையனாய் உல்கை நல்வழியில்இயங்கச் செய்பவன் மன்னன் என்பது இதனால் உணரப்பெறும். மன்னர், மக்கள் - உயிர், உடல்- இக்கருத்தை 177, 1423 ஆம் பாடல்களோடு ஒப்பிடுக. 7*

### *2251. 'தேவர்தம் உலகினும், தீமை செய்து உழல்*
### *மா வலி அவுணர்கள் வைகும் நாட்டினும்,*
### *ஏவெவை உலகம் என்று இசைக்கும் அன்னவை*
### *காவல் செய் தலைவரை இன்மை கண்டிலம்.*

**'தேவர்தம் உலகினும்** *- தேவலோகத்திலும்;* **தீமை செய்து உழல்** *- பிறர்க்குத் தீமையே செய்து திரிகின்ற;* ***மா வலி அவுணர்கள் வைகும் நாட்டினும்*** *- பெருவலி படைத்த அசுரர்கள் தங்கியுள்ள நாடுகளிலும்;* ***ஏ எவை உலகம் என்று இசைக்கும்அன்னவை*** *- எவை எவைகள் உலகம் என்று பெயர்பெறுமோ அவைகள் எல்லாம்; காவல்* ***செய் தலைவரை இன்மை*** *- தம்மைக் காக்கின்ற அரசர்கள் இல்லாமல் இருத்தலை;* ***கண்டிலம்*** *- (யாம்) பார்த்திலோம்.'*

*நல்லோராயினும், அல்லோராயினும் நாட்டிற்கு ஆள்வோர் இன்றியமையாதவர் என்பது இதனாற்கூறியதாம். உலகம் என்றாலே அரசன் வேண்டும் என்றார்.*
***8***

### *2252. 'முறை தெரிந்து ஒரு வகை முடிய நோக்குறின்,*
### *மறையவன் வகுத்தன, மண்ணில், வானிடை,*
### *நிறை பெருந் தன்மையின் நிற்ப, செல்வன,*
### *இறைவரை இல்லன யாவும் காண்கிலம்,*

***'முறை தெரிந்து*** *- முறைமையை நன்கு ஆராய்ந்து; ஒருவகை* ***முடிய நோக்குறின்*** *- ஒருபடித்தாக இறுதிவரை பார்த்தால்; மறையவன் வகுத்தன - பிரமனால் படைக்கப்பட்டனவாகிய;மண்ணில் வானிடை - நிலத்திலும், விண்ணிலும்;* ***நிறை பெருந்தன்மையின்*** *- நிறைந்துவிளங்கும் பேரியல்போடு; நிற்ப -நிலைத்து நிற்பன; செல்வன - இயங்குவன (வாகிய பொருள்களில்);* ***இறைவரை இல்லன*** *- தலைவரைப் பெற்றிராத பொருள்கள்; யாவும் எவையும்;* ***காண்கிலம்*** *- காண்கின்றிலோம். (யாம்)'*

*உலகிற்கு - மன்னர் இன்றியமையாமை மேல் கூறியது. இங்குச் சரம், அசுரம் ஆகிய இயங்கும்,இயங்காப் பொருள்களுக்கும் தலைவர் இன்றியமையாமை உணர்த்தப்பெற்றது. 'நிற்ப' என்பன மலை,மரம் முதலியன. 'செல்வ' என்பன மக்கள், விலங்கு, பறவை முதலிய உயிர்களாம். அவற்றிடையேகூடஒரு தலைமை என்பது உண்டு என்பது அறியப்படும்.* ***9***

*2253.* ***'பூத்த, நாள்மலர் அயன் முதல புண்ணியர்***
***ஏத்து, வான் புகழினர், இன்றுகாறும் கூக்***
***காத்தனர்; பின், ஒரு களைகண் இன்மையால்,***
***நீத்த நீர் உடை கல நீரது ஆகுமால்.***

***'பூத்த*** *- (திருமாலின் திருஉந்தியில்) உண்டான;* ***நாள்மலர்*** *- அன்றலர்ந்தாற் போன்ற தாமரை மலரில் தோன்றிய;* ***அயன் முதல புண்ணியர்*** *- பிரமதேவன்முதலிய மேலோர்களால்;* ***ஏத்து*** *- பாராட்டப் பெறுகின்ற;* ***வான் புகழினர்*** *-சிறந்த புகழைப் பெற்ற (உன்) முன்னோர்கள்;* ***இன்றுகாறும்*** *- இன்று வரையிலும்; கூ -(இந்தப் ) பூமியை;* ***காத்தனர்*** *- (அரசு நடத்திக்) காத்தார்கள்;* ***பின்*** *-இப்போது;* ***ஒரு களைகண் இன்மையால்*** *- (நீ அரசன் ஆகாதபடியால்) தமக்கொரு துன்பம் நீக்கிப் பாதுகாப்பாரை இல்லாமையால்; (இவ்வுலகம்)* ***நீத்த நீர்*** *- கடலின்கண்;* ***உடைகல நீரது*** *- உடைந்த கப்பல் தத்தளிப்பது போன்றது;* ***ஆகும் -.'***

*'நீத்த'ம் என்பது வெள்ளம் ஆதலின், நீர் நீத்தம் எனவே 'கடல்' என்று பொருள்ஆயிற்று. கடலின்கண் உடைந்த கப்பல் தவிப்பதைப்போல அரசன் இல்லாத நாடு அலமரும் என்றதாம். 'ஆல்' அசை.* ***10***

*2254.* ***'உந்தையோ இறந்தனன்; உம்முன் நீத்தனன்;***
***வந்ததும், அன்னைதன் வரத்தில்; மைந்த! நீ***
***அந்தம் இல் பேர் அரசு அளித்தி; அன்னது***
***சிந்தனை எமக்கு' எனத் தெரிந்து கூறினான்.***

***'மைந்த!*** *- பரதனே!;* ***உந்தையோ இறந்தனன்*** *- உன் தந்தையாகிய தயரதனோஇறந்துபட்டான்;* ***உம் முன்*** *- உன் தமயனாகிய இராமனோ (தந்தை சொற்கேட்டு);* ***நீத்தனன்*** *- (அரசைக்) கைவிட்டுக் கானகம் புகுந்தான்;* ***வந்ததும்*** *- (இந்த அரசுஉனக்குக்) கிடைத்திருப்பதும்;* ***அன்னை தன் வரத்தில்*** *- உன் தாயாகிய கைகேயியின்வரத்தால் ஆகும்;* ***நீ அந்தம் இல் பேரரசு அளித்தி*** *- நீ அழிவற்றதாகிய இந்தக்கோசலத் தரசை ஏற்று நடத்துக;* ***அன்னது*** *- (அவ்வாறு) நீ அரசு ஏற்பது;* ***எமக்குச் சிந்தனை*** *- எங்களுக்கு எண்ணம்;' என - என்று;* ***தெரிந்து கூறினான்*** *- ஆராய்ந்து சொன்னான்.*

*மரபு வழித் தொன்றுதொட்டு வந்த அரசு என்பான், 'அந்தம் இல் பேரரசு' என்றான் எனினும்அமையும்.* ***11***

*வசிட்டன் சொற் கேட்ட பரதன் அவல நிலை அடைதல்*

*2255.* ***'தஞ்சம் இவ் உலகம், நீ தாங்குவாய்' எனச்***
***செஞ்சேவே முனிவரன் செப்பக் கேட்டலும்,***
***'நஞ்சினை நுகர்' என, நடுங்குவாரினும்***
***அஞ்சினன் அயர்ந்தனன் - அருவிக் கண்ணினான்.***

***'இவ் உலகம்*** *- இந்த உலகம்;* ***தஞ்சம்*** *- (உனக்கு) அடைக்கலம்;* ***நீ தாங்குவாய்*** *- நீ (அரசனாக இருந்து) பாதுகாப்பாய்;* ***என*** *- என்று; முனிவரன் -முனிவர்களில் மேலான*

*வசிட்டன்;* ***செஞ்செவே*** *- செம்மையாக;* ***செப்பக் கேட்டலும்*** *- சொல்லக் கேட்டவளவில்;* ***அருவிக் கண்ணினான்*** *- அருவிபோலக் கண்ணின் நீர் ஒழுகும்பரதன்;* ***'நஞ்சினை நுகர்' என*** *- விடத்தை உண்பாயாக என்று ஒருவர் சொல்ல; (அதுகேட்டு)* ***நடுங்குவாரினும்*** *- நடுங்குகின்றவர்களைவிட;* ***அஞ்சினன் அயர்ந்தனன்த*** *- பயந்து சோர்ந்தான். 'மகனே! உனை, மாநிலம் தஞ்சமாக நீ தாங்கு' என்ற வாசகம் (1614.) என்ற கோசலை கூற்றுஇங்கு முதலடியோடு ஒப்பு நோக்கத்தக்கது. அயோத்திக்கு வந்தது முதல் அமுத வண்ணமாக இருக்கின்றபரதனுக்கு 'அருவிக் கண்ணினான்' என்பது ஒரு பெயராகக் கொள்க.* ***12***

## *2256. நடுங்கினன்; நாத் தடுமாறி, நாட்டமும்*
## *இடுங்கினன்; மகளிரின் இரங்கும் நெஞ்சினன்;*
## *ஒடுங்கிய உயிரினன்; உணர்வு கைதர,*
## *தொடங்கினன், அரசவைக்கு உள்ளம் சொல்லுவான்;*

*(பரதன்),* ***நடுங்கினன்*** *- (முனிவன் சொன்னதைக் கேட்டு) நடுங்கி;* ***நாத்தடுமாறி*** *- (பேசுதற்கியலாமல்) நாக் குழறி;* ***நாட்டமும் இடுங்கினன்*** *- கண்கள்(குழிவிழுந்து ) உள்செல்லப் பெற்று; மகளிரின் - பெண்களைப் போல;* ***இரங்கும் நெஞ்சினன்*** *- நெஞ்சினாற் புலம்பிக் கொண்டு; ஒடுங்கிய உயிரினன்- மூச்சு ஒடுங்கப்பெற்று(மூர்ச்சித்து);* ***உணர்வு கைதர*** *- (பின்னர்) மூச்சு எழும்பி உணர்வு வரப்பெற; அரசவைக்கு- அரசவையில் உள்ளவர்க்கு; உள்ளம் - தன் மனக்கருத்தை;* ***சொல்லுவான் தொடங்கினன்*** *- சொல்லத் தொடங்கினான்.*

*துக்கம் வந்தவுடன் அறிவழிந்து புலம்பல் மகளிர் இயல்பு - "பெட்டைப் புலம்பல்பிறர்க்குத் துணையாமோ' (பாஞ்சாலி சபதம் 62. 22.) என்ற பாரதி பாடல் காண்க.* ***13***

*பரதன் தன் மனக் கருத்தை அரசவைக்கு எடுத்துச் சொல்லுதல்*

## *2257. 'மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வன் ஆய், முதல்*
## *தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்,*
## *சான்றவர் உரைசெயத் தருமம் ஆதலால்,*
## *ஈன்றவன் செய்கையில் இழுக்கு உண்டாகுமோ?*

***'மூன்று உலகினுக்கும்*** *- மேல், நடு, கீழ் என்னும் மூன்று இடங்களில் உள்ள மூன்று உலகங்களுக்கும்;* ***ஓர் முதல்வன்ஆய்*** *- ஒப்பற்ற முதற்பொருளாகி;* ***முதல் தோன்றினன் இருக்க*** *- (எனக்கு) முன்னே பிறந்தவனாகிய இராமன் இருக்கின்ற போதே;* ***யான் மகுடம் சூடுதல்*** *- யான் அரசனாக அரசுகட்டில் ஏறி மணிமகுடத்தைச் சூடிக்கொள்ளுதல்;* ***சான்றவர் உரைசெய*** *- பெரியோர்கள்தக்கதே என்ற தம் வாயால் எடுத்துரைக்க;* ***தருமம் ஆதலால்*** *- அறம் என்று கருதப்படுகின்றது ஆதலாம்;* ***ஈன்றவள் செய்கையில்*** *- (இதே செயலைச் செய்த) என்னைப் பெற்றதாயாகிய கைகேயியின் செயற்பாட்டில்;* ***இழுக்கு உண்டாகுமோ*** *- தவறு உளதாகுமா?'*

*'மூத்தவன் இருக்க இளையவனாகிய நான் அரசு புரிவது தருமம் என்று வசிட்டரே கூறினால்கூறினால் என்தாய் கூறியதில் என்ன தவறு? என்கிறான் பரதன்.*

*பெரியோர்கள் வார்த்தையும் தர்மவிரோதமாக இருக்கின்றதே என் திறத்தில் என்றுபுலம்பினானாம். 'ஓ' காரம் வினாப்பொருட்டு.* ***14***

## *2258. 'அடைவு அருங் கொடுமை என் அன்னை செய்கையை, நடைவரும் தன்மை நீர், "நன்று இது" என்றிரேல், இடை வரும் காலம் ஈண்டு இரண்டும் நீத்து, இது கடை வரும் நீ நெறிக் கிலியின் ஆட்சியோ!*

***'நடை வரும் தன்மை நீர்*** *- உயரிய ஒழுக்கத்திற் செல்லும் தன்மை உடைய சான்றோர்களாய நீவிர்;* ***அடைவு அருங்கொடுமைஎன் அன்னை செய்கையை*** *- ஓரிடத்திலும் சென்று அடைதற்கு அரிய பெருங்கொடுமை உடைய என்தாய் கைகேயியின் செயலை;* ***'இது நன்று' -; என்றிரேல் -*** *என்று சொல்வீராயின்; இது- இக்காலம்;* ***ஈண்டு*** *- இவ்விடத்தில்;* ***இடைவரும் காலம் இரண்டும் நீத்து*** *-திரேதாயுகம், துவாபரயுகம் என்னும் இரண்டு காலமும் கடந்து சென்று;* ***கடைவரும்*** *- நான்குயுகங்களில் இறுதியில் உள்ள;* ***தீ நெறி*** *- தீயவழியில் (மக்களைச்) செலுத்துகின்ற;* ***கலியின் ஆட்சியோ!*** *- கலிபுருடனின் ஆட்சிக்காலமாகிய கலியுகமோ?'*

*இராமாயண காலம் கிரேதாயுகம் என்ற முதல்யுகம் ஆதலின் அது அறம் மேல் ஓங்கியிருந்தகாலமாம். அடுத்த இரண்டு யுகங்களும் 'இடைவரும் காலம் இரண்டும்' என்பதனால் கொள்ளப்பட்டன.கலியுகத்தில் அறத்தின் மூன்று கால்கள் சிதைந்து ஒரு கால்மட்டும் இருப்பதாகச் சொல்வது வழக்கு. ''ஒலி கடல் உலகம் தன்னில் ஊர்தரு குரங்கின் மாடே, கலியது காலம் வந்து பரந்ததோ''எனப் (4022) பின்வருவதை ஈண்டுக் கருதுக. அறத்தின் ஆட்சி மங்கிக் கொடுமை மலிந்திருப்பது கலியின் இயல்பு என்பதனைப் 'பொலிக. கலியும் கெடும் கண்டு கொண்மீர்'' (திவ்யப். 3352.) ''கலியிருள் பரந்த காலை''(கலிங்கத். அவதாரம். 30 ) ''தருமந் தவிர்ந்து பொறைகெட்டுச்சத்தியஞ் சாய்ந்து தயை, தெருமந்து தண்பூசனை முழுதுஞ் சிதையக், கலியே பொருமந்தக் காலம்''(திரு அரங்கத்துமாலை. 75.) என வருவன கொண்டு அறியலாம்.*
***15***

## *2259. 'வேத்தவை இருந்த நீர், விமலன் உந்தியில் பூர்தவன் முதலினர் புவியுள் தோன்றினார், மூத்தவர் இருக்கவே, முறைமையால் நிலம் காத்தவர் உளர்எனின், காட்டிக் காண்டிரால்.*

***'வேத்தவை இருந்த நீர்*** *- அரசவையில் அமர்ந்துள்ள நீவிர்;* ***விமலன் உந்தியில் பூத்தவன் முதலினர்*** *-திருமாலின் திருவுந்தித் தாமரையில் தோன்றிய பிரமதேவன் முதலிய;* ***புவியுள் தோன்றினர்*** *- மண்ணுலகத்தில் தோன்றிய (அரசு புரிந்த) அரச குலத்தினருள்;* ***மூத்தவர் இருக்கவே*** *-உடன் பிறந்தவர்களுள் வயதால் முதிர்ந்தவர் இருக்க; நிலம் முறைமையால் காத்தவர் - உலகத்தைமுறைப்படி (அரசு நடத்திக்) காத்தவர்கள்;* ***உளர் எனின்*** *- இருப்பார்கள் ஆயின்;* ***காட்டி*** *- அவர்களைச் சான்றாகக் காட்டி;* ***காண்டிர்*** *- உம் கருத்தையும் ஒப்புக் காண்பீர்களாக.*

*காட்டிக் காண்டல் என்பது சான்றுரைத்து உறுதிசெய்தலாகும். 'ஆல்' அசை.*
***16***

***2260. ‘நல் நெறி என்னினும், நான் இந் நானில***
***மன் உயிர்ப் பொறை சுமந்து இருந்து வாழ்கிலேன்;***
***அன்னவன்தனைக் கொணர்ந்து, அலங்கல் மா முடி***
***தொல் நெறி முறைமையின் சூட்டிக் காண்டிரால்.***

*‘**நான் -; நல் நெறி என்னினும்** - (அரசு புரிவது) தரும நெறியே என்று நீங்கள்சான்றுகளால் நிரூபித்த வழியும்; **இந் நானில மன் உயிர்ப்பொறை** - இப்பூமியில்உயிர்களைப் பாதுகாக்கும் சுமையை; **சுமந்து இருந்து வாழ்கிலேன்** - தூக்கி அரசனாக இருந்துவாழ உடன் படமாட்டேன்; **அன்னவன்தனைக் கொணர்ந்து** - அந்த (அரசாட்சிக்குரிய) இராமனைக் கொண்டு வந்து; **அலங்கல் மாமுடி** - மலர் மாலையோடு கூடிய மகுடத்தை; தொல்நெறி முறைமையின் - தொன்று தொட்டு வரும் மரபு வழிப்படி; **சூட்டிக் கண்டிர்** -(அவன் தலையில்) அணிவிக்கக் காணுங்கள்.’*

*நாவாற்றலால் எதுவும் நியாயமாக்கப்பட்டுவிடும் என்பது கருதி ‘நல்நெறி என்னினும்’என்றான். ‘எது எப்படி ஆயினும் என் கருத்து இராமனை அழைத்துக் கொண்டுவந்து அரசன் ஆக்குதலே’என்றானாம். அதுவே மரபும் ஆகும் என்பதனை மீண்டும் ‘தொல்நெறி முறைமையின்’ என்றதனால்குறிப்பித்து, யான் சூடுதல் தொல்நெறி முறைமையன்று என்று வற்புறுத்தினானாம். ‘உயிர்ப்பொறை’ என்றது மன்னர் தம்மனத்து எப்போதும் தம் மக்களை இருத்தி அவர் நலம் நினைத்துக்காத்தாளுதல் பற்றியாம். ‘ஆல்’ அசை.* ***17***

***2261. ‘அன்று எனின், அவனொடும் அரிய கானிடை***
***நின்று, இனிது இருந் தவம், நெறியின் ஆற்றுவென்;***
***ஒன்று இனி உரைக்கின், என் உயிரை நீக்குவென்’***
***என்றனன்; என்றபோது; இருந்த பேர் அவை,***

*‘**அன்று எனின்** - (இராமனைக் காட்டிலிருந்து அழைத்து வந்து முடி சூட்டல்) இயலாதுஆயின்; **அவனொடும்** - அந்த இராமனோடும்; **அரிய கானிடை** - வாழ்தற்கரியகாட்டிடத்து; **நின்று** - வாழ்ந்து; இருந்தவம் - பெரிய தவத்தை; **இனிது** - இனிமையாக; நெறியின் - செய்தற்குரிய முறைப்படி; **ஆற்றுவென்** - செய்வேன்; இனி -இதற்குமேல்; **ஒன்று உரைக்கின்** - (மாறாக) ஒன்றை நீங்கள் சொன்னால் (என்னை ஏற்றுநடத்த வற்புறுத்தினால்); **என் உயிரை நீக்கு வென்** - என் உயிரை அழித்துக் கொள்வேன்; **என்றனன்** - என்று சொன்னான்; **என்றபோது** - என்று பரதன் சொல்லியபோது; **இருந்த பேர் அவை** -அங்கே அமர்ந்திருந்த அரசவையில் உள்ளார்......*

*அரசவையில் உள்ளார்....‘வாழ்த்தினார்’ (2263) எனப் பின்வரும் கவியிற் சென்றுமுடியும். வாழ்த்தினார் என முடிதலின் அரசவை என்பதற்கு அரசவையில் உள்ளார் எனஉரைத்தாம். ஒன்று இராமனைக் கொணர்ந்து முடிசூட்டல், இரண்டு இராமனோடு காட்டில் தவம்செய்தல், மூன்று தன்னுயிரை மாய்த்துக்கொள்ளுதல் என்றானாம் பரதன்.* ***18***

*அரசவையோர் பரதனைப் புகழ்தல்*

***2262. ‘ஆன்ற பேர் அரசனும் இருப்ப, ஐயனும்***
***ஏன்றனன், மணி முடி ஏந்த; ஏந்தல் நீ,***
***வான் தொடர் திருவினை மறுத்தி; மன் இளந்***
***தோன்றல்கள் யார் உளர் நின்னின் தோன்றினார்?***

***ஆன்ற*** - *குணங்களான் அமைந்த;* ***பேர் அரசனும்*** - *பெருமை மிக்க தயரதனும்;இருப்ப - உயிரோடு இருக்கின்றபோதே;* ***ஐயனும்*** - *இராமனும்;* ***மணிமுடி ஏந்த*** *-மணிகள் அழுத்திச் செய்யப்பெற்ற மகுடத்தைத் (தலையில்) தாங்க;* ***ஏன்றனன்*** *- உடன்பட்டான்; ஏந்தல்* ***நீ*** *- பெருமையின் உயர்ந்த பரதனே! நீ;* ***வான் தொடர்திருவினை*** *- மிக உயர்ந்த பாரம்பரியமாக வருகின்ற அரசச்செல்வத்தை;* ***மறுத்தி*** *-வேண்டாம் என்கிறாய்;* ***மன் இளந்தோன்றல்கள்*** *- அரசகுலத்தில் தோன்றிய இளைய குமாரர்களில்;* ***நின்னின் தோன்றினார்?*** *- உன்னைப் போலப் புகழுடன் தோன்றியோர்;* ***யார் உளர்*** *- யார் இருக்கின்றார்கள்?’ (எவரும் இல்லை என்றபடி)*

*“யாது கொற்றவன் ஏவியது அதுசெயல் அன்றோ, நீதி எற்கு” (1382.) “மனத்து மன்னன்ஏவலின் திறம்ப அஞ்சி, இருளுடை உலகம் தாங்கம் இன்னலுக்கு இயைந்து நின்றான்” (1603.) என்றசொற்களால் இராமன் மனநிலை போதரும். மன்னவன் இருக்கின்றபோது அவன் ஆணை மேற் கொண்டுஅரசேற்க உடன்பட்ட இராமனையும், மன்னவன் இல்லாத போதும் அவன் ஆணையாலும் (வரத்தாலும்)அரசேற்க உடன்படாத பரதனையும் ஒப்பிட்டுப் போற்றினர் என்க.*
***19***

***2263. ‘ஆழியை உருட்டியும், அறங்கள் போற்றியும்,***
***வேள்வியை இயற்றியும், வளர்க்க வேண்டுமோ?***
***ஏழினோடு ஏழ் எனும் உலகம் எஞ்சினும்,***
***வாழிய நின் புகழ்!’ என்று வாழ்த்தினார்.***

***‘ஆழியை உருட்டியும்*** *- (அரசேற்று நடத்தி) ஆனைச்சக்கரத்தைச் செலுத்தியும்;* ***அறங்கள் போற்றியும்*** *-பல்வகையான அறச்செயல்களைப் பாதுகாத்தும்;* ***வேள்வியை இயற்றியும்*** *- (அரசர்க்குரியபரி மேதம், இராயசூயம் முதலிய) யாகங்களைச் செய்தும்; வளர்க்க* ***வேண்டுமோ?*** *- (நின்புகழைஇனி நீ) வளர்க்க வேண்டியதில்லை;* ***நின்புகழ்*** *- (இத்தகைய நற்குண நற்செயல்களால்இப்போது பெற்றுள்ள) நின்புகழே;* ***ஏழினோடு ஏழ்எனும் உலகம் எஞ்சினும்*** *- பதினான்கு உலகமும் அழிந்திட்டாலும்;* ***வாழிய*** *- வாழ்வதாக;’* ***என்று வாழ்த்தினார்*** *-.*

*வாழ்த்தினார் ‘அரசவையோர்’ என (2261.) முன்னைய பாடலின் இறுதிச் சொற் கொண்டுமுடிக்க. செயற்கையால் பிறர்புகழ் தேடவேண்டும்; ஆனால், பரதனுக்கு இயற்கையாகிய குணம்செயல்களே பெரும்புகழுக்குக்காரணமாயின என்று பாராட்டுதல் அரசவையோர் கருத்தாகக் கொள்க.* ***20***

*இராமனை அழைத்துவருதல் பற்றி முரசு அறைவிக்கச் சத்துருக்கனனிடம் பரதன் கூறுதல்*

***2264. குரிசிலும், தம்பியைக் கூவி, 'கொண்டலின்
முரசு அறைந்து, " இந் நகர் முறைமை வேந்தனைத்
தருதும் ஈண்டு" என்பது சாற்றி, தானையை,
"விரைவினில் எழுக!" என, விளம்புவாய்' என்றான்.***

***குரிசிலும்*** *- பரதனும்;* ***தம்பியைக் கூவி*** *- (தன்) இளவலான சத்துருக்கனனைஅழைத்து;* ***கொண்டலின்*** *- மேகம் போல;* ***முரசு அறைந்து*** *- இடியென ஒலிக்கும்முரசினை அடித்து;* ***இந் நகர் முறைமை வேந்தனை*** *- இந்நகரத்திற்கு மரபு வழிப்படி அரசனாகவேண்டிய இராமனை;* ***ஈண்டுத் தருதும்'*** *- காட்டிலிருந்து அயோத்திக்கு அழைத்து வரப்போகிறோம்;* ***என்பது சாற்றி*** *- என்னும் செய்தியை அறிவித்து; தானையை - நம்சேனைகளை;* ***'விரைவினில் எழுக' என*** *- (இராமனை அழைத்து வர) விரைவாகப் புறப்படுக என்று;விளம்புவாய்' - சொல்லுவாயாக;'* ***என்றான்*** *- என்று கட்டளை இட்டான்.*

*இராமனே அயோத்தியரசன் என்பதில் மாறாத கருத்துடையவன் பரதன் ஆதலால், அரசனைஅழைக்கச் செல்லும் முறைப்படி சேனைகள் வரும்படி பணித்தான் என்க. தனிமனிதரை அழைத்தற்கும்,அரசர்களை அழைத்தற்கும் வேறுபாடு உண்டு. இனி, தானொருவனே சென்று அழைத்தால் இராமன் வராதிருக்கவும் கூடும். தன் பிரிவினால் வருந்திக் கண்ணும், நீருமாய் இருக்கும் இவ்வளவுபேரையும் கண்டால் மனம் இரங்கி வருவான் என்று கருதி, சேனைகளையும், மக்களையும் உடன்வரப்பறையறைந்து தெரிவித்தான் என்பதும் ஒன்று; ஏற்பன அறிக.* ***21***

*சத்துருக்கனன் உரை கேட்ட மக்கள் மகிழ்ச்சி*

***2265. நல்லவன் உரைசெய, நம்பி கூறலும்
அல்லலின் அழுங்கிய அன்பின் மா நகர்***

***ஒல்லென இரைத்தலால் - உயிர் இல் யாக்கை அச்
சொல் எனும் அமிழ்தினால் துளிர்த்தது என்னவே.***

***நல்லவன் உரை செய*** *- நற்குணத்தாற் சிறந்த பரதன் பணிக்க; நம்பி- சத்துருக்கனன்;* ***கூறலும்*** *- (இராமனைஅழைத்து வரும் செய்தியைச்) சொல்லுதலும்;* ***அல்லலின்*** *- துன்பத்தால்;* ***அழுங்கிய*** *- இரங்கிக்கெட்ட;* ***அன்பின் மாநகர்*** *- இராமன்பால் அயரா அன்பினை உடைய; அயோத்தி மாநகர மக்கள்;* ***உயிர் இல் யாக்கை*** *- உயிர் இல்லாத உடம்புகள் எல்லாம்;* ***அச்சொல் எனும் அமிழ்தினால்*** *- அந்த வார்த்தை என்னும் அமுதத்தால்;* ***துளிர்த்தது*** *-(மீண்டும் உயிர் பெற்றுத்) துளிர்விட்டது;* ***என்ன*** *- என்று சொல்லும்படி; ஒல்லென -பேராலி உண்டாகுமாறு;* ***இரைத்தது*** *- மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.*

*அழுங்கிய - இரங்கிக் கெட்ட ''அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்'' (தொல். சொல், உரி.52.) என்பது காண்க; இரண்டினுள் ஒன்று உரைக்கவும் பெறும். உயிரற்ற உடம்பு துளிர்த்தாற்போலஎன்றது பட்ட மரம் துளிர்விடம் பிழைத்தலாகும் ஆதலின் இங்கேயும் உயிர் வந்ததாக ஆகும்என்க. துளிர்த்தல் என்பதால் உருவக அணியும், 'என்ன' என்ற உவம உருபால் பின்னர் உவமையணியும்வந்துள்ளமை காண்க. இவ்வாறு வருவனவற்றைக் கலவையணி என்பர் அணிநூலார்.*

*"மொழியப்பட்டஅணிபல தம்முள் தழுவ உரைப்பது சங்கீரணமே" (தண்டி). சஞ்சீரண அணி என்பது கலவையணியாம். 'ஆல்' அசை.* *22*

## *2266. அவித்த ஐம் புலத்தவர் ஆதியாய் உள புவித்தலை உயிர் எலாம், 'இராமன் பொன் முடி கவிக்கும்' என்று உரைக்கவே, களித்ததால் - அது செவிப் புலம் நுகர்வது ஓர் தெய்வத் தேன்கொலாம்?*

***அவித்த ஐம்புலத்தவர் ஆதியாய்*** *- ஐம்புலன்களை அடக்கியவர்களாகிய முனிவர்கள் முதலாக;* ***புவித்தலை உள உயிர் எலாம்*** *-உலகத்திடத்து உள்ள உயிர்கள் எல்லாம்;* ***'இராமன் பொன்முடி கவிக்கும்'*** *- இராமன்பொன்மயமான மகுடம் சூடப்போகிறான்;* ***என்று உரைக்கவே*** *என்று (முரசொலி மூலம்சத்துருக்கனன்) சொல்லவே;* ***களித்தது*** *- பெரு மகிழ்ச்சி அடைந்தன; அது - அந்தச் சொல்;* ***செவிப்புலம் நுகர்வது ஓர் தெய்வத் தேன்கொல்*** *- செவி யென்னும் பொறி,கேள்வி என்னும் புலம் அனுபவிக்கும்படியான ஒப்பற்ற தெய்வத்தன்மை வாய்ந்த தேனோ?*

*உயிர்களின் மகிழ்ச்சிக்குக் காரணமாகிய சொல்லைச் செவிநுகர் தேனாகக் கற்பனைசெய்தது தற்குறிப்பேற்ற வணியாகும். பொறிகளை அவித்தவர் என்பதற்குப் புலன்களைஅவித்தவர் என்பது இலக்கணை. பொறிகளின்வழி புலநுகர்ச்சிக்கு மனத்தைச் செல்லவிடாதுஅடக்கியவர்கள் என்பது கருத்து. 'உயிர் எலாம்......களித்தது' என்பது ஒருமை பன்மை மயக்கம்; தொகுதி ஒருமை என்றும் கொள்ளலாம். ஆல், ஆம் - அசைகள். கொல் -வினாப்பொருட்டு.* *23*

## *2267. படு முரசு அறைந்தனர், 'பரதன் தம்முனைக் கொடி நகர்த் தரும்; அவற் கொணரச் சேனையும் முடுகுக' என்ற சொல் மூரி மா நகர், உடுபதி வேலையின் உதயம் போன்றதே!*

***'பரதன் - ; தம் முனை*** *- தன் அண்ணனாகிய இராமனை; கொடி நகர் - கொடிகள் கட்டப்பெற்றுள்ள அயோத்தி மாநகர்க்கு;தரும் - அழைத்துவரப் போகிறான்;* ***அவன் கொணர*** *- அந்த இராமனை அழைத்துவர;* ***சேனையும் முடுகுக'*** *- சேனைகளும் புறப்படுவதற்கு விரைவாக;* ***என்ற படுமுரசு அறைந்தனர் சொல்*** *- என்றிவ்வாறு ஒலிக்கும் முரசினை அடித்தவர்கள் கூறிய சொல்லானது;* ***மூரி மா நகர்*** *-பெருமையும் சிறப்பும் உடைய அயோத்தி நகரமாகிய;* ***வேலையின்*** *- சமுத்திரத்திலே;* ***உடுபதி*** *- விண்மீன்களுக்குத் தலைவனாகிய சந்திரனின்;* ***உதயம் போன்றது*** *-தோற்றம் போன்றது.*

*மூரிமாநகர் என்றது நகரமக்களைக் குறித்தது. முழுநிலவின் உதயம் கண்ட கடல் பொங்கிஆர்ப்பரிப்பது போல அயோத்தி நகர மக்கள் மகிழ்ச்சியால் ஆரவாரித்தார்கள் என்பதாம்.மேற்பாட்டில் தனித்தனி ஒவ்வொரு உயிரும் மகிழ்ச்சியடைந்தமையை விளக்கச் 'செவியுள்நுழைந்த தெய்வத்தேன்' என்றார். இங்கு எல்லாரும் சேர்ந்து அடைந்த மகிழ்ச்சி ஆரவாரத்தைக் "கடலின்கண் சந்திர உதயம்" என்று உவமைப்படுத்தினார். 'ஏ' காரம்ஈற்றசை.* *24*

***2268. எழுந்தது பெரும் படை - ஏழு வேலையின்,***
***மொழிந்த பேர் ஊழியின் முழங்கி, முந்து எழ,***
***அழிந்தது கேகயன் மடந்தை ஆசை; போய்க்***
***கழிந்தது துயர், நெடுங் காதல் தூண்டவே.***

***பெரும் படை*** *- பெரிய (அந்தச்) சேனை;* ***மொழிந்த பேர் ஊழியின்*** *-(எல்லோராலும்) பேசப்படுகின்ற உலக இறுதிக் காலத்தில்;* ***ஏழு வேலையின்*** *- ஏழுகடல்களும் பொங்கி எழுந்தது போல; முழங்கி - பேரொலி செய்து;* ***முந்து எழ*** *-முற்பட்டுப் புறப்பட; (அதனால்)* ***கேகயன் மடந்தை ஆசை*** *- கைகேயியின் (தன் மகன்அரசாள வேண்டும் என்னும்) ஆசை;* ***அழிந்தது*** *- கெட்டழிந்தது; பானது உள் நின்றுசெலுத்திவிட;* ***துயர்*** *- (இராமனைப் பிரிந்ததனாலும், பிரித்ததனாலும்) உண்டாகியதுன்பம்;* ***போய்க் கழிந்தது*** *- மிகவும் அதிகமாகியது.*

*ஊழிக் காலத்துக் கடல்களின் ஆரவாரத்தில் அழிவன பல; அதுபோல் சேனைகள் செய்தபேராரவாரத்தில் கைகேயியின் ஆசை போன திசை தெரியவில்லை காதல் பெருக்கின் மிகுதியால் எழுந்த ஆரவாரத்தால் அவளும் மனம் மாறினாள் என்று கூறுவாரும் உளர். அவ்வாறாயின், துயர் என்பது ஈண்டு இவ்வளவு துன்பங்களுக்குக் காரணம் ஆனோமே என்பதனால் ஏற்பட்ட கழிவிரக்கம் ஆகும்.*

*யுகாந்த காலத்தில் ஏழு கடல்களும் ஒன்றாகச் சேர்ந்து பொங்கி எழும் என்பராதலின்அப்போதைய பேரொலி போன்றது சேனைகளின் புறப்பாட்டினால் உண்டாகிய ஒலி என்றுஉவமையாயிற்று.*

*'போய்க் கழிந்தது துயர்' என்பதற்குக் கைகேயியின் துயர் போய்க் கழிந்தது என்பாரும்உளர். வான்மீகத்தில் இப்படி ஒரு கருத்து உண்டு. 'ஏ' காரம் ஈற்றசை.*
***25***

*சேனைகளின் எழுச்சி*

***2269. பண்ணின புரவி, தேர், பகடு, பண்டியும்,***
***மண்ணினை மறைத்தன; மலிந்த மாக் கொடி***
***விண்ணினை மறைத்தன; விரிந்த மாத் துகள்,***
***கண்ணினை மறைத்தன, கமலத் தோனையே***

***பண்ணின*** *- அலங்கரிக்கப்பெற்றனவாகிய;* ***புரவி, தேர், பகடு, பண்டியும்*** *- குதிரை, தேர், யானை, வண்டி ஆகியவை;* ***மண்ணினை மறைத்தன*** *- (வெற்றிடம்இல்லாமல் பரந்திருத்தலின்) மண்ணை மறைத்துவிட்டன;* ***மலிந்த மாக் கொடி*** *-(சேனைகளில் அங்கங்கே) நிரம்பியுள்ள பெரிய கொடிகள்; விண்ணினை மறைத்தன - (ஆகாயம்எங்கும் கட்புலன் ஆகாதபடி பரந்திருத்தலின்) ஆகாயத்தை மறைத்து விட்டன;* ***விரிந்த மாத்துகள்*** *- சேனைகள் செல்வதால் மேல் எழுந்து விரிந்த பெரிய புழுதித் துகள்கள்; கமலத்தோனை - (சத்திய லோகத்தில் உள்ள) பிரமதேவனது;* ***கண்ணினை மறைத்தன*** *-கண்களை மறைத்துவிட்டன.*

*சேனைகளின் மிகுதி கூறியவாறாகும். பண்டியும் என்ற உம்மையை, புரவி, தேர், பகடு, என்பனவற்றோடும் பிரித்துக் கூட்டுக. 'கமலத்தோனைக் கண்ணினை மறைத்தன' என்பதனுள் இரண்டன்பாலும் வந்துள்ள ஐயுருபினை, 'கமலத்தோனது கண்ணினை' என்றேனும், 'கமலத்தோனைக் கண்ணின்கண்' என்றேனும் திரித்துப் பொருள் கொள்க. வேற்றுமைப் பொருள் மயக்கம் என்பர் இலக்கணநூலார். "முதற்சினைக் கிளவிக்கு 'அது வென் வேற்றுமை, முதற்கண் வரினே சினைக்கு ஐவருமே', "முதல் முன் 'ஐ' வரின், 'கண்' என்வேற்றுமை, சினைமுன் வருதல் தெள்ளிது என்ப" என்னும் (தொல். சொல். வேற். மயங். 4, 5.) நூற்பாக்களைக் காண்க. இதனுள் ஏதேனும் ஒன்றில் சிறப்பும்மைதொக்கதாகவும் கொள்க. 'ஏ' ஈற்றசை.*
***26***

## *2270.* **ஈசன் இவ் உலகினை அழிக்கும் நாள் எழும்**
**ஓசையின் நிமிர்ந்துளது, ஒல்லென் பேர் ஒலி;**
**காசையின் கரியவற் காண மூண்டு எழும்**
**ஆசையின் நிமிர்ந்தது அவ் அனிக ராசியே.**

**'ஒல்' என் பேர் ஒலி -** *(சேனைகளின் எழுச்சியால் உண்டாகிய) 'ஒல்' என்றபெரிய ஆரவாரம்;* **ஈசன் -** *(அழித்தற் கடவுளாகிய) சிவன்;* **இவ் உலகினை அழிக்கும்நாள் -** *இந்த உலகினை அழித்துச் (சர்வ சங்காரம்) செய்யும் காலத்தில்;* **எழும்ஓசையின் -** *எழுகின்ற பேரோசையைவிட;* **நிமிர்ந்துளது -** *மேற்சென்றுளது;* **அவ்அனிகராசி -** *அந்தச் சேனைத் தொகுதி;* **காசையின் கரியவன் -** *காயாம்பூப் போலும் கருநிறமுடைய இராமனை;* **காண மூண்டு எழும் ஆசையின் -** *காண்பதற்காக உள்ளே கிளர்ந்து எழுகின்ற ஆசையைக் காட்டிலும்;* **நிமிர்ந்தது -** *மேற்சென்றுவிட்டது (அதிகமாய் உள்ளது.)*

*ஈசன் என்பது சிவனுக்குரிய சிறப்புப் பெயர். "ஈசன் ஆண்டிருந்த பேர் இலங்கு மால்வரை"(3360.) என்பது காண்க. காசை - காயாம்பூ. "நீல நெடுங்கிரியும் மழைமுகிலும் பவ்வ நெடு நீரும்காயாவும் நிகர்க்கும் மேனிக், கோலமும்" (வில்லி. 45. 247.) என்பது திருமாலின் திருமேனிநிறத்துக்குக் காயாம்பூவை உவமை கூறிற்றாம். காசு- குற்றம் என்பார் உளர். 'காசை' என வருதலின் அது பொருந்தாது. 'காசில்' என்று வரின் பொருந்தும். 'காசில் கொற்றத் திராமன்' என்பது (4) போல, காசு - ஐ எனப் பரித்து 'ஐ' சாரியை என்றாலோ எனின், அவ்வாறு சாரியைகூறுவது ஓர் மரபின்மையே அன்றி வேறின்றி. ஏற்குமேற் கொள்க. 'ஓசையின்', 'ஆசையின்' இரண்டிடங்களிலும் 'இன்' உறழ்ச்சிப் பொருட்டு. 'காசையின்' 'இன்' உவமப் பொருட்டு. 'ஏ' காரம் ஈற்றசை.*
*27*

## *2271.* **படியொடு திரு நகர் துறந்து, பல் மரம்**
**செடியோடு தொடர் வனம் நோக்கி, சீதை ஆம்**
**கொடியொடு நடந்த அக் கொண்டல் ஆம் எனப்**
**பிடியொடு நடந்தன - பெருங் கை வேழமே.**

**பெருங்கை வேழம்-** *(சேனையில் உள்ள) பெரிய துதிக்கையையுடைய களிற்று யானைகள்;* **பிடியொடு -** *(தம்) பெண் யாணைகளுடனே;* **படியொடு திருநகர் துறந்து -** *பூவுலகஆட்சியோடு அழகிய அயோத்தி நகரத்தையும் விட்டு;* **செடியொடு பல்மரம்**

***தொடர் வனம்நோக்கி*** - செடிகளோடு பல மரங்கள் ஒன்றை ஒன்று பற்றி நெருங்கியுள்ள காட்டை நோக்கி; ***சீதை ஆம் கொடியொடு*** - சீதாபிராட்டி யென்கின்ற கொடியுடனே; ***நடந்த*** - நடந்து சென்ற; ***அக் கொண்டல் ஆம் என*** - அந்த மேச நிறனாகிய இராமன் போல; ***நடந்தன*** - நடந்து சென்றன.

*யானைக்கு இராமனும், பிடிக்கும் பிராட்டியும் கொள்க. 'ஏ' காரம் ஈற்றசை. 'கொண்டல்'என்பது இராமனுக்கு உருவகம். நிறத்தினால் அன்றிப் பயனாலும் (தன் அடைந்தோர்க்குத் தண்ணளிவிளைத்தலால்) இராமனுக்கு மேகம் நேராகும் 'உருவும் பயனும்' பற்றிய உருவகம் ஆகும். 'வேழமுமபிடியும்', 'மரமும் செடியும்தொடர் வனம்' 'சீதையாம் கொடியொடு நடந்த கொண்டல்' என்று இவற்றை இணைத்துக் காட்டியது இன்புற வேண்டிய கவிநயம் ஆகும்.* ***28***

***2272. சேற்று இள மரை மலர் சிறந்தவாம் எனக்***
***கால் தளம் பொலிதரு கன்னிமா ரொடும் -***
***ஏற்று இளம் பிடிக்குலம் - இகலி, இன் நடை***
***தோற்று, இள மகளிரைச் சுமப்ப போன்றவே.***

***சேற்று இள மரை மலர்*** - சேற்றின்கண் தோன்றுவன ஆகிய இளமையான தாமரை மலர்; ***சிறந்தவாம் என*** - எம்மைக் காட்டிலும் சிறந்தனவோ; ***என*** - என்று கேட்பது போல; ***கால்தளம்*** - பாதமாகிய மலரிதழ்; ***பொலிதரு*** - விளங்குகின்ற; ***கன்னிமாரொடும்*** - இளம் பெண்களுடனே; ***இளம் பிடிக்குலம்*** - இளைய பெண்யானைக்கூட்டம்; ***இன் நடை இகலி*** - இனிய நடையால் பகைத்து; ***ஏற்று*** - (எதிர்) ஏற்று; ***தோற்று*** - நடை அழகில் அவர்கள் விஞ்சியபடியால்) தோல்வியடைந்து; (அதற்குத்தண்டனையாக) ***இள மகளிரைச் சுமப்ப போன்ற*** - இளம்பெண்களை (இப்போது) சுமந்து திரிவனபோன்றன.

*வென்றோரைத் தோற்றோர் சுமத்தல் இயல்பாதலின், இங்ஙனம் கற்பனை செய்தார்நடையழகில் மோதிப் பார்த்துத் தோல்வியடைந்த பெண் யானைகள் மகளிரைச் சுமத்தல்போலஉள்ளது இச் சேனைகளின் இடையே இளம் பெண்கள் பிடிகளில் ஏறிச் செல்லும் காட்சி என்றுதற்குறிப்பேற்றம் செய்தார். 'எம்மினும் தாமரை மலர் சிறந்தனவோ' என எள்ளி நகையாடுவது போலக் கால்தளம் பொலிகின்ற கன்னியர் என்பதும் தற்குறிப்பேற்ற வணி, மரைமலர் என்பதுமுதற்குறை. 'ஏ' ஈற்றசை.* ***29***

***2273. வேதனை வெயிற்கதிர் தணிக்க, மென் மழைச்***
***சீதநீர் தொடு நெடுங் கொடியும் சென்றன;***
***கோதை வெஞ்சிலையவன் கோலம் காண்கிலா***
***மாதரின் நுடங்குவ, வரம்பு இல் கோடியே.***

***வேதனை*** - வருத்தத்தைத் தரும்; ***வெயிற்கதிர் தணிக்க*** - சூரியனால் ஆகியவெம்மையை (இராமனை அழைத்து வரச் செல்லும் சேனைகளுக்கு) இல்லாதவாறு போக்க; (வானளாவிநின்று) ***மென்மழைச் சீதநீர் தொடு*** - மெல்லிய மேகங்களது குளிர்ச்சி பொருந்தியநீரைத் தொட்டுக் கொண்டு (கீழ்த் துளித்து); ***சென்றன*** - (சேனைகளின் இடையே) சென்றன வாகிய; ***வரம்பு இல் கோடி*** - கணக்கற்ற கோடியளவான; ***நெடுங்கொடியும்*** - நீண்ட கொடிகளும்; ***கோதை*** - கையுறை அணிந்த;

***வெஞ்சிலையவன் -*** *கொடிய(கோதண்டம் எனப்பெறும்) வில்லை ஏந்திய இராமனது;* ***கோலம் -*** *பட்டாபிடேகக் கோலத்தை;* ***காண்கிலா -*** *காணப்பெறாத;* ***மாதரின் -*** *பெண்கள் போல;* ***நுடங்குவ -*** *அசைகின்றனவாயின.*

*கொடிகள் வானளாவி மேகத்தைத் தொடுவதும், அசைவதும் சேனைகளின் வெயில் வெம்மை தணிக்கமேகத்தின் குளிர்நீர் தெளிப்பதாகவும், இராமன் முடிசூடும் கோலம் காணாத மகளிர் என அசைவதாகவும் கற்பனை செய்யப்பெற்றன. தற்குறிப்பேற்றவணி, உவமையணி என முறையே காண்க. கோதை- கையுறை. விற்போர் செய்வார் கைகளுக்குத் தோலாற் செய்த உறை அணிவர். 'ஏ' காரம்ஈற்றசை.* ***30***

## *2274. வெண் மதி மீச்செல மேகம் ஊர்ந்தென,*
## *அண்ணல் வெங்கதிரவன், அளவுஇல் மூர்த்தி ஆய்,*
## *மண்ணிடை இழிந்து ஒரு வழிக்கொண்டாலென,*
## *எண்ண அரு மன்னவர் களிற்றின் ஏகினார்.*

***எண்ண அரு மன்னவர்*** *- கணக்கிட முடியாத அரசர்கள்;* ***அண்ணல் வெங் கதிரவன்*** *- பெருமை பொருந்திய வெப்பமுள்ள ஒளிக்கதிர்களை உடைய சூரியன்;* ***அளவு இல் மூர்த்திஆய் -*** *அளவுபடாத பல வடிவங்களை எடுத்துக்கொண்டு;* ***மீ வெண்மதி செல -*** *தன்மேலே வெண்மதியானது சென்றுகொண்டிருக்க;* ***மேகம் ஊர்ந்து -*** *(தான்) மேகத்தின் மேல்ஊர்தியாக ஏறி;* ***மண்ணிடை இழிந்து -*** *பூமியில் இறங்கி;* ***ஒரு வழிக் கொண்டால் என-*** *ஒரேவழியில் பயணம் செய்தாற் போல;* ***களிற்றின் ஏகினார் -*** *(வெண்குடைநீழலில்) யானைமேல் சென்றார்கள்.*

*பலவடிவு கொண்ட சூரியன் பல மன்னர்களுக்கும், மேல் செல்லும் வெண்மதி மன்னர்மேல்நிழற்றிய வெண்குடைக்கும், மேகம் ஏற்றிச் செல்லும் யானைக்கும் உவமையாயின, சூரியன்மண்ணில் இறங்கல் இல்லையாதலின் இது அற்புதஉவமையணியாகும்.* ***31***

## *2275. தேர்மிசைச் சென்றது ஓர் பரவை; செம்முகக்*
## *கார்மிசைச் சென்றது ஓர் உவரி; கார்க்கடல்,*
## *ஏர்முகப் பரிமிசை ஏகிற்று; எங்கணும்*
## *பார்மிசைப் படர்ந்திது, பதாதிப் பௌவமே.*

***ஓர் பரவை -*** *(சேனை வீரர்களாகிய) ஒரு கடல்;* ***தேர் மிசைச் சென்றது*** *-தேர்மேல் சென்றது;* ***ஓர் உவரி -*** *(யானை வீரர்களாகிய) ஒரு சமுத்திரம்;* ***செம்முகக் கார் மிசைச் சென்றது*** *- சிவந்த (புள்ளிகளை உடைய) முகத்தை உடைய மேகம்(போன்ற யானை) மேல் சென்றது;* ***கார்க்கடல் -*** *கரிய (குதிரை வீரர்களாகிய) கடல்;* ***ஏர்முகப் பரிமிசை ஏகிற்று -*** *அழகிய முகத்தை உடைய குதிரைகளின் மேல் சென்றது;* ***பதாதிப் பௌவம்*** *- காலாட் படை வீரர்களாகிய கடல்;* ***பார்மிசைஎங்கணும் படர்ந்தது -*** *மண்ணில் மேல் எல்லா இடங்களிலும் படர்ந்து சென்றது.*

*வானத்திலிருந்து பூமிவரை நோக்குவார்க்கு, மேலே தேர் வீரர் கடலும், அடுத்து யானை வீரர் கடலும், அதன்கீழ்க் குதிரை வீரர் கடலும், மண்ணில் காலாள் வீரர்*

*கடலும் எனநாற்பெருங்கடல்கள் படிப்படியாய்த் தோன்றின என்பதாம் - சேனையின் மிகுதி கூறியவாறு. உருவகஉயர்வு நவிற்சி அணி. 'ஏ' காரம் ஈற்றசை.* ***32***

### *2276.* **தாரையும் சங்கமும், தாளம் கொம்பொடு**
**பார்மிசைப் பம்பையும், துடியும், மற்றவும்,**
**பேரியும், இயம்பல சென்ற - பேதைமைப்**
**பூரியர் குழாத்திடை அறிஞர் போலவே.**

***தாரையும் -*** *தாரை என்ற நீண்ட ஊது கொம்பும்;* ***சங்கமும் -; தாளம் -; கொம்பு -*** *வளைந்த ஊது கருவியும்;* ***பம்பையும் -*** *பம்பை என்னும் பறையும்;* ***துடியும் -; பேரியும் -*** *பெருமுரசும்;* ***மற்றவும் -*** *ஏனைய வாத்தியங்களும்;* ***பார்மிசை -*** *மண்ணின் மேல்;* ***பேதைமைப் பூரியர் குழாத்திடை -*** *அறியாமையுடையபுல்லர்கள் கூட்டத்தின்கண்;* ***அறிஞர் போல -*** *(கற்றுத் துறைபோகிய) நல்லறிவாளர்ஒன்றும் பேசாமல் மௌனமாக இருத்தல் போல;* ***இயம்பல சென்ற -*** *ஒலிக்காமல் சென்றன.*

*தயரதன் இறந்த நிலையிலும், இராமன் வனம் புகுந்துள்ள நிலையிலும் செல்கின்றன வாதலின்மகிழ்ச்சியும் மங்கலமும் உடைய காலங்களில் இயக்கப்படும் இசைக்கருவிகள் இப்போது ஒலியாமல்சென்றன. "புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள் நன்கு செலச் சொல்லுவார்"என்றபடி (குறள். 719.) கற்றோர் மற்றோர் அவைக்கண் வாய்திறவார் ஆதலின் அதனையே 'பூரியர்குழாத்திடை அறிஞர் போல' என ஒலியாமற் சென்ற வாத்தியங்களின் நிலைக்கு உவமை ஆக்கினார். இனி, முன்னர் (2270) "ஓசையின் நிமிர்த்தது ஒல்லென் பேர் ஒலி" என்பது போல வந்தனபெருங் கூட்டத்தின் புறப்பாட்டால் எழும்பிய ஒலியே அன்றி, இயக்கப்படும் வாத்திய ஒலிஅன்மையான் முரண் ஆகாமை உணர்க. 'ஏ' ஈற்றசை.* ***33***

### *2277.* **தா அரு நாண் முதல் அணி அலால், தகை**
**மே வரு கலங்களை வெறுத்த மேனியர்,**
**தேவரும் மருள்கொளத் தெரியும் காட்சியர்,**
**பூ உதிர் கொம்பு என மகளிர் போயினார்.**

***தேவரும் மருள்கொளத் தெரியும் காட்சியர் -*** *தேவர்களும் திகைக்கும் ஒளிர்கின்றதோற்றமுடைய;* ***மகளிர் -*** *பெண்கள்;* ***தா அரு-*** *குற்றம் அற்ற;* ***நாண் முதல்-*** *நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு எனப்பெறும்;* ***அணி அலால் -*** *அணிகலன்கள் அல்லாமல்;* ***தகை மேவரு -*** *அழகு பொருந்திய(பொன்னாலும் மணியாலும் புனைந்த);* ***கலன்களை*** *- அணிகளை;* ***வெறுத்த மேனியர் -*** *வேண்டாம் என்று நீக்கிய உடம்போடு;* ***பூ உதிர் கொம்பு என*** *- பூக்களை உதிர்த்துவிட்டபூங்கொம்பு போல;* ***போயினார்*** *- (அக்கூடத்தில்) சென்றார்கள்.*

*அரசர்க்கு வந்த துன்பம் தமக்கென நினையும் மக்கள் ஆதலின் அணி அணியாமல் சென்றனர்என்க. "நவை அறு குணங்கள் என்னும் பூண்" எனப் பின்னும் (7653) அணிகலன் என்பார் குணங்களை. "ஏண்பால் ஓவா நாண் மடம் அச்சம் இவையே தம், பூண் பாலாகக் காண்பவர் நல்லோர்" (1533) என முன்னும் கூறியது காண்க. "பூ உதிர் கொம்பு 'உவமையணி. அணிகலன் நீத்த கைகேயியை, "பூஉதிர்ந்தது ஓர் கொம்பு எனப் புவிமிசைப் புரண்டாள்" (1493.) என்றார்முன்னும்.* ***34***

***2278. அதிர் கடல் வையகம் அனைத்தும் காத்தவன்***
***விதி வரும் தனிக்குடை மீது இலாப் படை***
***பொதி பல கவிகை மீன் பூத்தது ஆகிலும்***
***கதிர் மதி நீங்கிய கங்குல் போன்றதே.***

***அதிர் கடல்*** *- ஒலிக்கின்ற கடலாற் சூழப்பெற்ற;* ***வையகம் அனைத்தும் -*** *உலகம் முழுவதையும்;* ***காத்தவன்*** *- (நீதி வழுவாது) காப்பாற்றிய தயரதசக்கரவர்த்தியின்;* ***விதிவரு*** *- மரபுவழியில் பாரம்பரியமாக வருகின்ற;* ***தனிக்குடை*** *- ஒப்பற்ற வெண்கொற்றக்குடை;* ***மீது இலா -*** *மேலே பிடிக்கப்படாது உள்ள;* ***படை*** *- அச்சேனை;* ***பொதி பல கவிகை மீன் -*** *நெருங்கிய பலவாகிய (மற்றை மன்னர்களின்) வெண்குடைகளாகிய விண்மீன்கள்;* ***பூத்தது ஆகிலும்*** *- வானம் எங்கும் நிரம்பித்தோன்றின ஆயினும்;* ***கதிர் மதி*** *- ஒளியுடைய சந்திரன்;* ***நீங்கிய கங்குல் -*** *இல்லாத இரவை;* ***போன்றது -.***

*மன்னர்கள் குடைக்குத் தாரகைகளும், சக்கரவர்த்தியின் வெண்கொற்றக் குடைக்குச்சந்திரனும் உவமையாம். விண்மீன்கள் பூத்திருப்பினும் சந்திரன் இல்லாத ஆகாயம்பொலிவழிந்திருத்தல் போல, வெண்குடைகள் பல நடுவே தோன்றினும், சக்கரவர்த்தியின்வெண்கொற்றக் குடை இல்லாமையால் சேனை பொலிவழிந்து தோன்றிய தென்க. விதி - முறைமை.இங்கே மரபு வழியில் சூரிய குலத்தார்க்கு உரியதாய் வருவது. 'கவிகை மீன்' உருவகம். 'ஏ'காரம்ஈற்றசை.* ***35***

***2279. செல்லிய செலவினால், 'சிறிய திக்கு' எனச்***
***சொல்லிய சேனையைச் சுமந்ததே எனில்,***
***ஒல்லொலி வேலை நீர் உடுத்த பாரை, 'ஓர்***
***மெல்லியல்' என்றவர் மெலியரேகொலாம்.?***

***செல்லிய செலவினால்*** *- பரந்து செல்கின்ற செல்கையால்;* ***'திக்கு சிறிய'*** *- திசைகள் இடம் போதாமல் சிறியன;* ***எனச் சொல்லிய சேனையை*** *- என்று பிறரைச்சொல்லச்செய்கின்ற (பேரளவுள்ள) இந்தச் சேனையை;* ***சுமந்தது எனில்*** *- (இந்தப் பூமி)சுமந்து கொண்டுள்ளது என்றால்;* ***ஒல் ஒலி வேலை நீர் உடுத்த பாரை*** *- ஒல்லென்றுஒலிக்கின்ற கடல் நீரை ஆடையாகச் சுற்றி உடுத்துக் கொண்டுள்ள பூமியை;* ***மெல்லியல்*** *- மென்மைத் தன்மை உடைய பெண் என்று சொன்னவர்கள்;* ***மெலியர் கொல்*** *- மெலியர்போலும்.*

*'பூதேவி - நிலமகள்' என்று சொல்லும் வழக்குப் பற்றியது. ''நிலம் என்னும் நல்லாள்''என்றார் (குறள்.1040.) வள்ளுவரும். மெல்லியல் பெருஞ்சுமையைத் தாங்க மாட்டாள் ஆதலின்,பூமியை மெல்லியல் என்றல் பொருந்தாது என்று சமத்காரமாகக் கூறிச் சேனையின் மிகுதியைப் புலப்படுத்தினார். 'ஏ' காரங்கள் அசை. 'கொல்' ஐயப்பொருட்டு.* ***36***

***2280. தங்கு செஞ் சாந்து அகில் கலவை சார்கில,***
***குங்குமம் கொட்டில, கோவை முத்து இல, -***
***பொங்கு இளங் கொங்கைகள் - புதுமை வேறு இல***
***தெங்கு இளநீர் எனத் தெரிந்த காட்சிய.***

***பொங்கு இளங் கொங்கைகள்*** - *(மகளிரது) பருத்துக் கொண்டுள்ள இளமையானதனங்கள்;* ***தங்கு செஞ்சாந்து அகில் கலவை சார்கில -*** *(தம்மிடம் பூசப்பெற்று எப்பொழுதும்) தங்கியிருக்கப்பெற்ற செஞ்சந்தனம், அகில் குழம்பு, கலவைச் சாந்து இவை(இப்போது) சாரப் பெறாமல்;* ***குங்குமம் கொட்டில -*** *குங்குமக் குழம்பு பூசப்பெறாமல்;* ***கோவை முத்து இல -*** *முத்துவடம் அணியாமல்;* ***வேறு புதுமை இல*** *- வேறு புதிய செயற்கை நலன்கள் இல்லாமல் (இருப்பதால்);* ***தெங்கு*** *- தென்னையின்;* ***இளநீர்எனத் தெரிந்த காட்சிய -*** *இளநீர்க் காய்கள் போலத் தோற்றம் உடையவாயின.*

*சாந்து முதலியன அணியாமல் இருக்கிறபடியால், இளநீர்க் காய்களின் தோற்றம் அவ்வாறேபொருந்தியுள்ளது என்று கற்பனை செய்தார்.* ***37***

***2281. இன் துணையவர் முலை எழுது சாந்தினும்***
***மன்றல் அம் தாரினும் மறைந்திலாமையால்***
***துன்று இளங் கொடி முதல் தூறு நீங்கிய***
***குன்று எனப் பொலிந்தன - குலவுத் தோள்களே.***

***குலவுத் தோள்கள் -*** *(ஆண்களின்) திரண்ட தோள்கள்;* ***இன் துணைவர்*** *- (அவர்களுடைய) இனிய மனைவியரது;* ***முலை எழுது சாந்தினும் -*** *முலை மேல் தொய்யில்எழுதப்பெற்ற சாந்தினால்;* ***மன்றல் அம் தாரினும் -*** *(தாமே அணியும்) மணம் வீசும்மாலையால்;* ***மறைந்திலாமையால் -*** *இப்பொழுது மறையாமல் (இயற்கையாக உள்ளபடி) விளங்கித் தோன்றுதலால்;* ***துன்று இளங்கொடி முதல் -*** *நெருங்கிய இளைய கொடிமுதலாகிய;* ***தூறு நீங்கிய -*** *புதர்கள் இல்லாமற் போன;* ***குன்று என*** *- மலைபோல;* ***பொலிந்தன -*** *தோன்றின.*

*மகளிர் கோலம் செய்யாமை போல ஆடவரும் உள்ளனர் என்பதாம். இன்துணையவர் என்றது காதலியராகிய மனைவியரை. 'ஏ' ஈற்றசை.* ***38***

***2282. நறை அறு கோதையர் நாள் செய் கோலத்தின்***
***துறை அற, அஞ்சனம் துறந்த நாட்டங்கள்***
***குறை அற நிகர்த்தன - கொற்றம் முற்றுவான்.***
***கறை அறக் கழுவிய கால வேலையே.***

***நறை அறு கோதையர்*** *- வாசனைப் புகை ஊட்டாத கூந்தலை உடைய மகளிர்;* ***நாள்செய் கோலத்தின் துறை அற*** *- நாள்தோறும் செய்யப்படுகின்ற அலங்காரத்தின் தன்மைகள்நீங்கினமையால்;* ***அஞ்சனம் துறந்த -*** *மை தீட்டப் பெறாத (இயற்கையான தோற்றத்தோடுஉள்ள) கண்கள்;* ***கொற்றம் முற்றுவான்*** *- (போர்செய்து) வெற்றியை முடித்த ஒருவன்;* ***கறை அறக் கழுவிய*** *- போர்காலத்துப் படித்த போன்ற வேற்படையை;* ***குறை அற நிகர்ந்தன*** *- குறைவில்லாமல் ஒத்திருக்கின்ற ஆயின.*

*மை எழுதாத கண்கள் இரத்தக்கறை கழுவிய வேலைப் போன்றன. 'ஏ' காரம்ஈற்றசை.* ***39***

***2283. விரி மணி மேகலை விரவி ஆர்க்கில***
***தெரிவையர் அல்குல், தார் ஒலி இல்தேர் என***
***பரிபுரம் ஆர்க்கில பவளச் சீறடி,***
***அரிஇனம் ஆர்க்கிலாக் கமலம் என்னவே.***

**தெரிவையர் அல்குல் -** *மகளிரது இடைப்பகுதி;* **தார் ஒலி இல் தேர் என -** *மணி ஒலி இல்லாத (அலங்கரிக்கப்பெறாத) தேர் போல;* **மணி விரி மேகலை விரவி ஆர்க்கில-** *மணிகள் பதிக்கப் பெற்ற மேகலை அணியப்பெற்றிலாமல் ஒலி யற்றவையாய் இருந்தன;* **பவளச் சீறடி -** *பவளம் போன்ற சிவந்த நிறம் வாய்ந்த சிறிய அடி;* **அரி இனம் ஆர்க்கிலாக் கமலம் என்ன -** *வண்டுக் கூட்டங்கள் ஒலிக்காத தாமரை மலர் போல;* **பரிபுரம் ஆர்க்கில -** *சிலம்புகள் ஒலிக்கப்பெறாமல், உள்ளன.*

*இரண்டும் உவமையணி. 'ஏ' காரம் ஈற்றசை.* ***40*** ***2284. மல்கிய கேகயன் மடந்தை வாசகம்***
***நல்கியது அரிவையர் நடுவிற்கே கொலாம்!***
***புல்கிய மணிவடம் பூண்கிலாமையால்,***
***ஒல்கிய ஒரு வகைப் பொறை உயிர்த்தவே.***

**ஒல்கிய -** *(மகளிரது ) வளையும் தன்மை உள்ளனவாகிய இடைகள்;* **புல்கிய -** *(எப்பொழுதும் தம்மைத்) தழுவிக் கிடக்கும்;* **மணிவடம் -** *மணிகள் பதிக்கப்பெற்றவடங்களை;* **பூண்கிலாமையால் -** *(இப்பொழுது) அணியாமையால்;* **ஒருவகைப் பொறைஉயிர்த்த -** *ஒருபடியாகப் பாரம் நீங்கி இளைப்பாறின; (எனவே)* **கேகயன் மடந்தைமல்கிய வாசகம் -** *கைகேயியின் வளமான வரம்;* **நல்கியது -** *அருள் செய்தது;* **அரிவையர் நடுவிற்கே கொல் -** *மகளிரது இடைக்கு மட்டும் போலும்.*

*கைகேயி கேட்ட வரத்தால் நலம் பெற்றது பெண்கள் இடை ஒன்றுதான்; இத்துணைக் காலம் பல மணிவடச் சுமைகளைத் தாங்கியிருந்த இடை இப்போது சுமைநீங்கி ஆறுதல் பெற்றன என்றார்.*

*இடையில் அணியும் மணிவடங்கள். விரிசிகை, கலாபம், பருமம், மேகலை, காஞ்சி எனஐந்து வகையாகி 32, 21, 14, 8, 2 காசுகள் கோக்கப்பெற்று இருக்கும் என்ற செய்திகளை*

**"எண்ணிரண்டு இரட்டி கோத்த விரிசிகை இருபத் தொன்றில்**
**பண்ணிய கலாபம் ஈரேழ் பருமநா லிரண்டிற் செய்த**
**வண்ணமே கலை யிரண்டிற் காஞ்சி இவ் வகை ஓர் ஐந்தும்**
**புண்ணியக் கொடி வண்டு ஆர்ப்பப் பூத்த போற்**
**புலம்பப் பூட்டி"**

*என்னும் திருவிளையாடற் புராணச் செய்யுளால் (திருவிளை. மதுரைக் திருமணப். 158)அறியலாம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***41***

***2285. 'கோமகன் பிரிதலின், கோலம் நீத்துள
தாமரைச் செல்வியும், தவத்தை மேவினாள்'
காமனும், அருந்துயர்க் கடலில் மூழ்கினான்
ஆம்' என, நிகழ்ந்தது - அவ் அளவு இல் சேனையே.***

***அவ் அளவு இல் சேனை*** - *அந்த அளவற்ற சேனையானது;* ***கோமகன் பிரிதலின்*** *-அரச குமாரனாகிய இராமன் நாடு விட்டுக் காடு சென்றபடியால்;* ***கோலம் நீத்துள*** *- தன்அலங்காரத்தைத் துறந்துள்ள;* ***தாமரைச் செல்வியும்*** *- இலக்குமியும்;* ***தவத்தைமேவினாள்*** *- (தானும்) தவம் செய்ய விரும்பிச் சென்று விட்டாள்;* ***காமனும்*** *- மன்மதனும்;* ***அருந்துயர்க் கடலில் மூழ்கினான் ஆம்*** *- (இன்பம் நுகர்வார் எவரும் இன்மையின் தன்தொழில் இறந்தது என்று) அரிய துன்பக் கடலில் மூழ்கிவிட்டானாகும்;* ***எனநிகழ்ந்தது*** *- என்று சொல்லுமாறு பொலிவும் மகிழ்ச்சியும் இன்றிச் சென்றது. தொழில் செய்தல் மகிழ்ச்சியாம்; தொழில் செய்யாமல் சும்மா இருத்தல் துன்பமாம்;மன்மதன் தனக்கு வேலையின்மை கருதித் துயர்க்கடலில் மூழ்கினான் ஆம். 'ஏ' காரம்ஈற்றசை. 42*

***2286. மண்ணையும், வானையும், வயங்கு திக்கையும்
உண்ணிய நிமிர் கடல் ஒக்கும் என்பது என்?
கண்ணினும் மனத்தினும் , கமலத்து அண்ணல்தன்
எண்ணினும், நெடிது - அவண் எழுந்த சேனையே.***

***அவண் எழுந்த சேனை*** *- அயோத்தியில் (அப்போது) புறப்பட்ட சேனை ;* ***மண்ணையும், வானையும், வயங்கு திக்கையும்*** *- பூமி, ஆகாயம், திசைகள் ஆகியவற்றையெல்லாம் ஒருசேர;* ***உண்ணிய நிமிர் கடல்*** *- உண்ணுதற்கு எழுந்த யுகாந்த காலக் கடலை;* ***ஒக்கும் என்பது என் -*** *ஒத்திருக்கும் என்று சொல்வது நிரம்பாதாகும்;* ***கமலத்து அண்ணல் தன் -*** *(படைப்புக் கடவுளாகிய) பிரமதேவனது;* ***கண்ணினும், மனத்தினும், எண்ணினும் நெடிது -*** *(படைத்த பொருளைக் காணும்) கண்ணையும், நினைக்கும்) மனத்தையும்,(நினைக்கின்ற) நினைப்பையும் கடந்து நீண்டதாகும்.*

*'உண்ணிய' 'செய்யிய' என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்; 'நிமிர்' என்னும்வினைகொண்டு முடிந்தது. 'ஏ' காரம் ஈற்றசை. 43*

***2287. அலை நெடும் புனல் அறக் குடித்தலால், அகம்
நிலை பெற நிலை நெறி நிறுத்தலால், நெடு
மலையினை மண் உற அழுத்தலால், தமிழ்த்
தலைவனை நிகர்த்தது - அத் தயங்கு தானையே.*** [1]

***அத் தயங்கு தானை*** *- விளங்குகின்ற அந்தச் சேனை;* ***அலை நெடும் புனல் அறக்குடித்தலால் -*** *கடந் நீரை முற்றும் வற்றக் குடித்தலாலும்;* ***அகம் நிலைபெற நிலைநெறிநிறுத்தலால் -*** *பூமி இடம் (ஒரு புறம் சாயாது) நிலைபெறும்படி நிலையான முறையில் நிற்கச் செய்வதாலும்;* ***நெடு மலையினை மண் உற அழுத்தலால் -*** *பெருமலைகளை மண்ணிற் புகும்படிஅழுத்திவிடுதலாலும்;* ***தமிழ்த் தலைவனை -*** *தமிழன் தலைவனாகிய அகத்திய முனிவனை;* ***நிகர்ந்தது*** *- ஒத்துள்ளது.*

*கடலைக் குடித்தல், பூமியை ஒருபாற் சாயாது நிறுத்தல், மலையை அழுத்தல் மூன்றும்அகத்தியன் செய்த செயல்கள், சேனைகள் கடலைக் குடிக்கின்றன. பூமி எங்கும் இடமின்றிப்பரந்துள்ளபடியால் ஒருபால் சாயாது நிறுத்துகின்றன. மலைகள் மேலேறிச் செல்லும்போது சேனைப்பாரம் தாங்காமல் மலைகள் உள்ளே அழுந்துகின்றன; ஆதலால் மலைகளை அழுத்துகின்றன; எனவே, தமிழ்த் தலைவனை நிகர்த்தது சேனை என்றார். அகத்தியன் தமிழ்த் தலைவன் என்பது தொல்லோர் வழக்கு நோக்கி உணர்க. இந்திரன் பகைவனாகிய விருத்திராசுரன் கடலிற் புக்கு ஒளிந்துகொள்ள இந்திரன் முதலிய தேவர்கள் வேண்ட அகத்தியர் அக்கடல் நீரை உழுந்தளவாக்கி அகங்கையில் இட்டுக் குடித்துக் கடலை வற்றச் செய்தனர் என்னும் வரலாற்றைத் திருவிளையாடற் புராணம் இந்திரன் பழிதீர்த்த படலத்துட் கண்டுணர்க(திருவிளை. மதுரைக். இந்திரன்பழி. 49 - 53)*

*மேரு மலையில் பார்வதி தேவியார் திருமணத்தின்போது தேவரெல்லாரும் கூடிச் சேர இருத்தலின் வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்துவிடச் சிவபெருமான் இதைச் சமப்படுத்தத் தக்கவர் அகத்தியரே என்பது கருதி. அவரைத் தெற்கே அனுப்ப, அவர் வந்து பொதியமலைக்கண் இருத்தலின் பூமி நேராயிற்று என்னும் வரலாற்றையும், அவ்வாறு வருங்கால் இடையில் விந்தியமலை செருக்கடைந்து பிற மலைகளிலும் மேல் உயர்ந்துவிட, தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்க, தென்திசைவரும் அகத்தியர் விந்தி மலையின் உச்சியில் தம் கையை வைத்து அழுத்த அம்மலை பாதலத் தழுந்தியது என்னும் வரலாற்றையும் கந்த புராணத்தால் அறியலாம்.*

*அகம் - பூமி "மனமும் உள்ளும் மனையும் பாவமும், புவியும் மரப்பொதுப் பெயரும் அகமே" என்பது (பிங்கலந்தை.) காண்க. 'ஏ' ஈற்றசை. 44*

***2288. அறிஞரும், சிறியரும் ஆதி அந்தமா***
***செறி பெருந் தானையும் திருவும் நீங்கலால்***
***குறியவன் புனல் எலாம் வயிற்றில் கொண்டநாள்***
***மறிகடல் ஒத்தது - அவ் அயோத்தி மாநகர்.***

***அவ் அயோத்தி மாநகர்** - அந்த அயோத்தி மா நகரமானது; **அறிஞரும்,சிறியரும் ஆதி அந்தமா** - அறிவானமைந்த பெரியோர் முதல் சிறியவர் வரை (அனைவரும்); **செறி பெருந் தானையும்** - நெருங்கியுள்ள பெரிய சேனையும்; **திருவும்** -செல்வமகளும்; **நீங்கலால்** - நீங்கிக் காடு நோக்கிச் சென்றுவிட்டபடியால்; **குறியவன்** - அகத்திய முனிவன்; **புனல் எலாம் வயிற்றில் கொண்ட நாள் -** (தன்)நீரை யெல்லாம் வயிற்றில் அடக்கிய அந்நாளில்; **மறிகடல் ஒத்தது** - அலைவீசும் கடல்வறிதானாற் போன்றது.*

*வெறுமை அடைந்த அயோத்திக்கு அகத்தியர் உண்ட கடல் உவமையாயிற்று. "அறந்துறந்து ஈட்டுவார்தம் அருள்பெற்ற செல்வம் போல, வறந்தன படுநீர்ப் பௌவம்" என்பதனால் (திருவிளை. மதுரைக். இந்திரன்பழி. 54) அகத்தியர் உண்ட கடலின் இயல்பினை அறிக. இறுகாறும் சேனைஎன்று கூறினாரேனும், அயோத்தி நகர ஆடவர் மகளிர் அனைவரையும் உள்ளடக்கியே அவ்வாறு கூறிச் செல்கின்றார் என்பதைக் கவிப் போக்கால் காணலாம். 45*

***2289. பெருந் திரை நதிகளும், வயலும், பெட்புறு***
***மரங்களும், மலைகளும், மண்ணும், கண்ணுறத்***

**திருந்தல் இல் அயோத்தி ஆம் தெய்வ மா நகர்**
**அருந்தெரு ஒத்தது - அப் படை செல் ஆறு அரோ.**

***அப்படை செல் ஆறு*** *- அந்தப் படைகள் செல்கின்ற வழி;* ***பெருந்திரை நதிகளும்*** *- பேரலைகளைக் கொண்ட நதிகளும்;* ***வயலும் -; பெட்புறு*** *- விரும்புதல் அமைந்த;* ***மரங்களும் -; மலைகளும் -; மண்ணும் -; கண்ணுற*** *- பக்கங்களில் கட் புலனாகத் தோன்ற, (அதனால்);* ***அயோத்தி ஆம் தெய்வ மா நகர்*** *- அயோத்தியாகிய தெய்வத் தன்மை வாய்ந்த பெரு நகரத்தின்;* ***திருந்தல் இல் அருந்தெரு ஒத்தது*** *- திருத்தமற்ற அரியதெருவைப் போன்றது.*

*படைகள் செல்கிற வழியில் நதி, வயல், மரம், மலை, மண் காணப்படுவதால் 'திருந்தல்இல் தெரு' என்று உவமைப்படுத்தினர். படைகள் வீதியில் செய்வது வழக்கமாதலின் படைகள்செல்கின்ற இடத்தை வீதி போன்றது என்றார். மேற்செய்யுளில் அயோத்திநகர் வெறுமையானதைக் காட்டியது. இது படைசெல்லும் இடம் அயோத்தி நகரத் தெருப் போல மக்கள் கூட்டம் நிரம்பிவழிவதாயிற்று என்கிறது. 'அரோ' அசை.* ***46***

***2290.*** **'தார்கள் தாம், கோதைதாம், தாமம்தாம், தகை**
**ஏர்கள்தாம், கலவை தாம், கமழ்ந்தின்று என்பரால் -**
**கார்கள்தாம் என மிகக் கடுத்த கைம்மலை**
**வார் கடாம் அல்லது, அம் மன்னன் சேனையே.**

***அம் மன்னன் சேனை*** *- (அந்தப் ) பரதன் ஏவிய சேனையில்;* ***கார்கள்தாம் என*** *- மேகங்களே என்று சொல்லும்படி;* ***மிகக் கடுத்த கைம்மலை*** *- மிகவும் பொருந்த அமைந்தயானைகள்;* ***வார்கடாம் அல்லது*** *- பெருகவிடும் மதசலம் அல்லது;* ***'தார்கள் தாம், கோதை தாம், தாமம் தாம், ஏர்கள் தாம், கலவை தாம்*** *- தார், கோதை, தாமம், பல்வசைச் சிறப்பான அழகுப்பொருள்கள், கலவைச் சாந்து (இவற்றின்);* ***கமழ்ந்தின்று' -*** *மணம் வீசப் பெறவில்லை;* ***என்பர்*** *- என்று சொல்லுவர்.*

*தார் முதலிய அணியாமையின் அவற்றின் மணம் இல்லை என்றார். தார்- நெடுக ஆடவர்அணியும் மாலை, கோதை - மகளிர் தலையிற் சூடும் மாலை, தாமம் - வட்டமாலை என இவை மாலைவிசேடங்கள். ஒரோவழிப் பொதுப் பெயராகவும் இவை வழங்கும். கடுத்த என்பதை உவமைச் சொலாக்குக - கோபித்த யானை என்பதும் ஒன்று. 'ஏ' காரம்ஈற்றசை. 47*

***2291.*** **ஆள் உலாம் கடலினும் அகன்ற அக்கடல்,**
**தோள் உலாம் குண்டலம் முதல தொல் அணி**
**கேள் உலாம் மின் ஒளி கிளர்ந்தது இல்லையால் -**
**வாள் உலாம் நுதலியர் மருங்குல் அல்லதே.**

***ஆள் உலாம் கடலினும்*** *- மக்கள் மரக்கலத்தில் ஏறி உலாவுதற் கிடனாக உள்ளகடலைக்காட்டிலும்;* ***அகன்ற அக்கடல்*** *- விரிந்து பரந்துள்ள அச் சேனைக்கடலில்;* ***வாள் உலாம் நுதலியர்*** *- ஒளி பரந்த நெற்றியுடையமகளிரது;* ***மருங்குல் அல்லது*** *- (மின்னல் போன்ற) இடையே அல்லாமல்; (வேறாகிய)* ***தோள்***

***உலாம் குண்டலம் முதல தொல் அணி -*** *தோளின்கண் தவழ்கின்ற காதணியாகிய குண்டலம்முதலாகிய பழமையாக அணியும் அணிகளின்;* ***கேழ் உலாம் மின் ஒளி கிளர்ந்தது இல்லை -*** *நிறம் விளங்குகின்ற மின்னல் ஒளி மிக்கு ஒளிர்வது இல்லை.*

*பெண்கள் இடைமின்னல் ஒளி அன்றி, வேறு அணிகளின் மின்னொளி இல்லை என்றபடி. கேழ் -நிறம்; எதுகை நோக்கிக் கேள் என நின்றது. 'கெழு' என்னும் உரிச்சொல் 'கேழ்' எனநின்றது. ''குருவும் கெழுவும் நிறன் ஆகும்மே'' (தொல். - சொல். உரி. 5) என்பது காண்க.அக்கடல் என்றது சேனையை; உருவகம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***48***

## *2292. மத்தளம் முதலிய வயங்கு பல் இயம்*
## *ஒத்தன சேறலின், உரை இலாமையின்,*
## *சித்திரச் சுவர் நெடுஞ் சேனை தீட்டிய*
## *பத்தியை நிகர்த்தது - அப் படையின் ஈட்டமே.*

***அப் படையின் ஈட்டம்*** *-அந்தச் சேனைத் தொகுதி;* ***மத்தளம் முதலிய வயங்கு பல்இயம் -*** *மத்தளம் முதலாகிய விளங்குகின்ற பல வாத்தியங்கள்;* ***உரை இலாமையின் ஒத்தனசேறலின்*** *- ஒலிக்காமல் பொருந்திச் செல்கின்ற படியால் (ஒலியவிந்த படைச்செலவு);* ***நெடுஞ் சுவர்*** *- நீண்ட சுவரில்;* ***சித்திரம் தீட்டிய*** *- சித்திரமாக வரைந்த;* ***சேனைப் பத்தியை நிகர்த்தது -*** *சேனை வரிசையை ஒத்துள்ளது.*

*சேனை வரிசைப் படம் ஒன்று சுவரில் தீட்டப்பெற்றாற்போல ஒலியவிந்த படைவரிசை செல்வதுஉள்ளது என்றார். ஒலிக்காமல் இசைக்கருவிகளைச் சேனை சுமந்து செல்வானேன் என்னில், இராமனை அழைத்து வரும்போது இசைத்தற்கு வேண்டுதலின் இப்போது உடன் கொண்டு சென்றார்என்க.* ***49***

## *2293. ஏடு அறு கோதையர் விழியின் எய்த கோல்*
## *ஊடு உற உரம் தொளைத்து, உயிர் உணாவகை.*
## *ஆடவர்க்கு அரும் பெருங் கவசம் ஆயது -*
## *காடு உறை வாழ்க்கையைக் கண்ணன் நண்ணவே.*

***கண்ணன்*** *- கண்ணாற் செய்யப்படும் அருளிற் சிறந்தவனாகிய இராமன்;* ***காடு உறவாழ்க்கையை நண்ண*** *- காட்டின்கண் வசிக்கும் வாழ்க்கையை மேற்கொள்ள, (அச்செயல்);* ***ஆடவர்க்கு*** *- ஆண்களுக்கு எல்லாம்;* ***ஏடு அறு கோதையர் -*** *புறவிதழ் நீக்கிய மலர் கொண்டு தொடுத்த மாலை அணிந்த மகிளிர்;* ***விழியின் எய்த கோல் -*** *கண்ணிலிருந்து எய்த காதற் பார்வை அம்பானது;* ***உரம் ஊடு உறத் தொளைத்து உயிர் உணா வகை*** *- மார்பினை ஊடுருவிச் சென்று அவர்கள் உயிரைப் போக்காதபடி;* ***அரும்பெரும் கவசம் ஆயது*** *- அரிய பெரிய கவசம் அணிதல் போன்றதாய்ப் பாதுகாப்பானது.*

*இராமன் வனம் போய துயரால், பெண்டிரும் காதற் பார்வை இழந்தனர், ஆடவரும்அப்பார்வையால் துன்புறுதல் இலர் என்று இருவர்க்குமே இதனைக் கொள்க. 'ஏ' காரம்ஈற்றசை.* ***50***

***2294. கனங் குழைக் கேகயன் மகளின் கண்ணிய***
***சினம் கிடந்து எரிதலின், தீர்ந்தவே கொலாம் -***
***அனங்கன் ஐங் கொடுங் கணை அடரும் ஆடவர்***
***மனம் கிடந்து உண்கில, மகளிர் கொங்கையே?***

***அனங்கன் ஐங்கொடுங்கணை அடரும் ஆடவர் மனம்*** *- மன் மதனது (பிறரை வருத்தும்)ஐந்து கொடிய கணையால் நெருக்கப்படும் ஆண்களது மணம்* ***; மகளிர் கொங்கை*** *- பெண்களது முலைகளில்;* ***கிடந்து உண்கில -*** *இருந்து தங்கி அநுபவியாமல் போயின;* ***கனம் குழை கேகய மகளின் கண்ணிய சினம் -*** *கனமான காதணி அணிந்த கைகேயியின்மேல் (மகளிர்) கருதியசினம்;* ***கிடந்து*** *- பெண்கள் இடத்தே தங்கி;* ***எரிதலின்*** *- எரிகின்றகாரணத்தால்;* ***தீர்ந்தவே கொல்*** *- (கொங்கைகள் கடும் என்று கருதித்)தவிர்ந்தனவோ?*

*கைகேயி ஒருத்தியால் எல்லா மகளிரையும் தயரதன் வெறுத்தான் என்பதனை முன்னர்க் (1516) கூறினார். கைகேயிமேல் உண்டாகிய நெருப்பு அனைத்து மகளிரிடத்திலும் தங்கியிருப்பதாகக் கருதி ஐங்கணை அடரவும் ஆடவர் கொங்கையை அநுபவியாது விட்டனர். ஐங்கணை - மலர் அம்பு ஐந்து, தாமரை, முல்லை, மா, அசோகு, நீலோற்பலம்ஆகிய ஐந்து மலர்களும் மன்மதன் அம்புகளாகும். "கொல்" ஐயம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***51***

*பரதன் மரவுரி அணிந்து சத்துருக்கனனுடன் தேரில் சேறல்*

***2295. இன்னணம் நெடும் படை ஏக, ஏந்தலும்,***
***தன்னுடைத் திரு அரைச் சீரை சாத்தினான்;***
***பின் இளையவனொடும், பிறந்த துன்பொடும்,***
***நல் நெடுந் தேர்மிசை நடத்தல் மேயினான்.***

***இன்னணம் -*** *இவ்வாறு;* ***நெடும்படை ஏக*** *- பெருஞ்சேனை செல்ல;* ***ஏந்தலும் -*** *பரதனும்;* ***தன்னுடைத் திரு அரை*** *- தன்னுடைய அழகிய இடுப்பிலே;* ***சீரைசாத்தினான்*** *- மரவுரியைத் தரித்து;* ***பின் இளையவனொடும் -*** *பின்னே தொடர்ந்துவரும் தம்பியாய சத்துருக்கனனொடும்;* ***பிறந்த துன்பொடும்*** *- (மனத்துள்) தோன்றியதுக்கத் தோடும்;* ***நல்நெடுந் தேர்மிசை*** *- நல்ல பெரிய தேர்மீது ஏறி;* ***நடத்தல் மேயினான் -*** *(வனத்துக்குச்) செல்லத் தொடங்கினான். 'திருஅரை சீரை சாத்தினான்' என்றது இதுகாறும் சிறப்பு மிக்க பொன்னாடைகளை அணிந்தது என அதன் சிறப்பு உணர்த்தற்கு. மேலும் மேலும் பரதனுக்குத் துக்கம் பொங்குதலைப் 'பிறந்ததுன்பொடும்' எனக் குறித்தார்.*
***52***

*தாயர் முதலியோர் பரதனுடன் வருதல்*

***2296. தாயரும், அருந் தவத்தவரும், தந்தையின்***
***ஆய மந்திரியரும், அளவு இல் சுற்றமும்,***
***தூய அந்தணர்களும், தொடர்ந்து சூழ்வரப்***
***போயினன் - திரு நகர்ப் புரிசை வாயிலே.***

***தாயரும்*** - *(கோசலை, கைகேயி, சுமித்திரை முதலிய) தாய்மார்களும்;* ***அருந்தவத்தவரும்*** - *செய்தற்கரிய தவத்தைச் செய்த முனிவர்களும்;* ***தந்தையின் ஆயமத்திரியரும்*** - *தன் தந்தையாகிய தயரதன் கண் பொருந்திய மந்திரிமார்களும்;* ***அளவுஇல் சுற்றமும் -*** *அளவிட முடியாத பலவாகிய சுற்றத்தார்களும்;* ***தூய அந்தணர்களும்*** *-தூய்மையான வேதியர்களும்;* ***தொடர்ந்து சூழ்வர*** - *தன்னைப் பின்பற்றிச் சுற்றிவர;* ***திருநகர்ப் புரிசை வாயில் போயினன்*** - *அழகிய அயோத்தி நகரத்து மதிலின் (முதன்மையான)வாயிலைச் சென்றடைந்தான்.*

*தந்தை போலப் பாராட்டத் தகும் மந்திரியர் என்றும் ஆம். அளவில் சுற்றம் - உறவினர்களையும், அரசச் சுற்றத்தையும் குறிப்பிடும். இராமனை அழைத்து வருதலில்அனைவர்க்கும் உள்ள ஆர்வ மிகுதி இதனால் புலப்படும். 'ஏ' காரம் ஈற்றசை.* ***53***

*சத்துருக்கனன் கூனியைத் துன்புறுத்தப் பற்றவே, பரதன் விலக்கல்*

***2297. மந்தரைக் கூற்றமும், வழிச் செல்வாரொடும்***
***உந்தியே போதல் கண்டு, இளவல் ஓடி, ஆர்த்து***
***அந்தரத்து எற்றுவான் அழன்று பற்றலும்,***
***சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்;***

***இளவல்*** - *நால்வரினும் இளையவனாகிய சத்துருக்கனன்;* ***வழிச் செல்வாரொடும் -*** *(இராமனைக் கண்டு அழைக்கக் காடு நோக்கி) வழிச்செல்லும் அவர்களோடு;* ***மந்தரைக் கூற்றமும்*** - *மந்தரையாகியயமனும்;* ***உந்தியே போதல் கண்டு*** - *மற்றவர்களைத் தள்ளிக்கொண்டுமுந்திச் செல்லுதல் கண்டு;* ***ஓடி*** - *விரைந்து சென்று;* ***ஆர்த்து*** - *பேரொலிசெய்து;* ***அழன்று*** - *கோபித்து;* ***அந்தரத்து எற்றுவான்*** - *ஆகாயத்தில் மேலே வீசுமாறு;* ***பற்றலும்*** - *(கையாற்) பற்றிக் கொள்ளுதலும்;* ***சுந்தரத் தோளவன்*** - *அழகிய திருத் தோள்களை உடைய பரதன்;* ***விலக்கி*** - *(அவ்விடத்திலிருந்த மந்தரையை);* ***விடுவித்துச் சொல்லுவான் -*** *(தம்பிக்குச்) சொல்லலானான். தயரதன் உயிர் போதற்கு மூலகாரணம் மந்தரை ஆதலின், 'மந்தரைக் கூற்றம்' என்றார். நம்செயல் தடைபட்டுவிடுமோ; இனி நடப்பன காண்போம் என்னும் ஆசையால் மந்தரை உடன் செல்லவிரைந்தாள் என்க. கண்டு, ஓடி, ஆர்த்து, எற்றுவான் பற்றலும் எனமுடிக்க.* ***54***

***2298. 'முன்னையர் முறை கெட***
***முடித்த பாவியைச்***
***சின்னபின்னம் செய்து, என்***
***சினத்தைத் தீர்வெனேல்,***
***"என்னை இன்று என் ஐயன் துறக்கும்"***
***என்று அலால்,***
***"அன்னை" என்று, உணர்ந்திலென்,***
***ஐய! நான்' என்றான்.***

***ஐய!*** *- சத்துருக்கனனே!;* ***'முன்னையர் முறைகெட*** *- (நம் குலத்து) முன்னோர்களின் முறைமை சிதைய;* ***முடித்த பாவியை*** *- (வரத்தின் மூலமாகத்) தன்*

*ஆசையைநிறைவேற்றிக் கொண்ட (என் தாயாகிய) பாவியை;* ***சின்ன பின்னம் செய்து*** *- கண்டதுண்டம் செய்து;* ***என் சினத்தைத் தீர்வெனேல் -*** *என் கோபத்தைத் தீர்த்துக்கொள்வேனானால்;* ***என் ஐயன் -*** *என் தலைவனாகிய இராமன்;* ***இன்று என்னைத் துறக்கும்-*** *இன்றே என்னைத் தம்பியல்லன் என்று துறந்துவிடுவான்;* ***என்று அலால்*** *- என்றுகருதி அதனால் அமைதியாக இருந்தேனே அல்லாமல்; (இவளை)* ***'அன்னை' என்று நான் உணர்ந்திலென்*** *- 'தாய்' என்று கருதி நான் அமைதியாக இருந்தேனில்லை;* ***என்றான் -.***

*"ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால், தாய் எனும் பெயர் எனைத் தடுக்கற் பாலதோ"என்ற பரதன் கூற்றை (2173) இங்கு ஒப்பிடுக. கூனியைப் போலன்றித் தன்தாய் கைகேயி, நடந்தஅவலங்களுக்கு நேரடிக் காரணம் ஆகவும் அவளைக் கொல்லாது இதுகாறும் நின்றது இராமன் மனத்துக்குஉவப்பாய் இராது அச்செயல் என்பதனாலேயே ஆம் என்றான் பரதன்.* ***55***

## *2299. 'ஆதலால், முனியும் என்று ஐயன், அந்தம் இல்*
## *வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும்,*
## *கோது இலா அரு மறை குலவும் நூல் வலாய்!*
## *போதும் நாம்' என்று கொண்டு, அரிதின் போயினான்.*

***'கோது இலா அருமறை குலவும் நூல்வலாய்!*** *- குற்றம் இல்லாத அரிய மறை பொருள்களைத்தன்னிடத்தே கொண்டுள்ள வேத நூலில் தேர்ச்சி பெற்றவனே!;* ***அந்தம் இல் வேதனைக் கூனியை*** *- முடிவில்லாத வேதனைகளை அனைவர்க்கும் உண்டாக்கிய கூனியை;* ***வெகுண்டும் என்னினும்*** *- மிகவும் (வெறுத்துக்) கோபிக்கிறோம் ஆனாலும்;* ***ஐயன் முனியும் ஆதலால்*** *-இராமபிரான் வெறுப்பான் என்ற காரணத்தால்;* ***என்று*** *- என்று கருதி;* ***நாம் போதும்*** *- நாம் அவளை விட்டுப் போவோம்;* ***என்று அரிதின் கொண்டு*** *- என்று சொல்லிச்சிரமப்பட்டு (அவனைத் தடுத்து) அழைத்துக்கொண்டு;* ***போயினான்*** *- சென்றான்.*

*வெகுண்டும் - கோபித்தோம்; தன்மைப் பன்மை வினைமுற்று. வேதம் வல்ல நீ ஓர்அடிச்சியின் பொருட்டுச் சினம் கோடல் தகுதி அன்று என்று குறிப்பித்தானாம்; என்றது பரதன்தாயைச் சீறாது விட்டதற்கு மேற்குறித்த காரணத்தைச் சுட்டியது எனலும் ஆம்.* ***56***

*பரதன் இராமன் தங்கிய சோலையில் தங்குதல்*

## *2300. மொய் பெருஞ் சேனையும் மூரி ஞாலமும்*
## *கைகலந்து அயல் ஒரு கடலின் சுற்றிட,*
## *ஐயனும் தேவியும் இளைய ஆளியும்*
## *வைகிய சோலையில் தானும் வைகினான்.*

***மொய் பெருஞ் சேனையும்*** *- நெருங்கிய பெரிய சேனையும்;* ***மூரி ஞாலமும் -*** *பெருமை பொருந்திய அயோத்தி மக்களும்;* ***கைகலந்து -*** *ஒன்று திரண்டு;* ***அயல் ஒருகடலின் சுற்றிட*** *- பரதனின் பக்கல் ஒரு கடல் போலச் சுற்றியிருப்ப;* ***ஐயனும் தேவியும்இளைய ஆளியும் வைகிய சோலையில் -*** *இராமனும், சீதையும், இளைய*

*யாளிபோல்வானாகிய இலக்குவனும் தங்கியிருந்த அந்தச் சோலையிலேயே;* ***தானும்*** *- (பரதன்) தானும்;* ***வைகினான்*** *- (அன்று) தங்கினான்.*

*பரதன் இராமன் முதலில் தங்கியிருந்த சோலையில் தங்கினன் - அன்பு கலந்துறவு கொண்டநெஞ்சம் உடையவர்களுக்குப் பயின்ற பொருள்களைக் கண்ட வழி பயின்றாரையே கண்டாற் போலும்ஆதலின் இராமன் தங்கிய சோலை பரதனுக்குத் துயராற்றும் மருந்தாயிற்று. ஆளி - உவமையாகுபெயர்.* ***57***

*இராமன் தங்கிய புல்லனை அருகில் மண்ணில் பரதன் இருத்தல்*

***2301. அல் அணை நெடுங் கணீர் அருவி ஆடினன்,***
***கல் அணை கிழங்கொடு கனியும் உண்டிலன்,***
***வில் அணைந்து உயர்ந்த தோள் வீரன் வைகிய***
***புல் அணை மருங்கில், தான் பொடியின் வைகினான்.***

*(பரதன்)* ***அல்*** *- இரவில்;* ***நெடுங்கண் அனை நீர் அருவி ஆடினன்-*** *(தன்) நீண்ட கண்களிலிருந்து வருகின்ற நீராகிய அருவியில் மூழ்கி;* ***கல் அணை கிழங்கொடு கனியும்உண்டிலன் -*** *மலையில் விளையும் கிழங்குகளோடு பழங்களையும் புசியாது;* ***வில் அணைத்து உயர்ந்த தோள் வீரன் வைகிய*** *- வில்லைத் தழுவியிருக்கும் உயர்ந்த தோள்களை உடைய இராமன் தங்கியிருந்த;* ***புல்லணைமருங்கில் -*** *புல்லாலாகிய படுக்கையின் பக்கத்தில்;* ***தான் -; பொடியின் -*** *மண்புழுதியின்கண்;* ***வைகினான் -*** *தங்கியிருந்தான்.*

*இராமனைப் போலவே தன்னையும் அத்தகைய துன்பங்களுக்கு ஆட்படுத்திக்கொள்ளும் மனநிலையில்பரதன் உண்ணாமல் உறங்காமல் புல்லணைப் பக்கலில் மண்ணில் தங்கினான் ஆம். இராமன் புல்அணையில் தங்களை 'எம்பிரான் புல் அணை வைக' என்ற (4276) இலக்குவன் கூற்றாலும் உணர்க. இரவில் கண்ணீர் அருவி ஆடினன் என்பதால் உறங்காமலும் இருந்தான்என்பதாம்.* ***58***

*பரதன் நடந்து செல்லுதல்*

***2302. 'ஆண்டு நின்று, ஆண்தகை அடியின் ஏகினான்***
***ஈண்டிய நெறி' என, தானும் ஏகினான் -***
***தூண்டிடு தேர்களும் துரக ராசியும்***
***காண்தகு கரிகளும் தொடர, காலினே,.***

***'ஆண்டு நின்று*** *- அங்கிருந்து;* ***ஆண்தகை*** *- ஆடவர் திலகனாய இராமன்;* ***ஈண்டிய நெறி*** *- நெருங்கிய வழியிலே;* ***அடியின் ஏகினான் -*** *காலால் நடந்துசென்றான்;* ***என -*** *என்று (அறிந்து);* ***தானும்*** *- பரதனும்;* ***தூண்டிடு தேர்களும்*** *- செலுத்தப்படும் தேர்களும்;* ***துரகராசியும் -*** *குதிரைத் தொகுதிகளும்;* ***காண்தகுகரிகளும்*** *- காட்சிக்குப் பொருந்திய யானைகளும்;* ***தொடர -*** *(தன்னைப்)பின்பற்றிவர;* ***காலின் ஏகினான் -*** *காலால் நடந்து சென்றான்.*

*இராமன் நடந்து சென்ற பாதையில் தானும் நடந்தே செல்லவேண்டும் என நினைத்தது அவன்அன்பு மிகுதியைப் புலப்படுத்தும். ''காண்தகு கரிகள்'' என்பதனை, ''யானையுடைய படை காண்டல் மிகஇனிதே'' என்பதனுடன் (இனியவை. 4) ஒப்பிடுக. ''படை தனக்கு யானை வனப்பாகும்'' என்பதும்(சிறுபஞ்ச. 5) இக்கருத்தை வலியுறுத்தும். 'ஏ' காரம்ஈற்றசை.* **59**

## *கங்கை காண் படலம்*

*பரதன் கங்கையைக் காண்கின்ற படலம் எனப் பொருள்படும். இராமன் கங்கையைச் சென்றடைந்த பகுதி முன்னர் (6)க் கங்கைப் படலம் எனப் பெற்றது போலவே பரதன் கங்கையைக் காணும் பகுதியும் கங்கை காண் படலம் என்றாயிற்று. இராமன் காடு செல்கிறபோது வழியில் கங்கைக் கரை அடைகிறான் ஆதலின், கங்கைப் படலம் எனப்பெற்றது; ஆனால், பரதனோ இராமனைக் காண வேண்டும் என்னும் காட்சி நோக்கத்தின் முனைப்பில் கங்கையை அடைதலின் கங்கைப் படலம் என்னாது கங்கை காண் படலம் என்றாயிற்று.*

*பரதன் நடந்து சென்று கங்கைக் கரை அடைகிறான். சேனைகளோடு வரும் பரதனைக் கண்டு குகன் ஐயமுற்றுக் கங்கையின் தென்கரை நின்று தன் சேனைகளுக்குத் தயார் நிலையில் இருக்க அறைகூவிக் கட்டளை இட்டுப் பரதனைக் காண வடகரைக்குத் தனி நாவாயில் வருகிறான். சுமந்திரனால் இராம சகோதரன் குகன் என்பதை அறிந்த பரதனும் ஆர்வத்தோடு அவனை எதிர்நோக்குகிறான். பரதன் நிலை கண்டு திடுக்குற்ற குகன் ஐயம் நீங்கி ஐயப்பட்டதற்கு அவலப்படுகிறான். பரதனைப் பாராட்டி இராமன் உறைந்த, உறங்கிய இடங்களைக் காட்டி, இலக்குவன் செய்த செயலையும் 'எடுத்துச் சொல்ல, அது கேட்ட பரதன் பெரிதும் வருந்துகிறான். குகன் ஆணையால் நாவாய்கள் வரப் பரதனும், இளவலும், தாயரும், உடன்வந்தோரும், சேனைகளும் கங்கையின் தென்கரை அடைகிறார்கள். இடையே நாவாயில் தாய்மார்களைப் பரதன் குகனுக்கு அறிமுகப்படுத்தக் குகன் வணங்குகிறான். தென்கரை சேர்ந்து தாயர்பல்லக்கில் வர, நடந்து வரும் பரதனைப் பரத்துவாச முனிவர் வரவேற்கிறார் என்பதுவரை உள்ள செய்திகள் இப்படலத்திற் கூறப்பெறுகின்றன.*

*பரதன் கங்கைக் கரை அடைதல்*

*கலிவிருத்தம்*

***2303. பூ விரி பொலன் கழல், பொரு இல் தானையான்,***
***காவிரி நாடு அன்ன கழனி நாடு ஒரீஇ,***
***தாவர சங்கமம் என்னும் தன்மைய***
***யாவையும் இரங்கிட, கங்கை எய்தினான்.***

***பூவிரி*** *- பூத் தொழிலாற் சிறப்புற்ற;* ***பொலன்கழல் -*** *பொன்னாற் செய்யப்பெற்ற வீரக்கழலை அணிந்த;* ***பொருஇல் தானையான்*** *- ஒப்பற்ற சேனையை உடையபரதன்;* ***காவிரி நாடு அன்ன*** *- காவிரி நதியால் வளம்பெறும் (தமிழகத்துச்) சோழ நாட்டை ஒத்த;* ***கழனி நாடு ஒரீஇ*** *- வயல்வளம் பொருந்திய கோசல நாட்டை விட்டு நீங்கி;* ***தாவர சங்கமம் என்னும் தன்மையயாவையும்*** *- நிலைத்திணை; இயங்கு திணை என இரண்டாகப் பிரிக்கப்பெறும் எல்லாஉயிர்களும்;* ***இரங்கிட -*** *(தன் நிலை கண்டு) வருந்த;* ***கங்கை எய்தினான்*** *-கங்கைக் கரையை அடைந்தான்.*

*பூ - பொலிவு என்றும் ஆம். அரசகுமாரன் மரவுரி தரித்துத்துயரக் கோலத்தோடு வருதல் கண்டு மனம் தாளாமல் எல்லா உயிர்களும் இரங்கின. ஏழு வகையானஉயிர் வர்க்கங்களைத் தாவரம், சங்கமம் என்ற இரண்டில் அடக்கினார். ஒரே இடத்தில்நிலையாக இருப்பன நிலைத்திணையாகிய மரம், செடி முதலிய*

*தாவரங்களாம். இடம் விட்டுப்பெயர்ந்து செல்லும் தன்மை படைத்த ஊர்வன. நீர் வாழ்வன, பறவை, விலங்கு, மனிதர், தேவர் முதலியவை இயங்கு திணையாகிய சங்கமம் ஆகும்.*

*கம்பர் தம்முடைய நாடாகிய சோழநாட்டைக் கோசல நாட்டுக்கு உவமையாக்கினார். உவமைபொருளினும்உயர்ந்ததாக இருக்கவேண்டும் என்பது இலக்கணம். "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை"(தொல். பொருள். உவம. 3) என்பதனால் இங்குக் கோசல நாட்டினும் சோழ நாடு உயர்ந்தது என்றாயிற்று இங்ஙனம் தம் நாட்டை மீக்கூறியது கம்பரது தாய்நாட்டுப் பற்றைக் காட்டும். சோழநாடு போலவே கோசல நாட்டிலும் பயிரில்லாத வெற்றிடம் இல்லை என்பதாம்.*

*கங்கைக் கரை அடைந்த சேனையின் சிறப்பும் மிகுதியும்*

***2304. எண்ண அருஞ் சுரும்பு தம் இனத்துக்கு அல்லது,***
***கண் அகன் பெரும் புனல் கங்கை எங்கணும்***
***அண்ணல் வெங் கரி மதத்து அருவி பாய்தலால்,***
***உண்ணவும், குடையவும், உரித்து அன்று ஆயதே.***

***கண் அகன்*** *- இடம் அகன்ற;* ***பெரும் புனல்*** *- மிக்க நீரை உடைய;* ***கங்கை -*** *கங்கையாறு;* ***அண்ணல் -*** *பெருமையுடைய;* ***வெங்கரி -*** *கொடிய யானைகளின்;* ***மதத்து அருவி*** *- மத நீர்ப் பெருக்காகிய அருவி;* ***எங்கணும் பாய்தலால்*** *- எல்லா இடங்களிலும் பாயப் பெறுதலால்;* ***எண்ண அரும் சுரும்பு தம் இனத்துக்கல்லது*** *- கணக்கிட முடியாத வண்டுக் கூட்டங்களுக்கெல்லாமல் (ஏனைய உயிர்களுக்கு);* ***உண்ணவும்*** *- குடிக்கவும்;* ***குடையவும் -*** *குளித்து மூழ்கவும்;* ***உரித்தன்று ஆயது*** *- உரிமையுடையதல்லாததாக ஆயிற்று.*

*கங்கை நீரினும் யானைகளின் மதநீர்ப் பெருக்கு மிகுதி என்றதாம். எனவே, யானைகளின்மிகுதி கூறியவாறு. வண்டுகள் மதநீரிற் படிந்து குடைந்து உண்ணும் இயல்பின ஆதலின் அவற்றுக்குஇப்போது கங்கை நீர் உரியதாயிற்று. மதம் பிடித்த யானையின் உடல் வெப்பம் அதிகமாகஇருக்கும் ஆதலின், வெம்மையுடைய கரி என்றும் பொருள்படும். 'ஏ' காரம்ஈற்றசை. 2* ***2305. அடிமிசைத் தூளி புக்கு, அடைந்த தேவர்தம்***
***முடி உறப் பரந்தது ஓர் முறைமை தேர்ந்திலெம்;***
***நெடிது உயிர்த்து உண்டவும், நீந்தி நின்றவும்***
***பொடிமிசைப் புரண்டவும், புரவி ஈட்டமே.***

***அடிமிசைத் தூளி புக்கு*** *- (குதிரைகளின்) அடியின் மேல் எழுந்த தூசி(அமரருலகத்தில்) புகுந்து;* ***அடைந்த தேவர்தம்*** *- அங்கே உள்ள தேவர்களது;* ***முடி உற*** *- தலைமீது படும்படி;* ***பரந்தது -*** *(தேவருலகு முழுமையும்) பரவியது (ஆகிய);* ***ஓர் முறைமைதேர்ந்திலெம்*** *- ஒரு தன்மையை (அனுமானிக்க முடிகிறதன்றி) மனிதராகிய (எம்மால்) ஆராய்ந்தறிய இயலவில்லை;* ***நெடிது உயிர்த்து உண்டவும்*** *- பெருமூச்சு விட்டு (நீரைப்)பருகியவையும்;* ***நீந்தி நின்றவும்*** *- (நீரில்) நீந்திக்கொண்டு இருந்தவையும்;* ***பொடிமிசைப் புரண்டவும் -*** *மண்ணில் விழுந்து புரண்டவையும்; (எல்லாம்)* ***புரவி ஈட்டமே*** *- குதிரைத் தொகுதிகளே. (வேறில்லை)*

*புழுதி, மேல் படர்ந்து சென்று வானுலகத்தில் தேவர்களை முழுக்காட்டிய செய்தி நாம்அறியோம். ஆயினும், இங்கே நீரிலும் நிலத்திலும் நின்றவை யெல்லாம் குதிரைகளே என்றதுகுதிரைப் படையின் மிகுதி கூறியவாறு. 'ஏ' காரம் ஈற்றசை.*
***3***

## *2306. பாலை ஏய் நிறத்தொடு, பண்டு தான் படர்*
## *ஓலை ஏய் நெடுங் கடல், ஓடிற்று இல்லையால்;-*
## *மாலை ஏய் நெடு முடி மன்னன் சேனை ஆம்*
## *வேலையை மடுத்தது, அக் கங்கை வெள்ளமே.*

***அக் கங்கை வெள்ளம்*** *- அந்தக் கங்கையாற்றின் நீர்ப் பெருக்கு;* ***பாலை ஏய்நிறத்தொடு*** *- பால் ஒத்த வெண்மை நிறத்துடன்;* ***தான் பண்டு படர் -*** *தான் முன்புசென்று சேர்கின்ற;* ***ஓலை ஏய் நெடுங்கடல்*** *- ஆரவாரம் பொருந்திய நீண்ட கடலின்கண்;* ***ஓடிற்று இல்லை*** *- சென்று கலந்தது இல்லை; (ஏன் எனில்)* ***மாலை ஏய் நெடுமுடி*** *-பூமாலை பொருந்திய நீண்ட மகுடத்தை உடைய;* ***மன்னன் சேனை ஆம் வேலையே*** *- பரதனது சேனையாகிய கடலே;* ***மடுத்தது*** *- உண்டு விட்டது.*

*பரதனது சேனைக்கடல் வழிவந்த இளைப்பினால் கங்கை நீரைப் பருகிய படியால் கங்கையில் நீரே இல்லையாகிவிட்டது; எனவே, கடலில் கங்கை கலக்கவில்லை எனஉயர்வு நவிற்சியாகக் கூறிச் சேனை மிகுதியைக் காட்டினார். 'ஓல்'-ஒலி மிகுதி. "பாலை ஏய்நிறத்தொடு....ஓடிற்றில்லை" என உரைத்து மதநீர்ப் பெருக்குக் கலந்தலாலும், சேனை மிகுதிஉழக்கலாலும் கங்கையின் கங்கையின் வெண்ணிறம் மாறிக் கடலில் கலந்தது என்பாருளர். பின்னர்ச் சேனையாம் வேலையே மடுத்தது என வருதலின் அது ஒவ்வாமை அறிக. கடலினும் சேனைமிகுதி என்பது கூறியதாம், யானை, குதிரை மிகுதி கூறினார்; இப்பாடலால் காலாட்படையின் மிகுதி கூறினார் என்றலும் ஒன்று. 'ஆல்', 'ஏ' அசைகள். 4*

சேனையின் எண்ணிக்கை

## *2307. கான்தலை நண்ணிய காளைபின் படர்*
## *தோன்றலை, அவ் வழித் தொடர்ந்து சென்றன -*
## *ஆன்றவர் உணர்த்திய அக்குரோணிகள்*
## *மூன்று பத்து ஆயிரத்து இரட்டி முற்றுமே.*

***கான் தலை நண்ணிய*** *- காட்டிடத்திற் சென்ற;* ***காளை பின்படர் -*** *இராமன்பின்னே (இராமனை நாடிச்) சென்ற;* ***தோன்றலை*** *- இராமன் பின்னே (இராமனை நாடிச்)சென்ற;* ***தோன்றலை*** *- பரதனை;* ***அவ்வழி -*** *அந்த வழியிலே;* ***தொடர்ந்து சென்றன*** *- பின்பற்றிச் சென்ற சேனைகள்;* ***முற்றும் -; ஆன்றவர் உணர்த்திய*** *-பெரியோர்களால் கணக்கிட்டு உணர்த்தப்பெற்ற;* ***மூன்று பத்து ஆயிரத்து இரட்டி*** *-அறுபதினாயிரம்;* ***அக்குரோணிகள்*** *- அக் குரோணிகள் ஆகும்.*

*அக்குரோனி என்பது ஓர் எண்ணம். யானை இருபத்தோராயிரத் தெண்ணூற்றெழுபது (21870), தேர்இருபத்தோராயிரத் தெண்ணூற் றெழுபது (21870). குதிரை அறுபத்தையாயிரத்து அறுநூற்றுப் பத்து (65610), காலாள் இலக்கத்*

*தொன்பதினாயிரத்து முந்நூற்றைம்பது (190350) ஆக இரண்டு இலட்சத்துப் பதினெண்ணாயிரத் தெழுநூறு கொண்டது (218700) ஓர் அக்குரோணி. இப்படிஅறுபதினாயிரம் அக்குரோணி சேனைகள் உடன் சென்றன என்க. மகாசக்கரவர்த்திகளுக்கு எல்லாம்அறுபதினாயிரம் என்றல் நூல் மரபு என்பர் அக்குரோணி - அகௌஹிணீ என்னும் வடிசொற் சிதைவு என்பர். 'ஏ' ஈற்றசை.*
***5***

*பரதன் சேனையுடன் வருதல் கண்டு குகன் ஐயுற்றுச் சீற்றமுறுதல்*

***2308. அப் படை கங்கையை அடைந்த ஆயிடை,***
***'துப்புடைக் கடலின் நீர் சுமந்த மேகத்தை***
***ஒப்புடை அண்ணலோடு உடற்றவே கொலாம்***
***இப் படை எடுத்தது?' என்று, எடுத்த சீற்றத்தான்.***

***அப்படை** - அந்தச் சேனை; **கங்கையை அடைந்த ஆயிடை** - கங்கைக் கரையைநெருங்கிய அச்சமயத்தில் (அது கண்டு) 'குகன் எனப் பெயரிய கூற்றின் ஆற்றலான்' (2309); **இப்படை எடுத்தது** - இந்தச் சேனை புறப்பட்டது; **துப்பு உடைக் கடலின் நீர் சுமந்தமேகத்தை** - பவளம் உடைய கடலிலிருந்து நீரை முகந்து சூல் கொண்ட கரு மேகத்தை; **ஒப்பு உடை அண்ணலோடு** - உவமையாகப் பெற்ற கரிய திருமேனியுடைய இராமபிரானோடு; **உடற்றவேகொல்** - பேர் செய்வதற்காகவேயோ; **என்று** - எனக் கருதி; **எடுத்த சீற்றத்தான்** - மேல் எழுந்த கோபம் உடையவனாய் தென்கரை வந்து தோன்றினான் (2313.)*

*பரதன் சேனையோடு வடகரை அடைந்தான். குகன் தென்கரையில் தோன்றினான். பரதனையும்சேனையையும் கண்டு ஐயப்பட்டுச் சீறுகிறான். அடுத்த செய்யுளின் முதற்கண் 'குகன் எனப் பெயரியகூற்றின் ஆற்றலான்' என்பதனை இங்குக் கொண்டு பொருள் முடிக்க. இதுமுதல் ஆறு பாடல்கள் தொடர்ந்து (2313) 'தென்கரை வந்து தோன்றினான்' என்கின்ற இப்படலத்துப் பதினொராம்பாடலில் முடியும். 'ஏ' வினா? 'கொல்'- ஐயம். 'ஆம்'அசை **6***

***2309. குகன் எனப் பெயரிய கூற்றின் ஆற்றலான்***
***தொகை முரண் சேனையைத் துகளின் நோக்குவான் -***
***நகை மிக, கண்கள் தீ நாற, நாசியில்***
***புகை உற, குனிப்புறும் புருவப் போர்விலான்.***

***குகன் எனப் பெயரிய** - குகன் என்ற பெயரை உடைய; **கூற்றின் ஆற்றலான்** - யமனை ஒத்த பராக்கிரமத்தை உடைய வேடர் தலைவன்; **தொகை முரண் சேனையை** - கூட்டமாகஉள்ள வலிமை படைத்த (பரதன்) சேனையை; **துகளின் நோக்குவான்** - ஒரு தூசி போலப்பார்ப்பவனாய்; **நகை மிக** - (இகழ்ச்சிச்) சிரிப்பு அதிகமாக; **கண்கள் தீ நாற** - கண்களிலிருந்து நெருப்புத் தோன்ற; **நாசியில் புகை உற** - (உள்ளே எரியும் கோபநெருப்பால்) மூக்கிலிருந்து புகை வெறிவர; **குனிப்புறும்** - (கோபத்தால்) மேலேறிவளைந்த; **புருவப் போர்விலான்** - புருவமாகிய போர்க்குரிய வில்லை உடையனானான்.*

*மேல் பாட்டில் 'எடுத்த சீற்றத்தான்' என்றார். குகனுக்கு வந்த சீற்றத்தின்மெய்ப்பாடுகளை இங்கே கூறினார். சேனை வருவதை முன்னவர் வந்த 'துகளினால்' பார்த்தறிந்தான்என்றலும் ஒன்று. 'புருவப் போர்வில்' என்றது உருவகம். புருவத்துக்கு வில் உவமை. வளைதல்தன்மையால்; போர்க்கு மேலும் வளைப்பர். அதுபோல இங்கே கோபத்தால் புருவம் மேலேறி மேலும்வளைந்தது. அதனால், 'போர்விலான்' என்றார். இனி அவன் சீற்றம் தொடர்வதைத்தொடர்ந்து கூறுகிறார்.*
*7*

***2310. மை உற உயிர் எலாம் இறுதி வாங்குவான்***
***கை உறு கவர் அயில் பிடித்த காலன்தான்***
***ஐ - ஐந் நூறாயிரம் உருவம் ஆயின***
***மெய் உறு தானையான், வில்லின் கல்வியான்.***

***மை உற*** *- தீமை உண்டாக;* ***இறுதி உயிர் எலாம் வாங்குவான் -*** *இறுதிநாள்வந்த பொழுது உயிர்கள் எல்லாவற்றையும் (அவற்றின் உடலிலிருந்து) வாங்குகின்ற;* ***கை உறுகவர் அயில் பிடித்த காலன் தான்-*** *கையிற் பொருந்தி முக்கிளையாகப் பிரியும் சூலத்தைஏந்தியயமனே; ஐ - அழகிய;* ***ஐ நூறாயிரம் உருவம் ஆயின*** *- ஐந்து இலட்சம் வடிவம் எடுத்தாற் போன்ற;* ***உறு மெய் தானையான்*** *- வலிய உடம்புடைய சேனையை உடையவன்;* ***வில்லின் கல்வியான் -*** *வில்வித்தையில் தேர்ந்தவன்.*

*'ஐ - இருபத்தோடு ஐந்து ஆயிரர் உளர்' என (1983) முன்னர்க் கூறியது, இருபதோடு ஐந்துவைத்துப் பெருக்க நூறு ஆகும். நூறு ஆயிரவர் எனக் கூட்ட இலட்சம் ஆகும். முன்னர் உள்ள 'ஐ என்றஐந்தால் முரண 'ஐந்துலட்சம் சேனை' என வரும். அது நோக்கி, இங்கும் 'ஐந்நூறாயிரவர்'என்பதற்குப் பொருள் உரைத்தாம். முன்னர் உள்ள 'ஐ' அழகு, வியப்பு என்னும் பொருள் பற்றிவந்தது. எண் பற்றி வந்ததன்று. எண்ணாகக் கொள்ளின் முன்பாடற் றொகையோடு மாறுபடும் ஆதலின் என்க. குகனது சேனை வீரர்கள் காலனை ஒத்தவர்கள் என்று அவனது சேனைப் பெருமை கூறினார்.*
***8***

***2311. கட்டிய கரிகையன், கடித்த வாயினன்,***
***வெட்டிய மொழியினன், விழிக்கும் தீயினன்,***
***கொட்டிய துடியினன், குறிக்கும் கொம்பினன்,***
***'கிட்டியது அமர்' எனக் கிளரும் தோளினான்.***

***கட்டிய*** *- (இடைக்கச்சில்) கட்டப்பெற்றுள்ள;* ***கரிகையன் -*** *உடையவாளை உடையவன்;* ***கடித்த வாயினன்*** *- (பற்களால்) உதட்டைக் கடித்துக் கொண்டிருப்பவன்;* ***வெட்டிய மொழியினன்-*** *கடுமையாகப் பேசும் சொற்களை உடையவன்;* ***விழிக்கும் தீயினன்*** *- (கண்கள்) விழித்துப் பார்க்கும் நெருப்புத் தன்மை உடையவன்;* ***கொட்டிய துடியினன் -*** *அடிக்கப் பெரும் உடுக்கையை உடையவன்;* ***குறிக்கும் கொம்பினன் -*** *(போர்) குறித்து ஒலிக்கப் பெறும் ஊது கொம்பினை உடையவன்;* ***'அமர் கிட்டியது'*** *- 'போர் அருகில்வந்துவிட்டது;'* ***எனக் கிளரும் தோளினான்-*** *என்று கருதி மகிழ்ச்சியால் மேல் எழும்பும்தோள்களை உடையவன் (ஆகி..) (வரும் பாடலில் முடியும்).*

*உதட்டைப் பற்களால் கடித்தலும், உரத்த சத்தமிட்டுக் கடுமையாகப் பேசுதலும், கண்கள்கனல் சிந்தச் சிவந்து பார்த்தலும் கோபத்தின் மெய்ப்பாடுகளாம். போர் கிடைத்தால்வீரர்களாயிருப்பார் மகிழ்தல் இயல்பு. 'கிட்டியது அமர்' என்றதால் குகனது தோள்கள்கிளர்ச்சியுற்றன எனற்ார். "போரெனில் புகலும் புனைகழல் மறவர்" (புறம் 31) என்பதும் காண்க. துடியும், கொம்பும் போர்க்காலத்து வீரர்களுக்கு உற்சாகமூட்ட எழுப்பப்படும்வாத்தியங்களாகும். எனவே, இப்பாடலால் குகன் போருக்குச் சித்தமானான் என்பதைக்கூறினார்.* **9**

## *2312. 'எலி எலாம் இப் படை; அரவம், யான்' என,*
## *ஒலி உலாம் சேனையை உவந்து கூவினான் -*
## *வலி உலாம் உலகினில் வாழும் வள் உகிர்ப்*
## *புலி எலாம் ஒரு வழிப் புகுந்த போலவே.*

***'இப்படை எலாம் எலி** - இந்தச் (பரதன்) சேனை முழுவதும் எலிகளாகும்; **யான்அரவம் -** யான் இந்த எலிகளைத் தின்றொழிக்கும் பாம்பாவேன்;' **என** - என்று வீரவார்த்தை பேசி; **வலி உலாம்** - வலிமை நிரம்பிய; **உலகினில் வாழும்** -உலகத்தில் வசிக்கின்ற; **வள் உகிர்ப் புலி எலாம் -** வளவிய நகத்தை உடைய புலிகள்எல்லாம்; **ஒரு வழிப் புகுந்த போல** - ஒரே இடத்தில் வந்து சேர்ந்தன என்று சொல்லும்படி உள்ள; **ஒலி உலாம் சேனையை** - (தனது) ஆர்ப் பொலி மிகுந்த(வேட்டுவச்) சேனையை; **உவந்து கூவினான்** - மகிழ்ச்சியால் (போகுக்கு) அழைத்தன.(ஆகி).*

*'இப்படை' என்றது பரதன் சேனையை. படைகளை எலியாகவும், தன்னைப் பாம்பாகவும் உருவகித்தது எலிக்கு நாகம் பகை என்பதுபற்றி. "ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை, நாகம் உயிர்ப்பக் கெடும்" (குறள் 763) என்பதனை ஈண்டு ஒப்பு நோக்குக. "அரவின் நாமத்தை எலி இருந்து ஓதினால் அதற்கு, விரவும் நன்மை என்", "புற்றில் நின்று வல் அரவினம் புறப்படப் பொருமி, இற்றது எம்வலி என விரைந்து இரிதரும் எலி" (6238, 9325) எனக் கம்பர் பின்னும் கூறுவர். "பைரிவி நாகத் தைவாய்ப் பிறந்த, ஒலிப்புயிர் பெற்ற எலிக்கணம் போல, ஒழிந்தோர் ஒழிய" என (பெருங். 1.56: 273 - 5) வருவதும் இக்கருத்தினதாதல் அறிக. நகத்துக்கு வளமாவது கூர்மையாம். வாளுடைய வீரரைக் கூரிய நகம் உடைய புலியாக்கினார் என்க. உருவகம், உவமையாம். 'வலிமை நிரம்பிய உலகம் என்றது உலகில் உள்ள ஆற்றலை நோக்கி. இனி 'வளி உலாம் உலகு' என்பாரும் உளர். அது பொருந்துமேற்கொள்க. 'ஏ' காரம் ஈற்றசை.* **10**

## *2313. மருங்கு அடை தென் கரை வந்து தோன்றினான் -*
## *ஒருங்கு அடைநெடும் படை ஒல்லென் ஆர்ப்பினோடு*
## *அருங் கடையுகம்தனில், அசனி மா மழை*
## *கருங் கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே,*

***ஒருங்கு அடை நெடும் படை** - ஒன்று சேர்ந்து வந்த பெரிய (வேட்டுவச்) சேனை; **அருங் கடை உகம்தனில்** - அரிய கடையூழிக் கூாலத்தில்; **அசனி மா மழை** - இடியோடுகூடிய மேகமும்; **கருங்கடல் -** கரிய கடலும்; **கிளர்ந்து என** - (ஒலித்து) மிக்குஎழுந்தார் போல; **கலந்து சூழ** - ஒன்று சேர்ந்து தன்னைச் சுற்றிவர; **மருங்கு***

***அடை-*** *பக்கத்தில் உள்ள;* ***தென்கரை*** *- (கங்கையாற்றின்) தெற்குக் கரையில்;* ***வந்து தோன்றினான் -*** *(குகன் என முடிக்க)*

*படைகளின் மிகுதியும், ஆரவாரம் சூழ்தலும் பற்றி ஊழிக்காலத்து இடிமேகமும், பொங்குங்கடலும் சேர்ந்தது போல என்று உவமை கூறினார். வந்து சேர்ந்தான் என்னாது 'தோன்றினான்' என்றது, பரதனும் அவன் சேனையில் உள்ளாரும், பிறரும் தனது பேராற்றலும் வீராவேசமும் காணும்படி வந்தடைந்தான் என்பதுபற்றி. வடகரையில் பரதனும், தென்கரையில் குகனும் நின்றார் ஆதலின்'தோன்றினான்' என்றார் எனலும் ஆம். 'ஏ' காரம் ஈற்றசை.* ***11***

குகன் தன் சேனைக்குக் கட்டளை இடுதல்

***2314. தோன்றிய புளிஞரை நோக்கி, 'சூழ்ச்சியின்***
***ஊன்றிய சேனையை உம்பர் ஏற்றுதற்கு***
***ஏன்றனென், என் உயிர்த் துணைவற்கு ஈகுவான்***
***ஆன்ற பேர் அரசு; நீர் அமைதிர் ஆம்' என்றான்.***

*(தென்கரை வந்து சேர்ந்த குகன்)* ***தோன்றிய புளிஞரை நோக்கி*** *- (தென்கரையில்தன்னால் அழைக்கப்பட்டுத் தன்முன் வந்து) தோன்றிய வேடர்களைப் பார்த்து;* ***'ஆன்ற பேர்அரசு*** *- நிரம்பிய பெரிய அரசாட்சியை;* ***என் உயிர்த் துணைவற்கு*** *- என் உயிர்போலச் சிறந்த தோழனாகிய இராமனுக்கு;* ***ஈகுவான்*** *- தருவதற்காக;* ***சூழ்ச்சியின்ஊன்றிய சேனையை*** *- (அதனை அவன் பெறாமல் தடுக்கும்) ஆலோசனையோடு எதிரில் (வடகரையில்)கால் ஊன்றி நிற்கும் (இப்பரதனது) சேனையை;* ***உம்பர் ஏற்றுதற்கு*** *- (போரில்தொலைத்து) வீரசுவர்க்கத்தே செல்ல விடுதற்கு;* ***ஏன்றனென் -*** *தொடங்கியுள்ளேன்;* ***நீர் அமைதி ஆம்' -*** *நீங்களும் இதற்கு உடன்படுவீர்களாக;* ***என்றான்*** *- என்றுசொன்னான்.*

*அரசன் கீழது சேனையாயினும், தன் கருத்தை அவர்கள்பால் தெரிவித்து அவர்கள் உடன்பாடுவேண்டல் பண்பாட்டின் சிறப்பினைத் தெரிவிக்கும். போரில் இறந்தார் வீரசுவர்க்கம்பெறுதல் நூல் முடிபு ஆதலின் 'உம்பர் ஏற்றுதல்' என்று அதனைக் கூறினான். 'ஈகுவான்' என்னும் வினையெச்சம், 'ஏற்றுதற்கு' என்னும் வினையொடு முடிந்தது.* ***12***

***2315. 'துடி எறி; நெறிகளும், துறையும், சுற்றுற***
***ஒடியெறி; அம்பிகள் யாதும் ஓட்டலிர்;***
***கடி எறி கங்கையின் கரை வந்தோர்களைப்***
***பிடி; எறி, பட' எனா, பெயர்த்தும் கூறுவான்.***

***'துடி எறி*** *- போர்ப் பறைகளை அடியுங்கள்;* ***நெறிகளும் துறையும்-*** *வருவதற்குரிய வழிகளையும் (தென்கரையில்) ஏறுதற்குரிய துறைகளையும்;* ***ஒடியெறி*** *- அழித்துநீக்கி, இல்லாமல் செய்யுங்கள்;* ***அம்பிகள் யாதும் ஓட்டலிர் -*** *தோணிகளுள்ஒன்றையும் (கங்கையில்) ஓட்டாதீர்கள்;* ***கடி எறி கங்கையின் -*** *விரைந்து அலைவீசிவருகின்ற கங்கையாற்றின்;* ***கரை வந்தோர்களை*** *- தென்கரைக்கு (தரமாக முயன்று)வந்தவர்களை;* ***பிடி -*** *பிடியுங்கள்;* ***பட எறி' -*** *இறக்கும்படி அழியுங்கள்;* ***எனா*** *- என்று (குகன்) கூறி;* ***பெயர்த்தும் -*** *மேலும்;* ***கூறுவான்*** *- சில வீரவார்த்தைகளையும் சொல்லுவான் ஆனான்.*

*'துடி' என்பது ஈண்டுப் போர்ப்பறைகளுக்கு உபலக்கணம். துடியொன்று கூறவே மற்றப் பறைகளும் கொள்ளப்பட்டன. பரதனது சேனை இராமன்மேல் படையெடுத்து வந்துள்ளதாகக் குகன் கருதினான் ஆதலின், அச்சேனை தென்கரை அடையாதபடி எச்சரிக்கையாகத் தன் சேனைகளுக்குக் கட்டளை இடுகிறான் என்க. மேலும், அச் சேனை வீரர்கள் உற்சாகம் அடைவதற்காகச் சில வார்த்தைகள் மேல் கூறுகிறான். 'கடி எறி' காவலாக வை என்றுரைப்பதும் உண்டு; அது பிடி என்பதற்குப் பின் உரைப்பின் பொருந்தும். 'தோணிகள் ஓட்டாதீர்' என்றான் ஆதலின் 'விரைந்து அலைவீசி ஓடும்' கங்கையில் தோணிகள் உதவியின்றித் தென்கரை அடைதல் இயலாது என்பதைப் பின்னர்க் கூறினான். அதனையும் மீறித் தம் ஆற்றலால் வருவாரைப் 'பிடி', 'பட எறி' என்பது அதன்பின் கூறப்பட்டது. குகனது ஆற்றொழுக்கான சிந்தனை யோட்டத்தை இப்பாடல் சுட்டிச் செல்கிற அழகு காண்க. 'எறி', 'பிடி' என வீரரைத் தனித்தனி நோக்கி ஒருமையிலும், 'ஓட்டலிர்' எனக் கூட்டமாக பார்த்துப் பன்மையிலும் கூறினான் என்க. இனி ஒருமை பன்மை மயக்கம் எனினும் அமையும்.*    ***13***

குகன் தன் சேனைகளுக்குக் கூறிய வீர வார்த்தை

*கலித்துறை*

***2316. 'அஞ்சன வண்ணன், என் ஆர்***
***உயிர் நாயகன், ஆளாமே,***
***வஞ்சனையால் அரசு எய்திய***
***மன்னரும் வந்தாரே!***
***செஞ் சரம் என்பன தீ***
***உமிழ்கின்றன, செல்லாவோ?***
***உஞ்சு இவர் போய்விடின், "நாய்க்குகன்"***
***என்று, எனை ஓதாரோ?***

**'என் ஆருயிர் நாயகன்** - *என் அரிய உயிர்த் துணைவனாகிய;* **அஞ்சனவண்ணன்** - *மை போலும் கரிய நிறமான திருமேனி அழகனாகிய இராமபிரான்;* **அரசு ஆளாமே** - *ஆட்சிஉரிமை எய்தாதபடி;* **வஞ்சனையால்** - *சூழ்ச்சியால்;* **எய்திய** -*(அவ்வரசாட்சியைக் கைப்பற்றி) அடைந்த;* **மன்னரும்** - *அரசரும் (பரதரும்);* **வந்தாரே** - *(இதோ என்னருகில்) வந்துள்ளார்கள் அன்றோ!;* **தீ உமிழ்கின்றனசெஞ்சரம்** - *நெருப்பைக் கக்குகின்றனவான (என்) சிவந்த அம்புகள்;* **செல்லாவோ** - *(இவர்கள் மேற்) செல்லாமல் போய்விடுமோ?-;* **இவர் உஞ்சு போய்விடின்** - *இவர்கள்(என் அம்புக்குத் தப்பிப்) பிழைத்து (இராமன் இருக்கும் இடத்துக்குப்) போய்விட்டால்;* **'நாய்க்குகன்' என்று -** *(உலகோர்) குகன் நாய் போன்ற கீழ்த்தன்மை உடையவன் என்று;* **எனை** - *என்னைப் பற்றி;* **ஓதாரோ'** - *சொல்லாமல் இருப்பார்களா? (தொடரும்)      இவன் ஈடுபட்டது அவன் திருமேனி அழகில் ஆதலின், அது தனக்கும் அவனுக்கும் ஒன்றாயிருத்தலின் 'அஞ்சன வண்ணன்' என்று இது மேலிட்டு வந்தது என்க. இராமன் பெற வேண்டிய அரசைப் பரதன் பெற்றது பற்றியது சீற்றம் என்பதைத் தெரிவித்தான். 'நாய்' என்பது ஒருவரைக் கீழ்மைப்படுத்திப் பேசுதற்குப் பயன்படுவது ஆதலின் இங்கே 'நாய்க்குகன்' என்று உலகம் தன்னை இழித்துப் பேசும் என்றான். பரதன் படைகளைப் போகவிடில் இராமன்பால் காட்டும் நன்றியுணர்வுக்கு மாறானது; அச்செயலைச் செய்யும் குகனுக்கு நன்றியுணர்வில் சிறந்த நாயைக் கூறலாமோ எனின், அற்றன்று, நாய் நன்றியுணர்விற்*

*சிறந்ததாயினும் தன் வீட்டுக்குடையவன்பால் காட்டும் நன்றியுணர்வைத் தன் வீட்டில் திருட வரும் திருடன் தனக்கோர் உணவு கொடுத்த வழி அவன்பாலும் நன்றி காட்டிக் குரைக்காது ஒரோவழி இருந்துவிடல் பற்றி அதன் நன்றியுணர்வும் சிறப்பின்மை கண்டு உலகம் அதனைக் கீழ்மைப்படுத்திக் கூறுதல் தெளிவாம். 'குகன் நாய்' என்று சொல்வதினும் 'நாய்க் குகன்' எனல் மேலும் இளிவரலாம். உரையினும் 'பாவத்துக்கே' கம்பர் இது போன்ற இடங்களில் முதன்மை தருதல் வெள்ளிடை. ஏகார, ஓகாரங்கள் ஐய, வினாப் பொருளில் வந்துள்ளன. 'மன்னர்' என்பது இகழ்ச்சிக் குறிப்பு. உயர்சொல்தானே குறிப்பு நிலையால் இழிபு விளக்கிற்று (தொல். சொல். சிளவி. சேனா. 27).* ***14***

***2317. 'ஆழ நெடுந் திரை ஆறு கடந்து***
***இவர் போவாரோ?***
***வேழ நெடும் படை கண்டு***
***விலங்கிடும் வில்லாளோ?***
***'''தோழமை'' என்று, அவர்***
***சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ?***
***ஏழைமை வேடன் இறந்திலன்'' என்று***
***எனை ஏசாரோ?***

**'இவர் -; ஆழம்** - *ஆழத்தையும்;* **நெடுந் திரை** - *நீண்ட பெரிய அலைகளையும் உடைய;* **ஆறு -** *கங்கையாற்றை;* **கடந்து** - *தாண்டி;* **போவாரோ** - *அப்பால் ( தென்கரைப் பகுதிக்குச் ) செல்வார்களா? (மாட்டார்);* **வேழ நெடும்படை** - *யானைகளை உடைய நீண்ட பெரிய சேனையை;* **கண்டு** - *பார்த்து (பயந்து);* **விலங்கிடும்-** *புறமுதுகு காட்டி விலகிச் செல்லுகின்ற;* **வில் ஆளோ** - *வில் வீரனோ (நான்);* **'தோழமை' என்று-** *(உனக்கும் எனக்கும்) நட்பு என்பதாக;* **அவர் சொல்லிய சொல்-** *அந்த இராமபிரான் சொல்லிய வார்த்தை;* **ஒரு சொல் அன்றோ -** *(காப்பாற்ற,மதிக்கப்பட வேண்டிய) ஒப்பற்ற வார்த்தை அல்லவா? (அந்நட்புக்கு மாறாக இவர்களைப்போகவிட்டால்);* **ஏழைமை வேடன்** - *அற்பனாகிய இந்த வேடன்;* **இறந்திலன்** *-(இவ்வாறு இராமனோடு நட்புச் செய்து, இப்பொழுது சேனைக்குப் பயந்து இராமனை எதிர்க்கும்பரதனோடு நட்பாய் மானங்கெட்டு வாழ்தலைவிட) இறக்கலாமே, அது தானும் செய்தானிலனே;* **என்றுஎனை ஏசாரோ** - *என்றிவ்வாறு உலகத்தார் என்னைப் பழியாமல் விடுவார்களா - (பழிப்பர்)(தொடரும்) 'போவாரோ', 'ஏசாரோ' என்பனவற்றுள் எதிர்மறை இறுதியில் ஓகாரங்கள் ஐயவினாப் பொருளில் வந்துள்ளன. இனி இரண்டு எதிர்மறை உடன் பாட்டுப் பொருள் என்ற கருத்தில் 'ஆ' 'ஓ' என்ற இரண்டையும் எதிர்மறை எனக் கொண்டு கூறலும் ஒன்று. இவ்வாறே முன்னுள்ளவற்றிற்கும், பின்வருவனவற்றிற்கும் காண்க. '' தோழமை என்று அவர் சொல்லிய சொல்லைக்' குகன் 'செய்குவென் அடிமை' (1969) என்றபொழுது அவன்கூறிய கொள்கை (தொண்டன்) கேட்ட அண்ணல், அதனை விலக்கி ''யாதினும் இனிய நண்ப'' (1970) என்றும், ''என் உயிர் அனையார் நீ, இளவல் உன் இளையான், இந் நன்றுதலவள் நின்கேள்'' (1988) என்றும், ''முன்பு உளெம் ஒரு நால்வேம்.....இனி, நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்'' என்றும் (1988) இராமன் கூறிவற்றைக் கொண்டு அறிக. '' ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது.....தோழன் நீ எனக்கு'' (திவ்யப். 1418) என ஆழ்வார் கூறியதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. ''ஏழை வேடனுக்கு, 'எம்பி நின் தம்பி, நீ தோழன்; மங்கை கொழுந்தி எனச் சொன்ன, வாழி நண்பு'' (5091) என்று இவரே பிற்கூறியது கொண்டும் அறியலாம்.*

*'தோழமை' என்றது பண்பாகு பெயராய்த் தோழன் என்பதைக் குறித்தது. காட்டிலே வாழும் வேடுவராகிய தமக்கு "வேழ நெடும்படை" ஒரு பொருட்டல்ல என்பது கருதி அதனைக் கூறினான். "யானை உடைய படை காண்டல் முன்னினிதே" (இனியவை 5) என்பதும் காண்க. 'ஏழைமை' என்பது அறியாமைப் பொருளதாயினும் ஈண்டு எளிமை, அற்பம் என இகழ்பொருளில் வந்தது.* ***15***

***2318. "முன்னவன்" என்று நினைந்திலன்;***
***'மொய் புலி அன்னான் ஓர்***
***பின்னவன் நின்றனன்" என்றிலன்;***
***அன்னவை பேசானேல்,***
***என் இவன் என்னை இகழ்ந்தது?***
***இவ் எல்லை கடந்து அன்றோ?***
***மன்னவர் நெஞ்சினில்,***
***வேடர் விடும் சரம் வாயாவோ?***

***'இவன்** - இப் பரதன்; **"முன்னவன்" என்று நினைந்திலன்** - (இராமபிரானைக்குறித்து) தன் அண்ணன் என்று நினைந்தானில்லை; **"மொய் புலி அன்னான் ஓர் பின்னவன்நின்றனன்"** - வலிமை நெருங்கிய புலியை ஒத்த இளவலாகிய இலக்குவன் இராமனுக்குத் துணையாக உடன் உள்ளான்; **என்றிலன்** - என்று கருதினானும் இல்லை; **அன்னவை பேசானேல்** -அந்த (இராம இலக்குவர்களாகிய) இரண்டையும் பற்றி நினைக்காமல் விட்டாலும்; **என்னைஇகழ்ந்தது என்** - (இடையே கங்கைக் கரை யுடைய) என்னையும் (ஒரு பொருளாக மதியாமல்)இகழ்ந்தது என கருதி?; **இவ் எல்லை கடந்து அன்றோ** - (இவன் இராமன்பால் போர்செய்வது)இந்த எனது எல்லையைக் கடந்து சென்றால் அல்லவா?; **வேடர் விடும் சரம்** - வேடர்கள்விடுகின்ற அம்புகள்; **மன்னவர் நெஞ்சினில்** - அரசர்கள் மார்பில்; **வாயாவோ' -** தைத்து உள் நுழைய மாட்டாவோ? இராமனைத் தமையன் என்று கருதியிருந்தால் அரசை அவன்பால் கொடுத்திருப்பான், புலி அன்னஇலக்குவன் இராமன் உடன் உள்ளான் என்று கருதினால் போருக்கு வராமல் இருந்திருப்பான் என்றான்.என் ஆற்றலையும் உணராதவனாய் உள்ளானே என்று இகழ்ந்தானாம் - இறுதியடி இகழ்ச்சிக்குறிப்பாகப் பேசிய வீரவசனம். 'அன்னவை பேசானேல்' பேசுதல் எண்ணுதல் என்ற பொருளில்வந்துள்ளது. எண்ணுதலைப் பேசுதல் என்றது உபசார வழக்குஆகும்.*
***16***

***2319. 'பாவமும் நின்ற பெரும் பழியும்,***
***பகை நண்போடும்,***
***ஏவமும், என்பவை மண்***
***உலகு ஆள்பவர் எண்ணாரோ?***
***ஆவது போக, என் ஆர்***
***உயிர்த் தோழமை தந்தான்மேல்***
***போவது, சேனையும ஆர் உயிரும்***
***கொடு போய் அன்றோ?***

***மண் உலகு ஆள்பவர்*** - *(இப்) பூவுலகத்தை ஆள்கின்ற அரசர்கள்;* ***பாவமும்*** *-(தாம் ஒரு செயலைச் செய்கிறபோது அதனால் விளையும்) பாவத்தையும்;* ***நின்ற பெரும் பழியும்*** *- (செயல்முடிந்த பிறகு அதனால்) தம்மேல் நின்ற பெரும் பழியையும்;* ***பகை நண்போடும்*** *-பகைவர் இன்னார், நண்பர்கள் இன்னார் என்பவற்றையும்;* ***ஏவமும்*** *- விளையும்குற்றங்களையும்;* ***என்பவை*** *- என்று இதுபோலச் சொல்லப்படுபவைகளையும்;* ***எண்ணாரோ*** *- நினைக்கமாட்டார்களோ?;* ***ஆவது போக*** *- அது கிடக்கட்டும்;* ***என் ஆருயிர்த்தோழமை தந்தான் மேல் போவது*** *- எனக்கு அரிய உயிரோடொத்த நட்புறவைத் தந்தஇராமன்மேல் படையெடுத்துச் செல்வது;* ***ஆர் உயிரும் சேனையும் கொடு போயன்றோ -*** *தம்முடைய அரிய உயிரையும் சேனைகளையும் (எனக்குத் தப்பி) உடன் கொண்டு சென்ற பிறகல்லவா(முடியும்)?*

*இங்கே அண்ணனைக் கொல்வதால் ஏற்படும் பழி, பாவம் முதலியவற்றைக் கருதுகின்றானில்லை என்னும் கருத்தால் இவ்வாறு கூறினான். பகை நண்பு என்பன போர்க்குச் செல்கிறவர் தம் எதிரிகளுக்குத் தற்போது பகைவர் யார்? நண்பர் யார்? என்பதை அறிந்து சேறல் வேண்டும் என்பது. அவ்வாறு அறியின் இராமனுக்கு நண்பன் குகன் என அறிந்து சேறல் வேண்டும் என்பது. அவ்வாறு அறியின் இராமனுக்கு நண்பன் குகன் என அறிந்து படையெடுத்துச் செல்வதைத் தவிர்ப்பான் பரதன் என்றானாம். "வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும் துணைவலியும் தூக்கிச் செயல்" (குறள் 471) என்பதனுள் 'துணைவலி' என்றதனை இதன்கண் வைத்து அறிக. "செல்வம் வந்துற்ற காலைத் தெய்வமும் சிறிது பேணார், சொல்வன நினைந்து சொல்லார் சுற்றமும் துணையும் விளைவும் எண்ணார் மண்ணின் மேல் வாழும் மாந்தர்" (வில்லி பாரதம் 27. 141) என்னும் பாடற் கருத்தைக் குகண் கூற்றோடு ஒப்புக் காணலாம். ஏவம் - எவ்வம் என்பதன் திரிபு. குற்றம் அல்லது தீமை எனப் பொருள்படும். "ஏவம் பாராய்" (1532) என்பது காண்க......'ஆ அது போக' - அந்த அது போகட்டும் 'மேலே சொல்லியவைகளைஇவன் சிந்திக்காமல் விட்டாலும் விடட்டும்' என்றானாம் குகன். நான் இவனையும் சேனையையும் உயிரோடு போகவிட்டால்தானே இராமன் இருக்கும் இடம்வரை சென்று இவன் போர்செய் இயலும் என்றுகூறினான். ஓகாரங்கள் வினாப் பொருளன. 17*

***2320. 'அருந் தவம் என் துணை ஆள,***
***இவன் புவி ஆள்வானோ?***
***மருந்து எனின் அன்று உயிர்?***
***வண் புகழ் கொண்டு, பின் மாயேனோ?***
***பொருந்திய கேண்மை***
***உகந்தவர்தம்மொடு போகாதே***
***இருந்தது நன்று; கழிக்குவென்,***
***என் கடன் இன்றோடே.***

***என் துணை*** *- எனக்கு நண்பனாகிய இராமன்;* ***அருந் தவம் ஆள-*** *அரியதவத்தைச் செய்துகொண்டிருக்க;* ***இவன் -*** *இந்தப் பரதன்;* ***புவி ஆள்வானோ?*** *-உலகத்தை ஆட்சி செய்வானோ? (அதையும் பார்த்துவிடுவோம்);* ***உயிர்*** *- என்னுடையஉயிர்;* ***மருந்து எனின் -*** *(கிடைத்தற்கரிய) தேவர் அமுதமோ என்றால்;* ***அன்று -*** *அல்ல (நான் அப்படி அதை அரிதாக எண்ணிப் பாதுகாக்க நினைக்க வில்லை);* ***வண்புகழ்கொண்டு*** *- (இராமனுக்காகப் பரதனை எதிர்த்து) அதனால் சிறந்த புகழைப் பெற்று;* ***பின்***

***மாயேனோ*** - *அதன் பிறகு உயிர் துறக்க மாட்டேனோ?;* ***பொருந்திய கேண்மை*** - *மிகவும் ஒட்டியஉறவை;* ***உகந்தவர் தம்மொடு*** - *என்பால் கொண்டு மகிழ்ந்த இராம இலக்குவர்களோடு;* ***போகாதே*** - *உடன் செல்லாமல்;* ***இருந்தது நன்று*** - *(நான்) இங்கேயே தங்கியது நல்லதாய்ப் போயிற்று;* ***என்கடன்*** - *(நான்) இராமனுக்குச் செய்ய வேண்டிய கடமையை;* ***இன்றோடு கழிக்குவென்*** - *இன்றைக்கே செய்து முடிப்பேன்.*

*என் துணை - என் அண்ணன் எனலும் ஆகும். 'முன்பு உளெம், ஒரு நால்வேம்; முடிவு உளது என உன்னா, அன்பு உள, இனி, நாம் ஓர் ஐவர்கள் உளெர் ஆனோம்'' (1995) என்பது கொண்டு இராமன் குகன் அண்ணன் தம்பி முறையாதல் அறியலாம். 'உயிர் மருந்து எனின் அன்று' என்பதற்கு, ''மருந்தோ மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை, பெருந்தகைமை, பீடு அழிய வந்த இடத்து'' (குறள் 968) என்பது பற்றி உரை காண்க. மருந்து - உயிரைக் காப்பாற்றி நிறுத்தவல்ல சஞ்சீவினி போன்ற மருந்தும் ஆகும். 'நன்று' என்பதற்கு 'நன்றாயிருந்தது' எனத் தன்னிகழ்ச்சியாகப் பொருள் கூறி, நான் அவர்களுடனேயே போயிருக்க வேண்டும், போகாமல் தங்கியது நன்று என்று கூறுதல் உண்டு. அப்பொருள் இங்கு ஏற்குமேல் கொள்க. இராமனுக்குப் பகைவராய் உள்ளாரை அழித்தலைப் தன் கடமை செய்தலாகக் குகன் கருதினன் என்க. 'ஏ'காரம் ஈற்றசை.* *18*

***2321. 'தும்பியும் மாவும் மிடைந்த***
***பெரும் படை சூழ்வு ஆரும்,***
***வம்பு இயல் தார் இவர்***
***வாள் வலி கங்கை கடந்து அன்றோ?***
***வெம்பிய வேடர் உளீர்!***
***துறை ஓடம் விலக்கீரோ?***
***நம்பி முன்னே, இனி நாம்***
***உயிர் மாய்வது நன்று அன்றோ?***

***தும்பியும்*** - *யானைகளும்;* ***மாவும்*** - *குதிரைகளும்;* ***மிடைந்த*** - *நெருங்கிய;* ***பெரும்படை*** - *பெரிய சேனையால்;* ***சூழ்வு ஆரும்*** - *சுற்றப்படுதல்பொருந்திய;* ***வம்பு இயல் தார் இவர்*** - *மணம் வீசுகின்ற மாலையணிந்துள்ள இவர்கள்;* ***வாள்வலி*** - *படையின் ஆற்றல்;* ***கங்கை கடந்து அன்றோ*** - *இக் கங்கையாற்றைக்கடந்து போன பிறகு அல்லவா (காட்டமுடியும்?);* ***வெம்பிய வேடர் உளீர்!*** - *(இவர்களைக்கண்டு) மனப் புழுக்கம் அடைந்துள்ள வேடர்களாய் உள்ளவர்களே!;* ***துறை ஓடம் விலக்கீரோ*** - *நீர்த்துறையிலே இவர்களுக்கு ஓடம் விடுவதை நிறுத்திவிடுங்கள். (ஒருவேளை இவர் நம்மைத்தடுத்து மேற்செல்லும் ஆற்றல் உடையவராயினும் இவரோடு போரிட்டு);* ***நம்பி முன்னே*** - *இராமபிரானுக்கு முன்னாலேயே;* ***நம் உயிர் மாய்வது*** - *நமது உயிர் அழிந்து போவது;* ***இனி நன்று அன்றோ?*** - *இனிமேல் நல்லது அல்லவா?*

*''ஆழ நெடுந்திரை ஆறு கடந்து இவர் போவாரோ'', ''இவ் எல்லை கடந்து அன்றோ'', ''சேனையும்ஆர் உயிரும் கொடு போய் அன்றோ'' என்பதனை ஒப்புக் காண்க. மணம் வீசும் மாலையைப்பரதனுக்குக் குகன்தானே இட்டான் எனக் கொள்க; அவன் படை எடுத்து வந்தான் என நினைத்தலின், தந்தை இறந்ததோடு தமையன் காடு செல்லவும் தான் காரணமாக இருத்தலின் பழிசுமந்தேன் என்று காடுநோக்கிக் கண்ணீரோடு வருகின்ற பரதன், மணம் வீசும் மாலை அணிந்து வந்தான் என்றல்*

*பொருந்தாதாதலின், 'நீங்கள் ஓடம் ஓட்டாவிடினும் அவர்களே ஓடத்தைப் பயன்படுத்தி அக்கரைசெல்லக்கூடும். ஆதலின், கங்கையில் ஓடங்களை அப்புறப்படுத்துங்கள்' என்று தன் சேனைவீரர்களுக்குக் குகன் கட்டளை இட்டான். போரில் வெற்றி தோல்வி உறுதி அல்ல ஆதலின், 'நம்பி முன்னே இனி நம் உயிர் மாய்வது நன்று' என்றானாம். 'ஓ'காரம் வினாப் பொருட்டு.* ***19***

***2322. 'போன படைத் தலை வீரர்தமக்கு***
***இரை போதா இச்***
***சேனை கிடக்கிடு; தேவர் வரின்,***
***சிலை மா மேகம்***
***சோனை பட, குடர் சூறை பட,***
***சுடர் வாளொடும்***
***தானை பட, தன் யானை பட,***
***திரள் சாயேனோ?***

***போன*** *- (நம்முடன்) வந்துள்ள;* ***படைத்தலை வீரர் தமக்கு*** *- சேனையின்கண் உள்ள வீரர்களுக்கு;* ***இரை போதா*** *- (ஒருவேளைப்) போர்க்கும் பற்றாத;* ***இச்சேனை*** *- இந்தப் (பரதனது) சேனை;* ***கிடக்கிடு-*** *கிடக்கட்டும்;* ***தேவர்வரின்*** *- தேவர்களே (படையெடுத்து) வந்தாலும்;* ***சிலை மா மேகம்*** *- என் வில்லாகியகரிய மேகம்;* ***சோனை பட*** *- அம்பு மழையைச் சொரிய;* ***குடர் சூறைபட*** *-எதிரிகளது குடர்கள் சிதைந்து அலைய;* ***தானை சுடர்வாளோடும் பட*** *- எதிரிச் சேனைகள்தம்கையிற் பிடித்த படைக்கலங்களோடும் இறக்க;* ***தனி யானை பட*** *- ஒப்பற்ற யானைகள்அழிய;* ***திரள் சாயேனோ*** *- (அப்படைக்) கூட்டத்தை நிலைகுலைக்காமல் விடுவேனோ?*

*இரை என்பது உணவு. இங்கே வீரர்களுக்கு உணவாவது போர் ஆதலின், 'ஒருவேலைப் போர்' எனப்பொருள் உரைத்தாம். 'போன படைத்தலை வீரர்' இராம இலக்குவனர் என்றலும் ஒன்று. நம்மைத்தப்பிச் சென்றாலும் இராம இலக்குவர்களோடு இரை போதா இச்சேனை என்றானாம். 'தேவர் வரின்'- வரினும் என்ற சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'ஓ' வினாப்பொருட்டு.*
***20***

***2323. 'நின்ற கொடைக் கை என்***
***அன்பன் உடுக்க நெடுஞ் சீரை***
***அன்று கொடுத்தவன் மைந்தர் பலத்தை,***
***என் அம்பாலே***
***கொன்று குவித்த நிணம்கொள் பிணக் குவை***
***கொண்டு ஓடி,***
***துன்று திரைக் கடல்,***
***கங்கை மடுத்து இடை தூராதோ?***

***அன்று*** *- (முடிசூட்டு விழா நிகழ இருந்த) அந்நாள்;* ***கொடை நின்ற கை -*** *(முடிசூட்டுவதற்கு முன்பு செய்யவேண்டிய தானம் முதலியவற்றைச் செய்து) நின்ற திருக்கரங்களை உடைய;* ***என் அன்பன்*** *- என் அன்பிற்குரிய இராமன்;* ***நெடுஞ் சீரை***

***உடுக்க*** - *பெரியமரவுரியை உடுக்குமாறு; கொடுத்தவள் - (அவனுக்குக்) கொடுத்தவளாகிய கைகேயியின்;* ***மைந்தர் பலத்தை -*** *மகனார் ஆன பரதன் சேனையை;* ***என் அம்பால் கொன்று குவித்த -*** *என்னுடையஅம்பினால் கொன்று குவியல் செய்த;* ***நிணம்கொள் பிணக்குவை*** *- கொழுப்பு மிகுதிகொண்ட பிணங்களின் திரட்சியை;* ***கங்கை*** *- இந்தக் கங்கா நதி;* ***கொண்டு ஓடி*** *- இழுத்துக் கொண்டு விரைந்து சென்று;* ***துன்று திரைக்கடல்*** *- நெருங்கிய அலைகளை உடைய கடலில்;* ***மடுத்து*** *- அவற்றைச் சேர்த்து;* ***இடை தூராதோ?*** *- அக்கடல் இடத்தைத் தூர்த்து விடாதோ? (தூர்த்துவிடும்)*

*'நின்ற கொடைக் கை' என்பதற்கு என்றும் வள்ளலாக நின்ற எனவும் பொருள் உரைக்கலாம்.சீரை - மரவுரி. அதன் பொல்லாங்கு கருதி நெடுஞ் சீரை என்றான். குகன் தன் ஆற்றாமையால். 'மைந்தா' என்றது பரத சத்துருக் கனர்களையும் ஆம். சத்துருக்கனன் கைகேயியின் மகனல்லன்ஆயினும் பரதன் துணையாதலின் 'மைந்தர்' என ஒன்றாக்கிக் குறித்தான் குகன் எனல் அமையும்என்க. 'பலம்' என்றது சேனையை.* ***21***

***2324. ' "ஆடு கொடிப் படை சாடி,***
***அறத்தவரே ஆள***
***வேடு கொடுத்தது, பார்" எனும் இப்***
***புகழ் மேவீரோ?***
***நாடு கொடுத்த என் நாயகனுக்கு***
***இவர், நாம் ஆளும்***
***காடு கொடுக்கிலர் ஆகி,***
***எடுத்தது காணீரோ?***

***ஆடு*** *- அசையும்;* ***கொடி*** *- கொடிகளை உடைய;* ***படை*** *- சேனைகளை;* ***சாடி*** *- கொன்றழித்து;* ***அறத்தவர் ஆள*** *- தருமத்தின் துணைவர்களாய இராமஇலக்குவர்கள் ஆளும்படி;* ***வேடு*** *- வேடர்கள்;* ***பார் கொடுத்தது*** *- (இந்தப்)பூமியை மீட்டுக் கொடுத்தனர்;* ***எனும் இப்புகழ் மேவீர்*** *- என்கின்ற இந்தப் புகழைஅடையுங்கள்;* ***நாடு கொடுத்த என் நாயகனுக்கு*** *- (இவர்கள் ஆளும்படி) தான் ஆட்சியுரியவேண்டிய நாட்டைக் கொடுத்துவிட்டு வந்த என் தலைவனாகிய இராமனுக்கு;* ***இவர்*** *- இந்தப்பரதர்;* ***நாம் ஆளும் காடு*** *- நாம் ஆட்சி செயும் நமக்கு உரிமையாகிய இந்தக்காட்டையும்;* ***கொடுக்கிலர் ஆகி*** *- ஆட்சி செய்ய மனம் பொறாதவராய;* ***எடுத்தது*** *- படை எடுத்து வந்த படியை;* ***காணீர் -*** *காணுங்கள்.*

*போர் வீரர்களை நோக்கி இதனுள் உள்ள நியாய அநியாயங்களை அவர்களுக்கு விளக்கி,அவரவரது மனோநிலைக்கு ஏற்பத் தூண்டிப் போர்க்கு அவர்களைத் தயார் செய்வது அறிந்துஇன்புறத்தக்கது. போர் என்றால் தினவும் தோள்களை உடையவர்களைப் பார்த்து, ''ஆடு கொடிப் படைசாடி'' என்றான். அறத்தின் பொருட்டுத் தம்முயிரையும் கொடுக்கும் மனம் உடைய வீரர்களைநோக்கி, ''அறத்தவரே ஆள'' என்றான். புகழ் ஆசை உடையாரைப் பார்த்து, ''வேடு கொடுத்தது பார் எனும் இப்புகழ் மேவீர்'' என்றான். தம்முடைமையைப் பறிப்பாரைப் பொறாத குணம் உடைய வீரரைப் பார்த்து நாம ஆளும் காடு கொடுக்கிலர் ஆகி'' என்றான். இவ்வாறு பல்வேறு மனநிலையை வீரர்களையும் அவரவர்க்கு ஏற்பப் பேசிப் போர்க்குத் தயார் செய்வதாகக் குகனைப்பேச வைத்த கம்பர் கவி இனிமை*

*தேரும்தொறும் இனிதாம் தமிழ்க்கு எடுத்துக் காட்டாகும். 'ஏ'தேற்றம். ஓகாரம் வினாப் பொருட்டு.* *22*

***2325.*** ***' " மா முனிவர்க்கு உறவாகி***
***வனத்திரைடயேவாழும்***
***கோ முனியத் தகும்" என்று,***
***மனத்து இறை கொள்ளாதே,***
***ஏ முனை உற்றிடில், ஏழு கடற்***
***படை என்றாலும்,***
***ஆ முனையின் சிறு கூழ்***
***என இப்பொழுது ஆகாதோ?'***

***'மா முனிவர்க்கு*** *- பெரிய தவசிகளுக்கு;* ***உறவாகி -*** *இனிய சுற்றமாகி;* ***வனத்திடையே வாழும்*** *- காட்டிடத்தில் வாழும்;* ***கோ*** *- இராமன்;* ***முனியத் தகும்'*** *- (தன் தம்பியான பரதனை எதிர்த்தால் என்னை) வெறுத்துக் கோபிப்பான்;* ***என்று -; மனத்துஇறை கொள்ளாது -*** *மனத்தின்கண் சிறிதும் நினையாமல்;* ***ஏ முனை உற்றிடில்*** *- போர்முனையில் சென்று (பரதனைச்) சந்தித்துப் போரிட்டால்;* ***இப்பொழுது*** *- இந்நேரத்தில்;* ***ஏழு கடற் படை என்றாலும்*** *- ஏழு கடல் அளவு சேனை என்றாலும்;* ***ஆ முனையின் சிறு கூழ் என*** *- பசு தின்பதற்கு முனைந்தவழி அதன் எதிரில் கிடந்த சிறிய புல்என்று சொல்லும்படி;* ***ஆகாதோ*** *- அனைத்தும் அழிந்து போகாதோ (போகும்.)*

*இராமனது குணங்களைக் குகன் நன்குணர்ந்தவன் ஆதலின், இராமனுக்கு உதவுவதாக, நன்றிக்கடன்செய்வதாக இதுகாறும் கூறிப் பரதனை எதிர்க்கத் துணிந்தவன், அச்செயல் இராமனுக்கு உகப்பாகாது என்பதையும் அறிந்து வைத்துள்ளான் என்க. அது இடைப்புகுந்த வழி போரின் வேகம் குறையும்தளர்ச்சி வரும் ஆதலின், மனத்திற் சிறிதும் அக்கருத்திற்கு இடம் கொடுக்காது போர்செய்தல்வேண்டும் என்றானாம். பசித்த பசுவின் பசுவின் முன் சிறிய பயிர் உண்ணப்பட்டுமாய்ந்து போதல் போல என்முன் இச்சேனை கணத்தில் அழியும் என்றாள். 'கொள்ளாதே' 'ஏ'காரம் அசை.* *23*

***2326.*** ***என்பன சொல்லி, இரும்பு அன***
***மேனியர் ஏனோர்முன்,***
***வன் பணை வில்லினன், மல் உயர்***
***தோளினன், வாள் வீரற்கு***
***அன்பனும், நின்றனன்; நின்றது***
***கண்டு, அரிஏறு அன்ன***
***முன்பனில் வந்து, மொழிந்தனன்.***
***மூரிய தேர் வல்லான்;***

***வன் பனை வில்லினன்*** *- வலிய கட்டமைந்த பருத்த வில்லை உடையவனும்;* ***மல்உயர் தோளினன்*** *- மல் தொழிலால் சிறப்புற்ற தோளை உடையவனும்;* ***வாள் வீரற்குஅன்பனும்*** *- வாளாற் சிறந்த வீரனாகிய இராமனுக்கு அன்பு பூண்டவனும் ஆய குகன்;* ***இரும்பு அனமேனியர் ஏனோர்முன்*** *- இரும்பை ஒத்த வலிய உடம்பை உடைய*

*வேடுவ வீரர்களுக்கு முன்னால்;* ***என்பன சொல்லி*** *- என்ற இச் சொற்களைச் சொல்லி;* ***நின்றனன் -; நின்றது கண்டு*** *- (குகன்) நின்ற படியைப் பார்த்து;* ***மூரிய தேர்வல்லான் -*** *வலிய தேரைஒட்டுதலில் வல்லவனாகிய சுமந்திரன்;* ***அரி ஏறு அன்ன முன்பனில்*** *- ஆண் சிங்கத்தைஒத்த வலிமை படைத்த பரதனுக்கு முன்னால்;* ***வந்து மொழிந்தனன்*** *- வந்து சிலசொற்களைக் கூறுவானானான்.*

*இதன்முன் பத்துப் பாடல்களால் குகன் தன் படைவீரர்களை நோக்கிக் கூறிய வீரவாசகங்களைக் கூறி, அவற்றை "என்பன சொல்லி" என இச்செய்யுளில் வாங்கினார். மேற்செயல்கருதி நின்றான் ஆதலின், 'நின்றனன்' எனப் பெற்றது. இனிப் பரதனது உண்மை நிலையைத்தெரிவது கருதிப்போர்க்கு விரையாது நின்றான் எனலும் ஆம். மூரிய - தொன்மையான எனலும்ஆம். சுமந்திரன் சூரியகுலத்து அரசர்க்குத் தொன்றுதொட்டுத் தேர்வல்லான் ஆதலின்,அப்பொருளும் பொருந்தும், குகன் கூறிய அனைத்தும் பரதனை அழிப்பதாகக் கூறினவும் இராமன்பாற் கொண்ட பேரன்பாற் கூறியனவேயன்றி வேறன்று என்பதனை உணர்த்துதற்காக, 'வாள் வீரற்குஅன்பனும்' என்று பாடலில் குகனைக் கம்பர் குறிப்பிட்டார் என்னலாம்.*
***24***

*சுமந்திரன் குகனைப்பற்றிப் பரதனுக்கு விளக்குதல்*

***2327. 'கங்கை இரு கரை உடையான்;***
***கணக்கு இறந்த நாவாயான்;***
***உங்கள் குலத் தனி நாதற்கு***
***உயிர்த் துணைவன்; உயர் தோளான்;***
***வெங்கரியின் ஏறு அனையான்;***
***வில் பிடித்த வேலையினான்;***
***கொங்கு அலரும் நறுந் தண் தார்க்***
***குகன் என்னும் குறி உடையான்.***

***'கங்கை*** *- கங்கையாற்றின்;* ***இருகரை*** *- இரண்டு கரைப் பகுதியில் உள்ளநிலங்களையும்;* ***உடையான்*** *- தனக்குச் சொந்தமாக உடையவன்;* ***கணக்கு இறந்த*** *-அளவில்லாத;* ***நாவாயான்*** *- படகுகளை உடையவன்;* ***உங்கள் குலத் தனி நாதற்கு*** *-உங்கள் சூரிய வம்சத்தில் திருவவதாரம் செய்தருளிய ஒப்பற்ற தலைவனான இராமனுக்கு;* ***உயிர்த் துணைவன்*** *- ஆத்ம நண்பன்;* ***உணர் தோளான்*** *- உயர்ந்த தோள்களைஉடையவன்;* ***வெங்கரியின் ஏறு அனையான்*** *- (மதம் பிடித்த) கொடிய ஆண் யானையைஒத்தவன்;* ***வில் பிடித்த வேலையினான்*** *- வில்லைக் கையில் பிடித்துக் கொண்டுள்ள (வேட்டுவவீரராகிய) சேனைக் கடலை உடையவன்;* ***கொங்கு அலரும் நறுந் தண்தார்*** *- மணம் வீசித் தேன் பிலிற்றும் குளிர்ந்த மாலையைஅணிந்துள்ள;* ***குகன் என்னும் குறி உடையான்*** *- குகன் என்கின்ற பெயரை உடையவன்;' (அடுத்த பாட்டில் முடியும்)*

*இராமனைக் காணும் விரைவில் நிற்கின்ற பரதனுக்கு முதலில் தேவைப்படுவது கங்கையைக் கடந்து அக்கரை செல்வதே ஆதலால் எடுத்த எடுப்பில் "கங்கை இரு கரை உடையான், கணக்கு இறந்த நாவாயான்" என்று அவற்றை முதலிற் கூறினான். இராமன்பால் அன்புடையார் எல்லாம் பரதனால் அன்பு செய்யப்படுவார் ஆதலின் 'தனி நாதற்கு உயிர்த் துணைவன்' என்று அதனை அடுத்துக் கூறி, நின் அன்புக்குப் பெரிதும் உகந்தவன், இராமனை மீண்டும் அழைத்து வரும் உனது குறிக்கோளைக்*

*கங்கையைக் கடத்திவிடுவதோடு அன்றித் தொடர்ந்து வந்தும் முடிக்கவல்லவன் என்பது தோன்றக் கூறினான். அடுத்து, குகனது பேராற்றலும், அவன் படைப்பெருமையும், அவனது பெயரும் கூறுகிறான். 'தேர்வலான்' ஆகிய சுமந்திரன் மதியமைச்சனும் ஆதலின் சொல்வன்மை விளங்கப் பேசினன் எனலாம். இங்கும் இராம நண்பன் என்கின்ற காரணத்தால் குகனுக்குத் தேர்வலான் 'கொங்கலரும் நறுந் தண் தாரை' அணிவித்தான் என்க. இனி, இத் தேர்வலான் ஆகிய சுமந்திரன் மந்திரி என்பதனை 'மந்திரி சுமந்திரனை' (1856) என்பதால் அறிக. குகன் இராமனோடு நட்புக் கோடற்கு மிக முன்னரே இராமனைக் கானகத்தே விட்டுச் சென்ற சுமந்திரன் 'உங்கள் குலத்தனிநாதற் குயிர்த்துணைவன்' என்று பரதன்பால் கூறியது எப்படி என்னும் வினா எழுதல் இயல்பே. அமைச்சராவார் அனைத்தையும் உணர்தல் வேண்டும் ஆதலின் இராமனது பயணவழியில் கங்கையைக் கடக்கின்றவரை நிகழ்ந்த நிகழ்ச்சி களையும் அவன் முன்னரே அறிந்திருத்தலில் வியப்பு இல்லை என அறிக. வான் மீகம். 'குகனோடு சுமந்திரன் சிலநாள் உடனிருந்து பிறகே வெறுந்தேருடன் மீண்டான்' என்று கூறுதல் காண்க.* ***25***

***2328. 'கல் காணும் திண்மையான்;***
***கரை காணாக் காதலான்;***
***அற்கு ஆணி கண்டனைய***
***அழகு அமைந்த மேனியான்;-***
***மல் காணும் மணி நிறத்தாய்!-***
***மழை காணும் மணி நிறத்தாய்!-***
***'நிற் காணும் உள்ளத்தான்,***
***நெறி எதிர் நின்றனன்' என்றான்.***

*'**மல் காணும் திரு நெடுந்தோள்** - மற்போரில் எல்லை கண்ட அழகிய நெடிய தோளைஉடைய; **மழை காணும் மணி நிறத்தாய்** - கார்மழையைக் கண்டால் போன்ற நீலமணி போலும்நிறம் வாய்ந்த திருமேனி அழகனே!; **கல்காணும் திண்மையான்** - மலையைக் கண்டாற் போன்ற வலிமை உடையவன்; **கரை காணாக் காதலான்** - (இராமன் பால்) எல்லை காணமுடியாத பேரன்பை உடையவன்; **காணில்** - வடிவத்தைப் பார்த்தால்; **அல் கண்டு அனைய அழகு அமைந்த மேனியான்** - இருளைக் கண்டாற்போன்ற அழகு பொருந்திய உடம்பை உடையவன் (ஆகிய இத்தகைய குகன்); **நெறி எதிர்** - நீசெல்கின்ற வழியின் எதிரில்; **நின்காணும் உள்ளத்தான்** - உன்னைப் பார்க்கும் மனம் உடையவனாய்; **நின்றனன் 'என்றான்** - நின்று கொண்டுள்ளான்' என்று சொன்னான்சுமந்திரன்.*

*குகன் பரதனை எதிர்க்க நின்றவனே ஆயினும் இராமன்பால் பேரன்புடையவனாக அச்சுமந்திரனால்அறியப்பட்டவன் ஆதலால் இராமனை வரவேற்கச் செல்லும் பரதனை எதிர்பார்த்துக் கண்டு மகிழவே நின்றதாகச் சுமந்திரன் தன் போக்கில் கருதினான் என்க. பரதன் கங்கையின் வடகரைப்பகுதியில் கங்கைக் கரையோரமாக நில்லாமல் உள்ளே தள்ளி நிலப்பகுதியில் சிறிது தொலைவில் நிற்றலின் காண்பார்க்குக் குகனது சீற்றத் தோற்றம் புலனாகாமையும் பொதுத்தோற்றமே அறியப்படுதலும் உண்டாயிற்று. மேனி அழகாலும், நிறத்தாலும் இராமன், குகன், பரதன் மூவரும் ஒர் அணியாதல் பெறப்படும்.* ***26***

*குகனைக் காணப் பரதன் கங்கையின் வடகரை அருகில் விரைதல்*

***2329. தன் முன்னே, அவன் தன்மை,***
***தந்தை துணை முந்து உரைத்த***
***சொல் முன்னே உவக்கின்ற***
***துரிசு இலாத் திரு மனத்தான்,***
***'மன் முன்னே தழீஇக்***
***கொண்ட மனக்கு இனிய துணைவனேல்,***
***என் முன்னே அவற் காண்பென்,***
***யானே சென்று' என எழுந்தான்.***

***தன்முன்னே*** *- தன் எதிரில்;* ***அவன் தன்மை*** *- அந்தக் குகனது நல்லியல்புகளை;* ***தந்தை துணை*** *- தன் தந்தையாகிய தயரதனின் நண்பனான சுமந்திரன்;* ***முந்து உரைத்த*** *- முற்பட்டுச் சொல்லிய;* ***சொல்முன்னே*** *- சொல்லுக்கும் முன்பாக;* ***உவக்கின்ற*** *- மகிழ்ச்சி அடைகின்ற;* ***துரிசு இலாத் திரு மனத்தான்*** *- குற்றம்சிறிதும் இல்லாத நல்ல மனத்தை உடையவனாகிய பரதன்;* ***'மன் முன்னே தழீஇக் கொண்ட*** *-நம் அரசனாகிய இராமன் வனம் புகுந்த முன்னமே (அன்பு செய்து) தழுவிக் கொண்டுள்ள;* ***மனக்குஇனிய துணைவனேல் -*** *அவன் மனத்துக்கு இனிய துணைவன் ஆனால்;* ***என் முன்னே*** *- என்னை(அவன் வந்து பார்ப்பதற்கு) முன்னமே;* ***யானே சென்று அவற் காண்பென்'*** *- நானே(முற்பட்டு) சென்று அவனைக் காணுவேன்;'* ***என*** *- என்று சொல்லி;* ***எழுந்தான்*** *-புறப்பட்டான்.*

*இராமன்பால் அன்புடையான் குகன் ஆதலின் அவனை முற்பட்டுச் சென்று காணப் பரதன்விரைந்தான். 'இராமன் அன்பினால் குகனைத் துணைவனாகத் தழுவிக் கொண்டான்' என்ற சொல் செவிப்படும் முன்னமேயே பரதனது உள்ளம் உவகையால் நிறைந்தது என்பது பரதன் இராமன்பால் கொண்ட பேரன்பை எடுத்துக்காட்டும். பாகவதர்களாய் உள்ளார் ஒருவர் ஒருவரினும் முற்படுதல் இயல்பு. 'என் முன்னே' என்பதற்கு, அந்தக் குகன் இராமனால் தழுவிக் கொள்ளப்பெற்ற துணைவனேல் என்னுடைய முன் பிறந்த தமையனே ஆவான் எனப் பொருள்படுதல் இங்கு மிகவும் பொருந்தும். தமையனைத் தம்பி சென்று காணுதல் பொருந்தும் அன்றித் தம்பியைத் தமையன் வந்து பார்த்தல் பொருந்தாது ஆதலின் யானே சென்று காண்பன் என்றானாம். 'என் முன்னே' என்று குகன் பரதனின் தமையன் ஆதலை, 'இன் துணைவன் இராகவனுக்கும்; இலக்குவற்கும், இளையவற்கும், எனக்கும் மூத்தான்' (2367) என்று கோசலா தேவியிடத்துக் குகனைப் பரதன் அறிமுகப்படுத்தியவாற்றான் அறிக. சுமந்திரன் தயரதனது மந்திரி ஆதலின் 'தந்தை துணை' ஆயினன். பின்னர்ப் பரதன் "எந்தை இத்தானை தன்னை ஏற்றுதி" (2349) என அவனைத் தந்தையாகவே கூறுமாறும் இதனால் அறிக. பரதன்மாட்டுக் குகன் 'துரிசு' நினைத்தான் ஆதலின், அக்குறிப்புப் பொருள் பற்றித் 'துரிசு இலாத் திரு மனத்தான்' என்றது இங்கு மிகவும் பொருந்தும்.*
*27*

*பரதன் நிலை கண்டு, குகன் திடுக்கிடுதல்*

***2330. என்று எழுந்த தம்பியொடும்,***
***எழுகின்ற காதலொடும்,***

***குன்று எழுந்து சென்றது எனக்***
***குளிர் கங்கைக் கரை குறுகி***
***நின்றவனை நோக்கினான், திரு மேனி***
***நிலை உணர்ந்தான்,***
***துன்று கரு நறுங் குஞ்சி எயினர் கோன்;***
***துண்ணென்றான்.***

*(பரதன்)* ***என்று*** *- இவ்வாறு சொல்லி;* ***எழுந்த தம்பியொடும்*** *- தன்னுடன்புறப்பட்ட சத்துருக்கனனொடும்;* ***எழுகின்ற காதலொடும்*** *- (இராமனிடத்தில்அன்புடையவனும், இராமனால் அன்பு செய்யப் பெற்றவனும் ஆகிய குகனைப் பார்க்கப் போகிறோம்என்று) உள்ளே மேலும் மேலும் உண்டாகின்ற பேரன்போடும்;* ***குன்று எழுந்து சென்றது என*** *- ஒருமலை புறப்பட்டுச் சென்றது என்று சொல்லுமாறு;* ***குளிர் கங்கைக் கரை குறுகி*** *- குளிர்ச்சி மிகுந்த கங்கையின் வடகரையை அணுகி;* ***நின்றவனை*** *- நின்ற பரதனை;* ***துன்று கரு நறுங் குஞ்சி எயினர் கோன்*** *- நெருங்கிய கருமையான மணம் வீசும் தலைமுடி உடையவேடர் தலைவனாய குகன்;* ***நோக்கினான்*** *- கண்ணால் (மனக் கருத்தோடு) பார்த்தான்;* ***திருமேனி நிலை*** *- வாடிச் சோர்ந்துள்ள பரதனது திருமேனியின் வாட்டமான உணர்ந்து கொண்டான்;* ***துண் என்றான்*** *- திடுக்குற்றான். பரதனைத்பற்றித் தான் எண்ணியதற்கும், அவன் நிலைக்கும் மிகவும் மாறுபாடாக இருந்தது கண்டு துணுக்குற்றான் என்க. இராம இலக்குவர் போலே பரத சத்துருக்கணர் ஆதலின், 'எழுந்த தம்பி'என்று பரதன் கட்டளை இட வேண்டாது அவன் குறிப்புணர்ந்து சத்துருக்கனன் புறப்பட்டான்.* ***28***

***2331. வற்கலையின் உடையானை,***
***மாசு அடைந்த மெய்யானை,***
***நற் கலை இல் மதி என்ன***
***நகை இழந்த முகத்தானை,***
***கல் கனியக் கனிகின்ற துயரானைக்***
***கண்ணுற்றான்;***
***வில் கையினின்று இடை வீழ,***
***விம்முற்று, நின்று ஒழிந்தான்.***

***வற்கலையின் உடையானை*** *- மரவுரியாலாகிய ஆடையை உடுத்துள்ள;* ***மாசு அடைந்தமெய்யானை*** *- புழுதி படிந்த உடம்பை உடைய;* ***நற் கலை இல் மதி என்ன*** *- நல்லகலைகளில்லாத (ஒளியற்ற) சந்திரன் போல;* ***நகை இழந்த முகத்தானை*** *- ஒளி இழந்தமுகத்தை உடைய; பரதனை;* ***கண்ணுற்றான்*** *- (குகன்) கண்ணால் சந்தித்துப் பார்த்து;* ***கையினின்று வில்இடை வீழ*** *- தன் கையிலிருந்து வில்லானது தானே சோர்ந்து நிலத்தின்கீழ் விழும்படி;* ***விம்முற்று*** *- துன்பத்தால் கலக்கமுற்று;* ***நின்று ஒழிந்தான்*** *-ஒரு செயலும் இன்றி நின்றவாறே இருந்தான்.*

*பரதன் திருமேனி நிலை எவ்வாறு இருந்தது என்பதை இச் செய்யுள் விவரிக்கிறது. பரதனது நிலை இராமன் வனத்தின்கண் சென்றதனால் அவனுக்கு ஏற்பட்ட துக்கத்தைக் காட்டுவதாக இருந்ததுஆதலின், இப்படிப்பட்டவனை எப்படி நினைத்துவிட்டோம் என்ற தன்னிரக்கமும் சேர்ந்து கையறுநிலையைக் குகனுக்கு*

*உண்டாக்கியது ஆதலின் நின்றவன் நின்றவாறே உள்ளான் என்ற வாறாம். மதிக்குக் கலையால் ஒளி கூடுதலின் ஒளி குறைந்த முகத்தைக் கலை இழந்த மதியோடு உவமித்தார். எப்பொழுதும் தன்னிடத்திருந்து நீங்காது உறுதியாகப் பிடித்திருக்கும் வில்லும் தன்னை மறந்ததுயரநிலையில் குகன் கையிலிருந்து நழுவிக் கீழே தானே விழுந்தது என்பது குகனது நிலையைத்தெளிவாகக் காட்டும். அதனாலேயே. 'நின்றான்' என்னாது 'நன்னொழிந்தான் என்றார்; ஒரு சொல்லாக்குக.*
***29***

## *2332. 'நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்;*
## *அயல் நின்றான்*
## *தம்பியையும் ஒக்கின்றான்; தவ வேடம்*
## *தலைநின்றான்;*
## *துன்பம் ஒரு முடிவு இல்லை;*
## *திசை நோக்கித் தொழுகின்றான்;*
## *எம்பெருமான் பின் பிறந்தார்*
## *இழைப்பரோ பிழைப்பு?' என்றான்.*

*'நம்பியும் - ஆடவரிற் சிறந்த இப்பரதனும்;* **என் நாயகனை** *- என் தலைவனாகியஇராமனை;* **ஒக்கின்றான்** *- ஒத்திருக்கிறான்;* **அயல் நின்றான்** *- அருகில்இருக்கின்றவன் (ஆகிய சத்துருக்கனன்);* **தம்பியையும் ஒக்கின்றான்** *- இராமனது உடன்பிரியாத் தம்பியாகிய இலக்குவனை ஒத்திருக்கின்றான்;* **தவ வேடம் தலை நின்றான்** *- (இப்பரதன்) தவத்துக்குரிய வேடத்தை மேற்கொண்டுள்ளான்;* **துன்பம் ஒரு முடிவு இல்லை** *-(இப் பரதன்) படுகிற துன்பத்துக்கோ ஓர் அளவே இல்லை;* **திசை நோக்கித் தொழுகின்றான்** *- இராமன் சென்ற திசையாகிய தென்திசையைப் பார்த்து அவ்வப்போது வணங்குகிறான்; (இவற்றால்இவன் துயர்நிலை விளங்குதலின்)* **எம்பெருமான்** *- எம்கடவுளாகிய இராமனுக்கு;* **பின்பிறந்தார்** *- தம்பிகள்;* **பிழைப்பு இழைப்பரோ'** *- (தவறு செய்வார்களா)'தவறு செய்வர் என்று நான் எண்ணியது பெரும் தவறு);* **என்றான்** *- என்று நினைத்தான்.*

*பரத சத்துருக்கனர்கள் இராம இலக்குவர்களைப் போன்றனர் என்றான். தவ வேடமும் அவ்வாறேஒத்தது. துயர்நிலை இராமனுக்கு இல்லாதது. இராமனைப் பிரிந்ததனால் பரதனுக்கு உளதாயது. திசைநோக்கித் தொழுதல் இராமபக்திக்கு அடையாளம். மூத்தோர்பால் இளையார் காட்டும் ஒரு மரபு எனலாம். "மன் பெரிய மாமனடி மகிழ்ந்து திசை வணங்கி" (சிந்தா. 849) காண்க. இராமனுக்குப்பரதன் தீங்கு செய்ய வந்துள்ளதாகக் கருதிய தனது பேதைமையைக் குகன் தனக்குள்ளே விசாரித்தான். ஆதலின், "எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு" என்றான். பரதனைச்சந்தேகித்தற்குக் குகன் வருத்தம் உறுதல்வெளிப்படை.*
***30***

### *குகன் நாவாயில் தனியே கங்கையின் வடகரை வந்து சேர்தல்*

## *2333. 'உண்டு இடுக்கண் ஒன்று*
## *உடையான், உலையாத அன்பு உடையான்,*
## *கொண்ட தவ வேடமே கொண்டிருந்தான்*

***குறிப்பு எல்லாம்***
***கண்டு, உணர்ந்து, பெயர்கின்றேன்’***
***காமின்கள் நெறி’ என்னா,***
***தண் துறை, ஒர் நாவாயில், ஒரு***
***தனியே தான் வந்தான்.***

***‘உண்டு இடுக்கண் ஒன்று உடையான்*** - புதிதாக உண்டாகிய துன்பம் ஒன்றை உடையவனும்; ***உலையாத அன்பு உடையான் -*** இராமன்பால் சிறிதும் தளர்ச்சியுறாத அன்பு கொண்டவனும்; கொண்ட **தவ வேடமே** - (அந்த இராமன்) கொண்டிருந்த தவ வேடத்தையே; **கொண்டிருந்தான்** - தானும்கொண்டுள்ளவனும் ஆகிய இப்பரதனது; **குறிப்பு எல்லாம்** - மனக் கருத்து எல்லாம்; கண்டு- நேரில் பார்த்து அறிந்து; **உணர்ந்து** - அதனை என் அநுபவத்தாலும் நுகர்ந்து; பெயர்கின்றேன் - திரும்பி வருகின்றேன்; **நெறி காமின்கள்** - (அதுவரை) வழியைப்பாதுகாத்திருங்கள்;’ **என்னா** - என்று சொல்லி; தண்துறை - (கங்கையின்) குளிர்ந்தநீர்த்துறையில்; ***தான் ஓர் நாவாயில் ஒரு தனியே வந்தான்-*** (குகன்) தான் ஒருபடகில் வேறு யாரும் இன்றித் தனியே வந்து சேர்ந்தான்.

*தோற்றத்தால் விளங்காத பல செய்திகள் நெருக்கத்தால் விளங்கக்கூடும் ஆதலின் பரதன் மனக்கருத்து எல்லாம் ‘கண்டு உணர்ந்து பெயர்கின்றேன்’ என்று குகன் கூறினான். இங்கே ‘அறிந்து’ என்னாது ‘உணர்ந்து’ என்றது சிறப்பு. துக்காநுபவம் ஆகிய அன்பின் செறிவு உணர்ச்சியொத்தவரிடையே அநுபவம் ஆதல் அன்றி, அறிவினால் ஆராய்ந்தறியும் பொருள் அன்று ஆதலின், இடுக்கணும், உலையாத அன்பும் உடைய பரதனை, அதுபோலவே இடுக்கணும், உலையாத அன்பும் உடைய குகன் உணர்ச்சியொத்தலால் உணர்ந்து பெயர்கின்றேன் என்கிறான்; இந்நயம் அறிந்து உணரத் தக்கது. ‘ஒரு தனியே தான் வந்தான்’ என்றது இதுகாறும் பரதனை மாறாகக் கருதித் தன் படை வீரர்களிடம் பேசியவன் ஆதலின், தன் கருத்து மாற்றம் அவர்க்குப் புலப்படாமை கருதியும், அவர்களால் வேறு தொல்லைகள் உண்டாகாமை கருதியும், அவர்களுள் யாரையும் உடன் கொள்ளாது தனியே வந்தான் என்க. அதுபற்றியே கம்பரும் ‘தனியே’ என்னாது ‘தான்’ என்றும், ‘ஒரு தனியே’ என்றும் அழுத்தம் கொடுத்துக் கூறினார். அரசராவார் தம் கருத்தையும் தம் மன மாற்றத்தையும் தம்கீழ் வாழ்வார் அறியாதவாறு போற்றிக் காத்தல் வேண்டும் என்னும் மரபறிந்து மதிப்பவர் கம்பர் என்க. ‘துன்பம் ஒரு முடிவு இல்லை’ என்றவர், ‘உண்டு இடுக்கண் ஒன்று உடையான்’ என்று மீண்டும் கூறியது, இராமன் வனம் போவதால் ஏற்பட்ட துன்பம் இராமனைக் கண்டு மீண்டு போம்போது குறைதல் கூடும் ஆயினம் இவற்றுக்கெல்லாம் ‘தான் காரணமானோம்’ என்று கருதும் பழிபடப் பிறந்தேன்’ என்ற இடுக்கண் என்றும் மாறாது கிடத்தலின்’ உண்டு இடுக்கண் ஒன்று உடையான்’ என்று அதனையும் கருதிப் பரதனது புறத் தோற்றத்தையும் அகத் தோற்றத்தையும் புலப்படுத்தியதாக அமைகிறது. உலையாத அன்பு - வேறு காரணங்களால் நிலைகுலையாமல், என்றும் ஒருபடித்தாக இருக்கும் தளர்ச்சியில்லாத அன்பு என்றவாறாம்.* ***31***

குகனும் பரதனும் ஒருவரை ஒருவர் வணங்கித் தழுவுதல்

***2334. வந்து எதிரே தொழுதானை***
***வணங்கினான்; மலர் இருந்த***

***அந்தணனும் தனை வணங்கும் அவனும்,***
***அவன்த அடிவீழ்ந்தான்.***
***தந்தையினும் களிகூரத் தழுவினான் -***
***தகவு உடையோர்***
***சிந்தையினும் சென்னியினும் வீற்றிறுக்கும்***
***சீர்த்தியான்.***

***வந்து*** *- (கங்கையின் வடகரைக்கு) வந்து;* ***எதிரே தொழுதானை*** *- தன்னைஎதிரிலே கும்பிட்ட பரதனை;* ***வணங்கினான்*** *- (குகன்) தானும் வணங்கினான்;* ***மலர்இருந்த அந்தணனும் தனை வணங்கும் அவனும் -*** *(திருமாலின் திருவுந்தித் தாமரையில்வீற்றிருக்கும் வேதியனாகிய பிரமனும் தன்னை வணங்கும் சிறப்புப் பெற்ற பரதனும்;* ***அவன் அடிவீழ்ந்தான்*** *- அந்தக் குகனது அடித்தலத்தில் விழுந்து வணங்கினான்; (அதுகண்டு)* ***தகவு உடையோர் சிந்தையினும் சென்னி யினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்*** *- நடுவுநிலைமையிற்சிறந்த மேலோர்களது மனத்திலும், தலையிலும் ஏற்றிப் போற்றப்படும் புகழ் உடைய பண்பு நலம்செறிந்த உத்தமனாகிய குகனும்;* ***தந்தையினும் களிகூர*** *- பெற்ற தந்தையினும் மகிழ்ச்சிமிக;* ***தழுவினான்*** *- (அந்த அடி வீழ்ந்த பரதனை எடுத்து) மார்போடு அணைத்துக்கொண்டான் (தொடரும்)*

*குகனும் பரதனும் மிகச் சிறந்த பாகவத உத்தமர்கள்; இராமன்பால் ஆழங்காற்பட்ட அன்பினைஉடையவர்கள்; ஒருவரை ஒருவர் தம்மிற் பெரியராக நினைப்பவர்கள். இப்பண்பு நலன்களை உடையஇருவர் சந்திப்பில் அளவு கடந்த அன்பின் பெருக்கால் நிகழும் நிகழ்ச்சிகளே இப்பாடலில்வருகின்றன. இப்பாடலில் வணங்கினான், அடிவீழ்ந்தான், தழுவினான் என்று மூன்று நிகழ்ச்சிகள்முக்கிய இடம் பெறுகின்றன. முன்னைய பாடலில் படகில் தனியே வந்தான்' எனக் குகன் வந்ததாக முடித்திருப்பதும், குகனே பரதனைத் 'திசை நோக்கித் தொழுகின்றானாகக்' கண்டு கூறுவதும்இப்பாடற் பொருளைத் தெளிவு செய்கின்றன. எதிரே தொழுதானை என்பது பரதனை எனவும்,வணங்கினான் குகன் எனவும் ஆகிறது. வணங்குதலாகிய குகன் செயலை அடுத்து நிகழ்வது பரதன் செயலாகும் அன்றோ. 'மலர் இருந்த அந்தணனும் தனை வணங்கும் அவனும்' என்பது பரதனைக் குறித்தது.அப்பரதன் அவன் (குகன்) அடியில் வீழ்ந்தான் என ஆற்றொழுக்காக முடிந்தது. பரதன் 'மன் முன்னேதழீஇக் கொண்ட மனக் கினிய துணைவன்' எனக் குகனைக் குறித்து 'என் முன்னே' என்று தனக்குத்தமையனாகவும் கொண்டான்; அதுவும் அன்றி, 'இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்'(2367) என்று பின்னால் தாயருக்கும் அவ்வாறே அறிமுகம் செய்விக்கிறான். ஆகவே, அண்ணன் காலில் தம்பி விழுவதே முறை எனக் கருதி அடி வீழ்ந்தான் பரதன் என்க. தன்னடியில் வீழ்ந்தபரதனைக் குகன் குகனைத் 'தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும்சீர்த்தியான்' என்று கம்பர் கூறுவது சிந்திக்கத்தக்கது. பிறப்பால் வேடனாகிய குகன் தன்னடிவீழும் பரதனைத் தந்தைநிலையில் இருந்து தழுவினான் என்பதை ஏற்புடைத் தாக்கவே சிறப்பால்மேலானோர் மனத்திலும், தலையிலும் ஏற்றிப் போற்றும் குணங்களால் உயர்ந்த புகழ் உடையவன்என்று குகனை நமக்குக் காட்டினார் கம்பர். இனி, இதனையும் பரதன் மேற்றாகவே கொண்டு கூறுவாரும் உளர். அது ஏற்புடைத்தாகுமேல் அறிந்து கொள்க. 32 குகன் பரதனிடம் வந்த காரணம் கேட்டல்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

*2335.* ***தழுவின புளிஞர் வேந்தன்***
***தாமரைச் செங்கணானை,***
***‘எழுவினும் உயர்ந்த தோளாய்!***
***எய்தியது என்னை?’ என்ன,***
***‘முழுது உலகு அளித்த தந்தை***
***முந்தையோர் முறையினின்றும்***
***வழுவினன்; அதனை நீக்க, மன்னனைக்***
***கொணர்வான்’ என்றான்.***

***தழுவின புளிஞர் வேந்தன்*** - *(அவ்வாறு பரதனைத்) தழுவிக் கொண்ட வேடர் தலைவனான குகன்;* ***தாமரைச் செங்கணானை*** - *செந்தாமரை போலும் கண்களை உடைய பரதனைப் (பார்த்து);* ***‘எழுவினும் உயர்ந்த தோளாய்!*** - *கணைய மரத்தினும் வன்மைமிக்குயர்ந்த தோள்களை உடைய பரதனே!;* ***எய்தியது என்னை’ என்ன*** - *(கங்கைக் கரைக் காட்டிற்கு) நீ வந்த காரணம் என்ன என்று வினாவ; (பரதன்)* ***உலகு முழுது அளித்த தந்தை*** - *உலகம் முழுவதையும் ஒரு குடை நீழலில் ஆட்சி செய்த சக்கரவர்த்தியாகியஎன் தந்தை தயரதன்; முந்தையோர் முறையினின்றும் வழுவினன் - தன் மரபில் முன்னுள்ளாரது நீதிமுறையிலிருந்தும் தவறிவிட்டான்;* ***அதனை நீக்க -*** *அந்த அநீதியை நீக்கும் பொருட்டு;* ***மன்னனைக் கொணர்வான்’*** - *முறைப்படி அடுத்து அரசனாகிய இராமனைத் திரும்ப அழைத்துக்கொண்டு செல்வதற்காக (வந்தேன்);* ***என்றான்*** - *என்று சொன்னான்.*

*தந்தை என்ற நிலையிலிருந்து முந்தையோர் முறையில் தயரதன் வழுவினானே அன்றி மன்னன்என்ற நிலையில் இருந்து அன்று என்பது போல் கூறியது ஒரு நயம். பின்னரும் ‘அண்ணனைக்கொணர்வான்’ ‘இராமனைக்கொணர்வான்’ என்று கூறாமல் ‘மன்னனைக் கொணர்வான்’ என்றது காட்டில்இருப்பினும், நாட்டில் இருப்பினும் இராமனே அயோத்திக்கு அரசன் என்பதில் பரதனுக்குள்ள உறுதிவிளங்குகிறது. இராமன் திரும்ப அயோத்திக்குச் செல்கிற அளவிலேயே முந்தையோர் முறைசரியாகிவிடும் என்று பரதன் கூறியது சிந்திக்கத்தக்கது. இப்பாடலில் ‘தழுவின’ என்பதற்குத் ‘தழுவப்பட்ட எனப் பொருள் பட்டவன், தழுவியவன் இருவருள் தழுவியவனே முதலில் பேச இயலும் என்பது தழுவப்பட்டவன் உரையாற்ற முடியும் என்பதும் அறிந்ததே. குகனைத் தன் அண்ணனாகக் கருதும் பரதன் முறப்பட்டுக் குகனைத் தழுவுதல் எங்ஙனம்? எங்கும் தழுவல் கம்பர் வழக்கிலும் இல்லையென்பதுமுன்னும் பின்னும் வரும் கம்பர் கூற்றுகளாலும் உணரப்படும்.*
*33 பரதனைக் குகன் வணங்கிப் பாராட்டி நெகிழ்தல்*

*2336.* ***கேட்டனன், கிராதர் வேந்தன்;***
***கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி,***
***மீட்டும், மண் அதனில் வீழ்ந்தான்;***
***விம்மினன், உவகை வீங்க;***
***தீட்ட அரு மேனி மைந்தன்***
***சேவடிக் கமலப் பூவில்***
***பூட்டிய கையன், பொய் இல்***
***உள்ளத்தன், புகலலுற்றான்;***

***கிராதர் வேந்தன்*** *- வேடர் தலைவனாய குகன்;* ***கேட்டனன்*** *- (பரதன் சொல்லிய வார்த்தைகளைக்) கேட்டு;* ***கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி*** *- மேல் எழுந்து மிகும் பெருமூச்சு உடையவனாகி;* ***மீட்டும்*** *- (முன் வணங்கியதோடு அன்றித்) திரும்பவும்;* ***மண் அதனில் வீழ்ந்தான்*** *- பூமியில் விழுந்து வணங்கி;* ***உவகை வீங்க*** *- மன மகிழ்ச்சி மேல் பெருக;* ***விம்மினன்*** *- உடம்பு பூரித்து;* ***தீட்ட அரு மேனி மைந்தன்*** *- எழுதலாகாததிருமேனியையுடைய பரதனது;* ***சேவடிக் கமலப் பூவில்*** *- திருவடிகளாகிய தாமரை மலரில்;* ***பூட்டிய கையன்*** *- இறுக அணைத்த கையுடனே;* ***பொய்யில் உள்ளத்தன்*** *- பொய்யற்ற புரைதீர்ந்த மனத்தால்;* ***புகலல் உற்றான்*** *- சில வார்த்தைகள் சொல்லலானான்.*

*'மீட்டும்' - என்பதற்குத் 'திரும்பவும் மண்ணில் விழுந்து வணங்கினான்' எனப் பொருள்உரைத்து, உம்மையால் முன்பொருமுறை 'அடி வீழ்ந்ததோடன்றி' என்றுரைத்து 2334 ஆம் பாடலில் 'அடிவீழ்ந்தான்' என்பது குகன் செயலே என்பார் உளர். 'மீட்டும்' என்பதில் 'ம்' என மகர ஒற்றுக் கொள்ளுதலும் கொள்ளாமையும் உண்டு. இருவகைப் பாடத்தினும் மகர ஒற்றுக் இன்றிமீட்டு' என்ற பாடமே சிறந்ததாகும். ஓசை நயம் உணர்வார்க்கு 'மீட்டு மண்' என நிற்றலேஏற்புடைத்தென அறிவர். 'மீட்டு' என்பது உயிர்ப்பை மீட்டு என உரை பெறும். பரதன் கூறிய வார்த்தைகளைக் கேட்டுக் கிளர்ந்தெழும் உயிர்ப்பைப் பெற்ற குகன், அவ்வுயிர்ப்பை மீட்டுஇயல்பு நிலைக்குத் திரும்பிய பின்னரே வேறு செயல் செய்யமுடியும். ஆதலின், அவ்வுயிர்ப்பைமீட்டு (10161, 10162 பாடல்களை இங்கு நோக்குக). மண்ணதனில் வீழ்ந்தான் என்றதுபொருந்தும். 'மீட்டும்' என்று இருப்பினும் முன்பு வணங்கினான் இப்போது 'மண்ணதனில் வீழ்ந்தான்' என்று அதன் வேறுபாட்டை உணர்த்துமே அன்றி வேறன்று. மூத்தவனாகிய குகன் இப்போதுமண்ணில் வீழ்ந்து வணங்குதல் தகுமோ எனின், இருவர் இணையும்போது முதற்கண் இளையோர் மூத்தோரை வணங்குதலும், அவ்வாறு வணங்கிய இளையோரை மூத்தோரை வணங்குதலும், அவ்வாறு வணங்கிய இளையோரை மூத்தோர் எடுத்துத் தழுவி விசாரித்தலும் இயல்பு. இங்கு, தான் வந்த நோக்கத்தைப் பரதன் கூறக் கேட்ட குகனுக்குப் பரதன் பரதனாகவே காட்சி அளிக்கவில்லை. அவன் தம்பி முறையும்புலனாகவில்லை. அவனை ஆயிரம் இராமர்களுக்கும் மேலாகவே கருதுகிறான். அதனால் 'ஆயிரம் இராமர்நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா' என்று வியந்து பேசுகிறான். ஆகவே, ஆயிரம் இராமர்களுக்கும் மேம்பட்டவனாகப் பரதனை எண்ணிய குகன், இராமன் காலில் விழுந்து பணிவது முறையானாற் போல, பரதன் காலிலும் விழுந்து பணிந்தான் ஆதலின் தகும் என்க. இதனை விளக்கவே கம்பர் கவிக் கூற்றாகப் "புளிஞர்கோன் பொருஇல் காதல் அனையவற்கு அமைவின் செய்தான்; ஆர் அவற்கு அன்பிலாதார்? நினைவு அருங்குணங்கொடு அன்றோ இராமன் மேல் நிமிர்ந்த காதல்" (2339) என்று தாமே முன்வந்து பேசுவாராயினர். பரதனது குணங்களில் ஈடுபட்டு அவனைப் பணிந்தான்; இராமகுணங்கள் எங்கிருந்தாலும் அங்குப் பணிதல் இராமனைப் பணிதலே அன்றோ? ஆகவே, அது தகாதது செய்ததாகாது; அமைவிற் செய்ததாகவே ஆகும். விடை கொடுத்த படலத்துத் தன் அடியனாய அனுமனை இராமன் "போர் உதவிய திண் தோளாய் பொருந்துறப் புல்லுக" (10351) என்று தன்னைத் தழுவிக் கொள்ளச் சொல்லியதையும் இங்குக் கருதுக. பொது நிலையில் முதற்காட்சியில் அண்ணனாகிய குகனைப் பரதன் வணங்கினான் என்றும், சிறப்பு நிலையில் இராம குணாநுபவத்தின் எல்லையைப் பரதன்பால் கண்ட குகன் இராமனிலும் மேம்பட்டவனாகக் கருதி வேறு எதுவும் நோக்காது அன்பினான் அடியற்ற மரம்போல் வீழ்ந்து கைகளைத் திருவடியிற் பூட்டி நெடிது கிடந்தான் என்றும் கொள்க. அங்ஙனம்*

*கிடந்த குகனைப் பரதன் எடுத்துத் தழுவியதாகக் கம்பர் கூறாமையும் காண்க. "நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்" (2332) எனக் குகன் முன்னரே கூறுதலின், இராமன் "எழுதரிய திருமேனி" (656) உடையவனானாற்போல, "எள்ளரிய குணத்தாலும் எழிலாலும்.....வள்ளலையே, அனையா'னா (657) கிய பரதனும், 'தீட்டரு மேனி மைந்தன்' ஆயினன். "எழுது அரு மேனியாய்" (2105) என்று பள்ளி படைப் படலத்தின்கண் கூறியதை ஈண்டு ஒப்பு நோக்குக.* ***34***

***2337. 'தாய் உரைகொண்டு தாதை உதவிய***
***தரணிதன்னை,***
***"தீவினை" என்ன நீத்து,***
***சிந்தனை முகத்தில் தேக்கி,***
***போயினை என்றபோழ்து, புகழினோய்!***
***தன்மை கண்டால்,***
***ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ,***
***தெரியன் அம்மா!***

***'புகழினோய்!*** - *புகழ் உடையவனே!;* ***தாய் உரை கொண்டு*** - *(உன்) தாயாகியகைகேயியின் 'வரம்' என்கின்ற வார்த்தையைக் கொண்டு;* ***தாதை உதவிய*** - *(உன்)தந்தையாகிய தயரதன் அளித்த;* ***தரணி தன்னை*** - *(கோசல நாட்டு) அரசாட்சியை; தீவினைஎன்ன* ***நீத்து*** - *தீயவினை வந்து சேர்ந்தது போலக் கருதிக் கைவிட்டு; முகத்தில்* ***சிந்தனை தேக்கி*** - *முகத்தில் கவலை தேங்கியவனாய்; போயினை - (வனத்துக்கு) வந்தாய்;* ***என்ற போழ்து*** - *என்ற காலத்தில்;* ***தன்மை கண்டால்*** - *(உனது) நல்லியல்புகளைஅறியுமிடத்து;* ***தெரியின்*** - *ஆராய்ந்தால்;* ***ஆயிரம் இராமர் நின்கேழ்ஆவரோ*** - *ஆயிரம் இராமர்கள் உளரானாலும் நின் ஒருவனுக்குச் சமானம் ஆவரோ;* ***அம்மா! -.*** *தந்தைமட்டுமே அளித்த அரசை வெறுத்து வந்த இராமனிலும், தாயும் தந்தையும் இணைந்து அளித்த அரசை வெறுத்த பரதன் மேன்மை புலப்பட இவ்வாறு கூறினான். "தாமரைக் கண்ணன், காதல் உற்றிலன் இகழ்ந்திலன்" (1382) என்ற இராமனது மனநிலையும், 'தீவினை என்ன நீத்து' என்ற பரதனது மனநிலையும் ஒப்பிடுக. இவையெல்லாம் இராமபிரானைக் குறைத்துக் கூறுவேண்டும் என்று குகன் கருதியதன்று; பரதனது மேன்மைக் குணத்தைப் பாராட்டும் முகமாகக் கூறியதாம்; எங்ஙனமெனின் இத்தகைய குணச்சிறப்புகளால் உயர்ந்த பரதனைப் பாராட்டப்படும்பொழுதும் "ஆயிரம் இராமர்" என்று குகனுக்கு இராமனே அளக்கும் பொருளாய் வந்து நிற்பது கொண்டு அறியலாம். "உள்ளத்தின் உள்ளதை உரையின் முத்துற, மெள்ளத் தம் முகங்களே விளம்பும்" (6452) "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்" (குறள். 706) ஆதலின், பரதனது உள்ளத் துன்பம் அவனது முகத்தில் நின்றபடியைச் 'சிந்தனை முகத்தில் தேக்கி' என்றுரைத்தார். 'அம்மா' என்பது வியப்பிடைச் சொல்.* ***35***

***2338. 'என் புகழ்கின்றது, ஏழை***
***எயினனேன்? இரவி என்பான்-***
***தன் புகழ்க் கற்றை,***
***மற்றை ஒளிகளைத் தவிர்க்குமாபோல்,***
***மன் புகழ் பெருமை நுங்கள்***
***மரபினோர் புகழ்கள் எல்லாம்.***

***உன் புகழ் ஆக்கிக்கொண்டாய் -***
***உயர் குணத்து உரவுத் தோளாய்!***

***'உயர் குணத்து உரவுத் தோளாய்!*** *- உயர்த்த உத்தமக் குணங்களையும், வலிமையான தோளையும் உடைய பரதனே!;* ***ஏழை எயின னேன்*** *- அறிவில்லாத வேடனாகிய யான்;* ***என் புகழ்கின்றது?*** *- எவ்வாறு புகழ முடியும்;* ***இரவிஎன்பான் தன்*** *- சூரியன் என்று சொல்லப்படுகிறவனது;* ***புகழ்க் கற்றை*** *- புகழாகியஒளித்தொகுதி; மற்றை* ***ஒளிகளைத் தவிர்க்குமா போல்*** *- மற்றைக் கோள்கள், உடுக்களின் ஒளிகளையெல்லாம் அடக்கிக் கீழ்ப்படுத்தித் தான் மேற் சென்றுள்ளவாறு போல;* ***மன் புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்கள் எல்லாம்*** *- எல்லா அரசர்களாலும் பாராட்டப்பெறும் பெருமை படைத்த உங்கள் சூரிய வம்சத்து முன்னைய அரசர்களது எல்லாப்புகழ்களையும்;* ***உன் புகழ் ஆக்கிக்கொண்டாய்*** *- உனது புகழுக்கும் அடங்குமாறு செய்துகொண்டுவிட்டாய்.*

*'ஏழை எயினன்' - குகன் தன்னடக்கமாகக் கூறிக்கொண்டான். சூரியனுக்குப் புகழ் என்பது ஆதலின் அதனைப் 'புகழ்க்கற்றை' என்றார். மரபினோர் புகழ்கள் முன்பு பேசப்பட்டன; இனி, பரதன் புகழே பேசப்படும் என்பதாகும்.*
***36*** *குகன் பரதனிடத்துக் கொண்ட பேரன்பு*

***2339. என இவை அன்ன மாற்றம்***
***இயைவன பலவும் கூறி,***
***புனை கழல், புலவு வேற் கை,***
***புளிஞர்கோன் பொரு இல் காதல்***
***அனையவற்கு அமைவின் செய்தான்;***
***ஆ அவற்கு அன்பு இலாதார்?-***
***இராமன்மேல் நிமிர்ந்த காதல்?***

***புனை கழல்*** *- அலங்கரிக்கப் பெற்ற வீரக்கழலை அணிந்த;* ***புலவு வேற்கை*** *- புலால் மணம் வீசும்வேலைப் பிடித்த கையை உடைய;* ***புளிஞர் கோன்*** *- வேடர் தலைவனாகிய குகன்;* ***என இவைஅன்ன மாற்றம் இயைவன புலவும் கூறி*** *- என்று இதுபோன்ற பொருந்திய சொற்கள் பலவற்றையும்சொல்லி;* ***பொரு இல் காதல் அனையவற்கு*** *- இராமன்பாலும் அதனால் தன்பாலும் ஒப்பற்றபேரன்பினை உடையனாகிய பரதனுக்கு;* ***அமைவின் செய்தான்*** *- பொருந்தியநல்லுபசரிப்புகளைத் தகுதியாகச் செய்தான்;* ***அவற்கு அன்பு இலாதார் யார்*** *-அப்பரதனிடத்தில் அன்பு செலுத்தாதவர் யார்உளர்?;* ***இராமன் மேல் நிமிர்ந்த காதல்*** *- இராமனிடத்து மேல் சென்று உயர்ந்த அன்பு (அவன் சக்கரவர்த்தித் திருமகள் என்பதாலா?அன்று);* ***நினைவு அருங் குணம்கொடு அன்றோ*** *- நினைக்கவும் முடியாத நற்குணங்களின்நிலையமாக அவன் இருந்தான் என்பதனால் அல்லவா? (அக்குணங்கள் இவன்பாலும் இருத்தலால் இவனிடமும் அன்பு நிமிர்ந்தது.)*

*'அமைவின் செய்தான்' என்பது பரதன் தகுதிக்கும், அவன் குணநலத்துக்கும், அப்போதையதுக்கத்துக்கும் ஏற்ற வகையில் வழுவாது உபசரித்தான் குகன் என்பதைக் காட்டும். இராமனிடத்துஎந்தக் குணங்களைக் கண்டு குகன் அன்பு செலுத்தினானோ அதே குணங்கள் இவன்பாலும் இருத்தலின்இவனிடத்தும் அந்த அன்பு கண்ட அளவிலே உண்டாயிற்று என்றார். இங்கு 'எள்ளரிய குணத்தாலும்எழிலாலும்*

*இவ்விருந்த வள்ளலையே அனையானைக் கேகயர் கோன் மகள் பயந்தாள்" (657.) என்பதனைக் கருதுக. 'பொரு இல் காதல்' என்பதனைக் குகன்மேல் ஏற்றி உரைப்பதும்உண்டு.* ***37***

*இராமன் தங்கிய இடம் எது? எனப் பரதன் குகனைக் கேட்டல்*

***2340. அவ் வழி அவனை நோக்கி,***
***அருள் தரு வாரி அன்ன***
***செவ் வழி உள்ளத்து அண்ணல்,***
***தென் திசைச் செங் கை கூப்பி,***
***'எவ் வழி உறைந்தான் நம்முன்?'***
***என்றலும், எயினர் வேந்தன்,***
***'இவ் வழி , வீர! யானே காட்டுவல்;***
***எழுக!' என்றான்.***

***அருள் தரு வாரி அன்ன*** *- கருணைப் பெருங்கடலை ஒத்த;* ***செவ்வழி உள்ளத்து அண்ணல்*** *- நேரிய வழியிற் செல்லும்மனத்தை உடைய பரதன்;* ***அவ் வழி*** *- அப்போது;* ***அவனை நோக்கி*** *- குகனைப் பார்த்து;* ***தென்திசைச் செங்கை கூப்பி*** *- இராமன் சென்றுள்ள தென்திசையைப் பார்த்துத்தன் சிவந்த கைகளைக் குவித்து வணங்கி; 'நம்முன் - நம்முடைய அண்ணன்;* ***எவ்வழிஉறைந்தான்?'*** *- எந்த இடத்தில் தங்கியிருந்தான்?;* ***என்றலும்*** *- என்றுகேட்டவுடனே;* ***எயினர் வேந்தன்*** *- வேட அரசனாகிய குகன்;* ***'வீர!*** *- வீரனே!;* ***இவ் வழி*** *- இவ்விடத்தில்;* ***யானே காட்டுவல்*** *- நானே (அவ்விடத்தை உனக்குக்) காண்பிப்பேன்;* ***எழுக'*** *- என்னுடன் புறப்படுவாயாக;* ***என்றான் -.***

*'தென் திசைச் செங்கை கூப்பி' - 'திசை நோக்கித் தொழுகின்றான்' (2332.) எனமுன்னர் வந்ததும் காண்க. 'இவ்வழி' என்பதற்கு 'இந்த இடமாகும்' என்று குகன் அவ்விடத்தையும்காட்டிச் சுட்டிச் சொல்லியதாக முடித்துக் காட்டலும் ஒன்று.*
***38***

*இராமன் வைகிய இடம் கண்ட பரதன் நிலையும் நினைவும்*

***2341. கார் எனக் கடிது சென்றான்;***
***கல்லிடைப் படுத்த புல்லின்,***
***வார் சிலைத் தடக் கை வள்ளல்,***
***வைகிய பள்ளி கண்டான்;***
***பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான்;***
***பருவரற் பரவை புக்கான்-***
***வார் மணிப் புனலால் மண்ணை***
***மண்ணுநீர் ஆட்டும் கண்ணான்.***

*(குகன் காட்டிய இடத்துக்குப் பரதன்)* ***கார் எனக் கடிது சென்றான்*** *- மேகம் போலவிரைவாகச் சென்று;* ***வார் சிலைத் தடக்கை வள்ளல்*** *- கட்டமைந்த வில்லேந்திய*

*நீண்டகைகளை உடைய இராமன்; வைகிய - தங்கியிருந்த;* ***கல்லிடைப் படுத்த புல்லின் பள்ளி*** *-கற்களின் இடையே பரப்பப்பெற்ற புல்லால் ஆகிய படுக்கையை;* ***கண்டான்*** *- பார்த்து; பார்மிசை - பூமியின் மேல்;* ***பதைத்து*** *- துடித்து;* ***வீழ்ந்தான்*** *- விழுந்து;* ***பருவரல் பரவை புக்கான்*** *- துன்பம் எனும் கடலில் புகுந்து;* ***வார் மணிப் புனலால்*** *- பெருகுகின்ற முத்துமணி போன்ற கண்ணீரினால்;* ***மண்ணை*** *- பூமியை;* ***மண்ணு நீர் ஆட்டும்*** *- திருமஞ்சனத் தண்ணீரால் குளிப்பாட்டுகின்ற;* ***கண்ணான்*** *- கண்ணுடையவனாக ஆனான்.*

*பரதன் மனத்தின் பதைபதைப்பும், அதனால் ஏற்பட்ட துன்பமும், அதன்வழி உண்டாகின்ற கண்ணீர்ப்பெருக்கும் மிகுந்த படியைக் கூறினார். இராமபிரான் வைகியஇடத்தைத் திருமஞ்சனம் ஆடடினான் என்பது போலக் கூறியது கவிநயம் - " மண்ணக மடந்தையை மண்ணுநீர் ஆட்டி (பெருங். 1-49-89) என்பது போல. 'கார் என' என்கின்ற உவமை பரதனது திருமேனிநிறம், அவன் விரைந்து சேறல், பின் நீர்பொழிதல் (கண்ணீர்) ஆகிய அனைத்துக்கும்பொருந்துதல் அறிந்து மகிழத்தக்கது.*

***2342. 'இயன்றது, என் பொருட்டினால்,***
***இவ் இடர் உனக்கு என்ற போழ்தும்,***
***அயின்றனை, கிழங்கும் காயும்***
***அமுது என; அரிய புல்லில்***
***துயின்றனை எனவும், ஆவி துறந்திலென்;***
***சுடரும் காசு***
***குயின்று உயர் மகுடம் சூடும்செல்வமும்***
***கொள்வென் யானே!"***

***உனக்கு இவ் இடர் என்பொருட்டினால் இயன்றது என்ற போழ்தும்*** *- (இராம!) உனக்கு இவ் வனவாசமாகிய துன்பம் என்காரணமாக உண்டாகியது என்று அறிந்த அந்தநேரத்திலும்; (அதன் பிறகு)* ***கிழங்கும் காயும் அமுது என அயின்றனை*** *- கிழங்கு, காய்முதலியவற்றை (அரண்மனையில் இருந்து உண்ணும்) அமுது போல உண்டாய்;* ***அரிய புல்லில்துயின்றனை*** *- உறங்குதற்கு இயலாத புற்படுக்கையில் உறங்கினாய்;* ***எனவும்*** *- என்றுஅறிந்த இந்த நேரத்திலும்;* ***யான் ஆவி துறந்திலென்*** *- யான் உயிர் போகப் பெற்றேன்இல்லை, (அம்மட்டோ);* ***சுடரும் காசு குயின்று உயர் மகுடம்*** *- ஒளி விடும் பொன்னாற்செய்யப்பெற்று உயர்ந்த திருமுடியை;* ***சூடும் செல்வமும் கொள்வேன்*** *- சூட்டிக்கொள்ளும்அரசச் செல்வத்தையும் ஏற்றுக் கொள்வேன் போலும்.*

*பரதன் தன்னைத் தானே நொந்து உரைத்துக்கொள்வதாகக் கொள்க. தன்னால்தான்இத்தகைய துன்பங்கள் இராமனுக்கு உண்டாகின என்று நைகிறான். அரண்மனையில் உண்பது அமுது ஆதலின்வனத்தில் உண்ணும் கிழங்கும் காயும் அமுதாயின. இன்னும் உயிர் வைத்திருப்பதும் உயிர் போகாமல் இருப்பதும் அரசுச் செல்வத்தையும் அநுபவிக்கவோ என்று நொந்து உரைத்தானாம். 'ஏ'காரம் ஈற்றசை.*
***40*** இலக்குவன் யாது செய்தனன் எனப் பரதன் குகனை வினாவுதல்

***2343. தூண்தர நிவந்த தோளான்***
***பின்னரும் சொல்லுவான்! 'அந்***
***நீண்டவன் துயின்ற சூழல்***

***இதுஎனின், நிமிர்ந்த நேயம்***
***பூண்டவன், தொடர்ந்து பின்னே***
***போந்தவன், பொழுது நீத்தது***
***யாண்டு?' என, இனிது கேட்டான்;***
***எயினர்கோன், இதனைச் சொன்னான்;***

***தூண்தர*** *- தூணை ஒப்பாக;* ***நிவந்த தோளான்*** *- உயர்ந்த தோள்களை உடையபரதன்;* ***பின்னரும் சொல்லுவான்*** *- மீண்டும் குகனைப் பார்த்துப் பேசுவான்;* ***'அந்நீண்டவன் துயின்ற சூழல் இது எனின்*** *- அந்த நெடியவனாகிய இராமன் உறங்கிய இடம்இது என்றால்;* ***நிமிர்ந்த நேயம் பூண்டவன் தொடர்ந்து பின்னே போந்தவன்*** *- (அவ் இராமனிடத்தில்) மேற்சென்ற மிகுந்த அன்பு கொண்டு அவனைத் தொடர்ந்து அவன் பின்னேயேவந்தவனாகிய இலக்குவன்;* ***பொழுது நீத்தது*** *- இரவுப் பொழுதைக் கழித்தது;* ***யாண்டு?'*** *- எவ்விடத்தில்?;* ***என*** *- என்று;* ***இனிது கேட்டான்*** *- இனிமையாக வினாவினான்;எயினர்கோன் - வேட வேந்தனாய குகன்;* ***இதனைச் சொன்னான்*** *- இந்த விடையைக்கூறினான்.*

*நெடியோன் என்று இராமனைப் பலவிடங்களிலும் கம்பர் குறிப்பர். அதனால் நீண்டவன்என்றார். நிமிர்தல் மேல் செல்லுதல் ஆதலின் உயர்ந்த அன்பு என்றாகும். இலக்குவனைப்பற்றிவினாவுகிறபோது பரதனுக்கு ஏற்படும் உள்ள நெகிழ்வைப் புலப்படுத்தவே 'இனிது கேட்டான்'என்றார்.* ***41***

இலக்குவன் செயல்பற்றிக் குகனது விடை

***2344. 'அல்லை ஆண்டு அமைந்த மேனி***
***அழகனும் அவளும் துஞ்ச,***
***வில்லை ஊன்றிய கையோடும்,***
***வெய்து உயிர்ப்போடும், வீரன்,***
***கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்!-***
***கண்கள் நீர் சொரிய, கங்குல்***
***எல்லை காண்பு அளவும் நின்றான்;***
***இமைப்பிலன் நயனம்' என்றான்.***

***'கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்!*** *- மலையைக் கீழ்ப்படுத்தி உயர்ந்ததோள்களை உடையவனே!;* ***அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும்*** *- இருளைப் பயன்படுத்தி அமைத்தால் ஒத்த கரிய திருமேனியுடைய அழகிற் சிறந்த இராமனும்;* ***அவளும்*** *- அந்தப் பிராட்டியும்; துஞ்ச - உறங்க; வீரன் - இலக்குவன்;* ***வில்லை ஊன்றிய கையோடும்*** *- வில்லின் மேல் வைத்த கையுடன்;* ***வெய்து உயிர்ப்போடும்*** *- வெப்பமான மூச்சுடையவனாய்;* ***கண்கள் நீர் சொரிய*** *- தன்னிரண்டு கண்களும் நீரைச்சொரிய;* ***கங்குல் எல்லை காண்பளவும்*** *- இரவு தன் முடிவான விடியலைப் பார்க்குமளவும்;* ***நயனம் இமைப்பிலன்*** *- கண்கள் இமைகொட்டாமல் (உறங்காமல்);* ***நின்றான்'*** *- நின்றுகொண்டே (காவல் செய்து) இருந்தான்;* ***என்றான் -***

*அவள் - நெஞ்சறிசுட்டு. அஃதாவது சொல்லும் குகனுக்கும், கேட்கும் பரதனுக்கும் கேட்டஅளவிலே அது யாரைச்சுட்டுவது என்பது அவர்கள் மனத்தால்*

*அறியப்படுதலின், 'வில்லை ஊன்றிய கை' என்றது நெடுநேரம் நிற்பதற்கு ஊன்றுகோலாக வில்லக் கொண்டகை என்பதாம். 'நயனம் இமைப்புஇலன்' சினைவினை முதலொடு முடிந்தது "சினைவினை சினையொடும் முதலொடும் செறியும்" ஆதலின்.(நன். 345.) 'கண்கள் நீர் சொரிய' என்றவர், மீண்டும் 'இமைப்பிலன் நயனம்' என்றது இலக்குவன் உறங்காதிருந்து காத்த பேரன்பில் குகனது ஈடுபாட்டை உணர்த்தியது. இலக்குவன்உறங்காது காத்தமையைக் கங்குல் எல்லை காண்பளவும் கண்டு குகன் கூறினான். ஆகவே, குகனும்உறங்காதிருந்தமை தானே பெறப்படுதல் காண்க. "வரிவில் ஏந்திக் காலைவாய் அளவும் தம்பிஇமைப்பிலன் காத்து நின்றான்" "துஞ்சலில் நயனத் தைய சூட்டுதி மகுடம்" என (1974, 6505.) வருவனவற்றையும் இங்கு ஒப்பிட்டுக் காண்க. பிராட்டியை இங்கே குகன் 'அவள்' என்ற சேய்மைச்சுட்டால் கட்டியது தேருந்தொறும் இன்பம் பயப்பது. ஐந்து வார்த்தைகளால் இராமனைக் கூறியவன்பிராட்டியை எட்டியும் கட்டியம் சொல்ல இயலாது எட்ட நின்றே பேசுகிறான். - கம்பர் இராமனை'மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ" (1926.) என்று சொல்லிப் பார்த்துப் பிறகு 'ஐயோ'என ஆற்றாமை மேலிட்டார் - ஆனால், பிராட்டியைச் சொல்லமாட்டாமலே "ஒப்பு எங்கே கண்டுஎவ்வுரை நாடி உரைசெய்கேன்" என்று நாத் தழுதழுக்கக் (503) காண்கிறோம். ஆகவே, வரம்பில்லாப் பேரழகினாளை எதனால் எவ்வாறு சொல்வது என்றறியாத ஏழைமை வேடன் 'அவள்' என்ற வார்த்தையால் சொல்லி அமைத்தான் என்னலே போதுமானது. 42*

பரதன் தன்னை நொந்து உரைத்தல்

***2345. என்பத்தைக் கேட்ட மைந்தன்,***
***'இராமனுக்கு இளையார் என்று***
***முன்பு ஒத்த தோற்றத்தேமில்,***
***யான் என்றும் முடிவு இலாத***
***துன்பத்துக்கு ஏது ஆனேன்; அவன்,***
***அது துடைக்க நின்றான்;***
***அன்பத்துக்கு எல்லை உண்டோ? அழகிது,***
***என் அடிமை!; என்றான்.***

***என்பத்தை*** *- என்று (குகன்) சொன்னதை;* ***கேட்ட மைந்தன்*** *- கேட்ட பரதன்;* ***இராமனுக்குஇளையார் என்று*** *- இராமனுக்குத் தம்பிகள் என்று சொல்லும்படி;* ***முன்பு ஒத்ததோற்றத்தேமில்*** *- பிறக்கும்பொழுது ஒத்த தன்மையான பிறப்பைப் பெற்ற எங்கள்இருவரிலும்; யான் - பரதனாகிய யான்;* ***என்றும் முடிவு இலாத துன்பத்துக்கு ஏது ஆனேன்*** *- எக்காலத்தும் கரைகாணாத பெருந்துன்பத்தை இராமன் அடைதற்குக் காரணமாக ஆய்விட்டேன்; அவன் -அந்த இலக்குவன்;* ***அது*** *- அத்துன்பத்தை;* ***துடைக்க நின்றான்*** *- இராமனிடமிருந்து நீக்கத் துணையாக இராமனுடன் நின்றான்;* ***அன்புக்கு எல்லை உண்டோ?*** *- அன்புக்கு ஒரு வரையறை உள்ளதோ;* ***என் அடிமை அழகிது'*** *- நான் இராமனுக்குச் செய்யும் அடிமைத்திறம்நன்றாயிருந்தது;* ***என்றான்*** *- என்று கூறினான்.*

*"அன்பத்துக்கு எல்லை உண்டோ" இலக்குவன் செயல் குறிதத்து. 'என்பது' 'என்பத்து' எனவிரித்தல் விகாரம் செய்யுள் நோக்கி வந்தது. அன்புக்கு என்பது*

*அன்பத்துக்கு என அத்துச்சாரியை பெற்றது. பிறப்பால் இருவரும் ஒரு தன்மையர் ஆயினும் அவன் சிறப்பாகிய அன்பினால் எல்லையின்றி உயர்ந்தான்; யான் அடிமையில் தாழ்ந்தேன் என்று பரதன் தன்னை நொந்துகூறினான்.*
***43***

*கங்கையின் தெென்கரை சேர்க்கக் குகனைப் பரதன் வேண்டல்*

***2346. அவ் இடை, அண்ணல்தானும், அன்று,***
***அரும் பொடியின் வைகி,***
***தெவ் இடைதர நின்று ஆர்க்கும்***
***செறி கழல் புளிஞர் கோமா அன்!***
***இவ் இடை, கங்கை ஆற்றின்***
***ஏற்றினை ஆயின், எம்மை***
***வெவ் இடர்க் கடல் நின்று ஏற்றி,***
***வேந்தன்பால் விடுத்தது' என்றான்.***

***அண்ணல் தானும்*** *- பரதனும்;* ***அவ் இடை*** *- அந்த இடத்தில்;* ***அன்று*** *- அன்றையிரவு;* ***அரும்பொடியின் வைகி*** *- தற்குதற்கியலாத புழுதி மண்ணில் தங்கியிருந்த, (பொழுதுவிடிந்ததும்);* ***'தெவ் இடை தர -*** *பகைவர்கள் தோற்றோடும்படி; நின்று ஆர்க்கும்செறிகழல்- தங்கி ஒலிக்கும் கட்டப்பட்ட வீரக்கழல் அணிந்த;* ***புளிஞர் கோமாஅன்!*** *-வேடர்களுக்கு அரசனாகிய குகனே!;* ***இவ் இடை*** *- இந்த நேரத்தில்;* ***கங்கை ஆற்றின்*** *- கங்கை ஆற்றிலிருந்து;* ***எம்மை ஏற்றினை ஆயின்*** *- எம்மைப் கரையேற்றிச் (தென்கரை)சேரச் செய்தால்;* ***வெவ இடர்க்கடல் நின்று ஏற்றி*** *- கொடிய துயரக் கடலிலிருந்துகரையேற்றி;* ***வேந்தன்பால் விடுத்தது'*** *- இராமன்பால் அனுப்பியது ஆகும்;'* ***என்றான்*** *- என்று சொன்னான். இவ் இடை என்பது காலம் இடமாயிற்று. இராமன் வைகிய இடம் கண்ட பரதன் அந்த இடத்திலேயே புழுதி மண்ணில் தங்கினானாம். கங்கை ஆற்றைத் தாண்டித் தென்கரை விடுதல் - துன்பக் கடலைத் தாண்டி இராமனிடம் சேர்பித்ததாகும் என்றானாம் இராமனை வேந்தன், மன்னன் என்றே குறித்துச் செல்லும் பரதனது உளப்பாங்கை இங்கு அறிக. ஆற்றின் ஏற்றுதல் என்பது ஆற்றிலிருந்து கரை யேற்றுதல் என்பதனைக் குறித்தவாறாம்.*
***44***

*குகன் கட்டளையிட, நாவாய்கள் வருதல்*

***2347. 'நன்று' எனப் புளிஞர் வேந்தன்***
***நண்ணினன் தமரை; 'நாவாய்***
***சென்று இனித் தருதிர்' என்ன, வந்தன-***
***சிவன் சேர் வெள்ளிக்***
***குன்று என, குனிக்கும் அம் பொன் குவடு என,***
***குபேரன் மானம்***
***ஒன்று என, நாணிப் பல் வேறு***
***உருவு கொண்டனைய ஆன,***

*(பரதன் கூறியது கேட்டு)* ***புளிஞர் வேந்தன்*** *- வேடர் வேந்தனாய குகன்;* ***'நன்று'*** *- நல்லது (அவ்வாறே செய்வேன்) என்று சொல்லி;* ***தமரை நண்ணினன்*** *- தன் இனத்தவரைஅடைந்து;* ***'சென்று இனி நாவாய் தருதிர்' என்ன*** *- (நீங்கள்) சென்று இனிமேல்படகுகளைக் கொண்டு வருக என்று சொல்லிவிட; (நாவாய்கள்)* ***சிவன் சேர் வெள்ளிக் குன்று என*** *- சிவபெருமான் வீற்றிருந்து அருளும் (திருக்கயிலாயம் எனப்பெறும்) வெள்ளிமலை போல;* ***குனிக்கும் அம்பொன் குவடு என*** *- (அச்சிவபெருமான் திரிபுர மெரித்த காலத்தில்) வளைத்த(மகா மேரு மலையாகிய) பொன்மலை போல;* ***குபேரன் மானம் என*** *- (வடதிசைக்கு அதிபனாகிய) குபேரனது புஷ்பக விமானம் போல;* ***ஒன்று என நாணி*** *- (இவையெல்லாம்) தாம்ஒன்றாய் இருப்பதற்கு வெட்கமுற்று;* ***பல்வேறு உருவு கொண்டனைய ஆன*** *- அவை தாமேஒவ்வொன்றும் பல்வேறு வடிவங்களை எடுத்துக் கொண்டாற்போன்றவையாகிய நாவாய்கள்;* ***வந்தன*** *- (கங்கையின் கண்) வந்து சேர்ந்தன.*

*பல்வேறு வடிவும் நிறமும் பருமையும் உடைய படகுகளை வெள்ளிமலை, பொன்மலை, புஷ்பக விமானம் பல்வேறு வடிவுகொண்டு வந்துள்ளதாகக் கற்பனை செய்தார்; இது தற்குறிப்பேற்றம் உவமையணியுடன் வந்தது. 'குபேரன் மானம் என' என்று 'என' வைப் பிரித்துக் கூட்டுக.* ***45***

நாவாய்களின் தோற்றப் பொலிவு

***2348. நங்கையர் நடையின் அன்னம்***
***நாண் உறு செலவின் நாவாய்.***

***கங்கையும் இடம் இலாமை மிடைந்தன -***
***கலந்த எங்கும், -***
***அங்கொடு, இங்கு, இழித்தி ஏற்றும் அமைதியின்,***
***அமரர் வையத்து***
***இங்கொடு அங்கு இழித்தி ஏற்றும்***
***இருவினை என்னல் ஆன,-***

***நங்கையர் நடையின்*** *- பெண்கள் நடைபோன்ற நடையையும்;* ***அன்னம் நாணுறு செலவின்*** *- அன்னப் பறவைகள்நாணப்படும் படியான நீரிற் செல்லுதலும் உடைய, நாவாய்;* ***அங்கொடு இங்கு*** *- அக்கரையில் உள்ளாரை இக்கரையிலும்;* ***இழித்தி ஏற்றும் அமைதியின்*** *- ஏற்றி இறக்கும்தன்மையினால்; அமரர் வையத்து அங்கொடு - தேவருலகமாகிய அவ்வுலகத்தோடு; இங்கு - இவ்வுலகில்உள்ளாரை;* ***இழித்தி ஏற்றும்*** *- ஏற்றி இறக்கும்;* ***இருவினை*** *- புண்ணியம், பாவம்என்னும் இருவினை;* ***என்னல் ஆன*** *- என்று சொல்லும்படியாக இருந்தனவாய்;* ***கங்கையும் இடம் இலாமை மிடைந்தன*** *- கங்கா நதியிலும் இடம் இல்லை என்னும்படி நெருங்கின;* ***எங்கும் கலந்தன*** *- எல்லா இடங்களிலும் சேர்ந்தன.*

*'அங்கொடு இங்கு' என்று பொதுவாகக் குறிப்பிடினும், கங்கையின் வடகரை நின்று தென்கரைக்குச் சேறலே இங்கு வேண்டப்படுதலின் வடகரையில் ஏற்றித் தென்கரையில்இறக்குதலே இங்கு உண்டு; தென்கரையில் ஏறுவார் இலர் ஆதலின், புண்ணியம் மிக்கார் பூவுலகில் நின்று அமரருலகு ஏறலும், புண்ணியம் அநுபவித்துத்*

*தொலைத்த பிறகு மீண்டும் பாவத்தை அநுபவிக்கமண்ணுலகு சேறலும் ஆகியவற்றுக்கு இருவினை காரணமாக ஆதலின் இருவினைகளே மேலும் கீழும் ஏற்றி இறக்குவ என்பது கொண்டு அவற்றை நாவாய்களுக்கு உவமை ஆக்கினார். 'இழித்தி ஏற்றும்' என்பது 'ஏற்றி இழித்து' என மாற்றி உரைக்கப்பெற்றது. இனி தென்கரையில் நின்று வடிகரையில்இறங்குவார் உளராயின் இருதலையும் கொள்ளுதலும் ஒன்று. அது உவமையோடு முழுதும் பொருந்திற்றாம். நாவாய்களின் நடை நங்கையர் நடை போன்றது. செல்கை அன்னம் நாணப்படும்படி உள்ளது என்க; மெல்ல மெல்ல, அசைந்து செல்லுதலால். "அன்னப்பேட்டை சிறை இலதாய்க் கரை, துன்னிற்றென்னவும் வந்தது தோணியே" (2372.) என்றதும் நோக்குக.* ***46***

*பரதன் சேனைகள் கங்கையைக் கடத்தல்*

***2349. 'வந்தன, வரம்பு இல் நாவாய்;***
***வரி சிலைக் குரிசில் மைந்த!***
***சிந்தனை யாவது?' என்று,***
***சிருங்கிபேரியர்கோன் செப்ப,***
***சுந்தர வரி விலானும்***
***சமந்திரன்தன்னை நோக்கி,***

***'எந்தை! இத் தானைதன்னை ஏற்றுதி,***
***விரைவின்' என்றான்.***

***சிருங்கி பேரியர் கோன்*** *- சிருங்கிபேரம் என்னும் நகரில் உள்ளார்க்கு அரசன் ஆகிய குகன்; (பரதனை நோக்கி)* ***'வரிசிலைக் குரிசில் மைந்த*** *- கட்டமைந்த வில் தொழிலிற் சிறந்த தயரத குமாரனாகி பரதனே!;* ***வரம்பு இல் நாவாய் வந்தன*** *- கணக்கில்லாத படகுகள் வந்துள்ளன;* ***சிந்தனையாவது'*** *- (உன்) மனக்கருத்து என்ன?; என்று செப்ப - என்று சொல்ல;* ***சுந்தரவரிவில்லானும்*** *- அழகிய கட்டமைந்த வில்லானாகிய பரதனும்;* ***சுமந்திரன் தன்னைநோக்கி*** *- (மதியமைச்சருள் மூத்தோனாகிய) சுமந்திரனைப் பார்த்து; 'எந்தை - என்தந்தையே!;* ***இத்தானை தன்னை*** *- இச்சேனைகளை;* ***விரைவின் ஏற்றுதி'*** *- விரைவாகப் படகில் ஏற்றுக;* ***என்றான்*** *- என்று சொன்னான்.*

*சிருங்கி பேரன் என்பது குகனது நாட்டின் தலைநகரம். 'வரிசிலைக் குரிசில்' என்று தயரதனைக் கூறியதற்கேற்பச் 'சுந்தர வரிவிலானும்' என்று இப் பாடலிலேயே பரதனைக் குறிப்பிட்டது ஒரு நயம். சுமந்திரன் தேர் ஓட்டுதலில் வல்லவன்; அமைச்சன்; தயரதனுக்கு மிகவும் அணுக்கமானவன். ஆதலின், அவனைத் தன் தந்தையெனவே கொண்டு கூறினான் பரதன். எந்தை - அண்மைவிளி.*
***47***

***2350.*** **குரிசிலது ஏவலால், அக்**
**குரகதத் தேர் வலானும்,**
**வரிசையின் வழாமை நோக்கி, மரபுளி**
**வகையின் ஏற்ற,**
**கரி, பரி, இரதம், காலாள்,**
**கணக்கு அறு கரை இல் வேலை,**

***எரி மணி திரையின் வீசும் கங்கை யாறு***
***ஏறிற்று அன்றே!***

***குரிசிலது ஏவலால்*** - *பரதனது கட்டளையால்;* ***அக் குரகதத் தேர்வலானும்*** - *குதிரைகள் பூட்டிய தேரைச்செலுத்தலில் வல்ல அச்சுமத்திரனும்;* ***வரிசையின் வழாமை நோக்கி*** - *முறைப்படி தவறாமல் பார்த்து;* ***மரபுளி வகையின் ஏற்ற*** - *அவரவர்க்குள்ள மரபுகளின்படி (படகுகளில்)ஏற்றியனுப்ப;* ***கரி, பரி, இரதம், காலாள்*** - *யானை, குதிரை, தேர், வீரர் என்றுசொல்லப்பெறும்;* ***கணக்கு அறு*** - *எண்ணிக்கையில் அளவுபடாத; கரை இல் வேலை - கரையற்றசேனைக் கடல்;* ***எரிமணி திரையின் வீசும்*** - *ஒளிவீசும் மணிகளை அலைகளால் (கரைக்கண்)எறிகின்ற;* ***கங்கை யாறு*** - *கங்கையாற்றை;* ***ஏறிற்று*** - *கடந்து அக்கரை சென்றுஏறியது.*

*முன்செல்வார், பின்செல்வார் என்ற முறையும், நாவாயில் முன் அமர்வோர், பின் அமர்வோர், இருப்போர், நிற்போர், தனித்து ஏற்றப்படுவோர், குழுவாக ஏற்றப்படுவோர் என உள்ள எல்லாம் அடங்க, 'வரிசையின் வழாமை' என்றும், 'மரபுளி வகையின்' என்றும் கூறினார். சேனைக்கடல் யாறு ஏறிற்று என்றது ஒரு நயம். அன்றே என்றது வியப்புக் குறித்து வந்தது. 'அன்று', 'ஏ' அசைகள்.*
***48***

***2351. இடிபடு முழக்கம் பொங்க,***
***இன மழை மகர நீரை***
***முடிவு உற முகப்ப, ஊழி***
***இறுதியின் மொய்ப்ப போலக்***
***கொடியோடு வங்கம் வேலை***
***கூம்பொடு படர்வ போல***
***நெடிய கை எடுத்து நீட்டி நீந்தின,***
***நெடுங் கை வேழம்.***

***இன மழை*** - *கூட்டமான மேகங்கள்;* ***இடிபடு முழக்கம் பொங்க*** - *ஒன்றுடன் ஒன்றுமோதுவதால் உண்டாகிய முழக்க ஒலி அதிகரிப்ப;* ***ஊழி இறுதியின்*** - *யுகப்பிரளயகாலத்தே;* ***மகர நீரை*** - *கடல் நீரை;* ***முடிவுஉற முகப்ப*** - *அடியோடு வற்றும்படிமொண்டு உண்பதற்காக;* ***மொய்ப்ப போல*** - *நெருங்கி யுள்ளவை போலவும்;* ***கொடியோடுவங்கம்*** - *கொடியோடு கூடிய கப்பல்;* ***வேலை*** - *கடலின்கண்; கூம்பொடு - பாய்மரத்தோடு;* ***படர்வ போல*** - *செல்வன போலவும்; நெடுங்கை வேழம் - நீண்டதுதிக்கையை உடைய யானைகள்; நெடிய* ***கை எடுத்து நீட்டி*** - *தமது நீண்ட துதிக்கையை உயரத்தூக்கி;* ***நீந்தின*** - *(கங்கையில்) நீந்திச் சென்றன.*

*மகரம் என்பது கறாவைக் குறிக்கும். அதனை உடைய நீர் எனவே கடல் ஆயிற்று. கங்கையில் நீந்திச் செல்லும் யானைகளுக்கு இரண்டு உவமைகள் கூறினார் - ஊழிக்காலத்து மேகங்கள் ஒன்றாய்க் கடல்நீரை வற்றக் குடிப்பன போலவும், கப்பல் பாய்மரத்துடன் கடலில் செல்வது போலவும் என.* ***49***

***2352. சங்கமும் மகர மீனும்,***
***தரளமும் மணியும் தள்ளி,***

***வங்க நீர்க் கடலும் வந்து***
***தன் வழிப் படர, மானப்***
***பொங்கு வெங் களிறு நூக்க,***
***கரை ஒரீஇப் போயிற்று அம்மா -***
***கங்கையும் இராமற் காணும்***
***காதலது என்ன மாதோ!***

***மானம்*** - *பெருமை பொருந்திய; பொங்கு - மேல்கிளம்பிய;* **வெங்களிறு** *-கொடிய யானைகள்;* **நூக்க** *- தள்ளுதலால்;* ***சங்கமும்*** *மகரமீனும் தரளமும்* **மணியும்தள்ளி** *- சங்கு, சுறாமீன், முத்து, மணிக்கற்கள் ஆகியவற்றைத் தள்ளி;* **வங்க நீர்க் கடலும்** *- மரக்கலங்களையுடையநீர்மிகுந்த கடலும்;* **தன்வழி வந்து படர** *- தன்னிடத்து வந்து பரவும்படி; கங்கை -கங்கா நதியும்;* **இராமன் காணும் காதலது என்ன** *- இராமனைக் காணும் அன்பு மீக்கூர்ந்தது என்னும்படி;* **கரை ஒரீஇப் போயிற்று** *- கரை கடந்து சென்றது.*

*யானைகள் கங்கையில் நீந்தித் தென்கரை செல்லும்போது, கங்கைத் தண்ணீர்தள்ளப்பட்டுக் கரைக்கு மேலே பரவி யானைகளுக்கு முற்பட்டுத் தென் கரை அடைவது, கங்கையேஇராமனைக் காணும் காதலால் செல்வது போன்றது என்று தற்குறிப்பேற்றம் செய்தார்.தற்குறிப்பேற்றவணி. அம்மா வியப்பிடைச் சொல். மாது, ஓ - அசை.* ***50***

***2353. பாங்கின் உத்தரியம் மானப்***
***படர் திரை தவழ, பாரின்***
***வீங்கு நீர் அழுவம்தன்னுள்,***
***விழு மதக் கலுழி வெள்ளத்து***
***ஓங்கல்கள் தலைகள் தோன்ற,***
***ஒளித்து அவன் உயர்ந்த கும்பம்,***
***பூங் குழற் கங்கை நங்கை முலை எனப்***
***பொலிந்த மாதோ!***

***பாங்கின்*** *-அருகில்;* ***உத்தரியம் மான*** *- பெண்கள் அணிந்துள்ள மேலாடைபோல;* **படர் திரை தவழ** *- கரைமேல் சென்று தவழும் அலைகள் செல்ல;* ***பாரின் வீங்குநீர் அழுவம் தன்னுள்*** *- உலகில் மிகுந்த நீர்ப்பரப்பையுடைய யாற்றுப் பள்ளத்துள்;* ***விழும் மதக் கலுழி வெள்ளத்து ஓங்கல்கள்*** *- விழுகின்ற மதநீர்ப்பெருக்காகிய கலங்கள் வெள்ளத்தை உடைய மலைபோன்ற யானைகள்;* ***ஒளித்துத் தலைகள் தோன்ற*** *- உடல் முழுவதும்நீரால் மறைக்கப்பட்டுத் தலைகள்மட்டும் மேல் தோன்ற;* ***அவண் உயர்ந்த கும்பம்*** *-அங்கே கங்கைப் பரப்பின் மேல் உயர்ந்து தோன்றுகின்ற மத்தகங்கள் (தலைமேடுகள்);* ***பூங்குழல் கங்கை நங்கை முலை எனப் பொலிந்த*** *- அழகிய கூந்தலை உடைய கங்கை மகளின்தனங்களைப்போல விளங்கின.*

*கங்கையாற்றில் நீந்திச் செல்லும் யானைகளின் உடல்கள் நீரில் மறைய மேல் தெரியும்தலைமேடுகள், அவற்றின் அருகே புரளும் அலைகள் இரண்டையும் கங்கா நதியின் தனங்களாகவும்,அதன்மேல் அணிந்து நழுவிச் செல்லும் மேலாடையாகவும் கற்பனை செய்தார். மாது, ஓஅசை.* ***51***

*2354.* ***கொடிஞ்சொடு தட்டும், அச்சும், ஆழியும்,***
***கோத்த மொட்டும்,***
***நெடுஞ் சுவர்க் கொடியும்; யாவும்,***
***நெறி வரு முறையின் நீக்கி,***
***விடும் சுவல் புரவியோடும்***
***வேறு வேறு ஏற்றிச் சென்ற -***
***மடிஞ்சபின் உடம்பு கூட்டும் வினை என -***
***வயிரத் தேர்கள்.***

**வயிரத் தேர்கள்** - வலிய இரதங்கள்; **கொடிஞ்சொடு** - கொடிஞ்சியுடன்; **தட்டும்** - தேர்த்தட்டும்; **ஆழியும்** - சக்கரமும்; **கோத்த மொட்டும்** - இணைத்தமொட்டும்; **நெடுஞ்சுவர்க் கொடியும்** - நீண்ட இருபக்கச் சுவர்களின் மேல் கட்டியகொடியும்; யாவும் - பிறவற்றையும்; நெறிவரு முறையின் நீக்கி - முறைப்படியான வகையில்தனித்தனியாகப் பிரித்து; **விடும் சுவல் புரவியோடும்** - (கத்தரியாது) விட்டு வளர்ந்த பிடரியை உடைய குதிரையோடும்; **வேறு வேறு** - தனித் தனியாகப் படகுகளில் எற்றி அக்கரை கொண்டுசெல்லப்பட்டன. (எவ்வாறு உளது எனில்); மடிஞ்சபின் - இறந்த பிறகு (அவ்வுயிர்க்கு); **உடம்பு கூட்டும் வினை என** - வேறு உடம்பினைக் கூட்டுகின்ற வினைபோல; **ஏற்றிச் சென்ற** - ஏற்றிச் செல்லப்பட்டன.

கொடிஞ்சி - தேர் முன்னே தாமரை வடிவாக நடப்படும் உறுப்பு. தேரில் அமர்வார்கைப்பிடித்தற்குப் பயன்படும் என்க. ''நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி'' (புறநா. 77) என்பதுகாண்க. தட்டு - தேர்த்தட்டு இருக்கை என்க. அச்சும், ஆழியும் தேரின்கீழ் உள்ளவை. கோத்த மொட்டும் தேர்க் கால்களை ஒன்றோடொன்று இறுக்கிப் பிடிப்பவை. நெடுஞ்சுவர் - தேர்ப்பலகைகள். கொடி - மேல் உள்ளது. தேர்களை அவ்வாறே கொண்டு செல்ல முடியாது. ஆகையால், பிரித்துப் படகுகளில் ஏற்றி அக்கரை சென்று மீண்டும் இணைத்து உருவாக்கினர் என்க. உடம்பிலிருந்து உயிரைப் பிரித்து வேறொரு உடம்பில் அதனைச் சேர்க்கும் வினை போல என்றார்.உயிர் போனபிறகு கை கால் முதலிய உறுப்புகள் பிரிந்தவழி அவற்றை மீண்டும் ஒன்று சேர்ந்துஉடம்பினைச் செய்யும் ஸந்தானகரணியென்னும் வித்தையையே ஈண்டு வினை என்பாரும் உளர். 'சென்ற'என்பது தேர்கள் என்பதற்கு ஏற்பச் 'செல்லப்பட்டன' எனச் செயப்பாட்டு வினையாகப் பொருள்உரைக்கப்பட்டது.
***52***

*2355.* ***நால் - இரண்டு ஆய கோடி, நவை இல்***
***நாவாய்கள் மீதா,***
***சேல் திரண்டனைய ஆய கதியொடும்,***
***நிமிரச் சென்ற -***
***பாலி திரண்டனைய மெய்ய,***
***பயம் திரண்டனைய நெஞ்ச,***
***கால் திரண்டனைய கால,***
***கடு நடைக் கலினப் பாய் மா.***

***பால் திரண்டனைய மெய்ய*** - *பால் திரண்டாற்போன்ற (வெள்ளிய) உடம்பை உடையன;* ***பயம் திரண்டனைய நெஞ்ச*** *-அச்சம் திரண்டாற் போன்ற (திடுக்கிடும்) மனம் உடையன;* ***கால் திரண்டனைய கால*** - *காற்று ஒன்றுகூடினாற்போன்ற (வேகமாகச் செல்லும்) காலினை உடையன;* ***கடுநடை*** - *விரைந்து செல்லும்நடையை உடைய;* ***கலினம்*** - *சேணம் அணிந்த;* ***பாய்மா*** - *பாயும் குதிரைகள்;* ***நால் இரண்டு ஆய கோடி*** - *எட்டுக்கோடியானவை;* ***சேல் திரண்டனைய ஆய கதியொடும்*** - *சேல்மீன்கள் கூடிச் சென்றாற்போன்ற செலவோடும்;* ***நவை இல் நாவாய்கள் மீது*** *-குற்றமற்ற படகுகளின் மேலாக;* ***நிமிரச் சென்ற*** - *நிமிர்ந்து சென்றன.*

*"ஆயிரம் அம்பிக்கு நாயகன்" (1953.) என வருதலின் நால் இரண்டாய கோடி பாய்மாக்கள் என உரைக்க. புதிய இடம் கண்டால் மருளுதல் குதிரைகளுக்கு இயல்பு ஆதலின், 'பயம் திரண்டனையநெஞ்ச' என்றார். ஓடுகின்ற பெருவெள்ள நீரில் யானைகள்போல நிலைத்து நீந்தல் குதிரைகளால்இயலாது என்பது கருதி நாவாய்கள் மீதாச் சென்றனஎன்றார்.* *53*

*மகளிர் ஓடத்தில் செல்லுதல்*

***2356. ஊடு உற நெருக்கி, ஓடத்து,***
***ஒருவர்முன் ஒருவர் கிட்டி,***
***சூடகத் தளிர்க் கைம் மாதர்***
***குழமினர் துவன்றித் தோன்ற,***
***பாடு இயல் களி நல் யானைப் பந்தி அம்***
***கடையின் குத்தக்***
***கோடுகள் மிடைந்த என்ன,***
***மிடைந்தன குரவுக் கொங்கை.***

***சூடகம்*** - *வளையல் (அணிந்த);* ***தளிர்க் கைம் மாதர்*** - *தளிர் போன்ற(மென்மையான) கையினை உடைய மகளிர்;* ***ஊடு உற நெருக்கி*** - *இடையே புகுந்து நெருங்கிநெருக்கி;* ***ஓடத்து*** - *நாவாய்களில்;* ***ஒருவர் முன் ஒருவர் கிட்டி*** - *ஒருவர்க்குமுன்னால் ஒருவர் அண்மி;* ***குழுமினர் துவன்றித் தோன்ற*** - *திரண்டு நெருங்கித்தோன்றுதலால்;* ***பாடு இயல்*** - *பெருமை பொருந்திய;* ***களி நல் யானை*** *-மதமகிழ்வுடைய உத்தம யானை;* ***பந்தி*** - *வரிசையில்;* ***அம் கடையின் குத்த*** *-அழகிய முனைகளால் குத்துமாறு;* ***கோடுகள் மிடைந்த அன்ன*** - *கொம்புகள் நெருங்கின என்று சொல்லும்படி;* ***குவவுக் கொங்கை*** - *(அம்மகளிரின்) திரண்ட முலைகள்;* ***மிடைந்தன*** - *நெருங்கின.*

*யானை வரிசைகளில் எதிர் எதிர் யானைத் தந்தங்களின் முனைகள் ஒன்றோடு ஒன்று குத்திநெருங்குதல், கூட்டமான பெண்கள் வரிசை வரிகையாக நெருக்க அவர்தம் முலைகள் நெருங்கிநெருக்குதல் இங்கே ஒன்றுக்கொன்று உவமையாம்.*
*54* ***2357. பொலங் குழை மகளிர், நாவாய்ப்***
***போக்கின் ஒன்று ஒன்று தாக்க,***
***மலங்கினர்; இரண்டு பாலும்***
***மறுகினர் வெருவி நோக்க,***
***அலங்கு நீர் வெள்ளம் தள்ளி***
***அழிதர, அங்கம் இங்கும்***

***கலங்கலின், வெருவிப் பாயும்***
***கயற்குலம் நிகர்த்த, கண்கள்.***

***நாவாய்*** - *(மகளிர் ஏறிச் செல்லும்) மரக்கலங்கள்; போக்கின் - செல்லும் வேகத்தில்;* ***ஒன்று ஒன்று தாக்க*** - *ஒன்று மற்றொன்றோடு மோத;* ***பொலங்குழை மகளிர்*** - *(அக்கலத்தில்உள்ள) பொன்னாலியன்ற குழை அணிந்த மகளிர்;* ***மலங்கினர்*** - *மனம் கலங்கி;* ***மறுகினர்*** - *மயங்கி;* ***வெருவி*** - *அச்சமுற்று; இரண்டு பாலும் நோக்க - இரண்டுபக்கமும் பார்க்க;* ***கண்கள்*** - *(இவ்வாறு மிரண்டு பார்க்கு அவர்களின்) கண்கள்;* ***அலங்கும் நீர் வெள்ளம் தள்ளி அழிதர*** - *அசைகின்ற நீர்ப்பெருக்குத் தள்ளி நிலைகெட;* ***அங்கும் இங்கும் கலங்கலின்*** - *ஆற்று நீர் அங்கும் இங்குமாகக் கலங்குவதனால்;* ***வெருவிப் பாயும்*** - *பயந்து துள்ளுகின்ற;* ***கயற்குலம் நிகர்த்த*** - *மீன் கூட்டத்தைஒத்துள்ளன.*

*கலத்தின் மோதலால் பயந்து மிரளும் மகளிர் கண்களுக்கு, கலம் செல்லும் வேகத்தால்தள்ளப்படும் நீரில் பயந்து துள்ளும் கயல்மீன்கள் உவமையாயின. திடுக்கெனத் தோன்றும்அச்சத்தை வெரூஉதல் என்னும் மெய்பபாடு என்பர்.*
*55*

***2358. இயல்வு உறு செலவின் நாவாய்,***
***இரு கையும் எயினர் தூண்ட,***
***துயல்வன துடிப்பு வீசும்***
***துவலைகள், மகளிர் மென் தூசு***
***உயல்வு உறு பரவை அல்குல் ஒளிப்பு***
***அறத் தளிப்ப, உள்ளத்து***
***அயர்வுறும் மதுகை மைந்தர்க்கு***
***அயாவுயிர்ப்பு அளித்தது அம்மா!***

***இயல்பு உறு செல்வின் நாவாய்*** - *இயல்பாகப் பொருந்திய செலவினை உடைய மரக்கலங்கள்;* ***இரு கையும் எயினர் தூண்ட*** - *இருபக்கத்தும் வேடர்கள் உந்துதலால்;* ***துயல்வன துடுப்பு*** - *அசைவனவாகிய துடுப்புகள்;* ***வீசும் துவலைகள்*** - *வீசுகின்ற நீர்த்துளிகள்; மகளிர் - (கலத்தில் உள்ள) மகளிரது;* ***மென்தூசு*** - *மெல்லிய ஆடை;* ***உயல்வு உறு*** - *மறைந்து பொருந்திய;* ***பரவை அல்குல்*** - *பரந்த அல்குலை;* ***ஒளிப்பு அற தளிப்ப*** - *மறைவு நீங்க வெளித் தோன்றச் செய்ய;* ***உள்ளத்து அயர்வுறும்*** - *(இராமன் வனம் புகுந்த நாள்முதலாகப் போகம் இழத்தலின்) மனச்சோர்வுஅடைந்த;* ***மதுகை மைந்தார்க்கு*** - *மனவலிமை உடைய வீரர்களுக்கு;* ***அயா வுயிர்ப்பு*** - *வருத்தத்திலிருந்து நீங்குதலை;* ***அளித்தது*** - *உண்டாக்கி (உற்சாகப்படுத்தி)யது.*

*துடுப்பு வீசும் துளிகளால் மகளிர் ஆடை நனைந்தது; அல்குல் வெளித்தோன்றியது; மைந்தர்க்குமகிழ்ச்சி விளைந்தது என்க. கோசல நாட்டு வீரர்கள் இராமன் வனம் புகுந்தது முதல் சோகத்தில்மூழ்கினர். அவர்கள் மகளிரும் சோகத்தில் இருந்தனர். ஆதலின், போகம் இன்றி இருத்தலால் அயர்வு உண்டாயிற்று. போக உறுப்புகள் காணப்பட்டபடியால் மைந்தர்க்கு அயர் நீங்கியதுஎன்றார். துக்கம் பரதன் முதலானோர்க்கு இருக்கும் அன்றி இராமனை அழைத்து வரச் செல்கிறோம்என்று கருதிச் செல்லும் வீரர்களுக்கும் இருக்கவேண்டும் என்பது இல்லை யாதலின் அவ்வீரர்*

*போகவாய்ப்பை நாடினர் என்று சிருங்காரசம் படக் கூறினார்; உலகியல் அறிந்தவர் கம்பர்என்பதை இது விளக்கும. 'அம்மா' வியப்பிடைச் சொல். 'ஒளிப் புறத்து அளிப்ப' என்று பாடம்தந்து பிரித்து அல்குலின் ஒளியைப் புறத்து அளிப்ப என்று உரை கூறலாம் எனில் அல்குலுக்கு ஒலிஇல்லை; இருப்பதாகக் கூறிய மரபும் இல்லை ஆதலின், கூறலாகாமை உணர்க.* ***56***

*மரக்கலங்கள் சென்று சென்று மீளும் காட்சி*

***2359. இக் கரை இரைத்த சேனை***
***எறி கடல் முகந்து, வெஃகி,***
***அக் கரை அடைய வீசி, வறியன***
***அணுகும் நாவாய்-***
***புக்கு அலை ஆழி நல் நீர் பொறுத்தன***
***போக்கிப் போக்கி,***
***அக் கணத்து உவரி மீளும்***
***அகல் மழை நிகர்த்த அம்மா!***

***இக் கரை*** *- (கங்கையின்) வடகரையில் உள்ள;* **இரைத்த சேனை எறிகடல்** *- ஒலித்துக்கொண்டுள்ள சேனையாகிய அலைகடலை;* **வெஃகி முகந்து** *- விரும்பிஏற்றுக்கொண்டு;* ***அக்கரை*** *- தென்கரையில்; அடைய வீசி - முழுவதும் இறக்கிவிட்டு;* ***வறியன*** *- ஒன்றும் இல்லாதனவாய்;* ***அணுகும்*** *- (வடகரை வந்து) சேரும்;* ***நாவாய்*** *- மரக்கலம்;* ***அலை ஆழி புக்கு*** *- அலை வீசும் கடலின் கண் புகுந்து;* ***நல் நீர்*** *-மிகுதியான நீரை; பொறுத்தன - சுமந்தனவாய்ப் (புறப்பட்டு);* **போக்கிப் போக்கி** *- (மழைப்பெய்து) கழித்துக் கழித்து;* ***அக்கணத்து*** *- அடுத்த கணத்திலேயே;* ***உவரிமீளும்*** *- (மீண்டும் முகப்பதற்காகக்) கடலுக்குத் திரும்புகின்ற;* ***அகல் மழை*** *- அகன்ற மேகத்தை; நிகர்த்த - ஒத்திருக்கின்றன. உவமையணி. விரைவாக இறக்குதலின் 'வீசி' என்றார். ''தேர்வீசு இருக்கை'' (புறநா. 69)என்பது காண்க. 'நல்நீர்' என்றது மிகுதியான நீர் எனப் பொருள்படும் - ''நல்ல பாம்பு, நல்ல வெயில்'' என்றார்போல. ''நன்று பெரிதாகும்'' என்பது (தொல். சொல். உரி. 45) காண்க.பெரிது மிகுதியாம். கடல் நீரை மேகம் முகந்து நன்னீராக்குதலின் நன்மையான நீர் என்னாமோஎனின், பொறுத்தனவாகிய நீர் ஆதலின், அது உவர்நீரே யாம் என்க. 'அம்மா'வியப்பிடைச்சொல்.* ***57***

***2360. அகில் இடு தூபம் அன்ன***
***ஆய் மயிர் பீலி ஆர்த்த***
***முகிழுடை முரண் மாத் தண்டு***
***கூம்பு என, முகிலின் வண்ணத்***
***துகிலொடு தொடுத்த செம் பொன்***
***தகட்டிடை தொடுத்த முத்தின்***
***நகு கொடி நெடிய பாயா,***
***நவ் எனச் சென்ற நாவாய்***

***நாவாய்*** *- மரக்கலங்கள்;* ***அகில் இடு தூபம் அன்ன ஆய் மயில் பீலி ஆர்த்த*** *- அகிற்கட்டைகளால் உண்டாக்கப்பெற்ற புகையைப் போன்ற அழகிய மயில் தோகைகள்கட்டப்பெற்ற; முகிழுடை முரண்மாத் தண்டு - அரும்புபோன்ற*

*உறுப்பைத் தலையிற் கொண்ட(தேரிலிருந்து பிரித்த) தண்டுகள்;* **கூம்பு என** *- பாய்மரமாகத் தோன்ற;* **முகிலின் வண்ணத் துகிலொடு தொடுத்த** *- மேகநிறமான துணியொடு கட்டப்பெற்ற; செம்பொன் தகட்டிடைதொடுத்த - செம்பொன்னால் ஆகிய தகட்டின் இடையே அழகுறத் தைத்த; முகத்தின் நகுகொடி -முத்துக்களால் விளங்கும் கொடிகள்; நெடிய பாயா - நீண்ட பாயாகத் தோன்ற;* **நவ் எனச்சென்ற** *- பெரிய பாய்மரக் கப்பல்கள் போலச் சென்றன.*

*தேரைப் பிரித்துப் படகில் ஏற்றினர் ஆதலின், தேர்த்தண்டும் கொடியும் இங்கே பாயும்,பாய்மரமும் போல் தோன்றின. சிறிய மரக்கலங்கள் பெரிய பாய்மரக் கப்பல்கள் போலத்தோன்றின. தற்குறிப்பேற்ற உவமையணி.* ***58***

***2361.* ஆனனம் கமலத்து அன்ன,**
**மின்அன்ன, அமுதச் செவ் வாய்**
**தேன் நனை, குழலார் ஏறும்**
**அம்பிகள் சிந்து முத்தம்**
**மீன் என, விரிந்த கங்கை**
**விண் என, பண்ணை முற்றி**
**வானவர் மகளிர் ஊறும்**
**மானமே நிகர்த்த மாதோ!**

**விரிந்த கங்கை** *- அகன்ற கங்காநதி;* **விண் என** *- ஆகாயம் ஆக;* **சிந்து முத்தம் மீன் என** *- (கங்கையாறு) சிந்துகின்ற முத்துகள் விண்மீன்களாக;* **கமலத்து அன்ன ஆனனம்** *- தாமரை மலர் போன்ற முகம்; அமுதச் செவ்வாய் - அமுதமூறும் சிவந்தவாய் ஆகியவற்றை உடைய;* **மின் அன்ன தேன் நனை குழலார்** *- தேன் சிந்தும் கூந்தலை உடைய மின்னலை ஒத்த மகளிர்;* **ஏறும் அம்பிகள்** *- ஏறிச் செலுத்தும் ஒடங்கள்;* **வானவர் மகளிர் பண்ணை முற்றி** *- தேவ மகளிர்கள் நீர் விளையாட்டை முடித்து;* **ஊறும்மானமே நிகர்த்த** *- மேலேறிச் செல்லுகின்ற விமானங்களை ஒத்தன.*

*கங்கை நீர்ப்பரப்புக்கு ஆகாயம், கங்கை சிந்தும் முத்துகளுக்கு நட்சத்திரங்கள்,மகளிர்க்குத் தேவமாதர், ஓடங்களுக்கு விமானங்கள் உவமையாயின. பண்ணை - விளையாட்டு. "கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு" (தொல். சொல். உரி. 21) என்பது காண்க. 'மாது' 'ஓ' அசை. அணிந்துள்ள மலர்களின் தேனால் நனைந்த கூந்தல் என்க.* ***59***

***2362.* துளி படத் துழாவு திண் கோல்**
**துடிப்பு இரு காலின் தோன்ற,**
**நளிர் புனல் கங்கை ஆற்றில்**
**நண்டு எனச் செல்லும் நாவாய்,**
**களியுடை மஞ்ஞை அன்ன,**
**கனங் குழை, கயல் கண், மாதர்**
**ஒளிர் அடிக் கமலம் தீண்ட,**
**உயிர் படைத்தனவே ஒத்த.**

**துளிபட** - துளிகள் உண்டாகும்படி; துழாவு - (நீரைத்) துழாவுகின்ற; **திண்கோள்** - வலிய கோலை உடைய; **துடுப்பு** - துடுப்புகள்; **இரு காலின் தோன்ற** -இரண்டு கால்களைப் போலத் தோன்ற; **நளிர் புனல் கங்கை ஆற்றில்** - குளிர்ந்த நீரைஉடைய கங்கா நதியில்; **நண்டு எனச் செல்லும் நாவாய்** - நண்டு என்று சொல்லும்படிசெல்கின்ற மரக்கலம்; களி உடைய மஞ்ஞை அன்ன - களிப்பை உடைய மயிலை ஒத்த; **கணங்குழை** - பொற்றோடு அணிந்த; **கயல்கண்** - மீன் போன்ற கண்ணை உடைய; **மாதர்** -மகளிரது; **ஒளிர் அடிக் கமலம் தீண்ட** - விளங்குகின்ற அடித் தாமரைகள் படுதலால்; **உயிர் படைத்தனவே ஒத்த** - உயிர் பெற்றனவே போன்றிருந்தன

*மகளிர் பாதம் பட்டத்தால் நாவாய்கள் உயிர்பெற்றன போன்றன என்று தற்குறிப்பேற்றஉவமையாக்கினார். துடுப்புக் கம்புகள் இருபுறமும் இருத்தல் கால்கள் போலத் தோன்றின. நண்டுஒதுங்கிச் செல்லும் இயல்பினது ஆதலின் நீரோட்டத்துக்கு ஏற்ப ஒதுங்கிச் சேறலின் நண்டு போலும் நாவாய் என்றார்.* ***60***

*முனிவர் வான் வழியாகக் கங்கையைக் கடத்தல்*

***2363. மை அறு விசும்பில், மண்ணில்,***
***மற்றும் ஓர் உலகில், முற்றும்***
***மெய் வினை தவமே அன்றி***
***மேலும் ஒன்று உளதோ? கீழோர்***
***செய் வினை நாவாய் ஏறித் தீண்டலர்;***
***மனத்தின் செல்லும்***
***மொய் விசும்பு ஓடம் ஆக,***
***தேவரின் முனிவர் போனார்.***

(இவ்வாறு நாவாய் ஏறிப் பலரும் செல்ல) **முனிவர்** - முனிவர்கள்; **கீழோர்செய்வினை நாவாய்** - கீழான மனிதச் சாதியினரால் செய்யப்பெற்ற தொழிலமைந்தமரக்கலத்தை; **ஏறித் தீண்டலர்** - தீண்டி ஏறாதவர்களாய்; **மனத்தில் செல்லும்மொய்விசும்பு ஓடமாக** - மனத்தால் நினைத்த மாத்திரையில் செல்லும் ஆகாயமே தாம் ஏறிச்செல்லும் ஓடமாகக் கருதி; **தேவரின்** - தேவர்களைப் போல; போனார் - வான் வழியேசென்றார்கள்; **மை அறு விசும்பில்** - குற்றமற்ற விண்ணுலகிலும்; **மண்ணில்** - மண்ணுலகிலும்; **மற்றும் ஓர் உலகில்** - வேறோர் உலகிலும்; மெய்வினை - உண்மையானதொழில்; **தவமே அன்றி மேலும் ஒன்று உளதோ** - தவமே அல்லாமல் அதற்கு மேற்பட்டதாகவேறு ஒரு தொழில் உள்ளதா? இல்லை என்றபடி,

*"வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம் ஈண்டு முயலப் படும்" (குறள் 265) என்றவள்ளுவர் கூற்றும் காண்க! 'முனிவர்கள் வான்வழியே சென்றார்கள்' என்ற சிறப்புப் பொருளைத்"தவத்திற் சிறந்தது எவ்வுலக்திலும் இல்லை" என்ற உலகறிந்த பொதுப் பொருளால் முடித்தமையின்இது வேற்றுப் பொருள் வைப்பணி. "முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப், பின்னொடுபொருளை உலகறி பெற்றி, ஏற்றி வைத்து உரைப்பது வேற்றுப் பொருள் வைப்பே" (தண்டி. 47) என்பவாதலின், மற்றும் ஒர் உலகு - கீழ் உலகுமாம். "தவம் செய்வார் தம்கருமம் செய்வார்"(குறள் 266) என்பது கருதி "மெய் வினை தவமே" என்றார்.*

***61***

*சேனைமுதல் அனைவரும் கங்கையைப் கடத்தல்*

*கலிவிருத்தம்*

***2364. 'அறுபதினாயிரம் அக்குரோணி' என்று***
***இறுதி செய் சேனையும், எல்லை தீர் நகர்***
***மறு அறு மாந்தரும், மகளிர் வெள்ளமும்,***
***செறி திரைக் கங்கை, பின் கிடக்கச் சென்றவே.***

***'அறுபதினாயிரம் அக்குரோணி' என்று இறுதிசெய் சேனையும்*** *- அறுபதாயிரம் அகௌஹிணிகள் என்று (கணக்கு) முடிவு செய்யப்பட்ட சேனைகளும்;* ***எல்லைதீர் நகர்*** *- அளவுகடந்த அயோத்தி நகரத்து;* ***மறு அறு மாந்தரும்*** *- குற்றம் அற்ற மக்களும்;* ***மகளிர் வெள்ளமும்*** *- பெண்கள் கூட்டமும்; செறி திரைக் கங்கை - நெருங்கிய அலைவீசுகின்ற கங்கை;* ***பின் கிடக்கச் சென்ற*** *- கங்கையாறு பின்னிடும்படி போயின.*

*"அக்குரோணிகள் மூன்று பத்து ஆயிரத்தி இரட்டி" என்று முன்பும் (2307) கூறினார் ஆதலின்,இங்கே 'இறுதிசெய் சேனை' என்று கணக்கு வரையரை செய்யப்பட்ட சேனை எனக் கூறினார். அக்குரோணிஎன்னும் கணக்கு அப்பாடற் பகுதியுரையால் (2307) அறிக. பெரு நகரங்கள் மேலும் மேலும் விரிந்துவளர்ச்சி பெறுவன ஆதலின், 'எல்லை தீர் நகர்' என்றாராம். மகளிர் வெள்ளம் கூறுதலின்மாந்தர் ஆடவரேயாம். 'ஏ' ஈற்றசை.* ***62***

*பரதன் நாவாயில் ஏறுதல்*

***2365. சுழித்து நீர் வரு துறை ஆற்றை, சூழ் படை***
***கழித்து நீங்கியது என, கள்ள ஆசையை***
***அழித்து, வேறு அவனி பண்டு ஆண்ட வேந்தரை***
***இழித்து, மேல் ஏறினான்தானும் ஏறினான்.***

***சூழ்படை*** *- (பரதன்) தன்னைச் சுற்றியுள்ள சேனை;* ***நீர் கழித்து வருதுறையாற்றை*** *- நீர் கழியுண்டாக்கிப் பெருகும் கரையமைந்த கங்கையாற்றை;* ***கழித்து நீங்கியது என*** *- கடந்து சென்றதாக;* ***கள்ள ஆசையை அழித்து*** *- வஞ்சகமானமண்ணாசையைப் போக்கி;* ***அவனி பண்டு ஆண்ட வேறு வேந்தரை இழித்து*** *- (இம்) மண்ணுலகைமுன்பு ஆட்சி புரிந்த மற்ற அரசர்களையெல்லாம் கீழ்ப்படுத்தி; மேல் ஏறினான்தானும் - மேற்சென்றவனான பரதனும்;* ***ஏறினான்*** *- (நாவாயின் கண்) ஏறினான்.*

*துறையின்கண் கழிக்கும் கங்கையாறு என்றார். ஆழமும் நீர்வரவும் கழலை அதிகப்படுத்தும். மண்ணாசையை வெற்றி கொண்ட பரதன் மற்ற அரசர்களுக்கு மேம்பட்டான் ஆயினன். குணத்தால், பற்றற்ற தன்மையால் மேல் ஏறினான் இப்போது படகில் ஏறினான் என்று இருமுறை கூறியது ஒரு நயம்.* ***63***

*பரதன் குகனுக்குக் கோசலையை அறிமுகம் செய்தல்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

*2366.* ***சுற்றத்தார், தேவரொடும் தொழ நின்ற***
***கோசலையைத் தொழுது நோக்கி,***

***'கொற்றத் தார்க் குரிசில்! இவர் ஆர்?' என்று***
***குகன் வினவ, 'கோக்கள் வைகும்***
***முற்றத்தான் முதல் தேவி; மூன்று***
***உலகும் ஈன்றானை முன் ஈன்றானைப்***
***பெற்றத்தால் பெறும் செல்வம், யான்***
***பிறத்தலால், துறந்த பெரியாள்' என்றான்.***

***குகன்-; சுற்றத்தார்*** - *உறவினர்கள்;* **தேவரொடும்** - *தேவர்களோடு; தொழ - வணங்குமாறு;* **நின்றகோசலையைத் தொழுது நோக்கி** - *இருந்த கோசலைப் பிராட்டியை வணங்கிப் பார்த்து;* **'கொற்றத்தார்க் குரிசில்!** - *வெற்றிமாலை சூடிய பரதனே!;* **இவர் ஆர்? என்று வினவ** - *இவர் யாராவார் என்று கேட்க; (அதற்குப் பரதன்)* **'கோக்கள் வைகும் முற்றத்தான்** *-அரசர்கள் (திறை தரக் குழுமித்) தங்கியிருக்கும் முன்றிலை உடைய தயரதனது;* **முதல் தேவி** - *முதல் பட்டத்தரசி;* **மூன்று உலகும் ஈன்றானை** *-மூவுலகங்களும் (முன்பு) உண்டாக்கியபிரமதேவனை;* **முன் ஈன்றானை** *- முன்னால் (தனது திருஉந்திக் கமலத்தில்)தோற்றுவித்தருளிய (ஸ்ரீ நாராயணன் திரு அவதாரமாகிய) இராமனை;* **பெற்றதால் பெறுஞ் செல்வம்** - *(தன் மகனாகப்) பெற்ற காரணத்தால் பெறவேண்டிய அரசச் செல்வத்தை;* ***யான் பிறத்தலால்*** - *நான் (கைகேயி மகனாகப் பின்னே) பிறந்த காரணத்தால்;* **துறந்த** - *இழந்த;* **பெரியாள்'** - *பெருமையுடையாள்;* **என்றான் -.**

*கோசலையின் முன்னைய 'அரசன் தாய்' என்ற நிலையும், இப்போதைய நிலையும் தன்மனத்தைத் துன்புறுத்தத் தன்னை நொந்து பரதன் குகனுக்கு விடை கூறினன் என்க. சக்கரவர்த்திதயரதன் ஆதலின் அரசர்கள் அவனைக் கண்டு வணங்கவும் திறை செலுத்தவும் எப்போதும் திருமுற்றத்தே காத்திருப்பர். 'பெற்றதால்' எதுகை நோக்கி, 'பெற்றத்தால்' என விரித்தல் விகாரம்ஆயிற்று; செய்யுள் விகாரம் ஆறனுள் ஒன்று. தொழுது நோக்கி 'இவர் யார்?' என்று வினாயினன்குகன்.* ***64***

*பரதன் கோசலைக்குக் குகனை அறிமுகம் செய்தல்*

*2367.* ***என்றலுமே, அடியின்மிசை நெடிது வீழ்ந்து***
***அழுவானை, 'இவன் யார்?' என்று,***
***கன்று பிரி காராவின் துயர் உடைய***
***கொடி வினவ, கழல் கால் மைந்தன்,***
***'இன் துணைவன் இராகவனுக்கு; இலக்குவற்கும்,***
***இளையவற்கும், எனக்கும், மூத்தான்;***
***குன்று அனைய திரு நெடுந் தோள் குகன்***
***என்பான், இந் நின்ற குரிசில்' என்றான்.***

***என்றலுமே*** - *என்று பரதன் கூறிய - அளவிலேயே;* ***அடியின் மிசை*** *-கோசலையின் திருவடிமேல்;* **நெடிது** - *நெடுநேரம்; வீழ்ந்து - நிலம்தொட்டு வீழ்ந்து;* **அழுவானை** -

*அழுகின்ற குகனை;* ***கன்று பிரி காராவின் துயர் உடைய கொடி*** *- கன்றைப்பிரிந்த காராம் பசுவின் (துன்பம் போன்று மகனைப் பிரிந்த) துன்பத்தை உடைய கொடி போல்பவளாகிய கோசலை;* ***'இவன் யார்?' என்று வினவ*** *- (இதோ காலில் விழுந்துகிடக்கிற) இவன் யார்? என்று கேட்க;* ***கழல் கால் மைந்தன்*** *- வீரக் கழலணிந்த கால்உடைய பரதன்;* ***'இந் நின்ற குரிசில்*** *- இதோ தொழுது நிற்கின்ற ஆண்மகன்;* ***இராகவனுக்கு இன்துணைவன்*** *- இராமனுக்கு இனிய சகோதரன்;* ***இலக்குவற்கும் இளையவற்கும்எனக்கும் மூத்தான்*** *- இலக்குவனுக்கும் சத்துருக்கனனுக்கும், எனக்கும் அண்ணன்;* ***குன்றுஅனைய திருநெடுந் தோள் குகன் என்பான்'*** *- மலையொத்த திரண்ட அழகிய நெடிய தோள்களைஉடைய குகன் என்ற பெயரை உடையவன்;* ***என்றான் -***

*"கன்று பிரிந்துழிக் கறவை ஒப்பக் கரைந்து கலங்கினாள்"(1618) என்று முன்பும் இராமன் காடு சேறல் கேட்ட அளவில் துயருற்ற கோசலைக்கு இவ்வுவமைகூறினார் ஆதலின், காடு போன பிறகு இங்கே அதனையே வாங்கிக் கூறினார். காரா - காராம் பசு. தூய்மையும் சிறப்பும் நோக்கிக் காராவைக் கூறினார். இனி, பிற பசுக்களின் பால் மனிதர்உண்ணுதற்காதலின் அவை மனிதர்க்கும் கன்றுக்கும் பால் தருவன; ஆனால், காராவின் பால் மனிதர் உண்ணுதற்காகாது ஆதலின், கன்றுக்கே முழுதும் பயன்படுதலின் அன்பின் செறிவு ஆண்டுமிகுதியாம் என்பது கருதிக் கூறினார் எனலாம். இராமனுக்கு அடுத்த தம்பி குகன் என்று கூற, பின்னர்த் தங்கள் மூவரையும் பரதன் வரிசைப் படுத்தினான். கோசலாதேவி கேட்கும்போதுவீழ்ந்து அழுவானாயிருந்தான் என்றும், பரதன் பதில் உரைக்கத் தொடங்கும்போது அருகில் எழுந்துநின்றான் என்றும் குகனைக் கருதலாம். அதுபற்றி 'இந்நின்ற குரிசில்' என்றானாம்.* ***65***

கோசலை குகனை அவர்களுக்குச் சகோதரனாக்கி உரைத்தல்

***2368. 'நைவீர் அலீர் மைந்தீர்! இனித் துயரால்;***
***நாடு இறந்து காடு நோக்கி,***
***மெய் வீரர் பெயர்ந்ததுவும் நலம் ஆயிற்று***
***ஆம் அன்றே! விலங்கல் திண்தோள்***
***கை வீரக் களிறு அனைய காளை இவன்***
***தன்னொடும் கலந்து, நீவிர்***
***ஐவீரும் ஒருவீர் ஆய், அகல் இடத்தை நெடுங்***
***காலம் அளித்திர்' என்றாள்.***

*(அதுகேட்ட கோசலை அவர்களைப் பார்த்து);* ***'மைந்தீர்'*** *- என் பிள்ளைகளே!;* ***இனித் துயரால் நைவீர் அலீர்*** *- இனிமேல் நீங்கள் துன்பத்தால் வருந்தாமல்இருப்பீர்களாக;* ***மெய்வீரர்*** *- சுத்த வீரர்களாகிய இராம இலக்குவர்கள்;* ***நாடு இறந்து*** *- கோசல நாடு கடந்து;* ***காடு நோக்கி*** *-வனத்தை நோக்கி;* ***பெயர்ந்ததுவும்*** *- புறப்பட்டுச் சென்றதுவும்;* ***நலம் ஆயிற்று ஆம்அன்றே!*** *- (இத்தகைய சிறந்த சகோதரனைத் தருதலால்) நன்மைக்குக் காரணமாயிற்றல்லவா!;* ***விலங்கல் திண்தோள் கை வீரக் களிறு அனைய காளை*** *- மலை போன்ற வலிய தோளைஉடைய துதிக்கையாற் செய்யும் வீரச் செயலை உடைய ஆண் யானையை ஒத்த ஆண் மகனாகிய; இவன்தன்னோடும் - இந்தக் குகனோடும்;* ***கலந்து*** *- ஒன்றுபட்டு; நீவிர் ஐவீரும் -நீங்கள் ஐந்து பேரும்;* ***அகல்***

***இடத்தை*** - *அகன்ற பூமியை;* ***நெடுங்காலம்*** *-நீண்டகாலம்;* ***அளித்தீர்'*** *- அரசாட்சி செய்து காப்பாற்றுவீர்களாக;* ***என்றாள்*** *- என்று சொன்னாள்.*

*'மைந்தீர்'! என்ற விளி பரத சத்துருக்கனர்களை நோக்கியது; குகனையும் உள்ளடக்கிக்கூறலும் ஒன்று, இதுகாறும் இராமன் வனம் புகுந்தது கொடிது என்று அனைவரும் கருதினர். ஆதலால், குகன் என்கின்ற சிறந்த துணைவனை அச்செயல் தந்தபடியால் (கைகேயி செய்த அச்) செயலும் நல்லதாயிற்று அன்றோ என்றாளாம். இது குகனைப் பாராட்டி உரைத்தது. ''ஐவீரும் ஒருவீராய்'' என்றதுகுகனை ஆசி கூறியதாக அமையும். 'ஐவீரும் என்று குகனுக்கே கோசலையால் இவ்வாசி கிடைத்தது என்பதுஉணரற்பாலது. இராமனைக் காட்டுக்கு அனுப்பியதில் கைகேயிமாட்டுக் குகனுக்கு இருந்த சீற்றத்தையும்கோசலை இதனால் மாற்றித் தேற்றினள் என்னலாம்.* ***66***

*சுமித்திரையைப் பரதன் குகனுக்கு அறிமுகம் செய்தல்*

***2369. அறம் தானே என்கின்ற அயல் நின்றாள்தனை***
***நோக்கி, 'ஐய! அன்பின்***
***நிறைந்தாளை உரை' என்ன, 'நெறி திறம்பாத்***
***தன் மெய்யை நிற்பது ஆக்கி***
***இறந்தான்தன் இளந் தேவி; யாவர்க்கும்***
***தொழு குலம் ஆம் இராமன் பின்பு***
***பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தனைப்***
***பயந்த பெரியாள்' என்றான்.***

***அறம் தானே என்கின்ற அயல் நின்றாள் தனை*** *- அறக்கடவுளே என்று சொல்லத் தக்கவளாய்ப் பக்கத்தில் நின்ற சுமித்திரா தேவியை;* ***நோக்கி*** *- (குகன்) பார்த்து;* ***'ஐய!*** *- பரதனே!;* ***அன்பின் நிறைந்தாளை*** *- அன்பால் நிறைந்த கொள்கலமாகிய இப் பெருமாட்டியை;* ***உரை'*** *- (யார் என்று எனக்குச்)சொல்;* ***என்ன*** *- என்று கேட்க; (பரதன்)* ***'நெறி திறம்பா*** *- சத்திய வழியில்சிறிதும் மாறுபடாத; தன் மெய்யை - தன் வாய்மையை; நிற்பது ஆக்கி - என்றும் நிலைபெறுவதாகச்செய்து;* ***இறந்தான்தன்*** *- தன் (மெய் எனும் பொய்யுடலைக் கைவிட்டு) இறந்தவனாகியதயரதனது;* ***இளந்தேவி*** *- இளைய பட்டதரசியாவாள்; (அதன் மேலும் இவள்)* ***யாவர்க்கும்*** *- எல்லா மக்களுக்கும்;* ***தொழுகுலம் ஆம் இராமன்*** *-வணங்கத்தக்க குல தெய்வமாகிய இராமனுக்கு;* ***பின்பு பிறந்தானும் உளன் என்ன*** *- பின்னேபிறந்த தம்பியும் (ஒருவன்) உளம் என்று அனைவரும் அறிந்து சொல்லுமாறு;* ***பிரியாதான் தனை*** *- (இராமனை விட்டு) நீங்காத இலக்குவனை;* ***பயந்த*** *- பெற்றெடுத்த;* ***பெரியாள்'*** *-பெருமை உடையவள்;* ***என்றான்*** *- என்று சொன்னான். சொன்னான்.*

*சுமித்திரை இலக்குவனுக்கு ''ஆகாததன்றால் உனக்கு அவ்வனம் இவ்வயோத்தி, மாகாதல் இராமன்அம் மன்னவன்....தாயர் சீதை என்றே ஏகாய்'' என்றும், ''மகனே இவன்பின் செல் தம்பிஎன்னும்படி அன்று; அடியாரின் ஏவல் செய்தி'' (1751, 1752) என்றும் அறவுரைகளை அறிந்து கூறியவள் ஆதலின் அறத்தின் வடிவம் எனப்பட்டாள். பின்பு பிறந்தார் மூவாராயினும் பரதனும்சத்துருக்கனனுமாகிய தாம் இராமனுக்குத் துன்பம் உண்டாகக் காரணமானோமே என்ற ஏக்கறவால்,'பின்பு பிறந்தானும் உளன்*

*என்னப் பிரியாதான்'' என்று இலக்குவனைச் சிறப்பித்தான். குகன் இலக்குவனை அறிந்து. அவனையே இராமனாகக் கருதி, 'தேவா நின்கழல் சேவிக்க வந்தனன்' (1963)என்று முன்னர்க் கூறியவன் ஆதலின் அவனை வைத்துச் சுமித்திரையை அறிமுகப்படுத்தினான் பரதன்.அருகிருக்கும் சத்ருக்கனனும் அவள் மகன் ஆயினும் அவன் தன்னைச் சார்ந்திருந்துவிட்டபடியால்இலக்குவனைப் பெற்றதையே அவள் பெருமையாகக் குறித்தாளாம். இவையனைத்துமே பரதன் சொல்லிலும் செயலிலும் தன்னிரக்கத்தைப் பெரிதும் காட்டுவனவாய் அமைகின்றன. 'பெரியாள்' என்றுகோசலைக்குக் கூறிய பெயரையே இங்கும் கூறியது கொண்டு கம்பர் வாக்கின் அருமை அறிந்து மகிழலாம்.* ***67***

குகன் கைகேயியை யார் என வினவுதல்

***2370. சுடு மயானத்திடை தன் துணை ஏக,***
***தோன்றல் துயர்க் கடலின் ஏக,***
***கடுமை ஆர் கானகத்துக் கருணை ஆர்கலி***
***ஏக, கழல் கால் மாயன்***
***நெடுமையால் அன்று அளந்த உலகு எல்லாம்,***
***தன் மனத்தே நினைந்து செய்யும்***
***கொடுமையால், அளந்தாளை, '"ஆர் இவர்?"***
***என்று உரை' என்ன, குரிசில் கூறும்;***

*(பின்னர்க் குகன்)* ***தன் துணை கடு மயானத்திடை ஏக*** *- தன் கணவனாய தயரதன்(இறந்தாரைச்) சுடுகின்ற சுடுகாட்டிடத்தே செல்ல;* ***தோன்றல்*** *- (தன் மகனாகிய) பரதன்;* ***துயர்க் கடலின் ஏக*** *- துன்ப வெள்ளத்தினிடையே செல்ல;* ***கருணை ஆர்கலி*** *- அருட்கடலாகிய இராமன்;* ***கடுமை ஆர் கானகத்து ஏக*** *- கொடுமை பொருந்திய காட்டிடத்தே செல்ல;(இவ்வாறு செய்து)* ***கழல்கால் மாயன்*** *- கழலணிந்த காலையுடைய திருமால்; நெடுமையால் -(வாமனனாக வந்த மாவலி) பால் மூவடி மண் கேட்டுப் பின்னர் எடுத்த) நெடிய திருவுருவத்தால்;* ***அன்று*** *-முற்காலத்தே;* ***அளந்த உலகு எல்லாம்*** *- மூவடியில் ஈரடியால் அளந்த எல்லா உலகங்களையும்; (திருமால் போல அவதாரம் எடுத்துச் சிரமப்படாது)* ***தன் மனத்தே நினைந்து செய்யும்கொடுமையால் அளந்தாளை*** *- தன் மனத்தின்கண் தானே எண்ணிச் செய்கிற கொடுமையினால்(எளிதாக) அளவு செய்தவளாகிய கைகேயியை;* ***"ஆர் இவர்" என்று உரை' என்ன-*** *இவர் யார்என்று சொல்லுக என்று கேட்க;* ***குரிசில்*** *- பரதன்;* ***கூறும்*** *- சொல்வான்ஆயினன்.*

*''சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற கோசலை'' என்று கோசலையையும், ''அறந்தானேஎன்கின்ற அயல் நின்றாள்'' என்று சுமித்திரையையும் கூறிய கம்பர், ஒரு பாடல் முழுதுமாகக்கைகேயியின் கொடு மனத்தைக் கூறிப் பரதனுக்கும் மேலாகத் தன் ஆற்றாமையைப் புலப்படுத்தினார்எனலாம். 'இவர் யார்' என்று கோசலையை வினாவி, 'அன்பின் நிறைந்தாளை உரை' என்றுசுமித்திரையை வினாவிய குகனை 'ஆர் இவர்' என்று சுட்டின்முன் வினாவை வைத்து வினாவச் செய்த கம்பரின் சொல்நயம் உணரத்தக்கது. மற்றவரோடு அவள் இசைவொட்டாது நின்றபடியைக் குகன்கண்டுகொண்டதை இந்த வினா வேறு பாடு காட்டி நிற்கும். திருமால் மிக அரிது முயன்று செய்தசெயலை இவள் எளிதாகச் செய்தாள் என்றார் கம்பர். இராமாவதார*

*நோக்கத்தை நிறைவேற்றியவன் அவள் அன்றோ என்பதை நினைத்தார் போலும்.*
***68***

*பரதன் கைகேயியைக் குகனுக்கு அறிமுகம் செய்தல்*

***2371. 'படர் எலாம் படைத்தாளை, பழி வளர்க்கும்***
***செவிலியை, தன் பாழ்த்த பாவிக்***
***குடரிலே நெடுங் காலம் கிடந்தேற்கும்***
***உயிர்ப் பாரம் குறைந்து தேய,***
***உடர் எலாம் உயிர் இலா எனத் தோன்றும்***
***உலகத்தே, ஒருத்தி அன்றே,***
***இடர் இலா முகத்தாளை, அறிந்திலையேல்,***
***இந் நின்றாள் என்னை ஈன்றாள்.'***

***'படர் எலாம் படைத்தாளை*** *- துன்பங்களை எல்லாம் உண்டாக்கினவளை;* ***பழிவளர்க்கும் செவிலியை*** *- உலக நிந்தை என்கின்ற பழியாகிய குழந்தைக்கு வளர்ப்புத் தாயை;* ***தன் பாழ்த்த பாவிக் குடரிலே*** *- தனது பாழான தீவினையுடைய வயிற்றில்;* ***நெடுங்காலம் கிடந்தேற்கும்*** *-நீண்டநாள் (பத்துத் திங்கள்) தங்கியிருந்த எனக்கும்;* ***உயிர்ப்பாரம் குறைந்து தேய*** *- உயிர் என்கின்ற சுமை குறைந்து தேயும்படி;* ***உடர் எலாம் உயிரிலாஎனத் தோன்றும் உலகத்தே*** *- உடல்கள் எல்லாம் உயிரில்லாதன என்று தோன்றும்படி உள்ள உலகத்தின்கண்;* ***ஒருத்தி அன்றே இடரிலா முகத்தாளை*** *- இவ் ஒருத்தி மட்டும் அல்லவாதுன்பமே இல்லாத முகம் உடையவள்; இவளை,* ***அறிந்திலையேல்*** *- (இவ்வளவு நேரம் முகத்தைக் கண்டே அறிந்து கொண்டிருக்கவேண்டும், அப்படி) அறியவில்லையானால்; இந் நின்றாள் - இதோ இருக்கின்றவள்;* ***என்னைஈன்றாள்*** *- என்னைப்பெற்ற கைகேயி யாவாள்,'*

*பரதன் தன் மனத்துள்ளே தன் தாயைப் பற்றிக் கொண்டிருந்த துக்கம் அனைத்தையும் தன்மனத்திற்கு இனிய சகோதரனாகிய குகன்பால் கொட்டித் தீர்த்த அற்புதமான பாடல் இது. உயிர்அன்பை வளர்க்கும்; உடலோடு சேர்ந்து அன்பை அறுத்தபடியால் பிரிவுத் துயர்க்கொடுமையால் உடல் உயிரில்லாதவையாப் ஆயின. தான் செய்த கொடுமையை நினைத்து இரக்கப்படாதபடியால் பழிக்குப்பெற்ற தாயாக ஆனதோடு அன்றிச் செவிலியும் ஆனாள் கைகேயி. 'நெடுங் காலம்' என்பதனைவான்மீகத்தை ஒட்டிப் பன்னிரண்டு திங்கள் எனலும் ஆம்.* ***69***

*குகன் கைகேயியை வணங்கலும் தோணி கரை சேர்தலும்*

*கலிவிருத்தம்*

***2372. என்னக் கேட்டு, அவ் இரக்கம் இலாளையும்***
***தன் நல் கையின் வணங்கினன் தாய் என;***
***அன்னப் பேடை சிறை இலது ஆய்க் கரை***
***துன்னிற்று என்னவும் வந்தது, தோணியே.***

***என்னக் கேட்டு*** - (குகன்) பரதன் இவ்வாறு சொல்லக் கேட்டு; ***அவ் இரக்கம் இலாளையும்*** - அந்தஇரக்கமற்றவளாகிய கைகேயியையும்; தன் நல் கையின் - தன் நல்ல கைகளால்; ***தாய் எனவணங்கினன்*** - தனக்குத் தாய் எனக் கருதி வணங்கினான்; ***தோணி*** - மரக்கலம்; ***அன்னப் பேடை*** - பெண் அன்னம்; சிறை இலது ஆய் - சிறகுகள் இல்லாமல்; ***கரை துன்னிற்றுஎன்னவும்*** - கரையை வந்து அடைந்தது என்று சொல்லலாம்படி; வந்தது - கரையை வந்தடைந்து.

*''மடமான் இரக்கம் இன்மையன்றோ இன்று இவ் உலகங்கள்இராமன், பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே'' என்று முன்பும் கூறியவர் (1484)ஆதலால் இங்கேயும் 'இரக்கம் இலாளை' என்றார். மற்றத் தாயரைத் தாயர் என நினைத்துவணங்கினான் என்னாது வாளா கூறியவர் இங்கே கைகேயியைத் தாய் என வணங்கினான் எனக் கூறியதுகுகனுக்குக் கைகேயி சிறப்பு வகையிலும் தாயாதல் பற்றி; அதனை உணர்ந்தே குகன் தாய் எனவணங்கினன். அங்ஙனம் தன் தாயை வணங்கக் கிடைத்த அவன் கைகளை 'நல் கை' என்றதும் அறிக.கைகேயி வரம் வாங்கி இராமனை வனத்துக்கு அனுப்பாமல் இருந்திருப்பின் குகன் எப்படி இராமசகோதரனாக முடியும்; ஆகவே, குகனை இராம குடும்பத்தில் ஒரு சகோதரனாகச் சேர்த்தவள் கைகேயியைஅன்றிக் கோசலையும் சுமித்திரையும் அல்லர் என்பதைக் குறிப்பாகத் 'தாய் என' என்ற சொற்களால் பெற வைத்தார். தோணிகளுக்குச் சிறகுகள் இல்லையாதலின் பெண்ணன்னம் சிறைஇல்லாமல் கரைக்கு வந்தாற் போன்றது என்றாராம். 'ஏ' ஈற்றசை.* ***70*** *தாயர் பல்லக்கில் வர, பரதன் முதலியவர் நடந்து செல்லுதல்*

***2373 . இழிந்த தாயர் சிவிகையின் ஏற, தான்,***
***பொழிந்த கண்ணின் புதுப் புனல் போயினான்-***
***ஒழிந்திலன் குகனும் உடன் ஏகினான் -***
***கழிந்தனன், பல காவதம் காலினே.***

(தோணியிலிருந்து) ***இழிந்த*** - இறங்கிய; ***தாயார்*** - தாய்மார்கள்; சிவிகையின் ஏற- பல்லக்கில் ஏறி உடன்வர; (பரதன்) ***கண்ணின் பொழிந்த புதுப் புனல்போயினான்*** - கண்ணிலிருந்து பொழிந்த புதிய கண்ணீரில் நடந்து சென்றான்; ***குகனும்ஒழிந்திலன் உடன் ஏகினான்*** - குகனும் தன் நாட்டில் தங்காமல் பரதனுடன் சென்றான்; ***காலில் பல காவதம் கழிந்தனன்*** - (இங்ஙனம் பரதன்) காலால் பல காவத வழிகளை நடந்து கடந்தான்.

*கண்ணிலிருந்து நீர் சிந்த. அதன் மேல் நடந்து பல காவதம் கடந்து சென்றான் என்பதைப்புதுப்புனல் போயினான் என்றார். 'ஏ' ஈற்றசை.* ***71***

*பரதனைப் பரத்துவாச முனிவர் எதிர்கொள்ளல்*

***2374. பரத்தின் நீங்கும் பரத்துவன் என்னும் பேர்***
***வரத்தின் மிக்கு உயர் மாதவன் வைகு இடம்,***
***அருத்தி கூர, அணுகினன்; ஆண்டு, அவன்***
***விருத்தி வேதியரோடு எதிர் மேவினான்.***

*(பின்பு பரதன்)* ***பரத்தின் நீங்கும்*** *- வினைச் சுமையிலிருந்து விலகிய;* ***பரத்துவன்*** *- பரத்துவாசன்;* ***என்னும் பேர் வரத்தின் மிக்கு உயர் மாதவன் வைகு இடம்*** *- என்கின்ற பேரை உடைய மேன்மையிற் சிறந்த உயர்ந்த முனிவன் தங்கிய ஆச்சிரமத்தை;* ***அருத்தி கூர*** *- அன்பு மிக;* ***அணுகினன்*** *- சேர்ந்தான்;* ***அவன்*** *- அப்பரத்துவாசன்;* ***ஆண்டு*** *- அவ்விடத்தில்;* ***விருத்தி வேதியரோடு*** *- அறுதொழில் உடைய அந்தணரோடு;* ***எதிர்மேவினான்*** *- எதிர்கொண்டு வந்தான்.*

*விருத்தி - தொழில். இங்கு 'ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் ஈதல், ஏற்றல் என்ற ஆறும் ஆம்.'* *72*

## திருவடி சூட்டு படலம்

'இராமனைக் காட்டிலிருந்து அயோத்திக்கு அழைத்து வந்து அரசன் ஆக்குவேன்' என்று சொல்லிப் பரதன், தாயர், அரசச் சுற்றத்தினர், நகரமடாந்தர்ஆகியயோருடன் கங்கை கடந்து சென்று இராமனைக் கண்டு அழைக்கிறான். அவன் மறுக்கவே அவனது திருவடிநிலைகளை வேண்டிப் பெற்றுத் தன் தலைக்கணியாகச் சூட்டிக்கொள்கிறான். அயோத்திஅரசுக்குத் திருவடியைச் சூடடுகிறான் ஆதலின், திருவடி சூட்டு படலம் எனப்பெற்றது.

பரதன் தன் முடியில் திருவடியைச் சூட்டிக் கொளும் படலம் என்பதினும், அயோத்திக்குஇராமபிரான் திருவடியைச் சூட்டுகிற படலம் என்பது சிறப்புடையது. திருவடிநிலையாகிய பாதுகையைத்திருவடி எனவே வழங்கல் உபசார வழக்கம் ஆம். ஆன்றோர் வழக்கு எனினும் அமையும். ஆன்றோர்வழக்கே சம்பிரதாயம் எனவும் பெறும்.

பரதன் பரத்துவாச முனிவனைக் காணுதலும், அவன் வந்த செய்தி கேட்டு மனம் மகிழ்தலும்,அனைவரும் அங்கே விருந்து அயர்தலும், பரதன் காய், கனி உண்டு வெறுநிலத் துறங்கலும், மீண்டும்புறப்பட்டுச் சித்திரக்கூடத்தைச் சேர்தலும், பரதன் வருகையை இலக்குவன் ஐயுற்றுச் சீற்றம்அடைதலும், போர்கோலம் பூண்ட இலக்குவனை மறுத்து இராமன் தெளிவித்தலும், தன்னை அணுகியபரதன் திருமேனி நிலை கண்டு அவன் நிலையை இராமன் இலக்குவற்குக் காட்டுதலும், இலக்குவன்நெஞ்சழிந்து வருந்தலும், தந்தை இறந்தமை கேட்டு இராமன் புலம்பலும், வசிட்டன் தேற்றுதலும், இராமன் தந்தைக்கு நீர்க்கடன் செய்தலும், பரதன் சீதையின் பாதங்களில் வீழ்ந்து புலம்பலும், தந்தை தயரதன் இறந்தமை இராமனால் அறிந்த சீதை வருந்தலும், அவள் நீராடிஇராமனை அடைதலும், தாயரும் இராமனும் சந்தித்து வருந்தலும், மறுநாற் யாவரும் 'சூழ்ந்திருக்கஇராமன் பரதனை விரதவேடம்' பூண்டமை பற்றி வினாவலும், பரதன் இராமனே அரசனாக வேண்டும்என்ற தன்கருத்தை விளக்கி உரைத்தலும், பரதன் வேண்டுகோளை இராமன் மறுத்துரைத்தலும், பரதனைஅரசாள இராமன் ஆணையிடலும், பரதனைத் தடுத்து வசிட்டன்இராமனிடம் அரசேற்க மொழிதலும், அதனையும் இராமன் மறுத்தலும், பரதன் காடுறைவதாகக் கூறலும், அவ்வளவில் இமையவல் பரதனை நாடாளவேண்டும் என மொழிதலும், பின்னர் வேறு செயலின்றிப் பரதன் இராமனது திருவடிநிலைகளை வேண்டிப்பெற்று 'மீளுதலும், நந்திக் கிராமத்தில் இராமன் திருவடிநிலை அரசுசெலுத்த விரததவவேடத்துடன் புலன்களை அவித்துப் பரதன் இருத்தலும், இராமன் சீதையோடும் இலக்குவனோடும் தென்திசை வழிக்கொண்டு சேறலும் இப்படலக் செய்திகள் ஆகும். பரதன் வணங்க பரத்துவாசத முனிவர் ஆசி கூறி வினாவுதல்

கலிவிருத்தம்

*2375.* **வந்த மா தவத்தோனை, அம் மைந்தனும்**
**தந்தை ஆம் எனத் தாழ்ந்த, வணங்கினான்;**
**இந்து மோலி அன்னானும் இரங்கினான்,**
**அந்தம் இல் நலத்து ஆசிகல் கூறினான்.**

***அம் மைந்தனும்*** - *அந்தப் பரதனாகிய மகனும்;* ***வந்த மா தவத்தோனை*** - *(தன்னை எதிர்கொள) வந்த பெரியதவசியாகிய பரத்துவாச முனிவனை;* ***தந்தை ஆம் என*** - *(தன்) தந்தையைப் போலக் கருதி;* ***தாழ்ந்து*** - *(பணிவுடன்) விழுந்து;* ***வணங்கினான்*** - *வணக்கம் செய்தான்;* ***இந்துமோலி அன்னானும்*** - *சந்திரனைச் சடாமுடியில் தரித்த சிவபிரானை ஒத்த அம் முனிவனும்;* ***இரங்கினான்*** - *(பரதனிடம்) பிரிவு கொண்டவனாய்;* ***அந்தம் இல் நலத்து ஆசிகள்*** *-முடிவில்லாத நன்மைகளைத் தரவல்ல ஆசிமொழிகளை;* ***கூறினான்*** - *மொழிந்தான்.*

*இந்து - சந்திரன், மோலி - சடாமுடி. மௌலி என்பது மோலி என வந்தது. தவச்சீலமும்,சடாமுடியும், காமனைக் காய்தலும் உடைமையால் பரத்து வாச முனிவனுக்குச் சிவபிரான் உவமைஆயினார். 1*

## *2376. ‘எடுத்த மா முடி சூடி, நிண்பால் இயைந்து*
## *அடுத்த பேர் அரசு ஆண்டிலை; ஐய! நீ*
## *முடித்த வார் சடைக் கற்றையை, மூசு தூசு*
## *உடுத்து நண்ணுதற்கு உற்றளது யாது?’ என்றான்.*

*(பின்பு முனிவன்)* ***‘ஐய!*** - *பரதனே!;* ***நின்பால் இயைந்து*** *அடுத்த பேர்அரசு - உன்னிடம் வந்து தானே சேர்ந்த கோசல ராச்சியத்தை;* ***நீ எடுத்த மாமுடி சூடி*** - *நீ உயர்ந்த திருமுடியைச் சூடிக்கொண்டு;* ***ஆண்டிலை*** - *ஆளாமல்;* ***மூசு தூசு உடுத்து*** *-உடம்பைப் போர்த்து மரவுரியை உடுத்துக்கொண்டு;* ***முடித்து*** - *திரித்துக் கட்டின;* ***வார் சடைக்கற்றையை*** - *நீண்ட சடைத்தொகுதியை உடையவனாய்; நண்ணுதற்கு- வனத்தின்கன் வந்து பொருந்துதற்கு;* ***உற்றுளது யாது?’*** - *நேர்ந்த காரணம் என்ன?;* ***என்றான்*** - *என்றுகேட்டான்.*

*எடுத்து - உயர்த்திய, உனக்கென்று உன் தாயால் எடுத்து வைக்கப்பெற்ற என்றும் ஆம்,மரவுரி உடம்பில் ஒட்டிப் பொருந்தாது ஆதலின் போர்த்தாற்போல் உள்ளது என்னும் பொருளில்‘மூசு’ என்று உரைத்தார். உற்றுளது என்பது இடைவந்து தேர்ந்தது என்னும் பொருளில் வந்துள்ளது. 2*

*பரதன் பதில் கேட்டு, பரத்துவாசன் மகிழ்தல்*

## *2377. சினக் கொடுந் திறல் சீற்ற வெந் தீயினான்,*
## *மனக் கடுப்பினன், மா தவத்து ஓங்கலை,*
## *‘“எனக்கு அடுத்தது இயம்பினை நீ” என்றான்;*
## *‘உனக்கு அடுப்பது அன்றால், உரவோய்!’ என்றான்.*

*(அது கேட்ட பரதன்)* ***சினம் கொடுந் திறல் சீற்ற வெந்தீயினான்*** - *கோபமாகியமிக்க வலிபடைத்த எழுச்சியுடைய கொடிய நெருப்பை உடையவனாகி;* ***மனக்கடுப்பினன்*** - *மனம்கொதித்து;* ***மா தவத்து ஓங்கலை*** - *பெரிய தவமலையாகிய பரத்துவாசனை (நோக்கி);* ***‘உரவோய்!*** - *பேரறிவை உடையவனே!;* ***நீ-; ‘எனக்கு அடுத்தது இயல்பிலை’*** - *எனக்குப் பொருந்திய சொற்களைச் சொல்லவில்லை; என்றான்-; (மேலும் நீ இவ்வாறு கூறியது);* ***‘உனக்கு அடுப்பது அன்றால்’*** - *உன் தநிலைமைக்குப் பொருத்தமானது அன்று; என்றான்-.*

*எந்தச் சொல்லைக் கேட்டுத் துன்பமும் துடிப்பும் உடையவனாய்க் காடு நோக்கி வந்தானோஅதனையே முனிவன் கூறக் கேட்டலின் பரதனுக்குச் சினத்தீ சீறி எழுந்தது. 'நின்பால் இயைந்துஅடுத்த பேர் அரசு' என்றான் பரத்துவாசன். தவவலிமை உடையவனாகவும், அறிவோனாகவும் இருக்கின்றவன் நியாய அநியாயங்களை உணர்ந்து கூறாமல் மூத்தவன் இருக்க இளையவன் அரசு புரிதலைக்கூறுதலின் 'உனக்கு அடுப்பது அன்றால்' என்று கூறினான். சீற்றத்தால் இடைவிட்டுத் துடித்துப்பேசதலுக் கேற்ப என்றான் என்று இருமுறை இக் கவியிற் கூறியது ஒரு நயம். உரம் - அறிவு "உரமொருவற்குள்ள வெறுக்கை" (குறள்.600)* *3*

## *2378. மறையின் கேள்வற்கு மன் இளந் தோன்றல், 'பின்,*
## *முறையின் நீங்கி, முது நிலம் கொள்கிலேன்;*
## *இறைவன் கொள்கிலன் ஆம்எனின், யாண்டு எலாம்*
## *உறைவென் கானத்து ஒருங்கு உடனே' என்றான்.*

***மறையின் கேள்வற்கு*** *- வேத நாயகனான இராமனுக்கு;* ***மன் இளந்தோன்றல்*** *- பொருந்திய தம்பியான பரதன்;* ***'பின் முறையின் நீங்கி*** *- இராமனுக்குத் தம்பி என்கின்ற முறையிலிருந்து விலகி;* ***முதுநிலம் கொள்கிலேன்*** *-தொன்றுதொட்டு வந்த கோசல அரசை எற்றுக்கொள்ளேன்;* ***இறைவன் கொள்கிலன் ஆம் எனின்*** *- இராமன் அரசை ஏற்றுக்கொள்ளானாயின்;* ***யாண்டு எலாம்*** *- அவன் வனத்தில் வசிக்கும் பதினான்கு யாண்டுகளும்;* ***கானத்து ஒருங்கு உடனே உறைவென்'*** *- காட்டில் அவனோடு சேர்ந்துஅவனுடனேயே தங்குவேன்;* ***என்றான்*** *- என்று கூறினான்.*

*மறையின் கேள்வன் - வேத நாயகன். கேள்வன் என்றால்நாயகன் எனப் பொருளாம் ஆதலின், வேத நாயகன் என்றாம். "வேத நாயகனே உன்னைக் கருணையால் வேண்டி,விட்டான்" (7424.) என்பதும் காண்க. இனி, மறையின் கேள்வன் என்பது பரத்துவாச முனிவனைக்குறித்துக் கூறியதாகக் கோடலும் ஆம். அப்பொழுது 'மன்' என்பதற்கு இராமன் என உரைக்க.இராமனோடு வனத்துறைதல், இராமனை இணைபிரியாது சேர்ந்துறைதல் இரண்டும் அடங்க ஒருங்கு, உடன்என்று இருசொற்கள் பெற்தார்.* *4*

## *2379. உரைத்த வாசகம் கேட்டலும், உள் எழுந்து*
## *இரைத்த காதல் இருந் தவத்தோர்க்கு எலாம்,*
## *குரைத்த மேனியோடு உள்ளம் குளிர்ந்ததால் -*
## *அரைத்த சாந்து கொடு அப்பியது என்னவே.*

***உரைத்த*** *- (இவ்வாறு பரதன்) கூறிய;* ***வாசகம் கேட்டலும் -*** *மனத்திறந்தசொற்களைக் கேட்ட அளவில்;* ***உள் எழுந்து இரைத்த காதல்*** *- (இராமனிடத்தில்)உள்ளேயிருந்து புறப்பட்டுப் பொங்கிய அன்பினை உடைய;* ***இருந்தவத்தோர்க்கு எலாம்*** *- பெரிய தவமுனிவர்களுக்கு எல்லாம்;* ***அரைத்த சாந்து கொடு அப்பியது என்ன*** *- நன்றாகஅரைத்த சந்தனத்தைத் கொண்டுவந்து பூசியதுபோல;* ***குரைத்த மேனியொடு உள்ளம்*** *-பூரித்தஉடம்போடு மனமும்;* ***குளிர்ந்தது*** *- குளிர்ச்சி அடைந்தது.*

*தவத்தோர் - பரத்துவாசனோடு உடன் இருந்த முனிவரரையும் கூட்டி, முன்பே இராமன்பால் கழிபெருங்காதலுடையராய் அவன் வனம் புகுந்ததற்கு இரங்கிய உள்ளம் உடையவராதலின் பரதன் சொற்கள்அவர்களை மேலும் குளிர்வித்தன.*

*மகிழ்ச்சியால் உடம்பு பூரித்தல் வழக்கு. ஆல் - ஏ, ஈற்றசைகள்.*
***5***

*பரதன் சேனைக்கும் உடன் வந்தோர்க்கும் பரத்துவாசன் விருந்து அளித்தல்*

***2380. ஆய காதலோடு ஐயனைக் கொண்டு, தன்***
***தூய சாலை உறைவிடம் துன்னினான்;***
***'மேய சேனைக்கு அமைப்பென் விருந்து' எனா,***
***தீயின் ஆகுதிச் செல்வனும் சிந்தித்தான்.***

***தீயின்** - (ஓம வேள்வியின் ஆக்கிய) நெருப்பில்; **ஆகுதிச்** செல்வனும் -ஆகுதிகளை இட்டுச் செய்கின்ற வேள்விச் செல்வனாகிய பரத்துவாசனும்; **ஆய காதலோடு** - மேலிட்டெழுந்து உள்ளம் குளிர்ந்த அன்போடு; **ஐயனைக் கொண்டு** - பரதனை அழைத்துக்கொண்டு; **தன்** - தன்னுடைய; **தூய சாலை உறைவிடம்** - தூய்மையான தங்கும் இடமாகிய தவச் சாலையை; **துன்னினான்** - சென்றடைந்தான்; **'மேய சேனைக்கு** - பரதனுடன்வந்துள்ள சேனைகளுக்கு; **விருந்து அமைப்பென்' எனாச் சிந்தித்தான்** - விருந்து செய்வேன் என்று தன மனத்தில் கருதினான்.*

*வேள்விச் செல்வன் ஆதலின் தேவர்களையும், பிறவற்றையும் வருவித்து விருந்து செய்யஇயன்றது என அறிக. 'சேனைக் கமைப்பெண் விருந்து' என்பது பரதனையும் உள்ளடக்கியதேயாம்;அன்றி, பரதன் விருந்து அருந்தாமையின் அவன் தவக்கோலம் கண்டு அவனை விடுத்துச் சேனையை மட்டுமே பரத்துவாசன் கருதினன் எனலும் ஆம். சேனை என்று கூறினும் உடன்வந்தார், தாயர்,பரிசனங்கள் அனைவரையும் கருதும் என்க.* ***6***

***2381. துறந்த செல்வன் நினைய, துறக்கம்தான்***
***பறந்து வந்து படிந்தது; பல் சனம்,***
***பிறந்து வேறு ஓர் உலகு வெற்றாரென,***
***மறந்து வைகினர், முன்னைத் தம் வாழ்வு எலாம்.***

***துறந்த செல்வன்** - (யான் எனது என்னும் அகப் புறப் பற்றுகளைக்) கைவிட்டு தவச்செல்வத்தையுடைய பரத்துவாசன்; **நினைய** - விருந்திட நினைத்த அளவில்; **துறக்கம்** - சுவர்க்க உலகம்; **பறந்து வந்து படிந்தது** - விண்ணிழிந்து வந்து காட்டில் தங்கியது; **பல் சனம்** -(சேனையின் உள்ள) பல மக்கள் கூட்டமும்; **பிறந்து வேறு ஓர் உலகு பெற்றார் என** - மறுபிறப்பு எடுத்து வேறு உலகத்தை அடைந்தவர்களைப்போல; **முன்னைத் தம் வாழ்வு எலாம்** -முன்னைய தம்முடைய வாழ்க்கைகளை எல்லாம்; **மறந்து வைகினர்** - மறந்து இன்பமார்ந்து இருந்தார்கள்.*

*சீரிய தவம் உடையோர் நினைத்த மாத்திரையானே அனைத்தும் நடக்கும் 'வேண்டியவேண்டியாங்கு எய்தலான் செய்தவம், ஈண்டு முயலப் படும்'' (குறள் 265.) என்றார் வள்ளுவரும்.வேறுலகு என்றது ஈண்டுச் சுவர்க்கமாகும். முன்னைய வாழ்வு என்றது அயோத்தியில் வாழ்ந்ததை. இராமனைப் பிரிந்த சோகமும் தொடர்ந்து வழிநடந்து வந்து பட்ட வருத்தமும் மறந்தபடி. 'தான்'உரையசை.* ***7***

*2382. நந்தல் இல் அறம் நந்தினர் ஆம் என,*
*அந்தரத்தின் அரம்பையர், அன்பினர்,*
*வந்து உவந்து எதிர் ஏத்தினர்; மைந்தரை,*
*இந்துவின் சுடர் கோயில் கொண்டு ஏகினார்.*

***நந்தல் இல் அறம்*** *- எஞ்ஞான்றும் கெடுதல் இல்லாத அறத்தை;* ***நன்தினர் ஆம் என*** *- பெருகச் செய்து அதன் பயனாய சுவர்க்காதி இன்பங்களைத் துய்ப்பார் இவர் ஆம் என்று கருதி;* ***அந்தரத்தின் அரம்பையர்*** *- தேவருலகத்தில் உள்ள அரம்பை மாதர்;* ***அன்பினர்*** *- அன்புடையராய்;* ***உவந்து வந்து*** *- மகிழ்ச்சியுடன் வந்து;* ***மைந்தரை*** *- ஆடவர்களை;* ***எதிர் ஏத்தினர்*** *- வரவேற்றுக் கொண்டாடி;* ***இந்துவின் சுடர் கோயில்*** *- நிலாவைப்போல ஒளி விளங்கும் அரண்மனைக்குள்;* ***கொண்டு ஏகினார்*** *- அழைத்துக்கொண்டு சென்றார்கள்.*

*நந்து என்னும் சொல் வளர்ச்சி, கேடு என்னும் இருபொருள் உடையது. - நந்தல் - கெடுதல் - நந்தினர் - வளர்ச்சிபெற்றார் எனப் பொருள் காண்க. 'அறம் செய்து சுவர்க்கம் புக்கான்' (தொல், சொல். சேனா. கிளவி. 58.) என்பவாதலின் இங்ஙனம் கூறினார். 'ஆம்' என்பதை அசை எனலும் ஆம்.* ***8***

*2383. நானம் நன்கு உரைத்தார்; நளிர் வானிடை*
*ஆன கங்கை அரும் புனல் ஆட்டினார்;*
*தான மாமணிக் கற்பகம் தாங்கிய*
*ஊனம் இல் மலர் ஆடை உடுத்தினார்.*

*(அரம்பையர் மைந்தர்க்கு)* ***நானம்*** *- (கஸ்தூரி முதலியவற்றாலாய) வாசனைப்பொடியை;* ***நன்கு உரைத்தார்*** *- நன்றாக உடம்பில் பூசினர்; நளிர் வானிடை ஆன -குளிர்ந்த ஆகாயத்திடத்தில் உள்ள;* ***கங்கை அரும்புனல் ஆட்டினார்*** *. கங்கைநதியின் அரிய நீரால் முழுக்காட்டி;* ***தான மா மணிக் கற்பகம்*** *- தேவருலகத்தில் உள்ளபெரிய அழகிய கற்பக மரங்கள்;* ***தாங்கிய*** *- சுமந்த;* ***ஊனம் இல் மலர் ஆடை*** *- குறைவு இல்லாத மலர்களால் ஆகிய ஆடையை;* ***உடுத்தினார்*** *- அணிவித்தார்கள்.*

*நானம் - கஸ்தூரி. இங்கு அதுமுதலாகிய, கூட்டுப் பொருளாகிய கண்ணம் குறித்தது. மலர் ஆடை -மலரே ஆடையாம்; பூத்தொழில் பொதிந்த ஆடையும் ஆம். தான - வண்மைக்குணம் உடைய (கற்பகம்)என உரைத்தலும் ஒன்று.* ***9***

*2384. கொம்பின் நின்று நுடங்குறு கொள்கையார்,*
*செம்பொனின் கல ராசி திருத்தினார்;*
*அம்பரத்தின் அரம்பையர், அன்பொடும்,*
*உம்பர்கோன் நுகர் இன் அமுது ஊட்டினார்.*

*கொம்பின்- பூங்கொம்பு போல; நின்று - வளைந்து நின்று; நுடங்குறு- ஒல்கிஅசைகின்ற; கொள்கையார் - பண்புடைய; அம்பரத்தின் அரம்பையர் - வானுலக அரம்பை மாதர்;(மைந்தர்க்கு)* ***செம்பொனின் கல ராசி*** *- செம்பொன்னால் ஆகிய அணிகளை;* ***திருந்தினார்*** *- நன்கு அணிவித்து;* ***அன்பொடும்*** *- பிரியத்தோடும்;*

***உம்பர்கோன் நுகர் இன் அழுது*** - *தேவேந்திரன் உண்ணக் கூடிய இனிய அமுத உணவினை;* ***ஊட்டினார்*** - *உண்பித்தார்.*

***கொம்பின் - 'இன்' உவம உருபு. கல ராசி - அணிகலன்களின் தொகுதி; பல்வேறு அணிகள். இந்திரன் உண்ணும் அமுதத்தை இவ்வாடவர்களுக்கு அரம்பையர் ஊட்டினார் ஆம். உரைத்து, ஆட்டி, உடுத்தி, திருத்தி, அழுது ஊட்டினார் என்க. மேல் முடியும். 10***

***2385. அஞ்சு அடுத்த அமளி, அலத்தகப்***
***பஞ்சு அடுத்த பரிபுரப் பல்லவ***
***நஞ்சு அடுத்த நயனியர், நவ்வியின்***
***துஞ்ச, அத்தனை மைந்தரும் துஞ்சினார்.***

***அலத்தகப் பஞ்சு அடுத்த*** - *செம்பஞ்சுக் குழம்பு பூசப்பெற்ற;* ***பரிபுர*** *-சிலம்பு அணிந்த;* ***பல்லவ*** - *தளிரனைய பாதங்களையும்;* ***நஞ்சு அடுத்த*** - *விடம்தீட்டப்பெற்ற;* ***நயனியர்*** - *கண்களையும் உடைய அரம்பையர்; அஞ்சு அடுத்த அமளி - ஐந்துபொருள்களை உள்ளடக்கிய மெத்தையின் மேல்;* ***நவ்வியின் துஞ்ச*** - *பெண்மான்கள் போல(அருகில்) உறங்க;* ***அத்தனை மைந்தரும்*** - *(பரதனுடன் வந்து) எல்லா இளைஞரும்;* ***துஞ்சினார்*** - *தூங்கினார்கள்.*

*அமுதூட்டியபின் அம்மகளிர் படுத்துக்கிடக்க மைந்தரும் தூங்கினார் என்க. நயனியர் துஞ்சஎன்றது ஈண்டுப் போகத்தின்பின் நிகழும் அவச உறக்கமாகும் என்பது குறிப்பு. அஞ்சு - ஐந்துஎன்பதன் வழக்குச் சொல்லாகிய போலி. அஞ்சு அடுத்த அமளி - அன்னத்தூவி, இலவம் பஞ்சு, செம்பஞ்சு, மயில்தூவி வெண்பஞ்சு என்னும் ஐந்து பொருள்களாற் செய்யப்பெற்ற மெத்தை. இதனைச் "சிறு பூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவி சேக்கையோரைந்து" என்பதனான் அறிக. 'ஐந்து மூன்று அடுத்த செல்வத்து அமளி" (சிந்தா. நச். உரை. 838.) அஞ்சு அடுத்த அமளி - பஞ்சசயனம் ஆம். "மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேல் ஏறி" (திவ்ய. திருப்பாவை 491) என்பதன்உரையுள் பஞ்ச சயனமாவது, அழகு, குளிர்ச்சி, மிருது, மணம், வெண்மை ஆக இவை; அஞ்சு உருவிட்டுச்செய்த படுக்கை என்றுமாம் என்ற பெரியவாச்சான்பிள்ளை உரையை ஈண்டுக் கருதுதல் நலம் தரும்அலத்தகம் - செம்மை. அலத்தகப் பஞ்சு எனலின் செம்பஞ்சாம். நஞ்சு அடுத்த - விடத்தை ஒத்தஎன்றுமாம்.* ***11***

***2386. ஏந்து செல்வத்து இமையவர் ஆம் என,***
***கூந்தல் தெய்வ மகளிர் கொண்டாடினார் -***
***வேந்தர் ஆகி, சிவிகையின் வீங்கு தோள்***
***மாந்தர்காறும், வரிசை வழாமலே,***

**வேந்தர் ஆதி** - *(பரதன் சேனையில் உள்ள) அரசர் முதலாக;* **சிவிகையின் வீங்கு தோள் மாந்தர்காறும்** - *பல்லக்குத் தூக்குதலால் பருத்த தோளை உடைய மனிதர்கள்வரை;* **வரிசை வழாமல்** - *அவரவர்க்குரிய முறைமையில் சிறிதும் குறைவுபடாமல்;* **கூந்தல் தெய்வ மகளிர்** *-கூந்தலழகையுடைய தெய்வப் பெண்கள்;* **ஏந்து செல்வத்து இமையவர் ஆம் என** - *மிக்கசெல்வத்தை உடைய தேவர்களைக் கொண்டாடுவதுபோல;* **கொண்டாடினார்** - *பாராட்டி உபசரித்தார்கள்.*

*மேலோர் முதல் கீழோர்காறும் ஒரு நிகராக இமையர் போல இன்பம் நுகர்ந்தபடியைக்கூறினார். 'வேந்தர் சிவிகையின் வீங்குதோள் மாந்தர்' என்பது மேல், கீழ் நிலைகளைச் சுட்டி நின்றது - "சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை" (குறள் 37.) என்பது காண்க. கூந்தல் அழகு பிற அழகுகளுக்கும் உபலக்கணையாம்."குஞ்சி அழகும்" "மயிர் வனப்பும்" என்பன (நாலடி. 131. சிறுபஞ்ச. 35) காண்க. "ஏந்துசெல்வத் திமையவர்" என்றது உலகில் மனிதர் செல்வத்தை ஏந்துவர்; ஆனால் இமையவரைச் செல்வம் ஏந்துகிறது என்ற நயம் பற்றி 'ஏ' ஈற்றசை.* ***12***

***2387. மாதர் யாவரும், வானவர் தேவியர்***
***கோது இல் செல்வத்து வைகினர் - கொவ்வை வாய்த்***
***தீது இல் தெய்வ மடந்தையர், சேடியர்,***
***தாதிமார் எனத் தம் பணி கேட்பவே.***

***மாதர் யாவரும்*** *- (பரதனுடன் வந்த) மகளிர் எல்லாரும்;* **கொவ்வை வாய்த்தீது இல் தெய்வ மடந்தையர் -** *கொவ்வைக் கனி போலச் சிவந்த வாயினை உடைய தீமையற்றதேவ மகளிர்;* **சேடியர் தாதிமார் என** *- தோழிப் பெண்களும், குற்றேவல் மகளிரும்போல்;* **தம் பணி கேட்ப** *- தாம் இட்ட வேலைகளை நிறைவேற்ற;* **வானவர் தேவியர் கோது இல் செல்வத்து** *- வானுலகத்துத் தேவர் மகளிரது குற்றமற்ற செல்வத்தில்;* **வைகினர்-** *இன்புற்றிருந்தனர்.*

*ஆடவர் அரம்பை மகளிர் இன்பம் துய்த்தலால் மகிழ்ந்தனர். மகளிரோ மற்றுத் தேவப்பெண்களைப் பணிகோடலால் மகிழ்ந்தனர் என்றவாறாம். தெய்வமடந்தையர் வானவர் தேவியரின்வேறுபட்டவர் ஆவர். 'ஏ' ஈற்றசை.* ***13***

***2388. நந்து அம் நந்தவனங்களில், நாள் மலர்க்***
***கந்தம் உந்திய கற்பகக் காவினின்று,***
***அந்தர் வந்தென, அந்தி தன் கை தர,***
***மந்த மந்த நடந்தது வாடையே.***

***நந்து அம் நந்த வனங்களில்*** *- (அங்குள்ள) வளர்ச்சி பெற்ற அழகியபூந்தோட்டங்களில்;* **நாள் மலர்க் கந்தம் உந்திய கற்பகக் காவின் நின்று -** *அன்றலர்ந்த மலர்களின் நறுமணம் பெருக வரும் கற்பகச் சோலைகளிலிருந்து;* **அந்தி தன் கை தர** *- மாலைப்பொழுது கை கொடுத்துவ;* **அந்தர் வந்து என** *- குருடர் நடந்ததுபோல;* **வாடை** *- வாடைக் காற்று;* **மந்த மந்த நடந்தது** *- மெல்ல மெல்ல மணம் வீசி வந்தது.*

***கற்பகச் சோலைகளிலிருந்து வந்த வாடைக் காற்று அங்குள்ள பூந்தோட்டங்களின் நறுமணம்பெருக வருதலால் மெல்ல மெல்லக் குருடர் போல நடந்தது என்றார். அதிரக் குளிர் செய்து வரும்வாடையும் மந்த மாருதமாக ஆயினது மலர்களின் நறுமணம் கலத்தலான் என்க. வாடை - வடக்கிருந்து வரும் குளிர் காற்று. அது தென்றல் ஆகாமை உணர்க, திசைப்பெயராதலின். தென்றல் - மந்தமாருதம். இங்கு வாடையும் மந்த மாருதமாயிற்று என்றது நயம் மந்த மந்த - அடுக்கு 'ஏ'ஈற்றசை. 14***

***2389. மான்று, அளிக் குலம் மா மதம் வந்து உண, -***

***தேன் தளிர்த்த கவளமும், செங் கதிர்***
***கான்ற நெல் தழைக் கற்றையும், கற்பகம்***
***ஈன்று அளிக்க, நுகர்ந்தன - யானையே.***

*யானை - (அச்சேனையில் உள்ள) யானைகள்; **அளிக்குலம்** - வண்டுக் கூட்டங்கள்; **மா மதம்** - (தம்முடைய) பெரிய மதநீர்ப் பெருக்கை; **வந்து மான்றுஉண** - வந்து உண்டு மயங்க; (தாம்) **கற்பகம்** - கற்பக மரங்கள்; **தேன்தளிர்த்த கவளமும்** - தேன் மிகுதியாகக் கலக்கப்பெற்ற உணவுருண்டையையும்; **செங்கதிர்கான்ற நெல்தழைக் கற்றையும்** - சிவந்த கதிர்களை யீன்ற நெற்பயிரின்கதிர்க்கட்டுகளையும்; **ஈன்று அளிக்க** - பெற்று உண்ணத் தர; **நுகர்ந்தன** -அவற்றை உண்டு இன்புற்றன.*

*யானைகள் உண்டபடி கூறினார். மதநீரை வண்டுகள் உண்ண. தாம் கற்பகம் தந்த கவளமும்தழையும் உண்டன என்றார். நெய்மிதி கவளம் தரல் யானைக்கு வழக்கம். இங்குத் தேன் மிதிகவளம் என்றது தேவருலகத்துச் சிறப்பாம். 'ஏ' ஈற்றசை.*
***15***

***2590. நரகதர்க்கு அறம் நல்கும் நலத்த நீர்;***
***கர கதக் கரி கால் நிமிர்த்து உண்டன;***
***மரகதத்தின் கொழுந்து என வார்த்த புல்***
***குரகதத்தின் குழாங்களும் கொண்டவே.***

***கர கதக் கரி** - துதிக்கையை உடைய கோபமுற்ற யானைகள்; **நரகதர்க்கு** -நரகத்தை அடைய வல்ல பாவிகளுக்கும்; **அறம் நல்கும் -** புண்ணியப் பயனைத் தந்து (அந்நரகத்திலிருந்து) அவரை மீட்க வல்ல; **உண்டன -** கால்களை நிமிர வைத்துப் பருகின; **குரகத்தின் குழாங்கள் -** குதிரைக் கூட்டங்கள்; **மரகதத்தின் கொழுந்து என வார்ந்தபுல்** - மரகத மணியின் ஒளிக்கொழுந்துபோல் பசிய நீண்ட புல்லை; **கொண்ட -** உட்கொண்டன.*

*யானைகள் நீர் உண்டதும், குதிரைகள் புல் உண்டதும் கூறியபடி. நரகு அதர்க்கு 'எனப்பிரித்து, நரக வழிக்கு அறம் நல்கும் எனப் பொருள் உரைத்தலும் ஒன்று. நீர் தேவகங்கைநீர். தீர்த்த விசேடம் ஆதலின் பாவத்தை மாற்றும் தன்மை படைத்தது என்றாராம். 'ஏ'ஈற்றசை.* ***16***

*பரதன் காய் கிழங்கு உண்டு, புழுதியில் தங்குதல்*

***2391. இன்னர், இன்னணம் யாவரும், இந்திரன்***
***துன்னு போகங்கள் துய்த்தனர்; தோன்றல்தான்,***
***அன்ன காயும், கிழங்கும், உண்டு, அப் பகல்***
***பொன்னின் மேனி பொடி உறப் போக்கினான்.***

***யாவரும்** - எல்லோரும்; **இன்னர் -** இத்தன்மையராய்; **இன்னணம்** - இவ்வாறு; **இந்திரன் துன்னு போகங்கள்** - இந்திரன் அனுபவிக்கின்ற இன்பங்களை; **துய்த்தனர்** - அனுபவித்தார்கள்; **தோன்றல்** - பரதன்; **அன்ன காயும் கிழங்கும்உண்டு** - அத்தகைய காயும், கிழங்கும் ஆகியவற்றை உண்டு; **பொன்னின் மேனி** -பொன்மயமான*

*தன்னுடம்பு;* ***பொடி உற*** *- புழுதி படும்படி;* ***அப் பகல்*** *-அந்நாளை;* ***போக்கினான்*** *- கடத்தினான்.*

*அனைவரும் இனிது உறங்கப் பரதன் விரதவொழுக்கத்தோடு நாளைக் கடத்தினன் என்றவாறாம். 'அன்ன காயும்' என்பதில் 'அன்ன' உரையசையாக வந்ததாகக் கொள்க. இனி 'கற்பகமரத்திலிருந்து கிடைத்த' என்பாரும் உளர். ஆயின் அது உலக இன்பத்துக்கு முரணானதாக ஆகிப்பரதனது விரதவொழுக்கத்துக்குப் பங்கமாதலின் அவ்வாறுரைத்தல் ஏலாதாம். 'தான்' என்பதும்உரையசை.* ***17***

*கதிரவன் தோன்றுதல்*

***2392. நீல வல் இருள் நீங்களும், நீங்குறும்***
***மூலம் இல் கனவின் திரு முற்றுற,***
***ஏலும் நல் வினை துய்ப்பவர்க்கு ஈறு செல்***
***காலம் என்னக் கதிரவன் தோன்றினான்.***

***நீலம்*** *- நீல நிறம் உள்ள;* ***வல் இருள்*** *- திணிந்த இருளானது;* ***நீங்களும்*** *- நீங்கிய அளவில்;* ***நீங்குறும்*** *- தாறும் இல்லாமல் போகி விடுகிற;* ***மூலம் இல்*** *- அடித்தளம் அற்ற;* ***கனவின்*** *- கனவு போல;* ***திருமுற்றுற*** *-சேனைகள் அனுபவித்த செல்வ போகம் முடிவடையும் படி;* ***ஏலும் நல்வினை துய்ப்பவர்க்கு*** *-பொருந்திய புண்ணியப் பயனை அனுபவிப்பவர்க்கு;* ***ஈறுசெல் காலம் என்ன*** *- அது முடிவடையும் காலம்போல;* ***கதிரவன்*** *- சூரியன்;* ***தோன்றினான் -.***

*கங்குற் பொழுது நீங்கியது; கதிரவன் தோன்றினான்; முன்பு பரதனுடன் வந்தோர்அனுபவித்த போகமும் முடிவுக்கு வந்தது. இதனைக் கனாப்போல என்றார். புண்ணியம் முடிந்த பின்னர்மீண்டும் சுவர்க்கத்திலிருந்து மண்ணுலகிற்கு வருவார்போல அவர்கள் நிலை ஆகிறது ஆகலின் "ஈறு செல் காலம் என்ன" என்று கதிரவன் தோற்றத்தைவருணித்தார்.* ***18***

*பரதன் படைகள் தம் நிலை அடைதல்*

***2393. ஆறி நின்று அறம் ஆற்றலர் வாழ்வு என***
***பாறி வீந்தது செல்வம்; பரிந்திலர்,***
***தேறி முந்தைத் தம் சிந்தையர் ஆயினார்,***
***மாறி வந்து பிறந்தன்ன மாட்சியார்.***

***ஆறி நின்று*** *- (மனம், மொழி, மெய்களால்) அடங்கி;* ***அறம் ஆற்றலர்*** *-அறத்தைத் செய்யாதவர்களது;* ***வாழ்வு என -*** *செல்வபோகம் (இடையில் அழிதல்) போல;* ***செல்வம் -*** *(பரதனுடன் வந்தார் அனுபவித்த) செல்வம்;* ***பாறி வீந்தது*** *-சிதறிக் கெட்டது;* ***மாறி வந்து பிறந்தன்ன மாட்சியார் -*** *விண்ணுலகத்திலிருந்து மண்ணுலகிற்கு வந்து பிறந்தது போன்ற தன்மை அடைந்தவராய அவர்கள்;* ***பரிந்திலர்*** *-தாம் இழந்துவிட்ட ஒருநாள் போகத்துக்காக இரங்க வில்லை;* ***தேறி -*** *தெளிந்து;* ***முந்தைத் தம் சிந்தையர் ஆயினார்*** *- முன்பு தமக்குள்ள நினைவுகளை உடையவர்களாக ஆனார்கள்.*

*அறம் உள்ள துணையும் செல்வம் இருந்து அறம் நீங்கியதுபோது செல்வமும் நீங்கும் ஆதலின், அறம் ஆற்றலர் வாழ்வு எனக் செல்வம் பாறி வீந்தது. வீந்தது என்னாது 'பாறி' என்றது பிறர்க்குக் கொடுத்தலால் செல்வம் வீதலும் உண்டு ஆதலின், அவ்வாறின்றிச் சிதறிக் கெட்டது என்றதாம். அறம் ஆற்றலர் வாழ்வு நல்வழியில் கெடாது தீவழியில் கெடும்.* ***19***

*பரதன் சேனை பாலை நிலத்தை அடைதல்*

***2394. காலை என்று எழுந்தது கண்டு, வானவர்,***
***'வேலை அன்று; அனிகமே' என்று விம்முற,***
***சோலையும் கிரிகளும் சுண்ணமாய் எழ,***
***பாலை சென்று அடைந்தது - பரதன் சேனையே.***

***பரதன் சேனை -; காலை என்று எழுந்தது கண்டு*** *- காலைப் பொழுது வந்துவிட்டது என்றுகருதிப் புறப்பட்டது கண்டு;* ***வானவர்*** *- தேவர்; 'வேலை அன்று;* ***அனிகமே' என்றுவிம்முற*** *- இது கடல் அன்று, சேனைதான் எனக் கருதித் தமது ஐயம் நீங்கி மனக்களிப்புஅடைய; (அச்சேனை)* ***சோலையும் கிரிகளும் சுண்ணமாய் எழ*** *- (தாம் செல்லும் வழியில்உள்ள) சோலையும், மலைகளும் புழுதியாகி மேலே புறப்பட;* ***பாலை சென்று அடைந்தது*** *- பாலைநிலத்தைச் சென்று சேர்ந்தது.*

*இதுகாறும் இருளில் கடல் என்று கருதியிருந்த வானவர் பகற்பொழுது வந்து புறப்பட்ட அளவிலேசேனை என்று துணிந்தனர் என்பதால் 'ஏ' ஈற்றசை.*
***20***

***2395. எழுந்தது துகள்; அதின், எரியும் வெய்யவன்***
***அழுந்தினன்; அவிப்ப அரும் வெம்பை ஆறினான்;***
***பொழிந்தன கரி மதம், பொடி வெங் கானகம்***
***இழிந்தன, வழி நடந்து ஏற ஒணாமையே.***

*(சேனைகள் சேறலான்)* ***துகள்*** *- புழுதிப்படலம்;* ***எழுந்தது -*** *மேல் கிளம்பியது;* ***எரியும் வெய்யவன்*** *- தகிக்கும் சூரியன்;* ***அதின் அழுந்தினன்*** *-அப்புழுதியில் அழுந்திப் போனான்;* ***அவிப்ப அரும் வெம்மை ஆறினான்*** *- பிறிதொன்றால்அணைத்தற்கு முடியாத தனது வெம்மை நீங்கப் பெற்றான்;* ***கரி பொழிந்தன மதம்*** *-யானைகள் பொழிந்தனவாகிய மதநீர்;* ***பொடிவெங்கானகம் வழிநடந்து ஏற ஒணாமை*** *- புழுதியுடைய கொடிய காட்டுவழியில் நடந்து மேற்சேற முடியாதபடி (வழுக்கும் சேறு செய்து);* ***இழிந்தன*** *- (எங்கும்) பெருகின.*

*பாலை நிலத்தின் கொடுமையும் யானைகளின் மிகுதியும் கூறியவாறு. 'ஏ' ஈற்றசை.*
***21***

***2396. வடியுடை அயிற் படை மன்னர் வெண்குடை,***
***செடியுடை நெடு நிழல் செய்ய, தீப் பொதி***
***படியுடைப் பரல் உடைப் பாலை, மேல உயர்***
***கொடியுடைப் பந்தரின், குளிர்ந்தது எங்குமே.***

***தீப்பொறி படியுடை*** - *நெருப்பு உள் தங்கிய இடத்தை உடைய;* ***பரல் உடைப்பாலை*** - *பருக்கைக் கற்களை உடைய பாலைநிலம்;* ***வடி உடை*** - *கூர்மை பொருந்திய;* ***அயிற்படை*** - *வேற்படைய உடைய;* ***மன்னர்*** - *அரசர்களது;* ***வெண்குடை*** - *வெண்குடையானது;* ***செடி உடை நெடு நிழல் செய்ய*** - *அடர்ந்துள்ள நீண்ட நிழலைச்செய்தலான்;* ***மேல் உயர் கொடி உடைப் பந்தரின்*** - *மேலே உயர்ந்துள்ள கொடிகள் படர்ந்துள்ள பந்தல்போல;* ***எங்கும்*** - *எவ்விடமும்;* ***குளிர்ந்தது*** - *குளிர்ச்சி உடையதாக ஆயிற்று.*

*செடித்தன்மையாவது அடத்தியாகவும் குட்டையாகவும் இருத்தல்; அதனுள் குட்டையை விலக்கவேண்டி 'நெடுநிழல்' என்றாராதலின், அடர்ந்து நீண்ட நிழல் என்று பொருள் ஆயிற்று. மன்னர் குடையின்மிகுதியும் உயர்ச்சியும் குறித்தது. பந்தர் நிழல் தருதலும் அதன் மேலும் கொடி குளிர்ச்சிதருதலும் உண்டாதலின், மன்னர் தம் குடையின் நிழலுக்கும் குளிர்ச்சிக்கும் ஏற்புடையஉவமையாயிற்று. கொடிப்பந்தர் என்னும் ஆம். 'ஏ' ஈற்றசை.* *22*

***2397. 'பெருகிய செல்வம் நீ பிடி' என்றாள்வயின்***
***திருகிய சீற்றத்தால் செம்மையான், நிறம்***
***கருகிய அண்ணலைக் கண்டு, காதலின்***
***உருகிய தளிர்த்தன - உலகை ஈட்டமே.***

***'பெருகிய செல்வம் நீ பிடி'*** - *மிக்க அரசச் செல்வத்தைப் பரதா! நீ ஏற்றுக்கொள்;* ***என்றாள்வயின்*** - *என்று சொல்லிய கைகேயியிடத்தே;* ***திருகியசீற்றத்தால்*** - *கழன்று எழுந்த கோபத்தால்;* ***செம்மையான் -*** *முகம் சிவந்த;* ***கருகிய அண்ணலைக் கண்டு*** - *(இயல்பாய்க்) கருத்த திருமேனியுடைய பரதனைக் கண்டு;* ***காதலின்*** - *அவன்பாற் கொண்டஅன்பினால்;* ***உலவை ஈட்டம்*** - *(பாலை நிலத்திற்) பட்ட மரக்கூட்டம்;* ***உருகிய*** - *மனம் இரங்கி;* ***தளிர்த்தன*** - *தளிர் விட்டு உயிர்பெற்றவாயின.*

*பட்ட மரங்கள் தளிர்த்துச் செழித்துப் பரதன் செல்லும் வழி இனிதாயிற்று என்றார். 'ஏ' ஈற்றசை.* *23*

*பரதன் படைகள் சித்திரகூடத்தை அடைதல்*

***2398. வன் தெறு பாலையை மருதம் ஆம் எனச்***
***சென்றது; சித்திரவடம் சேர்த்ததால் -***
***ஒன்ற உரைத்து, 'உயிரினம் ஒழுக்கம் நன்று' எனப்***
***பொன்றிய புரவலன் பொரு இல் சேனையே.***

***'உயிரினம் ஒழுக்கம் நன்று' என ஒன்று உரைத்து*** - *உயிரைவிட நல்லொழுக்கமேசிறந்து விளங்குவது எனக் கருதிச் சத்தியம் ஒன்றையே உரைத்து;* ***பொன்றிய புரவலன்*** *-உயிர்விட்ட சக்கரவர்த்தியாகிய தயரதனது;* ***பொரு இல் சேனை*** - *ஒப்பற்ற சேனையானது;* ***வன்தெறு பாலையை*** - *கொடிய அழிக்கவல்ல பாலை நிலத்தை;* ***மருதம் ஆம் எனச் சென்றது*** - *(முன்கூறியவாறு நீரும் நிழலும் பெற்றுக் குளிர்ந்தமையால்) மருதநிலம் ஆகும் என்று கருதிஎளிதாகக் கடந்து சென்று;* ***சித்திரகூடம் சேர்ந்தது-*** *சித்திரகூட மலையை அடைந்தது.*

*பாலை மருதமாயினது. யானைகளின் மதநீர்ப் பெருக்கால் வழி வழுக்கிச் சேறானதாலும், மன்னர் குடை நிழலாற் குளிர்ச்சியானதாலும் ஆம் என மேற் கூறினார்.உயிரை இம்மை மறுமை வீடு என்னும் மூன்று இடத்தும் பயன்கொள்ள வைப்பது ஒழுக்கம் ஆதலின்,'உயிரினும் ஒழுக்கம் நன்று' எனப்பட்டது. "ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம், உயிரினும்ஓம்பப் படும்" (குறள்131.) என்பதனை ஒப்பு நோக்குக. 'ஏ' ஈற்றசை. 'ஆல்' அசை. 24*

***2399. தூளியின் படலையும், துரகம், தேரொடு,***
***மூள் இருஞ் சினக் கரி முழங்கும் ஓதையும்,***
***ஆள் இருங் குழுவினர் ஆரவாரமும்,***
***'கோள்இரும் படை இது' என்று, உணரக் கூறவே,***

*(சேனை செல்கிறபோது எழுந்த)* ***தூளியின் படலையும்*** *- சேனாபராகம் எனப்பெறும்புழுதித் திரளும்;* ***துரகம், தேரொடு, மூள் இருஞ் சினக்கரி முழங்கும் ஓதையும்*** *- குதிரை,தேர், மேலும் மேலும் உண்டாகிற பெரிய கோபத்தையுடைய யாளை ஆகியவை ஆர்ப்பரிக்கும் சப்தமும்;* ***ஆள் இருங் குழுவினர்*** *- காலாட் படையாகிய பெரிய கூட்டத்தினரின்;* ***ஆரவாரமும்*** *-பேரொலியும்;* ***'கோள் இரும்படை இது' என்று*** *- பிறரைக் கொல்ல வரும் பெரும்படை இது என்று;* ***உணரக் கூற*** *- பலரும் அறிய எடுத்துச்சொல்ல....(மேல் முடியும்).*

*புழுதியும், ஒலியும் படையின் பெருமை, வலி ஆகியவற்றை முன்னுணர்த்தின; அது கண்டு கேட்டுச்சீறி எழுந்தான் இலக்குவன் என்று அடுத்த பாட்டில் முடிகிறது. கோள் - கொலை சூழ்தல் ஆகும்.வலிய என்றும் ஆகும். 'ஏ' ஈற்றசை. 25*

*பரதன் சேனை எழுச்சி கண்டு இலக்குவன் சீற்றம் அடைதல்*

***2400. எழுந்தனன், இளையவன்; ஏறினான், நிலம்***
***கொழுந்து உயர்ந்தனையது ஓர் நெடிய குன்றின்மேல்;***
***செழுந் திரைப் பரவையைச் சிறுமை செய்த அக்***
***கழுந்துடை வரி சிலைக் கடலை நோக்கினான்.***

*(பரதன் சேனைகள் வரும் நிலையைத் தன் குறிப்பால் உணர்ந்து)* ***இளையவன்*** *- இலக்குவன்;* ***எழுந்தனன்*** *- எழுந்து;* ***நிலம் கொழுந்து உயர்ந்தனையது ஓர் நெடியகுன்றின்மேல் ஏறினான்*** *- நிலவுலகம் கொழுந்துவிட்டு உயர்ந்தாற் போன்றதான ஒருநீண்டுயர்ந்த மலையின் மேல் ஏறி;* ***செழுந்திரைப் பரவையை*** *- வளவிய அலைகளையுடையகடலை;* ***சிறுமை செய்த*** *- சிறியது எனக் கருதும்படி செய்த;* ***அக் கழுந்து உடை வரிசிலைக் கடலை*** *- அந்த வலிமை மிக்க கட்டமைந்த வில்லை ஏந்திய சேனைக் கடலை;* ***நோக்கினான்*** *- பார்த்தான்.*

*நலத்தின் மேல் உள்ள நெடிய மலை, நிலம் கொழுந்துவிட்டு உயர்ந்தது போல் உள்ளதுஎன்றார். தற்குறிப்பேற்றம். சேனைக் கடலின் பெருமை நோக்கியவழி கடல் சிறியதாக உள்ளது.கழுந்து - வலிமை. "கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடற்றானை" (237.) எனப் பாலகாண்டத்து வருதல்காண்க. கழுந்து - வில்லின் கழிப் பகுதியாகும் என்பதும் ஒன்று. வில்லை இடையறாது கையிற்பிடித்தலால் தேய்ந்து*

*வழுவழுப்பாதலைக் ‘கழுந்து’ எனக் கூறுவதாகவும் பொருள் உரைப்பர்.இளையவன் எழுந்து, ஏறி, நோக்கினான் என முடிக்க.* ***26***

***2401. ‘பரதன், இப் படைகொடு,***
***பார்கொண்டவன், மறம்***
***கருதி, உள் கிடந்தது***
***ஓர் கறுவு காதலால்,***
***விரதம் உற்று இருந்தவன் மேல்***
***வந்தான்; இது***
***சரதம்; மற்று இலது’ எனத் தழங்கு***
***சீற்றத்தான்.***

***‘பார் கொண்டவன் பரதன்*** *- நிலத்தைக் கைக்கொண்டு ஆள்பவனாகிய பரதன்;* ***இப்படை கொடு*** *- இந்தச் சேனையைக் கொண்டு;* ***மறம் கருதி*** *- போர்த் தொழிலைக்கருதி;* ***உள் கிடந்தது ஓர் கறுவு காதலால்*** *- தன் மனத்தகத்தே தங்கிய வஞ்சனையோடுகூடிய பேராசையால்;* ***விரதம் உற்று இருந்தவன்மேல் வந்தான்*** *- தவ விரதம் மேற்கொண்டுள்ள இராமன்மேல் பிடையெடுத்து வந்துள்ளான்;* ***இது சரதம்*** *- இதுவே உண்மை;* ***மற்று இலது’*** *- வேறு ஒன்றும் இல்லை;* ***எனத் தழங்கு சீற்றத்தான்*** *- என்று எண்ணிமிக்க கோபம் உடையவனாய்.....(மேல் முடியும்).*

*பதினான்கு ஆண்டு முடிந்த பின்னர் மீண்டு வந்து தன் அரசைக் கவர்ந்து கொள்வானேஎன்கின்ற கருத்தால் படையெடுத்து வந்துள்ளான் என நினைக்கும் இலக்குவன் அதனையே ‘உள்கிடந்தது ஒரு கறுவு காதல்’ என்றான்.*
***27***

*இலக்குவன் சீற்றத்துடன் இராமனை அடைந்து கூறத் தொடங்குதல்*

***2402. குதித்தனன் பாரிடை; குவடு நீறு எழ***
***மதித்ததனன்; இராமனை விரைவின் எய்தினான்;***
***‘மதித்திலன் பரதன், நின்மேல் வந்தான், மதில்***
***பதிப் பெருஞ் சேனையின் பரப்பினான்’ என்றான்.***

*(இலக்குவன் சீற்றத்தானாய்)* ***குவடு நீறு எழ மிதித்தனன், பாரிடைக் குதித்தனன் -*** *மலை உச்சி பொடுபடும்படி (மிகுந்த வேகத்தோடு) மிதித்துத் தரையிலே குதித்து;* ***விரைவின் -*** *வேகமாக;* ***இராமனை எய்தினான் -*** *இராமனை வந்தடைந்து;* ***‘பரதன் மதித்திலன்*** *-பரதன் நின்னை ஒரு பொருளாகக் கருதாமல்;* ***மதில் பதிப் பெருஞ் சேனையின் பரப்பினான்-*** *மதில் சூழ்ந்த அயோத்தி நகரத்துப் பெருஞ் சேனைப் பரப்பினை உடையவனாய்;* ***நின்மேல்வந்தான்*** *- உன்மேல் போர்க்கு வந்தான்;’* ***எனா*** *- என்று கூறி......(மேல்முடியும்).*

*இராமனை மதியாது பரதன் போர்க்கு வந்தான் என்றான் -‘மதில் பதி’ என்றது அயோத்தியை. சேனை உடன் வந்ததே இலக்குவனது ஐயத்தை உறுதிப் படுத்துவதாகஅமைந்தது என்பது இதனால் வெளியாம்.* ***28***

*இலக்குவன் போர்க் கோலம் பூண்டு, வீர உரை பகர்தல்*

***2403. கட்டினன் கரிகையும் கழலும்; பல் கணைப்***
***புட்டிலும் பொறுத்தனன்; கவசம் பூட்டு அமைத்து***
***இட்டனன்; எடுத்தனன் வரி வில்; ஏந்தலைத்***
***தொட்டு, அடி வணங்கி நின்று, இனைய சொல்லினான்.***

***சுரிகையும் சுழலும் கட்டினன்*** - *(இடையில்) உடைவாளையும், (காலில்) வீரக்கழலையும் கட்டிக்கொண்டு;* ***பல்கணைப் புட்டிலும் பொறுத்தனன்*** - *பல்வகைஅம்புகளையுடைய தூணியைத் (தோளில்) சுமந்து;* ***கவசம் பூட்டு அமைத்து இட்டனன்*** -*போர்க் கவசத்தை (உடம்பிற்) பூட்டிக்கொண்டு;* ***வரிவில் எடுத்தனன்*** - *கட்டமைந்தவில்லைக் (கையில்) எடுத்துக்கொண்டு;* ***ஏந்தலை அடிதொட்டு வணங்கி நின்று*** - *இராமனைத்திருவடி தொட்டு வணக்கம் செய்து எழுந்து நின்று;* ***இனைய சொல்லினான்*** - *இவ்வார்த்தைகளைச் சொன்னான்.*

*போர்க்குச் சன்னத்தனானான் என்றார். ஏந்தல் - இராமன்; உயர்ந்தோன் என்னும்பொருளில் வந்தது. திருவடி தொட்டு வணங்குதல் என்பது ஒரு மரபு.*
***29***

*இலக்குவன் வீர உரை*

***2404. 'இருமையும் இழந்த அப் பரதன் ஏந்து தோள்***
***பருமையும், அன்னவன் படைத்த சேனையின்***
***பெருமையும், நின் ஒரு பின்பு வந்த என்***
***ஒருமையும், கண்டு, இனி உவத்தி, உள்ளம் நீ.***

***'இருமையும் இழந்த*** - *இம்மை, மறுமை இரண்டையும் சேர இழந்த;* ***அப் பரதன் ஏந்துதோள் பருமையும்*** - *அந்தப் பரதனது உயர்ந்த தோளின் பருத்த தன்மையும்;* ***அன்னவன்*** - *அப் பரதன்;* ***படைத்த சேனையின்*** - *பெற்றுள்ள சேனையின்;* ***பெருமையும்*** -*பெருமையையும்;* ***நின்பின்பு வந்த*** - *உனது பின்னாலே வந்த;* ***ஒரு என்*** - *தனியான என்னுடைய;* ***ஒருமையும்*** - *ஒப்பற்ற தன்மையையும்;* ***கண்டு*** - *(இப்போது) பார்த்து;* ***இனி நீ உள்ளம் உவத்தி*** - *இனிமேல் நீ மனமகிழ்ச்சி அடைவாயாக......*

*அண்ணன் மேல் போர்தொடுத்து வந்தான் எனவே அறத்துக்கு மாறுபட்டான்; இருமையும் இழந்தான்என்றானாம். யான் ஒருவனே அத்துணைச் சேனைகளையும் அழிப்பதைப் பார் என்றானாம்.* ***30***

***2405. 'படர் எலாம் படப் படும் பரும யானையின்***
***திடர் எலாம் உருட்டின, தேரும் ஈர்த்தன,***
***குடர் எலாம் திரைத்தன, குருதி ஆறுகள்,***
***கடர் எலாம் மடுப்பன, பலவும் காண்டியால்.***

***'படல் எலாம் பட*** - *பல வகைத் துன்பங்களும் அடைந்து;* ***படும் -*** *இறக்கிற;* ***பரும யானையின்*** - *அணி அணிந்த யானையினது;* ***திடர் எலாம் உருட்டின*** - *உடல்களாகிய*

*மேடுகளையெல்லாம் உருட்டி;* ***தேரும் ஈர்த்தன*** *- தேர்களைஇழுத்துக்கொண்டு;* ***குடர் எலாம் திரைத்தன*** *- குடல்களையெல்லாம் அலைத்துத் தள்ளி;* ***குருதி ஆறுகள் -*** *இரத்த நதிகள்;* ***பலவும் கடர் எலாம் மடுப்பன*** *- பலவும் கடல் முழுவதும் பாய்ந்து கலப்பனவற்றை;* ***காண்டி*** *- பார்ப்பாயாக...*

*உருட்டி, ஈர்த்து, திரைத்துக் குருதி ஆறு கடலில் மடுத்தல் காண்டி என முடிக்க. குடல்,குடர் என்றார்போலக் கடல், கடர் என நின்றது செய்யுட்போலி. 'ஆல்' ஈற்றசை.*
***31***

***2406. 'கருவியும், கைகளும், கவச மார்பமும்,***
***உருவின; உயிரினோடு உதிரம் தோய்வு இல***
***திரிவன - சுடர்க் கணை - திசைக் கை யானைகள்***
***வெருவரச் செய்வன; காண்டி, வீர! நீ.***

***'வீர! நீ*** *- இராமனே ! நீ;* ***கருவியும் கைகளும் கவச மார்பமும் உருவின*** *-எதிரிகளது ஆயுதங்களையும், கரங்களையும், கவசமணிந்த மார்பகத்தையும் உருவிக்கொண்டு;* ***உயிரினோடு*** *- அவர்கள் உயிரையும் உடன்பற்றி;* ***உதிரம் தோய்வு இல*** *-இரத்தத்தில் சிறிதும் தோயாமல்;* ***சுடர்க்கணை*** *- என்னுடைய ஒளிபடைத்த அம்புகள்;* ***திசைக்கை யானைகள்*** *- எட்டுத் திசைப் பக்கத்திலும் உள்ள யானைகளும்;* ***வெருவர*** *- அஞ்சும்படி;* ***திரிவன செய்வன*** *- சுற்றித் திரிதல் செய்வனவற்றை;* ***காண்டி*** *-பார்ப்பாயாக....*

*அம்புகள் உடலிற் பாய்ந்து உருவியும் உதிரம் தோயாமல் இருத்தலின் அவற்றைக் கண்டுதிசையானைகள் வெருவின. கை திசையொடு வருதலின் பக்கமாம்.*
***32***

***2407. 'கோடகத் தேர், படு குதிரை தாவிய,***
***ஆடகத் தட்டிடை, அலகை அற்று உகு***
***கேடகத் தடக் கைகள் கவ்வி, கீதத்தின்***
***நாடகம் நடிப்பன - காண்டி; நாத! நீ.'***

***'நாத! நீ -; தாவிய குதிரை படு கேடகத் தேர்*** *- தாவிச் செல்லும் குதிரைகள்இறந்து போன வளைந்து அழகிதாய தேரினது;* ***ஆடகத் தட்டிடை*** *- பொன்மயமானநடுப்பீடத்தின்கண்;* ***அலகை*** *- பேய்கள்;* ***அற்று உகு கேடகத் தடக் கைகள் கவ்வி -*** *போர்க்களத்துத் துண்டாகி விழுந்த கேடகத்தோடு கூடிய நீண்ட கைகளைத் தம் கையாற் பற்றி (தாளமிட்டுக்கொண்டு);* ***கீதத்தின்*** *- இசை பாடிக்கொண்டு;* ***நாடகம் நடிப்பன*** *-கூத்தாடுவனவற்றை;* ***காண்டி*** *- பார்ப்பாயாக..*

*பலகை எனப்படும் கேடயத்தோடு அற்று விழுந்த கைகளைப் பேய்கள் தாம் எடுத்துக்கொண்டனகானம் இட்டு ஆடுதல் போலும். கோடகம் என்பது தேர் உறுப்பு எனலும்ஆம்.* ***33 2408. 'பண் முதிர் களிற்றொடு பரந்த சேனையின்***
***எண் முதல் அறுத்து, நான் இமைப்பின் நீக்கலால்,***
***வின் முதுகு உளுக்கவும், வேலை ஆடையின்***
***மண் முதுகு ஆற்றவும் காண்டி - வள்ளல்! நீ***

***'வள்ளல்*** *- இராமனே;* ***நீ -; பண் முதிர்*** *- அழகு மிக்க;* ***களிற்றொடு*** *- யானைகளோடு;* ***பரந்த சேனையின் எண்*** *- பரந்துபட்ட படைகளின்கணக்கை;* ***முதல் அறுத்து*** *- அடியோடு போக்கி;* ***நான் இமைப்பில் நீக்கலால்*** *-நான் கணநேரத்தில் அழித்தலால், (இவை அனைத்தும் வீர சுவர்க்கம் அடைந்து விண்ணில்ஏறலாம்);* ***விண் முதுகு உளுக்கவும்*** *- விண்ணுலகம் முதுகு நெளிக்கவும்;* ***மண்*** *-மண்ணுலகம் (பாரம் நீங்குதலின்);* ***முதுகு ஆற்றவும்*** *- முதுகு வலி நீங்கப் பெறவும்;* ***காண்டி*** *- பார்ப்பாயாக....*

*பண் -அலங்காரம். பண்ணுதல். கை செய்தல், அலங்கரித்தலாம். எண் முதல் அறுத்தல் -இல்லாதபடி செய்தல் ஆகும். போரில் இறந்தோர் வீரசுவர்க்கம் பெறுவர் ஆதலின், எல்லாச்சேனைகளும் இறந்து விண்ணுலகு பெற்றதனால் விண் முதுகுவலி எடுத்து நெளிக்கலாயிற்று. இனி -உளுக்க' என்பதற்கு இற்று உளுத்துப் போய் விழ' எனவும் உரைக்கலாம். பூபாரம் நீங்கலின்மண் முதுகு ஆற்றியது என்றானாம்.*
*34*

***2409. 'நிவந்த வான் குருதியின் நீத்தம் நீந்தி மெய்***
***சிவந்த சாதகரொடு சிறு கண் கூளியும்,***
***கவந்தமும், "உலகம் நின் கையது ஆயது" என்று***
***உவந்தன குனிப்பன காண்டி, உம்பர்போல்.***

***'நிவந்த*** *- உயர்ந்து வழிந்து ஒழுகிய;* ***வான் குருதியின் நீத்தம் -*** *பெரிய இரத்த வெள்ளத்திலே;* ***நீந்தி*** *- நீந்திச் சேறலால்;* ***மெய் சிவந்த*** *- உடம்பு செந்நிறமாகப் பெற்ற;* ***சாதகரொடு*** *- பூத கணங்களோடு;* ***சிறுகண் கூளியும்*** *- (உடம்பிற்கு ஒவ்வாத) சிறிய கண்ணை உடைய பேய்களும்;* ***கவந்தமும்*** *- தலையற்றஉடற்குறையும்;* ***"உலகம் நினகையது ஆயது" என்று*** *- உலகமனைத்தும் இராமனாகிய உன் வசம்ஆய்விட்டது என்று;* ***உம்பர் போல்*** *- தேவர்கள் (மகிழ்தல்) போல;* ***உவந்தன*** *- மகிழ்ந்தனவாய்;* ***குனிப்பன*** *- நடனம் ஆடுவன;* ***காண்டி*** *- பார்ப்பாயாக....*

***சாதகரொடு 'கூளியும் கவந்தமும் குனிப்பன' என முடியும் ''பலவயினானும் எண்ணுத் திணை விரவுப்பெயர், அஃறிணை முடிபின செய்யுளுள்ளே" (தொல். சொல். கிளவி. 51.) என்பவாதலின்'குனிப்பன' என அஃறிணையாய் முடிந்தது. தேவர்கள் மகிழ்தல் இயல்பு. பேய்கள் மகிழ்ந்து ஆடுதலாகக் கூறியது தற்குறிப்பேற்றமாம்.***
***35***

***2410. 'சூழி வெங் கட கரி, துரக ராசிகள்,***
***பாழி வன் புயத்து இகல் வயவர், பட்டு அற,***
***வீழி வெங் குருதியால் அலைந்த வேலைகள்***
***ஏழும் ஒன்றாகி நின்று இரைப்பக் காண்டியால்.***

***'சூழி*** *- முகபடாம் அணிந்த;* ***வெங் கடகரி*** *- கொடிய மதம் உடைய யானைகள்;* ***துரக ராசிகள்*** *- குதிரைத் தொகுதிகள்;* ***பாழி*** *- பருத்த;* ***வன்*** *- வலிய;* ***புயத்து*** *- தோளை உடைய;* ***இகல் வயவர்*** *- பகைத்த வீரர்கள்;* ***பட்டு அற*** *- செத்து விழ;* ***வீழி*** *- வீழ்ந்த;* ***வெங்குருதியால்*** *- கொடிய இரத்தப் பெருக்கால்;* ***அலைந்த வேலைகள் ஏழும்*** *- அலை வீசும் ஏழு கடல்களும்;* ***ஒன்றாகி நின்று*** *- ஒரு கடலாகியிருந்து;* ***இரைப்ப*** *- ஒலிசெய்ய;* ***காண்டி*** *-பார்ப்பாயாக... நால்வகைச் சேனைகளும் அடியோடு அழிதலால் உண்டான குருதியாறு கூடுதலால் ஏழுகடல்களும்ஒன்றாகி இரரைத்தன. வீழி - வீழிப் பழம்*

*போன்று சிவந்த குருதி என்றும் ஆம். அலைந்தஎன்பது வேலைகளுக்கு அடை. இனி, குருதியால் அலைவீசிய வேலைகள் ஏழும் ஒன்றாகின எனினும்அமையும். 'ஆல்' ஈற்றசை.* ***36***

### *2411. 'ஆள் அற; அலங்க தேர் அழிய; ஆடவர்*
### *வாள் அற; வரி சிலை துணிய; மாக் கரி*
### *தாள் அற, தலை அற; புரவி தாளொடும்*
### *தோள் அற - வடிக் கணை தொடுப்ப - காண்டியால்.*

***'ஆள் அற*** *- போர் வீரர்கள் அறுபட;* ***அலங்க தேர் அழிய*** *- அசைகின்றதேர்கள் அழிய;* ***ஆடவர் வாள் அற*** *- வாள்வீரர்கள் வாளொடு அற்று விழ;* ***வரிசிலைதுணிய*** *- கட்டமைந்த வில்கள் துண்டுபட;* ***மாக் கரி*** *- பெரிய யானைகள்;* ***தாள்அற தலை அற*** *- தாளும் தலையும் துண்டபட்டு விழ;* ***புரவி*** *- குதிரைகள்;* ***தாளொடும் தோள் அற*** *- கால்களோடு தோள்கள் துண்டுபட;* ***வடிக் கணை -*** *கூரிய அம்புகளை;* ***தொடுப்ப*** *- யான் செலுத்த;* ***காண்டி*** *- பார்ப்பாயாக... ஆள் என்றது தேர்மேல் நின்ற ஆளும் ஆம். 'ஆல்' ஈற்றசை.* ***37***

### *2412. 'தழைத்த வான் சிறையன, தசையும் கவ்வின,*
### *அழைத்த வான் பறவைகள், அலங்கு பொன் வடிம்பு*
### *இழைத்த வான் பகழி புக்கு இருவர் மார்பிடைப்*
### *புழைத்த வான் பெரு வழி போக - காண்டியால்.*

***தழைத்த வாய் சிறையன*** *- வளமான சிறந்த இறக்கைகளை உடையனவாய்;* ***அழைத்த*** *- தம் இனத்தைக் கூவி அழைத்த;* ***வான் பறவைகள்*** *- உயர்ந்த கழுகு, பருந்து முதலிய பறவைகள்;* ***பொன்வடிம்பு இழைத்த*** *- பொன்னால் விளிம்பு கட்டப்பெற்றுச் செய்த;* ***வான் பகழி*** *- (என்) சிறந்த அம்புகள்;* ***இருவர் மார்பிடைப் புக்குப் புழைத்த*** *- பரத சத்துருக்கனர்களாகிய இருவரது மார்பின் நடுவே நுழைந்து துவாரம் இட்டதனால் ஆகிய;* ***வான்பெருவழி*** *- சீரிய பெரிய வழியிலே;* ***தசையும் கவ்வின*** *- தசைகளைக்கவ்விக்கொண்டன வாய்;* ***போக*** *- போவதை;* ***காண்டி*** *- பார்ப்பாயாக... இருவர் - பரத சத்துருக்கனர்கள். வான் பறவை - பெரிய பறவைகள்; கழுகு, பருந்துமுதலியன, அம்புகளின் முனையில் பளபளப்பான விளிம்புகள் அமைத்தல் வழக்கம். 'ஆல்' ஈற்றசை.* ***38***

### *2413. 'ஒரு மகள் காதலின் உலகை நோய் செய்த*
### *பெருமகன் ஏவலின் பரதன் தான் பெறும்*
### *இரு நிலம் ஆள்கைவிட்டு, இன்று,என் ஏ வலால்*
### *அரு நரகு ஆள்வது காண்டி - ஆழியாய்!*

***'ஆழியாய்!*** *- இராமனே!;* ***ஒருமகள் காதலின்*** *- கைகேயி என்னும் ஒருபெண்ணின்மேற் கொண்ட அன்பினால்;* ***உலகை நோய் செய்த*** *- உலகம் முழுவதையும்துன்பத்தில் துடிக்கச் செய்த;* ***பெருமகன்*** *- சக்கரவர்த்தியாகிய தயரதன்;* ***ஏவலின்*** *- ஆணையால்;* ***பரதன் தான் பெறும் இருநிலம்*** *- பரதன் தான் பெற்ற கோசல அரசை;* ***ஆள்கை விட்டு*** *- ஆட்சி செய்தலைக் கைவிட்டு;* ***இன்று*** *- இந்நாள்;* ***என் ஏ வலால்*** *- என் அம்பின் வலிமையால்;* ***அரு நரகு ஆள்வது*** *- கொடிய நரகத்தைஅனுபவிப்பதை;* ***காண்டி*** *-*

*பார்ப்பாயாக...     பரதன் அண்ணனுக்குத் துரோகம் செய்தவன் என்று  இலக்குவன் கருதுவதனால், போர்க்களத்தில்இறப்பினும் அவனுக்கு வீர சுவர்க்கம் இல்லை; அருநரகமே வாய்க்கும் என்று கூறினான். 'ஒரு மகள்காதலின் உலகை நோய் செய்த' என்பது நயமான தொடர்.  சினத்திலும் தயரதனைப் 'பெருமகன்' என்றது காண்க. 'என் ஏவலால்' என்பதனை 'ஏ' வலால் என்று பிரியாது 'ஏவலால்' என்று ஒன்றாகவே கொண்டு கட்டளையால் என்று பொருள் உரைத்தல் சிறக்கு மேல் கொள்க.*
***39***

## *2414.  ' "வையகம் துறந்து வந்து அடவி வைகுதல் எய்தியது உனக்கு" என, நின்னை ஈன்றவள் நைதல் கண்டு உவந்தவள், நவையின் ஓங்கிய கைகயன் மகள், விழுந்து அரற்றக் காண்டியால்.*

***"வையகம் துறந்து*** *- நிலவுலக அரசாட்சியைக் கைவிட்டு;* ***வந்து -; அடவி வைகுதல்*** *- காட்டில் தங்கியிருத்தல்;* ***உனக்கு எய்தியது"*** *- உனக்கு வந்து சேர்ந்தது;* ***என*** *- என்று;* ***நின்னை ஈன்றவள்*** *- உன்னைப் பெற்றவளாய கோசலை;* ***நைதல் கண்டு*** *- வருந்துதலைப் பார்த்து;* ***உவந்தவள்*** *- மகிழ்ச்சி அடைந்தவளாகிய;* ***நவையின் ஓங்கிய*** *- (பிறர்க்குத்) துன்பம் செய்வதில் உயர்ந்து  விளங்கும்;* ***கைகயன் மகள்*** *- கைகேயி;* ***விழுந்து அரற்ற*** *- (பரதனை இழந்து) தரையில் விழுந்து புலம்ப;* ***காண்டி*** *- பார்ப்பாயாக...*

*கூனியின் போதனை அவ்வாறு ஆதலின் 'நைதல் கண்டு உவந்தவன்' என்று  இங்கே கூறினான். 'ஆல்' ஈற்றசை.*                 ***40***

## *2415.  'அரம் சுட அழல் நிமிர் அலங்கல் வேலினாய்! விரைஞ்சு ஒரு நொடியில், இவ் அனிக வேலையை உரம் சுடு வடிக் கணை ஒன்றில் வென்று, முப் புரம் சுடும் ஒருவனின் பொலிவென் யான்' என்றான்.*

***'அரம் சுட*** *- அரம் என்னும் கருவியால் தேய்க்க;* ***அழல் நிமிர்*** *- தீயைக்கக்கும்;* ***அலங்கல்*** *- மாலை அணிந்த;* ***வேலினாய்! -*** *வேற்படையை உடையவனே! ;* ***யான் -;  இவ் அனிக வேலையை*** *- இந்த சேனைக் கடலை;* ***உரம் சுடு*** *- வலிமையைஅழித்துச் சுடுகிற;* ***வடிக்கணை ஒன்றில்*** *- கூரிய ஓர் அம்பினாலே;* ***ஒரு நொடியில்விரைஞ்சு*** *- ஒரு நொடிப் பொழுதில் விரைவாக;* ***வென்று*** *- (அழித்து) வெற்றிகொண்டு;* ***முப்புரம் சுடும் ஒருவனின்*** *- திரிபுரங்களை அழித்த சிவபிரானைப் போல;* ***பொலிவென்'*** *- விளங்குவேன்;'* ***என்றான்*** *- என்று கூறினான்.*

*ஓரம்பால் ஒருநொடியில் அழித்தல் பற்றித் திரிபுரத்தை அழித்த சிவன் போல என்றுஉவமை கூறினான் இலக்குவன். 'விரைந்து' என்பது செய்யுள் எதுகை நோக்கி 'விரைஞ்சு' எனநின்றது. 'போலி' எனினும் ஆம். திரிபுரம் எரித்த கதை; தாரகாசுரனது மக்களாகியதாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்னும் மூவரும் தவம் செய்து வரம் பெற்றுப்பொன், வெள்ளி, இரும்பால் ஆகிய கோட்டைகளைப் பெற்றுக் கோட்டையுடனே பறந்து சென்று தங்கி அழித்து அனைவரையும் வருந்தினர். சிவபூசையில் தவறாது  இருத்தலின் அழிக்கப்படாதவர்ஆயினர். இந்திரனும்*

*திருமாலும், உலோகாயதனும், புத்தனும் ஆகி அவர்பால் சென்றுஅம்மார்க்கங்களைப் பேசி அவரைத் திரித்துச் சிவபூசை இல்லாதவர் ஆக்கினர். பின்னர்ச் சிவபெருமான் மலை வில்லாக, வாசுகி நாணாக, பூமி தேராக, சூரிய சந்திரர்கள் சக்கரங்களாக, வேதம் குதிரையாக, பிரமன் சாரதியாக, திருமால் அம்பாக, அக்கினி அம்பின் முனையாக, தேவர்கள் தேர் உறுப்புகளாகக் கொண்டு அவர் முன் சென்ற அளவில் தேவர்கள் முதலியோர்தம்மால்தான் சிவபிரான் அவர்களை வெல்லமுடிகிறது என்று நினைத்து அகங்கரித்தாராக, அதனைஉணர்ந்த சிவபிரான் சிரித்தாராக, அக்கணமே அசுரரும் கோட்டையும் சாம்பராயினர் என்பதுசிவபுராண சரித்திரமாம்.* ***41***

*இராமன் இலக்குவனுக்குப் பரதனைத் தெளிவுறுத்தல்*

***2416. "இலக்குவ! உலகம் ஓர் ஏழும், ஏழும், நீ,***
***"கலக்குவென்" என்பது கருதினால் அது,***
***விலக்குவது அரிது அது விளம்பல் வேண்டுமோ?-***
***புலக்கு உரித்து ஒரு பொருள், புகலக் கேட்டியால்.***

***'இலக்குவ'*** *- இலக்குவனே!;* ***நீ உலகம் ஓர் ஏழும் ஏழும் "கலக்கும்" என்பது கருதினால்*** *- நீ பதினான்கு உலகங்களையும் நிலை கலங்கச் செய்வேன் என்பதைக் கருதிச்செயற்பட்டால்;* ***அது*** *- அச்செயல்;* ***விலக்குவது அரிது*** *- யாராலும் தடுத்தற்கரியது;* ***அது விளம்பல் வேண்டுமோ?*** *- அதைச் சொல்லித் தெரிய வேண்டுவதில்லை (உலகப்பிரசித்தமாய் அனைவரும் முன்பு அறிந்துள்ளதே);* ***புலக்கு உரித்து*** *- (அது கிடக்க, இப்போது) அறிவுக்கு உரிய;* ***ஒரு பொருள்*** *- ஒரு செய்தியை;* ***புகல*** *- (நான்உனக்குச்) சொல்ல;* ***கேட்டி*** *- கேட்பாயாக...*

*பெருத்த வீர வார்த்தைகளைப் பேசிச் சினத்துடன் சீறி நிற்கும் இலக்குவன் பால், பரதனைப் பற்றித் தெளிவுறுத்தத் தொடங்கும் இராமன் முதலில் உபதேசத்தைத் தொடங்காது, அவனதுசினத்தையும் பேராற்றலையும் மதித்துப் பாராட்டிப் பேசியது மனித இயல்புக்கு ஒத்து அமைந்தது பாராட்டத்தக்கது. புலக்கு - புலத்துக்கு - 'அத்து' கெட்டது. ''கல்லார்ப் பிணிக்கும்'' என்றகுறளில், 'நிலத்துக்கு' என்பது 'நிலக்கு' என்று நின்றாற் போல. (குறள். 570.) செய்யுள்விகாரம் என்பர் பரிமேலழகர் - புலம் என்பது அறிவு. சினம் மிக்குழி அறிவு எழாது ஆதலின் -சினத்தை அடக்கி அறிவினால் சிந்தித்தல் வேண்டும் என்பது உணர்த்தினானாம். 'ஆல்' ஈற்றசை.*
***42***

***2417. 'நம் குலத்து உதித்தவர், நவையின் நீங்கினர்***
***எங்கு உலப்புறுவர்கள் ? எண்ணின், யாவரே***
***தம் குலத்து ஒருவ அரும் தருமம் நீங்கினர்?-***
***பொங்கு உலத் திரளொடும் பொருத தோளினாய்!***

***பொங்கு*** *- வளர்ச்சியடைந்து;* ***திரள் உலத்திரளொடும்*** *- திரண்ட கல்தூணுடனே;* ***பொருத*** *- மாறுபட்ட (அதனினும் சிறந்த);* ***தோளினாய்!*** *- தோளினைஉடையவனே!;* ***நம் குலத்து உதித்தவர்*** *- நம்முடைய சூரிய குலத்தில்தோன்றியவர்களாகிய;* ***நவையுள் நீங்கினர்*** *- குற்றத் திலிருந்து நீங்கிய அரசர்கள்;* ***எங்கு உலப்புறுவர்கள்?*** *- எவ்வாறு அளவிடப்படக்கூடியவர் (அளவிடமுடியாதவர்);* ***எண்ணின்*** *- யோசிக்கும் இடத்து;*

***தம் குலத்து ஒருவ அரும்*** - தம் குலத்தில்விட்டு விலக முடியாத; ***தருமம் நீங்கினன்*** - அறத்திலிருந்து நீங்கியவர்கள்; ***யாவரே*** - யார்?...... (ஒருவரும் இல்லை என்றபடி)

***அளவிடல் என்பது எண்ணிக்கையான் அன்று; அறிவு, ஆண்மை, பெருமை என்னும் மூவகை ஆற்றலால்அளவுபடாதவர் என்றவாறாம். பொங்கு உலத்திரள் - பெரியதாகிய கற்றூண் எனலும் ஆம்.*** *43*

***2418. 'எனைத்து உள மறை அவை இயம்பற்பாலன,***
***பனைத் திரள் கரக் கரிப் பரதன் செய்கையே;***
***அனைத் திறம் அல்லன அல்ல; அன்னது***
***நினைத்திலை, என் வயின் நேய நெஞ்சினால்.***

***'பனைத் திரள் கரக் கரிப் பரதன்*** - பனைமரம் போலத் திரண்ட கையை உடையயானையை யுடைய பரதனது; ***செய்கையே*** - ஒழுக்கங்களே; ***மறை எனைத்து உள அவை*** -வேதங்கள் எத்தனை உள்ளன அத்தனை வேதங்களும்; ***இயம்பற்பாலன*** - சொல்லுந்தன்மையஆவன; ***அனை அல்லன திறம் அல்ல*** - அத்தன்மையவாக நீ கூறும் அறமல்லாதன அல்ல (அவன்செய்கை); ***அன்னது*** - அவ்வுண்மையை (பரதனது சீரிய ஒழுக்க உயர்வினை); ***என் வயின்*** - என்னிடத்துண்டாகிய; ***நேய நெஞ்சினால்*** - அன்பு மீக்கூர்ந்த மனத்தால்; ***நினைத்திலை*** - நீ அறிந்து நினைத்தாயில்லை...

*வேதங்களாற் சொல்லப்படும் ஒழுக்கம் அனைத்தும் பரதன் ஒழுக்கமே என்றானாம். பரதனதுசிறப்பின் உண்மைத்தன்மையை இலக்குவன் அறிந்துணராமைக்குக் காரணம் அவன் இராமன்பாற் கொண்டமிக்க அன்பேயன்றிப் பரதனிடம் எந்த மாறுபாடும் இல்லை என்ற இராமன் கூற்று இலக்குவனையும்குறைகாணாது சாந்தப்படுத்திய தாயிற்று. 'அனை' என்றது 'அ' என்ற கட்டின் பொருளது."அனைநிலைவகை" (தொல். பொருள். நச்.) என்றவிடத்து 'அனை' 'கூட்டுநிலை' என்றார்நச்சினார்க்கினியரும். 'செயற்கையே' என்ற 'ஏ' காரம் தேற்றப் பொருளில் வந்தது. 44*

***2419. ' "பெருமகன் என்வயின் பிறந்த காதலின்***
***வரும் என நினைகையும், மண்ணை என்வயின்***
***தரும் என நினைகையும்" தவிர, "தானையால்***
***பொரும்" என நினைகையும் புலமைப்பாலதோ?***

***"பெருமகன்*** - பரதன்; ***என்வயின் பிறந்த காதலின்*** - என்னிடத்து உண்டாகிய அன்பினால்; ***வரும் என நினைகையும்*** - (காடு நோக்கி) வருகின்றான் என்றுநினைப்பதும்; ***மண்ணை*** - கோசல அரசை; ***என்வயின்*** - என்னிடம்; ***தரும் எனநினைகையும்"*** - தருவான் என நினைப்பதும்; ***தவிர*** - நீங்க; "தானையால் - சேனைகளால்; ***பொரும்*** - போர் செய்வான்; ***என நினைகையும்"*** - என்றுநினைப்பதும்; ***புலமைப்பாலதோ? -*** அறிவின்பாற் பட்டது ஆகுமோ?... (அன்று என்றபடி)

*அன்பு முதிர்ந்தவழி அறிவு தொழிற்படாது ஆதலின், என் வயின் நேயம் மீதூர்ந்ததால்பரதனை அறிவால் அறிய இயலாதவன் ஆனாய் என்று இதற்கும் ஓர் அமைதியை இலக்குவனுக்கு முன்பேகூறியது காண்க. "காதல் மிக்குழிக்கற்றவும் கைகொடா" (சிந்தா- 1632.) என்பது ஈண்டுநினைக்கத் தருவது, பரதன் வருவதன் உண்மை இராமனால் தெளிவாக இலக்குவற்கு உணர்த்தப்பட்டது.*

*45 2420.* ***‘பொன்னொடும், பொரு கழல் பரதன் போந்தனன்,***
***நல் நெரும் பெரும் படை நல்கல் அன்றியே,***
***என்னொடும் பொரும் என இயம்பற்பாலதோ?-***
***மின்னொடும் பொருவுற விளங்கு வேலினாய்!***

***‘மின்னொடும் பொரு உற*** *- மின்னலோடும் ஒப்புக் கொள்ளுமாறு;* ***விளங்குவேலினாய்*** *- விளங்குகின்ற வேலினை உடைய இலக்குவனே!;* ***பொன்னோடும் பொருகழல்*** *- பொன்னானியன்று பொன்னோடு மோதுகின்ற கழலை அணிந்த;* ***பரதன் -; போந்தனன்*** *-வந்துள்ளான்; (எதற்கு)* ***நல் நெடும் பெரும் படை நல்கல் அன்றியே*** *- (என்னை அரசனாக்கி எனக்கு) நல்ல நெடிய பெரிய சேனையைத் தருதற்காக அல்லாமல்;* ***என்னொடும்பொரும்*** *- என்னோடு சண்டையிடுவான்;* ***என இயம்பற் பாலதோ?*** *- என்றுசொல்லலாமா?... (கூடாது என்றபடி)*

*கழல், பொன்னாற் செய்யப்படுதலின் ‘பொன்னொடும் பொருகழல்’ ஆயிற்று. ‘பொன்னொடும்’ என்பதைத் தனியே கொண்டு பொன்னொடும் பிடை நல்கல் எனக் கூட்டிப்பொருள் உரைப்பதும் உண்டு. பொன் தருதல்- அரசச் செல்வத்தைத் தருதல் என்று பொருள் படுதல்வழக்காற்றின் இன்மையும் இடையீடு இன்றிப் பொருகழல் என்பதனோடு அது மாறி முடிதலும் அமைதலின் அவ்வாறுரைக்க இயலாமையறிக. அரசர்கள்வசம் சேனையைத் தருதல் முறை ஆதலின் இராமனைஅரசன் எனக் கருதும் பரதன், அவன்பால் சேனைகளைத் தர வருகின்றானாதல் வேண்டும் என்றான்இராமன்.* ***46***

*2421.* ***‘சேண் உயர் தருமத்தின் தேவை செம்மையின்***
***ஆணியை, அன்னது நினைக்கல் ஆகுமோ?***
***பூண் இயல் மொய்ம்பினாய்! போந்தது ஈண்டு, எனைக்***
***காணிய; நீ இது பின்னும் காண்டியால்.’***

***‘பூண் இயல் மொய்ம்பினாய்!*** *- அணி அணிந்த தோள்களை உடையவனே!;* ***சேண்உயர் தருமத்தின் தேவை*** *- மிக உயர்ந்த தருமத்தின் தெய்வ வடிவமான;* ***செம்மையின்ஆணியை*** *- நல்லொழுக்கமாகிய செம்மையின் உரைகல்லாக விளங்குகின்ற உத்தம பரதனை;* ***அன்னது*** *- (நீ நினைத்தாற் போல) அப்படித் தவறுபட;* ***நினைக்கல் ஆகுமோ?*** *-கருதலாமா?;* ***ஈண்டுப் போந்தது*** *- (பரதன்) இங்கே வந்தது;* ***எனைக் காணிய*** *-என்னைக் காண்பதற்காக;* ***இது*** *- இக்கருத்தினை;* ***நீ -*** *இலக்குவ நீ!;* ***பின்னும்*** *- (அவன் நெருங்கிய) பிறகும்;* ***காண்டி*** *- (அவன்பால் நேரில்) பார்த்து அறிவாயாக.*

*அறக் கடவுள், செம்மையின் ஆணி பரதன். செம்மை - மனக் கோட்டம் இன்மையாம். நடுவுநிலைமை என்பதாம். எனவே, அரசின்பால் பற்று வைத்து ஒருபாற் கோடும் தன்மை அவனுக்கில்லை என்பதாம். ஆணி என்பதற்கு ‘அச்சாணி’ என உரை தந்து செம்மைத் தேரை நிலைநிறுத்தும் அச்சாணி என்று உரை கோடலும் ஏற்றுமேல்கொள்க. பூண் இயல் மொய்ம்பு - அணிகலனாகப் பொருந்திய வலிமை என்றும் ஆம். ‘ஆல்’ ஈற்றசை.* ***47***

*பரதன் சேனையைத் தவிர்த்துத் தம்பியோடு இராமனை நெருங்குதல்*

***2422. என்றனன், இளவலை நோக்கி, ஏந்தலும்***
***நின்றனன்; பரதனும், நிமிர்ந்த சேனையை,***
***'பின் தருக' என்று , தன் பிரிவு இல் காதலின்,***
***தன் துணைத் தம்பியும் தானும் முந்தினான்.***

*__ஏந்தலும்-__ இராமனும்; __இளவலை நோக்கி__ - இலக்குவனைப் பார்த்து; __என்றனன்__ - என்று (இவ்வாறு) சொல்லி; __நின்றனன் - ; பரதனும் -; நிமிர்ந்த சேனையை__ - மிகுந்த (தன்) படைகளை; __'பின் தருக' என்று__ - பிறகு அழைத்து வருக என்று (சுமந்திரன்பால்) சொல்லி; __தன் பிரிவு இல் காதலின் தன் துணைத்தம்பியும்__ -தன்னைப் பிரிதல் இல்லாத அன்புடைய தன் துணைவனான தம்பியாகிய சத்துருக்கனனும்; __தானும்__ - தானுமாக; __முந்தினான்__ - முற்பட்டு (இராமன் பால்) வந்தான்.*

*உடன் வந்தான் அமைச்சன் சுமந்திரன் ஆதலின் படைப் பொறுப்பை அவன்பால் சார்த்தினான்எனலாம். 'தம்பியும் தானும் முந்தினான்' என்பது தலைமைப்பொருட்கு வினைகொடுப்பவே தலைமையில்பொருளும் முடிந்தன வாவதோர் முறைபற்றி வந்தது. இனி பால் விரவாது எண்ணிச் சிறப்பினால் ஒருமை முடிபு பெற்றது எனலும் ஆம். தம்பியாதல் அன்றி எப்பொழுதும் தன்னைப் பிரியாது தனக்குத் துணையாக இருத்தல் பற்றிச் சத்துருக்கனனைத் 'தன் துணைத் தம்பி' என்று பரதன்கூறினான்.*
*48*

*பரதன் நிரை நோக்கிய இராமன் இலக்குவனிடம் கூறுதல்*

***2423. தொழுது உயர் கையினன்; துவண்ட மேனியன்***
***அழுது அழி கண்ணினன்; 'அவலம் ஈது' என***
***எழுதிய படிவம் ஒத்து எய்துவான் தனை***
***முழுது உணர் சிந்தையான், முடிய நோக்கினான்.***

*__முழுது உணர் சிந்தையான்__ - எல்லாவற்றையும் எப்பொழுதும் அறிந்தவாறே அறியும்திருவுள்ளமுடைய இராமன்; __தொழுது உயர்கையினன்__ - தொழுதபடி உயர்த்திய (உச்சிமேல்கூப்பிய) கையை உடைய; __துவண்ட மேனியன்__ - (துன்பத்தால் துடித்து) வாடிய உடம்பை உடைய; __அழுது அழி கண்ணினன்__ - (இடையறாது) புலம்புதலால் (நீர் வழிந்து, பொலிவழிந்த கண்களைஉடைய; __'அவலம் ஈது' என எழுதிய படிவம் ஒத்து__ - அழுகை என்பது இதுதான் என்று எழுதிய வடிவம் போல; __எய்துவான் தனை__ - வருகின்ற பரதனை; __முடிய நோக்கினான்__ - முடிமுதல்அடிவரையிலும் நன்றாகப் பார்த்தான்.*

*'அவலம்' என்ற அழுகையென்ற மெய்ப்பாட்டுக்கு ஒரு படம் வரைந்து அது பரதனாகும் என்பதாம்.அம்மெய்ப்பாட்டின் தன்மை - துவண்ட மேனி, அழுதழி கண் முதலவாம். 'துன்பமொரு முடிவில்லைதிசைநோக்கித் தொழுகின்றான்' என (2332.) முன்னர்க் கூறியதனை ஈண்டுக்கருதுக. 49*

***2424. கார்ப் பொரு மேனி அக் கண்ணன் காட்டினான்,***
***'ஆர்ப்பு உறு வரி சிலை இளைய ஐய! நீ,***

***தேர்ப் பெருந் தானையால் பரதன் சீறிய***
***போர்ப் பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கு' எனா.***

***கார்ப் பொரு மேனி அக் கண்ணன்*** - கருமேகத்தை ஒத்த திரு மேனியை உடைய அவ்இராமன்; (இலக்குவனை நோக்கி) ***'ஆர்ப்பு உறு*** - ஆரவாரம் செய்கின்ற; ***வரி சிலை*** - கட்டமைந்த வில்லை ஏந்திய; ***இளைய ஐய!*** - தம்பியாகிய இலக்குவனே ***!; நீ-; பரதன்-; தேர்ப் பெருந் தானையால் சீறிய*** - தேர்களை உடைய பெரிய சேனையோடு சீற்றம் கொண்டு எடுத்த; ***பெரும்போர்க் கோலத்தை*** - பெரிய போர்க்கோலத்தை; ***பொருந்தநோக்கு*** - நன்கு பார்ப்பாயாக;' ***எனா*** - என்று; ***காட்டினான்*** - காண்பித்தான்.

*இத்தகைய துன்பத்தோடு வந்துள்ளவனை இவ்வாறு நினைத்தானே என்பது தோன்றக் காட்டினான்என்க. சொற்போக்கு இருப்பினும் இலக்குவனை இராமன் பரிகசித்தான் எனல் இங்குக் கவியின்கருத்துக்கு முரணாகும். முன்னர் 'என்வயின் நேயநெஞ்சினால் அன்னது நினைத்திலை'' என்று (2418) இராமன் கூறியதாகக் கவிஞர் கூறுதலின், இலக்குவனுடைய ஆர்ப்பரிப்பும், ஐயமும், சீற்றமும்பரதன் இயல்பினை அறியாதாயினும் இராமன்பால் அன்பிற் சிறிதும் குறைந்ததில்லை என்பதுபெருதலின்.*
***50***

*இலக்குவன் நெஞ்சழிந்து நிற்றல்*

***2425. எல் ஒடுங்கிய முகத்து இளவல் நின்றனன் -***
***மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும்***
***சொல்லொடும் சினத்தொடும் உணர்வு சோர்தர,***
***வில்லொடும் கண்ண நீர் நிலத்து வீழவே.***

*(இவ்வாறு இராமன் பரதனைக் காட்டிக் கூறிய அளவில்)* ***இளவல்*** - இலக்குவன்; ***மல் ஒடுங்கிய புயத்தவனை*** - மற்றொழில் (இவன் தோளின் பெருமையால் உலகில்)இல்லாதொழிந்த ஆற்றல் மிக்க தோள் உடைய பரதனை; ***வைது எழும்*** - நிந்தனை செய்துகூறிய; ***சொல்லொடும்*** - சொற்களோடும்; ***சினத்தோடும்*** - அவற்றுக்குக் காரணமாகத் தன் மனத்துண்டாகிய கோபத்தோடும்; ***உணர்வு*** - தன் உணர்ச்சிகளும்; ***சோர்தர*** - தளர்ந்தொழிய; ***வில்லொடும்*** - (தன் கையிற்பிடித்த)வில்லோடும்; ***கண்ண நீர்*** - (சிறந்த பரதனைத் தவறாகக் கருதினோமே என்றகழிவிரக்கத்தால் ஏற்படும்) கண்ணீரும்; ***நிலத்து வீழ*** - பூமியில் விழவும்; ***எல்ஒடுங்கிய முகத்து*** - ஒளி குன்றிப் பொலிவழிந்த முகத்துடனே; ***நின்றனன்*** - நின்றான்.

*மல் ஒடுங்கிய - உலகத்து மல்தொழில் வலிமை எல்லாம் தன்பால் வந்து தங்கிவிட்டது எனினும் அமையும். இனி விரதவொழுக்கத்தால் வலிமை குன்றிய தோள் எனல் ஈண்டுப் பொருந்தாமையும், அரசர்க்கு அங்ஙனம் கூறுவது மரபாகாமையும் உணர்க. பரதன் திறத்துத் தான் நினைந்தன அனைத்தும் பிழைபட்டமையானும், உத்தமனை அதமனாகக் கருதிய அதனால் எற்பட்ட மனச்சோர்வும் இலக்குவனை 'எல் ஒடுங்கிய முகம்' உடையவனாக ஆக்கியது.*
***51***

*பரதன் இராமனின் திருவடி வணங்குதல்*

*2426.* **கோது அறத் தவம் செய்து குறிப்பின் எய்திய**
**நாதனைப் பிரிந்தனள், நலத்தின் நீங்கினாள்,**
**வேதனைத் திருமகள் மெலிகின்றாள், விடு**
**தூது எனப் பரதனும் தொழுது தோன்றினான்.**

**கோது அறத் தவம் செய்து** - *குற்றமில்லாமல் நல்ல தவத்தைச் செய்து;* **குறிப்பின் எய்திய** - *தன் மனக்கருத்தின் வண்ணம் பெற்ற;* **நாதனை** - *தன்நாயகனை;* **பிரிந்தனள்** - *பிரிந்து;* **நலத்தின் நீங்கினான்** - *எல்லாநன்மைகளிலிருந்தும் நீங்கிய;* **வேதனை மெலிகின்றாள்** - *துன்பத்தால் மெலிகின்ற;* **திருமகள்** - *இராச்சிய லட்சுமி;* **விடு தூது என** - *(இராமநாயகன் பால்) அனுப்பிய தூது போல;* **பரதனும்-; தொழுது** - *வணங்கி;* **தோன்றினான்-.**

*பன்னெடுங்காலம் செய்த நற்றவத்தால் இராமனை அரசனாகப் பெறும் பாக்கியம் கோசல அரசுக்குக் கிடைத்தது. அது உடனே இழக்கப்பெற்றபடியால் இவ்வாறு கூறினார். மீண்டும் கோசல அரசை இராமன் ஏற்க வேண்டுதற்கு வந்தவன் பரதன் ஆதலின் 'விடு தூது' எனப் பெற்றான். தற்குறிப்பேற்றவணி.* ***52***

*2427.* ***'அறம்தனை நினைந்திலை; அருளை நீத்தனை;***
***துறந்தனை முறைமையை' என்னும் சொல்லினான்,***
***மறந்தனன், மலர்அடி வந்து வீந்தனன் -***
***இறந்தனன் தாதையை எதிர்கண்டென்னவே.***

**வந்து** - *(பரதன் இராமன் அருகில்) வந்து;* **இறந்தனன் தாதையை** - *இறந்து போன தந்தையாய தயரதனை;* **எதிர்** - *தன் எதிரே;* **கண்டு என்னவே** - *மீண்டும்கண்டாற்போல; (இராமனைக் கண்டு)* **'அறம் தனை நினைந்திலை** - *அரச ஏற்றல் அறம்தான்என்பதை நினையவில்லை;* **அருளை நீத்தனை** - *இரக்கம் அற்றவனாக ஆயினாய்;* **முறைமையைத் துறந்தனை"** - *மூத்தவன் அரசாளுதல் என்கின்ற முறைமையயும் கைவிட்டாய்;'* **என்னும் சொல்லினான்** -*என்கின்ற சொற்களைக் கூறியவனாய்;* **மறந்தனன்** - *தன் உணர்வு கெட்டு;* **மலர் அடி** - *(இராமனது) மலர் போன்ற பாதங்களில்;* **வீழ்ந்தனன் -** *விழுந்தான்.*

*அறம் - அரசாளுதல் அரச தர்மம் என்பது. பரதன்பால் காட்டவேண்டிய இரக்கம் - தான் அரசாளாது பரதன் அரசேற்க விரும்பமாட்டான் என்று உணராது அவன்பால் அரசைத் தள்ளிவிட்டு வந்தது இரக்கமின்மையாம். மூத்தவளாகிய தான் அரசாளவேண்டியது முறைமை யாதலின், முறைமையைத் துறந்தனை என்றான். இவ்வளவும் பரதனது ஆற்றாமையைப் புலப்படுத்துவனவாகக் கொள்க. 'ஏ' ஈற்றசை.* ***53***

*இராமன் மனம் கலங்கிப் பரதனைத் தழுவுதல்*

*2428.* ***'உண்டுகொல் உயிர்?' என ஒடுங்கினான் உருக்***
***கண்டனன்; நின்றனன் - கண்ணன் கண்எனும்***
***புண்டரீகம் பொழி புனல், அவன் சடா***
***மண்டலம் நிறைந்து போய் வழிந்து சோரவே.***

***கண்ணன்*** - *அருட்கண்ணுடையவனாகிய இராமன்;* ***'உண்டு கொல் உயிர்' என ஒடுங்கினான்*** - *உயிர் உண்டோ இல்லையோ என்று காண்பார் ஐயுறுமாறு மெலிந்து நின்றபரதனது;* ***உரு*** - *வடிவத்தை;* ***கண்டனன்*** - *பார்த்து;* ***கண் எனும் புண்டரீகம்*** - *(தன்) கண் என்கின்ற தாமரைகள்;* ***பொழி புனல்*** - *இரக்கத்தாற் சொரிகின்றகண்ணீர்;* ***அவன் சடாமண்டலம் நிறைந்து போய்*** - *அப்பரதனது சடைமுடியிற் போய்நிரம்பி மேற்சென்று;* ***வழிந்து சோர*** - *பெருகி வழிந்தொழுக;* ***நின்றனன்*** *-நின்றான்.*

*பரதன் உருவ மெலிவு இராமனது உள்ளத்தை உருக்கியது; கண்ணீர் பெருகியது; அதனால் காலில் விழுந்த பரதனது சடைமுடியைக் கண்ணீர் நிறைத்தது. 'கொல்' - ஐயம். மண்டலம் - வட்டம், சடாமண்டலம் - வட்டமாகச் சடையைச் சுழித்துக் கட்டுதலாம்.* ***54***

***2429. அயாவுயிர்த்து, அழு கணீர் அருவி மார்பிடை,***
***உயாவுற, திருஉளம் உருக, புல்லினான் -***
***நியாயம் அத்தனைக்கும் ஒர் நிலயம் ஆயினான் -***
***தயா முதல் அறத்தினைத் தழீஇயது என்னவே.***

***நியாயம் அத்தனைக்கும் ஒர் நிலயம் ஆயினான்*** - *எல்லா நேர்மைகளுக்கும் ஒப்பற்றஇருப்பிடமாக உள்ள இராமன்;* ***தயாமுதல்*** - *அருள் தெய்வம்;* ***அறத்தினைத் தழீஇயது என்ன*** - *தருமதேவதையைத் தழுவிக்கொண்டாற் போல;* ***அயா உயிர்த்து*** - *பெருமூச்சு விட்டு;* ***அழு கண் நீர்*** - *அழுகின்ற கண்களிலிருந்து வரும் நீர்;* ***மார்பிடை*** - *மார்பிடத்தில்;* ***அருவிஉயாவுற*** - *அருவிபோலத் தழுவிப்பெருக;* ***திரு உளம் உருக*** - *உள்ளே அழகிய மனம்கரைந்துருக;* ***புல்லினான்*** - *(பரதனைத்) தழுவினான்.*

*கருணைக் கடவுள் - இராமன், அறக்கடவுள் - பரதன். இராமன் பரதனைத் தழுவியது கருணை அறத்தைத் தழுவியது போலாகும். அறம் செயற்பாடு - கருணை - பயன்பாடு. காரணமின்றிப் பிறவுயிர் படும் துன்பம் கண்டு பெருகி வரும் இரக்கம் தயாவாகும். இறைவனைத் 'தயாமூல தன்மம்' என்பர் அப்பர் திருநா. 6-20: 6) இங்கே தயாமுதல் எனப்பெற்றது. புறத்தேயும் அகத்தேயும் உருகியது கண்ணீராலும், திருவுளம் உருக அயாவுயிர்த்ததாலும் புலனாயிற்று. 'ஏ' காரம் - ஈற்றசை.* ***55***

*இராமன் தந்தை இறந்தமை கேட்டு அறிந்து கலங்குதல்*

***2430. புல்லினன் நின்று, அவன் புனைந்த வேடத்தைப்***
***பல்முறை நோக்கினான்; பலவும் உன்னினான்;***
***'அல்லலின் அழுங்கினை; ஐய! ஆளுடை***
***மல் உயர் தோளினான் வலியனோ?' என்றான்.***

***புல்லினன் நின்று*** - *தழுவி நின்று;* ***அவன் புனைந்த வேடத்தை*** - *அப்பரதன்அணிந்திருந்த மரவுரியாகிய தவவேடத்தை;* ***பல் முறை*** - *பலமுறை;* ***நோக்கினான்*** - *உற்றுப் பார்த்து;* ***பலவும் உன்னினான்*** - *பலபடியாகக் கருதி;* ***'ஐய!*** - *பரதனே;* ***அல்லலின் அழுங்கினை*** - *துன்பத்தால் மிகவும் சோர்ந்துள்ளாய்;* ***ஆளுடை மல்உயர் தோளினான்*** - *ஆளுதலுடைய மற்போரிற் சிறந்த தோள் உடையவனாகிய தயரதன்;* ***வலியனோ?*** - *திடமாக இருக்கின்றானா?;* ***என்றான்*** - *என்று வினாவினான்.*

*பன் முறை நோக்கல், பலவும் உன்னுதல் என்பது பரதனது வேடம், துக்கம், வந்துள்ள நேரம் இவைபற்றி இராமனுக்கு எழுந்த சிந்தனைகளாம். 'வலியனோ' என்பது 'நலமாக உள்ளானா' என்ற விசாரிப்பு. இப்பொருளில் இது வருதலை, ''வலிய என்றவர் கூற மகிழ்ந்தனன்'' (2104) என்பது கொண்டு அறிக.*
***56***

***2431. அரியவன் உரைசெய, பரதன், 'ஐய! நின்***
***பிரிவு எனும் பிணியினால், என்னைப் பெற்ற அக்***
***கரியவள் வரம் எனும் காலனால், தனக்கு***
***உரிய மெய்ந் நிறுவிப் போய், உம்பரான்' என்றான்.***

***அரியவன்** - அறிதற் கரியவனாய இராமன்; **உரை செய** - வினாவ; **பரதன்-; 'ஐய!** - இராமனே!; **நின் பிரிவு என்னும் பிணியினால்** - நின்னைப் பிரிந்த பிரிவு என்னும் நோயினாலும்; **என்னைப் பெற்ற அக் கரியவள்** -என்னை ஈன்றெடுத்த அந்தக் கொடியவளாய கைகேயியின்; **வரம் எனும் காலனால்** - வரம்என்கின்ற யமனாலும்; **தனக்கு உரிய மெய் நிறுவிப்போய்** - தனக்குரிய சத்தியத்தைஉலகில் நிலைநிறுத்திச் சென்று; **உம்பரான்''** - (இப்போது) தேவர் உலகத்தில் உள்ளான்; **என்றான் -***

*இறப்பிற்குக் காரணம் வேண்டும்; அது இராமனைப் பிரிந்த பிரிவு என்னும் நோய் ஆயிற்று. யமன் - கைகேயி பெற்ற வரம். தயரதன் வாய்மையைக் காப்பாற்றி உயிர் துறந்தான் என்பதை இங்ஙனம் கூறினான் பரதன்.* ***57***

***2432. 'விண்ணிடை அடைந்தனன்' என்ற வெய்ய சொல்,***
***புண்ணிடை அயில் எனச் செவி புகாமுனம்,***
***கண்ணொடு மனம், கழல் கறங்கு போல ஆய்,***
***மண்ணிடை விழுந்தனன் - வானின் உம்பரான்.***

***வானின் உம்பரான்** - விண்ணுலகத்துக்கும் மேல் உள்ள வீட்டிற்கு உரியவனாகியஇராமன்; **'விண்ணிடை அடைந்தனன்' என்ற வெய்ய சொல்** - தயரதன் விண்ணுலகு அடைந்தான்என்ற கொடிய வார்த்தை; **புண்ணிடை அயில் எனச் செவி புகா முனம்** - புண்ணில் வேல் சொருகினாற் போலத் தன் காதில் நுழையும் முன்பே; **கண்ணொடு மனம்** - கண்ணும்மனமும்; **கழல் கறங்கு போல ஆய்** - கழல்கிற காற்றாடி போலச் சுழன்று; **மன்னிடைவீழ்ந்தனன்** - பூமியில் விழுந்தான்.*

*பரதன் கொண்டிருந்த தவ வேடத்தாலும், அவனது வாடிய மேனி வருதத்தாலும் புண்ணுற்ற இராமன் மனத்தில் தயரதன் இறந்த செய்தி வேல் இட்டாற் போன்று ஆயிற்று. வானின் உம்பரான் ஆயினும் தான் கொண்ட அவதார வேடத்திற் கேற்பத் துன்பத்திற் கலங்கினன் என்க.* ***58***

***2433. இரு நிலம் சேர்ந்தனன்; இறை உயிர்த்திலன்;***
***'உரும் இனை அரவு' என, உணர்வு நீங்கினான்;***
***அருமையின் உயிர் வர, அயாவுயிர்த்து, அகம்***
***பொருமினன்; பல் முறைப் புலம்பினான் அரோ;***

*(இராமன்)* ***இரு நிலம் சேர்ந்தனன்*** *- மண்ணில் விழுந்து;* ***இறை*** *- சிறிதளவும்;* ***உயிர்த்திலன்*** *- மூச்சுவிட்டானில்லை;* ***'உரும் இனை அரவு' என*** *-இடியால் வருந்தும் பாம்பு போல;* ***உணர்வு நீங்கினான்*** *- உணர்ச்சி நீங்கப் பெற்றான்;* ***அருமையின்*** *- மிகச் சிரமமாக;* ***உயிர்*** *- உயிர்ப்பு உளதாக;* ***அயாவுயிர்த்து*** *- பெருமூச்சுவிட்டு;* ***அகம் பொருமினன்*** *- உள்ளே கலங்கி;* ***பல் முறை புலம்பினான்*** *- பலபடியாகச் சொல்லிப் புலம்பலானான். இடியேறுண்ட நாகம் போல வருந்தினான் என்றல் வழக்கு. அடியோடு உயிர்ப்பற்ற இராமன் சிறிதளவு அருமையாக உயிர்ப்பு வந்து, ஆற்றாமை நீங்கப் பெருமூச்சு விட்டுப் பின்னர் உள்கலங்கிப் புலம்பினானாம். 'அரோ' ஈற்றசை.*
***59***

*இராமன் தயரதனை நினைத்துப் புலம்புதல்*

*கொச்சகக் கலி*

***2434. 'நந்தா விளக்கு அனைய***
***நாயகனே! நானிலத்தோர்***
***தந்தாய்! தனி அறத்தின்***
***தாயே! தயா நிலையே!***
***எந்தாய்! இகல் வேந்தர்***
***ஏறே! இறந்தனையே!***
***அந்தோ! இனி, வாய்மைக்கு***
***ஆள் உளரே மற்று?' என்றான்.***

***'நந்தா விளக்கு அனைய நாயகனே!'*** *- அணையாத விளக்கைப் போல (இரவும் பகலும்புகழோடு விளங்கிய) தலைவனே!;* ***நானிலத்தோர்*** *- இம் மண்ணுலகில் உள்ளார்க்கு;* ***தந்தாய்!*** *- தந்தையொப்பவனே!;* ***தனி அறத்தின்*** *- ஒப்பற்ற அறம் என்னும்குழந்தைக்கு;* ***தாயே!*** *- (பெற்று வளர்த்த) தாயே!;* ***தயா நிலையே!*** *- பேரருளுக்குஇருப்பிடம் ஆனவனே!; எந்தாய் - என் தந்தையே!;* ***இகல் வேந்தர் ஏறே!*** *- பகையரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கம் போன்றவனே!;* ***இறந்தனையே*** *- இறந்து போய் விட்டாயே;* ***இனி வாய்மைக்கு மற்று யார் உளர்?*** *- இனிமேல் சத்தியத்தைக் காப்பதற்குவேறு யார் இருக்கின்றார்கள்;* ***அந்தோ'*** *- ஐயோ;'* ***என்றான்-.***

*நந்தா விளக்கு - தூண்டா விளக்கு. பிறர் தூண்ட வேண்டாது எரியும் விளக்குப் போல, தன்னால் தானே புகழுடையனாய் விளங்கியவன் தயரதன். நால் நிலம் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் - உலகம் இப்பகுதிக்குள் அடங்குதலின் நானிலம் எனவே உலகம் என்றாம். ஏகாரங்கள் இரக்கப் பொருளில் வந்துள்ளன.*
***60***

***2435. 'சொல் பெற்ற நோன்பின்***
***துறையோன் அருள் வேண்டி,***
***நல் பெற்ற வேள்வி நவை***
***நீங்க நீ இயற்றி,***
***எற் பெற்று, நீ பெற்றது***
***இன் உயிர் போய் நீங்கலோ?-***

*கொல் பெற்ற வெற்றிக்*
*கொலை பெற்ற கூர் வேலோய்!*

**'கொன் பெற்ற** - *அச்சம் தருதலை உடைய;* **வெற்றிக் கொலை பெற்ற** -*தமக்கு வெற்றி உண்டாகும் கொலைத் தொழிலை உடைய;* **கூர் வேலோய்** - *கூரிய வேற்படையையுடைய தயரதனே;* **சொல்பெற்ற** - *புகழ் உடைய;* **நோன்பின் துறையோன்** -*தவத்துறையில் சிறந்த கலைக்கோட்டு முனிவனது;* **அருள் வேண்டி** - *கருணையை வேண்டிப்பெற்று;* **நல் பெற்ற வேள்வி** - *நல்ல புத்திர காமேஷ்டியோடு கூடிய பரிமேத வேள்வியை;* **நவை நீங்க -** *பிள்ளை இல்லாக் குறை தீர* **; நீ இயற்றி** - *நீ செய்து;* **என்பெற்று** - *என்னை மகனாகப் பெற்று;* **நீ பெற்றது** - *நீ அடைந்த பயன்தான்;* **இன்உயிர் போய் நீங்கலோ?** - *இனிய உயிர் போய் இறக்கப் பெறுதல்தானோ?*

*சொல் - புகழ். கலைக்கோட்டு முனிவரை அரிதின் கொண்டுவந்து வேள்வி இயற்றி இராமனைப் பெற்றானாதலின் இங்ஙனம் கூறப்பெற்றான். மக்களைப் பெற்று மகிழ எண்ணியவன் அம்மக்களைப் பிரிந்த துன்பத்தாலே உயிர் போகப் பெறுதலால் இரக்கம் பெரிதாயிற்று. தயரதன் இறப்புக்குத் தானே காரணமானோம் என்று இராமன் இரங்கினன். கொன் - அச்சம், பெருமை எனப் பொருள்படும். உரிச்சொல் - இனி, கொல் பெற்ற எனில் கொலையாம், பின்னரும் கொலைபெற்ற என வருதலின் அங்ஙனம் பிரித்தல் ஏலாதாம். வேள்வியால் மக்கள் நால்வர் தயரதனுக்கு உளர் ஆயினும் தயரதன் இறப்புக்கு இராமன் பிரிவு ஒன்றே காரணம் ஆதலின் 'எனப்பெற்று' என்று கூறியதாகக் கருதுக.* ***61***

***2436. 'மன் உயிர்க்கு நல்கு***
***உரிமை மண் பாரம் நான் சுமக்க,***
***பொன் உயிர்க்கும் தாரோய்!-***
***பொறை உயிர்த்த ஆறு இதுவோ?***
***உன் உயிர்க்குக் கூற்றாய்***
***உலகு ஆள உற்றேனோ?-***
***மின் உயிர்க்கும் தீ வாய்***
***வெயில் உயிர்க்கும் வெள் வேலோய்!***

**'பொன் உயிர்க்கும் தாரோய்!** - *பொன் மயமான தாதுக்களை உதிர்க்கும் பூமாலையை அணிந்தவனே!;* **மின் உயிர்க்கும்** - *ஒளி வீசுகிற;* **தீ வாய்** -*நெருப்பு சிந்தும் வாயினை உடைய;* **வெயில் விரிக்கும்** - *சூரியன் ஒளி சிந்துகிற;* **வெள்** - *வெண்மையான;* **வேலோய்!** - *வேலை உடைய தயரதனே;* **மன் உயிர்க்கு** - *நிலை பெற்ற எல்லா உயிர்களுக்கும்;* **நல்கு உரிமை** - *அருள் செய்கிற உரிமையுடைய;* **மண் பாரம்** - *(உன்) அரசாட்சி என்கிற சுமையை;* **நான் சுமக்க** - *நான்ஏற்றுக்கொள்ள;* **பொறை** - *அப்பூமி பாரம்; (நீ நீங்கி)* **உயிர்த்த ஆறு இதுவோ?** - *இளைப்பாறிய விதம் இது தானோ?;* **உன் உயிர்க்குக் கூற்றாய்** - *உன் உயிர்க்குயமனாக;* **உலகு ஆள உற்றேனோ** - *உலகத்தை ஆளப் பிறந்தேனோ? "அரும்பொறை இனிச் சிறிது ஆற்ற ஆற்றலேன்" எனவும், "வியல் இடப் பெரும் பரம் விசித்த தொய்யல் மாநிலச் சுமை உறு சிறை துறந்து" எனவும், (1328, 1374) முன்னர் உரைத்தலின் "பொறை உயிர்த்த ஆறு இதுவோ" என்று இங்கு இராமன் புலம்பியதாகக் கூறினார். இராமனை அரசனாக அறிவித்த பிறகே தயரதன் இறப்பு முதலிய இவ்வளவும் ஆயிற்றாதலின், 'உன் உயிர்க்குக் கூற்றாய் உலகு ஆள*

*உள்ளேனோ' என்று இராமன் புலம்பினன். இராமனுக்கு வந்த துயரங்களுக்குப் பரதன், தானே காரணம் என்று வருந்தியது போல, தயரதன் இறப்புக்குத் தானே காரணம் என்று இராமன் வருந்தினனாதல் கண்கூடு. ''ஓ'' இரக்கக் குறிப்பு.* ***62***

***2437. 'எம் பரத்தது ஆக்கி***
***அரசு உரிமை, இந்தியங்கள்***
***வெம் பவத்தின் வீய,***
***தவம் இழைத்தவாறு ஈதோ?-***
***சம்பரப் பேர்த் தானவனைத் தள்ளி,***
***சதமகற்கு, அன்று,***
***அம்பரத்தின் நீங்கா***
***அரசு அளித்த ஆழியாய்.!***

***'சம்பரப் பேர்த் தானவனை*** *- சம்பரன் என்னும் பெயரை உடைய அசுரனை;* ***தள்ளி*** *- அழித்து;* ***சதமகற்கு*** *- இந்திரனுக்கு;* ***அன்று*** *- முன்பு;* ***அம்பரத்தின்*** *- விண்ணுலகத்தின்கண்;* ***நீங்கா அரசு அளித்த*** *- நீங்காத அரசாட்சியைக் கொடுத்த;* ***ஆழியாய்!*** *- சக்கர வர்த்தியே!;* ***அரசு உரிமை*** *- உனது அரசாளும் உரிமையை;* ***எம் பரத்தது ஆக்கி*** *- எம் வசமாகச் செய்துவிட்டு;* ***இந்தியங்கள்*** *- ஐம்பொறிகளும்;* ***வெம்பவத்தின்*** *- கொடிய பிறவி கெடுமாறு போல;* ***வீய*** *- கெட;* ***தவம் இழைத்தவாறு*** *- தவம் செய்தவாறு;* ***ஈதோ*** *- இவ்வாறுஇறப்பது தானோ?*

*இந்திரியம் - இந்தியம். மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றைப் புலன்வழி செல்லாது அடக்கி நோன்பு செய்தல். தவத்தால் பிறவி கெடுமாறு; தவம் செய்யும்போதே பொறிகள் வசமாகின்றன என்பதாம். ''எஞ்சல் இல் மனம் எனும் இழுதை ஏறிய, அஞ்சு தேர் வெல்லும் ஈது அருமை ஆவதே'' என (1331) தயரதன் முன்னர்க் கூறியதை ஈண்டுக் கருதுக. ''சம்பரனைக் குலத்தோடும் தொலைத்து, நீ கொண்டு, அன்று அளித்த அரசு அன்றோ, புரந்தரன் இன்று ஆள்கின்றது'' (322) என்பதனுள் சம்பரனை அழித்து, இந்திரனுக்குத் தயரதன் அரசு அளித்த கதை வந்துள்ளது அறிக. சதமகன் - நூறு யாகங்களைச் செய்தவன். நூறு அசுவமேத யாகங்களைச் செய்தவன் இந்திரனாவான் ஆதலின் இந்திரனுக்குச் சதமகன் என்பது ஒரு பெயர். 'ஓ' இரக்கக் குறிப்பு. காசிபர் மனைவியருள் தநுவின் மகன் - தானவன்.*
***63***

***2438. 'வேண்டும் திறந்தாரும் வேண்டா அரசாட்சி***
***பூண்டு, இவ் உலருக்கு இடர் கொடுத்த புல்லலேன்.***
***மாண்டு முடிவது அல்லால், மாயா உடம்பு இது கொண்டு***
***ஆண்டு வருவது, இனி, யார் முகத்தே நோக்கவோ?***

***'வேண்டும் திறத்தாரும்*** *- எல்லாவற்றையும் விரும்பும் தன்மை உடையவர்களும்;* ***வேண்டா*** *- (துன்பம் தருவது என்று கருதி) விரும்பாத;* ***அரசாட்சி*** *- அரசு ஆளும்தொழிலை;* ***பூண்டு*** *- (நீ அளித்த அளவிலேயே ஆராயாது) மேற்கொண்டு;* ***இவ் உலகுக்கு*** *- இந்த உலகத்துக்கு;* ***இடர் கொடுத்த*** *- துன்பத்தைக் கொடுத்த;* ***புல்லனேன்*** *- அற்பனாகிய யான்; (இனிச் செய்யத் தகுவது)* ***மாண்டு முடிவது அல்லால்*** *- இறந்தொழிவது அல்லாமல்;* ***மாயா உடம்பு இது கொண்டு*** *- இப்போதும் அழியாத*

*உடம்பினைக் கொண்டு;* **ஆண்டு வருவது** *- அரசாட்சி செய்ய எண்ணுவது;* **இனி, யார் முகத்தே நோக்கவோ** *-இனிமேல் யார் முகத்தைப் பார்ப்பதற்காகவோ?*

*யார் முகத்தையும் பார்க்க இயலாது என்றபடி. தன்னைத்தானே புல்லன் என்று இராமன் வருந்திக் கூறினான். எல்லால் விரும்புல் தன்மை உடையவரும் அரசாளுவதை விரும்பாமைக்கு அரசு துன்பம் தரும் என்பதே காரணமாதலை "மழை வளம் கரப்பின் வான் பேரச்சம், பிழையுயிர் எய்தின் பெரும் பேரச்சம், குடிபுரவுண்டும் கொடுங்கோல் அஞ்சி, மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல், துன்பம் அல்லது தொழுதகவு இல்" என்னும் (சிவப். வஞ்சி. 25:100 - 104) சிலப்பதிகார அடிகளான் அறிக. இராமன் அரசாட்சியை ஏற்க இசையாமல் இருந்தால் தொடர்ந்த துன்பங்கள் உலகுக்கு வந்திராது என்று கருதி "உலகுக்கு இடர் கொடுத்த" என்றான்.* ***64***

***2439. 'தேன் அடைந்த சோலைத்***
***திரு நாடு கைவிட்டுக்***
***கான் அடைந்தேன் என்னத்***
***தரியாது, காவல! நீ***
***வான் அடைந்தாய்; இன்னம் இருந்தேன்***
***நான், வாழ்வு உகந்தே!-***
***ஊன் அடைந்த தெவ்வர்***
***உயிர் அடைந்த ஒள் வேலோய்!***

***'காவல!*** *- அரசனே!;* ***ஊன் அடைந்த தெவ்வர்*** *- உடற் கொழுப்பு மிக்க பகைவர்களது;* ***உயிர் அடைந்த*** *- உயிர்கள் தாமே வந்து புகலடைந்த;* ***ஒள் வேலோய்!*** *- ஒளி படைத்த வேலை உடையவனே!; (யான்)* ***தேன் அடைந்த சோலைத் திருநாடு*** *- தேன்பொருந்திய சோலைகள் மிகுந்த கோசல நாட்டை;* ***கைவிட்டு*** *- நீங்கி;* ***கான்அடைந்தேன் என்ன*** *- வனம் புகுந்தேன் என்று சொல்லக் கேட்டு;* ***தரியாது*** *- ஆற்றாமல்;* ***நீ வான் அடைந்தாய்*** *- நீ இறந்த விண்ணுலகம் புகுந்தாய்;* ***நான்இன்னம் வாழ்வு உகந்து இருந்தேன்*** *- நானோ இன்னமும் (உயிர்விடாது) வாழ ஆசைப்பட்டு இருக்கின்றேன்.*

*பகைவரிடத்திருந்தால் அவ்வப்போது நீங்கி ஓட வேண்டியிருத்தலின்; தயரதன் கை வேலை அடைந்தால் என்றும் நீங்காது நிலையாகப் பாதுகாப்பாக இருக்கலாம் என்று கருதித் தெவ்வர் உயிர் அடைந்தது என்றது ஒரு நயம். பிரிந்த அளவிலே தாங்காது உயிர் விட்ட உனக்கும். நீ இறந்தும் உயிர் விடாத எனக்கும் அன்பில் உள்ள ஏற்றத்தாழ்வு எத்தகையது! அன்பிற் சிறந்த நீ அன்பு சிறிதும் அற்ற என்பால் அன்பு வைத்தாயே என்பதுபோலச் சொல்லி இரங்கினான் இராமன் என்க. 'ஏ' தேற்றம்.* ***65***

***2440. 'வண்மைஇயும், மானமும்,***
***மேல் வானவர்க்கும் பேர்க்ககிலாத்***
***திண்மைஇயும், செங்கோல்***
***நெறியும், திறம்பாத***
***உண்மைஇயும், எல்லாம்***
***உடனே கொண்டு ஏகினையே!-***

***தன்னைஇ தகை மதிக்கும்***
***ஈந்த தனிக் குடையோய்!'***

*'**தகை மதிக்கும்** - பெருமை உடைய முழு நிலவுக்கும்; **தண்மை இ** - குளிர்ச்சியை; **ஈந்த** - கொடுத்த (கொடுக்கும்படியான); **தனிக் குடையோய்!** - ஒப்பற்ற வெண்கொற்றக் குடையை உடைய தயரதனே!; **வண்மைஇயும்** - கொடைத்திறத்தையும்; **மானமும்** - மானத்தையும்; **மேல் வானவர்க்கும்** - மேல் உலகில்உள்ள தேவர்களாலும்; **பேர்க்ககிலா** - மாற்ற முடியாத; **திண்மைஇயும்** -வலிமையையும்; **செங்கோல் நெறியும்** - நேர்மையான அரசாட்சி வழியையும்; **திறம்பாதஉண்மைஇயும்** - என்றம் எதனாலும் மாறுபடாத சத்தியத்தையும்; **எல்லாம்** - கூறப்படாதஏனைய நல்லியல்புகளையும்; **உடனே கொண்டு** - உன்னுடனேயே சேர்த்து எடுத்துக்கொண்டு; **ஏகினையே** - (இறந்து) சென்றுவிட்டாயே.'*

*இவை அனைத்தும் இனி இவ்வுலகில் தம்மைத் தாங்குவாரைப் பெற்றில்லையாயின என்பதாகும். மானம் - தம் நிலையில் தாழாமையும் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம். உயிரளபெடைகள்ஓசை இன்பம் பயக்க வந்தன. அளபெடை இன்றியும் வரும், இவை கொச்சகக் கலி ஆதலின்.*
***66***

இராமனைப் பலரும் பரிகரித்தலும் முனிவர் நெருங்குதலும்

***2441. என்று எடுத்துப் பற்பலவும்***
***பன்னி, இடர் உழக்கும்***
***குன்று எடுத்த போலும்***
***குவவுத் தோள் கோளரியை,***
***வன் தடக் கைத் தம்பியரும்,***
***வந்து அடைந்த மன்னவரும்,***
***சென்று எடுத்துத் தாங்கினார்;***
***மா வதிட்டன் தேற்றினான்.***

*__என்று எடுத்துப் பற்பலவும் பன்னி__ - என்று மிகுந்த குரலாற் பல பலவார்த்தைகளையும் திரும்பத் திரும்பப் பலமுறை சொல்லி; **இடர் உழக்கும்** - துன்பத்தில் மூழ்கியுள்ள; **குன்று எடுத்த போலும் குலவுத் தோள் கோளரியை** - மலையைத்தூக்கி நிறுத்தினாற் போலும் திரண்ட தோள்களையுடைய சிங்கம் போன்ற இராமனை; **வன்தடக்கைக் தம்பியரும்** - வலிய பெரிய கைகளை உடைய தம்பிமார் மூவரும்; **வந்து அடைந்தமன்னவரும்** - (அங்கு) வந்து சேர்ந்த அரசர்களும்; **சென்று** - நெருங்கி; **எடுத்து** - தூக்கி அணைத்து; **தாங்கினார்** - பரிகரித்தார்கள்; **மா வதிட்டன்** - பெருமையுடைய வசிட்ட முனிவன்; **தேற்றினான்** - தேறுதல் வார்த்தைகளைக் கூறினான்.*

*வசிட்டன் - இந்திரியங்களை வசப்படுத்தியவன், ஞானத்திற் குடி கொண்டவன், பிரம ஒளி மிக்கவன் என்று பொருள். மன்னர்கள் பின் வந்து சேர்ந்தனர் என்பதை 'வந்து அடைந்த மன்னவர்' என்பதனால் அறியலாம். **67***

***2442. பன்ன அரிய நோன்பின்***
***பரத்துவனே ஆதி ஆம்***
***பின்னு சடையோரும்,***
***பேர் உலகம் ஓர் ஏழின்***
***மன்னவரும், மந்திரியர்***
***எல்லாரும், வந்து அடைந்தார்;***
***தன் உரிமைச் சேனைத்***
***தலைவோரும்தாம் அடைந்தார்.***

***பன்ன அரிய*** - *சொல்லுதற்கு அரிய;* ***நோன்பின்*** - *தவத்தை உடைய;* ***பரத்துவனே ஆதி ஆம்*** - *பரத்துவாசன் முதலாக உள்ள;* ***பின்னு சடையோரும்*** -*திரித்துவிட்ட சடையை உடைய முனிவர்களும்;* ***பேர் உலகம் ஓர் ஏழின் மன்னவரும்*** - *ஓர்ஏழு உலகங்களின் அரசர்களும்;* ***மந்திரியர் எல்லாரும்*** - *அமைச்சர்கள் எல்லாரும்;* ***வந்து அடைந்தார் -*** *வந்து சேர்ந்தார்கள்;* ***தன் உரிமைச் சேனைத் தலைவோரும் தாம்அடைந்தார்*** - *சக்கரவர்த்திகளுக்குரிய சேனையின் தலைவர்களும் வந்து சேர்ந்தார்கள்.*

*பரதனுடன் வந்தோர் பலரும் பின்னர் வந்து சேர்ந்தனர். ஆதலின், அவர்கள் எல்லாம்இராமனை நெருங்கினபடியை இதனாற் கூறினார் 'தாம்' என்பது உரையசை.*
***68*** *வசிட்டன் இராமனை நோக்கிக் கூறுதல்*

***2443. மற்றும் வரற்பாலர் எல்லாரும் வந்து அடைந்து,***
***சுற்றும் இருந்த அமைதியினில், துன்பு உழக்கும்***
***கொற்றக் குரிசில் முகம் நோக்கி, கோ மலரோன்***
***பெற்ற பெருமைத் தவ முனிவன் பேசுவான்.***

***மற்றும்*** - *மேலும்;* ***வரற்பாலர் எல்லாரும்*** - *வரவேண்டியவர்கள் எல்லாரும்;* ***வந்து அடைந்து*** - *வந்து சேர்ந்து;* ***சுற்றும் இருந்த அமைதியினில்*** - *இராமனைச் சுற்றி இருந்த பொழுதில்;* ***துன்பு உழக்கும் கொற்றக் குரிசில் முகம் நோக்கி*** - *துன்பத்தில் அழுந்திய வெற்றி நம்பியாகிய இராமனது முகத்தைப் பார்த்து;* ***கோமலரோன்*** - *பெருமையுடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம தேவன்;* ***பெற்ற*** - *புதல்வன் ஆன;* ***பெருமைத் தவ முனிவன்*** - *பெருமையுடைய தவ முனிவனாகிய வசிட்டம்;* ***பேசுவான் -.***

*பிரமனது நகத்திற் பிறந்தவன் வசிட்டன் என்னும் பாகவதம். 'வதிட்டன் தேற்றினான்' என முன்னர்க் (2441.) கூறியது தொகை. இது விரி. இனி விரிவாக வதிட்டன் தேற்றுதலைக் கூறுவார்.* ***69***

*கலிவிருத்தம்*

***2444. துறத்தலும் நல் அறத்***
***துறையும் அல்லது***
***புறத்து ஒரு துணை இலை,***
***பொருந்தும் மன்னுயிர்க்கு;***

***“இறத்தலும் பிறத்தலும்***
***இயற்கை” என்பதை***
***மறத்தியோ, மறைகளின்***
***வரம்பு கண்ட நீ?***

*‘**மறைகளின் வரம்பு கண்ட நீ** - வேதங்களின் எல்லையை அளவிட்டறிந்த நீ; **பொருந்தும் மன்னுயிர்க்கு** - (உலகத்திற்) பொருந்திய நிலைபெற்ற உயிர்களுக்கு; **“இறத்தலும் பிறத்தலும் இயற்கை”** - மரணம், சனனம் இரண்டும் இயல்பே; **துறத்தலும்** - துறவற நெறியில் சேர்தலும்; **நல் அறத் துறையும்** - அறத்தாற்றின் இல்வாழ்க்கைநடத்தலும்; **அல்லது** - அல்லாமல்; **புறத்து** - வெளியே; **ஒரு துணை இல்லை** - வேறு ஒரு துணையும் இல்லை; **என்பதை** - என்கின்ற செய்தியை; **மறத்தியோ** - மறந்துவிட்டாயோ.*

*பிறத்தல் இறத்தல் இயற்கை ஆதலின், தயரதன் இறந்ததுபற்றி வருந்தல் வேண்டா. உயிர்க்குத் துணை அறவழியில் இல்லறம் ஆற்றல், அல்லது துறவறம் ஆதலின் அறவழியில் அரசாட்சி நடத்தி விண்ணுலகு சென்று இன்பம் துய்க்கும் ‘தயரதன்பற்றிவருந்தல் வேதங்களை நன்குணர்ந்த உனக்குக் கூடாது என்று வசிட்டன் இராமனுக்கு எடுத்துக்கூறினான். வீடுபேற்றுக்குச் சிறந்த வழியாதலின் துறவு முற்கூறப்பட்டது. ‘ஓ’ காரம்வினாப்பொருட்டு. 70*

***2445. ‘ “உண்மை இல் பிறவிகள்,***
***உலப்பு இல் கோடிகள்,***
***தண்மையில் வெம்மையில்***
***தழுவின” எனும்***
***வண்மையை நோக்கிய,***
***அரிய கூற்றின்பால்,***
***கண்மையும் உளது எனக்***
***கருதல் ஆகுமோ?***

*‘(உயிர்களுக்கு), **“உண்மை இல் பிறவிகள்** - நிலையில்லாதனவாகிய பிறப்புகள்; **உலப்பு இல் கோடிகள்** - அளவில்லாத கோடிக் கணக்கானவை; (அவை) **தண்மையில்வெம்மையில் தழுவின”** - இன்பத்தாலும் துன்பத்தாலும் உண்டாகப்பெற்றவை; **எனும்** -என்ற; **வண்மையை** - வளமாக நூல்களில் கூறப்பெற்றவற்றை; **நோக்கிய** - நன்குபார்த்து அறிந்தபின்பு; **அரிய கூற்றின்பால்** - கொடிய யமனிடத்தில்; **கண்மையும் உளது என** - கண்ணோட்டமும் இருக்கின்றது என்று; **கருதல் ஆகுமோ** - நினைக்கக்கூடுமோ? (கூடாது)*

*இன்ப துன்பங்கட்கேற்பப் பல பிறவிகள் எடுக்கும் உயிர்கல் அவை தீர்ந்த பிறகு இறக்கின்றன. இதில் யமன் கண்ணோட்டம் உடையவனாதல் வேண்டும் எனக் கருதல் எற்றுக்கு என்பதாம். கண்மையாவது கண்ணின் தன்மை; அது கண்ணோட்டம். பிறர் துன்பம் கண்டு அவர்மாட்டுக் கண் ஓடியவழிச் செய்யப்படுவது ஆதலின், கண்மை எனப்பெற்றது. 71*

***2446. 'பெருவதன் முன் உயிர் பிரிதல் காண்டியால்?
மறு அறு கற்பினில் வையம் யாவையும்
அறுபதினாயிரம் ஆண்டும் ஆண்டவன்
இறுவது கண்டு அவற்கு, இரங்கல் வேண்டுமோ?***

*'**பெறுவதன் முன்** - தாய் ஈனுவதற்கு முன்பாகவே; **உயிர்பிரிதல் -** சிலஉயிர்கள் உடல் விட்டு நீங்கி இறப்பதை; **காண்டி** - பார்க்கின்றாய்; (அங்ஙனமாக) **வையம் யாவையும் மறு அறு கற்பினில் -** இந்த உலகம் எல்லாவற்றையும் குற்றமற்றகற்பினால்; **அறுபதினாயிரம் ஆண்டும் ஆண்டவன்** - அறுபதினாயிரம் ஆண்டுகள் அரசாண்டசக்கரவர்த்தி; **இறுவது கண்டு** - இறத்தலைப் பார்த்து; **அவற்கு** - அவன்பொருட்டு; **இரங்கல் வேண்டுமோ** - மனம் வருந்த வேண்டுமோ? (வேண்டாம் என்றபடி) பிறக்கும்போதே இறக்கும் தன்மை உடைய உயிர் அறுபதாயிரம் ஆண்டுகள் புகழோடு ஆண்டு பின்னர் இறப்பதற்கு மகிழ வேண்டுமே அன்றி வருந்துதலா செய்வது என்றான். 'ஆல்' தேற்றப்பொருள். "பீட்பிதுக்கிப் பிள்ளையைத் தாய் அலறக் கோடலான்" என்று (நாலடி. 20.) வருவது காண்க. வையத்தைக் கற்பினால் ஆளுதலாவது பிற வேந்தர்க்கும் பூமி பொதுவாகாமல் தன்னொருவனுக்கே உரியதாக ஆளுதலாம். 'ஓ'வினா. 72*

***2447. சீலமும், தருமமும், சிதைவு இல் செய்கையாய்!
சூலமும், திகிரியும், சொல்லும், தாங்கிய
மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்
காலம் என்று ஒரு வலை கடக்கல் ஆகுமோ?***

*'**சீலமும்** - நல்லொழுக்கமும்; **தருமமும் -** அறமும்; **சிதைவு இல்** - சிதைதல் இல்லாத; **செய்கையாய்!** - செயலை உடைய இராமனே; சூலமும், திகிரியும், **சொல்லும் தாங்கிய** - சூலத்தையும், சக்கரத்தையும், வேதத்தையும் தரித்திருக்கிற; **மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்** - எல்லாவற்றுக்கும் மூலப்பொருளாய் வந்து அருளுகின்றமுப்பரம் பொருளுக்கு ஆனாலும்; **காலம் என்று ஒரு வலை** - காலத் தத்துவம் என்கின்ற ஒருவலையை; **கடக்கல் ஆகுமோ** - கடத்தல் இயலுமா? (இயலாது என்றபடி).*

*காலமும் கணக்கும் நீத்த காரணன் முத்தொழில் செய்கிறபோது காலவலைக் குட்பட்டவனாகவே செய்கிறான் ஆதலின் காலத்தைக் கடத்தல் இயலாது என்றதாம். செயல் என்பது காலத்தோடு கூடியது ஆகலான் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் செயல் செய்வார் மூவரும் காலத்திற்குட்பட்டவரேயாம் என்க. சூலம் சிவனையும், திகிரி திருமாலையும், சொல் எனும் வேதம் பிரமனையும் காட்டியது. முன்னர் 'உருளும் நேமியும் ஒண்கவர் எஃகமும், மருள் இல்வாணியும் வல்லவர் மூவர்க்கும்' என்றதும், (1417) காண்க. 'மூலம் வந்து உதவிய' என்பதற்கு மூலமாகிய பரம்பொருள் உள்புகுந்து உதவிய மூன்று தேவர்கள் எனப் பொருள் உரைத்தலும் ஒன்று. 'சொல்' என்பது வேதம். நாமகள் என்று பொருள்படும். இரண்டுக்கும் உரியவன் பிரமன் ஆதலின். 73*

***2448. 'கண் முதல் காட்சிய, கரை இல் நீளத்த,
உள் முதல் பொருட்டு எலாம் ஊற்றம் ஆவன,***

***மண் முதல் பூதங்கள் மாயும் என்றபோது,***
***எண்முதல் உயிர்க்கு நீ இரங்கள் வேண்டுமோ?***

*‘**கண் முதல்** - கண்முதலிய பொறிகளின்; **காட்சிய** - காட்சி முதலிய புலன்களுக்குக் காரணமானவை; **கரை இல் நீளத்த** - எல்லை இல்லாத நீளத்தை உடையவை; **உள் முதல் பொருட்டு எலாம் ஊற்றம் ஆவன** - உலகத்தில் உள்ள மூலப்பொருள்களுக்கெல்லாம்தோற்றுதற் காரணம் ஆகியிருப்பவையாகிய; **மண்முதல் பூதங்கள்** - நிலம், நீர், தீ,காற்று, ஆகாயம் என்ற ஐந்து பூதங்களுமே; **மாயும்** - அழியும்; **என்றபோது** - என்றால்; **எண் முதல் உயிர்க்கு** -இவற்றைவிட எளிய முதற்பொருளாகிய; **உயிர்க்கு** - உயிர் அழிந்துபடுவதற்கு; **நீஇரங்கல் வேண்டுமோ?** - நீ வருந்துதல் தகுதியாகுமோ? (தகுதியன்று என்றபடி).*

*ஐம்பூதங்களின் சேர்க்கையால் அனைத்துப் பொருள்களும் உண்டாவன ஆதலின், ‘‘பொருட்கு எலாம் ஊற்றம் ஆவன’’ பூதங்களே அழிகிறபோது பூதங்களால் ஆகிய பௌதிகமாய உடல் அழிந்து உயிர் பிரிதல் எளிதன்றோ என்றதாம். ‘எண்முதல்’ நினைத்தற்குரிய முதலாகிய உயிர் எனவும் அமையும். நினைத்தற்குரிய பூதங்களே அழிகின்ற தெனின் நினைத்தற்குரிய உயிர் பிரிதற்கு வருந்த வேண்டுமோ என்றாராம். 74*

***2449. ‘புண்ணிய நறு நெயில், பொரு இல் காலம் ஆம்***
***திண்ணிய திரியினில், விதி என் தீயினில்,***
***எண்ணிய விளக்கு அவை இரண்டும் எஞ்சினால்,***
***அண்ணலே! அவிவதற்கு, ஐயம் யாவதோ?***

*‘**அண்ணலே!** - தலைமை பொருந்தியவனே!; **புண்ணிய நறுநெய்யில்** - புண்ணியம்என்கின்ற நல்ல நெய்யில்; **பொரு இல்** - ஒப்பற்ற; **காலம் ஆம் திண்ணியதிரியினில்** - காலமாகிய வலிய திரியில்; **விதி என் தீயினில்** - விதிஎன்கின்ற நெருப்பினால்; **எண்ணிய** - கருத்தோடு ஏற்றப்பெற்ற; **விளக்கு** -உயிர் வாழ்க்கை என்கிற தீபம்; **அவை இரண்டும் எஞ்சினால்** - (நெய்யும் திரியுமாகிய)புண்ணியமும் விதியும் ஒழிந்தால்; **அவிவதற்கு** - அணைந்து போவதற்கு; **ஐயம் -** சந்தேகம்; **யாவதோ?** - ஏனோ? (இல்லை என்றபடி).*

*நல்வினையும் விதியும் முடிந்தபொழுது உயிர்வாழ்க்கை முடிந்துபோகும். காலத் திரி விதி நெருப்பில் கரைந்து எரிந்து போகும். புண்ணியம் அனுபவித்து வற்றும். உயிர் உடலைப் பிரியும்; இது இயற்கை நியதி என்றார். 75*

***2450. ‘இவ் உலகத்தினும் இடருளே கிடந்த,***
***அவ் உலகத்தினும் நரகின் ஆழ்ந்து, பின்***
***வெவ் வினை துய்ப்பன விரிந்த யோனிகள்,***
***எவ் அளவில் செல எண்ணல் ஆகுமோ?***

*‘**(உயிர்) இவ் உலகத்தினும்** - இம்மைக்கண்ணும்; **இடருளே கிடந்து** - துன்பத்திற் கிடந்து உழன்று; **அவ் உலகத்தினம்** - மறுமைக் கண்ணும்; **நரகின்ஆழ்ந்து** - நரகத்தில் அழுந்தித் துன்புற்று; **பின்** - பிறகு; **செல்வினைதுய்ப்பன** - கொடிய வினைப்பயனை*

*அனுபவித்தற் குரியவாய; **விரிந்த யோனிகள்** -பல்வேறு வகையான பிறவிவகைகள்; **எவ் அளவில் செல** - எந்தக் கணக்கில் அடங்க; **எண்ணல் ஆகுமோ?** - என்னக் கூடுமோ? (கூடாது என்றபடி) உயிர் எடுக்கும் பல்வேறு வகையான பிறவிகள் கணக்கில் அடங்காதன. "உரை சேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதம்" (திருஞா. தேவா: 1-132.4) என்றார் வினைவழியில் உயிர் இவ்வாறெல்லாம் ஆதலின் அதுபற்றி இரங்கவேண்டா என்றார். 76*

## *2451. 'உண்டுகொல் இது அலது உதவி நீ செய்வது? என் தகு குணத்தினாய்! தாதை என்றலால், புண்டரீகத் தனி முதற்கம் போக்கு அரு விண்டுவின் உலகிடை விளங்கினான்அரோ!*

*'**எண் தகு குணத்தினாய்!** - எல்லாராலும் நன்கு மதிக்கப்படுகின்ற குணங்களைஉடையவனே!; **தாதை என்றலால்** - (தயரதன் உனக்குத்) தந்தை என்ற காரணத்தால்; **புண்டரீகத் தனி முதற்கும்** - தாமரை மலரில் வீற்றிருக்கும் ஒப்பற்ற படைத்தற் கடவுளானபிரமனுக்கும்; **போக்கு அரு** - செல்லுதற்கு அரிய; **விண்டுவின் உலகிடை** -திருமால் உலகத்தில்; **விளங்கினான்** - சென்று சேர்ந்து ஒளி பெற்றான்; **நீசெய்வது உதவி** - மகளாகிய நீ தந்தைக்குச் செய்வதாகிய உதவி; **இது அலது உண்டுகொல்** - இதுவல்லது இதன்மேல் வேறு உண்டோ? (இல்லை என்றபடி).*

*நினைக்கப்படுகிற குணங்கள் என்றுமாம். எட்டுக் குணங்கள் என்பாரும் உளர். தந்தையை நற்கதியில் சேர்த்தல் மகன் கடமையாதலின், விண்டு லோகத்தில் தயரதனை விளங்கவைத்தலின் மகனாற் பெறவேண்டியதைத் தயரதன் பெற்றுச் சிறந்தான் என்றார். விளங்குதல் - ஒளியுடல் பெறுதல். பிரமனுக்கும் செல்லமுடியாத விண்டு உலகத்தில் விளங்கினான் என்று கூறினார் ஏனும், பின்னர் மீட்சிப்படலத்து, "புண்டரீகத்துப் புராதனன் தன்னொடும் பொருந்தி, அண்டமூலத்து ஓர் ஆசனத்து இருத்தினை, அழக!" என்று (10070) தயரதன் கூறுமாறு கொண்டு ஏற்பப் பொருள் செய்க. 77*

*தந்தைக்கு நீர்க்கடன் செய்யுமாறு வசிட்டன் கூறுதல்*

## *2452. 'ஐய! நீ யாது ஒன்றும் அவலிப்பாய் அலை; உய் திறம் அவற்கு இனி இதனின் ஊங்கு உண்டோ? செய்வன வரன் முறை திருத்தி, சேந்த நின் கையினால் ஒழுக்குதி கடன் எலாம்' என்றான்.*

*'**ஐய!** - இராமனே; **நீ யாது ஒன்றும் அவலிப்பாய் அலை** - நீ சிறிதளவும்துன்பப்பட வேண்டா; **அவற்கு** - அத்தயரதனுக்கு; **உய்திறம்** - உய்தி பெரும்தன்மை; **இதனின் ஊங்கு** - இந்த விஷ்ணு லோகத்தை அடைவதைக் காட்டிலும்; **இனிஉண்டோ?** - இனிமேல் வேறு இருக்கிறதோ? (இல்லை) ஆதலின்; **செய்வன** -(தந்தைக்குச்) செய்யவேண்டுவனவாகிய அந்திமக் கிரியைகளை; **வரன்முறை** - நூல்களிற்சொல்லிய முறையானே; **திருத்தி** - ஒழுங்குறச் செய்து; **சேந்த நின் கையினால்** - சிவந்த நின் கைகளால்; **கடன் எலாம்** - நீர்க்கடன் எலாம்; **ஒழுக்குதி** -செலுத்துவாயாக;' **என்றான்-.***

*இறந்தோரைக் கருதிச் செய்யும் கிரியைகளின் பலன், பித்ரு தேவதைகளைச் சார்கிறபடியால், உத்தமகதியை அடைந்தவர்களுக்கும் கிரியைகளும், நீர்க்கடன்களும் செய்ய வேண்டுதலின் அவற்றைச் செய்க என்றான் வசிட்டன். நீர்க்கடன் தருப்பணம்.* ***78***

***2453. 'விண்ணு நிர் மொக்குகளின் விளியும் யாக்கையை***
***எண்ணி, நீ அழுங்குதல் இழுதைப்பாலதால்;***
***கண்ணின் நீர் உகுத்தலின் கண்டது இல்லை; போய்***
***மண்ணு நீர் உகுத்தி, நீ மலர்க்கையால்' என்றான்.***

***'நீ-; விண்ணு நீர் மொக்குளின்*** *- ஆகாயத்திலிருந்து பெய்யும் மழையில் எழுந்தநீர்க்குமிழி போல்;* ***விளியும்*** *- (நிலையில்லாமல்) அழிகிற;* ***யாக்கையை*** *- உடம்பைக் குறித்து;* ***எண்ணி அழுங்குதல்*** *- சிந்தித்து வருந்துதல்;* ***இழுதைப்பாலது*** *- பேதைமையின்பாற் படுவதாகும்;* ***கண்ணின் நிர் உகுத்தலின் கண்டது இல்லை*** *- கண்ணீர்சொரிதலால் அடையும் பயன் ஒன்றும் இல்லை;* ***நீ மலர்க்கையால்*** *- நீ தாமரை மலர்போன்ற கைகளால்;* ***மண்ணு நீர் உகுத்தி*** *- (பாவத்தைப் போக்கித்) தூய்மை செய்யும் தருப்பண நீரைச் சொரிவாயாக;'* ***என்றான்*** *- என்று வசிட்டன் கூறினான்.*

*துக்க மிகுதியால் கூறியும் இராமன் நீர்க்கடன் செய்ய எழாமையால் மீண்டும் - வசிட்டன் கூறவேண்டியதாயிற்று. மண்ணு நீர் - மண்ணில் நீர் உகுத்து என்னும் பொருள் பெறும். இழுதைப்பாலதால் - 'ஆல்' அசை.* ***79***

*இராமன் நீர்க்கடன் செய்து மீளுதல்*

***2454. என்றபின், ஏந்தலை ஏந்தி வேந்தரும்,***
***பொன் திணிந்தன சடைப் புனிதனோடும் போய்ச்***
***சென்றனர், செறி திரைப் புனலில்; 'செய்க' என,***
***நின்றனர்; இராமனும் நெறியை நோக்கினான்.***

***என்றபின்*** *- என்று முனிவன் கூறிய பிறகு;* ***ஏந்தலை ஏந்தி*** *- இராமனைக்கொண்டாடி;* ***வேந்தரும்*** *- அரசர்களும்;* ***பொன் திணிந்தன சடைப் புணிதனோடும் போய்*** *- பொன்னைத் திணித்து வைத்தாற்போன்ற சடைகளை உடைய தவத்தோனாகிய வசிட்டனோடும் போகி;* ***செறிதிரைப் புனலில்*** *- நெருங்கிய அலைகளையுடைய நதிநீரில்;* ***சென்றனர்*** *-சென்று சேர்ந்தனர்;* ***'செய்க' என நின்றனர்*** *- (இராமன் நீர்க்கடன்) செய்க என்று நின்றார்கள்;* ***இராமனும் நெறியை நோக்கினான்*** *- இராமனும் செய்யவேண்டிய வழிமுறைகளைச்சிந்தனையால் நோக்கினான்.. வசிட்டரும் வேந்தரும் நதிப்புனலில் சென்று நிற்க, இராமனும் நீர்க்கடன் செய்யும் கிரியை முறைகளை நோக்கினானாம்.* ***80***

***2455. புக்கனன் புனலிடை, முழுகிப் போந்தனன்,***
***தக்க நல் மறையவன் சடங்கு காட்ட, தான்,***
***முக் கையின் நீர் விதி முறையின் ஈந்தனன் -***
***ஒக்க நின்று உயிர்தொறும் உணர்வு நல்குவான்.***

***உயிர்தொறும்*** *- எல்லா உயிர்களிடத்தும்;* ***ஒக்க நின்று*** *- ஒரு தன்மையாகஉள்ளிருந்து;* ***உணர்வு நல்குவான்*** *- அவற்றிற்கு உணரும் தன்மையை அருளுபவனாகிய(பரம்பொருள்) இராமன்;* ***புனலிடை புக்கனன்*** *- நதிநீரிற் புகுந்து;* ***முழுகி*** *-நீராடி;* ***போந்தனன் -*** *வெளியேறி;* ***தக்க நல் மறையவன்*** *- சிறந்த நல்லவேதங்களை உணர்ந்தவனாகிய வசிட்டன்;* ***சடங்கு காட்ட*** *- செய்ய வேண்டிய சிறந்தகிரியைகளை வழிப்படுத்த;* ***தான்-; முக்கையின் நீர்*** *- கையினால் மூன்றுமுறை முகந்து எடுத்துவிடும் தருப்பண நீரை;* ***விதிமுறையின்*** *- நூல்களில் விதித்த முறைப்படி;* ***ஈந்தனன்*** *- (தன் தந்தையை நினைத்து) கொடுத்தான்.*

*எல்லா உயிர்களுக்கும் உள்ளுறைந்து உணர்வு தரும் பரம்பொருள், இராமன் என இப்போது மானுட வேடத்தில் வந்தான் ஆதலின் அதற்கேற்ப வேதவிதிப்படி சடங்குகள் காட்டத் தருப்பணம் செய்த தந்தையை வழிபட்டான் என்பதாம்.*
***81***

## *2456. ஆனவன் பிற உள யாவும் ஆற்றி, பின்,*
## *மான மந்திரத்தவர், மன்னர், மா தவர்*
## *ஏனையர் பிறர்களும், சுற்ற ஏகினன்;*
## *சானகி இருந்த அச் சாலை எய்தினான்.*

***ஆனவன்*** *- தருப்பணம் செய்தவனான இராமன்;* ***பிறஉளயாவும் ஆற்றி*** *- வேறுபிண்டம் அளித்தல் முதலாக உள்ள சடங்குகளையும் செய்து முடித்து;* ***பின்*** *- பிறகு;* ***மான மந்திரத்தவர்*** *- பெருமை படைத்த மந்திரிகளும்;* ***மன்னர்*** *- அரசரும்;* ***மா தவர்*** *- பெரிய முனிவர்களும்;* ***ஏனையர் பிறர்களும்*** *- மற்றும் உள்ளவர்களும்;* ***சுற்ற*** *- தன்னைச் சுற்றிவர;* ***ஏகினன்*** *- சென்று;* ***சானகி இருந்த அச்சாலை*** *- சீதா பிராட்டி இருந்த அந்தக் குடிலை;* ***எய்தினான்*** *- அடைந்தான்.*

*'பிற உள' என்பது நீர்க்கடன் செய்த பின்னர்அளிக்கப்படுவதாகிய பிண்டம் முதலியவற்றைக் குறிக்கும். இராமன் தயரதனின் மூத்த மகனாதலின் இறந்த முதல் நாள் தொட்டுப் பதின்மூன்றாம் நாள்வரை செய்யத் தகும் கருமங்கள் அனைத்தும்செய்ய வேண்டியவனாவான் என்பதுபற்றி இவ்வாறு கூறினார். மான - பெருமை "மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார்" என்று (1319) மந்திரப் படலத்துள் அமைச்சரைக் கூறியது காண்க. ஏனையர் என்பது தன்னோடு தொடர்புடையாரையும், பிறர்களும் என்பது தொடர்பில்லாதவர்களையும் குறித்ததாகக் கொள்க; பலரும் சுற்ற என்பது கருத்து. நீர்க்கடன் முதலிய செய்த பின்னரே சீதை இருந்த இடத்துக்குச் செல்கின்றான் என்று கம்பர் கூறியது ஈண்டுக் கருதி உணரத்தக்கது.* ***82***

*சீதையின் பாதங்களில் பரதன் வீழ்ந்து புலம்புதல்*

## *2457. எய்திய வேலையில், தமியள் எய்திய*
## *தையலை நோக்கினன்; சாலை நோக்கினான்;*
## *கைகளின் கண்மலரிளிர் புடைத்து, கால்மிசை,*
## *ஐயன், அப் பரதன் வீழ்ந்து அரற்றினான் அரோ!*

***எய்திய வேலையில்*** - *அந்தக் குடிலை அடைந்தபொழுது;* ***ஐயன் அப்பரதன்*** - *ஐயனாகிய அந்தப் பரதன்;* ***தமியள் எய்திய தையலை*** - *தனியளாய் வனம் புகுந்த சீதையை;* ***நோக்கினன்*** - *பார்த்து;* ***சாலை நோக்கினான்*** - *அவள் இருந்த குடிலையும்பார்த்து;* ***கண்மலர் கைகளின் புடைத்து*** - *மலர்போன்ற கண்களில் கைகளால்அடித்துக்கொண்டு;* ***கால்மிசை*** - *அப்பிராட்டியின் திருவடிகளில்;* ***வீழ்ந்து*** - *விழுந்து;* ***அரற்றினான்*** - *புலம்பினான்.*

*தமியள் எய்திய - குடிலில் தனியளாயிருந்த என்றும் ஆம். துக்க மிகுதிக்கண் கண்களில்அடித்துக்கோடல் வழக்கு. 'அரோ' ஈற்றசை.* ***83***

***2458. வெந் துயர் தொடர்தர விம்மி விம்மி, நீர்***
***உந்திய நிரந்தரம்; ஊற்று மாற்றில;***
***சிந்திய - குரிசில் அச் செம்மல் சேந்த கண் -***
***இந்தியங்களில் எறி கடல் உண்டு என்னவே!***

***குரிசில் அச்செம்மல்*** - *குரிசிலாகிய அந்தப் பரதனது;* ***சேந்த கண்-*** *சிவந்த கண்கள்;* ***இந்தியங்களில் -*** *(கண் முதலாகிய) பொறிகளில்;* ***எறிகடல் உண்டுஎன்ன*** - *அலை வீசுகிற கடல் இருக்கிறது என்று சொல்லும்படி;* ***வெந் துயர் தொடர்தர*** - *கொடிய சோகம் பீடித்தலால்;* ***விம்மி விம்மி-; நீர்*** - *நீரை;* ***உந்திய*** - *வெறிச் செலுத்தின;* ***நிரந்தரம்*** - *எப்பொழுதும்;* ***ஊற்று*** - *பெருகுதல்;* ***மாற்றில*** - *நீங்காதவையாய்;* ***சிந்திய*** - *(நீரைச்) சொரிந்து கொண்டேயிருந்தன.*

*பூமியிற் கடல்போல இந்திரியங்களிலும் கடல் உண்டு போலும் என்று கண்டார் நினைக்கும்படிஇருந்தது பரதன் கண்களில் நீர் பெருகும் தன்மை என்பதாம். இந்திரியம் எனப்து ஐம்பொறிகளையும் குறிக்குமேனும் சிறப்பு வகையால் இங்குக் கண்களைமட்டும் கொள்க. 'ஏ'ஈற்றசை.* ***84*** *இராமன் சீதைக்குத் தந்தை இறந்தமை கூறுதல்*

***2459. அந் நெடுந் துயர் உறும் அரிய வீரனைத்***
***தன் நெடுந் தடக் கையால் இராமன் தாங்கினான்;***
***நல் நெடுங் கூந்தலை நோக்கி, 'நாயகன்,***
***என் நெடும் பிரிவினால், துஞ்சினான்' என்றான்.***

***இராமன் -; அந் நெடுந் துயர் உறும் அரிய வீரனை*** - *அத்தகைய நீண்டபெருந்துயரமடைந்த சிறந்த பரதனை;* ***தன் நெடுந் தடக் கையால்*** - *தன் நீண்ட பெரியகைகளால்;* ***தாங்கினான்*** - *எடுத்து அணைத்து;* ***நல் நெடுங் கூந்தலை*** - *நல்லநீண்ட கூந்தலை உடையாளாகிய சீதையை;* ***நோக்கி*** - *பார்த்து;* ***'நாயகன், என் நெடும் பிரிவினால், துஞ்சினான்' என்றான்*** - *தயரதன் என் நீண்ட பிரிவைத் தாங்க மாட்டாமல்இறந்துபட்டான் என்று தெரிவித்தான்.*

*பரதனை இராமன் அணைத்துத் தேற்றினான். பதினான்கு ஆண்டுகள் இராமன் வனம் உறைவானாதலின் அது 'நெருட்பிரிவு' எனப்பட்டது. நெடுந்துயர், நெடுங்கை, நெடுங்கூந்தல், நெடும்பிரிவு என இச்செய்யுளில் நெடுமை தொடர்ந்து வருவது ஒரு நயம். நன்னெடுங் கூந்தல் - அன்மொழித்தொகை.* ***85***

*சீதையின் துக்கம்*

***2460. துண்ணெனும் நெஞ்சினாள்; துளங்கினாள்; துணைக்***
***கண் எனும் கடல் நெடுங் கலுழி கான்றிட,***
***மண் எனும் செவிலிமேல் வைத்த கையினாள்,***
***பண் எனும் கிளவியால் பன்னி, ஏங்கினாள்.***

*(அதுகேட்ட சீதை)* ***துண்ணெனும் நெஞ்சினாள்*** *- திடுக்கிட்ட மனம் உடையவளாய்;* ***துளங்கினாள்*** *- நடுங்கி;* ***துணைக் கண் எனும் கடல்*** *- இரண்டாகிய கண்கள் எனும்கடல்;* ***நெடுங் கலுழி கான்றிட*** *- நீண்ட கண்ணீர் வெள்ளத்தைக் கக்க;* ***மண் எனும்செவிலி மேல் வைத்த கையினாள்*** *- பூமி என்கிற செவிலித்தாயின்மேல் வைத்த கைகளை உடையவளாய்;* ***பண் எனும் கிளவியால்*** *- இசைப்பாடல் என்று சொல்லத்தக்க சொற்களால்;* ***பன்னி*** *- பலபடியாகப் புலம்பி;* ***ஏங்கினாள்*** *- வருந்தினாள்.*

*இதுவரை துயரம் என்பது இன்னதென அறியாதவள் ஆதலின், தயரதன் இறந்த செய்தி கேட்டுத் திடுக்குற்றாள் என்க. கண்ணைக் கடல் எனவும் கண்ணீரைக் கலங்கல் எனவும் உருவகித்தார். நிலத்தில் கையூன்றி வருந்தினாள் என்பதனை நிலம் என்னும் செவிலித்தாய்மேல் வைத்த கையினாள் எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினார்.*
***86 2461. கல் நகு திரள புயக் கணவன் பின் செல,***
***நல் நகர் ஒத்தது, நடந்த கானமும்;***
***'மன்னவன் துஞ்சினன்' என்ற மாற்றத்தால்***
***அன்னமும் துயர்க் கடல் அடிவைத்தாள் அரோ!***

***கல் நகு*** *- கல்லை இகழ்கிற;* ***திரள் புயக் கணவன்*** *- திரண்ட தோளை உடைய கணவனாகிய இராமன்;* ***பின் செல*** *- பின்னே செல்லுதலால்;* ***நடந்த கானமும்*** *- சீதை நடந்து சென்ற காடும்;* ***நல் நகர் ஒத்தது*** *- (அவளுக்குத் துயரைத் தராமல்) நல்ல அயோத்தி நகரைப் போலவே இருந்தது; (இப்போது)* ***'மன்னவன் துஞ்சினன்' என்ற மாற்றத்தால்*** *- தயரதன் இறந்தான் என்ற வார்த்தையால்;* ***அன்னமும்*** *- சீதையும்;* ***துயர்க்கடல்*** *- துக்கம் என்ற கடலில்;* ***அடி வைத்தாள்*** *- கால் வைத்து நடக்கத்தொடங்கியவள் ஆனாள்.*

*இராமனுடன் சென்ற காரணத்தால் காடு புகுந்தும் துயரை அறியாமல் இருந்தவள், தயரதன் இறந்தான் என்று கேட்டபோது முதன்முதலில் துன்பம் என்பது இன்னதென அறிந்தாள் என்பதை இவ்வாறு கூறினார். 'அரோ' - அசை.*
***87***

*முனி பத்தினியர் சீதையை நீராட்டி இராமனிடம் சேர்தல்*

***2462. ஆயவள்தன்னை நேர்ந்து அங்கை ஏந்தினர்,***
***தாயரின், முனிவர்தம் தருமப் பன்னியர்;***
***தூய நீர் ஆட்டினர்; துயரம் நீக்கினர்;***
***நாயகற் சேர்த்தினர்; நவையுள் நீங்கினார்.***

***நவையுள் நீங்கினார்*** - குற்றங்களிலிருந்து நீங்கியவராகிய; ***முனிவர் தம்தருமப் பன்னியர்*** - முனிவர்களுடைய மனைவியர்; ***ஆயவள் தன்னை*** - துன்பக் கடலில்தோய்ந்த சீதையை; ***தாயரின்*** - தாய்மார்கள் போல; ***நேர்ந்து*** - அணுகி; ***அங்கை ஏந்தினர்*** - தமது அழகிய கைகளால் அவளைத் தாங்கி அழைத்துச் சென்று; ***தூய நீர்ஆட்டினர்*** - தூய்மையான கங்கை நீரிலே முழுக்காட்டி; ***துயரம் நீக்கினர்*** - அவள்துக்கத்தைத் தணித்து; ***நாயக் சேர்த்தினர்*** - கொழுநனான இராமனிடத்தில் அடைவித்தார்கள்.

*தருமப் பன்னி - தருமபத்தினி - முனிவர்தம் மனைவியர். நாயகன் சேர்த்தித் துயரம் நீக்கினர் எனினும் அமையும். நாயகன் சேர்த்தி நவையுள் நீங்கினார் என நேரே கூட்டி, சீதையை இராமன்பால் சேர்ப்பித்துத் துன்பத்திலிருந்து நீங்கினார் என உரைத்து, தருமபத்தினயர் சீதை படும் துன்பம் பார்த்துத் தாம் படும் துன்பம் நீங்கியதாகப் பொருள்படுத்தலும் பொருந்தும்* ***88***

*தாயரோடு சுமந்திரன் வருதல்*

***2463. தேன் தரும் தெரியல் அச் செம்மல் நால்வரை***
***ஈன்றவர் மூவரோடு, இருமை நோக்குறும்***
***சான்றவர் குழாத்தொடும், தருமன் நோக்கிய***
***தோன்றல்பால், சுமந்திரன் தொழுது தோன்றினான்.***

***தேன் தரும் தெரியல்*** - தேனைச் சொரிகின்ற பூமாலை அணிந்த; ***அச்செம்மல்நால்வரை*** - அத்தலைமைப்பாடு உடைய இராமன், இலக்குவன்; பரதன், சத்துருக்கனன் என்றநான்கு பிள்ளைகளையும்; ***ஈன்றவர் மூவரோடு*** - பெற்ற தாயராகிய கோசலை, சுமித்திரை, கைகேயி என்ற மூவரோடும்; ***இருமை நோக்குறும்*** - இம்மை மறுமை என்னும் இரண்டையும்ஆராய்ந்து அறிகின்ற; ***சான்றவர் குழாத்தொடும்*** - பெரியோர் கூட்டத்தோடும்; ***தருமம் நோக்கிய தோன்றல் பால்*** - எப்பொழுதும் தருமத்தையே சிந்தித்துப்பார்த்திருக்கும் இராமன் இருக்குமிடத்தில்; ***சமந்திரன்-; தொழுது தோன்றினான்*** -வந்து வணங்கினான்.

*'இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்'' என்பதனுள், (குறள். 23.) பரிமேலழகர் உரைத்தவாறு 'பிறப்பு வீடு என்னும் இரண்டனது துன்ப வின்பத் தன்மைகளை ஆராய்ந்து அறிகிற' எனப் பொருள் உரைப்பினும் அமையும். சுமந்திரன் தயரதனுக்கு முதல் அமைச்சனாய் இருந்து மூத்தோன் ஆயினும் இராமன் அரசன் ஆதலின் தொழுதல் முறை என்க. நால்வரை, மூவர், இருமை என நான்கு, மூன்று இரண்டு என்ற எண்கள் தொடாந்து வந்தது ஒரு நயம்.* ***89***

*இராமனும் தாயரும் அழ, யாவரும் அழுதல்*

***2464. 'எந்தை யாண்டையான் இயம்புவீர்?' எனா,***
***வந்த தாயர்தம் வயங்கு சேவடிச்***
***சிந்தி நின்றனன், சேந்த கண்ண நீர்-***
***முந்தை நான்முகத்தவற்கும் முந்தையான்.***

***முந்தை நான்முகத்தவற்கும் முந்தையான்*** - எல்லாவற்றிற்கும் முற்பட்டநான்முகனாகிய பிரமனுக்கும் முற்பட்டவனாகிய இராமன்; ***'எந்தை யாண்டையான் இயம்புவீர்' எனா*** - என் தந்தை தயரதன் எங்குள்ளான் சொல்லுங்கள் என்று; ***வந்த தாயர்தம் வயங்கு சேவடி*** - தன்னை வந்தடைந்த தாய்மார்களது விளங்கிய திருவடிகளில்; ***சேந்த கண்ணநீர்*** - சிவந்த தன் கண்களிலிருந்து நீரை; ***சிந்தி நின்றனன்*** - சொரிந்து நின்றான்.

*திரு உந்தியில் பிரமனைப் பெற்ற திருமாலின் அமிசமானவன் இராமன் ஆதலின், நான்முகத்தவற்கும் முந்தையான் ஆயினன், உலகியலில் இறந்தோரைப் பற்றி விசாரிக்கும் முறை இதுவாகலின் இங்ஙனம் தாயரை இராமன் விசாரித்தான். 90*

***2465. தாயரும் தலைப்பெய்து தாம் தழீஇ,***
***ஒய்வு இல் துன்பினால் உரறல் ஓங்கினார்;***
***ஆய சேனையும், அணங்கனார்களும்,***
***தீயில் வீழ்ந்து தீ மெழுகின் தேம்பினார்.***

***தாயரும்*** - தாய்மார்களும்; ***தலைப்பெய்து*** - ஒன்று சேர்ந்து; ***தாம் தழீஇ*** - தாங்கள் இராமனைத் தழுவிக்கொண்டு; ***ஓய்வு இல் துன்பினால்*** - ஒழிதல்இல்லாத துக்கத்தோடு; ***உரறல் ஓங்கினார்*** - கதறத் தொடங்கினார்; ***ஆய சேனையும்*** - உடன் வந்த சேனைகளும்; ***அணங்கனார்களும்*** - பெண்களும்; ***தீயில் வீழ்ந்து தீமெழுகின்*** - தீயின் விழுந்து தீகின்ற மெழுகு போல; ***தேம்பினார்*** - மனம் உருகிஅழுதார்கள்.

*தீ மெழுகு - வினைத்தொகை உரறல் - கதறல், பேரொலி செய்தலாம். உரறு - பகுதி. துயரில் கைகேயியும் இணைந்தது காண்க. 91*

*தாயர், சானகியைத் தழுவிக்கொண்டு வருந்துதல்*

***2466. பின்னர் வீரரைப் பெற்ற பெற்றி அப்***
***பொன் அனார்களும், சனகன் பூவையைத்***
***துன்னி, மார்பு உறத் தொடர்ந்து புல்லினார்;***
***இன்னல் வேலை புக்கு இழிந்து அழுந்துவார்.***

***பின்னர்*** - பிறது; ***வீரரைப் பெற்ற பெற்றி அப்பொன் அனார்களும்*** -இராமன் முதலிய நால்வரையும் பெற்ற தன்மையுடைய அந்தப் பொன்போன்ற அரசமாதேவியர் மூவரும்; ***சனகன் பூவையை*** - சனகன் மகளாகிய சானகியை; ***துன்னி*** - நெருங்கி; ***மார்புஉறத்தொடர்ந்து புல்லினார்*** - பற்றிக்கொண்டு மார்பிற் கட்டியணைத்து; ***இன்னல் வேலை புக்கு*** - துன்பக் கடலிற் புகுந்து; ***இழிந்து*** - உள்ளே இறங்கி; ***அழுந்துவார்*** - அமிழ்பவராக ஆனார்கள்.

*சனகன் மகள் சானகி, பூவை - உவமவாகுபெயர். பொன் போன்றார் - தேவியர்; போற்றிப் பாதுகாக்கப்படுபவர் என்னும் பொருளில், தழுவிய அளவில் துயரம் மீக்கூர்ந்தபடியை இவ்வாறு உரைத்தார். 92*

*யாவரும் இராமனை வந்து அடைதல்*

***2467. சேனை வீரரும், திரு நல் மா நகர்***
***மான மாந்தரும், மற்றுளோர்களும்,***
***ஏனை வேந்தரும், பிறரும், யாவரும்,-***
***கோனை எய்தினார் - குறையும் சிந்தையார்.***

***சேனை வீரரும்*** *- படைவீரர்களும்;* ***திருநல் மாநகர்*** *- செல்வம் நிறைந்தநல்ல பெரிய அயோத்தி நகரில் உள்ள;* ***மான மாந்தரும்*** *- பெருமை படைத்தவர்களும்;* ***மற்றுளோர்களும்*** *- வேறுள்ளவரும்;* ***ஏனை வேந்தரும்*** *- பிற அரசர்களும்;* ***பிறரும்யாவரும்-; கோனை*** *- இராமனை;* ***குறையும் சிந்தையார்*** *- அழிந்து வருந்தும் மனம்உடையவராய்;* ***எய்தினார்*** *- வந்தடைந்தார்கள்.*

*மான மாந்தர் என்பதற்கு முன்பு கூறியாங்கு அமைச்சர்கள் எனினும் அமையும். அனைவரும் துக்கத்தில் மூழ்கியவராய் இராமனை நெருங்கிவந்து சேர்ந்தார்கள் என்க.* ***93***

*சூரியன் மறைதல்*

***2468. படம் செய் நாகணைப் பள்ளி நீங்கினான்***
***இடம் செய் தொல் குலத்து இறைவன் ஆதலால்,***
***தடம் செய் தேரினான், தானும் நீரினால்***
***கடம் செய்வான் என, கடலில் மூழ்கினான்.***

***படம் செய் நாகணைப் பள்ளி*** *- ஆயிரம் படங்களை விரிக்கும் தன்மையுள்ளஆதிசேடனாய படுக்கையை;* ***நீங்கினான்*** *- நீங்கி அயோத்தியில் வந்து அவதாரம் செய்த(திருமால் ஆகிய) இராமன்;* ***இடம் செய்*** *- அவதரிப்பதற்கு இடமாகக் கொண்ட;* ***தொல் குலத்து*** *- பழமையான சூரிய குலத்துக்கு;* ***இறைவன் ஆதலால்*** *- தான் முதல்வன்ஆனபடியால்;* ***தடம் செய் தேரினான்*** *- பெரிய வழியில் செல்லும் பெருந்தேரையுடைய சூரியன்;* ***தானும் நீரினால் கடம் செய்வான் என*** *- தானும் (தயரதன் இறந்தமைக்கு)நீரினால் கடன் செய்பவனைப் போல;* ***கடலில் மூழ்கினான்*** *- அத்தமனக் கடலில் முழுகிமறைந்தான்.*

*தயரதன் சூரிய குலத்தவன் ஆதலால் தன் குலத்தவன் இறந்தமை பற்றிச் சூரியன் தானும் நீரில் கடன் செய்ய முழுகுவதுபோல மறைந்தான் என்று தற்குறிப்பேற்றமாகக் கூறினார். திருமால் நாகணைப் பள்ளி நீங்கி அவதரிக்க இடம் தந்த குலம் சூரிய குலம் என உரைக்க. நாக அணை - நாகணை; விகாரம் "நஞ்சுபதி கொண்ட வள நாகணையினான்" (சிந்தா. 287.) காண்க. கடம் - கடன்- போலி.* ***94***

*மறு நாள் யாவரும் சூழ இருக்க, இராமன் பரதனை, வினாவுதல்*

***2469. அன்று தீர்ந்தபின், அரச வேலையும்,***
***துன்று செஞ் சடைத் தவரும், சுற்றமும்,***
***தன் துணைத் திருத் தம்பிமார்களும்,***
***சென்று சூழ ஆண்டு இருந்த செம்மல்தான்***

***அன்று தீர்ந்தபின்*** - அன்றையநாள் கழிந்தபிறகு (மறுநாள்); ***அரச வேலையும்*** - அரசர் கூட்டமும்; ***துன்று செஞ்சடைத் தவரும்*** - நெருங்கிய சிவந்த சடையினை உடையமுனிவர்களும்; ***சுற்றமும்*** - சுற்றத்தினரும்; ***தன் துணைத் திருத் தம்பிமார்களும்*** - தன்னுடைய இணைபிரியாத சீரிய இளவல்களும்; ***சென்று சூழ*** - சென்று சற்றிலும் இருக்க; ***ஆண்டு இருந்த*** - அங்கே வீற்றிருந்த; ***செம்மல்*** - தலைமையோனாய இராமன்...(மேல் முடியும்)

*அரச வேலை - அரசர் வேலை. ஈறுகெட்டது. வேலை - கடல் என்பது ஈண்டுக் கூட்டத்தை உணர்த்தியது. உருவகம். மூவரையும் ஒருசேரத் தம்பிமார்கள் என்றார். செம்மல்தான் 'பரிந்து கூறினான்' (2470) என முடியும்.* ***95***

***2470. 'வரதன் துஞ்சினான்; வையம் ஆணையால்,***
***சரதன் நின்னதே; மகுடம் தாங்கலாய்,***
***விரத வேடம், நீ என்கொல் வேண்டுவான்?***
***பரத! கூறு' எனாப் பரிந்து கூறினான்.***

***'பரத!-; வரதன் துஞ்சினான்*** - மேலானவனாய தயரதன் இறந்தான்; ***வையம்*** - நிலவுலகம்; ***ஆணையால்*** - (அவனது ) கட்டளையால்; ***சரதம்*** - உண்மையாக; ***நின்னதே*** - நின்னுடையதே; (அவ்வாறிருக்க) ***நீ மகுடம் தாங்கலாய்*** - நீ மணிமுடிசூடாமல்; ***விரத வேடம்*** - தவ வேடத்தை; ***வேண்டுவான்*** - விரும்பி அணிந்தது; ***என்கொல்?*** - எதனால்'; ***கூறு' -*** சொல்வாய்; ***எனா*** - என்று; ***பரிந்து*** - அன்பு கொண்டு; ***கூறினான்*** - கேட்டு மொழிந்தான்.

*வரதன் - வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுப்பவன் எனலும் ஆம். "ஈந்தே கடந்தான் இரப்போர்க் கடல்" (172.) என்றார் முன்னும். வேண்டுவான் எதிர்கால வினையெச்சம்; இங்குத் தொழிற்பெயர்த் தன்மையாய் வந்தது. 'வேண்டுதல் என் சொல்' என உரைக்க.* ***96***

*பரதன் தன் கருத்தை விளக்கி உரைத்தல்*

***2471. என்றலும், பதைத்து எழுந்து, கைதொழா***
***நின்று, தோன்றலை நெடிது நோக்கி, ' நீ***
***அன்றி யாவரே அறத்து உளோர்? அதில்***
***பின்றுவாய் கொலாம்?' என்னப் பேசுவான்;***

***என்றலும்*** - என்று இராமன் கேட்டவளவில் (பரதன்); ***பதைத்து*** - துடித்து; ***எழுந்து -; கை தொழா நின்று*** - கைகூப்பி வணங்கி; ***தோன்றலை நெடிது நோக்கி*** - இராமனை நெடுநேரம் பார்த்து; ***நீ அன்றி*** - நீ யல்லாமல்; ***அறத்து உளோர்*** - தருமவழியில் பிறழாமல் நிற்பார்; ***யாவர்*** - யார் இருக்கிறார்கள்; ***அதில்*** - அவ்வறவழியில்; ***பின்றுவாய் கொல்'*** - நீயும் பின்னிடுவாயோ; ***என்ன*** - என்று; ***பேசுவான்*** - மேலும் கூறுவான் ஆயினன்.

*இராமனும் இப்படிக் கேட்டுவிட்டானே என்பது பதைப்புக்கும், நெடிது நோக்கியமைக்கும் காரணம், அறவழியில் மேற்சொல்ல முடியாமல் பின்தங்கி விடுதலைப் 'பின்றுவாய்' என்றான். 'கொல்' ஐயவினா.'ஆம்' 'ஏ' அசைகள். 97*

***2472.** **'மனக்கு ஒன்றாதன வரத்தின் நின்னையும்,***
***நினக்கு ஒன்றா நிலை நிறுவி, நேமியான் -***
***தனைக் கொன்றாள் தரும் தனையன் ஆதலால்,***
***எனக்கு ஒன்றா, தவம் அடுப்பது எண்ணினால்?***

***'மனக்கு ஒன்றாதன** - (சான்றோர்) மனத்துக்குப் பொருத்தம் இல்லாதனவாகிய; **வரத்தின்** - வரத்தினால்; **நின்னையும் நினக்கு ஒன்றாநிலை நிறுவி** - உன்னையும்உனக்குப் பொருந்தாத நிலைமையில் நிறுத்தி; **நேமியான்தனை** - சக்கரவத்தியாகியதயரதனை; **கொன்றாள்** - கொன்ற கைகேயி; **தரும்** - பெற்ற; **தனையன்** -மகன்; **ஆதலால் -; எனக்கு-; எண்ணினான்** - நினைத்தால்; **தவம்** - விரதவொழுக்கத்தை; **அடுப்பது** - மேற்கொள்ளுவது; **ஒன்றா** - பொருந்தாது.*

*'ஒன்றா' என்பது 'ஒன்றாது' என்பதன் விகாரம். நான் தவம் மேற் கொள்வது பொருந்தாது என்று கருதியோ இவ்வாறு என்னை வினாவினாய் என்பது குறிப்பு. முறைமை தவறியதைக் கேட்ட வரம் ஆதலின் 'மனக்கு ஒன்றாதன வரம்' என்றான். 98*

***2473.** **'நோவது ஆக இவ் உலகை நோய் செய்த***
***பாவகாரியின் பிறந்த பாவியேன்,***
***சாவது ஒர்கிலேன்; தவம் செய்வேன் அலேன்;***
***யாவன் ஆகி, இப் பழிநின்று ஏறுவேன்?***

***நோவது ஆக** - வருந்துவதாக; **இவ் உலகை** - இந்த உலகத்தை; **நோய்செய்த** - துன்புறுத்திய; **பாவகாரியின்** - பாவத்தைச் செய்தவனிடத்தில்; **பிறந்த -; பாவியேன்** - பாவியாகிய யான்; **சாவது ஒர்கிலேன்** - சாகத்துணிந்தேனில்லை; **தவம் செய்வேன் அலேன்** - தவம் செய்வதற்குத் தக்கவனும் அல்லேன்; **யாவன் ஆகி இப்பழி நின்று ஏறுவேன்?** - (அப்படியானால்) எத்தன்மையானாகி இந்தப்பழியிலிருந்து நீங்குவேன்?*

*பழிநீங்குவது இறப்பினாலோ பிராயச்சித்தமாகத் தவம் செய்வதனாலோ ஆகவேண்டும்.இரண்டும் இல்லையானால் என் பழியை எவ்வாறுதான் போக்கிக் சொள்வேன் எனப் பரதன் மனம்கலங்கினான். பாவகாரி - பாவி.*
*99* ***2474.** **'நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும்,***
***பொறையின் நீங்கிய தவமும், பொங்கு அருள்***
***துறையின் நீங்கிய அறமும், தொல்லையோர்***
***முறையின் நீங்கிய அரசின் முந்துமோ?***

***'நிறையின் நீங்கிய** - கற்பு நெறிவிலகிய; **மகளிர் நீர்மையும்** - பெண்களின் தன்மையும்; **பொறையின் நீங்கிய தவமும்** - பொறுமையினின்று விலகிய தவவொழுக்கமும்; **பொங்கு அருள் துறையின் நீங்கிய** - விளங்குகின்ற கருணைவழியிலிருந்து விலகிய; **அறமும்** - தருமமும்; **தொல்லையோர்** -*

*முன்னோர்களது;* ***முறையின் நீங்கிய*** *- முறைமையிலிருந்து விலகிய;* ***அரசின்*** *- அரசாட்சியைக்காட்டிலும்;* ***முந்துமோ*** *- (கொடுமையில் முற்படுமோ? (முற்படாது என்றபடி)*

*அரசு முறைமையில் தவறுதல் மற்றவற்றைக் காட்டிலும் பெருங்கேடு பயப்பதென்றான்;பிறவற்றையும் நெறிவழி நிற்கச் செய்வது அரசின் பாற்பட்ட தாதலால். "மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் இல்வழி இன்றாம்" மணி - 22 - 208- 9,) என்பதை ஈண்டுக்கருதுக.அறத்தின் பயன்அருளே. அருளில்லான் அறம்செய்தல் என்பது நனைப்புக்கிடம் தருவது. "அருளால் அறம் வளரும்" (அறநெறி. 142) என்பதையும் காண்க.* ***100***

***2475. 'பிறந்து நீயுடைப் பிரிவு இல் தொல் பதம்***
***துறந்து, மா தவம் தொடங்குவாய் என்றால்,***
***மறந்து, நீதியின் திறம்பி, வாளின் கொன்று***
***அறம் தின்றான் என, அரசுஅது ஆள்வெனோ?***

***'பிறந்து*** *- (சக்கரவர்த்திக்கு மூத்த மகனாகப் ) பிறந்து;* ***நீயுடைப் பிரிவு இல் தொல் பதம்*** *- நீ உரிமையாகப் பெற்றுடை உன்னைப் பிரிதல் இல்லாத பழையதாகிய அரசபதவியை ;* ***துறந்து*** *- கைவிட்டு;* ***மாதவம் தொடங்குவாய் என்றால்*** *- நீயேபெரிய தவத்தைச் செய்யத் தொடங்குவாயெனின்;* ***மறந்து*** *- அறிவு கெட்டு;* ***நீதியின்திறம்பி*** *- நீதிக்கு மாறுபட்டு;* ***வாளின் கொன்று*** *- வாளால் கொலை செய்து;* ***அறம் தின்றான் என*** *- அறத்தை அழித்தவன் என்று சொல்லுமாறு;* ***அரசு அது ஆள்வெனோ?*** *- உரிமையில்லாத அரசை ஆள்வேனோ? (ஆளேன் என்றானாம்)*

*உரிமையும் உறவும் உடைய நீயே அரச பதவி கைவிட்டுத் தவம் செய்வாய் ஆனால், அஃதில்லாத யான் ஆளத் தொடங்குதல் வலிந்து கைப்பற்றி முறை தவறி ஆள்வதாக அன்றோ முடியும் என்றானாம். வாளின் கொன்று - வாளால் மிரட்டி என்னும் பொருளில் வந்துள்ளது. அறம் தின்றல் - தருமத்தை அடியோடழித்துவிடல்.*
***101***

***2476. 'தொகை இல் அன்பினால் இறைவன் துஞ்ச, நீ***
***புகையும் வெஞ் சுரம் புகுத, புந்தியால்***

***வகை இல் வஞ்சனாய் அரசு வவ்வ, யான்***
***பகைவனேகொலாம்? இறவு பார்க்கிறேன்!***

**'தொகை இல் அன்பினால்** *- (உன்னிடத்தில்) எண்ணமுடியாத* **அன்பினால் இறைவன்துஞ்ச** *- தயரதன் இறக்க;* **நீ புகைஇல் வெஞ்சுரம் புகுத** *- நீ புகையில்லாமல் எரியும்கொடுங்சுரத்தில் சேர்ந்திட;* **புந்தியால்** *- புத்தியினால்;* **வகை இல் வஞ்சனாய்** *- வகுத்தற்கு முடியாத வஞ்சனை உடையனாய்;* **அரசு வவ்வ** *- உன் அரசைக்கவாந்துகொள்வதற்கு;* **யான் இறவு பார்க்கின்றேன்** *- நான் சோர்கின்ற சமயம்பார்த்துக் காத்திருக்கிறவன் ஆகிறேன்;* **பகைவனே கொல்** *- பகைவனேயோ?*

*தந்தையும் உரிமை மைந்தனும் இல்லாதபொழுது அரசைக் கைப்பற்றி தல் பகைவர் செயலேயாம். சோர்ந்த சமயம் பார்த்து இருந்து அரசு கைப்பற்றுவார் அவரே என்றான். இறவு பார்த்தல் - சோர்ச்சியறிதல்.* ***102***

## *2477. 'உந்தை தீமையும், உலகு உறாத நோய்*
## *தந்த தீவினைத் தாய் செய் தீமையும்,*
## *எந்தை ! நீங்க, மீண்டு அரசு செய்க' எனா,*
## *சிந்தை யாவதும் தெரியக் கூறினான்.*

***'எந்தை*** *- எம் தலைவனே!;* ***உந்தை*** *- உனக்குத் தந்தையாகிய தசரதன்;* ***தீமையும்*** *- (செய்த) தீமையும்;* ***உலகு*** *- உலகத்துக்கு;* ***உறாத நோய்*** *-இதுவரை வராத துன்பத்தை; தந்த - கொடுத்த;* ***தீவினைத் தாய்*** *- பாவ வடிவமான என்தாய் கைகேயி;* ***செய் தீமையும்*** *- செய்த தீமையும்;* ***நீங்க*** *- எல்லாம்போக;* ***மீண்டு*** *- நாட்டுக்குத் திரும்பிவந்து;* ***அரசு செய்க'*** *- அரசாட்சிசெய்வாயாக;* ***எனா*** *- என்று;* ***சிந்தை யாவதும் தெரிய*** *- தன்மனக்கருத்து முழுதும் விளங்கும்படி;* ***கூறினான்*** *- சொன்னான்.*

*இராமன் பிரிவினால் உலகைத் துன்புறச் செய்தது தயரதன் செய்த தீமை. தயரதனை 'உந்தை' என்றான். இங்கு இராமனை மீள அழைப்பதற்கு ஒரு காரணம் காட்ட விரும்புகின்றவன் ஆதலின், 'உலக்குத் தந்தை செய்த தீமை' என்று அவனோடு நெருங்கிச் சொன்னான் என்க. இனி "மன்னேயாவான் வரும் அப்பரதன் தனையும் மகன் என்று உன்னேன்" எனத் துறந்தான். ஆதலால், அதுபற்றி உந்தை என்றான் எனலும் ஆம். இராமன் மீண்டு வந்து அரசேற்றலால் விளையும் நலம் இது எனக் கூறினான்.* ***103***

*பரதன் வேண்டுகோளை இராமன் மறுத்துரைத்தல்*

## *2478. சொற்ற வாசகத் துணிவு உணர்ந்த பின்,*
## *'இற்றதோ இவன் மனம்?' என்று எண்ணுவான்,*
## *'வெற்றி வீர! யான் விளம்பக் கேள்' எனா,*
## *முற்ற நோக்கினான் மொழிதல் மேயினான்.;*

***சொற்ற*** *- (இவ்வாறு பரதன்) சொன்ன;* ***வாசகம்*** *- சொற்களின்;* ***துணிவு*** *- உறுதியை;* ***உணர்ந்த பின்*** *- அறிந்த பிறகு (இராமன்);* ***'இவன் மனம்*** *- இப்பரதனது மனம்;* ***'இற்றதோ'*** *- இன்னத்தன்மை உடையதோ;* ***என்று எண்ணுவான்*** *- என்று கருதுபவனாகி (அவனை நோக்கி);* ***'வெற்றி வீர!*** *- வெற்றியுடைய வீரனே;* ***யான்விளம்பக் கேள்' எனா*** *- யான் சில வார்த்தைகள் சொல்லக் கேட்பாயாக என்று சொல்லி;* ***முற்ற நோக்கினான் மொழிதல் மேயினான்*** *- முழுவதும் நன்கு பார்த்துச் சொல்லத் தொடங்கினான்.*

*'முற்ற நோக்கினான்' என்பதனை இராமனுக்கு ஒரு பெயர் ஆக்கினும் அமையும். "மண்ணை என் வயின் தரும்" (2419) என்று இராமன் முன்னர்க் கூறினானாயினும், பரதன் தான் அரசாளுதல் அறத்திற்கு விரோதம் என்று கருதும் எண்ணம் உடையவனாயிருக்கின்றான் என்பது பரதன் கூற்றால் இப்போது இராமனுக்கு விளங்கியது ஆதலின், பரதன் அரசாளுவது அறமே என்றறிய உணர்த்திச் சில*

*வார்த்தைகள் இராமன் கூறத் தொடங்கினான். அது இதன் பின்வரும் ஏழு செய்யுள்களில் கூறப்பெரும்.* ***106***

## *2479. ‘முறையும், வாய்மையும், முயலும் நீதியும்,*
## *அறையும் மேன்மையோடு அறனும் ஆதி ஆம்*
## *துறையுள் யாவையும், கருதி நூல் விடா*
## *இறைவர் ஏவலால் இயைவ காண்டியால்.*

***முறையும்*** *- நல்லொழுக்கமும்;* ***வாய்மையும்*** *- சத்தியமும்;* ***முயலும் நீதியும்*** *- எல்லோரும் அடைய முயலும் நியாயமும்;* ***அறையும்*** *- சிறப்பித்துச்சொல்லப்பெறும்;* ***மேன்மையோடு*** *- மேன்மையும்;* ***அறனும்*** *- தருமமும்;* ***ஆதிஆம்*** *- இவை முதலாகிய;* ***துறையுள் யாவையும்*** *- அறத்துறையுள் சேர்ந்த எல்லாம்;* ***கருதி நூல் விடா இறைவர்*** *- வேத வழியிற் சிறிதும் பிறழாத அரசர்களது;* ***ஏவலால்*** *-கட்டளையாலே;* ***இயைவ-*** *உண்டாவன என்பதை;* ***காண்டி*** *- அறிவாயாக.*

*இறைவர் கருதிவழி பிறழாதவர் ஆயின் அவர் ஏவுவனவே அறத் துறையாம் ஆதலின் தயரதன் ஏவல்வழி பரதன் அரசாளுவது அறமே என்று பரதனுக்கு இராமன் உணர்த்தினான்* ***105***

## *2480. ‘பரவு கேள்வியும், பழுது இல் ஞானமும்,*
## *விரவு சீலமும், வினையின் மேன்மையும் -*
## *உர விலோய்! - தொழற்கு உரிய தேவரும்,*
## *“குரவரே”எனப் பெரிது கோடியால்.*

***‘உர விலோய்*** *- வலிமை பொருந்திய வில்லை உடையவனே!;* ***பரவு கேள்வியும்*** *- புகழ்ந்து சொல்லப்படும் நூற்கேள்வியும்;* ***பழுது இல் ஞானமும்*** *- குற்றமற்றநல்லுணர்வும்;* ***விரவு சீலமும்*** *- உடன் கொள்ளத்தக்க ஒழுக்கமும்;* ***வினையின்மேன்மையும்*** *- செய்தொழிலின் சிறப்பும்;* ***தொழற்கு உரிய தேவரும்*** *- வணங்குதற்குஉரிய தேவர்களும்;* ***“குரவரே”*** *- பெரியோர்களே;* ***என*** *- என்று;* ***பெரிது கோடி*** *- மிகவும் மனத்திற் கொள்வாய்.*

*கேள்வி, ஞானம், சீலம், வினை மேன்மை என்பனவற்றைக் ‘குரவர்’ என்றது உபசாரவழக்கு. பழுது - ஐயம், திரிபு. ஒன்றோ, மற்றொன்றோ எனல் ஐயம்; ஒன்றைப் பிறிதாக உணர்தல் திரிபு; இவை இரண்டும் இல்லாத மெய்புணர்வே ஞானமாம். குரவர் இவர் என்பதைப் பின் கூறுவர்.* ***106***

## *2481. ‘அந்த நல் பெருங் குரவர் ஆர் எனச்*
## *சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினால்,*
## *“தந்தை தாயர்” என்று இவர்கள்தாம் அலால்,*
## *எந்தை! கூற வேறு எவரும் இல்லையால்.*

***‘எந்தை*** *- என் அன்பிற் சிறந்த பரதனே!;* ***அந்த நல்பெருங் குரவர்*** *- நான் கூறிய சிறந்த பெருமையுடைய குரவர்கள்;* ***ஆர் என*** *- யார் என்று;* ***சிந்தைதேர்வுறத் தெரிய நோக்கினால்*** *- மனத்தால் மிக ஆராய்ந்து விளக்கப் பார்த்தால்;* ***“தந்தை தாயர்” என்று***

***இவர்கள் தாம் அலால்*** - *தந்தையும் தாயுமே அல்லாமல்;* ***கூற*** - *சிறப்பித்துக் கூற* ***;*** ***வேறு எவரும் இல்லை*** - *வேறு ஒருவரும் இல்லை.*

*'தந்தை தாயர்' - 'உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே பலர் சொல் நடைத்து' என்பதனால் (தொல். சொல். எச்ச. 25.) பொதுத்திணையாயினும் முடிந்தது. தம்பியை எந்தை என்றது அன்புபற்றி வந்த மரபு வழுவமைதி. குரவர் ஐவர் ஆயினும் (தாய், தந்தை, தம்முன், ஆசான், அரசன்) முன்னறியப் படுதலின், தாய் தந்தை அளவுக்கு ஏனையோர் சிறப்பிலர் என்பது கருத்து. அதுவே 'தேர்வுறத் தெரிய நோக்கினால்' என்பதற்கும் கருத்தாம் என்க. 'அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன், நிகரில் குரவர் இவ் ஐவர் இவர் இவரைத், தேவரைப் போலத் தொழுது எழுக என்பதே, யாவரும் கண்ட நெறி" (ஆசாரக்.16.) என்பது கொண்டு குரவர் ஆவார் இவர் என உணர்க. 'ஆல்' ஈற்றசை.* ***107***

***2482. 'தாய் வரம் கொள, தந்தை ஏவலால்,***
***மேய நம் குலத் தருமம் மேவினேன்;***
***நீ வரம் கொளத் தவிர்தல் நீர்மையோ? -***
***ஆய்வு அரும் புலத்து அறிவு மேவினாய்!***

***ஆய்வு அரும்*** - *ஆராய்தற்கு அரிய;* ***புலத்து*** - *நூற்புலன்களான் ஆகிய;* ***அறிவு*** - *அறிவுணர்வை;* ***மேவினாய்*** - *அடைந்த பரதனே!;* ***தாய் வரம் கொள*** - *தாயாகிய கைகேயி வரம் பெற்றுக்கொள்ள;* ***தந்தை ஏவலால்*** - *தந்தையாகிய தயரதன்கட்டளையாலே;* ***மேய*** - *(தாய், தந்தையராகிய குரவர் சொற்படி நடத்தல் என்கிற)பொருந்திய;* ***நம் குலத் தருமம் மேவினேன்*** - *நம் குலத்திற்குரிய தருமத்தை மேற்கொண்டேன்;* ***நீ வரம் கொள -*** *நீ வேண்டிக்கொள்ள;* ***தவிர்தல்*** - *(அவ்அறநெறியை) விலக்கி ஒழுகுதல்;* ***நீர்மையோ*** - *நற்பண்பு ஆகுமோ? (நீயே கூறுக)*

*குரவர் சொற் கேட்டல் அறனாதல் நூன்முடிபு ஆதலின் நான் மேற் கொண்டது அறனே.நின்சொற் கேட்டல் எவ்வாறு அறனாகும் என்று மறுத்தான் இராமன். இனிப் பரதனுக்கும் தாய்வரங்கொளத் தந்தை ஏவலால் அரசாளுதல் அறமே என்றும் கூறினானாம். நுண்ணுணர்வாற் கற்றறிந்து நுல்களாற் பெற்ற ஞானம் கைவரப்பெற்ற நீ அறத்தின் கூறு இதுவே என்பதை அறியாது இராய்என்றானுமாம்.* ***108***

***2783. 'தனையர் ஆயினார் தந்தை தாயரை***
***வினையின் நல்லது ஓர் இசையை வேய்தலோ?***
***நினையல் ஓவிடா நெடிய வன் பழி***
***புனைதலோ? - ஐய! புதல்வர் ஆதல்தான்.***

***'ஐய!*** - *பரதனே;* ***தனையர் ஆயினார்*** - *மகனாகப் பிறந்தவர்கள்;* ***புதல்வர் ஆதல்தான்*** - *புதல்வர் என்னும் சிறப்பினைப் பெறுவது;* ***தந்தை தாயரை*** *-தம் தந்தையை, தாயை;* ***வினையின்*** - *தாம்செய்யும் செயல்களால்;* ***நல்லது ஓர்இசையை வேய்தலோ*** - *நல்லதாகிய ஒரு புகழை அடையும்படி செய்தலாலா? (அல்லது);* ***நினையல்ஓவிடா*** - *என்றும் மனத்தை விட்டு நீங்காத;* ***நெடிய வன் வழி புனைதலோ*** - *நீண்டகொடிய பழியை அணிவிப்பதனாலா? எதனால்?*

*புதல்வர் ஆதல் பெற்றோர்க்கு இசை வேய்தலால்தான் எனின் பெற்றோர் சொல்வழி நின்று செயல் ஆற்றுதலே அதனை உண்டாக்கும்; அவர் சொல்லுக்கு மாறுபடுவது அதனை உண்டாக்காது, பழியை ஆக்கும் என்பதாம். 'தான்' உரையசை. பிறப்பால் தனையர் ஆயினும் செயல்சிறப்பால் புதல்வர் ஆவர் என்பது கருத்து.*
***109***

***2484. 'இம்மை, பொய் உரைத்து, இவறி, எந்தையார்***
***அம்மை வெம்மை சேர் நரகம் ஆள, யான்,***
***கொம்மை வெம் முலைக் குவையின் வைகி வாழ்***
***செம்மை சேர் நிலத்து அரசு செய்வேனோ?***

***எந்தையர்*** *- என் தந்தையார்;* ***இவறி*** *- அரசு ஆசைப்பட்டு;* ***இம்மை*** *- இப்பிறப்பிலே;* ***பொய் உரைத்து*** *- (கைகேயிக்கு வரம் கொடுத்ததை மறுத்துப்) பொய் சொல்லி;* ***அம்மை*** *- மறுமையில்;* ***வெம்மைசேர்*** *- கொடுமை பொருந்திய;* ***நரகம் ஆள*** *- நரகத்தை அனுபவிக்க;* ***யான்-; கொம்மை*** *- திரண்ட;* ***வெம் முலைக் குவையின் வைகி*** *- விரும்பப்படும் முலைக்குவட்டின்மேல்தங்கி;* ***வாழ்*** *- வாழ்ந்து;* ***செம்மை சேர் நிலத்து*** *- (இதுகாறும்) செம்மைபொருந்திய நாட்டின்கண்;* ***அரசு செய்வேனோ*** *- அரசு செய்துகொண்டிருப்பேனோ? (இரேன்).*

*இவறுதல் - கைகேயிக்கு கொடுத்த வரத்தை நிறைவேற்றாது உலோபம் செய்தல். நான் அரசாள முற்பட்டால் எந்தையார் பொய்யுரைத்தாராய் நரகம் சேர்வர். தந்தையை நரகுக்கனுப்பித் தனையர் அரசாளுதல் தக்கதோ? புதல்வர் செய்யும் கடனோ? என்றான் இராமன். அரசாட்சியை இன்பம் அனுபவித்தல் என்னும் கருத்தில் "கொம்மை வெம்முலைக் குவையின் வைகி வாழ் அரசு" என்றான் என்க.* ***110***

***2485. 'வரன் நில் உந்தை சொல் மரவினால், உடைத்***
***தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்,***
***உரனின் நீ பிறந்து உரிமை ஆதலால்,***
***அரசு நின்னதே; ஆள்க" என்னவே,-***

***'வரன்*** *- (கைகேயிக்குக் கொடுத்த) வரத்திலே;* ***நில்*** *- நிற்கின்ற;* ***உந்தை சொல் மரபினால்*** *- உன் தந்தையாகிய தயரதன் சொன்ன சொல் முறைப்படி;* ***உடைத்தரணி*** *- அவனுடையதான உலகம்;* ***நின்னது என்ற இயைந்த தன்மையால்*** *- பரதனாகியஉன்னுடையது என்று வந்து பொருந்திய தன்மையாலும்;* ***நீ-; உரனின்*** *- வலிமையோடு;* ***பிறந்து -*** *(எனக்கு அடுத்த தம்பியாகப்) பிறந்து;* ***உரிமை ஆதலால்*** *- ஆட்சிஉரிமை பெறுதலாலும்;* ***அரசு*** *- அரசாட்சி;* ***நின்னது*** *- நின்னுடையது;* ***ஆள்க' -*** *ஆள்வாயாக;* ***என்ன*** *- என்று இராமன் சொல்ல...*

*இராமன், பரதன் ஆள வேண்டும் என்பதற்கு இங்கு இரண்டு காரணங்கள் கூறினான் எனலாம். வரத்தால் பரதனுக்கு அரசு சேர்ந்தது என்பது ஒன்று, வரத்தால் இராமன் காடு செல்ல அடுத்த தம்பியாகப் பிறத்தலின் ஆட்சியுரிமை இயல்பாகவே அவனை வந்தடைகிறது என்பது மற்றொன்று. ஆகவே, 'அரசு நின்னதே ஆள்க' என்றனன், இதனை மறுத்தல் தந்தைக்கும் தாய்க்கும் மாறுபட்டு அறத்தின் வழுவுதலாகும் என்பதையும் புலப்படுதினான். 'ஏ' காரம் தேற்றம்.* ***111***

*பரதன் 'யான் தர நீ முடிசூட்டு' என இராமனை வேண்டல்*

***2486. 'முன்னர் வந்து உதித்து, உலகம் மூன்றினும்***
***நின்னை ஒப்பு இலா நீ, பிறந்த பார்***
***என்னது ஆகில், யான் இன்று தந்தனென்'***
***மன்ன! போந்து நீ மகுடம் சூடு' எனா,***

***'மன்ன!*** *- அரசனே!;* ***முன்னர் வந்து உதித்து*** *- எனக்கு முன்னே வந்து பிறந்து;* ***உலகம் மூன்றிலும்*** *- மூன்றுலகத்தும்;* ***நின்னை ஒப்பு இலா நீ*** *- நின்னை ஒப்பாவாரைப் பெற்றிலாத நீ;* ***பிறந்த-; பார்*** *- இப்பூமி;* ***என்னது ஆகில்*** *- (நீ சொன்னபடி) என்னுடைய தாயின்;* ***யான் இன்று தந்தனென்*** *- நான்இப்பொழுது அதனை உனக்குக் கொடுத்துவிட்டேன்;* ***நீ போந்து மகுடம் சூடு'*** *- நீ வந்துமுடிசூடுவாயாக;* ***எனா*** *- என்று சொல்லி... (மேல் முடியும்).*

*'நீ பிறந்த பார்' என்று சொல்லி, 'முதலில் இந்தப் பூமியில் நீ பிறந்தபடியால் இது உனக்கே உரிமை; பின்னரே எனக்கு உரிமையாம்' என்பது பரதன் குறிப்பு. மன்ன! என்று பலமுறையும்பரதன் இப்பகுதியில் இராமனை அழைப்பது குறிக்கொளத்தக்கது.* ***112***

***2487. 'மலங்கி வையகம் வருந்தி வைக, நீ,***
***உலம் கொள் தோற் உனக்கு உறுவ செய்தியோ?***
***கலங்குறாவணம் காத்தி போந்து' எனா,***
***பொலம் குலாவு தாள் பூண்டு, வேண்டினான்.***

***'வையகம்*** *- நிலவுலகம்;* ***மலங்கி*** *- வருந்தி நிற்க;* ***நீ-; உலம்கொள் தோள் உனக்கு உறுவ செய்தியோ?*** *- கற்றூணைப் போன்ற தோள்களை உடைய உனக்குரியதகுதியானவற்றைச் செய்வாயோ?;* ***கலங்குறாவணம்*** *- (உலகம்) கலங்காதபடி;* ***போந்து காத்தி'*** *- வந்து காப்பாற்றுவாயாக;* ***எனா-*** *என்று;* ***பொலம் குலாவு தாள்*** *- பொன் மயமான அழகு விளங்குகிற திருவடிகளை;* ***பூண்டு*** *- பிடித்துக் கொண்டு;* ***வேண்டினான்-.***

*'உலம் கொள் தோள்' உலகைத் துன்பம் நீக்கித் காத்தற்கே அன்றித் தவம்செய்தற்கன்று எனக் குறிப்பால் உணர்த்தினானாம்.* ***113***

*பரதனை அரசாட்சி ஏற்குமாறு இராமன் ஆணையிடல்*

***2488. 'பசைந்த சிந்தை நீ பரிவின் வையம் என்***
***வசம் செய்தால், அது முறைமையோ? வசைக்கு***
***அசைந்த எந்தையார் அருள, அன்று நான்***
***இசைந்த ஆண்டு எலாம் இன்றொடு ஏறுமோ?***

***'பசைந்த சிந்தை நீ*** *- (என்பால்) அன்புற்ற மனத்தை உடைய நீ;* ***பரிவின்*** *- (உன்) அன்பினால்;* ***வையம்*** *- உலகத்தை;* ***என் வசம் செய்தால் -*** *என்னுடையதாகச் செய்தால்;* ***அது முறைமையோ?*** *- அது நீதியாகுமோ?;* ***வசைக்கு அசைந்த*** *- பழிக்கு அஞ்சிய;*

***எந்தை யார்-*** *எம் தந்தையார்;* ***அருள*** *- (கைகேயிக்கு)வரம் அளித்தருள;* ***அன்று நான் இசைந்த ஆண்டு எலாம்*** *- அன்று அதற்குஉடன்பட்டுக் (காடு புகுவதாக) ஏற்றுக்கொண்ட பதினான்கு ஆண்டுகளும்;* ***இன்றொடு ஏறுமோ? -*** *இன்றோடு முடிந்துபோய்விடுமோ?*

*ஏற்றுக்கொண்டதை யான் நிறைவேற்ற நீ உதவி செய்தல் வேண்டும் என்று பரதனிடம் தெரிவித்தான் இராமன். அப்படியில்லையேல் தந்தையார் மேல் பிழிவந்து சேரும். அவரே 'வசைக்கு அசைந்த' எந்தையார் - பழிக்கு அஞ்சுகிறவர் என்றும் குறிப்பித்தான்.* ***114***

### *2489. 'வாய்மை என்னும் ஈது அன்றி, வையகம், "தூய்மை" என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ? தீமைதான், அதின் தீர்தல் அன்றியே, ஆய் மெய்யாக; வேறு அறையல் ஆவதே?*

***'வையகம்*** *- உலகம்;* ***வாய்மை என்னும் ஈது அன்றி*** *- சத்தியம் என்கிற இதுவொன்றில்லாமல்;* ***"தூய்மை என்றும் ஒன்று உண்மை சொல்லுமோ?*** *- "தூய்மை என்கின்றஒன்று தனியே இருப்பதாகச் சொல்லுமா?;* ***தீமைதான்*** *- தீய குணம் என்பது;* ***அதின்தீர்தல் அன்றியே*** *- அந்தச் சத்தியத்தை விட்டு நீங்குதல்தானே அல்லாமல்;* ***ஆய்*** *- ஆராய்கின்ற;* ***மெய ஆக*** *- உண்மையாக;* ***வேறு அறையல் ஆவதே*** *- சத்தியமன்றிவேறு ஒன்றைச் சொல்ல இயலுமா ? (இயலாது என்றபடி.)*

*'வாய்மையே தூய்மையாம்; வாய்மைதவிரத் தூய்மை தனிவேறில்லை; தீமை என்பது வாய்மையின் தவறுவதே அன்றி வேறன்று; சத்தியத்துக்கு இணையாக, மாற்றாக வேறொன்றைச் சொல்ல இயலாது. ஆகவே, தந்தையார் உரையை, சத்தியத்தைக் காப்பதுதான் என்க தூய்மையாகும். வேறு இல்லை' என்றான் இராமன். 'புறத்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை வாய்மையாற் காணப்படும்' (குறள். 298) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.* ***115***

### *2490. 'எந்தை ஏவ, ஆண்டு ஏழொடு ஏழ் எனா வந்த காலம் நான் வனத்துள் வைக, நீ தந்தபாரகம் தன்னை, மெய்ம்மையால் அந்த நாள் எலாம் ஆள், என் ஆணையால்.*

***'எந்தை ஏவ -*** *என் தந்தை கட்டளை இட்டவாறு;* ***ஆண்டு ஏழொடு ஏழ் எனா*** *- பதினான்கு ஆண்டுகள் என்று;* ***வந்த காலம்*** *- அமைந்த காலம்வரை;* ***நான் வணத்துள் வைக*** *- நான் காட்டில்தங்கியிருக்க;* ***நீ -; தந்த பாரகம் தன்னை*** *- தந்தை அளித்த அரசை;* ***மெய்ம்மையால்*** *- (தந்தையின்) சத்தியம் தவறாமல்;* ***அந்த நாள் எலாம்*** *- அந்தப் பதினான்கு ஆண்டுகளும்;* ***என் ஆணையால்*** *- என் கட்டளையால்;* ***ஆள்*** *- ஆள்வாயாக. 'நீ தந்த பாரகம் - எனக்கு நீ கொடுத்த அரசு' எனினும் ஆம். இருவருமாக இணைந்துதந்தையின் வாய்மை தவறாது காத்தலே அறமாம் என இராமன் பரதன்பால் கூறியதாகக்கொள்க.* ***116***

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***2491. ‘மன்னவன் இருக்கவேயும்,***
***“மணி அணி மகுடம் சூடுக”***
***என்ன, யான் இயைந்தது***
***அன்னான் ஏயது மறுக்க அஞ்சி;***
***அன்னது நினைந்தும்,***
***நீ என் ஆணையை மறுக்கலாமோ?***
***சொன்னது செய்தி; ஐய!***
***துயர் உழந்து அயரல்’ என்றான்.***

***‘ஐய!*** - *பரதனே!;* ***மன்னவன் இருக்கவேயும்*** - *தயரதன் உயிரோடு இருக்கின்றபொழுதிலேயும்;* ***“மணி அணி மகுடம் சூடுக” என்ன*** - *(என்னை) மணிகளால் அழகிய திருமுடியைச்சூடி அரசாள்க என்று தயரதன் பணிக்க;* ***யான் இயைந்தது*** - *நான் உடன் பட்டது; (எதனால்?)* ***அன்னான் ஏயது மறுக்க அஞ்சி*** - *(தந்தையும், மன்னனும் ஆகிய) அவன் ஏவிய ஒன்றைமறுத்தற்குப் பயந்தே (அல்லவா?);* ***அன்னது நினைந்தும்*** - *அதன் உட்கருத்தை நினைந்தபிறகும்;* ***நீ என் ஆணையை*** - *நீ என்னுடைய கட்டளையை;* ***மறுக்கலாமோ*** - *மறுத்தல்செய்யலாமோ?;* ***துயர் உழந்து அயரல்*** - *துன்பத்திற் கலங்கிச் சோர்வு அடையாதே;* ***சொன்னது செய்தி’*** - *நான் சொன்னதைச் செய்வாயாக;* ***என்றான்*** - *என்றுசொன்னான்.*

*‘தாதை அப்பரிசு உரை செய’ (1382.) என்று முன்னர்க் கூறியதை இங்கு நினைவுகூர்க. தந்தையின் இடத்தில் என்னைப் பார்க்கின்ற நீ என் ஆணையை மறுக்கலாகுமோ என்ற பரதனை இராமன் வினாவி அறிவுறுத்தினன். ‘என்னைப் போல உன்னை ஆக்கிக்கொள்’ என்று குறிப்பாற் கூறினான். எனலும் ஆம்.* ***117***

*பதில் உரைக்கத் தொடங்கிய பரதனை விலக்கி வசிட்டன் மொழிதல்*

***2492. ஒள்ளியோன் இனைய எல்லாம்***
***உரைத்தலும், உரைக்கலுற்ற***
***பள்ள நீர் வெள்ளம் அன்ன***
***பரதனை விலிக்கி, ‘பண்டு***
***தெள்ளிய குலத்தோர் செய்கை***
***சிக்கு அறச் சிந்தை நோக்கி,***
***‘வள்ளியோய்! கேட்டி’ என்னா,***
***வசிட்ட மாமுனிவன் சொன்னான்;***

***ஒள்ளியோன்*** - *சீறிய அறிவாளனாகிய இராமன்;* ***இனைய எல்லாம் உரைத்தலும்*** - *இத்தகைய சொற்களையெல்லாம் எடுத்துக் கூறுதலும்;* ***உரைக்கலுற்ற*** - *அவனுக்குப்பதில் கூறுதற்குத் தொடங்கிய;* ***பள்ள நீர் வெள்ளம் அன்ன பரதனை*** - *பள்ளத்தில்தங்கிய நீர்ப் பெருக்கை போன்ற (குணக்கடலாகிய) பரதனை;* ***விலக்கி*** - *(பேசவொண்ணாமல்) தடுத்து நிறுத்தி;* ***வசிட்ட மாமுனிவன்*** - *வசிட்டனாகிய பெருமையுற்றமுனிவன்;* ***‘வள்ளியோய்*** - *வள்ளல் தன்மை உடைய இராமனே!;* ***கேட்டி’*** - *கேட்பாயாக;* ***என்னா*** - *என்று அவனை அழைத்து;* ***‘பண்டு தெள்ளிய குலத்தோர் செய்கை*** - *முன்னைய (சூரிய) குலத்தார்களுடைய செயல்களை எல்லாம்;*

***சிக்கு அற*** - *ஐயம்திரிபின்றி;* ***சிந்தை நோக்கி*** - *அகத்தே உணர்ந்து;* ***சொன்னான்*** - *சொல்லத் தொடங்கினான்.*

*"தள்ளரிய பெருநீதித் தனியாறு புக மண்டும், பள்ளம் எனும் தகையானை" (657) என்று முன்னும் பரதனைக் கூறினார் ஆதலின், 'பள்ள நீர் வெள்ளம் அன்ன பரதன்' என்றார். ஒள்ளியோன்; ஒண்மை - அறிவுடைமை; நுண்மாண் நுழைபுலம் எனலாம். "ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல்" "உலகம் தழீஇயது ஒட்பம்" (குறள். 425, 714.) என்பன காண்க.* ***118***

கலிவிருத்தம்

***2493. 'கிளர் அகன் புனலுள் நின்று, அரி, ஓர் கேழல் ஆய்,***
***இளை எனும் திருவினை ஏந்தினான் அரோ -***
***உளைவு அரும் பெருமை ஓர் எயிற்றின் உள்புரை***
***வளர் இளம் பிறையிடை மறுவின் தோன்றவே.***

***'அரி*** - *திருமால்;* ***ஓர் கேழல் ஆய்*** - *ஒப்பற்ற ஆதிவராக மூர்த்தியாய்;* ***உளைவு அரும்*** - *வருந்துதல் இல்லாத;* ***பெருமை ஓர் எயிற்றின் உள்புரை*** - *பெருமையுடைய ஒப்பற்ற தந்தத்தின் உள்ளிடத்தில்;* ***வளர் இளம் பிறையிடை*** - *வளரும்தன்மை உடைய இளம்பிறைச் சந்திரனிடத்தில்;* ***மறுவின் தோன்ற*** - *களங்கம் போலத்தோன்றும்படி;* ***கிளர் அகன் புனலுள் நின்று*** - *மிக்கு எழுகின்ற அகன்ற பிரளய கால வெள்ள நீரில் இருந்து;* ***இளை எனும் திருவினை*** - *பூமி என்கின்ற பெண்ணை;* ***ஏந்தினான்*** - *எடுத்தருளினான்.*

*பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமத் நாராயணன் ஊழிக்கடலில் மூழ்கியிருந்த பூதேவியை மேலே எடுக்க வராக அவதாரத்தைச் செய்தருளி, தன் கொம்பின் நுனியாலே பூமியை மேல் எடுத்து நிருத்தி யருளினான் என்கின்ற கதை இதனுள் கூறப்பட்டது இதனால் இப்போது நடப்பது ஆதிவராக கல்பம் ஆயிற்று. இளை - பூமி; திரு என்கின்ற சொல் பெண் என்னும் பொதுப் பொருளில் நின்றது. இளை எனும் திரு, பூதேவியாம். கோடு பிறையும் பூமி அதில் உள்ள களங்கமும் போலும் என்று உவமித்தார். 'நிறக்கும் செழுஞ்சுடர்க் கோடும், இப்பாரும், நிசாமுகத்துச், சிறக்கும் பிறையும், களங்கமும் போலும் எனில், சிறுகண், மறக்குஞ்சரம் செற்றமாயோன், அரங்கன் வராகம். - அது ஆய்ப், பிறக்கும் பிறப்பின் பெருமை எவ்வாறு இனிப் பேசுவதே" எனப் (திருவரங்கத்து மாலை. 28) பின்னுள்ளோரும் இவ்வுவமையை இவ்வாறே அனுபவிப்பதை ஓர்ந்துணர்க. 'அரோ' அசை.* ***119***

***2494. 'ஆதிய அமைதியின் இறுதி, ஐம் பெரும்***
***பூதமும் வெளி ஒழித்து எவையும் புக்கபின்,***
***நாதன் அவ் அகன் புனல் நல்கி, நண்ண அருஞ்***
***சோதி ஆம் தன்மையின் துயிறல் மேயினான்.***

***ஆதிய*** - *அதற்குமுனனான;* ***அமைதியின் இறுதி*** - *அக்கல்ப காலத்தின் முடிவிலே;* ***ஐம்பெரும் பூதமும்*** - *நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம் பூதங்களும்;* ***வெளி ஒழித்து*** - *வெளியாம் தன்மை நீங்கி;* ***எவையும்*** - *எல்லாத் தத்துவங்களும்;* ***புக்கபின்*** - *இறைவனுக்குள் ஒடுங்கியபிறகு;* ***நாதன்*** - *திருமால்;* ***அவ் அகன் புனல் நல்கி*** - *அந்தப்*

*பரந்த நீரினை உண்டாக்கி; (அதனிடையே)* ***நண்ண அருஞ் சோதிஆம் தன்மையின்*** *- பிறராற் கிட்டுதற்கரிய ஒளிவடிவாம் தன்மையோடு;* ***துயிறல் மேயினான்*** *- அறிதுயில் செய்யத் தொடங்கினான்.*

*உலகம் அனைத்தும் அழிந்து போக ஊழிநீரில் திருமால் யோக நித்திரை செய்வது இங்குக் குறப்பட்டது. சிருஷ்டியில் மேலிருந்து கீழ் இறங்கும் தத்துவங்கள், ஒடுங்குகிளபோது கீழிருந்து மேலேறி ஒன்றொன்றாக ஒடுங்கி நின்ற பிரகிருதியும் புருஷனும் பரமாத்மாவினிடத்தில் ஒடுங்கும் ஆதலின், பூதத்தை ஒடுக்க முறையில் முதலில் சொல்லிப் பின்னர் எவையும் புக்கபின் என்று பிறவற்றை அவற்றின்பின் ஒடுங்கியதாகக் குறிப்பிட்டார். ஆதிய அமைதியின் என்பதற்கு முன்பு உண்டான முறைப்படியே என்று பொருள் உரைப்பாரும் உளர்.* ***120***

***2495. 'ஏற்றஇத் தன்மையின், அமரர்க்கு இன் அமுது***
***ஊற்றுடைக் கடல்வணண் உந்தி உந்திய***
***நூற்று இதழ்க் கமலத்தில், நொய்தின் யாவையும்***
***தோற்றுவித்து உதவிட, முதல்வன் தோன்றினான்.***

***ஏற்ற*** *- அறிதுயில் செய்தலை ஏற்றுக்கொண்ட;* ***இத் தன்மையின்*** *- இத்தன்மையினாலே;* ***அமரர்க்கு இன் அமுது ஊற்றுடைக் கடல்வணன்*** *- தேவர்களுக்கு இனியஅமுதத்தைச் சொரிதலுடைய கடல் போலும் கரு நிறமுடைய திருமால்;* ***உந்தி*** *- தன்திருநாபியினாலே;* ***உந்திய*** *- தோற்றுவித்த;* ***நூற்று இதழ்க் கமலத்தில்*** *- நூறுஇதழ்களை உடைய தாமரை மலரிலிருந்து;* ***முதல்வன்*** *- எல்லாப் பொருள்களுக்கும் மூலமானவனாகிய பிரமன்;* ***நொய்தின் யாவையும் தோற்றுவித்து உதவிட*** *- எளிதில் எல்லாம் பொருள்களையும் உண்டாக்கி உலகிற்கு உதவ வேண்டி;* ***தோன்றினான்*** *- வெளிப்பட்டருளினான்.*

*பிரளய காலத்து ஒடுங்கிய பிரமன் தான் ஒடுங்கிய நாபிக் கமலத்தில் இருந்து மீண்டும்வெளிப்படுவான் என்பது படைப்புக் கொள்கை. திருமாலின் நாபிக் கமலத்தில் பிரமன்வெளிப்பட்டுப் படைப்புத் தொழிலை நடத்தத் தொடங்கினான் என்றவாறாம்.* ***121***

***2496. 'அன்று அவன் உலகினை அளிக்க ஆகியது***
***உன் தனிக் குலம்; முதல் உள்ள வேந்தர்கள்***
***இன்று அளவினும் முறை இகந்துளார் இலை;***
***ஒன்று உளது உரை இனம்; உணரக் கேட்டியால்.***

***அவன்*** *- அத்திசைமுகன்;* ***அன்று*** *- அக்காலத்து;* ***உலகினை அளிக்க*** *- உலகத்தைப் படைக்க;* ***முதல் ஆகியது*** *- முதலில் உண்டாகியது;* ***உன் தனிக் குலம்*** *- உன்னுடைய ஒப்பற்ற சூரிய குலம்;* ***உள்ள வேந்தர்கள்*** *- இந்தக் குலத்தில் தோன்றியஅரசர்களும்;* ***முறை இகந்து உளார்*** *- முறைமை தவறியவர்;* ***இன்று அளவினும்*** *- இன்றுவரையிலும்;* ***இலை*** *- இல்லை;* ***இனம் ஒன்று உரை உளது*** *- இன்னும் ஒரு வார்த்தைஇருக்கிறது;* ***உணரக் கேட்டி*** *- தெரியக் கேட்பாயாக.*

*"ஆதிமால் அமலன் நாபிக்கமலத் தயனுதித்தயன் மரீசியெனும் அண்ணலை அளித்த பரிசும், காதல் கூர்தரு மரீஇசி மகனாகி வளரும் காசிபன் கதிர் அருக்கனை அளித்த பரிசும் "எனக் (கலிங்கத்துப். இராச. 9) கூறுமாறு திருமால் - அயன் - மரீஇசி, காசிபன் - சூரியன் எனக் குலமுறை காணுதலின் முதற்றோன்றிய குலமாதல் அறிக. நீ மூத்தவனாதலின் முறை இகவாமல் நீயே அரசு புரிதல் வேண்டும் என்பது வசிட்டன் கூற்றாகும்.*

***2497.*** **' "இத இயல் இயற்றிய குரவர் யாரினும்,**
**மத இயல் களிற்றினாய்! மறுஇல் விஞ்சைகள்**
**பதவிய இருமையும் பயக்க, பண்பினால்**
**உதவிய ஒருவனே, உயரும்" எனபரால்.**

***'மத இயல் களிற்றினாய்'*** - *செருக்குன்ற இயல்பினை உடைய ஆண் யானையைஉடையவனே!;* ***மறுவில் விஞ்சைகள்*** - *குற்றமற்ற கல்விகளை;* ***பதவிய இருமையும் பயக்க*** - *பக்குவப்பட இம்மை மறுமை இரண்டிலும் பயன் கொள்ளுமாறு;* ***பண்பினால் உதவிய*** *-அன்போடு கற்பித்துக் கொடுத்த;* ***ஒருவனே*** - *ஆசிரியனே;* ***இத இயல் இயற்றிய*** *-(ஒருவனுக்கு) நன்மைதரும் இயல்பினைச் செய்த;* ***குரவர்யாரினும் உயரும்'*** - *எல்லாரினும் மேம்படுவான்;* ***என்பர்*** - *என்று கூறுவார்கள். இராமன் தந்தை தாயர் குரவர் யாரினும் உயர்ந்தவர் என முன் கூறியவதனால், இங்கேஆசிரியரே குரவர் யாரினும் உயர்ந்தவர் என வசிட்டன் கூறி, ஆசிரியராகிய தம் வார்த்தையைமறுத்தல்வடாது என்பார் ஆயினார். "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்" (வெற்றிவேற்கை. 1) என்பதும் கருதுக. பதவிய - பதவியாக உள்ள என்றுமாம். 123*

***2498.*** **'என்றலால், யான் உனை எடுத்து விஞ்சைகள்**
**ஒன்று அலாதன பல உதவிற்று உண்மையால்,**
**"அன்று" எனாது, இன்று எனது ஆணை; ஐய! நீ**
**நன்று போந்து அளி, உனக்கு உரிய நாடு' என்றான்.**

***'என்றலால்*** - *(ஆசிரியரே மேம்பட்ட குரவர்) என்று கூறுவதால்;* ***ஐய!*** *-இராமனே;* ***யான் உனை எடுத்து*** - *நான் உன்னை வளர்த்து;* ***விஞ்சைகள்*** *-கல்விகள்;* ***ஒன்று அலாதன பல*** - *மிகப் பல;* ***உதவிற்று*** - *கற்பித்தது;* ***உண்மை -;*** *(ஆகவே)* ***'இன்று எனது ஆணை'*** - *இன்று என்னுடைய கட்டளையை;* ***அன்று எனாது"*** - *அல்ல என்று மறுக்காமல்;* ***உனக்குரிய நாடு*** - *உனக்கு உரிமையுள்ளநாட்டினை;* ***போந்து*** - *அடைந்து;* ***நன்று அளி'*** - *நன்றாகக் காப்பாற்று;* ***என்றான்*** - *என்று கூறினான்.*

*குரவர் யாரினும் ஆசிரியரே மேலோர், அவர் வார்த்தையை மறுத்தல் கூடாது, மறுத்தல் அறநெறியன்று. யான் உன் ஆசிரியன் என்பது உண்மை. என் வார்த்தை மறாது அரசாள்க என்றான் வசிட்டன். 'மறை ஓதுவித்து இவரை வளர்த்தானும் வசிட்டன் காண்' (660) என்பதை ஈண்டு நினைக.*

வசிட்டனை வணங்கி இராமன் தன்நிலை விளக்கல்

*2499.* ***கூறிய முனிவனைக் குவிந்த தாமரை***
***சீறிய கைகளால் தொழுது, செங்கணான்,***
***'ஆறிய சிந்தனை அறிஞ! ஒன்று உரை***
***கூறுவது உளது' எனக் கூறல் மேயினான்:***

***கூறிய*** *- (இவ்வாறு) சொன்ன;* ***முனிவனை*** *- வசிட்டனை(ப்) பார்த்து);* ***செங்கணான்*** *- சிவந்த கண்களை உடையவனாகிய இராமன்;* ***குவிந்த தாமரை சீறிய கைகளால்தொழுது*** *- குவிந்திருக்கின்ற தாமரையைத் தன் அழகால் சீறி வென்ற கைகளால் வணங்கி;* ***'ஆறிய சிந்தனை அறிஞ!*** *- அடங்கிய மனத்தை உடைய அறிஞனே!;* ***உரை ஒன்று கூறுவது உளது'*** *- வார்த்தை ஒன்று சொல்ல வேண்டுவது உள்ளது;* ***என*** *- என்று;* ***கூறல் மேயினான்*** *- சொல்லத் தொடங்கினான்.*

*குவித்த கைகளுக்குக் குவிந்த தாமரையை உவமையாக்கிக்கூறினார். 'செங்கண்' கண் சிவந்திருத்தல் சிறந்த ஆடவர்க்குரிய இலக்கணம். "செங்கண் சிறுச்சிறுதே எம்மேல் விழியாவோ" (திவ்யப் 494.) என்னும் திருப்பாவையைக் காண்க. 'ஆறிய சிந்தனை' என்பது, ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்' என்பது போலக் கூறியது. (புறநா.191) ஆசிரியனாதலின் முதலில் வணங்கிப் பின் கூறுவான் என்றார்.*
***125***

*2500 .* ***'சான்றவர் ஆக; தன் குரவர் ஆக; தாய்***
***போன்றவர் ஆக; மெய்ப் புதல்வர் ஆக; தான் -***
***தேன் தரு மலருளான் சிறுவ! -" செய்வேன்" என்று***
***ஏன்றபின், அவ் உரை மறுக்கும் ஈட்டதோ?***

***'தேன் தரு மலருளான் சிறுவ!*** *- தேனைத் தருகின்ற தாமரை மலரில் வீற்றிருக்கும்பிரமதேவனின் புதல்வ!;* ***சான்றவர் ஆக*** *- பெரியோர்களே ஆகுக;* ***தன் குரவர் ஆக*** *- தன் ஆசிரியரே ஆகுக;* ***தாய் போன்றவர் ஆகுக*** *- தாய் முதலியவரே ஆகுக;* ***மெய்ப்புதல்வர் ஆக*** *- சத்தியத்திற் பிறழாத தன் புதல்வர்களே ஆகுக;* ***தான்*** *- ஒருவன்;* ***"செய்வேன்" என்று ஏன்றபின்*** *- (இவர்களிடத்தில்) செய்வேன் என்று சம்மதித்தபின்;* ***அவ் உரை மறுக்கும் ஈட்டதோ?*** *- அந்த வார்த்தை முடியாது என்று மறுக்கத்தக்கதன்மை யுடையதோ? (அன்று என்றபடி)*

*தாய் போன்றவர் எனவே தந்தை, தம்முன், அரசன் முதலிய நான்கு குரவர்களைக் குறிப்பிடாராயிற்று, ஒருவரிடம் ஒப்புக்கொண்டால் செய்தே ஆகவேண்டும்; சத்தியம் பிறழ்தல் கூடாது என்றான்.* ***126***

*2501.* ***'தாய் பணித்து உவந்தன, தந்தை, "செய்க" என***
***ஏய எப் பொருள்களும் இறைஞ்சி மேற்கொளாத்***
***தீய அப் புலையனின், செய்கை தேர்கிலா***
***நாய் எனத் திரிவது நல்லது அல்லதோ?***

***தாய் பணிந்து உவந்தன*** *- தாய் கட்டளையிட்டு மகிழ்ச்சியடைந்தவையும்;* ***தந்தை "செய்க" என ஏய*** *- தந்தை செய்க எனக் கட்டளையிட்டவையும் ஆகிய;* ***எப்பொருள்களும்*** *- எச் செயல்களையும்;* ***இறைஞ்சி*** *- வணங்கி;* ***மேற்கொளா*** *-*

*தலைமேற் கொண்டு நிறைவேற்றாத;* ***தீய அப்புலையனின்*** *- கொடிய அந்தக் கீழ்மகனைவிட;* ***செய்கை தேர்கிலா*** *- நல்லது, தீயது அறியாத;* ***நாய் எனத் திரிவது*** *- நாயாகத் திரிவது;* ***நல்லது அல்லதோ?*** *- நல்லது அல்லாததோ? (நல்லதே).*

*தக்கது, தகாதது அறியம் மக்கட் பிறப்பில் பிறந்துவைத்தும் தாய் தந்தை பணியைநிறைவேற்றாத கீழ்மகனாக இருப்பதைவிட நாய்ப் பிறவியே மேல் என்பதாகும் 'ஓ'காரம்தேற்றம்.* *127*

***2502. 'முன் உறப் பணித்தவர்***
***மொழியை யான் என***
***சென்னியில், கொண்டு, "அது***
***செய்வேன்" என்றதன்***
***பின்னுறப் பணித்தனை;***
***பெருமையோய்! எனக்கு***
***என் இனிச் செய்வகை?***
***உரைசெய் ஈங்கு' என்றான்***

***'பெருமையோய்*** *- பெருமையுடைய குருவே;* ***முன் உற*** *- முற்பட;* ***பணித்தவர்*** *- கட்டளையிட்ட தாய் தந்தையர்;* ***மொழியை-; யான் என சென்னியில் கொண்டு*** *-யான் எனது தலைமேல் கொண்டு;* ***"அது செய்வேன்" என்றதன் பின்னுற*** *- அதனைச் செய்துமுடிப்பேன் என்று ஏற்றுக்கொண்டதன் பின்னால்;* ***பணித்தனை*** *- (நீ) கட்டளை இட்டாய்;* ***இனிச் செய்வகை*** *- இனிச் செயலாற்றும் வகை;* ***எனக்கு என*** *- எனக்கு யாது;* ***ஈங்கு உரைசெய்'*** *- இப்பொழுது சொல்லியருளுக;* ***என்றான்*** *- என்று கூறினான்.*

*குரவராகிய தாய் தந்தையர் ஆசிரியர் என்ற மூவருள் யாருடைய ஆணையை நிறைவேற்றுவது என்று பார்க்குமிடத்து, தாய் தந்தை மேலானவர் என்பது இராமன் கருத்து; ஆசிரியரே மேலானவர் என்பது வசிட்டன் கருத்தாக, வசிட்டன் ஆணையை இராமன் மேற்கொள்ள இயலாமைக்கு வேறு காரணம் வேண்டி நின்றது. மூவரும் ஆணையிடவும் ஆணை பெற்றால். அதனை நிறைவேற்றவும் செய்யவரும்போது - யாருடைய ஆணை முற்படுகிறதோ, முதலில் ஏற்றுக் கொள்ளப்படுகிறதோ அதை நிறைவேற்றியே தீரல் வேண்டும். ஆதலின், சத்தியம், பிறழாமைக்கு வாயிலா முற்பட்ட தாய் தந்தையர் ஆணையை நிறைவேற்ற வேண்டியவனாகிறான் இராமன் என்பது கருத்து. ஆசிரியனாதலின் மிகப்பக்குவமாக மேல் வற்புறுத்தாதபடி தனக்கே உரிய சாதுர்யத்தோடு இராமன் பேசி வசிட்டனை மறுமொழி சொல்ல இயலாதபடி ஆக்கினன் என்பதை இங்குக் கருதல் வேண்டும். இதனானன்றோ கம்பர், இராமனைச் "சொல்லும் சொல் வல்லான்" (1740) என்றார் முன்னும்.* *128*

*பரதன் தானும் காடு உறைவதாகக் கூறுதல்*

***2503. முனிவனும், 'உரைப்பது ஓர்***
***முறைமை கண்டிலெம்***
***இனி' என இருந்தனன்;***
***இளைய மைந்தனும்,***
***'அனையதேல் ஆள்பவர்***
***ஆள்க நாடு' நான்***

***பனி படர் காடு உடன்***
***படர்தல் மெய்' என்றான்.***

*(அது கேட்டு)* ***முனிவனும்*** *- வசிட்டனும்;* ***'இனி உரைப்பது ஓர் முறைமைகண்டிலெம்' என இருந்தனன்*** *- இனிமேல் சொல்வதற்குரிய ஒரு நீதியை அறிந்தோமில்லை என்றுகருதிப் பேசாதிருந்தான்;* ***இளைய மைந்தனும்*** *- பரதனும்;* ***'அனையதேல்*** *-அப்பபடியானால் (இராமன் அரசாளமாட்டானானால்);* ***ஆள்பவர் நாடு ஆள்க*** *- இராச்சியத்தை ஆளுபவர் ஆளட்டும்;* ***நான் பனிபடர் காடு உடன் படர்தல் மெய்'*** *- நான் பனிமிக்ககாட்டில் இராமனுடன் செல்லுதல் சத்தியம் என்றான்.*

*'யார் ஆண்டால் எனக்கென்ன' என்றான் பரதன். பனி, துன்பமும் ஆகும். பரதனுக்காகப் பேசிய முனிவனே பேச இயலாமல்போன பிறகு இனிச் செயல் இல்லை என்று பரதன் காடுறையும் முடிவிற்கு வந்தான் என்க.* ***129***

தேவர்கள் கூறுதல்

***2504. அவ் வழி, இமையவர் அறிந்து கூடினார்,***
***'இவ் வழி இராமனை இவன் கொண்டு ஏகுமேல்,***
***செவ் வழித்து அன்று நம் செயல்' என்று எண்ணினார்.***
***கவ்வையர், விசும்பிடைக் கழறல் மேயினார்;***

***அவ்வழி*** *- அச்சமயத்தில்;* ***இமையவர்*** *- தேவர்கள்;* ***அறிந்து*** *- உணர்ந்து;* ***கூடினார்*** *- ஒன்று சேர்ந்து* ***'இவ்வழி*** *- இப்பொழுது;* ***இராமனை-; இவன்*** *- இந்தப் பரதன்;* ***கொண்டு ஏகு மேல் -*** *உடனழைத்துக்கொண்டு அயோத்திக்குப்போய்விடுவானாயின்;* ***நம் செயல்*** *- (அரக்கரை அழிக்க வேண்டுவதாய) நம் காரியம்;* ***செவ்வழித்து அன்று'*** *- ஒழுங்குற இயல்வது அன்று;* ***என்று எண்ணினார்*** *- என்றுகருதி;* ***கவ்வையர்*** *- துன்பமுற்று;* ***விசும்பிடை*** *- விண்ணிடத்து;* ***கழறல்மேயினார்*** *- பேசத் தொடங்கினார்கள்.*

*அவதார நோக்கம் இராவண வதம் ஆதலின், இராமன் அயோத்திக்குச் சென்றுவிடின் அது இயலாது போகும் என்று' தேவர்கள் அஞ்சித் தடுக்கக் கூடினர் என்பதாம். கவ்வை - ஆரவாரமும் ஆம். கழறல் - பொருள் புரியாத உரத்த கூச்சலாம்.* ***130***

***2505. 'ஏத்த அரும் பெருங் குணத்து இராமன் இவ் வழிப்***
***போத்து அரும் தாதை சொல் புரக்கும் பூட்சியான்;***
***ஆத்த ஆண்டு ஏழினொடு ஏழும் அந் நிலம்***
***காத்தல் உன் கடன்; இவை கடமை' என்றனர்.***

***'ஏத்த அரும்*** *- புகழ்தற்கு அரிய;* ***பெருங் குணத்து இராமன்*** *- பெரியகுணங்களை உடைய இராமன்;* ***தாதை சொல்*** *- தந்தையின் வார்த்தையை;* ***புரக்கும்*** *- காப்பாற்றுகின்ற;* ***பூட்சியான்*** *-மேற்கோளுடையவன்;* ***இவ்வழி போத்தரும்*** *- இக்காட்டிடத்தே செல்வான்;* ***ஆத்த ஆண்டு*** *- (தந்தையால்) நியமிக்கப்பட்ட ஆண்டுகள்;* ***ஏழினோடு ஏழும்*** *- பதினான்கும்;* ***அந்நிலம்*** *- அவ்வரசை;* ***காத்தல்*** *- காப்பாற்றுதல்;* ***உன் கடன்*** *- உன் முறையாகும்;* ***இவை கடமை'*** *- இவை, இருவராலும்*

*தவறாது நிறைவேற்றி வைக்கப்பட்டவேண்டியவை;* ***என்றனர்*** *- என்று சொன்னார்கள்.*

*போத்து அரும் எனப் பிரித்து, பொத்து எனக் குறுக்கமாக்கி, மனக்குற்றம் எனப் பொருள் தந்து, 'மனக் குற்றமில்லாத தயரதன் சொல்லை' எனக் கூட்டிப் பொருள் செய்தலும் ஒன்று. இனி, போற்று அரும் என்பது எதுகை நோக்கிப் 'போத்தரும்' என நின்றதாகக் கொண்டு, போற்றுதற்கரிய தந்தை எனினும் ஆம். யாத்த - கட்டப்பட்ட என்பது ஆத்த என நின்றது முதற்குறை. நிறைவேற்றியே தீர வேண்டியது கடமை எனப்படும்.* ***131***

*வானவர் உரைப்படி பரதனை இராமன் அரசாள ஆணையிடுதல்*

***2506. வானவர் உரைத்தலும், 'மறுக்கற்பாலது அன்று'***
***யான் உனை இரந்தனென்; இனி என் ஆணையால்***
***ஆனது ஓர் அமைதியின் அளத்தி, பார்' எனா,***
***தான் அவன் துணை மலர்த்த தடக் கை பற்றினான்.***

***வானவர் உரைத்தலும்*** *- தேவர் இவ்வாறு கூறிய வளவிலே;* ***'மறுக்கற்பாலது அன்று*** *- (தேவர்கள் உரை) மறுக்கும் தன்மை உடையது அன்று;* ***யான் உனை இரந்தனன்*** *- நான்உன்னை வேண்டிக்கொண்டேன்;* ***இனி-; என் ஆணையால்*** *- என் கட்டளையால்;* ***ஆனது ஓர் அமைதியின்*** *- (உனக்குப்) பொருந்தியதான ஒரு தகுதிமுறைமையின்;* ***பார் அளித்தி'*** *- இவ்வுலகைக் காப்பாற்றுக;* ***எனா*** *- என்று சொல்லி;* ***தான் -*** *இராமன்;* ***அவன்*** *- அப்பரதனது;* ***துணை மலர்த் தடக்கை*** *- இரண்டு தாமரை மலர் போன்ற பெரியகைகளை;* ***பற்றினான்*** *- பிடித்துக்கொண்டான்.*

*வானவர் உரையும் உள்ளது; யானும் ஆணையிடுகிறேன் நீ அரசு புரிசு என்று இராமன் பரதனை வேண்டினான். பெரியவன் ஆதலாற் கைகளைப் பற்றிக்கொண்டான். 'ஆனது ஓர் அமைதியின்' என்பதற்கு நான் காட்டில் உறைவதற்கு நியமித்த காலம் வரை எனப் பொருள் கோடலும் ஒன்று.* ***132***

*பரதன் உடன்படுதல்*

***2507. 'ஆம் எனில், ஏழ் - இரண்டு ஆண்டில் ஐய! நீ***
***நாம நீர் நெடு நகர் நண்ணி, நானிலம்***
***கோ முறை புரிகிலை என்னின், கூர் எரி***
***சாம் இது சரதம்; நின் ஆணை சாற்றினேன்.'***

***'ஆம் எனில்*** *- அப்படியானால்;* ***ஐய!*** *- தலைவனே;* ***ஏழ் இரண்டு ஆண்டில்*** *- பதினான்கும ஆண்டுகள் கழிந்தவுடன்;* ***நீ -; நாம நீர் நெடுநகர் நண்ணி*** *- (பகைவர்)அஞ்சம்படியான அகழி நீர் சூழ்ந்த பெரிய அயோத்தி நகரை அடைந்து;* ***நானிலம்*** *- பூமியை;* ***கோமுறை புரிகிலை என்னின்*** *- அரசாட்சி செய்திடாயானால்; (யான்)* ***கூர் எரி சாம்*** *- மிக்க நெருப்பில் (வீழ்ந்து) இறந்து படுவேன்; இ* ***து சரதம்*** *- இது உண்மை;* ***நின் ஆணை சாற்றினேன்*** *- உன்மேல் ஆணையிட்டுக் கூறினேன்.*

*நாமம் - அச்சம், பெருமை என்னும்பொருள்கள். 'கோவாகி முறை புரிகிலை என்னின்' எனப் பிரித்தலும் ஒன்று.* ***133***

*பரதன் கருத்திற்கு இராமன் இசைதல்*

***2508. என்பது சொல்லிய பரதன் யாதும் ஓர்***
***துன்பு இலன்; அவனது துணிவை நோக்கினான்***
***அன்பினன், உருகினன்; 'அன்னது ஆக' என்றான்-***
***தன் புகழ் தன்னினும் பெரிய தன்மையான்.***

***என்பது*** *- என்ற இச் சொற்களை;* ***சொல்லிய*** *- கூறிய;* ***பரதன்-; யாதும் ஓர் துன்பு இலன்*** *- யாதொரு துன்பமும் இல்லாதவனாக ஆனான்;* ***தன் புகழ் தன்னினும் பெரியதன்மையான்*** *- தனது புகழ் தன்னைவிடப் பெரிதாகப் பெற்ற தன்மையுடைய இராமன்;* ***அவனதுதுணிவை நோக்கினான்*** *- பரதனது உறுதியைப் பார்த்து;* ***அன்பினன் உருகினன்*** *- அன்பினால் உருகி;* ***'அன்னது ஆக' என்றான்*** *- அப்படியே ஆகட்டும் என்று கூறி அதனைஉடன்பட்டான்.*

*புகழினும் தான் பெரியவன் எனவும் உரைப்பதுண்டு.* ***134***

*பரதன், இராமன் திருவடிகளை வேண்டிப் பெற்று முடிமேற் சூடிச் செல்லுதல்*

***2509. விம்மினன் பரதனும், வேறு செய்வது ஒன்று***
***இன்மையின், 'அரிது' என எண்ணி, ஏங்குவான்,***
***'செம்மையின் திருவடித்தலம் தந்தீக' என,***
***எம்மையும் தருவன இரண்டும் நல்கினான்.***

***பரதனும் -; வேறு செய்வது ஒன்று இன்மையின்*** *- வேறு செய்யக் கூடியது ஒன்றும்இல்லதமையால்;* ***'அரிது' என எண்ணி*** *- (இராமனைப் பிரித்து இருத்தல்) இயலாது என்றுகருதி;* ***விம்மினன் ஏங்குறவான் -*** *அழுது இளைத்து;* ***'திருவடித்தலம் செம்மையின்தந்தீக' என*** *- உன் திருவடிநிலைகள் இரண்டையும் செப்பமாக எனக்கு அளித்தருளுக எனக் கேட்க; (இராமனும்)* ***எம்மையும் தருவன இரண்டும் நல்கினான்*** *- எல்லா உலக இன்பங்களையும் தருவனவாகிய தன் இரண்டு திருவடிம நிலைகளையும் நிலைகளையும் கொடுத்தருளினான்.*

*இம்மை, மறுமை என்றாற் போல எம்மை என்பதற்கு எப்பிறவியினும் (எல்லா வின்பங்களும்தருவன) எனப் பொருள் உரைத்தலும் ஒன்று.* ***135***

***2510. அடித்தலம் இரண்டையும், அழுத கண்ணினான்,***
***'முடித்தலம் இவை' என, முறையின் சூடினான்;***
***படித்தலத்து இறைஞ்சினன், பரதன் போயினான் -***
***பொடித் தலம் இலங்குறு பொலம் கொள் மேனியான்.***

***தலம் பொடி இலங்குறு பொலம்கொள் மேனியான் பரதன்*** *- மண்ணின் புழுதி படிந்துவிளங்குகிற பொன்மயமான திருமேனியுடையம பரதன்;* ***அழுத கண்ணினான்*** *-*

*அழுத கண்ணுடையனாய்;* ***அடித்தலம் இரண்டையும்*** *- இராமனின் இரண்டு திருவடிநிலைகளையும்;* ***'முடித்தலம் இவை' எனமுறையிற் சூடினான்*** *- எனக்கு முடிகள் இவையே என்று கொண்டு முறைமைப்படி தலையின்மேற்சூடிக்கொண்டு;* ***படித்தலத்து இறைஞ்சினான்*** *- மண்ணில் விழுந்து;* ***வணங்கிப் போயினான்*** *- மீண்டு (அயோத்திக்குச்) சென்றான்.*

*இராமன் திருவடிநிலைகளையே தனக்கு. மகுடமாகச் சூடிக் கொண்டான்.*
***136***

*யாவரும் மீளுதல்*

***2511. ஈன்றவர் முதலிய எண் இல் சுற்றமும்,***
***சான்றவர் குழுவொடு தவத்துளோர்களும்,***
***வான் தரு சேனையும், மற்றும் சுற்றுற,***
***மூன்று நூல் கிடந்த தோற் முனியும் போயினான்,***

***ஈன்றவர் முதலிய எண் இல் சுற்றமும்*** *- பெற்ற தாயர் முதலாகிய கணக்கிட முடியாதசுற்றத்தினரும்;* ***சான்றவர் குழுவொடு*** *- பெரியோர்களும்;* ***தவத்துளோர்களும்*** *- தவமுனிவர்களும்;* ***வான்தரு சேனையும்*** *- பெருமை பொருந்திய சேனையும்;* ***மற்றும்*** *- ஏனைய பிறரும்;* ***சுற்றுற*** *- (பரதனைச்) சூழ்ந்து செல்ல;* ***மூன்று நூல் கிடந்த தோள்முனியும்*** *- முப்புரி நூல் அணிந்த தோள்களை உடைய வசிட்ட முனிவனும் (உடன்வர);* ***போயினான்*** *- மீண்டு சென்றான்.*

***வடமும், வடத்திற் புரியும், புரியில் நூலும் மும் மூன்றாகவே அமைதலின் 'மூன்று நூல்என்றார். ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண்" (திரு முருகு 183.) என்பது காண்க. வான் -உயர்வு, அரசர்க்கு உயர்வு தருகின்ற சேனை என்பதாம்.***
***137***

***2512. பண்டை நூல் தெரி பரத்துவனும் போயினான்;***
***மண்டு நீர் நெடு நகர் மாந்தர் போயினார்;***
***விண்டு உறை தேவரும் விலகிப் போயினார்;***
***கொண்டல்தன் ஆணையால் குகனும் போயினான்.***

***பண்டை நூல் தெரி பரத்துவனும் போயினான்*** *- பழமையான வேதங்களை ஆராய்தறிந்தபரத்துவாச முனிவனும் (தன்னிடத்திற்குச் சென்றான்;* ***மண்டு நீர் நெடுநகர் மாந்தர்போயினார்*** *- நிறைந்த அகழி நீராற் சூழப்பெற்ற பெரிய அயோத்தி நகரவாசிகளாயமணிதர்களும் புறப்பட்டுச் சென்றார்கள்;* ***விண்டு உறை தேவரும் விலகிப் போயினார்*** *- வெளிப்பட்டு விண்ணிற் கூடிய தேவர்களும் அங்கிருந்து நீங்கித் தத்தம் இடம் சேர்ந்தார்கள்;* ***கொண்டல்தன்*** *- இராமபிரானது;* ***ஆணையால்*** *- கட்டளையால்;* ***குகனும்போயினான்*** *- குகனும் தன் இடமாகிய சிருங்கி பேரத்துக்குச் சென்றான்.*

*குகன் சற்றுப் பின்தங்கி இராமனது ஆணை பெற்றுச்சென்றானாதல் வேண்டும். விண்டு - வெளிப்பட்டு. மறைந்துள்ள தேவர்கள், தம் காரியசித்திக்காக இராமனை*

*அயோத்தி செல்லவொட்டாது தடுக்க வெளிப்பட்டுக் கூடினார் ஆதலின்'விண்டு உரை தேவர்'என்று கூறினார். 138*

*இராமன் பாதுகை ஆட்சி நடத்தப் பரதன் நந்தியம் பதியிடை வதிதல்*

***2513. பாதுகம் தலைக்கொடு, பரதன் பைம் புனல்***
***மோது கங்கையின் கரை கடந்து முந்தினான்;***
***போது உகும் கடி பொழில் அயோத்தி புக்கிலன்;***
***ஒது கங்குலில் நெடிது உறக்கம் நீங்கினான்.***

***பரதன் -; பாதுகம் தலைக்கொடு** - இராமனது திருவடி நிலையைச் சிரமேற் கொண்டு; **பைம்புனல் மோது கங்கையின் கரை கடந்து** - (பசிய) குளிர்ந்த நீர் மோதுகின்றகங்கையின் கரைகளைக் கடந்து; **முந்தினான்** - முற்பட்டு; **போது உகும் கடிபொழில்அயோத்தி புக்கிலன்** - மலர்கள் சிந்துகிற மணம் வீசும் சோலை சூழ்ந்த அயோத்திநகருக்குள் நுழையாமல்; **ஓது கங்குலின்** - சொல்லப்படுகிற இரவில்; **நெடிது உறக்கம் நீங்கினான்** - மிகவும் தூக்கம் ஒழிந்து... (மேல் முடியும்)*

*முற்சென்ற பரதன் அயோத்திக்குள் செல்லவில்லை என்றார். 139*

***2514. நந்தியம் பதியிடை, நாதன் பாதுகம்***
***செந் தனிக் கோல் முறை செலுத்த, சிந்தையான்***
***இந்தியங்களை அவித்து இருத்தல் மேயினான்,***
***அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினான்.***

***அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினான்** - இரவும் பகலும் ஓயாமல் அழுதுகொண்டுள்ளநீர் நீங்காத கண்ணை உடையனாய் (பரதன்); **நந்தியம் பதியிடை** - நந்திக்கிராமத்திடத்தே; **நாதன் பாதுகம்** - இராமன் திருவடிநிலை; **செந்தனிக் கோல் முறைசெலுத்த** - செங்கோல் முறையைச் செய்ய; **சிந்தையான்** - மனத்தினால்; **இந்தியங்களை** - ஐம்பொறிகளையும்; **அவித்து** - புலனின்பம் நுகராதவாறு அடக்கி; **இருத்தல் மேயினான்** - அங்கேயே தங்கியிருத்தலைப் பொருந்தினான்.*

*நந்தியம்பதி - அயோத்திக்குப் புறம்பே அண்மையில் உள்ள ஊர். நந்திப் பதி - 'அம்'சாரியை. 140*

*இராமன் தென்திசை நோக்கி வழிக் கொள்ளுதல்*

***2515. ' "குன்றினில் இருந்தனன்" என்னும் கொள்கையால்,***
***நின்றவர் நலிவரால், நேயத்தால்" எனா,***
***தன் துணைத் தம்பியும் தானும் தையலும்***
***தென் திசை நெறியினைச் சேறல் மேயினான்.***

***'குன்றினின் இருந்தனன் என்னும் கொள்கையால்** - (இராமன்) சித்திரகூட பருவத்தில் உள்ளான் என்பதை அறிந்தபடியால்; **நின்றவர்** - (அயோத்தி நகரத்தில்)இருக்கின்றவர்கள்; **நேயத்தால்** - அன்பினால்; **நலிவர்** - (அடிக்கடி*

*வந்து)வருத்துவர்;* **எனா** - *என்று கருதி; (இராமன்)* **தானும் -; தன் துணைத் தம்பியும்** - *தன்னைப் பிரியாத இலக்குவனும்;* **தையலும்** - *சீதையும்; (ஆகியோருடன்)* **தென்திசையில் நெறியினை** - *தென்திசையில் உள்ள வழியின்கண்;* **சேறல் மேயினான்** - *நடந்து செல்லுதலைப் பொருந்தினான்.*

*அனைவரும் அறிந்த இச்சித்திரகூட பருவதத்தே இருந்தால் மீண்டும் மீண்டும் அவர்கள் அடிக்கடி வந்து அன்பால் தொல்லை கொடுப்பர் என்பது கருதி இராமன் சித்திரகூட மலைக்குத் தெற்கே காட்டின் உள்ளே ஊடுருவிச் சென்று சேய்மையில் தங்கித் தவம் இயற்ற விரும்பித் தென்திசை வழிக்கொண்டான் என்றார். 'தம்பியும் தானும் தையலும்' என்று எண்ணி, மேயினான் என்று ஒரு முடிபு பெற்றது. ''தானும் தேரும் பாகனும் வந்து என் நலனுண்டான்'' என்றாற் போலத் தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமையில் பொருளும் முடித்தன ஆவதோர் முறைபற்றி வந்தன எனச் சேனாவரையர் (தொல். சொல். கிளவி. 51) கூறுமாறுபற்றி உணர்க. ''தானும் தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்'' என்பதும். (திருவா. திருக்கோத். 15) அதுவே.* ***141***

## மிகைப் பாடல்கள்

*1. மந்திரப் படலம்*

***188.*** ***‘மன்னனே! அவனியை***
***மகனுக்கு ஈந்து, நீ***
***பன்ன அருந்தவம்***
***புரி பருவம் ஈது’ என,***
***கன்ன மூலத்தினில்***
***கழற வந்தென,***
***மின் எனக் கருமை போய்***
***வெளுத்தது - ஓர் மயிர்.***

***அவனி*** *- பூமி;* ***கன்ன மூலம்*** *- காதின் அடியில், காது அடியில் தலைமயில்நரைத்தல் முதுமைக்கு அடையாளம் ஆகும்;* ***சுழறல்*** *- இடித்துரைத்தல்.*

***189.*** ***தீங்கு இழை இராவணன்***
***செய்த தீமைதான்***
***ஆங்கு ஒரு நரையது***
***ஆய் அணுகிற்றாம் என,***
***பாங்கில் வந்திடு நரை***
***படிமக் கண்ணடி***
***ஆங்கு அதில் கண்டனன் -***
***அவனி காவலன்.***

***படிமம்*** *- பிரதிமா என்னும் வடசொல் திரிபு. தன்னுடைய உருவம்.*

*(இந்த இரண்டு செய்யுட்களும், ‘மண்ணுறு முரசு இனம்’ எனத் தொடங்கும் முதற் பாடலின்முன், படலத்தின் தொடக்கத்தில் உள்ளன.)*

***190.*** ***எய்திய முனிவரன்***
***இணைகொள் தாமரை***
***செய்ய பூங் கழலவன்***
***சென்னி சேர்த்த பின்,***
***‘வையகத்து அரசரும்***
***மதி வல்லாளரும்***
***வெய்தினில் வருக’ என***
***மேயினான் அரோ.***

***முனிவரன்*** *- வசிட்டன்;* ***செய்ய பூங்கழலவன்*** *- தயரதன்;* ***மதிவல்லாளர்*** *- அறிவின் வலிமை படைத்தவர், இங்கே அமைச்சர்;* ***வெய்து*** *- விரைவாக;* ***அரோ*** *- அசை.*

*191. ஆளும் நல் நெறிக்கு அமைவரும்*
*அமைவினன் ஆகி,*
*நாளும் நல் தவம் புரிந்து,*
*நல் நளிர் மதிச் சடையோன்*
*தாளில் பூசையின் கங்கையைத்*
*தந்து, தந்தையரை*
*மீள்வு இல் இன் உலகு*
*ஏற்றினன் ஒரு மகன், மேல்நாள்.*

**நளிர் மதிச் சடையோன்** - சிவபிரான். சிவனை வழிபட்டுக் கங்கையைக்கொணர்ந்து தன் முன்னோர்கள் ஆய சகரர்களை நல்லுலகு சேர்ப்பித்தவன்பகீரதன்.
*66-1*

*192. 'நறைக் குழற் சீதையும்*
*ஞால நங்கையும்,*
*மறுத்தும், இங்கு ஒருவற்கு*
*மணத்தின்பாலரோ -*
*கறுத்த மா மிடறுடைக்*
*கடவுல் கால வில்*
*இறுத்தவற்கு அன்றி?' என்று*
*இரட்டர் கூறினார்.*

*மறுத்தும் - மீட்டும் - இங்கே 'வேறும்' என்பது பொருள்; கடவுள் - சிவன்; இரட்டர் - இரட்டதேயத்து அரசர். 76-1 193. 'ஏத்த*
*வந்து உலகு எலாம்*
*ஈன்ற வேந்தனைப்*
*பூத்தவன் அல்லனேல்,*
*புனித வேள்வியைக்*
*காத்தவன் உலகினைக்*
*காத்தல் நன்று' என,*
*வேத்தவை வியப்புற,*
*விதர்ப்பர் கூறினார்.*

**பூத்தவன்** - திருமால்; **வேள்வியைக் காத்தவன்** - விசுவாமித்திரனது வேள்வியைக் காத்தளித்த இராமன். *76-2*

*194. 'பெருமையால் உலகினைப்*
*பின்னும் முன்னும் நின்று*
*உரிமையோடு ஓம்புதற்கு*
*உரிமை பூண்ட அத்*
*தருமமே தாங்கலில்*

***தக்கது; ஈண்டு ஒரு***
***கருமம் வேறு இலது' எனக்***
***கலிங்கர் கூறினார்.***

*'தருமமே தாங்கல்' என்பது இராமனை நினைத்துக் கூறியதாம். **76-3***

***195. 'கேடு அகல் படியினைக்***
***கெடுத்து, கேட இலாத்***
***தாடகை வலிக்கு ஒரு***
***சரம் அன்று ஏவிய***
***ஆடக வில்லிக்கே***
***ஆக, பார்!' எனாத்***
***தோடு அவிழ் மலர் முடித்***
***துருக்கர் சொல்லினார்.***

***படி** - பூமி; **ஆடக வில்லி** - பொன் வில்லை உடைய இராமன்; **ஆடகம்** - பொன் வகைகளுள் ஒன்று. ஆடகம், சாம்பூநதம், கிளிச் சிறை, சாதரூபம் என்பவை பொன்னின்நான்கு வகைகள். இவற்றைச் செம்பொன், கரும்பொன், பசும்பொன், வெண்பொன்என்பர். **76-4***

***196. 'கற்ற நான்மறையவர்***
***கண்ணை, மன்னுயிர்***
***பெற்ற தாய் என அருள்***
***பிறக்கும் வாரியை,***
***உற்றதேல் உலகினில்***
***உறுதி யாது?' என,***
***கொற்றவேல் கனை கழல்***
***குருக்கள் கூறினார்.***

***வாரி** - கடல்; **கனை** - செருக்கிய; **குருக்கள்** - குரு தேசத்தவர்கள்.*
***76-5***

***197. 'வாய் நனி புரந்த மா***
***மனுவின் நூல் முறைத்***
***தாய் நனி புரந்தனை,***
***தரும வேலினாய்,!***
***நீ நனி புரத்தலின்***
***நெடிது காலம் நின்***
***சேய் நநி புரக்க!' எனத்***
***தெலுங்கர் கூறினார்.***

***வாய்** - இடம்; **முறைத்தாய்** - முறைப்படி; **நின் சேய்** - இராமன். **76-6***

***198.*** **'வையமும் வானமும்**
**மதியும் ஞாயிறும்**
**எய்திய எய்துப; திகழும்**
**யாண்டு எலாம்,**
**நெய் தவழ் வேலினாய்!**
**நிற்கும் வாசகம்;**
**செய் தவம் பெரிது!; எனச்**
**சேரர் கூறினார்.**

**நிற்கும் வாசகம்** - *புகழ்.* ***76-7***

***199.*** **'பேர் இசை பெற்றனை;**
**பெறாதது என், இனி?**
**சீரியது எண்ணினை;**
**செப்புகின்றது என்?**
**ஆரிய! நம் குடிக்கு**
**அதிப! நீயும் ஓர்**
**சூரியன் ஆம்' எனச்**
**சோழர் சொல்லினார்.**

**ஆரிய** - *தசரதனை நோக்கிய விளி. மேலோனே என்பதாம். சோழர் சூரிய குலத்தவர்ஆதலின் 'நம் குடிக்கு' என்றார்.* ***76-8***

***200.*** **ஒன்றிய உவகையர்;**
**ஒருங்கு சிந்தையர்,**
**தென் தமிழ் சேண் உற**
**வளர்த்த தென்னரும்,**
**'என்றும் நின் புகழொடு**
**தருமம் ஏமுற,**
**நின்றது நிலை' என**
**நினைந்து கூறினார்.**

**தென்னர்** - *பாண்டியர்;* **ஏமுற** - *ஏமம்;* **உற** - *பாதுகாப்பு அடைய.* ***76-9***

***201.*** **'வாள் தொழில் உழவ! நீ**
**உலகை வைகலும்**
**ஊட்டினை அருள் அமுது;**
**உரிமை மைந்தனைப்**
**பூட்டினை ஆதலின்,**
**பொரு இல் நல் நெறி**

*காட்டினை; நன்று' எனக்*
*கங்கர் கூறினார்.*

***வாள் தொழில் உழவ!*** *- தயரதனை நோக்கிய விளி. ''வில்லேர் உழவர்'' என்பது போல.* ***76-10***

***202.*** *'தொழு கழல் வேந்த! நின்*
*தொல் குலத்துளோர்*
*முழு முதல் இழித்தகை*
*முறைமை ஆக்கி, ஈண்டு*
*எழு முகில் வண்ணனுக்கு*
*அளித்த இச் செல்வம்*
*விழுமிது, பெரிது!' என*
*மிலேச்சர் கூறினார்.*

***முகில் வண்ணன்*** *- இராமன்;* ***இச்செல்வம் -*** *அரசுச் செல்வம்.* ***76-11***

***203 .*** *'கொங்கு அலர் நறு விரைக்*
*கோதை மோலியாய்!*
*சங்க நீர் உலகத்துள்,*
*தவத்தின் தன்மையால்,*
*அங்கணன் அரசு*
*செய்தருளும் ஆயிடின்'-*
*சிங்களர் - 'இங்கு இதில்*
*சிறந்தது இல்' என்றார்.*

***கோதை*** *- மாலை;* ***மோலி*** *- மௌலி, அதாவது மகுடம்;* ***அங்கணன்*** *-அருள் கண்ணையுடைய இராமன்.* ***76-12***

***204.*** *ஆதியின் மனுவும் நின்*
*அரிய மைந்தற்குப்*
*பாதியும் ஆகிலன்;*
*பரிந்து வாழ்த்தும் நல்*
*வேதியர் தவப் பயன்*
*விளைந்ததாம்' என,*
*சேதியர் சிந்தனை*
*தெரியச் செப்பினார்.*

***ஆதியின் மனு*** *- வைவஸ்வத மனு, சூரிய குல முன்னோன்;* ***பரிந்து*** *- அன்புகொண்டு;* ***சேதியர்*** *- சேதி நாட்டவர்.* ***76-13***

*205.* ***'அளம் படு குரை கடல்***
***அகழி ஏழுடை***
***வளம் படு நெடு நில***
***மன்னர் மன்னனே!***
***உளம் படிந்து உயிர் எலாம்***
***உவப்பது ஓர் பொருள்***
***விளம்பினை பெரிது!' என***
***விராடர் கூறினார்.***

**அளம்** - *வயல், உப்பளம் என்பது போல.* ***76-14*** *2. மந்தரை சூழ்ச்சிப் படலம்*

*206.* ***பொன்னும், மா மணியும்.***
***புனை சாந்தமும்,***
***கன்னி மாரொடும்***
***காசினி ஈட்டமும்,***
***இன்ன யாவையும்***
***ஈந்தனள், அந்தணர்க்கு,***
***அன்னமும் தளிர்***
***ஆடையும் நல்கினாள்.***

*அந்தணர்க்கு ஈந்தனள் என முடிக்க. நல்கினாள். கோசலை.* ***9-1***

*207.* ***நல்கி, நாயகன்***
***நாள்மலர்ப் பாதத்தைப்***
***புல்லிப் போற்றி,***
***வணங்கி, புரை இலா***
***மல்லல் மாளிகைக்***
***கோயில் வலங்கொளா,***
***தொல்லை நோன்புகள்***
***யாவும் தொடங்கினாள்.***

**புரை** - *குற்றம். உயர்ச்சி என்பதும் ஆம்; தனக்கு மேல் உயர்ச்சி இல்லாத எனஉரைக்க.*
**நோன்பு** - *விரதம்.* ***9-2***

*208.* ***கடி கமழ் தாரினான்,***
***கணித மாக்களை***
***முடிவ உற நோக்கி, ஓர்***
***முகமன் கூறி, பின்,***
***'வடி மழுவாளவற்***
***கடந்த மைந்தற்கு***

***முடி புனை முதன்மை நாள்***
***மொழிமின்' என்றனன்.***

**கணித மாக்கள்** - சோதிடர்; **வடி மழுவாளவன்** - பரசு ராமன். ***9-3***

*3. கைகேயி சூழ்வினைப் படலம்*

***209. வந்து மன் நகரில் தம்தம்***
***வகைப்படும் உருவம் மாற்றி,***
***சுந்தரத் தடந்தோள் மாந்தர்***
***தொல் உருச் சுமந்து தோன்றாது,***
***அந்தரத்து அமரர், சித்தர்,***
***அரம்பையர், ஆதி ஆக***
***இந்திரை கொழுநற் போற்றி***
***இரைத்துமே எய்தி நின்றார்***

**மன் நகர்** - அரச நகரம், அயோத்தி. அமரர், சித்தர், அரம்பையர் முதலியோர் வடிவம் மறைத்து மனித வடிவில் அயோத்தியில் வந்து நின்றார் என்பதாம்; **இந்திரை** - திருமகள். ***75-1***

*4. நகர் நீங்கு படலம்*

***210. விழுந்து பார்மிசை,***
***வெய்து உயிர்த்து, ஆவி சோர்ந்து,***
***எழுந்து, 'என் நாயகனே!***
***துயர் ஏது எனாத்***
***தெளிந்திலேன்; இது***
***செப்புதி நீ' எனா,***
***அழுந்தினாள்; பின்னர்***
***அரற்றத் தொடங்கினாள்.***

**வெய்து உயிர்த்து** - வெப்பமாக மூச்சு விட்டு, பெருமூச்சு விடுதலாம்; **அழுந்தினாள்** - துன்பத்தில் மூழ்கினாள். ***29-1***

***211. அன்னாள் இன்ன பன்னி***
***அழியத் துயரால், மன்னர்***
***மன்னானவனும் இடரின்***
***மயங்கி, 'மைந்தா! மைந்தா!***
***முன்னே வனம் ஏகிடல் நீ***
***முறையோ? முதல்வா! முறையோ?***
***என்னே, யான் செய் குறைதான்?'***
***என்றே இரங்கி மொழிவான்;***

*பன்னி* - *பலமுறை சொல்லி; மன்னர் மன் ஆனவனும் - தயரதனும்.* *53-1*

*212.* ***உணர்வு ஏதும் இலாள் உரையால்***
***உரை சால் குமரன் நெடு நாள்***
***புணரான் நிலம்; மா வனமே***
***போவானேயாம்; என்னில்,***
***இணரே பொலி தார் நிருபா;***
***இடரால் அயர்வாய்; இதுவும்***
***துணையோ? - துணைவா!' என்றாள்;***
***'துயரேல் ! துயரேல்!' என்றாள்.***

**குமரன்** - *இராமன்;* **இணர்** - *பூங்கொத்து.* ***53-2***

*213.* ***' "சேல் ஆகிய மா முதல்வன்***
***திரு உந்தியின் நீள் மலரின்-***
***மேல் ஆகிய நான்முகனால்,***
***வேதங்களின் மா முறையின்-***
***பால் ஆகிய யோனிகளின்***
***பல ஆம் வருணம் தருவான்,***
***நால் ஆகியது ஆம் வருணம்தனின்,***
***முன் எமை நல்கினனால்.***

**சேல் ஆகிய மா முதல்வன்** - *மீனாக அவதாரம் செய்த திருமால்;* **முன்** *-முதல் வருணம், அந்தணர் பிறப்பில்.* ***76-1***

*214.* ***' "அந் நான்மறையோன் வழியில்,***
***அருள் காசிபன் நல் மைந்தன்,***
***மின் ஆர் புரி நூல் மார்பன்,***
***விருந்தேசனன் மெய்ப் புதல்வன்,***
***நல் நான்மறை நூல் தெரியும்***
***நாவான் சலபோசன் எனச்***
***சொன்னான் முனிவன் தரு***
***சுரோசனன் யான்" என்றான்.***

**பிரமன்** - *காசிபன், விருத்தேசனன், சலபோசன், சுரோசனன் எனக் குல முறைக்காண்க.* ***76-2***

*215 .* ***'தாவாத அருந்தவர் சொல்***
***தவறாததானால், தமியேன்***
***சாவாதவரும் உளரோ? தண்டா***
***மகவு உண்டு' என்றே***

***ஓவாதவர் முன் நின்றறேன்;***
***ஒரு சொல் உடையாது அவரும்,***
***பூவார் அனலுள்பொன்றி,***
***பொன் - நாடு அதனின் புக்கார்.'***

**தவறாது அதனால்** - எனப் பிரிக்க; **ஒரு சொல் உடையாது** - ஒன்றும் பேசாது.
*86-1*

*216.* ***இம் மா மொழி தந்து அரசன்***
***இடர் உற்றிடுபோழ்தினில், அச்***
***செம் மா மயில் கோசலையும்,***
***திகையா, உணர்வு ஓவினளால்;***
***மெய்ம்மாண் நெறியும், விதியின்***
***விளைவும், தளர்வின்றி உணரும்***
***அம்மா தவனும் விரைவோடு***
***அவலம் தரு நெஞ்சினனாய்.***

**ஓவினள்** - ஒழிந்தாள்; **மாதவன்** - வசிட்டன் *87-1*

*217.* ***என்று என்று சீற்றத்து***
***இளையோன் இது இயம்பிடாமுன்,***
***கன்று ஒன்றும் ஆவின்***
***பல யோனியும் காத்த நேமி***
***வன் திண் சிலைக் கைம்***
***மனு என்னும் வயங்கு சீர்த்திக்***
***குன்று ஒன்று தோளான்***
***மருமான் இவை கூறலுற்றான்;***

**மருமான்** - பரம்பரையில் வந்தவன். இராமன். *127-1*

*218.* ***ஆய் தந்த மென் சீரை அணிந்து***
***அடி தாழ்ந்து நின்ற***
***சேய் உந்து நிலை நோக்கினள்,***
***சேய் அரிக் கண்கள் தேம்ப,***
***வேண் தந்த மென் தோளி தன்***
***மென் முலை பால் உகுப்ப -***
***தாய், 'நிந்தை இன்றிப் பல ஊழி***
***தழைத்தி!' என்றாள்.***

*ஆய்* - *தாய், கைகேயி; தாய் - சுமித்திரை.* *147-1* *219.* *‘வானமே*

*அனையது ஓர்*
*கருணை மாண்பு அலால்*
*ஊனம் வேறு இலானுடன்,*
*உலகம், யாவையும்,*
*கானமே புகும்எனின்,*
*காதல் மைந்தனும்*
*தானுமே ஆளும்கொல் தரை?’*
*என்றார் சிலர்.*

**ஊனம் வேறு இலான்** - *இராமன். இராமனுடன் அனைவரும் காடு சென்றால் கைகேயியும், பரதனுமே ஆள்வார்களோ இப்பூமியை என்பது மக்கள் கூற்று,.*
*191-1*

*220.* *போயினான் நகர்*
*நீங்கி - பொலிதரு*
*தூய பேர் ஒளி ஆகி,*
*துலங்கு அருள்*
*ஆய மூவரும் ஆகி,*
*உயிர்த் தொகைக்கு*
*ஆயும் ஆகி,*
*அளித்தருள் ஆதியான்.*

*பேரொளி ஆகி, மும்மூர்த்திகள் ஆகிய பிரமன், திருமால், சிவன் ஆகி;* **உயிர்த்தொகைக்கு ஆயும் ஆகி** - *உயிர்களுக்குத் தாயும் ஆகி உள்ள இராமன்.*
*234-1*

5. *தைலம் ஆட்டு படலம்*

*221.* *தொடுத்த கலிடைச் சிலர்*
*துவண்டனர், துயின்றார்;*
*அடுத்த அடையில் சிலர்*
*அழிந்தனர் அயர்ந்தார்;*
*உடுத்த துகில் சுற்று*
*ஒரு தலைச் சிலர் உறைத்தார்;*
*படுத்த தளிரில் சிலர்*
*பசைந்தனர் அசைந்தார்.*

**கல் இடை** - *கல்லிடத்து;* **அடை** - *இலை;* **பசைந்தனர்** - *அன்பு கொண்டவராய்.*
*16-1*

222. ஒரு திறத்து உயிர் எலாம்
புரந்து, மற்று அவண்
இரு திறத்து உள வினை
இயற்றும் எம்பிரான்
தரு திறத்து ஏவலைத்
தாங்கி, தாழ்வு இலாப்
பொரு திறல் சுமந்திரன்
போய பின்னரே.

இரு திறத்து உள வினை - நல்வினை, தீவினை. *46-1*

223. துந்துமி முழங்க, தேவர்
தூய் மலர் பொழிந்த வாழ்த்த,
சந்திர வதனத்து ஏயும்
அரம்பையர் தழுவ, தங்கள்
முந்து தொல் குலத்துளோரும்
முக்கணான் கணமும் சூழ,
அந்தரத்து அரசன் சென்றான்,
ஆன தேர்ப் பாகன் சொல்லால்.

**அரசன்** - தயரதன். *59-1*

6. கங்கைப் படலம்

224 . அன்ன காரணத்து
ஐயனும், ஆங்கு அவர்
உன்னு பூசனை
யாவும் உவந்தபின்,
மின்னு செஞ் சடை
மெய்த் தவர் வேண்டிட,
பன்ன சாலையின்
பாடு இருந்தான் அரோ.

**பன்ன சாலை** - தவத்தோர் தங்கும் குடில்; **பர்ண சாலை** - பன்ன சாலை ஆயிற்று; இலை, தழைகளால் வேயப்பெற்றது. 'அரோ' அசை. *27-1*

7. குகப் படலம்

225. நின்றான் நெஞ்சில்
நிரம்புறும் அன்பால்,
'இன்றே நின் பணி
செய்திட, இறைவா!

***நன்றே வந்தனென்;***
***நாய் அடியேன் யான்’***
***எயினரின் இறையோன்.***

***எயினர்*** *- வேடர்;* ***இறைவா*** *- இராமனே;* ***கூவினன்*** *- அழைத்தான்.* ***10-1***

***226. வெயில் விரி கனகக் குன்றத்து***
***எழில் கெட விலகு சோதிக்***
***கயில் விரி வயிரப் பைம் பூண்***
***கடுந் திறல் மடங்கல் அன்னான்***
***துணில் எனும் அணங்கு வந்து***
***தோன்றலும், அவளை, ‘நாமே***
***எயிலுடை அயோத்தி மூதூர்***
***எய்து நாள் எய்துக!’ என்றான்.***

***கனகக் குன்றத்து....சோதி*** *என்றது இலக்குவன் திருமேனியை;* ***கயில்*** *- மூட்டு;* ***மடங்கல்*** *- சிங்கம். சிங்கம் அன்னான் இலக்குவன். தூக்கம் என்னும் மகள்அங்கே வந்தாள். அவளை நாம் அயோத்திக்கு வருகின்ற நாளில் எம்பால் வருக என்றான்இலக்குவன்; பதினான்கு ஆண்டுகளும் உறங்காமல் இருந்தான் ஆதலின் ‘உறங்காவில்லி’ என்பது அவனுக்கு ஒரு பெயர்.* ***22-1***

***227. மறக் கண் வாள் இளைய வீரன்***
***ஆணையை மறுத்தல் செல்லா***
***உறக்க மா மாதும், அண்ணல்***
***உபய பங்கயங்கள் போற்றி,***
***‘துறக்கமாம், என்னல் ஆய***
***தூய மதில் அயோத்தி எய்தி***
***இறுக்கும்நாள், எந்தை பாதம்***
***எய்துவல்’ என்னப் போனாள்.***

***உபய பங்கயம்*** *- இரண்டாகிய தாமரை - இங்கே திருவடிக்கு உருவகம். துயில் மடந்தைஇலக்குவனைத் தீண்டாது சென்றாளாம்.* ***22-2***

***228. மற்றவள் இறைஞ்சி ஏக,***
***மா மலர்த் தவிசின் நீங்காப்***

***பொற்றொடி யோடும் ஐயன்***
***துயில்தரும் புன்மை நோக்கி,***
***இற்றது ஓர் நெஞ்சன் ஆகி,***
***இரு கண் நீர் அருவி சோர,***

***உற்ற ஓவியம்அது என்ன,***
***ஒரு சிலை அதனின் நின்றான்.***

***ஒரு சிலை*** - *ஒரு கல். இனி ஒரு வில் எனலும் ஆம் 'வில்லை ஊன்றிய கையோடும்நின்றான்' என வருதலின்.* ***22-3***

*9. சித்திரகூடப் படலம்*

***229. 'நெய் கொள் நீர் உண்டு,***
***நெருப்பு உண்டு, நீண்டு, மைந் நிறைந்த***
***வை கொள் வேல் எனக்***
***காலனும் மறுகுறும் கண்ணாய்!***
***மெய்கள் நோகின்ற பிடிகளை***
***விரும்பிய வேழம்***
***கைகள் நோகில தாங்கின***
***நிற்பன காணாய்!'***

*மெய் நோவுற்ற பெண்யானைகளை ஆண் யானைகள் தம் கை நோவு கருதாது தாங்கிக்கொண்டுநிற்பனவாம்.* ***36-1***

***230. 'விடம் கொள் நோக்கி! நின்***
***இடையின் மின் என வெருவி,***
***படம் கொள் நாகங்கள் முழை***
***புகப் பதைப்பன பாராய்!***
***மடங்கள் ஆளிகன் எனக்***
***கொடு மழைஇனம் முழங்க,***
***கடம் கொள் கார் மதக்***
***மைம்மலை இரிவன காணாய்!***

*மின்னலைக் கண்டு பாம்பு அஞ்சும். இடிகேட்டு வெருளும் நாகம். இடி, மின்னல் இரண்டும்ஒன்றே. சிங்கம் போல மேகம் முழங்க யானைகள் ஓடுகின்றன.*
***36-2***

***221. 'எய்த இன்னல் வந்த போது***
***யாவரேனம் யாவையும்***
***செய்ய வல்லர் என்று கொள்க;***
***சேண் நெறிக்கண் நீங்கிட,***
***மைய கண்ணி செய்ய பாதம்***
***வல்ல ஆய; எம்பிதன்***
***கைகள் இன்று பன்னசாலை***
***கட்ட வல்ல ஆயவே.'***

'துன்பம் வந்த போது யாரும் எவையும் செய்ய வல்லவர்' என்ற உலக நீதி இங்குக்கூறப்படுகிறது. **50-1**

*232.* **'தினைத் துணை வயிறு**
**அலாச் சிற்றெறும்புகள்**
**வனத்திடைக் கரிகளை**
**வருத்தி வாழ்வன;**
**அனைத்து உள உயிர்களும்**
**யாவும் அங்ஙனே;**
**மனத்து இடர் நீங்கினார்**
**இல்லை. மன்னனே!'**

எறும்பும் யானையை வருத்துகிறது. எல்லா உயிர்களும் ஒன்றையொன்று வருத்துகின்றன. துன்பம்அற்றவர் யாரும் இல்லை என்றபடி. **55-1**

*10. பள்ளிபடைப் படலம்*

*233 .* **ஆய காதல்**
**தனையனைத் தந்த அத்**
**தூய தையல்**
**தொழிலுறுவார், 'உனைக்**
**கூயள் அன்னை' என்றே**
**சென்று கூறலும்,**
**ஏய அன்பினன்தானும்,**
**சென்று எய்தினான்.**

**தொழில் உறுவார்** - ஏவல் மகளிர்; **அன்பினன்** - இராமன். **41-1**

*234 .* **'தீ அன கொடியவள்**
**செய்த செய்கையை**
**நாயினேன் உணரின், நல்**
**நெறியின் நீங்கலாத்**

**தூயவர்க்கு இடர் இழைத்து**
**உழலும் தோமுடை**
**ஆயவர் வீழ் கதி**
**அதனின் வீழ்க, யான்'**

**தோம்** - குற்றம். நல்லவர்க்குத் தீங்கு செய்யும் கயவர்கள் செல்லும் நரககதியில் நான் செல்வேனாக. **116-1**

*235 .* ***உந்து பொன்***
***தடந் தேர் வலானொடும்,***
***மந்திரப் பெருந்***
***தலைவர், மற்றுளோர்,***
***தந்திரத் தனித்***
***தலைவர், நண்பினோர்,***
***வந்து சுற்றும் உற்று,***
***அழுது மாழ்கினார்.***

**தேர் வலான்** - *சுமந்திரன்;* **மாழ்கினார்** - *மயங்கினார்,* ***125-1***

*236.* ***என்று கொண்டு மா***
***தவன் இயம்பலும்,-***
***நின்று நின்று தான்***
***நெடிது உயிர்த்தனன்;***
***'நன்று, நன்று!' எனா***
***நகை முகிழ்த்தனன்;-***
***குன்று குன்றுறக்***
***குலவு தோளினான்.***

**மா தவன்** - *வசிட்டன்;* **முகிழ்த்தல்** - *மொக்குவிட்டு மலர்தல், அங்குச் சிரித்தான் என்பது பொருள்;* **தோளினான்** - *பரதன்.* ***131-1***

*237.* ***அன்னதாக, அங்கு,***
***ஆறு பத்து எனச்***
***சொன்ன ஆயிரம்***
***தோகைமார்களும்,***
***துன்னி வந்தனர்-***
***சோர்வு இலாது, அவர்***
***மின்னும் வாள்***
***எரிமீது வீழவே.***

*அறுபதினாயிரம் மனைவியர்களும் தீக்குளித்தனர்.* ***136-1***

*11. கங்கை காண் படலம்*

*238.* ***வந்து எதிரே விழுந்தவனும்***
***வணங்கினான்; வணங்காமுன்,***
***சந்த நெடுந் திரள்***
***புயத்தான் தழுவினான்; தழுவியபின்,***
***இந்த இடர் வடிவுடன் நீ***

*எங்கு எழுந்தாய் - இமையோர்தம்*
*சிந்தையினும் சென்னியினும்*
*வீற்றிருக்கும் சீர்த்தியாய்!*

*2334 ஆம் பாடலின் மாற்றுருவம் இப்பாடல்.* ***32-1***

*239.* ***ஏறினர் இளவலோடு,***
***இரங்கு நெஞ்சு கொண்டு***
***ஊறிய தாயரும்***
***உரிய சுற்றமும்;***
***பேறு உள பெரு நதி***
***நீங்கி, பெட்போடும்***
***கூறு தென் கரையிடைக்***
***குழீஇய போதிலே.***

**பேறு உள பெருநதி** - *புண்ணியப் பயன் உடைய கங்கை.* ***63-1***

*240.* ***தன் அன தம்பியும்,***
***தாயர் மூவரும்,***
***சொன்ன தேர் வலவனும்,***
***தூய தோழனும்,***
***துன்னினர் ஏறலும்,***
***துழா துடுப்பு எனும்***
***நல்நயக் காலினால்***
***நடத்தல் மேயினான்.***

**தம்பி** - *சத்துருக்கனன்;* **தேர் வலவன்** - *சுமந்திரன்;* **தோழன்** - *குகன்;* **துழா துடுப்பு** - *துழாவுகின்ற துடுப்பு. இனி துழாவும், துடுப்பும் என்னும் இரண்டுகால்களால் படகை நடத்துதல் என்றும் ஆம். துழா என்பது நீரைத் துழாவும் நீண்ட கோல் ஆகும்.* **துடுப்பு** - *மட்டை ஆகும்.* ***63-2***

*241.* ***அன்ன காதல்***
***அருந் தவர், 'ஆண் தகை!***
***நின்னை ஒப்பவர் யார்***
***உளர், நீ அலால்?'***
***என்ன வாழ்த்திடும்***
***ஏல்வையில், இரவியும்***
***பொன்னின் மேருவில்***
***போய் மறைந்திட்டதே.***

**ஏல்வை** - *பொழுது.* ***5-1***

*242.* ***இன்ன ஆய***
***எறி கடல் சேனையும்,***
***மன்னர் யாவரும்,***
***மன் இளந் தோன்றலும்,***
***அன்ன மா முனியோடு***
***எழுந்து, ஆண்தகை***
***துன்னு நீள் வரைக்கு***
***ஏகிய சொல்லுவாம்.***

***ஆண்தகை துன்னு*** - *இராமன் தங்கியுள்ள.* ***19-1***

*243.* ***'ஐய! நின்னுடைய***
***அன்னை மூவரும்,***
***வைய மன்னரும்,***
***மற்றும் மாக்களும்.***
***துய்ய நாடு ஒரீஇத்***
***தோன்றினார்; அவர்க்கு***
***உய்ய நல் அருள்***
***உதவுவாய்' என்றான்.***

***ஒரீஇ*** - *நீங்கி.* ***89-1***

*244.* ***கங்குல் வந்திடக்***
***கண்டு, யாவரும்***
***அங்கணே துயில்***
***அமைய, ஆர் இருள்***
***பொங்கு வெம் பகை,***
***போக, மற்றை நாள்,***
***செங் கதிர் குண***
***திசையில் தோன்றினான்.***

***அங்கணே*** - *அவ்விடத்தே.* ***94-1***

*245.* ***'வானின் நுந்தை சொல்***
***மரபினால் உடைத்***
***தானம் நின்னது என்று***
***இயைந்த தன்மையால்,***
***ஊனினில் பிறந்து***
***உரிமையாகையின்***
***யான் அது ஆள்கிலேன்' என,***
***அவன் சொல்வான்.***

*2485 ஆம் பாடலின் மாற்றுவரும் இது. இராமன் கூறும் பாட்டைத் திருப்பிப் பரதன் கூற்றாகமாற்றியதாகும். தயரதன் சபையில் கூறிய சொல்லால் அரசு நின்னதாயிற்று; **ஊனினில் பிறந்து** - தயரதனிடத்தில் பிறந்து; **நீ உரிமையாகையின்** - நீ மூத்தவனாய் உரிமைபெற்றபடியால். யான் அது ஆள்கிலேன் என்றான் பரதன் என்க. இதை இராமன் கூற்றாகவும்உரைக்கலாம்.* ***111-1*** *729*

*''இராமன் தந்தை சொல் காப்பான். எனவே, அவன் அயோத்தி மீளும் வரைநாட்டைக் காக்கும் கடமை உடையவன் பரதன்'' என்று அசரீரியாகக் கூறினர். இதனைச் செவியுற்றஇராமன் பரதனை நாடாளுமாறு தெரிவிக்கப் பரதனும் இசைந்து, இராமனின் திருவடித்தலம் இரண்டையும்பெற்று, 'நீ வனவாசம் முடிந்து உரிய நாளில் மீளாவிடின் தீப்பாய்ந்து மாய்வேன். இது உறுதி' என்று சபதம் செய்து, எம்மையும் தரும் இரண்டையும் தன் திருமுடித்தலத்திருத்தியவாறே அயோத்திமீண்டான்.*

## தொகுப்புரை

*தாயும் தந்தையும் விளைவித்த அறச்சிக்கலால் நேர்ந்த தீமையைப் போக்க அயோத்திக்கு வந்து அரசாளுமாறு இராமனைப் பரதன் வேண்டுகிறான். தாயும் தந்தையும்அறத்திற்கு முரணாகச் செயல்படவில்லை; தந்தை வாக்களித்த வரத்தைத் தாய் கேட்க, வாய்மையறம் வழுவாத தந்தை அவற்றை அவளுக்கு அளிக்கிறார். அதன்படி, தான் காடுறை வாழ்க்கை பெற்றதாகவும், பரதன் நாடாளும் உரிமை பெற்றதாகவும், அரசன் ஆணையை ஏற்றுத் தான் நடக்கப்பரதன் அரசன் ஆணையை மறுத்து அறச்சிக்கலை ஏற்படுத்தியதாகவும் இராமன் அவனுக்குப் பதில்உரைக்கிறான்.*

*மூத்தவன் இருக்க இளையவன் அரசாள ஏற்பாடு செய்வதும் அதனை ஏற்பதும்குலமரபிற்கும் அறத்திற்கும் முரண்பட்டவை என்னும் பரதன் வாதமும், வசிட்டன் கூற்றும் சாதாரணச்சூழ்நிலையில் ஏற்கத் தக்கனவாயினும், முன்னரே அளித்த வரங்களால் அம்முறை மாற்றம் பெறுவதுபெரிய குற்றம் ஆகாது ; முறைகேடும் ஆகாது என்னும் இராமனின் வாதம் ஏற்கக் கூடியதாகவிளங்குகிறது. இந்த நோக்கில் பார்க்குமிடத்துக் கைகேயியின் மீதோ தசரதன்மீதோ குற்றம்ஏற்பட வழியில்லை. பண்புகளிற் சிறந்து, வீரத்தில் நிறைந்து மக்களன்பில் மீதூர்ந்து நிற்கும் இராமன் அரசனாகவில்லையே என்ற ஒரு நியாயமான வருத்தம் இச் சூழலில் எல்லோர்க்கும்ஏற்படுவது இயற்கையே. எனினும், அதற்காக அறத்தின் ஆணைகளை எதிர்ப்பதோ, ஏற்க மறுப்பதோஅறமாகாது ; நல்லொழுக்கமும் ஆகாது என்ற இராமனின் வாதத்தை யாரும் மறுக்க முடியாத சூழல்சித்திரகூடத்தில் நிலவுகிறது.*

*கம்பன் படைத்த பரதன், இராமன் வாதத்தை ஏற்றுக்கொண்டு தாயுரை கொண்டுதாதை உதவிய தரணி தன்னை இராமனுக்கே கொடுத்துவிட்டால் இராமன் அரசனாவதில் அறச்சிக்கல்ஏதும் விளையாது என்று கருதி, 'அன்னதாகில் யான் தரக் கொள் நீ' என்று இராமனுக்குத் தர முன்வருகிறான். அவ்வாறு அரசை ஏற்றுக் கொண்டால் வனவாசம் என்னும் வரத்தின் மற்றொரு கூறு சிதையும் என்பதை இராமன் எடுத்துக்காட்டுகிறான். இப்போது இங்கும் பரதன் மாற்றம் கூற இயலாத சூழ்நிலைஏற்படுகிறது.*

*இந்நிலையில் மேற்கொண்டு கதையை நகர்த்துவது எவ்வாறு என்னும் சிக்கலைத் தீர்க்க இராமாயண நூல்கள் பலவகையில் முயன்றுள்ளன. மேற்கொண்டு விவாதம் எதுவும்செய்யாமல் இராமனின் பாதம் பதிந்த பாதுகைகளைப் பெற்றுப் பரதன்*

*அயோத்தி மீள்வதாகவால்மீகி கூறுகிறார். வசிட்டன் மூலமான இராமனின் அவதார நோக்கத்தை அறிந்து பரதன் அயோத்திக்குத் திரும்ப இசைகிறான் என்று அத்யாத்மமும் அதனைப் பின்பற்றும் நூல்களும்கூறுகின்றன. கம்பனோ அசரீரி கூற்றைப் படைத்துப் பரதனை இணங்கச் செய்கிறான். துளசியில்தேவர்களின் மாயையால் பரதன் உண்மையை உணர்கிறான். மானுட நிலையில் தீர்க்கப் பெறாதசிக்கல்களை இவ்வாறு மீமானுட உத்திகள் கொண்டு (dues ex machine) தீர்த்துக் காட்டுவது உலக இலக்கியங்களில் காணப்பெறும் ஒரு பொதுவான மரபு. இதனை இந்தியக் கவிஞர்களும்பயன்படுத்தியுள்ளனர் எனலாம்.*

## ராஜ்ய கல்கம் பற்றிய கருத்து வேறுபாடுகள்

*இனிக் கைகேயியின் மீது வீண்பழி சுமத்தி இராமாயணப் பாத்திரங்களில்இராமனைத் தவிர அனைவரும் அவளை நிந்திக்கின்ற நிலையைக் காணுற்ற அறிஞர்கள் சிலர், கைகேயிதனக்கு உரியதைத்தான் கேட்கிறாள் ; அதிலும் தன் கணவன் வாய்மை தவறியவன் என்னும்பழிக்கு உட்படலாகாது என்னும் கற்பாண்மை காரணமாகத் தனக்கு வேண்டியதைக் கேட்கிறாள் ; எனவே அவளை நிந்திப்பது அடிப்படையில்லாத திறனாய்வு என்று கருதுகின்றனர். கைகேயி தசரதன்முன்னரே தனக்குக் கொடுத்திருந்த வரத்தைத் தான் கேட்கிறாள். அதை இப்போது தருவதால்தசரதனுக்குத் தர்ம சங்கடம் ஏற்படுவது உண்மையே. ஆயினும், வாய்மை சிதையுமாகலின், அவன்வேதனைப்பட்டாலும் அவன் புகழைக் காக்கும் எண்ணத்தால் கைகேயி இவ்வாறு வற்புறுத்தி இரண்டுவரங்களைச் செயல்படுத்தினாள் என்பது இவர்களின் வாதம். இவ்வாதம் சரியென்றே தோன்றுகிறது.*

*இக் கருத்தை மேலும் வற்புறுத்தக் கருதிய இக்கொள்கையினர், இராமன்சித்திரகூடத்தில் கைகேயியின் மகனுக்குத் தன் அரசைத் தருவதாகத் திருமணத்தின்போது தசரதன்வாக்களித்திருந்தமையைச் சுட்டிக்காட்டி, அரசு பரதனுக்கே உரியது என்று கூறும் கருத்தைஅடிப்படையாகக் கொண்டு, கைகேயிக்கு வாக்களித்த நாட்டைத் தசரதன் இராமனுக்குத் தரமுற்பட்டதே தவறு. 731*

*எனவே, கைகேயி நிறையுடையவள் ; தசரதனே குறையுடையவன் என்று வாதிடுகின்றனர்.*

*வான்மீகத்தில் 107ஆம் சருக்கத்தில் உள்ள மூன்றாவது சுலோகம் இவ்விவாதத்திற்கு அடிப்படையாக அமைந்து உள்ளது.* [54] *இம் முதனூல் கருத்தைக் கம்பன்வெளிப்படையாகக் கூறவில்லை யேனும் சித்திரகூடத்தில் இராமன் கூறுவதாக அமைந்த ‘வரனில் உந்தைசொல் மரபினால்’ எனத் தொடங்கும் பாடலில் வரும், ‘நீ பிறந்து உரிமையாதலால் அரசுநின்னதே’ என்னும் தொடர் வான்மீகி கூறும் ராஜ்ய சுல்கத்தைக் குறிப்பிடுகிறது என்று கம்பராமாயண அறிஞர் பெருமக்கள் கருதி இவ்வாதத்தை ஆதரிக்கின்றனர். தசரதன் மறந்துவிட்டஅல்லது தன் மகன் இராமன்மீது வைத்த பெருங் காதலால் மறைத்துவிட்ட இவ் அடிப்படைவாக்குறுதியைக் காப்பாற்றித் தசரதன்மீது பழி வராமல், எல்லாப் பழிகளையும் தானேஏற்றுக்கொண்ட கற்பின் செல்வி என்று கைகேயியைப் புகழ்வது இத் திறனாய்வுப் பார்வையின்உட்கோள். இந்த ராஜ்ய சுல்க வாக்குறுதியைக் காட்டாமலேயே கைகேயியின் நியாயத்தைஏற்றுக்கொள்ளலாம் என்பது மேலே காட்டப்பட்டது.*

*வான்மீகியின் மேற்குறிப்பிட்ட சுலோகத்தை ஏற்றுக்கொள்வதில் சில தடைகள் எழுகின்றன. கேகயனுக்குத் தசரதன் ராஜ்ய சுல்க வாக்குறுதியைத் தந்திருப்பதுஉண்மையானால், இக்கூற்று வான்மீகியில், நாரத வாக்கியமாகவோ வால்மீகி வாக்கியமாகவோ,தசரத வாக்கியமாகவோ, கைகேயி வாக்கியமாகவோ, மந்தரையின் வாக்கியமாகவோ, வசிட்ட வாக்கியமாகவோ வெளிப்பட்டிருக்கவேண்டும். இத்தகைய அடிப்படை வாக்குறுதி பெற்ற கைகேயி இரண்டுவரங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. கைகேயியைப் பற்றிய எல்லா உண்மைகளையும் அறிந்தவளாகவும், அவள் நலனில் அக்கரை கொண்டவளாகவும் உள்ள மந்தரையாவது இச்செய்தியைக் கைகேயிக்கு நினைவு படுத்தியிருக்கலாம். அல்லது இராமனுக்கு முடிசூட்டக் கருதி அவையோர் கருத்தறிய தசரதன் முற்பட்டபோது எல்லாம் அறிந்த, கைகேயியின் திருமணத்தைமுன்னின்று நடத்தும் பொறுப்புடைய வசிட்டனாவது இச்செய்தியைத் தசரதனுக்கு எடுத்துக் கூறிப்பரதனுக்கே முடிசூட்டுமாறு அறிவுரை வழங்கியிருக்கலாம். இவ்வாறு ராஜ்யசுல்கச் செய்தியுடன்தொடர்புடைய யாருடைய கூற்றாகவும் வான்மீகி இதனைக் கூறாமல் இராமன் கூற்றாகமட்டும் காட்டுவது*

*54. காண்க : அடிக்குறிப்பு எண். 52. ஏன் என்ற வினா எழுகிறது.* [55] *இராமனுக்கு இச்செய்தியை அறிவித்தவர் யார் என்னும் குறிப்பும் வான்மீகத்தில் இல்லை.*

*இனி, இந்தச் சுலோகத்தைச் சித்திரகூடத்தில் கூறிப் பரதனைத் தெளிவிக்க விரும்பும் இராமனே, தசரதன் தனக்கு முடிசூட்டுவதாகக் கூறியதும் இச்செய்தியைக் கூறிப்“பரதனுக்கே அரசைக் கொடுங்கள் அதுதான் முறை” என்று ஏன் சொல்லவில்லை? தெரிந்திருந்தும்,முடிசூட்டிக் கொள்ள இராமன் இசைந்தது அறக்கேடில்லையா என்னும் வினா எழுகிறது. அரசனின்கட்டளையை மறுக்க அஞ்சி, அவன் முடிவுக்கு இராமன் இசைந்தான் என்னும் வாதம்பொருத்தமாகப்படவில்லை. ஏனெனில், பின்னர்க் கைகேயியின் அரண்மனையில் அவள் வரத்தால்தாக்குண்டு வருந்தியிருக்கும்போது ‘இராம, என் ஆணையை மறுத்துவிட்டு, நீயே முடிசூட்டிக்கொள்.இதனால் உனக்கு ஒரு பழியும் நேராது’ என்று தசரதன் கூறியபோது அதனை ஏன் இராமன் ஏற்கவில்லை?எனவே தெரிந்திருந்த செய்தியை மறைத்துவிட்டு முடிசூட்டிக்கொள்ள இசைந்தது இராமனைப் பெரும்பழிக்கு உள்ளாக்குகிறது. கைகேயி வரம் கேட்காமலே இருந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்?பரதனுக்குரியது என்று அறிந்திருந்தும் அவன் நாட்டை அபகரித்துக் கொண்டான் என்ற பெரும்பழிஇராமன் மீது விழாதா?*

*இப்படித் தசரதன், இராமன், வசிட்டன் என்னும் மூவர் மீதும் தீராப் பழியை உண்டாக்கக்கூடிய இந்த கருத்து கைகேயியையும் வஞ்சனையுடையவள் என்னும் பழியிலிருந்துவிலக்காமை கண்கூடு; தசரதன் பழியை அவள் துடைக்கக் கருதியதாகவும் கொள்வது பொருத்தமாகப் படவில்லை. கணவன் தன்னை இரந்தவாறும், பழித்தவாறும் தன்முன்னையே உயிர்விடுவதைக் கண்டுகலங்காதிருக்கும் கைகேயியின் கற்புடைமையை இந்தக் காரணத்தை முன்னிட்டுப் புகழ்வதும்பொருத்தமாகப்படவில்லை. பாத்திரங்களைப் படைத்து உலவ விடும் இராமாயணக் கவிஞர்கள் யாரும், வால்மீகி, கம்பன் உட்பட, கைகேயியின் இச்செயலைக் கவிக்கூற்றாகப் புகழ்ந்து பேசவில்லைஎன்பதும் இங்கே சிந்திக்கத்தக்கது. கூர்தலறக் கோட்பாட்டின்படி பின்முறைச் சந்ததியினர்தம் மூதாதையரினும் அறிவுக் கூர்மை மிக்குடையவராகத் திகழ்வர் என்பது*

*உண்மையேயாயினும், முன்னைய இராமாயணக் கவிஞர்கள் அனைவருமே, இந்தச் சுலோகத்தைச் செய்த வான்மீகியுட்பட,*

*55. சீதாராம சாஸ்திரிகள்,* **வால்மீகி முநிஹ்ருதய தத்துவசார பிரகாசிகா,** *(திருச்சி : யுனெட்டெட் பிரிண்டர்ஸ் லிமிடெட், 1943) பக். 155-173. 733*

*இவ்வகையில் சிந்திக்காமல் கைகேயியின்மீது வீண்பழி சுமத்திவிட்டனர் என்று கருதத் தோன்றவில்லை.*

*இவ்வாறு கருத்து வேறுபாட்டிற்கு அடிப்படையாக அமைந்து விட்ட ராஜ்யசுல்கம்பற்றிய செய்தி இலக்கிய நூல்களில் எங்கும் காணப் பெறவில்லை.* **சத்தியோபாக்கியானம்,** *அல்லது* **இராம ரகசியம்** *என்னும் சமஸ்கிருத நூலின் நான்காம் இயலில், நாரதன்வழியாகக் கைகேயியின் அழகைப் பற்றிக் கேள்வியுற்ற தசரதன் அவளை மணந்து கொண்ட செய்தி பேசப்படுகிறது ; ஐந்தாவது இயலில் மந்தரை - கைகேயி உரையாடலுக்குப் பின்னர்க் கைகேயிராஜ்யசுல்க வாக்குறுதி பற்றித் தசரதனுக்கு நினைவுபடுத்தியதாகக் கூறப்படுகிறது.56 இந்த இருகுறிப்புகளும் அடங்கிய மூலத்தைப் பார்க்கும் வாய்ப்பு எவ்வளவோ முயன்றும் இதுவரை கிடைக்கவில்லை. மேலும் இந்நூலின் காலம், ஆசிரியர் முதலியன பற்றிய வரலாறு அறியஇயலவில்லை. ஸ்டெயின் (Stein) என்னும் அறிஞரால் திரட்டப்பெற்றுத் தற்போது ஜம்முஅருங்காட்சியகத்தில் பாதுகாக்கப் பட்டுள்ள ஏட்டுச் சுவடியில் இந்தச் சத்தியோபாக்கியானம்பிரம்மாண்ட புராணத்தின் ஒரு பகுதி என்றும் (ப. 207) பத்மபுராணத்தின் ஒரு பகுதி என்றும் (ப.204) இருவேறாகக் குறிக்கப்பட்டுள்ளது. எனவே, இது ஒரு முழு நூலா அன்றி வேறொரு நூலின் பகுதியாஎனவும் அறிய இயலவில்லை.*[57]

*எனவே சுவடியிலுள்ள இந்நூல் முழுவதுமாகப் பதிப்பிக்கப் பட்டாலன்றி அல்லதுஅறிஞர்களின் பயன்பாட்டிற்கு வந்தாலன்றி இராமன் கூற்றாக வரும் 'ராஜ்யசுல்கம்' பற்றிதிட்டவட்டமாக எதுவும் கூற இயலாத நிலையில் உள்ளோம். பிரதிமா நாடகம் என்னும் பிற்காலநாடகநூலை மட்டும்கொண்டு இச்சிக்கலுக்குத் தீர்வுகாண இயலவில்லை. வான்மீகத்தின் இருவகை வழக்குகளிலும் (தென்புல, வடபுல) காணப்படும் இச்சுலோகம் வால்மீகியின் கூற்றுத்தானா எனவும்ஐயப்படக்கூடிய நிலையில் இவ் ஆய்வு நிறைவுறுகிறது.*

*இராமன் அயோத்திக்குத் திரும்பி அரசேற்றல் என்னும் பொருளை மையமிட்டுநிகழும் இராமன் - பரதன் சந்திப்பைப் படைத்துக் காட்டுவதில் இராமாயண நூல்கள் பெரும்பாலும்ஒத்துச் செல்கின்றன. எல்லா இராமாயண நூல்களுக்கும் முத*

*56.* ***Purana Bulletin*** *(Ayodhya Special issue) P. 153. 57. சென்னைப் பல்கலைக் கழகச் சமக்கிருதத் துறை இணைப் பேராசிரியர் டாக்டர் கங்காதரன் அவர்களின் கருத்து.* *னூல் வான்மீகமேயாயினும், கருத்தளவிலும் பாத்திரப் படைப்பளவிலும் முதனூலுடன் மிகுதியும் ஒத்துச் செவ்து கம்ப ராமாயணம்தான் என்று கொள்வதற்குச் சான்றுகள் பலஉள. வடநாட்டு மொழிகள் பலவற்றிலும் தோன்றியிருக்கம் இராமாயண நூல்கள் தாந்திரிகக்கோட்பாட்டாலும், அத்வைதம் முதலிய தத்துவக் கோட்பாட்டாலும் தாக்கமுற்று, புஷு ண்டி, அத்யாத்மம், துளசி ராமாயணங்களாகப் பரிணாமப்பட்டுள்ளன ; பிறவெல்லாம் இம்மூன்றனுள்ஒன்றாலோ, பலவாலோ*

*தாக்கமுற்றள்ளமையின் வான்மீகத்திலிருந்து சற்று அதிகமாக விலகிச்சென்றிருக்கக் காண்கிறோம்.*

*கருத்தில் மிகுதியாக வேறுபடாவிடினும், கற்பனைத் திறத்திலும் கவித்துவப்பண்பிலும் முதனூலையும் விஞ்சி நிற்கும் கம்பராமாயணம், தாந்திரிகத்தையோ, தத்துவத்தையோசாராமல், ஆத்திக நோக்குடையதாயினும் நாத்திகரும் நாத்தழும்பேறப் படித்துச் சுவைக்கும் பயன்மரமாகத் தமிழில் பழுத்துள்ளது. பக்தி இயக்கத்தின் அந்திம காலக் காப்பியமாகிய துளசிராமாயணம் இராம பக்தி எனும் அளப்பரும் அமுதத்தைக் கற்றார்க்கும் கல்லார்க்கும் வாரிவழங்கும் நோக்கமுடையதாகலின் முதனூலிலிருந்து கருத்தாலும் பாத்திரப்படைப்பாலும் பெரிதும்வேறுபட்டிருக்கக் காண்கிறோம்.*

*இராம காதையின் வாயிலாகப் பண்பாட்டு வரலாற்றுப் பெட்டகமாக வால்மீகியும், கற்றோர் களிக்கும் கவிதைச் சுரங்கமாகக் கம்பனும், பக்திப் பரவசக்கடலாகத் துளசியும் இந்திய மக்களிடையே முப்பெரும் காப்பிய மும்மூர்த்திகளாக விளங்குகின்றனர்என்று கூறி இக் கட்டுரையை நிறைவு செய்யலாம்.*

***நன்றியுரை***

*இச்சிறிய கட்டுரையை எழுதுவதற்குப் பல்லாற்றானும் உதவி புரிந்த கீழ்க்குறிப்பிடப்பெறும் அருளுக்கும் அறிஞர் பெருமக்கட்கும் நெஞ்சார்ந்த நன்றியுடையேன்.*

***ஸ்ரீராமன்***

*திரு.ஜி.கே. சுந்தரம் திரு. E. வெங்கடேசலு திரு. R. வெங்கடேசலு பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் பேராசிரியர் ம.ரா.போ. குருசாமி பேராசிரியர் பிரபாகர வாரியர் (மலையாளம்) பேராசிரியர் E.K. புருஷோத்தமன் (மலையாளம்)      735*

*முனைவர் ஸ்ரீகிருஷ்ணபட் (கன்னடம்) முனைவர் எஸ். பத்மநாபன் (சமஸ்கிருதம்) செல்வி வி.என். மங்கா தேவி (தெலுகு) செல்வி ந. தேவி (தமிழ்)*

*மற்றும் அடிக்குறிப்பில் இடம்பெறும் பல்வேறு இராமாயணக் காப்பிய அறிஞர்கள்.*
*துளசியின் இராம சரித மானசத்தை மானச அமுதம் என்னும் பெயரில் மிக விரிவான உரைவளத்துடன்பதிப்பித்த ஸ்ரீ அஞ்சனிநந்தன் சரண் என்னும் திறனாய்வாளர் இவ்வினாவை எழுப்பி அதற்கு விளக்கம்காண முயன்றுள்ளார். கைகேயிக்குப் பொது மக்கள் செய்தி அறிவிக்காமைக்கு அவர் இரு காரணங்களைத்தருகிறார்:* **ஒன்று** *கைகேயி இராமனிடம் பேரன்புடையவள். அவளுக்கு இச்செய்தி அறிவிக்கப்பட்டால்அவளும் பேரானந்தம் அடைந்து கோசலை, சுமித்திரையைப் போலத் தான தருமங்கள் செய்துகோயிலுக்குச் சென்று வழிபாடுகள் நடத்துவாள்; நடத்தவே, பட்டாபிஷேகம் இனிது நிறைவேறிவிடும், நிறைவேறிவிட்டால் அவதார நோக்கம் நிறைவேறாது. எனவே, கைகேயிக்குப் பொதுமக்கள் செய்தி அறிவிப்பதாகக் கவிஞர் படைக்கவில்லை.*

***இரண்டாவது காரணம்:*** *திருமணத்தின்போது கைகேயிக்குத் தந்திருந்த ராஜ்ய சுல்கச் (கன்யாசுல்கம்) செய்தியைத் தசரதன் எவ்வளவுதான் மறைத்து வைத்திருந்தபோதிலும்,*

*இராமன்மீது அளவு கடந்த பற்றும் பக்தியும் வைத்திருந்த அரண்மனைவாசிகள் அதனை அறியாமல் இருக்கமாட்டார்கள். எனவே, கைகேயி இராமனிடத்துப் பேரன்பு உடையவளாயினும், அரசியல் தொடர்பான செய்திகளில்அவள்மீது அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. எனவே தான், அவர்கள் வேண்டுமென்றே கைகேயிக்குச் செய்தியைக்கூறவில்லை. இல்லையென்றால், அரசன் முடிசூடுதல் போன்ற ஒரு தலைமைச் செய்தியை அரண்மனைப் பெண்டிரும், நகர மக்களும் அறிந்திருக்கத் தசரதனின் இளைய மனைவியும், அவனுடைய தனியன்பிற்கு உரியவளுமான கைகேயிக்குஇச்செய்தி எட்டவில்லை என்பதும் முதன் முதலாக மந்தரைதான் இதனை அவளுக்குக் கூறுகிறாள் என்பதும் நம்பகத்தன்மை யிழந்து பொருந்தாக் கூற்றாகி விடும்.* [8]

*அவதார நோக்கம், யதார்த்தப் பார்வை என்னும் இருகோணங்களிலும் பார்க்குமிடத்து ஸ்ரீஅஞ்சனிநந்தன் சரண் அவர்களின் கருத்து பொருத்தமுடையதாய்த் தோன்றுகிறது. மூலமும் வழி நூல்களுமானஎல்லா இராமாயணங்களும் இவ்விஷயத்தில் மௌனம் காப்பதன் நோக்கமும் ஓரளவு தெளிவாகிறது.*

*துளசி ராமாயணத்தில் கோசலைக்கும் சுமித்திரைக்கும் செய்தி அறிவித்த தசரதன் கைகேயிக்குஇச்செய்தியைக் கூறாது விட்டான் என்ற ஒரு குற்றச்சாட்டை ஓம்கார் கொல் என்னும்*

*8. மானசம்- பிரியூசகி அயோத்தியாகாண்டம், II.84, P. 55. 737*

*அறிஞர் துளசி மீது சுமத்துகிறார்.* [9] *துளசி ராமாயணத்தில் (II. 8) இந்தச் செய்தி காணப்படவில்லை. துளசி மட்டுமல்ல, வேறெந்தக் கவிஞருமே தசரதன் இச்செய்தியைக் கோசலைக்கும் சுமித்திரைக்கும் கூறியதாகக் காட்டவில்லை. எனவே, டாக்டர் கௌல் அவர்களின் குற்றச்சாட்டு பொருத்தமாகப் படவில்லை.*

### *1.2.3. இராமனுக்கு அறிவுரை*

*முடிசூடும் முன்னர் அரசாளுதல் குறித்த அறிவுரைகளைத் தசரதன் அரசவையிலேயே கூறுவதாக* **வான்மீகம்** *கூறுகிறது. (II. 3.42 - 46) பட்டாபிஷேகத்திற்கு முன்னாள் இராமன் மேற்கொள்ள வேண்டிய விரதம் முதலியவற்றை வசிட்டன் கூறுகிறான். (II. 5.10 -12)*

***கம்பனில்*** *இருவகை அறிவுரைகளையும் வசிட்டனே கூறுமாறு பணிக்கப்படுகிறான். (II.2.14-19) தமிழில் தோன்றிய இராம நாடகம் வான்மீகத்தைப் பின்பற்றித் தசரதனே அறிவுரைகூறுவதாகக் காட்டுகிறது. (அங்கம் 1. களம் 1).*

**தெலுகு** *ரங்கநாத ராமாயணமும் பாஸ்கர ராமாயணமும் விரத முறைகளை மட்டும் வசிட்டன்கூறுவதாகக் குறிப்பிடுகின்றன. அரசியல் நெறிகளை யாரும் கற்பிப்பதாகக் குறிப்பு இல்லை. மொல்ல ராமாயணத்திலும்* ***கன்னட*** *தொரவெ ராமாயணத்திலும் மலையாள கன்னச ராமாயணத்திலும் எத்தகைய அறிவுரையையும் யாருமே இராமனுக்குக் கூறவில்லை.*

***அத்யாத்ம*** *ராமாயணத்தைப் பின்பற்றும்* ***துளசி*** *ராமாயணமும்* ***எழுத்தச்சனின்*** *ராமாயணமும் வசிட்டன் இராமனுக்கு விரத முறைகளைக் கற்பிப்பதை மிகச் சுருக்கமாகக் கூறுகின்றன.*

## தொகுப்புரை

*இராமனுக்கு அளிக்கப்படும் அறிவுரைகளில் அரசியல் நெறிகளைக் கற்பிப்பதுதான் முக்கியமானதாகத்தோன்றுகிறது. இதனை வான்மீகம், கம்ப ராமாயணம் ஆகிய இரண்டு மட்டுமே கூறுகின்றன.*

*இராம, நீ இயல்பாகவே நற்குண நற்செய்கைகளை உடையவன். எனினும் குணவான்களுக்கும் நன்மைதரக்கூடிய சில அறிவுரைகளை நான் உனக்குக் கூறுகிறேன்.*

*9. கஸ்மீரி மற்றும் ஹின்தி ராமகதா காவ்ய ம் துலனாதமக் அத்யாயம், பிரதி . 73.155.*
*எப்போதும் ஐம்புலன்களை வென்றவனாய் இரு காமக் குரோதங்களால் அரசர்களிடத்து உண்டாகும் எழுவகைக் குற்றங்கள்[10] உன்னை அணுகாமல் பார்த்துக்கொள்.*

*அடைக்கலமானவர்களைக் காத்தல், ஏழைகளுக்கிரங்கி உதவுதல் போன்ற சமூக ஒழுக்கங்களை எப்போதும் கைவிடாமல் ஒழுகுவாயாக. அமைச்சர்கள் முதலானோரை அநுசரித்து நடந்து அவர்களை மகிழ்விப்பாயாக.*

*கருவூலங்கள், படைக்கலக் கொட்டில்கள், தானியக் கிடங்குகள் ஆகியவற்றை நன்கு பாதுகாத்து நாட்டைநன்கு பரிபாலனம் செய்பவன் பிற அரசர்களால் நன்கு மதிக்கப்படுவான். நீயும் அத்தகையவனாக இருக்க முயற்சி செய்வாயாக.*

*என்று தசரதன் அறிவுரை கூறுவதாக வான்மீகம் காட்டுகிறது. (II.3.42-46)*

*கம்ப ராமாயணத்தில் வசிட்டன் கூறும் அறிவுரை மிகவும் விரிவாக அமைகிறது. (II.2.14-19). வான்மீகம் கூறும் புலனடக்கம், காமநீக்கம், சூதுவிலக்கல், அமைச்சரைச் சார்ந்தொழுகல்,பிற மன்னர்களுடன் நட்புறவு, மக்களை உயிராகக் கருதிக் காப்பாற்றுதல், செல்வம் முதலியவற்றைப் பேணுதல் ஆகியன பற்றிய அறிவுரைகள் கம்பனிலும் காணப்படுகின்றன. கருத்துகள் பொதுவாகஇருநூல்களிலும் காணப்பட்டாலும், கம்பனிடம் அவை கவித்துவம் பெற்றுக் கவிச்சக்கரவர்த்தியின்தனி முத்திரையுடன் விளங்கி இலக்கிய இன்பத்தை மிகுவிக்கின்றமையை வாசகர்கள் எளிதின் உணரலாம்.*

*இனி, வான்மீகம் கூறாத ஒரு கருத்தை மிகவும் அழுத்தம் தந்து கம்பன் கூறுவது நம் சிந்தனைக்குஉரியதாகிறது. அதாவது, அறிவுரைகள் கூறும் பதினைந்து பாடல்களில் நான்கு பாடல்கள் அந்தண வணக்கத்தைச் சிறப்பித்துப் பாடுகின்றன. அந்தணர்கள் என இங்குக் குறிப்பிடப்படுபவர்கள் துறவிகளே; எனினும்அவர்களைக் குறித்து இவ்வளவு மீயுயர்வாகக் கம்பன் பாடுவது வெறும் வழிநூல் மரபாகத் தோன்றவில்லை. வான்மீகியின் காலத்தில் முனிவர்களுக்கிருந்த செல்வாக்கை அவரே விதந்து போற்றாதிருக்கையில் அத்தகைய முனிவர்கள் சமுதாயத்தே அருகிய காலத்திலிருந்த கம்பன் முனிவர்களைப் போற்றுகிறானா, அந்தண அறி*

*10. எழுவகைக் குற்றங்களாவன: பிறன்மனை நயத்தல், சூது, விதி மீறி வேட்டையாடுதல், மது, வெள்ளைக் கோட்டி, குற்றத்தை விஞ்சிய தண்டனை, வீண்செலவு ஆகியன. 739*

*ஞர்களைப் போற்றுகிறானா என்பது சிந்தனைக்குரியதாக அமைகிறது.*

***பார்ப்பார்க் கல்லது பணிபறியலையே (பதிற்.63.1)***

*எனவும்,*

***இறைஞ்சுக பெரும நின் சென்னி சிறந்த நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே (புறம். 6.19.20)***

*எனவும் வரும் பண்டைய தமிழ் மரபு கம்பனுக்கு இவ்வகையில் உதவியிருக்குமா என்பதும் ஆராய்தற்குரியது.கம்பனில் அறிவுரை கூறுவது வசிட்டன் என்பதும் தன் காப்பிய அரங்கேற்றத்தின் போது கம்பன் பட்ட இடர்களாகச் செவிவழிச் செய்தியால் அறியக் கிடப்பதும் இத்தொடர்பில் இணைத்துச் சிந்திக்கப்படவேண்டியனவாய் உள்ளன.*

### *1.3. மந்தரையால் கைகேயி மனம் திரிதல் 1.3.1. மந்தரை யார்?*

*தாய் தகப்பன் இன்னாரெனவாவது எந்தவிடத்தில் பிறந்தாள் என்றாவது அறியப்படாதவள் மந்தரை. கைகேயின் தகப்பனாரால் அனுப்பப்பட்டு எப்போதும் கைகேயியுடன் இருப்பவள் என்பது **வான்மீகம்** (II. 7.1-3). துந்துபி என்னும் காந்தருவப் பெண்ணே மந்தரையாக அவதரித்தாள் என்று **மகாபாரதம்** (வனபர்வம். 277) கூறுகிறது.[11] பிறர்க்கு இடுக்கண் தருவதையே இயற்கையாகக்கொண்ட இராவணன் இழைத்த தீமையே உருக்கொண்டாற் போன்று கூனி தோன்றினாள் என்பது **கம்பராமாயணம்** (II. 2.47). **பத்ம புராண**த்தின்படி தேவர்கள் தங்கள் அப்சர மகளிருள் ஒருத்தியை மந்தரையாக நிலவுலகில் அவதரிக்குமாறு செய்தனர். மகாபலிச் சக்கரவர்த்தியின் தந்தையாகியவிரோசனன் மகள் மந்தரை தன் சரீரத்தில் திரிகோணமுடைய காரணத்தைக் கொண்டு கூனியென்று காரணப்பெயர் பெற்றுக் கைகேயின் அரண்மனையில் வசிக்கிறாள் என்று **அத்யாத்ம** ராமாயணம்கூறுகிறது.[12]*

*இராமனைக் காட்டிற்கு அனுப்பி இராவண வதம் செய்யும் நோக்கத்துடன் திருமாலின் ஆணையின்படிமாயை மந்தரையாக*

*11. A.N. Jani, "Different versions of Valmiki's Ramayana, in sanskrit" **Asisan Variations in Ramayana** P.30 12. நடேச சாஸ்திரியார், ப. 59. அவதாரம் எடுத்துத் தசரதன் அரண்மனையை அடைந்தாள் என்றும் (பாலகாண்டம் சந்தி - 8) அரசவையில் பணிப் பெண்ணாக இருந்த மாயையாகிய மந்தரை இராமன் நாளை முடிசூடுவான் என்று தசரதன் அறிவித்ததைக் கேட்டு கைகேயின் அரண்மனை நோக்கி ஓடினாள் (அயோத்யா சந்தி. 1) என்றும்கன்னட **தொரவே** ராமாயணம் கூறுகிறது.*

*தசரதன் தன் ராஜ்யத்தின் மூன்று திக்கு நாடுகளையும் மூன்று மக்களுக்குச் சமமாகப் பங்கிட்டுக்கொடுத்தபின் தலைநகரைச் சேர்ந்த நாட்டை இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய ஏற்பாடு செய்யும்போது பிரம்மாவின் ஆணையால் மந்தரை*

*என்னும் பெயருடைய ஒரு கந்தர்வப் பெண் கைகேயியை அடைந்துஇருவரங்கள் கேட்குமாறு தூண்டினாள் என்று* ***கோவிந்த ராமாயணம்*** *கூறுகிறது.*[13]

## தொகுப்புரை

*மந்தரையின் ஊர், பெற்றோர் போன்ற விவரங்கள் யாருக்கும் தெரியாது; கேகயன் அரண்மனையில்தாதியாக இருந்து பின்னர்க் கைகேயியின் துணையாக அயோத்தி வந்தாள் என்று மூலநூல் கூறிவிடவே, பின்னர் வந்த வழிநூல்கள் எல்லாம் மந்தரை பிறப்பு வளர்ப்பு குறித்துப் பல்வேறு கற்பனை வரலாறுகளைத்தத்தம் காப்பிய நோக்கத்துக் கேற்பப் படைத்துக் காட்டுகின்றன.*

*மகாபாரதம், பத்மபுராணம், அத்யாத்ம ராமாயணம், தொரவெ ராமாயணம், கோவிந்தராமாயணம் ஆகியன மந்தரையை அவதாரப் பிறப்பாகக் கூறுகின்றன. அவதாரம் என்பது தீமைகளை ஒழிக்கஉயர்ந்தோர் மேற்கொள்ளும் பிறப்பு வேறுபாடு என்பது பொதுவான கருத்து. இங்கு மந்தரையின் சூழ்ச்சிஇராமன் முடிசூடலைத் தடுத்துக் காட்டிற்கு ஓட்டுதல் என்னும் தீமையில் முடிதலின், மந்தரையை அவதாரப்பிறப்பென்றல் பொருந்துமா என்னும் வினா எழுகிறது. எனினும், மந்தரையின் சூழ்ச்சியால் விளையும் இராம வனவாசம் இராவணவதம் என்னும் பெருநன்மையில் முடிவதால் மந்தரையும் அவதாரப் பிறப்பினள்என்று கொள்வதில் பெருந்தவறு எதுவும் இல்லை. மானுடப் பார்வையும் மீமானுடப் பார்வையும் கலந்துநிற்கும் காரணத்தால் இத்தகைய கருத்துக் குழப்பம் ஏற்பட ஏதுவாயிற்று எனலாம்.*

*இதனால்தான் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பன் மந்தரையை அவதாரமாகக் காட்டாமல் இராவணனின்தீமையே உருக்கொண்*

*13. ஓங்கார கைல, பிரதி 74 741*

*டாலெனக் கொடுமனக் கூனி தோன்றினாள் என்று தற்குறிப்பேற்றம் படக் கூறிவிட்டானோ என்றுகருதத் தோன்றுகிறது.*

*தூய சிந்தையளாகிய கைகேயியின் உள்ளத்தைத் தெருட்டித் தன் கணவன் உயிர் துறக்கவும், தனக்கு உயிர்க்குயிரான இராமனை முடிதுறந்து காடேகவும், செய்யுமளவுக்கு அவள் சிந்தையைத் திரித்தல்ஒரு செயற்கரிய செயல். பின்னர்ப் பலர் முயன்றும் கைகேயியின் மனத்தை மீண்டும் மாற்ற இயலவில்லைஎன்பதே மந்தரை செயற்கரிய செய்தவள் என்பதை எதிர்மறையில் மெய்ப்பிக்கிறது. இவ்வாறு பிறரால்செய்யவியலாத அருஞ்செயல் புரிவோரை மானுட நிலையில் இருந்து (ஊர், பெயர், பிறப்பு போன்றனதெரிந்தாலும்) விலக்கி அவர்க்கு மீமானுடப் பண்பு கற்பித்தல் என்பது உலக இலக்கியங்கள்பலவற்றிலும் காணப்படும் இடைக்காலப் பண்பாட்டுக் கூறாகக் காணப்படுவதை இங்கே நினைந்துபார்க்கலாம்.*

### *1.3.2. மந்தரையின் பகைமை*

*மந்தரையாகிய கூனி இராமனின் பட்டாபிஷேகச் செய்தியைக் கேள்வியுற்றதும் அதைத் தடுக்கக்கருதிக் கைகேயியிடம் செல்லுகிறாள். இராமன்மீது அவள் கொண்ட பகைமைக்குப் பல்வேறு காரணங்களை இராமாயண நூல்கள் கூறக் காண்கிறோம்.*

**வான்மீகம்**

***தீவினைகளில் ஆர்வமுடைய மந்தரை (பாபதர்ஷிணி-II. 7-13)***

***பேச்சில் மிகவும் வல்லமையுடையவளான மந்தரை (வாக்கிய விஷாரதா-II. 7.18)***

***இராமனது நன்மைக்கு இடையூறாயிருக்கின்றவள் (II. 9.4, 10)***

***சம்பராசூரனிடத்தில் இருந்த மாயைகளை விட அதிகமான மாயைகளில் வல்லவள். இராஜ்ய விவகாரங்களில் நுட்பமும் ஞானமும் உடையவள். இவையே அவளுடைய கூனாக உருவெடுத்து நீண்டு பருத்துத் தேரின் கோணம் போன்று விளங்குகிறது. (II. 9.45, 46)***

***கூனியாகிய பெரிய முதலை. (II. 59)*** **அக்கினி புராணம்**

*மந்தரைக்கு இழைத்த அநீதி அல்லது அன்பற்ற கொடுமை ஒன்றின் காரணமாக இராமன் காட்டுக்குப்போக நேர்ந்தது.* [14]

**கம்ப ராமாயணம்**

*கொடுமனக் கூனி (II. 2.47) இடுக்கண் மூட்டுவாள் (48), காலக்கோள் அனாள் (51), தீய மந்தரை (85), வினை நிரம்பிய கூனி (87), உள்ளமும் கோடிய கொடியாள் (89),*

***பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ் உண்டை உண்டதனைத் தன்னுள்ளத்து உள்ளுவாள். (II. 2.49)***

***சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்றிந் நெறியிகழ்ந்து யான் ஓர் தீமை இழைத்தலால் உணர்ச்சி நீண்டு சிறியதாம் மேனியாய கூனியால் குவவுத் தோளாய் வெறியன எய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன். (IV. 8.12)***

***....அன்னான் அந்தக் கூனி கூன்போக உண்டை தெறித்த போது ஒத்தன்றி சினம் உண்மை தெரிந்ததில்லை. (VI. 1.17)***

**தக்கை ராமாயணம்**

***கொடியான் அரக்கன்செய் வினைப்பயனால் கூனி அதுகண்டு கோபமுற்றாள் நெடியோன் சிறுபோதில் தெறித்த உண்டை நெஞ்சில் சுடக் கைகை இடத்திற் சென்றாள். (II. 2.8)***

*இராம நாடகம்: பாதுகா பட்டாபிஷேகம்*

*அவனுக்கு (இராமனுக்கு) அரச காரியங்கள் என்ன தெரியும்? என்னைப்போல் ஒரு கூன் விழுந்தகிழவியகப்பட்டால் அவளை வில்லுண்டையால் அடித்துப் பரிகசிக்கத்*

*தெரியும். அவன் வில்லாண்மைகளெல்லாம்பெண்களிடத்தில்தான்: தாதியாகிய என்னை வில்லாலடித்தான்; தாடகை என்னும் ஒரு பெண்ணைவில் வளைத்து அம்பெய்து கொன்றான்; சிவன் தனக்கு உபயோகமில்லையென்று*

*14. A.N. Jani, P. 32 743*

*எறிந்த சொத்தை வில்லைப் பக்குவமாய் வளைக்கத் தெரியாமல் முறித்தெறிந்தான்... இவனுக்குப் பட்டம் ஒரு கேடா? (I. 3. 26)*

**புசுண்டி ராமாயணம்**

*தேவர்களின் வேண்டுகோளால் சரஸ்வதி மந்தரையின் மனத்துள் புகுந்து இராமனைக் காட்டிற்குஅனுப்புமாறு கைகேயியைத் தூண்டுகிறாள்.* [15]

**அத்யாத்ம ராமாயணம்**

*சரஸ்வதி தேவி யிப்போதே அயோத்திக்குச் சென்று, அவள் மனதில் பிரவேசித்து அவளைக்கொண்டு கைகேயி தேவிக்குப் போதிக்கச் செய்து, கைகேயியிடத்திலும் அந்தரியாமியாக வசித்து. இராமனைப் பதினான்கு வருடம் காட்டுக்குச் செல்லும்படிக்கும், பரதன் பதினான்கு வருடம் நாடாளும்படிக்கும்செய்விக்க வேண்டும், என்று கூறி, கலைவாணியை நோக்கி, "தாயே! தற்காலம் எங்களைக்காப்பாற்றி யருளவேண்டும்", என்று கதறிப் பிரம்மாவையும் சரஸ்வதியையும் வேண்டிக் கொண்டனர்.(ப.59)*

**அசாமி ராமாயணம்**

*பரதன் தன் தாய்மாமன் வீட்டிலிருந்து திரும்பி வருகிறான் என்ற செய்தியைக் கேட்டதும், அவனைக் கண்டு தன் காதலுணர்வை வெளிப்படுத்தக் கருதிய கூனியாகிய குஞ்சி முப்பது வகையானநகைகளையும் மணமிக்க பொருள்களையும் தன்மீது அணிந்துகொண்டு அவனைச் சந்திக்க ஓடுகிறாள். அப்போது, "நான் பரதனைவிட மூத்தவள்; எனினும் அதனாலென்ன? வயது வேறுபாடு காதலர்களுக்கு ஒருதடையா என்ன? வெளிப்படையாக என்னைக் காதலியாக ஏற்றுக் கொள்ளப் பரதன் வெட்கப்படலாம். இருந்தாலும் பிறரறியாதவாறு நான் அவனுக்கு ஆசை நாயகியாக இருப்பேன்" என்றவாறு சிந்தனை செய்துகொண்டுபரதனை நோக்கிக் குஞ்சி விரைகிறாள்.* [16]

**ரங்கநாத ராமாயணம்**

*இராமன் சிறிய பையனாக இருந்தபோது தன்காலை ஒடித்து விட்டான் என்ற காரணத்தால் மந்தரைஅவள் மீது பகைமை கொண்டிருந்தாள்.*

*15. Bhagwati Prasad Singh, "Bhusundi Ramayana and its influence on themedieval Ramayana Literature,"* ***The Ramayana Tradition in Asia.*** *pp. 500- 501. 16. Biswanarayan, shastri, "Ramayana in Assamese Literature,"* ***The RamayanaTradition in Asia,*** *p. 587* **பாஸ்கர ராமாயணம்**

*இதுவும் மேற்கண்டவாறே கூறுகிறது.*

### *தொரவெ ராமாயணம்*

*திருமாலின் ஆணையால் மந்தரையாக அவதரித்த மாயை அவனது அவதார நோக்கம் கருதி இராமனுக்குஎதிராகச் செயற்படுகிறாள்.*

### *எழுத்தச்சன் ராமாயணம்*

*தேவர்களின் வேண்டுகோளின்படி சரஸ்வதியால் மனம் திரிந்த மந்தரை இராமன் முடி சூடாதவாறுதடுக்கக் கருதிக் கைகேயியைத் தூண்டுகிறாள்.*

### *துளசி ராமாயணம்*

*சரஸ்வதி தேவியின் தூண்டலால் மந்தரை சிந்தை திரிந்தவளாய்க் கைகேயியை இராமனுக்குஎதிராகத் தூண்டுகிறாள். (II. 13)*

### *இராம்கியேன்*

*இராமன் மீது கொண்டிருந்த பழம்பகை காரணமாக மந்தரையாகிய கூனி (குசி) கைகேயியிடம் சென்றுஇராம பட்டாபிஷேகத்தைத் தடுக்குமாறு தூண்டுகிறாள் (ப. 34)*

### *இராம வத்து*

*இயற்கையிலேயே தீய எண்ணமும் அழுக்காறும் கொண்ட கூனி (குப்பசி) கைகேயியை இராமனுக்குஎதிராகச் செயல்படுமாறு தூண்டுகிறாள் (5ஆவது காண்டம்)*

### *தொகுப்புரை*

*இராமகாதையின் கதைக் கருவிற்கு அயோத்தியா காண்டம் ஒரு திருப்புமுனையாக அமைகிறது எனின்அத் திருப்புமுனைக்குக் காரணகர்த்தாவாக விளங்குபவள் மந்தரையாகிய கூனிதான் என்பது தெளிவு. இக்கூனிஇராமன் மீது பகைமை பாராட்டியமைக்குரிய காரணங்களாக இராமாயண நூல்கள் கூறுவனவற்றைத் தொகுத்துநோக்கின் நான்கு வகைக் காரணங்கள் புலப்படுகின்றன. அவையாவன:*

*1. மந்தரையின் இயற்கைப் பண்புகள் 2. இராமன் சிறுவனாக இருந்தபோது கூனிக்கு இழைத்த பிள்ளைமைக் குறும்புகள். 745*

*3. தேவர்களின் தூண்டலால் மனந்திரிந்து இராமனுக்கு எதிராகச் செயற்படுதல். 4. பரதன்மீது ஏற்பட்ட காதலால் இராமனுக்கு எதிராகச் செயற்படுதல்.*

*1. இவற்றுள் முதற் காரணத்தை ஆதி காவியமாகிய வான்மீகம் குறிப்பாகச் சுட்டுகிறது. 'பாபதர்ஷினி' 'வாக்கிய விஷாரதா' என்னும் அடைமொழிகளும், மாயைகளில் வல்லவள், முதலைபோன்ற இயல்புடையவள் என்னும் குறிப்புகளும்*

*அவளுடைய மானுட இயற்கையே செப்பமற்றது; பிறர்க்குத்தீங்கு நினைக்கும் தன்மையது என்னும் குறிப்பை நமக்குத் தருகின்றன. எனவே, தன் தலைவியாகிய கைகேயியின்நலனுக்கு எதிரானது என்று தான் கருதுவதைத் தடுக்கும் இயல்பினள் மந்தரை என்பது பெறப்படுகிறது. இவ்வாறு மந்தரையின் இயற்கைப் பண்புகளே இராமனுக்கு இடையூறு நினைக்கக் காரணமாயின என்னும்கருத்தினராக வான்மீகி காணப்படுகிறார்.*

*கி.பி. 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய இராமவத்து என்னும் பர்மிய ராமாயணமும் கூனியின்இயற்கைப் பண்புகளை அவளுடைய பகைமைக்குக் காரணமாய்க் காட்டுகிறது.*

*2. கூனிக்கு இராமன் இழைத்த தீங்குகளால் அவள் இராமன் மீது பகைமை பாராட்டினாள் என்னும்செய்தியை முதன்முதலாக அக்கினி புராணம் (கி.பி.8 ஆம் நூற்றாண்டின்பின்) கூறுகிறது. ஆனால், என்ன தீங்கு இழைத்தான் என்று அது விளக்கவில்லை. காப்பியக் கவிஞர்களில் கம்பன்தான் முதன்முதலாக இக் காரணத்தை விளக்குகிறான். பண்டைய நாளில் தன் வில்லுண்டையால் அடித்துக் கூனியைஇகழ்ந்த காரணத்தால் மந்தரை பகைமை கொண்டாள் என்பதைக் கம்பன் தன் கூற்றாகவும் இராமன் கூற்றாகவும் கூறுகிறான். இக் கருத்தைக் கம்பன்,*

***தேனகம் செய் தண்ணறு மலர்த்துழாய் நன்மாலையாய் கூனகம் புகத்தெறித்த கொற்றவில்லி அல்லையே. (திருச்சந்த விருத்தம் 30)***

***கொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவு கூனி கூன் உண்டை கொண்டு அரங்கவோட்டி உள்மகிழ்ந்த நாதன். (திருச்சந்த விருத்தம் 49)***

*எனவரும் திருமழிசையாழ்வாரின் பாசுரங்களிலிருந்து பெற்றிருக்கலாம் எனக் கருத வாய்ப்புண்டு. ஆழ்வார்கருத்துக்கு எது மூலம் என்று அறிய இயலவில்லை. ஒருகால் அவரே கற்பித்துப் பாடி யிருக்கலாம். தக்கை ராமாயணம், கம்பனைப் பின்பற்றி இதே காரணத்தைக் கூறுகிறது. பெரும்பாலும் வான்மீகத்தைத் தழுவிச் செல்லும் இராம நாடகம்கூட இந்தச் செய்தியில் கம்பனைப் பின்பற்றிச் செல்லக் காண்கிறோம்.*

*தெலுகு ராமாயணமாகிய ரங்கநாத ராமாயணம் 'இராமன் சிறுவனாயிருந்தபோது விளையாட்டாகக்கூனியின் காலை ஒடித்து விட்டான். அந்தக் கோபத்தால் மந்தரை அவன்மீது வஞ்சம் கொண்டாள்' என்று கூறி இதே காரணத்தைக் காட்டுகிறது. இச் செய்தியைப் பின் வந்த பாஸ்கர ராமாயணமும்கூறுகிறது. ரங்கநாத ராமாயணக் கூற்றிற்கு மூலம் எதுவென அறிய இயலவில்லை. இனி, தாய்லாந்துராமாயணமாகிய இராம்கியேன், மந்தரை இராமன் மீது பழம்பகை கொண்டிருந்தாள் என்று கூறுகிறது. இன்னதென விரித்துரைக்க வில்லையேனும் பழம்பகைமை என்னும் காரணத்தை இக்காப்பியம் சுட்டுகிறதுஎன்பது தெளிவாகிறது.*

*3. தேவர்களின் வேண்டுகோளால் சரஸ்வதி நிலவுலகிற்கு வந்து மந்தரையின் மனதில் புகுந்துகைகேயியின் உள்ளத்தைத் திரித்து இராமனுக்கு எதிராகச் செயல்படச் செய்தாள் என்னும் கருத்தை முதன்முதலில் புசுண்டி 'Bhusundi' ராமாயணம் கூறுகிறது. வடநாட்டைப் பொறுத்தவரை வான்மீகத்தைஅடுத்துத் தோன்றிய (கி.பி. 12 ஆம் நூற்றாண்டு) இந்நூலின் தாக்கத்தை இடைக்கால இராமாயணநூல்கள் பலவற்றிலும் காணலாம். புசுண்டி ராமாயணத்தைப் பின்பற்றி அத்யாத்ம ராமாயணம், துளசி*

*ராமாயணம் ஆகிய இரண்டும் இதே கருத்தைக் கூறுகின்றன. கன்னட தொரவே ராமாயணம் இதனைச்சற்று மாற்றித், திருமாலின் ஆணையால் மாயையே மந்தரையாக அவதரித்து அவதாரப் பயன்கருதிக் கைகேயியின் மனத்தை இராமனுக்கு எதிராக மாற்றினாள் என்று கூறுகிறது. மாயையின் அவதாரம் எனக்கூறினமையால் கேகயன் அரண்மனைக்கே வந்து பணிப்பெண்ணாக அமர்ந்தாள் என்று சற்று மாற்றிக் கூறுகிறது. மந்தரை இயற்கையில் குற்றமற்றவள், தேவர்கள் தங்கள் காரிய சித்திக்காக அவளைத்திரித்துப் பணி கொண்டனர் என்பது இக்கருத்தின் அடிப்படையாக அமைகிறது.*

*4. மாதவ் கந்தலியின் அசாமி ராமாயணம் பரதன் மீது காதல் வயப்பட்டவளாக மந்தரையைக்காட்டுகிறது. இதனால் பரதனின் நலனில் மிக்க ஆர்வமுடையவளாகி, இராமனுக்காக ஏற்பாடு செய்யப்பட்ட பட்டாபிஷேகத்தைப் பரதனுக்குச் செய்ய வேண்டும் என்னும் கருத்தில் கைகேயியின் மனத்தை இராமனுக்குஎதிராக மாற்றுகிறாள். இங்கே பழம் பகைமையோ, அவதார 747*

*நோக்கமோ காரணமாகக் காட்டப்படாமல் மந்தரையின் காதலாகிய தன்னலம் அவள் சூழ்ச்சிக்குக் காரணமாகக் காட்டப்படுகிறது. வேறெந்த இராமாயண நூலும் மந்தரையை இக்கோணத்தில் படைத்துக் காட்டவில்லை.*

### *1.3.3. மந்தரையின் சூழ்ச்சி*

*கைகேயியின் மனத்தை இராமனுக்கு எதிராகத் திரிக்க விரும்பிய மந்தரை அவளுக்குக் கூறும்தீய அறிவுரைகளை எல்லா ராமாயண நூல்களும் ஏறக்குறைய ஒரே மாதிரியாகக் கூறுகின்றன. இராமன் முடிசூடுவதால்பரதனுக்கு ஏற்படும் இழப்பையும் இழிவையும் கைகேயிக்கு ஏற்படவிருக்கும் இழிவுகளையும் மந்தரைபலபட விரித்துரைப்பதாகப் பொதுவாக எல்லா இராமாயண நூல்களும் கூறுகின்றன.*

*கோசலை அரசனின் தாய் என்னும் பெருமை பெற்று உன்னையும் உன் தாதியரையும் அடிமைகளாக நடத்துவாள்.ஏனெனில், தசரதன் பிற மனைவியரைவிட உன்னிடத்தில் அதிக ஆசை கொண்டவனாக இருக்கிறான் என்ற காரணத்தினால் செருக்கடைந்து இராமன் தாயாகிய கோசலையை நீயே பலமுறை அவமதித்திருக்கிறாய்.அவ்வாறு அவமதிக்கப்பட்டவள் வாய்ப்பேறப்பட்டால் உன்னைப் பழிவாங்காதிருப்பாளா என்று மந்தரை கூறியதும் கைகேயியின் மனம் மாறியதாக வான்மீகம் காட்டுகிறது. (II. 8.37, 38) தனக்குமறுநாள் முடிசூட்டப்போவதாகத் தசரதன் முடிவு செய்துள்ளான் என்னும் செய்தியை இராமன் சொல்லக்கேட்டவுடன் கோசலை இதுதான் நானும் வெகு நாளாக உள்ளத்தே கருதியிருந்த மனோரதம் எனக் கூறி ஆனந்தக் கண்ணீர் சொரிய நின்று தன்மகனைப் பார்த்துக், "குழந்தாய், நீ நீடூழி வாழ்க, உனக்கு இடையூறு செய்ய விரும்புபவர்களின் மனோரதம் நிறைவேறாமற் போகட்டும். நீ ராஜ்யலட்சுமியுடன்புகழ்பெற்று விளங்கி எப்போதும் என் உறவினர்களையும் சுமித்திரையின் சுற்றத்தார்களையும் மகிழ்ச்சியுடன்இருக்கச் செய்வாயாக" (II. 4.38, 39) என வான்மீகம் கூறுவது மந்தரையின் வாதத்தோடு இணைத்துச்சிந்திக்கத்தக்கதாக உள்ளது.*

*மகனுக்கு வரும் இழப்பையும் இழிவையும் கூறியபோதும் இராமனிடத்திலுள்ள நல்லெண்ணத்தைக் கைவிடாதகைகேயி தன் மாற்றாள் 'அரசமாதா' என்னும் பெரும்*

*பதவியடைவாள் என்றும் தன்னைப் பழிவாங்குவாள்என்றும் கூறப்பெற்றதும் உடனே மனமாற்றம் அடைந்துவிடுகிறாள் என்று காட்டி உளவியல் நுட்பம் அறிந்துசெயல்பட்ட மந்தரையின் அறிவுக்கூர்மையைக் கவிஞர் நன்கு வெளிப்படுத்துகிறார். மாற்றாளின் ஏற்றத்தையும் அதனால் ஏற்படும் கைகேயியின் இழிவையும் எடுத்துரைக்கும் நிலையில் சில கவிஞர்கள் வேறுபடக் காண்கிறோம்.*

***காதல் உன்பெருங் கணவனை அஞ்சிஅக் கனிவாய்ச்    சீதை தந்தைஉன் தாதையைத் தெறுகிலன்; இராமன்    மாதுலன் அவன்; நுந்தைக்கு வாழ்வுஇனி உண்டோ?    பேதை உன்துணை யாருளர் பழிபடப் பிறந்தார்?    (II. 2.82)***

***மற்றும் நுந்தைக்கு வான்பகை பெரிதுள; மறத்தார்    செற்ற போதுஇவர் சென்று உதவார்எனில் செருவில்    கொற்றம் என்பது ஒன்று எவ் வழிஉண்டு அதுகூறாய்    சுற்ற மும்கெடச் சுடுதுயர்க் கடல்விழத் துணிந்தாய்.    (83)***

*என்னும் கம்பன் வாக்கில் கூனி கைகேயியின் வரப்போகும் இழிவை மட்டும் குறிப்பிடவில்லை. அவளுடைய மதியிலாத் தனத்தால் கைகேயியின் தந்தைக்கு வரப்போகும் ஆபத்தையும் குறிப்பிட்டுக்காட்டுகிறாள். மனைவியர் தம்மை இகழ்ந்தாலும் பொறுத்துக் கொள்வர். ஆனால், தம் பெற்றோர், தமையன்மார் பற்றித் தம் புகுந்த வீட்டார் ஒரு சிறுகுறை கூறினாலும் பொறுக்காமல் வெகுண்டுஎழுவர் என்னும் உளவியல் நுட்பத்தைக் கையாண்டு, கைகேயியின் மெத்தனத்தால் அவளுடைய தந்தையின்வாழ்வே முடியப் போகிறது என்று மந்தரை எடுத்துக் காட்டுவதாகக் கம்பன் காட்டுவது உன்னி உன்னிமகிழத்தக்கது. இதைக் கேட்ட பிறகுதான் 'தேவியின் தூய சிந்தையும் திரிந்தது' என்று வருந்துகிறான் கவிஞன்.*

*அத்யாத்ம ராமாயணம், ரங்கநாதம், பாஸ்கரம் என்னும் இரு தெலுங்கு ராமாயணங்கள், கன்னடதொரவே ராமாயணம், துளசி ராமாயணம் ஆகிய யாவும் இவ்வகையில் வான்மீகத்தை ஒத்தே செல்கின்றன.*

*இனிப் பரதன் இச்சமயத்தில் அயோத்தியில் இல்லாமை குறித்து வான்மீக மந்தரை கூறும் ஒருமுரண்பட்ட கருத்து ஆய்வுக்குரியதாக அமைகிறது.*

*துஷ்டாத்மாவாகிய தசரதர் பரதனை உன் தாய்வீட்டிற்கு அனுப்பிவிட்டு இடையீறில்லாதஅரசபதவியில் இராமனை நிலையாக அமர்த்தப் போகிறார் என்று முதலில் கூறியவள் (II. 7.26) பின்னர்ப் பரதனோ களங்கமில்லாத சிறுவன்; நீ தான் அவனை மாமன் வீட்டிற்கு அனுப்பிருக்கிறாய் (II. 8.28) என்று கைகேயியே பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பியதாக மந்தரை கூறுகிறாள்.    749*

*பால காண்ட இறுதியில் கேகய மன்னன் பரதனை அழைத்து வருமாறு தூதர்களை அனுப்பியதால், தசரதன் அவனைப் பாட்டன் வீட்டிற்கு மாமனுடன் அனுப்பியதாக வான்மீகி கூறுகிறார். இதனை உள்நோக்கத்துடன் தசரதன் செய்தான் என்று முதலிற் கூறிய மந்தரை சற்று நேரம் பொறுத்து, 'நீயே அவனை அனுப்பி வைத்தாய்'என்று கைகேயி மீதே ஏற்றிக் கூறுவதன் பொருத்தமும் பொருளும் விளங்கவில்லை. மந்தரையின் வஞ்சனைப்பொய்ம்மையைக் காட்ட கவிஞர் இவ்வாறு கூறுகிறாரா அன்றிப் பாடபேதமா என்று அறிய இயலவில்லை.*

*மிதிலையிலிருந்து அயோத்தி மீண்ட பின்னர் ஒருநாள் தசரதன் பரதனை அழைத்து, 'ஐய நினது மூதாதை நின்னைக் காணிய விருப்பினன் என்று ஆணை வந்துள்ளது. ஆதலால், நீ கேகயம் போவாயாக என்று கூறவே (I.23.47) அவனும் இராமனிடம் விடைபெற்று உதாசித்து என்னும் மாமனுடன் கேகய நாடு சென்றடைந்தான் என்று (I.23.49) கம்ப ராமாயணம் கூறுகிறது. இச்செய்தியையே, 'அன்றைக்கு, அரசன்ஆணையால், பரதனை அவசரமாக நெடுந்தூரத்தில் உள்ள கேகய நாட்டிற்கு அனுப்பியதன் பொருள் இன்றுதான்எனக்கு விளங்குகிறது என்று மந்தரை தசரதனே பரதனை வேண்டுமென்றே அனுப்பிவைத்தான் என்று திரித்துக்கூறுகிறாள் (II. 2.67). வான்மீகத்துடன் ஒத்திருக்கும் இக்கருத்தையே அத்யாத்மம், ரங்கநாதம், பாஸ்கரம், எழுத்தச்சன் ராமாயணம், தொரவெ ராமாயணம் ஆகிய காப்பியங்களும் கூறுகின்றன.*

*பட்டாபிஷேகத்திற்கான பணிகள் சென்ற பதினைந்து நாட்களாக நடந்து வருகின்றன. ஆனால், நான் வந்து இன்று சொல்லும் வரைக்கும் உனக்குத் தெரியவில்லையே. நீ அறியாத வேறு ஒன்றையும்நான் உனக்கு இப்போது கூறுகிறேன். இராமனின் தாய் கோசலையின் ஆலோசனைப்படிதான் தசரதன் பரதனைக் கேகய நாட்டுக்கு அனுப்பி வைத்துள்ளான் என்று துளசி தாசரின் மந்தரை கூறுகிறாள் (II.18.1). இங்கே பரதனைப் பாட்டனார் வீட்டிற்கு அனுப்பிய பழியைக் கோசலை மீது ஏற்றிக் கூறுகிறாள்மந்தரை. அத்துடன் நிற்காமல் சக்களத்தியரால் மனைவியர் பட்ட துன்பங்களை விளக்க நூற்றுக் கணக்கான கதைகளைக் கூறிக் கைகேயியின் பொறாமைத் தீயை நெய்யூற்றி வளர்த்தாள் என்றும்(II.18) கூறுவதால் துளசிதாசர் சக்களத்தியரின் உளவியல் உணர்ந்து கைகேயியின் மனமாற்றத்தைவிரைவுபடுத்தவும், உறுதிப்படுத்தவும் கருதி இம்மாற்றத்தைச் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது.*

*ஆகப் பரதனின் பாட்டனாரது விருப்பத்தின் பேரில் தசரதன் அவனை அனுப்பினான் எனவும், இராமனின்பட்டாபிஷேகம் தடைப்படாமல் இருக்கத் தசரதனே அனுப்பினான் எனவும், கைகேயியே தன் விருப்பத்தால் அனுப்பிவைத்தாள்எனவும், கோசலையின் தூண்டுதலால் தசரதன் அனுப்பிவைத்தான் எனவும் பரதன் கேகயம் சென்றமைக்கான நான்கு வகைக் காரணங்களை இராமாயண நூல்கள் தந்துள்ளன என அறிகிறோம்.*

*தெலுகு மொல்ல ராமாயணம் மந்தரை வரலாற்றையோ, அவளது சூழ்ச்சியையோ, குறிப்பிடவே இல்லை.இந்தக் காப்பியத்தில் தசரதனே, தான் எடுத்த முடிவைக் கைகேயிக்கு அறிவிக்கிறான். இதேபோன்று துளசி ராமாயணத்தின் உடன்கால இந்திக் காப்பியமாகிய **இராமச்சந்திரிகா** வும் மந்தரை சூழ்ச்சியைப் பாடாமல் விட்டுள்ளது என்பதும் இவ்விரு ராமாயணங்களும் வான்மீகத்தையேமுதனூலாகக் கொண்டவை என்பதும் சிந்திக்கத் தக்கன.*

### *1.3.4. இளையவளா இடையவளா?*

***வான்மீகத்*** *தில் கோசலை மூத்த அரசி என்பது தெளிவாகத் தசரதன் வாயிலாகவே கூறப்படுகிறது.ஆனால், கைகேயி இரண்டாமவளா, மூன்றாவது அரசியா என்னும் செய்தி வெளிப்படையாகக் குறிக்கப்படவில்லை. எனினும், கோசலை சுமித்திரை ஆகிய இருவரின் நெருக்கமான உறவைக் கோசலையே குறிப்பிடுவதாலும், பாலகாண்ட முன்னுரையில் இடம் பெற்றுள்ள ஒப்பியலாய்வில் காட்டப்பெற்ற காரணங்களாலும்,[17] கைகேயி மூன்றாவது மனைவியாக இருக்கலாம் என்னும் கருத்து*

*வலுப்பெறுகிறது. வான்மீகிக்கு அடுத்தமுழு இராமாயண நூலாகிய கம்ப ராமாயணம் சுமித்திரையை இளையவள் என்று குறிப்பிடுகிறது. (I.5.105) வான்மீகத்தை ஒட்டியே செல்லும் கம்பன், கோசலை-சுமித்திரை இருவரின் உறவு நெருக்கத்தைக் குறிப்பாகக் காட்டுகிறான். (II. 2.2 - 7).*

*இராமனுக்கு நேர் இளையவன் பரதனாகையாலும் இலக்குவனும், சத்துருக்கனனும் இவர்கள்இருவர்க்கும் இளையவர்களாதலாலும் இவர்தம் தாயரையும் இதற்கேற்பக் கோசலை - கைகேயி - சுமித்திரைஎன்னும் வரிசையில் வைத்துப் பார்க்கும் பொது நோக்கம் வாசகர்களிடையே பரவியருக்கக் காண்கிறோம். சில பிற்கால நூல்களும் இக்கருத்துடையனவாய்க் காணப்படுகின்றன. காட்டாகச் சங்கதாசரின்* ***வாசுதேவஹிண்டி*** *(கி.பி. 5ஆம் நூற்றாண்டு) போன்ற ஜைன ராமாயணங்களும் கி.பி.16ஆம் நூற்*

*17. கோவைகம்பன் அறநிலை பதிப்பு: கம்ப ராமாயணம் - பாலகாண்டம் முன்னுரை பக்கம் 75-76. 751*

*றாண்டில் தோன்றிய* ***சந்திராவதி*** *என்னும் வங்காளக் காப்பியமும் கைகேயியை இரண்டாம்மனைவி என்று காட்டுவதைச் சுட்டலாம்.* [18]

*வியாசரின் மகாபாரதம் கைகேயி தசரதனின் மூன்றாம் மனைவி என்றும், பரதனின் தாய் என்றும்முதன் முதலாகத் தெளிவாகக் கைகேயி இளையவள் என்று கூறுகிறது. (வனபர்வம் 274 - 75). மேலும் இந்தி ராமாயணங்களிலும், காஷ்மீரி ராமாயணங்களிலும் கைகேயி மூன்றாமவளாகவும், சிறிய ராணியாகவும்குறிக்கப்படுகிறாள்.* [19] *தக்க சான்றுகள் காட்டவில்லையேனும் இக்கருத்தை ஜெகவீர பாண்டியனார் ஐம்பதாண்டுகட்கு முன்னரே வெளிப்படுத்தியிருப்பதும் இங்கே நினைவு கூர்தற்குரியது.* [20]

*சில இராமாயண நூல்கள் தசரதன் - கைகேயி உறவினை மாற்றியும் கூறுகின்றன. காட்டா* ***ஹிகாயத் செரீராம*** *(Hikayat seri Rama) என்னும் மலேசிய ராமாயணம் தசரதனுக்குப் பால்யாதரிஎன்னும் ஆசை நாயகியினிடத்துப் பிறந்தவள் கைகேயி என்று கைகேயியைத் தசரதனின் மகளாகக் காட்டுகிறது.* [21] *இத்தகைய உறவு வேறுபாட்டை இந்திய ராமாயணங்கள் எவையும் காட்டவில்லை.*

### *1.3.5. கைகேயியின் பண்புகள்*

*மந்தரையின் தீயுரைகளால் தூண்டப்படுவதற்கு முன்னும் பின்னும் கைகேயி எத்தகைய பண்புடையவளாகஇருந்தாள் என்பதை இராமாயண நூல்கள் நன்கு படைத்துக் காட்டியுள்ளன. குறிப்பாக வான்மீகமும், கம்ப ராமாயணமும், இராமசரித மானசமும் இப்பாத்திர விசேடத்தை மிகச் சிறப்பாகப் படைத்துள்ளனஎனலாம்.*

### வான்மீகம்

*அரசர் குலத்தில் தோன்றி அரசருக்கு மனைவியாக வாழ்பவள் கைகேயி, மகளாகவும், மனைவியாகவும்அரச குடும்பத்தோடு தொடர்புடையவள் அரசனுக்குத் தாயாகவும் ஆகவேண்டும்*

*18. D. sen* ***The Bengali Ramayanas*** *(Calcutta, 1920) pp. 196-197), quotedby S.Singaravelu, "The Literary version of the Rama story in Malay",* ***Asisanvariations in Ramayana,*** *p. 293, n. 38. 19. ஓங்கார கைலை 20. புலவர் உலகம்: (கம்பன் கலை நிலை) தொகுதி நான்கு (மதுரை: வரதராஜுலு நாயுடு பிரஸ், 1945) ப. 1349. 21. S. Singaravelu, p . 284.* என்னும் குறிப்புத் தோன்ற மந்தரை இச்செய்தியைக்கூறுகிறாள். (II. 7.2, 3) மந்தரையின் மூலம் இராமபட்டாபிஷேகம் பற்றிக் கேள்விப்பட்ட கைகேயி, இராமன் - பரதன் இருவரிடையே தனக்கு வேறுபாடு இல்லை என்றும், இராம பட்டாபிஷேகத்தை விட மகிழ்ச்சியானவேறொரு செய்தியைத் தனக்கு அவள் சொல்ல முடியாது என்றும் கூறி மகிழ்கிறாள். (7.35, 36)மேலும் அவள்,

இராமன் தர்மநெறி தவறாதவன்; பெரியோரால் பண்படுத்தப் பெற்றவன்; செய்ந்நன்றி அறிபவன்;பிறர்க்குரியதை விரும்பாத உள்ளத்தன்; சத்திய சந்தன்; நால்வருள் மூத்தவன்; எனவே அரசநீதியின்படிபட்டத்திற்குரியவன்; உடன் பிரிந்தவர்களைத் தந்தையைப் போல் பாதுகாப்பவன்; கோசலையை விடஎன்னிடம் மிக அதிகமான தாயன்புடையவன்; பரதன் எனக்குப் பிரிய மானவன்; எனினும் இராமன் அவனிலும்மேம்பட்டவன்; தம்பியரைத் தன்னுயிராகக் கருதுபவன். எனவே பட்டாபிஷேகம் ராமனுக்குரியதாயினும்அரசு பரதனுடையதாகவே இருக்கும்.

என்று இராமனின் புகழைப் பலபட விரித்துரைக்கிறாள். (II. 8.14, 18, 19)

நற்குண நற்செய்கைகளால் பெரும்புகழ் பெற்றவளான கைகேயி கூனியின் தீயுரையால் நன்மையிதுதீமையிது என்று விதந்து அறியும் ஆற்றலற்ற ஒரு சிறுமி போலாகிவிட்டாள். துர்ப்போதனையால் கர்வம் தலைக்கேறிய கைகேயி மந்தரையின் அறிவுக் கூர்மையினையும் கேசாதிபாத அழகினையும்பலபடப் புகழ்ந்து கூறுகிறாள் (II. 9.36, 37). கூனியின் தூண்டலால் இராம பட்டாபிஷேகத்தைத்தடுக்க முடிவு செய்து விட்டாளாயினும் தன் மனச்சாட்சிக்கு ஒவ்வாத எண்ணமாதலின் உள்ளம் தடுமாறப்பெற்றவளாய்ப் பெருமூச்செறிந்து தான் செய்யவிருக்கும் காரியத்திற்கேற்ற உபாயம் குறித்து ஆலோசனைசெய்யலாளாள் (II. 10.3).

கம்பன், துளசிதாஸ் ஆகிய இருவர்தம் காப்பியங்களும் ஏறக்குறைய இதே கருத்தோட்டத்துடன்கைகேயின் மனமாற்றத்தைப் படிப்படியாக விவரிக்கின்றன.

ஜைனராமாயணங்கள் பெரும்பாலும் கைகேயியை நற்குண நற்செய்கைகள் உடையவளாகப் படைத்துக்காட்டியுள்ளன. தசரதனைப் பின்பற்றித் துறவு மேற்கொள்ள முனைந்த பரதனைத் தடுத்து நிறுத்துவதன் பொருட்டு அவனை அரச பதவியில் அமர்த்த விரும்பினாள் என்றும், பரதன் மீதுள்ள அன்பின் காரணமாகஇராமன் தானே காடேக முடிவெடுத்துச் சென்றான் என்றும் 753

ஜைனராமாயணம் கூறுகிறது.[22] காட்டாக விமலசூரியின் பௌம சரிதம் என்னும் இராமாயண நூல் கைகேயி தன் மகன் மீது அளவு கடந்த பற்றுடையவள் என்றும், தன் கணவன் துறவு மேற்கொள்வதைஏற்றுக் கொள்பவள் என்றும், கணவனொடும், மகனோடும் நல்லிணக்கம் உடையவளாகப் படைத்துக் காட்டுகிறது. மேலும் இந்த இராமாயணத்தில் வரும் கைகேயி இராமன் காடேக வேண்டுமென்று வேண்டவில்லை.[23]

### 1.3.6. கைகேயி வரங்கள் பெற்ற சூழல்

**வான்மீகம்**

*தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே ஏற்பட்ட போரில் எதிரியின் அம்புகளால் மூர்ச்சையடைந்துவீழ்ந்த தசரதனைக் கைகேயி விழிப்பாக இருந்து காப்பாற்றினாள். அந்த உதவியால் மனமுவந்ததரசதன் அவளுக்கு இரண்டு வரங்களைத் தந்திருந்தான். வேண்டும்போது கேட்டுப் பெற்றுக் கொள்வதாகக்கைகேயி கூறினாள். (II. 11.18, 25; II. 18.32)*

**வாசுதேவஹிண்டி**

*முன்பொரு காலத்தில் தன் உறவினர்களை உபசரிப்பதில் கைகேயி காட்டிய ஆர்வத்தையும் திறமையையும்பார்த்து மகிழ்ந்த தசரதன் அவளுக்கு ஒரு வரம் கொடுத்தான். பிறகு பெற்றுக் கொள்வதாகக் கைகேயி கூறியிருந்தாள். பின்பொருகால், எல்லைப் புற அரசன் ஒருவனுடன் நடந்த போரில்தசரதன் கைது செய்யப்பட்டான். அப்போது கைகேயி துணிந்து படைகளுக்குத் தானே தலைமை தாங்கிஎதிரியுடன் போரிட்டு வென்று தசரதனை விடுதலை செய்து கொண்டு வந்தாள். அவளுடைய வீரச் செய்கையால்மகிழ்ந்த தசரதன் மற்றொரு வரத்தை அவளுக்குக் கொடுத்தான். அதனையும் வேண்டும்போது பெற்றுக்கொள்வதாகக்கைகேயி கூறியிருந்தாள். [24]*

**வடஇந்திய நாட்டுப்புறப் பாடல்**

*சீதை வீடு பெருக்கிய குப்பையை ஓரிடத்தில் கொட்டிவந்தாள். அந்தக் குப்பை மேட்டில்மூங்கில் புதர் ஒன்று செழித்து*

*22. H.C. Bhayani "The Prakrit and Apabhramsa Ramayana's"* ***AsianVariations in Ramayana*** *P.81. 23. U.P. SHAH. "Ramayana in Jaina Tradition",* ***Asian Variations inRamayana,*** *P. 68 24. U.P. Shah, P. 64. வளர்ந்தது. அதிலிருந்த மூங்கில் கழியை வெட்டச் சென்ற தசரதன், விரலில் முள் குத்தி வலியால் துடிதுடித்தான். அப்போது உடன் சென்றிருந்த கைகேயி அந்த முள்ளை எடுத்து அவன் வலியைப்போக்கினாள். அதனால் பெரிதும் மகிழ்ச்சியடைந்த தசரதன் அவளுக்கு ஒரு வரம் தந்தான். அதன்படி "பரதனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி இராமனைக் காட்டிற்கு அனுப்புங்கள்" என்று கைகேயி வேண்டினாள். அதைக் கேட்டுத் துணுக்குற்ற தசரதன், "என்ன வரம் கேட்டாய் நீ, ஒரு சிறு முள்ளை என் விரலில் இருந்து பிடுங்கிவிட்டுக் கூர்மையான அம்பொன்றை என் நெஞ்சில் பாய்ச்சி விட்டாயே" என்றுகதறி அழுதான். [25]*

*சம்பரா சூரனுடன் பொருது வென்றபோது தசரதன் உனக்கு அருளிய இரண்டு வரங்களை இப்போது கேள்என்று கூனி உபாயம் செப்பியதாகக் கம்பராமாயணம் கூறுகிறது. (II. 2.89)*

***உந்தன் மணவாளரும் கோசலையும் உகந்து ரதம் ஏறி வரும்போது தேர்வண்டி அச்சுதான் முறிய சிறப்பாய் உன் கரத்தினால் ஏந்திக்கொண்டாய் அப்போது உன் கணவன் தான் பார்த்து ஆயிழையே உனக்கென்ன வரம் கேளும் என்றார். கேளுமென்று ராசன் உரைத்த போது கெம்பீரமா யுன் மகன் பரதாள் வார்க்கு எந்தன் மகன் பரதாள் வானுக்கு யேத்த முதப்பட்டங் கட்டவேணும் யென்று நீவரங் கேட்டபடி யிசைந்து வரமது தந்து விட்டார் அந்த வரம் சற்றும் நினையாமல் ஆயிழை கைகேசி மறந்து விட்டாய். [26]***

*அத்யாத்ம ராமாயணம்*

*தசரதன், தேவர்களுக்குத் துணையாக அரக்கர்களுடன் போர் புரியும் போது, பகைவர்கள் தன் தேரின் கடையாணி இற்று விழும்படி செய்ததை அறியவில்லை. கூர்மையான புத்தியுடைய நீ மிக்கதைரியத்துடன் ஆணிக்குப் பதிலாக உன்னுடைய இடக்கையை*

*25. Vidya Nivas Misra "The Rama story in Indian Folklore"* ***Asisanvariations in Ramayana.*** *P. 104. 26.* ***அயோத்தி கதை*** *(நாட்டுப்புறக் கதைக்காவியம்), (ப.ஆ) வை.தி. நடராசன், நாகர்கோவில்: இராஜேஸ்வரி வெளியீடு, 1987, ப. 152. 755*

*மாட்டி வலக் கையால் தேரையும் செலுத்தினாய். போரில் வெற்றி பெற்ற தசரதன் உன்னுடையதைரியத்தையும், புத்திக் கூர்மையையும் கண்டு மகிழ்ந்து இரண்டு வரங்கள் அளித்தார்; நீயும்காலம் வரும்போது அதனைப் பெற்றுக் கொள்கிறேன் என்றாய் என்று கைகேயியிடம் மந்தரை கூறுவதாக அத்யாத்ம ராமாயணம் கூறுகிறது.* [27]

*சம்பரா சூரனுடன் செய்த போரில் உதவியமைக்காகத் தசரதன் மகிழ்ந்து கைகேயிக்கு இரண்டு வரங்களைத் தந்திருந்தான் என்று* ***ரங்கநாத*** *ராமாயணமும்* ***பாஸ்கர*** *ராமாயணமும்கூறுகின்றன இவ்வரங்களைக் கூனி கைகேயிக்கு நினைவுபடுத்தியதாக இவ்விரு இராமாயணங்களும் குறிப்பிடுகின்றன.* ***மொல்ல*** *ராமாயணம் மந்தரை என்ற பாத்திரத்தைப் படைத்துக் காட்டவில்லை. எனவே, கைகேயியே இரண்டு வரங்களைத் தசரதனிடம் கேட்பதாக இந்த இராமாயணம் கூறுகிறது. கன்னட* ***தொரவெ*** *ராமாயண மந்தரை தசரதன் கொடுத்திருந்த இரண்டு வரங்களைக் கைகேயிக்கு நினைவுபடுத்துகிறாள். சம்பராசூரனுடன் நிகழ்த்திய போரில் உதவியமைக்காகத் தசரதன் கைகேயிக்கு இருவரங்களைக்கொடுத்திருந்த செய்தியைக் கூனி கைகேயிக்கு நினைவுபடுத்தினாள் என்று* ***கன்னச*** *ராமாயணமும்* ***எழுத்தச்சன்*** *ராமாயணமும் காட்டுகின்றன.*

*துளசி ராமாயணக் கூனி, 'தசரதன் உனக்களித்த இரண்டு வரங்களை மறந்துவிட்டாயா? அவற்றைஇப்போது பெற்று உன் புண்பட்ட உள்ளத்தை ஆற்றிக் கொள்' என்று கைகேயியிடம் கூறுகிறாள். வரங்கள் பெறப்பட்ட சூழலைத் துளசிதாசர் இங்கு விவரிக்கவில்லை. (II. 22.3)* [28]

*27. நடேச சாஸ்திரி ப. 62. 28. கைகேயி பெற்ற வரங்களின் எண்ணிக்கை தசரதன் கைகேயிக்கு இரண்டு வரங்கள் கொடுத்தான் என்று வான்மீகம்கூறுகிறது. (II. 9.17, 18) அத்யாத்ம ராமாயணம், கம்ப ராமாயணம், தெலுகு, கன்னட, மலையாள ராமாயணங்கள், துளசிராமாயணம் என்பனவெல்லாம் கைகேயி இரண்டு வரங்கள் பெற்றாள் என்று வான்மீகத்துடன் ஒத்துச் செல்லுகின்றன. தசரதன் கைகேயிக்கு ஒரு வரம் கொடுத்ததாகத் தசரதஜாதகமும், மகா பாரதமும் திபேத்திய ராமாயணமும்கூறுகின்றன. மூன்று வரங்கள் தந்ததாகப் பிரம்மபுராணம் கூறுகின்றது. (A.N.Jani, PP.30, 33) தேவாசுர யுத்தத்தில் கலந்து கொண்ட தசரதனின் தேர் அச்சு முறிந்துவிட அவனுடைய இளையமனைவி தன்கையால் அச்சு கழன்று விழாதவாறு கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். போரில் வெற்றி பெற்றுத் திரும்பிய தசரதன் தன் மனைவியின் கைகள் இரத்தக் காயமுற்றிருப்பது கண்டு காரணம் கேட்கஅவள் நடந்ததை விவரிக்கிறாள். அவள் உதவிக்கு மகிழ்ந்த அரசன் அவளுக்கு*

ஒரு வரம்தருகிறான். வேண்டும் போது வாங்கிக் கொள்வதாக அவள் கூறுகிறாள் என்று கி.பி. 1429 இல் எழுதப்பட்ட ஒரு திபேத்திய ராமாயணம் கூறுகிறது.[29]

தேவாசுரப் போரில் ஈடுபட்ட தசரதன் அசுரர்களின் ஆயுதங்களால் புண்படுத்தப் பெற்றான். அயோத்தி திரும்பியதும் அவனுடைய இளைய மனைவி கேகேயா என்பவள் அப்புண்களைக் குணப்படுத்தினாள்.அந்த உதவியால் பெரிதும் மகிழ்ந்த தசரதன் அவளுக்கு ஒரு வரம் தந்தான் என்று கி.பி. 1586இல் இயற்றப்பெற்ற மற்றொரு திபேத்திய இராமாயணக் கதை கூறுகிறது.[30]

### 1.4. தசரதன் சாபம் பெற்ற வரலாறு

தசரதன் தான் இறப்பதற்கு முன்னர்க் கோசலையிடம் தான் பெற்றிருந்த சாபமொன்றை விவரித்துக்கூறுகிறான்: கோசலையை மணப்பதற்குமுன் இளவரசனாக இருந்தபோது ஒருநாள் வேட்டைக்குச் சென்றிருந்ததசரதன் யானை நீர் அருந்துவதாகக் கேட்ட ஒலியைக் குறியாகக் கொண்டு அம்பெய்தான். அம்புபட்டு அலமறும் யானைக் குரலுக்கு மாறாக ஒரு மனிதக்குரல் அலறுவதைக் கேட்டு மனம் நடுங்கி அருகில் சென்றுபார்க்க ஒரு முனிபுத்திரன் அம்பு துளைத்துத் துடித்துக்கொண்டிருக்கக் கண்டான். கண்டதும் யாரென்றுவினவப் பார்வையற்ற பெற்றோர்க்கு நீர் வேண்டி வந்ததாகவும், அம்பெய்யப்பெற்ற நிலையில்தான் பிழைக்க இயலாமையின் தன் பெற்றோர்க்குத் தன்னிலை கூறி நீர் கொடுத்து உதவுமாறும் வேண்டியவாறே இறந்தான். கொலைப் பழிக்கு அஞ்சிய தயரதன் நீர்க்குடத்துடன் முனிதம்பதியரை அடைந்து தான்யாரென்பதையும், நடந்த விவரத்தையும் கூறித் தன்னை மன்னிக்குமாறு வேண்டி நிற்க, மீளாத் துயரத்தாழ்ந்த அவ்விருவரும் இறந்த தம் மகனைத் தசரதன் உதவியால் கண்டு பலவாறு புலம்பி, 'எம்மைப்போன்றே நீயும் புத்திரசோகத்தால் இறந்து படுவாயாக' எனச்

*29. J.W. De. Jong, "The Story of Rama in Tibet" **Asian Variations inRamayana** PP. 173-174. 30. J.W. De. Jong, P. 178.* 

சாபம் இட்டவாறே உயிர் நீத்தனர். இவ்வாறு தான் பெற்ற முனிவரின் சாபத்தை விவரித்த தசரதன் தனக்கு இறுதி நேர்வது உறுதி என்று கூறி இராமனை நினைந்தவாறே உயிர்நீத்தான் என்பது இராமகாதையால் பெறப்படும் செய்தி.

இந்த நிகழ்ச்சியை எல்லா இராமாயண நூல்களும் கூறுகின்றன வெனினும் இந்நிகழ்ச்சி காப்பியத்தில் குறிக்கப்பெறும் சூழல், முனிகுமாரனின் பெயர், குலம், நிகழ்ச்சியின்முடிவு என்னும் விவரங்களில் பின்வருமாறு வேறுபடக் காண்கிறோம்.

#### 1.4.1. வரலாறு இடம்பெறும் சூழல்

இராமன், சீதை, இலக்குவன் ஆகியோரைக் காட்டில் விட்டுத் திரும்பிய சுமந்திரன் தசரதனைக் கண்டு இராமன் முதலானோர் திரும்பி வரவில்லை என்று கூறியதும் சோர்ந்து விழுந்ததசரதன் கோசலையிடம் இவ்வரலாற்றைக் கூறுவதாக வான்மீகம் கூறுகிறது. (II. 63-64). இதனைப் பின்பற்றி அத்யாத்ம ராமாயணம் (II. 7), ரங்கநாதம், பாஸ்கரம், கன்னசம், எழுத்தச்சன் ராமாயணம், துளசியின் இராமசரித மானசம் (II. 155.2) ஆகிய இராமாயண நூல்களும் இராமன்காடு சென்ற ஆறாம் நாளிரவு சுமந்திரன் அயோத்தி மீண்ட பின்னர்த் தசரதன் இவ்வாறு உரைப்பதாகக் காட்டுகின்றன.

*பஞ்சாபியில் எழுந்த கோவிந்த ராமாயணம் மட்டும் காப்பியத் தொடக்கத்தில்தசரதனின் ஆட்சிச் சிறப்பை விவரிக்குமிடத்திலேயே இவ்வரலாற்றைக் கூறுகிறது. தெலுகுமொல்ல ராமாயணம் இவ்வரலாற்றைக் குறிப்பிடவே இல்லை. கைகேயின் மூலம் தசரதன் ஆணையைக்கேள்வியுற்ற இராமன், இலக்குவனுடனும் சீதையுடனும் வனஞ்செல்லத் தயாராகும் நிலையில் அயோத்தியில்இருக்கும் போதே தசரதன் இந்த வரலாற்றைக் கோசலைக்கு கூறுவதாகக் கம்பராமாயணம் கூறுகிறது.(II. 4.72 - 87)*

*தன் கண்ணெதிரிலேயே இராமன், சீதையும் இலக்குவனும் உடன்வரத் தேரேறிச் செல்லுவதைத்தசரதன் கண்டு சுமந்திரனை நோக்கி 'நிறுத்து' என்கிறான். இராமன் 'செலுத்து' என்று கூறத்தேர் விரைந்து மறைவதைக் கலங்கிய கண்களுடன் கண்ட தசரதன் மயங்கி வீழ்ந்தான். எனினும், வசிட்டன், சுமந்திரன், நகர மக்கள் என்னும் பல திறத்தாரின் அறிவுரைகட்கும் வேண்டுதலுக்கும்இணங்கி இராமன் காட்டிற்குச் செல்லாமல் மீண்டு வருவான் என்று ஓர் அவல எதிர்பார்ப்பு வான்மீகத்தசரதனிடம் இருந்தது. எனவே, தனக்கு இறுதி நேரும் என்பதை உறுதியாகக் கருதாத நிலையில்தசரதன் சுமந்திரன் வரவை எதிர் நோக்கியிருந்தான். அவன் வந்து இராமன் திரும்பவில்லைஎனக் கூறியதும் தன் இறுதி குறித்து மேலும் உறுதிப்பட்ட நிலையில் முனிவரின் சாபம் நினைவுக்கு வரவே தசரதன் கோசலையிடம் இவ்வரலாற்றைக் கூறுகிறான்.*

*மன்னவன் ஆணையெனக் கைகேயி கூறியதைக் கேட்ட கம்பராமன் அப்போதே அவளிடம் விடைபெற்றுக்காடு செல்லப் புறப்பட்ட நிலையில் தசரதனைக் காணவுமில்லை; தசரதன் இதனை அறியவுமில்லை. எனவே, இராமன் காடு சென்றான் என்பதைக் கைகேயி மூலம் அறிந்ததும் தசரதன் அவளைப் பலவாறு இழித்துக் கூறிப் புலம்பிச் சோர்ந்த நிலையில் "ஐயன் வரினும் வருமால், அயரேல் அரசே" என்று ஆறுதல் கூறிய கோசலையிடம் தசரதன் இவ்வரலாறு கூறி,*

***அந்த முனிசொற் றமையின் அண்ணல்வனம் ஏகுதலும் எந்தம் உயிர்வீகுதலும் இறையும் தவறா (87)***

*என்று முனிவரின் சாபம் பழுதுபடாது எனவும் இராமன் வனம் செல்வதும் தான் உயிர்நீப்பதும் ஒருதலையாக நிகழும் எனவும் அவளைத் தெளிவிக்கிறான். சுமந்திரன் மீண்டு வரும் வரை உணர்வு, மயங்கியிருந்த தசரதன் அவன் வந்து இராமன் வரவில்லை என அறிவித்த உடனே உயிர்துறந்தான் என்பதுகம்பன் காட்டும் காட்சி. (II. 5.59)*

*காடேகிய இராமன் மீளவில்லை என்று அறிந்த பின்னர் தன் சாப வரலாற்றை விளங்க உரைக்குமளவுக்குத்தசரதன் உணர்வுடன் இருந்தான் என வான்மீகம் காட்ட, "போயினான் என்ற போழ்தத்தே ஆவிபோனாள்" (II. 5.59) என்று கம்பராமாயணம் காட்டுகிறது. தன் உயிரனையான் எனத் தசரதன் இராமனைக்கருதியமையும் உயிர்நீங்கியவிடத்து உடலும் நீங்கியமையும் உடன் புலப்படுமாறு படைத்துக் காட்டவிரும்பிய கவிச்சக்கரவர்த்தி இம்மாறுதலைச் செய்தான் எனக் கொள்ளலாம். நீண்டு நடக்கும்இக்காப்பிய நிகழ்ச்சியை நாடகப்படுத்தின் கம்பனின் கைவண்ணமும் கலை முதிர்ச்சியும் எளிதில்புலப்படும்.*

### *1.4.2. முனிகுமாரனின் பெயரும் குலமும்*

தசரதனால் மாண்ட முனிகுமாரனின் பெயரையோ, முனிவரின் பெயரையோ வான்மீகம் குறிப்பிடவில்லை. அத்யாத்ம ராமாயணமும், துளசி ராமாயணமும், ரங்கநாதம் முதலான பிற இராமாயணங்களும் இதனைக் குறிப்பிடவில்லை. கம்பன் கழகப் பதிப்பின்படி கம்ப ராமாயணமும் இதனைக் குறிப்பிடவில்லை. எனினும் சில அச்சுப் பிரதிகளிலும், ஓலைச்சுவடிகளிலும் காணப் 759

படுவதாக இரண்டு பாடல்களை அண்ணாமலை, உ.வே.சா. பதிப்புகள்காட்டி மிகைப்பாடல்களாகஇவற்றைத் தருகின்றன. கம்பன் கழகமும் அவ்வாறே தருகிறது. இத்தகைய குறிப்பெதுவுமின்றி வை.மு.கோ. இவற்றை நூலுள்ளேயே பதிப்பித்துள்ளார். இந்த இரு பாடல்களுள் 'அந்நான் மறையோன்' எனத் தொடங்கும் பாடல் காசிய முனியின் வழியில் வந்த சலபோசனன் என்னும் முனிவரின் மகன்சரோசனன் என்று முனிகுமாரனைச் சுட்டுகிறது. கோவிந்த ராமாயணம் முனிகுமாரனின் பெயர் சரவணகுமரன் என்று கூறிகிறது.[31] டாக்டர் சங்கர ராஜு நாயுடு தமது கம்பன் - துளசி ஒப்பாய்வில், கம்பராமாயணம், அத்யாத்மம், துளசி ராமாயணம் போன்ற எல்லா நூல்களிலும் முனிகுமாரன் சரவணகுமரன் என்று குறிக்கப்படுவதாகக் கூறுகிறார். ஆனால், இவற்றுள் எந்த நூலிலும் இப்பெயர் காணப்பெறவில்லை. எதன் அடிப்படையில் இவர் இவ்வாறு கூறுகிறார் என அறிய இயலவில்லை.[32]

### முனிகுமாரனின் குலம்

தன்னைக் கொன்றமைக்காகப் பிரமகத்திக் குற்றம் உண்டாகுமோ என்று தசரதன் ஐயுறுவதாகக்கருதிய முனிகுமாரன், தான் வைசிய முனிக்குச் சூத்திர ஸ்திரீயினிடத்தில் பிறந்தவன்; எனவே, பிரமகத்தி பீடிக்கும் என்று அஞ்ச வேண்டாம் என்று அவனுக்கு ஆறுதல் கூறுகிறான் என்பது வான்மீகம். (II.63). அத்யாத்ம ராமாயணமும் முனிகுமாரனை வைசியன் என்று காட்டுகிறது. (II.7) துளசிராமாயணம் இவ்வரலாற்றை ஒரே தோகாவில் சுருக்கிக் கூறுதலின் இத்தகைய விவரங்கள் இடம் பெறவில்லை. ஏனைய இராமாயண நூல்கள் இதை மிகுதியும் விதந்து கூறவில்லை.

கம்பராமாயண மிகைப்பாடல்களாக மேலே குறித்த இரண்டும் முனிகுமாரனைக் காசிப முனியின்வழிவந்த நான்மறையோன் எனக் குறிப்பிட்டு அந்தணர் குலத்தவனாகக் கூறுகின்றன. வேறெந்த இராமாயண நூல்களும் இவ்வாறு குறிப்பிடாமையாலும், சுரோசனன் சலபோசன் என்னும் பெயர்களையும் பிற இராமாயணநூல்கள் கூறாமையாலும், இவை செருகுகவிகள் என்னும் கருத்து வலியுறுகிறது. எனவே, அண்ணாமலை முதலான

31. கோவின்ந்த ராமாயனம்,பிரதி. 5-8, ஓங்காரகைலை,பிரதி. 78 32. Kambaramayana and Tulasi Ramayan, P.143. பதிப்புகள் இவற்றை மிகைப்பாடல்களாகக் காட்டியமை பொருத்தமாகவே தோன்றுகிறது.

### *1.4.3. ஜப்பானிய ராமாயணமும் சாப வரலாறும்*

வான்மீகி ராமாயணத்தில் வரும் தசரதன் சாப வரலாற்று நிகழ்ச்சி ஜப்பானிய ராமாயணமொன்றில்பல்வேறு மாற்றங்களுடன் படைக்கப் பட்டுள்ளது. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் தோன்றியசாம்போ - எகோடோபா (Sambo-ekotoba) என்னும் புகழ்பெற்ற ஜப்பானியக் கதைக்கொத்தில்இவ்வரலாறு ஒரு தனிக் கதையாகத்

*தரப்படுகிறது.*[33] *இக்கதைக்கு வான்மீகி ராமாயணமே மூலமாகக்கருதப்படினும் பௌத்தர்களால் இடம் பெயர்ந்து பரவிய காரணத்தால் புத்தமதக் கருத்துகளுக்கேற்பஇக்கதை பல மாற்றங்களுடன் ஜப்பானில் வழங்கி வருகிறது. அம்மாற்றங்களுள் சில பின்வருமாறு:*

*1. முனிகுமாரன் இதில் செமு என்றழைக்கப்படுகிறான். சில ஜப்பானியக் கதைகளில் சாமா, சியாமகா, சென் என்று பல்வேறு பெயர்கள் இவனுக்கு வழங்கப்பட்டுள்ளன.*
*2. இக்கதையின் முடிவில் முனிகுமாரன் தேவேந்திரனின் அருளால் உயிர்த்தெழுகிறான். அவனுடைய பெற்றோராகியமுனி தம்பதியரும் கண்பார்வை பெற்றுத் தம் மகனைக் கண்டு களிக்கின்றனர்.*
*33. வான்மீகத்தில் வரும் இவ்வரலாறு பாலிமொழியில் அமைந்த சாம ஜாதகத்திலும், மகாவஸ்து அவதானாவில் வரும் சியாமக ஜாதகத்திலும் காணப்படுகிறது. இக்கதை பின்னர் சீனதிரிபிடகத்தில் புத்தமத அறிஞர்களால் மொழிபெயர்க்கப்பட்டு வழங்கி வந்தது. பின்னர்ப் பௌத்த மதம் ஜப்பானில்பரவியபோது இவ்வரலாறும் ஜப்பானிய மொழியில் மொழியாக்கம் பெற்றது. இராமகதையைக் கூறும்ஜப்பானிய நூல்களுள் சாம்போ எகோடோபாதான் முந்தியது. இதனுள் இராமகாதை முழுவதும் இடம் பெறவில்லை. இராமகாதையை முழுவதுமாகக்கூறும் ஹொபுட் சுஷு (Hobutsushu) கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் தோன்றியது. இந்நூற் பொருண்மைக்குரிய மூலம் சீனமொழிக்கதைகள் என்று கருதப்படினும் இந்தியா அல்லது தென்கிழக்காசிய நாடுகள் வழியாக வான்மீக மூலமே ஜப்பானுக்குச் சென்றிருக்கக் கூடும் என அறிஞர்கள் கருதுகின்றனர். மேலும், கி.பி. 750இல் ஜப்பானின் தலைநகரமாகிய ராராவில் (NARA) நிறுவப்பட்ட மிகப் பெரியபுத்தர் சிலையைத் திறப்பதற்காகப் பரத்வாஜ போதிசேனர் என்னும் இந்தியப் பிராமண அறிஞர்தம் குழுவுடன் ஜப்பான் சென்றிருந்தார் என்று ஜப்பானின் பழம்பெரு இலக்கியமாகிய மன்யோஷு (Manyoushu)குறிப்பிடுகிறது. எனவே, எட்டாம் நூற்றாண்டு முதலே இராமகாதை ஜப்பான் நாட்டில் பரவத் தொடங்கியமைவரலாற்று உண்மையாகிறது. காண்க:*

*Minoru Hara, "Rama Stories in China and Japan: A Camparison,"* ***Asisanvariations in Ramayana,*** *PP.340-456.*

*761*

*3. பெற்றோர்ப் பேணும் ஒழுக்கத்தை வற்புறுத்தும் நோக்கத்துடனும் கொல்லாமையை வற்புறுத்தும் நோக்கத்துடனும் இக்கதை படைக்கப்பட்டுள்ளது. அதாவது, காப்பியமாகஅமையாமல் நீதிக் கதையாக அமைந்துள்ளது.*
*4. நிகழ்ச்சி முடிவில் அரசன் சாபத்துக்குள்ளாகவில்லை. தேவேந்திரன் அருளால் முனிகுமாரன்உயிர்த்தெழுந்தமையைக் கண்ட அரசன் தானும் துறவறமேற்று அவனுடன் வாழ விரும்பியபோது, தன்னாடுதிரும்பி அன்பும், கருணையும் கொண்டு அரசாளவும், வேட்டைத் தொழிலை விட்டொழிக்கவும்அறிவுறுத்தப் பெறுகிறான். அரசனும் நாடு மீண்டதும் அவ்வாறே ஒழுகிப் பெற்றோர்ப் பேணும் அறத்தை மக்களுக்குப் போதிக்கிறான்.*[34]

*முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்; தன்வினை தன்னையே சுடும் என்னும் கருத்துடைய இராமாயணக்கிளைக் கதை ஒன்று பௌத்த மதக் கோட்பாடுகளான*

*கொல்லாமை, பெற்றோர்ப்பேணல், ஆள்வினையுடைமை என்னும் உண்மைகளை விளக்கும் நீதிக் கதைகளாகப் பரிணமித்துச் சீனா, ஜப்பான் எனப் பல்வேறுநாடுகளில் பல்லுருவம் பெற்று வழங்கி வரும் பண்பாட்டுப் பரிமாற்றப் பாங்கினை இவ்வரலாறு நமக்குஉணர்த்துகிறது.*

## *2. இராமனின் ஏற்புநிலை*

*அரசனாக முடிசூட்டிக்கொண்டு தனக்கு அரச பாரத்திலிருந்து விடுதலை அளிக்கவேண்டுமென்று தசரதன்கூறியதைக் கேட்ட இராமன் அச்செய்தியை ஏற்றுக்கொண்டநிலை, பின்னர்க் கைகேயியின்தலையீட்டால் வனம் போக நேரிட்ட சூழ்நிலையில், இராமனின் மனோநிலை, கோசலை முதலானவர்கள் வருந்தியபோது இராமன் கூறிய சமாதனங்களால் வெளிப்படும் இராமனின் பண்புகள் ஆகிய ஆளுமைக்கூறுகள்இராமனின் மனமுதிர்ச்சியைக் காட்டுவனவாய் அமைகின்றன. இக்கூறுகளை இராமகாதை பாடவந்த நூல்கள் தத்தம் காலப் பண்பாட்டுக்கேற்றவாறு படைத்துக் காட்டியுள்ளன.*

### *2.1. பட்டாபிஷேகச் செய்தியறிந்த இராமனின் மனநிலை*

*இராமனுக்கு முடிசூட்டக் கருதிய முடிவினைத் தசரதன் அரசவையிலேயே இராமனுக்குக் கூறுகிறான்.அதனைக் கேட்ட*

*34. Minoru Hara. PP. 353-354. இராமன் எந்தவித மாற்றமும் தராமல் அரசன் கட்டளை என்று கருதித் தன் அரண்மனைக்குத் திரும்புகிறான்என்பது* **வான்மீகம்.** *(II.3.)*

*"மாமுடி புனைந்து நல்லறம் புரக்க, யான் நின்வயின் வேண்டுவது" என்று தசரதன் அரசவையிலேயேஇராமனிடம் கூறுகிறான். இதனைக் கேட்ட இராமன்,*

*காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; கடன் இது என்று உணர்ந்தும் யாது கொற்றவன் ஏவியது அதுசெயல் அன்றோ நீதி எற்கு என* ***நினைந்தும்*** *அப்பணிதலை நின்றான். (2.1.69)*

*என்று* ***கம்பன்*** *காட்டுகிறான்.*

***அத்யாத்ம*** *ராமாயணத்தில் வசிட்டன் இராமனிடம் வந்து, 'தசரதன் நாளைய தினம்உனக்குப் பட்டாபிஷேகம் செய்யப்போவதாக அறிவிக்கும்படி உன்னிடம் என்னை அனுப்பினான்' என்றுகூறுகிறான். (II.2) இதனைக்கேட்ட இராமன் புன்முறுவல் பூத்தவனாய் அருகிலிருந்த இலக்குவனைப்பார்த்து,*

*இலக்குவ, நாளையதினம் காலை எனக்கு இராஜ்ய பட்டாபிடேகம் நடக்கப் போகிறதாம்; நான் காரணமாக மட்டிலும் இருப்பவன், அனுபவிக்கிறவன் நீதான். ஏனெனில் நீ எனக்கு வெளியில் சஞ்சரிக்கும் பிராணன்*[35]

*என்று கூறி வசிட்டன் ஆணைப்படி நோன்புகளியற்றத் தொடங்கினான்.*

*நாளை அரசன் உனக்கு இளவரசுப் பட்டம் கட்ட விரும்புகிறான். இந்த நிகழ்ச்சி இனிது நிறைவேறத்தக்க நோன்புகளை நீ இன்று மேற்கொள்ள வேண்டும் என*

*வசிட்டன் இராமனிடம் கூறுகிறான். அதனைக்கேட்ட இராமன் மனச் சஞ்சலம் அடைந்தவனாய்ப் பின்வருமாறு சிந்திக்கலானான்:*

*நாங்கள் நால்வரும் ஒன்றாகப் பிறந்தோம்; ஒன்றாகவே உண்டோம்; உறங்கினோம்;விளையாடினோம்; ஒன்றாகத் திருமணம் செய்துகொண்டோம். காதணி விழா, பூணூல் அணிதல் போன்ற எல்லாச் சடங்குகளும் ஒன்றாகவே நடந்தன இப்படிப்பட்ட குற்றமற்ற குலத்தில், மூத்தோன் என்பதால்உடன்பிறந்தோரைத் தவிர்த்துவிட்டு, நான் மட்டும் முடிசூட்டிக் கொள்ளும் தகாத காரியம் நடக்கப் போகிறது.*

*35. நடேச சாஸ்திரி, ப. 58 763*

*இராமன் கூற்றாகத் துளசிதாசர் இவ்வாறு கூறிய பின்னர்க் கவிக் கூற்றாக,உடன் பிறந்தோருக்காக இரங்கி வருந்தும் இராமபிரானின் இக்கூற்று பக்தர்களின் உள்ளத்தே வஞ்சகஎண்ணத்தை அகற்றிவிடும்*[36]

*என்று கூறுகிறார்.*

*தெலுகு ராமாயணங்கள் இச்சூழலை வருணிக்குமிடத்து வான்மீகியைப் பின்பற்றிச் செல்கின்றன.எழுத்தச்சன் ராமாயணம், அத்யாத்ம ராமாயணத்தையும், பிற காஷ்மீர, வங்காளி இராமாயணங்கள்துளசியையும் பின்பற்றிச் செல்கின்றன.*

## தொகுப்புரை

*பட்டாபிடேகச் செய்தியைக் கேட்ட வான்மீக இராமன் எதுவும் சொல்லாது திரும்புகிறான்.அப்போதைய அவன் மனநிலை குறித்து வால்மீகி எதுவும் கூறவில்லை. அரசனாகெனத் தசரதன் கூறியதும்அரசின்பால் விருப்பு வெறுப்பின்றி அரசன் ஆணையாதலின் ஏற்க வேண்டியதாயிற்று என இராமன் கருதியதாகக்கம்பன் தன் கூற்றாகக் கூறுகிறான். வான்மீக இராமனின் மௌன ஏற்புக்குக் கம்பன் காரணம் காட்டிவிளக்குகிறான் எனத் தோற்றுகிறது.*

*அத்யாத்மம் காட்டும் இராமனும் ஏறக்குறைய இதே மனநிலை யுடையவனாகக் காட்டப்படினும், இலக்குவனைநோக்கிப் புன்முறுவல் பூக்கும் குறிப்பு சற்றுச் சிந்திக்கத் தக்கது. மேலும் பட்டாபிஷேகம் நடக்கப்போகிறதாம் என்னும் ஆர்வமற்ற, 'நடக்கும் என்று நம்புகிறார்கள்' என்னும் இகழ்ச்சிக்குறிப்பும் இதில் தொனிக்கக் காண்கிறோம். இனி "நான் வெறும் கருவி, இதன் பயனை நுகரப்போகிறவன், 'நீதான்" என்று இலக்குவனிடம் கூறுமிடத்து, 'இது நடக்கப்போவதில்லை; இதனால் விளையும் பயனை நீதான் அனுபவிக்கப்போகிறாய்' என்னும் குறிப்பும் அடங்கி நிற்கக் காண்கிறோம். வான்மீகியின் மௌனத்தைக் கம்பன் விளக்கியது போல், அத்யாத்மத்தை அடியொற்றிச் செல்லும்துளசிதாசர் இக்குறிப்பால் பெறப்படும் கருத்தை விரிவுபடுத்தி இராமனின் விருப்பின்மையையும் வருத்தத்தையும் வெளிப்படுத்திக் காட்டுகிறார். அரசன் கட்டளையை மறுக்க வொண்ணாமையின், இராமன் ஏற்க நினைந்தான்; எனவே இராமன் வஞ்சக எண்ணம்*

*36. அன்ஜனினன்தன்சரனம், 10-4-8 இல்லாதவன் என்று வாசகர்களும் பக்தர்களும் உணர்வார்களாக என உணர்த்துவது துளசியின் உட்கிடக்கையாகத் தோன்றுகிறது.*

*வான்மீகியும் கம்பனும் படைத்த இராமன், அரசை ஏற்பதில் வேண்டுதல் வேண்டாமை அற்றவனாய்க்கடமை உணர்ச்சியால் கட்டுப்பட்டவனாகக் காணப்படுகிறான். அத்யாமத்தில் குறிப்பாக விருப்பமின்மையைக்காட்டிய இராமன், துளசியில் விருப்பின்மையை வெளிப்படையாகவே காட்டி, நிகழ்ச்சியின் தகவின்மையையும் வெளிப்படுத்தித் தன்னால் அதைத் தடுக்க இயலாமைக்கு வருந்தவும் செய்கிறான்.*

## *2.2 கைகேயியின் கட்டளையும் இராமனின் மனநிலையும்*

### வான்மீகம்

*பட்டாபிடேகத் தினத்தன்று காலையில் சுமந்திரனால் அழைக்கப்பட்ட இராமன் சீதையிடம் கைகேயியின்நல்ல பண்புகளைப் புகழ்ந்து கூறியவனாய் இலக்குவனுடன் அரண்மனையை அடைந்தான். அங்கே தசரதன்,கைகேயி, அமைச்சர் முதலானோர் குழுமியிருந்தனர். தசரதன் தன்னை வரவேற்காது உணர்வு மழுங்கியநிலையில் இருக்கக் கண்ட இராமன் கைகேயியை நோக்கியபோது அவள், "இராம, அரசர் பேசும் நிலையில்இல்லை. முன்பொருகால் அவர் எனக்கு அளித்திருந்த இருவரங்களை நான் இப்போது கேட்டேன். அதனால்வருத்தமடைந்தவராக உள்ளார். நான் கேட்ட வரங்களின்படி நீ தண்ட காரணியம் சென்று 14 ஆண்டுகள்துறவியாய் வாழவேண்டும். உனக்காக ஏற்பாடு செய்யப்பெற்ற இளவரசுப் பட்டத்தை என் மகன் பரதனுக்குஅளிக்க வேண்டும். இதை உன்னிடம் கூற முடியாமல் உன் தந்தை வருந்துகிறார். அரசனின் ஆணையை ஏற்றுநடப்பது உனக்கு அழகு. நீ ஏற்று நடக்கும் வரை அரசர் உண்ணவும், உடுத்தவும் செய்யார்" என்றுகூறுகிறாள். (II. 18.28 - 41)*

*இதனைக் கேட்ட இராமன் சிறிதும் மனக் கலக்கமின்றிக் கைகேயியைப் பார்த்து, "தங்கள்திருவுள்ளப்படியே நடக்கட்டும். அரசன் ஆணையை மேற்கொண்டு இதோ இங்கிருந்தே காட்டிற்குச் செல்கிறேன். பரதன் மிகவும் நல்லவன். அவனுக்காக நான் எதையும் தருவேன். உங்கள் மனோதரம் நிறைவேறும், நீங்கள் கவலைப்படவேண்டாம். பரதனை அழைத்து வரச் சீக்கிரம் தூதர்களை அனுப்புங்கள். ஆனால், மன்னர் ஏன் என்னோடு பேசவில்லை? எனக்கு ஏன் அவர் ஆணையிடவில்லை? நான் என்ன தவறு செய்தேன்?அவர் என்னுடன் பேசாததுதான் என் மனக்குறை. அரசனால் கட்டளை பெறாதவனாக இருப்பினும் 765*

*உங்கள் ஆணையின்படியே காட்டிற்குப் போவேன். கேகய ராஜகுமாரியே, எனக்கு நீங்களே கட்டளையிட உரிமையிருந்தும், என்னிடம் பெருந்தன்மை உண்டென்பதைக் கொஞ்சமேனும் எதிர்பாராதிருந்து விட்டீர். அதனால்தான் இச்சிறு காரியத்திற்காக அரசனை நீங்கள் வேண்டியுள்ளீர். என் தாயாரிடம் விடை பெற்றுச் சீதைக்குச் சமாதானம் சொல்லி இருக்கச் செய்துவிட்டு உடனே இன்றைக்கே காட்டிற்குப் போகின்றேன்" என்று கூறி மயங்கிய நிலையில் இருந்த தசரதனையும் கலக்கமின்றியிருந்த கைகேயியையும் தொழுது வணங்கிவிட்டு இலக்குவனுடன் வெளியேறினான். (II. 19.2-31)*

*பட்டமிழப்பை ஒரு பொருட்டாக மதியாத இராமன் சிந்தனைக் கலக்கமின்றி அங்கிருந்து வெளியேறினான். நிலவின் ஒளி போன்ற முகமண்டலமுடையவனாய் மனதில் விகாரம் எதுவும் இன்றி ஒரு துறவியைப்போன்று, தன் தாய்க்கு ஏற்படும் மனவருத்தத்தைச் சிந்தித்தவனாய், குடை, கவதி,தேர், பரிவாரம்*

*என்பனவற்றையெல்லாம் விலக்கிவிட்டுத் தன் திருமாளிகை நோக்கி நடக்கலானான். (1, 19, 36-37)*

*திருமுகமண்டலம் ஒளிகுறைந்தும் திருமேனி வியர்வையில் நனைந்தும் தன் மாளிகையுட் புகுந்தஇராமனைக் கண்ட சீதை துணுக்குற்றவளாய், "இராகவ, பல சலாகைகளையுடையதாய், நீர் நுரைபோல் வெண்ணிறமுடையதாய் இருக்கும் கொற்றக் குடையின்றி, இரு வெண்சாமரைகளின்றி வந்திப்பவர்கள், பரிவாரங்கள் இன்றி, புனித நீரால் நனையாத தலையையுடையவராய், தங்களுடைய புஷ்யரதம் என்னும்தேர் இன்றிப் பட்டத்து யானையும் இன்றி, நானிதுவரை கண்டிராத முகவாட்டத்துடன் தாங்கள்வருவதன் காரணமென்ன" என்று வினவினாள். (II. 26.8-18)*

*இலக்குவ, என்னை என் தந்தை கைவிட்டதுபோல் எந்த மூட மனிதன் தன் இஷ்டப்படி நடக்கும்புதல்வனை ஒரு ஸ்திரியின் பொருட்டுக் கைவிடுவான்? கைகேயியின் புதல்வனான பரதன் கோசல நாட்டை மகாராஜாவைப் போல் தான் ஒருவனாய்ச் சுகமாக அனுபவிக்கப் போகிறானே... எவன் தருமார்த்தங்களைக்கைவிட்டுக் காமத்தைப் பற்றுகிறானோ அவன் தசரத மன்னரைப் போல் விரைவில் ஆபத்தையடைகிறான்.தசரதருடைய மரணத் திற்கும் என்னைக் காட்டுக்கு ஓட்டுதற்கும் பரதனுக்கு அரசைக் கொடுப்பதற்குமே கைகேயி தோன்றினார் என்று எண்ணுகிறேன். செல்வச் செருக்கினால் மோகமடைந்த கைகேயி என் பொருட்டுக் கோசலையையும் சுமித்திரையையும் வருத்தாதிருப்பாரோ? என் பொருட்டுச் சுமித்திரா தேவியார் துயரப்படவேண்டாம். நீ இங்கிருந்து அயோத்திக்குக் காலையிலேயே புறப்படு. நானும் சீதையும் மட்டும் தண்ட காரணியம் செல்கிறோம். அற்பத் தொழிலையுடைய கைகேயியார் பகைமையால் அநியாயம் செய்வாரன்றோ? ஆகையால், தருமத்தை யுணர்ந்தவனான பரதனிடத்தில் என்னுடைய தாயை அடைக்கலமாகக் கொடுப்பாய்.... இலக்குவனே கோபங் கொண்டுவிட்டால் நானொருவனே பாணங்களால் அயோத்தியையும் உலக முழுவதையும் ஆக்கிரமிப்பேன்; ஆயினும் தருமமல்லாத தொழிலில் பராக்கிரமத்தைச் சாதனமாகக் கொள்ளக் கூடாதன்றோ? (II.53, நடேச சாஸ்திரி, 228 - 29)*

### கம்ப ராமாயணம்

*'பிள்ளையைக் கொணர்க' என்ற கைகேயியின் ஏவலால் சுமந்திரன் வந்து அழைக்க அரண்மனைசென்ற இராமன் அரசனைத் தேடிக் கைகேயி கோயில்புக, 'அரசன் வாய்திறந்து கூறான், நான் இது பகர்வென்' என்று எண்ணிய கைகேயி தன்முன் வந்து பணிந்து நின்ற இராமனைக் கண்டு, 'மைந்த, உன் தந்தை உனக்கு உரைப்பதோர் உரை உண்டு' என்றாள். இதனைக் கேட்டதும் இராமன்,*

***எந்தையே ஏவ, நீரே உரைசெய இயைவதுண்டேல் உய்ந்தனன் அடியேன்...***
***தந்தையும் தாயும் நீரே, தலைநின்றேன் பணிமின் (II.3.110)***

*என்று பணிந்து விடையிறுத்தான். உடனே கைகேயி, "உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ 14 ஆண்டுகள்காட்டில் வாழ்ந்து திரும்பி வரவேண்டும் என்று அரசன் இயம்பினான்" என்றாள் கைகேயியின்ஆணையைக் கேட்டபோது இராமன் அடைந்த மனநிலையை,*

***இப்பொழுது எம்மனோரால் இயம்புவதற்கு எளிதோ யாரும் செப்பருங் குணத்து இராமன் திருமுகச் செவ்விநோக்கின் ஒப்பதே முன்பு பின்பு; அவ்வாசகம் உணரக் கேட்ட அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா.***

***தெருளுடை மனத்து மன்னன் ஏவலின் திறம்ப அஞ்சி இருளுடைய உலகம் தாங்கும் இன்னலுக்கு இளைந்து நின்றான்*** *767*

***உருளுடைச் சகடம் பூண்ட உடையவன் உய்த்த காரேறு அருளுடை ஒருவன் நீக்க அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான் (II.3 . 112 - 13)***

*என்று உயர்வு நவிற்சியின்றிக் கம்பன் படம்பிடித்துக் காட்டுகிறான். அரசனிட்ட கட்டளையாகக்கைகேயி கூறியதைக் கேட்டதும்,*

***மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோஎன் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ என்இனி உறுதி யப்பால் இப்பணி தலைமேற் கொண்டேன் மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்(II.3.114)***

*என்று கூறிய இராமன் மீட்டும் அவளை வணங்கித் தன்தந்தையாகிய தசரதன் இருந்த திசைநோக்கித் தொழுது கோசலையின் அரண்மனை நோக்கிச் சென்றான். தன் தாயைக் கண்டு வணங்கியதும், 'நெடுமுடி புனைதற்கு உண்டோ இடையூறு' என்று அவள் வினவ, 'பங்கமில்குணத்து எம்பி பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்' என்றான். பின்னர் வனஞ்செல்லுமாறு தான் பெற்றஆணையைக் கூறியதும் மிகவும் துயருற்று வருந்திய கோசலையைச்*

***சிறந்த தம்பி திருவுற, எந்தையை மறந்தும் பொய்யிலன் ஆக்கி, வனத்திடை உறைந்து தீரும் உறுதிபெற்றேன் இதின் பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ***

***விண்ணும் மண்ணும் இவ்வெலையும் மற்றும்வேறு எண்ணும் பூதம் எலாம் அழிந்து ஏகினும் அண்ணல் ஏவல் மறுக்க அடியனேற்கு ஒண்ணுமோ இதற்கு உள் அழியேல் (II. 4.16-17)***

*என்று கூறித் தேற்றித் தெளிவிக்கிறான் கம்ப இராமன்.*

***அத்யாத்ம ராமாயணம்***

*தசரதன் கட்டளைப்படி இராமனும் இலக்குவனும் சுமந்திரனுடன் அரசனைக் காணவந்ததும் தசரதன்இராமனைத் தழுவியவாறே 'இராமா' எனக் கூறி மூர்ச்சையானார். அப்போது கைகேயி, இராம, அரசன் உன்னால்தான் இந்த நிலைக்கு ஆளானார். அவர் வாக்குப்படி நடப்பதானால் அவர் மகிழ்ச்சிஅடைவார், என்று கூறினாள். அதைக் கேட்ட இராமன் "தந்தைக்காக நாடு, தாய், தாரம்எதையும் தியாகம் செய்வேன். செய்யவேண்டியதைக் கட்டளை இடுங்கள்" என்று வேண்டினான். இதைக் கேட்டுத் திருப்தி அடைந்த கைகேயி, அரசனிடம் தான் பெற்ற இருவரங்களைக் கூறினாள். வரங்களின் வரலாறும் விவரமும் கேட்ட இராமன், 'அம்மையே, பரதனே நாடாளட்டும்; நான் தண்டகாரணியம் செல்கிறேன். தந்தை*

*இதை என்னிடம் சொன்னால் உடனே செய்திருப்பேனே, ஏன் என்னிடம் சொல்லவில்லை?" என்றான்.*

*இராமன் குரல்கேட்டு உணர்வு திரும்பிய தசரத மன்னன், "இரகு நந்தன, நான் பெண்ணால் வெல்லப்பட்டவன்;தீய வழியில் நடப்பவன். எனவே என்னை அடக்கிவிட்டு நீ இந்த நாட்டைக் கைப்பற்றிஆள்வாயாக. உனக்கு அதனால் பாவமில்லை. என்னை மட்டுமே வாய்மை தவறிய குற்றம் தொடரும், என்னை விட்டுப் பிரிந்து பயங்கரமான காடு செல்ல நீ விரும்புவது ஏன்" என்று வாய்விட்டுப்புலம்பிக் கதறினார். இதனைக் கேட்டு மனம் நொந்த இராமன், "பிதாவே, பரதன் நாடாளட்டும். நான் 14 ஆண்டுகள் காட்டில் வாழ்வதால் பல்வேறு நன்மைகள் உண்டாகும். மேலும், தங்களுடைய சத்தியத்தைக் காப்பாற்றியதுமாகும்" என்று ஆறுதல் கூறிவிட்டு இலக்குவனுடன் கோசலை கோயில் நோக்கிச் சென்றான்.(II. 3. நடேச சாஸ்திரி, பக். 70-71).*

***தெலுகு*** *ராமாயணங்களான ரங்கநாதமும், பாஸ்கரமும் வான்மீகத்தைப் பின்பற்றிச்செல்கின்றன. மொல்ல ராமாயணத்தில் கைகேயியின் ஆணையைச் சுமந்திரன் இராமனுக்குக் கூறுகிறான். இராமன் பதிலேதும் கூறாமல் அவன் கட்டளைப்படி காட்டிற்குச் செல்லப் புறப்படுகிறான்.*

***கன்னட*** *தொரெவெ இராமாயணத்தில் சுமந்திரனால் அழைக்கப்பெற்ற இராமன்சீதையுடனும், இலக்குவனுடனும் முடிசூடுவதற்குரிய அலங்காரத்துடன் அரசனிருக்கும் இடம் சென்றான். அங்கே இருந்த சோகச் சூழலை உணர்ந்த இராமன் தந்தைக்கு ஏதோ நேர்ந்தது என்று கருதி அவனைக்கண்டு வணங்கினான். அப்போது தசரதன், 'இராமா, கேள் நான் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்றுநினைத்தது. இந்த நிலைக்குக் கைகேயிதான் காரணம்' என்று கூறி மேலே பேச இயலாமல் மூர்ச்சை அடைந்தான். பின்னர் ஒருவாறு தெளிந்து சுமந்திரனைப் பார்த்துச் "சம்பராசூரன் சண்டையில்கொடுத்த இரண்டு வரங்களாகிய இரு கத்திகளைக் கொண்டு என் கழுத்தை அறுத்துவிட்டாள் கைகேயி"என்றான். இதைக் கேட்ட கைகேயி 'முன்பு கொடுத்த வரங்களைக் கேட்டதால் தசரதன் வருந்துகிறார். வரம் ஒன்றால் பரதனுக்கு நாட்டு அரசு; மற்றொன்றால் இராமனுக்குக் காட்டுஅரசு தர வேண்டும் என்று வேண்டினேன். இதைக் கேட்டதால் எனக்கு அபகீர்த்தி வந்தது' என்றாள். (II. 39, 40)*



*கைகேயி மேலும் தொடர்ந்து, "மனுவழி வந்தோர் வாய்மை தவறார் என்று நான் நினைத்தேன். இப்போது அரசர் மனம் வருந்துவதால் சத்தியத்தை மீறி நடக்க விரும்புகிறார் என்பது தெளிவாகிறது. நீங்கள் எல்லோரும் சேர்ந்து ரகுராமனுக்கே பட்டம் கட்டுங்கள். ததீசி, சிபி போன்ற அரசனல்லான் தசரதன், மந்திரியாரே வெறும் பேச்சால் என்ன பயன்? எனக்கு எதற்கு அரசு? தசரதனை எழுப்பி இராமனுக்கே முடி சூட்டுங்கள்" என்று கூறினாள். (II-41, 42)*

*அப்போது இராமன் கைகேயியை நோக்கி, "நீங்கள் கேட்டது ஒன்றும் மிகப்பெரிய விஷயமில்லை.தந்தையார் மொழிப்படியே நான் நடந்து கொள்வேன் என்று வாக்குறுதி தருகிறேன். நம் இரகுவம்சஅரசர்கள் எல்லாம் சத்தியம் தவறாதவர்கள் என்ற கூற்றை நீங்கள் மெய்ப்பித்துவிட்டீர்கள். பரதன் அரசாளட்டும். நான் காடு செல்கிறேன். உரிய காலம் ஆனதும் நான் திரும்பி வருகிறேன்'' என்று வாக்குறுதி செய்தான். (II. 49, 50)*

***மலையாள*** *கன்னச ராமாயணத்தில் தசரதன் முதலியோர் குழுமியிருந்த அவைக்குச் சென்றஇராமனை நோக்கிக் கைகேயி தான் பெற்ற வரங்கள் பற்றிக் கூறுகிறாள். வருத்தம் என்பதே இல்லாதமுகத்தனாய இராமன், "நான் இதுபற்றி வருந்தவில்லை. பரதன் நாடாளட்டும்; நான் இப்போதே காடு செல்கிறேன். ஆனால், தந்தையார் ஏன் இதை என்னிடம் கூறவில்லை? அவர் என்னசொன்னாலும் நான் அதன்படி நடக்கத் தயாராக உள்ளேன்" என்று கூறக் கைகேயி, "மன்னர் மிகவும்விசனமுற்று உள்ளதால், உன்முகம் பார்த்து இதைக் கூறும் துணிவில்லாமல் இருக்கிறார்." என்றுவிடையிறுத்தாள். உடனே சற்றும் தயக்கமில்லாத மனத்தனாகிய இராமன் "அப்படியானால் சரி; அரசர் ஆணையிடாவிட்டாலும் உங்கள் நன்மைக்காக நான் இப்போதே காடு செல்கிறேன்" என்றுகூறினான். எழுத்தச்சன் இராமாயணம் அத்யாத்மத்தையொட்டி இந்நிகழ்ச்சியைக் கூறுகிறது.*

*மன்னவன் பணியாகக் கைகேயி தான் பெற்ற வரங்களைக் கூறக் கேட்டதும்,*

**மின்னு பத்மம் போலுமுகம் வென்றது அப்போது அம்மலரை வன்னுகப் பூண் கழற்றிவிட்ட வல்லேறுபோல் மகிழ்ந்தான் என்னதன்றோ தம்பிசெல்வம் என்றுகைகை தனைப்பணிந்து மன்னனையும் திசைநோக்கி வணங்கி நற்றாய் கோயில் புக்கான்.**

*என்று இராமன் மனநிலையைக் கம்பன் வழிநின்று காட்டுகிறது தக்கை ராமாயணம் (II. 3.25). சுமந்திரனோடு அரசனிடம் சென்ற இராமன் தசரதன் பெரும் பீதியுடையவனாய் மயங்கிக் கிடக்கவும்கோபமுற்ற நிலையில் கைகேயி அருகிருக்கவும் கண்டு அவளிடம் தந்தையின் நிலைக்குக் காரணம் கேட்டான். அரசன் முன்பு எனக்களித்த வரங்களை நான் இப்போது கேட்டதால் சினமுற்றவனாய் உன்மீதுள்ள பற்றால்உள்ளம் நொந்திருக்கிறான். நான் கூறுவதுபோல் நடந்தால் அவன் தெளிவுற்று முன்னைய உணர்வுக்குத் திரும்புவான் என்று கூறித் தான் பெற்ற வரங்களையும் கூறினாள் (II. 39, 40). அந்நிலையில்உணர்வு திரும்பி விழித்துப் பார்த்த தசரதனை நோக்கித், "தந்தையே, ஒரு சிறு விஷயத்திற்காகத்தாங்கள் மிகவும் மனம் தளர்ந்துவிட்டீர்கள். எனக்கு இதுபற்றி முன்னமே எவரும் சொல்லவில்லை.இங்கு வந்ததும், தாயார் கைகேயி கூறியதைக் கேட்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். தாங்கள் வருந்த வேண்டாம்; மகிழ்ச்சியுடன் ஆணையிடுங்கள்" என்றான் இராமன் (II 45).*

*இவ்வாறு கைகேயியின் வரங்களைப் பற்றி அறிந்த இராமனைச் சித்திரித்த* ***துளசிதாசர்*** *இராமன் அந்நிலையில் அடைந்த மனமகிழ்ச்சியைக் கீழ்வருமாறு வருணிக்கிறார்.*

*தசரதனுக்குத் தைரியமூட்டும் வார்த்தைகளை மேற்கண்டவாறு கூறியபோது இராமனின் உடல்முழுதும்மகிழ்ச்சியால் புல்லரித்து நின்றது. அவன் பெற்ற மகிழ்ச்சி முன்னையினும் நான்கு மடங்காகப்பெருகியது.(II.51.8). அரசபாரம் என்னும் அருங்கயிற்றால் பிணைக்கப்பட்டிருந்த ஓர் இளைய யானை, வனவாசம் என்னும் அருளால் விடுவிக்கப்பட்டவுடன் எல்லையற்ற மகிழ்ச்சியில் துள்ளித்திளைப்பதைப் போல் இராமனின் உள்ளம் கைகேயியின் கட்டளையால் ஏற்பட்ட மகிழ்ச்சி வெள்ளத்தில்ஊறித் திளைத்தது. (II.51)*

***தசரத ஜாதகத்தின்*** படி தசரதன் கைகேயிக்கு ஒருவரம் தருகிறான். தன் மகன் பரதனுக்குஏழாண்டுகள் நிரம்பியதும் கைகேயி அவனை அரசனாக்குமாறு தசரதனைக் கேட்கிறாள். தசரதன் அவள்வேண்டுகோளை மறுத்துவிடுகிறான் அவள் மீண்டும் வற்புறுத்தவே தன்னிரு மூத்த புதல்வர்களான இராமனையும் இலக்குவனையும் வேறு நாட்டுக்காவது காட்டுக்காவது போய்விடுமாறும் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்துத்தான் இறந்த பின்னர்த் திரும்பி வருமாறும் கூறுகிறான். இராமனும் இலக்குவனும் அரசன் கட்டளைப்படி நாட்டைவிட்டு வெளியேறுகின்றனர். இந்நிகழ்ச்சியால் இராமனின் மனம் வருந்தவுமில்லை; மகிழவுமில்லை; அவனுள்ளத்தே எந்தச் சலனமும் தோன்றவில்லை. [37]

*37. Shankar Raju Naidu Kamba Ramayana and Tulasi Ramayan P. 17. 771*

***வாசுதேவ ஷிண்டி*** என்னும் ஜைன ராமாயணத்தில் தசரதன் கைகேயிக்குக் கொடுத்த இருவரங்களினால் இராமன் பன்னிரண்டு ஆண்டுகள் காடு செல்லுமாறு பணிக்கப்படுகிறான். தந்தையின்வாக்குறுதியைக் காப்பாற்றுவதற்காகவே இராமன் காடு செல்வதாக இந்நூல் குறிப்பிடுகிறது. [38]

*சங்கஸ்ரீ என்பவரால் இயற்றப்பெற்ற திபெத்திய ராமாயணத்தின்படி தான் கொடுத்த ஒரு வரத்தைவற்புறுத்திய கைகேயியின் விருப்பத்திற்கேற்பத் தசரதன் இராமனை அழைத்து, "நீ மூத்த அரசியின்மகனாகவும், வல்லவனாகவும் இருப்பினும் உன்னை அரசனாக்க இயலவில்லை. பரதனுக்கு அரசைக் கொடுப்பதாகவாக்களித்துவிட்ட காரணத்தால் நீ சீதையுடன் காட்டிற்குச் சென்று பன்னிரண்டு ஆண்டுகள்வாழ்வாயாக" என்று ஆணையிடுகிறான். மிக்க பெருந்தன்மையும் பெருள்ளமும் உடைய இராமன் மகிழ்ச்சியுடன்அரசன் ஆணைப்படி சீதையுடன் காடு செல்கிறான். கி.பி. 1586இல் எழுந்த மற்றொரு திபேத்திய இராமகாதையும்கைகேயியினால் இராமன் பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசம் செல்ல நேர்ந்ததை மேற்கண்டவாறே தசரதன்கூற்றாகக் கூறுகிறது.* [39]

*பால்யாதரி என்னும் தன் ஆசைநாயகிக்குத் தசரதன் கொடுத்திருந்த இரண்டு வரங்களின்படிஅவளுடைய மகனுக்கு அரசுரிமை தரக் கடமைப் பட்டிருத்தலால் இராமனை அரசுரிமையினின்றும் விலக்கிவிடுவதாக ஹிகாயத் செரீ ராம் என்னும் மலேசிய ராமாயணம் கூறுகிறது.* [40]

*ஹொபுட் சுஷு என்னும் ஜப்பானிய இராமாயணத்தின் கதைத் தலைவனாகிய ததாகத சாக்கியமுனி(இராமன்) தந்தை ஆகிய தசரதனால் காட்டிற்கு அனுப்பப்படவில்லை. பகை அரசனுடன் போரிட்டு நூற்றுக்கணக்கானமக்களின் உயிரை அழிக்க விரும்பாத காரணத்தால் தானே தன் அரசியுடன் நாட்டைக் துறந்து மலைகளடர்ந்த காட்டிற்குச் சென்று விடுகிறான். கொல்லாமை நோன்பைக் காக்கும் பொருட்டுத்தன் நாட்டைத் துறந்து விடுவதாக இந்த இராமாயணம் காட்டுகிறது.* [41]

*38. U.P. Shah, p. 64. 39. J.W. De Jong pp. 174 and 178 40. S. Singaravelu, "The literary version of the Rama Story in Malay"* ***Asian Variations In Ramayana ,*** *p. 284 41. Minoru Hara, p. 344*

**தொகுப்புரை**

*வான்மீகத்தில் கைகேயி இராமனுக்கு அரசன் கட்டளையைக் கூறும்போது தசரதன், சுமந்திரன்இலக்குவன் முதலானவர்களும் குழுமியிருக்கின்றனர். தசரதன்*

*உணர்விழந்த நிலையில் இருப்பதை இராமன் கண்டு வருந்துகிறான். கைகேயியை மறுத்துக் கூறும் நெஞ்சுரம் இல்லாதவனாகத் தசரதன் மயங்கிக் கிடத்தலையும்இராமன் காணவும் கலங்கவும் நேர்கிறது. கைகேயி கட்டளையைச் சிரமேற் கொண்டு இலக்குவனுடனும்சீதையுடனும் தேரில் புறப்படுவதைத் தசரதன் கண்டுகையற்று வருந்துகிறான். தேரை ஓட்டச் சுமந்திரன்முற்படுகையில் தசரதன் அவனை 'நில்' எனக் கூற, இராமன் 'செல்' என்று கூறுவதாக வால்மீகி காட்டுகிறார். அத்யாத்மமும், ரங்கநாத, பாஸ்கர, கன்னச, துளசி, எழுத்தச்சன் இராமாயணங்களும் பெரும்பாலும் வான்மீகத்தைஓட்டிச் செல்கின்றன.*

***மொல்ல** ராமாயணத்தில் சுமந்திரனே கைகேயியின் கட்டளையை இராமனுக்குக் கூற இராமன்தசரதனைப் பார்க்காமலேயே காடு செல்லப் புறப்படுகிறான்.*

*அத்யாத்ம ராமாயணத்திலும் தொரவெ ராமாயணத்திலும் தசரதன் இராமனைப் பார்த்துப் பேசுமிடத்துத் தன் கையற்ற நிலையைப் புலப்படுத்தும் அவலக்காட்சி இடம்பெறுகிறது.*

*தசரத ஜாதகம், வாசுதேவ ஹிண்டி, திபேத்திய ராமாயாணம், மலேசிய ராமாயணம் ஆகியனவற்றில்தசரதனே இராமனுக்குக் காடு செல்லக் கட்டளையிடுகிறான். மேற்கண்ட இந்துமதம் சாராத இராமாயண நூல்களில் இராமனுக்குப் பன்னிரண்டாண்டுகள் காடுறை வாழ்க்கை விதிக்கப்படுவதாகக் கூறப்படுகிறது.*

*கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய ஹொபுட்சுஷூ என்னும் ஜப்பானிய ராமாயணம் இராமன் வனவாசம் சென்ற மைக்குப் புதுக்காரணத்தைக் கூறுகிறது. இதில் வரங்கள் பற்றியகுறிப்பே இல்லை. தசரதனோ கைகேயியோ ஆணையிடவில்லை; இராமனே கொல்லாமை நோன்பு காக்கத்தன் மனைவியுடன் காடு செல்கிறான். இந்தியாவிலிருந்து பௌத்த அறிஞர்களின் மூலமாகக் குடிபெயர்ந்தஇராமகாதை ஜப்பான் நாட்டுப் பண்பாட்டிற்கேற்ப இம்மாற்றத்தை அடைந்துள்ளது போலும்.*

*பெரும்பாலும் வான்மீகத்தை ஓட்டிச்செல்லும் கம்பன் கைகேயி இராமனுக்குக் கட்டளையிடும்சூழலைப் பெரிதும் மாற்றிப் படைத்திருக்கக் காண்கிறோம். இங்கே இராமன் தனியாக அரண்மனைக்குவருகிறான். இலக்குவன் உடன் செல்லவில்லை. அவன்*



*உள்ளே வந்து தசரதன் முதலியோர் உறையும் பகுதிக்கு வரும் முன்னரே கைகேயி முந்திச் சென்றுஅவனைச் சந்திக்கிறாள். கைகேயி இராமன் இருவரிடை மட்டுமே உரையாடல் நடைபெறுகிறது. தசரதனின்கையற்ற அவலநிலையை இராமன் அறியாத நிலையிலே அவன் கட்டளையாகக் கைகேயி கூறுவதைக் கேட்டுத்தசரதனைக் காணாமலே திரும்புகிறான். மின்னொளிர் கானம்இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன் என்று கூறியவன் மீண்டும் கைகேயியையோ தசரதனையோ சந்திக்காமலே காடுசெல்வதாகக்கம்பன் படைத்துக் காட்டுகிறான். ஏறக்குறைய வான்மீகியின் இருபது சருக்கங்களைக் கம்பன் ஒன்பதுபாடல்களாகச் சுருக்கி அமைத்து விடுகிறான். வான்மீகியின் காப்பியம் ஆதிகாவியமாக (primaryepic) அமைய, கம்பனின் காப்பியம் கலைக் காப்பியமாக (secondany or scholar epic) அமைந்துள்ளமையைக் காட்டும் பகுதிகளில் இச்சுருக்கம் மிக இன்றியமையாத இடத்தைவகிக்கிறது. கம்பனுக்குப்பின்னர்த் தோன்றிய இந்திய இராமாயணங்கள் இக்*

கலைமுதிர்ச்சியைக் கையாண்டுள்ளதாகத் தெரியவில்லை. இக் சுருக்கத்தால் காப்பியக் கட்டுக்கோப்பு செறிவடைந்து முருகியலின்பம் சிறந்து நிற்பதுஒருபுறமிருக்க, இராமனது மனஉறுதி, கைகேயி மாட்டுள்ள நம்பிக்கை, அறச்சிக்கலால் தசரதனுக்குஉண்டாகும் மன உளைச்சலைத் தவிர்க்க விரும்பிய அருளுள்ளம் போன்ற இராமனின் பல்வேறு ஆளுமைக்கூறுகள் வெளிப்படும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளதைக் காணலாம். கூர்தலறப் பான்மையால் வழிநூல்கள்இத்தகைய கலைமுதிர்ச்சியடைந்து முதனூலினும் சிறந்து நிற்றல் இலக்கிய உலகில் இயற்கையே யாயினும்,இந்தியக் காப்பியங்களில் கம்பனுக்கு முன்பும் பின்பும் இத்தகைய முதிர்ச்சி காணப்படாமையின், இதனைக் கம்பனின் தனிச் சிறப்பாகவே கொள்ளக்கிடப்பதை அறிஞர்கள் எளிதின் உணரலாம்.

இனி இராமனின் கூற்றாலும் செய்கையாலும், வெளிப்படும் அவனது பண்புச் சிறப்புகளைக் கவிஞர்கள்கவிக்கூற்றாகக் கூறும் இடங்களும் ஆய்வுக்குரியவைகளாய் அமைகின்றன. கைகேயியின் கட்டளையைக்கேட்ட இராமனின் மனநிலையைப் பெரும்பாலும் எல்லாக் கவிஞர்களும் வெளிப்படுத்த முயன்றுள்ளனரேனும்,வால்மீகி, கம்பர், துளசி என்னும் முப்பெருங் கவிஞர்களும் இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் எனலாம்.

பரதன் முடிசூடத் தான் காடேக வேண்டும் என்னும் கைகேயியின் வரத்தை அரசன் கட்டளையாகக்கருதிய இராமன் மனம் வருந்தவில்லை என்று காட்டுகிறார் வால்மீகி. சரத்காலச் சந்திரன்போன்று தன் இயற்கையான மனமகிழ்ச்சியையும் முகமலர்ச்சியையும் இராமன் எந்தச் சூழ்நிலையிலும் இழக்கவில்லை என்று நகர மக்கள் கண்டு கூறுவதாகவும் கவிஞர்கூறுகிறார். எனவே, இராமனின் 'சமநிலை'ப் பண்பைக் (equanimity) கவிஞர் உறுதிப்படுத்துகிறார்என அறிகிறோம்.

இனி, அரண்மனையிலிருந்து திரும்பி வந்த இராமனின் முகம் ஒளி குறைந்து வாட்டமுற்றும் மேனிவியர்வையால் நனைந்தும் இருப்பதைக் கண்ட சீதை துணுக்குற்றாள் என்றும், தமசா நதிக்கரையில், இராமன் இலக்குவனுடன் பேசுமிடத்துக் கைகேயியின் மீது வருத்தமுற்றான் என்றும் வால்மீகிகூறுவதைக் கொண்டு அரசிழப்பால் இராமன் வருந்தினான் என்று சிலர் கருதுகின்றனர்.

தன் மாளிகை நோக்கி வரும் இராமன் சிந்தனையில் மூழ்கிய வனாய்க் காணப்படுதல் உண்மைதான்.ஒளி குன்றிய முகமுடையவனாய் இருப்பதும் உண்மையே. ஆனால், இம் மாறுதல்களுக்குக் காரணம் அரசிழப்புஎன்று கொள்வதைவிடச் சீதையை எவ்வாறு சமாதானப்படுத்துவது, அவளைப் பிரிந்து எவ்வாறு பதினான்குஆண்டுகள் வாழ்வது, அல்லது அவளையும் அழைத்துச் செல்வதால் என்னென்ன இடையூறுகள் தோன்றும் என்றெல்லாம் சிந்தித்தவாறே வருதலின் தன்னலமற்ற சிந்தையின் வெளிப்பாடாக முகமலர்ச்சி குன்றியது எனக்கொள்ளுதல் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

எனினும் தமசா நதிக்கரையில் தங்கிய முதல் இரவன்று கைகேயியின் அன்பின்மை குறித்து இராமன் இலக்குவனிடம் கூறும் சொற்களில் தந்தையின் மரணம், பரதன் ஒருவனே அரசனாதல், தான்வனமேகல் என்னும் மூன்று செய்திகளுக்காகவும் இராமன் வெளிப்படையாக வருந்துவதைக் காண்கிறோம். கைகேயியின் அன்பு குறித்தும், விதியின் வலிமை குறித்தும் விளக்கமாக இலக்குவனிடம் பேசிய

*இராமன்இங்கே இவ்வாறு அவளைநிந்திக்குமாறு வான்மீகத்தில் படைக்கப்பட்டிருப்பது ஏன் என்று விளங்கவில்லை.*

*கம்பராமன் கைகேயியை ஐயுற்றுக் கூறுவதாக எங்கும் செய்திஇல்லை. இராமனின் முகவாட்டத்தைச்சீதை கண்டு வருந்தினாள் என்ற குறிப்பும் கம்பனில் இல்லை. கைகேயியின் கட்டளையைக் கேட்டஇராமனின் முகம் சஞ்சலமின்றி இருந்ததாகவும், இயல்பான முகமலர்ச்சியும் மகிழ்ச்சியும் ஒரு சிறிதும் மாறவில்லை என்றும் வான்மீகி கூறுகிறார்.*

*கைகேயியின் ஆணையைக் கேட்டதும் இராமன் அடைந்த மகிழ்ச்சியைக் கம்பன் வருணிக்கும் பாடல்வாசகர்கள் அனை 775*

*வரும் அறிந்த ஒன்று. தன்னியல்பான மகிழ்ச்சியினும் மிக்க பேருவகையை இராமன் அடைந்தான் என்று காட்ட விரும்பிய கவிஞன் தாமரை மலரினும் ஒளிமிக்க முகத்தினன் ஆனான் என்று கூறுகிறான். இவ்வாறு இயற்கையான மகிழ்ச்சியினும் மீதூர்ந்த பேரானந்தத்துடன் சீதையைக் காணச் சென்றான் இராமன். அதனால்தான் கம்பன் காட்டும் சீதை வான்மீகியின் சீதையைப் போன்று இராமனின் முகமாற்றத்தைக் கண்டு வருந்தவில்லை. அசோகவனத்தே தனித்திருந்த சீதை இராமன் நினைவாக வருந்தியிருந்த போது, இராமனின் இந்த முகமலர்ச்சியை,*

***'தெவ் மடங்கிய சேண் நிலம்' - கேகயர் - தம் மடந்தை - 'உன் தம்பியது ஆம்' என, மும் மடங்கு பொலிந்த முகத்தினன் வெம் மடங்கலை உன்னி, வெதும்புவாள்.***

***'மெய்த் திருப்பதம் மேவு' என்ற போதினும் 'இத் திருத் துறந்து ஏகு' என்ற போதினும் சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள் (v. 3.19.20)***

*என்று நினைவுகூர்வதாகக் கம்பன் காட்டுவதை நோக்க இராமனின் மகிழ்ச்சியும் கம்பனின்குறிப்பும் இனிது வெளிப்படுகின்றன.*

*'காடேகு' என்னும் கைகேயியின் கட்டளையைப் பெற்ற இராமனின் முகம் முன்னையினும் நான்குமடங்கு ஒளிர்ந்து விளங்கியது என்று துளசிதாசர் கூறுவது கம்பன் கருத்தோடு பொருந்தியிருக்கக்காண்கிறோம்.*

*மேலும் அரச பாரத்திலிருந்து விடுதலை பெற்றதாக உணர்ந்த இராமனின் மனநிலையை வண்டியில்பூட்டப்பெற்றுப் பின்னர் விடுவிக்கப்பெற்ற நல்லேற்றின் மன மகிழ்ச்சியோடு கம்பன் ஒப்பிட்டுக் காட்டுகிறான். சிறைப்படுத்தப்பெற்ற இளம் யானை ஒன்று விடுவிக்கப் பெற்றதும் அடைந்த மகிழ்ச்சியைப்போன்று அரச பாரத்தினின்று கைகேயியால் விடுவிக்கப்பெற்ற இராமன் பெருமகிழ்ச்சி அடைந்தான் என்னும் துளசிதாசரின் உவமைகம்பன் காட்டும் உவமையோடு ஒப்பிட்டு மகிழத்தக்கதாக அமைகிறது. வான்மீகிக்குப் பிறகு தோன்றிய இந்திய இராமாயணக் கவிஞர்களுள் தலைசிறந்த இவ்விருவரும் ஏறக்குறையஒரே தன்மையில் இராமனின் சமநிலைப் பண்பை வெளிப்பிடுத்தியிருப்பதை நோக்குமிடத்துப் பெருங்கவிஞர்கள்இருவரும் எவ்வளவு தூரம் இராமாம்ருதத்தில் திளைத்திருந்தனர் என அறியமுடிகிறது. இனிக் கோசலையையும் இலக்குவனையும் சமாதானப்படுத்து மிடத்தும் இராமனுடைய சமநிலைப் பண்புவெளிப்படுவதைக்*

*காணலாம். "காட்டிற்குப் போகவேண்டாம், என் ஆணையை விடச் சக்களத்தியின்ஆணைக்கு அடங்கி நடக்க நீ ஏன் விருப்பப்படுகிறாய்" என்று கேட்ட கோசலையை நோக்கித் "தந்தையாரின்ஆணையைப் புறக்கணிக்கும் அதிகாரம் எனக்குக் கிடையாது. நான் காட்டிற்குப் போகத் தயாராகிவிட்டேன். தாங்கள் என்னை வாழ்த்தி விடை கொடுங்கள்" (ii. 21 - 31) என்று வான்மீக இராமன் கூறுகிறான். உனக்குரிய அரசைப் பறித்த கைகேயியையும் அதற்கு உடந்தையாயிருந்த தசரதன் முதலானவர்களையும்உடனே கொன்று உனக்குப் பட்டாபிசேகம் செய்து வைக்கிறேன் என்று சீறி நின்ற இலக்குவனுக்குப் பலவகையாகச் சமாதானம் கூறுகிறான் இராமன்.*

*இலக்குவ, உனது பராக்கிரமம் யாவரும் நன்கறிந்ததே. மூவுலகையும் ஒருங்கு வெல்ல வல்லவன்நீ என்பதை நான் நன்கறிவேன். அறங்களுட் சிறந்தது சொன்ன சொல் தவறாமையாகிய வாய்மையே. இதைக் காப்பாற்ற விரும்பும் தந்தையின் ஆணையை மீறலாமா? தந்தையாரின் உத்திரவினால்தான் கைகேயிஆணையிட்டாள். இதில் அவளுடைய குற்றம் என்ன இருக்கிறது? ஆகையால், அறத்திற்கு எதிராகப் பராகிரமத்தைப் பயன்படுத்தக் கருதும் எண்ணத்தைத் தவிர்ப்பாயாக. அறமே தலையாயது, வீரமன்று என்று உணர்வாயாக(ii.21. 40 - 45)*

*இப்பொழுது நமக்கேற்பட்டிருக்கும் நிலை விதியால் விளைந்தது. இன்றேல் எனக்கு இடையூறுவிளைவிக்கக் கைகேயி கருதுவானேன்? இதற்கு முன்னர்ப் பரதனுக்கும் எனக்கும் இடையில் அவள் அன்பில் வேறுபாடு கண்டதுண்டா? இயற்கையாகவே நற்குண நற்செய்கைகளை உடையவளாய், யாவராலும் கொண்டாடத்தக்க உத்தம குணங்களை உடையவளாய் இருந்த கைகேயி, தன்னியல்பினின்றும் முற்றிலும் மாறுபட்டவளாய்க்கல்வியறிவற்ற ஒரு சாதாரணப் பெண்ணைப் போலாகித் தன் கணவன் முன்னிலையில் என்னைப் பாதிக்கும்வகையில் பேசியது என்ன காரணத்தால் என்று எண்ணுகிறாய்? (ii.22. 16 - 20)*

*எந்த ஒரு இன்பத்திற்கோ துன்பத்திற்கோ, வியாதிக்கோ, கோபத்திற்கோ, லாபத்திற்கோ, நஷ்டத்திற்கோ, பிறப்பிற்கோ, இறப்பிற்கோ காரணம் இன்னதெனக் கொஞ்சமும் அறிய முடியவில்லையோஅதுதான் இறைவனின் திருவுளப்பயன். தொடங்கப் பெற்ற ஒரு செயல் தடையுற்றுச் சற்றும் எதிர்பாராதஒரு செயல் தன்னியல்பில் நிகழுமாயின் அது தெய்வத்தின் செயலன்றி வேறில்லை. எனவே, பட்டாபிடேகம் தடைப்பட்டதற்குக் கைகேயி*



*தான் காரணம் என்று கருதாதே. ஏனெனில் விதியால் உந்தப் பட்ட அவள் தன்னிச்சையின்றித் தனக்கு விருப்பமற்றதைச் செய்துள்ளாள். விதியின் இத்தகைய வலிமையை நீ அறியாயோ?*

*இலக்குவனே, நான் அரசு துறக்க நேர்ந்ததற்கு வருந்தாதே. அரச பாரம் தாங்குதல், கவலையின்றிக்கடமைகளின்றித் தேசங்கள் தோறும் திரிந்து மகிழும் துறவியாகக் காட்டில் வாழ்தல் ஆகிய இவ்விரண்டில் பின்னதே மேலானது. இதுவரை எடுத்துக் கூறிய அறங்களையும், விதியின் வலிமையையும் நன்கு அறிந்துள்ளமையாலும், இயற்கையான மனோபாவத்தாலும் பக்குவப்பட்டுள்ள எனக்கு அரசுரிமை பெறாமற் போனதால் மனச் சஞ்சலம்என்பதே உண்டாகாமையோடு, அதிக உற்சாகமுடையவனாகவும் நான் இப்போது விளங்குகிறேன். (ii.22. 20-30)*

ஏறக்குறைய இதே கருத்துடையவனாகக் கம்பராமனும் விளங்குகிறான். 'அருங்கற்பினோய், மெய்த்திறத்துநம் வேந்தனைப் பொய்த்தினன் ஆக்குதியோ' என்று கூறிக் கோசலையைத் தேற்றிய இராமன், "நின்னை மௌலி சூட்டத் தடை செய்பவர் தேவரேனும் சுடுவான் துணிந்தேன். உலகு ஏழினோடு ஏழும் உனக்கு யான் தரக்கோடி" என்று உருத்தெழுந்த இலக்குவனை நோக்கி

***முன்கொற்ற மன்னன் "முடிகொள்க" எனக் கொள்ள மூண்டது என் குற்றம் அன்றோ? இகல் மன்னவன் குற்றம் யாதோ?***

***வரம் பெற்றவள்தான் இவ்வையம் சரதம் உடையாள்...........இனி யான் படைக்கின்ற செல்வம் விரதம்; இதின் நல்லது வேறு இனியாவது?***

என்று தசரதனும் குற்றம் செய்யவில்லை; கைகேயியும் பிழை செய்யவில்லை எனத் தெளிவித்தபின்னர்,

***நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை; அற்றே, பதியின் பிழையன்று; பயந்து நமைப் புரந்தாள் மதியின் பிழையன்று; மகன் பிழை அன்று; மைந்த! விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது?*** என்றான்

என்று நடந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் விதியே காரணம் என ஒரு சுருக்கம் (ii.22) முழுக்க விளக்கிய வால்மீகியின் கருத்தை இர்த்தினச் சுருக்கமாக ஒரு பாட்டில் கம்பன்விளக்குகிறான்.

கோசலையையும் இலக்குவனையும் சமாதானப்படுத்துவதுபோல் இப்பகுதி தோற்றமளிப்பினும், கைகேயியின்வரத்தால் இராமனின் சமநிலையாகிய மனநிலை சிறிதும் பாதிக்கப்பட

வில்லை என்பதைக் காட்டுவதே இங்கு இவ் இரு மகா கவிஞர்களின் நோக்கம் என்பது தெள்ளிதின்புலனாகக் காணலாம்.

### 2.3. சீதையும் இலக்குவனும் இராமனுடன் காடுசெல்லல்

தந்தையின் கட்டளைப்படி காடு செல்லத் துணிந்த இராமனைத் தங்களையும் அழைத்துச் செல்லுமாறுசீதையும் இலக்குவனும் வற்புறுத்துகின்றனர். இந்நிலையில் அவர்கள் இராமனுடன் விவாதிக்கும் கருத்துக்கள் இராமாயணத்தோறும் வேறுபடுவதால் அவை சிந்தனைக்கு விருந்தாகின்றன. சில முக்கியமானவேறுபாடுகளைக் கீழே காணலாம்.

#### 2.3.1. சீதை இராமனுடன் செல்லத் துணிதல்

**வான்மீகம்**

தன் தாய் கோசலையிடம் விடைபெற்றுக் கொண்ட இராமன் நேராகச் சீதையிடம் வந்து,

*"சனகனின் திருமகளே, கைகேயின் வேண்டுகோளுக்கு இணங்க என் தந்தையார் பரதனுக்குஇளவரசுப் பட்டம் கட்டவும், நான் பதினான்கு ஆண்டுகள் தண்டகாரண்யத்தில் வாழவும் கட்டளையிட்டிருக்கிறார். அதன்படி நான் இப்போது காட்டிற்குப் புறப்படுகிறேன். நீ நல்லறங்களைப் பின்பற்றி என் பெற்றோருக்குஉரிய தொண்டுகளைச் செய்துகொண்டிரு. பரதன் அரசனானதும் அவனுக்குப் பணிந்து நட. என்னுடையபெருமைகளைப் பற்றிஅவனிடம் புகழ்ந்து பேசாதே . அரசர்கள் இதனை விரும்பார். அவன் கோபப்படுமாறுநடந்துகொள்ளாதே" என்று கூறுகிறான் (சருக்கம் 26). இதனைக் கேட்டு மனம் வருந்திய சீதை இராமனைநோக்கி,*

*"புருடோத்தம, மகளிர்க்குக் கணவன்தான் இம்மையிலும் மறுமையிலும் எக்காலத்திலும் துணை.தந்தை, மகன், தாய், தோழியர் போன்றோர் துணையாகார். தங்களுடன் நான் இப்போதே காட்டிற்குவருவேன். நான் என் தந்தையார் அரண்மனையில் வாழ்ந்தபோது, "காட்டில் சில காலம் வாழ வேண்டியகிரக அமைப்பு உனக்கு உண்டென்று." சோதிட வல்லுநர்கள் கூறியதிலிருந்தே வனவாசத்தில் எனக்குப்பெருவிருப்பு உண்டாயிற்று. இப்பிறவியில் கணவனாகப் பெற்றவனையே பரலோகத்திலும் 779*

*கணவனாகப் பெறுவாள் என்று வேதம் கூறுவதாகப் புகழ்பெற்றவைதிகப் பிராமணர்கள்கூறுகிறார்கள். அப்படியிருக்க என்னைத் தங்களுடன் அழைத்துப் போக விரும்பாமைக்குக் காரணமென்ன? இப்படி உள்ளம் உருகி வேண்டிக்கொள்ளும் என்னைத் தாங்கள் அழைத்துப்போகவில்லை என்றால், நான் இப்போதே நஞ்சுண்டு சாவேன். நஞ்சும் வேண்டாம், பிரிந்த உடனே மனவேதனையால் இறந்து படுவேன்" என்று கூறிக் கண்ணீர் சொரிந்து நின்றாள். (சருக். 27 - 30)*

*இவ்வாறு சீதை நொந்து கூறியதைக் கேட்ட இராமன், "என்நிழல் போன்றவளே, உன் உள்ளக்கருத்தையும், மன உறுதியையும் அறிந்து கொள்வதற்காகவே நான் இதுவரை மறுத்து வந்தேன். என்னுடன்காட்டில் வாழ்வதற்காகவே படைக்கப்பட்டவள் நீ. ஆகையால், என்னைத் தொடர்ந்து காட்டிற்குவந்து நான் இயற்றும் அறங்களுக்குத் துணை செய்வாயாக" என்று கூறி மகிழ்வித்தான். (சருக். 30)*

***கம்ப ராமாயணம்***

*"பரதன் நாடாள்வான். நான் வனம் செல்ல ஆணை பெற்றுள்ளேன்; மீண்டு வரும் வரை வருந்தாதிரு"எனக் கம்ப இராமன் கூறக் கேட்ட சீதையின் துயர நிலையை*

***நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும் மேயமண் இழந்தான் என்றும் விம்மலள் நீ வருந்தலை நீங்குவென் யான் என்ற தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள். (ii. 4.218)***

***என்னை என்னை இருத்தி என்றான் எனா உன்ன உன்ன உயிர் உமிழா நின்றாள். (219)***

*என்று கவிஞன் பாடுகிறான். "அரக்கை உருக்கி ஊற்றினாற் போன்ற கொடிய வெம்மையுடைய காட்டில்நடக்கும் தன்மையதோ நின் மெல்லடி" என்று இராமன் கூற 'நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என்று சீதை வேக மறுமொழி கூறி வெதும்பினாள். சீதையின் சொற்களையும் அவற்றின் உட்பொருளையும்உணர்ந்த*

இராமன் கண்களில் நீர் ததும்பியவனாய் 'இனி என்ன செய்வது?' என்று சிந்திக்கலானான். அதற்குள் விரைந்து அரண்மனை சென்ற சீதை மரவுரியை உடுத்திக் கொண்டு இராமன் பக்கம் வந்துஅவன் கையைப் பற்றிக்கொண்டு நடக்கத் தயாரானாள். அப்போது, "மேல்வரும் விளைவுகளை எண்ணாது, காட்டிற்கு வரத் துணிந்துவிட்டாய், எனவே, எனக்கு எல்லையற்ற இடர் தரப் போகிறாய்" என்றுஇராமன் வருந்திக் கூறியதும், **உற்றுநின்ற துயரம்இது ஒன்றுமே? என் துறந்தபின் இன்பம் கொலாம்.** ***(228)***

என்று சீறினாள் குயில்போன்ற இனிய குரலை உடையவளான சீதை. இதைக்கேட்டதும்.

**பிறிது ஓர் மாற்றம் பெருந்தகை பேசலன் செறுவின் வீழ்ந்த நெடுந்தெருச் சென்றனன்.** ***(229)***

என்று, சீதையைத் தேற்ற வேறுவழியறியாத இராமன் மறுவார்த்தை பேசாமல் தெருவில் நடந்தான் என்றுகம்பன் சீதையொடு வனம்புக நேர்ந்ததைப் பாடுகிறான்.

**அத்யாத்ம ராமாயணம்**

காட்டில் வாழ்வதால் நேரும் இன்னல்களையும், இடையூறுகளையும் இராமன் விவரித்துக் கூறக்கேட்ட சீதை, உங்களோடு இருக்கும் போது எனக்கு எந்த இடையூறும் நேராது. பிரிந்திருப்பது தான்கஷ்டம். என்னால் உங்களுக்கு ஒரு தொல்லையும் வராமல் நடந்து கொள்வேன்.

மேலும், நான் குழந்தையாய் இருக்கும்போது சோதிட அறிஞர் ஒருவர், "நீ உன் கணவனுடன்சில காலம் காட்டில் வாழ்வாய்" என்று கூறியுள்ளார். அவர் வாக்கு பலிக்கட்டும். என்னைத்தடுத்தால் இப்போதே உயிரை விட்டுவிடுவேன், [42] என்று கூறுகிறாள்.

"ஐய, தாங்கள் பல பிராமணர்கள் மூலம் பல இராமாயணங்களைக் கேட்டிருப்பீர்கள். அவற்றுள்எதிலாவது சீதையில்லாமல் இராமன் காட்டிற்குச் சென்றதாகக் கூறப்பட்டுள்ளதோ?" [43] (II.4.77 - 78) என்றும் சீதை விவாதிக்கவே வேறுவழியற்ற இராமன் அவளுடன் கானகம் செல்லத் தீர்மானிக்கிறான்.

**தெலுகு ராமாயணங்கள்**

ரங்கநாதம், பாஸ்கரம் ஆகிய இரு தெலுகு ராமாயணங்களும் பெரும்பாலும் வான்மீகத்தைப்பின்பற்றிச் சீதையின் விவாதத்தைக் கூறுகின்றன. பாஸ்கர ராமாயண சீதை, "நின்னைப் பிரிந்திருப்பதைவிட இறப்பதே மேலானது. அயோத்தியில் கைகேயிக்கும் பரதனுக்கும் அடிமையாக என்னால் வாழமுடியாது" என்று உறுதியாகக் கூறுகிறாள்.

*42. நடேச சாஸ்திரி, பக். 78-79. 43. அம்பாபிரசாத். பிரதி. 121* 

**தொரவெ ராமாயணம்**

நான் காடு சென்று 14 ஆண்டுகள் வாழும் ஆணை பெற்றுள்ளேன் என்று இராமன் கூறியதும், அவன்பாதங்களில் விழுந்து வணங்கிய சீதை.

"நீ உடல், நான் நிழல்; உடலும் நிழலும், பூவும் மணமும், திங்களும் ஒளியும், அறமும் புகழும் என்றும் பிரிக்க முடியாதன" என்று கூறினாள். இராமனோ, "உன்னால் கொடிய வனத்தில்வாழ முடியாது . உன்னை அழைத்துக்கொண்டு போனால் உன்னுடைய உறவினர் எங்களைப் பழித்துப் பேசுவர். இனி இதைப் பற்றிப் பேச வேண்டாம். என் தாய் கோசலைக்குத் தொண்டு செய்துகொண்டுஇங்கேயே இரு. நீ உடன் வருவேன் என்று சொன்னதே போதும்" என்றான்.

'உன்னுடன் இருக்கும்போது எல்லாத் துன்பங்களும் இன்பமாக மாறிவிடும்' என்று கூறிய சீதைமேலும் இராமனின் பதிலுக்காகக் காத்திராமல் அவன் கையில் இருந்த மரவுரியைப் பிடுங்கி அணிந்துகொண்டாள்.வேறு எதுவும் கூறவியலாத இராமன் அவளையும் அழைத்துக்கொண்டு சென்றான்.

## மலையாள இராமாயணங்கள்

கன்னச ராமாயணத்தில் இராமன் சீதை வாக்குவாதம் விரிவாகக் கூறப்படவில்லை. சீதையின்பிடிவாதத்தை உணர்ந்த இராமன் அவளை உடன் அழைத்துச் செல்ல இணங்குகிறான். எழுத்தச்சன் இப்பகுதியை அத்யாத்ம ராமாயணத்தைப் பின்பற்றிப் படைத்துக்காட்டுகிறார்.

## ஜப்பான் ராமாயணம்

போரினால் விளையும் வீண் கொலைகளைத் தவிர்ப்பதற்காகத், தான் அரச துறந்து துறவறம்மேற்கொண்டு காடு செல்கிறேன் என்று அரசன் சாக்கிய முனி கூறியதும், 'பல்லாண்டுகள் உடன்வாழ்ந்த நான் தங்களைப் பிரிந்து வாழ முடியாது' என்று கூறி அரசி உடன் செல்ல ஆயத்தமாகிறாள். அப்போது அரசன், "பகைவர்கள் நம் நாட்டின் மீது படையெடுத்து வரினும் நீ இங்கேயே அரண்மனையில்பாதுகாப்பாக இரு' என்று கூறுகிறான். அரசன் சொல்வதை ஏற்காமல் அரசி பிடிவாதமாகக் காடு செல்கிறாள். [44]

44. minoru Hara, p. 342. **அசாமி ராமாயணம்**

இராமன் காடு செல்ல விதிக்கப்பட்டதை அறிந்ததும், "இது வரை என் உடல் சண்பக மொட்டுப்போல் இருந்தது. ஒரு கருவண்டைப் போல நீ என்னைச் சற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தாய். அம்மொட்டுநன்கு மலர்ந்து ஒளி வீசும் பருவத்தை அடைந்து நிற்கும் இச்சமயத்தில் அதை அனுபவிக்காமல் தியாகம்செய்யவும் என் வாழ்க்கையைப் பயனற்றதாகச் செய்யவும் நீ ஏன் முயல்கிறாய்?" என்று இராமனை நோக்கிக்கேட்கிறாள் சீதை. [45]

## உதார ராகவம்

இராமன் தான் காடு செல்ல நேர்ந்ததை விளக்கி, "நீ இங்கேயே இரு; நான் வனவாசம் முடிந்ததும்விரைந்து வருவேன்" என்று கூறியவுடனே அவனைச் சினந்து நோக்கிய சீதை, "இது வரை நான் அறிந்தஎந்த இராமாயணத்திலும், இராமனுடன்

*காடுசெல்லாத சீதையைப் பற்றிக் கேள்விப்பட்டதே இல்லை"என்று கூறித் தன்னையும் அழைத்துப் போக வற்புறுத்துகிறாள்.* [46]

### *துளசி ராமாயணம்*

*இராமன் கோசலையிடம் தான்அரசன் கட்டளைப்படி, காடு செல்ல இருப்பதைக் கூறும்போது அங்கிருந்தசீதை தானும் உடன் வருவதாகக் கூறுகிறாள். அப்போது கோசலை முதலானோர்க்குச் சேவை செய்யத்தக்க அவளது கடமையை எடுத்துக் கூறிக் காட்டு வாழ்க்கையின் இடையூறுகளையும் விளக்கிக் கூறுகிறான்இராமன். அதைக் கேட்ட சீதை.*

**கொழுநனைப் பிரிவதினும் கொடிய துன்பம் இவ்வுலகில் வேறெதுவும் இல்லை; நீங்கள் இல்லாத சொர்க்கமும் எனக்கு நரகமே. கணவனைப் பிரிந்த மனைவி உயிரற்ற உடலுக்கும், நீரற்ற ஆற்றுக்கும் சமம்.....நீங்கள் திரும்பி வரும் வரையில் நான் உயிரோடு இருப்பேன் என்று நீங்கள் நம்பினால், நீங்கள் என்னை அயோத்தியில் விட்டுவிட்டுச் செல்லலாம்.** [47] ***(II. 65-69)***

*45. Biswanarayan. "Ramayana in Assamese Literature"* ***Ramayana Tradition inAsia.*** *p.589 46. Shankar Raju Naidu. p. 34 47. ibid, p.149. 783*

*என்று கூறவே இராமன், "நான் பிரியின் இவள் உயிர் தரியாள்" என்று நினைத்துச் சீதையையும்உடன் அழைத்துச் செல்ல உடன் பட்டான்.*

### *2.3.2. இலக்குவனும் உடன்வர இராமன் இசைதல்*

### *வான்மீகம்*

*இலக்குவனும் தன்னுடன் வனவாசத்திற்கு வர அனுமதி கேட்ட போது இராமன் அவனை நோக்கி, "நம்தாயர் இருவரையும் காப்பாற்றும் பொறுப்பை நீ செய்துகொண்டிரு. தசரதரோ கைகேயியின் மயக்கத்தில் உள்ளார். அவளோ அரசு கிடைத்த வெற்றிப் போதையில் உள்ளாள். பரதன் கைகேயி வயப்பட்டவனாய்நம் தாயரை நினைக்கவும் மாட்டான். எனவே, நீ இங்கிருந்து அவர் களுக்குச் சேவை செய்வதே சிறந்தது" என்றான். இதனைக் கேட்ட இலக்குவன், "வீரத்திற் சிறந்தவரே, பரதன் அறம் திறம்பாத நெஞ்சினன்; கோசலைக்கும், சுமித்திரைக்கும் தக்க மரியாதை செய்வான். இந்த விஷயத்தில் தங்களுக்குச்சந்தேகமே வேண்டாம். நான் உங்களுடன் கூடவே இருந்து காட்டில் தக்க சேவை செய்வேன். உங்களையும்சீதையையும் நன்கும பாதுகாப்பேன்" என்று இறைஞ்சிக் கூறினான். இராமனும் மேற்கொண்டு எதுவும் கூறுஇயலாதவனாய் இலக்குவனும் உடன்வரப் பணித்தான். (II. 31. 7,8, 13, 14, 26,27).*

*பின்னர்த் தமசா நதிக்கரையில் மூவர் மட்டுமேத தங்கிய முதல் நாளிரவில் இராமன்கோசலை, சுமித்திரை இருவருக்கும் பாதுகாப்பாக இருந்து சேவை செய்வதற்காக இலக்குவனை அயோத்திக்குப்போகச் சொல்லுகிறான். அப்போது இலக்குவன், 'இராகவ, நானும் சீதையும் தங்களை விட்டுப் பிரிந்து உயிர் வாழமாட்டோம். குளத்திலிருந்து எடுக்கப்பட்ட மீன்களைப் போலப் பிரிந்த சிறிது நேரத்தில்உயிர் விட்டு விடுவோம். உங்களை விட்டுப் பிரிந்து சுவர்க்கத்துக்கும் போக மாட்டேன்' என்று உறுதியாகக் கூறிவிடுகிறான். (II. 53)*

*கம்ப ராமாயணம்*

பெற்றோர்க்குத் துணையாக அயோத்திலேயே இருக்குமாறு வேண்டிக் கொள்ளப்பெற்ற இலக்குவன்இராமனை நோக்கி, "நான் உனக்கு இழைத்த பிழை என்ன? நீ அரசிழந்தபோது பொங்கியெழுந்தஎன்னை 'அடக்கு' என அடக்கிய சுடு சொல்லினும் கொடிய சொல்லாகிய 'இரு' என்னும் ஆணைய இடுகிறாய். **நீர் உள எனின் உள, மீனும் நீலமும், பார் உள எனின் உள யாவும்;..... நானும் சீதையும் ஆர் உளர் எனின் உளம்? அருளுவாய். (II. 4.152)**

என்னும் இலக்குவனின் வாதத்தைக் கேட்ட இராமன் ஒன்றும் உரைக்க நேர்ந்திலன்.

### *2.3.3. சுமித்திரையின் அறிவுரை*

*வான்மீகம்*

காடு செல்ல ஆயத்தமான இராமன், சீதையும் இலக்குவனும் உடன்வரத் தசரதனையும் கோசலையையும்வணங்கி விடைபெற்றுக் கொண்டு சுமித்திரையிடம் வந்து அவளைத் தொழுது நின்றான். அவர்களுக்குஆசி வழங்கிய பின்னர்ச் சுமித்திரை இலக்குவனை நோக்கிக்

குழந்தாய், நீ வனவாசம் செய்வதற்காகவே பிறந்தவன்; இராமனிடத்தில் பக்திபூண்டவனாய் இருஅரசனாகப் பொலிந்தாலும் தவசியாக மெலிந்தாலும் உலகில் இராமன் ஒருவனே உனக்குக் கதி. இராமனைத்தசரதனாகவும், சானகியை நானாகவும் வனத்தை அயோத்தியாகவும் கருதிக் கொண்டு, மனக்குறையற்றவனாகப்போய் வா. *(II. 40 . 5, 6, 10).*

என்று அறிவுரை கூறி வாழ்த்தி வழியனுப்புகிறாள். [48]

*கம்பராமாயணம்*

இலக்குவனின் சீற்றம் தணிந்த பின், இராம இலக்குவர் இருவரும் சுமித்திரைகோயில்புக்கு அவள் இணையடிம இறைஞ்சி விடைபெறாநிற்கையில் சுமித்திரை.

**ஆகாதது அன்றால் உனக்கு; அவ்வனம் இவ் அயோத்தி மாகாதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும் போகா உயிர்த் தாயர் நம் பூங்குழல் சீதை என்றே ஏகாய் இனி இவ்வயின் நிற்றலும் ஏதம்......**

**பின்னும் பகர்வாள் மகனே இவன்பின் செல், தம்பி என்னும் படி அன்று, அடியாரின் ஏவல் செய்தி; மன்னும் நகர்க்கே இவன் வந்திடின் வா, அஃது அன்றேல் முன்னம் முடி.......**

*48. 785*

என்று தன் மகன் இலக்குவனுக்கு அறிவுரை வழங்கி இராமனுடன் காட்டிற்கு வழியனுப்புகிறாள்.

### *துளசி ராமாயணம்*

*இராமனுடன் காடு செல்ல அவனுடைய அனுமதி பெற்றதும், இராமனின் ஆணையின்படி இலக்குவன் தன்தாய் சுமித்திரையின் இசைவு பெறச் சென்றான். அவளும் இராமனைத் தந்தையாகவும், சீதையைத் தானாகவும், வனத்தை அயோத்தியாகவும் கருதிக் கொண்டு அவனுடன் செல்ல ஆணையிடுகிறாள். (II. 69 -1,2).*

### தொகுப்புரை

### *சீதை*

*இராமனுடன் வனவாசம் சென்றே தீருவேன் என்று சீதை பிடிவாதமாகக் கூறி இராமனின் இசைவைப்பெறுவதாக வான்மீகம் முதலான எல்லா இராமாயணங்களும் கூறுகின்றன. காட்டிற்கு வரவேண்டாம் எனச் சீதையைத் தடுப்பதற்காக இராமன் கூறும் கருத்துகளும், வந்தே தீருவேன்; இன்றேல் இறந்து படுவேன்எனத் தன் முடிவை வற்புறுத்துவதற்காகச் சீதை காட்டும் காரணங்களும் எல்லா இராமாயணங்களிலும்ஏறக் குறைய ஒரே தன்மையனவாய்க் கூறப்படுகின்றன. எந்நிலையிலும் கணவனைப் பிரியாதிருத்தல் என்னும் இந்திய இல்லறப் பொதுப் பண்பாட்டுக் கருத்து சீதையால் வற்புறுத்தப்பெறுகிறது. இதனைச் சிலஇராமாயணங்கள் தத்தம் இலக்கியப் பண்பாட்டிற்கேற்ப எடுத்துரைக்கின்றன. காட்டு வாழ்க்கை துன்பங்கள் பலவற்றையுடையது. மெல்லியல் வாய்ந்த சீதையால் தாங்க இயலாதது என்னும் இராமனின்கருத்தை மறுக்குமிடத்து.*

**நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு?**

*என்று சீதை கூறுவதாகக் கம்பன் படைத்துக் காட்டுகிறான். இனி, நீ உடன் வருவதால் எனக்குப்பல இடையூறுகள் விளையும் என்ற இராமன் கூற்றுக்கு, "உங்களுக்கு என்னால் இடையூறு வராமல் பார்த்துக்கொள்வேன்,நீங்கள் இருக்கும்போது எனக்கு என்ன இடையூறு வர முடியும்" என்று சீதை கேட்பதாக வான்மீகம் முதலானபல இராமாயணங்கள் காட்ட,*

**என் துறந்த பின் இன்பம் கொலாம்**

*என்று கம்ப ராமாயணச் சீதை கூறுகிறாள். தமிழ் அகப்பொருள் மரபுகளான பாலையும், மருதமும் இங்கேகை கொடுத்திருப்பதைக் காண்கிறோம். வான்மீகத்தில் இராமன் சீதை இருவரின் உடன்காலச் சமுதாயத்திற்கேற்ற வாதப் பிரதிவாதங்கள்நம்மை இன்புறுத்துகின்றன. எனினும், இவ் இன்புறுத்தலில் கால, இடப் பண்பாட்டு வேறுபாடுகளால் விளையும் இடைவெளி நிலவுவதை உணர்கிறோம். கம்ப ராமனும் சீதையும், கால வேறுபாட்டால்இடைவெளி உண்டாகாத அகப்பொருள் மரபினையொட்டிப் படைக்கப்பட்டிருப்பதால், சீதையின் வாதங்கள் நம்முடைய வாதங்களாக உணரப்பட்டு நம்மை ஈர்த்தின்புறுத்தும் தன்மையவாய் அமைந்துள்ளன. துளசிதாசரின்சீதையும் பொதுமானுட உணர்வுகளை உடையவளாகப் படைக்கப்பட்டிருப்பதால் வாசகர்கள் அவளுடன் ஒன்றியஉணர்வினராய் இன்புறும் தன்மையை அடைகிறார்கள்.*

*"இல்லற இன்பத்தைத் துய்ப்பதற்குரிய பருவம் வாய்த்திருக்கும் இந்தச் சமயத்தில் என்னைத்துறந்து செல்ல முயல்வது ஏன்?" என்று மாதவ கந்தலியின் அசாமிய சீதை வினவுமிடத்து ரீதி இலக்கியப்பண்பாட்டின் எதிரொலியும், பாகவத இலக்கியத்தின் செல்வாக்கும் (krishna cult), அசாமி ராமாயணத்தை ஆக்குவித்தோனாகி ய மகாமாணிக்கியன் என்னும் வராக அரசரின் சிருங்காரப் பிரியமும்வெளிப்படக் காண்கிறோம்.*

*தான் கணவனுடன் காடுறை வாழ்க்கை பெறும் கிரக நிலையுடையவன் என்று சிறுவயதிலேயே சோதிடர்கள்கூறக் கேட்டிருப்பதாக வான்மீகச் சீதை கூறுகிறாள். பின்னர் எழுந்த அத்யாத்ம ராமாயணமும், எழுத்தச்சன் ராமாயணமும் வான்மீகத்தைப் பின்பற்றி இதே செய்தியைக் கூறுகின்றன. கம்பராமாயணமும் தெலுகு ராமாயணங்களும், கன்னட தொரவெ ராமாயணமும், மலையாள கன்னச ராமாயணமும், துளசி ராமாயணமும் இச்செய்தியைக் குறிப்பிடவில்லை. இராமாயண நூல்களில் சீதையைப் பற்றி நாம்கேள்விப்படும் இந்த இரண்டாவது சோதிடக் கருத்து மெய்ம்மை யாகிச் செயல்வடிவம் பெறுவதைஅயோத்தியா காண்டத்திலே காண்கிறோம். முதல் சோதிடக் கருத்து (சீதையின் காரணமாக இராவணன்அழிவான்) யுத்தகாண்டத்தில் செயலாக்கம் பெறுவதைப் பின்னர்க் காணலாம்.*

*இனி எந்த இராமாயணத்திலும் சீதையை விட்டுவிட்டு இராமன் தனியாகக் காடு சென்றதாகக்கூறப்படவில்லை என்னும் குறிப்பைத் தனக்குச் சாதகமான வாதமாகச் சீதை உரைப்பதாக அத்யாத்மராமாயணம் கூறுகிறது. இவ்வாறே சாகல்யமல்லரின் உதார ராகவம் என்னும் காவியமும், எழுத்தச்சன ராமாயணமும் கூறுகின்றன. இங்கு ஆய்வுக்கு உட்பட்ட வேறெந்த இராமாயண* 

*நூலும் இச்செய்தியைக் குறிப்பிடவில்லை. இச்செய்தி பல்வேறு சிக்கல்களைத் தோற்றுவிக்கிறது. முதலாவதாக, "இராமாயணப் பாத்திரங்கள் தம் காப்பிய நிகழ்ச்சியை விட்டு வெளியேறி வாசகர் நிலையை அடைந்து விடுகின்ற காலவழு (Anachronism) மற்றும் பாத்திர மரபு வழு என்னும் படைப்புக் குற்றங்களுக்கு இச்செய்தி எடுத்துக்காட்டாக அமைந்துவிடுகிறது. இவற்றுள் காலவழு என்னும் குற்றம் நாடகம் போன்ற இலக்கிய வகைகளுள் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒன்றாகத் திறனாய்வு உலகம் கருதுகிறது. ஆனால், பாத்திரங்கள் கதைப் பின்னலை விட்டுப் புறம் போந்து வாசகர்நிலை எய்தித் தம்மைப் பற்றியே விவாதிப்பதாக அமைந்துள்ள இத்தகைய மாற்றம், உலகக் காப்பிய வழக்கில் வேறெங்கும் செய்யப்பட்டுள்ளதாகத் தெரியவில்லை.*

*இரண்டாவதாக, இராமனே தன் கதையைப் பிறர்பாடக் கேட்டதாகக் கூறப்படும் செய்தி இப்போதுள்ளவான்மீகி ராமாயணத்தின் முற்பகுதியில் காணப்படுகிறது. இப்போது வழங்கிவரும் வான்மீகத்தின் மூலத்தன்மை (originality) குறித்துப் பல்வேறு முரண்பட்ட கருத்துகள் இராமாயண அறிஞர்களிடையே நிலவி வருகின்றன.[49] இப்போதுள்ள பாலகாண்டத்தை வால்மீகி எழுதவில்லை. அயோத்தியாகாண்டமே காப்பியத் தொடக்கமாக இருந்தது. பின்னர்ப் பாலகாண்டத்தைப் பிறர் இயற்றிச் சேர்த்துவிட்டனர் என்று ஒரு கருத்து நிலவுகிறது. இக் கருத்தின்படி காளி தாசன் காலத்துப் புலவர் ஒருவர் அல்லது அவனுக்குச் சற்றுப் பிற்பட்டு வந்த புலவர் ஒருவர் இதனை இயற்றிச் சேர்த்திருக்கலாம்.இராமன் தன் கதையைத் தானே கேட்கும்*

*இப்பகுதியை மனத்திற் கொண்டு அத்யாத்ம இராமாயணம் மேற்கண்டசெய்தியைப் படைத்திருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். அத்யாத்ம ராமாயணத்தின்ஆசிரியர் இராமசர்மா என்று அம்பா பிரசாத் போன்ற அறிஞர்கள் குறிப்பிடினும் இந்நூலின் காலத்தையோ, ஆசிரியர் பெயரையோ ஐயத்திற்கிடமின்றி அறிய இயலவில்லை என்றும், இது பல்வேறு முந்தைய நூல்களிற்காணப்படும் செய்திகளின் தொகுப்பு என்றும் அறிஞர்கள் பலர் கருத்துரைத்துள்ளனர்.* [50]

*இனித் தற்போதுள்ள வான்மீக பாலகாண்டம், மூலம், பிற்சேர்க்கை என்னும் இரண்டு அடுக்குகளைஉடைய கலவைப் பகுதியாக விளங்குகிறது என்று கூறுவாரும் உளர்.*

*49. "kanda structure of Ramayana",* ***Purana sullefin*** *Ayodhya specialissue, vol XXXIII, no.2 (Varanasi july 1991), pp. 103-107. 50. A.N. jani, pp. 40 - 41* *இதனாலும் பாலகாண்டப் பகுதியின் மெய்ம்மைத் தன்மை ஐயுறத் தக்கதாக அமைந்துள்ளது என்பதுஉறுதியாகிறது. இச்செய்திக்குப் புதுக்கிச் சேர்த்த வான்மீகி ராமாயணப் பாலகாண்டத்தைத்தவிர வேறு ஏதேனும் ஆதாரம் இருக்குமா என்பதும் ஆராய்தற்குரியது. இடைக்கால இராமகாதை நூல்களுக்கெல்லாம் அடிப்டையாக அமைந்த புஷுண்டி ராமாயணத்தில் இச்செய்தி குறிப்பிடப்படுகிறதா என்று அறிய இயலவில்லை. இவ்வாறு புதியதொரு சுவை பயக்கும் எனக் கருதிச் சேர்க்கப்பெற்ற இச்செய்தி பல வினாக்களுக்குவித்திட்டுள்ளதாகத் தோன்றுகிறது.*

*கணவனை விட்டுப் பிரியாமல் இருக்கக் கருதி அயோத்தியில், தன்னரண்மனையில், உறவினர்களுடன், உரிமையாக வாழும் நிலையைத் துறந்து காட்டு வாழ்க்கையை வலிந்து மேற்கொண்ட சீதை, பல மாதங்கள்தன்இன்னுயிர்க் கணவனிடமிருந்து பிரிந்து, இலங்கையின் ஒரு சோலையில் அரக்கரிடையே, சிறைப்பட்டுவாழ நேர்ந்தது என்ற காப்பியப் போக்கினைக், காப்பிய முரண்குறிப்பை நோக்குமிடத்து உலகவாழ்க்கையில் விதியின் வலிமையை (destiny) அல்லது மானுட நிகழ்ச்சிகளின் முரண்பாட்டை (irony of events) உணரும் வாய்ப்பு நமக்கு ஏற்படுகிறது. சிறையெடுத்துச் செல்லப்பெற்ற ஒரு பெண்ணிற்காகப்பெரும்போரில் (பத்தாண்டுப் போர்)ஈடுபட்ட வீரயுகத் தலைவர்கள் வேறொரு பெண்ணின் பொருட்டுப் பிளவுபட்டு நின்று, இறுதியில் பகைவரை முற்றிலும் அழித்த பின்னர், தாம் வந்த நோக்கமாகியசிறைமீட்பைச் செய்யமாமல் மீளுதலையும், அப்பெண்ணே வர விரும்பாத நிலையினையும் ஹோமரின்தலைக் காப்பியமாகிய இலியதம் காட்டுகிறது. முடியரசர் ஆட்சி மரபை அதாவது, எதேச்சதிகாரமரபை அழித்து மக்களாட்சி மலரச் செய்யவேண்டும் என்னும் நோக்கத்துடன் தொடங்கப்பெற்றபிரஞ்சுப் புரட்சி முடிவில் நெப்போலியன் என்னும் ஓர் எதேச்சதிகாரியின் ஏற்றத்தில் முடிந்ததைஅனைவரும் அறிவர். இவ்வாறே தோற்றமும் விளைவும், நோக்கமும் முடிவும்ம முரண்பட்டு நிகழும் மானுடநிகழ்ச்சிகள் பலவாகத் தொடர்ந்து நிகழும் இவ் உலகியல் தன்மை.*

***"என்னையே என்னையே இவ் உலகியல் இருந்த வண்ணம்"***

*என்னும் கம்ப இராமனின் வியப்பில் எதிரொலிக்கிறது.*

**இலக்குவன்**

இலக்குவன் அயோத்திலேயே இருக்க வேண்டும் என்பதற்கு இராமன் தரும் காரணங்களும் அவற்றிற்கு எதிராகஇலக்குவன் 789

கூறும் வாதங்களும் பெரும்பாலான இராமாயண நூல்களில் ஒரே மாதிரியாகக் கூறப்பட்டுள்ளன. வான்மீகம்இதனை மிக விரிவாகவும் கம்பராமாயணம் இதை மிகச் சுருக்கமாகவும் கூறுகின்றன. எனினும், கம்பனின்ஒருபாடலே இலக்குவனின் கருத்தைத் தெளிவாகவும் உறுதியாகவும் கூறிவிடுகிறது. அதற்கு மேல் இராமன்கூறுவதற்கு ஒன்றுமில்லை என்னும் நிலையில் இலக்குவன் கூற்றைப் படைத்திருக்கும் கம்பனின் கவித்திறம் வியத்தற்குரியது. இப்பாடலுக்குரிய உயிர்க்கருத்தாய மீன் உவமை வான்மீகத்திலேயே காணப்படினும்,அதனைக் கவிதையாக்கிய அழகில் *(rhetorical question)* கம்பனின் கவித்துவம் மிளிர்வதைஎவரும் எளிதிற் காணலாம்.

### சுமித்திரை

அறத்திற்கு அன்பு சார்பு என்பதைக் கோசலையும், மறத்திற்கும் அஃதே துணை என்பதைக் கைகேயியும்காட்டி நிற்க, மிகுதியும் பாத்திரப்படுத்தப் பெறாத சுமித்ரை தனக்குக் கிடைத்த மிகக் குறைந்த வாய்ப்பிலேயே அவ்விருவர்தம் அன்பினையும் விஞ்சும் அளவுக்குத் தன் பேருள்ளப் பெருமையைக் காட்டிவிடுகிறாள். மிகுதியும் பேசாத பாத்திரம், பேசப்படாத பாத்திரம், சுமித்திரை; எனினும் அவள் இலக்குவனுக்கு விடைதரும் முகமாகப் பேசிய ஒரு சிறு குறிப்பு இராம காதையின் முழுப் பொருண்மையை யும் நமக்கு உணர்த்திவிடுகிறது.மானுட நிலையில், "ஆரணியம் சென்றாலும் அரசன் (தசரதன்) இராமனே; அவன் இருப்பிடமே அயோத்தி;சீதையே தாய். நீ அனுபவிக்கப்போவதுதான் இராமராஜ்யம்" என்னும் வெளிப்படைப் பொருளும், "செம்மைதிறம்பிய இவ் அயோத்திதான் காடு; ஆணையிடும் ஆற்றலுடைய அரசன் இங்கு யாருமில்லை. மகனொடு காடு செல்ல அல்லது காடு செல்வதைத் தடுக்குமளவுக்கு அன்போ ஆற்றலோ உடையதாயர் இங்கில்லை. இங்கு நடைபெறுவது அரசாட்சியுமன்று" என்னும் குறிப்புப் பொருளும் தருவதாகச் சுமித்திரையின் பேச்சுஅமைந்திருப்பதைக் காணலாம். அவதார நிலையில், "உயிர்கட்குத் தாயும் தந்தையுமாக அவளும் அவனும்விளங்குகின்றனர். அவர்களின் இருப்பிடமே திருத்தலம் (அர்ச்சாவதாரம்). அங்கு நடைபெறுவதே அருளாட்சி. அவ் ஆட்சிக்கு ஆட்பட எழாது இங்குக் காலம் கழித்தல் உயிர்க் குற்றம்" என்னும்பொருளும் சுமித்திரையின் கூற்றில் தொனிக்கக் காணலாம்.

இனி வான்மீகம் கூறாத மற்றொரு கருத்தையும் கம்பன் படைத்த சுமித்திரை கூறுகிறாள். "அண்ணன்என்ற உரிமை உறவோடு நீ இராமனுடன் செல்லாதே. அவனுக்குத் தொண்டு செய் யும் அடியவனாகச் செல்" என்னும் சுமித்திரையின் அறிவுரை மேற்கூரிய இருவகை நிலைகட்கும்பொருந்தி நிற்பதாகக் கொள்ளலாம்.

## *2.4. இராமன் - குகன் சந்திப்பு*

### வான்மீகம்

இராமன் சுமந்திரனுடன் கங்கைக் கரையைச் சென்றடைந்ததும் இராமனின் தோழனும்சிருங்கிபுரத்து அரசனுமான குகன் என்னும் வேடர் தலைவன் அவனைக் காண வந்தான். இராமன் இலக்குவனுடன் சென்று அவனை எதிர்கொண்டு

*வரவேற்றுத் தழுவிக் கொண்டான். மரவுரி உடுத்திய இராம இலக்குவர்களைக்கண்டு வருந்திய குகன் அவர்களுக்குப் பலவகையான பொருட்களைக் கொண்டுவந்து தர, அவற்றை அன்புடன் நோக்கிய இராமன் துறவற வாழ்க்கையினர்க்கு அவை வேண்டாம் என்று விலக்கி நீரையுண்டு அன்றிரவுஉறங்கினான். இலக்குவனுடன் சேர்ந்து குகனும் இரவில் விழித்திருந்து காவல் செய்தான். மறுநாள்குகன் கொணர்ந்த ஓடத்தில் ஏறி மூவரும் கங்கையைக் கடந்தனர். (ii/50-52)*

***கம்ப ராமாயணம்***

*கங்கைக் கரையை அடைந்ததும் இராமனைக் காண விரும்பிய குகன் இலக்குவன் உதவியால் இராமனைக்கண்டு களிகூர்ந்து தான் கொணர்ந்த தேனையும் மீனையும் அவனுக்களித்தான், அவன் உபசரிப்பில்மகிழ்ந்த இராமன், அன்பினில் தந்த பொருள்களெல்லாம் தூய்மையானவை என்று கூறி மறுநாள் காலை ஆற்றைக்கடக்கஓடம் தருமாறு வேண்டினான். இராமனைப் பார்த்த கண்ணை மாற்ற விரும்பாத குகன் இராமனின் இசைவோடு இரவு முழுவதும் இலக்குவனுடன் இருந்து காவல் புரிந்தான். மறுநாள் மூவரையும் நாவாயில் ஏற்றிக்கரை சேர்த்துத் தானும் அவர்களுடன் வருவதாகக் கூறினான். அப்போது இராமன்.*

***என்னுயிர் அனையாய் நீ, இளவல் உன் இளையான், இந் நன்னுதலவள் நின்கேள்.........***

***முன்புளம் ஒரு நால்வேம் முடிவுளது என உன்னா அன்புள இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம். (ii. 7. 42-43)***

*என்று அவனை உடன்பிறந்தவனாக ஏற்றுக்கொண்டு 'வடதிசை வரும் அந்நாள் நின்னுழை வருகின்றேன்'என்று கூறி விடைபெற்றான். 791*

***அத்யாத்ம ராமாயணம்***

*வான்மீகத்துடன் பெரும்பாலும் ஒத்துச் செல்கிறது (சருக்..6)*

***துளசி ராமாயணம்***

*குகனுடன் நட்புக் கொண்டதும் சுமந்திரனை அயோத்தி செல்லுமாறு அனுப்பிவிட்டுக் கங்கைக்கரையை அடைந்து நாவாய் வேட்டுவன் ஒருவனை அணுகி நாவாயில் ஏற முற்படுகையில் தடுத்த அவன், "இராமன் தன் திருப்பாதங்களை நீரால் கழுவித் தூய்மை செய்தாலன்றி அவனை ஓடத்தில் ஏற்றமாட்டேன்; ஏனெனில், கல்லையே பெண்ணாக்கிய அவனுடைய திருவடிகள் மரமாகிய என் ஓடத்தைப் பெண்ணாக்கிவிட்டால்என் பிழைப்பு கெட்டுவிடும்" என்று கூற, புன்முறுவல் பூத்த இராமன் அவன் விருப்பத்திற்கு இணங்க,மூவரும் குகனுடன் கரையைக் கடக்கின்றனர் பின்னர்ப் பரத்துவாசரின் ஆசிரமம் அடைந்ததும் குகனைத்திருப்பி அனுப்பிவிட்டு மேலே வான்மீகி ஆசிரமம் நோக்கி நடக்க லாயினர்.*

**தொகுப்புரை**

ஏனைய இராமாயணங்கள் இப்பகுதியைச் சிறப்பித்துக் கூறவில்லை; கூறுமிடத்தும் வான்மீகத்தையோஅத்யாத்மத்தையோ பின்பற்றிச் செல்கின்றன. வான்மீகம், அத்யாத்மம், மானசம் ஆகிய மூன்றிலும் குகன் சிறுங்கிபேரச் சிற்றரசனாகவும், இராமனுக்கு உற்ற உயிர்த் தோழனாகவும் கூறப்படுகிறான்.குழந்தைப் பருவத்தில் இருந்தே இராமனும்குகனும் நண்பர்களாக இருந்து வந்தனர் என்று கீர்த்திவாகனின் வங்காள ராமாயணம் குறிப்பிடுகிறது. [51] ஆனால், கம்பஇராமன் குகனை முதன்முதலாகக் கங்கைக்கரையில் வனவாசத்தின்போதுதான்சந்திக்கிறான். "புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்" என்னும்நட்பிலக்கணத்தை இலக்கிய மரபாக உடைய கம்பன்,முன்பின் அறியாமல் உழுவலன் பினராதல் சிறப்புடைத்துஎனக் காட்ட விரும்பி அவர்களது நட்பின் உணர்ச்சியை விளக்க அவர்களை உடன்பிறந்தவர்களாகவேபடைத்துக்காட்டுகிறான். இராமன்பால் குகன் கொண்டிருந்த நட்பு கங்கையினும் ஆழமானது என்பதைக்கம்பன் காப்பியம் மிக அழகாக உணர்ச்சிபொங்கக் காட்டுகிறது. முன்னரே அறிமுகமான நண்பர்களாகக்காட்டும் பிற காப்பியங்களில் இத்தகைய உணர்ச்சியொத்த பக்தியைப்

51. shankar Raju naidu. p 44 போன்றதொரு நட்பினைக் குகனிடம் காண இயலவில்லை. தம்பியாக்கிக் கொள்ளும் தகவுடையவனாகப் பிற இராமாயணங்கள் தம் இராமனைவும் காட்டவில்லை, இங்கு

**ஏழை ஏதலன் கீழ் மகன்என்னாது இரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து மாழைமான் மடநோக்கி உன்தோழி உம்பி எம்பியென்று ஒழிந்திலை உகந்து தோழன் நீயெனக்கு இங்கொழியென்ற சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட ஆழிவண்ண நின் அடியிணை அடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்து அம்மானே.**
***(பெரிய திருமொழி 5.8.1)***

எனவரும் திருமங்கை ஆழ்வாரின் திருப்பாசுரம் கம்பனுக்கு வழி காட்டியாய் இருந்திருக்கக் காண்கிறோம். ஈண்டு ஆழ்வார் கருத்துக்கு எது மூலம் என அறிய இயலவில்லை.

### 3. பரதனின் ஏற்புநிலை

கேகயத்தினின்று வசிட்டனால் வரவழைக்கப்பெற்ற பரதன் அயோத்தியில் நிகழ்ந்தவற்றைக்கேட்டு மேற்கொண்ட நடவடிக்கைகளைப் பரதன் கைகேயியை நிந்தித்து அரசேற்க மறுத்தல், பரதன் -குகன் சந்திப்பு, பரதன் - இராமன் சந்திப்பு என்னும் படிநிலைகளில் ஆராயலாம்.

### 3.1 பரதன் அரசேற்க மறுத்தல்

கேகயத்தினின்று மீண்ட பரதன் கைகேயியால் விளைந்த விபரீதங்களைக்கேள்வியுற்று அவளைப் பலவாறு நிந்தித்துக் கோசலையிடம், தனக்கேற்பட்ட நிலையைக் கூறிப்புலம்பி நினைவிழந்தான். பின்னர் வசிட்டனின் ஆறுதலால் ஒருவாறு தெளிந்து தசரதனின் ஈமக்கடன்களைச் செய்த பின்னர், அரசேற்குமாறு கூறிய வசிட்டன் முதலானோரின் அறிவுரைகளை ஏற்காமல் இராமனைத்தேடிக் கொணர்ந்து அவனையே அரசனாக்க எண்ணி அமைச்சர் முதலானோருடன் காடு நோக்கிப் புறப்பட்டான்.

*இச்செய்தியை எல்லா இராமாயண நூல்களும் ஏறக்குறைய ஒரே மாதிரியாகக்கூறுகின்றன. பரதன் கோசலையைக் கண்டதும் அவள் கூறிய சில கடுஞ்சொற்களால் மனம் புண்பட்டபரதன் தன் மீது எந்தத் தவறும் இல்லை என்று கூறி ஊனுருகப் புலம்பி அழும் காட்சியை வான்மீகம்மிக விரிவாகப் பேசுகிறது. (சருக்கம் 7 5) 793*

*பரதன் சபதமிடுவதாக வரும் இப்பகுதி பிற நூல்களில் இவ்வளவு விரிவாகக் காணப்பெறவில்லை. அரச ஒழுகலாறு, நீதிநூற் கருத்துகள், நம்பிக்கைகள் போன்ற பல்வேறு உடன்காலச்சமுதாயச் செய்திகளை அறிந்துகொள்ள இப்பகுதி மிகவும் பயன்படுகிறது. மண்ணைவிட்டு விலகாத மக்கள்வாசனை இச் சருக்கத்தில் மீதூர்ந்து நிற்கக் காண்கிறோம்.*

*பரதன் தசரதனுக்கு ஈமக் கடன்களைச் செய்வதாக வான்மீகம் கூறுகிறது. அதனைஅடியொற்றி எல்லாமொழி இராமாயணங்களும் இச்செய்தியைக் கூறுகின்றன. கம்ப ராமாயணம் மட்டும்தசரதன் ஆணை காரணமாகப் பரதன் ஈமக்கடன்கள் செய்வதிலிருந்து விலக்கப்பட்டுச் சத்துருக்கனன் அவற்றைச் செய்வதாகக் கூறுகிறது. வான்மீக தசரதன், "இராமன் வனம் புகுதல் முறையென்று பரதன் ஏற்றுக்கொண்டால்,அவன் எனக்கு ஈமக்கடன்களைச் செய்தல் ஆகாது (II 12.94)" என்று கூறுகிறான். தசரதன் எதிர்பார்த்தபடியேபரதன் இராமன் காடு சென்றதையோ தனக்கு முடிசூட்டப்படுவதையோ ஏற்காதது மட்டுமல்ல; எதிர்க்கிறான்.எனவே, ஈமக்கடன்கள் செய்வதிலிருந்து அவனை விலக்க வேண்டிய அவசியம் இல்லை என்றுணர்ந்த வசிட்டன்அவனையே செய்யுமாறு பணிக்கிறான். பின்னர் வால்மீகியே, "இராமனது பட்டாபிடேகத்தைத் தடுத்தனையாகில், நீயும் பரதனும் எனக்கு ஈமக்கிரியைகள் செய்யவேண்டாம்" (II 14.17) என்றும் கூறுகிறார்.இங்குப் பட்டாபிடேகத்தைத் தடுப்பது கைகேயி, பரதன் அதற்குப் பொறுப்பாகான். எனவே, இராமனுக்குப்பதிலாகப் பரதன் முடிசூட்டிக்கொண்டால் அவன் எனக்கு ஈமக்கடன் செய்யக்கூடாது என்பது தசரதன்கருத்து. அதனாலும் பரதன் விலக்கப்படவில்லை என்பதை வான்மீகம் காட்டுகிறது.*

*கம்ப ராமாயணத்தில் தசரதன் வசிட்டனை நோக்கி இச் செய்தியைக் கூறுமிடத்து,*

***மன்னே ஆவான் அப்பரதன்தனையும் மகன்என்று உன்னேன், முனிவா, அவனும் ஆகான் உரிமைக்கு (II 4.51)***

*எனக் கூறுவதால் இங்கும் 'அரசனாக முடிசூட்டிக் கொள்ளவரும் பரதன்' தனக்குஉரிமை செய்யலாகாது என்னும் பொருள் தோன்றி நிற்கிறது. வால்மீகியின் தடுமாற்றத்தை உணர்ந்தகம்பன், தானும் குறிப்புப்பொருள் தோன்றக் கூறுகிறான். எனினும், வசிட்டன் பின்னர்ப்பரதனைத் தடுத்து விடுவதாகக் கம்பன் காட்டுகிறான்.*

*அத்யாத்மம் முதலான பிற இராமாயணங்கள் எல்லாம் வான்மீகியின் முதல்கூற்றை மட்டும் ஆதாரமாகக் கொண்டு பரதனே ஈமக்கடன்கள் செய்வதாகக் காட்டுகின்றன.* ***3.2 பரதன் - குகன் சந்திப்பு***

*படையுடன் கங்கைக் கரையை அடைந்த பரதனைக் கண்டு குகன் முதன்முதலில் ஐயுற்றுப்பின்னர்ப் பரதன் இராமனிடம் அன்பு பூண்டவனாய் வந்துள்ளான் என அறிந்ததும் மகிழ்ந்து, இராமன்தங்கியிருந்த இடம், இலக்குவனின் அரும்பண்புகள்*

*போன்றவற்றைப்பற்றி அவனுக்கு விளக்கிக் கூறி,பரதனும் அவன் படைகளும் தாயருடன் கங்கைக் கரையைக் கடந்து செல்ல உதவுகிறான்.*
*இந்நிகழ்ச்சியைவான்மீகியோடு பெரும்பாலும் ஒத்து ஏனைய இராமாயணங்களும் விளக்குகின்றன.*

*பரதனின் வரவுக்கான எண்ணம் பற்றிக் குகன் ஐயுற்றுக் கூறும் செய்திகள்வான்மீகத்திலும். அத்யாத்மத்திலும், துளசியிலும், பிற தெலுகு, கன்னட ராமாயணங்களிலும் சுருக்கமாகவும்கம்பனில் மிக விரிவாகவும் பேசப்படுகின்றன. மலையாளக் கன்னச ராமாயணம் இதைப் பற்றிக்குறிப்பாக எதுவும் கூறவில்லை. திபேத்திய ராமாயணத்தில் பரதனைப் பற்றிய குறிப்பே எதுவுமில்லை.தாய், மலேசிய, லாவோஸ் போன்ற தென்கிழக்காசிய நாட்டு ராமாயணங்களில் இந்நிகழ்ச்சிகள்சிறிதும் இடம்பெறவில்லை.*

*பரதனும் குகனும் சந்திக்கும் முதல் நிகழ்ச்சியைப் படைப்பதில் கம்பன் மிகவும் கவனஞ் செலுத்தியிருக்கக் காண்கிறோம். குகனைப் பற்றிச் சுமந்திரன் மூலம் ஓரளவு அறிந்திருந்தபரதன், அவன் தன்னைக் காண வந்திருக்கிறான் என்று அறிவிக்கப்பட்டதும், 'தன்னை வந்துபார்க்கட்டும்' என்று அதிகார மரபில் கூறுகிறான். பின்னர்க் காணிக்கைகளுடன் குகன் வந்ததும், "பரத்துவாஜர் இருப்பிடம் செல்லும் வழி தெரியவேண்டும். அதற்கு முன்னர் நாங்கள் கங்கையைக்கடக்கவேண்டும்" என்று கூறுகிறான். குகன் மறுமொழியாகத், "தாங்கள் கலைப்படவேண்டாம்; நாங்கள் உதவுகிறோம். அதற்கு முன்னர் நானறிய விரும்புது ஒன்று உண்டு. தாங்கள் இராமர்மீது அன்புள்ளவராய்வந்துள்ளீரா? தாங்கள் பெரிய சேனையுடன் வந்திருப்பதால் எனக்கு ஐயமுண்டாகிறது" என்றுவினவுகிறான் என்பது வான்மீகம் (சருக்கம் 85). பரதனின் சேனையைக் கண்டு ஐயுற்ற குகன் தன் படைகளைத் தயார் நிலையில் தென்கரையில் இருக்கச் செய்து, தவவேடம் கொண்டிருந்த பரதனின்குறிப்பறிய தான் மட்டும் நாவாயில் வடகரை வந்தடைந்தான். சுமந்திரனால் குகனைப் பற்றி அறிந்தபரதனும் சத்துருக்கனனும் கங்கைக் கரைக்கு வந்து குகனை வரவேற்கக் காத்திருந்தனர். கரையேறிய குகன்உடனே பரதன் கால்களில் வீழ்ந்து வணங்க, பரதனும் குகனடியில் வீழ்ந்து வணங்கி ஒருவரை 795*

*யொருவர் தழுவிக் கொண்டனர். தழுவின குகன், 'எய்தியது என்னை' என்று கேட்க,'தந்தை முன்னையோர் முறையினின்றும் தவறினன். அதனை நீக்கவும், மன்னனை அழைத்துப் போகவும்வந்தேன்' என்று பரதன் விடையிறுத்தான் என்பது கம்ப ராமாயணம் ( II 12.31-33).*

*வடகரையில் தன்னை வரவேற்க நின்றிருந்த பரதனையும் சத்துருக்கனனையும் கண்டமாத்திரத்திலேயே குகன் பரதனை முழுவதுமாகப் புரிந்து கொண்டான் என்பதை*

***நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான் அயல் நின்றான் தம்பியையும் ஒக்கின்றான் ; தவ வேடம் தலை நின்றான் துன்பம் ஒரு முடிவில்லை ; திசை நோக்கித் தொழுகின்றான் எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு என்றான் (II 12.30)***

*என்னும் ஒரே பாடலில் மிக அழகாக, மிக உருக்கமாகக் கம்பன் சித்திரித்துக் காட்டியிருக்கும் திறம் நினைந்து நினைந்து மகிழத்தக்கதாக அமைகிறது.*

*வான்மீகத்தில் செய்தியாகக்கூறப்படும் கருத்துகள் கம்பன் கையில் சொல்லோவியங்களாக மலர்ந்திருக்கக் காண்கிறோம்.பரதனின் வேடமே குகனுக்கு எல்லாவற்றையும் உணர்த்தி விடுகிறது. வான்மீக பரதன் இராமன் உறங்கியஇடத்தையும் பட்டதுயர்களையும் குகன்வழி அறிந்த பின்னரே தானும் மரவுரியணிந்து துறவுக்கோலம்பூணுகிறான். இதனைச் சற்று முன்னாக நகர்த்தி ஓர் உணர்ச்சி வெள்ளத்தையே குகன் உள்ளத்தில்பாயவிட்ட கம்பனின் கலை முதிர்ச்சியை என்னென்பது?*

*இவ்வாறே பரதனைக் குகன் புகழுமிடத்தும், தாயரைப் பரதன் குகனுக்கு அறிமுகப்படுத்துமிடத்தும்,கோசலை குகனுக்கும் பரதனுக்கும் தெளிவுரை கூறுமிடத்தும் வெளிப்படும் கம்பனின் தனிப்பட்ட கவித்திறம்விரிவஞ்சி இங்கு விளக்கப்படவில்லை.*

### *3.3 பரதன் - இராமன் சந்திப்பு*

#### **வான்மீகம்**

*சேனையுடன் வரும் பரதனைக் கண்டு வெகுண்டு போர்க் கோலம் பூண்டெழுந்தஇலக்குவனுக்கு இராமன் பலவாறு அறிவுரை கூறி இறுதியாக,*

*உடன்பிறந்தவன், தனக்கு உயிரான உடன்பிறந்தவனை எவ்வாறு கொல்லுவான்? நீ இராச்சியத்தின் பொருட்டு இவ்வாறு கூறுவாயானால் நான் பரதனைக் கண்டவுடன் இராச்சி
யத்தை உனக்குக் கொடு' என்று கூறுவேன். பரதனும் சரியென்றே சொல்லுவான் (சருக்கம் 97).*

*என்று கூறியதும் இலக்குவன் சீற்றம் தணிந்து சமாதானமானான். பின்னர்ப் பரதனும் சத்துருக்கனனும் வந்து இராமனைத் தொழ அவனும் அவர்களை அன்புடன் தழுவி அணைத்துக் கொண்டுபரதனுக்கு அரச நீதியை மிக விளக்கமாகப் போதிக்கிறான். அதன் பின்னர்த் தசரதன் மறைவு கேட்டு இராமனும் சீதையும் வருந்திப் புலம்பி ஈமக்கடன்களைச் செய்கின்றனர். பின்னர் இராமன் ஒருவாறுமனந்தெளிந்து வசிட்டன் முதலானோரைச் சந்தித்துப் பேசுகிறான். அப்போது இராமனை அயோத்திக்குத்திரும்பி அரசை ஏற்றுக்கொள்ளுமாறு பரதன் வேண்ட, தந்தையின் கட்டளையை மறுத்தல் அறமாகாது ; எனவே, நான் இங்கிருத்தலே சரி ; நீ அரசனாக இரு என்று இராமன் கூறுகிறான். இதனை ஏற்றுக்கொள்ளாதபரதன், தசரதன் பிழையையும், கைகேயியின் பிழையையும் நீக்கி அவர்களை அறம் பிழையாதவர்களாகச்செய்யவேண்டுமானால், நீ மீண்டு வந்து அரசனாதலே தக்கது என்று இராமனை வற்புறுத்துகிறான் (சருக்கம்104-105). இதனைக் கேட்ட இராமன், "உத்தம குணமுடையவனே, இதில் தந்தையின் பிழையுமில்லை ; தாய் கைகேயியின் பிழையுமில்லை ; நம் தந்தையார் உம் தாயான கைகேயியை மணஞ்செய்துகொள்ளும்போது, "தங்கள் பெண்வயிற்றிற் பிறக்கும் புதல்வனுக்கு இராச்சியத்தைக் கொடுக்கிறேன்" என உன் பாட்டனாருக்கு வாக்களித்திருக்கிறார்.* [52] *பின்னர் ஒரு சமயம் யுத்த சேவைக்கு மகிழ்ந்துஉன் தாயாருக்கு நம் தந்தையார் இரண்டு வரங்கள் தந்துள்ளார். அவற்றின்படிதான் நான் காட்டுக்குவந்துள்ளேன். உனக்கு அரசாட்சியும் விதிக்கப்பட்டுள்ளது. எனவே, இருவர் மீதும் பிழையில்லை.மூத்தவன் என்னும் வாதத்தை விட்டுவிட்டு அயோத்தி சென்று தம்பி சத்துருக்கனனின்*

*உதவியுடன் நல்லாட்சிநடத்துவாயாக என்று இராமன் இறுதியாக் கூறுகிறான் (சருக்கம் 107). மூத்தோன் அரசாள்வதே முறைஎன்று கூறி வற்புறுத்திய வசிட்டன் கூற்றையும் இராமன் ஏற்றுக்கொள்ளவில்லை. இறுதியாகப் பரதனின்வேண்டுகோட்கு இணங்கித் தன் திருவடிகளைப் பொற்பாதுகைகளில் பதித்துக் கொடுக்கவே, பரதன்அவற்றைப் பெற்றுக்கொண்டு அவற்றின் பிரதிநிதியாக ஆள்வேன் என்று கூறிவிட்டு வனவாசம் முடிந்ததும்அயோத்திக்கு இராமன் திரும்பவில்லையாயின் தீப்*

*52. ****   (Baroda edition II. 99.3; Dharmalaya edition II. 107.3)   797*

*பாய்ந்து உயிர்விடுவேன் என்று சபதமுரைத்து அயோத்திக்குத்திரும்பினான் (சருக்கம் III, 112) என்று வான்மீகம் காட்டுகிறது.*

## *அத்யாத்ம ராமாயணம்*

*பரதனின் வேண்டுகோளைக் கேட்ட இராமன், 'பரதனே, நம் தந்தையார்கைகேயியின் வார்த்தைகளில் மயங்கியோ, உணர்வு அற்ற நிலையிலோ நமக்குக் கட்டளைஇடவில்லை. தன் வாக்கைக் காப்பாற்றுவதன் பொருட்டு எனக்கு வனவாசமும் உனக்கு நாட்டரசும்கொடுத்தார். நான் தந்தையின் கட்டளைக்கு அடிபணிந்து நடக்கையில் நீ மட்டும் அவர் கட்டளையைமறுக்கலாகுமா?" என்றான். உடனே பரதன், "அப்படியானால் நானும் தங்களுடன் வனவாசம் செய்துஇலக்குவனைப் போல் தொண்டு செய்வேன். இல்லையேல் உபவாசம் இருந்து உயிரை விடுவேன்" என்று கூறித் தருப்பைப் புல்லைப் பரப்பிக் கிழக்குமுகமாக உட்கார்ந்துவிட்டான். பரதனின் உறுதியைக்கண்டு பிரமித்த இராமன் வியப்பு மேலிட்டு அருகிலிருந்த வசிட்டனை நோக்கினார். அவரும்பரதனுக்கு இராமனுடைய அவதார நோக்கை விவரித்துக் கூறினார். வசிட்டன் கூறியவற்றைக் கேட்ட பரதன் வானவர் நோக்கத்தை அறிந்து கொண்டாலும் இராமனை நோக்கி, "வனவாச காலம் முடிந்ததும்அயோத்தி வந்து முடிசூட்டிக் கொள்வதாக வாக்களிக்க வேண்டும்" என இரந்து பெற்றதும்பொன்னாலாகிய இரத்தினங்கள் அழுந்தப்பெற்ற பாதுகைகளில் இராமனின் திருவடிகளைப் பதித்துவாங்கிக்கொண்டு அவற்றின் பிரதிநிதியாய் ஆள்வதாகக் கூறி அயோத்தி திரும்பினான்.* [53]

## *மலையாள ராமாயணங்கள்*

*கன்னச இராமாயண இராமன், தந்தையைப் பொய்யனாக்கி நரகம் புகுவித்தல்அவனுடைய மக்களாகிய நமக்கழகாகுமோ? எனவே, அவராணைப்படி நீ நாடாள்வதும் நான் காட்டில்வாழ்வதுமே நமக்கு அறமாகும் என்று கூறியதும் வேறு விவாதம் எதுவுமின்றிப் பரதன் ஒருப்பட்டுபாதுகைகளைப் பெற்று அயோத்தி மீண்டான். எழுத்தச்சன் ராமாயணம் அத்யாத்மத்தைப்பின்பற்றிச் செல்கிறது.*

## தொரவெ இராமாயணம்

*குமார வான்மீகியின் படைப்பில், இலக்குவன் பரதன் மீது கொண்ட சினத்தை மாற்றும் வகையில் இராமன் அவனை நோக்கி,*

*53. நடேச சாஸ்திரி, பக். 122-125 "தம்பி, சூரியன் மேற்கில் உதித்தாலும் உதிக்கலாம். ஆனாலும், பரதன் நமக்குப் பகையாகமாட்டான். உன் கோபத்தை அடக்கு" என்று*

*அறிவுறுத்த அவனும் அடங்கினான்.இந்நிலையில் பரதன் தம்பியொடும் தாயரொடும் அங்கு வந்து இராமன் காலடியில் வீழ்ந்துவணங்கினான். கண்ணீர் சொரிய நின்ற தாயரைக் கண்ட இராமன் உங்களுடைய ஓலை பாக்கியம் கழிந்ததோ?'' என்று வினவித் தந்தையின் மறைவுக்காக அழுது புலம்பினான்.*
*ஈமக்கடன்கள்நிறைவேறியதும் பரதன் இராமனை வணங்கித் ''தந்தையும் தாயும் நீரே, உடனே அயோத்திக்கு வந்துஅரசை ஏற்றுக் கொண்டு எங்களை மகிழ்வித்தருள்க. இல்லையேல் உன் தம்பியருள் ஒருவன் இல்லாமற்போவான்'' என்று கூறினான். வசிட்டன், சுமந்திரன் முதலானோர் பரதன் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தியும் இராமன் இணங்கவில்லை. அப்போது கைகேயி கண்ணீர் சொரிந்தவண்ணம் களங்கமற்ற மனத்தினளாய் இராமனைப் பார்த்து, ''நான் அறியாமல் செய்த குற்றத்தைமறந்து அரசை ஏற்றுக்கொள் ; நாட்டைக் காப்பாற்று மகனே'' என்று வேண்டியவாறே இராமனைத்தழுவிக் கொண்டாள். இராமன் கைகேயியை நோக்கி, ''நான் தங்கள் கட்டளையை எப்போதும் மறுத்ததில்லை. ஆனால், இப்போது தங்கள் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டால் தம் சொல்லைக்கடந்ததாகத் தந்தையார் வருந்துவார். நம்மரசர் வாய்மையாளர் அல்லவா'' என்று பதிலிறுத்தான்.பின்னர்ப் பரதன் இராமனின் பாதுகைகளைப் பெற்று அயோத்தி மீண்டான். (II 6.30)*

***துளசி ராமாயணம்***

*இராமனுக்கும் பரதனுக்கும் இடையில் நடக்கும் விவாதத்தைத் துளசி ராமாயணம் வான்மீகத்தைப் போலவே பெரும்பாலும் கூறுகிறது. இந்திரன், விசுவாமித்திரன், சனகன்முதலானோர் வருகையைத் துளசிதாசர் இவ்விடத்தே குறிப்பிடுகிறார். பரதன் மாயையின் செயலால்அவதார நோக்கமறிந்து இராமனை மேலும் வற்புறுத்தாமல் இராமனின் திருவடித் தலத்தைப்பொற்பாதுகைகளில் பதியப்பெற்று அயோத்தி மீள்கிறான்.*

***கம்ப ராமாயணம்***

*பரதனின் சேனையைக் கண்டு இலக்குவன் அடைந்த சீற்றத்தைப் பலவகையானஅறிவுரைகளால் தணித்த இராமன் முடிவாக,*

***என்வயின் நேய நெஞ்சினால்..........தருமத்தின் தேவை செம்மையின் ஆணியை அன்னது நினைக்கல்ஆகுமோ (II 13.44,57)***
*799*

*என்று கூறி ஆற்றுவித்தான். இதற்குள் தன்னை வந்தடைந்து வணங்கிய பரதனைத் தழுவிக்கொண்ட இராமன் பரதனை நோக்கி, 'ஆளுடை ஐயன் வலியனோ?' எனத் தந்தையின்நலம் விசாரிக்கிறான். தசரதன் இறப்பினை அறிந்ததும் பலவாறு புலம்பி அழுதுப் பின் தேறிஈமக்கடன்கள் ஆற்றித் துயரத்தே ஆழ்ந்திருந்தான். மறுநாள் பரதனை நோக்கி, ''அரசாள்வதை விடுத்துத் தவவேடம் தாங்கி வந்தது ஏன்?'' என்று வினவ,*

***உந்தை தீமையும் உலகு உறாத நோய் தந்த தீவினைத் தாய் செய் தீமையும்... நீங்க மீண்டு அரசு செய்க (103)***

*என்று பரதன் வேண்டுகிறான். அப்போது இராமன் தாய் பெற்ற வரத்தால் தந்தையிட்ட ஆணையின்படி நான் வனம் நண்ணினேன். நீ அண்ணல் ஏவலின் திறம்பி இங்கு வந்ததுஅறமாகுமா என்று வினவி,*

***வரன் நில் உந்தை சொல் மரபினால் உடைத் தரணி நின்னது என்று இயைந்த தன்மையால் உரனின் நீ பிறந்து உரிமை யாதலால் அரசு நின்னதே ஆள்க (111)***

*என்று பணித்தான். அதற்குப் பரதன்,*

***முன்னர் வந்து உதித்து, உலகம் மூன்றினும் நின்னை ஒப்பிலா நீ பிறந்த பார் என்னதாகில் யான் இன்று தந்தனன் மன்ன போந்து நீ மகுடன் சூடு (112)***

*என மாற்று விடை கூறினான். அதைக் கேட்ட இராமன், அரசு நீ தர என்னதாயினும், நான் ஏற்ற ஆண்டுகள் ஏழினொடு ஏழும் காட்டில் வாழ்ந்து கழிக்காமல் தீருமோ? யானிருக்கவே நீ ஆளலாமா என்று சிந்திக்காதே. மன்னவன் இருக்கும்போதே மகுடன் சூடு என்றஆணையைக் கடக்க அஞ்சி நான் ஏற்றுக்கொள்ளவில்லையா? அதுபோல் நீயும் என் ஆணையை மறுக்காமல்நான் வரும்வரை நாட்டையாண்டுகொண்டிரு என்று முடிவாகக் கூறிப் பரதனை ஒருப்படுத்தான். அப்போதுவசிட்டன், ''எனது ஆணையெனக் கருதி, உனக்குரிய நாட்டை வந்து ஆள்வாயாக'' என்று கூறியும் இராமன்ஏற்க மறுத்துவிடுகிறான். அந்நிலையில் செய்வது அறியாது வசிட்டன் திகைத்துநிற்க, 'அன்னதேல்,ஆள்பவர் ஆள்க நாடு. நான் உன்னுடன் வனத்தில் வாழ்வேன்' என்று கூறி விவாதத்திற்குமாற்றில்லாத முடிவினைக் கூறினான் பரதன். அப்போது தம் செயல் நிறைவேறாத சூழலையுணர்ந்தஇமையவர்*

## அறநிலைத் தலைவர் முன்னுரை

ஒரு தலைமுறைக்கு மேலாக ஒப்பற்ற இக் காப்பியத்துக்கு விளக்கமான உரைப் பதிப்புகள்விற்பனைக்குக் கிடைப்பதில்லை. ஆகையால், கோவைக் கம்பன் டிரஸ்ட் இத் திருப்பணியை மேற்கொண்டது.

கம்ப ராமாயண விளக்க உரை நிர்வாகக் குழுவிலும் நிதிக் குழுவிலும் பங்கேற்று, இவ்வுரைவெளிவரக் கம்பன் அறநிலைக்கு உறுதுணை புரிந்த நண்பர்களுக்கு நன்றி.

இந்த உரைத்திட்டம் உருப்பெறுவதற்குக் கடைகாலிட்ட செந்தமிழருட் செம்மல் டாக்டர் பி.எஸ்.ஜி.ஜி. கோவிந்தசாமி அவர்கள் இத்திட்டத்தின் தொடக்கத்திலேயே இறைவன் திருவடிஅடைந்துவிட்டார். அவருடைய வாழ்க்கைத் துணைவியார் திருமதி பிரேமா கோவிந்தசாமி அவர்கள்தம் கணவரின் ஆத்மார்த்தமான இந்தத் திருப்பணிக்கு மிகவும் ஆதரவாக இருந்து, நிதிக் குழுஉறுப்பினர் களைப் போலவே பெருங்கொடை வழங்கினார்கள் செந்மிழருட் செம்மலின் ஆத்ம சாந்திக்குஇதைவிடச் சிறந்த கைங்கரியம் வேறு இல்லை. திருமதி பிரேமா கோவிந்தசாமி அவர்களுக்கு உளமார்ந்தநன்றி

இந்தத் திட்டத்தின் வரலாறு முதலிய விவரங்கள் பாலகாண்டப் பதிப்பிலேயே விரிவாகத்தரப்பட்டுள்ளன.

ஆயிரம் பக்கங்களுக்கு மேலாக உள்ள நூலை ஒரே தொகுதியாக வெளியிட்டால் மிகப் பெரியதாகவும்கனமாகவும் இருப்பதால் கையாள்வதற்குக் கடினமாக உள்ளது. எனவே, இக்காண்டம் இரண்டு பகுதிகளாகக் கட்டுவேலை செய்யப்பட்டுள்ளது. இதனால் விலையேற்றம் தவிர்க்க முடியாததாயிற்று. தவிர்க்கமுடியாத காரணங்களால் அச்சிடும் பிரதிகளின் எண்ணிக்கையையும் குறைக்க நேர்ந்தது. இதனாலும்விலையேற்றம் ஏற்பட்டது. முன் பதிவு செய்தவர்களுக்கு மட்டும் முன்னமே ஏற்றுக் கொண்ட விலைக்குஅயோத்தியா காண்டமும் ஆரண்ய காண்டமும் வழங்கப்படும்.

உரையாசிரியர்களின் ஒத்துழைப்பே இச்சீரிய பணிக்கு ஆதாரம். பதிப்பாசிரியர் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் அவர்களுக்கும் சிறப்பாக அச்சுப் பணிபுரிகின்ற காந்தளகத்தாருக்கும்நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

*1994, பிப்ரவரி* **ஜி.கே. சுந்தரம்** *தலைவர்*
*கம்பன் டிரஸ்ட், கோவை 801*

***"தன்பரிசும் வினை இரண்டும் சாரும்மலம் மூன்றும்அற அன்புபிழம்பாய்த் திரிவார்" (பெ.ப. 803)***

*என்று கண்ணப்பரைப்பற்றி சேக்கிழார் பின்னே 12 ஆம் நூற்றாண்டில் பாடுவார். அந்தப்பாடலுக்கு முழு இலக்கணமாக முன்னர் குகனை வகுத்துவிட்டான் கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன்.*

*குகன் என்ற பாத்திரம் மறுபடியும் விடைகொடுத்த படலத்தில் தான் காணப்படுகிறது என்றாலும், மறக்க முடியாத பாத்திரமாக தசரதனுடைய பிள்ளைகள் நால்வரும் வளர்ச்சி அடைந்து ஐவராக வளர்வதற்குமுதல் இடம் கொடுத்தவனாக அமைகின்றான். ஆகவே, குகனுடைய பாத்திரம் அயோத்தியா காண்டத்தில்அமைந்துள்ள அற்புதமான ஒரு படைப்பு ஆகும்.*

*கல்வி கேள்வி அரசியல் நுணுக்கங்கள் ஆகியவற்றை அறியாதவனாகிய குகன் பரதனுடைய சேனைவருகிறது என்று கேள்விப்பட்டவுடன் 837*

***"ஆழ நெடுந் திரை ஆறு கடந்து இவர் போவாரோ?" (2317)***

*என்று சினக்கின்றான்.*

*இப்படி முன்பின் தெரியாத ஒருவனிடம் பகை கொள்ளக் காரணம் யாது என்று சிந்தித்தல் வேண்டும்.*

*குகனைப் பொறுத்தமட்டில் பரதனை முன்பின் அறியாதவன். ஆனால், பரதன் என்ற பெயருடையஒருத்தன் சூழ்ச்சியின் காரணமாக அரசைப் பிடுங்கிக்கொண்டு இராகவனைக் காட்டிற்கு அனுப்பிவிட்டான் என்ற எண்ணத்தில் குகன் இருக்கிறான். 'இந்த எண்ணம் அவனுடைய மனத்தில் எப்படித் தோன்றிற்று? இதற்கு யார் காரணம்?' என்று ஆராய்வோமேயானால் கம்பநாடன் அயோத்தியா காண்டத்தில் அதற்குஇடம் வகுத்துத் தருகின்றான்.*

*இராகவனும், பெருமாட்டியும் உள்ளே உறங்க வெளியே இளைய பெருமாள் காவல் காத்துக்கொண்டுநிற்கின்றான். அவனோடு உடன் நிற்கின்றான் குகன். அந்த நிலையில் இராகவன் எப்படி அரசைத்துறந்து வந்தான் என்று கேட்க இலக்குவன் சொல்கிறான்.*

*முன்கோபக்காரனாகிய இலக்குவன் பரதனை இன்னார் என்று புரிந்து கொள்ளவில்லை. புரிந்துகொள்ளமுயலவும் இல்லை. அதற்குப் பதிலாகக் கைகேயியின் சூழ்ச்சியில் அவனும் ஒரு பங்குதாரன்என்றுதான் நினைத்திருந்தான். ஆகவே, தன் னுடைய மனத்தில் தோன்றிய கசப்புணர்ச்சியைப்பரதன் மாட்டுக்கொண்ட காழ்ப்புணர்ச்சியை, கோபத்தை முழுவதுமாகக் குகனிடம் விளக்கிவிட்டான்.ஆகவே, பரதனைப் பற்றி முன்பின் அறியாதவனாகிய குகன், இந்தப் படத்தைத்தான் மனத்தில் வைத்துக்கொண்டிருக்கிறான்.ஆகவே,*

***"ஆழ நெடுந் திரை ஆறு கடந்து இவர் போவாரோ" (2317)***

*என்று சினக்கின்ற சூழ்நிலை உருவாகின்றது.*

ஆயினும் தன்னைக் காண வருகின்ற பரதனைத் தூரத்தில் இருந்து பார்த்தபோது, பரதன் அணிந்திருக்கிறதவக் கோலத்தையும், அவன் முகத்தில் தேங்கியிருக்கின்ற துக்கத்தையும் பார்த்த போதே

***"நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான், அயல். நின்றான் தம்பியையும் ஒக்கின்றான்"*** *(2332)* என ஓரளவு பரதனை அடையாளம் காணக்கூடிய சூழ்நிலைக்கு வந்து விடுகின்றான்.

பரதனைப் பற்றி அவன் கேள்விப்பட்டதை வைத்துக்கொண்டு பரதன் எத்தகையவனாக இருந்திருத்தல்வேண்டும்என்று நினைத்திருந்த நினைவுக்கும், நேரிடையாகத் தான் பரதனைக் காணும் போது மனத்தில் தோன்றியநினைவுக்குமுள்ள மாறுபாட்டை நன்கு உணர்ந்துவிட்டவனாகிய குகன் உடனே

***"எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு"*** *(2332)*

என்று பேசுகின்றான்.

அதுமட்டுமல்ல. பின்னர்ப் பரதனோடு உரையாடிக்கொண்டிருந்த நேரத்தில், அவனுடன் இருந்துபரதனுடைய பண்பு நலன்களை எல்லாம் அறிந்துகொண்டவனாக, தன்னுடைய நுண்மாண் நுழைபுலம் காரணமாக அற்புதமாக எடைபோட்டு

***"ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ, தெரியின் அம்மா!"*** *(2337)*

என்று சொல்லுகின்ற அளவுக்குப் பரதனை உயர்த்திவிடுகின்றான் என்பதை அறிய முடிகின்றது.

ஆக அயோத்தியாகாண்டத்தில் - வால்மீகத்திலிருந்து கொஞ்சம் மாறுபட்ட முறையில், ஈடு இணையில்லாப் பாத்திரமாக தமிழகத்தில் முதன் முதலாகக் காணப்பட்ட பக்தி இயக்கத்தின்அல்லது அன்புவழி இறைவழிபாட்டின் அடிப்படையில் குகன் என்ற ஒரு பாத்திரத்தைப் படைத்துக் கம்பன்அதில் முழு வெற்றி அடைகின்றான் என்பதை அறிய முடிகின்றது.

இனி அடுத்தபடியாக அயோத்தியா காண்டத்தில் எஞ்சி நிற்கின்ற பாத்திரம் பரதனாவான்.முதல் மூன்று நான்கு படலங்கள் தாண்டி பள்ளிபடைப் படலத்தில்தான் பரதனைச் சந்திக்கின்றோம்.பாட்டன் வீட்டில் இருந்த அவனைத் தூதுவர்கள் சென்று அழைத்து வருகின்றார்கள். அயோத்திக்குள்நுழைகின்ற வரையில் தவறு ஏதும் நிகழ்ந்ததாகப் பரதனுக்குத் தெரியவேயில்லை. ஊருக்குள் நுழைந்ததும்ஒளி இழந்து நிற்கும் ஊர் நிலை கண்டு ஆச்சரியப்பட்டு, நேரே தசரதனைக் காணச் செல்கின்றான். தசரதன் இல்லாதபோது தாயைக் கண்டு விசாரிக்கின்றான். அப்போது - தான் தந்தை 'வானத்தான்' என்றும் அண்ணன் 'கானத்தான்' என்றும் அறிந்துகொள்ளுகின்றான். இந்த நிலையில் பரதனிடம் *839*

இருந்து வருகின்ற ஆவேசமான சொற்கள் அவனுடைய இயல்புக்கு மாறுபட்டவை. அதற்குரிய காரணம்வேறு எதுவும் இல்லை. தாய், தந்தை, குரு, தெய்வம் ஆகிய அனைத்தும் இராமனே என்று நினைக்கின்றபரதனுக்கு இராமன் கானம் போயினான்

*என்று கேள்விப்பட்டவுடன் எல்லையில்லாத சினம் வருவது நியாயமானதாகும்.அதுமட்டுமல்ல.*

*'வரம் கொண்டு அவனைக் காட்டுக்குப் போக்கினேன்' என்று கைகேயி பேசுவதைக் கேட்டபோதுஅவனுடைய சினம் எல்லையில்லாமல் வளர்கிறது. ஆகவே, இயல்பாக எல்லையற்ற பண்புடையவனாய் அடக்கத்தின்உறைவிடமாக இருக்கின்ற பரதன் இப்போது இவ்வளவு சினம் கொள்ளும்போது நம்மையும் அறியாமல் ஒருகுறள் நினைவுக்கு வருகின்றது.*

***"குணம் என்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்த லரிது" (திருக்குறள் 29)***

*தன் எதிரே நின்று, மனத்தில் சிறிதும் கலக்கம் இல்லாமல், 'நான் தான் இராமனைக்காட்டுக்குப் போக்கினேன். தந்தை 'வானத்தான் ஆனான்' என்று சொல்லுகின்ற ஒருத்தியைக்கொன்று விட வேண்டுமென்று பரதன் நினைப்பதில் தவறு இல்லை. ஆனால், அந்த நிலையில்கூடத் "தாய்என்னும் பெயருக்காக உன்னைக் கொல்லாமல் விடவில்லை. என்னுடைய முன்னவனாகிய இராகவன் முனியும்என்று அஞ்சின காரணத்தால்தான் உன்னைக் கொல்லாமல் விடுகின்றேன்" என்று கூறுகிறான் - தன்சினம் எல்லை மீறிப் போகாதபடி, எல்லை கடந்துபோய் ஊறு விளைக்காதபடி அவன் இராமனிடத்தேகொண்டிருந்த அன்பு, பக்தி, பண்பாடு குறுக்கே நின்று காக்கின்றது.*

*ஆகவே, பரதனை முதன்முதலாக நாம் பார்க்கின்றபோது அளவுகடந்த சினத்தின் எல்லையிலே நிற்கின்றபாத்திரமாகத்தான் கம்பன் படைத்துக் காட்டுகிறான்.*

*தன் தாயாகிய கைகேயியைக் காணும்போது சினத்தின் எல்லையிலே நிற்கின்ற பரதன், அடுத்துப்பெரிய தாயாராகிய கோசலையைப் பார்க்கும்போது கோபம் கொஞ்சம் கொஞ்சமாகத் தணிந்துவிட,சோகத்தின் எல்லைக்கே சென்று விடுகின்றான்.*

***"கைகயர் கோமகள் இழைத்த கைதவம், ஐய! நீ அறிந்திலை போலுமால்?" (2197)***

*என்று கோசலை பேசியது அவனுடைய மனத்தைப் புண்ணாக்கிவிட்டது. பாட்டனுடைய ஊருக்குச் சென்று பலநாள் தங்கியிருந்த தன்னைப் பார்த்து, 'கைகேயி செய்தகாரியத்தில் உனக்குப் பங்கு இல்லையோ என்று கோசலை கேட்டது அவனிடம் மாபெரும் துயரத்தைத் தோற்றுவித்துவிட்டது.*

*ஆகவே, பல பாடல்கள் வஞ்சினம் கூறுவது போல, 'அதனை நான் அறிந்திருப்பேனேயானால் இன்னஇன்ன பாவத்தைச் செய்தவர்கள் போகின்ற நரகத்திற்குப் போவேனாகவும், ' எனப் பரதன்பேசும்போது கோசலை பதறிவிடுகின்றாள். 'இவ்வளவு தூய மனம் படைத்தவனையா நாம் சந்தேகப்பட்டுவிட்டோம்' என்று நினைக்கின்றாள்.*

*எனவே, பரதனைப் பொறுத்தமட்டில் ஒரு புதுமை என்னவென்றால் பெற்ற தந்தையாகிய தசரதன்பரதனை அறியவில்லை; பெற்ற தாயாகிய கைகேயி அவனை அறியவில்லை; வளர்த்ததாயாகிய கோசலைகூடமுதலில் அவனை நன்கு*

*அறிந்துகொள்ளவில்லை; உடன்விளந்தவனாகிய இலக்குவனும் அவனை அறிந்து கொள்ளவில்லை. இலக்குவனைப் பொறுத்தமட்டிலும் எல்லையற்ற கோபம் உடையவனாய், பரதனை வெறுக்கின்றவனாய், குகனுடைய மனத்தில்கூட தன்னுடைய முரண்பட்ட கருத்தைப் புகுத்துபவனாகத்தான் இருக்கின்றான். இந்தநிலையில் கூட்டுக்குள் வாழும் பறவை போன்று பரதன் வாழ்கிறான். ஆக புதிரான அந்தப் பாத்திரத்தை உள்ளபடி எடைபோட்டவர்கள் விசுவாமித்திரனும் இராகவனும் ஆவர்.*

*இனி அரசவையைக் கூட்டிய முறையில் வசிட்டன், 'நீ பட்டத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று சொல்லும்போது பரதன் துடித்துவிடுகின்றான்.*

*'மாபெரும் தவறு இழைத்துவிட்டார் தந்தை. அதைப் போக்கி மன்னரைக் கொணர்வதற்காக நான்கானம் போகின்றோன்' என்று சொல்லும்போது பரதனிடத்தில் இதுவரையிலும் யாரும் எதிர்பார்க்காத புதுமை தோன்றுவதைக் கண்டு அனைவரும் வியப்படைகின்றனர்.*

*பரதன் பட்டத்தை ஏற்றுக்கொள்வானா, மாட்டானா என்ற ஐயத்தில்தான் மக்கள் இருந்தார்களேதவிர, இப்படி ஒரு வழியில் 'நான் கானகம் சென்று அண்ணனை அழைத்துவரப் போகின்றேன். "எல்லோரும் புறப்படுக" என்று ஆணையிடுகின்ற அளவுக்கு அவன் போவான் என்று யாரும் நினைத்ததாகத் தெரியவில்லை. ஆகவே, அவன் இந்த முடிவுக்கு வந்தபோது அயோத் 841*

*தியா நகரம் முழுவதும் அவன் மாட்டு எல்லையற்ற மதிப்பும், மரியாதையும் கொண்டதாகப் புலப்படுவதைக் காணுகின்றோம்.*

*பரதன் புறப்பட்டுச் செல்கின்றான். குகனைச் சந்திக்கின்றான் அந்தச் சந்திப்பு எவ்வாறுநிகழ்ந்தது என்பதை முன்னரும் பார்த்தோம். குகன் இவனை அறிந்துகொள்வதற்கு வாய்ப்புகள் கிடைத்தபோது*

***"ஆயிரம் இராமர் நின் கேழ் ஆவரோ?" (2337)***

*என்று குகனால் பாராட்டப்படுகின்ற அளவுக்குப் பரதனுடைய பண்பாடு வெளிப்படுகின்றது.*

*இனி பரத்துவாசனுடைய ஆசிரமத்தில் படைகள் எல்லாம் விருந்துண்ண காயும், கனியும், கிழங்கும்அருந்தித் தரையிலே படுத்துத் தன்னுடைய அண்ணன் மேற்கொண்ட தவத்தைத் தானும் மேற்கொண்டவனாகப்பரதன் காட்சியளிக்கின்றான்.*

*சித்திரகூடத்தை நெருங்குகின்ற காலத்தில் அங்கே படைகள் வரும் தூசிப்படலத்தைப் பார்த்துஇலக்குவன், பரதன் போருக்கு வருகிறான் என்று சொல்லி யுத்த சன்னத்தனாகிறான். அப்போதுபடைகளை எல்லாம் ஓர் எல்லையில் நிறுத்திவிட்டு, தவக்கோலத்தோடு நடந்து வருகின்ற பரதனைப் பார்த்தபோது இலக்குவன் ஆடிப்போகிறான்.*

*நெருங்கி வந்த பரதனுக்கும், இராமனுக்கும் நடைபெறுகின்ற உரையாடலில் இருவரைப் பற்றியும்அறிந்துகொள்ள முடிகின்றது. அன்பின் எல்லையில்*

*நிற்கின்றவனும், மாபெரும் தவற்றைத் தசரதன்இழைத்துவிட்டான், அதை எப்படியாவது போக்க வேண்டுமென்கிற முடிவோடு இருக்கின்றவனும் அது முடியாவிட்டால்இராமனைப் போலத் தவக்கோலம் பூண்டு காட்டிலே தங்கிவிட வேண்டும் என்ற முடிவோடு வந்தவனுமாகியபரதன் ஒரு புறம் அமைதியே வடிவாக நடப்பனவற்றையெல்லாம் சாட்சி மாத்திரையாகப் பார்த்துக்கொண்டு, இடையே வருவனவற்றுக்கு எவ்விதத்தடையும் செய்யாமல் 'ஆருயிர் முறைவழிப்படூஉம்' என்று கருதும்இராமனையும் ஒரு சேரக் காணுகின்றோம்.*

*தசரதன் இறந்தது முதலான செய்திகளை எல்லாம் கேட்டு ஒருவாறு ஆறுதல் அடைகிறான் இராகவன்.அடுத்துப் பரதனை நோக்கி" இந்தத் தவக்கோலம் பூண்டு நீ ஏன் வந்தாய்? நீ அரசாள வேண்டியவன் அல்லவோ?" என்று கேட்கின்ற கேள்வியும் அதற்குப் பரதன் தருகின்ற விடையும்,அந்த விடையில் இராகவனே சிக்கிக்கொள்வதையும் காண்கின்றோம்.*

*'நீ பிறந்ததனால் இந்தப் பூமி உனக்குச் சொந்தம். ஆகவே, இதனை ஆள்வாயாக' என்றுஇராகவன் சொல்லியவுடன், அதனை அப்படியே ஏற்றுக்கொள்கிறான் பரதன்.*

*'ஆம், இப்போது நான் சக்கரவர்த்தி. சக்கரவர்த்தியாகிய நான் உன்னைக் கேட்டுக்கொள்கிறேன்.நீ வந்து ஆட்சி செய்வாயாக' என்று தானே அரசன் என்ற முறையிலே ஆணையிடும் பரதனைப் பார்த்துஇராகவன் நெகிழ்ந்துவிடுகிறான்.*

*"ஐயா! சரி, உன்னுடைய ராஜ்யத்தை இப்போது நீ எனக்குத் தந்துவிட்டாய் அல்லவா. நான்இப்போது சக்கரவர்த்தியாகிவிட்டேன். இப்போது நான் சொல்வதை நீ கேட்பாயாக. பதினான்குஆண்டுகள் முடிந்து நான் திரும்புகிற வரையில் எனக்காக நீ இருந்து ஆட்சி செய்வாயாக" என்று சொல்லுகின்ற அந்த உரையாடலைப் பார்க்கும்போது சேக்கிழார் கூறும்,*

***"அளவிலாப் பரிவினால் வந்த இடுக்கண்" (பெ.பு.எறிபத்தர்-47)***

*என்ற தொடர் நினைவிற்கு வருகிறது. எல்லையில்லாப் பரிவினால் இவர்களின் இடையேநடைபெறுகின்ற உரையாடல், கற்பவர் மனத்தைக் கரைத்துவிடுவதைக் காண்கின்றோம்.*

*தேவர்கள் குறுக்கிட்டுப் பரதனைப் பார்த்து, 'நீ நாட்டைச் சென்று ஆள்வாயாக. இதுதான்எங்களுடைய விருப்பம்' என்று சொல்லுகின்ற வரையில் பரதனை அமைதிபடுத்த முடியவில்லை. அந்த நிலையில்வேறு வழியில்லாமல் அரசை ஏற்றுக்கொள்ளுகிற பரதன், இராமனைப் பார்த்து, "நான் உன் ஆணையின்படிசெல்லுகிறேன். நீ உன் திருவடியைத் தரவேண்டும். உன் திருவடி தான் ஆட்சி செய்யும். அதன் பிரதிநிதியாக நான் இருந்து 14 ஆண்டுகள் ஆட்சிப் பொறுப்பை நடத்துகிறேன்" என்று சொல்லும்போது பரதனது புதியபரிமாணத்தைக் காணமுடிகின்றது.*

*ஆகவே, அயோத்தியா காண்டத்தினிடையே காட்சி தருகிற பரதன் எல்லையற்ற வேகத்தோடுவளர்வதையும், வளர்ந்து இறுதியாக ஆயிரம் இராமரும், அவனுக்குச் சமமில்லை என்று சொல்லுகின்றபுதிய பரிமாணத்தை அடைகின்றதையும்*

*அயோத்தியா காண்டத்திலேயே பார்த்துவிடுகின்றோம். ஆகவே, பரதனின் முழுவளர்ச்சியைக் காட்டுவது அயோத்தியா காண்டமாகும். இவ்வளவு 843*

*வளர்ச்சி பெற்று வருபவனைப் பின்னே வரும் காண்டங்களில் காட்டாமல் இறுதிவரையில் கம்பன்கொண்டு செலுத்துகிறான் என்றால் அது மிகமிகக் கடினமான ஒன்றாகும். இந்த வளர்ச்சி - நந்திக்கிராமத்தில்சென்று, ஆமைபோல் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக்கொண்டு, சர்வபரித்தியாகம் செய்து, இராகவன் ஆணையைச் சிரமேற் கொண்டு வாழ்கின்ற தீவிர பக்தனாக விருப்பு, வெறுப்பு அற்றவனாக, கடமையைச் செய்பவனாக இருக்கின்ற பரதனாகப் பரிணமிக்குமாறு கம்பன் படைக்கின்றான். இக்கருத்துக்குஅரண்செய்கின்ற முறையில் பரதனைப்பற்றி விசுவாமித்திரன் கூறும்,*

***"தள்ள அரிய பெரு நீதித் தனி ஆறு புக மண்டும் பள்ளம்" (கம்பன் 657)***

*எனும் சொற்கள் அமைந்துள்ளன. அது முற்றிலும் பொருத்தமானது என்பதை நாம் அறியமுடிகின்றது. அத்தகைய ஒரு சிறப்பை அயோத்தியா காண்டத்தில் வைத்துக் காட்டிவிடுகின்றான் கவிச்சக்கரவர்த்திகம்பநாடன்.*

*இந்தப் பாத்திரங்கள் தவிர, இலக்குவனையும் ஓரளவு உணர்ந்து கொள்வதற்கு அயோத்தியாகாண்டம் பெரிதும் உதவுகின்றது.*

*பட்டம் இராமனுக்கு இல்லை என்றபோது, இலக்குவன் சீறுகின்ற சீற்றம், துடிக்கின்றதுடிப்பு, எப்படியாவது பரதனையும், கைகேயியையும் வென்று பட்டத்தை இராமனுக்கு வாங்கித் தருகிறேன்என்று அவன் செய்கின்ற ஆர்ப்பாட்டம், அதன் எதிரே இராகவன் அவனைச் சமாதானப்படுத்த முயல்வதுஎல்லாவற்றையும் அயோத்தியா காண்டத்தில் காண்கிறோம்.*

***"நதியின் பிழை அன்று நறும் புனல் இன்மை அற்றே பதியின் பிழை அன்று பயந்து நமைப் புரந்தாள் மதியின் பிழை அன்று மகன் பிழை அன்று மைந்த! விதியின் பிழை நீ இதற்கு என்னை வெகுண்டது?"(கம்பன் 1734)***

*'ஐய! கைகேயி, பரதன் இருவரும் எந்தவிதமான பிழையும் செய்யவில்லை. விதியின்விளையாட்டு இது' என்று இராகவன் சொல்கின்றான். அப்போதும்கூட இராகவனுக்கு எதிரே இலக்குவன்பேசுகின்றான்.*

***"விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி"** (1735) என்று. இதைக் கேட்டு என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கின்றான் இராகவன்.*

*எல்லையற்ற அன்பினால் மூண்டதுதான் இந்தச் சினம். இதை யாரும் மறுப்பதற்கில்லை. ஆனால், நடைபெற்றுவிட்ட செயலின் அடித்தளம் எங்கே இருக்கிறது. அதனுடைய ஆணிவேர் எங்கே இருக்கிறது என்பதைத்தன் முன்கோபம் காரணமாக இலக்குவன் அறிந்துகொள்ள மறுக்கிறான். இந்த அளவில் மேலேஇருக்கின்ற நிகழ்ச்சிகளைப் பார்த்து அதனைச் செய்கின்றவர் மேல் சினங்கொள்கிறான். எய்தவன்இருக்க அம்பை நோவது போல், கைகேயி, பரதன் ஆகிய இருவர் மீதும் சீற்றம் கொள்கிறான். இதன் மூலக்காரணம் எங்கே உள்ளது*

*என்பதைப்பற்றி அவன் கவலைப்படவேயில்லை. இராகவன் தன் கூர்த்தமதியால் அதனை எடுத்துச் சொன்னபோதும் இலக்குவன் ஏற்றுக்கொள்ளத்தயாராய் இல்லை.*

*ஆகவே, இறுதியாக இலக்குவனை அடக்குவதற்கு இராகவன் ஏவுகின்ற பிரம்மாஸ்திரம் வியப்புக்குரியதாகும்.*

***"நன் சொற்கள் தந்து ஆண்டு எனை நாளும் வளர்த்த தாதை தன் சொல் கடந்து எற்கு அரசு ஆள்வது தக்கது அன்றால் என் சொல் கடந்தால் உனக்கு யாது உளது ஈனம்"(கம்பன் 1741)***

*'தந்தையின் சொல்லைக் கேட்பது எனது கடமை. என் சொல்லைக் கேட்பது உனது கடமை. என்சொல்லை மீறினால் அதனால் உனக்கு வரப்போகின்ற இலாபம் என்ன?" என்று சொன்னவுடனே கொதித்துப்பொங்கி வருகின்ற பாலில் ஒருசொட்டுத் தண்ணீர் விட்டவுடன் எப்படி அடங்கிவிடுகின்றதோ அதுபோல இலக்குவன் சீற்றம் எல்லாம் அடங்கிவிடுவதைக் காண்கின்றோம்.*

*ஆகவே, இராகவனுடைய ஒரு சொல்லுக்கு, இலக்குவன் தன் வாழ்க்கையையே, தன் எண்ணத்தையே,தான் கொண்டிருந்த குறிக்கோளையே பலியாக்கிவிடுகிறான் என்றால் இராமன் மாட்டு அவன் கொண்டிருந்த மாபெரும் அன்பை எடுத்துக்காட்ட கவிச்சக்கரவர்த்தி இதனைப் பயன்படுத்துகின்றார்.*

*இத்துணை பேராற்றலும், பெருஞ்சினமும் உடையவனாகிய இலக்குவன் இராமனின் நிழல்போல்உறைந்தவன் என்பதை அனைவரும் அறிவர். என்றாலும் யமுனை ஆற்றில், குகன் முதலானவர்களுடைய உதவிஏதுவும் இல்லாத நிலையில், மூங்கில் கழிகளை எல்லாம் ஒன்றாகச் சேர்த்து, மாணைக்கொடியால், 845*

*தெப்பமாகக் கட்டி அதில் பிராட்டியையும், பெருமானையும் ஏற்றிவைத்து அக்கரைக்குத் தன்னிருகையால் இழுத்துக்கொண்டு நீந்திப் போகிறான். அதைப் பார்த்து இராகவன் தழுதழுத்துவிடுகின்றான்.*

*அக்கரைக்குச் சென்றால் அங்கே ஒரு தவச்சாலை, பிராட்டியும் பெருமானும் தங்குவதற்குத் தயாராய்இருக்கிறது. இலக்குவனால் கட்டப்பட்டிருந்த அந்தத் தவச்சாலையைப் பார்த்த இராகவன் தம்பியைஏற இறங்கப் பார்த்து,*

***"என்று கற்றனை நீ இதுபோல்" (2096)***

*"தம்பி, ஒரு வினாடிகூட என்னை விட்டுப் பிரிந்தவன் இல்லையே நீ. எங்குக் கற்றாய்இதனை" என்று இராகவன் தழுதழுத்துப் பேசுகின்றபோது அண்ணன் தம்பியிடையே இருக்கின்ற எல்லையற்றஅன்பின் பரிமாணத்தைக் காணமுடிகின்றது.*

*மிதிலையர் கோன் மகள் பாதம் காட்டில் நடந்தன; குற்றமே இல்லாத என்தம்பியின் கைஇந்தத் தவச்சாலையை அமைத்தன. ஒன்றுமே இல்லாதவற்கு கிட்டாத பொருள் இல்லை என்று இராகவன்பேசுகின்றான்.*

***'மேவு கானம் மிதிலையர் கோன் மகள்   பூவின் மெல்லிய பாதமும் போந்தன   தா இல் எம்பி கை சாலை சமைத்தன   யாவை யாதும் இலார்க்கு இயையாதவே' (2095)***

*இராமானுஜனாகிய இலக்குவன் பற்றி இராமன் என்ன நினைக்கிறான் என்பதை அயோத்தியா காண்டத்தில்நன்கு அறிய முடிகிறது.*

*ஆகவே, எப்படிப் பார்த்தாலும் இராம காதையின்கருமுழுவதும் அயோத்தியா காண்டத்தில் அடங்கியிருக்கிறது என்பதும் அதில் வருகின்ற பாத்திரங்கள்அனைத்தும் ஈடு இணையற்ற முறையில் படைக்கப்பட்டுள்ளன என்பதும் காணக் கிடக்கின்றன.*

*இந்தக் காண்டத்திலேயே உயிர்நீத்துவிடுகின்ற தசரதன், தன்செயலை முடித்துக்கொண்டுமறைந்துவிடுகின்ற கூனி, யாரும் எதிர் பாராத முறையில் புதிய திருப்பங்களை உண்டாக்கி உலகம்முழுவதும் பழி சொல்லும் என அறிந்திருந்தும், பழிகளை எல்லாம் வாங்கித் தோளில் போட்டுக்கொண்டு தான் எது நியாயம் என்று நினைத்தாளோ அந்த நியாயத்திற்காகப் போராடி இறதிவரை கல்தூண்போல்நிற்கின்ற ஞானியாகிய கைகேயி, அவள் மைந்தனாகிய பரதன், ஆயிரம் இராமனுடைய வளர்ச்சியை அடைகின்ற பரிமாணம், அன்பின்வடிவாக இருக்கின்ற குகன் ஆகிய பாத்திரங்களை எல்லாம் காண்பதற்கு அயோத்தியா காண்டம்உதவுகிறது.*

*ஆகவே, மந்திரப் படலத்தில் தொடங்கி, திருவடி சூட்டு படலத்தில் முடிகின்ற அயோத்தியாகாண்டம் கம்பனுடைய பேராற்றலுக்கு ஒப்பற்ற எடுத்துக்காட்டாக இருப்பதையும், பாத்திரப்படைப்பில்உலகக் காப்பியங்களுள், இப்படிப் பாத்திரப் படைப்பைச் செய்தவர் யாரும் இல்லை என்று சொல்லத்தக்கஅளவில் பாத்திரங்களைக் கவிச்சக்கரவர்த்தி அமைத்திருக்கிறான் என்பதையும் அறியும்போதுஅயோத்தியா காண்டம் உண்மையிலேயே ஆறுகாண்டங்களில் மிகச் சிறந்த ஒரு காண்டம் என்பதை உணரமுடிகின்றது.   847*

# இராமாயண அயோத்தியா காண்டங்கள் - ஓர் ஒப்பியலாய்வு

*(முனைவர் **அ.அ. மணவாளன்,** பேராசிரியர், தமிழ் மொழித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்)*

## குறிப்பு

*இக்கட்டுரையைப் படிக்க நேரும் அறிஞர் பெருமக்கள் இதற்குமுன் வெளிவந்த பாலகாண்ட ஒப்பியலாய்வுக்கட்டுரையினையும் ஒருமுறை படித்துக்கொள்ளுமாறு வேண்டுகின்றேன்.*

## அயோத்தியா காண்டக் கதைக்கரு

*இராம காதையின் முதற்காண்டமாகிய பாலகாண்டத்தில் கதைத் தலைவனின் பிறப்பு, வளர்ச்சி, ஒழுகலாறு, திருமணம், வீரம் ஆகிய செய்திகள் ஆற்றொழுக்காகப் பேசப்பட்டன. அறத்தின் காவலனாக, நாயகனாகப் பரிணமித்தற்குரிய அடிப்படைக்கூறுகள் பாகம்பட்டு நிற்கும் பக்குவநிலையை இலக்கியப்படுத்திக்காட்டிய தன்மையைப் பாலகாண்ட முன்னுரைப் பகுதியில் கண்டோம்.*

*அயோத்தியா காண்டத்தில் கதைத்தலைவனின் அறங்கடைக் கூட்டுதற்குரிய ஒழுகலாறுகள் சோதனைக்குள்ளாகும்நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன. அதாவது, இராமகாதையின் கதையோட்டம் முதல் திருப்புமுனையைச்சந்திக்கின்ற கட்டமாக அயோத்தியா காண்டம் நிகழ்ச்சிகள் அமைகின்ற பாங்கினைக் காண்கிறோம்.இலக்கிய முருகியலின்படி அயோத்தியா காண்ட நிகழ்ச்சிகள் இராமகாதையின் தோற்றுவாயாகக் கருதப்பெறும். இக்காப்பியம் 849*

*நாடகப் படுத்தப்பட நேரின், நாடக இலக்கண அமைதியின்படியும் அயோத்தியா காண்டமே தொடக்கமாக அமையும். அவல நாடகம், இன்பியல் நாடகம் என்னும் இருவகை நாடகப் பாங்கிற்கும் இக்கூற்று பொருந்தும். சிக்கலில் தொடங்கி அதன் முறுகலிலோ, தீர்விலோ நாடகம் முடியுமாதலின், இக்காண்டம் காப்பியச் சிக்கலைத் தொடங்கி வைக்கும் தொடக்கமாக அமையும் தன்மையது.*

*இனிக் கதைத் தலைவனின் முழுமை பெற்ற ஆளுமை (absolute personality) எத்தகையதாகஅமையும் என்பதை அறிவிக்கும் ஒரு முன்னோடியாக இக்காண்ட நிகழ்ச்சிகள் அமைதலின், காப்பியமுழுமைக்கும் உரிய கட்டுக்கோப்பிற்கும் பாவிகத்திற்கும் அயோத்தியா காண்ட நிகழ்ச்சிகள் பாகம்படும் பாங்கும் இனிது விளங்கும்.*

*இவ்வாறு காப்பியப் பாங்கிலும் , நாடகப் பாங்கிலும் கதைக்கருவின் இன்றியமையாத கட்டத்தில்அமைந்திருக்கும் அயோத்தியா காண்ட நிகழ்ச்சிகளை அவற்றிற்குக் காரணமாகும் பாத்திரங்களின்அடிப்படையில் மூன்று பகையாகப் பகுத்து உணரலாம். அவையாவன: தசரதன் விழைவும் விளைவும், இராமனின்ஏற்பு நிலை, பரதனின் ஏற்பு நிலை என்பன. அதாவது, தசரதன் எடுத்த ஓர் அரசியல் முடிவு அதனால்விளைந்த சிக்கல்கள், அந்த முடிவினை இராமன் ஏற்றுக்கொண்ட பாங்கும்*

*சிக்கல்களின் தற்காலிகத்தீர்வும், இராமன் முடிவினைப் பரதன் ஏற்றுக்கொண்ட பாங்கும் அரசியல் சிக்கலின் முற்றியமுடிவும் என்னும் முத்திறப்பாகுபாட்டில் அயோத்தியா காண்ட நிகழ்ச்சிகள் யாவும் அடங்கும் என்பதுகருத்து.*

*இம்மூன்று நிகழ்ச்சி மையங்களில் ஒவ்வொன்றும் சிற்சில காரணக் கூறுகளையும் காரியவிளைவுகளையும் உடையதாக அமைந்திருக்கும். இவற்றையும் இவற்றுக்குரிய துணைப் பாத்திரங்களின்செயற்பாடுகளையும் அவ்வந் நிகழ்ச்சி மையங்களின்கீழ் பகுத்து ஆராயலாம். வான்மீகம் முதலான இராமாயண நூல்கள் இந்நிகழ்ச்சிகளை இலக்கியப்படுத்தியிருக்கும் தன்மையினைக் கூடுமான வரையில்வரலாற்று நிரலில் இனிக் காணலாம்.*

*இராமகாதை நிகழ்ச்சிகளை வான்மீகம் முதலான இராமாயண நூல்களிற் சில மானுட நிலையிலும்,சில மீமானுட நிலையிலும், சில இருநிலைகளிலும் விவரிக்கின்றன. சிக்கல்களின் தோற்றத்திற்கும்அவற்றின் தீர்வுக்கும் மானுடப் பாத்திரங்களும் காரணமாய் இருப்பதை இந்நூல்கள் பல்வேறு உத்திகளின் மூலம் வெளிப்படுத்துகின்றன. இந்த ஆய்வில் இவை ஆங்காங்கே நிகழ்ச்சிகளுக்கேற்ப விதந்துபிளக்கப்படுகின்றன.* ***1. தசரதன் விழைவும் விளைவும்***

*இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் எனத் தசரதன் விரும்பி அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்தலும், கைகேயி தான் முன்னரே பெற்றிருந்த வரங்களைப் பயன்படுத்தித் தசரதன் விழைவைச் செயற்படாமல்தடுத்தலும் ஆகிய இருதிற நிகழ்ச்சிகள் இப்பெருந்தலைப்பின்கீழ் அடங்கும். இவற்றைத் தசரதன் முடிதுறக்கக் கருதுதல், அரசவை அம்முடிபை வரவேற்றல், இராமனுக்குத் தக்க அறிவுரை வழங்கல், மந்தரைதசரதன் விழைவை அறிந்து கைகேயியின் மனத்தைத் திரித்தல், வாய்மையிற் கட்டுண்ட தசரதன் கையற்றுஉயிர்நீத்தல், தசரதன் சாபம் பெற்ற வரலாறு என்னும் சிறு தலைப்புகளின்கீழ் ஆராயலாம்.*

### *2. இராமனின் ஏற்புநிலை*

*கைகேயியின் ஆணையைக் கேட்ட இராமனின் மனநிலை, இலக்குவனுக்கும் கோசலைக்கும் ஆறுதல்கூறல், இலக்குவனோடும் சீதையோடும் வனம் புகல், இராமன் - குகன் சந்திப்பு என்னும் உள்தலைப்புகளில்இராமனின் ஏற்புநிலை பற்றிய நிகழ்ச்சிகளை ஆராயலாம்.*

### *3. பரதனின் ஏற்புநிலை*

*கேகய நாட்டினின்றும் வந்த பரதன் கைகேயியின் வரம்பற்றிக் கேள்வியுற்றதும் மேற்கொண்டசெயல்களும், இராமனை அயோத்திக்கு அழைத்து வருவதற்காக அவன் மேற்கொண்ட முயற்சிகளும் இத்தலைப்பின்கீழ்அடங்கும். இவற்றைக் கைகேயியின் வரத்தை அறிந்த பரதனின் உணர்ச்சியும் செயலும், பரதன் -குகன் சந்திப்பு, பரதன் - இராமன் என்னும் உள்தலைப்புகளில் ஆராயலாம்.*

### **வான்மீகம்**

*மிக்க நுண்ணறிவுடைய தசரதமன்னன் தன் உடல் மூப்பு மேலிட்டு உரங்குன்றி வருவதை உணர்ந்துசிந்தனை வயப்பட்டவனானான். (II. 1. 43) 851*

*தன்னால் வரவழைக்கப்பட்ட அரசர், அமைச்சர், அந்தணர் முதலானோரை நோக்கி, "என்வாழ் நாள்களில் பல்லாயிரம் ஆண்டுகளாக அரசைப் புரந்து வந்த காரணத்தால் என் உடல் மூப்புற்றுஇயலாமை உண்டாகியிருப்பதை உணர்கிறேன். எனவே, என் மூத்த மகன் இராமனை இளவரசன் ஆக்கிவிட்டுஓய்வு பெற விரும்புகிறேன்" என்று தசரதன் தன் உள்ளக் கருத்தை வெளியிட்டான். (II. 2.7, 8, 10)*

### இரகுவம்சம்

*தன் காதருகே தோன்றிய நரையைக் கவனித்த தசரதன் தனக்கு மூப்பு வந்துற்றது என உணர்ந்துஉடனே இராமனுக்கு முடிசூட்ட விரும்புகிறான்.* [1]

### *கம்ப ராமாயணம்*

*"அறுபதாயிரம் ஆண்டுகள் இந்நாட்டை உங்கள் உதவியால் ஆண்ட நான் மூப்புப் பருவம் அடைந்துவிட்டேன்.நிரம்ப மூப்படைந்த பின்னரும் நானே அரசாள்வது பொருந்துமா" என்று அவையோரிடமும் (II.1.13,15,27), "ஐய, அரும்பெரு மூப்பும் மெய்யது ஆயது, இனி மாநிலச் சுமையுறு சிறை துறந்து யான்உய்யலாவதோர் நெறிபுக உதவிட வேண்டும்" (II. 1.61) என்று இராமனிடமும் தான் மூப்புற்றுத்தளர்ந்தமை கூறி இராமனுக்கு முடிசூட்டி ஓய்வுபெற விரும்புவதாகத் தசரதன் கூறுகிறான்.*

### *அத்யாத்ம ராமாயணம்*

*இராம சர்மாவின் அத்யாத்ம ராமாயணத்தின்படி அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்து அதனால்தான்மிகவும் களைத்துவிட்டதாகவும், மிக்க முதுமையடைந்த காரணத்தால் இராமனுக்கு முடி சூட்டி அரசை அவனிடம்ஒப்புவிக்க விரும்புவதாகவும் தசரதன் வசிட்டனிடம் கூறுகிறான்.* [2]

*1. ??? 2. நடேச சாஸ்திரியார், (மொ.பெ) ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம் சென்னை: பாலாஜி அண்டு கம்பெனி,இரண்டாம் பதிப்பு 1914, பக். 52 - 53.* **தெலுங்கு** *ரங்கநாத ராமாயணமும்* **கன்னட** *தொரவே ராமாயணமும்,* **மலையாள** *கன்னச ராமாயணமும், எழுத்தச்சன் இராமாயணமும், இராம்கியேன் என்னும்* **தாய்லாந்து** *ராமாயணமும் தசரதன் தான் மூப்பு அடைந்ததை உணர்ந்து இராமனுக்கு முடி சூட்டக் கருதினான் என்று கூறுகின்றன.*

### துளசி ராமாயணம்

*அரசன் மூப்படைந்த செய்தியை அவன் காதருகே வந்து குறிப்பின் உணர்த்திய கன்னமூல நரை, "அரசே,விரைவில் இராமனுக்கு முடிசூட்டி இப்பிறவியின் பயனை அடைவாயாக" என்று தசரதனுக்கு அறிவுறுத்தியதாகத் துளசிதாசரின் இராம சரித மானசம் கூறுகிறது. (II 2.7, 8)*

### *1.1.2. தசரதனின் கனவும் கிரக நிலையும்*

*வான்மீகி ராமாயணம் மட்டும் தசரதனின் கிரகநிலை பற்றியும், அவன் கண்ட தீக்கனா பற்றியும்இராமனிடம் கூறுவதாகக் குறிப்பிடுகிறது.:*

> *இராம, ஆகாயத்திலிருந்து கொள்ளிக் கட்டையொன்று இடியோசையுடன் வீழ்வதாகக் கனவு கண்டேன்.மேலும் எனது ஜன்ம நட்சத்திரத்தில் சூரியன், செவ்வாய், இராகு என்னும் மூன்று கிரகங்களும் ஒருங்கு வந்து கூடியிருப்பதாகச் சோதிடர்கள் கூறுகின்றனர். இவற்றின் காரணமாய் அரசனுக்கு மரணம்நேரலாம்; அல்லது அவனுக்கு மிகப் பெரிய தீங்கு உண்டாகலாம் என்பது சோதிட நூற் கொள்கை. மேலும் மனிதர்களின் எண்ணங்கள் நிலையானவை அல்ல. ஆகையால், எனக்கு இறுதி நேர்வதற்கு முன்னரே, என் மனம் உறுதியாக இருக்கும்பொழுதே உனக்கு முடிசூட்டி மகிழ விரும்புகிறேன். (II4.17-20)*

### *1.1.3. தசரதன் துறவு மேற்கொள்ள விரும்புதல்*

#### *கம்ப ராமாயணம்*

*உயிர்க்கு உறுதி பயக்கும் துறவற நெறியை மேற்கொள்ள விரும்புவதாக வான்மீகம் கூறுவில்லை.கம்பன் படைத்த தசரதன் இக்கருத்துடையவனாக இருந்தான் என்பதை,*

***மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன் என்னுயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன். (II.1.14)*** *853*

***துறப்பெனும் தெப்பமே துணைசெய் யாவிடின் பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்கல் ஆகுமோ? (1.20)***

***இம்மையின் உதவிநல் இசைந டாயநீர் அம்மையும் உதவுதற்கு அமைய வேண்டுமால் (1.23)***

***.......இராமன் தாதைதான் அறம்தலை நிரம்ப மூப்பு அடைந்த பின்னரும் துறந்திலன் என்பதோர் சொல்லுண் டானபின் பிறந்திலன் என்பதின் பிறிதுண்டாகுமோ? (1.27)***

***ஆதலால் இராமனுக்கு அரசை நல்கியிப் பேதைமைத் தாய்வரும் பிறப்பை நீக்குறு மாதவம் தொடங்குவான் வனத்தை நண்ணுவேன் யாதுநும் கருத்து?..... (1.30)***

*என வரும் கம்ப ராமாயணப் பாடல்கள் விளக்குகின்றன.*

#### *அத்யாத்ம ராமாயணம்*

*"உலகத்தில் புகழுக்குரிய காரியத்தைச் செய்தேனேயல்லாது, ஆத்மலாபமான காரியத்தை நான்செய்யவில்லை... ஆகையால், ஸ்ரீராமனுக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் செய்து இராஜாங்க காரியத்தைஅவனிடம் ஒப்புவித்துவிட்டு, நான் இனி மேலாவது, ஆத்மார்த்தமான புண்ணிய கருமங்களைச் செய்யவிரும்புகிறேன்", என்று தசரதன் வசிட்டனிடம் கூறுவதாக அத்யாத்ம ராமாயணம் காட்டுகிறது. (பக்.52- 53).*

## தொகுப்புரை

தசரதன் இராமனுக்கு முடிசூட்டவேண்டும் என்று முடிவெடுத்தமை அயோத்தியா காண்டக் கதைப் பின்னலின்முதல் முக்கியமான நிகழ்ச்சியாக அமைகிறது. தசரதன் இம்முடிவுக்கு வந்தமைக்கு மூப்படைந்தமை, கிரக நிலை, துறவறத்தின்மேல் விருப்பு என்னும் மூன்றுவகைக் காரணங்கள் கூறப்படுகின்றன.

## முதுமை

தான் முதுமையுற்றதைத் தசரதன் உணர்ந்து அவையோர்க்கு அதனை எடுத்துக் கூறுவதாக வான்மீகம்முதலான பெரும்பாலான இராமாயண நூல்கள் கூறுகின்றன. தெலுகு இராமாயணங்களான பாஸ்கர ராமாயணமும், மொல்ல ராமாயணமும் இதுபற்றிக் குறிப் பிடாமல் நீண்டகாலம் அரசாண்டு மனநிறைவடைந்த காரணத்தால் இராமனை அரசனாக்கத் தசரதன்விரும்பினான் என்று குறிப்பிடுகின்றன.

தான் முதுமையுற்றதைத் தசரதன் எவ்வாறு உணர்ந்தான் என வான்மீகம் விதந்து கூறவில்லை; பல்லாயிரம்ஆண்டுகளாகத் தான் அரசாண்டு களைத்துப் போனதாகத் தசரதன் கூறுகிறான். அத்யாத்மமும் அறுபதாயிரம்ஆண்டுகள் அரசாண்டு அதனால் தசரதன் மிகவும் களைத்துவிட்டதாகக் கூறுகிறது. இருபதினாயிரம் ஆண்டுகள்இந்நிலவுலகை யாண்டு முதுமை யெய்தி விட்டதாக ரங்கநாத ராமாயணம் கூறுகிறது. இவ்வாறு ஆண்டுகளின்எண்ணிக்கை கொண்டு நெடுங்காலம் சென்றமையால் அரசன் முதுமை எய்தினான் என்னும் கருத்து வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

தன் காதருகே தோன்றிய நரையின் மூலம் தான் மூப்புற்றமையைத் தரசதன் அறிந்தான் என்றுஇரகுவம்சம் கூறுகிறது. இதே கருத்தைத் துளசி ராமாயணமும் கூறுகிறது. காளிதாசனைப் பின் பற்றித் துளசிதாசர் இவ்வாறு கூறி இருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். [3]

கன்னமூல நரையின் தோற்றத்தால் தான் முதுமையுற்றமையைத் தசரதன் உணர்ந்ததாகக் கூறும்இரண்டு பாடல்கள் [4] கம்பராமாயணப் பதிப்புகள் சிலவற்றில் காணப்படுகின்றன. இரகுவம்சத்தைக் கற்ற அறிஞர்கள்நரையின் தோற்றத்தை வருணிக்கும் இப்பாடல்களைக் கம்பன் கருத்திற்கு இயைய இயற்றிச் சேர்த்திருக்கலாம்என அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்புக் குழுவும், உ.வே. சாமிநாதையர் நூல்நிலையப் பதிப்பும்சுட்டுகின்றன. [5] கி.பி. 1840இல் வேங்கடாசல முதலியார் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றகம்ப ராமா

*3. Anjani Nanadan Sharan, (ed). ??????? ?????? (Gorakhpur: Geetha Press, 4th edn, 1967), p.27.*

*4.1 மன்னனே அவனியை மகனுக்கு ஈந்துநீ பன்னரும் தவம்புரி பருவம் ஈதென கன்னமூ லத்தினில் கழற வந்தென மின்னனக் கருமைபோய் வெளுத்தது ஓர்மயிர்.*

*4.2. தீங்கு இழை இராவணன் செய்த தீமைதான் ஆங்கு ஒரு நரையதாய் அணுகிற்று ஆம் என பாங்கில்வந் திடுநரை படிமக் கண்ணடி ஆங்கதில் கண்டனன் அவனி காவலன். 855*

*யணத்தில் இப்பாடல்கள் இடம்பெறவில்லை என்பதைக் காரணமாகக் காட்டி இவற்றை இடைச்செருகல்கள் என்று மேற்குறிப்பிட்ட பதிப்புகள் கூறுகின்றன. கம்பன் கழகப் பதிப்பும் இவற்றை மிகைப் பாடல்களாகக் காட்டுகிறது. ஆனால், வை. மு.கோ. பதிப்பு எந்தக் குறிப்பும் இன்றி இவற்றை நூலுள்ளேயே வைத்துப் பதிப்பித்துள்ளது.*

*நரை முடியால் முதுமையுணர்த்தும் மூன்று கவிஞர்களின் (கம்பனின் பாடல்களாக மேற்குறிப்பிட்டஇரண்டையும் ஏற்றுக் கொண்டால்) கூற்றைச் சற்று ஆழ்ந்து நோக்கலாம். மூவரும் நரை முடி தோன்றிற்று என்று வாளா கூறாமல் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கற்பனைக் கூற்றை இணைத்துத் தற்குறிப்பேற்றமாகப்பாடுகின்றனர்.*

*தசரதனை வந்தடைந்த முதுமை அவனுக்கு ஒரு செய்தி கூற விரும்பியது. ஆனால், அச்செய்தி கைகேயிக்குஎட்டிவிடுமோ என்று அஞ்சியது. எனவே, நரைமுடியாக உருவெடுத்து அவன் காதோரமாகச் சென்று, 'அரசே இராமனுக்கு அரசாட்சியைக் கொடுத்துவிடு' என்று மிக ரகசியமாகக் கூறிற்று என்பது காளிதாசனின்கற்பனை.*

*'அரசனே, அரசாட்சியை உன் மகனுக்குக் கொடுத்துவிட்டு நீ தவம் செய்வதற்குரிய பருவம் உன்னைவந்தடைந்து உள்ளது' என்பதை அறிவுறுத்துவது போல் கன்னமூலத்தில் ஒரு நரைமயிர் தோன்றியது என்றும், இராவணன் செய்த தீமைகளெல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு நரைமுடியாக உருவெடுத்தது போன்று காதருகே தோன்றியநரைமயிர் ஒன்றினை அரசன் கண்ணாடி வழியாகக் கண்டான் என்றும் கம்பன் கூறுகிறான்.*

*முதுமை அரசனுக்கு ஒரு உபதேசம் செய்யக் கருதியது. எனவே, அவன் காதருகே ஒரு வெள்ளை முடியாகத்தோன்றி, 'அரசே, விரைவில் இராமனுக்கு முடிசூட்டி இப்பிறவியின் பயனை அடைவாயாக' என்று அறிவுறுத்தியதாகத்துளசிதாசர் கூறுகிறார்.*

*இம்மூன்றனுள், காளிதாசனின் கற்பனை அரசியல் பாங்கு உடையதாகக் காணப்படுகிறது. அரசன்விழைவுக்குக் கைகேயி*

*5. (a) கம்பர் இயற்றிய இராமாயணம்: அயோத்தியா காண்டம் (முதற் பகுதி) அண்ணாமலைநகர்:அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1959, ப.7. (b) ஸ்ரீமத் கம்பராமாயணம்: அயோத்தியா காண்டம் (முதற்பகுதி), சென்னை: டாக்டர் உ.வே. சா. நூல்நிலையம், 1972, ப. 4 இடையூறு செய்யலாம் என்னும் ஐயக்குறிப்பு 'ஷங்கையே' என்னும் கவிஞனின் சொல்லாட்சியால் வெளிப்படுகிறது. இக்குறிப்பினுள் குறிப்பாக மற்றொரு செய்தியும் புலப்படுகிறது. அதாவது, இராமன் முடிசூடுவதைக் கைகேயி தடுக்கக்கூடிய வாய்ப்பு இருப்பதாகக் கவிஞன் மிக நுட்பமாக உணர்த்துகிறான்.*

*கம்பன் பாடல்களில் ஒன்று அவதார நோக்கம் உடையதாகக் காணப்படுகிறது. இராவணனின்தீமைதான் தசரதனின் முடிவுக்குக் காரணமாயிற்று என்று கவிஞன் தற்குறிப்பேற்றமாகக் கூறுகிறான்.*

*இராமனுக்கு எதிர்ப்பு வருமிடத் தெல்லாம் இராவணனைத் தொடர்புபடுத்திக் கூறுவதைக் கம்பன்ஓர் உத்தியாகவே பயன்படுத்துகிறான். தாடகையை*

*இராவணனின் பாட்டியாகக் குறிப்பிடுவதும்(VI.13.32) தாடகை வீழ்ச்சிக்கு இராவணன் கொடி வீழ்வதை உவமையாக்குவதும் (I. 7.52) இங்கே கருதத்தக்கன. இங்கும் இராமன் முடிசூடுவது தடைப்படும் என்ற குறிப்பு தொனிப்பதை உணரலாம். எனினும், யாரால் தடைப்படும் என்பதிலோ, அத்தடை அறத்திற்குட்பட்டதா என்பதிலோ கம்பனுக்குக்கருத்தில்லை. எனவேதான், இராவணனின் வீழ்ச்சியை நோக்கிய இப்பாடல் அவதார நோக்கம்கொண்டது என்று துணிய வேண்டியுள்ளது.*

*மகனுக்கு அரசை யளித்துவிட்டுத் தவம் செய்வதற்குரிய பருவம் வந்தும் அங்ஙனம் செய்யாதிருக்கும்தசரதனைக் கழறுவதற்காக (இடித்துரைப்பதற்காக) வந்ததுபோல் அவனுடைய காதருகே ஒரு நரைமயிர் தோன்றியதுஎன்னும் கருத்துடைய கம்பனின் மற்றொரு பாடல் சமய நோக்கம் உடையது. அதாவது, உறுதிப் பொருள்நான்கனுள் முன்னைய மூன்றும் துய்த்து நின்ற அரசன் பிறப்பறுக்கும் வீடுபேறு பெறுவதை வற்புறுத்துவதாகஇப்பாடல் அமைந்துள்ளது.*

*இராமனுக்குப் பட்டம் கட்டிவிட்டுப் பிறவியின் பயனை அடைவாயாக என்று நரைமயிர் உபதேசம்செய்வதாகத் துளசிதாசர் கூறுகிறார். இராமனுக்கு முடிசூட்டுவதனால் தசரதன் எப்படிப் பிறவிப் பயன்அடைவான் என்று கூறவதால், பிரபன்ன பக்தியை நோக்கியதாக இதனைக் கருதலாம்.*

*மேலே காட்டிய மூன்று கவிஞர்களும் தத்தம் காலத்துச் சமுதாய, உலகியற் பார்வைக்கேற்பத்தசரதனின் முதுமையைக் குறிக்கும் நரைமயிர் தோற்றத்திற்குக் காரணம் கற்பித்துள்ளனர் 857*

*எனக் கருத வேண்டியுள்ளது. அவதாரக் கருத்துகள் இலக்கியப் படுத்தப்பெறாத காலத்துக்குரியகவிஞன் காளிதாசன் (கி.பி. 4 ஆம் நூற்றாண்டு); எனவே ஒரு வரலாற்று அரசியல் பார்வையோடுகாளிதாசனின் கவி செல்கிறது. ஆழ்வார்களுக்குப் பின் வந்த கம்பன், தன் காப்பியத்திற்கு இராமாவதாரம் என்றே பெயர் சூட்டிய கம்பன், அவதார நோக்கத்தில் இதனை விளக்குகிறான். பரம்பொருளைஅனுபவிப்பதையே நோக்கமாகக் கொண்ட பக்தி இயக்கம் பின்னர்த் தத்துவ ஆசாரியர்களின் இயக்கமாகச் செறிவடைந்து இறுதியில் பஜனை இயக்கமாக நீர்த்துவிட்ட காலத்தே தோன்றியவர் துளசிதாசர். எனவே, அவர் கருத்து வரலாற்றையோ, அரசியலையோ,அவதாரத்தையோ, தத்துவத்தையோ குறியாகக் கொள்ளாமல், பிரபன்ன பக்தியின் பிரதிபலிப்பாகஅமைந்திருக்கக் காண்கிறோம்.*

**கனவும் கிரகநிலையும்**

*தான் கண்ட கனவின் உற்பாதங்களுக்கு அஞ்சியும், தன்னுடைய சாதகத்தில் கிரகநிலைகள்தனக்கு இறுதிபயக்கும் நிலையில் அமைந்துள்ளன என்று கவன்றும் தசரதன் இராமனுக்கு விரைவில் முடிசூட்டவிரும்பினான் என்று ஆதி காப்பியமாகிய வான்மீகம் கூறுகிறது. கிரகநிலை பற்றிக் கூறும் சுலோகங்கள்வான்மீகி ராமாயணத்தின் இருவகை (வடபுல, தென்புல) வழக்குகளிலும் காணப்படுகின்றன.*

*இராம காதையைப் பாடும் பிற இராமாயண நூல்களில் இக்கருத்து காணப்பெறவில்லை.*

**துறவு நோக்கம்**

*வீடுபேறு விரும்பித் துறவு மேற்கொள்ள வேண்டும் என்னும் ஏதீட்டின் காரணமாகத் தசரதன்அரசு துறக்க விரும்பினான் என்னும் கருத்தை வான்மீகம் கூறவில்லை. கம்பராமாயணம் அத்யாத்மராமாயணம் ஆகிய இருநூல்கள் மட்டும் இக்கருத்தைக் கூறுகின்றன. இவற்றுள்ளும் கம்ப ராமாயணமேஇக்கருத்தை மிக விரிவாகப் பல பாடல்களில் பேசுகிறது. வசிட்டன் முதலான அவையினரோடு பேசுமிடத்தும், இராமனிடத்துத் தன் முடிவைக் கூறுமிடத்தும் தசரதன் தன் துறவு விருப்பத்தைத் தெளிவாகவே கூறுகிறான். அத்யாத்ம ராமாயணம் சுருக்கமாக, "ஆத்மார்த்தமான புண்ணிய கருமங்களைச் செய்ய விரும்புகிறேன்" என்று மட்டும் கூறுகிறது. வனம் சென்று தவம் செய்ய வேண்டும் என்னும் குறிப்பும் இதில் காணப்பெறவில்லை. கம்பன் படைத்த தயரதன் இவ்விருப்பத்தைப்,* ***பேதைமைத் தாய்வரும் பிறப்பை நீக்குறு மாதவம் தொடங்குவான் வனத்தை நண்ணுவேன்***

*என்று தெளிவாகக் கூறுகிறான்.*

*பிரம்மச்சரியம் முதலான நால்வகை நிலைகளைக் குறித்த கருத்துகளுக்குத் தாயகமான வடபுலத்தே தோன்றிய இராமாயண நூல்கள் இக்கருத்தை வெளியிடவில்லை என்பதுசிந்தித்தற்குரியது. தென்னாட்டுச் செல்வாக்கால் வைணவ பரமான நூல்களுடன் கம்ப ராமாயணமும்வடக்கே பரவியிருந்த காரணத்தால் அத்யாத்ம ராமாயணம் இதனைக் குறிப்பாகவேனும் கூறுகிறது என்றுகொள்ளலாம். இராமாநுசரின் செல்வாக்கை அத்யாத்ம ராமாயணம் முழுவதிலும் காணலாம் என்னும் அம்பாபிரசாத்அவர்களின் கூற்றும் இதனை வலியுறுத்தக் காண்கிறோம்.* [6]

*இனிக் கம்பனைப் பொறுத்தவரை,*

***காமஞ் சான்ற கடைக்கோட் காலை... அறம்புரி சுற்றமோடு கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே. (தொல். பொருள். 190)***

*என்னும் இலக்கண வரம்பும், வள்ளுவரின் துறவற இயலும், சிலப்பதிகாரத் தாபதர் பள்ளியும்,சிந்தாமணியின் த்தி இலம்பகமும் இக் கருத்துக்கு வழிகாட்டிகளாய் அமைந்திருக்கலாம் என்றுகருதத் தோன்றுகிறது.*

### *1.2. தசரதன் முடிவும் அரசவை ஏற்பும் வான்மீகம்*

*தசரதனின் முடிவைக் கேட்ட வசிட்டன் முதலான முனிவர்களும், அரசவையோரும், நகர பிரதானிகளும்,பிற அரசர்களும் பெருமகிழ்ச்சியுற்றனர். இராமனின் பண்பு நலன்களைப் பலபடப் பாராட்டி விரைவில்இராமனுக்கு முடிசூட்டி மகிழ்விக்குமாறு வேண்டுகின்றனர் (II.2.26 - 55).*

#### கம்ப ராமாயணம்

*வசிட்டன் உள்ளிட்ட அவையோரும், வேத்தரசர்களும், தசரதன் முடிவை அறிந்து பேருவகைகொள்கின்றனர். தசரதன்*

*6. துளசி காவ்யம் - ஜின்தன், பிரதி 112 859*

*துறக்கும் என்பதாலும் இராமன் முடிசூட்டப் பெறுவான் என்பதாலும் இரு கன்றினுக்கு இரங்கும் ஒர்ஆவென இருந்தனர். மேலும் இராமன் அரசனாவதால் தாம் பெறும் மகிழ்ச்சியைப் பலவாறு புலப்படுத்தினர்.*

### *ரங்கநாத ராமாயணம்*

*அரசவை தசரதன் முடிவை மகிழ்ச்சியுடன் வரவேற்று, "இராமன் மூவுலகையும் ஆளும் அருந்திறல்படைத்தோன்; இந்தப் பூவுலகை ஆள்வது அவனுக்கு ஒரு விளையாட்டே" என்று கூறி வணங்கியது.*

### *பாஸ்கர ராமாயணம்*

*இராமன் முடி சூடுவான் என்ற தசரதனின் அறிவிப்பால் மகிழ்ச்சியடைந்த அவையோர், தசரதன்அரசு துறப்பதைவிட இராமன் இளவரசனாகவும், தசரதனே மன்னனாகவும் நீடிப்பதே தங்களுக்குப் பேருவகைதருவது என்றனர். அப்போது தசரதன், "நான் உங்கள் கருத்தறியவே இவ்வாறு கேட்டேன்; அரசாளும்திறம் இன்னும் எனக்கு உண்டு" என்று அவர்களைத் தேற்றுகிறான்.*

### *மொல்ல ராமாயணம்*

*ஆதுகூரி மொல்ல தன் காப்பியத்தில் அரசவைக் காட்சியையே அமைக்கவில்லை. தசரதன் தன்முடிவை வசிட்டனுக்குக் கூறுகிறான். வசிட்டன் அதற்கேற்ப முடிசூட்டு விழாவிற்கான ஏற்பாடுகளைச் செய்கிறான்.*

### *தொரவெ ராமாயணம்*

*குமார வான்மீகியின் காப்பியத்தில் வசிட்டன் முதலான அரசவைப் பெருமக்கள் தசரதன் முடிவைப்புகழ்ந்து வரவேற்கின்றனர். மலையாள மொழி இராமாயணங்களாகிய கன்னச ராமாயணமும் எழுத்தச்சனின்அத்யாத்ம ராமாயணமும் அரசவை ஆலோசனைக் காட்சியைப் படைத்துக் காட்டவில்லை.*

### தொகுப்புரை

*அரசவை ஆலோசனையைப் படைத்துக் காட்டியுள்ள இராமாயணங்கள் எல்லாம் தசரதன் முடிவை அவையோர்போற்றிப் புகழ்ந்து வரவேற்பதாகக் காட்டுகின்றனர். இதில் வேறுபாடு காணப்பெறவில்லை. தெலுகு பாஸ்கர ராமாயணம் மட்டும் ஒரு சிறு மாறுதலைக் குறிப்பிடுகிறது. அதாவது, தசரதன் அரசாட்சியில் இருந்து முற்றிலும் விலகாமல் இராமனை இளவரசனாக்கித் தானும் உடனிருந்து ஆளவேண்டும் என மக்கள் விரும்புவதாகக் காட்டுகிறது. கம்பன் முதலான கவிஞர்கள், தசரதன் அரசு துறத்தலுக்காக அவையோர் வருந்தினாலும், இராமன் அரசனாகின்றான் என்னும் பெரு மகிழ்ச்சியால் அவ்வருத்தத்தை மறக்கின்றனர் என்று படைத்துக் காட்டுகின்றனர்.*

*இவ்வேறுபாட்டுக்குக் காரணம், வான்மீகத்தில் இராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுவதாகத்தான் தசரதன் முடிவெடுக்கிறான் (II. 2.12, 54; 3.2, 4; 4.22). துளசி ராமாயணமும் இதே கருத்தைக் கூறுகிறது. (II. 2.8; 4.2; 5.3)*

*ஆனால், கம்ப ராமாயணம், அத்யாத்ம ராமாயணம் முதலான காப்பியங்கள் தசரதன் இராமனை அரசனாக்க முடிவு செய்வதாகக் காட்டுகின்றன. முதுமையைக் காட்டி ஓய்வு வேண்டித் தசரதன் இராமனுக்கு முடிசூட்டக் கருதுவதால் அரசன், இளவரசன் என்னும் பட்டங்களில் அதிகார வேறுபாடு இல்லை எனக் கருதிக் கம்பன் முதலான கவிஞர்கள் இராமனை அரசனாக்க முடிவு செய்வதாகக் குறிக்கின்றன போலும்.*

### *1.2.1. வேற்றரசர்களுக்கு அழைப்பு*

#### *வான்மீகம்*

*அருகிலுள்ள அரசர்களையும் தலைமையானவர்களையும் அழைத்து வருமாறு அரசன் ஆணையிட்டான். கால தாமதம் ஆகுமென்று கருதிக் கேகய நாட்டரசரையும் சனக மன்னரையும் அழைத்து வரச் சொல்லவில்லை. விழா நிறைவேறிய பின்னர் அவ்விருவரும் நல்ல செய்தியைக் கேள்விப்பட்டு மகிழ்ச்சியடைவார்கள் என்றான். (II. 1.47)*

*பரதன் நம் நகரிலிருந்து வெகு தூரத்தில் இருக்கிறான். சாஸ்திர விதிகளுக்கேற்ற முகூர்த்த தினமாய் இதுதான் (நாளை) இருக்கிறது. இந்த ஒரு காரணத்துக்காகவே இப்போதே உன் பட்டாபிஷேகத்தைச் செய்ய நான் அனுமதிக்கிறேன். (II. 4.25)*

*நான் ஐயமறத் தெளிந்த வேறொரு செய்தியும் உண்டு. உனது தம்பியாகிய பரதன் சான்றோர்களின் விதிமுறைகளில் அசையாத பக்தியுடையவன். மூத்தோர் மனம் கோணாமல் நடப்பவன். புலன்களை வென்றவன்; தர்ம சிந்தையுடையவன். இராமனே, இத்தகைய 861*

*உத்தமர்களின் மனம் பிறர் அடையும் நன்மைகளை அறிந்து இயற்கையாகவே மகிழ்ச்சி அடையும்இயல்பினது. (II. 4.26, 27)*

#### *கம்ப ராமாயணம்*

*தசரதன் வசிட்டன் மூலம் அரசர்களுக்கு ஓலை அனுப்பக் கட்டளையிடுகிறான்.*

#### *துளசி ராமாயணம்*

*அரசர்களுக்கு ஓலை போக்கியதாகச் செய்தியே இல்லை. இராம பட்டாபிஷேகத்தைக்கேள்வியுள்ள மக்கள் பேருவகையுடன் அதற்கான காரியங்களைச் செய்யத் தொடங்கினர் என்று மட்டும்கூறுகிறது. (II. 8).*

#### *பிரகாஷ் ராமாயணம்*

*எல்லா நாட்டு அரசர்களுக்கும் ஏழு தீவுகளுக்கும் இராம பட்டாபிஷேகச் செய்தி தசரதன் ஆணையால்அறிவிக்கப்படுகிறது. பரதனையும் சத்துருக்கனனையும் அழைத்து வருமாறு தசரதன் கட்டளையிடுகிறான். [7] (பக். 19, 21)*

#### தொகுப்புரை

*இராமனுக்கு முடிசூட்ட எண்ணிய தசரதன் வேற்றரசர்கட்கு ஓலை அனுப்பும்போது சனகனுக்கும் கேகயஅரசனுக்கும் அனுப்பவில்லை. முடி சூட்டு விழா அடுத்த நாளே நடக்க இருப்பதால் நெடுந்தொலைவில்உள்ள அவர்கள் வர இயலாது என்பது காரணமாக வான்மீகத்தில் கூறப்படுகிறது. பரதன் முடிசூட்டுவிழாவின் போது இல்லையே என்ற சிந்தனையும் தசரதனுக்கு ஏற்படுகிறது. எனினும், பண்பின் சிகரமாகியபரதன் இதனைத் தவறாக எடுத்துக் கொள்ள மாட்டான் என்று தசரதன் இராமனிடம் சொல்லுவதாகவும்வான்மீகம் குறிப்பிடுகிறது.*

*கம்ப ராமாயணம் இது பற்றி விதந்து எதுவும் கூறவில்லை. அரசர்கட்கு மன்னன் ஆணையால் ஓலைபோக்கினர் என்று மட்டுமே காணப்படுகிறது. கம்பன் காட்டும் தசரதன் பரதன் இல்லாமை குறித்துஎதுவும் கூறவில்லை. மொத்தத்தில் கம்பன் இந்தச் சிக்கலில் மௌனம் சாதிப்பதாகத் தெரிகிறது.*

*7. ஓங்கார கைலை, கஸ்மீர் மற்றும் ஹிந்தி ராமகதை காவ்யத்தின் துல்னாத்மக் அத்யாயம்,பிரதி 7 துளசி தாசரும் அரசர்க்குச் செய்தி அனுப்புவது குறித்து எதுவும் பேசவில்லை. நகர மக்கள்இராமன் முடி சூடப்போவது அறிந்து பெரிதும் மகிழ்ந்தனர் என்று மட்டும் பொதுப்படையாகக்கூறுகிறார்.*

*இராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்டுவதென்பது ஒரு சாதாரணமான, புறக்கணிக்கக் கூடிய செய்தியன்று.இவ்வளவு இன்றியமையாத செய்தியினை வேற்றரசர்க்கு அறிவிக்கக் கட்டளையிட்ட தசரதன், தொலைவுஎன்ற ஒரே காரணத்தால் விழா நாயகனான இராமனின் மாமனாராகிய சனகனுக்கும் தன்னுடைய மாமனாரும், தனக்கு மிகவும் பிரியமானவளாகிய கைகேயியின் தந்தையாரும் ஆகிய கேகய அரசனுக்கும் அறிவிக்காமல்விட்டது ஏற்றுக் கொள்ளக்கூடிய சமாதானமாகத் தோன்றவில்லை. மேலும், தன் அன்பிற்கும் நம்பிக்கைக்கும்உரிய பரதன் கலந்துகொள்ள இயலாத நிலையை உணர்ந்தும் தொலைவில் இருப்பதால் அவனைத் தருவிக்கஇயலவில்லை என்பதும் பொருத்தமாகப் படவில்லை. சோதிடர்களால் குறிக்கப்பட்ட அந்த நாளிலேயே பட்டாபிஷேகம் நடைபெற வேண்டும் என்பதால் இந்த நிலை ஏற்பட்டது என்பதைக் காப்பியம் காட்டுகிறது.வரவேண்டியவர்களின் தகுதியும் இன்றியமையாமையும் கருதித் தசரதன் வேறோர் நாளைக் குறிக்கச் சொல்லியிருக்கலாம். அப்படியிருந்தும் சோதிடர்கள் சொன்ன நாளில் பட்டாபிஷேகம் நடக்கவேயில்லை; இராமன் காடு செல்வதுதான் நடக்கிறது என்பதையும் காப்பியம் காட்டுகிறது. தசரதனின் ஆளுமையில்காணப்படும் இக்குறை நிலைத்துவிடுகிறது.*

*கம்பன் இந்தச் சிக்கலைப் புலப்படுத்தாமலே விட்டது ஏன் என்று தெரியவில்லை.*

*துளசிதாசர் இதைக் கண்டும் காணாமல் இருந்துவிட்டாரோ எனத் தோன்றுகிறது. ஏனெனில், தசரதன் பட்டாபிஷேகத்திற்குரிய நாளைக் குறிக்குமாறு கேட்டபோது, வசிட்டன் எந்த ஒரு நாளையும்குறிப்பிட்டுச் சொல்லாமல், இராமன் என்று பட்டாபிஷேகம் செய்து கொள்ளுகிறானோ அந்த நாள்தான்நல்ல நாள் என்று கூறுகிறான். எனவே, தசரதன் செய்கை பற்றிய வான்மீகக் கருத்தைத் துளசிதாசர்உடன்படவில்லை என்று தெரிகிறது.*

*காஷ்மீர மொழியில் தோன்றிய பிரகாஷ் ராமாயணம் சனகன், கேகயன் உட்பட எல்லாஅரசர்கட்கும் ஓலை அனுப்பப்பட்டதாகக் கூறுகிறது. பரதனையும்*

*சத்துருக்கனனையும் அழைத்து வருமாறும்தரசதன் ஆள் அனுப்புகிறான் எனவும் கூறுகிறது. இங்கே தசரதன் மீது குற்றம் வராதவாறு காக்கக் கவிஞர்முயன்றுள்ளார்; எனினும், சிக்கல் இதனால் தீரவில்லை. அதாவது, பட்டாபிஷேகத் 863*

*திற்கு அவர்கள் யாரும் வந்ததாகக் காப்பியம் கூறவில்லை. மூலநூற் சிக்கலை வழி நூல்களே தீர்க்க இயலாதபோது சார்பு நூல் என்ன செய்ய இயலும்?*

### *1.2.2. அரசியர்க்கு அறிவிப்பு*

*இராமனுக்கு நாளை முடிசூட்டுவிழா நடத்தப்படும் என்ற தசரதன் முடிவை இராமனின் நண்பர்கள்கோசலைக்கு அறிவிக்கின்றனர். கோசலை பெருமகிழ்ச்சியுற்றவளாய்ச் சுமித்திரை, சீதை, இலக்குவன் ஆகியோர் வந்து சூழ ஜனார்த்தனனை வணங்கினாள் என்றும், பின்னர் இராமனே நேரில் வந்து இந்தச் செய்தியைத் தன் தாய்க்குக் கூறினான் என்றும் வான்மீகம் கூறுகிறது. (II.3.47; 31, 33, 35) அரசவையில் செய்யப் பெற்ற முடிவைக் கேட்டதும் மங்கையர் நால்வர் ஓடிச்சென்று கோசலைக்கு இச்செய்தியைக் கூறினர் என்றும், பேரானந்தம் அடைந்த கோசலை சுமித்திரையுடன் நாரணன் கோயிலுக்குச் சென்று வழிபட்டாள் என்றும் கம்ப ராமாயணம் கூறுகிறது. (ii. 2. 2-7) இராமன் முடி சூடும் செய்தியை அறிந்த சுமித்திரையும் கோசலையும் பேரானந்த முற்றனர் என்று துளசி ராமாயணம்கூறுகிறது.(II. 8.2)*

*வான்மீகம் இராமனின் நண்பர்கள் கோசலைக்குச் செய்தி கூறுவதாகக் கூறுகிறது. இராம சரிதமானசம் கோசலைக்குச் செய்தி அறிவித்தவர் யார் என விதந்து கூறவில்லை. கம்பன் மட்டும் மங்கையர்நால்வர் உவகை மீதூரலால் ஓடிவந்து கோசலைக்குக் கூறினர் என்று கூறுகிறான். இவற்றுள் எந்த இராமாயணமும்கைகேயிக்கு இச்செய்தி கூறப்பட்டதாகத் தெரிவிக்கவில்லை. எல்லா நூல்களிலும் கைகேயி முதன்முதலாக மந்தரை மூலமாகத்தான் செய்தி அறிகிறாள்.*

*தசரதனோ, அரச அலுவலர்களோ இச்செய்தியை அரசியர்க்குத் தனித் தனியே அறிவிக்கவில்லை.நகர் முழுவதும் முரசறைந்து செய்தி அறிவிக்கப்பட்டதாகக் கம்ப ராமாயணம் கூறுகிறது. வசிட்டன்மூலமாக இவ் ஆணை பிறப்பிக்கப்பட்டதாக வான்மீகம் கூறுகிறது. துளசி ராமாயணம் இந்தச் செய்தியைவிதந்து கூறவில்லை.*

*இனி, கோசலைக்கும் சுமித்திரைக்கும் முதன்முதலில் செய்தி அறிவித்தது பொதுமக்களேஎன்று வைத்துக் கொண்டாலும் அவர்கள் ஏன் கைகேயிக்கு இதை அறிவிக்கவில்லை என்னும் வினா எழுகிறது. வான்மீகம் முதலான எல்லா இராமாயணங்களும் இது பற்றி மௌனம் சாதிக்கின்றன.*